வினால் உள்ளிருக்கும் பூக்கள் ஒன்றோடொன்று தாக்கி நலிவுறும்படி கொண்டுபோகப் பெறும் குறிப்பும் பெறத் தூங்கும் என்றார்.

**பின் தொடர்ந்து ஓடிச் சென்று** - காலை வந்துதவவேண்டித் திருப்பள்ளியில் வைத்த அன்பினாலே கடிதினில் முன்னே விரைந்து சென்றார் சிவகாமியாராதலின் யானை அவரைப் பின்றொடர்ந்து ஓடிச்சென்று அவரது பூக்கூடையினைப்பிடிக்க என்பது. கடுநடையுடைய யானையும் ஓடிச்சென்று தொடருமாறு அத்தனை விரைய முன் சென்றனர் அன்பர் என்றது காண்க.

**பிடித்து முன் பறித்து** பிடித்த பின்னரே பறித்தல் நிகழ்ந்ததாயினும் வேகத்தால் பறித்தலே முன்னர்த் தோற்றப்பட நிகழ்ந்த தென்னும்படி.

**சிந்த** - கூடையைப்பறித்து அதனுள் இருந்த திருப்பள்ளித்தாமங்களைத் தெருவிலே சிதற. "பூவை யெனக்கையிற் பறித்து மண்மேற் சிந்தி" (571), "பூங்கூடையினில் மருவிய பள்ளித்தாம நிறைந்திட அருள" (600) என்றவற்றாலறிக.

**பிடித்துடன்**—என்பதும் பாடம் 13

564. (வி - ரை) மேல்கொண்ட - ஊர்ந்த.

**கண்டு** - யானை பூக்கூடையைப் பிடித்துப்பறித்துச் சிந்தியதனைக்கண்டு.

**களிறு** - களிற்றை யானையை - இரண்டாம் வேற்றுமையுருபு தொக்கது. களிற்றைக்கொண்டு அகலப்போக என்று கூட்டுக. களிறு காற்றுப்போலப் பாகரைக்கொண்டகல என்று எழுவாயவேற்றுமைப்பொருள்படக்கொண்டு உரைப்பாருமுளர். அஃது பொருந்தாமையறிக.

**சண்டக்கால்** - சண்டமாருதம் என்னும் ஊழிக்காற்றை. யானை தன்னியல்பானே காற்றுப்போன்ற வேகத்தாற்போவது. "காலகிளர்ந் தன்ன வேழ மேல் கொண்டு" என்பது திருமுருகாற்றுப்படை. பாகர் அதனை மேலும் வேகமாகச் செலுத்தினர் ஆதலின் மிகு வேகமுடைய **சண்டக்கால்** என்றுவமித்தது. ஈண்டு **கோண்டகல** என்று அதற்குக் காரணமும் காட்டினார். தொழிலுவமம். தான் பிறர் வசப்பட்டமையாது தன்னகப்பட்ட எல்லாப் பொருள்களையும் அலைத்தல் ஊழிக்காற்றின் தன்மை. சில ஆண்டுகளின்முன் தென்னாற்காடு, கூடலூர், தஞ்சை சில்லாக்களில் அடித்த சிறு பெருங்காற்றினால் உலகம் அலைப்புண்டு பெருங்கேடுற்றதனை எண்ணினால் சண்டக்காலின் நிலை ஒருவாறு ஊகிக்கக்கிடக்கும். அத்தகையதனையும் அடக்கிக் கொண்டுபோவார் போல என்க. இங்கு யானை மதம் மிக்குக் கட்டுமீறித் தானே வேறொரு தெருவின் முட்டியதாதலின் மேலும் இவ்வுவமானத்தின் பொருத்தம் கண்டுகொள்க.

**கடிது கோண்டகல** - யானை, மேலும் தீமை செய்யாதபடி கொண்டுபோக என்பது. நிகழ்ந்த சிவ அபசாரத்தைப் பொருட்படுத்தாது அலட்சியஞ்செய்தகன்றார் என்பதன்று. புகழ்ச்சோழராகிய பேரன்பரது ஏவலாட்களானமையால் சிவாபராதத்தினைக் கண்டும் புறக்கணித்தார்கள் என்று கூறுதல் பொருந்தாது. மெய்ப் பொருள் நாயனாரது "கடையுடைக் காவலாளர் கைதொழு தேற நின்றே, யுடைய வர் தாமே வந்தார் உள்ளெழுந் தருளு மென்ற"தும், "தனித்தடை நின்ற தத்தன் "இடை தெரிந்தருள வேண்டும்," "துயில்கொளு மிறைவன்" என்றதும் காண்க. இங்கு இந்நிகழ்ச்சி யாவும் "திங்கட் கொழுந்தணி வேணிக் கூத்த ரருளினாற் கூடி"யன என்ப பின்னர் அறிகின்றதற் கேற்பப் பாகர் செயலின் உட்கோளையும் குறித்தல் வேண்டும் என்பது. **பாகர் கண்டு** என்றதன் குறிப்புமது.

**நூல் கோண்ட மார்பிற் றொண்டர்** - மறையவராகிய அடியார். முன்னர்ப் "புண்ணிய முனிவனார்" (558) என்றதனை விளக்கியபடி. **நோக்கினர் பதைத்து** - நோக்கிப் பதைத்து. முற்றெச்சம். பின்றொடரத் தோடிவந்து - பின்னிருந்தபடியே தண்டின்

தலைப்பில் தூங்கிய பூங்கூடையைப் பறித்துச் சிந்தியதாதலின் அதனைப் பின்றிரும்பிப் பார்த்தறிந்தனராகிப் பதைத்தனர் என்று குறிக்க **நோக்கினர் பதைத்து** என்றார். **நோக்கினர்** என்பதனை வினைமுற்றாகவே கொண்டு, பார்த்தனர் ; பின்னர்ப் பதைத்து - அடிக்கவந்தார் என்றுரைத்தலுமாம். நோக்குதல் ஊன்றிக் கருதிப் பார்த்தல். இறைவனுக்குத் தாம் செய்யும் நியதியான திருப்பணிக்கு முட்டு நேர்ந்ததே பதைப்புக்குக் காரணமாம்.

**அடிக்க வந்தார்** - பூக் கூடையைப் பறித்துச் சிந்தியபின் வேகமாய்ச் செலுத்தப்பட்டு முன்னே போயினமையின் அதனை நோக்கிவந்தார். யானை செய்த சிவாபராதமான குற்றத்திற்காக அதனை ஒறுத்து முறைசெய்வார்போல அடிக்க முற்பட்டனர். தாம் அதனை அணுகவும் இயலாது - அணுகினும் அடித்தல் இயலாது-அடிப்பினும், மதம் நிறைந்த அது தம்மை எதிர்த்துத் தாக்கியதாயின் தம்மைக் காத்துக் கொள்ளுதலும் இயலாது - அடித்தல் தானும் அதற்குத் தக்க தண்டனையுமாகாது - என்ற இவை ஒன்றும் தோன்றாமல் அடிக்க வந்ததற்கு இவரது பதைத்தலும், பொங்குதலும், திருப்பணியில் வைத்த அன்பும் காரணமாம். சினம் உள்ளத்தைக் கவர்ந்து எழுந்து ஓங்கிற்று.

**அடிக்கவந்தார்** - அவ்வாறு வருதலே யன்றி அடித்தல் நிகழவில்லை என்பது குறிப்பு.

**தண்டு கொண்டு** - தண்டினாலே. **தண்டு** - பூக்கூடை தூக்கியதாய் இவர் மலர்க் கையிற் கொண்டு சென்ற தண்டு. "மலர்க் கையிற் றண்டுங் கொண்டு" (560), "வன்றனித் தண்டில்" (563) என்றவை காண்க.

யானை - ஒரு தெருவின் முட்டி - சென்று - கூடை தன்னைப் பிடித்துப் - பறித்துச் சிந்த, - பாகர் கண்டு. (அக்) களிறு கடிது கொண்டு - போக, - தொண்டர் - நோக்கினர் - பொங்கி - (அதனை) அடிக்கவந்தார் - என இவ்விரண்டு பாட்டுக்களையும் தொடர்ந்து முடித்துக் கொள்க. 14

565. அப்பொழு தணைய வொட்டா தடற்களி றகன்று போக,
மெய்ப்பெருந் தொண்டர் மூப்பால் விரைந்துபின் செல்ல மாட்டார்,
தப்பினர் விழுந்து, கையாற் றரையடித், தெழுந்து, நின்று,
செப்பருந் துயர நீடிச், செயிர்த்து,முன் "சிவதா" வென்பார். கரு

**வேறு**

566. "களியா னையினீ ருரியாய்! சிவதா!
எளியார் வலியா மிறைவா! சிவதா!
அளியா ரடியா ரறிவே! சிவதா!
தெளிவா ரமுதே! சிவதா! சிவதா!, கசு

567. "ஆறும் மதியும் மணியுஞ் சடைமே
லேறும் மலைரைக் கரிசிந் துவதே?
வேறுண் ணினைவார் புரம்வெந் தவியச்
சீறுஞ் சிலையாய்! சிவதா! சிவதா! கஎ

568. "தஞ்சே சரணம் புகுதுந் தமியோர்
நெஞ்சேய் துயரங் கெடநேர் தொடரும்
மஞ்சே யெனவீழ் மறலிக் கிறைநீள்
செஞ்சே வடியாய்! சிவதா! சிவதா!, கஅ

569. "நெடியோ னறியா நெறியா ரறியும்
படியா லடிமைப் பணிசெய் தொழுகு
மடியார் களில்யா னாரா லணைவாய்
முடியா முதலா!" யெனவே மொழிய, ௧௯

**வேறு**

570. என்றவ ருரைத்த மாற்ற மெறிபத்த ரெதிரே வாரா
நின்றவர் கேளா மூளு நெருப்புயிர்த் தழன்று பொங்கி
"மன்றவ ரடியார்க் கென்றும் வழிப்பகை களிறே யன்றோ,
கொன்றது வீழ்ப்ப" னென்று கொலைமழு வெடுத்து வந்தார். ௨௦

565. **(இ - ள்)** வெளிப்படை. அப்பொழுது வலிய அவ்வியானை அவர் தன்னை அணுகவொட்டாதபடி நீங்கிப்போயினதாக, உண்மைத் தன்மையுடைய பெருந்தொண்டர் மூப்பினாலே விரைவாய்த் தொடர்ந்து அதன்பின்னே செல்லமாட்டாதவராகி, அதனை விட்டார், கீழே விழுந்து, கையினாலே தரையில் அடித்து, மோதிப், பின் எழுந்து நின்று, சொல்லற்கரிய துன்பத்தால் நீடிக் கோபித்து முன்னே "**சிவதா**" என்பாராகி, ௧௫

566. **(இ - ள்)** வெளிப்படை. "மதங்கொண்ட யானையை உரித்து அத்தோலினைப் போர்த்தவரே! சிவதா!, எளியாரைக் காக்கின்ற வலிமையுடையவரே! சிவதா!, அன்பு நிறைந்த அடியார்களின் அறிவானவரே! சிவதா!, தெளிவார்க்கு அமுதமே! சிவதா! சிவதா!, ௧௬

567 **(இ - ள்)** வெளிப்படை. "கங்கையையும் பிறைச் சந்திரனையும் அணியும் சடைமுடிமேல் ஏற்றியணியப்படுகின்ற மலரை யானை சிந்துவதோ?, மாறுபட்டு மனத்தினுள் நினையும் அசுரரது புரங்கள் வெந்து மாயும்படி கோபித்த வில்லை யேந்தியவரே! சிவதா! சிவதா!, ௧௭

568. **(இ - ள்)** வெளிப்படை. "தஞ்சமாய் அடைக்கலம் புகுந்தும் தமியோராகிய மார்க்கண்டேயருடைய நெஞ்சிற்பொருந்திய துயரம் கெடும்படி திருவுள்ளங் கொண்டு, அவரைத் தொடர்ந்து வந்த காலனுக்குச் சிறிதே நீண்ட செம்மையுடைத்தாகிய சேவடியினை யுடையவரே! சிவதா! சிவதா! ௧௮

569 **(இ - ள்)** வெளிப்படை. "திருமாலும் அறியமாட்டாத சிவநெறியிலே நின்றவர்களாகித், தாம் அறிந்த வகையாலே அடிமைத் தன்மையில் நின்று பணிசெய்து ஒழுகுகின்ற அடியார் கூட்டத்திலே நான் யாராக மதித்து அணைவீர்? முடிவில்லாத முதல்வரே!" எனச் சிவகாமியாண்டார் மொழியவே, ௧௯

570. **(இ - ள்)** வெளிப்படை. இவ்வாறு அவர்மொழிந்த சொற்களை எதிரே வாரா நின்ற எறிபத்த நாயனார் கேட்டு, மூளும் நெருப்புப் போன்று பெருமூச்சு விட்டுக், கோபத்தாற் பொங்கி, "அம்பலவருடைய அடியார்களுக்கு என்றும் யானை வழிப்பகையன்றோ? அவ்வியானையைக் கொன்று வீழ்ப்பேன்" என்று தமது கொலை வல்ல மழுவாயுதத்தை ஏந்திக் கொண்டு வந்தார். ௨௦

இந்த ஆறுபாட்டுக்களும் ஒரு முடிபுகொண்டன.

565. **(வி - ரை) அப்பொழுது** - அடிக்க வரும்பொழுது. **அணையவொட்டாது** - அவர் அணுகாதபடி. அடிக்கும் அந்தப்பொழுது - சந்தி - கைகூடாதபடி என்றலுமாம். **தப்பினர்** - யானையை அடிக்க வந்தகுறியின் வழுவினார் அடித்திருப்பாராயின், அதனால் நீங்குறுவார், ஆதலின் அதனினின்றும் தப்பினார் என்றலுமாம்.

**விழுந்து** - துயரத்தால் தாமே நிலத்தில் வீழ்ந்து வேகத்திற் குறிவைத்து வந்த அது தப்பியதாதலின் அவ்வேகந் தப்பியதாற் கீழேவிழுந்து என்றுரைத்தலுமாம். தப்பினார் என்றதனை முற்றெச்சமாக்கித் தப்பிவிழுந்து - காலதவறி வீழ்ந்து என்றுரைப்பாருமுளர்.

**கையால் தரையடித்தல்** - மிக்க துயரத்தால் நிகழ்வதோர் மெய்ப்பாடு.

**எழுந்து நின்று** - துயரமிகுதிப் பாட்டினாலே விழுந்து தரையடித்தலாகிய முதற் செயல் நிகழ்ந்தபின்னர் நிகழும் மெய்ப்பாடு. எழுந்து நிற்றலும் முறை கூறி ஓலிடுதலும் இவையே பின் நிகழ்வன.

**செப்பருந்துயரம் நீடி** - சொல்ல முடியாத துயரத்தான் மிக்கவராய். தாம் நித்தமும் நியதியாகச் செய்து வந்த இறைவன் திருப்பணி இன்று இவ்வாறு முட்டுப்பட்டமையாற் பெருந்துயரமடைந்து.

**செயிர்த்து** திருப்பணி முட்டுமாறு செய்தலின் அதுசெய்த பொருளின் மாட்டுச் சினம் மிக்கது. பெருந்துயரத்தின் பின்னிகழும் உள்ளநிலை. இவ்வாறே மூர்த்திநாயனார் புராண வரலாற்று நிகழ்ச்சியும் காண்க.

**சிவதா என்பார்** - இறைவனை நினைந்து ஓலமிடும் ஒரு ஓலச்சொல். இதுபோல, அபிதா - அபிதா என்பனவும், அப்பிராமணணியம் என்பதும் ஆபத்துக் காலங்களில் முறையிடும் ஓலச் சொற்கள். இவ்வாறன்றி இதற்கு எப்போதும் இவர் "சிவதா சிவதா" என்று சொல்வது வழக்கமென்றுரைப்பாருமுளர். **என்பார்**-என்பாராகி.

என்பாராகிச் - சிவதா! சிவதா! முதலாய! என்வே மொழிய (569) என்று தொடர்ந்து முடிக்க.

**துயரமெய்த்திச்**—என்பதும் பாடம் 15

566 (வி - ரை) **களி** - மதம் பொருந்திய **ஈர் உரியாய்** - உரித்த தோலைப் போர்வையாக உடையவனே **ஈர் உரி** - உரித்த தோல். யானையை உரித்தவராதலின் மதயானையால் நேர்ந்த இவ்விடுக்கணைத் தீர்க்க உரிமையுடையவர். **உரியாய்** - உரியவனே என்ற குறிப்புமாம் **ஈர்** - ஈர்ந்த **உரியாய்** - உரிமையுடையாய் என்பது குறிப்பு.

கயாசுரனைப் பூர்வகாலத்தில் தோலை உரித்துத் தேவர்களின் இடர்போக்கியவர் சிவபெருமான் என்பது கந்தபுராண வரலாறு.

**எளியார் வலியாம் இறைவா** - ஏழைபங்காளன் ஆதலின் வலிமையற்ற எளிய எனக்கும் வலிமையளித்து இடரை நீக்குவிக்கும் இறைமைத் தன்மையுடையவரே என்பது குறிப்பு "எளியரை வலியர் வாட்டின் வலியரை யிருநீ வைப்பி, னளியறத் தெய்வம் வாட்டும் எனுமுரை" என்ற **காஞ்சிப் புராணம் - வயிரவக் கடவுள் துதி** காண்க. மாவலியுடைய மாவலியைச் செற்றவன் வாமனன். அவனை வயிரவராக வந்து செகுத்து அவனது தோலை உரித்துச் சட்டையாகப் போர்த்ததும், தண்டத்தைக் கைக்கொண்டும் சட்டையப்பராயினர் என்பது சரிதம் "வாமனனார் மாகாயத் துதிரங் கொண்டார்" என்ற திருத்தாண்டகமுங் காண்க. அவ்வாறு மாபலங்கொண்டானையும் செகுத்து உலகங்காத்ததுபோல, இங்குத் தன் பலத்தாலும் மதத்தாலும் அரசனைச் சார்ந்த இறுமாப்பாலும் என்னை வலிந்த யானையைத் தண்டித்து எனக்குக் காக்கும் வலிமை உடையாய் என்பது குறிப்பு.

**அளியார் அடியார் அறிவே** - உன்பால் அன்பு நிறைந்த அடியார்களின் அறிவு உனது நிறைவைப் பெற்றுள்ளது. அதனால் அந்த அறிவு நீயே யாகின்றாய். அறிந்தாயாதலின் அதனை அகற்றுமாறு நான் வேண்டுதல் மிகை என்பனவாதி குறிப்புக்கள் காண்க. **அளி** - வையகமுந் துயர்தீர்க்க என்னும் பாந்த கருணை "அளிபவருள்ளத் தானந்தக் கனியே" என்பது திருவிசைப்பா.

**தெளிவார் அமுதே** - உன் இறைமைக் குணங்களைத் தெளிவார்க்கு அமுதமானவனே. "தேறுவார்க் கமுதமான செல்வனார்"—**கண் - புரா - 167. அமுதம் -**

துன்பம் போக்குவது. **தெளிவு ஆர் அமுது** என்று கொண்டு எனது அறிவுமயங்கிய இங்கு அதனைத் தெளிவித்து மருந்துபோல உதவுபவனே என்றலுமாம். 16

567. (வி - ரை) **ஆறும் மதியும் அணியும் சடை** - கங்கையின் செருக்கடக்கிப் பிறையை வாழ்வித்த சீலமுடைய சடை எனக். **ஆறு** - கங்கை. கங்கையைச் சடையில் அணிந்தது அடியடைந்து பணிந்த பகீரதனைக் காத்தும் உலகமழியாமற் காத்தும் அருளிய சரிதம் குறித்தது. மதியணிந்தது தன் அடைந்தார்க்கு இன்பங்கள் தந்து காக்கும் செயல் குறித்தது. அத்தன்மையுடைய சடைமேல் ஏறும் மலரைச் சிந்துவதே என்றமையால் அந்தத் திருப்பணிவிடையே கதியாக அடைந்த என்னைக் காத்தல் கடன் என்பது. **சடைமேல் ஏறும்** அத்தகைய சிறப்புடைய சடையினைப் போற்றி யலங்கரிக்கும் என்றதாம்.

**கரி சிந்துவதே** - ஏகாரம் வினா. சிந்துவது தகுமா? முடிமேல் ஏறுவதனைப்படி மேற் சிந்துவதா? ஆற்றினை அணிந்து உலகங் காத்த சிறப்புப் பலவகையானும் விதந்தோதப்படுதலான் இங்குப் புண்ணிய முனிவனார் அதனைச் சுட்டினார். 'கயல்பாயக் கடுங்கலுழிக் கங்கை நங்கை யாயிரமா முகத்தினொடு வானிற் றோன்றும், புயல் பாயச் சடைவிரித்த பொற்புத் தோன்றும்", "பகீரதற்காய் வானோர் வேண்டப் பரந்திழியும் புனற்கங்கை பனிபோலாகச் செறுத்தானை" முதலிய திருத்தாண்டகங்கள் காண்க. அவ்வாறு ஆற்றினை அணியாதிருந்தாராயின் "சலமுகத்தா லவன்சடையிற் பாயாதிலளேற் றரணியெல்லாம், பிலமுகத்தே புகப்பாய்ந்து பெருங்கேடாம்" என்று திருவாசகம் அருளிற்று. உலகத்திற்கு இவ்வாறுவரும் பெருங்கேட்டைத் தவிர்த்த உமக்கு இச்சிறு கேட்டைத் தவிர்த்தல் இலகுவிற் செய்யும் கடமையாம் என்பது.

**வேறு உள் நினைவார் புரம் வெந்து அவியச் சீறும் சிலையாய்** - மாறுபட்ட நினைப்புள்ள முப்புரத்தாரை அப்போதே சீறி எரித்த வில்லையுடையவனே! இங்கு நினைப்பு மட்டுமன்றி மாறுபட்ட செயலும் நிகழ்ந்து விட்டது. உள்வேறு நினைவார் எனக். அந்த முப்புரத்திலே வேறு நினையாதார் மூவர் இருக்க, அவர்களை வாழ்வித்து, ஏனைப்புரத்தார் மட்டுமே எரியச் சீறினார் ஆதலின் உள் வேறு நினைவார்புரம் என்றார். பிறிதினியைபு நீக்கிய விசேடணம். "மூவருயிர்வாழ முப்புரமும் நீறாக்க வல்ல பொருதா ரிமையோரில்" என்ற புலவர்பாட்டும் காண்க. **சீறும் சிலை** - சீறியது இறைவனது நினைப்பு; செயல் சிரிப்பு; சிலையோ ஏந்திய அளவில் நின்றது ஆதலின் சீறும் சிலை என்பது உபசாரமாத்திரையாய் நின்றதெனக்.

**வேறுந் நினைவார்**—என்றதும் பாடம். 17

568. (வி - ரை) **தஞ்சே** - தஞ்சமாக - அடைக்கலமாக. **தஞ்சம்** - பற்றுக்கோடுமாம். "தஞ்சே கண்டேன்" - **திருவாய்மூர் - திருக்குறுந்தொகை.** அம் ஈறு குறைந்தது. **சரணம் புகுதும்** - அடைக்கலம் புகுந்த. "முத்தி தருந்தா ளிணைக்கே சரணம் புகுந்தேன்" என்ற தேவாரத் திருவிருத்தங் காண்க. **தமியோர்** ஒப்பற்றவராகிய மார்க்கண்டேயர்.

**நெஞ்சு ஏய் துயரம்** - மனத்திற் பொருந்திய துன்பம். துயரமாவது சிவபூசைக்கு முட்டு நேர்ந்ததென்பது. **நேர் தொடரும்** - இழைத்தநாள் எல்லை கடக்கும் காலமறிந்து அதனால் அந்நேரமைப்பற்றி உயிர் கொண்டுசெல்வதற்குத் தொடர்ந்தான் எனக். **நேர்** - தனது தூதுவரானன்றித் தானே நேரில் என்றலுமாம்.

**மஞ்சே என வீழ் மறலி** - கருமேகம்போல் மேல்வந்து வீழ்ந்த இயமன். கருமைகாலனுக்கும் அவனது ஊர்தியாகிய எருமைக்கும் ஒத்தசிறப்பண்பு. அவன் உயிர்களைக் கொண்டு செல்லத் தனது ஊர்தியினிவர்ந்து வருவான் என்பது "வழித்திரு மைந்த னுவி கொள்வரு மறலி யூர்திக், கழுத்தணி மணியி னொப்போ?" (113) என்றதனலறிக. "கரும்பெரும் பாண்டி வீட்ட மாலிய முகிலின் கூட்டம்" (74), "மாகடலி னுட்படியு

முருமேகமென - கருமேதி" (திருநா - புரா - 8), எனக் கரிய எருமைகளை மேகம் போன்றன என உவமித்தது காண்க. இங்கு உயிர்கொண்டு போகவந்து துயரம் விளைக்கும் மறலியை மஞ்சு என்றதென்னையோவெனின், மறலியின் செயலால் பின்னர் அம்முனிவர் அழியா ஆயுள் - சிவப்பேறு - முதலிய அமுதம் பெறுதல் குறிக்க எனக் கண்புவமம். மறலிக்கு - காலனுக்குருப்பு பகைப்பொருளில் வந்தது.

இறை நீள் - சிறிது நீட்டிய - அழித்தற்கடவுளாகிய இறைவனது திருவடி இவ்வாறு சிறிதளவில் நீளாது பெரிதும் நீண்டிருக்குமாயின் இயமன் அழிந்தே பட்டிருப்பான் என்பது. "பண்டு தொண்டர்மேல் வந்த கூற்றைக் காய்ந்தசேவடியார்" என்ற குங்குலியக்கலய நாயனார் புராணம் (1) காண்க. "கூற்றம் பதைப்ப உதைத்துங்ஙனே உருட்டிய சேவடி யானகட ஆருறை யுத்தமனே" (1), "உதைத்தெழு சேவடியான" (2), "காலனைப் பண்டொருகால் உரப்பிய சேவடியான" (3), "காலனைத் தானலற, உருட்டிய சேவடியான" (4), "உழக்கிய சேவடியான" (5), "உடற்றிய சேவடியான" (7) என்பனவாதி தேவாரங்களால் திருக்கடவூர் வீரட்டத் திருவிருத்தத்தினுள் இவ்வருட்செயலைப் போற்றினார் அப்பர் சுவாமிகள். அருளினாலே "இறையே நீண்டது" என்ற கருத்தினை இராவணனை ஊன்றி அருளிய செயலிலே வைத்து "அங்கொரு தன் திருவிரலா லிறையே யூன்றி யடர்த்தவற்கே யருள்புரிந்த அடிகள்" (திருத்தாண்டகம் - திருவலம்புரம் 10), என்ற விடத்தும், "அனகனுயர் நின்ற வீச னூன்றலு மலறி வீழ்ந்தான்,மனகனூ யூன்றி னானேன் மறித்துநோக்கில்லை யன்றே" (1) என்ற ஸ்ரீகயிலாயத்திருநேரிசை முழுவதினும், பிற இடங்களிலும் போற்றுதல் காண்க.

செஞ் சேவடி - செம்மையைத் தருவதாகிய சிவந்த திருவடி. செம்மை-வீடாகிய நித்திய இன்பத் திருநின்ற செம்மை மறலிக்கு இறை மாத்திரம் நீண்ட அச்செயலினாலே அத்திருவடி முனிவருக்குச் செம்மை தந்ததனால் செஞ்சேவடி என்றார். செம் - சிவப்பு நிறமென்று கொண்டு, மிகுதிப் பொருள் குறித்துவந்த அடுக்கென வைத்து மிகச் சிவந்த என்று பொருள் கூறுவாரு முண்டு. செங்கோல் என்றதிற்போல செம் - கோடாத என்று பொருள் கொள்வர் திரு இராமநாதச் செட்டியார். 18

*569. (வி - ரை) நெடியோன் - திருமால் சிறப்புமமை தொக்கது. நீண்டவன் - ஈரடியால் மூவுலகளக்க நீண்ட திரிவிக்கிரம வடிவு கொண்டவன் என்பது பொருள். "மாலுங் குறளாய் வளர்ந்து", "உலகெலா மளவிட்ட குறுமாணுருவன்" (ஆளுடைய பிள்ளையார் தேவாரம் பண் - குறிஞ்சி - திருக்கண்ணார் கோயில் - 5), "திருநெடுமால்" (திருவாசகம்) முதலியன காண்க. அவனும் அறியா நெறியாவது சிவநெறி. இந்நெறியினையும், இவ்வறியாமையினையும் இவை இத்தன்மையன என்று இலிங்க புராணத் திருக்குறுந்தொகையிலே விளக்கியருளினார் அப்பர்சுவாமிகள். நெறி - திருவடி என்பாருமுண்டு.

நெறியார் - நெறியாராகி. அந்நெறி நிற்பாராகி அறியும் படியால் அடிமைப்பணி செய்தொழுகும் என்றது அடியார்கள் தாம் தாம் அறிந்த வகையாலும் அறிந்தவாறாலும், என்றும் இறைவனுக்குத் தாம் அடிமை என்பதுணர்ந்து, பணியே செய்து ஒழுகுகின்ற என்றதாம். "யானறி வகையால் வாழ்த்தி" (403), "கோழைமிடறாக்கவி கோளுமில வாகவிசை கூடும்வகையால், ஏழையடி யாரவர்கள் யாவைசொன சொன".

*குறிப்பு - இப்பாட்டுச் சில ஏட்டுப் பிரதிகளில் இல்லை - 565-ம் பாட்டு "சிவதாஎன்பார்" என முடிந்துள்ளதும், அதனையே தொடர்ந்து 570-ம் பாட்டு "என்றவருரைத்த" என்னத் தொடங்குவதும் கருதத் தக்கது. இப்பாட்டின் "என்வே மொழிய" என முடிந்த தொடருடன் வரும் பாட்டின் தொடக்கம் இலகுவிற் றொடர்ந்து செல்லாமையும் ஆராயத்தக்கது.

மகிழு மீசன " (ஆளுடைய பிள்ளையார் தேவாரம் - பண் - சாதாரி - திருவைகா - 1) முதலிய திருவாக்குக்களின் கருத்தினையே இங்கு அறியும்படியால் என்ற விட்டதாக கொள்ளப்பட்டது

**நெறியார்** - நெறிக்கு உடையவராகிய சிவபெருமான் என்று கொண்டு, அவரறியும்படியால் எனப் பொருள் கொள்வாருமுண்டு. இப்பொருட்சேரப், **அணைவார் - முதலார்** என்று பாடங்கைப் பொருள்பட வரும் பாடங் கொள்வர் மேன் மூன்று பாட்டுக்களினும் இறைவனை முன்னிலையாக்கி உரியாய்! இறைவா! என்று பலவாறும் நேரே விளித்துச் சிவதா! சிவதா! என ஓலமிடுகின்றனராதலின் அவற்றைத் தொடர்ந்த பொருளில் வரும் இப்பாட்டில் படர்க்கை முகத்து வைத்துக் கூறியதாகக் கொள்ளும் பாடமும் பொருளும் சிறவா எனக்

**அடிமைப்பணி** - அடிமையிலே படும் செய்யும் பலவகைத் திருப்பணிகள்.

**அடியார்களில் யான் ஆரா அணைவாய்** - பணி செய்யும் சீரடியார்களில் ஒருவனாக வைத்து எண்ணுதற்கு நான் எவ்வகையில் உரிமையுடையவன் என்றுட் கொண்டு நீ இங்கு அணைந்து இடர் தீர்ப்பாய்? நான் ஒன்றுக்கும் பற்றாத நாயேன் ஆதலின் நீ அணையாமல் நின்றனை என்பது குறிப்பு "நாங்க ளெண்ணலா ரடிமைக் கென்ப தின்றறி வித்தீர்" (353), "யானமிகை யுமக்கின் றுளனென் செய்வீர் போதாது" (354), "இன்றெ னடிமைநீர் வேண்டா விட்டால்" (355) என்ற ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணப் பாட்டுக் கருத்துக்களை இங்கு வைத்துக் காண்க. "ஊடுவ துன்னோடு" என்ற திருவாசகப்படி தமது ஆன்ம நாயகனாகிய இறைவனுடன் ஊடி நின்றுரைப்பது அவர்பாற் பற்றுக்கொண்ட அடியார்களுக் கியல்பாம்.

**முடியா முதலாய்!** - "பொன்னம் பலத்தெம் முடியா முதலே" - **திருவாசகம்.** முதல் உண்டாயின் முடிவும் வேண்டும் "தோற்ற முண்டேல் மரண முண்டு" - **நம்பியாரூரர் தேவாரம்.** ஆனால் இம்முதலுக்கு **முடிவில்லை** எனவே **முதல் - ஆதியுமில்லை** 'ஆதியு மந்தமு மில்லா வரும்பெருஞ் சோதியை" என்று திருவாசகம் போற்றியது.

இதற்கு இவ்வாறன்றி, அடியார்களில் யான் ஆரா எனவே மொழியா முடியா முதலார் அணைவார் என்று பாடங் கொண்டு "அடியார்களில் யான் யார்? அதனைச் சொல்லுவாய்" என்று அதிகாரத்துடன் கேட்க, முடியா முதல்வராகிய சிவனுரைப் போல (ஒருவர் அங்கு) வருவாராயினார் என்றுரை கூறுவர் ஆலால சுந்தரம் பிள்ளை அவர்கள் இப்பொருட் பொருத்தம் ஆராயத்தக்கது

**அணைவார் முதலார் மொழியா**—என்பன பாடபேதங்கள் 19

570 (வி - ரை) **மாற்றம்** - சொற்கள் மேலே விரித்துக் கூறப்பட்டவை. ஒருவர் கருத்துக்களைக் கேட்பவர் மனத்திற்குச் செல்லுமாறு இடம் மாற்றுதற்குக் கருவியாயிருத்தலின் சொற்கள் **மாற்றம்** எனப்படுவன போலும் இங்குச் சிவகாமியார் மனத்திலும் எறிபத்தர் மனத்திலும் ஒரே தன்மைத்தாகிய சிவநிறைவு பொருந்தியிருந்தது. மேல **ஆரா அணைவாய்** என்பதீறாகச் சொல்லியவை அந்நிறைவுக்குள்ளே தாகக், சிவம் அவவிடை யூறறினை மாற்றத் திருவுளங்கொள்ள, அது எறிபத்தர் உள்ளத்திற்றாக்க, அவராக **அணைந்தனர்** என்ற குறிப்புப்பெற **மாற்றம்** என்றார்.

**எதிரே வாரா நின்றவர்** - அடியார்க்கு அடாதன அடுத்தபோது சிங்கம்போலத் தோன்றி இடையூறு தீர்ப்பார் (557) ஆதலின் இங்கு எதிரே வாரா நின்றவர் கேட்டு எனக். **வாரா** வந்து, என்று பொருள் கொண்டு, எதிர்வந்து கொண்டிருந்தவர், மேற்செல்லாது இதனுற்றடைபட்டு நின்றார் என்ற குறிப்பும்பெற இவ்வாறு கூறினார் முன்னர் 560ம் பாட்டில் **வாரா நின்றார்** என்றபடி இங்கும் குறித்தது காண்க

**மூளும் நெருப்பு உயிர்த்து** - மூள்கின்ற கோபத் தீயால், தீப்போல வீசும் நெட்டுயிர்ப்பு வீசி. **அழன்று** - முன்னர் மூண்டு புகைகின்ற அழல் பின்னர்ப் பொங்கி மேல்

எழுந் தெரிவதுபோல, முன்னர் நெருப்பு உயிர்த்தலும் அதன்பின் அழன்று பொங்குதலும் உண்டாயின எனக்

**மன்றவர்** - அம்பலவாணர் - சிவபெருமான். **களிறே வழிப்பகை** - சிவபெருமானுடன் பொருதான் கயாசுரன். அவ்வாறு ஒரு யானை இறைவனுக்குப் பகையாகவே அதன் வழிவரும் யானைகளும் அவ்விறைவன் வழிப்படும் அடியார்க்குப் பகையாம் என்று குறிக்க **வழிப்பகை** என்றார். இறைவனுக்கு எவரும் பகையில்லை என்றிருப்பவும் அவனுக்கு மாறாகப் பொருதல் என்றது, அவன் விதித்த விதிகளின்னின்றும் மாறுபட்டு ஒழுகும்படி ஏவி உலக நியமத்தை அழிக்க முயலுதல். களிறு வழிப்பகையே என ஏகாரம் பிரித்துக் கூட்டுக. **வழிப்பகை** - வழியில் உள்ள பகை என்றலுமாம்.

**கோலமழு** தண்டனையின் பொருட்டுக் கொலைசெய்யும் மழு கொலை பாவச் செயலாயினும் அரனடிக் கன்பு பற்றிச் செய்யப்படுவ தாதலின் அது புண்ணியமே யாகும் என்பது ஞான நூற்றுணிபு. இதனைக்குறிக்க மழுவுக்கு அடைகொடுத்து விசேடித்தார். இக்கருத்தேபற்றிப் பின்னர் மங்கலமழு என்றதும் காண்க. **கோலை** - மழுவுக்கு இயற்கை யடைமொழியே யன்றிப் பின்னர் யானையையும் பாகர் ஐவரையும் கொல்லும் மழு என்றச் சரிதக் குறிப்புமாம்.

**கோடுமழு**—என்பதும் பாடம். 20

571. வந்தவ ரழைத்த தொண்டர் தமைக்கண்டு வணங்கி "யும்மை
யிந்தவல் லிடும்பை செய்த யானையெங் குற்ற?" தென்ன,
"வெந்தையார் சாத்தும் பூவை யென்கையிற் பறித்து மண்மேற்
சிந்திமுன் பிழைத்துப் போகா நின்றதித் தெருவே" யென்றார். ௨க

**(இ - ள்)** வெளிப்படை. வந்தவராகிய எறிபத்தர், சிவபெருமானை நோக்கிச் "சிவதா" என்று அழைத்த தொண்டராகிய சிவகாமி யாண்டாரைக் கண்டு, வணங்கி, "உம்மை இந்த வலிய துன்பஞ் செய்த யானை எங்குச் சென்றது?" என்றுகேட்க, "எமது பெருமான் அணிகின்ற பூவை என் கையினின்றும் பறித்துத் தரையிற் சிந்தி முன்னாலே பிழைத்து இதோ இத்தெருவே போகின்றது" என்று சொன்னார்.

**(வி - ரை) வந்தவர்** - மழுவெடுத்து வந்தார் - என்முடிந்த மேற்பாட்டினைத் தொடர்ந்து கொண்டதாம்.

**அழைத்த** - "சிவதா" என்று ஓலமிட்டு இறைவனைக் கூவியழைத்த.

**வணங்கி** என்றதனால் எறிபத்தர் அடியார்பாற் கொண்ட பத்தியும், அடியாரிடத்து ஒழுகும் முறையும் அறிவித்தவாம். "தாழ்வெனுந் தன்மை" விளங்கும் "சைவமாம் சமய" வொழுக்கமும், "உரிமை பூண்டராகக் கருத்பெருந் தொண்டு செய்வாரவ ரெறிபத்தர்" (556) என்ற தன்மையும் விளக்கியபடி.

**இந்த** - உமது மாற்றங்களாலும் உமது நிலையாலும் பிறவற்றாலும் யானறிகின்ற வாறுள்ள இந்த.

**வல்இடும்பை** - "வேண்டுதல் வேண்டாமை யிலானடி சார்ந்தார்க்கி யாண்டு மிடும்பை யில" (குறள்) என்பது உண்மை ஆதலின் இறைவனடியா ராகிய உமக்கு இடும்பை யென்ப திலதாதல் வேண்டும். ஆயின் உம்மிடத்துக் கண்ட இவ்விடும்பை உம்மைச்சார்ந்ததன்று இறைபணியின் முட்டுப்பாடு காரணமாக நிகழ்ந்தது என்றது குறிப்பு. இக்கருத்தை உட்கொண்டே சிவகாமியாண்டாரும் "எந்தையார் சாத்தும் பூவைப் பறித்துச் சிந்திப் பிழைத்து" என்றதும் காண்க.

சிந்தியதே பிழையாதலின் **சிந்திப் பிழைத்து** என்றார்.

**முன்பிழைத்துப் போகாநின்றது**-பிழைத்து முன்னே போகின்றது. **பிழைத்து** - பிழை செய்து என்றும், உயிருடன் பிழைத்து என்றும், இருபொருளும் பெற வைத்த

சொல்லணி. சிவாபராதத்துக்கு உயிர்த்தண்டனையே கழுவாய் என்ற விதியையும் உட்கொண்டது கருத்து. சண்டேசபுராணம், கோட்புலியார் புராணம் முதலியவற்றின் உள்ளீடு சிந்திக்க. இக்கருத்தினையே பின்பற்றி எறிபத்தரும் "இங்கிது பிழைப்ப தெங்கே யினி" என்று வரும்பாட்டிற் றொடர்ந்து கூறுவதும் காண்க.

**யானை எங்கு உற்றது?**-முனிகழச்சியைச் சிவகாமியார் "சிவதா சிவதா" என்ற ஓலச்சொற்களாலும் அங்குச் சிந்திக்கிடந்த பூக்களாலும் பிறவாற்றாலும் எறிபத்தர் அறிந்து கொண்டாராதலின், "இடும்பை யாது?" என அதன் வரலாற்றை வினவாது இடும்பை செய்த யானை எங்கே? யென்று கேட்டனர். இதற்குச் சிவகாமியார் "இத்தெருவே போயிற்று" என்றமையாது, வரலாறு கூறியதென்னை? யெனின், அவர் அறிந்ததனை மிக்க துயரத்தாலும் சினத்தாலும் இவர் அறியார்; அன்றியும் அன்பராகக் கடாதன் அடுத்தபோது தீர்க்கும் இயல்புடைய எறிபத்தர்க்கு இங்கு அவர்தம் பணி செய்ய வேண்டிய தகுதியை அறிவுறுத்தினார் எனக். மேலும் தம் நியதியான சிறந்த திருப்பணி இன்று வலியப்பட்டு முட்டுப்பட்டமையால் தாம் உற்ற துயர மிகுதிபற்றி அதனைப் பன்னிக் கூறியதுமாம். இஃதுலக ரியற்கை எனக். 21

572. "இங்கிது பிழைப்ப தெங்கே யினி" யென வெரிவாய் சிந்து
மங்கையின் மழுவுந் தாமு மனலும்வெங் காலு மென்னப்
பொங்கிய விசையிற் சென்று பொருகரி தொடர்ந்து பற்றுஞ்
செங்கண்வா ளரியிற் கூடிக் கிடைத்தனர் சீற்ற மிக்கார். ௨௨

**(இ - ள்)** வெளிப்படை. "இங்கு இந்த யானை இனிப்பிழைப்பது எங்கே?' என்றுசொல்லி, உடனே, தீயை வாயிலே சிந்துவதாய் அங்கையில் ஏந்திய மழுவும் தாமுமாகத் தீயும் காற்றும் கூடியது போல மிக்க வேகத்தினாலே போய்ப், போர் செய்யும் யானையை வேகத்தினாற் றொடர்ந்து பாய்ந்து பற்றுகின்ற சிவந்த கண்களையும் கூரிய நகங்களையுமுடைய சிங்கத்தினைப்போலக் கோபத்தால் மிக்கவராய அவ்வியானையைக் கிட்டினார்.

**(வி - ரை) எரிவாய் சிந்தும்** மழுவுக்கு அடை. அதன்முகத்தில் ஒளிவீசுதலாலும் அதுசெய்யும் செயலாலும் தீயுமிழ்வது போன்றிருக்கும் மழு எனக். இவரது தன்மை இவர் படையின்மேலும் ஏற்றப்பட்டது கருவியினைக் கையாள்பவர் செயலே கருவிக்குமாகும் என்பதியல்பு.

**மழுவும் தாமும் - அனலும் வெங்காலும் - என்ன** - மழு அனல் என்னவும் தாம் வெங்கால் (வெவ்விய கடுங்காற்று) என்னவும் என்று நிரனிறையாகக் கூட்டி உரைத்துக்கொள்க. பாய்ந்து சென்ற வேகத்தாற் காற்றினைப்போன்றார் எனக். இதனையே **பொங்கிய விசையில்** என்று தொடர்ந்து காட்டியவாறு. தீயும் காற்றும் கூடியபோது கடுமை மிகுந்து அழிவுசெய்தல் உறுதியாதலின் இவ்விரண்டினையும் கூட்டியுவமித்தார்.

**பொங்கிய** - சினத்தாற் பொங்குதலாலே மேலே "நெருப்புயிர்த்துத் தழன்று பொங்கி" (570) என்றது காண்க.

**செங்கண் வாள் அரியில்** - சிங்கத்தின் செங்கண் அதன் கோபங்காட்டும். கோபித்த சிங்கம் யானையின்மேற் பாய்ந்து அதன் மத்தகத்தைத் தனது கூரிய நகங்களாற் பிளக்கும் என்பர். **வாள்** ஆகுபெயராய் வாள்போற்கூரிய நகங்களைக்குறித்தது. "பருக்கை யானை மத்தகத் தரிக்குலத் துகிரப்புக, நெருக்கி வாய நித்திலந் நிரக்குநீள் பொருப்பனூர்" (திருவாரூர் - நட்டராகம் - திருவிராகம். 1) என்ற ஆளுடைய பிள்ளையார் தேவாரங் காண்க. **அரியில்** - அரியினைப்போல. **இல்** ஐந்தனுருபு. ஒப்புப் பொருளில் வந்தது. முன்னர் அனலுங்காலும் என்றவிடத்துப்போல, இங்கும் **வாள்** மழுவுக்கும், **அரி** நாயனாருக்கும் முறையே உவமானமாகக் கொள்க. முன் சொன்ன

னவை விசையிற்சென்றபோது உள்ள நிலையினும், இங்குக்கூறியன, யானையைக்கூடிக் கிடைத்த நிலையினும் உவமானமாயின ஆதலின் மிகைபடக் கூறலாகாமை உணர்க. **செங்கண்** - முன், எரிவாய சிந்தும் என்றதற்கேற்பச் **செங்கண்** - செவ்வொளி என்று கொண்டு வாளுக்குக்கூட்டி யுரைத்தலுமொன்று.

**பொருகரி தொடர்ந்து பற்றும்** - **கரி** - இங்கு உண்மையில் மதங்கொண்டதோர் யானையினையே நாயனார் கூடிக்கிடைத்தனராதலின் **கரி** என்றது உவமை முகத்தானன்றி உண்மை முகத்தானும் நோபட்ட நயம் காண்க. **தொடர்ந்து - பற்றும்** - என்றதற்கேற்பக் **கூடி - கிடைத்தனர்** - என்றார்.

**கிடைத்தனர் - மிக்கார்** - மிக்காராய்க்கிட்டினார். இவ்வாறன்றிக் கிட்டினார், கிட்டினபோது, பிழைத்த யானையைக்கண்டதும் கோபம் மிக்கனர் என வினைமுற்றாக உரைப்பினுமமையும்.

**வன்காலும்—தொடர்ந்து செல்லும்**—என்பனவும் பாடங்கள். 22

573. கண்டவ "ரிதுமுன் பண்ண லுரித்தவக் களிறே போலும்;
மண்டரு மண்ணு ளோரு நடுக்கினு மடாத்துச் சிந்தித்
துண்டித்துக் கொல்வே" னென்று சுடர்மழு வலத்தில் வீசிக்
கொண்டெழுந் தார்த்துச் சென்று காலுற குலுங்கப் பாய்ந்தார்.

(இ - ள்) - வெளிப்படை (கிட்டியவுடன் அவ்வியானையை முற்றிலும்) கண்ட நாயனார், "இது முன்காலத்திற் சிவபெருமான் உரித்த அந்த யானையினையே போன்றதாம்! தேவர்களும் மண்ணவர்களும் தடுத்தாலும் பொருட்படுத்தாது மேற்சென்று எதிர்த்துச் சிந்திவீழும்படி துண்டித்துக் கொன்றிடுவேன்" என்று, ஒளி வீசும் மழுவை வலமாகத் திரித்து வீசிக்கொண்டு மேலெழுந்து ஆர்ப்பரித்துச்சென்று காலுற குலுங்க யானைமீது பாய்ந்தார்.

(வி - ரை) **இது முன்பு அண்ணல் உரித்த அக் களிறே போலும்!** - வழிப்பகை களிறேயன்றோ? (570) என்று முன்கொண்ட கருத்தினையே தொடர்ந்து கூறியவாறு. முன்னர் யானையைக் காணாது அதன் செயலைக் கேட்டபோது யானையே வழிப்பகை என்ற நினைவு வந்தது அதனை நேரிற் கண்டபோது அந்நினைவு உறுதி பெற்றது என்க. பகைவனைக் காணான் - பகைமைச்செயல் மட்டிற் கண்டானொருவன் இஃதோர் உற்ற முற்பகைவனால் நேர்ந்தது என்று முதலில் எண்ணுவன். பின்னர்ப் பகைவனை நேரிற் கண்டானாயின் அவ்வெண்ணத்தைத் திடப்படுத்துவன் இஃது உலக இயல்பு. முன்னர் **வழிப்பகை களிறே** என்றது பகைமைச் செயலின் விளைவு கண்டபோது நிகழ்ந்த அனுமானத்தால் உண்டாயின உணர்ச்சி இங்கு **அக்களிறே போலும்** என்றது காட்சியால் அவ்வனுமானத்தை உறுதிப்படுத்திய உணர்ச்சி. "களியானையினீ ருரியாய!" என்று முதலிற் சிவகாமியார் ஓலமிட்டதும் காண்க.

**போலும்** - போன்றுள்ளது - ஆதலால் என்க.

**அண்டரும்** - தேவர்கள் தவத்தால் மிக்க அறிவும் ஆற்றலும், சிலகாற் சிவாபராத முயலவும் படைத்தவர்களாதலின் அவர்கள் இதற்காகப் பரிந்து எதிர்த்தவரினும் என்பார் **அண்டரும்** என்றார்.

**மண்ணுளோரும்** - இவ்வியானை அரசாது பட்டத்து யானை யாதலின் அரசன் சார்புகொண்ட மண்ணவர் எதிர்த்தவரினும் என்பார் **மண்ணுளோரும்** என்று கூட்டினார். **வழிப்பகை** என்ற கருத்தினைத் தொடர்ந்து கூறியதாம்.

**சிந்தி** - அதன் வலிமையைச்சிந்தி. அறுபட்டு வீழச்செய்து என்றலுமாம்.

**துண்டித்து** - சிவ அபசாரம் விளைத்தது துதிக்கை யாதலின் அதனை உடலினின்றும் வேறுபடத்துணித்தது. "தோயத்தனித் தடக்கை வீழத் துணித்தனர்" என வரும்

பாட்டிற் கூறியது காண்க. குற்றஞ் செய்த அங்கத்தினையே முற்பட்டுத் துணிக்க ஒருப்பட்டனர் என்க. இந் நியதியினைச் சண்டீச நாயனார், அபசாரம் செய்த பிதாவின் காலைத் துணித்ததும், செருத்துணையார் அரசனது தேவியாரின் மூக்கினையரிந்ததும், கழற்சிங்கர் அத்தேவியாரது கைதடிந்ததும் முதலிய வரலாறுகளில் வைத்துக் காண்க.

**மழு வலத்தில் வீசிக் கொண்டு** - போர்ப்படையை வலமாகத் திரித்து வீசுதல் வேகத்தால் எறியும் பொருட்டாம். வலக்கையால் என்றும், பலங்கொண்டு என்றும் உரைப்பாருமுளர்.

**காலினாற் குலுங்கப் பாய்ந்தார்** - மேலே வலத்தில் வீசியதாற்பெற்ற பலத்துடனே, காலின் பாய்ச்சலாலும் உடலின் குலுங்கலாலும் கூடிய தமது முழு உடற் பலமும் தமது செயலுக்குத் துணையாகப் பெற்றுக்கொண்டனர் என்பது. யானை குலுங்க என்று கூட்டி யுரைப்பாருமுண்டு. 23

574 பாய்தலு மிசைகொண் டுய்க்கும் பாகரைக் கொண்டு சீறிக்
காய்தழ லுமிழ்கண் வேழந் திரிந்துமேற் கதுவ, (அச்சந்
தாய்தலை யன்பின் முன்பு நிற்குமே!), தகைந்து பாய்ந்து
தோய்தனித் தடக்கை வீழ மழுவினாற் றுணித்தார் தொண்டர். உச

(இ-ள்) வெளிப்படை. பாய்ந்த உடனே, மேலிருந்து செலுத்துகின்ற பாகரை மேற்கொண்டு சீறிக் காயும் நெருப்பினை உமிழும்படி சிவந்த கண்ணுடைய அவ் வியானை, திரிந்து இவர்மேற் பாய்ந்துதாவ, அதனை மறித்துப், பாய்ந்து நிலந்தோய நீண்ட அதன் ஒப்பற்ற பெரிய துதிக்கை வீழும்படி தொண்டர் மழுவினாலே துணித்தார். தாயினது தலையன்பின் முன்னே அச்சம் எதிர்த்து நிற்கவல்லதோ? (நில்லாது)

(வி-ரை) **மிசை கொண்டு உய்க்கும் பாகர்** - மேலிருந்து யானையைச் செலுத்தும் கடமைபூண்ட பாகர். தன்னை வசப்படுத்திச் செலுத்தும் பாகர் தன் மேலிருந்தும், அவர்களால் அடக்கப்பெறாது. சிறப்பும்மை தொக்கது.

**தழல் உமிழ் கண் வேழம்** - யானையினது இயல்பாற் சிவந்த கண் கோபத்தாற் பின்னும் மிகச் சிவந்ததனைத் தீ உமிழ்வது போன்றதென்றார். கோபத்தாற் கண்கள் தீப்பொறி பறக்க என்பது மரபும் வழக்குமாம். நாயனார் நெருப்புயிர்த்த தழன்று பொங்கிப் பாய்ந்ததற்கெதிர் யானையும் கண் தழல் உமிழ்ந்து கதுவ என்க.

**திரிந்து** - முன் செல்கை தவிர்ந்து நாயனார் மீது திரும்பி. **கதுவ** - எதிர்த்துக் கைசுழற்றித் தாவ.

**அச்சம் தாய் தலையன்பின் முன்பு நிற்குமே?** இது கவிக்கூற்று. **அச்சம்** - யானை தம்மீது தாவிப் பாய்கின்றதனால் தமதுயிர்க்கு இறுதி நேரிடும் என்ற அச்சம். **தாய் தலையன்பு** - தாயின் தலையன்பு போன்ற தலையன்பு. இங்கு அடியார் பணிக்கு வரும் முட்டுப்பாட்டை நீக்குதலின் வைத்த தலையன்பினைக் குறித்தது. **நிற்குமே** - ஏகாரம் நிற்காது என எதிர்மறைப் பொருளில் வந்தது. குழவியைக் காக்கும் தாய் அச்செயலிலே தனக்கு நேரிடும் அபாயத்தையும் நோக்காது விரைகின்றது போல இங்குத் தமதுயிர்க்கு வரும் இடரையும் நோக்காது அன்பு மீதூர்ந்து பாய்ந்தனர். அச்சம் அன்பின் முன்னே முனைந்து நிற்கலாற்றாது அதனால் விழுங்கப்பட்டது என்க. அன்பு அச்சத்தை மேலிடும் என்பது நூற்றுணிபு. இதற்கு இவ்வாறன்றி அடியார்க்குத் தாயினு மினிய இறைவனது அன்பின் முன் யானையினது பகைமை என்ன செய்ய வல்லது? முன்னிற்குமோ? என்று பொருள் கூறுவாருமுளர். அது பொருந்தாமை யுணர்க. தாய் என்றதற்குத் தாய்ப் பசு என்றுரைப்பாருமுளர்.

**தகைந்து பாய்ந்து** - தம்மேற் பாயும் யானையை மறித்துத் தாம் அதன்மேற் பாய்ந்து.

**தோய்** - துதிக்கை நிலந்தோய நீண்டு வளர்ந்திருத்தல் உத்தம யானையினிலக்கணம் என்பர். கால்கள் நான்கும், பீசம் - கை - என்றவையும் ஆக ஆறு அங்கங்கள் நிலந்தோய்தல் யானைக்கு உயர்ந்த இலக்கணமாம் என்ப.

**தனி** - ஒப்பற்ற. **தடக்கை** - பெரிய துதிக்கை.

**தடக்கை வீழத் துணித்தார்** - கையினைத் துணித்த காரணம் முன்னர் உரைக்கப்பட்டது. துணித்துக்கொல்வேன் என மேற்பாட்டிற் கூறியதுகாண்க. கைதுணிக்கவே யானை இறந்துபடும் என்பதாம்.

**காய கனல்**—என்பதும் பாடம். 24

575. கையினைத் துணித்த போது கடலெனக் கதறி வீழ்ந்து
மைவரை யனைய வேழம் புரண்டிட, மருங்கு வந்த
வெய்யகோற் பாகர் மூவர் மிசைகொண்டா ரிருவ ராக
வைவரைக் கொன்று நின்றா ரருவரை யனைய தோளார். ௨௫

(இ - ள்) வெளிப்படை. துதிக்கையினைத் தொண்டர் துணித்தபோது கடல் போலக் கதறிக் கீழேவீழ்ந்து கரியமலைபோன்ற அவ்வியானை புரள, அதன் பக்கத்தே வந்த வெவ்விய குத்துக்கோற்பாகர் மூவரும் யானைமேலிருந்து செலுத்திய பாகர் இருவருமாக ஐவரையும் அரியமலைபோன்ற தோளுடைய நாயனார் கொன்றனர்.

(வி - ரை) **கடலெனக் கதறி** - கடல்போல இரைத்து. மலைபோன்ற யானை கடல் போலக் கதறிற்று என்ற நயமுங்காண்க. ஒரே பொருள் உருவத்தால் மலையும் ஓசையினால் கடலும் போன்றதெனக.

**புரண்டிட** - கை துணிபட்டமையால் இறக்கின்ற யானை மரண வேதனையாற் புரண்டது எனக். "பட்டவர்த்தனமும் பட்டு" என்று வரும் பாட்டிலும், "களிறுபாகர் மடியவும்" (595) எனவும், "உறங்கிய தெழுந்த தொத்து" (601) எனவும் கூறுவனவற்றால் இச்செயலினால் யானை இறந்துபட்டதென்பது துணியப்படும்.

**மருங்கு வந்த வெய்ய கோற்பாகர்** - யானைக்குமுன் ஒருவனும், இருபக்கங்களில் இருவருமாக மூவர் பாகர்கள் குத்துக்கோலுடன் யானையோடு வருவது வழக்கு. குத்துக்கோல் முன்னும் பக்கத்தும் வருவாரை விலக்கவும், யானையை வழிப்படுத்தவும் உதவுவதாம். பெரிய மதயானையையும் குத்தி வசப்படுத்தும் கோலாதலின் **வெய்ய கோல்** என்றார். இவர்களும் யானையை நேர் செலுத்தும் கடன் பூண்டாராதலின் **பாகர்** எனப்பட்டார்.

**மிசை கொண்டார்** - "மிசை கொண்டியக்கும் பாகர்" என்றது மேற்பாட்டு.

**ஐவரைக் கொன்றார்—அருவரை யனைய தோளார்** என்ற சொன்னயமும், பொருணயமும், கொல்வதற்குத் துணைக்காரணம் **தோள்** என்றுகுறித்த சதுரப்பாடும் காண்க.

**கொன்று நின்றார்** - இதுவரை சலியாது பாய்ந்த நாயனார் தமது செயல் முற்றிய பின்னரே நின்றனர் என்றது குறிப்பு. 25

576. வெட்டுண்டு பட்டு வீழ்ந்தா ரொழியமற் றுள்ளா ரோடி
மட்டவிழ் தொங்கன் மன்னன் வாயிற்கா வலரை நோக்கிப்
"பட்டவர்த் தனமும் பட்டுப் பாகரும் பட்டா ரென்று
முட்டநீர் கடிது புக்கு முதல்வனுக் குரையு" மென்றார். ௨௬

(இ - ள்) வெளிப்படை. வெட்டியதாற் பட்டு வீழ்ந்த பாகர்கள் ஒழிய வேறுள்ளவர் ஓடிப்போய், வாசனையுடைய மாலையை அணிந்த அரசரது அரண்மனை வாயிற்

காவலாளரை நோக்கிப் "(சிலரால்) பட்டவர்த்தனயானையும் பட்டது (சில) பாகரும் இறந்துபட்டனர் என்று நீவிர் சேர விரைவிற் சென்று அரசருக்குச் சொல்லுங்கள்" என்றார்கள்.

**(வி - ரை) வெட்டுண்டு** - வெட்டுண்டதனாலே. **பட்டு** - இறந்து **ஒழிய** - மங்கல விழாக் கொண்டு யானையுடன் வந்தார் பலராக, அவருள்ளே, மேலே கண்டவாறு பட்டவர் ஐவர் ஒழிய. **ஒழிய** - ஒழிந்தேபோக என்ற குறிப்புமாம். "ஒழிந்தவரொழிந்தே மாண்டார்" (427) என்றது காண்க

**மற்றுள்ளார்** - மிகுந்த - எஞ்சிய - ஏனையோர் இவர்களும் பாகர் கூட்டத்திற் சேர்ந்தவர்கள். வரும் பாட்டிற் "செப்பினார் பாகர்" என்றது காண்க. அறிவிக்கும் பொறுப்பு வாய்ந்தவர்களாற் கேட்டசெய்தியே அரசன்பா லறிவிப்பது முறையாம்.

**மன்னன் வாயிற் காவலர்** - அரசரது அரண்மனை வாயில் காப்போர். இதனால் அப்பாகர் அரண்மனை வாயிலையடைந்தமை குறிப்பாலுணர்த்தப்பட்டது. விரைவு குறிக்க அதனை வெளிப்படக் கூறாது எஞ்சவைத்துக் கூறிய நயமும் காண்க.

**பட்டவர்த்தனமும் பட்டுப் பாகரும் பட்டார் என்று** - இது அவர்களது ஆவலும், ஆத்திரமும், கவலையும் மிகுந்த மனநிலை குறித்தது இதுபற்றியே **முட்ட** என்றும், **கடிது புக்கு உரையும்,** என்றும் கூறுவதும் காண்க. ஓடி என்றதும் குறிக்க. **முட்டப் புக்கு** - அடுத்துப் போய். வரும் பாட்டிற் "சிலராம்" என்றதுகொண்டு இங்குச் சில ரால் என வருவித்துரைத்துக் கொள்க **பாகரும்** - பாகரிற் சிலரும். **முதல்வன்** - தமது முதல்வன் அரசன்.

**வேறுள்ளார்**—என்பதும் பாடம் 26

577. மற்றவர் மொழிந்த மாற்ற மணிக்கடைக் காப்போர் கேளாக்
கொற்றவன் றன்பால் வந்து குரைகழல் பணிந்து நின்று
"பற்றல ரிலாதாய்! 'நின்பொற் பட்டமால் யானை வீழச்
செற்றனர் சிலரா' மென்று செப்பினார் பாக" ரென்றார். ௨௭

(இ - ள்) வெளிப்படை. அவர்கள் சொன்ன மாற்றத்தை மணி கட்டிய வாயிலைக் காப்போர் கேட்டு அரசரிடம் போய், அவரது வீரக்கழலணிந்த அடியிற் பணிந்து நின்று, "பகைவரில்லாதவரே! 'உம்முடைய பொற்பட்டமணிந்த பெரிய யானை வீழும்படிச் சிலர் கொன்றார்களாம்' எனப் பாகர் சொன்னார்கள்" என்றார்கள்

**(வி - ரை) மாற்றம்** - மன நிலையின் மாறுதல் விளைத்தலின் **மாற்றம்** என்ற பெயரால் கூறினார் **மணிக்கடை** - ஆராய்ச்சிமணி கட்டிய. அழகிய என்றலுமாம்.

**குரைகழல்**-சத்திக்கும் வீரக்கழல் அது அதனை அணிந்த அடிக்காயிற்று இது அரசரது வெற்றிநிலை குறித்தது மேற்பாட்டில் "மட்டவிழ் தொங்கல்" என்றதும் இக் கருத்தே பற்றியது "**பற்றலரிலாதாய்!**" என்று அவர்கள் அரசரை விளித்ததும் காண்க. அரசரது வெற்றியினையும் வீரத்தினையும் எடுத்துக்கூறி "உமக்குப் பகைவர் என்போர் இல்லை ஆயினும் இது நிகழ்ந்தது சிலரது செய்கை உமது வீரங்கொண்டு இதனை எளிதின் மாற்றத் தக்கது" என்பது குறிப்பு இது கேட்ட மன்னனும் அதனையே உட்கொண்டு **கிளர்மணித் தோளலங்கற் சுரும்பினங் கிளர்ந்து பொங்கச் (578)** செல்வதும் காண்க. **பற்றலரிலாதாய்** என்றதனால் இது பகைவர் செயலன்று என்பதும் குறிப்பாம். **பற்றலர்** - பகைவர். **கழல் பணிந்து நின்று** - அரசர்பால் அறிவிக்கும் முறை

**பொற்பட்டம்** - பொன்னாலியன்றதாய யானை நெற்றியி னணியும் பட்டம் **பட்ட மால் யானை** - அரசப் பட்டத்திற்குரிய அடையாளமாய்ப் பட்டவர்த்தனமாம் பண்பு பெற்ற (561) யானை என்றலுமாம்.

**செற்றனர் சிலராம்** - சிலர் செற்றனராம் என மாற்றுக. எழுவாய் பயனிலை மாறியது அவர்களது மனநிலை குறித்தது **மாற்றம்** என்ற குறிப்பும் காண்க "பட்ட வர்த்தனமும் பட்டுப் பாகரும் பட்டார்" என்ற அளவே பாகரால் அறிவிக்கப்பெற்ற வாயில் காவலர், இதனை யாவரோ சிலர்தாம் செய்திருத்தல் வேண்டும் என்று தாமே உட்கொண்டு, அவர் சொல்லாத அதனையும் சேர்த்து இவ்வாறுரைத்தனர். இஃதுலகியல்பு கேள்விச் செய்தி உலகில் பரவும்போது பற்பலவாறு மாறுபாடுகளையடையும் இயல்பு காண்க

**சிலர்** - பலரல்லர் - சிலரே இதனைத் துவிவசனம் என்பர் வடநூலார். தமிழில் இது இருமை குறித்து வழங்குவது மரபு. "நல்லற நூல்களிற் சொல்லறம் பல சில, இல்லறந் துறவறமெனச் சிறந்தனவே" என்றது காண்க. பாகர் அறியாராயினும் இங்கு யானைபட்டது சிவகாமியார் - எறிபத்தர் - என இருவரால் நிகழ்ந்தது என்ற உண்மைக் குறிப்புச் சிலர் என்றதிற் றொனிப்பது காண்க

யானைபட்டபோது அதனைக் காக்குஞ்செயலிற் பாகரும் பட்டிருத்தல்வேண்டுமென ஊகித்துக் கொள்ளக்கிடக்குமாதலின் வாயிற் காவலர் அதனைக் கூறினாரில்லை

**செப்பினார் பாகர்** என்றது இச்செய்தி யாங்கண்டதன்று, கேட்டது; ஆயினும் பொறுப்புள்ளார்பாற் கேட்டது என்பது குறிப்பு Reliable information என்பர் நவீனர்.

**போற்றி நின்று**—என்பதும் பாடம். 27

578. வளவனுங் கேட்ட போதின் மாறின்றி மண்காக் கின்ற
கிளர்மணித் தோள லங்கற் சுரும்பினங் கிளர்ந்து பொங்க
வளவில்சீற் றத்தி னாலே யார்செய்தா ரென்றுங் கேளா
னிளவரி யேறு போல வெழின்மணி வாயி னீங்க, ௨௮

579. தந்திரத் தலைவர் தாமுந் தலைவன்ற னிலைமை கண்டு
வந்துறச் சேனை தன்னை வல்விரைந் தெழமுன் சாற்ற
வந்தரத் தகல மெல்லா மணிதுகிற் பதாகை தூர்ப்ப
வெந்திறத் தேரு மாவு மிடையிடை களிறு மாகி, ௨௯

580. வில்லொடு வேல்வாட் டண்டு பிண்டிபா லங்கண் மிக்க
வல்லெழு முசல நேமி மழுக்கழுக் கடைமுன் னான
பல்படைக் கலன்கள் பற்றிப் பைங்கழல் வரிந்த வன்க
ணெல்லையில் படைஞர் கொட்புற் றெழுந்தன ரெங்கு, மெங்கும், ௩௦

581. சங்கொடு தாரை காளந் தழங்கொலி முழங்கு பேரி
வெங்குரற் பம்பை கண்டை வியன்றுடி திமிலை தட்டி
பொங்கொலிச் சின்ன மெல்லாம் பொருபடை மிடைந்த பொற்பின்
மங்குல்வான் கிளர்ச்சி நாண மருங்கெழுந் தியம்பி மல்க, ௩௧

582. தூரியத் துவைப்பு முட்டுஞ் சுடர்ப்படை யொலியு மாவி
னுரமணி யிசைப்பும் வேழ முழக்கமுந் தடந்தேர்ச் சீறும்
வீரர்தஞ் செருக்கி னார்ப்பு மிக்கெழுந் தொன்றா மெல்லைக்
காருடன் கடைநாட் பொங்குங் கடலெனக் கலித்த வன்றே. ௩௨

578. **(இ - ள்)** வெளிப்படை. சோழரும், அதனைக் கேட்டபோது, எதிர் ஒருவரு மின்றி உலகத்தைத் தனிகாக்கின்ற கிளர்ச்சியுடைய மணிகளணிந்த தோளில் உள்ள

மாலையில மொயதத வணடுகளை ஆரவாரிததுு எழுமபடி உணடாகிய அளவுபடாத பெருங கோபததினுலே "இதனைச செயதவாயாவா ?" எனறுங கேளாது, மணிவாயி லினை இளைய ஆணசிஙகமபோல, நீஙகிவா, உஅ

579 (இ-ள்) வெளிபபடை (அதுகணடு) இராசதநதிரத தலைவாகளாகிய அமைச சர்களும தம தலைவராகிய அரசாது நிலையைக கணடு வநது, சேனையை மிக விரைநது எழுநது சேருமபடி முனனே பறைசாறறவே, அழகிய துகிற கொடிகள பூமியின மேலிடமாகிய ஆகாய வெளியெலலாம தூாததுு நிறைய, எநதிரத தோகளும, குதிரை களும, இடையிடையே யானைகளுமாகி, உகூ

580. (இ-ள்) வெளிபபடை விலலுடனே வேலும, வாளும, தணடும, பிணடி பாலஙகளும, வலிய இருபபுலககைகயும, சககரஙகளும, மழுவும, சூலமும முதலிய பறபல படைககலஙகளையும எநதியவாகளாய, அழகிய வீரககழலணிநத, வரிநது கசசுச கட்டிய வனகணமையுடைய, அளவிலலாத படைவீராகள சுழனறு குதிததுு எஙகும எழுநத னர்; எஙகும, ௩0

581 (இ-ள்) வெளிபபடை சஙகுடனே, தாரையும, காளமும, மிகக ஒலி முழஙகும பேரியும, வெஙகுரலுடைய பமபையும, கணடையும, பெரியதுடியும, திமிலை யும, தட்டியும, முதலிய பொஙகொலி செயயும வாததிய விசேடஙகள யாவும கூடிய இவவகையிலே போாபபடைகள நெருஙகிய சிறபபினுலே, மேகஙகள நிறைநத ஆகா யததின கிளாசசியும கீழபபடுமாறு, பககஙகளில எழுநது சததிததுு நிரமப, ௩௧

582 (இ-ள்) வெளிப்படை வாததிய ஓசையும, தாககுகினற ஒளியுடைய படைககலஙகளின ஒலியும, குதிரைகளின கழுததுமாலை மணிகளின சததமும, யானை களின முழககமும, பெரிய தோகளின ஆரவாரமும, படைவீராகளின ஆாபபும, மிக வும கிளமபி, எழுநது, ஒனறுகக கூடியபோது ஊழிககாலததிலே, ஊழிபபெரு மேக முழககுடனே பொஙகும கடலபோலச சததம பெருகின ௩௨

இவவைநது பாடடுககளும ஒரு முடிபு கொணடன இவவாறனறி 580-ல எஙகு மெஙகும எனறதனை அடுககாககி எஙகெஙகும எனறு கொணடு முன மூனறு பாடடுக களை ஒரு முடிபாகவும, பின இரணடினை ஒரு முடிபாகவும உரைபபாரு முணடு. அர சா எழவே சேனையும எழுநதன எனபபிரிவினறிக கொளளும முறையின ருடாயா யமைதலின ஒரு முடிபாககக கொணடுரைககப படடது

578 (வி-ரை) கேட்டபோதில் - கேடடவுடனே

**மாறின்றி மண் காக்கின்ற - பற்றலரிலாதாய** என மேறபாடடில வாயிறகாவலா கூடடியபடி எனக **மாறு - பகை கிளர் தோள் சுரும்பு கிளர்ந்து பொங்க - விரைந்து** எழுசசி பெறறதாலும போாகுறிததுு எழுநததாலும தோள கிளாநதன. அவவசைவு காரணமாக வணடினம கிளாநதன எனக. "மணணினைக காககினற மனனன"-**கம்பர்.**

**யார் செய்தார் என்றும் கேளான்-பற்றலரிலாதாய்** எனறு அவாகள விளிததவத ஞல தமபால இது செயயததகக பகைபபுலததவரிலலாமை நினைவூடடப பெறறும, கோபம மிகக காரணததாலே அது தமது உளளததைக கவாநதெழுநதமையின, இயலபில எவரும முதலில கேடகததகக இககேளவியைத தானும கேடகாமல மேல எழுநதனா கேட்டிருநதால இவவாறு புறபபடடிருகக மாடடாா எனபதுு குறிபபு "உளளங கவாநதெழுந தோஙகுசினங காததுுக, கொளளுங குணமே குணமெனக" எனற மேமபாடடினை உனனுக

**சிலராம்** என வாயிறகாவலா கூறினுரேனும,அதனுள அமைநதுபடாமை,"சிறிய பகையெனினும ஓமபுத றேறுரா", "வினைபகை யெனறிரணடி னெசச நினையுங காற, றீயெசசம போலத தெறும" எனபனவாதி நியாயமபறறி யெனக.

**இளவரி ஏறு போல** சிழச்சிங்கமாயின போருக்கு இங்ஙனம விரையாது எனக. **முழையரி** - (557) **வாளரி** - (572) என முன்னர் எறிபத்தரைக் குறித்தனராதலின் இங்குச் சோழரை **இளவரி** என்றார் இருவரும அரியேறே போலவாராகளாயினும இச்சரிதப பின்னிகழச்சி பற்றி அவருக்கு இவர் இளையார் என்று குறித்த நயமும அழகும காணக இச்சரித நாயகராகிய எறிபத்தரின ஏற்றங் குறித்த அழகுங காணததக்கது

**மணிவாயில்** - மணிகட்டியவாயில **மணி** - ஆராயச்சி மணி திருநகரச்சிறப்புச சரிதம (112) காணக ஆராயச்சிமணி கட்டியிருந்தும ஆராயாது இளமபினார் என்றது குறிப்பு **மணி** அழகு எனக் கொள்ளின **எழின்மணி** - மிகக அழகு எனக

**வாயில் நீங்க** - வாயிலினின்றும கதுமென விரைந்து புறப்பட.

**எரிமணி**—என்பதும பாடம 28

579 (வி - ரை) **தந்திரத்தலைவர்** - அரசாங்க தந்திரம வலல அமைச்சரிற சேனைக காரியம பார்ப்பவர். சேனைத்தலைவர் எனபாருமுண்டு.

**தலைவன்** - அரசன **முதல்வன்** (576) என்றது காணக

**நிலைமை**-அளவில சீற்றங்கொண்டு போர்க்குப புறப்பட்ட நிலை தலைவர் ஏவாமலே அவரது குறிப்பறிந்து உரியன செய்தல தந்திரத தலைவர் கடமையா மெனபார **நிலைமைகண்டு** என்றதும காணக

**வந்துற** - தலைவர் தாமும வந்து, சேர்ந்து **உற்று** என்பது **உற** என நின்றது. **வல்விரைந்து** - மிக விரைவில எழும்படி - **முன்** - சோவதற்குமுன சேனையை வந்து றச சாற்ற என்றலுமாம.

**சாற்ற** - பறைசாற்றுவிக்க இதனை இரண பேரிகை அடிப்பித்தல எனபார

**அந்தரத்து அகலம்** - ஆகாயவெளி - **அணி துகிற் பதாகை** - அழகிய பல நிறங்களுடைய துணிகளால அமைத்த கொடிகள

**தூர்ப்ப** - மறைக்க கொடிகள ஆகாயவெளி முழுதும மறைக்க கொடிகள ஆகாய வெளி முழுதும மறையுமாறு நெருங்கின எனக.

**எந்திரத்தேர்** - எந்திரங்களைக கொண்ட தோகள எந்திரங்களால இயக்கப்படும தோகள என்றும, பகைப புலத்தின மேற பல படைகளை வீசும எந்திரங்களைக கொண்ட தோகள என்றும கொள்ள நின்றது சீவகன கதையில கருப்பிணியா யிருந்த அவனது தாயை மயில வடிவாயமைந்ததொரு பொறி ஆகாயத்திற்கொண்டு சென்ற வரலாறு கேட்கப்படும. நூற்றுவரைக் கொல்லி - ஆயிரவரைக கொல்லி - முதலியனவாகிய படைகளையும, உருகிய உலோகக குழம்பு முதலியவற்றையும, வீசும எந்திரங்களையும முன்னுளில தமிழாகள போரில வழங்கினா எனப் பல பழைய இலக்கியங்களில அறிகின்றோம. எந்திரத்தோ உருளையுடைய தோ எனபாரு முண்டு

**மா** - குதிரைப்படை குதிரைப்படையின மிகுதியும அதனை நோக்க யானைப படையின தொகைக குறைவும குறிக்க இடை இடை என்ற தோடு **களிறும்** என வும மையுந தந்தோதினா.

**பதாகை போர்ப்ப**—என்பதும பாடம 29

580 (வி - ரை) **வில்லோடு** ஏனைப படைகளினின்றும **வில்லினை, ஓடு** உருபு தந்து பிரித்துக கூறியது அதன சிறப்பும மிகுதியும நோக்கி

**பிண்டிபாலம்** - "தலையிலே பீலி கட்டப்பட்டு எறிவதோர் படை". ஒருவகை எறியாயுதம. பீலித் தண்டம எனபார

**முசலம்** - இருப்புலக்கை, **கழுக்கடை** - சூலம எறியீட்டி என்றலுமாம **மழு** - பரசு கோடரி போன்றது **முன்னுன** - முதலாகிய **பைங்கழல்** - வீரக்கழல அணிந் தாாகளும, **வரிந்த** - கச்சுவரிந்து கட்டி கழலை வரிந்து கட்டிய எனபாரு

முண்டு. **வன்கண்** - வீரமுடைய. இரக்கமற்ற மறம் அப்படைஞர் யாவரும் வீரர் களே என்பார் **பைங்கழற் படைஞர்** என்று குறித்தார்.

**கோட்புற்று** - சுழன்று உற்சாகத்தோடு குதித்து என்பர் ஸ்ரீமத் ஆறுமுகத் தம்பிரான் சுவாமிகள். போர்க்குச் செல்லும்போது இடசாரி வலசாரியாகச் சுற்றிப் பல விளையாட்டியாச்சமான அவ்வித்தையின் தொழில்களைச் செய்தென்று பொருள் கூறுதலு மொருபட்சம் - என்பர் மகாலிங்கையர்.

**எங்கும்** - எங்கேயும் - எவ்விடத்தும். முற்றும்மை. நால்வகைச் சேனையினும் இதிற்குறித்த காலாட் படையின் தொகுதியும் மிகுதியும் குறித்தது. **படைஞர்** படைக்கல மேந்திய காலாள் வீரர். இவர்கள் ஏந்திவந்த படைகளை மேலே குறித்தது காண்க. **எங்கும் எழுந்தனர்** என்று மாற்றியுரைக்க. இரண்டாவது **எங்கும்** என்ற தனை வரும்பாட்டில் **மல்க** என்றதோடு கூட்டி **எங்கும் மல்க** என்றுரைத்துக் கொள்க. இவ்வாறன்றி **எங்கு மெங்கும்** என்பதனை மிகுதிபற்றிய அடுக்குத் தொடராக்கி எங் கெங்கு மென்று பொருள் கொள்வாருமுண்டு. அது சிறவாமை காண்க.

நால்வகைச் சேனையில் தேர் - யானை - குதிரைப்படைகள் என்ற முதன் மூன் றும் மேற்பாட்டானும், ஏனைய காலாட்படை இப்பாட்டானும் குறித்தார். **உறுப்பு நான்கு** எனக் (583) கூறுவதும் காண்க.

மூன்றும் சேர ஒரு பாட்டானும் இவ்வொன்று ஒரு பாட்டானும் கூறியது அவ் வற்றின் தொகைச் சுருக்கமும் பெருக்கமும் பற்றி. 30

581 (வி - ரை) **சங்கொடு** - மேற்பாட்டில் **வேலோடு** என்றதற் கேற்ப இங்கும் மிகுதியும் சிறப்பும்பற்றி ஏனைவாத்தியங்களினின்றும் சங்கினைப் பிரித்துக் கூறினார். வெற்றிக்கறிகுறியாகச் சங்கு முழக்குதலும் காண்க. பாரதத்திற் கண்ணன் சங்கமூதியது முதலிய கதைகளுங் காண்க.

**தழங்கு ஒலி முழங்கு பேரி** - **பேரி** மிக்க பேரொலி முழக்கும் வாத்திய விசேட மாதலின் இவ்வாறு பல அடைமொழி புணர்த்தார். பேரி, யானை முதலியவற்றின் மேலிருந்தும் முழக்கப் பெறும்.

**வெங்குரல் பம்பை** - பம்பை பரந்த இருமுகமுடையதாயும், பெரிய உருவு டையதாயும் உள்ள வாத்திய விசேடம். வெவ்விய - கடிய ஓசைமுழக்குவது. தடாரி.

**கண்டை** - ஒருவகைப்பறை. **திமிலை** - சல்லரி என்பர். **வியன்துடி** - பெரும உடுக்கை. பம்பை போலாது இடைசிறுத்துள்ளது துடி. சிறுதுடியினின்றும் வேறுணர **வியன்றுடி** என்றார்.

**தட்டி** - காடிப்பறை. இதனைத் தட்டை என்பது பிங்கலம். "காடி நாமக் கட்டுரை தட்டை".

**பொங்கு - ஒலி சின்னம்** - இவ்வகையும் ஏனைப் பலவுமாகிய சின்னங்கள் இவை போரிற் சேனைகளை ஊக்கப்படுத்தவும் ஒழுங்குபடுத்தவும் பயன்படுவன. இதுபற றியேஇவை படைமிடைந்த மருங்கு எழுந்தியம்பின என்றார். படைஞர் இவற்றாலுற் சாகப்படுத்தப் பெற்றுத் தமது இன்னுயிரையும் பொருட்படுத்தாது போரில் முனைந்து நின்று வெற்றிபெறுமாறு செய்யவல்லது இந்த வகைப் போர்முனை யியங்களின் இசை யின் சத்தி எனக. இக்காலத்தும் ஆங்கிலர் முதலிய நவீனர் போர்க்குச் செல்லுங் கால், பற்பலவகை இயங்களை (War Band) முழக்கி, அவ்வானந்தத்தில் ஈடுபட்டுச் செல்வது காணலாம்.

**மிடைந்த** - நெருங்கிய.

**மங்குல்வான் கிளர்ச்சி நாண** - மேக நிறைந்த கார்காலத்து ஆகாயத்தில் எழும் ஓசையும் கீழ்ப்பட. **நாண** - கீழ்ப்பட என்றதை வெட்கத்தால் நாண என்று உயர்

திணைபோலக் கூறினார். கிளர்ச்சி - ஒலி ஒலியணுக்கள் விசையிற் பெருகுதியாகக் கிளர்வதனால் உண்டாவதால் கிளர்ச்சி என்பது ஒலிகுறித்தது.

மருங்கு - சேனைச் செலவில் இருபக்கமும்.

எழுந்தியம்பி மல்க - எழுந்து - மிக்க கிளர்ச்சியுடன் ஆர்ப்பரித்து. இயம்பி - வேறு வேறு தத்தம் இயல்புக்கு ஏற்றவாறு ஒலித்து. மல்க - நெருங்க வகையானும் தொகையானும் பலவாகி மலிந்தபடியால் மல்க என்றார்.

மங்குல்வான் - மங்குல் மேகம் - பல கூட்டமாகிய மேக கர்ச்சனையும் வானத்தின் எதிர் ஒலியும் கூடியதால் கிளர்ச்சி என்றார். வானம் ஒலி என்னும் குண முடையதுமாம். வான்கிளர்ச்சி - இடி என்றலுமாம்.

கிளர்ச்சி மான—என்பதும் பாடம். 31

582. (வி - ரை) தூரியம் - வாத்தியப்பொது. மேற்பாட்டிற் கூறிய இயங்களையும் குறித்தது. துவைப்பு - ஓசை. கைகளாலும் கோல்களாலும் குறிப்பிட்டவாறு ஓசையுண்டாக்குதலால் துவைப்பு என்றார். துவைத்தல் - முழக்குதல்.

முட்டுஞ் சுடர்ப்படை ஒலி - படை - மேல் 580-ம் பாட்டினில் விரித்த பலவகைப் படைகள். செறிவினாலும் எறிவினாலும் முட்டுவதால் முட்டும் - என்றார். இவற்றினின்றும் வெளிவீசும் ஒளியே பகைவரை முட்டுவதால் முட்டுஞ்சுடர்ப்படை என்றலுமாம். முட்டும்படை - முட்டும் சுடர் - முட்டும் சுடர்ப்படை என மூன்று வகையானும் கூட்டியுரைக்க நின்றது.

மாவின் தார்மணி இசைப்பு மா - குதிரை. மணித்தார் என மாற்றுக. மணிகளை மாலையாகக் கோத்தணிதல் வழக்கு. இசைத்தலால் எழும் ஓசை இசைப்பு.

வேழ முழக்கம் - பேரொலியாதலின் முழக்கம் என்றார். சீறு - ஒலி. சீறி எழுதலான உள்ளதாம் ஓசை சீறு எனப்பட்டது. சீறும் என்று பாடங்கொண்டு இரைச்சல் எனப் பொருள் கொள்வாருமுண்டு.

செருக்கு - தாம் ஏந்திய படையினாலும் தமது ஆண்மையினாலும் செருக்குமிக்கார். வீராவேசம் என்பர். செருக்கினால் கூறும் வீரமொழிகளின் ஒலி என்பாருமுண்டு. ஆர்ப்பு - ஆரவாரம் ஒலி.

துவைப்பு - ஒலி - இசைப்பு - முழக்கம் - சீறு - ஆர்ப்பு என்பன ஓசை என்ற ஒரு பொருள் தரும் பல சொற்கள். ஒரு பொருட்பன்மொழி என்பர். வெவ்வேறு வகையாலெழும் வெவ்வேறு வகை ஓசைகளைக் குறிக்க வெவ்வேறு சொற்களால் அவ்வவற்றிற்குரிய குறிப்பும் பெற அமைத்துக் கூறிய அழகு காண்க. கண்ணப்பர் புராணத்து "ஐவன வடிசில்" என்ற 34-ம் பாட்டும், இவ்வாறு வருவன பிறவும் காண்க.

மேல் மூன்று பாட்டுக்களிலும் தனித்தனி கூறிய படையெழுச்சியின் மூட்சியை இப்பாட்டாற் றொகுத்துக் கூறியபடி. இதில் தூரியம் மேற்பாட்டிலும், படைகள் அதற்கு மேற்பாட்டிலும், மா - வேழம் - தேர் இவை அதற்கு மேற்பாட்டிலுமாக எதிர் நிரன் முறையா யமைந்ததும் காண்க. தேரும் மாவு மிடை யிடை களிறும் (579) என்றதில் இடையிடை களிறு என்றதனால் தேர் - களிறு - மா என்றதே வரிசையாயிற்று. ஆதலின் இங்கு அது மா - வேழம் - தேர் என்று எதிர் நிரனிறையாயினமை கண்டு கொள்க.

ஆர்ப்பு - ஏனை ஓசைகள் யாவும் ஓசை அளவில் எழுந்தனவாதலின் முன்னர்த் தொகுத்துக் கூறினார். படைஞர் ஆர்ப்பு அவ்வாறன்றி அவர்களது மன எழுச்சியாலாகிய செருக்குக் குறித்தெழுந்த மொழிகளாதலின் அச்சிறப்புப் பற்றி இறுதியில் வேறு பிரித்துக் கூறிக் காரணமுங் கூறினார்.

அவ்வச் சேனை வகைகள் வெவ்வேறாக அமைந்த தத்தம் திடங்களினின்றுங் கிளம்பும் எழுச்சியைத் தனித்தனி முன்குறித்த பாட்டுக்களாலும், அவை ஒன்றுகூடிய

தழனியை இப்பாட்டானுங் கூறினார். அவற்றை முன்னாகத் தனித்தனிக் கண்ட ஒருவன் அவை தொகுக்கச் சிறப்பைக் கூட்டி எண்ணுங்கால் இறுதியில் வந்து கூடிய இனத்தை முதலாக வைத்து அம்முறையே எண்ணுதல் வழக்காதலின் எதிர் நிரன் முறையாகக் கூறினார் எனக. இக்கருத்துப் பற்றியே **மிக்கு எழுந்து ஒன்றும் எல்லை** என்றதும் காண்க.

**ஒன்றும் எல்லை** - ஒன்றாகும்போது - கூடியபோது **எல்லைக்கார்** என்று கூட்டி ஊழிக்கால முகில்கள் என்பாரு முண்டு.

**காருடன் கடைநாட் பொங்கும் கடல்** - ஊழி முடிவில் நீப்ப பிரளயத்துப் பொங்குங் கடலின் எழுச்சி "பொங்கோதங் கடைநாள்", "கடையுகத்திற் றனிவெள்ளம் பல" என்ற திருஞானசம்பந்த நாயனார் புராணத்துக் கூறுதலும், பிறவுங் காண்க. வரும் பாட்டில் "**இறுகால்**" என்றதுமிது. **காருடன்** - ஆயின் இவ்வெழுச்சி கடற் பெருக்குப் போல அழிவினிற் செல்லாது "ஆர்கலி யேழுமொன்றாய மன்னிய ஒலியின் ஆர்த்து, மண்ணெலாம் மகிழ்ந்து வாழ்த்தச்" (603) செய்து மகிழ்ச்சிக்கே காரணமாய் நின்றதாதலின் **கடைநாட் பொங்கும் கடல்** என்றொழியாது உலக நிலைபேற்றுக்கும் மகிழ்ச்சிக்கும் காரணக்குறிப்போடு **காருடன்** என்று உடன் கூட்டிக் கூறினார். "வீழ்க தண்புனல்" என்ற பெருவாக்கினால் **கார்** வாழ்த்துதற்குரியதாயினமை காண்க.

**கலித்த** - சத்தித்தன. இப்பாட்டின் உவமான உவமேயங் கூட்டி எழுவகைச் சத்தங்களாயின் சேனை எழுதலின் எழுவகையாயின வென்பதும் குறிப்பு.

இக்குறிப்புப் பற்றிப் பின்னர் **ஆர்கலி ஏழும் ஒன்றாய்** - (603). என்பதும் காண்க.

**அன்றே** - தந்திரத் தலைவர் சாற்றிய (579) அப்போதே - **அன்று** - **ஏ** - அசை யென்றொருத்துக்குவாரு முளர்.

**துவைப்ப—அசைப்பும்**—என்பனவும் பாடங்கள். 32

583. பண்ணுறு முறுப்பு நான்கிற் பரந்தெழு சேனை யெல்லா
மண்ணிடை யிறுகான் மேன்மேல் வந்தெழுந் ததுபோற் றோன்றத்
தண்ணளிக் கவிகை மன்னன் றனைப்பின் றொடரத் தாமோ
ரண்ணலம் புரவி மேற்கொண் டரசமா வீதி சென்றார். ௩௩

**(இ - ள்)** வெளிப்படை. வகை பண்ணப்பட்ட நால்வகை உறுப்புக்களினாற் பரந்தெழுந்த சேனையெல்லாம், உலகத்து அழிவைச் செய்யும் ஊழிக்காற்று மேன்மேல் வந்தெழுந்ததுபோலத் தோன்ற, (அவ்வாறெழுந்த) சேனை தம்மைப் பின்றொடர்ந்து வர, தாம் ஓர் பெருமை பொருந்திய குதிரையின்மே லேறிக் குளிர்ந்த கருணை பொருந்திய கொற்றக் குடையுடைய அரசர், அரசமா வீதியிலே சென்றார்.

**(வி - ரை) உறுப்பு நான்கு** - தேர் - யானை - குதிரை - காலாள் - என்பன. சதுரங்கசேனை யென்பர். "நெருங்கிய சாதுரங்கம்" என்ற திருநாவுக்கரசு நாயனார் புராணத்துக் (6) கூறியது காண்க. இவற்றில் முதல் மூன்று 579-ம் பாட்டிலும், நான்காவது காலாட்படையைப் **படைஞர்** என 580-ம் பாட்டிலும் கூறினார்.

**இறுகால்** - இறுதலினை - அழிதலைச் - செய்யும் ஊழிக்காற்று சண்டமாருதம் என்பர். **கால்** - காற்று. கால் மண்ணிடை வந்தெழுந்தது என்று கூட்டுக.

**போல் தோன்ற** - தோற்றத்தால் மட்டும் இவ்வாறு காட்டியதேயன்றிச் செயலில் ஒன்றும் நிகழ்ச்சியின்று என்பார் **போல்** என்றும், **தோன்ற** என்றும் குறித்தார். ஓசையும் விரைவின் அசைவும் ஆகிய இரண்டு குணமுடைமையின் சேனைச் செலவிற்குக் காற்றினை உவமித்தார். "மாருதத் திரண்டை" (திருப்புள்ளிருக்கு வேளூர்த் திருத்தாண்டகம்), "வளியிடை யிரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி" (திருவாசகம்) என்பனவாதி திருவாக்குக்கள் காண்க. ஐம்பெரும் பூதங்களில் ஊறு - ஓசை எனும் இரண்டு குணமுடையது காற்று என்பது சாத்திரம்.

தாயிற்று அந்த மலர்கள் திருவருளாற் சிந்தவும், நிறையவும்பெற்று இருமுறையும் புனிதமாகி இறைவன் பணிக்கு உகந்தனவாயின அதனாலே சிவகாமியாரும் **வாழ்ந்து தம்பிரான் பணி மேற்கொண்டு - சார்ந்தனர்** (604) என்க. இவரது பணி முட்டுப் படாது நிறைவேறிய வழியே திருவருட்டிறம் இங்கு முற்ற நிறைவெய்திய தாகும் அப்பணி முற்றியதனாலே அது கண்டு வாழ்ந்து அவரும் நின்றார் என்க. நியதியான திருப்பணி முட்டுப்படின் வாழார் என்பது குறிப்பு

**மற்றத் திருவருள் கண்டு** - வாகரு எழுந்ததும் பாகரோடு யானை எழுந்ததும் திருவருட் செயல்களேயாயினும் அன்பராகிய சிவகாமியார் அவை கண்டும் பொதுவகையான வாழ்வடைவாராயினும் தமது பணி முட்டாது நிறைவேறிய வழியன்றி அவர் தமது வாழ்வு வாழ்வாகக் கருதிச் சிறப்பாக மகிழாராதலின் **மற்று - அ - திருவருள் கண்டு** என **மற்று** என்ற வினைமாற்றுச் சொல்லும், **அ** என்ற சிறப்புச் சுட்டும் புணர்த்து ஓதியதுடன் மற்ற இருவரைப்போலப் **போற்றி** என்னாது **வாழ்ந்து** என்றும் கூறினார்.

**வாழ்ந்து** - புத்துணர்வு பெற்று என்றுரைப்பாரு முண்டு. **சிவகாமியாரும்** - அவர்களோடு இவரும் என இறந்தது தழுவிய எச்சவும்மை

**வாழ்ந்து நின்றார்** - மலர் சிந்தக் கண்டபோது கையாற் றரையடித்து **நின்று** (565) சிவதா என **நின்ற** அவர், இங்கு திருவருளால் மலர்நிறைந்திடக் கண்டபோது **வாழ்ந்து நின்றார்** என்பது

சங்கார முறையினைப் பின்பற்றியே புனருற்பவ முறை நிகழுமாதலின் அம்முறையே முதலில் நிகழ்ந்த செயலாகிய கூடை நிறைந்த மலர் சிந்தியது, சிந்திய மலர் கூடையில் நிறைதலாகி, இறுதியில் நிறைவெய்தியது முன்னர் (598) உரைத்தவையும் இது பற்றித் திருவாரூர்த் திருநகரச் சிறப்பி லுரைத்தவையும் காண்க.

மேற்பாட்டிலே இருபெருமக்களில் அவ்வவரும் தத்தமநிலையினின்று அடியார்களைப் பணிதலாகிய செயலைக் கூறி, இங்குப் பேரொலி போற்றலாகிய அரன்பணியை இப்பாட்டிற் கூறினார். அடியார் பணி - அரன் பணி என்ற இரண்டும் செய்தலில் அடியார் பணியே முன்னர்ச் செய்யத்தக்கது என்பது குறிப்பு இவை பற்றி விறன்மிண்ட நாயனார் புராணத்தும் (495) பிறாண்டும் உரைத்தவை காண்க அசிந்திதனாகிய சிவனைச் சிந்திதனாகக் கண்டு வழிபடுக என்பது சாத்திரம் சிவனை விசுவ ரூபனாகக் கண்டு வழிபடுதலில், உலகம், சரம் அசரமென இருவகைத்தாகி நிற்க, அவற்றில் அசர ரூபமாகிய இலிங்கத் திருமேனியுள்ளும், சரரூபமாகிய குருவினுள்ளும், அடியாருள்ளும் சிவன் விளங்குபவனும் சித்துருவாகிய இருவருள்ளும் தம்மை யடைந்த பக்குவர்க்கே யருள்பவர் குரு, அடியார்கள் எல்லார்க்கும் அருள்பவர்களாதலால் முதற்கண் வழிபடப்படுவர் என்பது நூற்றுணிபாம். 50

601. மட்டவி ழலங்கல் வென்றி மன்னவர் பெருமான் முன்ன
ருட்டரு களிப்பி னோடு முறங்கிமீ தெழுந்த தொத்து
முட்டவெங் கடங்கள் பாய்ந்து முகிலென முழங்கிப் பொங்கும்
பட்டவர்த் தனத்தைக் கொண்டு பாகரு மணைய வந்தார். ௫௧

(இ - ள்) வெளிப்படை வாசனை வீசும் (ஆத்தி) மாலை யணிந்த வெற்றியுடைய மன்னர் பெருமானின் முன்பு, தூங்கி மீண்டு விழித்து எழுந்ததுபோல நிறைவாகி வெவ்விய மத நீர்கள் பாய முகில்போல முழக்கஞ் செய்து ஆரவாரத்துடன் கிளம்பும் பட்டவர்த்தன யானையைச் செலுத்திக் கொண்டு உண்ணிறைந்த மகிழ்ச்சியினோடும் அந்தப் பாகர்களும் அங்கு அணைய வந்தார்கள்

(வி - ரை) **மட்டவிழ் அலங்கல் வென்றி** - இவ்வாறு திருவருள் விளக்கம் பெற்ற பின்னர் அரசரது அடையாள மாலை இப்போது புதியதொரு மணம் வீசப்பெற்ற

தோடு புதியதொரு வெற்றியும் பொருந்துவதாயிற்று என்பது குறிப்பு. கிளாமணித் தோள் அலங்கற் சுரும்பினங் கிளர்ந்து பொங்க (578), என்றும், விரைசெய் தார் மாலையோய் (586) என்றும் குறித்த இடங்களினும் அடையாள மாலையினையே கூறினாரேனும் அந்நிலைகள் வேறு, இங்குக் குறித்த நிலை வேறு, இப்போதே அது புது மணமும் உண்மை வென்றி நிலையும்பெற்ற தென்பார் இவ்வடை மொழிகள் தந்தோதினார். இக்கருத்துப் பற்றியே முன்னர் மன்னன் (583) உலக மன்னன் (587) மன்னவன் (590) தடந்தோள் மன்னன் (591) வேந்தன் (593) என்று கூறிய ஆசிரியர், இங்கு **மன்னவர் பெருமான்** - சக்கரவர்த்தி - முடிமன்னர் - என்றார் திருவருளினாலே உலகிற்கு எடுத்துக் காட்டாகிய பெருமை நோக்கி. **மட்டு** - தேன் என்றலுமாம்.

**உறங்கி மீது எழுந்தது ஒத்து** - வெட்டுண்டு இறந்துபட்ட யானையும் பாகரும் மீண்டும் உயிர் பெற்றெழுந்தது தூங்கி எழுவதை ஒத்திருந்ததென்றார் "உறங்குவது போலும் சாக்கா டுறங்கி, விழிப்பது போலும் பிறப்பு" என்ற திருக்குறட் கருத்தினை இங்கு வைத்துக் காண்க. **மீது** - மேலே. **மூட்ட** - நிறைய - மிகுதியாக **பாய்ந்து** - பாய. செய்தெனெச்சத்தைச் செயவெனெச்சமாக்கி யுரைக்க ஒத்துப் பாய - முழங்கிப் பொங்கும் பட்டவர்த்தனம் என முடிக்க.

**உள் தரு களிப்பினோடும் உறங்கி எழுந்ததோத்து** என்றதனை யானைக்குக் கூட்டி யுரைத்து யானை மகிழ்ந்து தூங்கி எழுந்ததுபோல என்றுரைத்தலுமாம் சுகமாகத் துயின்றேன் என்னும் வழக்குக் காண்க.

**வெங் கடங்கள்** - யானையின் உடலின், மகிழ்ச்சி முதலிய வெப்பக் கூறுகள் மிக்க போது மதநீர் பாயும் என்பர். **வெம்மை** - விருப்பம் மதமூன்றுதலிற் பன்மை யாற் கூறினார். யானையை முன்னாகக் குன்று - வரை - போன்றது என உவமித்தது உருவ நோக்கி. இங்கு அதன் முழக்கம் முகிலென உவமித்தது, மழைக் குறிப்பு நற்பயன் தருவதாதலின், யானை என்ற கருவியினால் உலக வாழ்வாகிய மங்கலம் பெறும் திருவருள் வெளிப்பட்ட பயன் பற்றிய குறிப்பாம்.

**முழங்குதல்** - முகில் முழக்கம் குன்றினிடமாக உண்டாதலும் காண்க. **வெம்** - விரும்பத் தக்க நறுமணங் கமழும் என்றுரைப்பாரு முளர்.

**பொங்கும்** - ஆரவாரிக்கும் - மேல் மூடுகி வருகின்ற - யானை கடங்கள் பாய்ந்து பொங்கும் என்றலுமாம்.

**பாகரும்** - அவ்வாறே உறங்கி எழுந்தார்போன் றெழுந்தார்களாகிய பாகரும். இறந்தது தழுவிய எச்சவும்மை. பாகரும் களிப்பினோடும் - கொண்டு - அணைய - வந்தார் என்று கூட்டி முடிக்க.

**அணைய** - அரசர்பாற் சேர.

**உறங்கிய தெழுந்தது**—என்பதும் பாடம். 51

602. ஆனசீர்த் தொண்டர் கும்பிட் "டடியனேன் களிப்ப வந்த
மானவெங் களிற்றி லேறி மகிழ்ந்தெழுந் தருளு" மென்ன
மேன்மையப் பணிமேற் கொண்டு வணங்கிவெண் குடையி னீழல்
யானைமேற் கொண்டு சென்றா ரிவுளிமேற் கொண்டு வந்தார். ௫௨

**(இ - ள்)** வெளிப்படை. ஆயின சிறப்புடைய தொண்டராகிய எறிபத்தர் அரசரைக் கும்பிட்டு, "அடியேன் கண்டு களிக்கும்படி இந்தப் பெரியதும் விருப்பத்தைத் தருவதுமாகிய யானையின்மேல் ஏறி மகிழ்ச்சியுடன் இனி உமது அரண்மனைக்கு எழுந்தருளக் கடவீர்" என்று சொல்லக், குதிரையேறி வந்தாராகிய மன்னவர்மன்னர்

மேலோராற் றரப்படும் மேன்மை தங்கிய அந்தக் கட்டளையை ஏற்று, மேற்கொண்டு, அவரை வணங்கி வெண்குடையின் நீழலிலே யானையினை மேற்கொண்டு சென்றனர்.

**(வி - ரை) ஆனசீர்** - சரித நிகழ்ச்சியிற் றுணைநின்ற சிறப்பு அரசருக்கு முன்னையினும் சிறந்த கீர்த்தியை உண்டாக்கியதனால் **ஆனசீர்** என்றார் என்றுரைப்பாரு முண்டு.

**அடியனேன் களிப்ப** என்றது திருவருட் கிலக்காகி நின்ற பேரன்பரை யானையின்மீது பவனிவரக் கண்டு களிக்க வேண்டுமென்று எறிபத்தர் கொண்ட ஆசை மிகுதியினை உணர்த்திற்று. முன்னர் மங்கல விழவு கொண்டு (562) மானவமி முன்னு நாளாகிய அந்நாளிலே வந்த அந்த யானை அவ்விடை இந்நிகழ்ச்சியால் தடையுண்டு நின்றதாக, அரசரும் அன்பருமாகிய தன் முதல்வனைத் தன்மேற் கொண்டு மங்கல விழாக் கொண்டு உலாப்போதல் தகுதியுடைத்தாம் என்பதும் எறிபத்த நாயனார் திருவுள்ளமாம் அடியார்கள் திரண்டு ஆளுடைய பிள்ளையாரை யானையின்மீது திருவுலாப் போதுமாறு விண்ணப்பித்த கருத்தினைத் திருவுலாமாலையில் நம்பியாண்டார் நம்பிகள் அமைத்ததனை இங்கு நினைவு கூர்க.

**இந்த மான வெங் களிறு - இந்த** - இறைவனது பொருள் வெளிப்பாடு பெறக் கருவியாதற் குரிமைபெற்ற உயர்வுடையதாய இங்கு அணைய வந்து நிற்கின்ற என அண்மைச் சுட்டுச் சிறப்பும் உணர்த்திற்று. **மானம்** - உயர்வு. உருவாலும் திருவாலும் உயர்வு குறித்தது. **மானம்** - வலிமை என்பாருமுண்டு. **வெம்** விருப்பம்பெற்ற- விரும்பிய அரசர்க்கு இதன்மீது உள்ள விருப்ப மிகுதி முன்னர்க் குறிக்கப்பட்டது (584). இங்கு இஃது அதனை முன்னாகக் கடந்த சிவகாமியாண்டார், எறிபத்தர் உள்ளிட்ட யாவராலும் விரும்பத் தக்கதாயிற்று.

**மேன்மை** - மேலாயின அன்பராங்குணத்தின் மிக்காரால் (587) இடப்பட்ட பணியாகிய மேன்மை.

**வணங்கிய** - பெரியோராயின சீரன்பரின் முன்னே வாகனமூர்ந்து செல்லுதல் முறையன்றாதலின் அவர் இட்டகட்டளையை மேற்கொள்ளும் வகையாலே யானையினை அவர் முன்பு ஊர்ந்து செல்ல ஒருப்பட்டமைகின்றாராதலின் அவரை வணங்கினார். அன்றியும் அவர்பால் விடைபெறுகின்ற குறிப்புமாம்.

**யானை மேல்கொண்டு சென்றார்** - இறைவரது திருவருட் பிரசாதமாகிய யானையின் மீது அரசர் அன்பர் பணிப்ப ஏறினார். இறைவனருளிய முத்துச்சிவிகையினை ஆளுடைய பிள்ளையார் மேற்கொண்டதும், வெள்ளை யானையை ஆளுடைய நம்பிகள் மேற்கொண்டதுமாகிய, அவரது ஆணையின் வழியே நிகழ்ந்த சரிதங்களை நினைவுகூர்க.

**இவுளி** - குதிரை. அரசர் வந்தநிலை வேறு, இப்போது செல்லுநிலை வேறு என்று குறிப்பார் இவுளி மேல் கொண்டு வந்தார் யானைமேற் கொண்டு சென்றார் என்றார். மேற்சரித நிகழ்ச்சிகளை எல்லாம் இங்குவைத்து நினைவுகூர்க.

**களிற்றையேறி மனமகிழ்ந்து**—என்பதும் பாடம். 52

603 அந்நிலை யெழுந்த சேனை யார்கலி யேழு மொன்றாய
மன்னிய வொலியி னார்ப்ப, மண்ணெலா மகிழ்ந்து வாழ்த்தப்,
பொன்னெடும் பொதுவி லாட னீடிய புனிதர் பொற்றாள்
சென்னியிற் கொண்டு சென்னி திருவளர் கோயில் புக்கான். ௫௩

**(இ - ள்)** வெளிப்படை. அந்நிலையிலே, எழுச்சி பெற்ற சேனைகள் ஏழுகடல்களும் ஒன்று சேரத்தொலித்தாற் போன்ற ஓசையோடு ஆரவாரிக்கவும், உலகத்தார் எவரும் மகிழ்ச்சியோடு வாழ்த்தவும் நெடிய பொன்னம்பலத்தே நித்தமாகிய திருக்கூத்து ஆடுகின்ற இறைவனது திருவடிகளைச் சிரத்திற் றரித்தவராயச் சோழர் தமது திருவளரும் கோயில் புகுந்தனர்.

**(வி - ரை) அந்நிலை** - அரசர் பெருமான் தமது பட்டவர்த்தனத்தினை மேற்கொண்டு செல்லக் கண்ட அந்த நிலையிலே.

**ஆர்கலி ஏழும் ஒன்றாய் மன்னிய ஒலி** - முன்னர்த் தனித்தனி ஆர்த்த சிறப்புக் கூறினார். இங்குச் சேனை வகைகளும் இயங்களும் முழுதும் ஒன்றாய்ச் சேர்ந்து ஆர்த்த நிலையினைக் கூறுகின்றார் 582 - உரை பார்க்க. **ஆர்கலி** - கடல். எப்போதும் ஒலி நிறைந்தது என்ற பொருளில் வந்த காரணப் பெயர் போலும். மிக்க ஓசைப் பண்பில் உவமை கூறினாராதலின் இப்பெயரால் குறித்தார். ஏழு கடல்களும் ஒன்றாய ஒலிக்கும் காலம் உகமுடிவிற் காணும் நீர்ப்பெருக்கி லாகும் என்பர் "கடைநாட் பொங்கும் கடல்" (582)என முன்னர்க் கூறினார். கடல் ஏழு உவர்நீர், நன்னீர், பால், தயிர், நெய், கருப்பஞ்சாறு, தேன் என்பவற்றா னிறைந்தன என்பர்.

**பொன் நெடும் பொது** - நெடும் பொற்பொது என மாற்றுக. பொன்னம்பலம் என்க. இதன் நெடுமையாவது ஞானத்தால் எங்கும் என்றும் நிறைந்திருத்தல்.

**நீடிய ஆடற் புனிதர்** - என மாற்றுக அவர் ஆடும் அம்பலமும் நித்தம். அவர்தந் திருக்கூத்தும் நித்தம் அம்பலம் ஞானமாம். கூத்து ஆனந்தமாம். ஆதலின் நெடும் பொதுவில் ஆடலை, நீடிய ஆடல் என்றார். ஆடலை நீடி (யியற்றுகின்ற) என்று கூட்டியுரைப்பாருமுண்டு **புனிதர்** . புனிதத்தைச் செய்பவர் - தீர்த்தன் என்பதுபோல. அமலனாதலிற் புனிதர் என்றார் என்றலுமாம்.

**சென்னியிற் கொண்டு சென்னி** - சொற்பின் வருநிலை என்ற சொல்லணி. **தாள் சென்னியிற் கொண்டு** என்றது இறைவனது சீபாதங்களைத் தலைமேற் சூடினன் என்றதாம். தாளினைத் தாங்கிய தன்மை பெற்றனவே சென்னி யெனப்படும். அவ்வாறு தாங்காதவை வெறுஞ் சுமையே, என்பர். "வணங்காத் தலையும் பொறையாம்" - **பொன் வண்ணத்தந்தாதி** (42). சோழர் மரபு அரசர்கள் தமது சென்னியை இறைவனது தாளுக்கென்றே ஒதுக்கி வைத்த நெறியினர் என்பது பழைய நூல்களிற் கண்ட உண்மை இச்சிறப்புடைய சென்னியார் ஆதலின் இவர்கள் **சென்னி** என்ற மரபுப் பெயரானழைக்கப்பட்டார் போலும். இச்சிறப்பாலே இவர்கள் அரச மரபினர்கள் எல்லாருள்ளுந் தலையாயார் என்றதும் பொருள் போலும். "சென்னி வெண்குடை நீடநபாயன் திருக்குலம்" - (404) முதலிய ஆட்சிகள் காண்க.

இங்குத், **தாள் சென்னியிற் கொண்டு** என்றது வெங்களிற்றின் மேற் கொண்ட அரசர் தமது உயர்ந்த தானமாகிய முடியின் மேற்கொண்டது இறைவனது தாள் என்றதாம் அரசர், யானையின் மேலே ஊர்ந்த சிறப்பினும் இறைவரது திருவடியின் கீழே நாமிருக்கின்றோம் என்ற உணர்ச்சியினைச் சிறப்பாக எண்ணினார், ஒரு ஞான்றும் திருவடி மறவாத பான்மையார், என்பனவாதி குறிப்புக்கள் காண்க. எப்போதும் திருவடி முடியிற் சூடியவர் இங்கும் சூடினார் என்றது தமது நாட்டில் திருவருள் வெளிப்பாட்டினாலே திருத்தொண்டின் பெருமையை உணர்த்தி உலகத்தை வாழ்வித்த உபகாரத்தை உன்னிச் சிறப்பாகச் சூடினார் என்பது தெரித்ததற்றென்க.

**திருவளர் கோயில்** - அரசரது அரண்மனையைக் கோயில் என்பது வழக்கு. **கோ** - அரசர். **திருவளர்** - அருளும் பொருளும் நிறைவாகியது உலகாளும் மன்னவன் திருமாலின் கூறு எனப்படுவனாதலின் **திரு** - இலக்குமி எனக்கொண்டு, அவள் தடையாளமாயுள்ளவாம் திரவியங்கள் மேன்மேல் வளர்தற் கிடமாகிய என்றலுமாம்.

**மகிழ்ந்து பொங்க**—என்பதும் பாடம். 53

604 தம்பிரான் பணிமேற் கொண்டு சிவகாமி யாருஞ் சார
எம்பிரா னன்ப ரான வெறிபத்தர் தாமு "மென்னே!
யம்பல நிறைந்தார் தொண்ட ரறிவதற் கரியார்" றென்று
செம்பியன் பெருமை யுன்னித் திருப்பணி நோக்கிச் சென்றார். ருச

96

(இ - ள்) வெளிப்படை. தம்பிரானாரது பணியை மேற்கொண்டு சிவகாமியாரும் திருக்கோயிலை நோக்கிச் செல்ல, இறைவனது அன்பராகிய எறிபத்த நாயனாரும் "என்னே! அம்பல நிறைந்த சிவபெருமானது தொண்டர்கள் அறிதற்கரியாராவர்" என்று சோழரது பெருமையை நினைத்து அற்புதமடைந்தாராகித் தமது திருப்பணி நோக்கிச் செல்வாராயினார்.

(வி - ரை) **தம்பிரான் பணி** - தமது பெருமானாகிய ஆனிலையடிகளாருக்குத் திண்ணிய அன்பு கூர்ந்து விதிப்படி அலங்கல் சாத்தும் திருத்தொண்டு அரசர் தமது திருவளர் கோயில் புக்காராக, சிவகாமியார் தமதுபிரான் பணியிலே திருக்கோயில் நோக்கிச் சென்றார், எறிபத்தர் தமது **திருப்பணி** நோக்கிச் சென்றார்; என அவ்வவர் திருத்தொண்டுகளிலே அவ்வவரைப் போக்கிச் சரித்திரத்தை நிறைவு செய்கின்றவாறு.

**தம்பிரான்பணி மேற்கொண்டு - திருப்பணி நோக்கி** - இறைவனுக்கு மாலை சாத்தும் பணியினை நியதியாய் மேற்கொண்ட சிவகாமியார் இன்று திருவருளினாலே மலர்கள் மீள நிறைந்த பூங்கூடையை எடுத்து நின்றாராதலின் தாம் முன்னர் மேற் கொண்ட அப்பணியினையே **மேற்கொண்டு** சார்ந்தனர் என்றார். ஆயின், எறிபத்தர், "அழலவிர் சடையர் அன்பர்க் கடாதன அடுத்த போது, முழையரி யென்னத் தோன்றி முரண்கெட எறிந்து தீர்க்கும்" (557) திருப்பணி செய்பவராதலானும், அஃது, அன்புடையார்க்கு இடையூறுமிகும் இந்நாளிற் போலன்றி, அக்காலத்து, ஒரோ வழி அருகியே நிகழ்வதாதலானும் அதனைத் தேடிப் போயினார் என்பார் திருப்பணி **நோக்கிச்** சென்றார் என்றார் அவர் என்றும் செய்யலாம், இவர் பணி கிடைத்த வழியே செய்யலாம் என்பது முன்னையதனைத் **தம்பிரான் பணி** என்று சிறப்படை மொழி தந்து சுட்டிக் குறித்ததும், பின்னையதனை அடைமொழியின்றித் **திருப்பணி** என்று தேற்றம்பெறக் குறித்ததும், அரன்பணியினும் அன்பர் பணியின் பெருமை உணர்த்தியவாறு காண்க. "அன்பர்பணி செய்யவெனை யாளாக்கி விட்டுவிட்டால், இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே" - என்ற தாயுமானார் திருவாக்கு இங்கு நினைவு கூர்தற்பாலதாம்.

**எம்பிரான் அன்பரான் - எம்பிரான்** - சிவபெருமான் முன்னாத் தம்பிரான் என்ற ஆசிரியர் இங்கு இப்புராணமுடையார்க்குப் பிரானாரு சிறப்பு நோக்கி **எம்பிரா னன்பர்** என்றார். எம்பிரானிடத் தன்பராயினார்க்கே அவனது அன்பரிடத்து அன் பும் அவர்களது பணி செய்தலில் ஆர்வமும் உண்டாகும் என்பது உண்மை நூற் றுணிபு. "ஈசனுக் கன்பில்லார் அடியவர்க் கன்பில்லார்" என்ற திருப்பாட்டில் (சிவஞான சித்தியார் - பன்னிரண்டாஞ் சூத்திரத்தில்) இவ்வுண்மையினை விரித்திருத்தல் காண்க. அதுபற்றியே "ஆசையொடு மரனடியா ரடியாரை யடைந்திட் டவர்க்கும் முன்கரும மாக்கச் செய்து" என்றதும் நோக்குக. இக்கருத்துப் பற்றியே, "புனிதரை வழிபடுந் தொழிலராகி," "இறையவர்க் குரிமைபூண்டாரக் கருட்பெருந் தொண்டுசெய்வார்" எறிபத்தர் - (556) என்று தொடக்கத்துக் காட்டியதுபோல இங்கும் **எம்பிரானன்ப ரான்** எறிபத்தர் என முடித்துக் காட்டினார்.

**என்னே!** - ஆச்சரியக் குறிப்பு. இஃதென்ன ஆச்சரியம் என்றபடி.

**அம்பல நிறைந்தார்-அம்பலம்** - அருட்சத்தியின் சொரூபம். அதனில் நிறைந்தார் என்றது தமது சத்தியினிடமாகவே வியாபித்து நிற்பர் என இறைவனிலக்கணங் குறித்தது

**நிறைந்தார் தொண்டர் அறிவதற்கு அறியார்** நிறைந்தாரைப்போல அவர் தொண் டரும் அறிவரியார். நிறைந்தார் என ஒப்புப்பொருளில் வரும் ஐந்தாம் வேற்றுமை இன்விகுதி தொக்கது எனவும், நிறைந்தாரும் தொண்டரும் என உம்மைத்தொகை எனவும், கொண்டுரைப்பினு மமையும்.

**தொண்டர் அறிவதற்கரியார்** இஃதோர உணமையாகிய பொதுவியலபு. இதனை எறிபதத நாயனார இச்சரித நிகழசசியின அனுபவததிலிருநது "தெள்ளிவடித தறிநத பொரு"ளாய உணாநது, அதனைத தேற்றுவிதத செமபியா பெருமையை யெணணி யெணணித திளைககினறா

**பெருமை உன்னி** அபபெருமையினைத "தொணடாதம பெருமை சொல்லவும பெரிதே" எனறபடி சிநதித்துககொணடு ஒரு அரசா வடிவுககுளளே அறிதறகரிதாய கினறு அரசா பெருமையினும தொணடா பெருமை மிககிறைநததனை கினைநது கினைநது எனக இபபெருமையினைப பினனரும இவரது **(பொழிற்கருவூர்த் துஞ்சிய புகழ்ச்சோழர்) புராண** முடிபிலும காணக "எதததொழிலைச செயதாலென ஏதவததைப படடாலென முததா மனமிருககும மோனததே" எனற கருததும இஙகுக காணத தககது

அடியாாக கடாதன அடுததபோ ததனைத தீாததலில முறபடடொழுகிய எறிபதத நாயனாா, தமமால அடியாாககிடா கோநததாகத கருதி தமமுயிரினையேவிடத துணிநத அரசாது மனடபானமையாகிய அனபின பெருமையை உனனினாா எனபதாம. அவா பெருமை கணடபோது தஞசெயலும தம பெருமையும கணடாரிலலை எனக. 54

605\. மற்றவ ரினைய தான வனபெருந தொணடு மணமே
ஞாறறிடத தடியாா முனசென றுதவியே நாளு நாளு
நறறவக கொளகை தாஙகி நலமிகு கயிலை வெறபிற
கொறறவா கணததின முனனாங கோமுதற றலைமை பெறறாா. ருரு

(இ - ள்) வெளிபபடை மறறு அவவெறிபதத நாயனாா, இததனமைததாகிய வலிய பெருநதொண்டினை இவவுலகிலே இடையூறுறற இடததிலே அடியாாகளுககு முனசெனறு உதவியே நாளுநாளும இவவாறு (இநத) நறறவக கொளகையை மேற கொணடு செலுததிவநது, நலமிகக திருககயிலை மலையில இறைவாது திருககணங களின முதலவாககு முதலவராகும கணநாயகத தலைமையைப பெறறனா.

(வி ரை) **மற்றவர் - மற்று** - சிநதிககபபடட அரசா நிறகச, சிநதிததுச செனற அவா - என வினைமாறறுப பொருளில வநதது **மற்று** அசைநிலை யெனினுமாம. **அவர்** எனற சேயமைச சுடடும அபபொருள குறிததது

**வன்பெருந் தொண்டு**-அனபாககடாதன அடுததபோதவறறை முாணகெட மழுவி னால எறிநது தீாததலின **வன்றொண்டு** எனறாா. பேரிடாகளையும பெருவீரங கொணடு தீாததலானும தொணடாககுச செயயும தொணடாதலானும அது **பெருந்தொண்டு** எனபபெறறது. வலிய பெரிய தொணடு எனக இவா தாம தொணடு செயதலையனறி ஏனைய உரிமைத தொணடா செயயும தொணடினையும முடடினறிச செயயுமபடி வழிசெயதலானும இவா செயதது **பெருந்தொண்டு** எனபபடடதாம

தொணடு, மெனறொணடு வனறொணடு என இருவகைபபடும எனறு கூறுவா மெனறொணடு, நியதியாகத தாநதாம செயயுமாறு நூலகளால விதிககபபடட சரியை முதலாயின உலகாாற செயதறகரியனவாய உலகிறநத கிலையில நூலவிதி கடநது செபயபபடுவன வனறொணடு எனபபடும இஙகுச சிவகாமியாண்டாரும புகழசசோழ ரும, முருகா, தணடியடிகள, குஙகிலியககலயா முதலிய நாயனமாாகளும செயததமை மெனறொணடின பாறபடும இஙகு எறிபததரும கோடபுலியாா, செருததுணையாா, சததியாா முதலிய நாயனமாாகளும செயதவை வனறொணடின பாறபடும

"மெலவினையே யெனன வியனுலகு ளோாககரிய வலவினையே யெனனவரு மிரணடுஞ - சொலலிற சிவதனமமாம"—(16) எனபது முதலாகவரும திருககளிறறுப படியாரும காணக

**தொண்டு - உதவியே** எனறு கூட்டுக

**உற்றீடத்து - முன் சென்று** - அடாதனவாகிய இடையூறுகள் உற்ற அவ்விடத்தே ஒருவரும் வேண்டாது, தாமே முற்படச் சென்று "அன்பாக கொல்லைவந் தற்ற செய்கை யுற்றிடத் துதவு நீரார்"(551) என்று தொடங்கிய ஆசிரியர் அதனையே அனுவதித்து முடித்துக் காட்டினார்.

**நாளும் நாளும்** - பலநாளும். நாளுநாளும் உதவியே என்றும், நாளுநாளுந் தாங்கி என்றும் முன்னும் பின்னும் இயைக்க இடைநிலைத் தீபம்.

**நல் - தவம் - கோள்கை - தாங்கி** - சிவனடி மறவாச் சிரத்தையும் அதனால் அவனடியார்க்குப் பணி செய்யும் ஆர்வமும் தவக்கொள்கை எனப்பட்டன. அடாதன செய்தாரைத் தண்டித்து எறிகின்ற வகையாலே இங்கு யானையும் பாகரும் பட்டமைபோலப் பலரும் படவரினும், அவை திருத்தொண்டினை நிகழச் செய்யும் நன்மை பயத்தலால் **நற்கோள்கை** எனப்பட்டன **தாங்கி** அடியார்க்கு வரும் இடையூறுகளைக் களைவது ஆண்டானுகிய அரன் பொறுப்பு "இன்றோ ரிடையூ றெனக்குண்டோ" என்பது திருவாசகம். ஆயின இங்கு அவரது பிரதிநிதியாக, அவர் உள்ளிருந்து ஊக்கி அறிவித்து இயக்கிய வழியே, எறிபத்தர், தமது கடமையாக மேற்கொண்டு செய்தனர். இது பெரும் பாரமான கடமையாதலின் **தாங்கி** என்றார் அதனுற் கயிலையிலே இவர் **கோற்றவர் கணத்தின் முன்னும் கோமுதற் றலைமை** பெற்றனர் எனக.

**நலமிகு கயிலை வெற்பு** - நன்மைக்கே யிடமாகியது கயிலை என்பது **கணத்தின் முன்னுங் கோ** - கணங்களின் முதல்வர் **முதற் றலைமை** - அவர்களுள்ளும் முதல்வராகும் தலைமை.

**கோற்றவக்கணம்**—என்பதும் பாடம் 55

606\. ஆளுடைத் தொண்டர் செய்த வாண்மையுந் தம்மைக் கொல்ல
வாளினைக் கொடுத்து நின்ற வளவனார் பெருமை தானும்
நாளுமற் றவர்க்கு நல்கு நம்பர்தா மளக்கி லன்றி
நீளுமித் தொண்டி னீர்மை நினைக்கிலா ரளக்க வல்லார்? ருகூ

**(இ - ள்)** வெளிப்படை. ஆளுடைய தொண்டராகிய எறிபத்த நாயனார் செய்த வீரச் செயலினையும்,தம்மையுங் கொல்லும்படி தமது உடைவாளையுங் கொடுத்துநின்ற சோழனாரது பெருமையினையும், நாளுநாளும் அவர்க்கு அருள்கள் நல்கும் நம்பராகிய இறைவர் தாமே அளந்தாலன்றி, நீளச் செல்கின்ற இந்தத் திருத்தொண்டின் தன்மைகளை நினைக்குமிடத்து யாவர் அளக்கும் வன்மையுடையா ராவர்? (ஒருவருமிலர்)

**(வி - ரை) ஆளுடைத் தொண்டர்** - தாம் அடியார்க்கு ஆளாகவும் தம்மை அவர்களது உடைமைப் பொருளாகவும் கொண்ட தொண்டர் அடியவர்க் காளாகத் தொண்டு செய்தலே தமது செயல் என்பதாம் மேற்பாட்டில் உரைத்தவை காண்க ஆளுடைய அரசு என்பதுபோல இறைவனுல் ஆளாகக் கொள்ளப்பட்ட என்றுரைப்பாரு முண்டு.

**ஆள்** - ஆண்மை என்பாரு முண்டு மேலும் **ஆண்மையும்** என்றமையால் அஃதுரையன் றெனக.

**ஆண்மை** வீரச் செயல் இச்சரித்தத்தின் நிகழ்ச்சிகள் காண்க யானையின் பலமும், அதுவும் மதங் கொண்டதும்,பாகரும் பலராயப் பெரிய அரசரின் வலிய சார்பு கொண்டதும் தமது தனிமையும் முதலிய ஒன்றும் எண்ணுது திருத்தொண்டினுக்குச் செய்த அபசாரம் ஒன்றினையே கருதிச் செய்த தீரச்செயலை இங்கு உன்னுக

**வளவனூர் பெருமை** என்ற விடத்தும் அரசர்பால நிகழ்ந்த முன்னிகழ்ச்சிகளை எண்ணுக **பெருமை-செம்பியன் பெருமை (604)** என்றதின் கீழ் உரைத்தவை காண்க. மேற்பாட்டில் எறிபத்த நாயனார் அப்பெருமைகளைச் சிந்தித்தவாறு கூறினார். இங்கு ஆசிரியர் தாம் சிந்தித்துக் கண்டவாறு உலகுக்குக் காட்டுகின்றார்.

**நாளும்** - எப்போதும். "அருணாளுந் தரவிருந்தீர் செய்தவா றழகிது" - (ஏயர் கோன் புரா - 262) "நாளு மின்னிசை யாற்றமிழ் பரப்பும்"—(தேவா) என்றவை காண்க.

**நல்கும் நம்பர்தாம் அளக்கில் அன்றி** - "அன்புடையாரை அறிவன் சிவன்", "அழுது காமுற் றரற்றுகின் றாரையும், எழுதுங் கீழ்க்கணக் கின்னம்ப னீசனே", "விட்டுமுண்டவெம் மத்த னாடி யாரை யறிவரே", என்பனவாதி திருவாக்குக்கள் காண்க. **அளத்தல்** - அளவிட்டறிதல். **மற்று அவர்க்கு - மற்று** - அவ்வவர் எண்ணிய எண்ணங்களின் வேறுபாடு குறித்து நின்றது.

**நீளும்** - என்றென்றும் எவ்விடத்தும் பொருந்த நீள்கின்ற. தத்தம் பயன்களைத் தந்து அழியும் பசு புண்ணியங்கள் போலன்றி அழியாது பெருகும். ஆண்மையும் பெருமையும் தொண்டின்றிறங்கள் என்றபடி. **நீளும்** - என்றமையால் இச்சரித நிகழ்ச்சியின் பின்னரும் இவ்விரு நாயன்மார்களும் பல காலமுந் தத்தம் திருத்தொண்டுகளைச் செய்து வாழ்ந்தமையுங் குறித்தபடியாம்.

**யார் அளக்க வல்லார்?** வினா ஒருவருமிலர் என்று குறித்தது. அளக்கவல்லார் என்றது அளந்து இனைத்து என்று அறிவால் நிச்சயிக்கும் வன்மையுடையாராதலை. இப்பாட்டுக் கவிக்கூற்று. மேற்பாட்டிற் சரிதத்தை நிறைவு செய்த ஆசிரியர், இச்சரிதத்திற் போந்த தொண்டின் நினைப்பரிய பெருமைகளைச் சிந்தித்துக் கொண்டு அதிற் றாமபெற்ற அற்புத உணர்ச்சியை இதனைக் கற்போருக்கும் அழகு பெற ஊட்டுகின்றார். இஃது இச்சரிதத்தால் ஆசிரியர் கற்பித்த கற்பனையாய இதன் அருமை பெருமைகளை உணர்த்தி நின்றது.

**தொண்டர்நீர்மை - அளத்தலன்றி**—என்பனவும் பாடங்கள். 56

607. தேனாருந் தண்பூங் கொன்றைச் செஞ்சடை யவர்பொற் றாளில்
லானாத காத லன்ப ரெறிபத்த ரடிகள் சூடி
வானாளுந் தேவர் போற்று மன்றுளார் நீறு போற்று
மேனாதி நாதர் செய்த திருத்தொழி லியம்ப லுற்றேன். ருள

(இ - ள்) வெளிப்படை. தேன் நிறைந்த குளிர்ந்த அழகிய கொன்றைமலரை அணிந்த சிவந்த சடையினையுடைய சிவபெருமானது பொன்னடிகளிலே குறையாத ஆசையுடைய அன்பராகிய எறிபத்த நாயனாரது திருவடிகளைத் தலைமீது தரித்து, வானுலகங் காவல் பூண்ட தேவர்கள் போற்றுகின்ற அம்பலவாணருடைய திருநீற்றினைப் போற்றும் வாழ்வுடைய ஏனாதிநாத நாயனார் செய்த திருத்தொழிலினைச் சொல்லப் புகுகின்றேன்.

(வி - ரை) இச்சரிதத்தை முடித்துக் காட்டி மேல்வருஞ் சரிதத்துக்குத் தோற்றுவாய் செய்தவாறு.

**தேன் ஆரும் - தேன்** - இனிமை தருவது எனும் குறிப்பு. தேன் பொருந்துதல் வண்டு மொய்த்தலுக்குக் காரணம். அன்பர்களாகிய வண்டுகள் மொய்க்கின்ற குறிப்புப் பெற இதனைக் கூறினார். "ஆனந்தத் தேனிருந்த பொந்தைப் பரவி" - (திருவாசகம் - திருப்பூவல்லி - 2), "இம்மலைப் பெருந்தேன் சூழ்ந்து" - (கண - புரா - 101) என்ற திருவாக்குக்களின் குறிப்பும் இங்கு வைத்துக் காண்க. **தேன்** - வண்டு என்றலுமாம். **தண்** - (இனிமையுடன்) தண்மையும் தருவது. பிறவி வெயிற்சுட அடையும் உயிர்களுக்குத் தண்மைதந் தாற்றுவது. "சுழலார் துயர்வெயிற் சுட்டிடும் போதடித் தொண்டர்துன்னு நிழலாவன" என அப்பர் சுவாமிகள் திருவடியினை நிழலாக உருவகித்தது காண்க. **பூ** - அழகினைத் தருவது. **கொன்றை** - பிரணவ உருவாயது. சிவகாமியார்

செய்துவந்த "பூப்பறித்த தலைகலை சாத்துதும" திருத்தொண்டின் குறிப்புமாம். **சேம்** - செம்மை. **சடை** - சிவபெருமானுக்குரிய திருவடையாளம்.

**சடையவர் போற்றளில் ஆறுத காதல் அன்பர்** - முன்னர் **எம்பிரான் அன்ப ரான்** என்ற விடத்துக் கூறியவை காண்க

**வானுளூந் தேவர்** பெருந் தேவர்களான இந்திரன், பிரமன், மால் முதலியோர். இவர்கள் சிவபெருமானருள்வழி நின்று வானுலகங்கள் ஒவ்வொன்றின் ஆட்சி புரிவோர். **ஆதலின் ஆளும்** என்றார்

**போற்றும்** - போற்றும் மன்று எனவும், போற்றும் மன்றுளார் எனவும், போற் றும் நீறு எனவும் கூட்டியுரைக்க நின்றது "வானவர் மேலது நீறு" முதலிய திருவாக் குக்கள் காண்க. **போற்றும் மன்று** - "தில்லையுட் செம்பொ னம்பலம் போற்றி" முத லிய திருவாக்குக்களா னறிக

**நீறு போற்றும்** - தம்முயிரினுஞ் சிறந்த பொருளாக எஞ்ஞான்றும் திருநீற்றின் மேல் வைத்த அன்பினைக் காப்பாற்றும். இஃது இவர் சரித்திரத்திற் போந்த உள் ளுறையாதல் காண்க வானுளூந் தேவர்கள் தவஞ்செய்து அமுதமுண்டும் இறத்தல் பிறத்தலாதி துன்பங்களுக்கு ஆளாகி யுழல்கின்றார். அது நீங்க ஒரோவழித் துதிப்பர். ஆயின் எறுதி நாயனார் திருநீறு போற்றியதனாலே இறைவன் திருவருளாற் பாச மறப் பெற்ற என்றும் பிரியா அன்பினைப் பெற்றார் என்ற அவர் சரித முடிபினை (649) இங்குத் தோற்றுவாய் செய்து இங்கினைவுடனே நாம் இச்சரித்திரத்திற் பயிலுமாறு குறித் துக் காட்டினர் எறிபத்த நாயனார் சரித உள்ளுறை அன்பர் பணியாம்; அஃது அவர் செய்த ஆண்மையால் விளங்குவது என்ற பயனை மேற்பாட்டில் வடித்துக் காட்டிய ஆசிரியர் இங்கு அதற்கு அடிநிலையாயினது அரன்பாற் காதலன்பாம் என்பார் **தாளில் ஆறுதகாதல்** என எடுத்து முடிந்த முடிபாகக் காட்டினார்

**அடிகள் போற்றி - செய்த திருப்பணி** - என்பனவும் பாடங்கள் 57

---

**சரிதச் சுருக்கம்** :—அநபாயரது மரபினராகிய சோழர்களது தலைநகரங்களில் ஒன்று **கருவூர்** என்ற செழிப்புடைய பழவூராகும் இதில் இறைவன் **பசுபதீசர்** என்ற திருப்பேருடன் திருக்கோயில் கொண்டெழுந்தருளி யுள்ளார். அக்கோயில் **திருவா னிலை** என்று பெயர் பெறும் இக்கோயிலில் நியதியாக இறைவரை வழிபட்டு அடியார் களுக்குத் தொண்டு செய்து வருபவர் **எறிபத்த நாயனூர்**. அவர் உலகிலே சைவம் ஓங் குமபடியாகிய ஒழுக்கமுடையார் அடியார்களுக்கு வரக்கூடாத இடையூறுகள் நேர்ந்த போது சிங்கம்போலத் தோன்றி அவ்விடையூற்றினை நீக்கும் மழுவாயுதத்தை ஏந்தி வருவார்

இத் திருநகரிலே இறைவருக்கு விதிப்படி பூப்பறித்து மாலை சாத்துதும திண்ணிய அன்பு கூர்ந்த **சிவகாமி யாண்டார்** என்ற புண்ணிய மறைமுனிவர் ஒருவர் உளராயி னர். அவர் தம்வழக்கப்படி ஒரு நாள் வைகறை எழுந்து, நீராடி, வாய்கட்டி, நந்தன வனஞ் சென்று, இறைவனுக்கான அன்றலர்ந்த பூக்களைக் கைப்பழக்கத்தாற் றெரிந்து, கொய்து, பூங்கூடை நிறைத்து, அதனைக் கோலிற்றூங்கி மிக்க அன்போடு திருவா னிலையாருக்குச் சாத்துங்காலை உதவ வேண்டி விரைய வாராநின்றார் அந்நாள் மகாநவமியின் முன்னாளாம் அன்று **புகழ்ச்சோழனரது பட்டவர்த்தனம்** என்னும் பட்டத்து யானை மங்கல விழாக்கொண்டு நதித்துறை நீராடி மிக்க களிப்புடன் மதம் பொழியச் சென்று ஒரு தெருவில் முட்டியது அதன்மேல் நின்று கடவிய பாகர் இரு வர் பக்கங்களினும் முன்னும் ஓடி அதனை நனகு செலுத்தும் பரிக்கோற்காரர் மூவர்.

இவ்வாறு சென்ற அந்த யானை அத்தெருவில் முன் சென்றுகொண்டிருந்த சிவ காமியாண்டாரைப் பின்றொடர்ந்து சென்று அவர் கையிற் கோலிற்றூங்கிய பூக்கூடை யைப் பறித்துக் கீழே சிந்தியது அது கண்டு பாகர் அதனைக் காற்றினுங் கடிதாகச்

செலுத்திப்போயினர். சிவகாமியார் பதைத்துப் பொங்கி, யானையின்பின்போய்த் தண்டினாலே அதனை அடிக்க வந்தார்.

இவர் அணையவொட்டாது அது விரைந்து போயிற்று. தொண்டர் மூப்பினாலே விரைந்து பின்செல்ல மாட்டாதவராகி நிலத்தில் வீழ்ந்து, கையினால் தரையையடித்து, எழுந்து, மிக்க துன்பத்தாற் கோபித்துச் சிவதா! சிவதா! என்று இறைவரை நோக்கி அறைகூவி முறையிட்டனர். இதனை எதிரே வந்த எறிபத்தர் கேட்டு, மிக்க கோபங் கொண்டு, 'அடியார்க்கு யானை வழிப்பகையன்றோ? அதனை வெட்டி வீழ்ப்பேன்' என்று, மழுவேந்தி வந்து 'இடும்பைசெய்த யானை எங்குற்ற'தென்று சிவகாமியாரைக் கேட்க, அவர் "அது இறைவருக்குச் சாத்தும் பூவைப் பறித்துச் சிந்திப் பிழைத்து இத் தெருவே போயிற்று" என்றனர். 'இது இனிப் பிழைப்பதெங்கே?' என்று எறிபத்தர் பெருநெருப்பும் பெருங்காற்றும் கூடியதுபோல விரைந்து எழுந்து சிங்கம்போற் சென்று யானையைக்கிட்டி மழுவை வலந்திரித்து வீசி அதன்மேற் குலுங்கப் பாய்ந்தனர். மேனின்ற பாகரோடும் யானை திரிந்து இவர்மேற் கதுவவே, அதன் நிலந்தோய் பெருந் துதிக்கை அற்றுக் கீழேவிழும்படி தொண்டர் மழுவினால் துணித்தனர். அதன் பின்பு பாகரிருவர், குத்துக்கோற்காரர் மூவர் ஆக ஐவரையும் கொன்று நின்றார் எறிபத்தர். தாயின் தலையன்பின் முன் அச்சம் எதிர்த்து நிற்குமோ?

இவ்வாறு இறந்துபட்டார் ஒழிய, வேறுஉள்ளார் ஓடி அரசரது அரண்மனை வாயில் காவலரிடம் பட்டவர்த்தனமும் பட்டது - பாகரும் பட்டனர் என்றறிவிக்க, அவர்கள் அரசருக்கு அறிவித்தனர். அரசர் அளவில்லாத கோபங்கொண்டனர். அதனால் யார் செய்தார்? என்றுங் கேளாது உடனே எழுந்து புறப்பட்டனர். சேனைத் தலைவர் கட்டளைப்படி நால்வகைச் சேனையும் வந்து நெருங்க, அரசர், ஒரு குதிரையின் மேலேறி யானையும் பாகரும் பட்ட களத்தை அடைந்தார். அங்குப் பகைப்புலத்தார் எவரையுங் கண்டாரில்லை. ஆனால் ஒரு மழுவேந்தி வேறிரு கையுடைய யானைபோல நின்ற அன்பரை முன்பு கண்டார். சிவனடியாராதலின், இவ்வியானையைக் கொன்றவரிவரென்றெண்ணாராய், "யாவர் வென்றவர்?" என்று வெடிபட முழங்கக் கேட்டனர். பாகர் "இவ்வியானைமுன் செல்லும் அரசருமுளரோ? கொன்றவர் மழுவேந்திய இவரே" என்றனர். அரசர், "அரனடியார்கள் பிழையின்றிக் கொல்லார், பிழை பட்டதுண்டு" என்று மனத்துட்கொண்டு, மேன்மேலும் வரும் சேனைகளின் வரவினை நிறுத்தித், தமது குதிரையினின்றுமிழிந்தனர் "இந்த மெய்த்தவர் யானைமுன் சென்ற போது வேறொன்றும் புகுதாவிட்ட தவமுடையேனானேன், கெட்டேன்! இவ்வடியார் இத்தனையும் முனிவதற்குரிய என்ன பெரியபிழை நிகழ்ந்ததோ?" என்று எண்ணினார், அணுக வந்தவர்களை விலக்கினார்; அன்பர் முன்னாகத் தொழுது சென்றனர்; "ஐயனே! அடியேன் ஈது அறிந்திலேன், அங்கு அடியேன் கேட்டதொன்று; அது நிற்க; இந்த யானையின் குற்றத்திற்குத் தீர்வு அதனையும் பாகரையும் எறிந்ததே போதுமோ? அருள்செய்யும்" என்று பணிந்து நின்றனர். அதுகேட்ட எறிபத்தர், "மன்னவனே! இறைவருக்குச் சாத்தச் சிவகாமியார் கொணர்ந்த திருப்பள்ளித் தாமத்தை இந்த யானை பறித்துச் சிந்தியதாதலின் அதனைத் துணித்து வீழ்த்தேன்; யானை தீங்கு செய்யவும் அதனை விலக்காமையாற் பாகரும் பட்டனர், இதுவே இங்கு நிகழ்ந்தது" என்றார். அரசர், மிகஅஞ்சிச், "சிவனடியார் தம்மைச் செய்த இந்த அபசாரத்துக்குத் தீர்வு இவற்றால் போதாது; என்னையுங் கொல்லவேண்டும்; ஆயின் தேவரீர் கையிலுள்ள மங்கலம் பொருந்திய மழுவினாலே கொல்லப்பெறுதற்கு யான் தகுதியுடையேனல்லேன், இது அதற்குத் தக்கது" என்று தமது உடைவாளை உருவி அவர் கையிலே நீட்டினார். எறிபத்தர் அதுகண்டு பயந்து, "ஓ! கெட்டேன்! அளவற்ற புகழாரது அன்புக்கும் அளவில்லாமை கண்டு அறிந்தேன்" என்று எண்ணி, அவர் தந்த வாளினை வாங்கமாட்டாராயினும், அவர் தம்மைத்தாமே மாய்த்

துக்கொளவர் எனறு அஞசி, அதனைத தடுககுமபொருட்டு வாஙகினா. "எனனை வாளினறு கொனறு என பிழை தீாகக ஓஙகிய உதவி செயயுமபேறு இவா பாற பெறறேன" எனறு அவா களிததனா அது கணட எறிபததா, மேலும பயந்து "யானையும பாகரும மடியவும உடைவாளைத தநது தமமையும கொலலச சொலலும இவவனபாககுத தீஙகு நினைததேன எனற எணணம விளைவிததேன, முனனே என உயிரைப போககி முடிப்பதே முடிபு" எனறு உடகொணடு அவவாளினைத தம கழுத திற பூட்டி அரியலுறறாா அரசா இது கணடு "பெரியோா செயகை இருநதபடி இது என ! ஓ ! கெடடேன !" எனறு விரைநது கூடி வாளினையும அவா தம கையினை யும் சேரப பிடிததுககொளளவே தொணடா வருநதி நினறாா அபபோது அளவிலாப் பேரனபு காரணமாய நோநத இவவிடுககண எலலாந தீாககக கணணுதற பெருமானரு ளாலே "அனபுமிககீா ! தொணடினிலையை உலகிற காடடும பொருட்டு மலரை யானை சிநதும செயல் திருவருளினலே கூடிறறு" எனறு திருவாககு ஆகாயததில எழுநதது, யானையும பாகரோடும எழுநதது. எறிபததா வாளினை விடடு அரசா பாதததில வீழநது வணஙகினாா. அரசா வாளைபபோக எறிநது எறிபததா பாதஙகளைத துதிதது வணஙகினா இருவரும எழுநது அசரீரியாய எழுநத திருவாககினைத துதிதது நினறாா கள. பூஙகூடையில மலாகள நிறைநதிடக கணடு சிவகாமியாரும வாழநது நினறாா. உறஙகி விழிததது போல எழுநத யானையைச செலுததிப பாகரும அணைநதனா. எறி பததா வேணட, அரசா யானையினை மேறகொணடு தமது திருவளா கோயிலபுககனா. சிவகாமியாா தமபிரான பணிமேறகொணடு செனறனா "அரனடியாாகள அறிதற கரியாா" எனறு வியநது எறிபததா தமது நியதியான திருபபணி நோககிச செனறாா.

இவர் பினனாப பலகாலம், இததனமையவாகிய வனபெருநதொணடுகள செயது வாழநது முடிவில திருககயிலையிற கணநாயகராய விளஙகினாா. எறிபததாது ஆணமை யும வளவனாா பெருமையும இவாககு நாளும அருளும இறைவனே அளககிலனறி மறறு யாவா அளநதறியவலலாா ?

---

**தலவிசேடம்** —**கருவூர்** - இததலம கொஙகுநாடடிற பாடல பெறற ஏழு தலங களில ஒனறு ஆமபிராவதிநதியின வடகரையிலுளளது. காமதேனு வழிபடடு வரம பெறற காரணததால இதன ஆலயம ஆனிலை எனறு பெயா பெறும. காமதேனு திருப பேருரிற படடிபபெருமானைப பூசிதது அவாது திருநடங கணடு, பினனா அவாது அருள வழியே செனறு இததலததை அடைநது பூசிததுப பேறு பெறறதெனபது வரலாறு. பல முனிவாகள ஆமிர (மாமரம) உருவமாகி நினறு இதன கரையிற றவஞ செயத காரணததால இநநதி இபபெயா பெறறது திருவிசைபபா அருளிய கருவூாததேவா கதியடைநத தலம. இவா சநநிதி தனியாகத தெறகுப பிரகாரததில் உளளது. இததலம சோழாகள முடிசூடும நலநகரஙகள ஐநதில ஒனறு

இது தெனனிநதிய இருபபுபபாதையில ஈரோடு - திரிசசிராபபளளிப - பிரிவில் **கரூர்** எனற நிலையததினினறு மேறகில கறசாலையில ஒரு நாழிகை யளவில அடையத தககது. பதிகம 1. சுவாமி **பசுபதீசுவரர்**. தேவியாா **சவுநதரியவல்லி, கற்பகவல்லி** எனற இருவா.

**கற்பனை** —(1) புதிதாக நாடு கொணட அரசா பகைபபுலததவா தம நாட்டுக் குள் வரககூடிய பல வழிகளையும அடைததுக காவல பொருநதியதொரு புதுவழி உணடாககுதல நாடு காவலசெய முறைகளிலொனறும

(2) அடியவா தொணடினுககு அடாதன அடுததபோது முனவநது தீாதது அவாதந திருததொணடினை முடடினறி நிகழச செயதல பெருந திருததொணடாகும்.

(3) அனபோடும விதிபபடி உரிய பூபபறிததுத தொடுததுக காலததிற சிவனுக் குச் சாததுதல அரியதோா சரியைத திருததொணடாம.

(4) மகாநவமியில் நாடு விழாக்கொண்டாடுதல் சிறப்புத் தரும்.

(5) விலங்கு முதலிய குறைந்த அறிவுடைய பிராணிகளேயாயினும் சிவாபராதஞ் செய்தல் தீது. அவ்வாறு செய்யின் அவையுந் தண்டிக்கப்படுதல் சீராக்கற்பாலன. அவை அவ்வாறு செய்யாது காத்தல் அவற்றைச் செலுத்துவோர் கடமை. அக்கடமையினின்றும் வழுவுதல் சிவாபராதமும் பெருந் தண்டனைக்குள்ளாகும் பெரும் பாவமுமாம். குறைந்த அறிவுடைய பிராணிகளைக் காப்போரும் அவற்றை உடையோரும் அவற்றால் நேரும் ஏதங்களுக்குப் பொறுப்புடையோர் என்பது இந்நாட் குற்றத்தண்ட நீதியினும் விதித்தது.

(6) தாம் செய்யும் சிவப்பணிவிடைகளுக்கு இடையூறு நேர்ந்தபோது சிவனிடத்தே முறையிடுவது பெரியோர் செய்கை.

(7) யானை சிவனடியார்களுக்கு வழிப்படுகை. கோச்செங்கட்சோழ நாயனார் சரிதமும் உன்னுக.

(8) தம்மால் அன்பு செய்யப்பட்டார்க்குக் கெடுதி நேருங்கால், அதனை விலக்க முற்படுவதில் தமக்கு எவ்வகைப் பெருங் கேடு வருவதாயினும் அஞ்சாது மேற்சென்று காவல் புரிவது தலையன்புடையோர் தன்மை. தாயினது தலையன்பின் முன்பு அச்சம் நிற்குமோ? நில்லாது.

(9) சிவனது திருவடிச் சார்பு பெற்ற உறைப்பினாலே சிவனடியார்கள் பெரு வீரமுடையார். அஞ்சாநெஞ்சுடன் எதையுஞ் செய்யவல்லவராவர். "வானந் துளங்கிலென்? . ஒருவனுக்காட்பட்ட வுத்தமர்க்கே" என்பது அப்பர் சுவாமிகள் திருவிருத்தம். அவர்கள் தமது செயலைக் கூறும் சொல்லும் வீரமுடையன. 590 - 591 - வீரச்சுவை காண்க.

(10) பெருங் கோபத்தால் விழுங்கப்பட்டார், தீரவிசாரிக்கும் மனநேர்மையை யிழப்பர். "காயத் துவத்த லகற்றி யொருபொருட்கண், ஆய்த லறிவுடையார் கண்ணதே - காய்வதன்கண், உற்ற குணந்தோன்றா தாகு முவப்பதன்கட், குற்றமுந் தோன்றாக் கெடும்" என்பது நீதிநூல். மிக்க கோபத்தினைப் போலவே மிக்க மகிழ்ச்சியினையும் தம்முள்ளங் கவர்ந்து மேலெழாதபடி காத்தல் அறிவு பெற்ற பயன்.

(11) மன்னன் குறிப்பின் வழி ஒழுகி உலகங் காத்தலில் அமைதல் தந்திரத் தலைவர் கடன்.

(12) சிவனடியார்களான அன்பர்கள் குணமிக்கவர்கள், பிழைகாணில்லலது வெகுளி கொள்ளார், பிறவுயிர்களுக்குத் தண்டமுஞ் செய்யார்.

(13) தம்மா லன்புசெய்யப்பட்ட அடியார்களைக் கண்டபோது தாம் அன்பு கொண்ட ஏனை உலகப் பொருள் எவையேயாயினும் அவற்றின்மேல் வைத்த காதலினும் பன்மடங்கு காதல் பெருகுதல் உண்மையன்பர் தன்மை.

(14) தாம் அன்பு வைத்த பொருள் வேறு எதுவேயாயினும் அதனுக்கு ஓர் சிவனடியாரால் ஊறு நேரக்காணில் பிழை தம் பொருளின்மேலதே என்று கொண்டு அஞ்சுதல் உண்மையன்பர் தன்மை. தமது பெருந் தேவியின் மூக்கினைச் செருத்துணையார் வார்ந்தனர் என்று தெரிந்தபோது அரசராகிய கழற்சிங்க தேவர் தேவியாரது கைதடிந்த செயலையும் இங்கு வைத்துக் காண்க.

(15) தம்முடைய பொருள்களாற் பிறருக்கு ஏதம் நேரிடா வண்ணங் காத்தலும், அவ்வாற்று நேர்ந்தவழி அதற்குத் தாமும் பொறுப்பேற்றலும் யாவர்க்குங் கடன். அதனினும் அரசரிடத்து அக்கடமை மிகப் பெரிது. 121-ம் பாட்டிற் கூறியன இங்குக் காண்க. மேலும் இப்பிழைகள் சிவாபராதமாயினபோது பெரிதும் அஞ்சித் தம் உயிரையும் அதற்கீடாகக் கொடுக்க முற்படுவது பேரன்பர்களின் தன்மை.

(16) சிவப்பணிவிடையிலும் அடியார் பணிவிடையிலும் பயன்படுகின்ற கருவிகள் மங்கலமுடையன. அவற்றாற் றொண்டிசெய்யப்படுவோர் புனிதமுடையோர். அடியவர்களை எதிர்கொள்ளுங்கால் எடுத்தேந்தப்படும் ஏனைய மங்கலங்களுடன் சோதத்த திருக்கோயிற் றிருவலகு முதலியனவும் மங்கலப் பொருள்களாய் ஏந்தப் பெற்ற சிறப்பும் காணத் தக்கதாம்.

(17) அன்பர்களது மனத்தில் அவர்க்கு ஊறு செய்வதாக ஓர் எண்ணம் உண்டாக்கத்தக்க செய்கை ஒருவர்செய்தல், அவ்வாறு தாம் நினையாது செய்யினும், பெரும்பாவமாம்.

(18) அடியார்கள் செய்யும் உண்மைப் பணிவிடைக்கு இடையூறுபோல் நேர்வன யாவும் இறைவனருள்வழி நேர்வனவாம் அவற்றை இறைவன் முன்னின்று தீர்ப்பன.

(19) அடியார்களின் அன்பு அளவிடப்படாதது "அம்பல நிறைந்தார் தொண்டரறிவதற் கறியார்". "அளவிலாத பெருமையர்". "நீண்ட தொல் புகழார்".

(20) அடியார் பெருமைகளை அவர்க்கருளும் நம்பர் தாமே அளக்கிலன்றி வேறு எவரும் அளக்கும் வலியிலர்.

(21) கொலை, களவு முதலியன தீயனவாம் என்பது நீதி நூல், சமய நூல், உலக நூல்களின் விதி. ஆயின் அவற்றின் கருத்து நோக்காது எல்லாவிடத்தும் அவை தீயன என்று கொள்ளுதல் அமையாது சிவத்திருத்தொண்டுக்கு இடையூறு செய்தாரைக் கொல்லுதல் பெரு நூல்களில் விதித்ததேயாம் இங்குக் கொலை தீமையாகாது சிவ புண்ணியமாமென்பது. என்னை? திருத்தொண்டுக்கு அவ்வாறு இடர் செய்தார் மறுமையிற் கொடிய நரகத்துன்ப மடையாதபடி அது காக்கும், இவரைக் கண்டு பிறரும் இடர் செய்து கெடாதபடி காக்கும், பணிவிடையில் நேரும் இடையூறு கண்டு, முதிராத அன்பு பெற்றோர் பயந்து தொண்டு செய்யாது காலங் கழியாதபடி காக்குமாதலி னென்க. உலக நூலிலும் கொலை செய்தார்க்குக் கொலைத்தண்டம் விதித்தல் இக்கருத்துப் பற்றியதேயாம் "கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ், களைகட் டதனொடு நேர்" - திருக்குறள் பிறஉயிர்களைப் பொருளாசை முதலிய காரணம்பற்றிக் கொலை செய்வோர், களவுசெய்வோர் முதலிய கொடியவர்களினும் அடியார் தொண்டுக் கிடர்புரிவோர் பெரும்பாவிகள் என்பது உண்மை நூற்றுணிபு.

எறிபத்தநாயனார் புராணம் முற்றும்.



உ

திருச்சிற்றம்பலம்

# 9. ஏனாதிநாத நாயனார் புராணம்

தொகை

"ஏனாதிநாதன்ற னடியார்க்கு மடியேன்"—திருத்தொண்டத்தொகை

வகை

பத்தனை யேனாதி நாதனைப் பார்நீ டெயினைத் தன்னு
ளத்தனைத் தன்னோ டமர்மலைந் தான்நெற்றி நீறுகண்டு
கைத்தனி வாள்வீ டொழிந்தவன் கண்டிப்ப நின்றருளு
மித்தனை யீழக் குலதீப னென்பரிந் நீணிலத்தே—திருத்தொண்டர் திருவந்தாதி

விரி

608. புண்டரிகம் பொன்வரைமேல் ஏற்றிப் புவியளிக்குந்
தண்டரள வெண்கவிகைத் தார்வளவர் சோணாட்டில்
வண்டறைபூஞ் சோலை வயன்மருதத் தண்பணைசூழ்ந்
தெண்டிசையு மேறியசீ ரெயினனூர்.

புராணம் - ஏனாதிநாதர் என்ற பெயருடைய நாயனாரது சரிதவரலாறும் பண்பும் கூறும் பகுதி. சிறுத்த முறையானே இவ்வமலிந்த சருக்கத்தில் இரண்டாவதாய ஏனாதிநாத நாயனாரது சரிதங் கூறத் தொடங்குகின்றார்.

தோகை - ஏனாதிநாத நாயனாருடைய அடியவர்க்கு நான் அடியேனாவேன்.

வகை - பத்தரும், ஏனாதிநாதர் என்ற பேருடையவரும், உலகத்தில் நீடிய எயினனூரின் அத்தராகியவரும், தம்முடன் அமர் செய்தானது நெற்றியில் திருநீற்றினைக் கண்டதனாலே தாம் முன்னர் அவனைக் கொல்ல ஏந்திய வாளினை (ப் பயன்படுத்தாது விட்டதனோடு) எறிந்துவிடாமல் நின்று அவன் நினைந்தபடியே தம்மைச் செய்யும்படி நின்றருளுகின்ற சித்தரும் ஆகிய பெரியாரை இப்பெரிய உலகத்தே ஈழக்குலச் சான்றவர் என்று சொல்வர்.

முதனூல் நாயனாரது பெயர் கூறிற்று. வகைநூல் அவரது பண்பும், ஊரும், பேரும், குலமும், வரலாறும் கூறிற்று. இவை விரிந்த வகை விரிநூலினுட் கண்டு கொள்க.

எயினை - எயினனூர். வீடொழிந்து - விடுவதை யொழிந்து. வீடு - பகுதி முதனீண்ட முதனிலைத் தொழிற் பெயர். இரண்டாம் வேற்றுமைத் தொகை. கைவிடாமல் என்றபடி. வாளினால் அமர்செய்ய நின்றவர் அது செய்யாது நின்றார், அதனோடொழியாது வாளினை விடாமல் மலைவார்போல - நேர்வார்போல - நின்றார்; நெற்றியில் நீறு கண்டதனால் அவ்வாறு நின்றார், அவன் தம்மைக் கண்டிக்குமிறுதிவரை நின்றார்; நிராயுதரைக் கொன்றானென்னும் தீமை அவனுக்கு எய்தாமை வேண்டுமென்னு

மருளால் நின்றார் - என இச்சரித நிகழ்ச்சி பலவும் உடன்கொண்டே நின்றருளும் என்றார். அவன் கண்டித்ததனால் ஒழிந்தாரல்லர், அழியாத தன்மையே பெற்றார் என்பார் **நித்தர்** என்றார். இறைவன் நித்தன் அவனை யடைந்தோரும் நித்தர். **கண்டு** - கண்டதனால் முன்பு எந்நாளும் காணாது அன்று கண்டாராயினும் கண்ட போதே என்பதும் குறித்தது. **ஈழக் குலதீபன்** - ஈழக் குலச் சான்றவர் மரபை விளக்க அவதரித்த விளக்குப் போல்வார். பத்தனை - நாதனை - அத்தனை - நித்தனை - நீணிலத்து - தீபன் என்பார் என முடிக்க.

608. **(இ - ள்)** வெளிப்படை. புலிக்கொடியை இமயமலையின்மேல் நாட்டி, அவ்வெல்லைவரையினும் பரந்த தமது நாட்டினைக்காவல் செய்யும், குளிர்ந்த முத்துக்கள் கட்டிய வெண்கொற்றக்குடையும் வெற்றி மாலையும் உடைய சோழர்களது வளப்பம் மிக்க **சோழநாட்டிலே** வண்டுகள் பாடுதற்கிடமாகிய பூக்கள் மிக்க சோலைகள் சூழ்ந்த வயல்களையுடைய மருதத்தின் குளிர்ந்த பண்ணைகளாற் சூழப்பட்டதாய், எல்லாத் திக்குக்களிலும் தனது சிறப்பு ஏறிய பழையவூர் **எயினனூ**ராகும்.

**(வி - ரை) புண்டரிகம்** - புலி. வடசொல். **பொன்வரை** - இமயம். **ஏற்றி** - வென்று, அதற்கடையாளமாக ஏற்றி. இவ்வரலாறு முன் 552 பாட்டின் கீழ் உரைக்கப்பட்டது.

**புவியளிக்கும்** - இப்புராணம் பாடிய காலத்துச் சோழர் அரசாட்சி வலிமையோடும் நிலைபெற்று நடந்தமையின் **அளிக்கும்** என நிகழ்காலத்தாற் கூறினார். சோழ அரசர் வாளேட்டி நின்ற சார்புபற்றிய சரிதமாதலின் முன்புராணத்தில் (552) இச்செய்தி கூறிய ஆசிரியர், அரசருக்கு வெற்றி வடிவாட்படை பயிற்றும் தன்மைத் தொழில் விஞ்சையிற் றலைமை பெற்றார் சரிதமாதலின், அரசர் வெற்றிக்கு இவர் போன்ற படைத்தொழிலாசிரியரே காரணராம் என்னுந் தொடர்புபற்றி அவ்வெற்றிச் செயலை மீண்டும் இச்சரிதத்தினும் குறித்தார். இதனானே சரிதத் தொடக்கத்து நாட்டுச் சிறப்புரைத்தபடியுமாம் என்னை? நல் அரசர் வெற்றியாலே நாடு பெருமையும் சிறப்பும் பெறும் என்பது மேற் சரிதத்தில் கருவூர், சோழரது தலைநகராதலின் நகரச் சிறப்புப்பற்றி நகரொடு புணர்த்து இதனை விரித்த ஆசிரியர் இங்கு நாடு பற்றிய பெருமைக் குறிப்பிற் கூறியதும் உன்னுக. "கொற்றவ னநபா யன்பொற் குடைநிழற் குளிர்வதென்றால், மற்றதன் பெருமை யெம்மால் வரம்புற விளம்ப லாமோ?" (85) என்று நாடு அரசனாற் சிறப்புப் பெறுவதனை விளக்கியது காண்க.

**தண்தரள வெண் கவிகை - தண்கவிகை** - நாடு அதன் கீழ்க் குளிர்ந்து வாழச் செய்வதால் **தண்** என்றார். "குடைநிழற் குளிர்வது" என்றமை காண்க. **வெண்** - வெண்மை புகழினையும் தூய்மையினையும் குறிக்கும் அடையாளம். **தரளம்** - தனது முன்னைக் கட்டினின்றும் முத்து விடுபடுதல் போலப் பசிப்பிணி முதலிய கட்டுக்களினின்றும் நாட்டினை விடுவித்து வாழச் செய்தல் குறிப்பு. முத்துக்களினியல்பு 492ன் கீழ் உரைக்கப்பட்டது பார்க்க. **தார்** - வெற்றிக் குறிகுறியாக அணியும் மாலை. சோழர்களுக்குரிய அடையாள மாலையாகிய ஆத்தி எனினுமாம்.

**சோணாடு** - சோழர் நாடு சோணாடு என மருவி நின்றது. அரசரது காவலால் நாட்டின் சிறப்புக் கூறிய ஆசிரியர் அக்காவலாற் போந்த விளைவாகிய வளத்தை நகர் வளத்தின் வைத்துக் கூறுகின்றார்.

பூஞ்சோலையும் வயலும் பணையும் இம்மைப் பயனோடு இறை வழிபாட்டுக்குரிய பலனும் தருவன ஆதலின் இங்கு நகரச் சிறப்புக் கூறியவாற்றால் இம்மை மறுமை வீடு என்னும் மூன்று பயனும் குறித்தபடி காண்க. அவாய்நிலையால் இவற்றிற் கின்றியமையாத ஆற்றுவளமுங் குறிக்கப்பட்டது. எனவே நாடு - நகர் - ஆறு - முதலிய பலவும் இப்பாட்டால் ஒருங்கே கூறிய அழகுகண்டு கொள்க.

**சூழ்ந்து** - சூழப்பட்டு.

**எண்திசையும் ஏறிய சீர்** - எல்லாத்திசைகளிலுமுள்ளாராலும் இறைதிரு நீற்றின் சிறப்பினை எடுத்துக்காட்டி வழிப்படுத்தும் சிறப்பு. ஏறிய - எண்திசையுள்ளாரும் ஏறுதற்கு - அறிந்து உய்வதற்குக் - காரணமாகிய சிறப்பு என்றலுமாம்.

**எயின்மூதூர்**—என்பதும் பாடம். 1

609. வேழக் கரும்பினொடு மென்கரும்பு தண்வயலிற்
றாழக் கதிர்ச்சாலி தானோங்கு தன்மையதாய்
வாழக் குடிதழைத்து மன்னியவப் பொற்பதியி
லீழக் குலச்சான்றா ரேனாதி நாதனார். ௨

**(இ - ள்)** வெளிப்படை. குளிர்ச்சிபொருந்திய வயல்களில் நாணற்கரும்பி னோடு மென்கரும்பும் தாழும்படி கதிர்ச்சாலிதான் ஓங்கிவளரும் தன்மையுடையதாக (அதனால்) வாழ்வு பெறும் பெருங்குடிகள் தழைத்து நிலைபெற்ற அந்த அழகிய நகரிலே **ஈழக்குலச்சான்றார்** மரபிலே வந்தவர் **ஏனாதி நாதனார்** என்ற பெரியார்.

**(வி - ரை) வேழக்கரும்பு - மென்கரும்பு** - கரும்புவகைகள். **வேழக்கரும்பு** - நாணற்கரும்பு-குச்சிக்கரும்பு என்று வழங்குவர். இவை கடினமான தண்டுடையனவாம். நரி முதலிய பிராணிகள் நாசம் செய்யக்கூடாதனவாகி நாணல் போன்ற சிறிய தண்டுடையன. இவற்றின் கடினத்தன்மையைக் "கருஞ்சகட மிளகவளர் கரும்பு" (மேகராகக் குறிஞ்சி - திருக்கழுமலம் 6) என்றருளினார் ஆளுடையபிள்ளையார். **மென் கரும்பு** மெல்லிய கரும்புவகை. இவற்றின் மேல்பாகம் இலகுவில் உடைந்து சாறுதரக் கூடியன; இவை சாறுமிகவுடையன; இவற்றைச் சாறுபிழிந்து பயன்படுத்துதலோடு மக்கள் நேரே பல்லினாற் கறித்தும் உண்டு சுவைப்பர். **மென்** என்றது இலகுவில் உடைத்துச் சாறுபெறுதற்குற்ற மென்மைத்தன்மை குறித்தது. "விரும்பு மென்க ணுடையவாய் விட்டுநீள் - கரும்பு தேன்சொரியுங் கணமங்கலம்" (அரிவாட்டாயர் - புரா - 1) என்றது காண்க. மென்கரும்பை ஒடு விகுதி தந்து வேழக்கரும்பினைச்சார வைத்தது பெரும்பான்மை இந்நாட்டின் இவ்வகையே மிகும் சிறப்புப்பற்றி. கரும்பின் வகை விசேடங்களைப் பயிர்நூலுடையார்பாற் றெரிக.

**தண்வயலில்** - வயன்மருதத்தண்பணை என்று மேற்பாட்டிற் கூறியதனையே தொடர்ந்து குறித்தபடி.

**கரும்புதாழக் கதிர்ச்சாலி தான் ஓங்கும் தன்மை** - கரும்புதாழும்படி நெல் ஓங்கு குவன கரும்பல்ல நெல்லென்ன (5) என்ற பாட்டில் உரைத்தவற்றை நினைவுகூர்க. நிரைதையணி. **கதிர்ச்சாலி** - கதிர்விட்ட பருவத்துள்ள நெற்பயிர். இவை தழைத் தோங்கி நிமிர்ந்து பரந்து நிற்கும் இயல்புடையன; நீர் - நிலம் உரம் - விதை வலிமை - முதலிய வளங்களாற் சாலியின் தண்டுகள் பருத்து நிமிர்ந்து மென்கரும் பின் றண்டு போல்வன. நெல்லும் கரும்பும் இந்நாட்டு வயல்களில் அடுத்துக்காண உள்ளன; இரண்டும் மருதத்துக்குரியன. நெல் நிமிர்ந்து கதிருடன் நிற்கும் பருவத்தே கரும்பு சாய்ந்து கிடக்கும் காட்சியினாலே **கரும்பு தாழச் சாலிஓங்கும் தன்மையதாய்** என்றார். **தாழ** - வீழ்ந்து தாழ்ந்து கிடக்க என்றும், குறைந்து காட்ட என்றும் இரு பொருளும் படவைத்த தன்மைநவிற்சி யணியின் அழகு காண்க. நெல் இன்றியமை யாத உணவுப் பொருளாதலும், கரும்பு அவ்வாறன்றி உருசிவேண்டுவார்க்கு அமுதுக்கு உருசிதரும் அறுவகையினுள்ஒன்றாகி ஒரோவழி வேண்டப்படுதலின் அதனைச் சிறப் பில்லாது அதனினும் தாழ்தலும், அதனால் மேலே மிகுதலும் குறித்த நயமும் காண்க. மேற்பாட்டில் **வயன்மருதம்** - என்றார். இங்கு வயலின் விளைபொருள்களுள் உயர்ந்த இருவளங்களை கூறினார் வலிய **கரும்பு தாழ** மெல்லிய **சாலி ஓங்கும்** என்றதனால்

அானுககனபா ஆவின சிநதைபோல அலாநதன கதிாகள - (71) எனறபடி அடியாா தோறறங காட்டும மெலியானுகிய அதிசூரனுககு வலியாராகிய நாயனா் தலைவணஙகித தாழும இச்சரித நிகழசசி பறறியதோருட்குறிபபும சிறபது காணக. இவவாறு உலகியற பொருளகளை அவவசசரிதக குறிபபுக கணணுற கணடு காட்டுதல ஆசிரியா மரபு

**வாழக்குடிதழைத்து - வாழ** - மேறகூறியவாறுளள நிலவளததால வாழவுடைய **குடி தழைத்து மன்னிய - குடி** - அரச அஙகம ஆறனுள ஒனறு. "படை, குடி, கூழ், அமைசசு, நடபு, அரண, ஆறு, முடையா னரசருள ஏறு" எனபது குறள. **வாழ** என பதனைச சாலி எனபதனேடு சோததுச சாலி தனமையதாகி வாழ எனறலுமாம.

**தழைத்து** - மககள, செலவம - அறிவு ஒழுககம இறைவன வழிபாடு-முதலியவற றால மிகுதது **மன்னிய** - நிலைபெறற வழிவழியாய வநத. **வாழ் அக் குடி** எனறு பிரிதது வாழகினற அநதக குடிகள எனறலுமாம

**ஈழக் குலம்** இஃது சானறோா குடிவகைகளில ஒனறு **ஈழம்** - இஙகு ஈழநாட் டின றொடாபு பறறியதோ எனறு சிலா ஐயங கொளகினறனா. **ஈழம்** - கள என்ற பொருளில வழஙகுதலின, **ஈழக்குலம்** எனறது கள இறககும தொழில பூணட குலம எனறும, அது **சான்றார்** மரபில ஒரு பிரிவு எனறும கூறுவா. மலைநாட்டில இத தொழில செயபவா **ஈழவர்** எனற பெயரால வழஙகும ஒரு சாதியினா உணடு. கொஙகு நாட்டில இததொழில செயவோா **சான்றார்** (சாணா என மருவி வழஙகுவது) எனற மரபுப பெயரால வழஙகும ஒரு சாதியினரும உணடு

இஙகு ஆசிரியரும, வகை நூலுடையாரும, புராண சாரமுடையாரும **ஈழக்குலம்** எனறு குலததொடு புணாததியே கூறியிருததலின இது **ஈழம்** எனற நாட்டினறொடா பாற போநததெனறு கொளளுதற காதாரமினறெனபா புராண வரலாறறில் குலங குறியாது **சான்றார் ஏனாதிநாதர்** எனறு கூறினா **குலம்** - மரபின உட்பிரி வெனபது வழககிலும காணக. **சான்றார்** சானறவா மரபினா சானறோா ஏனாதி நாதனா எனக. பெயாப பயனிலை கொணடது

**ஏனாதி நாதனர்** - "ஏனாதி நாதன" எனற முதனூலாட்சியை எடுததாணடபடி. இசசரிததததுப பிற இடஙகளிலும (607, 614, 618, 632, 644) இவவாறே கூறியதும் காணக "ஏனாதி நாதனை" எனறு வகை நூலிலும, "ஏனாதி நாதனா" (11) எனறு புராண சாரததினும, புராண வரலாறறினும, "நீணடபுக ழேனாதிநாதா" எனறு திரு நாமக கோவையினும ஒபபக குறிததல காணக **ஏனாதி நாதர்** எனபது அவா பெயர் போலும எனவே ஏனாதி நாயனா எனறு குறிதத பதிபபுககள தவறெனக

**ஏனாதி** எனபது முனனாளில அரசா சேனைகளின அதிபாகளாகிய உததியோகத தின பெயா எனறும, இதறகடையாளமாக நெறறியி லணியும ஏனாதித தஙகபபட்டமும் விரலுககு ஏனாதிமோதிரமும அரசாகள தருதல மரபாமெனறும, சிநதாமணி - மணி மேகலை - புறநானூறு முதலிய பழநதமிழ நூலகளால அறிகினறோம ஏனாதி, எட்டி, காவிதி முதலியன பட்டப பெயாகளாம (தொல - பொருள) **நாதர்** - தலைவா - முதல வா - எனற பொருளில வநதது Commander-in-Chief முதலிய நவீனப பெயர் களும காணக

**ஏனாதி நாதர்** எனபது இவவாறு அவரது உததியோகப பெயராய நினறதோ? அனறித "தஙகளகுலத தாயத்தின ஆனாத செயதொழிலா மாசிரியத தனமை" (614) எனறதனால அதுவே இககுடியில வநத முதலவாககு இயறபெயராய வழஙகிறறோ? எனபது ஐயம. **குலச்சிறை** - எனற பெயரும இவவாறே காணபபடுமெனபா இபபாட் டான, நிலவளம, நீாவளம, குடிவளம, நாயனாது பெயா, மரபு ஆதிய பலவும கூறினா.

**தன்மையவாய்**—எனபதும பாடம்.







திருககோயிலில உளள திருவுருவம.

(பாட்டு - 610—பககம் - எஎ௫)

610. தோனமைத திருநீறறுத தொண்டின வழிபாட்டி
னனமைகக ணினற நலமெனறுங குனறாதா
மனனர்ககு வெனறி வடிவாட படைபயிறறுந
தனமைத தொழிலவிஞசை யிறறலைமை சாாநதுளளாா. ௩

(இ - ள்) வெளிபபடை. (அவா) பழைமையாகிய திருநீறறுத தொணடினை வழிபடும திறததின நனமையிலே நிலைதது நினற தனமையின எனறும வழுவாதவா ; அரசாககு வெறறிதரும வாட்படைபயிறறும தொழிலாகிய விததைத திறததிலே தலைமை பெறறுளளாா

(வி - ரை) தோன்மைத் திருநீறு - முனனைப பழம பொருட்கு முனனைப பழம பொருளாயுளளானது திருநீறு - வேதததிலுளளது - எனறுமுளளது - பராசததியின ரூபமாயுளளது (பராவணமாவது நீறு) எனபனவாதி பொருளபறறித தோன்மை எனறாா

திருநீற்றுத் தொண்டு - நீறு - "எரியலா லுருவமில்"லா னாகிய இறைவன தனனை யடைநத உயிாகளின பாவஙகளை அரிததலின அரன எனப்படுதல போல, அவவெரி யின விளைவாயத தனனை அணிநதாாது பாவஙகளை நீறறுதலால நீறு எனபபடும. "பரி லப்படுவது நீறு பாவ மறுபபது நீறு" - தேவாரம நீறு பூசிய திருவேடததுடன தொணடு செயவோா நீற்றுத்தொண்டு எனபபடடாா

தொண்டின் வழிபாடு - நீறணிநத தொணடாகளை வழிபடுதல தொணடா மேனி மேலணிநத திருநீறுகணடபோது, மஙகையாது இளஙகொஙகையிற செஙகுஙகுமங கணட இளைஞா மனம அதன வீசப்பட்டு அதனால ஈாககபபடுதல போல, மனமுருகி வசீகரிக கபபட்டு அவா ஏவின செயது அவாவழி நிறறல. அவா வழியிலே படுதல வழிபாடு எனபபடடது. "வெணடிரு நீறறின பொலிவு மேறகணடேன" (ஆதலின) இவர்தங் கோள்கைக் குறிவழி நிற்பேன் (645) எனறது இவாதஞ் சரிதக குறிபபு.

வழிபாட்டின் நன்மைக் கண் - வழிபாடாகிய இனிய நனமையிலே.

நலம் - தனமை. என்றும் குன்றதார் - என்றும் - எககாலததும. அதனால தம முயிா போக நோவதைத தாம அறிநத அககாலததும் எனற பிறசரிதக குறிபபுக காட்ட என்றும் எனறாா. குன்றமை - அததனமையினினறும வழுவாதிருததல

வென்றி . .விஞ்சை - வெறறிதருவதாகிய வாட படைககலப பயிறசி செயவிககும விததை. வாளபிடிதது நெருஙகிப போாசெயது வெறறி பெறுவது அநநாள் வீரப் போா நெடுநதூரம மறைநது நினறு, இவா, பாலா, முதுவா, பிணியாளா என வும், இவா வேறு இனனாா எனவும ஒனறு மறியாதேயும பெரும போாக கருவிகளாகிய பொறிகளின அனல தூவி மககளைபபெருவாரியாக நாசமசெயது பொருடபே றெனறே கருதிப போாசெயவதே மரபாகும இந்நாட பேடிபபோருடன இதனை ஒப்புநோககி உலகம உணாநதுயவதாக.

வடிவாள் - சிறப்புவகையால நஞசு முதலிய ஊட்டியும வடிததெடுததுக கூாமை யும பதமும ஆககபபடட வாள.

பயிற்றும் தன்மைத் தொழில் - அரசரை வாள பயிறறுவிககுந தனமையுடைய ஆசிரியத தொழில பயிறறி அதனால வரும ஊதியமாகிய வளததையே தமது உணவுரி மைத தொழிலாகக கொணடவா எனபது. "செய தொழிலா மாசிரியத தனமைவளம" (614) எனறதினாலும காணக.

விஞ்சையிற்றலைமை - விததையிற பிறா எவரும இணையினறிச சிறநது நிறறல்

(ஏனாதிநாதனாராகிய) அவா - குன்றாதாா - சாாநதுள்ளாா என எழுவாய தொக கது. வருமபாட்டிலும இவவாறே அவா ஆககுவாா என முடிநதது.

உயிரோ டுடன்சேரும் சிறப்புப்பற்றி உள்ளுணர்ச்சித் திறமான சிவ வழி பாட்டினன்றொழிலை முன்னாகக்கூறி, அதற்குத் துணையாயின மட்டில் வேண்டப்பட்டு உடலோடொழியும் உலகநிலைத் தொழிலைப் பின்கூறினார். இவ்வாறே திருநீலகண்டர் புராணம் (2 - 3), திருநாளைப்போவார் புராணம் (12 - 13), திருக்குறிப்புத்தொண்டர் புராணம் (112 - 113) முதலிய பல இடங்களிலும் கண்டு கொள்க. 3

611\. வானின் படைப்பயிற்றி வந்த வளமெல்லா
நாளும் பெருவிருப்பி னண்ணுங் கடப்பாட்டிற்
றாளுந் தடமுடியுங் காணார் தம்மையுந்தொண்
டாளும் பெருமா னடித்தொண்டர்க் காக்குவார்.

(இ - ள்) வெளிப்படை. (அவர்) வாட்படை பயிற்றுவித்து அதனால் வந்த ஊதிய மாகிய வளங்களையெல்லாம் ஒவ்வொருநாளும் மிக்க விருப்பத்துடன் பொருந்திய கடமை வகையிலே, தமது அடிமுடிகளை அறிய முடியாதார்களையும் ஆட்கொள்ளும் சிவபெரு மானது அடித்தொண்டர்களுக்காகப் பயன்படுத்துவார்.

(வி - ரை) **வந்த வளம் எல்லாம்** பயிற்சி செய்வித்ததற்கு ஊதியமாக வந்த எல்லாவகை வளங்களையும். பொன்னும் - நெல்லும் - அணியும் முதலிய பலவும் அடங்க **வளம் எல்லாம்** என்றார் அரசர்க்குப் படை பயிற்றுதலால் அவை மிகுதிபெற வந்தன என்பார் **வளம்** என்றார்.

**நாளும்** - நாடோறும் ஒருநாள் ஆக்கினார் - பலநாள் ஆக்கிச்சலித்தார் என்ப தின்றி எந்நாளும்

**நண்ணும் கடப்பாட்டில்** - **கடப்பாடு** இதுவே தமது செய்கடன் என்றுகொண்டு. "என்கடன் பணிசெய்து கிடப்பதே" என்ற அப்பர் சுவாமிகள் திருவாக்கின் கருத் தினை உன்னுக **நண்ணும்**-தொண்டர்களது இன்முகமும் உவகை மொழியும் பொருந்தப் பெறும் எனக் "இன்முகங் காணுமளவு" **குறள்** (௯௨௯), "தொண்ட ரின்று தாழ்த் தமுதுசெய்யப் பெற்றிங் கவாத மலர்ந்தமுக, நன்று காண்பது" (**சிறுத்தொண்டர் புராணம்**-57-"தொண்ட ரிச்சையி னமுது செய்ய வளித்துள்ளார்"(4), "அன்ப ரானவ ரளவி லாருள மகிழவே, நாளுநாளு நிறைந்து வந்து நுகர்ந்த தன்மை"-**இளையான்குடி மாறர் புராணம்** (5), "திருத்தொண்டர், வாய்ப்புறுமென் சுவையடிசின் மாங்கனியோ டினிதருந்திப், பூப்பயின்மென் குழன்மடவார் செயலுவந்து போயினார்" - **காரைக்கா லம்மையார் புராணம்** - (21) முதலியன காண்க அன்பர் பணியின் வாய்ப்பும் அவர் தம் நலவரவும் **நண்ணும்** என்றலுமாம்

வளமெல்லாம் - விருப்பால் - கடப்பாட்டில் - ஆக்குவார் என்று முடிக்க.

இவ்வாறன்றி நண்ணும் கடப்பாட்டில் காணார் - என்று கூட்டி அவனை எவ் வகையால் (அன்பு வகையால்) நண்ணக் கடமைப்பட்டாரோ அவ்வகையாற் காணா ராய், **வேறு** வகையாற் (ஆணவ வகையால்) காணலுற்றார் என்றுரைப்பது மொன்று "புக்கணைந்து புரிந்தல ரிட்டிலர்" என்பது முதலாக இலிங்க புராணத் திருக்குறுந் தொகையினுள் அப்பர் சுவாமிகள் அருளிய கருத்துக்கள் காண்க. இப்பொருளில் **விருப் பால் - தொண்டர்க்கு - ஆக்குவார்** என்று முடிக்க

**தாளும் தடமுடியும் காணார்** - பிரம விட்டுணுக்கள் அடிமுடி தேடிய சரிதங் குறித்தது. **காணார் தம்மையும்** காணாராகிய அவ்விருவரையும் உம்மை இழிவு சிறப்பு. அருள் பெறத் தகுதியில்லாதிருப்பவும், ஆட்கொள்ளும் பெருமான் என்க. இறைவனது எண்குணங்களுட் பேரருளுடைமை குறித்தது

**காணார்** - இல்வாழ்வான் என்பதுபோலப் **படு** விகுதி தொக்கதாகக் கொண்டு, **காணப்படாதவராகிய இறைவன்** என்று பொருள் கூறி, அவ்விறைவனையும் தொண்டு

ஆளும - ஏவல கொளளவலல - தொணடா எனறுரைபபாருமுணடு. ஆளுடைய நமபிகளுககு சோறு இரநது கொடுததது முதலிய அருள நிகழசசிகளை இஙகு எடுத்துக காடடுவா.

**தொண்டு ஆளும்** - தொணடுசெயயும பேறு தநது ஆளுகினற பெருமையுடைய.

**அடித்தொண்டர்** - மறறொரு பற்றுமினறி அவனது திருவடியே பறறுககோடாகக கொணட அடியாா. "திருவடி மறவாப பானமையோா" எனுங குறிபபினினறவா. தகுதி யிலலாதாரையும ஆளும பேரருளுடையான திருவடி பிடிததாராதலின இவாகளும தமமையடைநத, தகுதி யிலலாதாரையும உருபபடுததி உயவிபபா எனபது கருதது.

**தொண்டர்க்கு ஆக்குவார்** - வளஙகளை அவாககே பயனபடுமாறு உயப்பவா.

மேறபாடடில நாயனாரது சரித இயல கூறிய ஆசிரியா இபபாடடில அவாது நியதியான ஒழுகக இயல கூறினா. 4

612. நளளார களுமபோறறு நனமைத் துறையினக
ணெளளாத செய்கை யியலபி னொழுகுநாட்
டள்ளாத தஙக டொழிலுரிமைத தாயததி
னுளளா னதிசூர னெனபா னுளனானான. ௫

**(இ - ள்)** வெளிபபடை. பகைவாகளும பாராடடுமபடியான நனமைத துறையிலே எவவகையானும இகழபபடாத செயகையில இயலபிலே இவா ஒழுகுகினற காலததில விடுபடாதபடி பிணைநதுளள தமது தொழில உரிமைத தாயததில உளளானாய **அதிசூரன்** எனபபடுவானொருவனிருநதான

**(வி - ரை) நள்ளார்களும் போற்றும் நன்மைத்துறை** - நனமைத துறையாதலின பகைவாகளும போறறினாகள பகைவராலும பாராடடபபடத தககவாறு இவாது நனமையிலே யொழுககம சென்றது எனபதாம. **நள்ளார்** - இவாபால வாளவினைசை பயினற அரசரால வெலலபபடடோரும வெலலபபட நினறோரும ஆகிய பகைவர். **போற்றும்** பாராட்டும வகையால பகைததிறம ஒழிநது உயயும. இவா அனபா ஆதலின இவா எவரையும நளளாராகக கொணடாரலா. இவாபால படைபயின்ற அரசாககே அரசகாரியததில நளளார் உளராவர் எனக. அஙஙனமாயினும ஒருவன தாயபாகப பொறாமை கருதி இவாபால ஏலா இகலபுரிவானாயினான எனச சரிதந தொடஙகிச் செல்லுமுகததால இப்பாட்டில இவாது இயலபு ஒழுககஙகூறி அவவிகல கொணடோனையும உடன கூறிய உளளுறை காணக "புலலாதா முரணடககிப பொருள்கவாவா ரெனபதெவன?, செலலாத பலவேறு தீபதநச செஙகோனமை, வலலாருந தததம தேத தரியபொருள வரவிடுததது, நலலாரா யொபபுரவு நடபடைய நடககினறா" (திருவாத வூரடிகளுககு உபதேசிதத படலம) எனற திருவிளையாடற புராணக் கருததை இஙகு வைததுக காணக உமமை உயாவு சிறபபு.

நள்ளாாகளும போறறுதல பகைமை பறறி யிகழாது, நெறிவழுவாது நிறகும் தனமை நோககிப புகழதல. **நன்மைத்துறை** - நலலொழுககம - திருநீறறினனபு. **எள்ளாதசெய்கை இயல்பு** - எனறும கைவிடா தொழுகும தனமை. **இயல்பு** - அவா நினைநது மேறகொளள வேணடுவதொனறனறு - இஃதவரியற்கையேயாம என்னுமபடி விபூதியைப பாதுகாககு நனனெறியில நூல்களால இகழப படாத திருத தொணடினை நூலாராயசசியினறி யியற்கையாகவே கொணடொழுகுகினற - எனபது இராமநாத செடடியாா உரைக குறிபபு

**தள்ளாத தங்கள் தொழில் உரிமைத் தாயம்** - விலகக முடியாத வண்ணம தமது தொழிலின உரிமை பெறற தாயபாக முடையவன. **தாயத்தின் உள்ளான்** - தாயாதி.

தாயததால மட்டுமே உளளானெயனறி வேறு எவவகையானும உளளானலலன என பது குறிபபு.

**அதிசூரன் என்பான்** - என்பான் - எனபபடுவான. படுவிகுதி தொககது. தனனையே தான் சாலமதிததுத தனனை அதிசூரன எனறு சொலலிககொளவான எனறுரைததலு மொனறு வருமபாடடுககாணக. **உளன் ஆனுன்** - அவவகையிலே உளளவனுயினன.

**அரிசூரன்**—எனபது பாடம். 5

613\. மறறவனுங கொறற வடிவாட படைதசொழிலகள
கறறவாக டன்னிற கடநதுளா ரிலலையெனும
பெறறிமையான மாநிலதது மிகக பெருமிதமவந
துறறுலகிற றனனையே சால மதிததுளளான. கூ

**(இ - ள்)** வெளிபபடை. மறற அவனும வெறறி வடிவாட்படைத தொழில கறற வாகளிலே தனனைவிட மேமபடடவாகள இலலை எனனுந தனமையால உலகிலே மிகுநத பெருமித முடையானுய, உலகில தனனைத தானே மிகவும மதிததுளளா னுயினன

**(வி - ரை) மற்றவன்** - அவன மறறையவனே, நமாலலன எனபது குறிபபு.

**எனும் பேற்றிமையால்** - எனற எணணம படைததலால. **பெருமிதம்** - அகங காரம. தானே தனனைப பெரியானுக மதிததுக கொளளுதல நூலகளில வகுதத மெயபபாடுகள எடடனுள **பெருமிதம்** எனபதொனறும அது " கலவி தறுகண ணிசைமை கொடையென" நானகா வகுபபா இவை உணமையில மிககலவி முதலிய பெருமைகளால வருவது இதனையே வீரம எனறும சொலவா எலலாரொடும ஒபப நிலலாது பேரெலலையாக நிறறல **பெருமிதம்** எனபபடும எனறா பேராசிரியர். ஆயின இஙகு அதிசூரன உறறது ஒருவாறறானும அவவகையுடபட்ட பெருமித மாகாது தனனிற கறறாரிலலை எனும பெறறிமையாலே தனனைததானே சால மதிதத அகஙகாரததினபாறபடட தெனபாா **பெற்றிமையால்** எனறா. **மிக்க** - அளவுககு மிகுநத

**தன்னையே சால மதித்துள்ளான்** - தானே தனனைப பெரியானெனறு மதிததுக கொணடான. பிறா மதிப்பதே மதிபபாம பிறா தனனைப பெரியவன என மதிபபவும தான அவவாறு கொளளாது சிறியனுக எணணி ஒழுகுதல வேணடுமெனபது நன னெறி. விசுவாமிததிரா எலலா வனமையுமுடையாா யிருநதும வசிடடாாற சொல்லப் படட பினனரே பிரமரிஷியாயினா எனற சரிதமும, அதுபறறி யெழுநது வழஙகும் " வசிடடா வாககில வநதாலே பிரமரிஷி " எனற பழமொழியும காணக " தனனை வியபபிபபான றறபுகழத தீச்சுடா, நனனீா சொரிநது வளாததறறால" எனறது நீதி நூல " தனனைப புகழதலுந தகுமபுல வோாககே " எனறு விதிதத இடஙகள வேறு. அதுவே வேறிடஙகளிற றறபுகழதல கூடாதெனபதனை வலியுறுததும இஙகு அதி சூரன அதனுள அமையாது எஙகும தானே தனனை மதிதது அகஙகரிதது ஒழுகினனை எனபதாம இதனுலே நீதி வாககியபபடி தன தொழிலிற குறைநது கேடடைந் தான எனபது அவன கைமேற பெறற பலனுக அடுதது வரும பாடடாற கூறினா.

**உலகில் தன்னையே மதித்துளான்** எனறமையால உலகில் வேறு பலரும் இவனை மதிபபாரிலா எனறதும குறிபபாம 6

614\. தானுள விருததிகெடத தஙகளகுலத் தாயததி
னுறத செயதொழிலா மாசிரியத தன்மைவள

மேனாளுந் தான்குறைந்து மற்றவர்க்கே மேம்படலா
லேனாதி நாதர்திறத் தேலா விகல்புரிந்தான். ௭

(இ - ள்) வெளிப்படை. தனது தொழின்முறை குறைவுபட்ட தங்கள், குலத் திறக்குரிமையாகிய தாய உரிமையிற் குறையாத செய்தொழிலாகிய வாட்படை பயிற்றும் ஆசிரியத் தொழிலானவரும் ஊதியமானவை மேன்மேல் நாளும் தனக்குக் குறைந்து மற்ற அவருக்கே மேம்பட்டு வருதலாலே ஏனாதிநாதர் திறத்திலே பொருந் தாத பகைமை பாராட்டுவானாயினன்.

(வி - ரை) விருத்தி - பிழைக்கும் வழி. சீவனோபாயம் என்பது வடமொழி வழக்கு. கெட - சீவனோபாயம் கெடுதலால் கெட (அதனால்) குறைந்து எனக் கூட்டுக.

குலத்தாயத்தின் ..வளம் - தமது அந்தக் குலத்தினுள்ளார் அனைவர்க்கும் தாய பாக உரிமையின்படி பொருந்தியதாகிய தாயாதி பாத்தியப்பட்ட என்பது இந்நாள் வழக்கு. ஆனாத செய்தொழில் - அரசர்க்குப் படைபயிற்றும் தொழிலாதலின் குறைவு படாத செய்தொழிலாயிற்று. ஆசிரியத் தன்மை - படை பயிற்றுவிக்கும் உபாத்திமை. வளம் - அதனாற் பெறும் பலவகை ஊதியங்களின் பெருமை குறித்தது 611 பார்க்க.

மேல் நாளும் - மேல் - எதிர்காலத்திலே வரவர நாளும் - நாடோறும் - படிப்படி யாக. மற்றவர்க்கே-இவனின் வேறாகிய அவருக்கு. ஏகாரம் தேற்றம்.

மேம்படல் - இவனுக்குமேல் நாளும் குறைந்தது போல, அவ்வளவிற்கு அவர்க்கு மேம்பட்டது என்க.

ஏனாதிநாதர் திறத்து - ஏனாதிநாதர் பால். அவரிடத்திலே என்க. திறம் - பகுதியு மாம். திறத்து - பகுதியிலே பக்கத்திலே.

திறத்து - அவரது திறத்தின்கண் என்றுரைத்தலுமாம். திறமாவது படைபயிற் றுந் தொழில், விஞ்சையிற் றலைமை சார்ந்தமை, அதனால் வளம்பெற வாழ்தல், நன்னார் களும் போற்றும் நன்மைத் துறையினிற்றல், வளத்தின் மேம்படல் முதலியன.

ஏலா இகல் - ஏலா - அவர் மாட்டுப் பொருந்தத் தகாத பொறாமை காரணமாக எழுந்ததாகலின் ஏலாததாயிற்று. அவர் முன்னிலையில் தன் குறை அறிந்து திருத்திக் கொள்ள முயலாமற் பொறாமை கொண்டான். "தம்மினுங் - கற்றாரை நோக்கிக் கருத் தழிக கற்றவெலா, மெற்றே யிவர்க்குநா மென்று" என்று நீதிநூல் விதிப்பதும் அவ்வாறு ஒழுகாது அழுக்காறு கொண்டதனால் அது அவரை விளைத்தது, அது வெகுளியை யும், அது இன்னாச் சொல்லையும் முறையே உண்டாக்கின இதனால் அறந் தேய்ந்தது; மறம் வளர்ந்தது, அதனாற் பொருள் தேய்ந்தது, என முறையிற் கண்டுகொள்க. 'அவ்வித் தழுக்கா றுடையானைச் செய்யவ, டவ்வையைக் காட்டி விடும்" என்பது திருக்குறள்.

இகல் - பகைத் தன்மை புரிந்தான் - பல காலமும் மனத்தில் வைத்துச் சிந்தித் தான் "திருச்செற்றுத் தீயுழி யுய்த்து விடும்" என்றபடி இகல் புரிந்தான் என்க "அழுக்கா றவாவெகுளி யின்னாச்சொல்" என்றபடி இவை முறையின் விளைக்கும் மேல்விளைவை மேலிரண்டு பாட்டானுங் கூறுகின்றார் முள்கின்ற செற்றம் - (616) என்றதுங் காண்க

7

615. [கதிரோ னெழமழுங்கிக் கால்சாயுங் காலை
மதிபோ லழிந்துபொறா மற்றவனுஞ் சுற்றப்
பதியோ ருடன்கூடப் பண்ணி யமர்மேற்சென்
றெதிர்போர் விளைப்பதற்கே யெண்ணித் துணிந்தெழுந்தான். ௮

(இ - ள்) வெளிப்படை ஞாயிறு மேலே வரவரத் தன் ஒளி குறைந்து மங்கு கின்ற காலையிலாப் போலக் குறைவடைந்து பொறாமை மேற்கொண்ட மற்ற அந்த

அதிசூரனும் தனது சுற்றத்தாரையும் ஏனை ஊரவரையும் கூட்டி எனுதிநாதர் மேற் சென்று எதிர்த்துப் போர் விளைப்பதற்கே நினைந்து அதுவே துணிந்து எழுந்தான்.

(வி - ரை) **கதிரோன்** - ஞாயிறு மதியும் கதிருடையவனுயினும், அவனது ஒளி ஞாயிற்றின் கதிரொளியினது எதிர் தோற்றமேயாம் என்ப. ஆதலின் அடைமொழி யின்றி வழங்கும் **கதிரோன்** என்பது ஞாயிற்றினையே குறிப்பது மரபு.

**எழ மழுங்கி** - எழுதலால் மழுக்கமடைந்து எழுவதற்குமுன் இருந்த விளக்கம் சிறிது சிறிதாகக் குறைந்துபடுதலை **மழுங்கி** என்றார்.

**கால்சாயும்** - இறுதியில் முற்றும் மங்கி உருத்தெரியாது போகின்ற. **கால்** - (காலுதல்) கதிர் வீசுதலைக் குறிப்பது போலும் **சாய்தல்** - கதிர் வீசித் தோற்றப்படும் நிலை குறைதல் **கால் சாய்தல்** - ஒரு சொன்னீர்மைப்பட்டு, முன் தோற்றத்தினின் றும் வீழ்தலைக் குறிக்க வழங்குவதாயிற்று கருதிய பொருள் கைகூடும் என்புழிக் கை என்பதுபோலக் **கால்** என்பதும் உபசாரக்கம் போலவதோ ரிடைச்சொல் என்றலுமாம்.

**மதிபோல்** - வினைபற்றிவந்த இரட்டையுவமத்தின்பாற்படும் கதிரோனெழுதல்-குலத்தாயத்தின் செய்தொழில்வளம் நாளுமனுதிநாதர்க்குமேம்படுதலுக்கும், காலைமதி யழிதல்,அவ்வளத்தின்முன்னிலை அதிசூரனுக்கு நாளும் குறைதலுக்கும் உவமங்களாம்.

**போரு** - பொருமைபூண்ட. **மற்றவன்** - அயலான் அழுக்காறு கொண்டு தீமை குறித்தானுதலின் **மற்றவன்** என்றார்.

**சுற்றப் பதியோர்** - தன்கிளையந்த சுற்றமும் பதியோரும் எனக. எண்ணும்மை தொக்கது. வரும்பாட்டில் சுற்றத்தொடும் போர்மள்ளர் கூட்டத்தொடும் என்றது காண்க. வலலெழுத்து மிகுதலால் பதியோராகிய சுற்றம் என்று பண்புத்தொகை யாகக் கொள்வாருமுண்டு

**உடன்கூடப் பண்ணி**-தன்னுடன்வந்து கூடும்படி - சேரும்படிசெய்து. திரட்டி. **பண்ணி** - செய்து. நள்ளார்களும் போற்றும் நன்மைத்துறையில் நின்ற நாயனுரக் கெதிர்முகமாய் எவரும் இவனுடன் தாமாகச் சேராராதலின் பல உபாயங்களாலே தன் உடன்கூடப் பண்ணித் திரட்டினுன் என்பது குறிப்பு

**அமர் மேற் சென்று** - தன்மேல் வாராதிருப்பவும், போர்க்கு வேறு காரண மில்லா திருப்பவும் பொருளாசை பற்றிய அழுக்காறு ஈர்ப்பத் தான் வலிந்து அவர் மேற் சென் றுன் என்பது இந்நாள் மேனுட்டார் கீழ்நாட்டார்களுள் நிகழும் பெரும் போர்களின் தொடக்க வரலாறுகளை இங்கே வைத்துக்காண்க. மக்கட்கூட்டம் தீக்குணங்களின் வசப் பட்டொழுகும் நிலை மிக வருந்தத்தக்கது

**எதிர்போர் விளைப்பதற்கே எண்ணி** - எதிர்த்து எவ்வாற்ருனும் சண்டை உண் டாக்குதற்கே எண்ணங்கொண்டு. ஏகாரம் தேற்றம். வலியச் சண்டைக்கு இழுக்க என்ப துலக வழக்கு. **எண்ணி** - **துணிந்து** - **எழுந்தான்**-நினைத்தல் - அவ்வாறு நினைத்ததனைத் துணிதல் - அதனைமேற்கொண்டு, நிச்சயித்து, எழுதல் - இவை ஒரு செயல் நிகழுமுன் உண்டாகும் மனநிலைகளின் வெவ்வேறு கூறுகள் எழுந்தபின் நிகழ்ந்தவை இவற்ருல் ஏவப்பட்ட உடற்செய்கைகளாம். இவை வரும் பாட்டிற் காண்க. முன்பாட்டில் அவன் கொண்ட அழுக்காறும், இப்பாட்டால் அதனுல் விளைந்த அவாவும் வெகுளியும், வரும் பாட்டில் அதன்மேல் விளையும் இன்னுச்சொலலும் பின்னர், அது பற்றி வந்த அறம் பிறழ்ந்த செயலும் கூறிப் போந்த முறைகாண்க

**பண்ணியவர் மேல்**—**எண்ணியது துணிந்தான்**—என்பனவும் பாடங்கள். 8

616. தோள்கொண்ட வல்லாண்மைச் சுற்றத் தொடுந்துணையாங்
கோள்கொண்ட போர்மள்ளர் கூட்டத் தொடுஞ்சென்று
"வாள்கொண்ட தாயம் வலியாரே கொள்வ"தென
மூள்கின்ற செற்றத்தான் முன்கடையி னின்றழைத்தான்.

(இ - ள்) வெளிப்படை. தோளின் வலிய ஆண்மை கொண்ட சுற்றத்தாருடனே, தனக்குத் துணையாகக் கொள்ளப்பட்ட போர்மள்ளர்களின் கூட்டத்தோடு சென்று, ஏனாதிநாதரது மனையின் முன் கடையில் நின்று, "வாள்பயிற்றும் தொழில் தாயத்தை அதில் வலியவர்களாயுள்ளாரே கொள்ளத்தக்கவர்" என்று, மிக மூண்ட கோபத்தையுடையானாய் அறை கூவினான்.

(வி - ரை) வல் ஆண்மை தோள் கொண்ட என மாற்றுக.

**துணையாம் கோள் கொண்ட போர் மள்ளர் கூட்டம்** - இவனுக்குத் துணையாகக் கொள்ளப்பட்ட போர்வீரர் கூட்டம். **கோள்கொண்ட** என்றது இவன் அவர்களைக் கூலி முதலியவற்றாற் றுணையாகக் கொண்டான் என்றுதல், அவர்கள் இவனை ஆசிரியனாகக் கோடல் முதலிய பல தொடர்புகளால் தமக்குத் துணையாகக் கொண்டார்கள் என்றுதல் உரைகொள்ளக் கிடக்கின்றது. இங்குத் துணையாந்தன்மை எவ்வாற்றானும் இயல்பாலேனும் மெய்ம்மையாலேனும் அன்பாலேனும் உண்டாகாது ஒருவகையால் வலிந்து கொள்ளப் பட்டதே யென்பார் **துணையாங் கோள் கொண்ட** என்றார். **கோள்** - குய்யச்சொல் - புறங்கூறல் எனுங் குறிப்புப்பெறக் கொள்வது மமையும்.

**சுற்றத்தார்** - அதிசூரனது சுற்றத்தார் எனவே தாய உரிமையினால் நாயனார்க்கும் இவர்கள் சுற்றத்தாராவர் ஆயினும் அவன் போலவே, வேறு காரணமின்றி அழுக்காறு கொண்டு பகைமைப் படுவோர் சுற்றத்தாரிற் பல்லோர். இது உலக இயல்பாம் "எதார்த்த வாதி வெகுசன விரோதி" என்ற பழமொழியும் காண்க நன்மைத்துறைக்குப் பகை பல எனக.

**வாள்கொண்ட தாயம்** - வாட்படை பயிற்றுகின்ற குலத்தாயத் தொழிலுரிமை. **வலியாரே கொள்வது என**-போரில் வெற்றிபெறும் வலிமையுடையார் எவரோ அவரே கைக்கொள்ளத்தக்கது என்று சொல்லி. என - அழைத்தான் என்று கூட்டுக. **அழைத்தல்** - அறைகூவிப் போருக்கு அழைத்தல் "ஆர்கொல் பொரஅழைத்தான் ?" என்று (618) பின்னர் இதனை விளக்கியது காண்க.

**மூள்கின்ற செற்றத்தால்** - அழுக்காறு அவரை விளைக்க, அவாவிய பொருள் கிட்டாத போது அது வெகுளியைத் தரச், செற்றம் மூண்டது. அது இனிச் சொல்லில் விளைக்குமாதலின் அவன் "தாயம் வலியாரே கொள்வது" எனச் சொல்லத் தகாத சொல் கூறினான் **செற்றத்தான்** - செற்றமுடையானாகி என்றலுமாம்.

**முன்கடையில்** - ஏனாதிநாதரது மனையின் முன்றிலில் சுற்றத்தொடும் - கூட்டத்தொடும் - சென்று - செற்றத்தான் - முன்கடையில் நின்று - "தாயம் வலியாரே கொள்வது" என அழைத்தான் - என்று கூட்டியுரைக்க. 9

617. வெங்கட் புலிகிடந்த வெம்முழையிற் சென்றழைக்கும்
பைங்கட் குறுநரியே போல்வான் படைகொண்டு
பொங்கிய புறஞ்சூழ்ந்து போர்குறித்து நேர்நின்றே
யங்கட் கடைநின் றழைத்தா னொலிகேளா, ௧௦

618. "ஆர்கொல் பொரவழைத்தா ?" னென்றரியே றிறங்கிளர்ந்து
சேர்வுபெறக் கச்சிற் செறிந்தவுடை மேல்வீக்கி
வார்கழலும் கட்டி வடிவாட் பலகைகொடு
போர்முனையி லேனாதி நாதர் புறப்பட்டார். ௧௧

617 (இ - ள்) வெளிப்படை. வெவ்விய கண்ணுடைய புலியிருந்த கடியகுகையிற் சென்று அதனை அறைகூவி யழைக்கும் சிறுகியகண்ணுடைய குறுநரியே போல்வானாகிய அதிசூரன் தனதுபடையைத் துணைக்கொண்டு பொங்கிய புறத்திற் சூழ்ந்து

போரினைக் குறித்து நேரே வந்து நின்று இடமகன்ற தமது கடைத்தலையில் நின்று அழைத்தவனுடைய ஒலியைக் கேட்டு, ௧0

618 (இ - ள்) வெளிப்படை "யாவர் கொல்! போருக்கு அறைகூவியழைத்தவர்? என்று ஆண்சிங்கம் போலக் கிளர்ச்சியுடன் எழுந்து, கச்சுக்கட்டிய உடையை இடையில் வரிந்து கட்டி, வீரக்கழலையுங்கட்டி, வடித்தவாளினையும் பலகையினையும் கொண்டு, போர்க்குத் துணிந்தவராய்த் தமது திருமனையினின்றும் ஏனாதிநாதர் புறப்பட்டார். ௧௧

இவ்விரண்டு பாட்டுக்களும் ஒரு முடிபு கொண்டன

617. (வி - ரை) வெங்கட்புலி - பைங்கட்குறுநரி - முறையே ஏனாதிநாதருக்கும், அதிசூரனுக்கும் வினைபற்றிக் கூறிய ஒப்புமை அழைக்கும் நரியேபோல்வான் என்றதை நரி அழைக்கின்றதே போல என்க்கொண்டு மெய்யுந் தொழிலும் பற்றி விரவி வந்த உவமமென்பர் வெங்கட்புலி - பைங்கட்குறுநரி என்பன தன்மையணிக்குச் சிறந்த எடுத்துக்காட்டுக்கள் கண் இங்குப் பார்வை குறித்தன

புலிகிடந்த - கிடந்த - தான் ஒன்றும் மிகை செய்யாது தன்னளவில் அமைந்து கிடக்கின்ற என்பது குறிப்பு புலிகிடத்தல் என்பது மரபுமாம் புலி - புலவி என்ற சொற் புலி என வந்தது தனது இரையினை மேற்பாய்ந்து புலவிக்கொல்வது என்பது பொருள் என்பர் புலி பெருமிதமுடையது போரிற் சினந்து நேரெதிர்த்துப் பெரும் பிராணிகளின் மீது பாய்வதே யன்றிக் கீழ்மையாய் ஒளித்திருந்து அற்பப்பிராணிகளைப் பற்றி வதைக்காது. நரி - வஞ்சனையோடு பதுங்கும். புலி - கம்பீரமாய்ப் பாய்ந்து யானை முதலியவற்றையும் எதிர்க்கும். நரியின் தன்மையாகிய வஞ்சம், ஏமாற்றுதல், முதலியவை குறிக்க நரிப்பு என்பது மரபு " அவர் முன்னே நரிப்பாய நாயே னிருப்பேனோ?" - திருவாசகம், " கிரிச்சி ராப்பள்ளி யென்றலுந் தீவினை, கரிச்சி ராது கடக்கு நடக்குமே " - திருக்குறுந்தொகை முதலியவை காண்க

வெம்முழை - கொடிய குகை முழை - மலைக்குகை முதலிய பதிவிடங்கள். அத்துனுட் பதுங்கிக் கிடக்கும் புலி முதலிய கொடு விலங்குகளின் வெம்மை - கொடுமை - முழையின்மேலேற்றப்பட்டது

பைங்கட் குறுநரி - பைங்கண் - வஞ்சமுட் கொண்ட பார்வையும், வெங்கண் - வீரந் ததும்பும் பார்வையும் குறிக்கும் கண் தீயினது கூறுகொண்டதனால் ஒளி கவரும் சத்தியுடையது புலி பூனை - முதலிய பிராணிகளின் கண்கள் இச்சத்தி மிகுதியுமுடைமையால் இருளிலே சிறிய பிராணிகளையும் பாய்ந்தோடிப் பற்ற வல்லனவாகின்றன பறவைகளில் ஆந்தை, கோட்டான் கூகை முதலியவற்றிற்கும் நாயமுதலியவற்றிற்கும் இரவிற் கூரிய பார்வை யுண்டு ஆதலின் அவை பைசாச உருவமாகிய வாயு சரீரங்களையும் காணவல்லன ; மக்கள் உயிர் போகுங் காலத்தில் இவை கூவுதல், குரைத்தல் முதலிய துன்னிமித்தங்கள் இது பற்றியே நிகழ்வன என்பது நூற்றுணிபு. மக்களிற் பூனைக்கண்ணுடையாரும் இது போன்றதோ ரொளியுடையார் என்பர்.

படை கொண்டு - படை - மேற் சொன்ன சுற்றத்தாரும் மள்ளரும் கூடிய படைஞர் படை - வாள், பலகை முதலிய படைகளைக் கொண்டு என்றலுமாம்.

பொங்கி - புறஞ்சூழ்ந்து போர்குறித்து - நேர்நின்றே - இவை ஒவ்வோர் தனிச் செயல் குறித்தன பொங்கி - வஞ்சினங்கூறி ஆரவாரித்து , புறஞ்சூழ்ந்து - அவரது திருமனைப்புறத்திற் சுற்றிவளைத்து போர்குறித்து - போர் உடன்கொண்டதைப் புலப்படுத்தும் செயல்பலவும் செய்து , நேர்நின்று மறைமுகமாயன்றி நேரின்று.

அங்கட்கடை - கடை - திருமனையின் முன்வாயில். "கடைமுன் கேளா" - 163, முதலிய வழக்குக்கள் காண்க. அங்கண் - அருட்பார்வை யுடையாரது என்றலுமாம்.

ஒலி - இவா போா குறிததுக கூவித 'தாயம வலியாரே கொளவது' என்ற பொருளபட அறைகூவி யழைதத சததம. இது நரி ஊளையிடுதலே போனறதென பாா ஒலி எனற இலேசாற குறிததாா

புடை சூழ்நது—எனபதும பாடம  10

618. (வி - ரை) ஆர்கோல் போர அழைத்தார்? - கோல் - ஐயசசொல. இவா அனபும அருளும உடையராதலின தமககுப பகைவருணமையை உணராராகவே, கோல் எனறது ஆசசரியக குறிபபும படநினறது. "நளளாாகளும போறறும" என றது காணக. போர அழைத்தார் - "தாயம போரில வலியாரே கொளளறகுரியாா" எனறு போருககு அறைகூவினர். ஆர்கோல் எனறதனுல அழைததான யாவன என றறியாத நிலையிற நினறதனா எனக.

அரிஏற்றில் கிளர்நது - கிடநதபோது வெஙகடபுலி போனறாா (617) கிளாநத போது அரியேறு போனறாா. போா எனறாற றுளபெருததுக கிளாதல் வீரா இலக கணம எனப

சேர்வுபெறக் கச்சிற் செறிநத உடை மேல்வீக்கி - செறிவு பெறற உடையின மேலே சேரக கசசினை வரிநது கட்டி. கச்சு - இடையில உடை நெகிழாமல வரிநது கட்டும உடைககோலம. கசசு இலலாவிடின உடை போரினிடை அவிழநேருமாயின "உடுககை யிழநதவன கைபோல" எனறபடி உடனே கையானது போரினை விட்டு அவிழநத உடையினைக கட்ட முறபடும படவே, போர் இழகக நேரிடும ஆதலின கசசினை வரிநது போாவீரா இடையில உடையினமேற கட்டுதல மரபு

கழலும் கட்டி - கழல் - வீரககழல காலில அணிவது வாள் - பலகை இயற பகை நாயனாா புராணததுரைததவை காணக வாள பகைவரைத தாககறகும (Offensive) பலகை தமமைக காததறகும (Defensive) உதவுவன.

போர் முனையில் - யுதத சனனததராகப போா செயய முறபட்டாராக.

புறப்பட்டார் - திருமனையினினறும வெளியே போநதனர் அழைததானை இனனானெனறறியாதேயும ஒலி கேட்டவுடன போா முகததுப புறபபடுதல வீரா செயல இதனைப படைசசெருககு எனனு மதிகாரததில் வைததுப் பாராட்டினாா திரு வளளுவதேவா.

ஏற்றிற் சினந்து—எனபதும பாடம.  11

619. புறப்பட்ட போதின்கட் போாததொழிலகள கறகும
விறறபெருஞ்சீாக காளையாகள வேறிடதது நினறாா
மறபபடைவாட் சுற்றததாா கேட்டோடி வநது
செறறகருமபோா வீராக திருமருஙகுஞ் சோநதாாகள  கஉ

(இ - ள்) வெளிபபடை அவவாறு அவா புறபபட்ட போது இவாபாற போாத தொழில வாட் பயிறசி பெறும வலிய பெரிய சிறநத காளையாகளும, முனனாப் பயினறு வெவவேறிடததமாநதவாகளும, கொலை புரியும பல படைககலஙகளையும வாளையும ஏநதிய சுறறததாாகளும இது கேட்டு ஓடிவநது போரில வெலல அரிய சிறநத வீரராகிய ஏனாதிநாதருக திருபுடையும சோநதாாகள

(வி - ரை) புறப்பட்டபோது - ஏனாதியாா தமது மனையை விட்டுப் போா குறிதது வெளியே வருமபோது போர்த்தொழில்கள் . .காளையர்கள் "மனனாககு வெனறி வடிவாட் படைபயிறறும தொழில' (610) - உடையவா ஆதலின இவாபாற போாத்தொழில கறபோா பலா. அவா தமதியலபானே விறல் படைததவா - தொழில கறறதனாலே இயறகை விறலுடனே சீர் படைததவா - இவாபாற கறறவிற பெருஞ் சீாபடைததாா என அடைமொழிகட்கு உரை விரிததுக கொளக. காளையர்கள்-

இளமை மிககுளளாா. அதனுலும துணிவும வலியும பெறருா இவாகள மனனா மரபினராதலினுனும ஏனைப் பெருஞ்சீர் பலவும உளளாா. தமதாசிரியராகிய நாயனுர் போர்க்குப் புறப்படட போதில அவாபால வைதத அனபினுல அவாககுத துணையாய் எழுநது வநதனா எனக. மனைககடையில வநது நினறு பொா அழைததாலுதலின் நாயனுா புறபபட்ட போது முதலில அவருடன சோநதாா அஙகிருநது தொழில கறகும இவாகளேயாவா இதனுலும, பிற சிறபபாலும அஙகு வநது சோநத காளை யர்கள, வேறிடதது நினருா, சுறறததாா எனற மூவகையாருள இவாகள முதலிற கூறபபட்டனா. ஏனையோா கேட்டோடி வநது சேர்ந்தார் எனறதும காணக.

**வேறிடத்து நின்றார்** - அவவிடததனறி வேறிடதது நினருாகள. இவாபால வைதத அனபின மிகுதியால இது கேட்டதும தாமிருநத இடததினினறும வநது சோநதனா. இவாகளை **வேறிடத்து நின்றார்** எனறமையால முனனாக கூறிய **காளையர்கள்** அஙகு நினறவாகள எனக. தொழில முதலிய எநதக கலையும கறபோா தததம் ஆசிரியாபாலே வதிநது கலைபயிலுதல முனனுள வழககும மரபுமாம. இவவழககு இந நாள் ஒழிநதமை வருநதததககது இங்குக கூறிய **வேறிடத்து நின்றார்** எனபோர் பயிறசி முறறியபின வெவவேறு தததம துறையில வாழவாா.

**மறப் படை வாட் சுற்றத்தார்** - மேறகூறிய இவவிரு வகையாருமனறிச் சுறறத தாரும வநதனா. அவரும வீரமும படைவலலாரும ஆவாா எனபது. (ஒனறு) உண் டாயின போது வநது கூடியும ஒனறறற போது செனறேடியும விடுவாா சுறறததாா எனபோாிற பலலோா பககததிருநதும உறறுழி உதவாது நீஙகுவாா அவா உற வலலா "உறறுழித தீாவா ருறவலலா" எனபது நீதிநூல ஆயின இஙகு நாயனுாது சுறறததாா அவவாறனறிச சேயமையிலிருநதும செயதி கேட்டவுடன விரைவில ஓடி வநது படையுடன போாமுகததராயச சோநதனா இவரே உணமையில அனபினுற் சுறறி ஒழுகும இயலபுடைய **சுற்றத்தார்** எனபபடுவா **மறம்** - வீரம **படை வாள்** - உமமைததொகை வேறு பலபடையும வாளும பயினறு வலலவா. சிறப்புப்பறறி வாளைப பிரிததோதினுா. படையாகிய வாள எனபாருமுளாா. பினனாப பல படை கள் கூறுதல காணக இயறபகையாாின மனைவியாரது சுறறததாா திறமும உனனுக.

**கேட்டு ஓடி வந்து கேட்டு** - அதிசூரன போருககு அழைகக இவா தெமமுனையிற புறப்படடது கேட்டு ஓடி வந்து எனற விரைவு இவாபால இவாகளுககுறற மெயயன பின தீவிரங குறிததது இவாககாக இவாகள தம உயிரையும கொடுகக முறபட்டாா கள எனபது சரிததது காணக

**செற்று அரும்** - எதிாதது போாசெயதறகரிய, **போர் வீரர்** பெருவீரமுடைய ஏனுதி நாயனுா சரிததது காணக

**இருமருங்குஞ் சேர்ந்தார்கள்** - அவாககிருபுறமும அணிவகுதது பககபலமாகச சோநதாாகள, செறறகரும வீராாதலின அவா துணையாக ஒருவரையும வேண்டிறு ாில்லை. இவாகள தாமே வநது கூடினுாகள எனக **காளையர்கள்** - **நின்றார்** - **சுற்றத் தார்** - உமமைத தொகை இவவாறனறி அதிசூரன சுறறததாரையும மளளரையும கூட்டிச செனருன (616) எனறதும காணக

**போர்த் தொழில் வாள்**—எனறதும பாடம். 12

620\. வநதழைதத மாறறுன வயபபுலிபபோத தனனாமு
"னநதமது வாளபயிறறு நறருயங கொளளுஙகா
லிநதவெளி மேற்கைவருத திருவேம பொருபடையுஞ
சநதித தமாவிளைததாற சாயாதாா கொளவதென". ௧௨

621. என்றுபகைத் தோனுரைப்ப, வேனாதி நாத"ரது
நன்றுனக்கு வேண்டுமே னன்னுவ"ென்ன றுண்மகிழ்ந்து
சென்றவன்முன் சொன்ன செருக்களத்துப் போர்குறிப்பக்
கனறி யிருபடையுங் கைவகுத்து நேர்மலைவார். கச

620 (இ - ள்) வெளிப்படை. (மனைக்கடையில்) வந்து போருக்கு அழைத்த பகைவனாகிய அதிசூரன், வெற்றியுடைய புலியேறுபோன்ற நாயனாரின் முன்னே நின்று "வாள் வித்தை பயிற்றுதலாகிய, நல்ல, தாய உரிமையை நாம் கைக்கொண்டு அதன் ஊதியங்களைப் பெறுங்கால், இந்த வெளியிடத்திலே நாம் இருவேமும் அவ்வவர் படைகளைக் கைவகுத்து எதிரெதிர் கலந்து அமர் செய்தால் அதில் வெற்றிபெறுவோரே, அதனைக் கொள்ளத்தக்கது" என வுரைத்தான் கங

621. (இ - ள்) வெளிப்படை இவ்வாறு பகைத்தோனாகிய அவன் சொல்ல, ஏனாதி நாதர் "அது நன்றென்று உனக்கு வேண்டுவதாயின் நான் அவ்வாறே சேர்வேன்" என்று கூறி, உண்மகிழ்ச்சியோடும் உடன்பட்டாராய் அவன் முன்னே குறித்துச் சொன்ன போர்க்களத்துக்குச் சென்று போர் குறித்து மிகவே, கோபித்து, இருவர் படைவீரர்களும் அணிவகுத்து எதிரெதிர் போர் புரியலாயினர் கச

இவ்விரண்டு பாட்டுக்களும் ஒரு முடிபு கொண்டன.

620. (வி - ரை) வந்து - தானே வலிய வந்து

மாற்றன் - மாறுகொண்டவன் "இகல்புரிந்தான்" (614)

வயப்புலிப் போத்து - வயம் வெற்றியுடைய - வலிய என்றலுமாம். புலிப் போத்து - ஆண்புலி போத்து-மிருகச் சாதியுட் சிலவற்றின் ஆண்பாற் பெயர். "...... .... ....போத்தும் கண்டியுங் கடுவனும்பிறவும், யாத்த வாண்பாற் பெயரென மொழிப"- என்பது தொல்காப்பியம் [பொருளதிகாரம் - மரபியல் 2]. இப்போரில் இங்கு இவரே வெற்றிபெற, அவன் 'உடைந்து புறங்கொடுத்தான்' (636) எனக் காண்போமாதலின், இவர்க்கு ஆண்புலியை வெற்றியொடு புணர்த்தி உவமித்த ஆசிரியர், மாற்றானுக்கு எப்பொருளையும் இங்கு உவமித்திலர். முன்னர்க் கதிரோனையும் காலை மதியையும் (615) இவர்து எழுதலுக்கும் அவன்து மழுங்கலுக்கும் உவமித்தார். புலிகிடந்த முழையிற் சென்றழைக்கும் குறுநரி (617) என, இவர் இருக்க அவன் அழைத்தபோது உவமித்தார் போரில் அவன் ஒன்றுக்கும் பற்றாதவன் என்பார், இங்கு எவ்வாற்றானும் உவமித்திலர். ஆக உயர்ந்த பொருளாகிய பரமபொருளுக்கும் உவமையின்றாம். ஆகக் கடைப்பட்டதற்கும் அவ்வாறே என்பது இவ்வாறே பின்னரும் "வெம்புலி யேறன்னவரதம்" (635) என்ற பாட்டினுங் காண்க இறுதியில் இதற்கு மேலாய அவனை உயிரற்ற பிணமாகிய மாமிசமே என்பார் விடக்கு என்றும், இவரை வென்றி மடங்கல் - (643) என்றும் குறித்து முடித்ததுவுங் கருதுக "பேசுவதென் னறிவிலாப் பிணங்களை" (12-ம் சூத்திரம் - 2) என்ற சிவஞானசித்தியாரும் இக்கருத்தே பற்றியது.

நந்தமது வாள் பயிற்று நற்றாயம் - "தங்கள்குலத் தாயத்தின் ஆனாத செய்தொழிலா மாசிரியத் தன்மை" (614), "மன்னர்க்கு வென்றி வடிவாட் படை பயிற்றுந் தன்மைத் தொழில்" (610) என்றவை காண்க. நந்தமது - நமமிருவேமுக்கும் உரிமையாகிய, வாள் - வாள் வித்தை. நல்தாயம் - தாய உரிமையால் வரும் வளம். நல் என்றது அரசர்க்கு வாள் பயிற்றும் மேன்மையும் அதனால் தமக்கு வரும் வளத்தின் சிறப்பும், உலகம் ஓம்பப்படும் நற்பயனுங் குறித்து நின்றது. நந்தமது தாயம், பயிற்றுதலான வருந் தாயம் எனத் தனித்தனி முடிந்தது வாள் பயிற்றும் என்றது இடைப்பிறவரலாய்த் தாயத்தை விசேடித்து நின்றது.

கொள்ளும்கால் - அனுபவிக்கும் காலத்தில். அவ்வூதியத்தைப் போரிற்சாயாதாரே கொள்ளுதலாம் எனக. சாயாதார் - சாய்தலில்லாதார் - முடிந்தொழியாதார். சாய்தல்-

போரில் முடிந்துபோதல் அதிசூரன், தன்னிற் கடந்துளார் இவ்வுலகில்லை என்னும் பெருமிதம் வந்து-தன்னையே சாலமதித்துள்ளான்" (613) ஆதலின் தான் வெல்ல எண்ணினான். ஆயின் "ஏலாஇகல்புரிந்தான்" (614) ஆதலினால் தன்னால் வெல்ல இயலாவிடினும் எவ்வாற்றாலும் கொல்ல எண்ணினன் பெருமிதத்தால் விழுங்கப்பட்ட இவன் போரில் வெல்ல எண்ணியது பிழைத்த பின்னர், வஞ்சனையால் வெல்ல எண்ணிச் செயல் செய்தமையாற் காண்க. இவ்வெண்ணங்களால் இங்கு "வென்றார் கொள்வதென்" என்றது "சாயாதார் கொள்வதென்" என்றான் என்னை? நேர் முறையால் வெற்றி தோல்வியின்றியே, இச்சரிதத்துப் பின்னாகக் காண்கின்றபடி, வஞ்சனையாலும் சாயாமையும் சாய்தலும் நிகழுமாதலின் எனக.

**கொள்வதேன்** - உரைத்தான் என்னும் முடிக்குஞ் சொல் எஞ்சி நின்றது, "சிவிகை பொறுத்தாரோ டூர்ந்தானிடை" என்ற விடத்துக் "காணப்படும்" என்பது எஞ்சி நின்றது போறல் கொள்க. இதற்கு என்று என்ப பொருளுரைப்பாருமுளர். வரும் பாட்டு "என்று பகைத்தோனுரைப்ப" என்றத் தொடங்குதலால் அஃதுரையன்றெனக. இங்கு, **என்** - என்று எனக்கொண்டும், வரும் பாட்டில் வரும் **என்று** - கதிரோன் எனப்பொருள் கொண்டும், 615ல் கூறிய உவமைக் கேற்பப் பொருள் அமைத்துக், கதிரோனைப் பகைத்த மதி போன்றானாகிய அதிசூரன் கொள்வது என உரைப்ப என்றுரை கூறுவாருமுண்டு.

**இந்த வெளி** - ஊர்க்குப் புறத்தே படைப்பயிற்சி, போர் முதலியவற்றிற்காக உள்ள பொதுவிடம் **இந்த** - அண்மைச்சுட்டு வாள்வித்தை முதலியன பயிற்றுவோர் இருக்கைகளுக்கு அணிமையில் அஃதமைந்ததனைக் குறிப்பது போலும். ஒவ்வொரு தொழில்பற்றிய வகுப்பினர் ஒவ்வோர் தனியிடங்களில் கூடி வசிப்பதுவும், அவ்வக் கூட்டத்தாரின் தொழிற்குரிய பொதுவிடம் அவ்வவர் இருக்கைகளுக்கு அணிமையில் அமைப்பதும், முன்னுள்ள நமது நாட்டில் வழங்கிய நகர் அமைப்பாகும். அது இந்நாளில் நாகரிகமென்றபேரால் மாறிப் பல அல்லல்களுக்கிடனாக விளைதல் வருந்தத்தக்கது. இதுபற்றி முன் உரைத்தவைகளும் நினைவுகூர்க. படைபயிற்றுவோர் புறநகரிருக்கை கொள்ளுதலும் அவர்தொழிற்கேற்ற இயல்பாகும். ஓது கிடைகளும் இவ்வாறே பிற காரணங்கள் பற்றி முன்னுள்ள நகர் அமைப்பிலே நகர்ப்புறத் தமைந்தன என்பதும் அறியக்கிடக்கின்றது. **வெளிமேல்** - வெளியினிடத்து. **மேல்** - ஏழாம் வேற்றுமை உருபு இவ்வெளியினை, **செருக்களம்** - (621), **கோல்களம்** - (634), **போர்செய்களம்** (635), **அமர்செய் பறந்தலை** (636), **களம்** (640) என்று குறித்தமை காண்க.

**கைவகுத்து** - படையைப் போருக்கு ஏற்றவாறு வரிசை பெற அணி வகுத்து. வரும் பாட்டினும் "கைவகுத்து நேர்மலைவார்" என்றது காண்க. வாள் வீரர்க்கு வாள் வீரரும், வேல் வீரர்க்கு அவரும், வில் வீரர்க்கு அவ்வகையோரும் என அவ்வப் படையோர் அதனதற் கேற்ற படையேந்திய அவ்வவருடன் பொருதற்குரியதாயப் படை வகுத்தல் **கைவகுத்தல்** எனப்படும். இவ்வாறே நால்வகைச் சேனையோடும் பிறவற்றோடும் போர்புரியும் பேரரசர் போரினும் படை வரிசைகள் அணிவகுக்கப்படும். இங்குப் பின்னர், வாள்-பலகை ஏந்திய வரிசையினரின் போர் 642-643 பாட்டுக்களினும், வில் வீரர் வகுப்பினர் போர் வேறாக 644லும், வேற் படைஞர் போர் தனியாக 648லும் பிரித்தும் வகுத்தும் விரித்தது காண்க. இவ்வாறே அரசரது நால்வகைப் படை அணி வகுப்புப் புகழ்ச்சோழர் புராணத்தும் பிறாண்டும் காண்க. இங்கு நிகழும் போர், மன்னரல்லாத குடிமக்களிடையே நிகழும் சாதாரண ஆட்போராதலின் **கைவகுத்து** என்றமைந்தார். இவ்வகைப் போரினை முன்னர் இயற்பகை நாயனார் புராணத்துக் கூறியவையும் இங்கு நினைவு கூர்க.

**இருவேம் பொருபடை** - இருவேமுடைய போர்ப்படை வரிசைகளும். **சந்தித்து** - எதிரெதிர்முட்டி. **அமர் விளைத்தால்** - போர் செய்தால்.

**அமர் மலைந்தால்**—என்பதும் பாடம் 13

621 (வி -ரை) **பகைத்தோன்** - மாற்றான் - அதிசூரன் இவர் பகைக்காதிருப்பவும் தானே பொறாமையாற் பகைத்தவன் என்பது குறிப்பு.

**அது நன்று உனக்கு வேண்டுமேல்** - **நன்று** - நல்லதென்று **உனக்கு வேண்டுமேல்** - உனக்கு நன்றென்று தோன்றி அதனை வேண்டுவாயாயின் எனக் **நன்று** - இங்குக் குறிப்பு மொழியாய் நன்றன் றென்பதுணர்த்தி நின்றது "உடம்போடுயி ரிடை நட்பு" என்ற குறளில் "நட்பு" என்றதற்குப் பரிமேலழகர் உரைத்தது காண்க. **அது** - அமரிற் சாயாத வலியாரே தாயம் கொள்வது என்ற அது

**அது** - அக்கொள்கை - நன்றன்று என்பது நாயனார் கருத்து என்னை? போரில் வலியாரே பொருளுக் குரியோராதல் என்பது நேர்மையுமன்று, நியாயமுமன்று இவ்வாறு வலியார் மெலியாரது பொருளைக் கவர்வது நன்மை தீமை பகுத்தறியும் உணர்விலலாத மிருக நியாயம் பற்றிய திருட்டு வழியும், மனிதக் கூட்டத்தின் மிருகத் தன்மையான கொள்கை பற்றிய கொள்ளைச் செயலுமாம் என்பது அறிஞர் துணிபு இதுவே நீதிநூற் றுணிபுமாம். ஆயினும் அரசருள்ளேயும் குடிமக்களுள்ளேயும் முன்னுள்முதல் நாகரிகப் போரால் வழங்கும் அநாகரிக மூர்க்கப் போர்ப்பலம் முழங்கும் இந்நாள்வரை மக்கட் கூட்டத்தினும் பல துறையினும் இச்செயலே வழக்கிலிருந்து வருகின்றதென்பது உலக சரிதம் கற்பிக்கும் உண்மைகளில் ஒன்று "சிறுமீன் பெருமீனுக்கிரை" என்பது பழமொழியாகி ஒரு நியாயம் போல உருவம்பெற்று வழங்குகின்றது பலமுள்ளதே எஞ்சும் - ஏனையவெல்லாம் துஞ்சும் - (The survival of the fittest - The weakest go to the wall) என்பது நவீன சாத்திரிகள் ஒரு கொள்கையாகவே கொண்டனர் ஆயின் இது அறிஞர் வெறுக்கும் கொடுமைகளில் ஒன்றென்று இங்கு நாயனார் திருவாக்கின் மூலம் பேரமைச்சராகிய ஆசிரியர் உணர்த்திய அழகு காண்க இதற்கு இவ்வாறன்றி - **நன்று** - **அது நன்று** - நல்லது - என உடன்பட்டுப் போருக்கு இசைந்தனர் நாயனார் என்று உரை கூறுவாருமுளர்

**அது நன்று** என்பது தமக்கு உடன்பாடின்றாயின் நாயனார் போருக்கு இசைந்து **நண்ணுவன்** என்று கூறிச்சென்று அமர்மலைந்தது என்னை? எனின், போர்குறித்து ஒரு வீரன் அறைகூவி அழைத்தானாயின் அதனை ஏற்றுப் போர் குறித்தல் வீரர் தன்மை அவ்வாறு ஒப்பாமை பேடித்தன்மை என்பது போர் வீரர் மரபு அன்றியும் தமது ஆண்மை வெல்லும், "தருமமும் நீதியும் சால்பும்" வெல்லும்; அன்பின்றிறமும் அடிமைத் திறமும் வெல்லும் என்ற துணிபின் உறைத்தனர் நாயனார் எனக்

**உள் மகிழ்ந்து சென்று** - போர்மலையப் போவார் மனவெழுச்சியுடன் போதல் போர் மரபு. மற்று, அவனை வெல்வோமென்றுவது, வென்று தாயந் தனிகொள்வோமென்றுவது கருதி உண் மகிழ்ந்தவரல்லர் எனக் பெருமிதம், அழுக்காறு முதலிய தீயவை அதிசூரனை விழுங்கினவன்றி நாயனார்பால் ஒரு சிறிதும் அவை நணுகவில்லை என்பது முன்னாகக் காணப்பட்டது. இத்தகையோனுடைய பகைமை விரும்பிக்கொள்ளப்படும் என்ற நீதிபற்றி மகிழ்ந்தார் என்றுரைப்பாருமுண்டு

**முன்சொன்ன செருக்களம்** - "இந்த வெளிமேல்" (620) என்று அவன் சுட்டிய போர்பயிலுமிடம். **போர் குறிப்ப** - போர் குறித்து நிற்க

**கன்றி** - கோபித்து கோபத்தாலன்றிப் போர் நிகழாதாதலின் கன்றினர். வேறு காரணமின்றிப் போர் துணிவதற்கே இருவர் படையும் கன்றின அவன் இகல்புரிந்தழைத்தான் இவர் அதனை ஏற்று நின்றார். இவ்விரு தலைவர் தன்மையும் அவ்வவர் சார்பான படைகட்கேறின அச்சார்புபற்றி அவர்கள் கன்றி மலைவாராயினர் என்பது.

**இருபடை** - இருவர் படை. **நேர்** - எதிரெதிராய. **மலைவார்** - போரினைத் தொடங்கிச் செய்வாராயினார். போர் செய்யுமவகை மேல்வரும் பாட்டுக்களில் விரிக்கின்றார். போர் பின்னர் நிகழ்வதாதலின் **மலைவார்** என எதிர்காலத்தாற் கூறினார்.

**இருபுடையும்**—என்பதும் பாடம். 14

வேறு

622. மேக வொழுங்குகண் முன்கொடு மின்னிரை தம்மிடை யேகொடு
மாக மருங்கினு மண்ணினும் வல்லுரு மேறெதிர் செல்வன
வாக நெடும்பல கைக்குல மாள்வினை வாளுடை யாடவர்
காக மிடைந்த களத்திரு கைகளின் வந்து கலந்தனர். ௧௫

**(இ - ள்)** மேக . முன்கொடு - மேக வரிசைகளை முன்னுறக் கொண்டும்; மின். கொடு - மின்னல் வரிசைகளைத் தமக்கிடையிடை கொண்டும், மாக. ஏறு - ஆகாயத்திலும் பூமியிலும் வலிய இடியேறு; எதிர் செல்வனவாக - எதிரெதிர் செல்வனபோல, நெடும...ஆடவர் - நெடிய கேடக வரிசைகளை யாளுந் தன்மையும், வாள் ஆளுந் தொழிலையும் கொண்ட போர்மள்ளர், காகம் கலந்தனர் - காகங்கள் நிறைந்த போர்க்களத்தில் இருபக்கமும் எதிரெதிர் வந்து கலந்தனர்

**(வி - ரை) மேக ஒழுங்கு - மின்நிரை - உரும் ஏறு** - இவை முறையே **பலகைக் குலம் - வாள் - ஆடவரோசை** - இவற்றுக்கு உவமிக்கப்பட்டன. **மேகக் கூட்டம்** முன்னாகத் தெரிவன. **மின்** - அவற்றின் சோதியிற் பின்னர் உள்வாங்கிக் காட்சிப்படுவன. **இடியேறு** - மின்னல் தோன்றியபின் சிறிதுபோது தாழ்த்துச் செவிப்புலப்படுவன. மேகங்கள் தொடர்ந்தும், மின்னும் இடியும் இடைவிட்டும் காணப்படுவன. ஒரே காலத்து ஒரே இடத்து வானிற்றோன்றிய மின்னும் இடியும் அவ்வவற்றின் ஒளி-ஒலி வேக ஏற்றத்தாழ்ச்சி காரணமாக **மின்** முன்னும் **இடி** பின்னும் புலப்படுவனவாதலின் அம்முறையே மின்னை முன்னும் இடியைப் பின்னும் வைத்தார். மேகத்தினின்று இவ்விரண்டுந் தோன்றலின் மேகம் முதலிற் கூறப்பட்டதும் காண்க. கரிய பலகைக்கூட்டம் மேகங்கள் போன்றன என்பது பண்புவமம்.

**இடையே கோடு** - இடை இடையே கொண்டு தோன்றி மறைந்து காணப்படுதல் **இடையே** எனக் குறிக்கப்பட்டது.

**மாக மருங்கினும் மண்ணினும்** - வானிலும் நிலத்திலும் மேகம் - மின் - இடி - இவை புறப்பட்டுநிகழ்வது வானிலும், புலப்படுத்து தாக்கித் தொழில்செய்வது நிலத்திலுமாம். இவ்வாறே ஆடவர் செல்வது நிலத்தும், அவர்கள் ஏந்திய பலகைக்குலமும் வாளும் மேலிடத்தும் தோன்றுவன. எனவே இவ்விருவகையும் மேலிடத்தும் மண்ணிலும் தொடர்வுறுவன என்ற தன்மை காண்க. மின் தாக்கிற்று, இடி வீழ்ந்தது என்ற வழக்குகளும் இவற்றைப் பிணிப்பது காண்க.

**வல் உரும் ஏறு** தாக்கியிடின் அழிவு உறுதியாதலின் **வல்** என்றார்.

**உரும் ஏறு**-பேரிடி. வெறு முழக்கோடொழியாது பயன் றந்தேவிடும் பெரிய இடி. ஆணிடி - பெண்ணிடி என்றும், நெருப்பிடி - நீரிடி என்றும், குமுறல் - முழக்கம் என்றும் இவற்றின் பயன்பற்றி வழங்கும் வழக்குகளும் காண்க. மின் சக்தி, உடன்பாடு - எதிர்மறை - என இருவகைத்து எனவும், இவை மேகவரிசைகளின் எதிரெதிரிற் கூடுவனவாகுமெனவும், இவை ஒன்றையொன்று தாக்கித் தம்முட்கலந்தபோதே **மின்னல்** விளைவன எனவும், அவ்வாறு கலக்கும்போது உளதாகும் முழக்கமே இடி எனவும், பிறவாறும், இதுபற்றி நவீன சாத்திரிகள் கூறும் முடிபுகளும் இங்கு இவ்வுவமானத்துப் பொருந்தக் காண்க. போர்வீரர்களின் வீரப் பிரதாப ஆரவாரம் இடிபோன்றதென்ப.

**ஆள்வினை** - ஆளுந் தன்மையின் மேம்பாடு. முயற்சியுடைமை - மெய்ம்முயற்சியுடையனாதல் என்பர் பரிமேலழகர். பலகைக்குலம் **ஆள்வினை** - வாள் **ஆள்வினை** என ஈரிடத்தும் கூட்டுக. நடுநிலைத் தீபம் வாள் மாற்றாரைக் கொல்லுதலும் பலகைக் குலம் தற்காப்புச் செய்தலும் குறித்தலின் இரண்டிலும் ஆள்வினை வேண்டப்படும். பலகைக்குலத்தையும் ஆள்வினையையும் வாளையும் உடைய ஆடவர். உடைய என்பது ஈறு குறைந்து நின்றது. **ஆடவர்** - ஆண்மக்கள். இங்குப் போர்வீரர்களைக் குறித்தது. ஆண்மக்களே பெரும்பான்மையும் போர்மள்ளராயினும் வாளுடையார் என்னாது வாளுடை **யாடவர்** என்றது தேற்றமும் சிறப்பும் குறித்தது. பெண்களும் போர் மக்களாதல் சிறுபான்மை முன்னுளிலும் காணப்படும்.

**காகம் மிடைந்த களம்** - போர் குறித்து மக்கள் புறப்படுதல் கண்ட காக்கைகள் தம் இயற்கையுணர்வானே போர் விளைவுண்டென்றும், அதன் விளைவாகக் களத்திற்படும் பிணங்களின் உணவுண்டென்றும் கண்டு எதிர்பார்த்தவைகளாய், வீரர்கள் களத்திற்கூடு முன் கூடின. காகபலி கொடுப்பார் பலியிடுமுன்னாகக் காக்கைகள் கரைந்து திரண்டு வந்து கூடுதல் கண்கூடு. இவ்வாறன்றிப் போர் வழக்கமாய் நிகழும் களமாதலின் காக்கைகளுக்கு நித்திய உணவு கிடைக்குமாதலின் அவை கூடிநின்றன என்றலுமாம். இந்த வெளி (620) என்று சிறப்பித்த சுட்டியதும் காண்க.

**இருகைகளின்** - இருவர் பக்கங்களினும். உம்மை தொக்கது.

**கலந்தனர்** - சேர்ந்து கொண்டனர். மின்கலத்தலால் உருமேறு உண்டாகும் வகைபற்றி உவமானத் துறைத்ததனை இங்கு வைத்துச் சிந்திக்க. உருமேறு முன் மேக ஒழுங்கு கொடு, மின் நிரை இடையே கொடு, மாக்கமும் மண்ணும் செல்வன எனக் கூட்டுக.

இப்பாட்டாற் போர்க்கலக்கும் முன்னிலை கூறப்பட்டது. 15

623. காலகழல் கட்டிய மள்ளர்கள் கைகளின் மெய்க்க ளடக்கிய
வாளொளி வட்டமு னேந்திட வந்திரு கைகளின் முந்தினர்;
வேலொடு வேலெதிர் நீள்வன மேவிய பாதலம் விட்டியா
ஞாலமு றும்பணி வீரர்க ணாநிமிர் கின்றன வொத்தன. ௧௬

(இ - ள்) கால்கழல் . முந்தினர் - கால்களில் வீரக்கழல் கட்டிய போர் மள்ளர்கள் கைகளில் உடலை மறைக்கும் ஒளிவட்டமும் வாளுமாகக் கலந்து போர்புரிய வந்து இருவர் பக்கத்தும் முந்திப் பொருதனர்; வேலொடு வேலெதிர் நீள்வன - (இருவர் பக்கத்தும்) வேற்படையொடு வேற்படை மாறுபடப் போரில் நீள்கின்றவை, மேவிய . . ஒத்தன - தாந்தாம் இருந்த பாதல உலகத்தைவிட்டு மேலிருக்கும் நிலவுலகத்தைப் பொருந்துகின்ற நாகவீரர்களின் நாக்கள் மேலே மிளிர்கின்றவற்றைப் போன்றன.

(வி - ரை) **கழல் காலிற் கட்டிய** என மாற்றுக. **ஒளிவட்டம்** - ஒளியுடைய வட்டவடிவமா யமைந்த கேடகம். மெய்களடக்கிய ஒளி வட்டம் எனக். **மெய்களடக்குதல்** தம்முடலின்மேல் மாற்றார் வீசும் படையின் ஊறு படாதபடி மறைத்தல். ஒளிக்க உதவும் பலகை என்பாருமுண்டு. இது தற்காப்பு முன்னாவர வேண்டிய ஒளி வட்டம் எதுகை நோக்கி **வாள்** - என்பதனை முன் கொண்டு நின்றது.

**கைகளில்**-கைகளிரண்டில். இடது கையிற் பலகையும் வலக்கையில் வாளும் ஏந்துதல் மரபு. ஏந்திய என்பதனை வருவிக்க. கைகளில் ஏந்திய ஒளி வட்டமும் வாளும் முன்னேந்திட எனக். **வாள் ஒளி வட்டம்** - வாளை வேகமாகச் சுழற்றி வீசுதலால் ஆகிய ஒளிவட்டம் என உரைத்து இருகைகளிலும் இரண்டு வாள்கொடு வீசிப் பொருத வீரர்கள் செயலைக் குறித்ததாக உரைத்தலுமொன்று. இப்பொருளில் ஒளி வட்டமென்றது ஒளியுடைய வாளின் வேகச் சுழற்சியாலாகிய வட்டத்தை. "கறங்கோலை கொள்ளிவட்டம்" என்ற வழக்கும் காண்க. கைகளில் ஏந்திய வாட்களின் சுழற்சியே

தமது மெய்யை மறைத்துக் காக்கவும் எதிர்த்தாரை முனைந்து பொரவும் பயன்பட்டன என்றபடி. மின்னிரை (622) சுழலும்போது ஒளிவட்டமாகல் இயல்பாம். வாள்வீரரிற் பெரும்பான்மையாராயப் பலகையும் வாளும் ஏந்திப் பொருவாரை மேற் பாட்டிற் கூறி, அவருட்சிறுபான்மை இருகைகளிலும் இரண்டு வாள் ஏந்திய வீரரை இங்குக் குறித்தார் என்றபடி

**வாள்** - ஒளி என்று கொண்டு, **வாள் ஒளி வட்டம்** - மிக்க ஒளியுடைய கேடகம் என்றுரைப்பாரு முண்டு மேலே கண்டவாறு இப்பாட்டின் முன்னிரண்டு அடிகள் வாட்போர்வீரர் செயல் குறியாது, பலகையும் வேலும் ஏந்திப் பொரும் வேற்படை வீரர் செயலைக் குறிப்பதாக உரைத்தலுமாம் இப்பொருளில் மேற்பாட்டில் வாள் வீரரையும் இப்பாட்டில் வேல் வீரரையும் அமமுறையே வரும்பாட்டில் வில் வீரரையும் கூறியதாகக் கொள்க. கேடகம் பெரும்பான்மையும் வட்டவடிவமாக அமைவதாம். சிறு பான்மை சதுர வடிவாயும் அமைப்பர்

**முந்தினர்** - கலந்து போர் செய்வதில் முற்பட்டனர்.

**வேலோடு வேலெதிர் நீள்வன** - வாளினை வீசிப்பொருதலும், வேலினை நீட்டித்தாக்கிப் பொருதலும் உரியன ஆதலின் **நீள்வன** என்றார் இது வேற்படைஞர் போர் குறித்தது **எதிர்** - எதிரெதிராக நீள்வன - நிமிர்கின்றன (வற்றை) - ஒத்தன என்று கூட்டுக இரண்டாம் வேற்றுமைத் தொகை இல்பொருளுவமை. பாதலம் விட்டு உயர் ஞாலம் உறும் - தற்குறிப்பேற்ற அணி. பாதலம் பாவ உலக மாதலின் அதைவிட்டு உயர்ந்த உலகம் உறுவார் போல என்பது.

**பணிவீரர்கள் நாநிமிர்கின்றன** - நாக வீரர்களின் நாக்கள் வெளியே நீண்டு சுழல்கின்றவற்றை. அனந்தன் கார்க்கோடகன் முதலியோர் நாக வீரர்கள். நாகங்கள் நீண்ட நாவுடையன, அவை நாவை நீட்டிச் சுழற்றும் இயல்பும் உடையன, அவை கொடிய சீற்றமும் வீரமும் குத்தித்தாக்கும் இயல்புமுடையன முதலிய தன்மைகளை இவ்வுவமையில் வைத்து அழகுபடக் கண்டுகொள்க

**ஒளிவட்ட முனைத்திட**—என்பதும் பாடம் 16

624\. வெங்கண் விற்றசிலை வீரர்கள் வேறிரு கையினு நேர்பவர்
தங்கள் சிலைக்குல முந்தின தாவில் சரங்க ணெருங்குவ
பொங்கு சினத்தெரி யிற்புகை போகு கொடிக்கள் வளைத்தெதிர்
செங்கண் விழிக்கன லிந்திய சீறு பொறிச்செல வொத்தன. கஎ

**(இ - ள்)** வெங்கண் . நேர்பவர் - வெவ்விய கண்ணுடையராய வலிய வில் ஏந்திய வீரர்கள் பிறிதோரிடத்தில் இருவர் பக்கமும் போர் புரிவாராகி, தங்கள் . . நெருங்குவ-தத்தம் விற் கூட்டங்களினின்றும் எவிய கெடுதலில்லாத அம்புகள் ஒன்றையொன்று நெருங்கி முனைக்கும் செயல், பொங்கு சினத்து - மிக்க கோபத்தில், எரியில் வளைத்து - மூண்ட தீயினின்றும் புகை போகும் மண்டிலங்கள் போல வளைத்து, செங்கண். . சிந்திய - சிவந்த கண்களின் (கோபத்) தீயினின்று எதிரெதிராகப் போந்த, சீறு . ஒத்தன - சீறித் தெறிக்கும் பொறிகள் செல்லுதலை ஒத்தன.

**(வி - ரை)** இப்பாட்டான் விற் போர்வீரர் போர்ச் செயல் குறிக்கப்பட்டது

**வெங்கண்** - வெவ்விய தறுகண்மை. **விறல்** - வலிமை. **சிலை வீரர்** - விற்படை வீரர்கள். **வேறு** - முன் சொன்ன வாட்படை வேற்படைப் போர் வீரர் முனைந்த இடத்தினின் வேறாக அணிவகுத்து **இரு கையினும்** - இருவர் பக்கத்தும். முன்னர் **இரு கைகளின்** - என்றது காண்க

**நேர்பவர்** - முற்றெச்சம். நேர்பவராகி உந்தின எனக.

**சிலைக்குலம்** - **குலம்** - கூட்டம் - வரிசை எனும் பொருளில் வந்தது.

சரங்கள் நெருங்குவ - பொறிச் செலவை - ஒத்தன என்க. செலவு - செல்லுதலை. இரண்டாம் வேற்றுமைத் தொகை

**பொங்கு சினத்து** - சினத்து விழி என்றும், சினத்து எரி என்றும் இரண்டிடத்தும் கூட்ட. நின்ற முதனிலைத் தீவகம் முன்னர் எரி துள்ளினவென (527) என்றது காண்க. ஆண்டுரைத்தவையும் இங்கு உன்னுக.

**எரியிற் புகை போகு கொடிக்கள்** - தீமூண்டு எரியும்போது அதினின்றும் முன்னர்ப் புகைப்படலம் வளைவு வளைவாகக் கொடிகள் போலத் தொடர்ந்து மேற் செல்வு இயல்பு.

**கொடிக்கள் வளைத்து** - புகைக் கொடிகள்போல வளைத்து ஒருவயிற் போலியுவமையணி. மிக்க கோபங் கொண்டபோது புருவங்கள் மாறி மாறி வளைந்து காட்டும் இயல்பு குறித்தது. சரம் உந்தும் தோறும் சிலைகள்வளைவன சினத்திலே புருவங்கள் மாறி மாறி வளைவன போன்றன. அவ்வாறு புருவங்கள் வளைவன எரியிற் புகை போகு கொடிகள் வளைவன போன்றன அம்புகள் சினத்து விழியிற் பொறி போன்றனவாம் அவை தாம் சினத்தெரியிற் சீறு பொறியும் போன்றன. இவை மூன்றினும் பொங்குசினம் அடிப்படையாயினதும் காண்க. இங்குச் சில வீரர்களது சிலையின் அம்புகளும் கண்களினின்று கோபத் தீப்பொறிகளும் பறந்தன என்றதோர் தொடர்பாயின குறிப்பும் காண்க.

**செங்கண் விழி** - பொங்கு சினத்தால் சிவந்து செங்கண்ணாகிய விழி.

**சீறுபொறி** - சீறுதலால் சிந்தித் தெறிக்கும் தீப்பொறிகள். சிறு என்பது முதல் நீண்டு சீறு என நின்றதாகக் கொண்டு சிறுபொறிகள் என்பாருமுண்டு

இம்மூன்று பாட்டானும் வாளின் போர் - வேலின் போர் - வில்லின் போர் தொடங்கி மூளும் வகை கூறிய ஆசிரியர், அவை மூண்டு நிகழும் நிகழ்ச்சிகளை மேல் வரும் இரண்டு பாட்டாற் கூறுகின்றார். 17

625. வாளொடு நீள்கை துடித்தன; மார்பொடு வேல்கள் குளித்தன,
தோளொடு வாளி நிலத்தன, தோலொடு தோல்க டைத்தன;
தாளொடு வார்கழ லிற்றன; தாரொடு சூழ்சிர மற்றன;
நாளொடு சீறி மலைப்பவர் நாடிய போர்செய் களத்தினில். கஅ

**(இ - ள்)** வெளிப்படை. தங்களது இழைத்த நாளெல்லையுடனும், சீறிப் போர் புரியவல்ல அவ்வீரர்கள் நாடிப் போரினைச் செய்யும் அந்தப் போர்க்களத்திலே வாள்களோடு அவற்றைப் பிடித்த நீண்ட கைகள் துடித்தன, மார்புகளுள்ளே வேல்கள் குளித்தன; (தாம் துளைத்து அறுத்த) தோள்களோடு அம்புகள் நிலத்தில் வீழ்ந்தன, வீரர்களது உடலிற்றாக்கி அழுந்திக் கேடகங்கள் அத்தோலுடனே ஒன்றுசேர்ந்து பதிந்தன, கால்களுடன் அவற்றிற் கட்டிய வீரக் கழல்களும் இற்றன, சுற்றிய மாலையுடன் அவை சூழ்ந்த தலைகளும் அற்றன.

**(வி - ரை)** மேன்மூன்று பாட்டானும் கூறிய வாள், வேல், வில் என்ற மூன்று வகைப் படைகளின் போர் மூண்ட விளைவுகளை அம்முறையே இப்பாட்டிற் கூறுவது காண்க. வாளொடு நீள்கை துடித்தன என்பது வாட்போர் விளைவும், மார்பொடு வேல்கள் குளித்தன என்பது வேலின் போர் விளைவும், தோளொடு வாளி நிலத்தன என்றது வில்லின் போர் விளைவும் காட்டியன.

**வாளொடு நீள்கை துடித்தன** - போர் செய்ய வாளினைப் பிடித்து நீட்டிய கைகள் வாள் பிடித்தவாறே அறுபட்டு வீழ்ந்து, அற்று வீழ்ந்தபின்னும் வாளின் பிடிவிடா

மல் வாளோடு துடித்தன. உடலினின்றும் அறுபட்ட துண்டங்கள் அவ்விரதத ஓட்டம் ஓயுமவரை துடிததலும பிடிவிடாது பறறியபடியே முடஙகுதலும உடறறதுவமாம். இவவகையால் அறறுவீழநத பினனரும வாளொடு கைகள துடிததத‌னை அஙகங்களும அபபோதும் வீரஙகுனறாவாயின என நாடகச் சுவை பெற உரைததது அணிநலமாம.

**மார்பொடு வேல்கள் குளித்தன** - எறிநத வேல்கள எறியபபட்டாரது மாாபு களுட்புககுக குருதியுடடோயநதன. குருதிநிறைநத இரததாசய இருபபிடமாகிய மாா பினை நீாநிலையாககி அதிறபுககு மறைவதனைக குளிததல என உருவகம செயதார். ஒடு எனற மூனறனுருபு ஏழாவதன பொருளில வநதது. உருபுமயககம "மெயவேல் பறியா நகும" (குறள) எனபதன பொருளை இஙகுவைததுக காணக

**தோளோடு வாளி நிலத்தன** - வீரா்கள ஏவின அமபுகள குறிபிழையாது தம ஏவ லைச செயதே வீழநதன எனபது குறிபபு "சிலையிராமன றோளவலி" எனறபடி வில் வீரர் தோளவலி மிககாா ஆதலின விலவலல பகைவரது தோளினையே குறிதமெயது தோள துணிபபது கருதுவா எனபாா **தோளோடு வாளி** எனறாா விலலின போா வலிமை தோளினபாலதாம எனபது இவவுடகருததே **வாளோடு நீள்கை துடித்தன** எனற இடததும வாட்போருககும பொருநதுவது காணக

இஙகு வாள - வேல - அமபு எனும இமமூவகைப படைகளில, வாள, பிடிததகை யினது பிடிபபினுளளும, வேல மாாபினுளளேயும, அமபு அறுபட்ட தோளின வேறு யும போநத இயலபு காட்டியவகையில இம மூவகைப்படைச செயலுககுமுரிய மூவகை வெவவேறு தனமையும காட்டியபடியாம.

**தோல்** - கேடகஙகள **தகைத்தன** மோதுதலால நெருஙகின. **தகைந்தன** எனற பாடம தவறு. **தோலோடு தோல்** - சொறபின வருநிலை இதறகுப பலகைகளோடு பல கைகள முட்டின எனறுரைபபாரு முணடு.

**தாளோடு வார்கழல் இற்றன** - காலகளுடன அவறறிறகட்டிய கழலும அறறன. **வார் கழல்** - வீரஙகுறிகக வரிநது கட்டிய கழல. கால் கழல கட்டிய (623) எனறது காணக அது தாளொடு வீழதல எனறது தாள துணடிககபபட்டு அறுமவரையில் கழ லாறகுறிதத வீரம குறையாது போாமுனைநது வீரன நினறனன எனவும, தாளறுதது இவனது வீரங குறைததாலனறி இவனை மாறறலரிதெனறும, வேறு வழியிலலை என் றும கண்ட பகைவன இவனது தாளினை இறசசெயது இவனது வீரததைத தொலைத தானெனறும உட்குறிபபுப் பெறத **தாளோடு** வாாசழல இறறன எனறாா. **தாள்** - முயறசி எனககொணடு, விடாமுயறசியொடு பிரியாது பிணைநது நினற கழல இறறன எனற குறிபபுபபட உரைததலுமாம

**சூழ் தாரோடு சிரம் அற்றன** - என மாறறுக

**தார்** - போாககுரிய தும்பை - வாகை முதலியனவாகச் சூடப்படும அடையாள மாலைகள. மாலைசூடி மிக்கெழுநத சில வீராா உயிரைப பொருட்படுததாது அஞசா நெஞசுடன தலையறறு வீழும் வரை போா செயதனா எனபது தாளற்று வீழநத பினனரும் வீரஞ செயவாருளராதலின அவா வீரம தலையறற போதே ஒழிநதன என பதும குறிபபு 627 பாாகக. இஙகுக் கை - மாாபு - தோள - தோல - தாள என ஒவ வோா அஙகமாகக கூறி வநதபின உடலினுட் டலைமையாகிய **தலை**யினைக கூறினாா. பறபல அஙகமும கணடதுணடமாககப்பட்டாா வீரா எனபது. இதன விளைவு மேற பாட்டிற கூறுவது காணக.

**நாளோடு சீறி மலைப்பவர்** - வாழநாளுடனும **சீறி** - இழைதத நாளெலலை என் னும விதியுடனேயும சினநது எனபது. இஙகுப போா செயதொழியாவிடின இவா கள இன்னுஞ சினனாள உலகில வாழலாம, அவவாறு போரினறி வாழ்வது வீராாயி னாககு வாழவனறு, வீணவாழவேயாமெனறு தம வாணாளை முனிநது போா

அணிந்து செய்தனர் எனக் "பேசாத நாளெல்லாம் பிறவா நாளே" என்ற ஞான நூன்முடிபு போலப், போரிற் கழியா நாள் நாளல்ல என்பது உலக நூல் வகையில் வீரர் முடிபு. "அசைவி லூக்கத்து நசைபிறக் கொழியப், பகை விலக்கியதிப் பயங்கெழு மலையென" (95-96 வரிகள் இந்திர விழவூரெடுத்த காதை - சிலப்பதிகாரம்) என்றதும், அதற்குத் "தமிழ்நாட் டெல்லையுள் தன்னோடு எதிர்த்துப் பொரும் அரசரை இரண்டு திசையினும் பெறுத கரிகாலன் போரிலே பேராசை யுடையனாதலினாலே .." என்பது முதலாக உரையாசிரியர் அடியார்க்கு நல்லார் எழுதிய உரையிற் கண்டவையும் *பிறவும் இங்கு உன்னுக.

இவ்வாறு வாழ்நாளெல்லை வருமுன் போரில் மடிவதனைச் செய்தலால் நாளொடு சீறி மலைப்பவராயினர் அன்றியும் போரில் மடிந்த பின்னும் குறையுடல்களாலும் சில நேரம் அப்போரினையே தொடர்ந்து செய்தல் - ஆருயிர் கழியவு நிற்பவர் (628) முதலியனவாகப் பின்னாகக் கூறுமாற்றால் அறியப்படுகின்றதனாலும், நாளெல்லை கடந்த பின்னும் சீறி மலைப்பவராயினர். எனவே நாளெல்லையில் அமைவுபடாது முன்னும் பின்னும் தமது போரினாற் கடத்தலின், பிறருடன் கடக்க முடியாத நாளுடன் - காலத்துடன் - சீறி மலைப்பவர் என்றார்

இவ்வாறன்றித் தம் ஆயுள் பெறுதற்கரிய சிறப்பிற்றாக அதனையும் பொருட்படுத்தாது வெறுத்து மலைதலில் என்றும், நாளை விரும்பி யிருத்தல் போர்வரும் நாளாகக் குறித்தேயாகலான் அப்போர்வருங்கால் அப்போரை விரும்பி நாளை வெறுத்தார் எனவும், நாள்முழுதும் கோபித்து யுத்தஞ் செய்வாரெனவும் பலவாறு முரைப்பாருமுளர்.

**மலைப்பவர்** - இப்போர்வீரர் தம் வினையான மலைப்பவராகாது, பிறர் வினையாற் கூடி மலைந்தாராதலின் **மலைப்பவர்** எனப் பிறவினைப் பொருள் பெற ஒற்று இரட்டித்தது.

இப்பாட்டு மூண்டபோர் நிகழ, இருபக்கத்தின் வன்செயல் குறித்தலின் துடித்தன - குளித்தன - நிலத்தன - என எல்லா வினை முற்றுக்களும் வலித்த ஓசைபடப் புணர்த்திக் கூறினார். அதற்கேற்ப **மலைப்பவர்** என்றார் எனப்துமாம்,

வலிந்த போரின் மூண்ட செயல் ஓய்ந்தபின் மெலிவு நிகழுமாதலின் அந்நிகழ் வினை வரும் பாட்டில் பரந்தன - அலைந்தன - என எல்லாம் மெல்லோசை படவரும் வினைமுற்றுக்களாற் கூறினதும் காண்க. மள்ளர்களுட் போர் மூண்டு நடந்த பின்னர் மெலிந்து ஓய்வுறுங்காலையிற் பரந்த களத்தில் அங்கங்கு ஒரோர் இடங்களிற் றனித்த வகையிற் போர் நிகழும். அவ்வகைகளை அதன்மேல் 627, 628 629, என்ற மூன்று பாட்டானும், வாள், வேல், வில் என்ற இம்முறையேபற்றிக் கூறும் சிறப்பு வகையும் காண்க

621 வரை சரிதங்கூறிப் போந்த யாப்பினை மாற்றிப், போர் தொடங்கி நிகழும் வலிந்த நிகழ்ச்சிகளைக் குறிக்க முடுகிய சந்த யாப்பினால் 622 முதல் 631 வரை யாத்த நயமும் சொற்பொருட் பொருத்தமும் காண்க. இது குடிமக்களுள் அக்காலத்து வழக்கில் நிகழ்ந்த சிறுபோர் இவ்வாறே கண்ணப்பர் புராணம் 68 முதல் 91 வரை **வேட்டையும்**, புகழ்ச் சோழர் புராணம் 20 முதல் 33 வரை நால்வகைச் சேனையுடைய **பெரும்போரும்** கூறிப்போந்த சொற் பொருட் பொருத்தங்களும் அழகும் காண்க.

இவ்வாறு கூறப்படும் பொருட்குத் தக்க சொல்லமைதி பெற்று ஒத்து இயலும் இலக்கணம் மாபெருங்கவிகளினிடத்தே காணப்படுவதோர் இயல்பெனக்.

மலைப்பவராகி நாடிய போர் செய்யும் என்று கூட்டுக. 18

*எனது சேக்கிழார் 107-111 பக்கங்கள் பார்க்க.

626. குருதியி னதிகள பாநதன ; குறையுட லோடி யலைநதன ;
பொருபடை யறுதுணி சிநதின , புடைசொரி குடருடல பமபின ;
வெருவர வெருவை நெருஙகின , விசியறு துடிகள புரணடன ,
இருபடை தனினு மெதிர்நதவ ரெதிரெதி ரமாசெய பறநதலை. கக

**(இ - ள்)** வெளிபபடை. இருபககததுப் படைகளிலும முன னினற வீராகள் எதி ரெதிராகப போா செயயும போாககளததில, இரததபபெருககுகள ஆறுகள போலப் பாவின , உடற்குறைகளாகிய முணடஙகள ஓடி அலைநதன , போாபபடை வீராக ளுடலின அறறதுணடஙகள சிநதின , பககஙகளில வெளிவநத குடலகளோடு கூடிய உடலகள நிரமபிக கிடநதன , அசசபபடுமாறு கழுகுகள கூடின , வாாகள அறுபடட உடுக்கைகள புரணடன.

**(வி - ரை) குருதியின் நதிகள் பாநதன** - நதிகளிற குருதிபாநதன என இன் - விகுதி பிரிததுக கூட்டுக இன் - ஒபபுப பொருளில வநத ஐநதனுருபு பெருகி ஓடுவதனை ஆறு எனபது வழககு. ஆறுபோல இரதத வெளளஙகள பெருகிப பாவின எனபதாம. பண்பு உவமை. இஙஙனமினறிக குருதியாலாகிய நதி என உருவகமாகக கொணடுரைததலுமாம

வாள - வேல - வில - எனற மூவகைபபடைகளின போா வெவவேறிடஙகளில் மூண்டதனால அவவககளததினினறும இரதத வெளளம பாநதமையாலே **நதிகள்** எனறு பனமையாறகூறினா. மழை யுணடாயின ஆறு பெருகுதலியலபு இஙகுப் படைகள மழைபோலப பொழிநதனவாதலின அதன விளைவாகிய இரததபபெருககை நதிகள் எனறுவமிததாா. **பாந்தன** எனற குறிபபுமது

**குறை உடல்** - உடலிற றலையஙகமாகிய தலைகுறைநத உடல முணடம எனக. கவநதமெனபா உடறகுறை எனறும வழஙகுவா

**ஓடி அலைந்தன** - தலையறற பினனும முணடமான அவவுடலகள இரதத ஓடட மும உயிாசசததியும ஓயும வரை சிறிது போது துளளி அலைவது இயலபு மேறபாட் டில **நீள்கை துடித்தன** எனறதும அது அவவாறு துளளுமபோது தமது முனனை முயறசியிற றொடாநதபடியே செலவனவாயினும ஒரு குறியிலலாது குதிபபனவாத லின **அலைந்தன** எனறாா

**படை** - படை ஏநதிய மளளா. ஆகுபெயா **படை** - பொருத வெவவேறு படைககலஙகள எனறு கொணடு துணடிககபபடட வாள - வில முதலிய படைததுண டஙகளே நிலததிற சிநதின அவறறின எஞசிய பகுதி அவறறை ஏநதிய வீரா கைப பிடியினினறும நீஙகாது அவா கையினுள நினறன எனறலுமாம **விற்படைதுணியு வும்** (629) எனறது காணக. **துணி** - துணடம துணிககபபடுதலால துணி எனப் படடது.

**புடைசோரி குடர் உடல் பம்பின** - வயிறறினிடை வாளும, வேலும, அமபும் தாககக குடலகள உடலின பககஙகளில வெளிவநது சொரிநதன. **குடர்** - குடல் ஈறறுபபோலி. இது பெரு வயிறறினைத தொடாநது கீழவயிறறினுள, 34 அடி நீளம வரை குழாய போனறு சுருளசுருளா யமைநத உடறபகுதி. வயிறறின ஊறுபடட திறபபின வழியே அவை வெளிவநது நீணடு உளளிருககும சீரணித்த உணவுப பண டஙகளுடன தொஙகுதல் இஙகுச **சோரிகுடர்** எனபபடடது. இவை நீணடு சரியுந் தனமையைப பினனாப "புணபடு வழி சொரிகுடா" (631) எனறது காணக. **பம்பின** - **பம்புதல்** - நிறைதல.

**எருவை** - கழுகுகள. சாதியொருமை யாதலின **நிறைந்தன** எனப பனமை வினை கொணடு முடிநதது. இவை பிணந தினபதறகுக கூடுவன. வீராகள உயிருடன

போருக்குச் செல்லும் போதே அவர்களது பிணத்தைத் தமது இயற்கையறிவால் அறிந்து எதிர்பார்த்ததுக் கூடிய காக்கைகள் போலல்லாது, அவர்கள் உயிரற்ற பின் பிணமும் நிணமும் கண்டபின்னர் அவற்றை உண்ணக் கூடும், அறிவுக் கூர்மையற்ற கழுகுகளை **வேறுவர்** என்றது இவற்றின் பயம் விளக்கும் கோரச் செயல்களைக் கருதி **என்க.** இவற்றுட் சில கழுகுகள் பெரிய உருவுடையனவாகிக் கொடுமை பெற உடலைப் பிடுங்கித் தின்பன, மனித உடலை அவ்வாறே தூக்கிப் பறந்து செல்லவும் வல்லனவாதலும் காண்க. "கழுகு பருந்தொடு கொண்டெழு பொழுதினும்" - (631) என்று பின்னர்க் குறித்தலும் காண்க.

**விசி அறு துடிகள் - விசித்தல்** - கட்டுதல். இங்கு **விசி** என்பது கட்டப்பட்ட வாருக்கு வந்தது ஆகுபெயர். **துடிகள்** - போர்முனையிற் சங்கு - துடி - முதலியன முழக்குதல் வழக்கு "வியன்துடி" (581) என முன்னர்க் குறித்ததும் காண்க. **புரண்டன** - விசித்த வார்கள் அற்றறியப்படுதலால் உருண்டோடின.

**எதிர்ந்தவர்** - போரில் எதிர்த்துப் பொருதவீரர் **அமர்-போர் பறந்தலை** - போர்க்களம். ஏழாம் வேற்றுமைத் தொகை பறந்தலையினிடத்துப் - பரந்தன - அலைந்தன் என்பன முதலாகக் கூட்டியுரைக்க

போர் ஓய்ந்த களத்திற் பரந்த இரத்த வெள்ளத்தில் வீழ்ந்த **உறுப்புக்கள் - முண்டங்கள் - நிணங்கள்** - முதலியனவும் துள்ளியும் சிதறியும் ஒன்றோடொன்று தாக்கித் தொடர்ந்து போர் புரிவன போன்றன அதற்கு இணங்க வாரற்ற **துடிகளும் உருண்டு தாக்கி ஓசை முழக்கின என ஒரு தொடர்பாக நகையும் வீரமும் விரவிய** சுவைபட உரைத்த குறிப்பும் காண்க     19

**இருபடையினினும்**—என்பதும் பாடம்.

627. நீளிடை முடுகி நடந்தெதிர் நேரிரு வரிலொரு வன்றொடர்
தாளிரு தொடையற முன்பெயர் சாரிகை முறைமை தடிந்தனன்;
வாளொடு விழுமுடல் வென்றவன் மார்பிடை யறமு னெறிந்திட
வாளியி னவனு மறிந்தனன், ஞயினர் பலருள ரெங்கணும்.     ௨௦

**(இ - ள்)** நீள இடை .. . ஒருவன் - நீண்ட தூரமாக - நீண்ட நேரமாக - விரைந்து எதிர்த்துப் போர்புரிந்து வந்த வீரர் இருவரில் ஒருவன், தொடர் .... தடிந்தனன் - தன்னைத் தொடர்ந்தமாற்றானது தாள்கள் இருதுடையோடு அற்று விழும்படி முன் வெட்டி வீழ்த்தினன், வாளொடு .மறிந்தனன் - (இவ்வாறு வெட்டப்பட்டு) விழுகின்ற உடலானது விழுமுன்னே தான் ஏந்திய பொருத வாளினாலே, தன்னை வென்றவனது மார்பு இடைபிளந்து அறும்படி வீசவே சிங்கம்போன்ற அவனும் இறந்தான், ஆயினர் எங்ஙணும் - இவ்வாறாக இறந்த வீரர்கள் பலர் அப்போர்க் களமெங்கும் உள்ளாராயினர்

**(வி - ரை)** இப்பாட்டான் அப்போர்க்களத்தில் வெவ்வேறிடத்து நடந்த வாள் - வேல் - வில் எனும் மூவகைப்போரில், வாட்போர் நிகழ்ந்த இடத்து ஓர் சிறப்புக் கூறினார். 625 - ல் போர்மூண்டு நிகழ்ந்த நிலைகூறி, 626ல் அது ஓய்ந்த நிலைகூறி, இப்பாட்டால் அது ஓய்ந்தபின் அக்களத்துக் காணும் ஓர் காட்சியைக் கூறுகின்றார்.

**நீள் இடை** - காலத்தாலும் இடத்தாலும் நீண்டஇடை. **முடுகி நடந்து** - ஓடுதற்கும் நடத்தற்கும் இடைப்பட்ட வேகமுடையதோர் நடையில் நடந்து. இவ்விரு வீரரும் நேரத்தாலும் தூரத்தாலும் நீண்டு வாள்வீசிப் பொருது விசையில் முன்னும் பின்னுமாய இடசாரி வலசாரியாக நடந்து போர்புரிந்து வந்தனர்

**தொடர் தொடைஅற - தாள்** - தொடர்ந்து பொருதற்குத் துணையாயிருந்த இரண்டு தாளும் தொடையோடு உடலினின்றும் வேறாக அற்று விழும்படி. இரண்டு

வாறு கூறினர். இந்நெறி, புலி - சிங்கங்களின் காணலரிது இந்நாளிற் சிலர் பழக்க மிருகக் காட்சிகளில் (Circus)புலி, சிங்க முதலியவற்றைப் பழக்கிக்காட்டினாலும் அவை ஒரு காட்சேடு விளைப்பனவேயாம். மேலும், இங்கு, அடுத்து நாயனார் இறைவன்றிருவடி நீழலிற் பிரியா நிலைபெற்றுச் செல்கின்றாராதலின் அக்குறிப்புத்தோற்ப வென்றி அடல் விடைஏறு என்று உவமித்தார் என்றலுமாம். விடைஏறு அடாக்கு நிலையின் பெருமையினையும், அது இறைவரது ஊர்தியாதற் சிறப்பினையும் பொருந்த வைத்து ஏறுகோள் கூறி வரைவு கடாதல் என்ற துறையில் "விடையார் மருப்புத் திருத்தி விட்டார் வியன் றெனபுலியூர், உடையார் கடவி வருவது போலு முருவினதே" (136) என்று கூறிய திருக்கோவையாராக கருத்துக்களை இங்கு உன்னுக.

**அடர்ந்து** - தாக்கி **அவனை** - மாற்றானை - அதிசூரனை **கொல்லும் இடை** - **இடை** - சமயம். ஒரு வீச்சில் வெட்டி வீழ்க்கும் சமயம். "இடைதெரிந் தருள வேண்டும்" (475), "கலந்து பற்றி யடர்க்கும் பொழுது" (636) என்றவை காண்க

**தெரிந்து தாள்பெயர்க்கும்** - அந்த சமயம் தேர்ந்து அது செய்தற்குக் கால் பெயர்த்த. வாட்போரில் மாற்றானது வாள் விலகப் பின் பெயர்ந்தும், அவனைத் தாக்க முன் பெயர்ந்தும் வருவது மரபு. இதனை வட்டணை என்றும் இடசாரி வலசாரி என்றும் வழங்குவர். தாள் பெயர்ந்ததாதலின் அதனைத் தொடர்ந்து கைவாள் பெயரக் கொலை முற்றிவிடும் என்பது. இந்த இடையினைத் தெரிந்து இவர் தாள்பெயர்த்தார், அவனும் பலகை புறம் போக்க என இடைதெரிந்து என்றதனை அங்கும் கூட்டுக. அவ்வொரு கணமே இரண்டு செயலும் ஒருங்கே நிகழ்ந்தன என்க

**புடைபெயர்ந்த** - வாளால் அடாதற்குக் கொல்லப்படும் குறியினுக்குத் தப்பி விலகிய. அருகே வந்த என்றுரைப்பாருமுளர். அஃதுரையன்மை யுணர்க

**பலகை** - தன் நெற்றியை மறைத்திருந்த பலகையை.

**புறம் போக்க** - மறைப்பினை நீக்கிப் பலகையை விலக்க. "அவர் புடை பெயர்ந்த நிலையில் தான் வெட்டுண்பது திண்ணமென் றறிந்து அந்நிலையினின்று புடைபெயர்ந்து அவர் தன்னை வெல்லக் கொண்ட நிலைபோலத் தான் அவரை வெல்லத் தக்க இலக்கு இதுவே என்று குறிவைப்பான் போல" - திரு. க. சதாசிவச் செட்டியார் உரைக் குறிப்பு.

**கடையவன்** - கீழோன் - கீழ்மகன். முன்னர்த் **தீயோன்** என்றதற் கேற்ப இவ்வாறு கூறினார். "கடையவனேனைக் கலந்தாண்டு கொண்ட" - **திருவாசகம்.**

**நீறு தாம் கண்டார்** - என்றதனால் நீற்றினைக் கண்டாரேயன்றி அதனை அணிந்த நெற்றியுடையோன் கடையவனாந் தன்மை காணவில்லை என்பது குறிப்பு **தாம்** - தாமே என்றலுமாம். 37

645\. கண்டபொழு தே"கெட்டேன்! முன்பிவர்மேற் காணாத
வெண்டிருநீற் றின்பொலிவு மேற்கண்டேன்; வேறினியென்?
அண்டர்பிரான் சீரடியா ராயினார்" என்றுமனங்
கொண்"டிவர்தங் கொள்கைக் குறிவழிநிற் பே"னென்று, ௩௮

646\. கைவா ளுடன்பலகை நீக்கக் கருதியது
செய்யார் "நிராயுதரைக் கொன்றா ரெனுந்தீமை
யெய்தாமை வேண்டு மிவர்க்"கென் றிரும்பலகை
நெய்வா ளுடனடாத்து நேர்வார்போ னேர்நின்றார். ௩௯

645\. (இ - ள்) வெளிப்படை. கண்டபொழுதே "ஆ! கெட்டேன்! முன்பு எந்நாளும் இவர் மேற் காணப்படாத வெள்ளிய திருநீற்றின் பொலிவினை மேலே கண்

டேன்; வேறு இனி என்ன நினைக்க உள்ளது? தேவதேவனாகிய சிவபெருமானது சீரடியாராக இவர் ஆயினர்" என்று எண்ணியவராகி, "இவருடைய மனங் கொண்ட கொள்கையின் குறிவழியே அமைந்து நிற்பேன்" என்று நிச்சயித்து, ௩அ

646. (இ - ள்) வெளிப்படை (அவனைக் கொல்லும் இடை தெரிந்து அடர்க்கக்) கையில் ஏந்திய வாளினையும் பலகையையும் போக விட்டுவிட முதலிற் கருதினாராயினும் "நிராயுதரைக் கொன்றார் என்கின்ற பழி இவர்க்கு வாராதிருக்க வேண்டு"மென்று எண்ணி அந்த வலிய பலகையினையும் வெய்யுடைய வாளினையும் உடன் ஏந்தி, எதிர்த்துப் போர்செய்வாரைப் போலக் காட்டி நேரே நின்றனர். ௩௯

இவ்விரண்டு பாட்டுக்களும் ஒரு தொடர்.

645 (வி - ரை) கண்டபொழுதே - "திருநீறுஞ் சாதனமுங் கண்டால்" என்ற திருத்தாண்டகம் காண்க.

கேட்டேன்! - "உறவாவார் உருத்திரபல் கணத்தினோர்கள்" என்றபடி வெண்ணீறிட்ட ஒரு அடியவரை உற்றார் என்றெண்ணாது பகைவர் என்று எண்ணி, அவரை அடர்த்துக் கொல்லும் இடைதெரிந்து தாள் பெயர்த்துத் தாயமுழுமையும் கொள்ள அமைந்துநின்றேனே என்று வருந்தியிரங்கும் இரக்கச் சொல், 593 596-உரை பார்க்க.

முன்பு இவர்மேல் காணாத - இவர்மேல் முன் எந்நாளும் பார்த்தறியாத காணப்படாத. இதற்கு முன் எந்நாளும் இவர் நீறிட்டதை நான் கண்டதில்லை என்றபடி. "பண்டு திருநீறு பாங்கிற் பயிலாதான்" (641) என்றது காண்க இவர் - இவனை. முன்னர் உனக்கு (621), உரவோன் (693) என ஒருமையிற் சுட்டிய நாயனார், இங்கு இவன் நெற்றிநீறு கண்டவுடன் தமது முன்கருத்துக்களையெல்லாம் அக்கணமே அற வே மாற்றி, இவர்மேல் - அடியார் ஆயினார் - இவர்தம் கொள்கைக்குறி - கொன்றார் எனும் - இவர்க்கு என இவ்வாறு பன்மையாற் சுட்டி இங்குக் கூறியது திருநீற்றின் வழிபாட்டிலே இவரது ஒழுக்கத்தின் உறைப்புக் காட்டியது இவ்வாறு நாயனாரது மன நிலையை ஆசிரியர் நாடகச் சுவைபெற நமக்கு அறிவித்தது காவியநயமாம் எனினும் ஆசிரியர் தமது நிலையில் நமக்கு அறிவிக்கும் வகையில் முன்னின்ற பாதகனும் என முடித்துக் காட்டுதலும் குறிக்கொள்ளத்தக்கது.

வெண் திருநீற்றின் பொலிவு மேல் கண்டேன்-சீரடியார் ஆயினர்-திருநீற்றின் பொலிவு கண்டலின் அடியார் ஆயினார் என்பது துணிந்தேன். இவர் அடியாராயினார்-நீறிட்டுள்ளாரதலின் - மற்றை யடியார் போல - என்பது தருக்க முறையிற் றுணிந்த அனுமானம் என்னும் கருதலளவையாற் பெறப்பட்டது காணப்படாத அடியாராந் தன்மையினைக், கண்ட திருநீற்றினால் அறிந்தனர் என்க. புகழ்ச்சோழர் தம் யானை பிழைத்ததுணடு (587) என்று கண்ட உண்மை போலக் காண்க. நீறிட்டார் அடியாராவார் என்பது திரு வேட வழிபாட்டின் உள்ளுறை யாகத் துணிந்தபொருள். "நீறிடுந் தொண்டர்" (158), "நீறிடுவா ரடியார் நிகழ்தேவர்கள்" (ஏழாந் தந்திரம்-159) முதலிய திருமூலர் திருமந்திரங்களும் பிறவும் காண்க.

மேற்கண்டேன் - முன்னரும் புறம் பூசி (642) என்றது காண்க. மேல் - மேலாக. உயர்வாக என்றலுமாம் இதுமேலாகவே, ஏனைய காட்சிகள் யாவும் கீழாயின என்பதும் குறிப்பாம்

திருநீற்றின் பொலிவு - அதனில் அன்புவைத்து வழிபடுவார்க்கே நீறு பொலிவுள்ள சாதனமாய் விளங்கும் அதனிலன்பில்லாதார் பலரும் பேணியணியாமை மாத்திரமேயன்றி இகழ்ந்தும் திரிந்தொழியக் காண்கின்றோமன்றோ! ஆயின் அன்புடையார்க்கு அது "சேலுங் கயலுந் திளைக்கும் கண்ணா ரிளங்கொங்கையிற் செங்குங்குமம், போலும் பொடி", என்ற திருப்பல்லாண்டிற் கூறியபடி இன்பம் தரும். "நீறுகண்டனை யாயினு நெக்கிலை" என்ற திருவாசகத்தின் கருத்தினையும் உன்னுக.

**வேறினி என்** - முன் எந்நாளும் இவர் மேல் நீறு கண்டேனில்லையாயினும், இவர் என்னைப் பகைத்து என்பால் ஏலா இகலபூண்டு வலிந்து எனது தாயங்கொள்ள எண்ணிப் போருக்கழைத்தவராயினும், இவர் என்னை வஞ்சனையாற் கொல்ல எண்ணிய வராயினும், இவர் என்னை வெல்ல முடியாதவராய் சேற்று எனக்குத் தோற்றுப் புறகிட்டு ஓடியவரேயாயினும், இவர்மேல் நீறு கண்டபின், வேறு இவ்வாறெல் லாம் மற்று நினைக்கவேண்டிய நினைப்புக்கள் யாவுள? ஒன்றுமில்லை நீறு காணின் அது திருவேடம் அது பூண்டவர் அடியார் என நினைப்பதொன்றேகொள்ள உள்ளது ஏனையவை எல்லாம் வேறென ஒருதுக்கப்படுவன என்பது முடிந்த கருத்து. ஆதலின் **சீரடியார் ஆயினர்** என்று முடித்தார்.

**"எவரேனுந்** தாமாக விலாடத் திட்ட **திருநீறுஞ்** சாதனமுங் கண்டா லுள்கி, யுவ ராதே யவரவரைக் கண்ட போது உவந்தடிமைத் திறநினைந்தங் குவந்து நோக்கி, யிவர் தேவ ரவர்தேவ ரென்று சொல்லி யிரண்டாட்டா தொழிந்தீசன் றிறமே பேணிக், கவ ராதே தொழுமடியார் நெஞ்சி னுள்ளே கன்றுப்பூர் நடுதறியைக் காண லாமே" என்ற திருத்தாண்டகத்திற் குறித்த ஒழுக்கத்தின் இலக்கணத்திற்கு நாயனார் முற்றும் நிரம்பிய இலக்கியமாகி நின்ற நிலைகண்டு உய்வோமாக. உவாமண் ணூறி மேனி வெளுத்த வண்ணன் எதிரே வரக்கண்ட கழறிற்றறிவார் நாயனார் அடியார் வேடமாகக் கண்டு வணங்கினார். அவன் பயந்து "யாரென்றடியேனைக் கொண்டது? அடியேன் அடிவண்ணான்" என்று கூற, அவனை வண்ணான் என்றும், தாங் கருதியபடி அவ்வேடம் திருநீற்றுவேட மன்றென்றும் அறிந்தபின் "அடியேன் அடிச்சேரன்! திருநீற்று வார வேட நினைப்பித்தீர்; வருந்தா தேகும்" என்று மொழிந்து சென்ற னர் என்ற சரித்திரத்தினுட்குறிப்பினையும் அடிமைத் திறத்தினையும் இங்கு உன்னுக. இதுபற்றியே இங்கு நாயனார் "வெண்டிரு நீற்றின் **பொலிவு** - மேற்கண்டேன்" என்றதும் காண்க. திருவேடத்தினியல்பும் அதன் வழிபாட்டின் பயனும் முடிந்த பொருளாக வைத்து ஞானசாத்திரத்துக் கூறுவதும் இங்குக் கருதுக.

**அண்டர்பிரான்** - சிவபெருமான். பெருந்தேவர்க்கெல்லாம் தெய்வமாவார் **சீர்** - அடியார்க்கு இயற்கையடைமொழி. **ஆயினர்** - முன்னர் அடியாரந்தன்மையில்லார் திருந்தும் திருநீறு பொலியக்கண்டலின் ஆயினார் ஆதலின் இவர் குறிவழிநிற்பேன்.

**மனங்கொண்டு** - மனத்தில் நிச்சயித்து

**கொள்கைக் குறிவழி** - தமது உயிரைக் குறிவைத்து வஞ்சித்து அதனால் தாயம் பெற எண்ணிய கொள்கை இது அவன் கருத்து எனத் தெரிந்தபின் நாயனார் துணிந்த நிலை. இதில் அவர் நின்ற உறைப்பு வரும்பாட்டில் மேலுஞ் சிறந்து விளங்குதல் காண்க. தமது உடைமை எல்லாம் தொண்டர்க்கு ஆக்குவார் நாயனார் (611). இங்கு இவரை வென்று தாயம் பெறினும் அது தொண்டர் உடைமையேயாம், ஏனை உடைமைபோல உடலும் உயிரும் தொண்டர்க்கு ஆகும் இயல்பினவாம் என்பன நாயனா ரது உள்ளக்கிடை. என் உயிர் கொள்வதன் மூலம் தாயத்தை இவர் பெறவிரும்பினர், அவ்வாறே இவர்க்கு அதனை ஆக்குவன் என இது துணிந்தார். 38

646. (வி - ரை) **நீக்கக்கருதி** - இது, இவர் குறிவழி நிற்பேன் என்று துணிந்த மனநிலையினை அடுத்து, நாயனார் மனத்துள் நிகழ்ந்த நிகழ்ச்சியாம் **நீக்க** - தாங்காது போக்க. **கருதி** - கருதியும் **அது** - நீக்குதலை. **செய்யார்** - செய்யாராகி. செய்யாமைக்குக் காரணம் மேற் கூறுகின்றார்.

இவர் கொள்கைக் குறிவழி நிற்றல் மாத்திர மன்றி, அதனை அவர் பெறுதலில் நீறிட்ட அடியாராயின அவர்க்கு எவ்வகையானும் பழிவாராமற் காக்கவும்வேண்டும் என் றது நாயனார் மனத்துள் அடுத்து எழுந்த நினைவு. இதனால் அவரது திருநீற்றுச் சார் வாகிய அன்பின் உறைப்பினை மேலுங்காண்க.

**நிராயுதரைக் கொன்றார் எனும் தீமை**-இவர் விரும்பியமைந்தபடி என உயிரைக் கொண்டு தாயமும் கொள்ளுமாறு வாளும்பலகையும் போக்கி நின்றேனுக்கில் அந்நிலையிலும் இவர் கொல்வர், அப்போது நிராயுதரைக் கொன்றார் என்ற தீமை இவரைச் சாரும்; நீறுபூசிய ஒரு அடியார்க்கு அப்பழி சாரலாகாது, இவரை அடியாரெனக் கண்டு இவர் குறிவழிநிற்கத் துணிந்தேனாதலின் இவர்க்குப் பழிசாரும்படி நான் நிற்கலாகாது என்பன அவர் கருதியனவாம். நிராயுதரைக் கொல்லலாகாது என்பது போர்வீரர் கைக்கொண்டொழுக வேண்டிய போர்நீதிகளில் ஒன்று. தாயத்தின் வைத்த பேராசையால் வஞ்சித் துயிர்கொண்டு அதனைக் கவரத்துணிந்த இவர் இந்தப் போர் நீதியையுங் கடந்து கொல்வர் என்பதும் நாயனார் துணிந்தனர்.

இவர் எவ்வகைப் பழி தொழிலராயினும், நீறிட்டதனா லடியாராயினமையின் இவர் வழி நான் நிற்பேன், அவ்வாறு நிற்கும்பொழுது இவர்க்கு எப்பழியும் வாராமலும் நிற்பேன் என்று துணிந்த திருநீற்றுச் சார்பின் அடிமைத்திறத்தின் மேன்மை நோக்குக. இதுபற்றியன்றே ஆசிரியர் "திருநீற்றுச் சார்புடைய எம்பெருமான்" (649) என முடித்தனர்.

**தீமை-பழி.** நிராயுதரைக் கொல்லலாகாது என்பது முன்னை நாள் தமிழரது போர் நீதி. பசுக்கள், முதுவர், பிணியுடையோர், பெண்டிர், புதல்வர்ப் பெறாதோர், படையேந்திப் போர்செய்யாதார், சிறுவர் முதலியோரைக் கொல்லலாகாது என்பது தமிழரின் நீதிப் போர் ஒழுக்கம். அத்தகையோரைத் தம்மரண் சேரும்படி போர் தொடங்கு முன்னர்ப் பறைசாற்றுவிப்பதும் வழக்கு. பொருட் பேராசையால் விழுங்கப்பட்டார்களாகிப், படையெடாதோர், பாலர், பெண்கள் முதலிய ஒன்றும் பாராது, வெகுதூரம் மறைந்து நின்று, நச்சுக்காற்று, வெடிகுண்டு முதலிய நாசகாரிகளாற் குடிமக்களைக் கொன்று பொருள்கவர்வதாகிய இந்நாள் அநாகரிகப் போர் முறைக் கொலைக் கொள்கைகளை நம் பழந்தமிழர் அறியார். இந்நீதிகளை யெல்லாம் அடியார் பெருமையினில் உள்ளடக்கி இங்கு நாயனார் குறிப்பாகக் கொண்டதனை எடுத்துக் காட்டும் வகையில் உலகுக்குப் போர்நீதி யறிவித்தனர் சிறந்த அமைச்சர்பெருமானாகிய ஆசிரியர்.

**நேர்வார்போல்** - அமர் விளைப்பார்போல வாளும் பலகையும் நீக்கினாருமல்லர்; அவற்றை வாளர் தாங்கி நின்றாருமல்லர், ஆயின் அமர் செய்வார்போற் பாவனை காட்டி நின்றனர்.

**நேர் நின்றார்** - அவன் எண்ணியபடி செய்யுமளவும் அவனெதிர் நின்றனர். 39

647. அந்நின்ற தொண்டர் திருவுள்ள மாரறிவார்?
முன்னின்ற பாதகனுந் தன்கருத்தே முற்றுவித்தான்,
இந்நின்ற தன்மை யறிவா ரிவர்க்கருள
மின்னின்ற செஞ்சடையார் தாமே வெளிநின்றார். சய

**(இ - ள்)** வெளிப்படை. அவ்வாறு நின்ற திருத்தொண்டரின் திருவுள்ளக் கிடையினை அறியவல்லார் யாவர்? முன்னே நின்ற பாதகனாகிய அதிசூரன் தான் கருதிய படியே முடித்தனன், இத்தன்மையினை அறிவாராகி இத்திருத் தொண்டர்க்கு அருளும் பொருட்டு மின்போன்ற செஞ்சடையுடைய சிவபெருமான் தாமே வெளிப்பட்டுத் தோன்றி நின்றருளினார்.

**(வி - ரை) அந்நின்ற** - மேலே கூறிய கருத்துடன் நேர்வார்போல நேர்நின்ற.

**திருவுள்ளம் ஆர் அறிவார்** - அவர்தம் திருவுள்ளக்கிடையை யான் அறிந்த அளவில் மேலே விரித்துக் கூறினேன், அன்றி முற்றும் அறிவார் யாவர்? என முடித்துக் கொள்கின்றனர் ஆசிரியர். 606ம் பாட்டிற் குறித்த கருத்துக்களை இங்கு நினைவு கூர்க. நாயனாரோடு உடனிருந்தார்களிற் சுற்றத்தார் யாரும் அறியாவகை தனியிடஞ் சென்

ருாாதலின் இநநிகழசசியைத தானும உலகா வேறு எவரும அறியாா. உடனிருநத பகைவனாகிய பாதகன அசசெயகையைக் கணடானாயினும அதனை விளைதத அவாதந திருவுளளக கிடையை அறியான. இது சிவசாட்சியாக நிகழாது, சிவசாட்சியாகவே நிகழநத தொனறாதலின அவவாறு சாவசாட்சியாய நிறகும இறைவனொருவனெயனறி மறறெவருமறியமாட்டாா எனபாா **ஆரறிவார்** எனறு உறுதிப் பொருள பயபப விளைவினற கூறினா. மேலும இவவிளைவுககு விடை தாமே கூறுவார் போனறு பின னா **இநநின்றதன்மை யறிவார்** எனறு முடிநதது முடிததுக காட்டியதும காணக. திருநீறறின அனபு கொணட உளளததின மேனமைத தன்மையை அவவுளளததி னுளளததில உயிாககுயிராய நினற இறைவனனறி எவரும் அறியார் எனபாா **யாரறி வார்** எனறும, அறிநதார் இறைவராதலின அதறகுரிய பயனை யளிப்பாராயத தோனறி நினறாா எனபாா **அறிவார் - அருள - நின்றார்** எனறும கூறினார்.

**தன் கருத்தே முற்றுவித்தான்** - அனபாககடாதன அடுததபொழுது அவறறை இவவாறு கூறுதல ஆசிரியா மரபு 481-ம திருபபாட்டுமே அஙகு உரைததவையும காணக.

ஆயின, இஙகு வெறறி அவனதனறு, நாயனாரே வெனறனா எனபது. எனனை? திருநீறறுக கீடாக உடைமை, உடல, உயிா எனற மூனறையும ஒருஙகே உவநது தரு வாா நாயனாா எனபதே இசசரித நிகழசசியின முடிபாம. அனறிப போாவனமையில உலகநிலை வெறறியும தோலவியும முடிபாவதனறு அப போாவனமையிலும நாயனாரே வெறறி பெறறதும மாறறலன உடைநது புறகிட்டதும முனனா 636-ல உரைககபபட் டது. எனவே, உலகநிலை - உயிரின நிலை எனற இரணடினிலும வெறறி நாயனாா பாலதேயாம எனக. அனபே வெனறது. 481-ல உரைததவையுங காணக.

**இநநின்ற தன்மை** - இநநிகழசசியின உளளுறை. **அறிவார்** - "உயிாககுயிராய் அஙகஙகும நினறு" உளகுவாருளகிற றெல்லாம உடனிருந தறிபவராதலின, அறிவா ராய முறறெசசம வினையாலணையும பெயராககொணடு அறிவாா - சடையாா-வெளி நினறாா எனறு கூட்டியுரைபபதுமாம.

**மின் நின்ற செஞ்சடை** - ஒளி நிலைதது விளஙகும சடை. "மினவணண மெவவண ணம அவவணணம வீழசடை". அடைநதாரைக காககும விளககம மிககது.

**தாமே வெளி நின்றார்** - பாசமறற நிலையிலே விளஙகும் இறையருளாகிய சிதாகாய வெளியில நினறு வெளிபபடக காட்சி தநதருளினார். தொணடர் திருவுளளம் சடையாா தாமே அறிவா, (அனறி மறறு) ஆா அறிவாா? எனபதாம. "கணணபபா தாம றிதல காளததி யாரறித லலலதுமற, றாரறியும மனபன றது" எனறது ஞானசாததிரம.

**அறிநதார்**—எனபதும பாடம 40

648\. மறறினிநாம போறறுவதெனே? வானோா பிரானருளைப்
பறறலர்தங கைவாளாற் பாச மறுத்தருளி
யுற்றவரை யெனறு முடனபிரியா வனபருளிப
பொறறொடியாள பாகனாா பொனனம பலமணைநதாா. ௪௧

**(இ - ள்)** வெளிப்படை. தேவா பெருமானாருடைய திருவருளின வகையை இனி வேறும நாமபோறறுவது எனனுளது? பகைவருடைய கை வாளினாலே பாசததையறுத தருளசெயது, உறறவராகிய நாயனாரை எனறும தமமோடு பிரியாதிருககும அனபு கூடிய நிலையினை அடையச செயது, இறைவியை ஒரு பாகததுடைய பெருமானாா பொனனமபலததினை அடைநதனர்

**(வி - ரை) வானோர்பிரான் அருளை இனி மற்றுப் போற்றுவது என்?** எனமாற றுக. மேற்பாட்டிற கூறியபடி அவருககு அருள வெளிநினறானாகிய அவா அருளியதிறம

யாது எனபோமாகில் அதனை எவவகையிற போறறுவோம? அவவருட்டிறததின முடிபு பாசமறுதது உடன பிரியா அனபருளிய இதுவே என முடிததுக கூறியவாறு. **போற்றுவது** - அறிநது பாராட்டுதல. **பற்றலர்** - பகைவர். பாசமறுககும இறைவனருடனொழிற கருவியாயினமையாலும, அருளும வகைகளிற பறறலர் கைவாளும ஒன்றாகும எனப பொருமையிற காணக கூறியமையாலும **பற்றலர்** எனப் பனமையாற கூறினார்.

**பாசம் அறுத்தருளி** - **பாசம்** - கட்டு-கயிறு. இஙகு மாயா காரியமாகிய உடமபினைக குறிததது. உடல் ஒன்றின அளவாகவே நாயனார் இவவுலகததிற கட்டுபபட்டு நினறார். வாளபயிறறும ஆசிரியத தொழில செயது வளம பெறறும, அதிலே தாய உரிமையுடையான் ஏலாஇகல கொளளநினறும, அதுகாரணமாக அவன அழைததபோரில மூண்டு நினறும, செயலகள செயய நிலைகளாமாக உலகக கட்டினுள அகபபடுதது வைததது உடலாகிய மாயாகாரியமேயாம பாசம கயிறறினைப போனறு உயிரைக கட்டுவதனால அபபெயர் பெறறது கயிறறை அறுததுவிடின முன கட்டபபட்டு நினற பொருள தனனிலையிற சோதல போல இஙகுப பாசததை அறுததனர், கயிறறை அறுகக வாள வேணடும, இஙகு அநத வாள பறறலாதஙக கைவாளாக நினறது எனறபடி.

அவனருள கலநதனறி ஒன்றும நிகழாது. "அவனனறி யோரணுவு மசையாதெனும பெரிய ஆபதர் மொழி" எனறபடி, இஙகுத தோறறோடிய பகைவன தனனை வெனற நாயனார் பால தான கருதியபடியே முறறுவிததறகு அருள இருநதவாறும. அவனருள எஞ்ஞானறும உயிர்களின பககுவததிறகேறறவாறே பாச நீககம புரியுமாதலின இஙகு நாயனாரது பாசமாகிய "மாயக குரமபை நீஙக வழிவைதத" அருளாய நினறது. அதறகுப் பறறலர் கைவாள வெளிபபட்டிறகணட கருவியாய நினறது. அதுவே இவருககுச சிவபுணணியப பயனையும, அவனுககுப பாவபபயனையும தரும அருளாயிருநதது எனபது கருததாதலின **கைவாளாற் பாசமறுத் தருளி** எனறார். **அருளை மற்றினி என் போற்றுவது?** எனற குறிபபமது.

**உற்றவரை**-சாதனஙகணடால உளகி, ஈசன திறமே பேணி, எஞ்ஞானறும தமமை முனனரே அனபின வகையினாலே **உ**றறிருநத நாயனாரை. **உற்றவர்** - உறறார் - உறவினர் தமது உருததிர கணததவராகிய தமரை எனக "எமபிரான றமரேயோ வெனறு முனனம"(818)-"கருமிடறறு மறையவனார் தமராய கழலேயர் பெருமகறகு" (மானககஞசாறர் புராணம 6) முதலியவை காணக

**உற்றவரை என்றும் உடன்பிரியா அன்பு அருளி** எனறது முனனர் மனததாற பிரியாதிருநதனர்; இபபோது எனறும பிரியா அனபுடையராகப் பெறறார் எனக. **உடன்பிரியா அன்பு** - இறைவனை நீஙகாது அனபு செயது அனுபவித திருககும நிலை மீளாநெறி எனப.

**பொன்னம்பலம்** - அருளின நிறைவு. "புலியூரச சிறறமபலமே புககார்" எனற திருததாணடகததின கருததும காணக.

**பொற்றொடியாள்** - உமாதேவியார் **பாசமறுத்தருளி** எனறதனற பாச நீககமும, **உடன்பிரியா அன்பு அருளி** எனறதனற சிவபபேறும தநத திருவருள நிறைவாயினமையாற **பொற்றொடியாள் பாகனார்** எனறு எணடுக குறிததார்

இனி, " உனனுடைய கைவாளாலுறு பாசமறுதத கினை " - (கோட்புலியார் புராணம-11) எனவும " சேயஞானபிள்ளையாரதந திருககையிற கோலமழுவா லேறுணடு குறற நீஙகி " (சணடீசர் புராணம 58) எனவும வருவன போல, இஙகும பற்றலாதம கைவாளாற பாசமறுததருளி வானோர் பிரானருளை யுறறவரை எனறு கூட்டி யுரைப்பாருமுணடு இப்பாட்டிறகு இவவாறனறி, மறறினி நாம போறறுவது என? எனற தனை ஒரு முடிபாககி நிறுததிககொணடு, **அருளைப்பற்றலர்** எனறு கூட்டிப பரம சிவனது கிருபையைப் பெறறிராத அதிசூரன எனறு சோததுரைப்பர் மகாலிஙகையர்

முதலியோர். அருளை உற்றவரை என்று கூட்டித் திருவருளையே பொருந்தி யிருக்கின்றவராகிய அந்த ஏனாதிநாதரை என்று பொருத்தியுரைப்பாரும், பிறவாறு கொண்டு கூட்டி உரைத்துப் பொருள் கொள்வாருமுண்டு. 41

649. தம்பெருமான் சாத்துந் திருநீற்றுச் சார்புடைய
வெம்பெருமா னேனாதி நாதர் கழலிறைஞ்சி
யும்பர்பிரான் காளத்தி யுத்தமர்க்குக் கண்ணப்ப
நம்பெருமான் செய்தபணி நாமதெரிந்த படியுரைப்பாம்.

(இ - ள்) வெளிப்படை. தமது இறைவன் சாத்துகின்ற திருநீற்றின் சார்பினையே சார்பாகவுடைய எமது தலைவராகிய ஏனாதிநாத நாயனாருடைய திருப்பாதங்களை வணங்கி, கண்ணப்பர் என்ற நமது பெருமானார் தேவதேவராகிய காளத்தியுத்தமனார்க்குச் செய்த திருப்பணியை நாம் அறிந்தவாறு சொல்லப்புகுவோம்.

(வி - ரை) தம்பெருமான் சாத்துந் திருநீறு - "வள்ளல் சாத்து மதுமலர் மாலையும் அள்ளு நீறும்" (31), "பூசுவதும் வெண்ணீறு", "திருவாலவாயான் றிருநீறே", முதலியவை காண்க. இறைவன் நீறு சாத்துதலாவது மா சங்காரகாலத்து எல்லாவுலகங்களும் நீறாகவே, அந்நீறு, அனுஞானற்று எஞ்சிநிற்கும் அவனது திருமேனியிற் கிடத்தல்.

திருநீற்றுச் சார்பு உடைய - தமது உயிர் சார்ந்து நிற்கும் சார்பாகத் திருநீற்றினையே கொண்ட. சார்பு - நிலைபிறழாது சார்ந்து நிற்றற்குரிய ஆதாரவாகக் கொண்ட பொருள். பற்றுக்கோடு என்ப.

கண்ணப்ப நம்பெருமான் - கண்ணினை அப்பி அதனாற் கண்ணப்பர் என்ற பேர் பெற்ற நாயனார் நம்பெருமான் என்பதும் நாயனார் என்பதும் ஒரு பொருளன. கண்ணப்பு நம்பெருமான் என்பது பாடமாயின் கண்ணினை அப்பிய நமது தலைவனார் எனக.

தெரிந்தபடி - மேலே திருவுள்ளமாரறிவார் - என்று கூறி, ஆயினும் அறிவார் அருளியபடி இது என்று முடித்த ஆசிரியர், அவ்வாறே, கண்ணப்பரும் காளத்தியாரும் என்ற இருவருமே அறிய நின்றதொன்றாகிய வருஞ்சரித்தத்தையும் நாம் அறிந்து கூற இயலாதாயினும் தெரிந்தபடி கூறப்புகுவோமாக என்று தோற்றுவாய் செய்தவாறு. இதனால் வருஞ்சரித்தத் தோற்றுவாய் செய்ததும், திருநீற்றுச் சார்பு உடைய என்றதனால் இச்சரிதப்பயனை எடுத்துக் கூறியவகையில் முடித்துக் காட்டியதும் காண்க.

நாமதெளிந்த—என்பதும் பாடம். 42

---

சரிதச் சுருக்கம்.— சோழநாட்டிலே செழித்த வயல்களாற் சூழப்பட்டுச் சிறந்த பழயவூர் எயினனூராகும். அதில் ஈழக்குலச்சான்றோர் மரபில் அவதரித்து வாழ்ந்தவர் ஏனாதிநாத நாயனார். இவர் பழமையாகிய திருநீற்றின் வழிபாட்டு நலத்தில் எஞ்ஞான்றும் குறைவுபடாதவராயச் சிறந்து விளங்கினார். அரசர்க்கு வாள் பயிற்றும் தொழில் செய்து அதனாலவரும் ஊதியத்தைச் சிவனடியார்க்கு ஆக்குவார்

இவ்வாறு பகைவர்களும் போற்றும் நலவொழுக்கத்தில் இவர் வாழ்கின்ற நாளிலே, வாள் பயிற்றுந் தொழிலில் உரிமையுடையானாய அதிசூரன் என்பானொருவன் இருந்தனன். அவன் இத் தொழிலிற் றன்னின் மேற் கடந்துளாரில்லை எனினும் செருக்கடைந்து தன்னைத்தானே மிக மதித்திருந்தனன். ஆயினும் தனது குலத்தாயத் தொழிலில் தனக்கு வருவாய் குறையவும், அது இவர்க்கே நாளும் மேம்படவும் கண்டனன். அதனால் இவரிடத்துத் தகாத வழியால் அழுக்காறு கொண்டு அதனால் காலைஞாயிற்றின் முன் ஒளிமங்கும் மதிபோலழிந்து இவரை எதிர்த்துப் போர்புரியத் துணிந்தனன். அதற்காகத் தன்பக்கம் பலரையும் சேர்த்து இவ

ரது மனைவாயினின்று "வாள்பயிற்றும் தொழிலுரிமைத் தாயத்தைப் போரில் வலி யாரே கொள்ளத் தக்கது" என்று இவரைப் போருக்கு அறைகூவி அழைத்தான். இவ ரும் அவ்வொலி கேட்டுப் "போருக்கழைத்தான் யாவன்?" என்று, ஆண்சிங்கம் போலக் கிளம்பிக், கழல் கட்டி, வாளும் பலகையும் ஏந்திப், போர்முனையிற் புறப்பட்டார். அவர் பாற் போர்த்தொழில் கற்கும் காளையர்களும் சுற்றத்தார் முதலியோரும் அவரோடு சேர்ந்தனர். போருக்கழைத்த அதிசூரன் "வாள்பயிற்றும் தொழிலில் நமது தாய உரி மையைக் கொள்வதற்காக இந்த வெளியிலே இருவர் படையும் சந்தித்துப் போர்புரிந் தால் அதில் சாயாது நிற்பவரே அதனைக் கொள்ள உரியார்" என்று கூறினன். இவர், "அது நன்று என் உனக்கு வேண்டுவதாயின் அவ்வாறே போருக்கு நண்ணுவேன்" என்று இசைந்து அவன் சொன்ன போர்க்களத்துச் சேர்ந்தனர் இருவர் பக்கத்துப் படை வீரர்களும் கைவகுத்துப் பொருதனர்

வாள்வீரர் வாள் வீரருடனும், வேல் வீரர், வில் வீரர் அவ்வவ் வகையாருடனுமாக அக்களத்தில் வேறு வேறு பொருதனர் இருபக்கமும் பலரும் பட்டனர். அதன்பின் எஞ்சி நாதர், படாது எஞ்சிய தமது படைக்கு முன்வந்து, வாளேந்தித் தாம் ஒருவ ராகவே சாரிகை சுற்றிப் பகைவனுடைய படைஞரைக் கண்டதுண்டமாக்கி வீழ்த்தி னர் பகைவன் படைஞர் பலரும் பட்டனர் படாதார், மெய்யுணர்வு நேர்பட்ட போது ஆர்வ முதலிய குற்றங்கள் ஒழிவது போல அக்களத்தை விட்டொழிந்தனர். இதுகண்ட அதிசூரன், அவர்களில் மீண்ட சில படைஞரைக் கொண்டு, தானே முன் வந்து போரில் முனைந்தான் இவர் வாள் சுற்றிவரும் வட்டணையில் தாம் தோன்றா வகையில் அவனைப் பற்றி வீசும் சமயம் வர அவன் இவர்க்குத் தோற்றுத் தப்பிப் புறங் காட்டி ஓடினன்.

அன்று இரவு முழுதும் மானமிகுதலினால் அவனுக்குத் தூக்கம் வரவில்லை. பல முறையும் சிந்தித்தான். "ஈனமிகு வஞ்சனையால் வெல்வன்" என எண்ணினன் விடி யற்காலையில், "நாட்டார் பிறரை நமது வாளின் தாயங்கொள்ளும் போரிற் கொல்லாது வேறிடத்தில் நாம் இருவரும் போர்செய்ய வருக" என்று இவர்க்குச் சொல்லிவிட் டான். இவரும் "அவ்வாறு செய்தல் அழகிது" என்று உடன்பட்டு அவன் குறித்த தனியிடத்து யாவரும் அறியாத வகையிலே வாளும் பலகையும் ஏந்தி முன்னே அவனை எதிர்பார்த்து நின்றார் "திருநீறிட்டார்க்கு எவ்விடத்தும் இவர் தீங்கு செய்யமாட்டார்" என்பதனை அவன் அறிந்தானாய், முன்னர்த் திரு நீற்றைப் பயின்றறியாதானாயும் நெற்றி விரவப் புறத்திலே வெண்ணீற்றைப் பூசி, மனத்திலே வஞ்சக் கறுப்புடன் வைத்து, வாளும் பலகையும் ஏந்திக் குறித்த அந்தத் தனியிடம் புகுந்தனன். சிங்கம் தன் இரைப்பிராணியைப் பார்த்து நிற்பது போல உயர்ந்து நின்ற இவர் நிலையைக்கண்டு அவன் இவரைக் கிட்டி அணுகும் வரை, தனது நெற்றியைப் பலகையினால் மறைத்து வந்தெதிர்த்தனன் இவர் விடையேறு போல அவனைத் தாக்கிக் கொல்லும் இடைதெரிந்து தாள் பெயர்க்கும் போது அவன் தன் நெற்றியை மறைத்திருந்த பலகையைப் புறம்போக்கினன். கடையவனாகிய அவன் நெற்றியிலே இவர் வெண்ணீற்றினைக் கண்டார். கண்டபொழுதே "கெட்டேன்! இவர் மேல் முன் காணாத திருநீற்றுப் பொலிவுகண்டேன் சிவபெருமானது சீரடியார் ஆயினர்" என்று உட்கொண்டு, இவர் குறிப்பின் வழிநிற்பேன் என நிச்சயித்துத் தமது வாளும் பல கையும் போக்கக் கருதினர். பின்னர், நிராயுதரைக் கொன்றார் என்னும் பழி இவர் பாற் சாரலாகாதென்று எண்ணி அவற்றை ஏந்திப் போர் செய்வார் போலக்காட்டி நேர் நின்றார். அந்தப் பாதகனும் தன் கருத்தே முற்றுவித்தான்.

சிவபெருமான் வெளிவந்து, பகைவன் கைவாளால் இவரது பாசமறுத்து, இவர்க்கு என்றும் பிரியாது உடனிருக்கும் அன்புநிலையினை அருளிச் செய்து எழுந்தருளினர்.

---

**தலவிசேடம்:—எயினனூர்** - அரிசொல் ஆற்றின் தென்கரையில் உள்ளது. கும்பகோணம் இருப்புப்பாதை நிலயத்திலிருந்து தென் கிழக்கில் கற்சாலையில் 4 நாழிகையளவில் உள்ள **அழகார்திருப்புத்தூரினின்று** (அழகாத்திருப்புத்தூர் என்பர் இது புகழ்த்துணை நாயனார் தலம்) தெற்கில் ஒரு நாழிகையளவில் கரை வழியாய்ச் சென்றால் இதனையடையலாம். இது இப்போது **ஏனநல்லூர்** என வழங்கப்படுகிறது. பழய சிவாலயம் உண்டு. இவ்வாலயம் ஒரு வைணவப் பெண்மணியாரால் கருங்கற் றிருப்பணி செய்யப்பட்டுள்ளது. நாயனாரது திருவுருவமும் அவரது தேவியாரது திருவுருவமும் உட்புறத்தில் சந்நிதிக்கு எதிர்ப்புறமாக ஈசான திக்கில் வைத்துப்பூசிக் கப்பட்டு வந்தன. இப்போது இவை வடக்குப் பிராகாரத்தில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் திருவுருவத்தின் பக்கத்தில் வைக்கப்பட்டுள்ளன. **சுவாமி** - பிரமபுரீசர்; **தேவியார்** - கற்பகாம்பிகை திருக்கோயிலுக்கு மேற்கே அரை நாழிகையளவில் ஆண்டான் கரையில் அதிசூரனுடன் போர்கடந்த களமும் இடமும் உள்ளன என்ப. அங்கு ஒரு குளமும் அதன் கரையில் ஒரு பெரிய ஆலமரமும் தென்கரையில் பெரிய திடலொன்றும் உள்ளன. இதுவே போர்க்களமென்று கருதப்படுகின்றது. நாயனாரது குருபூசையன்று சுவாமி இவ்விடத்துக்கு எழுந்தருளும் சிறப்பு இப்போதும் நடைபெறுகின்றது இந்த இடம் இப்போது **சாலைக்கரை** என வழங்கப்படுகிறது. இத்தலத்தில் நாயனார் பேரால் ஒரு திருமடமும் உண்டு.

**கற்பனை .—**1. சோழர்களது அரசாங்கம் இமயமலை வரை ஒரு காலத்தில் பரவியிருந்தது

2. குடிதழைத் தோங்குதல் நகரத்துக்குச் சிறப்பாம்.

3 முன்னாளில் மன்னர்க்கு வாட்பயிற்றும் ஆசிரியத் தன்மையைத் தாய உரிமைப் படி வழிவழி வரும் உரிமையாய்ச் சிலர் பெற்றிருந்தனர்

4. செய்தொழிலில் வரும் வளமெல்லாம் கடப்பாடு பற்றி அடியார்களுக்கு ஆக்குதல் செல்வம் பெற்ற பயனும் உறுதிப்பொருளுமாம்.

5 ஒருவனது நல்லொழுக்கத்தினை நள்ளார்களும் போற்றும்படி இயல்பினொழுகுதல் தக்கது.

6. கல்விமுதலிய பேறுகளில் தனக்கு மேற்பட்டாரில்லை என ஒருவன் தன்னைத்தானே மதிக்கும் பெருமிதம் தீயது.

7 அழுக்காறு பொல்லாதது. அது பல தீமைகளுக்கும் உள்ளாக்கும். அதனை வாராமற் காத்தல் வேண்டும்.

8. வலியாரே தாயஉரிமை கொள்ளுதற்குரியார் என்பது நீதிக்குப் பொருந்தாத வழக்கு இங்கு நாயனார் இதிற் போர்க்கு அமைந்தது இசைவு பற்றியதாம்

9 ஒருவன் போருக்கு அறைகூவி அழைத்தால் போரேற்று நிற்றல் வீரர் இலக்கணம்.

10. முன்னாளில் வாள்முதலிய படைகளின் பயிற்சி மக்களிடை மிக்கிருந்தது. படைகள் தாங்கவும் அவைகொண்டு தம்மையும் நாட்டையும் காவல் செய்யவும், தமது தோள்வலிமையாலே வெற்றிபெற்றுத் தம் பொருள்களைக் காவல்செய்யவும், பொருள் பெறவும் உள்ள வீர உரிமைகளை முன்னாளில் நமநாட்டுமக்கள் பெற்றிருந்தார்கள். இச்சரிதத்தில் குறித்தவாறு வீரச் சுவையுள்ள குடிமக்களின் போர் (621 - 636) கேட்டற்கும் அரிதாய இந்நாள் நம் நாட்டின் வீரநிலை தாழ்ந்து நிற்பது வருந்தத்தக்க தொன்றும். இதன்வகைகளை அறிந்து திருத்தி நந்தமிழ் நாட்டவரை அவர்கட்குரிய முன்னைய உயர்ந்த வீரநிலைபெறற்றேங்கச் செய்து, மக்களை நல்ல வீரமக்களாக்கிடுதல் அரசியலார்க்கும் குடிமக்கட்கும் உரிய கடமைகளி லொன்றும்.

11. இச்சரிததகதிற் கண்ட குடிமககட போாமளளாகளின வீரம், ஆணமை, வலிமை, போாததிறன, குறியீடு, குறிககோள (627 - 629) முதலியன வியககறபாலன.

12. ஏனாதிநாதநாயனாரின வாடபோாததிறமும நோமையும் அப்போாததொழில இயலுககு இலககியமாவன. இததகைமையுடைய வீாாகளே அததொழிலில் வீரக கலைப பயிற்சி தரும ஆசிரியாாதறகு உரியா. இவவிலககணம இது போலவே எலலாத தொழிற கலைககு முரியது. அவவத தொழிலிலும அவவவ வாசிரியாகள ஒபபுயாவறற தோசசியும நோமையு முடையாாதல வேணடும

13. போரில உடைநது புறகிட்டாா மானமிக மீதூா இரவிற கணபடாது அல மருவர்.

14. மானம்படவரின உயிா வாழாது தமமுயிா நீபபா நலலோா. "கவரிமா அனனாா உயிா நீப்பா மானம வரின", "மானமபடவரின வாழாமை முனனினிது" எனபன நீதி முதுமொழிகள. ஆயின "அழுககா றெனவொரு பாவி திருச்செறறுத், தீயுழி யுய்த்து விடும" எனறபடி இஙகுப் போரிற புறகிட்ட அதிசூரன அழுக்காறறினாற கொளளப பட்டானாதலின தான உயிா நீககாது வஞசனையால வெலல எணணினன. இது தீயோா செயலேயாம.

15. இஙகு நாயனாரின திருநீறறுவழிபாட்டின திறநதெரிநது அதிசூரன தானும நீறு புறம பூசி வஞசிகக முறபட்டான. மெய்ப் பொருளநாயனாரை முதத நாதன வஞ்சித தான. உலகியலில இவவாறு வஞசிபபாா பலருளா. ஆயின அதுகொணடு அடிமைத திறததிறகிழுககினறு. இது பறறித திருவேடததை இகழ்தல அறியாமையாம்

16. திருநீறிட்டாா எவரேனும அவாதமது பிற திறஙகளை ஒனறும ஆராயாது திருவேடததால் அறியபபடும அடிமைததிறமே பேணிக கவலாது தொழுவது தீவிரதர அனபாம. இதுவே திருவேட வழிபாட்டின உயாநத நிலை. இஙகு நாயனாா பகைவனது நெறறியிற புதியதாயத திருவெணணீறு கணடாா அவனது பகைமை, அழுககாறு, தாயப்போா, வஞ்சனை, முனனைத தோலவி முதலிய எலலாம தெரிநதும, "நீறிட்ட ஒனறினாலே சிவன சீரடியாராயினாா. இவா என உயிா கொளளககுறிததாரேனும இவவடியாா குறிவழி நிறறல் கடன" எனறமைநது நினறதனோடு, "இந்த அடியாாககுப் பழிவாராது நிறறலும கடன" எனறு அவன தன கருததுமுறறுவிககும் வரை பாவனைககாக வாளும பலகையும தாஙகி நினறாா. வெறறிககேயமைநத தமது தோள வலியும வாளவலியும் காணாது போாககளததில, வலியிழநத மாறறானிடததுத திருநீறு ஒனறினையே கணடு திருநீறறு வழிபாட்டின பொருட்டுத் தமது உயிரைக காணிககையாக ஈநத நோமையை உனனுக. இவா நோமைககும ஆணமைககும இலக கியமாயினா எனபதனறி அனபுககும் இலககியமாயினா.

17. மெயயுணர்வு நோபபட்ட போதில ஆாவமுதற குறறஙகள எலலாம இருநத இடம தெரியாது அகனறுபோம.

18. எனனானறும அனபே வெலலும வஞசனை தோறகும இசசரிததததில் அதிசூரன் வஞ்சிததுத தான நினைநதபடி முடிததான எனறு உலகா எணணுவா. ஆயின அவன வெனறானலலன என முனனா விளககபபட்டது. பணடுதிருநீறு பாஙகிற பயிலாத கடையோனும இவரது அனபின திறஙகணடு அதறகுளளாகி நீறிட்டான நாயனாரது நனமைத துறையொழுககம நளளானகிய அதிசூரனும போறறும் படி அவனை அடிப்படுததியது. முனனை போரில் ஆண்மையும வீரமும வெனறன. பினனைப்போரில அனபும திருநீறும வெனறன. 481 பாாககக.

19. அனபு நிலைககு ஏதமாக உலகில வெளித தோறறததிற காணபபடுபவை யெலலாம் உணமையில் இறைவனருளால உலகபாசமறுதது உயாநிலை தா வருவனவே

யாம். உடம்பை அறுத்துக் குணஞ்செய்யும் மருத்துவன்போல இங்கு இறைவனருளே பற்றலர் கைவாளால் நாயனாரது உலகத்தொடர்பை அறுத்து அவருக்கு இறைவனை யென்றும் பிரியா அன்பு நிலையாகிய நித்திய வின்பத்தை யளித்தது.

20. கொலைநீதி என்பது ஒரு நீதி, தன்னைக் கொல்லவந்தானைக் கொல்க என்பது மற்றொரு நீதி. போர் முனையிற் பகைவனைக் கொன்று வெல்வது நேரிய போரின் உலக நீதி. அங்ஙனங் கொல்லாது விடுத்தல் இந்நீதியிற் பிழை; தற்கொலை பாவம். அவ்வாறே பிறர் தம்மைக் கொல்ல வந்தபோது தற்காக்கும் வலி பெற்றிருந்தும், தற்காத்துக் கொள்ளாது பிறனாற் கொலையுண்ண நிற்றல் தற்கொலையோடொப்பப் பாவமாம். இவையெல்லாம் உலக நிலையிற் புண்ணிய பாவங்களுக் கேதுவாகிய அறநூல் விதிகள். இவ்விதிகள் இங்கு நாயனார்பாற் சாரா என்க, என்னை? சாமானிய மான உலகியலறநூல் விதிகள் உலகிறந்த நிலையில் நிற்கும் எந்தம் பெருமக்கள் செயல்களை அளக்கும் அளவு கோல்களாகாமையினென்க. இவைபற்றி 364-ல் உரை பார்க்க. அன்றியும் இவ்வறநூல் விதிகள் உலகில் நல்வாழ்வும் மறுமையில் புண்ணிய பாவப்பயனும் அளிக்க வல்லனவன்றி வீடாகிய உறுதிப் பயன் றருவன அல்ல. மக்களது உலக வாழ்க்கையின் பயனாவது வீடுபேறாம். வீடுபெறுவது சாத்தியப் பொருள், வாழ்வு அதற்குச் சாதனம். சாதனத்தால் அடையப்படு பொருளாகிய வீட்டுநிலையைப் பெற வரும் இச்சமயம் அதனைக் கைவிட்டு உடலை ஓம்பி உயிர் வாழ்வதாயின் அதுவே தற்கொலையாகும் என்பது இறைவனாற்றுணிபு.

21. இங்கு அதிசூரன் சிவனடியாரைப் பகைத்து வஞ்சித்து எரிவாய் நரகினை யடைந்தான் என்க. இவ்வாறே மெய்ப்பொருணாயனாரை வஞ்சித்த முத்தநாதனும் நரகினை அடைந்தவனாவன். "பகைத்து நரகினைச் சென்றடைந் தோர்" (38) என்று திருத்தொண்டர்புராணவரலாற்றில் உமாபதிசிவனார் அருளியதுங் காண்க. "பாதகன்" என ஆசிரியர் குறித்ததும் உன்னுக. ஆயின் இவன் நெற்றியில் நீறு கண்ட பொழுதே சீர் அடியாராயினார் என்று நாயனார் கொண்டொழுகினரே யெனின், அஃதுண்மையே! அது நாயனாரின் மனநிலை. அப்பக்கம் அதுவே அவர்க்கு வீடளித்தது. ஆயின் இப்பக்கம், அதுவே அரனடியாரை வஞ்சித்துத் தீங்கிழைத்த பாதகப் பயன் தந்து இவனை நரகத்திற் செலுத்துதற்கும் இழுக்கில்லை. நாயனாரின் நல்லொழுக்கம் அவர்க்கு நற்பயன் தருவதாமன்றி அவ்வொழுக்கத்து நில்லாத பிறர்க்கு நற்பயன் றராதென்க. "பாவ மறுப்பது நீறு", "முத்தி தருவது நீறு" என்பன முதலாகச் சொல்லப்பட்ட வேத விதிகள் அதிசூரன்பாற் பொருந்தாவோ? அவன் பூசிய நீற்றினால் அப்பயன் அடையானோ? எனின் அடையான் என்னை? அவன் நீற்றைப் பேணி யணியாது உள்நெஞ்சில் வஞ்சகக்கறுப்பு முடன்வைத் தணிந்தான். "வேட நெறி நில்லார் வேடம் பூண்டென் பயன்?" என்பது திருமந்திரம் - முதற்றந்திரம் - (128) இவன் வஞ்சம், அழுக்காறு, அவா முதலிய மனக் குற்றங்களெல்லாம் பொருந்தினான். போர்நீதி யறத்தினின்றும் வழுவினான். பொருட் பற்றினால் விழுங்கப்பட்டான். ஒரு சிறிதும் பரனை நினைந்தானல்லன். "பரனை நினைந்து இம்மூன்றும் விட்"டார்க்கு வரும் திருநீற்றுப் பயனை இவன் எங்ஙனம் அடைவான்? என விடுக்க.

விரும்பி யுண்ணினும் விரும்பாது வெறுத் துண்ணினும் பலன் றரும் மருந்து போலத் திருநீறு பவநோய் தீர்க்கும் பெரு மருந்தன்றோ? எனின், அதுவுண்மையே! நோய் மிக வலிமைப்பட்டமையால் மருந்து உள்ளே புகுப் பயன்றரா நிலையுற்ற பிணியாளன்பால் அம்மருந்து மேனின் றொழிவதுபோல ஈண்டு இப்பெரு மருந்தாகிய திருநீறும் உட்செல்லாதுவிடுதலிற் பயன்றருமா றில்லை என்க.

22. அடியார்க்கு வரும் ஏதங்களை வாயினாற் சொல்லுதலும் பாவம் பயக்கும்.

23. நிராயுதரைக் கொல்வது போர் முறையன்று. அது பழியாம்.

24. உயிர்கள் தனிதது நில்லாது ஒரு சாரபு பற்றியே நிறகும இயல்பின. உடல, பொருள, உறவு முதலிய நிலையில்லா உலகச் சாரபுபறறி ஒழுகாது, சாததிர உணாச்சி, குரு உபதேசம் முதலியவை வாயககப் பெறுதல நலவினைப பயததால உளதாம. அதனுல் சிவசாதனச சாரபு பறறி ஒழுகும ஒழுககம வரும. இடையூறுக எதுவரினும அதனிற பிறழாது ஒழுகினுல அது சிவனிடததிற சோககும. இஙகு நாயனுா உடல் - பொருள - முதலிய பொயச் சாரபுகளை விடடுத திருநீறறு வழிபாடடின நலம எனறும குனறுதொழுகியதனுல இறைவனைப பிரியா அனபு நிலை அடைநதனா

25. திருநீறு அரனைப்போலவே தொனமை யுடையதும அழிவிலலாததுமாம. திருநீறறின உண்மை வழிபாடு உயிருககுப் பாசநீககமும சிவபபேறும தரும. திருநீற றினை உபாசனை செயவது சிவனை உபாசனை செயவதாம திருநீறு அருடசததி யின உருவம "பராவண மாவது நீறு" எனபது தமிழமறை. (வணணம - வணம என நினறது.) அருடசததி திருநீறறினைக கருவியாககொணடு அதனிடமாய நினறு தன தொழில செயயும. தனனெடு நீஙகாது பொருநதிய குணமாகிய அருடசததியை யுடையவன இறைவன. எனவே, குணியாகிய அவனேடொபபக குணமாகிய அருளும அதன கருவியாகிய திருநீறும அநாதியேயாம்

"தேசமலி பொதுஞானச செவவொளியுந திகழபதியா
மீசனது நடததொழிலு மிலஙகுபல வுயிாததொகையும
பாசமுமங கதுகழியப பணணுதிரு வெணணீறு
மாசிறிரு வெழுததஞசு மநாதியிவை யாருக"

என்ற கோயிற புராணப் பாயிரத திருவாககுங காணக.

ஏனுதிநாதநாயனுர்புராணம் முறறும்



எயினனூர்த் தலக்குறிப்புக்கள் சில—இததலம ஏனனூா எனவும வழஙகப் பெறும இதன கிழககே ஒரு நாழிகையளவில திருநறையூாச சிததீசசரமும, வடககே ஒரு நாழிகையளவில அரிசிறகரைபபுததூரும, மேறகே ஒரு நாழிகையளவில் (மருத நல்லூா என வழஙகும) திருககருககுடியும உளளன. கருககுடியிலிருநது எயின னூருககு நேரே ஒரு பாதை உணடு கோடைகாலந தவிர ஏனைககாலஙகளில இத தலததுககுச செலலுதல மிகச சிரமம. எயினனூர் எனபது மதில காரணமாக வநத பெயரெனறும, ஏனுதி எனபது சேனுபதி எனபதனமரூஉ எனறுங கூறுவாரு முணடு.

இததலககுறிப்புககளும திருவுருவப படிமஙகளுமபெறப பெருமுயறசிசெயது உதவினவாகள எனது அரிய நணபாகளான பணடிதா - திரு. அ. கநதசாமி பிள்ளை அவாகளும, திரு. T V. சதாசிவபணடாரததாா அவர்களும, திரு. மு அருணுசலம B.A., அவாகளுமாவாாகள திருவுருவப படிமஙகள எடுதது உதவியவா குமபகோணம தேவார பாடசாலைத தாபகா - திரு உததணடி செட்டியாரவாகளின புதலவா திரு. சாட்சிலிங்கஞ் செட்டியாா அவாகள. இவாகளுககு எனது கடபபாடுடைய நனறி உரியது.



சீ - காளம் - அத்தி — சீகாளத்தி
(சிலந்தி பாம்பு யானை)

இத்திருவுருவங்கள்
திருக்கோயிலி னுட்சுற்றில் உள்ளவை.
—பாட்டு - 650 - (திருஞான புரா. 1021) - பக்கம் - ௮௨௯



காளத்தித் திருக்கோயில் - ஐந்து கோபுரங்கள்
(மலை மேலிருந்து பார்வை)

உ
சிவமயம
திருசசிறறமபலம

# 10. கண்ணப்ப நாயனூர் புராணம்

தோகை

"கலைமலிநத சீாநம்பி கண்ணப்பர்க் கடியேன" —திருத்தோண்டத்தொகை

வகை

"நிலததிற நிகழ்திருக காளததி யாாதிரு நெறறியினமே
னலததிற பொழிதரு கணணிற குருதிகண டுணணடுங்கி
வலததிற கடுஙகணை யாறறன மலாககண ணிடநதப்பினுன
குலததிற கிராதனங கண்ணப்ப னுமென்று கூறுவரே"

—திருத்தொணடர் திருவந்தாதி

விரி

650. மேவலர் புரஙகள் செறற விடையவர் வேத வாய்மைக
காவலர் திருககா ளததிக கணணபபர் திருநா டெனப
நாவலா புகழ்ந்து போறறு நலவளம பெருகி நினற
பூவலா வாவி சோலை சூழநதபொத் தப்பி நாடு.

புராணம்:—தமது கணணையிடநது இறைவனது கண்ணிலே அபபியதனுற் கணணபபர் எனறு போ பெறற நாயனூாது வரலாறும பணபும கூறும பகுதி. இறுதத முறையானே இலைமலிநத சருககதது மூனருவதாகிய கணணபப நாயனூா புராணங கூறத தொடங்குகினருா.

தோகை:—கலைகள யாவறறினும மேமபடடு ,விளஙகும சிறபபினைப பெறற தலைவராகிய கணணப்ப நாயனுருககு நான அடியேனுவேன **கலைமலிந்த சீர்** - எலலா நூலகளாலும விதநது பேசபபட்ட சிறப்பு **மலிதல்** - மேமபாடுறறு நிறைதல. இஙகுச **சீர்** எனறது அனபின சிறபபினை. வீடுபேறும உலக வாழவுமாகிய நிலைகள இரணடிற்கும ஒப்ப இனறியமையாது வேணடபபடும சிறபபாவது அனபே எனபது எலலாக கலைகளுககும ஒப்ப முடிநத உணமை. **நம்பி** - ஆடவரிற சிறநதோன. "நமபி எனபது நாமச சிறப்பே" - பிஙகலம. "ஆடவன கொனறு னசசோ !" என இவரது மெய்காப்பாளரும புகழவும், "மாறிலாய நிறக" எனறு இறைவரும விளிககவும வாயநத சிறப்புக்களை இஙகு உனனுக. **கண்ணப்பர்** - இது இறைவனுககு இவா தம கணணை யிடநது அபபிய காரணம்பறறி இறைவன தநத திருபபெயா; இவரது பெறறோாகளால் இடப்பட்ட பெயரனறு சரிதக குறிபபும தேறறமும பெற இபபெயராற குறிததாா.

வகை:—பூவுலகிற சிறநதுவிளஙகும திருக்காளததி இறைவரது நலத்தைததரும் திருககண்ணில் குருதிபொழியக கணடு மனநடுஙகி அம்பினுலே தனது வலதுகண்ணைத தோண்டி அப்பினவா வேடாகுலததுதித்த கண்ணப்பராமென்று சொல்வர் பெரியோா.

**நிலத்தில் திகழ்** - உலகில் தட்சிண கயிலாயமென்று விளங்குகின்ற **நெற்றியின் மேல்** - முகத்தினிடத்து. **நெற்றி** ஆகுபெயராய் ஈண்டு முகத்தை உணர்த்தி நின்றது. **நலத்திற்றரு கண்ணிற் பொழிந்ததி கண்டு** என மாற்றுக. **நலத்தில்** - ஏழாவதன் உருபு இரண்டாம் வேற்றுமைப் பொருளில் வந்தது. ஈண்டு **நலம்** என்றது "அங்கணர் கருணை கூர்ந்த வருட்டிரு நோக்கத்தினை" (753) **உண்ணடுங்கி** - இதன் விரிவு புராணம் 170-ம் திருப்பாட்டு முதலியவற்றாலறிக.

**வலத்தில் மலர்க்கண் இடந்து** - என்று கூட்டுக. **கிராதன்** - வேடன். அப்பின் வன் கண்ணப்பனும் என்று கூட்டுக. பெரியோர் என்ற தோன்றா எழுவாய் வருவிக்க.

பெயரும் சரிதக்குறிப்பும் பெருமைப் பண்பும் முதனூல் பேசிற்று. இவர் பேறு பெற்ற தலமும் சரித வரலாறும் மரபும் பெயரும் பிறவும் வகைநூல் வகுத்தது. இவை விரிந்தபடி புராணத்துட் காண்க.

650 (இ - ள்) வெளிப்படை. அடையலாரது முப்புரங்களை அழித்த விடையவராகிய வேதவாய்மைக் காவலரது திருக்காளத்தியிலே பேறடைந்த கண்ணப்ப நாயனாரது திருநாடாவது, புலவர்கள் புகழ்ந்து பாராட்டும் நல்ல வளங்கள் பெருகி நிலைத்ததும் பூக்கள் மலர்ந்த வாவிகளும் சோலைகளும் சூழ்ந்ததுமாகிய பொத்தப்பி நாடாகும் என்று சொல்வர் பெரியோர்.

(வி - ரை) **மேவலர்** - அடையலார் பகைவர். **புரங்கள்** - முப்புரம். **செற்ற** - சினந்து அழித்த. **செற்ற** என்றதனால் வேண்டுதல் வேண்டாமையிலாத இறைவனுக்குச் செற்றம் முதலிய குற்றம் ஏற்றியதாகாது எனக் குறிக்க. **விடையவர்** - என்றார் **விடை** - தருமதேவதையாகிய இடபம். புரங்களை இறைவன் எரித்தது மறத்தினைப் போக்கி உயிர்களுக்குத் துன்பந்துடைத்துப் போகமளித்தற்கேயாம். தருமம் யுகந்தோறுங் குறைந்துவந்து இறுதியில் அழியாது இறைவனிடம் ஒடுங்கி நிற்குமென்பர். இனி, "தடமதில்க ளவைமூன்றுந் தழலெரித்த வந்நாளில் இடபமதாய்த் தாங்கினான் திருமால்காண் சாழலோ" (திருவாசகம்) என்றபடி முப்புரமெரித்த ஞான்று விடையாய் நின்ற திருமாலின் மீது எழுந்தருளியவர் என இரண்டையும் உடன் குறிப்பார் **செற்ற விடையவர்** என்றார் என்பதுமாம். முப்புரமெரித்தல் என்பது மும்மலகாரியங்களை அழித்தலாகிய இறைவனது செயலைக் குறிப்பதாகக் கூறுவர் திருமூல நாயனார்.

**வேதவாய்மைக் காவலர்** - வேதங்களில் விதிக்கப்பட்ட அறம் - வாய்மை - என்னுமிரண்டில் அறத்தை மேல் விடையவர் என்றதனாற் கூறினாராதலின் ஏனை வாய்மையை இதனாற் குறித்தார். "அறவினை யாதெனிற் கொல்லாமை", "ஒன்றாக நல்லது கொல்லாமை மற்றதன், பின்சாரப் பொய்யாமை நன்று" என்றிவ்விரண்டினையும் வரையறுத்து முறைப்படுத்திய நீதிநூலும் காண்க. வேதமும், அறத்தைச் செய - சத்தியத்தைப் பேசு - என்று இம்முறையிலே பேசிற்று. இம்முறைபற்றியே இங்கு ஆசிரியர் **விடையவர்** என்றும், அதன்பின் **வாய்மைக்காவலர்** என்றும் வைத்த அமைப்பும் காண்க. கொல்லாமை அறமாகியவழி, அஃது அவ்வறக்கடவுள் புரங்கள் செற்றார் என்றதனோடு முரணுமை மேலுரைக்கப்பட்டது. இதனைக் "கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல்" என்பது போலக் காண்க.

இங்கு இச்சரித்திலும் நாயனார் பல பிராணிகளை வேட்டையாடிக் கொன்று இறைவனுக்கு நிவேதித்தனர். அவை கொலையாகாது அவற்றை ஈடேறச் செய்த அருட் செயலேயாயின என்று பின்னர்க் காண்போம் "ஒளிநின்று கொன்றருளி"- (790) என்பர் ஆசிரியர் இச்சரிதக் குறிப்பும் பெற இங்கு இவ்வாறு தொடங்கினார்.

**வாய்மை** - வாயின் தன்மை அது சத்தியத்தினைப் பேசுதல். இதுவே, சத்தியத்தை உன்னும் உள்ளத்தின் நிலையில் **உண்மை** என்றும், அதனை மெய்யாரச் செய்யும் நிலையில் **மெய்மை** எனவும் பெற உள்ளது. சத்து - அழியாதது. இங்கு

இச் சரிதத்தில இறைவா தமது நினமலமாகிய சததிததிருமேனியிற கணபோலவும அதிற் குருதிபோலவும காட்டினா. இவ்வாறு இல்லாதவறறை உளளனபோலக காட்டியவரை **வாய்மைக் காவலர்** என்ற தெனனை ? எனின், அவை நாயனாரின உணமையைக காட்ட எழுநதன ஆகலின வாயமைககாவலின நிகழ்நதன எனக. இதுவும் இச்சரிதக குறிப்பாதல காணக.

இவவாறன்றி வேதம் உபசார மாததிரையாய எலலாத தேவரையும் சொலலுமாயினும உண்மையிற சிவனையே முதலவனாக உளளததில (இதயததில) வைததாக கூறும ஆதலின அவவாறு வேத உணமையாய நின்ற **காவலர்** என்றலுமாம.

**திருக்காளத்தி** - சிலநதியும, காளனும் (பாமபு), அததி(யானை)யும பூசிததுப பேறு பெறறமையால இப்போ பெறறது "இநதமலை காளனொ டததி தமமி லிகலிவழி பாடு செய விறைவா மேவு, மநதமிலசீாக காளததி மலையாம" (திருஞான - புராண - 1021) முதலியவைகாணக. தலவிசேடம பாாகக.

**திருக்காளத்திக் கண்ணப்பர்** - காளததியிலே வழிபட்டுக கணணப்பிபபேறுபெறறவா என்றது சரிதக குறிபபு காளததியும கணணபபரும பிரிககககூடாதபடி யிணைநதுள்ள நிலையும குறிப்பதாம. கணணப்பா என்ற பேர காளததியிற போநதது எனபதும குறிததாா.

**கண்ணப்பர் திருநாடு** - **திருநாடு** - அவதரிதத நாடு. **கண்ணப்பர்** - இவருககுத தாய தநதையா இட்ட **திண்ணன்** என்றதனிலும இபபெயரே சிறந்தது. இஃது இறைவன தநதது. ஆசாரியாகள யாவரும இப்பெயாகொணடே துதிததனா இஃது அவா சரிதங குறிபபதுமாம, ஆதலின இபபெயரால தோறறுவாய செயதனர்

**நாவலர் புகழ்ந்து போற்று நல்வளம்** - குறிஞ்சிநில வளததைத தமிழ் இலககணம் முறை செயயும வகையினைப **புகழ்ந்து** என்றும, இநநாடுக குறிஞசி, தலையனபுக கிலககியமாய் நிறகும நாயனா அவதரிககும பேறு பெறற நாடாயினமையின் **போற்றும்** என்றும கூறினா. இது பறறியே **வளம்** எனனாது **நல்வளம்** என்றதுமாம. அச்சிறபபு மிகுதியும பெறறதனொடு எஞஞானறும நிலைபெறவும பெறற தெனபாா **பெருகி நின்ற** என்றா **நாவலர்** - கலைவாணி யருளபெறற கலை நாவலரும, ஞான வாணி தந நாவிற பதியப் பெறற ஞான நாவலரும என நாவலராவாா இருவகையினா. இஙகுக கூறிய நாவலா பிறகூறிய நிலையினராகிய நககீரதேவா, சமய குரவர் முதலிய ஞானத தமிழ நாவலா. பதினொராந திருமுறை முதலாயின அருட்பாட்டுககள காணக.

**பூ அலர் வாவி சோலை** - வாவியிற பூபபன தாமரை முதலிய நீாபபூககள நால்வகைப பூககளில ஏனை மூனறும சோலையிற பூபபன. இவை யெலலாம இநநாட்டிற காண உளவாம எனபாா **வாவி சோலை** என்று சோததுககூறினா. **வாவிசோலை** - உமமைத தொகை. இவை ஏனை நாட்டிற போலச செயறகையானனறி இஙகு இயலபிற பொருநதுவன என்ற குறிபபுப பெறச **சூழ்நத** என்றா.

**பொத்தப்பி நாடு** - காளததிமலைச சாரலுககு வடககே 40 - 50 நாழிகை யளவில் உளளது. குறிஞசிப பகுதியைச சேர்நத மலைநாடு. இப்பெயா இனறும வழககி லிருககினறது. பொததப்பி நாடடைக் கணணபபா திருநாடெனப எனக கூட்டுக.

**போற்ற—பெருக—போத்தப்பி**—எனபனவும பாடஙகள. 1

651. இததிரு நாடு தனனி லிவாதிருப் பதியா தெனனி
னிததில வருவிச சார னீளவரை சூழ்நத பாஙகா
மததவெங களிறறுக கோட்டு வன்றொடர் வேலி கோலி
யொததபே ராணஞ சூழ்நத முதுபதி யுடுப்பூ ராகும. ௨

**(இ - ள்)** வெளிப்படை இநதத திருநாட்டிலே இவாது திருபபதியாவது யாது என்னில, முத்துககளைக கொழிததது வரும அருவிகள ஓடுதற கிடமாகிய சாரலகளை

யுடைய நீண்ட மலைகள் சூழ்ந்த பக்கத்தில் மதம் பொருந்திய யானைகளின் கொம்பு களால் வலிய தொடர்ந்த வேலியிட்ட அதனால் ஒரே தன்மைத்தாகும் பெரிய மதி லரண் சூழப்பட்டு விளங்கும் பழம்பதியாகிய **உடுப்பூர்** என்பதாம்.

(வி - ரை) **திருநாடு - திருப்பதி** - என்புழித் திரு என்பன நாயனார் அவதரிக்கும் நலம் பெற்ற சிறப்புக் குறித்தன. பெரியவர்கள் அவதரித்ததனால் அந்நாடு பெருமை பெறும் என்றதனை "அறந்தருநா வுக்கரசும் ஆலால சுந்தரரும் பிறந்தருள உள்ளதனால் நம்மளவோ" என்று திருமுனைப்பாடி நாட்டுக்கும், "ஐயர் நீரவ தரித்திட விப்பதி யளவில் மாதவ முன்பு, செய்ததவாறு" - திருஞான - புரா - (179) என்று நகரத்துக்கும் சிறப்புக் கூறிய வகையில் ஆசிரியர் அறிவித்தருளுதல் காண்க.

**நித்தில அருவி** - மலையின் மூங்கில் - யானைக்கோடு முதலியவற்றினின்று பிறக்கும் முத்துக்களை வாரிவரும் அருவிகள்.

**நீள்வரை சூழ்ந்த பாங்கர்** - உயர்த்தாலும் பரப்பினாலும் நீண்ட மலைகளாற் சுற்றப் பட்ட பக்க இடங்களில். **மத்த** மதத்தையுடைய, வடசொல் "மத்தோன்மத்த னாகி" என்ற திருவாசகமுங் காண்க. இங்கு மதம் யானைகளுக்கு இயற்கை யடைமொழி. **வெம்மை** - கொடுமை.

**வன் தொடர் வேலி கோலி** - யானைக் கொம்புகளை வரிசையும் வலிமையும் பெற்ற தொடர்ச்சியாய் நாட்டி வேலியாக அமைத்து. மலைச்சாரலாதலின் புலி முதலிய கொடிய மிருகங்கள் மிக்கு வாழும், அவை பதியினுள்ளே புகுந்து மக்களையும் அவர்கள் கவர்ந்து வளர்க்கும் ஆனிரை மான முதலியவற்றையும் துன்புறுத்தாதபடி மதில்போல நகர்காவல் செய்வதனைக் குறித்தது **வேலி கோலி** என்றார்.

**ஒத்தபேர் அரணம்** - புறப்பகையாகிய பகைவர் வாராது காப்பது நீள்வரை சூழ்ந்த மலையரண்; உட்பகையாகிய ஏனை மிருகங்கள் வாராது காப்பது யானைக் கொம்பின் வேலியாலாகிய இந்த மதிலரண், இவ்விரண்டும் ஒத்துச் சூழ்ந்து பெரிய அரண்களாய் இந்தப் பதியைச் சுற்றியிருந்தன என்க. எனவே, இப்புராணத் தலைவராகிய நாயனார் புறப்பகை உட்பகை எனும் இவ்விரு பகையும் வாராது முற்பிறப்பிலே தவம் புரிந்து காவல் செய்து இங்கு வந்தவதரித்து இறைவனடி கூடியதாகிய இச்சரித்திரத்துக்கு ஏற்கக் காவலப் பொருளைக் குறித்த நயமுங் காண்க.

**முதுபதி** - பழம்பதி. **பதி** - மலை நாட்டு ஊர்களுக்கு வழங்கும் பெயர்களில் ஒன் றும் குறிஞ்சி நிலத்து ஊர்கள், சீறூர் (664) சிறுகுடி - குறிச்சி என்பர். குறிச்சி வாழ்க்கை (657 - 687) என்றது காண்க. இந்நாளிலும் மலைசார்பதி - இருளர்பதி என் னும் வழக்குக்கள் மலைநாட்டில் (கொங்கு நாட்டில்) வழங்குவன காண்க. **ஆக்கம்** உயிர் களுக்கு ஆக்கம் தரும் இடம் என்ற குறிப்புமாம். 2

652. குன்றவ ரதனில் வாழ்வார் கொடுஞ்செவி ஞமலி யார்த்த
வன்றிரள் விளவின் கோட்டு வாரவலை மருங்கு தூங்கப்
பன்றியும் புலியு மெண்குங் கடமையு மானின் பார்வை
யன்றியும் பாறை முன்றி லைவன முணங்கு மெங்கும். ௩

(இ - ள்) வெளிப்படை. அப்பதியில் வாழ்பவர்கள் மலைவாழ்நராகிய குன்றவர்கள். அப்பதியின் இடமெங்கும் வளைந்த காதுகளையுடைய நாய்களைக் கட்டிய வலிய கூட்ட மாகிய விளாமரக் கிளைகளில் வார்களையுடைய வலைகள் பக்கங்களில் தொங்க, காட்டுப் பன்றியும், புலியும், கரடியும், கடமை முதலிய மானினங்களும் என்றிவற்றின் பார்வை மிருகங்களும் உள்ளன, அன்றி, இல்லங்களின் முன்னராய பாறை முற்றங்களில் ஐவன அரிசியும் உணங்கும் (உலரும்).

**(வி - ரை)** **அதனில் குன்றவர் வாழ்வார்** என மாற்றுக.

**குன்றவர்** - குறிஞ்சிநில மக்கள். இவர்கள் கானவர் (662) வேடுவர் (654), குறவர் (664) இறவுளர் (665), வேடர் (655), மறவர் (656) எனவும் பெறுவர். இப்பெயர்கள் பலவும் இப்புராணத்தினுள் வழங்கிய இலக்கிய அமைவுங் காண்க.

**கோடுஞ்செவி ஞமலி** - காது வளைந்து தொங்கியிருத்தல் சிறந்தசாதி வேட்டை நாய்களின் இலக்கணங்களில் ஒன்றென்பர். வேட்டை பயில்வோர் பலர் தொங்கிய காதுடைய நாய் வகைவ்ய வளர்த்தல் கண்கூடு. வேட்டையில் இவர்களுக்கு நாய்கள் பயன்படும் செய்தி பின்னர் 717 - 725 - 734 முதலிய பாட்டுக்களிற் காண்க-

**வன் திரள் விளவின் கோட்டு** - வரைசூழ்ந்த குறிஞ்சிநிலமாதலின் விளாமரங்கள் கூட்டமாக அங்கு அப்பதியில் ஓங்கி வளர்ந்திருந்தன என்பதாம். அவை நாய்களைக் கட்டி வைத்தற்கும், மேற்கொம்புகளில் வார்வலைகள் தொங்கவிட்டு வைத்தற்கும் உதவுவன. "பார்வை யாத்த பறைதாள் விளவின்" (பெரும்பாணாற்-95) என்றதும் காண்க.

**வன் திரள் விளா** - குன்றவர் தமது குறிச்சி வாழ்க்கைக் குடியிருப்பிடங்களை விளாமரங்கள் சூழ்ந்த சூழலின் அமைத்தனர் அன்றித், தம் குடியிருப்பிடங்களைச் சூழ விளாமரங்களை வைத்து வளர்த்தனர் என்றலுமாம். விளாமரச் சூழலின் காற்று உடற்சுகந் தருவதனோடு அவை இவர்களது முயற்சியின்றியே இயல்பின் வளர்ந்து பலன் தருவன. அவற்றின் பழங்கள் சுகந்தரும் உணவாதலும் காண்க. "வேரி விளங்கனிக் கவளங் கொள்வார்"-(684) என்று பின்னர்க் கூறுதலும் உன்னுக. விளாமரத்தின் குணம்-"காசசுவாசங் கதித்த வரிடுமுதற், பேசரிய தாகமிவை பேசுங்கால் - வீசு, தபித்தலைச்செய பித்தந் தரிக்குமோ பூவிற், கபித்த மரமிருக்குங் கால்"-(கபித்தமரம்-விளாமரம்), விளாம்பழத்தின் குணம் - "எப்போது மெய்க்கிதமா மீளையிரு மலக்கமும், வெப்பாகுந் தாகமும்போ மெய்ப்பசியா—மிப்புவியி, லென்றுங் லுங்கனிமே லிச்சைவைத்துத் தின்ன வெண்ணித், தின்றால் விளங்கனியைத் தின்" - என்ற பதார்த்தகுண சிந்தாமணிப் பாட்டுக்களுங் காண்க. விளங்கனியின் ஓடு முதலியவை மருந்தாக உதவுதல் மருத்துநூல்களுட் காண்க.

**வார் வலை** - வாரும் வலையும். 724 - பார்க்க. இவைகள் வேட்டைக் காடு காவல் செய்து அமைத்து மாக்களை அகப்படுத்த வுதவுவன. 718 - 724 - 736 முதலிய பாட்டுக்களில் வார் வலையை இவ்வேடர்கள் தொழிற்படுத்திய முறை காண்க. **வார் வலை** - நீண்ட - பெரிய - வலை என்பாருமுளர். அது பொருந்தாமையறிக.

**பன்றி - புலி - கரடி - யானை** - குறிஞ்சிநில விலங்குகள்.

**பார்வை** - பார்வை மிருகங்கள். வேடர் மிருகங்களைப் பிடித்துப் பழக்கிவைத்து அவற்றி னுதவிகொண்டு அவற்றினினங்களைப் பற்றுதற்குப் பயன்படுத்திக் கொள்வர். "மானைக் காட்டி மானைப் பிடிப்பதுபோல" என்றதொரு பழமொழி வழக்கும் இதினின்றெழுந்ததாம் இறைவன் அவ்வவுயிர்க்கும் அவ்வவையாயத் தோன்றி அருள்புரிவன் என்ற ஞானசாத்திரக் கருத்துங் காண்க "பார்வையென மாக்களைமுன் பற்றிப் பிடித்தற் காம் போர்வையெனக் காணா புவி" என்பது திருவருட்பயன் **பார்வை** - என்றதற்கு மிருகங்களைப்போலச் செயற்கையாற் செய்யப்பட்ட மிருக உருவங்கள் என்பாருமுளர். அது பொருந்தாமையறிக. இதுபற்றி 672-ல் உரைத்தவை காண்க. பார்வை உள்ளன என்று வருவித்து முடித்துக்கொள்க.

**பாறை** - கற்பாறை. இவற்றையே குன்றவர் தமது குறிச்சியிலே முற்றங்களாகக் கொள்வர் **ஐவனம்** - மலைநெல் இது குறிஞ்சித் திணையின் உணவுகைகளில் ஒன்றும் இங்ஙிலத்தவர்களின் உணவுகைகளை உருசிபெறச் சமைத்துக் காட்டிய திறம் 683-684 பாட்டுக்களிற் காண்க

**உணங்கும்** - உலரும் இந்நெல்லைச் சேமித்து வைத்துக்கொள்ளும் பொருட்டுப் பாறையில் உலர்த்தி எடுத்தல் மரபு.

இப்பாட்டால், இப்பதியின் மக்கள் - மாக்கள் - மரம் - தொழில்-உறு முதலிய பலவும் நாடகச் சுவைபெற இயற்கை வருணனையாகத் தன்மையணியில் வைத்து ஆசிரியர் அமைத்துக்காட்டிய அழகு காண்க *

அதனில் (பதியில்) எங்கும் குன்றவர் வாழ்வார்; எங்கும் வன்றிரள் விளா ஓங்குவன, அவற்றிற் கொடுஞ்செவி ஞமலி ஆர்க்கப்பட்டுள்ளன, அவற்றின் கோட்டில் வார்வலை மருங்கு தூங்கும், அடியில் பின்றியும் புலியும் எண்கும் கடமையும் மானுமாகிய பார்வை உள்ளன; அன்றி ஐவனமுழுமணங்கும், என உரைநடையிற் கூட்டி முடித்துக்கொள்க.

வன்றிறல்—என்பதும் பாடம் 3

653. வன்புலிக் குருளை யோடும் வயக்கரிக் கன்றி னோடும்
புன்றலைச் சிறும கார்கள் புரிந்துட னாட லன்றி
யன்புறு காதல் கூர வணையுமான் பிணைக ளோடும்
இன்புற மருவி யாடு மெயிற்றியர் மகளி ரெங்கும். ௪

(இ - ள்) வெளிப்படை - அப்பதியில் எங்கும் வலிய புலிக்குட்டிகளோடும் வெற்றியுடைய யானைக்கன்றுகளோடும், புன்றலையினையுடைய வேட்டுவச்சிறுவர்கள் விரும்பி விளையாடுதல் உள்ளது. அன்றி அன்போடு ஆசைமிக அணைகின்ற பெண் மான்களோடு இன்பமுறக் கூடி விளையாடும் வேட்டுவச் சிறுமிகளும் உள்ளார்.

(வி - ரை) புலிக்குருளை - யானைக்கன்று - மான்பிணை - இவை அவ்வச்சாதிக் குரிய பெயர்மரபு "எப்பொரு ளெச்சொலி னெவ்வா றியார்ந்தோர், செப்பினர் அப்படிச் செப்புதல் மரபே" என்பதிலக்கணம். "நாயே பன்றி புலிமுயல் நான்கும், ஆயுங் காலைக் குருளை யென்ப" (8) "யானையுங் குதிரையுங் கழுதையுங் கடமையும், ஆனொ டைந்தும் கன்றெனற்குரிய" - (15), புல்வாய் நவ்வி யுழையே கவரி சொல்வாய நாடிற் பிணை யென்ப படுமே". (57). என்ற தொல்காப்பிய மரபியற் சூத்திரங்கள் காண்க. வன்புலி - வயக்கரி - அடைமொழிகள் அவ்வச் சாதிக்குரிய பண்பு குறித்தன.

புன்றலைச் சிறுமகார்கள் - புன்றலை - எண்ணெயிடுதல், சிக்கறுத்தல் முதலிய பண்பாடின்றிக் குறுகிச் சுருண்டு பிளவுபட்டுச் செறிந்த மயிர்கொண்ட தலையினையுடைய. மக - மக்களிளமைப் பெயர். ஆர் - என்னும் பன்மைவிகுதி யேற்று மகார் என நின்றது. "குழவியு மகவு மாயிரண் டல்லவை, கிழவ வல்ல மக்கட் கண்ணே"— (மரபியல் - 23) என்பது தொல்காப்பியம். பின்னர் மகளிரை வேறு பிரித்தமையால் இங்கு மகார் - என்பது இடநோக்கி ஆண்மக்களைக் குறித்து நின்றது வேடர் சிறு மகார்கள் புலிக்குருளை யானைக்கன்றுகளோடு விரும்பி விளையாடுகின்றார்கள். வேட்டுவச் சிறுமியர் மான்பிணைகளோடு இன்புற மருவி யாடுகின்றார்கள். இவ்விருவகையினரும் அங்குள்ளார். ஆடும் மகளிர் என்றதுபோல ஆடும் மகார்கள் என்றது மகார்கள் ஆடல் என்றது அவராடல்களின் வீரச்சிறப்பு நோக்கி எனக். இக்கருத்துப்பற்றி மகார்கள் ஆடலன்றி என்றாரேனும் ஆடும் மகார்களன்றி என்பது கருத்தாகக்கொள்க. வேடர் மகார்கள் மரபுக்கேற்ப இளமையிலே வீரத்தன்மையுடையார் என்பது குறிப்பு. புரிந்து - விரும்பி

அன்புறு காதல் கூர அணையும்-பழக்கத்தாலும் புல் முதலியன ஊட்டிப் பாராட்டும் அன்பினாலும் தமக்குரிய இயற்கைத் தன்மையினாலும் மான்பிணைகள் மகளிர்பால் தாமே அணைகின்றன எனக். பெண்களின் கண்கள் தமது கண்களின் மேலாயின்மை

*இதுபற்றி எனது சேக்கிழார் - 127-128 பக்கங்களில் உரைத்தவையுங் காண்க.

கண்டு அவர்கள்பால் மான்கள் அணைகின்றன என்பதுமொரு குறிப்பு. எயிற்றியர் - குறிஞ்சிநிலப்பெண் மக்களின் பெயர். ஈண்டு மகளிர் என்றது சிறுமிகளை.

மான் ஆன் முதலிய பிளந்த குளம்புடையவாகிய காயிலெதினனும் பிராணிகள் கூட்டமாய் வாழு மியல்புடையனவாம் அவை மக்களால் வீட்டில் வளர்க்கப்பட்டு அவர்களோடு மிக விரைவிற் பழகி அன்பு பூண்டு வாழ்வன. குடும்பப் பிராணிகள் (Domestic animals), என்பர் நவீனர். இவற்றின் இணையற்ற புனிதமான அன்புக்கு எதிராகத் தம்மை அன்போடு அணையும் இவற்றை இழிதகைமையால் வன்புடன் கொன்று தின்று வாழ்கின்றவர் பலர். இவர்கள் கொடுமைதா னென்னே!*

சிறுவர்களும் சிறுமியர்களும் இளமையிலே தங்கள் தங்கள் தகுதிக் கேற்றவாறு வெவ்வேறு வகை ஆடல்கள் பயில்கின்றனர். மகார்கள், வீரம், ஆண்மை, பெருமிதம், வலிமை முதலியவற்றின் மூலங்களாகி வளர்பவராதலின் புலிக்குருளை கரிக்கன்று இவைகளுடன் ஆடினர். மகளிர் அவ்வாறன்றி அன்பு இன்பம் முதலியவற்றின் நிலைக்களமாய வளர வேண்டுபவர்களாதலின் அன்புற அணையும் மான் பிணைகளோடு இன்புற மருவியாடினர். ஆணும் பெண்ணும் மக்கட்டன்மையில் ஒரு தன்மையினரே யென்றும், இருவருமுடன்பயின்று ஒரேவகைக் கல்வி, பயிற்சி, தொழில் முதலியவற்றிற்குரியார் என்றும் கூறி அதுபற்றி ஒரே பள்ளியில் இருவரும் உடன்பயிலக் கல்விச்சாலையும் பயிற்சியமைப்பும் அமைத்தும் பலவாறு கூவித் தடுமாறி யுழன்றும் உலகுக்கு நிலைகேடுவிளைக்கும் நவீனர் இக்கருத்துக்களை யறிந்து சிந்தித்துத்திருந்துவாராக.

இங்குக் கூறிய புலிக்குருளை முதலியன மேலே கூறிய பார்வை மிருகங்கள் ஈன்றவையாம் என்றும், அன்றி இவையும் பிடித்துக் கட்டி வளர்க்கப்படுவனவாம் என்றும் கொள்ளக்கிடக்கின்றது. 675-ம் பாட்டுப் பார்க்க

ஆடும் மகார்களன்றி ஆடும் எயிற்றியர் மகளிர் எங்கும் உள்ளார் எனக், உள்ளார் என்றது வருவிக்கப்பட்டது.

இவ்வாறே மேல்வரும் இரண்டு பாட்டுக்களிலும் வினைமுற்று வருவிக்க. 4

654. வெல்படைத் தறுகண் வெஞ்சொல் வேட்டுவர் கூட்டந் தோறும்
கொலலெறி குத்தென் றார்த்துக் குழுமிய வோசை யன்றிச்
சில்லரித் துடியுங் கொம்புஞ் சிறுகணுங் குளியுங் கூடிக்
கல்லெனு மொலியின் மேலுங் கறங்கிசை யருவி யெங்கும். ௫

(இ - ள்) வெல்படை - வெல்லும் படையும், தறுகண்மையும், கடிய சொல்லும் உடைய வேட்டுவர் கூட்டங்களி லெங்கும் கொல - எறி - குத்து என்று ஆரவாரித்துக் கூடுதலால் எழும் ஓசைகளேயல்லாமல் சில்வாய பரல்களையுடைய உடுக்கையும், ஊது கொம்பும் சிறிய முகமுடைய சிறுபறையும் சேர்ந்து பெருகுகின்ற ஒலியினும் மிக்குச் சத்தித்து ஓடும் அருவிகள் அங்கே எங்கும் உள்ளன.

*எங்கள் கொங்குநாட்டு மலைச்சாரற் காடுகளிற் கொடிய மிருகங்கள் உண்டு. அவற்றை வேட்டையாடச் சென்றனர் ஒரு வேட்டைக் கூட்டத்தார். வேட்டை தொடங்கி இவர்கள் செய்த ஆரவாரங்களுக்குப் பயந்து வேட்டைக் காட்டுக்குள்ளிருந்து ஒரு கலைமான் வெளியில் ஓடிவந்து இவர்களிடமே நேரில் அடைக்கலம் புகுந்ததுபோல அன்புடன் வந்தணைந்தது. ஒரு சிறிதும் கருணையின்றி உடனே அதனைப் பற்றித் தலையைத் திருகிக் கொன்று எடுத்துக்கொண்டனர். இக்கொடுமையைக் கண்ட அக்கூட்டத்திற் சேர்ந்த என் நண்பர் ஒருவர் நடுநடுங்கி அதுமுதல் அவ்வேட்டைக் கூட்டத்தாரை விட்டகன்றனர். இது நான் அறிந்த செய்தி.—பதிப்பாசிரியன்.

(வி - ரை) படை மெய்யின் றொழிலும், தறுகண்மை மனத்தின் றொழிலும், வெஞ்சொல் வாக்கின் றொழிலுங் காட்டலின் இவ்வேட்டாது மன மொழி மெய் என்ற மூன்று கரணங்களின் கொடுமைத் தொழிலுங் குறித்தபடி.

கோல் - எறி - துத்து - இவைகளே இவர்கள் வாக்கினின்று வரும் சொற்கள். இவற்றை வெஞ்சொற்கள் எனக் குறித்தபடி. ஒரு கூட்டத்தாரிற் பெரும்பான்மை வழங்கும் வழக்கச் சொற்களே அவர்தம் வாழ்க்கை நிலையைப் புலப்படுத்துவன எனப தற்கு இஃது ஏற்றதோர் உதாரணமாதல் காண்க.

ஆர்த்துக் குழுமிய ஓசை-இச்சொற்களுடன் ஆரவாரித்துக் கூடுதலால் எழும் ஓசை.

சில் அரி துடி - சிலவாகிய உருக்குப்பரல் உள்ளே இடப்பட்ட வெண்டயம் சுற்றிய துடி. இவ்வெண்டய முதலியவை துடியின் வெளிப்புறம் அடித்தார்ப்பன. சிலம்பு முதலியவை மணி - பரல் முதலியவற்றை உள்ளே இடப்பட்டு ஆர்ப்பன. இங்குச் சில்லரி என்பதற்குத் துடியினுள் இடப்பட்ட பரல் என்பாரும் உண்டு.

கொம்பு - வாய் வைத்து ஊதி முழக்கும் வாத்திய விசேடம். கொம்பு போன் றமைதலின் இப்பெயர் பெற்றது.

ஆகுளி - சிறுபறை. சிறுகண் - துடியின் முகத்தை நோக்க இவை சிறிய முகமுள்ளன எனக் குறித்தது. இவ்வாத்திய விசேடங்கள் குன்றவர்களின் வேட்டை யிற் பயன்படும் வகை 720—725 பாட்டுக்களிலும், குறிஞ்சிநிலத் திருவிழா முதலிய சிறப்புக்களிற் பயன்படும் வகை 687-ம் பாட்டிலும் காண்க.

கூடிக் கல்லெனும் ஒலி - இவ்வாத்திய ஒலிகள் ஒருங்கு சேர்ந்தபோது உள தாகிய பேரோசை.

துடி - கொம்பு - ஆகுளி - இவை குறிஞ்சித்திணைக்குரிய பறை விசேடங்கள்.

கோல் - எறி - துத்து என்னும் பொருள்பற்றி நிகழும் சொல்லோசைகளை வேறு பிரித்தும், துடி முதலியவற்றின் பொருள்பற்றாது நிகழும் ஓசைகளை வேறு பிரித்தும் கூறினார். எறி - கையினின்றும் வெளியே எறியப்பட்டு ஊறு செய்யும் படைவகையின் றொழில் குறித்தது. துத்து - அவ்வாறு வெளிப் போகாது கையினின்றே ஊறு செய்யும் படைவகைத் தொழில் பற்றியது. இவ்விருவகைப் படைகளாலும் செய்யுந் தொழிலுடையார் இக்குன்றவர் என்பது கருத்து.

கறங்கு இசை அருவி - மிக உயரத்தினின்றும் பள்ளந்தாழ் உறுபுனலாய மலையின் வீழருவிகளாதலின் அவற்றின் வேகமும், கற்களின் மோதுதல் வளைந்து வளைந்து செல்லுதல் முதலியனவும் ஒன்று கூடி ஓர் இசைபட ஒலிக்கும் அருவி. இவற்றைக் கவி வல்லோர் பலவாறு சுவைபடக் கூறி அனுபவிப்பர். வேடரின் சொற் செயல்களுக் கேற்ற துடி முதலியனவும், இவற்றின் மேலாயக் கறங்குமிசை யருவியும் கூடிய மூவ கைச் சத்தங்கள் குறித்த நயம் காண்க. "இமிழிசை யருவியோ டின்னியங் கறங்க" என்று இவற்றைக் குறித்த திருமுருகாற்றுப்படையுங் காண்க.

அருவி - குறிஞ்சியின் நீர்நிலை. 5

655. ஆறலைத் துண்ணும் வேட ரயற்புலங் கவர்ந்து கொண்ட
வேறுபல் லுருவின் மிக்கு விரவுமா நிரைக ளன்றி
யேறுடை வானந் தன்னி லிடிக்குர லெழிலி யோடு
மாறுகொண் முழக்கங் காட்டு மத்தகைமா நிரைக ளெங்கும். ௬

(இ - ள்) வெளிப்படை. அப்பதி யெங்கும் ஆறலைத் துண்ணுதலைத் தம் தொழி லாகக் கொண்ட வேடர்கள் அயற்புலங்களிற் கவர்ந்து கொண்டு வந்த வெவ்வேறாகிய பல உருவினால் மிக்கனவாய்ப் பொருந்திய ஆநிரைகளல்லாமல் வானில் இடியேற்றின

குரலுடன் சூழும் மேகங்களோடு எதிராகிய முழக்கத்தைக் காட்டும் மதமுடைய யானைக் கூட்டங்களும் உள்ளன.

(வி - ரை) **ஆறலைத்துண்ணும்** - ஆறலைத்துண்ணுதல் - ஆநிரை கவர்தல் இவை குறிஞ்சிநில மக்களாகிய குறவர் செய்தொழில்களாதலின் ஆறலைத்து உண்ணும் என்றார். Criminal tribes என்பார் நவீனர். **ஆறுஅலைத்தல்** - வழிபோவாரை அலைத்து அவர் பொருள்களைக் கவர்ந்து அது கொண்டு உண்டு வாழ்தல். "கொடுகு வெஞ்சிலை வடுக வேடுவர் விரவலாமை சொல்லித், திடுகு மொட்டெனக் குத்திக் கூறைகொண் டாறலைக்கு மிடம்" என்ற திருமுருகன்பூண்டித் திருப்பதிகத்தில் ஆளுடைய நம்பிகள் இதன் இயல்புகளை விரித்திருத்தல் காண்க. சிலப்பதிகாரம் வேட்டுவ வரியும் பார்க்க.

**அயற்புலம் கவர்ந்து கொண்ட ஆநிரைகள்** - ஆநிரை கவர்ந்து கொள்ளுதல் பண்டைத் தமிழ் நூல்களால் அறியப்படும் போர்முறைத் தொடக்கத்திற் பகைவர் நாட்டின் பசுக் கூட்டங்களைக் கவர்ந்து செல்லும் மரபு பற்றியது. **அயற்புலம்** - பகைவர் நாடு. இதற்கு இவ்வாறன்றி அயல்நாடுகளினின்றும் கொள்ளை யடித்து வந்த பசுக் கூட்டம் என்பாரும், வேறுபட்ட நிறங்களோடு கூடிய விலங்குகள் என்பாரும் உண்டு. **ஆறலைத்துண்ணும்** என அதனை அவர் உணவுத் தொழிலாக வேறு பிரித்துக் கூறினமையின் ஆநிரை கவர்தல் அவரது சீவனத் தொழிலன்றெனக.

**ஆநிரை** - குறிஞ்சி நிலக் கருப்பொருளாகாது முல்லைக்குரிய கருப்பொருளாதலின் **அயற்புலங் கவர்ந்து கொண்ட** - விரவும் **ஆநிரை** என்றார். அவைகளன்றிக் **கைம்மாநிரை** எங்குமுள்ளன என்றதனால் குறிஞ்சியும் முல்லையும் விரவிய திணை மயக்கங் கூறியவாறும், இத்திணைக்குரிய கருப்பொருள் கூறியவாறுமாயிற்று.

**வானந் தன்னில் இடிஏறுடைக் குரல் எழிலி** என மாற்றுக. **இடியேறு** - வலவுரு மேறு (622) என்றது காண்க. ஆண்டுரைத்தவை பார்க்க. எழிலி (மேகம்)-யானைகளின் பெரிய கரிய உருவிற்கும், **இடிக்குரல்** - அவற்றின் பிளிறலோசையாகிய பேரோசைக் கும், **மழைநீர்** - யானைகள் மிகுப்பொழியும் மதநீருக்கும் உவமை. மெய்யும் பண்பும் பற்றி வந்த உவமம். **ஏறுடைய வானம்** என்பதற்கு உயர்ந்த வானம் என்றுரைப்பாரு முண்டு.

**கைம்மா** - கையையுடைய மிருகம் யானை. காரணப் பெயர். **நிரை** - கூட்டம். யானைகள் கூட்டமாகக் கூடிவாழுமியல்புடையன என்பதும் உன்னுக. இவை கூட்ட மாகக் கூடிப் பிளிறும் ஒலி மலையின் எதிரொலியுடன் சேர்ந்து மேகங்களினின்றும் எழும் இடி போன்றன என்பதாம். மலைகளின் உச்சியில் மேகந் தவழ்வன எனவே, மேலே இடியும், மலைச்சாரலில் யானைகளின் பிளிறலும் ஒன்றற்கொன்று எதிர்த்து மாறு கொண்டு முழங்குதலைக் காட்டுவன எனக. மேகமுங் களிறு மெங்கும் - (81) முதலியவை காண்க. 6

656. மைச்செறிந் தனைய மேனி வன்றொழில் மறவர் தம்பா
லச்சமு மருளு மென்று மடைவிலா ருடைவன் றோலார்
பொச்சமையி னறவு மூனின் புழுக்கலு மூணவு கொள்ளு
நச்சழற் பகழி வேடர்க் கதிபதி நாக னென்பான். எ

(இ - ள்) வெளிப்படை. மை செறிவு கொண்டாற் போலும் மேனியும், வன் றொழிலும் உடைய மறவர்கள் தம்மிடத்து அச்சம் அருள் என்னுமிவ்விரண்டும் எக்கா லத்தும் அடைதலில்லாதவர், வலிய தோலாலாகிய உடையினையுடையார், மலைத் தேனும் ஊன் கலந்த இனிய சோறும் உண்ணுகின்றவர்களாய நஞ்சு ஊட்டிய அழல் அம்புகளை உடையவர்கள்; இத்தகைய வேடர்களுக்குத் தலைவன் நாகன் எனப் படுவான்.

**(வி - ரை) மைச் சேறிந்தனைய** - அலவழிககண் வலலொறறுமிககது.

**வன்றெழில் - கொல் - எறி - குதது (654)** எனற சொறகளாற பெறப்பட்டவையும, மேற்பாட்டிற கூறியவையுமாம.

**மறவர்** - குறிஞ்சிநில மககள பெயா.

**தம்பால் என்றும் அச்சமும் அருளும் அடைவிலார் - அச்சம்**-தீய விலஙகுகட்கும மககட்கும் எககாரணததாலும அஞசுதல் விலஙகிற கஞசாமை வேட்டையாலும, மககட் கஞசாமை ஆறலைததல அயறபுலஙகவாதல முதலியவறறாலும பெறபபடும. **அச்சம் அடைவிலார்** - எனபதறகுத தீவினையசச மிலலாதார எனறலுமாம. **அருள்** - இரககம. **தம்பால் அடைவு இலார்** - தமமிடததுச சேராதார - வாராதுகாததவா. அசசம, அருள எனனு மிரணடுமே உயிாக கொலையிற றுணியாது மககளைத தடுதது அறவழியில் நிறுததி இறைவனபாற செலுததுவன. "அஞசி யாகிலு மனபுபட் டாகிலும, நெஞசம வாழி நினைமட நெஞசமே" எனபது அபபா சுவாமிகள திருவாககு. "அஞசி லனபி லொனறறி யாதவன" எனற கமபா பாடடுங காணக. இவவிரணடும தமமிடதது அடையாது நினறவா இமமறவா எனறமையால அறமெனபதே இவா அறியாா; வனகண்மையும கொலையுமே செயவாா எனறவாறும **மறவர்** எனற பெயராற குறிததது காணக. **வன்தோல் உடையார்** என மாறறுக

**போக்கை** - மலை காடு எனறலுமாம. **ஊன் இன் புழுக்கல்** - ஊன கலநத இனிய பலவகைச சோறு. 683 பாடடுப பாாகக. **உணவு கொள்ளும்** - எனறதனால மலைநாட்டு உணவுகளை உணாததியபடியாம.

**நச்சு அழல் பகழி** - நஞ்சு ஊட்டி வடிதததாயத தீபபோனற அமபு. இவறறின ஊறுபடவே, ஊறறின வலியானும அதுவனறி இவற்றில ஊட்டியுள்ள நஞசின கலபபினுலும பிராணிகள இறநதுபடுதல திணணமாதலின இவவகைப் பகழிகளை இவவேடா கையாளவது வழககம. இவவகை அமபுபடட பிராணி அபபோது அஙகு நினறு தபபி ஓடிவிடினும பிறிதோரிடததில வீழநதுபடும பொருட்டுப பகழிககு நஞ்சூட்டுவா. **நஞ்சு** எனறது எதுகை நோககி **நச்சு** என விகாரமாயிறறு. இதன செயலும விகாரமுடைய வலிநத செயலாதல குறிபபு.

**அதிபதி** - தலைவன. "தஙகளகுல முதறறலைவ னாகி யுளள தணடெரிய னாகன" (693) முதலியவை காணக.

**நாகன்** - மலைவாழநராகிய குறிஞ்சித திணைககுரிய மககள இட்டு வழஙகும பெயாகளில ஒனறு. இவாகள அததிணைககுரிய நாகம முதலியவறறைத தெயவமாகக் கொணடும வனதெயவஙகளை வழிபட்டும அவறறின பெயாகளையே தம மககடகு இடடு வழஙகுவா. "காட்டிலுறை தெயவஙகள" (696), "கொறற வன தெயவஙகள" (700) எனபன காணக. இவவாறு அஙகஙகும தாநதாம வழிபடு தெயவஙகளின பெயரை மககளிட்டு வழஙகுதல எஙகும காணும உலக வழககு. பினனாத ததைதை நாணண - காடன என வரும போகளையும காணக.

**என்பான்** - எனபபடுவான. படுவிகுதி தொககு நினறது. "இலவாழவா னென பான" எனபுழிப்போல. வருமபாட்டிலும இவவாறே **தத்தை யென்பாள்** - எனறுா. இவை பெயாப பயனிலை கொணடு முடிநதன.

இபபாட்டால இஙகில மககளும, தொழிலும, உணவும, பிறவும கூறபபட்டன. 7

657. பெறறியாற் றவமுன செயததா னாயினும பிறபபின சாாபாற
குற்றமே குணமா வாழ்வான ; கொடுமையே தலைநின றுளளான ;
விறறொழில விறலின மிககான , வெஞசின மடஙகல போல்வான ;
மறறவன குறிசசி வாழ்ககை மனைவியுந ததைதை யெனபாள. அ

(இ - ள்) வெளிப்படை. பெற்றிமையினாலே முன்னைப் பிறப்பிற் றவஞ் செய்தவனாயினும், (இப்பிறப்பில) தான பிறநத குலததின சாாபினாலே குற்றங்கள் செய்வதனையே குணமெனக் கொண்டு வாழ்பவன், உயிர்களுக்குக் கொடுமையே செய்தலில் மிக்குள்ளவன; விற்றொழிலில் வலிமை மிக்கவன, மிக்க சினமுடைய சிங்கம் போன்றவன, மற்று அவனது குறிச்சி வாழ்க்கையில் மனைவியா யமைநதவள் தத்தை எனப்படுபவள்.

(வி - ரை) இதனால் நாகனது குலம், குணம், தொழில், மனநிலை, ஒழுக்கம், இல் வாழ்க்கை முதலிய பலவுங் கூறப்பட்டன வரும்பாட்டில் இவ்வாறே இவனது மனைவி தத்தையின் தன்மைகளைக் கூறுவதும் காண்க.

**பெற்றியால்** - பெற்றி - தன்மை இங்குக் கண்ணப்ப நாயனாரைத் தன் மகனாராகப் பெறும் தன்மை குறித்தது

**முன் தவஞ் செய்தானாயினும்** - என மாற்றுக. முன் - முற்பிறப்பிலே. **தவம்** - நோன்பும் அருளுடைமையுமாம் தவமே ஒருவன் பெறும் நலங்களுக்கெல்லாம் காரணமா மென்பது இங்கு இவன் முன் தவஞ் செய்தா னென்பது அத் தவங்காரணமாக இவன் பெற்ற பெற்றியாகிய காரியம்பற்றி அனுமானத்தா னறியப்பட்ட தென்பார் **பெற்றியால்** என்றார். "தக்கார் தகவில ரென்ப தவரவ ரெச்சத்தாற் காணப் படும்" (குறள்) என்ற உண்மை இப்பிறப்பினளவேயன்றி முற்பிறப்பின் தகுதிக்குஞ்செல்லும்.

**பிறப்பின் சார்பு** - முன் தவஞ் செய்து பெற்றி பெற்றான் இப்பிறப்பிற் கொடுமையும் கொலையுமே செய்யக் காண்டுமே எனின், அது அவனது இப்பிறப்பின் சார்பினாகியது என்பார் இவ்வாறு குறித்தார். **சார்பு** - இங்கு இப்பிறப்பின் வந்த குலச் சார்பு குறித்தது **பிறப்பின் சார்பு** என்றது குற்றங்களையும், **குணமா வாழ்வான்** - என்றது அவனது மனச்சார்புகளையும், **தலைநின்றுள்ளான்** என்றது அவனது செயல்களையும் குறித்தன. ஒரு குலத்திற் பிறந்தும் அப்பிறப்பின் சார்பு பற்றாது திருநாளைப்போவார் போல ஒழுகும் பெரியாருமுளர். ஆயின் இங்கு நாகன் பெறற்கரிய மகப்பேறு பெறும் பெற்றிக்குரியவாறு மட்டும் தவம் புரிந்தானே யன்றித் தவஞ்செய்யும் நற்சார்பில் வருதற்குரிய தவம் ஒன்றும் புரிந்தானல்லன் என்பதாம்.

**வில் தொழில் விறல்** கொடுமையில் தலைசிறத்தலுக்குக் காரணங் கூறியபடி. வேடர்க்குச் சிறப்பினுரியது இத்தொழிலே சிலைமறவர் (696), சிலைவேடர் (704), வில் விழா (680), சிலைபிடிப்பித்தார்கள் (689), சிலைத்தொழி லாண்மை முற்றக் கற்றனன் (690), நினது சிலைக் கீழ்த்தங்கி (695) முதலியவை காண்க. சிறுபான்மை பிற படைத் தொழில்களும் (சுரிகை, 740, மற்றப் படைகளும் 691) உரியவாயினும் விற்றொழிலே இவர்க்குப் பெரும்பான்மையு முரித்தாம். விற்றொழிலினும் விறலினும் என உம்மை விரித்துரைப்பினுமமையும்.

**வெஞ்சின மடங்கல் - மடங்கல்** - சிங்கம். இது எப்போதும் சினமுடையதன்று. உணவின் பொருட்டும் வேறு காரணத்தாலும் பிற பிராணிகளின்மேற் பாயும் பொழுதே சினமிகும். ஆயின் நாகன் அதனைப் போன்றானாயினும் எப்போதும் பெருஞ்சினந் தணியாது திறப்பவன் என்பது. இவனை **மடங்கல் போல்வான்** என்றதற்கேற்ப மனைவி தத்தையை **அரிப்பிணவு போல்வாள்** என்றார் இவ்விருவரையும் இவ்வாறு உயர்த்தி உவமித்தது ஒப்பற்ற, "கானவர்க்கரிய சிங்கம்" (690) என்னும் திண்ணனாரைப் பெற நின்றமை நோக்கி எனக

**குறிச்சி** - குறிஞ்சி நிலச்சிற்றூர். சீறூர் - (669).

**வாழ்க்கை மனைவியும்** - வாழ்க்கைத் துணையாகிய இல்லக்கிழத்தியும். உம்மை இறந்தது தழுவியது. "அவர்தங்கண் மனைவி யாரும்" - (363) என்புழிப்போல.

நாகனது இல்வாழ்க்கையை இப்பாட்டானும், வாழ்க்கைத் துணையாகிய தத்தையின் நலத்தை வரும் பாட்டானும், இல்வாழ்க்கைக்கு நன்கலமாகி அறிவறிந்த நன்மகப் பேற்றினை அதற்கடுத்த பாட்டானும் கூறிய வைப்பு முறையும், **புதல்வர்ப்பேறு** என்ற பெயராட்சியும் குறிக்கத்தக்கன. 8

658. அரும்பெறன் மறவர் தாயத் தான்றதொல் குடியில் வந்தாள் ;
இரும்புலி யெயிற்றுத் தாலி யிடையிடை மனவு கோத்துப்
பெரும்புற மலையப் பூண்டாள் ; பீலியுங் குழையுந் தட்டச்
சுரும்புறு படலை முச்சிச் சூரரிப் பிணவு போல்வாள். ௯

(இ - ள்) வெளிப்படை (தத்தை) பெறுதற்கரிய சிறப்புடைய மறவர் தாயத்திலே உயர்ந்த பழங்குடியிற் பிறந்தவள், பெரிய புலிப்பல்லாலாகிய தாலியை இடையிடையே பலகறைகளைக் கோத்துப் பிடரியின் கீழும் நீண்டு தொங்கும்படி அணிந்தவள், மயிற்பீலியும் இலைத்தளிர்களும் மோத வண்டுகள் மொய்க்கும் பூமாலையை அணிந்த, உச்சிக்கொண்டையை உடைய அச்சந் தரும் பெண்சிங்கத்தைப் போன்றவள்.

(வி - ரை) **பெறல் அரும் மறவர்** என்க. **மறவர்** - சாதி. **தாயம்** - அதனுட் பிரிவாகிய குலம். **தொல்குடி** - அதனுட் பிரிவான குடி. "நடைமரபிற் குடிநாப்பண், விலக்கின்மனை யொழுக்கத்தின் மேதக்க நிலைவேளாண், குலத்தின்கண் வரும்பெருமைக் குறுக்கையர்தங் குடிவிளங்கும்" (திருநா - புரா - 15) "அந்தணர்தங் குலமுதல்வ ராசின்மறை, கைப்படுத்த சீலத்துக் கவுணியர்கோத் திரம்விளங்க" (திருஞான - புரா - 15) "தருமுறைக் கோத்திரத்திற் றங்குலஞ் செப்பி" (திருஞான - புரா - 1235) முதலியவை காண்க. **அரும்பெறல் மறவர்** என்றது கண்ணப்ப நாயனாரைப் பெறும் பெரியதோர் பேறு பெற்ற மரபாதலின் என்க. இதனை **வந்தாள்** - என்றதனோடு கூட்டி இம்மரபிற் பெறலரு மணியாய்ப் பிறந்தவள் என்று தத்தையைக் குறிப்பதாய்க் கூறுவாருமுண்டு. **பேற்றியால்** - என்றதற் கேற்ப உரை கொள்வது பொருத்தமுடைத்தாம். "கானவர்தங் குலமுலகு போற்றவந்த கண்ணப்பர்" — திருஞான புரா - 1017 என்றது காண்க. இனி, அரும்பெறற்றொல்குடி எனக் கூட்டியுரைத்தலுமாம்.

**தாயத்து** - பெருங்கிளைகளில் ஒன்றாகிய. **ஆன்ற** - குலவொழுக்கத்தின் மேம்பட்ட. **தொல்குடி** - "இருவர்ச் சுட்டிய பல்வேறு தொல்குடி" (திருமுருகாற்றுப்படை) என்றபடி வழிவழியாக வழாது, நீண்ட காலமாய்த் தொடர்ந்துவரும் பழங்குடி.

**இரும்புலி எயிற்றுத் தாலி** - **இரும்புலி** - பெரும்புலி, வேங்கை. புலிப் பல்லைத் தாலியாகக் கோத்தணிவது குன்றவர் பழமரபு "புலிப்பல் கோத்த புலம்புமணித் தாலி" (புறநானூறு) முதலிய பழந்தமிழ் நூலாட்சிகள் காண்க. **இடை இடை மனவு கோத்து** - என்றமையால் புலிப்பற்கள் பலவற்றை இடையிடையே பலகறைகளைக் கோத்து மாலையாக்கித் தாலியாக அணிவது வழக்கென்பதாம். இவர்களது இளஞ்சிறார்க்கும் இவை போல்வனவற்றைக் காப்பாகவும் அணியாகவும் அணிவது நாட்டு வழக்கு. 669 பார்க்க. **மனவு** - பலகறை. மணமகன் வீரத்தாற் கொன்ற புலியின் பற்களைக் கோத்துத் தாலியாக மணமகளுக்கு அணிவதும் வழக்குப்போலும். "மறங்கொள் வயப்புலி வாய்பிளந்து பெற்ற, மாலை வெண்பற் றாலி" — (வேட்டுவ வரி - 27 - 28) என்பது சிலப்பதிகாரம்.

**பெரும்புறம்** - பிடரியினை அடுத்துள்ள முதுகின் பாகங்களில். **அலைய** - தொங்க. என்பர் மகாலிங்கையர். பிடரியைச் சிறுபுறம் என்னும் வழக்கும் காண்க.

**பீலி** - மயிற்பீலி. இந்நாள் ஐரோப்பியர் முதலிய நவீனர் வழக்கிலும் உயர்குடிப் பெண்கள் தலையில் வான்கோழி (Ostrich) முதலிய பறவையிறகுகளை அணிதல் காண்க. ஆயின் எந்தப் பறவையிறகுகளும் மயிற்பீலியின் அழகுக்கொவ்வா என்பது துணிபு.

இது கொண்டே முற்காலத்தில ஐரோப்பியரும பிறநாட்டவரும, "பீலிபெய சாகாடு" என்று திருக்குறளாசிரியர் உவமான முகத்தாற கூறியது உண்மை முகத்தாலும பொருந்தும எனக் கொள்ளுமாறு பெரிய அளவுக்கு, மயிறபீலியை நமது நாட்டினின் றும ஏற்றுமதி செய்து வந்தார்கள் என்று சரிதங்களா லறிகின்றேம

துழை - சந்தன முதலிய உயர்ந்தசாதி மரங்களின் இளந்தளிர்கள

முச்சி - உச்சியில முடித்த கூந்தல இது கூந்தல முடிக்கும ஐம்பாலில ஒன்று

சூர் - அச்சம அரிப்பிணவு - பெண சிங்கம. பிணா என்றது பிணவு என நின்றது. நிலா நிலவு என வருவதுபோல. 9

659. பொருவருஞ் சிறப்பின மிக்கா ரிவாக்கினிப புதல்வாப பேறே
யரியதென றெவருஞ் சொலல வந்தபடு காத லாலே
முருகல ரலங்கற் சேவவேள் முருகவேள முன்றிற சென்று
பரவுதல செய்து நாளும பராயககட னெறியி னிறபார், ௧0

660. வாரணச சேவ லோடு வரிமயிற் குலங்கள விட்டுத
தோரண மணிக டூக்கிச சுரும்பணி கதம்ப நாற்றிப
போரணி நெடுவே லாற்குப புகழ்புரி குரவை தூங்கப
பேரணங் காடல செய்து பெருவிழா வெடுத்த பின்றை, ௧௧

661. பயிலவடுப பொலிந்த யாக்கை வேடாதம் பதியா நாக்ற
கெயிலுடைப புரங்கள செற்ற வேந்தையார் மைந்த ரான
மயிலுடைக் கொற்ற வூர்தி வரையுரங் கிழித்த திண்மை
யயிலுடைத் தடக்கை வென்றி யண்ணலா ரருளி னாலே, ௧௨

662. கானவா குலமவி ளங்கத் தத்தைபாற கருப்ப நீட
வூனமில பலிகள போக்கி யுறுகடன வெறியாட் டோடும
ஆனவத் திங்கள செலல வளவிலசெய் தவத்தி னாலே
பான்மதி யுவரி யீன்றா லெனமகப பயந்த போது. ௧௩

663. கரிப்பரு மருப்பின முத்துங் கழைவிளை செழுநீர் முத்தும
பொருப்பினின மணியும வேடர் பொழிதரு மழையே யன்றி
வரிச்சுரும பலைய வானின மலர்மழை பொழிந்த தெங்கும ;
அரிக்குறுந் துடியே யன்றி யமரர்துந் துபியு மார்த்த. ௧௪

659. (இ - ள்) வெளிப்படை ஒப்பற்ற சிறப்பினால மிக்கார்களாகிய இவர்க்கு இனிப புதல்வாப்பே றென்பதே கிடைத்தற்கரியதாம என்று எல்லாருங் கூற, அப பேற்றிலே பட்ட ஆசை மிகுதியாலே வாசமிக்கலர்ந்த மாலையணிந்த சேவ்வேலேந்திய முருகவேளினது திருமுன்றிலிற சென்று பரவி நாடோறும பரவுக்கடன பூண்ட நெறியிலே நிற்பார்களாகி, ௧0

660. (இ - ள்) வெளிப்படை. அந்நெறியிலே, சேவற் கோழிகளையும வரிகளை யுடைய மயில்களையும காணிக்கையாக விட்டும, தோரணமாக மணிகளைத் தொங்க வைத்தும, வண்டுகள மொய்க்கும அழகிய கடப்ப மாலைகளைத் தொங்க விட்டும, போரில் வல்ல அழகிய நீண்ட வேலேந்திய முருகப் பெருமானுக்குப புகழ் புரியும குரவைக் கூத்தாட்டப் பெரிய அணங்காடல செய்வித்தும பெருவிழா எடுத்துச் செய்தபின்னர், ௧௧

661. (இ - ள்) வெளிப்படை. பயின்ற வடுக்கள் பொலிந்த உடலினையுடைய வேடர்களது அதிபதியாகிய நாகனுக்கு மதில்களையுடைய முப்புரங்களையும் எரித்த எந்தையாகிய சிவபெருமானது மகனாராகிய வெற்றிபொருந்திய மயில் ஊர்தியினையும் கிரவுஞ்ச மலையினைப் பிளந்த திண்ணிய **வேற்படை** யேந்திய பெரிய கையினையும் உடைய வெற்றி பொருந்திய பெருமையிற் சிறந்த **முருகப்பெருமானது** திருவருளினாலே, ௧௨

662. (இ - ள்) வெளிப்படை. வேடர்களது குலம் விளங்கும்படி தத்தையின் வயிற்றிலே கருப்பம் தரித்ததாக, ஊனமில் பலிகளைக் கொடுத்துக் கடமையாயுற்ற வெறியாட்டுடனே, ஒவ்வொன்றாய ஆயின அந்த மாதங்கள் சென்றனவாக, முன்னே அளவில்லாது செய்த தவத்தினாலே நற்பான்மையுடைய நிறைமதியை உவர்க்கடல் பெற்றது போலத் தத்தை மகவினைப் பெற்றெடுத்தபோது, ௧௩

663. (இ - ள்) வெளிப்படை. யானையின் பெரிய கொம்புகளில் விளையும் முத்துக்களையும், மூங்கிலில் விளையும் செழிய நீர்மையுடைய முத்துக்களையும், மலையில் விளையும் ஏனைய மணிகளையும் வேடர்கள் மகிழ்ச்சியாற் பொழிகின்ற மணிமழையே யன்றி வரிவண்டுகள் எழுந்து பறக்க விண்ணில் மலர் மழையும் எங்கும் பொழிந்தது, சில் லரியுடைய சிறிய உடுக்கைகளே யன்றித் தேவர் துந்துபிகளும் எங்கும் ஆர்த்தன. ௧௪

இவ்வைந்து பாட்டுக்களும் ஒரு முடிபு கொண்டன. இவற்றின் இறுதித் தொடர்கள், நெறியினிற்பார் - எடுத்த பின்றை - அருளினாலே - மகப்பயந்தபோது - துந்துபியு மார்த்த என அவ்வாறே ஒருமுடிபுபடக் கூட்டிமுடிக்குமாறு அமைந்த அழகும் காண்க

659 (வி - ரை) **போநவரும் சிறப்பு** என்றது பெற்றியால் (657), அரும் பெறல் - (658) என முன்னர்க் குறித்தபடி நாயனாரை மகனாகப் பெறும் சிறப்பு.

**இவர்க்கு இனிப் புதல்வர்ப்பேறே அரியது** - இது அந்நாட்டவர் இவர்களைச் சுட்டிக் கூறும் கூற்று. **இனி அரியது** - இவர்களது வயது மிக முதிர்ந்த நிலை குறித் தது. **புதல்வர்ப் பேறே** - மக்களைப் பெறுதலாகிய செயலே. ஏகாரம் தேற்றம். **அரியது** - இன்மை குறித்தது.

**அதன் படு காதல்** - **அதன்** - அதனில். அந்தப் புதல்வர்ப்பேற்றிலே **படு** - உண்டாகிய. படுதல் - உண்டாதல், "ஈத லிசைபட வாழ்தல்" என்புழிப் போல. **காதல்** - ஆசை பலவற்றுள் ஒரு வகை. காதலன் என்பது காதலுக்கிடமாகியவன் மகன் - என்ற பொருளில் வழங்குதல் காண்க

**மூநது அலர் அலங்கல்** - **மூநது** - வாசனை மணம் விரியும் மாலை. இங்குக் குமாரக் கடவுட்குரிய கடம்பமலர் மாலையைக் குறித்தது. "இருள்படப் பொதுளிய பராரை மரா அத், துருளபூந் தண்டார் புரளு மார்பினன்"—என இதனை முதலிற் றேற்றம்பெறத் திருமுருகாற்றுப்படையினுட் கூறியது காண்க.

**செவ்வேல்** - செவ்வொளி வீசும் வேலினையேந்திய. **வேல்**-முருகப்பெருமானது ஞானசத்தி யென்ப

**மூநகவேள்** - **மூநது** - இளமை. என்னானும் மாறாத - அழியாத - இளமையுள்ள வேள் **வேள்** - விரும்பப்படுபவன். இப் பெயரானறியப்படும் கரிய வேளாகிய அழகிய மன்மதனுமுள்ளாதலின் அவனினின்றும் பிரித்துணரும் பொருட்டு **மூநகவேள்** - எனப் பிறிதினியைபு நீக்கிய விசேடணந் தந்தோதினார். இவரது இளமையும் பேரழகும் பற்றி இவர்க்குக் குமரன் - இளையோன் - முருகன் - குழகன் - முதலியவாக வழங்கும் பெயர்களும் காண்க

"ஆயிரங் கோடி காம ரழகெலாந் திரண்டொன் றாகி
மேயின வெனினுஞ் செவ்வேள் விமலமா றுசரணந் தன்னிற

ஞாயநல் லெழிலுக் காற்றா தென்றிடி னினைய தொல்லோன்
மாயிரு வடிவிற் கெல்லா முவமையாய் வருக்க வல்லார் "

என்பது முதலிய கந்தபுராணத் திருவாக்கும் பிறவும் காண்க.

**முன்றில்** - சந்நிதி. **பராவுதல்செய்து** - துதித்து, **விண்ணப்பித்து நாளும்** - தனது கருத்து நிறைவேறும் வரை ஒவ்வொரு நாளும்.

**பராய்க்கடன் நெறி** - பிரார்த்தனை நேர்ச்சியின்வழி. ஒரு குறிக்கோளை உட்கொண்டு செய்யும் வழிபாட்டு நெறி.

**நிற்பார்** - நிற்பாராகி; முற்றெச்சம். நிற்பாராயினார் என வினைமுற்றாக்கொண்டுரைப்பாருமுண்டு. ஒவ்வொரு நாளும் குமாரக் கடவுளின் கோயிலிற் சென்று நேர்ச்சிக்கடன் விதியின்படி ஒழுகி வந்தாராகி என்க. இந்நெறியினை வரும்பாட்டில் விரிக்கின்றார். இக்காலத்துப் பலர் தாம் கோயிலுக்குச் சென்று நின்றொழுகாமலே பிறர் வாயிலாகச் செலுத்தும் நேர்ச்சிகள் பெரும்பயன் தரா என்பதுணர்க. 10

660. **(வி - ரை) வாரணச் சேவல்** - சேவற் கோழி. ஆண்கோழியைச் சேவல் என்பது மரபு.

**வரிமயிற் குலங்கள்** - தோகையில் பல வரிகளும் ஏழு நிறங்களும் கண்போன்ற சித்திர அமைப்புக்களும் உடைய மயில்கள். தொகையிற் பலவாக விடுதலும், வகையில் ஆணும்பெண்ணுமாகச் சேர்த்துவிடுதலும் குறிப்பதுபற்றிக் குலங்கள்என்றார். ஒடு என்றமூன்றனுருபு உடனிகழ்ச்சிப்பொருளில் வந்தது. சேவலும் மயிலும் ஒருசேர விடுதல்குறித்ததாம். இவ்விரண்டும் பிராணிவகையில் ஓரினத்தைச் சார்ந்தவையென வகுப்பர் சாத்திரிகள். சேவல் குமாரக்கடவுளது கொடியும் மயில் அவரது ஊர்தியுமாதலின் அவருக்குகந்தவை இவை குறிஞ்சிக் கருப்பொருள்களுமாம். "அறிந்த புள்ளின் சூழ் சிலம் போசை கேட்டு" - (781) எனக் கோழியைப் பின்னர்ச் சுட்டிக் கூறுதல் காண்க. சூரன் பதுமன் என்ற இரண்டசுரர்கள் ஒருடலில் ஒன்றுகூடி நிற்க, அதனைக் குமாரக் கடவுள் வேலாற் பிளக்க, இருவராகிச் சேவலு மயிலுமாய் வரவே, சேவலைக் கொடியாகவும், மயிலை ஊர்தியாகவும் அவர் கொண்டருளினார் என்பது கந்தபுராணம். இவ்வாறு பலவகையாலும் இவ்விரண்டும் இணைந்தவையாதலின் **சேவலோடு வரிமயில்** என்று கூறினார். கொடியாக உயர்த்தப்பட்ட உயர்வுபற்றிச் சேவலை முதலிற் கூறியதாம். **விட்டு** - இவற்றை விடுதலாவது, தம்பொருளென்று கொண்ட இவற்றைத் தம் சார்புநீக்கி இவை முருகக்கடவுளுக்கு உரியனவாகுக என்று சிந்தித்து அவரது திருமுன்றிலிலே கொண்டுபோய்க் கட்டில்லாது விட்டிடுதல். "ஒருதலை மீன்படுந் தோறும், நட்ட மாடிய நம்பருக் கென்றளிர் முந்நீர், விட்டு வந்தனர் விடாதவன் புடனென்றும் விருப்பால்" (11) என்ற அதிபத்தநாயனார்புராண வரலாற்றினை இங்கு நினைவு கூர்க. இவ்வழக்கு இந்நாளினும் முருகப்பெருமானது பெருங்கோயில் பலவற்றினும் நிகழ்வது காணலாம். இதனால் முருகக் கடவுள் திருவுள்ள முவந்து அருள் தருவார் என்பது.

இவ்வுண்மைகளைச் சிறிதும் உணராது இந்நாள் மாக்கள்பலர் சற்று மஞ்சாது அறியாமை மிகுதியால் வன்கண்மை பூண்டு இவற்றைக் கொன்று தின்று முருகப்பெருமானது கோபத்திற்காளாகிக் கொடுநரகடைகின்றார்கள். இன்னோர் முருகப்பெருமானது கொடியையும் ஊர்தி (வாகனம்)யையும் அறுத்துக் கொன்று அபசாரஞ் செய்து கொண்டே அவனை வழிபாடு செய்வதனால் நரகமடைவதன்றி வேறு என்ன பயன் பெறுவர்? இவர்களது வழிபாடு வஞ்சனையே யாகுமன்றோ? இனியாவது இவ்வுண்மை யுணர்ந்து இன்னோர் முருகப்பெருமானை வஞ்சிக்க எண்ணாது அவருக்குகந்த இப்பிராணிகளையும், மயிலைப் போலவே அவருக்கு வாகனமாகிய ஆடுகளையும், விட்டு, நன்னெறி யொழுகி நன்மை யடைவார்களாக!

**மணிகள் தோரணந் தூக்கி** - என மாற்றுக. மணி மாலைகளைத் தோரணமாகக் கட்டி. அசைந்து ஓசை உண்டாக்கும் மணிகளைத் தோரணமாகக் கட்டி இசைப்பித்தலும் ஒருவகை வழிபாடு. **தூக்கி** என்ற சொல்லாற்றலும் இதனைக் குறிக்கும். இங்கு **மணிகள்** என்றதற்கு இவ்வாறன்றிப் பலவகை மணிகளை மாலைகளாக்கித் தூக்கிக் கட்டி அழகுசெய்து என்றுரைப்பாருமுண்டு.

**நாற்றுதல்** - தொங்கவைத்தல். பூமாலைகளை ஒரே அளவுடையனவாக அறுத்துத் தோரணங்களில் தொங்க வைத்தல் மரபு. "பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை, துணையுற அறுத்துத் தூங்க நாற்றி" என்பது திருமுருகாற்றுப்படை.

**கதம்பம்** - கடப்ப மலர்மாலை. "தாதிவர் பூந் தொடைமாலைத் தண்பந்தர் களு மமைத்து" (267) முதலியவையுங் காண்க.

**போர்அணிநெடுவேலான் - போர் - அணி நெடு** - என்பன வேலுக்கு அடை. **வேலான்** - முருகன். இவற்றை வேலானுக்குக் கூட்டியுரைப்பினுமமையும். "தானைத் தலைவ", "செருவி லொருவ பொருவிறன் மள்ள," "வேல்கெழு தடக்கைச் சால்பெருஞ் செல்வ", "போர்மிகு பொருந" என்பனவாதி திருமுருகாற்றுப் படைத் திருவாக்குக்கள் காண்க. வேலாற்கு - ஆடல் செய்து - எனக் கூட்டிமுடிக்க.

**புகழ்புரி குரவை தூங்க - புகழ் புரிதல்** - அவ்வேலோன் புகழ்களை எப்பொழுதுஞ் சொல்லுதல். "புகழ் புரிந்தார்க் கருள் செய்யு மையஞ்சி னப்புறத்தான்"-திருவாரூர் அப்பர் சுவாமிகள் தேவாரம். **குரவை** - ஒருவகைக் கூத்து. "குரவை யென்பது கூறுங் காலைச், செய்தோர் செய்த காமமும் விறலு மெய்த வுரைக்கு மியல்பிற் றென்ப" என்பதிலக்கணம். இதனை, "காமமும் வென்றியும் பொருளாகக் குரவைச் செய்யுட் பாட்டாக எழுவரேனும் எண்மரேனும் ஒன்பதின்மரேனும் கைபிணைந்தாடுவது" எனவும், "இது வரிக்கூத்தின் ஒருறுப்பு" எனவும், "இது விநோதக் கூத்துப் பகுப்பினுள் வரும்" எனவும் பிறவும் உரையாசிரியர் அடியார்க்குநல்லார் சிலப்பதிகாரம் அரங் கேற்றுகாதை உரையினுள் விரித்தனர். "குரவை யென்ப தெழுவர் மங்கையர், செந்நிலை மண்டலக் கடகக் கைகோத், தந்நிலைக் கொட்பநின் றாட லாகும்" என அதற்கு இலக்கணங் காட்டியதுங் காண்க. (பதிகம் 77)

மலைநாட்டுத் திருச்செங்குன்று என்னும் மலைமேலேறி வேங்கை மரத்தினிழலி னின்று, கண்ணகி, விமானமேறி விண்ணுடு செல்லக்கண்ட வேட்டுவ மகளிர் அவளை வாழ்த்தித் தமது குறிச்சியில் ஒரு குரவைக் கூத்து இயற்றிய வரலாறு பற்றிய சிலப்பதிகாரம் 24 - குன்றக்குரவையுங் காண்க. குரவைக்கூத்துத்தானும் திணைதோறும் அவ்வத்திணைக்குரிய தெய்வத்திறனைப் போற்றி அவ்வம் மக்கள் அவ்வவற்றிற்கேற்ற வாறு ஆடற்குரியதாம். "மாயோன் மேய காடுறை யுலகம்" என்றபடி முல்லைநிலத்துக் குரிய கண்ணன் புகழ் கூறி வாழ்த்தி ஆடியதாகக் கூறும் ஆய்ச்சியர்குரவையும், சிலப் பதிகாரத்துக் காண்க. "சேயோன் மேய மைவரை யுலகமும்" என்றபடி இங்குக் குறிஞ்சித் தெய்வமாகிய வேலோனது புகழைப் புரிந்து அங்கில் மக்கள் ஆடுவது குன்றக்குரவையாம். இக்கூத்தினுள் சிறுகுடியாராகிய குன்றவரது பெண்கள் அருவியிலும் சுனையிலும் நீராடியும், பின்னர்த் தொண்டகப்பறை அடித்தும், கோடு (கொம்பு) வாய்வைத்தும், கொடுமணி யியக்கியும், குறிஞ்சி பாடியும், நறும்புகை எடுத்தும், பூப்பலி செய்தும், காப்புக்கடை நிறுத்தும், பரவல் பரவியும், விரவுமலர் தூவியும், வெறியாடல் செய்து, முருகனையும் அவன்கை வேலினையும் அவனது விறலினையும், எதிர் வேலன்வருக எனக் கைகோத்து ஆடலும் பாடலுமாகப் பயில்வதாம். விரிவு சிலப்பதிகார முதலிய பழந்தமிழ் நூல்களுட் காண்க.

"பெருந்தண் கணவீர நறுந்தண் மாலை, துணையுற அறுத்துத் தூங்க நாற்றி,
நளிமலைச் சிலம்பி னன்னகர் வாழ்த்தி, நறும்புகை யெடுத்துக் குறிஞ்சி பாடி,

யிமிழிசை யருவியோ டினனியங கறங்க, வுருவப் பல்பூத தூஉய வெருவரக,
குருதிச செந்திளை பரபபிக குறமகண, முருகிய நிறுதது முரணின ருடக,
முருகாறறுப படுதத வுருகெழு வியனக, ராடுகளஞ சிலமபப பாடிப பலவுடன,
கோடுவாய வைததுக கொடுமணி யியககி, யோடாப பூடகைப பிணிமுகம வாழததி,
**வேண்டுநர் வேண்டியாங் கெய்தினர் வழிபட "**

எனற திருமுருகாறறுப்படை முதலியனவுங காணக.

**வேலாந்து** - இககுனறககுரவையி னேததப்படுவது முருகபபெருமான கை வேலாதலின **வேலாந்து** எனறார.

" உரவுநீர் மாகொனற **வேலேந்தி** யேததிக
குரவை தொடுததொனறு பாடுகமவா தோழி !"—

" சீாகெழு செநதிலும செஙகோடும வெணகுனறும
ஏரகமு நீஙகா விறைவனகை **வேலனறே**
பாரிரும பெளவததி னுளபுககுப பணடொருநாட்
சூாமா தடிநத சுடரிலைய வெள**வேலே** "—

" அணிமுகஙக ளோராறு மீராறு கையு
மிணையினறித தானுடையா னேநதிய**வே** லனறே
பிணிமுகமேற கொணடவுணா பீடழியும வணண
மணிவிசுமபிற கோனேதத மாறட்ட வெள**வேலே** "—

" சரவணப்பூம பொயகையினிற றுயமா றறுவா
திருமுலைப்பா லுணடான றிருககை**வே** லனறே
வருதிகிரி யோனவுணன மாாபம பிளநது
குருகுபெயாக குனறங கொனற நெடு**வேலே** "—

எனபன ஏறககுறைய இரணடாயிரம ஆணடுகளினமுனனா வழஙகிய குனறககுரவைக கூததினை உடனிருநதுகணட இளஙகோவடிகள சிலபபதிகாரததுககூறிய பாட்டுககள.

**குரவை தூங்க** - குரவைக கூததாட. **தூங்க** - ஈணடு ஆடலும, அதனொடு கலநது பயினற பாடலுமாக இயல எனற பொருளில வநதது

**பேர் அணங்கு ஆடல் செய்து** - **பேர்** - பெரிய - **அணங்காடல்** - வெறியாடல செயது முருகனை ஆவேசிததுவர வழைததல. "வேலன றைஇய வெறியயா களனும" திருமுருகாறறுப்படை "வெறியாட் டூனவிருமபி வேலனவரு கென்றாள", "மாமலை வெறபனோய தீாககவரும வேலன" (குனறககுரவை) எனற சிலபபதி காரமுங காணக இவவெறியாட்டில பயினறவன வேலினை யேநதி முருகனைத துதிததது ஆடல செயது வர, முருகன அவனமேல ஆவேசிதது வருவதும, வநத பினனா அவனிடததுத தாம வேணடிய வரஙகள் கேட்பதும மரபாம இதறகு இவவா றனறி **அணங்கு** - பெண எனறு கொணடு, பெரிய தேவராட்டியை வெறியாட்டயா விதது எனறும, தேவராட்டி சனனதம வநது சொலலி எனறும உரைப்பினுமமையும. ஆடல செயது சனனதம சொலலி, அதனுற பெருவிழா எடுததபின எனறு உரைப பாரு முணடு.

**பெருவிழா எடுத்த பின்றை** - இவவாறு, **விட்டு** - தூககி - நாறறி - தூஙக-ஆடல செயது - கூடிய பெரிய திருவிழாத தொடஙகி நடததிய பினபு. இபபாட்டில விழா அணிவகை கூறினா மேறபாட்டிற சொலலியவை அவவிருவரும தாமே பராவுககடன பூணட நெறிகினற ஒழுககமாகிய பூசனை கூறினா. இபபாட்டில அவர்கள

பிறவைக கொண்டு செயவித்த சிறபபுக கூறினா. விழா வெடுத்தல் - ஒரு சொன னீரமையாயத திருவிழாக கொண்டாடுதல எனும பொருளில வநதது. இததிருவிழா வுககுக கோழி - மயில - விடுதல, தோரண மணிகளும கதமபமும நாறறுதல, குரவை யாடுதல, குரவை பாடுதல, அணஙகாடுதல முதலியவை அஙகஙகளாம.

**எடுத்த பின்னர்**—எனபதும பாடம் 11

**661. (வி - ரை) பயில் வடுப் பொலிந்த யாக்கை** - காடி, புலி, யானை முதலிய கொடிய மிருகஙகளோடும, பகைவாகளோடும போா பயினறதனால உணடாகிய புண களின வடுககள விளஙகுகினற உடமபு இது வீராகளுககு இலககணமாகவும, அவா தம வீரததுககும புகழுககும அடையாளமாகவும கருதபபடும. இததிறததை "வடிவே, மறபபுலி கடிதத வனறிரண முனகை, திறறபடை கிழிதத திணவரை யகல, மெயிறறெணகு கவாநத விருநத ணெறறி" என, நாயனா திருவடிவம முதலியவற றைக கூறுமுகததாலே திருககணணபபதேவா திருமறததில நககீரதேவா காட்டுதல காணக (11-ம திருமுறை) இததிறமாக நாயனாது திருமேனியில ஊறுபட்டன எனறு குறிபபிடவும பொருந்த மரபுடைய ஆசிரியா இதனை நாகனது உடலினமேல வைததுக காட்டிய நயததின அமைதி காணக.

**மைநதரான - அண்ணலார்** எனறு கூட்டுக

**எநதையார்மைநதரான - எநதையார்**-நம எலலாாககும தநதையாராகிய சிவபெரு மான. "எநதை யீசனெம பெருமான"—திருநெலவாயிலாரததுறை - 1 ஆளுடைய பிளளையாா தேவாரம "யாவர்ககுந தநதைதா யெனுமவரிப் படியளிததா, ராவதனு லாளுடைய பிளளையா ராய" (திருஞான புரா - 69) முதலியவறறின கருததுககளை இஙகுவைததுக காண்க

**மயிலுடை. வென்றி** - இவவளவும அண்ணலாருககு அடைமொழிகள். **கொற்ற முடை மயில் ஊர்தி** - என மாறறுக கொறறததையுடைய மயிலாகிய ஊாதி சூரபது மன போரில மாயததினாலே நேமிபபறவையாக வடிவுகொணடு எதிாநதபோது இநதி ரன மயிலுருக கொளள முருககக்கடவுள, அதனமேல ஏறிப போரசெயது சூரனது மாயவுருவைப பிளநதனா. இறுதியில மாயததாற பெரிய மாமரமாயநினற சூரன திருவைச சுவாமியின வேலாயுதம இருகூறாகப பிளநதது அவவிரு கூறுகளில ஒனறு மயிலும மறறொனறு சேவலுமாகி வர, மயிலை ஊாதியாகவும சேவலைக கொடி யாகவும சுவாமி கொணடு ஆட்கொணடனா. இவை,

இநதிர னனைய காலை யெமபிரான குறிபபுந தனமே
லநதமி லருளவைத துளள தனமையு மறிநது நோககிச
சுநதர நெடுஙகட் பீலித தோகைமா மயிலாய்த தோனறி
வநதனன குமரற போறறி மாகத மலைபோ னினறான.

—**சூரபதுமன் வதைப்படலம் - 378**

ஆட்படு நெறியிற சோதது மாதியி னூழ்தந துயககத
தாட்படை மயூர மாகித தனனிக ரிலலாச சூரன்
காட்படை யுளதத ஞகிக கடவுள ரிரியல் போக
ஞாட்பியல் செருககில வநதான ஞானநா யகனறன முனனம செ-494

சீாதிகழ குமர மூாததி செறிவிழி கொணட தொலலை
யூாதியி னிருககை நீஙகி யுணாவுகொண டொழுகி நினற
சூர்திகழ் மஞ்ஞை யேறிச சுமககுதி யெமமை யெனனுப்
பாாதிசை வான முறறும பரியென நடாதத லுறறான. செ - 499

எனபனவாதி கநதபுராண வரலாறறினறிக.

**கோற்றமுடை மயில்** - கோற்றம் - இந்திரனாகிய மயில், சுவாமி அதனை ஊர்ந்து சூரனது சேமிப்புள்ளுருவம் பிளந்த கொற்றத்தையும், சூரனாகிய மயில் தன்னை வென்று அடிப்படுத்தி ஆட்கொண்டருளிய கொற்றத்தையும் காட்டி நிற்பன. ஆதலின் **கோற்றமுடை** என்றார். உடைய என்றது உடை என ஈறு குறைந்தது.

சாகத்தீவில் பிரபாகரன் என்ற அரசனுக்கு அவன் மனைவி சுகுமாரியினிடம் சூரன், பதுமன் என்ற இரட்டைப் பிள்ளைகள் பிறந்தனர். இவர்க்குப் பின் சிங்கனும் அவன் பின் தாரகன் என்பானும் பிறந்தனர். இவர்களுள்ளே சூரன் பதுமன் என்ற இருவருக்கும் அகத்திய முனிவர் முருகப்பெருமானது மான்மியத்தைச் சொல்லியருளச், சூரன் தான் முருகனது ஊர்தியாகிய மயிலாக இருக்க விரும்பினன். பதுமன் அவரது கொடியாகிய சேவலாக விரும்பினன். அவ்வாறே கிரணவிந்து, இடபயோகி என்ற முனிவர்கள்பால் முறையே தாருகையின் மான்மியமும் சாத்தாவின் மான்மியமும் கேட்ட சிங்கனும் தாரகனும் அவ்வவர் ஊர்திகளாக விரும்பினர். இவை பெறுதற் பொருட்டு அவர்கள் தவஞ் செய்தனர். அதன் பயனாகப் பின் இப்பிறவி பெற்றனர் - என்றது முன்வரலாறு. உபதேசகாண்டம் தணிகைப்புராணம் முதலியவை பார்க்க.

**ஊர்தி** - "ஆசைதீரக் கொடுப்பார் அலங்கல் விடைமேல் வருவார்" - (திருக்கடவூர் மயானம் - ஆளுடையபிள்ளையார் தேவாரம்) என்றபடி வேண்டுவோரிடத்து வேண்டு நடை நடக்கும் வெள்ளேறேறி நடந்து வந்தருளுவார் **எந்தையார்** அவர் **மைந்தராகிய** முருகப்பெருமான் வேண்டுவோர்பால் அவரினும் விரைந்து **தமது மயிலுடைக் கோற்ற ஊர்தியினை** ஊர்ந்து பறந்து வருவாராதலின் இங்குப் **பேருவிழா எடுத்தபின்றை** (660) **அவரருளினாலே** (661) **தந்தைபாற் க்ருப்பநீட** (662) மகப்பேறு விரைவிற் கூடிற்று என்று குறிப்பார் அருளுடைப் பெருமான் மைந்தராந் தன்மையையும் மயிலூர்தியுடைமையையும் முதலிற் சுட்டினார்.

சகச மலமாகிய ஆணவமலத்துடன் கூடிய ஆன்மா இருதிற னறிவுளது என்றும், சார்ந்ததன் வண்ணமாவதென்றும் சொல்லப்படும். பளிங்கிற் பவளம் பதித்தது போலத் தன்னை ஆன்மாவில் விளங்கச் செய்து இறைவன் ஆட்கொள்ளும்போது, அதன் அசத்தாந்தன்மை நீங்கும்; சத்தாந் தன்மையே ஓங்கி நிற்கும். அதனை மறைத்து நின்ற ஆணவமலம் வலியற்று இறைவனது ஆனந்தத்தை உயிர் அனுபவித்தற்கு நிமித்தமாய் நிற்கும். "இன்பங் கொடுத்தலிறை யித்தை விளைவித்தன் மலம்" என்றது ஞானசாத்திரம். இங்கு, முருகப் பெருமான் சூரனாகிய மயிலை வாகனமாகக் கொண்டதன் குறிப்பை ஆராயுங்கால் பல உண்மைகள் காணப்படுகின்றன. ஆணவம் கன்மம் மாயை எனும் மும்மலங்களின் நிலையர்களாகியோர் சூரபதுமன், சிங்கமுகன், தாரகன் என்ற மூவர். இவருள் ஆணவமல நிலையனாய் விளங்கினவன் சூரபதுமன் என்றது இவன் பின்னர் ஏனைத் தாரகன் சிங்கமுகன்போல் அழிந்து படாது மயிலாய் வந்து முருகப் பெருமான் றிருவடிக்கீழ் என்றும் தங்கி நின்றதனால் அறியப்படும். வானவில்லிற் காணப்படுவது போல மிக்க நீலம் முதற் சிவப்பீறாக உள்ள ஏழு வண்ணங்களும் மயிலிற் காணப்படுவதனால் அவை ஆணவ மலத்தைக் குறிப்பாய் விளக்குவன வென்பர். என்னை? காரிய வேறுபாட்டால் மோகம், மதம், அராகம், கவலை, தாபம், வாட்டம், விசித்திரம் என்ற ஏழு வகைப்படும் ஆணவத்தின் தன்மையை இந்நிறங்களேழும் குறிப்பன எனக். ஆன்மாவை இறைவன் தன் மலரடிக்கீழ் வைத்த காலத்தேயும் ஆணவமும் ஆங்கு அழியாது வலியற்று நிற்குமென்பது ஞானசாத்திரம். இறைவராகிய முருகப் பெருமான் சூரன் முதலிய மூவரையும் வதைத்து, மும்மல காரியமாகிய எயிலுடைப் புரங்கள் செற்ற தமது தந்தையார் போலத், தாமும் உயிர்களுக்கு மலநீக்கம் செய்து, திருவடிக்கீழ் வைக்கும் **கோற்றத்** திறத்தினை உணர்த்த மயிலை ஊர்தியாக ஊர்ந்தனர் என்ற குறிப்பும் இங்குக் காணத்தக்கது.

**வரை உரம் கிழித்த திண்மை அயில்** - **வரை** - மாயததினுல அமைநத மலை. இதில தாரகன மறைநது மாயம செயதான. **உரங்கிழித்த** - கிரவுஞசததைப பிளநது தாரகனை வதைதத, முருகபபெருமான சூரசஙகாரததின பொருட்டுப பூதசேனைக ளுடன மகேநதிரபுரி நோககி வரும வழியில கிரவுஞச மலையாகிய மாயததின மறைநது தாரகன போா செயய அவனை வதைததனா எனும நிகழசசி குறிததது இதனை "முனனுள வரைகிழிய வேநது மயிலவே ளிலைகாட்டி, யிமையோா ரிகலவெம பகைகடககுஞ, சேநதன' (சணடேசா புராணம் - 1) எனறு குறிததலும காணக விரிவு கநதபுராணததினுட் கணடு கொளக **திண்மை** - வலிமையுடைமை. **அயில்** - வேல. **திண்மை அயில்** - வேல முருகபபெருமானது ஞானசததி யெனப. இசசை - ஞானம - கிரியை - எனற சததிகள மூனறில ஞானசததியே சிறநதது. "எததிறம ஞானமுள்ள ததிறமிசசை செயதி" - எனபது ஞானசசாததிரம. இறைவனது சததி யினுலனறிப பிறிதொனறினுலும வெலலபபடாத வலிய வரமபெறற வெஞசூரர்களை யும வதைதத வலிமை யுடையதும முருகப பெருமானது ஞான சததியுமாதலின **திண்மைஅயில்** எனறு விதநதோதினா. "கொனனெடுவேற, றூரகனு மாயத தடங கிரியுந தூளாக, **வீர வடிவேல்** விடுததோனே" எனபது கநதாகலிவெணபா. "குருகு பெயாக குனறங கொனற நெடுவேலே" எனறு (24. குனறக குரவை) சிலப்பதி காரமும துதிககும. "வீரவேல! தாரைவேல! விணணோா சிறைமீட்ட, தீரவேல! செவ வேள திருககைவேல!—வாரி, குளிததவேல! கொறறவேல! சூாமாாபுங குனறும, துளைததவே! லுணடே துணை" என இதறகெனறு தனியாக வேறபாடடுமபாடித துதிததனர் பெரியாா. அருணகிரிநாதா வேல் வகுபபும வகுத்தனா.

**மயிலுடைக் கோற்ற ஊர்தி** - எனறதனுல சூரன வதையும், **வரையுரங் கிழித்த** - எனறதனுற றூரகன வதையும கூறவே இடைபபட்ட சிஙகமுகன வதமும் ஏனை அவு ணா சஙகாரமும கொளளபபடும எனபாா **வென்றி அண்ணலார்** எனறூா.

**அயிலுடைத் தடக்கை** - சூாமுதல தடிநது, தேவா குறைமுடிதது விண குடி யேறறியருளும பொருட்டுச சிவபெருமான முருகபபிரானைத திருககயிலையிலிருநது செலல விடுததருளுமபோது பதினேருருததிரா்களையும **தோமரம் - கொடி - வாள் - வலிய குலிசம் - பகழி அங்குசம் மணி பங்கயம் . தண்டம் வென்றிவில் - மழு** எனற பதினெரு படைகளாக அவரது பதினெரு திருககரஙகளிலும அமருமபடி ஈநதருளினா பினனா எலலாப படைகளுககும நாயகமாகிய ஒபபறற **வேற்படை** யினை நலகி அவரது கையினிற கொடுததருளினா.

"பொனறிகழ சடிலத தணணறன பெயரும பொருவிலா வுருவமுந தொனனு
ணனறுபெற றுடைய வுருததிர கணததோா நவிலருந **தோமரங் கோடிவாள்**
**வன்றிறற் குலிசம் பகழியங் குசமு மணிமலர்ப் பங்கயந் தண்டம்**
**வென்றிவின் மழுவு** மாகிவீற றிருநதாா விறனமிகு மறுமுகன கரததில"—

"ஆயதற பினன ரேவினமூ தணடத தைமபெரும பூதமு மடுவ;
தேய பலவுயிரு மொருதலை முடிபப, தேவாமேல விடுககினு மவாதம
மாயிரு திறலும வரஙகளுஞ சிநதி மனனுயி ருணப,தெப படைககு
நாயகமாவ, **தொருதனிச் சுடர்வே னல்கியே** மதலைகைக கொடுததான"—

விடைபெறு படலம் - 37 - 38

எனற கநதபுராணமும காண்க

முருகபபெருமான இவவெறறிவேற படையைச சூாபதுமன, றூரகன எனறிவா மேல ஏவி யவர்களை வதைததனா. ஆதலின **மயிலுடைக் கோற்றம்** - என்றும, **வரை யுரங் கிழிதத** எனறும கூறிய இவவிடததுத **திண்மை அயில் உடைத் தடக்கை**

**வென்றி** - என்று வேற்படையினையும் வெற்றியையும் புணர்த்து விதந்தோதினார். "அவுணர் நல்வலம் அடங்கக் கவிழிணர், மாமுதல் தடிந்த மறுவில் **கொற்றத்**, தெய்யா நல்லிசைச் செவ்வேற் சேஎய்" எனவும், "வேல்கெழு தடக்கைச் சால்பெருஞ் செல்வ! குன்றங் கொன்ற குன்றாக் **கொற்றத்து**"—எனவும் வரும் திருமுருகாற்றுப் படைக் கருத்துக்களை இங்குவைத்துக் காண்க.

**மைந்தர் - அண்ணலார்** - பன்மை யீறுகள் பெருமை குறித்தன.

**அருளினாலே - கருப்பநீட** - என வரும்பாட்டோடு தொடர்ந்து கொள்க. குறவர் மங்கையாகிய வள்ளியம்மையாரோடு முருகவேள் கூடி வீற்றிருந்து உலகத்துயிர் யாவைக்கும் உரியவாறு போகமு முத்தியுங் கொடுத்து நல்லருள் புரிகின்றான் என உணர்கின்றோ மாதலின் அவனருளினாலே குன்றவர் கோமானுக்கு மகப்பேறு உண்டாகத் தத்தை பாற் கருப்ப நீடிற்று என்க. "பச்சிளங் கொம்பை வனசரர் பாவையோ டொன்றி, யிச்ச கத்துயிர் யாவையு முய்யவீற் றிருந்தான்"—(வள்ளியம்மை திருமணப் படலம் - 214) என்பது கந்தபுராணம். மேற்பாட்டில் முருகவேளைப் பரவிய விழாவும், அவ்விழா எடுத்த வினை முடிவு கொள்ளு முன்னர் இப்பாட்டில் அதனாற் பெறும் அவனருளும், வரும்பாட்டில் அவ்வருளாற் பெறும் மகப்பேறும் அதுபற்றிய வெறியாட்டுமாக ஒன்றையொன்றுபற்றி விரைந்து தொடர்ந்து முடிவுறும் சிறப்புக் காண்க.

சிவபெருமானைச் "**சதாசிவோம்!**" என ஒருமுறை துதித்த வேதங் குமாரப் பெருமானைச் "**சுப்ரமண்யோம்!!!**" என மும்முறை துதித்து அவரது அருட் பெருமையை விளக்கிற்று என்ப. அதுபோலவே இங்கு ஆசிரியர் தமிழ் மறையாகிய இப் புராணத்துள்ளேயும், **புரங்கள் செற்ற எந்தையார்** என்று ஒரு முறை துதித்த இடத்துச், "**செவ்வேள் முருகவேள்**" - (659), "**போரணி நெடுவேலான்**" - (660), "**அயிலுடைத் தடக்கை வென்றி யண்ணலார்**"—(661) என மும்முறையும் அடுக்கி அவரது அருட் சத்தியாகிய **வேலுடனே** கூட்டி முருகப்பெருமானைத் துதித்துக் காட்டிய அருமைப்பாடும் காண்க.

"பன்னிரண்டு கண்ணுடைய பிள்ளை தோன்றும்" - என்றபடி பன்னிரண்டு திருக்கண்களும் பன்னிரண்டு திருக்கைகளும் உடையாராகிய முருகப்பெருமானுடைய திருவருள் வெளிப்பாட்டைக் கூறும் இப்பொருளைப் பன்னிரண்டாவது திருமுறையின் கண்ணாகிய இப்புராணத்திற் பன்னிரண்டாவது திருப்பாட்டிற் கூறிய தெய்வச் சிறப்பும் காண்க. இவ்வாறு வருதல் ஆசிரியரது தெய்வ வாக்கிற் கூத்தப்பிரான் அமைத்த தெய்விகச் சிறப்பான அமைப்புக்களில் ஒன்றென்க. "ஆதி யெழுத்தவை யைம்பத்தோ டொன்றென்பர்," "ஐம்பத்தோ ரக்கரி" என்று போற்றப்படும் அம்மையார் காஞ்சியிலே தவஞ் செய்து இறைவனைப் பூசித்த பொருள் திருக்குறிப்புத்தொண்ட நாயனார் புராணத்தில் ஐம்பத்தொன்றாவது திருப்பாட்டிற் கூறவும், திருமந்திரம் - நாலாந்தந்திரம் - திருவம்பலச் சக்கரப் பகுதியில் "ஐம்பத்தொன்றே" என்று 51ம் திருமந்திரம் அருளவும், அமைந்த தெய்விகச் சிறப்பும், "அரிவையொர் பாகத்தன், னஞ்சொ டிருபத்து மூன்றுள வாகமம்" - (57) "சிந்தைசெய் தாகமஞ் செப்ப லுற்றேனே" (73) - முதற்றந் திரம்-திருமந்திரம், "தண்ணிலவார் சடையார்தாந் தந்தவா கமப்பொருளை, மண்ணின் மிசைத் திருமூலர் வாக்கினாற் றமிழ்வகுப்ப" - திருமூல நாயனார் புராணம் - (23), என் பனவற்றான் றறிகின்றபடி, இருபத்தெட்டுச் சிவாகமங்களின் பொருளைத் திருமந்திரங்களாகத் தமிழில் அருளிய திருமூலநாயனார் சரிதத்தை இருபத்தெட்டுத் திருப்பாடல்களால் வகுக்க அமைந்த தெய்விகச் சிறப்பும், இன்னும் இவைபோல்வன பலவும் இங்கு உன்னுங்கால் நாம் மேலே கூறியது வெறும் புனைந்துரையன்றென்பது விளங்கும். திருமூலர் திருமந்திரம் - நாலாந் தந்திரம் - நவகுண்டப் பகுதியில் முருகனைப்

பற்றிக் கூறும் "எந்தை பிரானுக் கிருமூன்று வட்டமாய்த், தந்தைதன் முன்னே சண்முகந் தோன்றலால்" என்பது 12-வது திருமந்திரமாக அமைந்ததுங் காண்க. 12

662. (வி - ரை) **கானவர் குலம் விளங்க** கானவர் - வேடுவர். குறிஞ்சி நிலமக்கள். கண்ணப்ப நாயனாரைத் தன்னகத்துப் பெற்றதனால் வேடர்குலம் விளக்கம்பெற்றது என்பது. "மறை, சைவப்படுத்த சீலத்துக் கவுணியர்கோத் திரம்விளங்கச், செப்புநெறி வழிவந்தார் சிவபாத விருதயர்"—(திருஞான - புரா - 15), "உபயகுல மணிவிளக்கானு சேக்கிழார்" - (திருத்தொண்டர் புராண வரலாறு - 11) என்பன காண்க. ஒரு பெரியார் ஒரு குலத்தில் அவதரித்தாராயின் அவரால் அக்குலமுழுவதும் விளக்கமடைந்து உய்யும் என்பது ஆன்றோர் துணிபு. திருவண்ணாமலைக் கார்த்திகைச் சோதி தரிசித்தவரின் "கோத்திரத்தி லிருபத்தோர் தலைமுறைக்கு முத்திவரங் கொடுப்போ மென்றார்" என்ற அருணாசல புராணமுங் காண்க.

**தந்தைபால் கருப்பம் நீட** - தந்தையின் வயிற்றிலே கருப்பம் தங்க "சேவடிக்கீழ் வழிபட்டுக், கருத்துமுடிந் திடப்பரவுங் காதலியார் மணிவயிற்றில், உருத்தெரிய வரும்பெருமப் பேறுலகுய்ய வுளதாக" - (திருஞான - புரா-20) என்பது காண்க. **நீடுதல்** - தங்குதல். "அளிநீடளகம" - திருக்கோவையார் - 122. **நீட** - வளர என்றுரைப்பாருமுண்டு.

**ஊனமில் பலிகள்** - மாதந்தோறும் ஒழுங்குபெற முற்றிக் கருப்பம் வளராமற் செய்யும் ஊனங்களை யில்லையாகச் செய்யும் பலிகள். **போக்கி** - இட்டு - கொடுத்து. இம்மாதங்களின் வரும் ஊனங்களைத் திருவாசகத்தில் (போற்றித் திருவகவல்)

"மானுடப் பிறப்பினுண் மாதா வுதரத், தீனமில் கிருமிச் செருவினிற் பிழைத்து,
மொருமதித் தான்றியி னிருமையிற் பிழைத்து, மிருமதி விளைவி னொருமையிற் பி
மும்மதி தன்னு ளம்மதம் பிழைத்து, மீரிரு திங்களிற் பேரிருள் பிழைத்து, [ழைத்து,
மஞ்சு திங்களின் முஞ்சுதல் பிழைத்து, மாறு திங்களி னூறலர் பிழைத்து,
மேழு திங்களிற் றாழ்புவி பிழைத்து, மெட்டுத் திங்களிற் கட்டமும் பிழைத்து,
மொன்பதில் வருதரு துன்பமும் பிழைத்துந், தக்க தசமதி தாயொடு தான்படுந்,
துக்க சாகரத் துயரிடைப் பிழைத்தும்...... ."

என்பனவாதியாக மணிவாசகப் பெருமான் அருளியனவற்றை இங்கு நினைவு கூர்க.

**உறுகடன் வெறியாட்டோடும்** - அவ்வம் மாதந்தோறும் கடமையாகச் செய்யும் வெறியாடல்களுடன். வெறியாடல்வகை மேல் **அணங்காடல்** - (660) என்றவிடத் துரைக்கப்பட்டது.

**ஆன அத்திங்கள் செல்ல** - கருப்பம் தரித்தபின் "கருவாகிக் குழம்பிருந்து கலித்துமூளை கருநரம்பும் வெள்ளெலும்புஞ் சேர்ந்தொன் றாகி, யுருவாகிப் புறப்பட்டு" (திருத்தாண்டகம் - திருவாரூர் - 6) என்றபடி வளர்ச்சி முற்றுவதான பத்துத்திங்களும் நிரம்பிச் செல்ல "முட்டை பிறந்தது முந்நூறு நாளினில்" என்பது திருமந்திரம். இதனை 280 நாட்களுக்குமேல் முந்நூறு நாட்களுக்குள் என்பர் நவீன சாத்திரிகள். முற்றுவதற்கு வேண்டிய அந்த என அகரம் உலகறிசுட்டு.

**செய் அளவில் தவத்தினாலே** என மாற்றுக. தந்தையும் நாகனும் செய்தவம் - கானவர்குலஞ் செய்தவம் - மாதவஞ் செய்த தென்றிசை செய்தவம் - அன்புநிலை உணராது ஆணவத்தி னழுந்தி உழலும் உயிரெல்லாஞ் செய்தவம் என்று பலவாறு கூட்டியுரைக்க நின்ற அழகுங் காண்க "முந்தை யெம்பெருந் தவத்தினா லென்கோ முனிவரிங்கெழுந் தருளியது" (408) பார்க்க. உவரிசெய் தவத்தினாற் பானமதி யீன்றாலென என்று கூட்டி யுரைப்பதுமாம். பாற்கடலைத் தேவர்கள் கடைய அதிற் பிறந்தது மதி என்பர். அதுபோலத் தானும் ஒரு மதியினையீனும்பொருட்டு உவரியாகிய கருங்கடலும் தவஞ் செய்து பெற்றதுபோல் என்பதாம். கடல் தவஞ் செய்தல் எற்றுக்கெனின்

தனது கருமை, உவாப்பு, மண்ணீருமாகாத தனமை, கழிநாற்றம முதலிய இழிபுகளைப் போக்குமபடிககும, பாறகடல பெறற அநத மதிக குழவியின மேம்பட்ட குழவிமதியை ஈனறெடுககவும ஆம எனக. இவவாறுரைப்பின தறகுறிபபேறறமாம் அககுழவியின மேமபடுதலாவது அது வெணமதியாய்க, கலைகள வளர்வதும தேயவதுமுடையதாயத, தேவரிலொனறாய, இறபபும பிறப்பும உடையதாய, இறைவனுற காககபபடடுளளதாய திறபது, தான பெறும இககுழவி அவவாறனறிக கருஙகதிர விரிககுமேனிக காமா பெற றுடையதாய், பதினாருணடிற கலைவளாவதாயப, பினனா என்றும குறைவிலலாததாய, இறபபும பிறப்பு மிலலாததாய, இறைவன பககததிருநது அகலாது அவருககுக காவல புரிவதாய உளளது எனப

**உவரி** - தநதைககும, **பான்மதி** - நாயனாராகிய மகவுககும உவமை. உருவும தொழிலும பறறி வநதது **பான்மதி** - நறபானமையும நிறைவும பெற்ற மதி எனக. பால போனற வெளளிய சநதிரன என்றுரைபபாருமுளா. முழுமதி தோனறுமபோது சிவநது காட்டும் அனறியும இமமகவு பினனர்க"கருஙகதிர விரிககு மேனி"(665)யுடையதாம ஆதலின அவவுரை பொருநதாமை யறிக குழவிகள் பினனா எநநிறமுடையன வாக ஆயினும், தாய வயிற்றினின்றும பிறககுமபோது புதிய இரததஊறறதததினால் எல லாக குழவிகளும செமமை நிறமே தாஙகிறததின மிககுககாடடும. இஙகுத தநதையீனற போது உவரியின தோனறும பானமதியாயின இம்மகவு, தாதை எடுககுமபோது "காளமேகம்" (664) ஒபபாயினதெனறு ரைததலும காணக.

இனி, இறைவனது நெறறிக கணணாகிய கனற கணணினினறும அவதரிததவா முருகபபெருமான அவா "பலா புகழ ஞாயிறு கடறகண டாஅஙகு"என்றபடி "வெம்புந திய கதிரோனொளி"யென விளஙகுபவா. இமமகவு அவரது தணணருளாலே போந தது. ஆதலின இது மதி போனறது எனறா என்றலுமாம ஞாயிறறின் ஒளி "வெமபு உநதிய"தாகலின வெபபமுடையது; அதனைப பல உயிாகளும தரிததாறறலா காதாம், ஆயினும் அநத ஞாயிறறின ஒளிபெறறு விளஙகும மதி அமுதமாக்குவது; "தோறறு மனனுயிா கடகெலாந தூயமையே,சாறறு மினபமுந் தண்மையுந தநதுபோ, யாறற வண்டமெ லாமபாந தணணலவெண, ணீறறின பேரொளி" (308) போனறது; அது ஞாயிறறின கதிரொளியைத தான பெறறு அதனால தண்ணிதாய்விளஙகுவது என பது பௌதிக சாததிர உணமை அதுபோல இநதப பானமதியும முருகனாகிய ஞாயிறறின அருளொளியால விளஙகி உலவி உலகுககு அனபாகிய தணணொளி பாப்பி உயவிபபதாயிறறு எனறதொரு குறிபபினாற பயனுவமையாதலும பெறப்படும

**மகப் பயந்த போது** - தநதை மகவை யீனறபோது. தநதை எனபது வருவிகக பயநதபோது - பொழிநதது - ஆாதத என வரும் பாடடுடன கூட்டி முடிகக.

**பலிகளோக்கி** - பலிகளோச்சி—எனபனவும பாடஙகள. 13

663. (வி - ரை) **கரிப் பரு மருப்பின் முத்து** - யானைககொமபு மூஙகில முதலிய பதினமூனறிடஙகளில முததுப்பிறககுமெனப **கரி** யானை. **பருமருப்பு**-பெரிதாய்நீண்டு முறறியகொமபு. "மததவெங களிறறுக கோடடு வனமுடா வேலி" ( 51) என்ற தன கருததை நினைவுகூாக **கழை** - மூஙகில **செழுநீர்** - செழியநீாமை இதனை நீரோடடம எனபது வழககு 'வேரல விளையுங குளிாமுதது" (492) என்றது காண்க. **நீர்** - ஒளி எனபாருமுணடு இவை பறறி (492) உரைததவை காணக.

**பொருப்பினின்மணி** - நவமணிகளில முததும பவளமு மொழிநதவற்றில் மலை யிற கலலின விளைவோடு சோநது விளைநதுபடும் பசசை நீலம முதலிய ஏனை மணிகள். இவைபறறி 225ல உரைததவை காணக ஏனைமணிகளினினறும் முததினை வேறு பிரிதது முதனமைபெறக கூறுதறகுக காரணம மேல உரைககபபட்டது.

**வேடர் பொழிதரு மழை** - பலகாலம பிளளைபபேறினறி நினறதம தலைவனது குடி விளங்குதறகும், தாம இளநதலைவனைப் பெறுதறகும ஓா ஆண்மகவு பிறநதபெருமகிழசசி

யினால், நாகன்கீழ் வாழும் குடிகளாகிய வேடர்கள் மழைபோல் முத்துக்களையும் ஏனைய மணிகளையும் இரவலர்க்குப் பொழிந்தார்கள் என்பது. இம்மணிகள் ஏனை நிலத்தார்க்கு அரியனவாய் மிக்கவிலை பெறுமாயினும் இவர்களுக்கு விலையின்றி மிகுதியாய் இலகுவிற் கிட்டுவன ஆதலின் அவர்கள் அவற்றை எளிதாக வழங்குதல் கூடிற் றெனக் "குறவர் பனமணி யரித்திதை விதைப்பன குறிஞ்சி" என்ற திருக்குறிப்புத் தொண்ட நாயனார் புராணமும் (7) காண்க. இங்கு அரசன்மகப்பேறு பெற்றது குறித்துக் குடிகள் மகிழ்ந்து கொண்டாடியதும், பின்பு அரசன் தன்மகனது வில்விழாவுக்குக் குடிகளை அழைத்துச் சிறப்புச் செய்ததும், பின்னர்க் குடிகள் அரசனிடம் தமது குறைகளை முறையிட்டுத் தன் மகனை அவர்களுக்கு அரசனாகக் கொள்ளுமாறு கொடுத்ததுமாகிய அரசர்க்கும் குடிகட்கு மிடைநின்ற அரசவிசுவாசச் செயல்கள் காண்க. மனுநீதிச் சோழர், கழறிற்றறிவார், மூர்த்திநாயனார் புராணசரிதங்களும் பிறவுங் காண்க. இந்நாளில் இதற்கு மாறாக அரசர் முடிகளை அழித்து அலைக்கழிப்பதாயக்கிளம்பி நாடெங்கும் பரவி வளரும் பகை உணர்ச்சியும் சிந்திக்க.

**வரிச்சுரும்பு.** - **பொழிந்தது** - என்றது தேவர்கள் கற்பகப்புதுப்பூ மழை பொழிந்தனர் என்றதாம். நாயனார் பேறு பெற்ற ஞான்றும் "வானவர் பூவின் மாரி பொழிந்தனர்" (828) என்றது காண்க. பெரியார்கள் இறைவனடி சேர்ந்து முத்தி பெற்ற திருநாளைக் கொண்டாடுதலே மரபன்றிப், பிறந்தநாள் (செயந்தி) கொண்டாடுதல் சைவர் மரபன்று. இப்பிறப்பில் முத்திபெறுதற்கே அவதரித்தவர் இந்நாயனாராத லின் அவர்தந்திருவவதாரமே முத்திபோலப் பெருமையுடையதென்பது வானின்மலர் மழையாலும் அமரர்துந்துபியாலும் உணர்த்தப்பட்டது. இவ்வாறே, முத்தி தருதற் கென்றே அவதரித்த திருஞானசம்பந்தமூர்த்திகள் திருவவதாரத்திலும் உரைத்தது காண்க. ஏனை நாயன்மார்கள் முத்தி பெற்ற காலத்து நிகழ்ந்த நிகழ்ச்சிகளுங் காண்க. **வரிச்சுரும்பு அலைய** - மழைபோலப் பொழிந்த புதிய பூக்களில் மொய்த்த வண்டுகள் அவை வீழும்போது மோதுண்டு அலைந்தன என்பது. **வரிச்சுரும்பு** - வரிகளையுடைய வண்டுகள். **வானின் மலர் மழை** - தேவருலகப் புதுமலராகிய (கற்பகமலர்) மழை. "தெய்வப் பூவின் மாமழை" (398), "கதிர்வி சும்பிடை கரந்திட நிரந்தகற் பகத்தின், புதிய பூமழை யிமையவர் மகிழ்வுடன் பொழிந்தார்" (546) முதலியவை காண்க.

**எங்கும் பொழிந்தது** - **எங்கும் ஆர்த்த** - என ஈரிடத்தும் கூட்டுக.

**அரிக்குறுந்துடி** - "சில்லரித்துடி" (654) பார்க்க. குறிஞ்சிப் பறைவகையிலொன்று.

**அமரர் துந்துபி** - தேவவாத்திய வகை. இது தெய்விகச் சிறப்பு நிகழும்போது ஆர்க்குமென்ப. ஆளுடையபிள்ளையார் திருவவதாரத்தின்போது கண்ட நிகழ்ச்சிகளையும் இங்கு உன்னுக.

(659) அரியதென்று எவருங் கூற - காதலாலே - (660) விட்டு - தூக்கி - நாற்றி - தூங்க - செய்து - எடுத்த பின்றை - (661) நாகற்கு - அண்ணலாருளினாலே - (662) விளங்க - தத்தைபாற் கருப்பநீட - திங்கள் செல்ல - தவத்தினாலே - மகப்பயந்தபோது - (663) வேடர் பொழிதரு மழையேயன்றி - வானின் மலர்மழை (எங்கும்) - பொழிந் தது; - எங்கும்-துடியேயன்றி - துந்துபியும் ஆர்த்த என இவ்வைந்து பாட்டுக்களையும் தொடர்ந்து முடித்துக் கொள்க. 14

*664. அருவரைக் குறவர் தங்க ளகன்குடிச் சீறூ ராயம்
பெருவிழா வெடுத்து மிக்க பெருங்களி கூருங் காலைக்
கருவரை காள மேக மேந்திய தென்னத் தாதை
பொருவரைத் தோளக் ளாரப் புதல்வனை யெடுத்துக் கொண்டான்.

(இ - ள்) வெளிப்படை. அரிய மலைக்குறவர்களுடைய பெரிய குடிகள் வாழ்கின்ற சிற்றூரில் வசிக்கும் மக்கட் கூட்டம் விழாக் கொண்டாடி மிக மகிழ்ச்சிகூருங் காலையில்

கரிய மலையானது காளமேகத்தை மேலேகொண்டு தாங்கியதேபோலத் தந்தை யாகிய நாகன் போர்செய்யும் மலைபோன்ற தோள்கள் ஆரும்படி புதல்வனை எடுத்துக் கொண்டான்.

(வி - ரை) **வரைக்குறவர்** - மலையில் வாழும் குறவர். "மலைக ளாளு மறக்குலத் தலைவர்" (678) என்றது காண்க.

**அகன்குடி** - பெருங்குடிகள் நீண்டகாலம் வழிவழி வரும் பெருமையும் குல வொழுக்கப் பெருமையும் முதலியன குறித்தது.

**சீறூர்** - சிற்றூர் குறிஞ்சி நிலத்து ஊர்களின் பெயர். ஏற்றமும் இழிவுமாயுள்ள நில அமைப்பினாலும், காடுகள் சூழ்வதாலும், மருத நிலத்திற்போலப் பெருநகரங்கள் குறிஞ்சி நிலத்தில் அமைத்தல் இயலாது. சிற்சில மனைகள் கூடிய தொகுதிகளாய் அங் கங்கு அமைந்து வாழ்வர் அந்நிலமக்கள். ஆதலின் இவை சீறூர் - சிறுகுடி எனப் பெயர் பெறும். **ஆயம்** - ஒரு சார்புபற்றிய மக்கட் கூட்டம். இங்கு நாகனுடைய தலை மையின்கீழ் வாழும் குடிமக்களின் கூட்டம் குறித்தது.

**பெரு விழா - பெருங்களி** - பெருமகிழ்ச்சியால் முத்தும் மணியும் மழைபோலப் பொழிந்தனர் என மேற்பாட்டிற் கண்டோம். அம்மகிழ்ச்சி பற்றியே பெருவிழாக் கொண்டாடினர் பெருங்களியாட்டயர்ந்தனர். விழா பொதுவிற் பலர் கூடி மகிழ்தல். **களி** - அவ்வவர் மனையில் தாந்தாம் மகிழ்தல்.

**கருவரை காளமேகம் ஏந்தியதென்ன** - "பானமதி உவரி ஈன்றுளென" - (662) என்றது மகப்பயந்தபோது தாயும் சேயுமாய் நின்ற நிலைக்கும், இங்குக் கூறியது, அம்மகவினை எடுத்துக்கொண்டு தந்தையும் மைந்தனுமாய் நின்ற நிலைக்கும் உவமைக ளாம். இதுவும் உருவும் தொழிலும் பற்றிய உவமம். தந்தை எடுத்தேந்திய நாளில் குழவி தனது குலத்துக் கியல்பாகிய கருநிறம் மிக்கு விளங்கிற்று என்பது.

**கருவரை** - கரிய மலை. **காளமேகம்** - நீர் சுமந்து பெரும்பெயல் பெய்கின்ற கருமேகம். மலையின் உச்சியில் நின்று சூல்கொண்ட மேகம் பெய்யும் பெருமழையினால் உலகு உய்வதுபோல இக்குழவி பின்னாகக் காளத்தியுச்சியில் நின்று முன்பு செய்தவத் தின் விளைந்த அன்பு மழையினால் உலகம் உய்திபெற நின்றதென்ற குறிப்பினால் பயனுவமையாதல் எண்ணுமே பெறப்படும்.

**பொருவரைத் தோள்கள் ஆர**-போர்த்தொழில்வல்ல இருதோள்களும் பொருந்த. **புதல்வன்** - "புதல்வர்ப்பேறே" (659) என்றதுபோல இங்கும் கூறியது காண்க.

**எடுத்துக் கொண்டான்** - எடுத்துக் கையில் ஏந்திக் கொண்டான். குழவியை எடுத் தல் என்பது உலக வழக்கு.

**வலித்தோள்களார்ப்ப**—என்பதும் பாடம். 15

665. கருங்கதிர் விரிக்கு மேனிக் காமரு குழவி தானு
மிரும்புலிப் பறழி னோங்கி யிறவுள ரளவே யன்றி
யருமபெற லுலக மெல்லா மளப்பரும் பெருமை காட்டித்
தருங்குறி பலவுஞ் சாற்றுந் தன்மையிற் பொலிந்து தோன்ற, ௬௬

666. அண்ணலைக் கையி லேந்தற் கருமையா "லுரிமைப் பேருந் திண்ணனென் றியம்பு" மென்னத் திண்சிலை வேடர் தாதை,
புண்ணியப் பொருளா யுள்ள பொருவிலச் சிறுவன் றன்னைக்
கண்ணினுக் கணியாந் தங்கள் கலன்பல வணிந்தா ரன்றே. ௬௭

665 (இ - ள்) வெளிப்படை. கரிய கதிரொளியை விரித்து வீசுகின்ற அழகிய மேனியுடைய அக்குழவியும் பெரிய புலிக்குட்டிபோல மிக்கோங்கி, வேடர்களாலே

684. செநதினை யிடியுந தேனு மருநதுவார்; தேனிற றோய்தது
வெநதவூ னயிலவார்; வேரி விளஙகனிக கவளங கொள்வார;
நநதிய வீய லுணடி நசையொடு மிசைவார, வெவவே
றந்தமி லுணவின மேலோ ராயின ரளவி லாாகள. ௯௫

(இ - ள்) வெளிப்படை செநதினை மாவும தேனும கூடடி உணபாாகளும, வெநத இறைசசியைத தேனிலே தோயதது உணபவாகளும, விளாமபழததைத தேன கலநது பிசைநது கவளமாககி உடகொளவாாகளும, இறநத ஈசல உணடியை ஆசையொடும மிசைவாாகளுமாக இவவாறு வேறு வேறாகிய அளவிலலாத பல வுணவுகளிலும மேலவாகளாக ஆயினா அளவிலலாத வேடாகள

(வி - ரை) செநதினை - செநநெல எனபதுபோலத தினையின உயாநத ஒருவகை. இடி - மா. இடி - இடிககபபடடது. செயபபடுபொருள விகுதி குறைநது நினறது

**தேன்** - அறுசுவைகளில இனிபபுத தரும இயறகைப பணடம இது குறிஞசிக கருப்பொருளகளில ஒனறாய மலைகளில மிகுதிபெறக கிடைபபது உடல நலததிறகு மிகவும அடுததது. சுவையும மணமும குணமும ஒருஙகே உதவும உணவுப் பொருள இதுபோனறது பிறிதிலலை. இககாரணஙகளபறறியே கானவா இதனைத தமதுணவில் மிகுதியும பயனபடுததினா எனறு ஆசிரியா இப்பாடடில மூவகையானுங குறிததது காணக இவவுணவுவகைகளுளளே வெநதவூனைத தேனிறறோயதது உணபது இவாக குள உயாநத உணவாககொணடனா போலும. இது "பொசசையில நறவு மூனின புழுககலு முணவு கொளளும" (656) எனத தொடககததிற றேறறமபெற எடுததுக காடடியதனலறியலாம. இதுபறறியே நாயனா காளததியடிகளாாககுத தமமிசசைப படி தாமறிநத வகையில உயாநத அமுதமைபபாா "நலலபத முறவெநது நாவினக ணிடுமிறைசசி, கலலையினிற படைததுததேன கலநதுபிழிந ததுகொணடு" (797) "தேனுமுடன கலநததிது திததிககு மெனமொழிநது" (799) ஊடடினா எனப பினனாக காணகினறோம. "பிறநதது, தேனழிந தூனுண கானவா குலததே" எனற நககீரா - திருககணணபபதேவா திருமறமும காண்க. இநநாளினும உலக உயா நிலையிலுளளோா தேனறோயநத பலவகை உணவு உடகொளளும திறமும காணக.

**வேரி விளங்கனிக் கவளம்** - விளா குறிஞசிக கருபபொருளாம. இதனையும முனனரே "வனறிரள விளவினகோடடு" (652) எனறு குறிததது காணக

பேருணவாகிய சோறறு வகைகளை அடுககித தனிபபட முனபாடடிற கூறி, அவற றிறகிடையிடை நுகரும சிறறுணவாகிய தினைமாவும தேனும கலநத உணவை "அருநது வாா" என அடுததுவைதது, இனனும அருகியதாய உணவுச சுவைதர அதறகிடை நுக ரும இடையூண்வகையாகிய தேனறோயதத வெநத வூனை அதறகடுததுக கூறிய சுவை யுங காணக. சிறறுண எனக குறிபபோா **பலகாரம்** என இநநாளில் வழஙகும உணமை யிற பேருணவகைகளைப போலலலாமல, இவவேடாகள உணமைப பலகாரமாகிய (பலம-பழம - பழததினலாகிய ஆகாரம) வேரி விளஙகனிககவளம கொணடதுஙகாணக இடியுந தேனும **பிசைநது** சோதது உணபதும, வெநத வூனறுணடஙகள தனிததனி தேனிற **றேய்த்து** உணபதும, தேன கலநத விளஙகனியை உருட்டிக கவளமாக உண பதும எனற உணணுமவகை காடடிய திறமுங காணக

**நந்திய ஈயல் உண்டி** பெருநதிரளாகச சோததுக கூட்டிய ஈயலகளைச சுண்டல போலப பககுவமாககி உணணுதல குறிஞசிநில மாககளின உணவுவகைகளில ஒனறு. "புலபுலெனக கலகலெனப புறறீசல போல" எனறுவமிததவாறு ஈயல்கள புற்றி னினறும பெருநதிரளாய வநது சிறிது போதில உயிாதுறககும, அவை கூடையில் வாரிச செல்லும அளவிற பெறககூடும அவைகிளமபும புற்றுவாய முதலிய இடததில ஒருவகை மறைபபு - விளககு முதலிய அமைப்புககளால அவறறை உணடாகுமிடததி

னினறும் திரளாய் வெளிவரச் செயவதும் தாம வைதததகொளகலததிறகுள்வநது வீழச் செயவதும குனறுவாககுககைவநத பழககமாம. "புறறிலே காடி வாயைவைததா றபோல் உறிஞசுதல்" எனபது பழமொழியாய வழஙகுவதாயிறறு. **நந்திய** - ஏனைப்பிராணிக ளின இறைச்சிபோ லலலாமல இவை தாமாக வெளிவநது வீழநது பிறாறகொல்லப் படாது தாமே இயலபின இறநதுபடுவன ஆதலின **நந்திய** எனறூா **நந்துதல்** குறை தல் - இறததல. மிகுநத எனறுரைபபாரு முணடு **நசையோடு மிசைவார்** எனறது முன கூறியு பிற பெரும்,உணவுகளின பினனா இதன அமைப்பும, சுவையும, தொடாநது சிறிது சிறிதாகக கறிததுணணும பெறறியும முதலிய பல காரணஙகளால் ஆசையோடும வேடாகள உடகொளளும இயலபு குறிததது. இது அவாகளது உண வில் பெரும்பாலும இனறியமையாபபகுதி எனபது "மெனறசையும் ஈயலொடு நற வும" (698) எனத தேவராட்டி, நாகன தனககு அமைதத திட்டப்படியின முறையைப் பறறிக கூறுமிடததுக காணப்படும.

இவவிரணடு பாடடுககளானும இவாகளது உணவகைகள, உணணும வகைகள, உணவின் மரபு, உணவுமுறை, உணவாாவம முதலிய வாழ்ககைததிறம பலவும கண ணுடியிற காணபதுபோல நாம காணககாட்டிய ஆசிரியா திறஙகணடு களிகக

**வெவ்வேறு அநதமில் உணவின் மேலோர்** - இதனுல இஙகுககூறியனவும பிறவு மாகிய பறபல வகையும தொகையும குறிததாா. **உணவின் மேலோர்** - இயல்பாகிய அளவுககுமேல் மிகக உணவு கொணடனா. தமது தலைவன அழைதது அனபுடன அளிதத கொணடாட்டமாதலின வயிறூரவும அதறகுமேலும் உடகொணடனா என பதாம் **மேன்மை** - மிகுதி குறிததது **மலையுறை மாக்கள்** (682) எனறபடி இவாகள மககள இனததவரேயாயினும உணவினுல மட்டும மேலோராவதனறி உண மையான உணாவினுல மேலோராவரல்லா எனற குறிபபுமபெறக கூறினா. "அழுககுடைப புலனவழி யிழுகககததி னெழுகி, வளைவாயத தூணடிலி னுளளிரை விழுஙகும், பனமீனபோல" (பதினோராந திருமுறை - கோயினன மணிமாலை - 28) எனறு பட்டினத்தடிகள இரஙகிககூறியருளியபடி, நாவினசுவைக கடிமைபபட்ட மாக களை இழுததறகுப பலநூறுவகைக கேடுதரும பகட்டுச செயறகை உணவுபபணடஙகள மலிநது எவவிடததும கணககிலடஙகாது பெருகும இந்நாளின உணவு விற பனைச சாலைகளில மனம போனபடி உணடுகளிதது மருததுவசசாலைகளைப பெருக கும நகர நாகரிகப போபெறற மாககளும கேட்டு வாயூறிப பொறுமைபபடுமாறுகுறிஞசி நிலபபழஙகுடி மாககளின இயறகை யுணவு வகைகளைச சுவை பெறத தனமையணியில எடுததுக காட்டியது ஆசிரியாது தெயவபபுலமையாம உடலநலக கேடு விளைககும நமது செயறகை உணவுவகை போலலலாது இவை பலவும இயறகையுணவாயமைந தன வெனறு வருமபாட்டில **இயல்வகையுணவு** எனறதும சிநதிகக *

அநதமிலுணவினமேலோா ஆயினா எனறதறகுச்சாவாமருநதாகிய அமுததைை உணடதேவாகளபோ லாயினா எனறு அதிசயோததி பெற உரைபபாரு முணடு- (அநதம இல உணவு - சாவிலலாமற செயயும அமுதம)

**அளவிலார்கள்**-மாடுயா மலைகளினினறும போநத மறககுலத தலைவாகளும ஏனை வேடாகளும அருஙகுடி யிருபபினுளளாருமாகிக கூடிய எணணிறநதவாகளில் பெரும பாலோாஉணவின மேலோராயினா. **மேலோர்**-மேறகொணடவாகள எனறலுமாம அவ

---

*எனது நணபராகிய பெருநிலக கிழவா ஒருவா இமமலைசாகளின மணவிழா ஒனறிறகு அழைககபபட்டுச சென்றா அஙகு இவவேழைக குனறவாணாகள அவாககு உரியபடி உணணததககதாய ஈநத விருநதின வகையில தேன, தினைமா, செஙகிழை விதைமா, பலவகைப பழஙகள, கிழஙகு முதலிய உணவுகளைபபறறி அவா வியநது பாராட்டிப் பேசியது இஙகு நினைவிறகு வருகினறது.—**பதிப்பாசிரியன்**

வாறில்லாது அளவிற பொருநத உணடு விழாவின உயாபகுதியைக கணகாணிததுச செலுததியோா சிலரே எனபதாம். நமது மணவிழாககூடட முதலியவறறிலும நிகழச்சிகள இவவாறே இருததலும காணக 35

685. அயலவரைப புலததின வநதா ரருஙகுடி யிருப்பி னுளளா
ரியலவகை யுணவி லாாநத வெயிறறிய ரெயின ரெலலா
முயர்கதி ருசசி நீஙக வொழிவிலபன னறவு மாநதி
மயலுறு களிபபி னீடி வரிசிலை விழவு கொளவாா. ௩௬

686. பாசிலைப படலை சுறறிப பனமலாத தொடையல சூடிக
காசுடை வடததோல கட்டிக கவடிமெயக கலன்கள பூணடு
மாசிலசீா வெடசி முன்னு வருதுறைக கணணி சூடி
யாசிலா சிரிய னேநது மடறசிலை மருங்கு சூழநதாா. ௩௭

685. (இ - ள்) வெளிபபடை பககதது மலைசசாாறபுலததின வநதாரும, இஙகு அரிய (உடுப்பூரில) சிறுகுடியிருபபின கணணுளளாருமாய, நில இயலும உடலிய லும பொருநதிய வகையாற கூடிய அவவுணவில நிறைய உணடு தேககிய எயிறறிய ரும, எயினரும ஆகிய யாவரும விணணில உயாநத ஞாயிறறின செலவில உசசிப பொழுது கழிய அளவறற பலவகையாயின நறவுஙகுடிதது, அதனால மயல் பொருநதிய களியாட்டததிற பெருகி, வரிவில விழாக கொணடாடுவாாகளாய, ௩௬

686. (இ - ள்) வெளிப்படை பசசிலையாணியனற படலைகளைச சுற்றிப பல வகைப பூமாலைகளைச சூடி, மணிகள கட்டிய வடததோலை மேலே கட்டி, உடலிற பல கறைகளாலியனற அணிகலனகளை அணிநது, குறறமறற சிறபபுடைய வெடசி முத லாகச சொலலபபடடனவாகித தாம மேறகொணடு வரும அததுறைககுரிய மாலை களைச்சூடிக, குறறம நீஙகிய ஆசிரியன ஏநதிய வலியவில்லின பககததிற சூழ்நதாாகள

இவவிரணடு பாட்டுககளும தொடாநது ஒரு முடிபுகொணடன.

685. (வி - ரை) **அயல்வரைப் புலத்தின் வநதார்** - நாகன விலவிழாவின நாட் குறிததுசசொலலிவிட, அதுபறறி, "மாடியா மலைக ளாளு மறககுலத் தலைவ ரெலலாம்" (678), "சிலைபயில வேடா கொணடு திசைதொறு நெருஙக வநதாா" (679) என றுமுன கூறியவாறு அயலில உளள மலை நிலததிலிருநது வநதவாகள. **அயல்** எனறது பொத தபபி நாடடுககு அயல நாடும, உடுபபூருககு அயலூரும ஆம **வநதார்** - குடியிருபபுககு அபபாலிருநது வநது கூடியவாகள. இவாககு வேறாய இநநாடடுச சீறூரினுளளாராயக கூடியவாகளைக **குடியிருப்பினுள்ளார்** என று பிரிததுக கூறியது காண்க **அருங்குடி** - அரியசிறறூா. **இயல்வகை உணவு**-நிலததுககும நலததிறகும பகுதியிற பொருநதியன வாகத தததமக கியைநத உணவு மேலிரணடு பாடடுககளினும விரிதத உணவு வகை. **ஆர்நத** - வயிறு நிறையவும ஆசை தீரவும நிறைய உணட

**எயிற்றியர்** - **எயினர்** - வேடிசசியரும வேடரும விலவிழா ஆணமகவுககுரிய சடஙகாயினும நனமககள வாழககைத திறததில இவவிழாவிற பெணகளும கலநது கொளளும பணடைநாள வழககும, இதனால பழஙகுடிமககள பெணகளுககுக கொடுதத உரிமையும, அதுபறறியே **எயிற்றியரை** முதலிற சுடடிய சிறபபும குறிககொளக.

**உயர்கதிர் உச்சி நீங்க** - ஞாயிறறின உசசிவேளையை ஒருநலவேளையாகக கொள வது இவாகள வழககு இது நலவேளை எனபது சோதிடநூற றுணிபுமாம. இதனை அபிசிதது முகூாதத மெனபா காலப பிரகாசிகை, காலவிதானம முதலியவை பாாகக இஙகு விலவிழாத தொடககததில விலலினுககும மாணவராகிய திணணனுககும காபபுச சோதத இது நலவேளை இதுபோலவே இதன ஏழாநாளில விழா

ஆரவாரம், நீண்ட ஆகாய நிறைந்து முழக்கிச் செல்ல, அத்திருவிழாக் கொண்ட சிறப்புப் பொங்கக் குறிச்சியை வலமாகச் சுற்றினார்கள்

(வி - ரை) இங்குக் கூறப்பட்டன குறிஞ்சிக்குரிய பறை வகைகள் இவற்றை முன்னர் 654ல் குறித்தது காண்க அங்குக் குறித்தவை நித்தியாங்கமும், இங்குக் கூறியவை நைமித்திகாங்கமுமா மென்பது "தொண்டகச் சிறுபறைக் குரவை யயர" என்ற திருமுருகாற்றுப்படையும் காண்க தொண்டகப்பறை குறிஞ்சிக் கருப்பொருளாம

துளைகொள் வேய் வேய்ங்குழல் இது பெரும்பாணமை முல்லைத் திணைக்கு உரியதாயினும், திணை மயக்கத்தானும், ஆனிரை கவர்தலும் அவ்வாறு கவர்ந்தவற்றை வளர்த்தலும் குறிஞ்சித்திணையினுள் வருதலானும், அவற்றோடு முல்லைத்திணைக்கு உரியகுழலும் போதருமாதலானும், சிறுபாணமை வேய்ங்குழல் குறிஞ்சிக்கு முரிய தாம். "வேறுபல லுருவின மிக்கு விரவுமா நிரைகள்" (655) என முன்னாகக் கூறினார். "குழலன கோட்டன குறும்பல் லியத்தன" என்ற திருமுருகாற்றுப்படையும் காண்க. ஆயின் இங்குக் குறித்தது கோவலன் வாயின் முல்லையந் தீங்குழல் போலாது, வெருச் சொல வேட்டுவர் வாயினதாயப் பேரொலி செய்வதா யுள்ளதோர் வகையென்பார் ஏனப்பேரொலி செய்யும் தொண்டகப்பறை, கொம்பு முதலியவற்றோடு உடன் வைத்தருமன்றி "எண்டிசை நிறைந்து விம்ம வெழுந்த பேரொலி" என்றார் பல இயங்களும் முழக்கி மக்கள் ஆத்துக்கூடி விழாச் செய்தல் இன்றும் மலைநாட்டில் வழங்கும் மரபு.

எண்டிசை நிறைந்து விம்ம - பேரொலியாதலின் எழுந்து எல்லாத் திசைகளிலும் பரந்தது. எண்டிசையினின்றும் போந்த வேடர் இசைத்த பறையொலி மிக்கது என்றதொரு குறிப்புமாம் "வேடர் திசைதொறு நெருங்க வந்தார்" (679).

திண் திறல் மறவர் - அசைவிலாத திறனும் மிகுவலிமையும் குறித்தது. யானை, புலி முதலாயின பெருங்கொடு விலங்குகளுடன் கலந்து வாழும் வாழ்க்கையுடையாராதலின் இவ்வாறு கூறினார்

சேண் விசும்பு இடித்து செல்ல - விசும்புசேண் - எனக். ஆகாயத்தில் நெடுந்தூரம் பேரொலிகளாதலின் இவை நெடுந்தூரம் சென்று பரவுதலும் எதிரொலி தருதலும்பற்றி இடித்து - செல்ல என்றார் முன்னர் "ஏறுடை வானந் தன்னி லிடிக்குர லெழிலி யோடு, மாறுகொண் முழக்கங் காட்டும்" (655) என்றது நோக்குக "வண் பூங்கொடிகள், பயிலச் சிலம்பெதிர் கூயப்பண்ணை நண்ணும்" என்ற திருக்கோவையாரும் நினைவு கூர்க

விழவு கொண்ட சீர்பொங்க - என மாற்றுக.

குறிச்சியை வலங் கொண்டார்கள் - விழாவில் நகர்வலம் வருதல் எத்திணையிலும் மரபாம். குறிச்சி - குறிஞ்சி நிலவூர் 38

688. குன்றவர் வரிக்கொண் டாடக் கொடிச்சியர் துணங்கை யாடத்
துன்றிய மகிழ்ச்சி யோடுஞ் சூரர மகளி ராட
வென்றிவில் விழவி னோடும் விருப்புடை யேழ் நாளா
மன்றிரு மடங்கு செய்கை யழகுற வமைத்த பின்றை, ௩௯

689 வெங்கதிர் விசும்பி னுச்சி மேவிய பொழுதி லெங்கு
மங்கல வாழ்த்து மல்க மருங்குபல் லியங்க ளார்ப்பத்
தங்குடன் மரபின் விஞ்சைத் தனுத்தொழில் வல்லவர் தம்பாற்
பொங்கொளிக் குரும்பே ரேற்றைப் பொருசிலை பிடிப்பித் தார்கள் ௪௦

688 (இ ள்) வெளிப்படை (இவ்வாறு) வேடர்கள் வரிக்கூத்து ஆடவும், வேடிச்சிகள் துணங்கைக்கூத்து ஆடவும், மிக்க மகிழ்ச்சியோடும் அச்சந்தருகின்ற

தெய்வ மகளிர்கள் ஆடவும், வெற்றிதரும் வில்விழாவை நாள்தோறுங் கொண்டாடி வந்து, விருப்புடைய ஏழாம் நாளிலே முன்னை நாள்களைவிட இருமடங்கு அதிகமாக அக்கொண்டாட்டங்களை அழகுறச் செய்த பின்னர், ௬௯

689 (இ - ள்) வெங்கதிர் . பொழுதில் - ஞாயிறு ஆகாய வெளியின் உச்சியிற் பொருந்திய நேரத்திலே, எங்கும் ஆர்ப்ப - எவ்விடத்தும் பல மங்கல வாழ்த்து நிறையவும், பக்கங்களிற் பலவகை மங்கல இயங்கள் சத்திக்கவும், தங்கள் . தம்பால-(அவ்வேடர்கள்) தங்களுடைய பழைய மரபில் வந்த வில்வித்தை பயிற்றும்தன்மை வல்லவரிடமாக, பொங்கொளி பிடிப்பித்தார்கள். ஒளி வீசும், கரிய போர் வல்ல, ஏறுபோன்ற திண்ணனாரைப் போர் புரிய வல்லதாகிய வில்லினைப் பிடிப்பித்தார்கள். ௭0

இவ்விரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

688. (வி - ரை) குன்றவர்வரி - வரி - வரிக்கூத்து வரிப்பாட்டு - குறிஞ்சிப் பண் என்பாருமுண்டு இவற்றின் விரிவுகளைச் சிலப்பதிகார உரை முதலியவற்றுட் கண்டு கொள்க வரிகொண்டாடுதல் - குறிஞ்சிப் பண்ணைப்பாடிக் கூத்தாடுதல் என்பர். குறிஞ்சிப் பண் இத்திணைக்குரியது. நெஞ்சு உரத்துடன் மிக்க மூச்சுச் செலவுடன் பாடத்தக்கது வேடர்களில் ஆண் மக்கள் வரிகொண்டாட எனக.

**கொடிச்சியர் துணங்கை ஆட** - **துணங்கை** - துணங்கைக் கூத்து சிங்கிக் கூத்தென்பதும் வழக்கு "முடக்கிய விருகை பழுப்புடை யொற்றித், தொடக்கிய நடையது துணங்கை யாகும்" - (பிங்கலம்) வேட்டுவருட் பெண்கள் துணங்கைக் கூத்தாட எனக "வெருவர, வென்றடு விறற்களம் பாடித் தோள்பெயரா, நிணந்தின் வாயள் துணங்கை தூங்க" என்பது திருமுருகாற்றுப்படை **கொடிச்சியர்** - குன்றவர் மகளிர்

**சூர் அரமகளிர்** - கண்டாரக்கு அச்சத்தை வருவிக்கும் தெய்வப் பெண்கள் **சூர்** - அச்சம். இவர்கள் மலையிடங்களில் வாழ்பவர் தெய்வம் பரவிக் குரவை - வரி - துணங்கை முதலியன ஆடியும் பாடியும் வேட்டுவர் விழாக் கொண்டாடினார்களாக, அது கண்டு தெய்வப் பெண்கள் மகிழ்ந்து ஆடினர் என்பதாம். **துன்றிய மகிழ்ச்சி** - விழாக் கொண்டாட்டங்களில் நிறைந்த மகிழ்வு "கோழி யோங்கிய வென்றடு விறற் கொடி, வாழிய பெரிதென் றேத்திப் பலருடன், சீர்திகழ் சிலம்பகஞ் சிலம்பப் பாடிச், சூர ரமகளி ராடுஞ் சோலை" என்ற திருமுருகாற்றுப்படையுங் காண்க

**வென்றி வில் விழவு** - இவ்வில் வெற்றிபெற ஏதுவாகுவதாக என்று மேற்கூறிப் போந்தவாறு ஆறு நாளும் விழாக் கொண்டாடினார்கள் எனக

**விருப்புடை ஏழாம் நாள்** - திருவிழாவின் நிறைவு நாளாதலின் விருப்புடை என்றார் காப்பணிந்தபின் ஏழு நாட்கள் தொடர்ந்து விழாக் கொண்டாடி முடித்தனர் எனக. ஏழுநாட் கொண்ட திருவிழாக்கள் ஆகமங்களிலும் விதிக்கப்பட்டன என்பதையும் நினைவு கூர்க "தீர்த்தமா மட்ட மீமுன் சிறப்புடை யேழு நாளும், கூத்தராய் வீதி போந்தார் குறுக்கைவீ ரட்ட னாரே" என்ற திருநேரிசையும் காண்க "கழுநீர் கொண்ட எழுநாள் அந்தி, ஆடுநவன்று விழவின் நாடார்த்த தன்றே" என்னும் சங்க நூல் மேற்கோளும் அறிக ஏழாம் நாள் முடிவாகச் செய்யப்படும் திருவிழா **கணம்** எனப் பெயர் பெறும்.

**அன்று இருமடங்கு செய்கை** - முன் ஆறு நாளும் நிகழ்ந்தது போல ஒரு மடங்கும், விழா நிறைவின் பொருட்டுத் தனியாக ஒரு மடங்கும் ஆக இருமடங்கு எனக. **இருமடங்கு** - மிகுதிப் பொருள் தருதல் மாத்திரையாய் நின்றது என்பாருமுண்டு.

**அழகுற அமைத்த** - குறிச்சியை அலங்கரித்தலும் தம்மை அலங்கரித்தலும் முதலிய யாவும் அழகு பொருந்தச் செய்த 686 பார்க்க. இவற்றினவகை திருமுருகாற்றுப்படை யுள்ளுங் காண்க **பின்றை** - பின்பு

**களிகொண்டாட—அமைத்த பின்னர்—ஏழா நாளின்**—என்பனவும் பாடங்கள். 39

689. (வி - ரை) வெங்கதிர் விசும்பின் உச்சி மேவிய பொழுதில்-685 பார்க்க.
**மங்கலம்** என்பதனை இயங்களுக்கும், பல என்பதனை வாழ்த்துக்கும் கூட்டுக.
**வாழ்த்து** - மக்கள் வாயால் வாழ்த்துவது. வாழ்த்தெடுத்தியம்பினார்கள் (682) என்றது காண்க. அவ்வாறே இயங்களின் மங்கல ஆர்ப்புக்களும் மிக என்க.

**தங்கள் தொல்மரபின்** - தமது பழமையான மரபு வழிவந்த. ஆசிரியத் தொழிலுக்குத் தொன்மையும் மரபுவழி வருதலும் வேண்டப்படுவன என்பது நமது முன்னையோராகிய ஆன்றோர் துணிபு. ஒரு மரபும் பற்றாது வழிவருதலுமில்லாயப் புதிதின் வந்தவரைச் சிறந்த ஆசிரியராகக் கொள்ளார் நம்முன்னோர். "குலவித்தை கல்லாமற் பாகம் படும்" என்பது கைவந்ததொரு பழமொழி. இவ்வாறல்லாது சிலர் பால் விஞ்சை மேம்பாடு காணப்படுவது ஒரோவழி உள்தாம். அது விதியாகாது. வணிகமரபினர் இயல்பிலே கணக்கில் வல்லவராதலும், வழிவழிவரும் பழைய வேளாள மக்களுக்கு உழவின் அறிவு கல்லாமே அனுபவத்தில் வருதலும் பிறவும் காணலாம். இதுபற்றியே முன்னுள்ள வேடர்கள் வில்வித்தையில் **தங்கள் தொல் மரபில்** வந்த வல்லவரை ஆசிரியராகக் கொண்டு பயிற்றினர்.

**தனுத் தொழில் விஞ்சை** என மாற்றுக. விற்றொழிற்கலை. **வல்லவர்** என்றது **வல்லவர்** என்கின்றது. வல்லவரால் - ஏற்றைச் - சிலை பிடிப்பித்தார்கள் என்று முடிக்க. முறையிற் காப்புச்செய்த வில்லினை வல்லவர் திண்ணனார் கையிற் பிடிக்கும்படி செய்தார்கள். சிலை கையிற் பிடித்தலே அவ்வித்தையின் பயிற்சித் தொடக்கம் என்க. இவ்வித்தையின் மேன்மை விற்பிடிப்பினுள்ளே அமைவதாம் என்பதும் குறிப்பு. திண்ணன் விற்பிடிக்கின்றான் (678) என்றதும் காண்க. **வல்லவர்** என்ற பன்மையால் அவர்களது மரபிலே அவ்வித்தை வல்ல ஆசிரியர் பலர் உளராக அவரெல்லார்பாலும் வில்லினை முதலிற் றொட்டுப்பிடிப்பித்தலும் அவர்களது விழாவில் வழக்குப் போலும். அவ்வாசிரியர் பலருள்ளும் தக்க ஒருவனே ஆசிரியனாகக் கொள்ளப் பட்டானாதல் வேண்டுமென்பது முன்னர் "ஆசிலாசிரியன்" (686) என ஒருமையிற் கூறியதனாலுணரக் கிடக்கின்றது. இவ்வாறன்றி **வல்லவர்** என்பது சிறப்புப்பன்மை என உரைப்பினுமமையும்.

**பொங்கு ஒளிக் கரும்போர் ஏறு** - ஒளியைக் காந்து உள்வாங்கும் இயல்புடையது கருமை. ஆயின், இவரது கருமை, ஒளி பொங்கிய அழகுடையது என்றார். முன்னர் "கருங்கதிர் விரிக்கு மேனிக் காமரு குழவி" என்றவிடத் துரைத்தது காண்க. **ஏறு** - ஆண்சிங்கம். **ஏறு** - இது பொதுமையின் விலங்குச்சாதி ஆணினைக் குறிப்பதாயினும், வரும் பாட்டிற் **சிங்கம்** என்பதனால் இங்கும் ஆண்சிங்கம் என்றுரைக்கப்பட்டது. "ஏறுபோற் பீடு நடை" என்ற குறளில் **ஏறு** சிங்கம் என்றுரைத்தனர் பரிமேலழகர்.

**பொருசிலை** - போர்வல்ல வில். இவரது வில் முற்பிறவியில் அருச்சுனனாயிருந்த போது பன்றியை எய்து சிவபெருமானுடன் பொருதது போலவே இங்கும் பின்னர்ப் பன்றி வேட்டஞ் செய்தும், சிவபெருமானுக்குக் கானூன் அமுதமாக்கியும், காவல் புரிந்தும் செயல் செய்தமையின் **பொருசிலை** என்றார். ஏற்றைச் சிலையைப் பிடிப்பித்தார்கள். செயப்படு பொருள் அடுக்கிவந்தது. "முதலையைப் பிள்ளை(யைத்) தரச் சொல்லு காலனையே" என்ற ஆளுடைய நம்பிகளது திருவவிநாசித் தேவாரங் காண்க.

**மேவிய போதில்**—என்பதும் பாடம். 40

690. பொற்றட வரையின் பாங்கர்ப் புரிவுறு கடன்முன் செய்த
விற்றொழிற் களத்தி னண்ணி விதிமுறை வணங்கி மேவு
மற்றைநாட் டொடங்கி நாளு மடற்சிலை யாண்மை முற்றக்
கற்றன னென்னை யாளுங் கானவர் கரிய சிங்கம். சக

(இ - ள்) வெளிப்படை. அழகிய பெரிய மலையின் சாரலில் விருப்பம் மிக்க (வில் தொழிலின்) கடன்களை யெல்லாம் முன்னர்ச் செய்துவைத்த விற்றொழிற் களத்திலே சேர்ந்து விதிப்படி முறையாக வணங்கிப் பொருந்திய அன்றைய நாளிலே தொடங்கி, ஒவ்வொருநாளும் வலியவில்லைஆளும்தொழிலினை முற்றுப்பெறுமாறு முழுவதும் கற்று நிரம்பினார் என்னை ஆளுகின்ற கானவர்குலத்தில் அரியராய்அவதரித்த சிங்க வேறுபோன்ற திண்ணனார்.

(வி - ரை) பொன்தட வரையின் பாங்கர் - இது விற்றொழில் பயிற்றும் பயிற்சிக் களமிருந்த மலைச்சாரல் குறித்தது.

புரிவுறு கடன்முன் செய்த - செய்யத் தக்கனவாகிய கடன்களை முன்னமே செய்து வைத்திருந்த அவை, தொழிற் பயிற்சிக் களத்தில் முன்னர்ச் செய்து வைக்கத் தக்க கடவுட் பராவுதல் முதலிய கடமைகள் வில்லினையும் மாணவகனையும் காப்பணிதலும், சிலையைச் சூழ்ந்து ஏழு நாள் குறிச்சியை வலங்கொள்ளுதலும், விற்பிடிப்பித்த லும்,முதலிய கடன்கள் குறிச்சியிற் செய்யப்படுவன. விற்றொழிற் பயிற்சிக்களம் குறிச் சிக்குப் புறம்பாய அடுத்த மலைச்சாரலில் அமைவதாம். சிலைபிடிப்பிக்கு நன்னாளின் முன்னர் அவ்விடத்திலும் இதுபோலவே செய்கடன்களை முன்னரே செய்துவைத்தல் மரபு சிலை பிடிப்பித்த பின்னர்க் குறிச்சியினின்று மாணவகனை ஆசிரியன் அக்களத் துக்கு அழைத்துச் சென்று விற்றொழில் பயிற்றுவிக்கத் தொடங்குவான். அச்சிறப்பு இங்குக் கூறப்பட்டது.

விற்றொழிற் களம்-விற்றொழில் கற்றற்குரிய களம் முற்காலத்தில் கலைபயில் இடங் கள் நகர் முதலிய குடியிருப்பு இடங்களை அடுத்துப் புறம்பே அமைப்பது ஊர் அமைப் பாகும் விற்றொழிற் பயிற்சி யிடமாகிய களமும் இவ்வாறே குன்றவர் வாழும் ஊரா கிய குறிச்சிக்குப் புறம்பே அதனை அடுத்த மலைச்சாரலில் அமைவதாம். இவ்வமைப்பு இக்கலைப் பயிற்சிக்கு இன்றியமையாததுமாம் என்னை? அம்புகளைக் குறிவைத்து எய் யும் கலையாதலின் அதற்குரிய அகன்ற வெளியும், மரங்கள் முதலிய பிறவும் வேண்டப் படும், தனியிடமல்லாது குடியிருப்புக்கு அணிமையாயின் அங்கு வாழ்வாருக்கு இப்பயிற் சியால் இடையூறு நேரும் , இவை முதலிய காரணம் பற்றி விற்றொழிற்களம் பொற் றட வரையின் பாங்கர் அமைக்கப்பட்ட தெனக் ஊர்ப்புறம்பே ஓதுகிடைகளும் யாக சாலைகளும் அமைந்த அமைப்பினைச் சண்டீசநாயனார் புராணம் 3,4,6 திருப்பாட்டுக் களிற் கூறியதும் காண்க

விதிமுறை வணங்கி - வில்லின் தொழிற்கலை பயிலத் தொடங்கும் மாணவகன் முதலில் வில்லினையும், ஆசிரியனையும் அதற்குரிய கடவுளையும் வேலன் முதலியவர் களையும் பெரியோரையும் வணங்குதல் மரபு அம்மரபாலே வணங்கி

மேவும் அற்றை நாள் - வில் விழா முடிவுறுகின்ற ஏழாநாளாகிய அன்று (688)

நாளும்-ஒவ்வொருநாளும் கல்விப்பயிற்சி முற்றுமவரை அதனை நாடோறும் பயில வேண்டும் என்பது முறை. அடற்சிலை - சிலைக்கு வலிமையாவது அதனை ஏந்தியோன் எண்ணியாங்கு வினைமுடிக்கத் தக்கதாகி உதவுதல் உண்ணத் தகாதவற்றையும் உண்ணத் தக்கதாக ஆக்கும் வலிமை (681) என்ற குறிப்பும், முற்பிறப்பில் இவர் அருச்சுனனாகி இருந்தபோது ஏந்திய விற்சிறப்பின் குறிப்புமாம்.

சிலை ஆண்மை - வில்லை ஆளுந்தன்மை ஆண்மை - வல்லமை என்பாருமுண்டு அஃதீண்டைக்கேலா தெனக.

முற்றக் கற்றனன் முற்ற - நிறைவெய்தக் கலையின் முற்றுதலாவது அதனாலாகிய முடிந்த பயனைத் தருதல். "கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ, னற்றா டொழாஅ ரெனின்" என்பது திருக்குறள். முற்றக்கற்றதனால் இது இறைவர்க்குப் பக லிற் கானவூ னமுதமாக்குதற்கும், இரவிற் காவல்புரிவதற்கும் பயன்பட்ட தென்பதும்

காணக அனறியும "கறபனவு மினியமையும. கூததாவுன குரைகழறகே, கற்று வின மனமபோலக கசிநதுருக வேணடுவனே" (திருவாசகம) எனறபடி இககலை முறறியத னுல மேலும வேணடபபடாது, இறைவனபாலிற "கனறகல புனிறறுப போலவா்" எனறு கூறும நிலையில விடுவதறகே அமைநததும காணக

**என்னை ஆளும்** - இது கவிககூறறு. சிலைககலை முறறும கறறு நிரமபிய இவவிடத தில ஆசிரியா நாயனுருககு ஒரு வணககமசெயது மேறசெலகினறுா. நாயனாது சரித ததை உலகசசாாபு பறறியதும சிவசசாாபு பறறியதும என இருபகுதியாகப பிரிபபோ மாயின உலகசசாாபின பகுதி நிரமபுகினறதிலை இது. இனி இது முறறியபின நாயனா வேடடையிற புகுகச சென்றவாறே சிவசசாாபு பெறபபோக உளள பகுதி தொடஙகு கினறது "ஐமபுல வேடரின அயாநதனை வளாநதெனன" (சிவஞானபோதம - 8 ம சூததிரம) எனறபடி உணமையில வேடா சேரியில வளாகினற மனனவ குமாராகிய திணணனாது, அநதச சேரியில வளரும வளாச்சிததிறங கூறும பகுதி இஙகு முற றுபபெறுகினறது. இனித "தவததினி லுணாதத விடடு அரனகழல செல"வதாகிய பகுதி தொடஙகுகினறது எனற உணமையுங காணக சிவவழிபாடடுக கிரியைகளுட் புகுமுன ஙியாசஙகள முதலியவறறாற சுததி செயதுகொணடு புகும ஆகமவிதிபோல இஙகுச சிவச்சாாபு பெறபபுகும நாயனாககு வணககமசெயது ஆசிரியா மேறபகுதி தொடஙகுகினறுா. இஃது ஆசிரியாது மரபு. "ஒருமணத திறததி னஙகு நிகழநதது மொழிவே னுயநதேன" (173), "மூவாணடி னுலகுயய நிகழநததனை மொழிகின றேன" (திருஞான - புரா - 54) முதலியவை காணக பினனரும "செயவணணத திற மொழிவேன தீவினையின திறமொழிவேன" (790) எனபது காண்க **என்னை ஆளும்** எனறது எமககுத தலைவா எனறபடி

**கானவர்க்கு அரிய** - "அருமபெறன மறவாதாயதது" (658) எனறதும காண்க. வேடா குலததுககுக கிடைததறகரிய பேறுகக கிடைததவா எனபது கருதது.

**சிங்கம்** - சிஙகம போனறுா. உவமையாகு பெயா. இஙகுக **கரிய சிங்கம்** எனறு கொணடு கருமைநிறம பறறிய விசேட உரைக குறிபபுககள காணபாருமுணடு. அவை பொருநதாமையறிக.

**களத்தை**—எனபதும பாடம 41

691\. வண்ணவெஞ சிலையு மறறப படைகளு மலாக கறறுக
கணணகன சாயல பொஙகக கலைவளா திஙக ளேபோல்
எண்ணிரண டாண்டின சேவ்வி யெயதினு ரெலலை யில்லாப்
புண்ணியந தோன்றி மேன்மேல வளாவதன் பொலிவு போல்வாா.

**(இ - ள்)** வெளிபபடை. எலலையிலலாத சிவ புணணியஙகளெலலாம ஒனறுகூடி அவதரிததது மேலுமேலும வளாவதனபொலிவைப போனறுளளாராகிய திணணனா அழகிய விருபபந தரததகக விலவிததையையும, அதனுடன இனமாகிய ஏனைப படை களின விததைகளையும நிரமபக கறறு, விரிநத அழகு மேனமேற பொஙக, எலலாக கலைகளும நிரமபியவாறே நிறகும திஙகளேபோலப, பதினறுவயது ஆகினறபருவததை யடைநதனா.

**(வி - ரை) வெம் - சிலை** - சிலைககு முனனா உரைதத சிறபபுககளைப பாாகக. **சிலை, படை** எனபன இஙகு அவவவறறின பயிறசி குறிததன. **வெம்** - விருபபந தரும "முநதை யறிவின றொடாசசியினுன முகைதத மலரின வாசமபோற, சிநதை மலா வடனமலருஞ செவவி யுணாவு" (சணடேசா புராணம - 13) எனறபடி முநதைத தொடாபினுல இவாககு விலலின கலையில விருப்பம மிககது , அதனை விரைவிற

பயின்று திரம்பினார் என்பதாம். சிலையை வேறு பிரித்தோதியதும் இக்கருத்துப் பற்றியே.

**மற்றுப் படைகள்** - சுரிகை, வாள், வேல் முதலியன. "பயில்வது வெந்திறற் சிலையொடு வேல்வாண் முதலிய, வந்தமில் படைக்கலமவையே" - திருக்கண்ணப்ப தேவர் திருமறம் - நக்கீரதேவர் - பதினொராந் திருமுறை.

**மலராக் கற்றல்** - கலை முழுதும் நிரம்பக் கற்றல்.

**கண்ணகன் சாயல்** - இடம் விரிந்த அழகு.

**கலைவளர் திங்களேபோல்** - ஏகாரம் பிரிநிலை. திங்கள் கலை வளர்வதுங் குறைவதுமாயுள்ளது. வளர்ந்த கலைகள் என்றுங் குறையாமல் வளர்ந்தபடியே நிறைவதொரு திங்கள் உளதாயின் அதுபோல. "கண்ணிறை கதிரே கலைவளர் மதியே" (63), "வானத்தின் மிசையன்றி மண்ணில்வளர் மதிக்கொழுந்தை" (728) என்ற திருஞான சம்பந்தமூர்த்திகள் புராணத் திருவாக்குக்களுங் காண்க.

**எண்ணிரண் டாண்டின் செவ்வி** - பதினாறு வயதாகிய பருவம். இதனை மணப்பருவம் காளைப்பருவம் எனப் பலவாறும் வகுத்துப் பேசுவர். "புண்ணியப் பதினாறாண்டு போய்ப்பெறும் புகலி வேந்தர்" (திருஞான - புரா - 1109) என்றது காண்க. புகலிவேந்தரைப் போன்று நாயனாரும் இப் பதினாறாண்டின் பருவத்திலே இறைவனை அடைந்து மீளா நெறி பெற்றது குறிக்கற்பாலதாம். செவ்வி - பருவம். முழுமதிக்குக் கலைகள் பதினாறும். மார்க்கண்டேயர் சரிதமுங் காண்க.

**எல்லையில்லாப் புண்ணியம்** - அளவில்லாத - குறைவுபடாத - என்றும் அழியாத சிவபுண்ணியம். புண்ணியம் என்பது இங்குச் சிவபுண்ணியங் குறித்தது. ஏனைப் பசு புண்ணியம் என்று கூறப்படுவனவெல்லாம், இவைபோலன்றி அழியும்படியான ஏகதேச இன்பங்களைக் கொடுத்து மீளப் பிறவிக்கு ஏதுவாவன. "புண்ணியப் பொருளாயுள்ள பொருவிலச் சிறுவி னூனை" (666) என முன்னர்ச் சுட்டியதுங் காண்க. "புண்ணியா வுன்னடிக்கே போதுகின்றேன்" முதலிய திருவாக்குக்களுங் காண்க.

**புண்ணியத் திரண்டு**—என்பதும் பாடம். 42

**வேறு**

692\. இவ்வண்ணந் திண்ணனார் நிரம்பு நாளி
 லிருங்குறவர் பெருங்குறிச்சிக் கிறைவ னாய
மைவண்ண வரைநெடுந்தோ ணாகன் றானு
 மலையெங்கும் வனமெங்கும் வரம்பில் காலங்
கைவண்ணச் சிலைவேட்டை யாடித் தெவ்வர்
 கணநிரைகள் பலகவர்ந்து கானங் காத்து
மெய்வண்ணந் தளர்மூப்பின் பருவ மெய்தி
 விலனுழவின் பெருமுயற்சி மெலிவா னானான். ௪௩

(இ - ள்) வெளிப்படை. இவ்வண்ணமாகத் திண்ணனார் பருவம் நிரம்பிய காலத்தில் வலியிற் பெரிய குறவர்கள் வாழும் பெருமை வாய்ந்த சீறூர்க்குத் தலைவனாகிய கரிய மலைபோன்ற பெருந் தோள்களையுடைய நாகனும், மலைகளெங்கும் வனங்களெங்கும் அளவில்லாத காலங்கள் கையிலேந்திய அழகிய வில்லினாலே வேட்டையாடியும் பகைக் கூட்டத்தார்களுடைய ஆநிரைகள் பலவற்றைக் கவர்ந்தும் தனக்குரிய கானங்களைக் காத்தும் உடம்பின்கண் தளர்ச்சிதரும் மூப்புப்பருவத்தினை அடைந்து விற்றொழிலின் பெருமுயற்சியில் குறைவுற்றவனானான்.

**(வி - ரை) இவ்வண்ணம் - நிரம்பும் நாளில்** - மேலே 662 முதல் 691 வரை திண்ணனார் அவதரித்தது முதல் பதினாறாண்டு வளர்ந்த சரிதம் கூறினார். இங்கு அதனை **இவ்வண்ண** மென்று சுட்டியவாறு. இந்தப் பதினாறாண்டினும் நிகழ்ந்த நாகனுடைய வரலாறு இவ்வொரு பாட்டிற் கூறிச் செல்கின்ற சரிதக் கவிச் சுவை காண்க. இப்பாட்டு முதல் 705 வரை பதின்மூன்று திருப்பாட்டுக்களில் கதைப் போக்காக உரைநடை போன்று சரித நிகழ்ச்சி கூறிப் போகும் உயர்ந்த கவி நடைச் சிறப்பும் யாப்பமைதியும் குறிக்கொள்க. இவ்வாறு இடத்துக்கேற்றபடி மாற்றி யாப்பமைதியும் செய்யுணடையும் மேற்கொண்ட சிறந்த காப்பிய இலக்கிய அமைதி நமது ஆசிரியர்க்கேயுரிய சிறப்பியல்புகளில் ஒன்று. திருஞானசம்பந்தசுவாமிகள் புராணம் 443 முதல் 485 வரை உள்ள பகுதியும் பிறவும் காண்க. இதனைக் கதைசொல்லும் போக்குச் சுவை (Narration) என்பர் நவீனர்.

**இருந்துறவர்** - மறக்குலமாதலின் இவ்வாறு குறித்தார். இவர் வாழ்க்கைத்திறம் பற்றி முன் உரைத்தவையெல்லாம் நினைவுகூர்க.

**பெருங் குறிச்சி** - கானவர்களின் பெரிய குடிவாழ்க்கைக்குரிய இடங்கள். ஊர்கள் சீறூர்களேயாயினும் இவ்வாறு பல ஊர்களைக் கொண்ட பெரிய மலை எல்லையாதலின் பெருங் குறிச்சி என்றார்.

**மைவண்ண வரை (நெடுந் தோள்)** - கரியமலை. "கருவரை காள மேக மேந்திய தென்ன" (664) என்றது காண்க. **வரை** - சலியாது தாங்கும் தன்மையும் நெடுமையும் பெருமையும் குறித்தது. "அளக்க லாகா வளவும் பொருளும், துளக்க லாகா நிலையுந் தோற்றமும், வறப்பினும் வளந்தரும் வண்மையு மலைக்கே" (நன்னூல் - பாயிரம் - 28) என்ற இலக்கணமுங் காண்க.

**வரம்பில் காலம்** - திண்ணனாரைப் பெற்றெடுத்த பின் அவர் இப்பருவம் எய்தும் வரை அனேக முறைகள்.

**மலையெங்கும் வனமெங்கும்** - தன்னுடைய ஆட்சிக்குட்பட்ட நிலங்களே யன்றி அடுத்துள்ள மலைகளும் காடுகளும். இவ்வாறு பிறபுலங்களிற் புகுந்து வேட்டையாடுதலும் ஆநிரைகவர்தலும் தகுமோ? எனின், அஃதவர் திணையொழுக்கமெனக் "இம்மறக்குடியில் தாயம் பற்றிவருகின்ற ஆறெறி, சூறை, ஆகோள்முதலிய வற்றால் விளையும் வளங்குன்றி, அறக்குடிகளைப் போலச் சினங்குறைந்து செருக்கடங்கி விட்டார்கள்" என்று அடியார்க்கு நல்லார், "மறக்குடித் தாயத்து வழிவளஞ் சுரவா தறக்குடி போலவிந் தடங்கினர் எயினரும்" என்ற (12 வேட்டுவவரி - 14 - 15) சிலப்பதிகாரத்தின் கீழ் உரைத்தவை காண்க. "தெவ்வர் கணநிரைகள் பலகவர்ந்து" "தெம்முனையி லயற்புலங்கள் கவர்ந்து கொண்ட திணைசிலையின் வளம்"(704) என்றவை காண்க. அன்றியும், அயற்புலங்களில் மலைச்சாரல்களில் உள்ள மிருகங்கள் மீதூர்ந்து வந்து இவர்களது புனங்களையும் பிறவற்றையும் அழிவு செய்யாதவண்ணம் அவற்றை அங்கங்குச் சென்று வேட்டையாடுதலும் இயல்பாம். இதுபற்றி அவர்கள் "மலைத் தடஞ் சாரற்புனங்களெங்கும் . மிருகங்கள் மிகநெருங்கி மீதூர் காலை" என வரும் பாட்டிற் கூறியதும், "திங்கண்முறை வேட்டைவினை தாழ்த்த" தென்று வேட்டஞ் செய்தற்கு உரிய பருவங்களைக் குறித்ததும் காண்க.

**தெவ்வர் கணம்** - பகைவர் கூட்டம். **நிரை** - ஆநிரைகள். ஆகோள் குன்றவர் தொழில்களில் ஒன்று.

**கானம் காத்து** - மேற்சொல்லிய வேட்டமும் நிரைகவர்தலும் கானங்காக்குந் தொழிற்குரியவகைகள்.

**மெய்வண்ணம் தளர்மூப்பின் பருவம்** - மெய்தளர்ந்த மிக்க மூப்புப்பருவம். "இவர்க்கினி புதல்வர்ப் பேறே, யரியதென் றெவருஞ் சொல்ல" (659) என்றாராதலின் அதுபோழ்து நாகனுக்கு அறுபதுக்கு மேலாயின ஆண்டுகள் சென்றிருக்கக்

கூடு மெனவும், அதன் பின் இது போழ்து பதினாறாண்டுகள் சென்றன வாதலின் இங்கு அவனுக்கு எண்பது ஆண்டு வரை சென்றிருக்கு மெனவும் ஊகிக்கக் கிடத்தலான் இவ்வாறு கூறினார். திண்ணனார் அவதரித்த பின்னரும் அவன் பல காலம் வேட்டையாடியும் நிரைகவர்ந்தும் கானங்காத்தும் வந்தானென்னப்படுதலால் மிக மூத்த வயதாகும் வரை அவன் உறுதிபெற்ற உடல்வன்மையுடன் வாழ்ந்தான் என அறியலாம் இற்றைநாள் மக்கள் இளவயதில் மூப்படைந்து ஒன்றுக்கு முதவாது மருந்துச்சாலைகளை நிரப்பியுழலும் அல்லல்வாழ்க்கையை இதனுடன் ஒப்பிடுக. மூப்புப்பருவத்தி னியல்புகளாக "கண்கொ ளிருமல் சூலைநோய் கம்ப தாளி குன்மமும், இனைய பலவு மூப்பினோ டெய்தி வந்து நலியாமுன" (ஆளுடையபிள்ளையார் - பண் - நட்டராகம் - திருவிராகம் - திருக்கோவல் வீரட்டம்), "தனித்தொருதண் டூன்றி மெய் தள்ளா முன்னம்"(தனித்திருத்தாண்டகம்), "குயிலொத்த திருள்குஞ்சி கொக்கொத்த திருமல், பயிலப் புகாமுன்னம் " (பதினோராந்திருமுறை - க்ஷேத்திரத் திருவெண்பா 12) என்பனவாதி திருவாக்குக்களிற் காண்க. உடலவலி குறைந்தகாலத்து உடல முயற்சியாற் செய்யப்படும் வில் முதலிய தொழில்கள் பயன்படா எனக் **வண்ணம்** - அழகு எனக் கொண்டு, மெய்யினது அழகு கெடும்படியான மூப்புப் பருவம் என்பாரு முண்டு

**வில் உழவு** உழவு - தொழிற் பெயர் "வில்லே ருழவர்" - குறள் **மெலிவதானுன்**—என்பதும் பாடம் 43

693 அங்கண்மலைத் தடஞ்சாரற் புனங்க ளெங்கு
மடலேனம் புலிகரடி கடமை யாமா
வெங்கண்மரை கலையொடுமான் முதலா யுள்ள
மிருகங்கண் மிகநெருங்கி மீதூர் காலைத்
"திங்கண்முறை வேட்டைவினை தாழ்த்த" தென்று
சிலைவேடர் தாமெல்லாந் திரண்டு சென்று
தங்கள்குல முதற்றலைவ னாகி யுள்ள
தண்டெரிய னாகனபாற் சார்ந்து சொன்னார். ௪௪

(இ - ள்) வெளிப்படை அழகிய இடங்களையுடைய மலைகளின் பெருஞ்சாரல்களும் புனங்களுமாகிய எவ்விடங்களிலும் வலிய காட்டுப்பன்றியும், புலி, கரடி, கடைமை, காட்டுப்பசு, மரை,மான் முதலாகிய மிருகங்களும் மிகவும் நெருங்கி மேற்சென்று அழிக்கத் தொடங்கியபோது, "திங்கண்முறை வேட்டைச் செயல்கள் நிகழாது தாழ்த்தமை யாலே இக்கொடுமைகள் நேர்ந்தன"என்று வில்லேந்திய வேடர்கள் எல்லாரும் ஒருங்கு கூடிச் சென்று தங்கள்குலத் தலைவனாயுள்ள குளிர்ந்த மாலைசூடிய நாகனிடத்துச் சேர்ந்து சொன்னார்கள்

(வி - ரை) **மலைத் தடஞ் சாரல் அங்கண் புனங்கள்** என மாற்றியுரைத்தலு மொன்று. **தடஞ் சாரல்** - செறிந்து பரந்த சாரல்கள் **சாரற் புனங்கள்** - மலைச் சாரலில் குறவர் வாழிடங்களும் அவர்களது தினைப்புன முதலியனவும்

**அடல் ஏனம் முதலாயுள்ள** - இவை அச்சாரல்களிலும் அயற்புலங்களிலும் வாழ்ந்து இவர்களது புனங்களில் மீதூர்ந்து வந்து பயிர்களையும் இவர்களது ஆனிரை முதலிய பிராணிகளையும் அழிப்பன விலங்குகள், இங்கு இவர்களுக்கு கொடுமையும் அழிவுசெய்யும் சத்தியும் பற்றிய வரிசையாற் கூறினார் ஏனம் புலியி னும் சிறிதாயினும் பயிர்களை அழிக்கும் செயலிற் பெரிது அன்றியும் இச்சரிதவேட் டையிற்பன்றி முதன்மைபெற்று நாயனாரைத் திருக்காளத்திமலைகாணமுன் ஓடி அழைத் துச்சென்றது. இச்சிறப்புக்கள்பற்றி இதனை முதலில் வைத்தவோடு அடல் என்ற

அடைமொழியும தநது சிறபபிததார ஆளுடையபிளளையார தேவாரததினும ஏனத திரளோடு என ஒடு உருபு தநது வேறு பிரிதது முதலில வைததது மகாணக.

**கடமை** - ஒருவகைக காடடுப பசு. கடமையாகிய ஆமா எனபாருமுணடு. **ஆமா** - காட்டுப பசு

**வெங்கண்மரை** - வெவ்விய கோபககணணுடைய மரைமான. **மரை** - மானின ஒருவகை **கலை** - மானின மறறொருவகை. இவை மெலலியவாய நீணடு கிளைதத கொமபுகளையுடையன. **மான்** - வேறுமானவகை **கலை** - ஆண எனறும, **மான்** - பெணமான எனறும கூறுவாருமுளர. இஙகுக கூறியவை பலவகை மானினஙகளைக குறிபபன எனபது 726 - 728-ம பாடடுககளானுமறிக

**மிகநெருங்கி மீதூர்தலாவது** மிருகஙகள தாநதாம வாழும நெருஙகிய காடடிணிடஙகளை விடடு வெளிபபோநது குனறவர வாழும குறிசசிகளிலும அவரது புனஙகளிலும புகககு உயிரகளுககும பயிரகளுககும தீஙகுசெயதல

**திங்கள் முறை வேட்டை** - குறிதத மாதஙகளிலேனும இததனை மாதததுககொரு முறையெனற முறைபபறறியேனும காடுவளைதது வேடடையாடுதல. மாதநதோறும எனறுரைபபாரு முணடு அது பொருநதாதெனக

**தண்தேரியல் நாகன்** - **தேரியல்** - ஈணடு வேடடாககுரிய மாலை

**கலைகளொடு முதலா—பலநெருங்கி—சினவேடர்**—எனபனவும பாடஙகள 44

994. சொனனவுரை கேடடலுமே நாகன றானுஞ்
சூழ்நதுவரு தனமூபபின் றொடரவு நோககி
முனனவரைக் குரைசெயவான "மூபபி னாலே
முனபுபோல் வேடடையினின முயல கிலலேன,
னெனமகனை யுஙகளுககு நாத னாக
வெலலீருங கைககொணமின !" னெனற போதின
அனனவரு மிரஙகிபபின மகிழநது தஙகோ
னடிவணஙகி யிமமாறற மறைகின றாரகள— ௪௫

995. " இததனைகா லமுநினது சிலைககீழத தஙகி
யினிதுணடு தீஙகினறி யிருநதோ !, மினனும
அதத ! வுன தருளவழியே நிறப தலலா
லடுததநெறி வேறுளதோ ?, வதுவே யனறி
மெயததவிறற றிணணனையுன மரபிற சால
மேமபடவே பெறறளிததாய , விளஙகு மேனமை
வைததசிலை மைநதனையீண டழைதது நுஙகள
வரையாடசி யரு" ளெனறார் மகிழநது வேடர். ௪௬

994. (இ - ள்) வெளிபபடை. வேடரகள சொனன சொலலைக கேடடலுமே நாகனும தனனைச சூழநதுகொணடு வருகினற மூபபின தொடரசசியை நோககி முனனினற அவரகடகுச சொலவானாகி, "மூபபுககாரணமாக முனபுபோல வேடடையிலமுயலும வலிமையிலலேன ஆதலால எனமகனை உஙகளுககுத தலைவனாக நீஙகள எலலீருமு ஏறறுக கொளளுஙகள" எனறு உரைதத போதில, அவரகள முதலில இரஙகிப, பினனர மகிழநது, தமது தலைவனை வணஙகிப பினவரும வாரததைகளைச சொலவாரகளாய—

௪௫

695 (இ - ள்) வெளிப்படை. "இத்தனை காலமும் உன்னுடைய சிலையாட்சியின் கீழே தங்கி இனிதாக உண்டு தீங்கின்றி வாழ்ந்திருந்தோம்!, அத்தனே! நீ கட்டளையிட்டருளிய வழியிலே அமைந்து நிற்கின்றதல்லாமல் எங்களுக்கு அடுத்த நெறி வேறு முண்டோ?, அதுவேயுமன்றி, மெய்த்த விறலுடைய திண்ணனை உன் மரபிலே மிகவும் மேன்மையடையவே பெற்று அளித்தாய்; விளங்கும் மேன்மைவைத்த வில்லினை ஏந்திய உன் மைந்தனை இங்கே அழைத்து உங்களுக்குரிய மலையாட்சி யுரிமையை அவனுக்குக் கொடுத்தருள்வாயாக" என்று அவவேடர்கள் மகிழ்ந்து கூறினர். ௨௯

இவ்விரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

694. (வி - ரை) சொன்ன உரை - சிலைவேடர் திங்கள்முறை வேட்டைவினை தாழ்த்ததென்று சொல்லிய முறையீடு

**தன் சூழ்ந்து வரும்** என மாற்றுக தன் சத்திகளை யெல்லாம் ஒடுக்கித் தன்னைச் சுற்றிக் கொண்டு வருகின்ற. மாலையில் இருள் கண்தோறும் வந்து சூழ்ந்து கண்ணை மறைப்பது போலவும், தனது நூல் வலயத்துட்பட்ட பிராணியினைச் சிலந்தி வாய நூலாற் சுற்றிச் சுற்றிப் பிணிப்பது போலவும் கணந்தோறும் சூழ்ந்து உடற் சத்தியை ஒடுக்கும் என்பார் **சூழ்ந்துவரும் தொடர்வு** என்றார் **தொடர்வு** பிணிப்பு.

**மூப்பினாலே முயலகில்லேன்**-மூப்பினால் வரும் ஏதங்கள் முன்பாட்டி லுரைக்கப் பட்டன **கில்** - ஆற்றலுணர்த்தும் இடைச்சொல் "கேட்கவுங் கில்லேனே"—திருவாசகம் - திருச்சதகம் - 33

**நாதனாக** - அரசனாக, தலைவனாக

**கைக்கொண்மின்** - ஏற்று அவன்கீழ் அமைந்து நடந்து கொள்ளுங்கள் வழிவழி அரசனாயினும் குடிகளின் அங்கீகாரத்தின் மேல் அரசனாந் தலைமைத்தன்மை நிலை பெறுவதாம் என்ற உண்மையினை இங்குக் காணக் **கொண்மின்** என்றலே அமையுமாயினும் **கைக்கொண்மின்** என்றார் **கை** என்பது கைகூடும் என்புழிப்போல உபசர்க்கமாய உறுதிப் பொருள் தந்து நிற்பதோர் இடைச்சொல்

**இரங்கிப் பின் மகிழ்ந்து** - இஃது நாகனது உரை கேட்டவுடன் வேடர்களின் மன நிகழ்ச்சிகளை ஒன்றன்பின் ஒன்றாக உணர்த்துவதாம். முதலில் தமது தலைவனது மூப்பு நிலையினையும் அதுகாரணமாக அவன் தமது தலைவனாந் தன்மையினின்று நீங்குவதனையும் பற்றி இரக்கம் வந்தது, பின்னர் அவன் மகனைத் தமக்கு மேன்மையுடைய தலைவனாகப் பெறும் பேறு பற்றி மகிழ்ச்சி வந்தது என்க

**அடிவணங்கி** - தலைவனிடம் விசேட அறிக்கை செய்யும் முறை

**முயல்கிலேனான்**—என்பதும் பாடம் 45

695. (வி - ரை) **நினது சிலைக்கீழ்த் தங்கி - சிலை** - இங்கு அரச அடையாளங் குறித்தது சிலையின் ஆட்சியாற் பெற்ற காவலின் கீழமைந்து என்பது பொருள் "வெண்கொற்றக் குடையும் நவமணி முடியும் சிங்காதனமும் மன்னவர்க்கேயுரிய சிறப்படையாளமாம்" - என்ப (சிவஞானபோதச் சிற்றுரை - 8 ம் சூத்திரம்) மன்னவனது குடையைத் "தண்ணளி வெண்குடை" எனவும் அதன் நிழலின்கீழ் உலகம் குளிர்ந்து காவல் பெற்று நிற்குமெனவும் உபசரித்துக் கூறுவது மரபு. அதுபோல இங்கு, வேடர் தலைவன் ஆட்சி புரிந்து காவல்தர இன்றியமையாச் சிறப்பின் உள்ளது அவன் கையேந்திய வில்லேயாதலின் அச்சிலையின் கீழ் அவன் குடிமக்கள் தங்கினர் என்பதாம

**இனிதுண்டு தீங்கின்றி** - வழிவழி அரசனேயாக, அல்லது தலைவனேயாக, அல்லது அரசாங்கமேயாக, இன்னோ குடிகளுக்குச் செய்து தரவேண்டிய இன்றியமையாத கடமைகள் இரண்டேயுள்ளன அவையாவன, அவர்களைப் பசியின்றி இனிதுண்டு வாழ வைத்தலும், அவர்தம் உடலுக்கும் உடைமைக்கும் பிறரால் எவ்வித தீமையும் நேராதபடி காவல்பெற்று வாழவைத்தலும் என்ற இவைகளேயாம. அர

சாங்கத்தின் உள்ளுறையாகிய இந்தக் கடமைகளை இங்கு வேடர்கள் தமது தலைவன் தமக்களித்த காவலின் பெற்றியைப் பாராட்டும் முறையால் பேரமைச்சராகிய ஆசிரியர் அவ்வேடர்களது வாக்கில் வைத்துக் காட்டிய அழகு காண்க. **தீங்கின்றி** - **தீங்கு** அரசர்களவர் முதலாயினோரால் வரும் தீமைகள் இதுபற்றி 121-ம் திருப்பாட்டில் உரைத்தவை காண்க *

**அத்த உனது அருள் வழியே வேறுளதோ ?** என்றும், **வரை ஆட்சி அருள்** என்றும் வருவன தலைவன்பால் குடிகளாகிய வேடர் பணிவுடன் விண்ணப்பிக்கும்முறை Ever your Majesties' subjects - Graciously pleased என்பனவாதி மரபு வழக்குக்களும் காண்க

**அதுவேயன்றி** - இனியுண்டு தீங்கின்றி இருக்க வைத்ததுமன்றி

**மெய்த்த விறல்** - உடல் வலிமை மிக உடைய **மெய்** - உடம்பு **மெய்த்த** - உடம்பின் கண்ணதாகிய பெயர்ச்சொல் லடியாகப்பிறந்த பெயரெச்சம். இவர்கள் கண்டதும், இவர்களது சிலையாட்சிக்கு வேண்டுவதும் அதுவேயாதலின் அதனை இங்குக்குறித்தனர் மூப்பினால் வேட்டையினில் முயல்கிலேன் என்ற தலைவனை நோக்கி உன்னினும் மிக்க உடல் வலிபெற்று அதனால் எங்களைக் காக்கவல்ல மகனைத் தந்தனை என்று வேடர்கள் குறித்தபடி. **மைந்தனை** என்ற குறிப்புமது ஆயின் இங்கு அவர்களறியாமலே, **மெய்த்த விறல்** என்றது உண்மையன்பு உருப்பட்டு வந்த தவவலிமை பெற்ற என்றதோருண்மைப்பொருள் தொனித்தலும் காண்க. " அன்பின் மெய்ம்மை யுருவினையும் " (திருஞான - புரா - 1023) என்றது காண்க

**மரபில் சால மேம்படவே** - உன் மரபில் வந்த பிறர் யாவரினும் மிக மேலோங்க இங்கும் பிறிதோருண்மைப் பொருட்குறிப்புக்காண்க இவ்வாறே பின்னர்தத்தேவராட்டி வாக்கில் "நின் அளவி லன்றி மேம்படுகின்றான்" (700) என்ற இடத்தும் பிறிதோருட் குறிப்பும், சரித நிகழ்ச்சியின் முற்குறிப்பும் காண்க. பிறவும் இவ்வாறே அங்கங்கும் இச்சரிதத்துட்கண்டு கொள்க.

**விளங்கும் மேன்மை வைத்த சிலை** - முன்னர் வில் விழாவிற்கூறிய சிறப்புக்களும் மேன்மையும் கொண்டசிலை **மைந்தனை** - **மைந்து** - வல்லமை நீ ஏவியதன் அளவேயன்றி அவனும் அதற்குத் தகுதிபெற்ற வன்மையுடையோன் என்பதாம்

**நுங்கள் வரை ஆட்சி அருள்** - உங்களுக்கு வழிவழி உரிமையாய் வந்த மலையாளும் தலைமையை அவனிடத்து ஏற்றுக - அரசனுக்குக் என்றார் **நுங்கள்** - நீ கூறியவாறு எங்கள் இசைவேயன்றி உங்களுக்கே உரிமையுடையதான **அருள்**-உரியமரபிற்கொடுக்க இம்மரபுகள் 701 - 702-ல் உரைக்கப்பட்டன 46

696\. சிலைமறவ ருரைசெய்ய நாகன் றானுந்
திண்ணனைமுன் கொண்டுவரச் செப்பி விட்டு
" மலைமருவு நெடுங்கானிற் கன்னி வேட்டை
மகன்போகக் காடுபலி மகிழ வூட்டத்
தலைமரபின் வழிவந்த தேவ ராட்டி
தனையழைமி" னென்னவங்குச் சேரந்தோர் சென்று
நிலைமையவ டனைக்குறைப்ப நரைமூ தாட்டி
நெடிதுவந்து விருப்பினொடுங் கடிது வந்தாள் ௪௭

(இ - ள்) வெளிப்படை வில்லேந்திய வேடர்கள் இவ்வாறு சொல்ல, நாகனும், திண்ணனாரை அழைத்துக் கொண்டு வரும்படி முன்னர்ச் சொல்லியனுப்பிவிட்டு,

*என்து சேக்கிழார் 49, 50 பக்கங்கள் பார்க்க.

"மலைகளிற பொருநதிய பெருஙகாட்டில எனமகன கனனிவேட்டைககுப போவதற காகக காட்டுத தெயவஙகள மகிழுமாறு பலிகளை ஊட்டுவதறகு எனது தலைமை பெறற மரபின வழிவழி வநத தேவராட்டியை அழைமினகள" என்று சொலல, அங குளளோா சென்று அநநிலைமையை அவவாறே அவளுககு அறிவிகக, நரைமூதாட்டி யாகிய அவளும பெரிதும மகிழநது விருபபத்தோடும விரைநது வநதாள

(வி - ரை) **உரைசெய்ய** - வரை ஆட்சியை மகனுககு அருளக என்று சொலல

**கொண்டுவா** - அழைததுககொணடு வருமாறு. **முன் செப்பிவிட்டு** எனக

**மலைமருவு .அழைமின்** - இவை நாகன அஙகிருநத வேடாகளைப பாாததுக கூறியவை. நாடகசசுவை பெற முனனிலைக கூறறாக அவன சொலலிய வாறு கூறினா மேலிரண்டு பாட்டுககளினும் இவவாறே கூறியதுங காணக நாகன வேடாகள கேட்டவாறு தனமகனபால வரையாட்சியைச சூட்டி அவனை அவாகளுக குத்தலைவனுககுவது மனறி, அனறைககே அவன கனனிவேட்டைககுச செலலுமாறு காடுபலியூட்டச செயயவும தொடஙகி விட்டான. இது குடிமககளின முறையீடு கேட்ட நறறலைவன செயயும தனமையாம

**மலைமருவும் நெடுங்கான்** - "அஙகணமலைத தடஞ்சாரற புனமெஙகும" (693) என்றது காணக.

**கன்னிவேட்டை** - பயிறசிப பொருட்டா னனறித தொழிறபொருட்டான முதல முறையாக வேட்டையிற செலலுதலை இவவாறு கூறுதல மரபு இவவாறே நவீன ரும Maiden speech - Maiden attempt என்று வழஙகுதலுங காணக **மகன் கானில் கன்னி வேட்டைபோக** எனக கூட்டுக

**காடு மகிழப் பலி ஊட்டுக** - எனக **காடு** - இஙகு ஆகுபெயராயக காட்டில வாழுஞ சிறு தெயவஙகளைக குறிததுநினறது "காட்டிலுறை தெயவஙகள விருமபி யுணணக காடுபலி ஊட்டு" (699) என்றது காணக. **காடுபலி** என்றது ஒரு சொனனீாமைபபட்டு வனதெயவஙகளுககுக காட்டிற பலியிடுவதைககுறிககும குழூஉக குறி என்றலுமாம.

**தன்மரபின் வழிவந்த - தன்மரபு** - தலைமைபெறற மரபு - தஙகளமரபில வழிவழி யாகவநது அககுலததவாபொருட்டுத தெயவந தொழுவதற கென்று அககுலததில முதியாளொருததியை வழிவழியாக நியமிதது அவளுககு வேணடுவன படி முறை அளிதது வருதல பெருமரபுகளின பழைய வழககு இவவாறு நாகன இததேவராட் டிககு அமைதத படிமுறை 698 ல காணக

**தேவராட்டி**-உபாசனையினால தெயவ ஆவேசம தனவடிவிலே வரபபெறறு அதன அருளிபபாடுகளை வழிபடுவோருககு அளிபபவள, தெயவததால ஆளபபெறற வள, தெயவ மேறபபெறறவள எனபா. இவளைப, "படிமததாள", "அணஙகு சாாந தாள" (698), "வரைச சூராட்டி" (700), "தெயவநிகழ குறமுதியாள" (701), "கட வுட பொறையாட்டி" (714), "அணஙகுடையாட்டி" (716), "அணஙகுறைவாள"(802) என்று கூறுகினறவாறறால இவளியலபுகள தெரிககபபட்டன

**நிலைமை** நாகன மகனுககு வரையாட்சி யருளுதலும கனனிவேட்டைககுக காடு பலியூட்டலும ஆக உளள செயதிகள நாகன கூறிய செயதியை அவளுககு உரைததாா என்றது **நிலைமை உரைசெய்து** என்றது இஙகு நிகழநதவை யாவும மேல ஆகவேணடு வனவும அவள உளஙகொளளத தெருட்டுதல குறிததது

**நரை மூதாட்டி** - நரைதது மிகக மூபபு அடைநதவள **மூதாட்டி** - முதுமையால ஆளபபட்டவள இவளுடலின முதுநிலையைபபறறி மேலவரும பாட்டிற கூறுவதும பிறவும காணக.

697. கானில்வரித் தளிர்துதைந்த கண்ணி சூடிக்
கலைமருப்பி னரிந்தகுழை காதிற் பெய்து
மானின்வயிற் றரிதாரத் திலக மிட்டு
மயிற்கழுத்து மனவுமணி வடமும் பூண்டு
தானிழிந்து திரங்கிமுலை சரிந்து தாழத்
தழைப்பீலி மரவுரிமேற் சார வெய்திப்
பூநெருங்கு தோரைமலி சேடை நல்கிப்
போர்வேடர் கோமானைப் போற்றி நின்றாள். ௪௮

(இ - ள்) வெளிப்படை. தேவராட்டி வரிபொருந்திய காட்டுத் தளிர்களா லாகிய முடி மாலையைச் சூடிக், கலைமான் கொம்பின் அரிந்த குழையைக் காதிலணிந்து, மான்வயிற்றி னரிதாரத்தாற் பொட்டிட்டு, மயிற் கழுத்துப் போன்று வன்ன மிட்ட சங்குமணி வடமும் பூண்டு, முலை தொங்கித் திரங்கிச் சரிந்து தாழ, இடையிற் கட்டிய மரவுரிமேல் தழையுடன் மயிற்பீலியும் தொங்க வந்துசேர்ந்து பூவும் மலை நெல்லுஞ் சேர்ந்த அட்சதையைக் கொடுத்துப் போர்வல்ல வேடர் தலைவனாகிய நாக னைத் துதித்து நின்றாள்.

(வி - ரை) இதனால் தன் அரசனைக் காணவந்த தேவராட்டியின் வடிவங் கூறினார். இங்கு அவள் அலங்கரித்துக் கொண்ட அணியும் உடையும் ஆகிய பொருள்கள் யாவும் குறிஞ்சியாகிய அந்நிலத்துக்குரிய கருப்பொருள் விளைவுகளாகி விலை கொடுத் துத் தேடி யிடர்ப்படாமல் அங்கு எளிதிற் பெறும் பண்டங்களே யாதல் காண்க. இதுபற்றி 667ல் உரைத்தவையும் பிறவும் காண்க. தேவராட்டியின் அணியையும் உடை யையும் விளக்கும் நெறியால் அந்தந்த நிலப்பொருள்களினின்றே மக்கள் தம் உணவு உடைகளை ஆக்கிக்கொள்ளும் மரபினையும் ஆசிரியர் உடன்காட்டியவாறு காண்க.

**வரித்தளிர்** - வரிகளையுடைய தளிர்கள். முடிமாலை **கண்ணி** எனப்படும். "மாதர் பிறைக்கண்ணி யானை" என்ற தேவாரங் காண்க.

**கலை மருப்பின் அரிந்த குழை** - கலைமானின் கொம்பில் அளவுபட அரிந்தெடுத் துக் குழைபோலச் செய்த காதணி.

**மானின் வயிற்று அரிதாரத் திலகம்** "கள்ளிவயிற்றி னகில்பிறக்கு மான்வயிற்றி, னொள்ளரி தாரம் பிறக்கும்" என்றபடி மான் வயிற்றினின்றும் எடுப்பது அரிதாரம் இது உயர்ந்த அரிய பொருள், ஆன் வயிற்றிற் கோரோசனை எடுப்பதுபோல இதுவன்றிக் கல்லினின்றும் எடுப்பது ஒருவகை அரிதாரம் அது மனோசிலை எனப்படும் தாழ்ந்த வகை யென்பர்.

**மயிற்கழுத்து மனவுமணி வடம்** - மயிலின் கழுத்துப் போல நீலமிக்க நிறம் பொருந்தச் சங்குமணிகளைச் சாயமேற்றி வடமாகப் பூணுதல் வழக்கு. மயிலின்கழுத்தை அரிந்து உலர்த்தி யிடையிடை பலகறைமணியும் கோத்த வடமென்றுரைப்பாரு முண்டு இது பொருந்தாவுரை யென்க. இந்நாளில் செவந்திப்பூத்திருகு, மாங்காய் மாலை முதலியனவாக வழங்கும் அணிவகைப்பேர்களைப்போல அந்நாள் அந்நாட்டில் மயிற்கழுத்துப்போல அமைந்த மனவுமணிவடம் அப்பெயர் பெற்றதென்பதுவே அமை வுடைத்தாம்.

**இழிந்து திரங்கி முலை சரிந்து தாழ** தேவராட்டியினது மிக மூத்தபருவங் குறித் தது. "கொங்கைதிரங்கி" - **அம்மை மூத்ததிருப்பதிகம்.** அம் மலைநாட்டுப் பெண்கள் இடையில் உடையணிவதன்றி மேலால் எவ்வகை ஆடையுமணிவது வழக்கில்லாமையறிக.

**தழைப்பீலி** - தழையுடன் கூடிய பீலி. உடனிகழ்ச்சிப் பொருளில் வந்த மூன்ற னுருபு தொக்கது. தழையாலாகிய மயிற்பீலி என்பாருமுண்டு. இடையிற் கட்டிய

மரவுரியாடையின் மேல் தழைகளை வரிசைபெற மேலாடைபோலத் தொங்கவிடுதல் மரபு. தன் அரசனைக் காணவந்தா ளாதலால் மயிற்பீலியுஞ் சோற்றணிந்தாள். பூ - தெய்வத்தை அருச்சித்த பூ. பூ நெருங்குதோரைமலி சேடை நல்கி - பூவும் மலை நெல் லரிசியுஞ் சோற்று ஆசீர்வதித்துக் கொடுக்கும் மரபு கூறியபடி. தோரை - மலை நெல். சேடை - அட்சதை. முனை முறியாமல் பிளவுபடாமல் நீர்தங்காமல் உள்ள முழு அரிசியே அட்சதைக்குரிய அரிசியாம். முனைஞானிகளின் கும்பாபிடேக முதலிய சிறப்புக் களில் அட்சதைக்கு வேண்டிய அரிசிக்காகப் பலவீடுகளிலும் நல்ல நெல்லுத்தந்து அரிசி தேய்த்துப் பெற்றுக்கொள்ளுமவழக்குமிருந்தது. இந்நாளிலும் நியதியாகச் சிவபூசை செய்வோர் பலர் இவ்வழக்கினைக் கையாள்வதுமுண்டு. இவ்வாறு முழு அரிசியாற் செய் யப்படும் வாழ்த்தும் பிளவுபடாது முற்றி நீடிநிற்குமெனபது கொள்கை.

**போற்றி நின்றாள்** அரசன்பால் துதித்துநின்று பணிகேட்கும் முறைப்பற்றிப் போற்றினாள். 48

698. நின்றமுது குறக்கோலப் படிமத் தாளை
நோக்கி "யன்னை! நீ நிரப்பு நீங்கி
நன்றினிதி னிருந்தனையோ?" வென்று கூற
நாகனெதிர் நலம்பெருக வாழ்த்தி, "நல்ல
மென்றசையு மீயலொடு நறவும் வெற்பில்
விளைவளனும் பிறவளனும் வேண்டிற் றெல்லா
மன்றுநீ வைத்தபடி பெற்று வாழ்வே,
னழைத்தபணி யென?" னென்று ளணங்கு சார்ந்தாள். ௪௯

(இ - ள்) வெளிப்படை. இவ்வாறுவந்து போற்றிநின்ற குறத்தியாகிய மூப் புடைய தேவராட்டியை நோக்கி, "அன்னையே! நீ வறுமையினின்றும் நீங்கிப் பெரிதும் இனிது வாழ்ந்திருந்தனையோ?" என்று நாகன் கேட்க, அவனுக்கு நன்மை யுண்டாக என்று முன்னே வாழ்த்தி, நல்ல மெல்லிய மாமிசமும் ஈயலும் தேனும் மலைபடுவளங்களும் ஏனைவளங்களும் எனக்கு வேண்டியவையெல்லாம் ஆதியில் நீ வகுத்துவைத்த நிபந்தப்படி குறைவின்றிப் பெற்று வாழ்ந்து வருகின்றேன்; என்னை அழைத்தபணி யாது?" என்று கேட்டாள்.

(வி - ரை) **நின்று** - சேடைநல்கிப் போற்றி நின்ற. **நன்று** - பெரிதும். "நன்று பெரிதாகும்" (தொல் - உரி - 4)

**குற்முதுகோலப் படிமத்தாள்** என மாற்றுக. கோலம் மேற்பாட்டிற் கூறியது.

**அன்னை!** - அணிமைவிளி. முதிய பெண்மகளாதலானும் தெய்வஞ்சார்ந்தாளாத லானும் தன்சொல்வழிப் பணிகேட்கும் இவளை, அரசன், **அன்னையே!** என்றழைத்த மரபு காண்க. தன் மனைவியல்லாத பெண்மக்கள் யாவரேயாயினும் அவரைத் தாய் என விளித்தல் தமிழ் நாட்டு வழக்கு. "தன்மனைக் கிழத்தி யல்லதைப் பிறமனை, யன்னையிற் றீர நன்ன ராண்மை" (ஞானாமிர்தம் 17-39) என்றதுங் காண்க. தமிழ்நாட் குப் பெண்ணின் பெருமை காட்டிப் பெண்மக்களிடத்து ஒழுகும் உயரிய ஒழுக்க முறை கற்பிக்க முன்வரும் நவீனநாகரிகக்காரர்கள் இவ்வுண்மைகண்டு தெளிவாராக.

**நீ நிரப்பு நீங்கி நன்று இனிதின் இருந்தனையோ?** - மேலும், இங்கு நாகன் தன் சொல்வழிப் பணிசெய்யு மிவளை இவ்வாறு கேட்ட வகையால், அரசன் தன்கீழ் வாழும் குடிகள் பணியாளர் முதலியோர் வறுமை முதலிய துன்பநீங்கி இன்பம்பெற்று நல் வாழ்வு வாழ்வதில் வைத்திருந்த கவலையும் கருத்தும் விளங்குதலும் காண்க. அரசர் கடமையின் உயர்ந்த நோக்கத்தை இதனால் ஆசிரியர் விளக்கியிருத்தலும் உன்னுக.

**நிரப்புநீங்கி** என்றது துன்ப நீக்கமும், **நன்றினிதினிருந்தனையோ?** என்றது இன்பப் பேறும் குறித்தன. துன்ப நீக்கம் முதற்கண் வேண்டப்படுவது; அதன் பின்னரே இன்பம் வருவதாம். துன்ப நீக்கமும் இன்பப் பேறுமாகிய இவையே சைவ சித்தாந்த முடிபின் உள்ளுறை யாதலும் உன்னுக.

**அன்று நீ வைத்தபடி** - அரசன் தன்கீழ் உள்ள பணியாளர் வறுமையின்றி நல்வாழ்வு பெற்றிருக்குமாறு மானியங்கள் வகுத்து வைப்பது முந்தைநாள் முதல் நமது நாட்டு வழக்கு. இங்குத் தேவராட்டிக்கு வைத்த நாட்படி முறை நிபந்த விவரம் அவள் வாக்கில் வைத்து ஆசிரியர் அறிவிக்கும் அழகு காண்க. **அன்று** - இவ்வூழியத்தைத் தொடங்கி நியமித்தது முதல். **வைத்த** - நியமித்த, உத்தரவு செய்து ஒழுங்குபடுத்திய. **படி** - நிபந்தம் - நாட்படி.

**வெற்பில்விளை வளனும் பிறவளனும்** - உணவுக்கும் உடைக்கும் வேண்டப்படுவன பெரும்பாலும் அந்நாட்டிற் பெறப்படும். சிறுபான்மை அவ்வாறு பெறப்படா இன்றியமையாத உப்புப் போன்ற ஏனை நெய்தல் முதலிய நிலப்பண்டங்களும் வேண்டப்படும். அவற்றைப் **பிறவளன்** என்றார். இவற்றைப் பண்டமாற்று வகையாற் பெறுவது முன்னுள்ள வழக்கு. இவைபற்றித் திருக்குறிப்புத்தொண்ட நாயனார் புராணத்தும் பிறாண்டும் காண்க. **வெற்பில்விளைவளன்**-கிழங்கு கனி வகைகளும் தேன் முதலியனவும். 683, 684 முதலியவை காண்க.

**அணங்கு சார்ந்தாள்** - **அணங்கு** - தெய்வம். **சார்தல்** - எப்போதும் தெய்வத்தினை வழிபாடாற்றி அதனைச்சாரும்கோலத்தோடு விளங்குதல் (சிலப்பதிகாரம் வேட்டுவவரி)

**நன்றுமினி திருந்தனையே?**—என்பதும் பாடம். 49

699. "கோட்டமிலென் குலமைந்தன் றிண்ணனெங்கள்
குலத்தலைமை யான்கொடுப்பக் கொண்டு பூண்டு
பூட்டுறுவெஞ் சிலைவேடர் தம்மைக் காக்கும்
பொருப்புரிமை புகுகின்றா; னவனுக் கென்றும்
வேட்டைவினை யெனக்குமே லாக வாய்த்து
வேறுபுலங் கவர்வென்றி மேவு மாறு
காட்டிலுறை தெய்வங்கள் விரும்பி யுண்ணக்
காடுபலி யூட்"டென்றான் கவலை யில்லான். ௫௰

(இ - ள்) வெளிப்படை. "நிலை பிறழாத எனது குலமகனாகிய திண்ணன் எங்கள் குலவுரிமையாகிய தலைமையை நான் கொடுக்க அதனை ஏற்றுத் தலைமை பூண்டு, நாண் பூட்டிய வெவ்விய வில்லேந்திய வேடர்களைக் காவல் செய்கின்ற மலையாட்சி யுரிமையிலே தலைப்படுகின்றான், அவனுக்கு என்றும் எனக்கு மேலாக வேட்டைத்தொழில் வாய்க்கும் படியும், மாறுபட்ட அயற்புலங்களைக் கவரும் வெற்றி யுண்டாகும்படியும் வனத்தில் வாழும் தெய்வங்கள் விரும்பி யுண்ணுமாறு (பூசித்துக்) காடுபலி ஊட்டுவீராக" என்று கூறினான் கவலை சிறிதுமில்லாதவனாகிய நாகன்.

(வி - ரை) **கோட்டம் இல் என் குலமைந்தன்** - மன்னவனுவான நடுநிலைபிறழாது எல்லார்க்கும் ஒப்ப முறைசெய்தல் வேண்டும் என்பதனை உணர்ந்து அவ்வழியில் தானும் தன்மரபினோரும் ஒழுகிவருவதைப் பெருமிதவுணர்ச்சியோடும் நாகன் கூறியவாறு. "கோவினுக் கருங்கலங் கோட்ட மில்லது" என்ற அப்பர் சுவாமிகள் தேவாரம் காண்க 122-ம் திருப்பாட்டும், இது பற்றித் திருநகரச்சிறப்பில் உரைத்தவையும் நினைவுகூர்க.

**எங்கள் குலத்தலைமை**-எங்கள் குலத்துக்கு வழிவழியாக உரிய வேடர்தலைவராந் தன்மை

**யான் கோடுப்ப** - நானே இளவரசனை அரசனாக்கச்செய்து தலைமைகொடுக்க. எனக்குப்பின் அவன் பெறுதல் என்பதின்றி நானே கொடுக்க இவ்வாறு தம் வாழ் நாளிலே அரசுரிமையைத் தாமே துறந்து இளவரசருக்குப் பட்டஞ்சூட்டுவோர் அர சரில் மிகச் சிலரே யாவர் உத்தமகுணம் படைத்துத் தமதுகடமையில் தலைநின்ற ஒருசிலரே இது செய்தல் கூடும் என்பது பலதேச சரிதங்களா லறியப்படும் உண்மை. கழறிற்றறிவார் நாயனார் புராணமும் பிறவும் காண்க.

**பூட்டுறு வெஞ்சிலை வேடர்** - வேடர்களின் தறுகண்மையும் ஆண்மையும் குறித்த படி எப்போதும் விற்றொழிற்கு ஆயத்தராகிப் பூட்டியநாணுடன் உள்ள வில்லேந்திய வேடர்கள்.

**காக்கும்** - அவ்வாறு பெருவிறல் மிக்க வேடர்களைக் காப்பது பெரும்பாரமாகிய ஆண்மைத் தன்மையும் பொறுப்பும் வாய்ந்தது என்பது குறிப்பு

**புதுகின்றேன்** - கைக்கொண்டு அதில் தலைப்பட உள்ளான். எதிர்காலத்தைத் தெளிவுபற்றி நிகழ்காலத்தாற் கூறினார்

**என்றும் மேவுமாறு** - வேட்டை தமது புலத்திற் செய்யும் காவற்றொழிலும், வேறு புலங்கவர்தல் அயற்புலத்திற் சென்று அவர்கள் தம்மேல் மீறாதல்செய்யா தடக் குதலுமாகும் என்பார் **வாய்த்து - மேவுமாறு** என்றார்

**எனக்கு மேலாக வாய்த்து** "தம்மிற் றம்மக்க ளறிவுடைமை மாநிலத்து, மன் னுயிர்க் கெல்லா மினிது" என்றது நீதிநூல் நாகன் அறிவுடையோன் ; இம்மகனைப் பெற முன்பு தவமுஞ் செய்துமுள்ளான் ; ஆதலின் தன் மகன் தன்னினும் மேம்பட்டு விளங்க வேண்டுமென்று ஆசை கொண்டான் என்க

**வேறு புலம் கவர் வென்றி** - "அயற்புலங் கவர்ந்து கொண்ட" (655), "தெவ்வர் கணநிரைகள் பலகவர்ந்து கானங் காத்து" (692) முதலாக மேல் உரைத்தவை காண்க.

**எனக்கு மேலாக வாய்த்து** எனவும், **வேறுபுலங் கவர்வென்றி மேவுமாறு** எனவும் இங்கு நாகன் கூறிய சொற்களில் அவனையறியாமலே மேல்நிகழ்ச்சி பற்றிய உட்குறிப் புத் தோன்றுவது காண்க. நாகனது வேட்டைவினைகளையாவும் ஊனவேட்டைகளேயா யொழியத் திண்ணனாரது வேட்டை உண்மையில் அவனுக்கு எய்தாததாகிய ஞான வேட்டையாக வாய்த்தது. ஐம்புல வேடர்கூட்டங்களை வெற்றிகொண்டு அவற்றிற்கு வேறாகிய பேரின்பப் புலங்களைக் கவர்ந்து விளங்குபவர் திண்ணனார். நாகன் விரும் பியவண்ணம் தேவராட்டியின் பூசை மேலாகிய பலனையே தந்தது எனக். நாகன் சொற்கேட்ட தேவராட்டியும் அவ்வாறே யாகுக என்று வாழ்த்துமபோது "திண்ண னை வெற்றிவரிச் சிலையோனின் னளவி லன்றி மேம்படுகின்றான்" என்று கூறியதன் உண்மைக்குறிப்பும் வரும்பாட்டிற் காண்க.

**காட்டிலுறை தெய்வங்கள்** - ஒவ்வோர் துறைக்கும் பற்பல படித்தரமாக அரசாங் கத்தின் கீழமைந்து தொழில்யற்றும் பல அதிகாரிகளிருத்தல்போலக் காட்டில்உறைந்து காவல் செய்பவனவாகிய பல சிறு தெய்வங்கள் உள்ளன. இதனால் இறைவனது முழுமுதற்றன்மைக்கு இழுக்காவதொன்றில்லை. இவற்றின் வழிபாடும் பல தெய்வ வழிபாடாகாது "பிறவாயாக்கைப் பெரியோன் முதலாப், பதிவாழ் சதுக்கத்துத் தெய்வ மீறாக" வெவ்வேறு கடவுளர்களைப்பற்றிப் பழந்தமிழ் நூல்களும் பேசும். "நற்றெய்வமு மன்றத் தேதம்" என்பார் தாயுமானார் மகனைப் பெறுதற்கு முழுமுதற்கடவுளும் குறிஞ்சிக் கிழவனுமாகிய முருகப் பெருமானை வழிபட்டான் நாகன். எனவே, இந்நாட் டில் முதற்கடவுள் முதல் வனதெய்வமீறாக உள்ள தெய்வங்களை வழிபட்டு வந்தார்கள் என்று தெரிகின்றோம். இவ்வாறு எல்லாக் கோட்டங்களுக்கும் குறைவின்றி வழிபாடு இயற்றச்செய்வது அரசனது கடமையுமாம். இங்கு மகன் கானிற் கன்னிவேட்டைக்குச்

செல்வதால் காட்டிலுறை தெய்வங்களை வழிபாடுசெய்தான் என்க. காடு - மலையைச் சார்ந்த வேட்டைக்காடுகள். தேய்வம் - ஒளியுடையவை திவ் பகுதி. ஒளி குறித்தது.

**கவலையில்லான்**-இவ்வேட்டை திண்ணனாரால் உலகத்தொடர்புகளையெல்லாம் அறவெறியுஞ்செயலாய் முடிந்தது அவ்விளைவை யறியாதவனாதலின் கவலையில்லாது காடுபலியூட்டு என்றான் என்பதாம். வரையாட்சிபெற்று, அதனைத்தாங்கும் வன்மையுடைய தக்கமகனையும் பெறுதலியலாக்காலத்தும் பெற்று, அவனுக்கு ஆட்சியுந்தந்து உவக்கும் தந்தைக்கு உலகிலையில் ஒருகவலையு மிராதென்ற உலகியலையும் விளக்கிய படியாம்.

**பூட்டுறு. புகுகின்றான்** என்றது (வில்லல்லாவிடினும் வில்லாகப்) பூட்டப்பெற்ற விருப்பந்தரும் (பொன்மலைச்) சிலையுடைய வேடாவடிவந் தாங்கிவந்த காளத்தியப்பரை என்றும் காவல்புரிந்து அவரது வலப்பக்கத்து அழியாது நிற்பதோர(காளத்தி) மலையின் உரிமையைப்பெற என்மகன் புகுகின்றான் என்றிவ்வாறு பிறிதோர் குறிப்புப் பொருள்பட நின்ற அமைப்புங் காண்க. 50

700. மற்றவன்றன் மொழிகேட்ட வரைச்சூ ராட்டி
"மனமகிழ்ந்திங் கன்போடு வருகின் றேனுக்
கெற்றையினுங் குறிகண்மிக நல்ல வான;
விதனாலே யுன்மைந்தன் றிண்ண னான
வெற்றிவரிச் சிலையோனின் னளவி லன்றி
மேம்படுகின் றா"னென்று விரும்பி வாழ்த்திக்
கொற்றவன்றெய் வங்கண் மகிழ வூட்ட
வேண்டுவன குறைவின்றிக் கொண்டு போனாள்." ௫௧

(இ - ள்) வெளிப்படை. அவனது வார்த்தைகளைக்கேட்ட தேவராட்டி மிக மகிழ்ந்து "இங்கு அன்போடு வருகின்ற எனக்கு முன் எந்நாள்களிலும் காணப்படாத மிகநல்ல குறிகள் உண்டாயின, அதனாலே உன் மைந்தன் வெற்றிபொருந்திய வரிவில் ஏந்திய திண்ணனானவன் உன் அளவில் மட்டும் அமையாது மேம்படுகின்றான்" என்று விரும்பி வாழ்த்திக், கொற்றந்தரும் வன்தெய்வங்கள் மகிழும்படி காடு பலி ஊட்டுதற்கு வேண்டுவனவற்றை யெல்லாம் குறைவில்லாது கைக்கொண்டு போயினாள்.

(வி - ரை) **வரைச்சூர் ஆட்டி** - மலைத் தெய்வங்களுக்குப் பூசை செய்கின்ற படிமத்தாள். **சூர்** - தெய்வம். **குறிகள் மிகநல்ல ஆன** - **குறிகள்** - நிமித்தங்கள் இவை வென்றிப்புள் முதலிய புறச்சகுனங்களும், வலக்கண் துடித்தல் முதலாகிய உடற் சகுனங்களுமாம். இவைபற்றி "மொய்த்தபல சகுன மெல்லா முறைமுறை தீங்கு செய்ய இத்தகு தீய புடைக ளீண்டுமுன் உதிரங் காட்டும் அத்தனுக்கு" (812) என்றதும், "தீக் கனாக்க ளோடு, துன்னிமித்த தங்க ளெங்கு நிகழ்ந்தன " (631) என்று தொடங்கித் திருஞானசம்பந்தமூர்த்திகள் புராணத்தில் 632, 633, 634-ம் பாட்டுக்களிற் கூறியனவும் காண்க "விரிச்சியும் வாய்ப்புள்ளும் நற்சொ னிமித்தம்"-**பிங்கலம்** கண்ணுற் காண்பனவும், காதாற் கேட்பனவும் என இவற்றை வகுத்துக் கூறுவர்.

**எற்றையினும்** - இந்நாள்வரை நேர்ந்தவற்றினும் மேலாக

**மிக நல்லஆன** - உண்மையில் இக்குறிகள் திண்ணனார் செல்லும் உயர்கதியைக் குறித்தன என்ற குறிப்புங் காண்க இக்குறிப்பே பின்னர்த் தேவராட்டி "இதனாலே" என்று தொடங்கிக்கூறும் மொழியிலும் விரவிநிற்றலுங் காண்க. அதுவரை இக்குறிச்சியினின்றும் போந்த மறவரெவரும் காளத்தியிறைவன் றருணோக்கமுற்று மேம்பட்டார்

ரிலலை எனபதும, நாகனும காளததி கணடாருயினும திணணனாரைபபோல மேமபட் டானலன எனபதும உனனுக.

**நின் அளவினன்றி மேம்படுகின்றன்** - உனனைபபோல வேடாதலைவன எனற அளவில நிலலாது மேலோராகிய எலலாரினும மிக மேமபடட பெருமிலையை அடை கினறுன எனபதும குறிபபு

**கோற்ற வனதேய்வங்கள்** - வழிபடின வெற்றிதருவன எனபது கருதது "கலை யமா செலவி கடனுணி னலலது, சிலையமா வெனறி கொடுப்போ ளலலள" (சிலப - வேட் - 16 - 17) எனறதும காணக.

**வெற்றி வரிச்சிலையோன்** - குறிகளின பயன வேட்டையின வெறறியாதலின இதனை இறுதியில வைததுக கூறினா

**குறைவின்றி** - பொருளகளாலும அளவாலும குறைவிலலாமல. இதனைத திரவிய லோபமிலலாமல எனபா. **கொண்டு** - பெறறுக கொண்டு.

**மனமகிழ்ந்து நானிங்கு**—எனபதும பாடம்.　　51

701. தெய்வநிகழ் குறமுதியாள் சென்ற பின்பு
　　திண்ணனார் சிலைததாதை யழைப்பச் சீர்கொள்
மைவிரவு நறுங்குஞ்சி வாசக் கண்ணி
　　மணிநீல மலையொன்று வந்த தென்னக்
கைவிரவு சிலைவேடர் போற்ற வந்து
　　காதலபுரி தாதைகழல் வணங்கும் போதிற்
செவ்வரைபோற் புயமிரண்டுஞ் செறியப் புல்லிச்
　　செழும்புலித்தோ லிருக்கையின்முன் சேர வைத்தான்.　　ருஉ

**(இ - ள்)** வெளிபபடை தேவராட்டி போயின பினனா, விலலையுடைய தநதை அழைககக கேட்டுச சிறபபுககொணட கரிய நலல குடுமியினையும வாசமிகக மாலையையு முடைய நீல மணிமலையொனறு வநதது போலத திணணனா கையிலே பொருநதிய விலலையுடைய வேடாபலரும போறற வநது தமபாற காதலபுரி தாதையின கழலகளை வணஙகியபோது, தாதையாகிய நாகன சோமைபெறற குனறுபோல உயாநத இரு தோளகளையும பொருநதத தழுவிககொணடு செழுமையான புலிததோல ஆசனததிலே தன முனபுகூட வீறறிருககுமபடி வைததான.

**(வி - ரை) தெய்வநிகழ் குறமுதியாள்** - தேவராட்டியின மரபும தொழிலும படிமமும வயதும குறிததது காணக **நிகழ்தல்** - ஆவேசிததல்

**சிலைத்தாதை அழைப்ப** - சிலை-வேநதாககுக கோலபோல வேடாதலைவனுடைய ஆடசிககுறி எனறபொருளிலவநதது சிலைககீழ் (695) எனறதுகாணக. **அழைப்ப** - அழைததாராதலின "கொணடுவரச செபபிவிடடு" (696) **அழைப்ப** எனறதனுல, அழைககபபடாமல இளவரசன தனதலைவனைக காணபது முறையனறு எனபதாம

**சீர்கொள் - குஞ்சி** எனறு கூடடுக. **சீர்** - சிறபபு இககுஞசிககுச சிறப்பாவது பினனாக காளததிநாதாது பூசனைககுரிய திருபபளளிததாமந தாஙகபபெறுதல சீா கொளகுஞசி, மைவிரவு குஞசி எனத தனிததனிக கூடடுக

**மணி** - அழகு எனறலுமாம. **மலை ஒன்று வநததென்ன** - உருவமபறறி வநத இலபொருளுவமம.

**கைவிரவு சிலை வேடர் போற்ற** - கையிற சிலைபிடிததவாறே நினறு வேட்டைப் போாககோலததுடன வேடாகள தமககுத தலைவனுகப படடம சூடும இளவரசனைக காவல செயய. Military Guard of honour எனபா நவீனா.

**செவ்வரை போற் புயமிரண்டும்** - செம்மை - நோமை. நோமையாவது திரணடு உருணடு வளாநதிருததல

**புயமிரண்டும் செறியப் புல்லி** - திணணனாது புயமிரண்டையும தனது புய மிரணடும நெருஙகத தழுவி 'கருவரை காளமேக மேநதிய தெனனத தாதை, பொரு வரைத தோளகளார' என முனனா இவனது தோளகளைக கரிய மலையாகக கூறியதும காணக. இககருததைத தழுவியே தசாதன இராமனைத தழுவிய வதனைக கூறும போது 'கிலஙக டாஙகுறு நிலையினை நிலையிட நினைநதான, விலஙக லனனதிண டோளையு மெய்ததிரு விருககும, அலஙகல மாாபையும தனதுதோள மாாபுகொண டளநதான" எனறு கமபா சமதகாரமாகக கூறியதுங காணக.

**புலித்தோல் இருக்கை** - இது இவாகளது அரசு வீறறிருககும அரசுகட்டில என பா. ஏனைஅரசா வீறறிருககும சிஙகாசனம எனபது பொன, மரம முதலியவறறால சிங கததின வடிவம போனறியனறு, உபசாரமாததிரையாற போலியாக அபபெயாபெறும இவவேடாகளது அரசஆசனமோ அவவாறனறி உணமைப்புலிததோ லாசனமாயுளள தாம **இருக்கை** - அரசு கட்டில **புலித்தோல் இருக்கை** - குறவா மாபிறகு உயாநத ஆசனமுமாம. இதனை முருகப்பெருமானுககு வளளிபபிராட்டியாரை மணம செயவிகக அமைநத ஞானறு வேடாகோமானாகிய நமபிராசன "தனறிரு மனையி னூடே சரவண முதலவன றனனை, மனறலங குழலி யோடு மரபுளி யுயதது **வேங்கைப், பொன்றிக ழதளின் மீது பொலிவுற விருத்தி னூனே**" எனற கநதபுராணததானுமறிக.

**முன் சேர வைத்தான்** - முனவைததான - சேரவைததான எனக. தனது தலை மையை மகனுககுக கொடுககும செயலில முதலிற செயயும செயலாவது தன ஆசனத தில் ஒருங்கே தனனுடனசேர அவனை வைததலாம **முன்வைத்தல** மகனுககு வேணடு வனகூறிச சுரிகையும உடைதோலும ஆகிய தனது அரசஅடையாளஙகளைக கையிற கொடுததுத தலைமை சூட்டுதறகெனபது வருமபாட்டானறிக.

**செய்வரைபோல்**—எனபதும பாடம் 52

702 முன்னிருநத மைநதனமுக நோககி நாகன
"மூபபெனைவந தடைதலினால முனபு போல
என்னுடைய முயறசியினால வேட்டை யாட
வினியெனககுக கருததிலலை; யெனககு மேலாய
மன்னுசிலை மலையாகுலக காவல் பூணடு
மாறெரிந்து மாவேட்டை யாடி யென்றும்
உனனுடைய மரபுரிமை தாஙகு வா"யென
றுடைதோலுஞ சுரிகையுஙகைகக கொடுததா னனறே ருங

**(இ - ள்)** வெளிபபடை. நாகன, முனனால வீறறிருநத மைநதனாது முகத தைப பாாதது "எனனை மூபபுவநது அடைநததனாலே முனபுபோல எனனுடைய முயறசியினாலே வேட்டையாட இனி எனககுக கருததிலலை, எனனிலும மேலாக நீ நிலைபெறற மலையாகளாகிய இவவேடாகுலக காவலை மேறகொணடு பகைபபுலஙகளை வெனறு மா வேட்டையாடி உனது மரபுரிமையாகிய தலைமையை எனறுநதாஙகுவா யாக" எனறு ஆசிகூறித தன அரசாஙக அடையாளமாகிய உடைதோலையுஞ் சுரிகை யையும அவா கையில அபபொழுதே கொடுததான.

**(வி - ரை) முன் இருந்த** - தன முனபு இருககவைததபடி இருநத

**மூப்பு வநது எனை அடைதலினால்** என மாறறுக. **என்னுடைய முயற்சியினால்** உடல் வலிமையின துணைகொணடு.

**வேட்டையாடக் கருத்தில்லை** - உயிர்களின் பக்குவ நோக்கி உடலும் கரணங்களும் புவன போகங்களும் இறைவனாலே தரப்படுகின்றன. அவ்வுடல்தானும் பிறந்தது முதல் இறக்குமளவும் பருவந்தோறும் மாறுதலடைந்துகொண்டே வருகின்றது அதனுள்ளே தங்கியிருக்கும் உயிரோ அவ்வாறு மாறுதலடைகின்றதில்லை. ஆனால் அதன் இச்சை ஞானம் கிரியை என்ற சத்திகள் உடலின் தகுதிக்கேற்றபடி மாறுகின்றன. ஆதலின் ஏனைய எல்லாஉதவிகளுமிருப்பினும் மூப்பு வந்தடைதலினால் இனி **வேட்டையாடக் கருத்தில்லை** என்றான். **கருத்து** - மன எழுச்சி நோய்கொண்ட ஒருவனுக்குக் காமம் மோகம் முதலியவற்றில் இச்சையும் அவைபற்றிய அறிவும் செயலும் செல்லாமை இயல்பாதல்போலக் காண்க. இவ்வுண்மையை யாவரும் எப்போதும் மனத்திற் கொண்டுவைத்தல் நன்மை பயப்பதொன்றாகும்.

**எனக்குமேலாய்** - இது பின்னர் உண்மையாகவே விளைதல் காண்க

**மன்னுசிலை மலையர்குலம்** - வேடர்களது நிலைபெற்றகுலம் இங்கு சிலைமலையர் - மலைச்சிலையர் - **சிலை** - வில். மலையாகிய வில்லினையுடையவர் - சிவபெருமான். **குலம்** - கோயில் - தேவகுலம் என்று கொண்டு காளத்தியப்பரது திருக்கோயிலுக்குக் காவல் பூண்டு என்ற பொருளும், **மாறு எறிந்து** - அன்பு நிலைக்கு மாறாகிய மும்மலச்சார்புகளெல்லாவற்றையும் அறப்போக்கி என்ற பொருளும் தொனித்தல் காண்க.

**உன்னுடைய மரபுரிமை** - நீ இதுகாறும் (ஐம்புல) வேடர்களாகிய எங்கள் பால் வளர்ந்தனை; இது உனது மரபன்று, மன்னவ குமாரனாவது உன்னுடைய மரபு, இனி உனக்குரிமையாகிய மன்னவமரபுரிமையைத் தாங்குவாய் என்பன முதலாகச் சிவஞானபோதம் எட்டாஞ் சூத்திரத்திற்கூறிய உண்மையின்குறிப்பும் இங்குப் படுதல் காண்க முன்பு உண்மையில் இவர் மன்னவகுமாரன்-அருச்சுனன் - ஆதலும் உன்னுக.

**உடைதோல் - சுரிகை** - வேடர்களது அரசாங்க அடையாளங்கள். இவை நாகன் தாங்கியவை. இந்நாளினும் இராணுவப் படைத்தோல்வாரும், வாளும் (Belt and Sword) சேனைத்தலைமை முதலிய பெருநிலைகளின் அடையாளங்களாய் அரசாற் றரப்படுதல் காண்க.

**கைக்கொடுத்தான்** - இவற்றை மகன்கையிற் கொடுத்தலாலே முடிசூட்டுதல் போலத் தனது தலைமைத்தானத்தை மகன்பாலதாக ஆக்கினான்.

**அன்றே** - வேடர்கள் முறைசொல்லிய அப்பொழுதிலே அவசியம் கண்டபின் ஒரு கணமேனும் பயனில்லாதவனாகத் தான் தலைமைதாங்க விரும்பாது உடனே கொடுத்தான். நாகன் குடிகளைக்காக்கும் தன் கடமையைச் செம்மைபெற உணர்ந்தொழுகியதிறம் எடுத்துக்காட்டப்பட்டது. நோய் - மூப்பு - முதலியவற்றால் தாம் தாங்கச் சத்தியற்றபோதும் அதிகாரஆசைவயப்பட்டு, அதனைத் தக்கார்பால் ஆக்கிக் கடமைசெலுத்த இசையாது, இடர்ப்படுகின்றல் மக்களிற் பெரும்பாலோர் செய்கை. உண்மைகண்டு உலகம் திருந்துமாறு அமைச்சர்பெருமானாகிய ஆசிரியர் இதனை இங்கு இவ்வாறு எடுத்துக்காட்டினார் எனக.

**அன்றே** - அசையென்றுரைத்துக்குவாருமுளர். 53

703\. தந்தைநிலை யுடன்கொண்டு தளர்வு கொண்டு,
தங்கள்குலத் தலைமைக்குச் சார்வு தோன்ற
வந்தகுறை பாட்டினை நிரப்பு மாறு
மனங்கொண்ட குறிப்பினான் மறுமை கொண்டு,
முந்தையவன் கழல்வணங்கி முறைமை தந்த
முத்தச்சுரிகை யுடைதோலும் வாங்கிக் கொண்டு,
சிந்தைபரங் கொளநின்ற திண்ணனார்க்குத்
திருத்தாதை முகமலர்ந்து செப்பு கின்றான்— ருச

704. "நம்முடைய குலமறவர் சுற்றத் தாரை
நான்கொண்டு பரித்ததன்மே னலமே செய்து
தெம்முனையி லயற்புலங்கள் கவர்ந்து கொண்ட
திண்சிலையின் வளமொழியாச் சிறப்பின் வாழ்வாய்!;
வெம்முனையில் வேட்டைகளு முனக்கு வாய்க்கும்;
விரைந்துநீ தாழாதே வேட்டை யாட
இம்முரண்வெஞ் சிலைவேடர் தங்க ளோடு
மெழுக!" வென விடைகொடுத்தா னியல்பி னின்றான். ௫௫

703. (இ-ள்) வெளிப்படை. தமது தந்தையின் நிலையினை உட்கொண்டு அதனால் பரிவடைந்து, பின்னர்த் தங்கள் குலத்தலைமைக்கு ஒரு பற்றுக்கோடு வேண்டப்படுவதாகிய குறையை நீக்குதல் வேண்டுமென்று மனத்தினுட்கொண்ட குறிப்பினாலே தந்தையினது சொல்லை மறுக்காமையை மேற்கொண்டு, தமது முன்னவனாகிய அவன் கழலை வணங்கி, அவன் முறைமையாற் கொடுத்த முதற்சுரிகையையும் உடைதோலையும் ஏற்றுக்கொண்டு, தமது **சிந்தை பரங்கொள நின்ற**வராகிய திண்ணனார்க்கு அவரது திருத்தாதை முகமலர்ந்து சொல்வானாகி— ௫௪

704. (இ-ள்) வெளிப்படை. "நம்முடைய குலத்தவராகிய வேடர்களையும் சுற்றத்தார்களையும் நான் கொண்டுதாங்கியவதனினும் மேலாக அவர்களுக்கு நன்மையே செய்து, பகைமுனையில் அயற்புலங்களைக் கவர்ந்து அதனிற் கைக்கொண்ட வலிய வில்லினால் விளையும் வளங்குறையாத சிறப்போடு வாழ்வாயாக! விரும்பத்தக்க வேட்டை முனையிலே நல்ல வேட்டைகளும் உனக்கு வாய்க்கும்; நீ தாமதியாது விரைவாய் வேட்டையாடுதற்கு, இந்த வலிய கொடிய வில்வேடர்களுடனே எழுவாயாக!" என்று இயல்பின் நின்ற நாகன் திண்ணனார்க்கு விடைகொடுத்தான். ௫௫

இவ்விரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

703. (வி-ரை) **தந்தை நிலை** - மேற்பாட்டிற் சொல்லியபடி நாகன் நிலைமை. **உட்கொண்டு** - உட்கொண்டு அதனாலே. தளர்வு கொண்டதற்குக் காரணங் காட்டியவாறு.

**தளர்வு கொண்டு** - மனம் பரிந்து, வருந்தி. இவ்வாறே "அன்னவரு மிரங்கி" (694) என்று வேடர் மனநிலை குறித்தவாறுங் காண்க.

**குறைபாடதனை நிரப்புமாறு** என்றது குறையை நீக்கி நிறைவாக்குதல் குறித்தது.

**மனங்கொண்ட குறிப்பினால்** - மனத்திற் றோன்றி எழுந்த குறிப்பினாலே - கருதியதனாலே. முதலில் திண்ணனாரது மனத்திற் றோன்றினது வருத்தம், அதன் பின்னே தோன்றியது குலத்தலைமைக்குச் சார்வு தோன்ற வந்த குறைபாடு, அதன் பின்னர்த் தோன்றியது அக்குறையை நிரப்பும் குறிப்பு என்றிவ்வாறு ஒன்றன்பின் ஒன்றாகப் போந்த அவரது மனநிலைகளைக் குறித்தவாறும்.

**மறுமை கொண்டு** - தந்தையிருக்க மகன் தலைமைபூணுதல் தகாதென்று மறுக்காமல். தளர்வு கொண்டாராயினும் மறுமையுங் கொண்டார். அதன் காரணம் மனங் கொண்ட குறிப்பு என்பது. அரசுரிமை தாங்கவேண்டுமென்ற ஆவல் அவர்க்கில்லை என்பதுங் கூறியபடி.

**முந்தை** - முன்னோன் - தாதை - தலைவன். முன்னே என்பாருமுண்டு.

**கழல் வணங்கி** - அவ்விடத்துக்கு வந்தவுடனே முறைமையால் வணங்கினார் (701). இங்கு வணங்கியது அவனது சொல்வழி அமைந்துநின்ற தமது இசைவுகாட்டுதற்கும் சுரிகையும் உடைதோலும் பெற்றுத் தலைமைபூணுவதற்குமுன் அவ்வுரிமையைப் பெரியோர்பாற்பெறும் முறைமையில் ஒழுகுதற்குமாம். புலித்தோல

இருக்கையில் தந்தையுடன் சேரஇருந்தவா (701) எழுந்து வணங்கினறு சுரிகையும உடைதோலும வாங்கினா எனக

**முதற் சுரிகை** - முதன்மைக்கு - தலைமைக்கு - அடையாளமாகியசுரிகை. வழிவழி யாயத தமது குலததலைவா தாஙகும சுரிகை எனறலுமாம.

**வாங்கிக் கொண்டு** - பெரியோா பணிததததனை உடனே ஏறறுககொளளல வேண்டுமெனனும மரபுபறறி முதலில வாஙகிககொணடு பினனரே சிநதிததாா. இதனபின **சிந்தைபரங் கொளநின்ற** எனறது காணக

**பாரம்** - பாரம அரசாஙகமாகிய பாரததைச் சிநதையிலே கொண்டு அதுவே இராசசியபாரம எனபபடும **பரித்ததன்மேல்** என வருமபாட்டிற கூறுவதும காணக. இது உடம்பானனறி மனததாறபரிககபபடுவதாம அரசாட்சியானது பெரும பொறுப புடையது - பெருமபாரமானது - என்ற பயமுடைய எணணம உடைதோலும சுரிகையும ஏறறவுடன உணடாகியது கழறிற றறிவாா நாயனாா அரசுரிமை ஏறகுமுன இறைவனிடம விணணபபிதது அதறகுரிய தகுதிகள பெறறபினனரே அதனைத தாங கிய சரிததத்தை இஙகு நினைவுகூாக. தலைமை தாஙகுதலில விருப்பும வெறுப்புமினறித, தநதை மூபபடைதலினால் வேடாகளைத தாஙகுதறகுரியவா இலலாககுறை நோநதது. இதனை நீககுதல தாதைவழிநிறகும நமதுகடமையாயிறறு என்ற கடபபாடுபெறறிச சிந தையை அதில நிறுததுதல இஙகுககுறிததததிலை

இனி, இஙகு இனறு மறுமைகொணடு தோலும சுரிகையும கைககொணடாா. இவா சிநதையைப பரம - காளததியப்பா - கடவுள - ஈனக கைககொளளும் நிலையில நினறாா எனறதோ ருட்பொருளும போநதவாறு காணக.

**திருந்தாதை** - **திரு** - நாயனாாககுத தாதையாகியசிறபபும அதனாற பெரியாாபலரும போறறினறசிறபபும குறிததது இதனைப பினனா "செயதவததின பெருமைபெறற வெஙகணவிறற ருதை" எனவிரிததனா முனனரும "தவமுன செய்தான" (657) எனறாா.

**முகமலர்ந்து செப்புகின்றான்** - பினனா மறுநாட்பகலில நோவதறியாது கூறி னான எனபது உட்குறிபபு. வருமபாட்டில இககருததைபறறி "இயலபினினறான" எனறதும காண்க.

**சாய்வு தோன்ற**—எனபதும பாடம்.　　54

704 (வி - ரை) **மறவர் சுற்றத்தாரை** - மறவரையும சுறறததாரையும. இரண்டா னுருபும உமமையும விரிகக

**சுற்றம்** - சுறறியிருப்பவா சாாநது பலவாறறானும சூழநதிருப்பவா.

**கொண்டு பரித்தது** - **கொண்டு** - தான எனது முநதையோரிடம பெறறுக கொணடு. **பரித்தது** - தாஙகியது

**நலமேசெய்து** - ஏகாரம பிரிநிலை எககாலமும அவாகடகு நனமையே செயது எனறபடி அவரால தமககும பிறாககும எவவகையானும ஒரு தீஙகு நோநதபோதி லும நலமே அவாககுச செயது எனறபடியாம. இது அரசாஙகததின மிக உயாநத நோககமும குறிககொளுமாம ஆயின குறறஞ செயதாரைத தணடிததலிலதோ? எனின, உணடு; அதுவும அவரை ஒறுககும வகையானனறி அவாபால் இரஙகித திருததி நனமைசெயயும வகையாற செயயபபடுதல் வேணடுமெனபது இறைவன உயிாகளை ஆடகொணடு பரிககும செயதியும் இவவாறே ஞானநூலகளா லுணாததப படும. "எலலாம பாாததிடிற பரிவே யாகும" எனபது ஞான சாததிரம

**தெம்முனையில் அயற்புலங்கள் கவர்நது** - பகைமுகததில அயலாாது புலஙகளின பொருளகளைக கவாநது உயிரைவாடடிப பகைசெயயும அயறபுலஙகளாகிய ஐமபுலஙக ளையும கவாநது அவறறின பகையை ஒழிததது எனறதும குறிபபாம.

**கொண்டவளம்** - **திண்சிலையின் வளம்** எனக கூடடுக. சிலைவலியாற பெறும வளம எனக. **திண்சிலை** - இறைவனுககுக கானவூனை அமுதமாககிக காவலபுரியும

வலிமை பெற்றமையாற் றிண்ணர் என்றார். தோள்வலியாற் பெறுவதனைச் சிலையின்மேல் ஏற்றியது உபசாரம்.

**வளம் ஒழியாச் சிறப்பு** - சிலையினாற் பெறும்வளம் என்றைக்கும் அழிவு பெறாது நிலைத்து இறைவனது ஆணைப்படி அவரது வலப்பக்கத்தில் என்றும் நிறைகப்பெற்ற சிறப்பின் குறிப்பும் காண்க. **வாழ்வாய்** - வாழ்க என்றது நாகன் சொன்ன ஆசி.

**வெம்முனையில்** - வெம்மை - விருப்பம். சிலையின் வளம் மேலே சொல்லப்பட்டமையால் இது வெறும் வேட்டைப்பலன் பற்றிய ஆசிமட்டு மன்றென்பது, தேவாரட்டி "மேம்படுகின்றான்" என்றபடி, நீ இறைவனுக்கு ஊட்ட விரும்பியவாறே வேட்டைகள் வாய்க்கும் என்பதைக் குறிப்பாலுணர்த்திற்று. **வேட்டை** - அதனாலகப்படும் மிருக முதலியவற்றைக் குறித்தது.

**மூரண் வெஞ்சிலை வேடர்** - முரண் வலிமை - **வெம்மை** கொடுமை - கொலைத் தொழில் புரிவதனைக் குறித்தது.

எழுக செல்க எனின் அமங்கலக் குறிப்புத் தருமாதலின் மங்கலமாகக் கூறினர். 'போங்கள்'' என்பதற்கு "வாருங்கள்" என்னும் உலகவழக்குக் காண்க. வேடர்மக னாகிய கீழ்நிலையினின்றும் மன்னவகுமாரனாகிய உயர்நிலைக்கு எழுக என்றது குறிப்பு.

**விடைகொடுத்தான்** - இதுவே இறுதியாக உலகநிலையில் நாகனுக்கும் திண்ணனுருக்கும் இருந்த தொடர்பு. இனி இத்தொடர்பு அற நிகழ்வது சரிதம். மறுநாட் புலர்காலை வேட்டைக்குச்செல்லும் திண்ணனார் உச்சிப்போதில் இறைவனைப்பிடித்துஉலகப் பற்றை அறவே விடுவார் ஆதலின் அக்குறிப்புப்பெற இவ்வாறு முடித்துக் கூறினார்.

**இயல்பின் நின்றான்** - நின்றானாகிய நாகன் வினையாலணையும்பெயர். இதனை வினைமுற்றாகவே கொண்டு, விடைதந்த இச்செயலிலே உலகஇயல்பில் நின்றான் எனவும், விடைகொடுத்தபின் இனித் திண்ணனார்க்குத் தாதை என்றநிலை யில்லையாகத் தன் முன்னையியல்பாகிய வேடர்தலைவனும் நாகன் என்ற இயல்பிலே அமைந்து நின்று கொண்டவனானான் எனவும் உரைத்தலுமாம்.

**கொண்டுதிண்—இயல்பின் மிக்கான்**—என்பனவும் பாடங்கள். 55

705\. செங்கண்வயக் கோளரியே றன்ன திண்மைத்
திண்ணனார் செய்தவத்தின் பெருமை பெற்ற
வெங்கண்விறற் றாதைகழல் வணங்கி நின்று
விடைகொண்டு புறம்போந்து வேட ரோடு
மங்கலநீர்ச் சுனைபடிந்து மனையின் வைகி
வைகிருளின் புலர்காலை வரிவிற் சாலைப்
பொங்குசிலை யடல்வேட்டைக் கோலங் கொள்ளப்
புனைதொழிற்கை வினைஞரொடும் பொலிந்து புக்கார். ௫௬

**(இ - ள்)** வெளிப்படை. சிவந்த கண்களையுடைய வெற்றிபொருந்திய சிங்க ஏறுபோன்ற வலிமையுடைய திண்ணனார், செய்தவத்தின் பெருமைபெற்ற வெவ்விய கண்ணும் விறலுமுடைய தாதைகழலிலே நிலமுறவீழ்ந்து அடிபணிந்து எழுந்து நின்று விடைபெற்றுக்கொண்டு வெளிப்போந்து வேடர்களோடும்போய்ப் பின்னர் மங்கலஞ்செய்யும் நீரையுடைய சுனையிற்படிந்து நீராடி மனையிலே தங்கித், தங்கிய இருள்புலர்கின்ற வைகறைக்காலத்தில் வரிவிற்சாலையிலே பொங்குசிலைகொண்டு செய்யும் வலியவேட்டைக்கோலங் கொள்ளுதற்காக அலங்கரிக்கும்தொழில் செய்கின்ற கையுடைய ஏவலாளர்களுடன் மகிழ்ந்துபுகுந்தனர்.

**(வி - ரை) கோளரி** - சிங்கம். இதற்குக் **கோள்** என்ற பகுதி முதனீண்டதெனக் கொண்டு, எதிர்ந்தாரைப்பற்றி உயிர்கொள்ளுதலை உடைய **அரி** - சிங்கம் என்று

பொருள் கூறுவாருமுண்டு. இங்குத் திண்ணனார் மாவேட்டைக்குச் செல்லுதலால் எந்த மிருகங்களும் இவர்கீழ்ப்பட்டு வெல்லப்பட்டும் கொல்லப்பட்டும் போம் என்பதும் குறிப்பு. முன்னரும் இவரைச் சிங்கமென்றே கூறியதும் காண்க (690)

**செய்தவத்தின் பெருமை பெற்று** - எல்லாப்பேற்றினும் திண்ணனாரை மகனாகப் பெறும்பேறே சிறந்ததாகலின் அதனைக் கூட்டுவித்த தவமே பெருமையுடையதென்றபடியாம். திண்ணனாரால் வணங்கப்பெற்றதும் பெருந்தவமாம்.

**புறம் போந்து** - நாகன் இருந்து தமக்குத் தலைமைசூட்டிய அவ்விடம்விட்டு வெளிப்போந்து. இதனாலும், "மைந்தனை ஈண்டழைத்து" (695), "திண்ணனை முன் கொண்டுவரச் செப்பி விட்டு" (696), என்றமையாலும் நாகனது இருக்கைவேறு, திண்ணனாரது இருக்கைவேறு என்பது பெறப்படும்.

**மங்கலநீர்ச் சுனைபடிந்து** - மங்கலஞ்செய்யும் நீர்பொருந்திய சுனையிற்றோய்ந்து நீராடி. **மங்கலம்** - இன்பம். **சுனை** - குறிஞ்சியின் நீர்நிலைப் பெயர். புதிய ஊற்றுடையதாகித் தோய்ந்தார்க்கு உடற்சுகந்தருவது. **படிந்து** - தோய்ந்து குளிக்கும் முறை குறிஞ்சியில் மக்கள் மாலையில் மங்கலம் - இன்பம் - தருகின்ற நீர்ச்சுனைபடிந்து மனைவைகுதல் மரபு என்க. இதுவரை வேடர்மகனாராகி மங்கலத்துக்கு மாறாகிய கொலை எறி - குத்து என்பனவாதி செயலேசெய்து ஊன்உண்ணுதல் முதலிய அசுத்த உலகபோகங்களைத் துய்த்துவந்தவற்றையெல்லாம் கழுவி எறிந்து, இனிப் பிற்றைநாளே மங்கலமாகிய சிவமாந்தன்மைப்பெருவாழ்வு பெறநின்றாராதலின் அதற்குத் துணை செய்த நீர் என்ற குறிப்பும்பெற **மங்கலநீர்** என்றார் என்பதுமாம்.

**வைகிருளின் புலர்காலை** - இடையாமத்துத் தங்கியஇருள் புலர்கின்றகாலம் வைகறையாதலின் இவ்வாறு கூறினார். இனி - **வைகுதல்** - நீங்குதல் எனக் கொண்டு, நீங்குகின்ற இருளினையுடைய புலர்காலை என்பதுமாம். "நீத்த துயரின் வாகி" (திருமூலர் புராணம் - 14) என்புழிப்போல. வேட்டையிற் புகுகின்ற காலம் வைகறையேயாம். பின்னர் 781 - 782ம் பாட்டுக்களில் இதனை விரித்துக் கூறியிருத்தல் காண்க. விலங்குகள் புட்கள் என்பவை தத்தம் இருப்பிடங்களை விட்டெழுமுன்னரே தாம் அவ்வவ்விடங்களில் அவ்வவற்றைக் காணவும், அவை தம்மைக் காணாவண்ணம் தாமிருக்கவும் வசதிபெறுங் காலம் இதுவென்பது வேட்டைவினையாளர் கைக்கண்டமுறை. எத்தொழிலிற் புகுதற்கும் வைகறைப்பொழுது உரித்தாம் என்பது உடல்நூல் உளநூல்களின் துணிபுமாம். இரவிற் றுயின்று இளைப்பாறி மதிக் கலைகளினால் அமுதம் பெற்று உடற்பகுதிகள் ஊக்கத்துடன் நிற்கும். **பலவிகாரணி** என்னும், பலத்தை வேறுபாடு படுத்தும் ஞாயிற்றின் "வெம்புந்திய கதிர்"கள் மேல் வந்து தாக்கி உடற்பகுதிகளின் பலத்தைக் குறைக்குமுன் தொழிலிற்புகுதல் பலன் தரும் என்பது ஒரு பொதுவிதி. அது வேட்டைக்குரிய சிறப்புவிதியு மாயிற்று.

**வரிவிற் சாலை** - வரிந்து பலப்படுத்திய வில் முதலிய படைகள் இருக்கும் சாலையில். ஏழாம் வேற்றுமையுருபு தொக்கது. **சாலை** - **புக்கார்** என முடிக்க.

**வேட்டைக் கோலம்** - வேட்டைவினை செய்தற்குரிய கோலம். இது அவ்வேட்டை வினையிலே உடல்வசதி - படைவசதி முதலியவை ஒழுங்குபெற நிற்கும்படி அமைவுபடுத்தும் கோலமாம் போர் முறையிலும் இவ்வாறு முன்னர் வசதிநிலைபெற அமைத்த கோலங்கொள்ளுதல் முறை 618 பார்க்க. இக்கோலத்தை மேல் 706 முதல் 712 வரை ஏழு திருப்பாட்டுக்களில் விரித்தனர்.

**பொங்கு சிலை** - வேட்டைவினையாகிய புல்லிய கொல்வினையல்லாது அத்தனுக்கு அமுதூட்டிக் காவல்புரியும் நல்வினை செய்து அன்பு பொங்குதற்கேதுவாய் நிற்றலால் இவ்வாறு கூறினார்.

**அடல் வேட்டை - அடல்** - அடுதல் எனக்கொண்டு அடுதலைச் செய்யும் - கொலை புரியும் - வேட்டை எனப்பொருள்கொண்டு.

**புனைதொழிற்கை வினைஞர்** - வேட்டைக்கோலத்தை வழுவின்றிச் செம்மைபெறச் செய்யவல்ல கைத்தொழிலிற் றேர்ந்தவர். இவ்வாறு ஒவ்வொரு தொழிலுக்கும் உரிய கோலஞ் செய்யும் கைவல்லார் உள்ளாதல் மரபு "கைவலான" (162) என்றதும் காண்க.

**பொலிந்து** - மகிழ்ந்து. இது உள்ளப் பொலிவு; மேல்வரும் சிவப்பொலிவின் முன்னறிகுறியாம். 56

வேறு

706. நெறிகொண்ட குஞ்சிச் சுருளுஞ்சி நிமிர்ந்து பொங்க
முறிகொண்ட கண்ணிக்கிடை மொய்யொளிப் பீலி சேர்த்தி,
வெறிகொண்ட முல்லைப் பிணைமீது குறிஞ்சி வெட்சி
செறிகொண்ட வண்டின் குலஞ் சூழ்கொளப் பின்பு செய்து, ௫௭

707. முன்னேற்றியின் மீது முருந்திடை வைத்த குன்றி
தன்னிற்புரி கொண்ட மயிர்க்கயிற் றூர்ச சாத்தி,
மின்னிற்றிகழ் சங்கு விளங்குவெண் டோடு காதின்
மன்னிப்புடை நின்றன மாமதி போல வைக,௫௮

708. கண்டத்திடை வெண்கவ டிக்கதிர் மாலை சேர்க்க
கொண்டக்கொடு பன்மணி கோத்திடை யேனக் கோடு
துண்டப்பிறை போல்வன தூங்கிட, வேங்கை வன்றோற்
றண்டைச்செயல் பொங்கிய சன்னவீ ரந்த யங்க, ௫௯

709. மார்பிற்கிசு தந்த மணித்திரண் மாலை தாழ்த்த,
தாரிற்பொலி தோள்வல யங்க டழைத்து மின்னச்,
சோரிற்பொலி கங்கண மீது திகழ்ந்த முன்கைக்
கார்விற்செறி நாணெறி கைச்செறி கட்டி கட்டி, ௬௦

710. அரையிற்சர ணத்துரி யாடையின் மீது பௌவத்
திரையிற்படு வெள்ளல் காரத்து விளிம்பு சேர்த்தி,
நிரையிற்பொலி நீளுடை தோல்சுரி கைப்பு றஞ்சூழ
விரையிற்றுவர் வார்விசி போக்கி யமைத்து வீக்கி, ௬௧

711. வீரக்கழல் காலின் விளங்க வணிந்து பாதஞ்
சேரத்தொடு நீடு செருப்பு விருப்பு வாய்ப்பப்
பாரப்பெரு வில்வலங் கொண்டு பணிந்து திண்ணன்
சாரத்திருத் தாண்மடித் தேற்றி வியந்து தாங்கி, ௬௨

712. அங்கப்பொழு திற்புவ னத்திடர் வாங்க வோங்கித்
துங்கப்பெரு மாமழை போன்று துண்ணென் றுலிப்ப
வெங்கட்சின நீடு விலங்கு விலங்கி நீங்கச்
செங்கைத்தலத் தாற்றட விச்சிறு நாணெ றிந்தார். ௬௩

706. (இ - ள்) வெளிப்படை. நெறிப்புக்கொண்ட தலைமயிரைச் சுருள்களபோய் நேரே நிமிர்ந்து பொங்கும்படி மேலே தூக்கிக்கட்டி, அதில் தனிர்களாலாகிய கண்ணி

சாத்தி, அதற்கிடையே நெருங்கிய ஒளியுடைய மயிற்பீலி சேர்த்தி, வாசனையுடைய மூலமாலையுடன் குறிஞ்சிப்பூவையும் வெட்சிப்பூவையும் நிறைந்த வண்டினக்கூட்டம் மொய்க்குமாறு சிறப்பாக அவற்றின்பின்பு சேரச் செய்து, ௧௭

707. (இ - ள்) வெளிப்படை. **முன்னேற்றிமேல்,** மயிலிறகின் அடியில் இடையிடையே குன்றிமணிகளை உடன்வைத்து முறுக்கியமயிர்க்கயிற்றைப் பொருந்துமபடி சாத்தி, மின்போல ஒளிவிடுகின்ற சங்கினாற்செய்த விளங்குகின்ற வெள்ளிய தோடு காதிலேபொருந்தி இருபக்கமும் நின்றனவாய்ப் பெரிய முழுமதிபோலப் பொருந்த வைத்து, ௧௮

708 (இ - ள்) வெளிப்படை. **கழுத்தில்,** வெள்ளையாகிய பலகறைகளாலாகிய ஒளியுடைய மாலையைப் பொருந்தக் கொண்டு, சங்குமணியோடு பலவகை மணிகளையும் கோத்து அவற்றினிடையே பன்றிக்கொம்புகள் துண்டப்பிறை போல்வனவாகத் தொங்கவைத்து, இவற்றை வேங்கையின் வலியதோலிற்பதித்துத் தட்டையாகிய வடிவமையச் செய்த சன்னவீரமென்ற வெற்றிமாலை விளங்க ௧௯

709. (இ - ள்) வெளிப்படை **மார்பில்,** யானைத்தந்தத்தாலாகிய சிறுமணிகளின் மாலை தாழ்ந்துதொங்க, மாலைகளினால் விளங்குகின்றதோளில் வாகுவலயங்கள் பொங்கி விளங்கப், பொருந்திய பொலிந்த கங்கணமானது தன்மேல் விளங்கும் முன்கையிலே வில்லிற் பூட்டிய நாணைக் காய்ப்பு உழக்கம் போல எறிவதற்குதவும் கைக்கோதையைக் கட்டி, ௨௦

710 (இ ள்) வெளிப்படை. **இடையில்,** மேலே மயிற்பீலியமைந்த புலித்தோலாடையின்மேல் கடல் அலைகளிற் பொருந்தும் வெள்ளிய பலகறைகளைக் கோத்து விளிம்பாகக்(ஓரத்திற்)கட்டி, வரிசையாக விளங்கும் நீண்ட உடைதோலினையும் சுரிகையின்புறத்துச் சூழ்கின்ற வாசனையுடன் துவரேற்றியவாரையும் சேர்க்கட்டும் விசியைப் பூட்டி அமைத்துக்கட்டி, ௨௧

711. (இ - ள்) வெளிப்படை. **காலில்,** வீரக்கழல் விளங்குமபடி அணிந்து, **திருப்பாதங்களிற்,** பொருந்தத்தொடுகின்ற நீடுசெருப்பு விருப்புவாய்ப்பப்,பாரமாகிய பெரிய வில்லினை வலங்கொண்டு பணிந்து, **திண்ணனார்,** தமது **திருத்தாள்**பொருந்த வைத்து வளைத்து நாணேற்றி வியந்து தாங்கி, ௨௨

712. (இ - ள்) வெளிப்படை. அங்கு, அப்பொழுது, புவனத்தின் துன்பம்நீங்கவும், ஓங்கி உயர்ந்த பெரிய காளமேகம்போன்று துணுணென்றொலிப்பவும், கொடிய கோபக்கணனுடைய பெருவிலங்குகள் விலகிநீங்கவும், தமது செங்கைத்தலத்தினால், தடவி வில்லிற் சிறுநாணொலி செய்தார் ௨௩

இவ்வேழுபாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபுகொண்டன

நாயனாரது வேட்டைக்கோலத்தை உச்சிமுதல் உள்ளங்கால்வரை தொடர்பாய அலங்கரித்துக் காட்டுகின்றாராதலின் இடையீடின்றி ஒருதொடர்பாய்க் கொண்டு முடித்தார் கோலஞ்செய்யும் **வினைஞர்** (705) செய்வன அக்கோலமுற்றியபின்னன்றி வினை முற்றுப்பெறாது. அதுவரை செய்கின்றவை யாவும் வினையெஞ்சியே நிற்பன. ஆதலின் இடைப்பட்ட செயல்களையெல்லாம், சாத்திச் - செய்து - என்பனவாதி வினையெச்சங்களாற் கூறினார் வினைஞரும் தாமுமாகக் கோலஞ்செய்யும் வினை திண்ணனார் கோலம்பூண்டு வில் ஏந்தி நாணெறிகொண்டதோடு உடன்கூடி முற்றுப் பெறுவதால் அவ்வகையே நாணெறிந்தார் என இவர்வினையோடுசேர்த்தி வினைமுற்றுத்தந்து முடித்தனர் எனக் இது பொருளமைதிக்கேற்ற சொல்லமைதியாம்.

இதுவேயன்றி இங்கு ஆசிரியர் கைக்கொண்ட **யாப்பமைதியும்** கண்டுகளிக்க. 691 முதல் 705 வரை **கதை சொல்லிச் செலுத்தும்** வகையால் யாப்புச் சென்றது.

இங்கு நாயனார் வேட்டைக்கோலம் பூண்டு புறப்படும் வரை 706 முதல் 716 வரை பாட்டுக்களை சித்திரித்துப் புறப்படும் பொருள் குறிக்கும் வகையாலியன்ற அறுசீர் விருத்தத்தாற் கூறினார். அதன்மேல் 717 முதல் 727 வரை உள்ளபாட்டுக்கள் வேடர் கூட்டம் ஊக்கத்துடன் வேட்டைக்கு எழுந்துசெல்வதால் அதற்கேற்ற வலியஓசை மிக்க எழுசீர்ச் சந்தப்பாவிலும், அதன்மேல் வேட்டையாடி ஓடிக்கொல்லும் வேட்டை வினைகளை 728 முதல் 740 வரை பாட்டுக்களில் அவற்றிற்குரிய தங்கிசை முடுகிசை கலந்த நாற்சீர்ச் சந்தப்பாவிலும், யாத்த இசையும் சொல்லும் பொருளும் பொருந்தும் அமைதியும் காணத்தக்கன. அதன்மேல் "அன்பெனு மாறு கரையது புரள, நன்புல னொன்றி நாதவென் றரற்றும்" சரிதப் பகுதியை இயல்பின் ஆற்றொழுக்கிற்செல்லும் அறுசீர் விருத்தத்தால் 741 முதல் 782 வரையில் உள்ள பாட்டுக்களாற் கூறினார். அதன்பின் நாற்பாதத்தில் மிக்க ஞானபாதத்தாலே நாற்றூனத் தொருவனாகிய இறைவனை அணைந்து நிலைபெறுகின்ற சரிதத் தொடரைப் முன்னையதனினும் மிக்க இயலொழுக்குடைய நாற்சீர்க்கொச்சகக்கலிப்பாவினாற் கூறிமுடித்த அழகும் அமைதியும் காண்க. நாற்சீர்க்கொச்சகக்கலிப்பா ஆசிரியர் திருவாக்கில் மிக அழகுற அமைவதொன்றாம் திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார், திருநாவுக்கரசு நாயனார், ஆளுடையநாயனார் முதலிய பலபெரியார்களும் இறைவன்றிருவடிசேர்ந்த சரிதங்கூறும் பகுதிகளை இதுபோலவே கொச்சகக்கலிப்பாவிலே ஆசிரியர்கூறுவதும் காண்க.

706. (வி - ரை) **நெறிகொண்ட** - நெறித்தலையுடைய-நெறித்த. **நெறித்தல்** தலைமயிர் சுருள்களையுடையதாயிருத்தல். "தொடர்பங்கி சுருண்டிருண்டு தூறிநெறித் தசைந்துசெறி, படர்துஞ்சின் கருங்குஞ்சி" (26), "அஞ்சனமஞ் சனஞ்செய்த தனைய வணி கிளர்ப்பமபை" (27), எனவரும் சிறுத்தொண்டநாயனார்புராணத் திருவாக்குக்களை காண்க. இதனைப் பம்பை என்பதும் வழக்கு.

**சுருள் துஞ்சி நிமிர்ந்து பொங்க** - சுருள்போய ஒழுங்காய் நீண்டு விரிய. **துஞ்சி** - நீங்கி என்ற பொருளில் வந்தது.

**முறிகொண்ட கண்ணி** - தளிர்களைச் சேர்த்துக்கட்டிய மாலை. **முறி** - தளிர். இத்தகைய மாலைசூடுதல் இந்நாட்டவர்வழக்கு. "கானிலவரித் தளிர்துதைந்த கண்ணி சூடி" (697) **கண்ணி** - ஆடவர் தலையிற்சூடும் மாலை.

**மொய் ஒளிப் பீலி** - **பீலி** (658)ல் உரைத்தவை காண்க. மயிற்பீலி குறிஞ்சி நிலத்தில் மிகுதியாய்க் கிடைக்கும் கருப்பொருளாம். இதனைத் தலையிற்செருகும் அணியாக இந்நிலமக்கள் பூண்பர். மரவுரி - புலித்தோல் முதலிய உடைகளின் மேலும் அணிந்துகொள்வர். **மொய்யொளி** - எழுவண்ணங்களுமவிரவி அழகும் ஒளியும் செய்கின்ற.

**வெறிகொண்ட முல்லை** - **வெறி** வாசனை முல்லை மலர்கள் மிக்க மணமுள்ளவை என்பது குறித்தது. **பிணை** - மாலை. பிணைக்கப்பட்டது. **குறிஞ்சி** - குறிஞ்சிப்பூ. இது இத்திணைக்குரியது. இதனால் திணையும் நிலமும் இப்பெயர் பெற்றன என்பர். **வெட்சி**-686 பார்க்க.

**செறிகொண்ட வண்டின் குலம்** - இப்புதுமலர்களிற் றேனஉண்ண மிக்கு மொய்க்கும் வண்டுக்கூட்டங்கள். **செறிவு** தொகையும், **குலம்** வகையும் குறிக்கும். காலைமலர்ந்தபூக்களில் வண்டுகள்மொய்த்தல் நந்தனவனங்களிலும் பூ விற்பனை செய்யுமிடங்களிலும் காணலாம்.

**சீர்கொளப் பின்பு செய்து** - தலையின்முன்புறம்சேர இப் பூமாலைகளைச்சாத்தின் வண்டுகள்மொய்த்து முகத்தின்முன் பறந்து கண்ணின் பார்வையை மறைத்துப் பலவாறு இன்னல்விளைக்குமாதலின் இவற்றைச் சீர்கொள்ளும்படி பின்புறம் அணிந்தனர் என்றதாம். சீர்-இங்கு ஒழுங்கு குறித்தது. **சீர்கொள்ளுதல்**-ஒலித்தல் என்றலுமாம்.

707. **(வி - ரை) முன்னெற்றியின் மீது** - மேற்பாட்டிற் குஞ்சி முடித்தகோல மும் தலையின் பின்புறக்கோலமும்கூறி, இங்கு முன்புறம் நெற்றியின்மேல் அணிவகை கூறுகின்றார் **முன்னெற்றி** - நெற்றிமுன் முன்பின்னாகத் தொக்க ஆறும்வேற்றுமைத்தொகை கடைக்கண் - "கீழ்நீர்" என்பவைபோல

**முருந்து** - மயிலிறகின் அடி. **முருந்து .. மயிர்க் கயிறு** - மயிலிறகின் அடியும் குன்றிமணிகளும் இடையிடையேவைத்துப் புரிகொண்ட முறுக்கமைந்த மயிர்க்கயிறு இவ்வாறு முறுக்கிய மயிர்க்கயிற்றினைத் தலையில்நெற்றிக்குமேல் திரணைபோல் அணிதல் வேடர் முதலியோரது வழக்கு திருஞானசம்பந்தமூர்த்திகளது திருமணத்தில் திருநெற்றியின்மேல் முத்தினாலமைந்த திரணை சாத்தினார்கள் என்பதும் காண்க (திருஞான - புரா - 1216) **ஆரச் சாத்தி** - பொருந்தி விளக்கமுறும்படி நிறையச் சாத்தி. **மின்னில் திகழ்சங்கு** - இல் - ஒப்புப் பொருளில்வந்த ஐந்தாம்வேற்றுமை யுருபு மின்போலத் திகழ்கின்ற. தோடுபோலச் செதுக்கப்பட்டு ஒளிவிளங்குதலால் **மின்னில்** என்றார். சங்கினாலியன்றதோட்டினை அணிதல் முன்னுள்ளவழக்கு. சிவபெருமான் சங்கக் குழை தரித்துள்ளார் என்ஆகமங்களபேசும் "சங்கக் குழையார் செவியா அழகா" என்ற நம்பிகள் தேவார முதலியன காண்க

**புடை**-இருபுடையிலும் **மாமதி**-(இரண்டு)முழுமதிகள். வரும்பாட்டில் **துண்டப் பிறை**என்றதனால் இங்கு **மாமதி** என்றதுமுழுமதிகுறித்தது. **வைக** - தங்க. 58

708 **(வி - ரை) வெண்கவடி** - வெள்ளிய பலகறை **மாலை சேரக்கொண்டு** - மாலையாகச்சேரும்படி கொண்டு. **அக்கு** - சங்குமணி

**பன்மணி** - வேறு பலவகை மணிகள். **ஏனக் கோடு** - பன்றியின்கொம்பு பன்றியின் வளைந்தபல் (வக்ரதந்தம்) **கோடு** எனப்படும்

**துண்டப் பிறைபோல்வன தூங்க** - பிறையினது துண்டங்கள் போல்வனவாகித் தொங்க "துண்டப் பிறையான் மறையான்" - (திருவாசகம் - திருவம்மானை - 9)

**வேங்கை . சன்னவீரம்**-வேங்கையின் வலியதோலாலகைவினைத்திறமமையச் செய்த சன்னவீரமென்னும் வெற்றிமாலை. முத்துமாலை முதலியவற்றானியன்ற சன்னவீரம் அரசர் முதலியோர் அணிவது மரபு இங்கு வேடர்கள் தங்கள் மரபுக்கேற்ப அதனைவேங்கைத்தோலாலாக்கி, அதிற் பலமணிகளும் பலகறை, சங்குமணி இவைகளும் பன்றிக்கோடும் பொருந்தச்செய்துஅணிந்தனர். இது இவர் வழக்கு **தட்டை** என்பது **தண்டை** எனவந்தது **தண்டை** - என்பதற்குப் புலித்தோலினை வலயமாகத்தைத்து உள்ளே சிறுகற்களையிட்டுவைத்தஅணி என்பாருமுளர். அது பொருந்தாமை யறிக 59

709. **(வி - ரை) தந்தச் சிறுமணித்திரள்** என்க. யானைத் தந்தத்தை அளவுபட்டச் சிறுமணிகளாகஅறுத்து அவற்றைமாலையாகச் சேர்ப்பது வழக்கு **தோள்வலயங்கள்** - வாகுவலயமென்பர் இது பரப்புடையதாய்க் கவசம்போலத் தோளை மூடிநிற்கும் ஒரு வகை அணி. இது தோரணமாலைபோல நின்றதென்பார் **தாரிற்போலி** என்றார்

**சேர்விற்போலி கங்கணம்** - இவரது கையிற்சேர்தலினாலே கங்கணம் பொலிவு பெற்றது என்க **சேர்வு** - சேர்தல் அவ்வாறு சேராதபோது கங்கணத்திற்குத் தனியாக மதிப்பும் விளக்கமும் இல்லை என்பார் **சேர்விற் போலி** என்றார்.

**கார்நாண் எறி** - மேக முழக்கம்போல நாணொலிசெய்யும் **கார்** - கார் முழக்கம். ஆகுபெயர், "துங்கப்பெரு மாமழை போன்றுதுணைச்சென்ற நொலிப்ப" (712).

**நாண்எறி கைச்சேறிகட்டி கட்டி** - வில் நாணில் அம்புபூட்டி எய்வதற்குதவியாக உள்ள கைக்கோதையைக்கட்டி. **கைச்சேறிகட்டி** - கைக்கோதை, விரலுறை, கைவிரற் சட்டை. இது அம்பு பூட்டுதலாலும், இறுக்கக்கட்டிய புலிநரம்பு முதலியவற்றானியன்ற வின்னாணை வலித்தெய்வதனாலும் விரலுக்கு ஊறு உண்டாகாதபடி காவலாக விரலில் அணியும் ஒரு உறைபோன்றது. இது காழகம், விரற்றலைப் புட்டில் முதலிய பெயர்க

ளாற் பழந்தமிழ் இலக்கியங்களிற் பேசப்படும். இந்நாள் நவீனர் Gloves என்ப தொருவகைக் கைச்சட்டை அணிவதும், தையல்வேலை செய்வோர் விரல் முனையில் உலோகக்குப்பாயம் அணிவதும் காண்க. ஆயின் கைக்கோதை விரலின் அளவில் நிற்ப தாய்க் கையில் வரிந்து கட்டப்படுவது என்க. 60

710. (வி - ரை) **சரணத்து உரியாடை** - சரணம் - மயிற்பீலி. உரியாடை - புலி முதலியவற்றின் தோலாலாகிய ஆடை. மரவுரி என்பாருமுண்டு. "தோல் தழைத்த நீடு தானையார்" (717) என்பர் பின்னாகக் கூறுவதால் இவர்கள் தோலாடை அணிவது வழக்கென்க. இதற்குக் காலோடு கழற்றியணியும் ஆடைவகை என்பாருமுண்டு.

**படு** - உண்டாகும். **வெள்ளலகு** - வெள்ளிய பலகறை. **அலகு** - எண்ணல் அளவு. அதற்குக் கருவியாதலின் பலகறைக்கு ஆகுபெயர்.

**ஆர்த்து விளிம்பு சேர்த்தி** - சிறிய பலகறைகளை ஆடையின் ஓரத்தில் விளிம்பாக வரிசையாகக் கட்டி யமைத்து. **நிரையிற் பொலிநீள்** - வரிசையாக விளங்கிய நீண்ட. **உடைதோல்** - உரியாடையின்மேல் கட்டும் தோலில். **சுரிகைப்புறஞ்சூழ் விரையில் துவர்வார் விசிபோக்கி** - உடைவாளின் புறத்துச் சூழ்ந்த உறையைச் சுற்றி வாசனை பொருந்திய பவளம்போன்ற செஞ்சாயமேற்றிய வாரினால் விசிபோக்கிக் கட்டி. **புறம்** - புறத்தே சூழ்ந்த உறை; ஆகுபெயர். **விசி** - விசியை; விசி - இணைத்துக் கட்டும் கயிறு போன்ற தோல். **விசித்தல்** - கட்டுதல். **விரையில்துவர்** - தோல்வாரின் துர்நாற்றம் போக்கி அது நீடு செல்லுதற்குரிய பதம் தருதற்குத் துவர்ப்பட்டையில் ஊறவைப்பர். அழகின்பொருட்டுச் செஞ்சாயமேற்றுவர். **நிரையிற் பொலிநீள்** - உடை தோலிற்கு அடைமொழி. உடைதோலும் சுரிகையும் நாகனுற்றரப்பட்ட அரசடையாளமாதலின் அடைமொழிகளாற் சிறப்பித்தார். 702 பார்க்க. **விசிபோக்கி அமைத்து வீக்கி** என்றது விசிவாரினைப் புகுத்தித் தைத்ததுபோல அமைவுற இழுத்துக்கட்டி. "போர்வைத் தோல் விசிவார்" (திருநாளைப்போவார் புராணம் - 14) என்றது காண்க. 61

711 (வி - ரை) **காலில் வீரக்கழல் அணிந்து** எனவும், **தொடுநீடுசெருப்பு பாதம்சேர** எனவும் மாற்றி யுரைத்துக்கொள்க. செருப்புத்தொடுதல் என்பது வழக்கு. முன் சொல்லிய ஏனை அணி ஆடை வகைகள் அந்தந்த அங்கங்களின்மீது சேர்த்து அணியப்படுவனவாகச், செருப்பு, அவ்வாறல்லாது பாதமாகிய அங்கம் அதனுட் சென்று சேர்தலால் செருப்புப் பாதம்சேர என்னாது **பாதம் செருப்புச் சேர** என்றமைத்தனர். **நீடு செருப்பு** - இறைவனது திருமுடியிலும் திருமுகத்திற் கண்ணருகிலும் ஏறும் பெருமையும், அதுபற்றி "**செருப்புற்ற சீரடி**" (திருவாசகம்) முதலிய அருண்ஞானத் திருவாக்குக்களில் ஏறித் துதிக்கப்பெற்ற பெருமையும் நோக்கி **நீடு** என்று சிறப்பித்தார். **நீடுதல்** பெருமையால் நீடியிருத்தல்.

**விருப்பு வாய்ப்ப (வில்லினைப்) பணிந்து** என்று கூட்டி யுரைப்பினுமமையும்.

**பாரப்பெருவில்** - ஏந்துதற்கரியதாய மிகப் பாரமுடைய வில். இது மேருமலை போன்றதென (681) முன்னாகக் கூறியது காண்க. **வில்வலங் கொண்டு பணிந்து** - அவ்வத் தொழிலாளரும் தத்தம் தொழிற்குரிய கருவிகளை வணங்கித் தொழிலிற் புகுவது இன்றும் வழக்கமாதல் காண்க. ஆயுதபூசை என்ற சிறப்பாகிய திருநாட்கொண்டாட்டமும் காண்க. முன்னரும் "விதிமுறை வணங்கி" (690) என்றார். இதுபற்றியே இங்குத் திண்ணனாரும் கன்னிவேட்டை புகுவதன் முன் தமது வில்லினைச் சுற்றி வலம்வந்து வணங்கி ஏந்தினார் என்க.

**விருப்பு வாய்ப்ப** - தாம்புகும் காரியமாகிய வேட்டையானது தாம் விரும்பிய பலன் தருவதாக என்று பிரார்த்தித்து. இது இப்போது விரும்பிய வேட்டை வினையோ டொழியாது முன் பிறவியில் கயிலையில் அருச்சுனனாயிருந்து தவஞ் செய்த காலையில்

விரும்பிவேண்டிய முத்தியாகிய பேறு வாய்க்கும்படி என்றதோர் குட்குறிப்பும் தருத லும், அது வாய்த்தற்கும் இவ்வில்லே துணையாதலும் காண்க.

சார - வில்லினைவணங்கி அது திருத்தாளினைச்சார மடுத்தது என்றதாம். திருத் தாள் மடுத்து ஏற்றி - வில்லினைத் தாளில்வைத்து நாணேற்றி தாளில் மடுத்தல் வில்லின் இருதலையும்பற்றிவளைத்து இறுகும்படி நாணகட்டும் பொருட்டாம்.

வியந்து - தெய்வம் துதித்து "வியந்தலறேன்" (திருவாசகம்-திருச்சதகம் 12), "வியவேனயவேன் றெய்வ மிக்கனவே" (திருக்கோவையார் 6).

பாரப்போரு மடித்தேற்றி என்பனவும் பாடங்கள்　62

712 (வி - ரை) புவனத்து இடர்வாங்க - உலகத்தின் துன்பம் நீங்க. திண்ணப் பனார் இனிக் கண்ணப்பராவார், ஆகவே, அவரது திருவடிபிடித்து உலகம் உய்ய. புவனத்து உலகத்தில். இடர்வாங்க - உயிர்கள் துன்பநீங்கிஉய்ய. வாங்குதல் - நீங்குதல் என்றபொருளில் வந்தது. அந்நாட்டின் துன்பநீங்க என்றுரைப்பாருமுண்டு.

துங்கம் - பெருமை. உயர்ச்சி பெருமாமழை மிகப்பெரிய மேகம். மழை - மழைமுழக்கம் ஆகுபெயர்

வெஞ்சினக்கண் நீடு விலங்கு என மாற்றுக. நீடு விலங்கு - பெருவிலங்குகள். நெடுந்தூரத்தில் இருக்கும் விலங்குகள் என்றலுமாம் சிறப்புமமை தொக்கது. விலங்கு சாதி யொருமை. நீங்க - தாந்தாம் பதுங்கியிருந்த இடங்களினின்றும் நீங்க.

சிறுநாண்எறிதல் - முதலில் நாணஒலிகொள்ளுதல் வில்லின் நாணை எறிந்து அம்பு எய்வதற்கான பதம் பார்த்தல்

சிறு சிறிதே எறிந்து அமைதிபார்த்தல் குறித்தது நாண சிறிது எறிந்தார் எனக் நாண சிறிதெனபதன்று. யாழ் முதலிய நரம்பு இசைக்கருவிகளை மிழற்றும் முன்னர் நாணெறிந்து சிறஒலிகொள்ளுமவழக்கும் காண்க.

701 முதல் 712 வரை உள்ள இவ்வெழுபாட்டுக்களாலும் ஒருதொடர்பாயத் திண்ணனாரைத் தலைமுதல் பாதம் வரை அலங்கரித்து வேட்டைக்குரிய வில்வேடத் துடன் எழும் வகையிற் றூமம் தரிசித்து ஆசிரியர் நமக்குங் காட்டுகின்றார்.

தலையில், சுருண்ட குஞ்சி நிமிர்ந்துபோகக் கட்டினார்; அதில் தளிரா லியன்ற கொண்டைமாலை சூட்டினார், அதில் மயிற்பீலி செருகினார், தளிர் மாலையின்மேல் முல்லைமலர்மாலையும் அதிற் குறிஞ்சிப்பூவும் வெட்சிப்பூவும் பின்புறம் சூட்டினார்;

முன்னெற்றியின்மேல், மயிலிறகின் அடிப்புறத்துடன் குன்றிமணிவைத்து முறுக்கிய மயிர்க்கயிற்றைப் பொருந்தச்சாத்தினார்; காதுகளில் முழுமதிபோல விளங் கும் வெண்சங்கத் தோடுகளணிந்தார்,

கழுத்தில், வெள்ளைப்பல்கறைமாலையும் சங்குமணிகளும், பிறைத்துண்டம்போன்ற பன்றிக்கொம்புகளும் இடையிடை தொங்கவைத்து ஒருசேர அமைத்த தட்டையாகிய வேங்கைத் தோலினாலாகிய சன்னவீரம் அணிந்தார்,

மார்பில், யானைத்தந்தத்தை ஒழுங்குபெறஅரிந்து சிறுமணிகளாக்கிக் கோத்த மாலை சாத்தினார்;

தோள்களில், வாகுவலயங்களும், முன்கைகளிற் கங்கணங்களும், விரலுக்குக் கைக்கோதையும் பூட்டினார்,

இடுப்பில், மயிற்பீலிசோத்தத புலித்தோலாடை சாத்தி அதனைப் பல்கறைகளால் ஒழுங்குபெற விளிம்புசோத்தார், அதன்மேல உடைதோல பூண்டார்; சுரிகைப் புறஞ் சூழ அவ்வுடைத்தோலுடன்சோத்துத துவாவாரவிசித்து வீக்கினார்,

காலில், வீரக்கழல கட்டினார், திருப்பாதங்கள் நீடுசெருப்பைப் பொருந்தின; பெருவில்லைப்பணிந்து தாள்மடுத்துத்தாங்கி நாணேற்றிச சிறுநாணொலிகொண்டார்.

இவ்வாறு வேட்டைக்கோலத்தை உச்சிமுதல் காலவரை விரிவாய்ச் சித்திரித்து "இவன் இறைவன் என்று எழுதிக் காட்"டியதென்னை? எனின், இக்கோலத்துடனே நாயனார் காளத்தியப்பரைக் காண்கின்றார்; கண்டு கண்ணப்பராய் அவ்விறைவனுடன் ஒன்றி அவர்தம் வலப்பக்கத்தே என்றும் மன்னி நிற்கின்றார், இக்கோலமே பின்னர்த் திருஞானசம்பந்தமூர்த்திகள் முதலிய ஆசாரியன்மார்கள் யாவரும் கண்டு தரிசித்துத் துதித்தார்கள் ஆதலின் என்க. இதுபோலவே, வேயங்குழற் கானவிசையமுதம் பரப்பி நின்றநிலையிலே கயிலைசென்ற ஆனாயநாயனாரையும் அவர் ஆனிரைகாக்கப்புறம்போந்த போது உள்ளகோலத்தைத் தலைமுதற்காலவரை அலங்கரித்து ஆசிரியர் கண்டு காட்டிய அமைதியும், இறைவன் நேரேவந்து தடுத்தாண்ட ஆளுடைய நம்பிகளது திருமணக்கோலத்தை விரிவாய் அலங்கரித்துக் கண்டுகாட்டிய அழகும், திருமணத்தில் நல்லூர்ப்பெருமணத்தானை அடைந்து "போதநிலை முடிந்தவழிப் புகக்கொன்றி யுடனா"கிய ஆளுடையபிள்ளையாரது திருமணக்கோலத்தையும் சிரமுதற் பாதம்வரை முத்தணிகளால் அலங்கரித்துக் கண்டுகாட்டிய அருளிப்பாடும் இங்கு வைத்து உண்மை காண்க.

குஞ்சி நிமிர்ந்துபொங்க - பீலி சோத்தி - சீர்கொள்ச - செய்து - சாத்தி - வைக- சேர - தூங்கிட - தயங்க - தாழ - மின்ன(ச்செய்து) - கட்டி - சாத்தி - போக்கி-வீக்கி- அணிந்து - சேர - வலங்கொண்டு பணிந்து - ஏற்றி - தாங்கி - வாங்க - ஒலிப்ப - நீங்க- நாணெறிந்தார் - என இவ்வேழு பாட்டுக்களையுந் தொடர்ந்து முடித்துக்கொள்க 63

713. பல்வேறு வாளி புதைபார்த்துடன் போத வேவி
வில்வேட ராயத் துடிமேவி யொலிக்கு முன்றிற்
சொல்வேறு வாழ்த்துத் திசைதோறுந் துதைந்து விம்ம
வல்லேறு போல்வா ரடல்வாளி தெரிந்து நின்றார். ௯௪

**(இ - ள்)** வல்லேறு போல்வார் - (சிறு நாணெறிந்த) வலிய சிங்கவேறு போல்வாராகிய திண்ணனார், பல்வேறு .ஏவி - பலவேறு அம்புகளை அம்புக்கூட்டிற் பார்த்துத் தெரிந்தெடுத்துக்கொண்டு தம்முடனே வரும்படிவேவுகாரருக்குக் கட்டளையிட்டு, வில்வேடர் முன்றில் - வில்வேடர்கள் கூட்டங்களினது சிற்றுடுக்கை சேர்ந்து சத்திக்கும் முன்றிலில் வந்து, சொல்வேறு ..விம்ம - அவர்கள் சொல்கின்ற பலவேறு வாழ்த்தொலிகளும் எல்லாத்திக்குக்களிலும் நெருங்கி நிறைய, அடல் .நின்றார் - வலிய அம்புகளை ஆராய்ந்து நின்றார்.

**(வி - ரை) ஏவி** - வேவுகாரருக்குக் கட்டளையிட்டு. பலவகைப்பட்ட வேற்றுமையான பாணங்களை அம்புக்கூட்டிலே தெரிந்தெடுத்து உடனேபோம்படி செலுத்தி வென்றிபொருந்திய அவ்வாளிகளின் றன்மையைப் பரீட்சித்துநின்றார் என்பது இராமநாதச்செட்டியார் உரைக்குறிப்பு. **பல்வேறு** - பல வடிவினவாகிய - பலதிறப் பட்ட. பற்பலவிலங்குகளுக்கும் அவ்வவற்றின் திறந்தெரிந்து ஏற்றவாறு எய்யும் வகையாலும் பிறவாற்றாலும் வாளிகளும் பலதிறப்பட்டனவாம் என்க. சிறுநாணெறிந்த அதனால் நாண் ஒழுங்குபட அமைந்த திறங்கண்டவர் அந்நாணிற் பலவகை அம்புகளையும் பூட்டிச் செலுத்தியதனால் அந்நாண் அம்புபூட்டி எய்வதற்குத் தகுதி பெற்றதனைக் காண்பதும் வழக்காமாதலின் அதற்கேற்றபடி இங்கு உரைப்பாருமுண்டு.

**புதை** - அம்புக்கூடு அம்பறாத்தூணி - புட்டில். **பார்த்து**-தேர்ந்தெடுத்து. புதையின்கண் என ஏழனுருபு விரிக்க. **உடன்போத** - உடன் கொண்டுவர.

**ஆயம்** - கூட்டம் **(முன்றில்) வந்து** என ஒருசொல் வருவித்துக்கொள்க.

**வாழ்த்துத் துதைந்து விம்ம** - வேடர்கூட்டத்தில் ஒலிக்கும் துடியோசையின் மிக்கு ஓங்கி வாழ்த்தொலிநிறைய என்பதாம்.

**சொல் வேறு வாழ்ந்து** - சொல்கின்ற பலவேறுவகைப்பட்ட வாழ்ந்து. அவ்வவரும் தத்தம் மனங்கொண்டபடியும் தகுதிக்கேற்றபடியும் பலவாறு வாழ்ந்துவாராதலின் **சொல் வேறு** என்றார். இனி, இவர் வாழ்ந்தியது ஒருநிலை, அவ்வாழ்த்தினவேறாயத் திண்ணனார் அடையநின்றது மற்றொருநிலையாயமுடிதலின் **வேறுசொல் வாழ்ந்து** எனப் பிறிதொருகுறிப்பும்பட நின்றதுங் காண்க.

**அல் ஏறு** - கரிய சிங்கஏறு என்றலுமாம். **அடல்** - வெற்றி என்றலுமாம். ஏறு போல்வார் - ஏவி - முன்றில(வந்து) - விம்ம - தெரிந்துநின்றார் எனமுடிக்க.　64

714. மானச்சிலை வேடர் மருங்கு நெருங்கு போதிற்
பானற்குல மாமல ரிற்படர் சோதி யார்முன்
றேனுற்றசை தேறல் சருப்பொரி மற்று முள்ள
கானப்பலி நேர்கட வுட்பொறை யாட்டி வந்தாள். 　கூ௫

(இ - ள்) வெளிப்படை. பெரிய வில்லேந்திய வேடர்கள் வேட்டைக்கு ஆயத்தமாய அவர்பக்கம் நெருங்கியபோதில் பெருந்தொகுதியாகிய நீலோற்பல மலர்களின் ஒளிபோன்று வீசுகின்ற நீலவொளியுடைய திண்ணனார் முன்பு, தேனும் நல்லதசையும் கள்ளும் சருவும் பொரியும் இன்னும் இவைபோன்ற பிறவுமாகிய பொருள்களாற் காடு பலியூட்டிய தேவராட்டி வந்தனள்.

(வி - ரை) **மானம்** - பெருமை. **மானச்சிலை** - பெரிய வில். "மானமா மடப்பிடி வனகையா லலகிட", "மானக் கயிலை மலையாய் போற்றி" என்பனவாதி திருவாக்குக்கள் காண்க. **மானவேடர்** என்றுகூட்டிக் குலப்பெருமையுடையவேடர் என்றுரைத்தலுமாம். இவர்கள் குலப்பெருமையுடைமை கந்தபுராணத்தில் வள்ளியம்மையார் திருமணவரலாற்றில் முருகப்பிரானை வேடர்கள் வேண்டுவதாகக் கூறும்,

"அடுந்திற லெயினர் சேரி யளித்திடு நீயே யெங்கண்
மடந்தையைக் கரவில் வௌவி வரம்பினை யழித்துத் தீரா
நெடுந்தனிப் பழிய தொன்று நிறுவினை, புதல்வர் கொள்ள
விடுந்தனை யன்னை யூட்டின விலக்கிடு கின்று ருண்டோ?" (191)

என்ற திருப்பாட்டானறிக. மானவேடர் (722) என்பதுங் காண்க.

**மருங்கு நெருங்குதல்**-திண்ணனாரோடுகூடி வேட்டைக்கு ஆயத்தமாக இவர்களும் புறப்படுதற்காக எனக.

**மாக்குலப் பானல் மலரில்** - **பானல்** - நீலோற்பலம். **மா** - **குலம்** - தொகுதியின் பெருமை குறித்தது மலர்களின் பெருங்கூட்டம். "செந் தாமரைக்கா டனைய மேனி" (திருவாசகம்). **இல்** - ஒப்புப் பொருளில் வந்த ஐந்தனுருபு. **மலர்க்குலத்தில்** என்றது அதனொளிபோல என்றதாம். ஆகுபெயர்.

**பானற்குல மலரிற்படர் சோதியார்** - அளவில்லாத நீலோற்பலமலர்கள் ஒருங்கே புதிதின்மலர்ந்து ஒளிகாட்டி வருதல்போன்ற கரியதாயவீசும் ஒளியுடைய திண்ணனார் கருமையிலும் விரிகின்றஒளியும் அழகும் உளதெனப்பார் நீலமலரின் ஒளியை உவமித்தார். காளமேகம் (664), மைவிரவு நறுங்குஞ்சி வாசக் கணணி மணிநீல மலை (701), கருங்கதிர் விரிக்குமேனி (615) என்றவை காண்க. இப்போது புறப்படும் வேட்டையின்பின்னர்ச் சோதியாகிய இறைவனை அடையநின்றாராதலின் இங்குச் **சோதியார்** என்றார்.

**தேன்** முதலியவை வனதெய்வங்களுக்கு ஊட்டத் தேவராட்டி கொண்டுபோன பலிப்பண்டங்கள். இவற்றை, வேண்டுவன குறைவின்றி (700)என்றுமுன்னர்த்தொகுத்துக்கூறிய ஆசிரியர் இங்கு விரித்துக் கூறினார். (698-ல் மென்றசை முதலியன

தேவராட்டிக்கு நாகன் வைத்த உணவுப் படித்திட்டம்) தேவர்க்கு ஊட்டும் பலிப் பொருள்களை நிவேதிக்குமுன்னர்ப் பலரும் பார்க்கலாகாதென்ற முறைபற்றி முன்னர் வேண்டுவன என்றமைந்த ஆசிரியர், நிவேதித்தபின் தேவரதுஅருட்பிரசாதங்களாய் இவற்றைப் பலருங்காணலாம் என்றதுபற்றி விரித்துக்காட்டிய மரபுங் காண்க.

**காணப்பலி** - முன்னாக காடுபலி (699) என்றது காண்க.

**கடவுட் பொறையாட்டி** - தேவராட்டி. பொறையாட்டி-தேவரது படிமத்தையும் ஆவேசத்தினையும் தன்னிடத்துத் தாங்கியவள். 65

*715. நின்றெங்கு மொய்க்குஞ் சிலைவேடர் நீங்கப் புக்குச்
சென்றங்கு வள்ளற் றிருநெற்றியிற் சேடை சாத்தி
"உன்றந்தை தந்தைக்கு மிந்நன்மைக ளுள்ள வல்ல
நன்றும்பெரி துன்விற லெம்மள வன்றி" தென்றாள். கூகூ

(இ - ள்) வெளிப்படை. (வந்த தேவராட்டி) எவ்விடத்துங் கூடிநின்று மொய்க்கும் விலவேடர்கள் ஒதுங்க, வள்ளலாராகிய திண்ணனாரபக்கத்துச் சென்று அவரது திருநெற்றியிலே அட்சதைசாத்தி "உனது தந்தைதந்தைக்கும் இந்த நன்மைகள் உள்ளனவல்ல, உன்வலிமை மிகவும்பெரிதாகும், இது நம்மளவில்அடங்காது." என்று ஆசீர்வதித்தாள்

(வி - ரை) **எங்கும்மொய்க்கும்** - திண்ணனுருடன்வேட்டைக்குப்போக நாற்புறமும் நெருங்கிச்சூழும். மேற்பாட்டில் மருங்குநெருங்கு என்றதனை இங்கு **மொய்க்கும்** என்றார். **மொய்த்தல்** - நெருங்கிச்சூழ்தல்.

**சிலைவேடர் நீங்க** - கொடியவில்வேடரேயாயினும் தேவராட்டியினிடம் ஒழுகும் முறையில் வழிதந்து நீங்க

**வள்ளல்** - தற்பயன் குறியாது வரையாது வேண்டுவனவற்றையெல்லாம் நல்கும் அன்புடையார். இங்கு, இனி இறைவனுக்குத் தமதுகண்ணைக் கொடுக்க நிற்கும் இவரினும் வள்ளலாவார் பிறரில்லை எனக

**சேடை** - 697 பார்க்க. சேடைநெற்றியிற்சாத்துதல் வாழ்த்துதற்குரியசெயல் தலையிற்றூவுதலும்மரபு.

**உன் தந்தை . . . . அன்றி்து** தேவராட்டிசொல்லிய ஆசிமொழிகள் முழுதும் உண்மைக் குறிப்புப்பெற நிற்றல்காண்க. நாயனாரது தந்தை தந்தை முதலிய முந்தையோர் எவர்க்கும் இதுபோன்ற நன்மைகள் இல. இவரதுவிறல் வேடர்மரபின் வலிமையளவில் அமைவதன்றி மிகப்பெரிதாய நிற்குந்தன்மையைப் பின்னாத் தங்களாகுறி வாராமற் கைவிட்டார் (802), அன்புபிழம் பாயத்திரிவா ரவர்க்குத்தி ளவின்றோ (803) என்பவற்றுட் காண்க. இவள் வழிபடும் வனதெய்வங்கள் இவளது வாக்கிலநின்று உண்மையை வெளிப்படுத்தித் திண்ணனாரைப் போற்றிநின்ற குறிப்புங் காண்க.

**உன் தந்தை தந்தைக்கும்** என்றதனால் நாகனும் அவன்றந்தையும் கன்னிவேட்டையிற் புகும்போது இத்தேவராட்டியே காடுபலியூட்டிவந்து சேடைசாத்தியவள் என்றும், அப்போதுகண்ட குறிகளைக்காட்டிலும் சிறந்தகுறிகள் இப்போது கண்டனள் என்றும் கூறும் மகாலிங்கையரின் உரைப்பொருத்தம் ஆராயத்தக்கது.

**சினவேடரை நீக்கி**—என்பதும் பாடம். 66

716. அப்பெற்றியின் வாழ்த்து மணங்குடை யாட்டி தன்னைச்
செப்பற்கரி தாய சிறப்பெதிர் செய்து போக்கிக்
கைப்பற்றிய திண்சிலைக் கார்மழை மேக மென்ன
மெய்ப்பொற்புடை வேட்டையின் மேற்கொண் டெழுந்து போந்தார்.

(இ - ள்) வெளிப்படை. அவ்வாறு வாழ்த்துகின்ற தேவராட்டியைச் சொல்லுதற் கரிய பெருஞ்சிறப்புக்கள் எதிர்செய்து போக்கி, வலிய சிலையினைக் கையிலேந்திய கார் காலத்து மழைமேகம்போல, உண்மைப்பொலிவுகொண்ட வேட்டையினைமேற்கொண்டு எழுந்து (திண்ணனார்) புறப்பட்டனர்.

(வி - ரை) சிறப்பு எதிர்செய்தல் - அவள் மகிழும்படி சிறந்த வரிசைபலவும் தந்து பாராட்டுதல். எதிர்செய்தல்-அவள்செய்த நன்றிக்குத் தாமதமின்றிக் கைம்மாறு செய்தல் போக்கி - தனது இருப்பிடத்துக்குப் போகும்படி செய்து.

திண்சிலை கைப்பற்றிய என மாற்றுக. கார் - கார்காலம். மழைமேகம் - எழுந்து மழைபெய்யச் சூல்கொண்ட மேகம். மேகமும் இந்திரவில்லாகிய சிலையினை ஏந்திநிற் பதனால், வினையும் உருவும் பயனும் விரவிவந்த உவமம் முன்னரும் காளமேகம் என் றார். கார்மழை மேகம் அம்பு (நீர்) மழை பெய்வது போன்று இவர் தமது வில்லினின் றும் பொழியும் அம்புமழை அன்புமழையேயாகிப்பொழிந்து உலகுய்யச் செய்தது.

மெய்ப்பொற்பு - உண்மையின் பொலிவு. இவ்வேட்டைக்கு உண்மைப்பொலிவா வது தனக்கென ஒரு பயனும் வேண்டாது வேடர்களாகிய குடிகளைக்காத்துத் தாங்கி நலமே செய்யும் (703 - 704) கருத்தின்வழியே சிந்தித்து எழுந்தது என்பதாம். இனி, சிறிதுநேரங்கழியவே தன்னைமறந்த உள்ளத்திற றெளிகின்ற மெய்ம்மை யன்பின் உருவமேயாகி (திருஞான - புரா - 1024) மெய்ம்மையின் வேறு கொள்ளாச் செவ்விய அன்பு தாங்கி (776) நிற்பதாகிய நிலையினைத் திண்ணனார்பெறுவர் இரவு கழிவதன்முன் புலரியி னிருளிடத்துச்சென்று பகலினொளி விரவிக் காட்டுதல்போல அந்தப் பேரன்புநிலையின் உண்மைப்பொலிவு இருள்போன்ற கொலைவேட்டை புகும் இப்பொழுதே கலந்து காட்டிற்று என்ற குறிப்புமாம். மெய் உடல் எனக்கொண்டு அதற்கேற்ப உரைப்பாருமுளர்.

மேற்கொண்டு எழுந்து - அதனில் முயற்சித்துக் கிளம்பி. போந்தார் - தன் மனை யின் வரிவிற்சாலை முன்றிலினின்றும் புறப்பட்டார். 67

வேறு

717. தாளில் வாழ்செ ருப்பர் தோல்த ழைத்த நீடு தானையார்
வாளி யோடு சாப மேவு கையர் வெய்ய வன்கணார்
ஆளி யேறு போல வேடு மண்ணு லாமு னெண்ணிலார்
மீளி வேடர் நீடு கூட்ட மிக்கு மேலெ ழுந்ததே. ௬௮

(இ - ள்) வெளிப்படை. இவ்வாறு வேட்டையின்மே லெழுந்து ஆண்சிங்கம் போலப் புறப்பட்ட பெருமையுடைய திண்ணனாரின் முன்னே, கால்களில் இட்ட செருப்பினையுடையாராய், விரிந்த தோலைமேலே கட்டிய நீண்ட உரியாடையினை யுடையாராய், அம்புகளுடன் வில் பொருந்திய கைகளையுடையாராய்த், தறுகண்மை யுடையாராய், எண்ணில்லாத கொடிய வலிய வேடர்கள் நெருங்கிய கூட்டம் மிகுதி பெற மேலெழுந்தது.

(வி - ரை) வாழ் செருப்பர் - வாழ்க்கை நிலையில் எவ்வேளையினும் செருப்பை யணிந்து திரிதலின் அவர்களது கால்களினிடமாக வாழும் செருப்பு என்றார்

நீடுதானை - உரியாடையாகிய நீண்ட உடை. தோல் தழைத்த - அதன்மேல் தோல்வரிந்த

சாப மேவு கை வில்லினைப் பிடித்த கை. செருப்பு இவர்களது தாளிலும், வில் இவர் கையிலும் நீங்காது நின்றன என்பது கருத்து. சாபம் - இரட்டுற மொழிதலால் கொலைப்பழியின் நியதியாக இடப்பட்ட சாபம் எனக்கொண்டு, அது இவர்கள் எய்யும்

குறித்தவிராத அம்புடனே பற்றிவந்து இவர்களை மேவுகின்றதென்ற குறிப்புப்பொருளும்பட நிற்றல் காண்க. இதனைப் பாண்டு, தசரதன் முதலியோர் சரிதங்களிற் காண்க.

செருப்பாராய்த், தானையராய்க், கையராய், வன்கண்ணராய் எண்ணில்லாத வேடர் என முடிக்க.

**வெய்ய வன்கணர்** - வன்கண்மை - கொடுமை. **வெய்ய**-அதன் மிகுதி குறித்தது. தாட்சண்ணியமில்லாமற் கொடுமைசெய்கின்றவர்கள் என்பர் மகாலிங்கையர்.

**ஆளி ஏறு** - அடலேனம் புலிகரடி (693) முதலிய விலங்குகளை வேட்டையாடுதல் மேற்கொண்டெழுந்து செல்கின்றாராதலின் விலங்கினத்தின் அரசாகிய சிங்க ஏறு என்றுவமித்தார். இவரது வேட்டையிற் றப்பிச்செல்லும் விலங்குகளில்லை என்பது குறிப்பு. பெருமிதத்தோற்றம், அவசியமின்றிக்கொல்லாமை, சிறுபிராணிகளை வதைக்காமை முதலியபெருங்குணங்களைப் பற்றியும் சிங்கத்தை உவமித்ததுமாம்.

**மீளி** வலிமை. நம்மைப் போல்வாராகிய என்பாருமுண்டு. 68

718. வன்றொ டர்ப்பி ணித்த பாசம் வன்கை மள்ளர் கொள்ளவே
வென்றி மங்கை வேடர் வில்லின் மீது மேவு பாதமுன்
சென்று நீளு மாறு போலவ் செய்ய நாவின் வாயவாய்
ஒன்றொ டொன்று நேர்ப டாம லோடு நாய்கண் மாடெலாம். கூகூ

**(இ - ள்)** வன்றொடர்... கொள்ளவே - வலியசங்கிலியிற்கட்டிய கயிற்றை வீரர்கள் வலியகையிற் பிடித்துக்கொண்டிருக்கவே; நாய்கள் - நாய்கள், வென்றி ..வாயவாய் - வேடர்களது வில்லின்மீது பொருந்தும் (விசயலட்சுமியின்) வெற்றிமங்கையினதுபாதம் முன்போய் நீள்வதுபோல்வனவாகிய சிவந்த நாக்கள் தொங்கிய வாயினையுடையனவாகி; மாடெலாம் பக்கங்களிலெங்கும், ஒன்றொடொன்று. .ஓடும் - ஒன்றொடொன்று பொருந்தாமல் ஓடும்.

**(வி - ரை) வன்றொடர்ப்பிணித்த - தொடர்** - சங்கிலி. வேட்டை நாய்கள் மிக்க கோபமுடையவை மக்கட்கும் விலங்குகட்கும் ஊறுசெய்வன. அவற்றை உரியகாலத்து உரியவர் கண்காணிப்பிலே கட்டவிழ்த்து விடுவதன்றி ஏனைக்காலத்துக் கட்டிவைத்தல் வழக்கு. அதுபற்றி, வேட்டையில் விலங்குகளைத் துரத்திப்பற்றவிடும்வரை இவைகளைப் பிணித்துக் கைப்பற்றிக் கொண்டுபோயினர். இவர்களது வீட்டுமுன்றிலிற் கட்டி வைப்பதைக், "கொடுஞ்செவி ஞமலி யார்த்த வன்றிரள் விளவின் கோட்டு"(652) என்றும், வேட்டைக்குக் கொண்டுபோகும் இவ்விடத்து, "வன்றொ டர்ப்பிணித்த பாசம் வன்கை மள்ளர் கொள்ளவே" என்றும், பின்னர் வேட்டையிற் கட்டு அவிழ்த்துவிட்டு விலங்குகளைப் பற்றவிட்டுப் பயன்படுத்துவதனை "மா அஞ்சு வித்தடாகக்கு நாய்க ளட்டமாக விட்டு (725) என்றும் கூறியது காண்க.

**மள்ளர் வன்கை கொள்ள** என மாற்றுக. **பாசம்** - கயிறு. நாயைச் சங்கிலியாற் பிணித்து அச்சங்கிலியைச் சோத்துப்பூட்டியகயிற்றை மள்ளர் கையிற்கொண்டனர். இவ்வாறு கையிற் பற்றிக்கொண்டு போகும்போது ஒழுங்கின்றிப் பலபுறமும் ஓடும் அவற்றின் இயல்பினை இங்கு **ஒன்றொடொன்று நேர்படாமல் ஓடும் நாய்கள்** என்ற தன்மைநவிற்சியணியின் அழகு காண்க. நாய்பிடித்துச் செல்வோரும் அதனை நோக்கும் விழியுடையோரும் இத்தன்மையணியின் சுவையை நன்கறிவர். எருது - குதிரை முதலிய பிராணிகளைப்போல நாய்கள் இணமாகக் கூடிவாழு மியல்புடையன அல்ல. நாய்கள் "சுவஜாதிவைரி" என்றதொரு பழமொழியும் உண்டு. ஆதலின் அவை ஒழுங்குபடச் செல்லா என்க.

**வென்றிமங்கை** - வெற்றிக்கு அதிதெய்வமாகிய இலக்குமி. இலக்குமிகள் எண்மர். அவருள் இங்குக் குறிக்கப்பட்டவர் விசயலட்சுமி என்பர். வெற்றிமங்கையின் பாதம்

வில்லின் மீது தங்குதல் என்றது வெற்றி அவர்களது வில்லுக்கு உள்ளதாம் என்றபடி. வில்லினைப் பூட்டிக் குறிவைத்து எய்ய, எய்த பொருள் குறிபிழையாது இவர்களுடையதேயாக ஆகுதலின் **வென்றிமங்கை மேவும்** என்றார். வேட்டைநாய்களின் சிவந்து நீண்ட மெல்லியவான நாக்குகள் வெற்றிமங்கையின் பாதங்கள் போல்வன என்றார். மெய்யும் உருவும் பற்றிய உவமம். **போல்வசெய்ய** - போல்வனவாகிய சிவந்த.

**மாடெலாம்** - வேடர்பலரும் பலநாய்களைக் கொண்டார்களாதலின் பக்கமெங்கும் என்றார். அண்ணலார்முன் வேடர்கூட்டம் செல்ல, அவ்வேடர் கைப்பற்றிய நாய்கள் பக்கங்களிற் சென்றன.

**மீளுமாறு**—என்பதும் பாடம். 69

719. போர்வலைச் சிலைத்தொ ழிற்பு றத்தி லேவி ளைப்பவச்
சார்வலைத்தோ டக்க றுக்க வேகு மையர் தம்முனே
கார்வலைப்ப டுத்த குன்று கான மாவ ளைக்கநீள்
வார்வலைத்தி றஞ்சு மந்து வந்த வெற்பர் முந்தினார். ௭௦

(இ - ள்) வெளிப்படை. போர்க்குரிய வலைத்தொழிலையும் விற்றொழிலையும் புறத்திலே செய்ய அந்தச் (அநாதி) சார்பாகிய வலையின்கட்டினை அறுக்கும்படி செல்கின்ற பெருமையுடைய திண்ணனாரின் முன்னே, மேகங்கள்சூழ்ந்த மலையினும் வேட்டைக் காடுகளினும் விலங்குகளை வளைத்தற்பொருட்டு நீண்ட வார்களையும் வலைவகைகளையுஞ் சுமந்து கொண்டுவந்த குன்றவர்கள் (இக்கூட்டத்தின்) முற்பட்டுச் சென்றனர்.

(வி - ரை) **போர்** - போர்க்குரிய. **போர்** - இங்கு வேட்டை குறித்தது. **வலைச் சிலைத்தொழில்** - வலைகொண்டு மலையுங் காடும் வளைத்தலும், வில்லினைக் கொண்டு அம்பெய்தலும் ஆகும் வேட்டைத் தொழில். **தொழில்** என்பதை வலையோடுங் கூட்டுக.

**புறத்திலே** - புறப்பொருள் என்றபேருங்காண்க. ஊர்ப்புறத்தில் என்பாருமுண்டு.

**அச்சார்வலைத் தொடக்கு** - அ - அந்த அநாதியாகிய அந்தப் பிறவிச் சார்பாகிய வலையின் கட்டு. பண்டறிசுட்டு.

**ஐயர்** - பெரியவர். "ஐயரே யம்பலவ ரருளாலிப் பொழுதணைந்தோம்" (திருநாளை - புரா - 30), "ஐயர் நீரவ தரித்திட விப்பதி யளவின்மா தவமுன்பு, செய்த வாறு" (திருஞான - புரா - 179) என்பவை காண்க. ஐயர் என்ற சொல் பிறப்புமாத்திரையாயன்றி இடுகுறியளவாய வேதியர் என்றதொரு சாதிகுறிப்பதாய வழங்கும் இந்நாள் உலகவழக்குப் பிற்காலத் தெழுந்தது போலும்.

**கார்வலைப் படுத்த குன்று கானம்** - இவர்கள் வேட்டைக்காடு காவல் செய்ய வலையால் வளைத்தற்கு முன், அது, கார்-மேகம் என்ற வலையால் வளைத்துச் சூழப்பட்டுள்ளது போன்றதென்பதாம். **குன்றுகானம்**-குன்றும் அதைச் சார்ந்த காடும். **மா** - அவற்றில் உள்ள விலங்குகளை இவர்களது வேட்டைச் சூழலிலிருந்து தப்பி ஓடாமலிருக்கும்பொருட்டும், அவ்வாறு ஓடுகின்றவற்றைப் பிணித்து அகப்படுத்திக்கொள்ளும் பொருட்டும் வேட்டைக்காட்டைச்சுற்றி வலையிட்டுக் காவல்செய்தல் மரபு. 724 பார்க்க.

**நீள் வார் வலை** - நீண்ட வார்களும் வலைகளும் உம்மைத்தொகை. புலிமுதலிய பெருமிருகங்களும் தப்பி ஓடாமல் அகப்படும்பொருட்டு நீண்ட வலிய வார்களாற் பிணிக்கப்பட்ட வலை "வார்வலை மருங்கு தூங்க" (652) என இதனை முதலிற்குறித்ததும் காண்க. **வலைத்திறம்** - பற்பலவகை வலைகள். **சுமந்து** - இவ்வலைகள் நெடும்பரப்புக்காடு வளைக்கவேண்டப்படுதலின் நீண்டனவாயும் பெரியனவாயும் உள்ளனவாதலின் தாங்கற்கரிய பெருஞ்சுமையாம். 70

720. நண்ணி மாம றைக்கு லங்க ளுட னென்று நீடுமத
தண்ணி லாவ டப்பு கொன்றை தங்கு வேணி யாரதம்மைக்
கண்ணி னீடு பார்வை யொன்று கொண்டு காணு மன்பர்முன்
எண்ணில் பார்வை கொண்டு வேட ரெம்ம ருங்கு மேகினார். ௭௧

(இ - ள்) வெளிப்படை. பெரிய வேதங்கள் கூடித் தேடும்படி, நீடுகின்ற அந்தக் குளிர்ந்த நிலவும் அடம்பும் கொன்றையும் தங்குஞ் சடையுடையவராகிய இறைவரைத் தமது கண்ணின் நீடியபார்வை ஒன்றுகொண்டு காணும் அன்பராகிய திண்ணனார் முன்னே எண்ணில்லாத பார்வைகளைக்கொண்டு வேடர்கள் எல்லாப்பக்கங்களிலுஞ் சென்றனர்.

(வி - ரை) மாமறைக் குலங்கள் நண்ணி நாட என்க. மா - பெரிய. மறைக் குலங்கள் - வேதத்தின் பல சாகைத்தொகுதிகள். நண்ணி நாட - தேடும் அத்துறையிலே பொருந்தி நாட.

என்றும் நீடும் - எக்காலத்தும் அந்நாட்டத்துக்கு அகப்படாமல் நீளுகின்ற. நாட நீளுதல்-சொல்லிமுடிய இயலாமல் நீளச்சென்றுகொண்டேயிருத்தல். "பாதாளம் ஏழினுங்கீழ் சொற்கழிவு பாதமலர், போதார் புனைமுடியு மெல்லாப் பொருண் முடிவே" என்ற திருவாசகங் காண்க.

அ வேணியர் - அகரம் உலகறிசுட்டு. பெரியோரால் அறியப்பட்ட அந்த.

கண்ணின்.. அன்பர் - ஒன்று பார்வை கொண்டு எனக் அவரைக் காண்ப தன்றிவேறொன்றையுங் காணாத இவ்வாறு கண்டு கொண்டிருந்தபொருள் 777ம் பாட்டில் "ஆவமுன் பெருக ஆரா அன்பினிற் கண்டு கொண்டே, நேர்பெற நோக்கி நின்றார்" என விரித்துரைக்கப்பட்டது காண்க. நீடுபார்வை - முற்பிறப்பிற் றவஞ்செய்து பார்த்த பார்வை இப்பிறப்பிலும் வந்து நீடியது; இங்குப் பார்த்த பின்னர் விலகாது நித்தமாய் நீடியுள்ளது. ஒன்று - ஒப்பற்ற - தனி - என்ற குறிப்புமாம்.

பார்வை ஒன்று - வலக்கண்ணைப் போழ்ந்து இறைவன் கண்ணிலே அப்பிவிட்டாராதலின் மற்றை இடக்கண் ஒன்றின் நீடிய பார்வை கொண்டு என்பதுமாம். பார்வை - ஒன்று - எண்ணில் பார்வை - முரண்அணி. எண்ணில் பார்வை - அளவில்லாத பல வகைப்பட்ட பார்வைமிருகங்கள். "பன்றியும் புலியு மெண்குங் கடமையு மானின் பார்வை" (652) என இவற்றை முகப்பிலே, வேட்டைக்குரிய "கொடுஞ்செவி ஞமலி", "வாரவலை" முதலியவற்றுடன் சேரவைத்துக் காட்டியது நினைவு கூர்க.

அரும்பு கொன்றை—என்பதும் பாடம். 71

721. கோடு முன்பொ லிக்க வுங்கு றுங்க ணுகு ளிக்குலம்
மாடு சென்றி சைப்ப வும்ம ருங்கு பம்பை கொட்டவுஞ்
சேடு கொண்ட கைவி ளிச்சி றந்த வோசை செல்லவுங்
காடு கொண்டெ ழுந்த வேடு கைவ ளைந்து சென்றதே ௭௨

(இ - ள்) வெளிப்படை. கொம்புகள் முன்னே ஒலிசெய்யவும், குறுகிய முக முடைய சிறுபறைகள் பக்கங்களிற்சென்று சத்திக்கவும், பக்கத்தில் பம்பைகொட்டவும், தொகையாகக்கூடிய கைத்தட்டுதலினுள்ள உளதாகிய சிறப்புடையஓசை செல்லவும் பெருந்திரள் கொண்டெழுந்த வேட்டுவக்கூட்டம் அதனைப் பலபக்கமும் வளைந்து சென்றது.

(வி - ரை) வேட்டையினை மேற்கொண்டுவந்த கூட்டம் வேட்டைக் காட்டினை அணுகி அதனுட்புகும் செலவின் சிறப்பினை இப்பாட்டாற்கூறிய ஆசிரியர், அதனை உவமையின்வைத்து வரும்பாட்டால் விரிக்கின்றார்.

**கோடுமுன்புஒலிக்க** - இயங்களினவகைகளிற கொமபுகள முன ஒலிததல்செயய **துறுங்கண் ... இசைப்ப** - **துறுங்கண்** - குறுகிய மேறபரபபு **துலம்** - இஙகுத தொகுதியுணாததிறறு. **மாடு சென்று இசைப்ப** - இவவகைப் பறை எநதியோா பக கஙகளிற சென று அவறறை முழககுவா. இசைப்பவாது செலலுதலைப பறையினமேல் ஏறறிக கூறினா. **பம்பை** - இருமுகமுடைய வாததிய வகை இவை மருஙகிற றாாகு செலலாது பககதது இசைததன. ஒலிகக, இசைபப, கொட்ட எனச செயபபாட்டு வினைகள செயவினைகளாகக கூறபபட்டன.

**சேடு** - கூட்டம் - திரடசி இஙகு அனேகா சோாநது கைவிளியோசைசெயதல் குறிததது. வேட்டைககலையிற சிறககப்பயிறசிபெறறவாகளாதலின அனேகாகூடி ஒழுங்குபெற ஒரேகாலததில குறிததஓசைதருமபடி கைதட்டி ஓசைசெய்யக கறறிருந தனா. இசை யாஙகுகளிற கையினுற றாளவொறறுபபோா பலரும ஒனறுபோல ஓசைசெயதல காணததககது இஙகு எனை இயஙகளின ஓசைகளைவிடச சிறநததெனை பாா இறுதியில வைதததோடு **கைவிளிச் சிறந்தவோசை** என்றுஙகூறினா. **விளி** - முதனிலைத தொழிறபெயா கைவிளியாகியஓசை. **கைவிளி** - கை தட்டுதல. நவீன ரிற சேனைவீராகள படையமைப்பிற செலலுமபோது காலஅடிவைககும ஓசை, எநதிய படையோசை முதலியன ஒழுஙகுபெறக காட்டிச செலலும முறை காணக (Military march). இது போனறதொரு பழககம இவ வேடாபால இருநததெனபது. **சேடு** - பெருமை எனபாருமுணடு

**காடு** - பெருநதிரட்சி "காயதத செஙகெலின காடு", "செநதாமரைக காடு" எனபனகாணக. **கொண்டெழுந்த**-அணுகிய. **வேடு**-வேடர்கூட்டம. ஆகுபெயர். "வேடு கொடுததது பாரெனு மிபபுகழ" எனற கமபா பாட்டும காணக.

**கைவளைந்து** - எலலாப பககஙகளிலும - சுறறிலும - முறறுகையிட்டாற போல வளைநது சூழ்நது கொமபு, ஆகுளி, பமபை, கைவிளி எனறிவறறின ஓசைகளுடன சூழநது சென்றனா எனக. பெரிய ஓசைகளுடன சூழதலால் முழை புதாமுதலிய மறைவிடஙகளிற பதுஙகியிருககும விலஙகுகள பயநதுவெளிபபட்டு ஓடும்போது அவற்றை வேட்டையாடுவா, ஓடுவதனுல் அடிச்சுவடுகண்டு அதறகுத தககவாறு செய வா. இது வேட்டையில முறசெயதொழிலகளில் ஒனறு. இதனை விலஙகு எழுப்புதல எனபா. 726 பாட்டுப் பாாகக.

**வேடர் கைவளைநது சென்றனர்**—எனபதும பாடம். 72

722\. நெருங்கு பைநத ருககு லஙக ணீடு காடு கூடநோ
வருங்க ருஞ்சி லைதத டக்கை மான வேடர் சேனைதான
பொருநத டாதி ரைகக டற்ப ரப்பி டைப்பு குமபெருங
கருநத ரஙக நீளபு னறக ளிநதி கன்னி யொத்ததே. ௭௨

(இ - ள்) வெளிபபடை நெருஙகிய பசிய மரககூட்டஙகளநீடிய காட்டினை அடைவதறகு நேர்வருகினற கரியவிலலேநதிய பெரிய கைகளையுடைய வலியவேடா சேனையானது பொருகினற பெரியஅலைகளையுடைய கடலினபரப்பினிடையே புகு கினற பெரிய கரிய அலைகளையுடைய நீளும புனலவாயநத காளிநதிநதி போனறது.

(வி - ரை) **நெருங்குபைந் தருக்குலங்கள்** - குறிஞ்சியிறபட்ட மலைசசாரற காடுக ளாதலின மரஙகள நெருஙகியும நீணடும வளாந்திருநதன. **குலங்கள்** - பலவகை குறித தது. **கூட** - கூடுமபடி **நேர்வரும்**-முனனாக கைவளைந்து சென்றது எனமுா; காட்டை வளைநது சுறறிச செலலினும அதனைககூடுவதனையே நோககுறிதது வருகினற எனக.

**கருமை** - வேடர்களுடையநிறம **சேனை** - வேட்டை என்பது படையெநதி விலஙகு களுடன போா புரிநது கொலலுதலே யாதலின சேனை எனமுர். போாவேடா என்ப தும காணக. **பொருந் தடந்திரை** எனற குறிப்புமது.

**பொருந் தடந்திரை...ஒத்ததே** - பெரிய கைகளில் வில் ஏந்திப் பல முகத்தாலும் காட்டுக்குள் புகுந்து மறையும் வேடர் கூட்டத்துக்குப் பலமுகத்தாலும் வளைந்து சென்று நேரே கடலினகத்துப்புகுமறையும் கரியநீரினையுடைய காளிந்திநதி உவமிக்கப்பட்டது. மெய்யும் வினையும் உருவும் பற்றிய உவமம். கரிய நீர் வேடர்நிறத்துக்கும், தரங்கம் அவர்கள் ஏந்திய விலவரிசைக்கும், பெருமை அவர்களது வடிவிற்கும், நதி கடல் புகுதல் அவர்கள் காடுபுகுதற்கும் உவமை

**களிந்தி கன்னி** - காளிந்தியாகிய நதி. யமுனை என்பர். நதிகளைக் கன்னிகளாகக் கூறுதல் மரபு. இந்நதியின் நீர் கருநிறங் காட்டுமென்றும், கங்கை நீர் அவ்வாறன்றி வெளியதாய்ப் பளிங்குபோலத் தெளிந்துள்ளதென்றும் கூறுவர். யமுனையும் கங்கையும் கூடு முகத்தில் இரண்டுங் கலந்த பின்னரும் நெடுந்தூரம்வரை இவ்வாறே காணப்படுமென்றும் கூறுப. இதனை இறைவனது திருநீறு மேற்கொண்ட வலப்பாகமும் அதனுடன் கலந்த உமையம்மையாரின் பசிய இடப்பாகமும் கூடியதற்குவமையாகக் காட்டினார் சேரமான்பெருமாணாயனார் "ஆடிய நீறது கங்கையுந் தெண்ணீர் யமுனையுமே, கூடிய கோப்பொத்த தாலுமை பாகமெங் கொற்றவற்கே" (பொன்வண்ணத்தந்தாதி - 90). காளிந்தி என்றது களிந்தி என நின்றது குறுக்கல்விகாரம். 73

723. தென்றி சைப்பொ ருப்பு டன்செ றிந்த கானின் மானினம்
பன்றி வெம்ம ரைக்க ணங்க ளாதி யான பல்குலந்
துன்றி நின்ற வென்ற டிச்சு வட்டி னொற்றர் சொல்லவே
வன்ற டக்கை வார்கொ டெம்ம ருங்கும் வேட ரோடினார். ௭௪

(இ - ள்) வெளிப்படை. தென்றிசையின் கண்ணுள்ள மலையோடுகூடிய காட்டில் மானினங்களும், பன்றிகளும், வெவ்விய மரையினங்களும் முதலாயின பலவகை விலங்குக்கூட்டங்கள் நெருங்கிக்கூடி நின்றன என்று அவற்றின் அடிச்சுவட்டினால் அறிந்துவந்து ஒற்றர்கள் அறிவிக்கவே, வார்களைத் தமது வலிய பெரிய கைகளிற் கொண்டு எப்பக்கத்திலும் வேடர்கள் ஓடினார்கள்

(வி - ரை) **பொருப்புடன் செறிந்தகான்** என்றது மலையுடன்கூடி மலையும் காடுமாய் உள்ள பிரதேசம். காளத்திமலைக்கு வடக்கேயுள்ளன பொத்தப்பிநாடும் உடுப்பூரும். அங்குநின்றும் வேட்டைக்குப்போந்த நாயனார் வேட்டைக்காட்டினின்று பலகாதங்கள் வந்து திருக்காளத்திமலையைக் கண்டார் என்று சரிதங்கூறுவதால் இவ்வேட்டைக் காட்டைப் பொத்தப்பியின் **தென்றிசைச் செறிந்த** காடு என்றார்.

**ஒற்றர்** - காடாய்பவர் - வேவுகாரர். **அடிச்சுவட்டின்** - அடிச்சுவடு கண்டு அதனால் அறிந்து. **செல்லவே** என்பது பாடமாயின் அவர் வேவுபார்த்துப்போக அதுகண்டு எனக். **கை** - கையில். **ஓடினர்** - துன்றிநின்றவை தப்பிஓடாவண்ணம் இவர்கள் விரைந்து ஓடினார்கள் என்பதாம். வேட்டையும் போர்முகமான செயலாதலின் போரிற்போல இதனிலும் ஒற்றர்கள்செயல்வினை உண்டு எனக்.

**வார்கோடு** - வார்கொண்டும், அதனுடன் பொருந்தும் வலைகொண்டும் செய்வனவற்றை வரும்பாட்டிற் கூறுவார்.

**எம்மருங்கும்** - நான்குபக்கங்களிலும் விலங்குகள் துன்றியசூழல் முற்றும்வளைந்து காவல் செய்யவேண்டியிருந்தமையாலும், அச்சூழல் யோசனைப்பரப்புடையதாயிருந்தமையாலும் விரைவுபற்றி எம்மருங்கும் ஓடினார். உம்மை முற்றும்மை.

**மரைக் குலங்கள்**—என்பதும் பாடம். 74

724. ஓடியெ றிந்து வார்பொ ரூக்கி யோச னைப்ப ரப்பெலாம்
நெடிய திண்வ லைத்தொ டக்கு நீளி டைப்பி ணித்ததுநேர்

கடிகொ ளபப ரந்த காடு காவல செய்த மைத்தபின்
செடித லைசசி லைககை வேடா திணண ஞர்மு னண்ணினர். ௭௫

(இ - ள்) வெளிபபடை ஒடி எறிநதும், வா ஒழுககியும, யோசனை அளவுளள காடடினபரபபுமுறறும நீணட திணணியவலையின பிணிப்புககளை நீணடவெளிகளிற கடடிக காணபார்அஞசுமபடி பரநதகாடடினை நோககககாவல்செயது முடிததபின, சிறுதூறுபோனற தலையையுடைய விறபிடிதத கையினராகிய வேடாகள் திணணனா முனபு வநதுசோநதனா.

(வி - ரை) ஒடி எறிந்து - காடடின மாககிளைகளை வாாபோக்க ஒழுஙகு காணுமபடி வெடடிப போககி மின்சாரக கமபிகள - தந்திககமபிகள் முதலியவையிடுவோா இடை யிற குறுககிடுமெ மாங்களையும கிளைகளையும கமபிகள நோ்செல்லும வழி காணும் பொருட்டு வெட்டி வீழததும வழககுங காண்க.

ஒடி - ஒடிததும வெடடியும வீழததும கிளைகள். இவறறை வார்போககிய ஒழுங கினைப பறறிக கீழே இட்டுவைபபதும காவலசெய முறையாம. ஒடிகளை அதறகும பயனபடுததுவா ஒடிததாலுளதாவது ஒடி எனபபடடது. முதனிலைத தொழிறபெயா. அரி - எனறது காணக 73-பாாகக ஒடியவெறிநதெனபது ஒடியெறிநதென விகார மாயிறறெனபாருமுளா.

வார்ஒழுக்கி - ஒடிஎறிதலால வாாகளை நோ ஒழுஙகாகப போககுதறகு வழியாயின மையின ஒழுக்கி எனற சொலலாற கூறினா இடையிடையே நீணட கோல்களை நடடு அவறறிலும, அவவொழுஙகிலே வேறு மாஙகள இருப்பின அவறறிலும, வாாகளைப் போககி இறுகக கடடுவா ஒடிகள இவவாறு வாாபிணிககும கோலாக நடுதறகும பயன படும.

யோசனைப் பரப்பெலாம் யோசனை எனனும அளவு முழுதும யோசனை என பது "அஙகுல மறுநான கெய்தி னதுகரங காமோா நானகு, தங்குத றனுவென ருகுந தனுவிரண டதுவோா தணட, மிஙகுறு தணட மானவிராயிரங குரோசத் தெலலை, பஙகமில குரோச நானகோ ரியோசனைப் பால தாமே" (கநதபுராணம- அணடகோசபபடலம-6) எனற திருபபாட்டா னறிக. யோசனைப் பரப்பெனபது அவவளவின சதுரம குறிபபது. சதுரமைல் எனறு நவீனர் வழஙகுவது காணக. யோசனை அகல நீளஙகொணட பரப்பினையுடைய காடு முறறும. இதுபறறி 752-ன கீழுரைததவையும பாாகக.

நெடியதிண்வலைத்தொடக்கு - யோசனைப பரப்பெலாஞ சுறறவேண்டுதலின நெடிய - நீளமுடைய எனறும, புலிமுதலிய பெருவிலஙகுகளும கடநதுசெலலாது காகக வேணடுதலின திண் எனறுங கூறினா. வலைத்தொடக்கு - வலைகளின பிணிப்புக கள-கடடுககள வலைக கயிறுகளை எனறும்,கயிற்று வலைகளை எனறுங கூறுவாருமுணடு

நீளிடைப்பிணித்து - வலைகள நீணடுசெலலினும யோசனையெலாம செலலப பல வலைகளைப பொருததவேணடியிருததலின அந்நீண்ட இடைகளைத தககவாறு கடடி

காடுநேர்காவல்செய்து என மாறறுக. கடி - அசசம கடிகொளப் பரநத - உட்புகுநதார் யாரும வழிமயஙகியும, விலஙகுஅஞசியும, பிறவாறும பயமுறுமபடி, பரப பும செறிவுமுடைய.

காவல் செய்தமைத்தல் - இது வேட்டைதொடஙகுமுன செயததகும இனறி யமையாத தொழில. வேடடைககாடடினின்று விலஙகுகள தபபிஓடாமற காவல் செயதல.

செடிதலை - எணணெயிடடு ஒழுஙகுபடுததபபடாது புதாபோனற செறிமயிரினை யுடைய தலை. சந்தநோககிச செடிததலை எனபது செடிதலை என நினறது.

காட்டை அணுகியவுடன் காடுவளைந்துசெல்லுதல், காட்டினுட் பலபுறமும் புகுதல், ஒற்றறிதல், வார்கொண்டோடியும் ஓடியெறிந்தும் வாரொழுக்கியும் வலை பிணித்தும் நோக்காவல் செய்தல் என்னும் இவை முன்செல்லும் ஏவலாட்களாகிய வேடர், வேட்டைவினை தொடங்குமுன் செய்வினைகளாம். இவற்றைச் செய்யுமுறையே இதுவரை (721—724) இந்நான்கு திருப்பாட்டானுங் கூறினார்.

இனி, அவ்வாறு காவல்செய்த காட்டினுட் புகுதல், நாய்களை ஏவித் துடி பம்பை கொட்டிக் கைவிளி வாயொலிகள் செய்து மாவெழுப்புதல், அவற்றால் மாக்கள் எழுந்து பாய்தல் ஆகிய வேட்டை தொடங்குமுன்னர் நிகழ் செயல்களை அம்முறையே மேல் வரும் (725—727) மூன்று திருப்பாட்டுக்களானும், அதன்பின் வேட்டைவினைவகைகளையும், அவற்றின் விளைவாக மாக்கள் படும் வகைகளையும் அம்முறையே அவற்றின் மேல்வரும் (728—735) எட்டுத் திருப்பாட்டுக்களானும் கூறுதல் காண்க.

**வேடர்** - முன் ஓடிச்சென்று காவற்றொழில் புரியும் ஏவலாளர்களாகிய வேடர்.

**முன் நண்ணினார்** - காட்டினுள்ளும் சுற்றியும் போய் வினைசெய்த அவ்வேடர் தம் தலைவராகிய திண்ணனாரின்முன்பு காவல் வைப்புத்தொழில் முற்றியதை அறிவிக்குமாறு அணைந்தனர். 75

*725. வெஞ்சி லைக்கை வீர ரும்வேட ரோடு கூடிமுன்
மஞ்ச லைக்கு மாம லைச்ச ரிப்பு றத்து வந்தமா
அஞ்சு வித்த டர்க்கு நாய்க ளட்ட மாக விட்டுநீள்
செஞ்ச ரத்தி னோடு சூழல் செய்த கானு ளெய்தினார். ௭௬

(இ - ள்) வெளிப்படை. தாம் விரும்பும் சிலையேந்திய கையினையுடைய வீரனாராகிய திண்ணனாரும் ஏனை வில்வேடர்களோடு கூடி, முன், மேகந்தவழும் பெரிய மலைச்சாரலிலே புறத்துவந்த விலங்குகளை அஞ்சி வெளிவந்து ஓடுமாறு செய்து பற்றுகின்ற நாய்களைப் பல புறத்தினும் விட்டு, நீண்ட செம்மையாகிய அம்புகளுடனே, காவல் செய்யப்பட்ட காட்டினுள்ளே புகுந்தனர்.

(வி - ரை) **வெஞ்சிலை** - பாரப்பெருவில் (711), திருக்கையிற் சிலையும் தாங்கி (776) என, விரும்பி ஏந்தும் பெருமையுடைய வில்லாதலின் **வெஞ்சிலை** என்றார். **வெம்மை** - விருப்பம். வெவ்விய - கொடிய என்றுரைப்பாருமுண்டு.

**முன் நாய்கள் விட்டு** என்று கூட்டுக. **முன்** - தமக்கு முன்பு விட்டு என்றும், முதலில் விட்டு என்றும் உரைக்க நின்றது.

**சரி** - சரிவு - சாரல். **புறத்து வந்தமா** - முழை, புதர் முதலியவற்றிலிருந்து வெளிவந்து துன்றிய விலங்குகளை. **அஞ்சுவித்து அடர்க்கும்**-பலபுறமும் ஓடியும் குரைத்தும் அச்சுறுத்தித் தாக்கிப் பற்றுகின்ற.

**நாய்** - 718 பார்க்க. **அட்டமாக விட்டு** - பிணித்த பாசம் அவிழ்த்துப் பலபுறமும் குறுக்காகவும் அருகாகவும் ஓடவிட்டு. **அட்டம்** - வேட்டைத் தொழிலாளருள் வழங்கும் குழூஉக்குறி. எட்டுத் திக்கினும் என்றுரைப்பாருமுண்டு.

**நீள் செஞ்சரம்-நீள்** - குறிவைத்த அளவிற்குச் சென்று நீளும். **செம்மை**-தனது வினைசெய்தற் றன்மையிற் பிழையாமை.

**சூழல் செய்தகான்** - "காடுகாவல் செய்தமைத்த" என மேற்பாட்டிற் கூறியபடி வலையிட்டுச் சூழப்பட்ட அந்தக் காடு. 76

726. வெய்ய மாவெ ழுப்ப வேவி வெற்ப ராய மோடிநே
ரெய்யும் வாளி முன்செ றிந்து கொண்டு செல்ல வெங்கணும்
மொய்க்கு ரற்று டிக்கு லங்கள் பம்பை முன்சி லைத்தெழக்
கைவி ளித்த திர்த்து மாவெ ழுப்பி னார்கள் கானெலாம். ௭௭

**(இ - ள்)** வெளிப்படை. (மேற்கூறியபடி விட்ட) கொடியவிலங்குகளை எழுப்பும் படிஏவி நாய்களை, வேடர்கூட்டம் ஓடி, நேரேவிடுத்தற்குரிய அம்புகளை முன்னே ஆராய்ந்து எடுத்துக்கொண்டுபோக, எவ்விடங்களினும் மொய்த்த குரலுடைய உடுக்கை களும் பம்பைகளும் முன்னே பேரோசைசெய்தெழ, அதனோடு கைதட்டியும் வாயி னால் உரப்பிக்கூவியும் காடெங்கும் பதுங்கியிருந்த விலங்குகளை அவற்றின் மறைவாகிய இருப்பிடங்களினின்றும் எழுப்பினார்கள்

**(வி - ரை) எழுப்ப ஏவி** - முன்னே அட்டமாகவிட்டனர். பின்னர் அவற்றைப் பதுங்கிய விலங்குகளின்மேல் ஏவினார்கள் ஏவியவற்றின் மேற்சென்று துரத்திப்பற்று தல் நாய்களின் இயல்பு. ஒற்றர்களை ஏவி என்றுரைப்பாருமுண்டு

**நேர் எய்யும் வாளி முன் தெரிந்துகொண்டு** - கொடிய விலங்குகளை எழுப்புகின்ற வர்கள், எழும்பும் அவை தங்கண்மேற் சினந்துபாயுமாதலின் அப்போது அவற்றை நேரே எய்துகொல்வதற்கு ஏற்றஅம்புகளை முன்னரே சித்தஞ்செய்துகொள்ளுதல் வேண்டுமாதலின், வாளி முன் தெரிந்து என்றார். **எய்யும்** - எய்யத்தகுந்த. **கொண்டு**- சித்தமாய எடுத்துக்கொண்டு.

**மொய்குரல் துடி - துடி** - இடைசுருங்கிய இருமுகக் கருவி. ஒருமுறை யிசைத்த விற் பலவோசை முழக்குமாதலின் **மொய்குரல்** என்றார்.

**பம்பை** - பெருமுகமாகிய இருமுகமும் பெருடலும் படைத்தது. துடிக்குலங் களும் பம்பைகளும் உம்மைத்தொக்கது இவ்விருவகையும் சேர்ந்தபோது பேரோசை செய்தலின் சிலைத்தெழ என்றார். **எழுதல்** - ஓசைமிகுதல்.

**கைவிளித்தும் அதிர்த்தும்** என உம்மை விரித்துரைக்க.

**அதிர்த்தல்** - வாயினால் உரப்புதல் கைவிளியினால் அதிர்த்து எனச் சேர்த் துரைப்பினுமாம். வேட்டைக் காட்டில் இம்முழக்குக்களோடு வாயினாலும் பலவகைப் பட்ட ஓசைபடக் கூவுதல் வழக்கு மிருகங்களின் ஓசைபோலக் கூவுதலுமாம்.

**கானெலாம் மா எழுப்பினார்கள்** எனக் கூட்டுக. மறைவிடங்களினின்றும் வெளிவராவிடின் விலங்குகளை வேட்டையாடுதல் இயலாமையின் அவற்றை அங்கு நின் றும் வெளிவரச் செய்தல் வேட்டையின் முற்செய்வினையாம். 77

727. ஏன மோடு மானி னங்க ளெண்கு திண்க லைக்குலம்
கான மேதி யானை வெம்பு லிக்க ணங்கள் கான்மரை
யான மாவ னேக மாவெ ருண்டெ ழுந்து பாய்முன்
சேனை வேடர் மேல டர்ந்து சீறி யம்பி னூறினார். எஅ

**(இ - ள்)** வெளிப்படை காட்டுப்பன்றிகளோடு, மான் வகைகள், கரடிகள், வலிய கலைமான் கூட்டங்கள், காட்டெருமைகள், யானைகள், வெவ்விய புலிவகைகள், காட்டு மரைகள் ஆகிய விலங்குகள் பலவாக வெருண்டெழுந்து சீறி முன்வந்து பாய்தலும் கூட்டமாகிய வேடர்கள் அவற்றின்மேல் அடர்ந்து சீறி அம்புகளினால் எய்தழித்தனர்

**(வி - ரை) ஏனமோடு** என ஏனத்தைப் பிரித்து முதலில்வைத்த சிறப்புப்பற்றி 693-ல் உரைத்தவை பார்க்க ஏனைவிலங்குகள் எல்லாம் ஏனம் வெளிப்படுதற்குத் துணையாயினமட்டில் நின்றொழிந்தனவன்றி இச்சரிதநிகழ்ச்சிக்கு அவற்றாலானதொன் றிலையாதலின் அவை அனைத்தையும் ஒருசேரத்தொகுத்துப் பின்வைத்து **ஆனமா அனேகமா** என்று எளிமைபெறக் கூறினார்

**மானினங்கள்** - கலைமான். **மான்** - பெண் மான் என்றும், **கலை** - ஆண்மான் என் றுங் கூறுவாருமுண்டு. 693 பார்க்க இவற்றுள் மானினம் 728 - 732லும், கலை 730 லும், மேதி 733லும், புலி, பன்றி 729லும், யானை, அரி 731லும் கூறியது காண்க. **எண்கு** - கரடி. **திண் கலைக்குலம்** - வலிய பெரிய நீண்ட கொம்புடைய கலைமான். **குலம்** - கூட்டம். இவை கூட்டமாகச் சேர்ந்து வாழுமியல்புடையன.

**கானமேதி** - காட்டெருமை. **வெம்புலி** - விலங்குகளில் மிகக்கொடியது புலியாம். **புலிக்கணங்கள்** - புலி வகைகள் சிங்கம், பெரும்புலி (வேங்கை), சிறுபுலி முதலிய இவைகள் கூட்டமாகச் சேர்ந்துவாழு மியல்புடையனவல்ல. ஆதலின் இங்குக் **கணம்** கூட்டம் என்றல் பொருந்தாது பல புலிகள் பல இடங்களினின்று பாய்ந்தன என்றலுமாம். **கான்மரை** - காட்டுக்குதிரை இங்குக் கூறிய விலங்குவகைகளே வேட்டாக்குத் தீங்குவிளைப்பன இவற்றை "மிக நெருங்கி மீளா" விலங்குகள் என முன்னர் (693)க் கூறினர் ஆனமா அனேகமாக ஏறுகெட்டது.

**வெருண்டு எழுந்து பாய** - மேற்கூறிய வகைகளால் எழுப்பப்பட்ட இவை பயந்தன, பின்னர்த் தமதிருப்பிடங்களினின்றும் எழுந்தன, பின்னர்த் தம்மை அடர வந்தார்மேற் பாய்ந்தன எனக் தம்முயிர்க்குக் கேடுநேரும்போது எந்தப்பிராணியும் அவ் விளைவு செய்தார்மேற் பாய்வது இயல்பு. **முன்** - முன் பாய எனக் இருந்த இடம்விட்டு முன்வந்து **முன்னூறினர்** என்று கூட்டி அவை தம்மேற் பாய்வதற்குமுன் அவற்றினை அம்பினால் எய்து வீழ்த்தினர் என்றலுமொன்று.

**சேனை** - 722 பார்க்க **மேல்**-அவற்றின்மேல் **நூறினர்**-கொன்று அழித்தார்கள்
**அம்பு நூறினர்**—என்பதும் பாடம். 78

மேலே 717 முதல் 727 வரை பதினொருபாட்டுக்கள் முடுகிய ஓசையுடைய எழுசீர்ச் சந்தவிருத்தங்களாய் எடுத்தபொருளுக்கேற்ற சந்தத்தில் அமைந்துள்ளன. (திருவாசகம் - திருச்சதகம் - "ஈச னேநீ யல்ல தில்லை" என்ற பகுதித் திருவாக்குகள் காண்க) இப்பாட்டுக்கள் சொல்லும் சீரும் ஒத்திசையாது வேட்டையில் விலங்குகளின் அங்கங்கள் துண்டப்படுவன போலத் துண்டித்திசைப்பன. இவை நாற்சீர்க்கலி விருத்தங்களாகப் பிரித்தலிடப்பட்டுச் சிலபதிப்புக்களில் காணப்படுகின்றன.

வேறு

728. தாளறுவன விடைதுணிவன தலைதுமிவன கலைமா,
வாளிகளொடு குடல்சொரிதர மறிவனசில மரைமா;
நீளுடல்விடு சரமுருவிட நிமிர்வனமிடை கடமா;
மீளிகொள்கணை படமுடலெழ விழுவனபல வுழையே. ௭௩

(இ - ள்) வெளிப்படை. கலைமான்(களிற் பல) காலறுவனவும், இடை துணிவனவும், தலை இறுவனவும் ஆயின, மரையினத்துட் சில உடலுட்பாய்ந்த அம்புகளோடு குடல் வெளியிற்சொரிய இறப்பன ஆயின, கூட்டமாக நெருங்கிய கடமாக்கள் நீண்ட வுடலினுள் வேடர்விட்ட அம்புகள் பாய்ந்து ஊடுருவிச்செல்லவே செயலற்றுப் பெரு வருத்தத்துடன் நிமிர்வனவாயின; பலமான்கள் வலியஅம்புகள் தைத்தலால் உடல் துள்ள விழுவன ஆயின.

(வி - ரை) இப்பாட்டிற் கூறியன மான் வகைகள் 726 பார்க்க. அறுபடுவன துணிபடுவன துமிபடுவன என்றபடி செயப்பாட்டுவினைகள் செய்வினையாக வந்தன.

**வாளிகளொடு மறிவன** - அம்புகள் உடலிற் றைத்த வழியால் குடல்கள் வெளியிற்சொரிந்தன அக்குடல்களோடு அம்புகளும் வெளியிற் சரிந்துபோந்தன என்பதாம்.

**நீள். . நிமிர்வன** - கடமான்கள் சிலவற்றில் நீண்டசரங்கள் உடலைஊடுருவிச் சென்றன, அவ்வருத்தத்தால் அவை உடல் நிமிர்ந்து வீழ்ந்தன **நீள்சரம்** என்று கூட்டியுரைத்தலுமாம். **உடல் நிமிர்தல்** - இங்கு இவற்றிற்கு இயல்பினுள்ள கவிழ்ந்த தன்மை நீங்கி வருத்தமிகுதியால் நீண்டு நிமிர்ந்து வீழ்தல் குறித்தது. **கடமா** மானின் ஒருவகை யானைகள் என்றுகொண்டு செயலற்றுகின்றன என்றுரைப்பாருமுண்டு. அஃதீண்டுப் பொருந்தாமையுணர்க. **கடமா** - காட்டுப்பசு என்பாருமுண்டு.

**உடல் எழ** - எழ - இங்குத்துள்ளி மேலெழுதல் குறித்தது.

இது முதல் 740 வரை உள்ள 13 திருப்பாட்டுக்களை இங்கு நாற்சீர்க்கலிவிருத்தமாக அலகிட்டவாறன்றி, "தாளாறு வனவிடை ஆணிவன தலைதுமி வனகலைமான" என்றபடி முதற்சீர் விளச்சீராகவும், பின் மூன்று சீர்கள் கருவிளச்சீர்களாகவும், இறுதிச்சீர் கருவிளங்காய்ச் சீராகவும் பிரித்து ஐஞ்சீர்க்கலிநிலைத்துறையாகக் கொள்ளுதலும் உரிய ஓசைநயம்படும். 79

729. வெங்கணைபடு பிடர்கிழிபட விசையுருவிய கயவாய்
செங்கனல்பட வதனொடுகணை செறியமுனிரு கருமா
வங்கெழுசிர முருவியபொழு தடலெயிறுற வதனைப்
பொங்கியசின மொடுகவர்வன புரைவனசில புலிகள். ௮௰

(இ - ள்) முன் இரு கருமா - முன்னே வந்த பெரிய பன்றிகள், வெங்கணைபடு. . கனல்பட - வெவ்விய அம்புபட்டுப் பிடர் கிழியும்படி விசையினால் உருவியதால் பிளந்த புண்வாயில் செவ்விய தீப்போன்ற குருதி பெருகி ஒழுக, அதனொடு கணை செறிய - அதன் மேலும் அம்புகள் நெருங்கிப் பாய்ந்து, அங்கெழு .பொழுது - அவை அங்கு எழும் சிரத்தின் வழி (அப்பன்றிகளையிழுத்து) உருவிச்சென்றபொழுது, புலிகள் அடல் எயிறு உற - (எதிர்பாய்ந்து திறந்தவாயுடன் ஓடிவந்த) புலிகளின் வலிய பற்களினிடையே சேர(தைக்க), அதனை புரைவன - (அவ்வப்புலி) அவ்வப்பன்றியை மிக் கெழுந்த சினத்தோடு கவர்வன போன்றன சில புலிகள்

(வி - ரை) கருமா - பிடர்கிழிபட - உருவிய - கயவாய - கனல் - விட - கணை செறிய - எழுசிரம - உருவியபொழுது - புலிகளி(ன்) - அடலெயிலுற - அவை அதனை-சினமொடு-கவர்வன - புரைவன - எனக்கொண்டு கூட்டி உரைத்துக் கொள்க

இருகருமா - பெரிய காட்டுப்பன்றிகள். "இழிவாகும் கருவிலங்கும்" (திருஞான- புரா - 78) சந்தநோக்கி இருங்கருமா என்றது இருகருமா என நின்றது.

கயவாய் - பிளந்த பெருவாய்தல் பெருந்திறப்பு புண்வாய்.

கணைசெறிய - கணைகள் மேலும்நெருங்க. சிரம் - தலையின் வழி. புலிகளின் அடல் எயிற்றின் உற அப்புலிகள் புரைவன (போல்வன) என்க.

அதனை - அதனதனை - அவ்வப்பன்றியை. ஒவ்வோர் பன்றியை ஒவ்வோர் புலி கவர்தல் போன்றதால் ஒருமையிற் கூறினார் கவர்வன - கவர்வனவற்றை. வினையாலணையும் பெயர். இரண்டாம் வேற்றுமைத் தொகை.

கனல் - கனல் போன்ற இரத்தம். தீ என உரைப்பாருமுண்டு.

ஒரு பன்றியின் பிடர் அம்பினாற் கிழிபட்டது, அதனாற் பிளவுபட்ட புண்வாய் தீ(குருதி) உமிழ்ந்தது, மேலும் அம்புகள் நெருங்கிப் பாய்ந்தன, அவை தலையின் வழி உருவி அப்பன்றியையும் இழுத்துக்கொண்டு எதிரே பாய்ந்து வாய்திறந்து ஓடி வந்த புலியின் பற்களிடை ஊடுருவின, இவ்வாறு இப்பன்றி புலி வாயினிடத்து அம்பினால் ஈர்த்துச் செல்லப்படுதல் எதிர்வந்த புலி அதனைப் பாய்ந்து கவர்வதுபோன்றிருந்தது இவ்வாறு சில புலிகள் இருந்தன என்பதாம் 80

730. பின்மறவர்கள் விடுபகழிகள் பிறகுறவயி றிடைபோய்
முன்னடுமுக மிசையுருவிட முடுகியவிசை யுடனக்
கொன்முனையடு சரமினமெதிர் குறுகியமுக முருவத்
தன்னெதிரெதிர் பொருவனநிகர் தலையனபல கலைகள். ௮௧

(இ - ள்) பல கலைகள் - பல கலைமான்கள், பின் மறவர்கள்.... பிறகுற - பின்புறத்தினின்று மறவர்கள் எய்த அம்புகள் தமது உடலின் பின்பாகத்திற் றைக்க; வயிறிடை....உருவிட - (அந்த அம்புகள்) அவற்றின் வயிற்றினிடை போய் முன்புறம் முகத்தினடுவில் உருவிட, முடுகிய...சரம - மிக வேகத்துடன் விடப்பட்ட வேட்டை

முகத்தில் அடல்வல்ல அந்த அம்புகள் ; இனம் உருவ - அவ்வாறெய்யப்பட்ட கலை மானின் இனமாகிய எதிரேஓடிய மானின் நெருங்கிய முகத்திலும் தைத்து அதனையும் ஊடுருவ, தன.. தலையன - (அவ்விரண்டு மான்களும் ஒன்றை யொன்று)தான் தான் எதிர்முட்டிப் போர் செய்கின்றன போன்ற தலைகளை யுடையவாயின.

**(வி - ரை) பின்** - பின்புறமிருந்து **மறவர்கள்** - மறம்புரியும் வேடர். பின்புறம் தாக்குமாறு பின்னின்று படைவிடுதல் அறமன்று, அது மறமாம் பின்காட்டி ஓடுகின்றார்மீது படைதொடுதல் கூடாதென்பது போர் நீதிகளில் ஒன்று. இங்கு இவ்வேடர் அவ்வாறன்றிப் பின்காட்டிய மான்களின்மீது பின்னிருந்து அம்பு எய்தனராதலின் மறமேசெய்தார் என்ற குறிப்புப்பட **பின் மறவர்கள் விடுபகழிகள்** என்றார். இவர்கள் போலல்லாது திண்ணனார் பகை விலங்குகளின் எதிர்நின்று போர்செய்தார் என்பார் **குரிசில் முன்விடு சரம்** என மேல்வரும் பாட்டிற் பாராட்டிக் கூறியதும் காண்க.

**பிறந்து** - உடலின் பின்புறத்திற் றைத்துப் பொருந்த.

**முன் நடுமுக மிசை உருவிட** - முன்புறம் முகத்தின் நடுப்பாகத்தின் மேல்வந்து உருவ. **முகத்தின் நடு** எனக. முன்பின்னாகத் தொக்க ஆறாம்வேற்றுமைத் தொகை.

**முடுகிய விசை** - மிக்க விசை. **அக் கோன்முனை அடுசரம்** - கொல்லுலையில் வடித்துக் கூர்மையாக்கிய அடுகின்ற அம்பு என்பாருமுண்டு.

**இனம்** - தம் இனமாகிய கலைமான். **எதிர்துறுகிய முகம் உருவ** - எதிராக ஓடி வந்து கூடிமுட்டிய முகத்திலே தைக்க. **தான** என்பது **தன்** எனக் குறுகிநின்றது அதனை அடுக்கியுரைத்துக் கொள்க. 81

731\. கருவரையொரு தனுவொடுவிசை கடுகியதென முனைநேர்
குரிசில்முன்விடு மடுசரமெதிர் கொலைபயில்பொழு தவையே
பொருகரியொடு சினவரியிடை புரையறவுடல் புகலால்
வருமிரவொடு பகலணைவன வெனமிடையுமவ் வனமே. ௮௨

**(இ - ள்)** கருவரை . பொழுது - கரியமலை ஒருவில்லுடனே ஓடிவந்ததென்று சொல்லும்படி போர்முகத்தில் நேர்வந்த அண்ணலாராகிய திண்ணனார் முன்னுல் எதிர்த்துநின்று விடுகின்ற அம்புகள் எதிர்ப்பட்ட விலங்குகளைக் கொலைசெய்கின்ற போது, அவையே......புகலால் - அவை போர்செய்யும் யானைகளோடும் கோபமிக்க சிங்கங்களினிடையே இடைவெளியின்றி அவற்றினுடல்களிற் புகுதலால், வருமிர வொடு அவ்வனமே - அவ்வனம் பின்வரும் இரவுகளுடன் பகல்கள் சேர்ந்தாற்போல மிகும்.

**(வி - ரை) கருவரை** கரியமலை திண்ணனார்க்கு உவமானம். "மணிநீல மலை ஒன்று" (701) என முன்கூறியதும் காண்க.

ஒரு - நடுநிலைத்தீபம் ஒருகருவரை - ஒருதனு(வில்) எனக

**வரைதனுவொடு விசை கடுகியதென** இல்பொருளுவமை. **ஒருதனுவொடு-தனு**-உடம்பென்று கொண்டு கரியமலையொன்று உடல் பெற்றுவந்ததுபோல என்ற குறிப்புப்பொருளும் காண்க "மணிநீல மலையொன்று வந்ததென்ன" (701) என்றது காண்க **விசை கடுகியது** - ஒரு பொருட் பன்மொழி மிகுதி குறித்தது. மிக்கவேகமாய் வந்தது. என் உவமஉருபு

**முனை** - போர்முகம் வேட்டை முனை என்பர் **குரிசில்** - பெருமையையுடையார் - திண்ணனார் **எதிர்** - எதிரேநின்று

**முன்விடும் பயில்பொழுது** - மேற்பாட்டில் மறவர்களது சிறுமையும் மறமும் உடைய வேட்டை கூறிய ஆசிரியர் இப்பாட்டில் திண்ணனாரது பெருமையும் போர் அறமுமுடைய வேட்டையினை கூறுகின்றார் அவர்கள் தமது தகுதிக்கேற்பப் பன்றியும் மானும் கலையும் என்ற சிறுவிலங்குகளை எய்கின்றார்கள், இவர் யானை, சிங்கம்

என்ற பெருங்கொடுவிலங்குகளை எய்கின்றார், அவர்கள் அவற்றின் பின்னிருந்து புரைபட எய்ய இவர் புரையற முன்னின்று எய்து வீரப்போர் செய்கின்றார், இவர்விடும் அடுசரம் தவறாது எதிர்த்துக் கொலை செய்தேவிடும், என்பன முதலிய கருத்துக்கள் காண்க.

**கொலை பயில் பொழுது** - கொன்றே விடுவனவாக, அப்பொழுது **அவையே புகலால்** என்று கூட்டுக.

**பொருகரி - சினஅரி** - அவ்வவற்றுக்கேற்ற அடைமொழி தந்து கூறியதுகாண்க. கரி போரில்வல்லது; எத்தனை நாள்களாயினும் சலியாது முனைந்து உயிர்போம் வரை போர்புரியும் தன்மையுடையது அரி சினம்மிகுப்பாயும் தன்மையுடையது செங்கண் வாளரி என்றதும் பிறவுங்காண்க.

**இடைபுரையற அவையே உடல் புகலால்** - வேகத்தால் இடையீடின்றி அம்புகள் அவற்றின் உடலிற் புகுதலாலே **இடைபுரைஅற** - இடையீடில்லாது தொடர்பாக. இடையே குற்றமற என்ற குறிப்புமாம் இவ்வாற்றால் பல யானைகளும் பல சிங்கங்களும் பட்டு வீழவே, அந்தக் கரியயானைகளும் வெளிய சிங்கங்களும் பக்கங்களில் வீழ்ந்துள்ள தோற்றம் இரவோடு பகல் கூடியதைப்போன்ற தென்றார் பெருவிலங்குகளாதலின் இவற்றை வீழ்த்தத் தொடர்பாய பலவலிய அம்புகள் எய்தல்வேண்டும்.

**அவ்வனம் வரும் இரவோடு பகல் அணைவன என மிடையும்** - என மாற்றுக. **மிடைதல்** - நெருங்குதல் - மிகுதல் இவ்வேட்டை நிகழ்வது பகற்போதாதலின் இனி அடுத்து வருவது இரவாம் ஆதலின் **வருமிரவு** என்றார் **பகல்** - பகற்காலம் பகல் கழியவே இரவு அணையும். பகலும் இரவும் உடன் அணைவதில்லையாதலின் இல்பொருளுவமம். திண்ணனார் தமக்கு உவமையில்லாதவர்; இவர் செயலின் விளைவும் உவமையில்லாததாம் என்பது குறிக்க இப்பாட்டில் **வரைதனுவோடு கடுகியதும், இரவோடுபகல் அணைவதும்** என்ற இரண்டும் இல்பொருளுவமங்களாக ஆசிரியர் வைத்தனர் போலும். அன்றியும் இங்குத் திண்ணனார் காலம் என்னும் தத்துவக்கட்டினைக் கடக்கும் நிலையின் விளங்குதலால் இரவும் பகலும் என்ற நாட்கூறுபாடாகிய காலம் அவர்க்குக் கீழ்ப்பட்டு நிற்பது என்பதும் குறிப்பாம் பகலும் இரவும் ஒன்றுகூடாது ஒன்றன்பின்ஒன்றாய் மாறிமாறி வருவனவாம். அதுபோலக் கரியும் அரியும் ஒன்றற்கொன்று பகையுடையன இவ்வேடர் துரத்துதலாகிய செயற்கையாற் சேர வந்தனவேயன்றி இயற்கையாற் சேர்ந்தனவல்ல இயற்கையாற் சேராத இரவும்பகலும் ஈண்டு இதுபோலவே செயற்கையாற் சேர்ந்தனபோல என்று பின்னரும் கூறுகின்றது காண்க. விளக்கு முதலியவற்றால் இரவு பகல் எனப்பட நிற்கும். 778, 779, 780 பாட்டுக்கள் பார்க்க. வெளிநின்ற புறவிருள் தீபமாமரங்களாலும், வீட்டின் நின்ற புறவிருள் மணிவிளக்கொளிகளாலும், அகவிருள் ஐந்தடக்கிய பெரியார்தம் சோதியாலும் நீங்கின (780) என்று குறித்தமையும் இங்குக் காண்க.

**அணைவன** - இரவொடு பகல் அணைவன. சாதியொருமையாதலிற் பன்மைவினையாற் கூறினார் 82

732. நீளிடைவிசை மிசைக்குதிகொள் நெடுமுகிற்றொட எழுமான
றாளுறுகழன் மறவர்கள்விடு சரநிரைதொடர் வனதாம
வாளவிடுகதிர் மதிபிரிவுற வருமெனவிழு முழையைக்
கோளொடுபயில் பணிதொடர்நிலை கொளவுளவெதிர் பலவே. ௮௩

(இ - ள்) **நீளஇடை விசை...எழுமமான** - நீண்ட ஆகாய வெளியில் விசையோடு மேலே குதிக்க நெடுமுகில்களைத் தொடும்படி எழுகின்ற மான்களை, தாள் உறுகழல்... தொடர்வனதாம் - காலிற்பொருந்திய வீரக்கழலையுடைய மறவர்கள் விடுகின்ற அம்பு

வரிசைகள் தொடர்கின்றவை, வாள்விடு கதிர்மதி விழும் உழையை - ஒளிவீசும் கதிர்களையுடைய மதியைப் பிரிவுற்றேரு மென்று (அந்த மதி மண்டலத்தினின்றும்) கீழே விழுகின்ற மானை, கோளொடு பயில்பணி தொடர்நிலை - பீடிக்கின்ற தன்மையோடு பயில்கின்ற இராகு என்ற பாம்பு தொடர்ந்து வருகின்ற நிலைமை, கொள் உள் எதிர் பலவே - எதிர்க்கக் காண உள்ளன பலவாம்

**(வி - ரை) துதிகொள் எழும் மான்** - மான்கள் வெருண்டு மேற்கிளம்பித் துள்ளும் இயல்புடையன. அதனோடு இங்கு வேடர்கள் பல பக்கமும் சூழ்ந்து ஆர்த்தும் நாய்களை ஏவியும் வெருட்டுதலால் எங்கும் ஓடிப் போக இயலாமல் மேலே துள்ளிக் குதித்தன.

**நெடுமுகில்தோட** - விண்ணில் தாவி மிக உயரமாய் என்றபடி

**மான்** - மான்களை. இரண்டனுருபு தொக்கது. மான்களைத் தொடர்வன எனக.

**வாள்விடு கதிர்மதி** - மிக ஒளிவீசும் கதிர்களையுடைய முழுமதி முழுமதி நாள்களே மதியை இராகு பீடிக்கும் நாள்களாதலின் **வாள்விடுகதிர்** என்றார்

**பிரிவுற வரும் என விழும் உழை** மதிக்குவந்த பீடை தன்னையும் பீடிக்குமோ என்றஞ்சி அதனைவிட்டு வெளிவந்துவிடநேருமென் றெண்ணியது போலக் கீழே வீழ்கின்றமான். **உழை** - மான் சந்திரனில் தோன்றுகின்ற கறையை மான் என்பதும் ஒரு வழக்கு. அதனை முயல் என்பதும் உண்டு. வருதும், வருவோம் (வந்துவிடுவேம்) என்பது **வரும்** என விகாரமாயிற்று என்பர் மகாலிங்கையர்.

**கோளொடு பயில்பணி - கோள்** - கொள்ளுதல் - பிடித்தல் கொள் - பகுதி. முதனிலைதிரிந்த தொழிற்பெயர் பிடித்தலே தொழிலாகப் பயிலும் பாம்பு. **பணி** - பாம்பு - இராகு. **கோள்** - நவக்கோள் எனவும், **ஒடு** - ஏழாம் வேற்றுமைப் பொருளில் மயங்கி வந்த மூன்றன் உருபு எனவுங் கொண்டு, நவக்கோள்களில் ஒன்றாகப் பயில்கின்ற என்றலுமாம்.

**தொடர்நிலை கொள்** - தொடர்கின்ற நிலைமைபோலக் காண. **எதிர் பலஉள** எனக இவ்வாறு எதிரே பல மான்கள் உள்ளன. இராகுகேதுக்கள் என்னுமிரண்டு பாம்புகள் சந்திர சூரியர்களைப் பிடித்து மறைக்கும் சரிதம் காந்தம் முதலிய மா புராணங்களுட் காண்க அண்டகோளகையின் சூழலிலே, நாம் காணும் மதியும் ஞாயிறும் நமது பூமியாகிய அண்டத்துக்கு நேர்கோட்டில் வருங்காலத்து ஒன்றின் நிழல் மதியின்மேல் அல்லது ஞாயிற்றின்மேல் பட்டு அதனை மறைக்கும் அந்நிழலின் மறைப்புக்களே சந்திர சூரிய கிரகணங்கள் எனப்படும் என்று நவீன வானசாஸ்திரிகள் கூறுவர். இதுகண்டு நம்மிற்பலர் இதுபற்றிய புராண சரிதங்களில் அவநம்பிக்கை கொள்கின்றனர் மதியும் ஞாயிறும் பூமியும் முதலிய அண்டங்களின் வட்டங்களையும் இவை ஓடிச் சுற்றிவரும் சுழற்சிநிலைகளையும் நம்முன்னோர் அறிந்துகணக்கிட்டு இம்மறைப்புக்களை முன்னதாகக் குறிக்கவல்லராயினர் இல்லையேல் பஞ்சாங்கங்களில் இந்நாளும் நேரமும் குறித்துச்சொல்லுதல் இயலாதன்றோ ? இவற்றைக் கணக்கிட்டுக் கொண்டதோடு இவற்றைப்பற்றி நவீனர் காணாத வேறுபலவுங் கண்டனர் இவற்றின் குணங்களையும் இம்மறைப்புக் காலங்களில் இவற்றின் சத்தியால் மக்களுக்கு நேருவுள்ள கேடுகளையும் அறிந்தே இவைகள் விஷத்தன்மையுடையன என்று காட்ட இவற்றைப் பாம்புகளாகவும் காட்டினர். ஆனால் தேவர்களும் அசுரர்களும் பாற்கடல் கடைந்து அமிர்தம் பெற்றுப் பங்கிட்டு உண்ணும்போது கலாம்விளைய அதனில் இராகு கேதுக்கள் உண்டாகி மதியையும் ஞாயிற்றையும் பீடிக்கலாயினர் என்றது புராண வரலாறன்றோ ? எனின், ஆம் அதுவும் உண்மையே அது இவ்வண்டங்களுக்குரிய அதிதெய்வங்களின் நிலை இத்தெய்வங்கள் நம கண்ணுக்குப் புலப்படாத காரணங்கொண்டு இவை இல்லை என்றல் கூடாது இவற்றிற்குரிய மந்திரங்களின் மூலம் இவைகளின் சத்திகள் வெளிப்பட்டு உரிய பலன்றருதல் கண்கூடாகலின் இச்சரித உண்மையும் பெறப்படும். இம

மறைப்புகளைச் செய்யும இராகு கேதுககளைச் சாயாகிரகஙகள், நிழறகோளகள எனபா காணுககிரகம, காநதுறைகோள (பெருங - உஞசை - 58 - 57) எனபனவும காணக. இவையெலலாம அவவககலைகளில் வலலாபாற் கேட்டுத தெளிக

**மதி பிரிவுற வரும்என விழும்உழை** - தற்குறிபபேறற அணி விழும் உழையைப் பணி தொடர்நிலை உளதேன எனறது இலபொருளுவமை. கீழிருநது உயரககிளமபி விழும் மானினை மேலிருநது விழும மானுகவும், மானைக குறிவைதது இடைவிடாது தொடாநது எயயபபடும அமபுவரிசையைப பாமபாகவும கூறியது தறகுறிபபேறறம.

**வயவர்கள் விடு—பரிவுற—பிரிவற**—எனபனவும பாடஙகள். 83

733. கடலவிரிபுனல் கொளவிழுவன கருமுகிலென நிரையே
படாவொடுசெறி தழைபொதுளிய பயிலபுதலவன மதனமே
லடலுறுசர முடலுறவரை யடியிடமல மரலான
மிடைகருமரை காடிகளொடு விழுவனவன மேதி. அ௩

**(இ - ள்)** அடல உறுசாம உடலஉற - அடுகினற அமபுகள் உடலிற றைததலால்; வரை அடியிடம அலமாலால - மலைசசாரிவில அடிநிலை கொளளாது சுழலுதலால்; நிரையே படாவொடு வனம அதனமேல - வரிசையாகப படாநது செறிநத தழைகள நிறைநத நெருஙகிய புதாகளையுடைய அககாட்டினமேல்: கடல விரிபுனல் . முகிலென - கடலிற பாநத நீரைககொளள வீழநது படிகினற கரிய முகிறகூட்டம போல; மிடைகருமரை... வனமேதி - கூட்டமாகிய கரிய மரைகளும காடிகளும எனற இவற றுடனே காட்டு எருமைகள வீழவனவாயின

**(வி - ரை)** சாம உடல உற - அலமாலால் - புதல்வனமதனமேல - கடல புனல கொள கருமுகில விழுவன என - மரை காடிகளொடு - வனமேதி - விழுவன எனறு கூட்டி உரைததுககொளக

**நிரையே புதல்வனம் அதன்மேல்** - வரிசைபெறப படாநது செறிநததழை நிரமபிய பசிய புதாகளையுடைய காடு இதனைக கடலுககு உவமிததாா **நிரை**-வரிசை-கடலலைககும, **செறிதழை பொதுளிய** நிலை - கடல நீருககும, **கருமரை - காடி** - (கரிய) **வனமேதி** இவை கருமுகிலகளுககும உவமிககபபட்டன. **புதல்** - பெருந தூறுகள - புதாகள **உடல்உற** - உடல உறுதலாலே **அலமருதல்** - வருநதுதல-சுழலுதல **வரை இடம் அடி அலமாலால்** எனக. **கருமரை** - காட்டுககுதிரை எனபா "கானமரை" - (727) கருமான எனபாருமுணடு **நிரையே விழுவன** எனறு கூட்டியுரைபபினுமாம.

734 பலதுறைகளின வெருவரலொடு பயில்வலையற றுழைமா
வுலமொடுபடா வனதகைவுற வுறுசினமொடு கவாநாய
நிலவியவிரு வினைவலையிடை நிலைசுழல்பவா நெறிசோ
புலனுறுமன னிடைதடைசெய்த பொறிகளினள வுளவே. அ௫

**(இ - ள்)** பலதுறைகளில படாவன - பல வழிகளினினறும கட்டிய வலைக ளறுமபடி பயததோடு றுழைகினற விலஙகுகள கலவழியிற செலல முறபட்டவறறை, தகைவுற கவாநாய - தடைபபடுமாறு பொருநதிய கோபததோடு பிடிககினற நாய கள, நிலவிய விருவினை மனன - பிறபபிறபபுககளிற கட்டுகினற இருவினையாகிய வலையினிடையிற பட்டுத தஙகிலை கலஙகிச சுழலகினறவாகளுடைய நனனெறி சோ மெயயறிவிற செலலும மனததை, இடைதடை செயத பொறிகளின அளவு - (அவ வாறு செலலவொட்டாது) இடையிலே தடைசெயத ஐமபொறிகளைப போல, உளவே - உளளனவாம.

(வி - ரை) பயில்வலையற - உலமொடு - மா படாவன - தகைவுறக கவாநாய, இரு வினை வலையிடை - சுழலபவா - நெறிசோ மனனை - இடைதடை செயத பொறிகளின அளவு - உள எனறு கொணடு கூடடிமுடிகக

**பல துறைகளின் . நுழை** - விலஙகுகள பலவழிகளினினறும தப்பி ஓட முயன றன , எஙகும் அவற்றுககு அபாயமே எதிாபபடப பயநது வலைகளை அறுததுககொணடு வெளிபபட வலைகளினூடே நுழைகினற **உலமோடு - ஒடு** - எழனுருபுபபொருளில் வநதது.

**தகைவுற** - தடைபட - **தகைதல்** - தடுததல "யாஞசெய தவமினறு தடுதத தெனனத தகைநதுதான தரிதத தெனறு" (363) **உறுசினம்**-இயல்பானும, வேடடை யிறறப்பியோடும விலஙகினைக கணடபோது அதனமேல எழும வேகததானும உறற கோபம. **கவர்** - கௌவிப பறறுகினற **மாவும், நாயும்**-சாதியொருமைகள **நாய்** என னும எழுவாய **உளவே** எனப் பனமைவினை கொணடது

**நிலவிய இருவினை வலையிடை** - நல்வினை தீவினை யெனனும இருவினைகளே உயிாகளைப பிறபபு இறபபுககளுககுடபடுததி மீளமீள உலகில வநது போய நிலவச செயவன "இழைககுமவினைப பயனசூழநத விபபிறவிக **கொடுஞ்சூழல்**" (மானக கஞ - புரா - 11) எனறது காணக தீவினை பாவததுககேதுவாகி நரகததுனபததுட் படுததி மீளபபிறவியிற செலுததும அதுபோலவே நலவினையும புணணியததுககேது வாகிச சுவாகக முதலிய இனபம நுகாவிதது மீளபபிறவியிறசெலுததும.எனவே,இவை யிரணடும பிறவிககேதுவாகிச் சுவாகக முதலியவறறிற சுழலவிதது உயிாகளைக கடடுக குள அகப்படுததுவனவாதலின **இருவினை வலையிடைநிலை சுழல்பவர்** எனறாா. "ஒருவ னுககு ஞானததைத தடுததுப பநதமுறுததுதறகட பொனவிலஙகும இருபபுவிலஙகும போலத தமமுட் சமபபடுததுணரபபடுவனவாகிய அறமபாவ மிரணடும சரியை முதலிய தவஙகளானே நோாக ஒததால" எனவும, "வேளவி முதலாயின எலலாம அழி தன மாலையவாகிய காமியஙகளைப பயபபனவனறித தததுவஞானததைப பயவா" என வும, "அவை ஞானததைப பயவாமை மாததிரையேயனறித தீவினைபோல அது நிகழ வொடடாது தடைசெயது நிறறலு முடைமையின அவறறது கழிவே ஈணடைககுக காரணமாவதெனபாா இசைததவிரு வினையொபபி லெனறுங கூறினா" எனவும சிவ ஞானபோதம (8 - 1) "பசிததுணடு" எனறவெணபாவினகீழ எமது மாதவசசிவஞான சுவாமிகள உரைததருளியவை காணக "இருளசே ரிருவினை" எனறாா திருவளளு வா "அறமபாவ மெனனு மருஙகயிறறாற கடடி" எனறு மணிவாசகபபெருமானும ஒருஙகுவைதது இவறறை வலை எனக காடடியிருததல காணக.

**நிலை சுழல்பவர்** - நிலைகலஙகித துனபததினினறும விடுதிபெறும வழியறியாது பலபுறமும சுழலகினறவாகளுடைய. சுழலபவரது மனன என ஆறனுருபு விரிகக

**நெறிசேர் புலனுறுமனன்-நெறி** - நனனெறி செலல வேணடிய நெறி அதுவே யாதலின, இருவினை வலை எனறு ஆஙகு அடைமொழி தநது குறிதத ஆசிரியா ஈணடு அடைமொழியினறிக கூறினா. "நெறியைப படைததா னெருஞசில படைததான, நெறியில வழுவி னெருஞசினமுட பாயும" எனற திருமநதிரமுங காணக. **புலன்உறு மனன்** - நலவினை வசததால நறபுலம - மெயயறிவு - பெறும மனம.

**படர்வன** எனற உவமேயததினும, **மனன்** எனற உவமானததினும ஒறறுமை யுற இரணடனுருபு தொககவைதத அழகு காணக **இடை** - நெறி சேரும இடையில் **தடைசெய்த பொறிகள்** - அவவாறு மனன நனனெறியிற போகாமற றடுதத ஐமபொறி கள **அளவு** - உவம உருபு. பொறிகளைப போல நனனெறி செலலும மனததைத தடுதத ஐமபொறிகளைப போனறன நாயகள எனறுவமிததாா.

நாய பசையறற எலுமபைக கறிதது, அதனால தன வாயில ஊறுபபடடு, அதனினின றுமவரும தன இரததததைத, தனகேடடினை எணணாது அவவெலுமபினினறுங

கிடைதத இனபமாக எணணி உணடு மகிழும. உணணறகுரிய வேறு நறபொருளிருகக அவறறை உணணாது உணணத தகாத மலததை உணணும, தான தினறு கககிய சோறறைத தானே மீள உணணும இதுபோலவே உயிர்களும பொறிகளால வரும கேடுதரும அனுபவஙகளை யினபமெனறு மயஙகி யனுபவிததது மகிழவன, அனுபவததிற குரிய நலல சிவானுபவம உளதாகவும உலகானுபவஙகளாகிய மலஙகளைச சுவைதது கிடபபன; அனுபவிததுக கழிதத மல அனுபவஙகளை மீளமீளத தாமே அனுபவிபபன "உணடதே உணடு முடுததே யுடுதது மடுததடுத துரைததே யுரைததுங, கணடதே கணடுங கேடடதே கேடடுங கழிநதன கடவுளா லெலலாம" எனபது பட்டினததடிகள திருபபாடடு இககருததுககள பறறி நாயேன, நாயனேயேன எனறு பெரியோர உவமிபபது மரபு. இஙகு ஈனனெறியிற புகாது தடுககு மளவிறகு நாயகளை உவமிததார.

வேடாகள சீறி யமபு நூறி விலஙகுகளைக கொலலும வேடடை வினையை ஒருபாட டாற (728) கூறிய ஆசிரியா, அவவேடடைவினையை வேடடைககாட்டின வெளியே நினறு காணுமொருவனது காட்சியாக வருவனவறறை (729 - 734) ஆறு பாடடுகக ளாற கூறுகினறார. அமபுபடடுப புலிவாயிற சோநத பனறியைப புலி கவர்வன போனற (729) தெனறதும, எயயபபடட கலைகள எதிரெதிர பொருவன போலவன (730) எனறதும, உலகநிலை உவமககாடசி இரவொடு பகல் அணைவன என (731), உழையைப பணி தொடா நிலைகொள (732), கடலபுனல கொளவரு முகிலென (733), எனறவை கவிநிலை உவமககாடசி இபபாடடில நாயகள மனனிடை தடைசெயத பொறிகளினளவுள (734) எனறது ஞானநிலை உவமககாடசி. "நிருவிகறபமாயக காணடலும, இரட்டுறக காணடலும, தெளியக காணடலும எனக காட்சி மூவகைப படும இமமூனறும அதி பககுவமுடையாககுக கேடட மாததிரையே ஒருஙகு நிகழு மாயினும ஏனையோாககுக கேடடல சிநதிததல தெளிதல எனனுஞ சோபான முறை யானனறி நிகழாமையின" என எமது மாதவச சிவஞானசுவாமிகள சிவஞானபோதத துரையிற (9-ம சூததிரம) கூறிய பொருளை இஙகுச சிநதிகக.

குருதியும கொலையுமே நிறைநத வேட்டைக காடடினும இவவாறு ஞானமெயந நெறிசோ பொருளைக கணடு காடடுதல ஆசிரியாபெருமானது தெயவமணககுஞ செய யுளி னியல்பாமெனக. "நிலைபபட்ட மெய்யுணாவு நோபட்ட போதில, அலைபபட்ட ஆாவமுதற குறறமபோ லாயினா" (634) எனறு போாககளததிற காட்டியதும இஙகு நினைவுகூாக. 85

*735. துடியடியன மடிசெவியன துறுகயமுனி தொடாரா,
வெடிபடவிரி சிறுகுருளைகண் மிசைபடுகொலை விரவாா;
அடிதளாவுறு கருவுடையன வணைவுறுபிணை யலையார்;
கொடியனவெதிா முடுகியுமுறு கொலைபுரிசிலை மறவோா. ௮௬

(இ - ள்) கொடியனவெதிா . மறவோா - கொடிய மிருகஙகளை எதிராகச் சென்று எதிாதது ஓடியும அவறறை மிகவும கொலைசெயகினற வில வேடாகள, துடியடியன தொடாரா - உடுககையையொதத காலகளுடையனவும மடிநத காதுகளையுடையனவும ஆகிய நெருஙகி வருகினற யானைககனறுகளினமேல வேடடைவினை தொடர மாடடாாகள, வெடிபட விரவாா - ஓசைபட ஓடிக குதிககும சிறிய விலஙகுககுடடிகளினமேல படும கொலையைச செயயாா, அடிதளாவுறு அலையாா-அடிதளாவுறுதற கேதுவாகிய கருபபநதரிததனவாயத தள்ளாடி நடநதுவரும பெண விலஙகுகளுக்குத துனபஞ செயயமாடடாாகள

(வி - ரை) இபபாடடினால் வேட்டையின நீதிமுறை எடுததுக காடடப்பட்டது. இஃது எலலாப போா முறைகளுககும ஒககும. பசுககள, அறவோா, சிறுவா, நோய

கொண்டோர், பெண்கள், புதல்வர்ப்பெறாதோர், படையெடாதோர் முதலியவர்களைப் போர் தொடங்குமுன் பறைசாற்றி அவ்வவர் காப்பிடம் செல்லுமாறு அறிவித்துப் பின் போர்தொடங்குதல் தமிழ் மக்களின் அறப்போர் என்பது பழந் தமிழ்நூல்களிற் கண்டவுண்மை. இந்நாளில் மேனாடு என்ற கீழாகிய ஐரோப்பிய நாட்டினும், சீனத்திலும், இந்நீதி முற்றும் மறந்து, உணவின்பொருட்டுச் சிறிதும் இரக்கமின்றி வதைச் சாலையில் ஆடு மாடுகள் வதைக்கப்படுதல்போலப், போர்செய்யாத குடிமக்கள் பலரும் ஆயிரக்கணக்காய் வதைக்கப்படுதல் காண்கின்றோம். இங்கு ஆசிரியர் பெருங்கருணையினாலே உலக நலங்கருதி எடுத்துக்காட்டிய இந்நீதிகளைப் போர்மட்டுமன்றி எல்லாத் துறைகளிலும் தம் வலிமையே கருதிப் பிறர்பொருள் வௌவும் வெறிபிடித்த இந்நாள் மாக்கள் உணர்ந்து ஒழுகுவாராயின் மிக்க நன்மையுண்டாகும். கொல் எறி குத்து என்ற சொற்களாலுணர்த்தப்படும் செயலும், வழிப்போவாரை அலைத்துண்பதும் முதலிய கொடுமைகளையே தமது வாழ்க்கையாகக்கொண்ட, கல்விவாசனையேயில்லாத, கொடிய வேடர்களும் கொலைவேட்டையில் கொண்டொழுகிய இந்நீதிகள் இந்நாள் உயர்ந்த நாகரிகர் என்று சொல்லும் மக்களும் மறந்து பல துறைகளிலும் உலகை அலைத்தல் கொடுமையினும் கொடுமை!

பெண்விலங்குகளையும் குட்டிகளையும் வேட்டையினும் அலைக்காதுவிடும் கருத்துக் கருணையை அடியாகக் கொண்ட நீதியாம். இஃது இறைவனது அருட்குணம். அவன் உயிர்க்குயிராய் எங்கும் நிறைந்தவனாதலின் அது இக்கொடிய வேடர்களுள்ளும் காணப் பட்டு அவர்களையும் அறியாமல் வெளிப்பட நிகழ்வதாயிற்று தமது நீடித்த நலங் கருதியேனும் விலங்கின் சாதிமுற்றும் நாசமாகி யொழியாதவண்ணங் காத்தல் என்னும் தந்நலம் இவர்களை இவ்வொழுக்கத்தில் நிறுத்திய வெளிப்படையான காரணமாம் யானைகளின் பாதுகாப்புச் சட்டம், வேட்டை விலங்குகளின் பாதுகாவற் சட்டம், விலங்குகளைக் கொடுமை செய்வதனைத் தடுக்கும் சட்டம் முதலியனவாக இந்நாளிலும் அரசாங்கத்தார் விதித்துள்ளவைகளும் இக்கருத்தே பற்றியன (The Elephants Preservation Act, Games Preservation Act, Prevention of Cruelty to Animals Act) இச்சட்டங்களினும் பெட்டைமான் முதலியவற்றைச் சுடக்கூடாது என்னும் விதியுண்மையும் காண்க

**துடிஅடியன மடிசெவியன துறுகயமுனி - வெடிபடவிரி சிறு குருளைகள் - அடிதளர்வுறு கருவுடையன** என்றவை மிக மேலாகிய தன்மைநவிற்சியணியாம் **மடிசெவி** - யானைக்காதுகள் மெல்லியனவாய் அகன்று பரந்து தொங்குமியல்புடையன. யானைக்கன்றின் காதுகளும் மிக மெல்லியனவாய் மடிந்து தொங்குமியல்புடையன. களிற்றியானைநிரை எனும் அகப்பாட்டுங்காண்க **துறு** - யானையினம் கூட்டமாய் வருமியல்பு குறித்தது **கயமுனி** - யானைக்கன்று யானை முதலா யெறும்பீ றாகிய என்ற படி முதன்மைபற்றி யானைக்கன்றுகளை வேறு பிரித்து முதலில் வைத்தார். ஏனைய விலங்கினங்களை யெல்லாம் ஒன்று சேர்த்துச் சிறுகுருளைகள் என உரைத்தார் "நற் குஞ்சரக் கன்று"கிய விநாயகப்பெருமானது முதன்மைபற்றிய நினைவுக்குறிப்புமாம்

**வெடிபட இரி** - வெடித்த ஓசையுண்டாக ஓடுகின்ற. **இரிதல்** - ஓடுதல். இது சிறு குட்டிகளின் இயல்பு. இஃது எல்லாப் பிராணிகளின் இளமைக்கும் பொருந்துவதாம் இது பயமும் துன்பமும் இன்னதென்றறியாத இளமையிற் காணும் ஆனந்தக் குறிப்பு "இளங்கன்று பயமறியாது" என்ற பழமொழியும் காண்க முருகு என்னும் சொல், என்றும் மாறா இளமையுடையோனாகிய முருகனை, ஆனந்த சொரூபனாகக் குதித்து விளையாடும் உருவத்துடன் சோமாஸ்கந்தத் திருவுருவிற் காண்பதும் இக்கருத்தை விளக்குவது **குருளை** - விலங்கினத்தில் இளமைப் பொதுப்பெயர்

**கரு** - கருப்பம். **பிணை**-விலங்கினத்தின் பெட்டைகளின் பொதுப்பெயர் இங்குப் **பிணை** - பெண்மான் என்றுரைகொள்வாருமுண்டு. **அடிதளர்வுறு** - கருப்பபாரந் தாங்

கியதனால விசையில நடககமுடியாமற கால தளாநது சோகினற. அணைவுறும் - இவர் களிடம அடைககலம புகுவதுபோல அணைநத என்றதும காணக.

**கொடியன எதிர்முடுகியும் கொலைபுரி** - கொடியவாகிய விலஙகுகளை எதிாததுச சென்றும கொலகினற இவாகள இக கயமுனி, குருளை, பிணை என்றிவை இலகுவிறகிட்டிய போதிலும கொலைசெயயார என்பது. **எதிர்முடுகியும்**-அவை தமமுன விரைநது சோநதபோதிலும என்றுரைபபதுமொனறு. உமமை எசசம

**உறு கொலைபுரி சிலைமறவோர்** - கொலை புரிவதனையே தம இயல்பாகக கொண டோராயினும, கொலை புரிவதறகே இஙகு உறறோராயினும, அது செயதறகுரிய சிலையேநதியோராயினும, அறமின்றி மறமேபூணடோராயினும என விரிததுககொளக.

736. இவவகைவரு கொலைமறவினை யெதிர்நிகழவுழி யதிரக
கைவரைகளும வெருவுறமிடை கானெழுவதொ ரேனம
பெயகருமுகி லெனவிடியொடு பிதிாகனலவிழி சிதறி
மொயவலைகளை யறநிமிாவுற முடுகியகடு விசையில. அஎ

(இ - ள்) வெளிப்படை. இவவாறாக வருகினற கொலையாகிய மறததொழிலு டைய வேட்டை எதிரே நிகழாநிறகுமபோது, யானைகளும அஞசுமபடி நெருஙகிய காடும அதிருமாறு எழுவதாகிய ஓா பனறி இடிககுரலோடும மழைபெயயும கரியமுகில போல முழககமசெயது பிதிாநத கணகளினினறும கனல உமிழநது, மொயதத வலை கள அறுமபடி கிளமபி மிகுநத விசையோடு ஓடிற்று.

(வி - ரை) **கொலை மறவினை** - கொலையாகிய மறவினை "அறவினை யாதெனிற கொலலாமை" எனபவாகலின, அதறகெதிாமறை **மறவினை**யாயிறறு. **கான்அதிர எழுவது** எனககூட்டுக. **கைவரை** - யானை காடே குடியாக வாழும் யானைகளும அஞசுமபடி மரச்செறிவுடைய காடு. இது காட்டின செறிவும பெருமையும உணர்ததி யது "மநதியு மறியா மரனபயி லடுககதது" என்றதுபோலக காணக **மிடை** - அடாநத. **கான்** - காடு **கைவரைகளும் வெருவுற எழுவதோர் ஏனம்** எனக கூட்டி யுரைபபாருமுணடு

**பெய்கருமுகில் - பெய்** - மழை பெய்யும சூலகொணட எனக **கருமுகில்** - மழை பெயயும் வெணமுகிலு முளதாகலின அதினினறும பிரிககக கருமுகில என்றா பிறிதினியைபு நீககிய விசேடணம. வெணமுகில் மழை பெயவதனை "ஒளிகொள வெணமுகி லாயபபரந தெஙகும் பெயயு மாமழைப பெருவெளளம்" என்ற ஆளுடைய நமபிகளது தேவாரததா னறிக

**இடியொடு** - இடி - உரும எனககொணடு **பெய்கருமுகில்** எனவும, இடி - இடித தல, முழககம-எனககொணடு **இடியொடு கனல் சிதறி** எனவும் இரணடிடததுஙகூட்டி யுரைககினறது இடி எனததின உரபபுதலாகிய முழககததுககும, **கருமுகில்** அதன நிறததிறகும உவமம வினையும உருவும பறறிய உவமம இது இசசெயகையினறி ணணனுரைக காளததிமலை சோசசெயது உலகுககு அனபு மழை உதவக காரண மாயிறறுதலின பயன பறறிய குறிபபுவமமுமாம்.

**பிதிர்விழி கனல் சிதறி** - கோபததாலும ஓடும வேகததாலும கண பிதிாநது சிவநது பொறிபறநது இதுபறறி முன 624 லும பிறவிடததும உரைததவை பாாகக. கணபிதிாதல அதிக கோபததால தனனிலைவிட்டு வெளிபபடடத தோனறுதல மேகங கள நீாசுமநது கூருமபோது அவறறில தீயினகூறு உடைய மினனறசததி எதிரெதிர் கூாநது தாககிக கலககும. அபபோது பேரொளியும பேரொலியும உடன்உணடாவன. இவவாறு ஒரு காலததில ஒரு இடததிறறோனறும இரணடில பேர்ஒளி மினனல் எனவும, பேரொலி இடி எனவும பெயாபெறும. ஆதலின அககுறிப்புமபெற **இடியொடு கனல் - சிதறி** என்றா.

**மொய்வலைகள்**-"நீளிடைப் பிணித்து காடு காவல்செய்" தமைத்தவலைகள் (724)

**மொய்த்தல்** - நெருங்குதல். ஒன்றோடொன்று நெருங்கப் பிணித்துக் கட்டுதல்

**அறநிமிர்வுற** - அறும்படி மேற்கிளம்பி வலிந்து. மிக்க கோபத்தோடு மேல் எழுந்து நிமிர்வுறுதலால் வலைகள் அறுபட்டு வழிதர எனக். **வலைகள்** - ஐ - அசை

**கடு விசையில் முடுகியது** எனக் கூட்டுக இம்மூன்று சொற்களும் வேகம் குறிப்பன. மிகுதி பற்றி மூன்றும் புணர்த்துக் கூறினார் **முடுகிய** - முடுகியது, விரைந்தோடிற்று அவ் விகுதி தொக்கு நின்ற வினைமுற்று இவ்வாறன்றி **முடுகிய** என்றதனைப் பெயரெச்சமாகவே கொண்டு மிக்க **விசையிற்போம் அதுதனை** என வரும்பாட்டுடன் தொடர்ந்து பொருள்கொள்வாருமுண்டு. 87

737. போமதுதனை யடுதிறலொடு பொருமறவர்க ளரியே
றாமவர்தொடர் வுறும்விசையுட னடிவழிசெலு மளவிற்
றாமொருவரு மறிகிலரவர் தனிதொடர்வுழி யதன்மேல்
ஏமுனையடு சிலைவிடலைக ளிருவர்களடி பிரியார், ௮௮

738. நாடியகழல் வயவர்களவர் நாணனுநெடு வரிவிற்
காடனுமென விருவருமலை காவலரொடு கடிதிற்
கூடினர்விடு பகழிகளொடு கொலைஞமலிகள் வழுவி
நீடியசரி படர்வதுதரு நீழலின்விரை கேழல். ௮௯

737 (இ - ள்) வெளிப்படை. போகின்ற அதனைக் கொல்லும் வன்மையோடு பொருகின்ற வேடர்களுக்கு ஆண்சிங்கமாகிய திண்ணனார் தொடர்ந்து பிடிக்கும் விசையோடு அது செல்லும் அடியின் வழிபற்றிப் போகும்போது மற்றை வேடர்கள் தாம் ஒருவருமறிந்திலராகத், தாம் தனியாகவே அதனைத்தொடர்ந்து செல்லும்போது, அம்பினால் வேட்டைமுனையில் அடுகின்ற வில்லையுடையவர்களாய அத்திண்ணனாரை அடி பிரியாதவர்களாய உள்ள காளைப்பருவமுள்ள வேடர்கள் இருவர், ௮௮

738 (இ - ள்) வெளிப்படை. நாடிய கழல்கட்டிய வீரர்களாகிய நெடிய வரிவில்லுடைய நாணனும் காடனும் என்னும் அவர்களிருவரும் மலைகாவலராகிய திண்ணனாரொடு விரைவிற் கூடினராகி விடுகின்ற அம்புகளையும் கொலைபுரியும் நாய்களையும் தப்பி, நீண்ட மலைச்சரிவில் மரங்களின் நீழலில் விரைவுடைய அப்பன்றி படர்வதாயிற்று ௮௯

இவ்விரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

737 (வி - ரை) **மறவர்கள் அரி ஏறு ஆம் அவர்** - திண்ணனார் மறவர்களின் தலைவர் என்றபடி. வயக்கோளரி யேறன்ன (705) என்றது காண்க விலங்குகட்கெல்லாம் தலைமைபெற்று, அவசியம் நேர்ந்தவிடத்து எவ்விலங்கையும் கொல்லும் வன்மையுடையது அரியாதலானும், இங்கு ஏனம் மிக்க வலியினும் விசையினும் சென்றாலும் அதனை விடாது தொடர்ந்து கொல்கின்ற தருணமாதலானும் **அரியேறு** என்றார்

**தொடர்வுறும் விசையுடன் அடிவழி செலும் அளவில்** - அது செல்லும் விசையளவு விசையுடன் இவர் போகாவிடின் செறிந்த கானில் அது முன்னர் ஓடி மறைந்துவிடும், அதன் அடிவழியொட்டிச் செல்லாவிடினும் மரச்செறிவில் அதனைக் காணுதல் இயலாது, ஆதலின் **விசையுடன் அடிவழி** சென்றார் "இதன்பின் இன்று காதங்கள் பலவந் தெய்தத்தோம்" (741) என்றபடி பல காதங்களினளவும் கானில் ஓடிச் செல்கின்றாராதலின் அதன் அருமைபுலப்பட இவ்வாறு கூறினார் **அடுதிறலொடு செலுமளவில்** என்று கூட்டுக

**தாமோருவரும் அறிகிலர்** - பொருமறவர்களில் ஒருவரும் தம் தலைவர் சென்றதை அறிந்திலர். வேட்டைக்காட்டில் அவர்கள் பலரும் பலவிடத்து வேறுவேறு விலங்குகளை வேட்டையாடும் வினையில் முயன்றுநின்றாராதலின் அறிந்திலர் என்பதாம். அன்றியும் அவர்கள் பொருந்தற் றொழிலிலே அமைந்த மறவர்களாயினர் ஒழிவாராக என்றி, அறவர்கள் நாயகமாய்ச் சென்று இறைவரைக்கூடும் தமது தலைவரின் தன்மையை அறியகில்லார் என்ற குறிப்புமாம். அவர்கள் இதற்குமுன்னும் அவர் தங்களுடன் பதினாறாண்டு வாழ்ந்து பழகியும் அவரை அறிகிலர். பின்னும் அறியகில்லார் (802) "என்னை ஒருவரு மறியீராகில்" (211) என்று கிழவேதியராகி வந்த இறைவன் கூறிய கருத்தும் இங்குக் குறிப்பிற்றொனிப்பது காண்க.

**தாமே அதனைத் தனி தொடர்வுழி அதன்மேல்** - தனித்துத் தொடரும்போது அதனை **அதன்மேல்**-மேல் என்னும் ஏழனுருபு இரண்டனுருபின் பொருளில்வந்தது. **ஏ** - அம்புகொண்டு. **முனை அடுசிலை** - முனையில் அடும் சிலை. ஏவும் என்றது ஏம் என விகாரப்பட்டுநின்றதென் றுரைப்பாருமுண்டு.

**இருவர்கள் அடிபிரியார்** - இவரை அடிபிரியாது பின்பற்றும் மெய்காவலாளர்கள். இவர்களும் அந்த என்றதைக் குறிவைத்துப் பின்றொடர்ந்து இவரைப் பிரியாதவர்களாய ஏனைமறவர்களறியாராயினும் இவ்விருவரும் அடிபிரியாராதலின் அறிந்து அதன்மேற்சென்று அவரோடு **கடிதில் கூடினர்** என வருமபாட்டுடன்கூட்டி முடித்துக்கொள்க. **பிரியார்** - பிரியாதவர்களாகியுள்ளவர் வினையாலணையும் பெயர்.

அரியேதாமவர்—என்பதும் பாடம். 88

738 (வி - ரை) **நாடிய** - தேர்ச்சியுடைய. கழல் - காலணி. மணிவடம் - வீரகழல். **வயவர்கள்** - வெற்றியுடையோர். விடலைகள் - இருவர் - அடிபிரியார் - வயவர் - நாணனும் - காடனும் எனும் - அவர் - இருவரும் - கூடினர் - விடு - பகழிகள் - என்று கூட்டுக.

**நாணன் - காடன்** - வேடர் பெயர் வைக்குமுறை காண்க. திண்ணன் - நாகன் என்பவற்றிற்கேற்ப இவையும் அமைந்தன.

**நெடு வரி வில்** என்னும் அடைமொழிகளை நாணனுக்கும் கூட்டியுரைக்க. நடு நிலைத்தீபம் மேற்பாட்டில் **ஏழனையடுசிலை** என்றது அவர்கள் பன்றியை அம்புகொண்டு எய்யக் குறிவைத்ததனையும், இங்குக் கூறியது அவர்களது உபாங்கத்தியல்பையும் குறித்ததனால் கூறியது கூறலாகாமையுணர்க.

**மலைகாவலர்** - மலைகாவல் பூண்டவர். முன்னைநாளில் மலைகாவல்புரியும் பட்டத்தைச்சூட்டிக்கொண்ட திண்ணனார். பட்டஞ்சூட்டிய அன்று "மலையாகுலக்காவல் பூண்டு" (702) என்று நாகன் கூறியதும் காண்க. அரசுரிமை என்பது காவல்செய்தலே யாம் என ஆசிரியர் காட்டியது காண்க. மேலும் இவர் (காளத்தி)மலையின் காவலரேயாகின்ற நிலையும் குறிப்பாலுணர்த்தினார்.

**கூடினர்** - சேர்ந்தனராகி கூடினராய விடும்பகழிகள். முற்றெச்சம்.

**கோலை ஞமலிகள்** - இவை வேட்டைக் காட்டிலின்ற நாய்கள். 734 பார்க்க. பொருமறவர்களில் அடிபிரியாத இவ்விருவர் ஒழிய ஏனையோர் அறிகிலர். கொலை ஞமலிகளும் தொடராது வழுவின. ஆனால் அடிபிரியாத காரணத்தால் விரைவிற்கூடிய நாணன் காடன் எனும் இருவிடலைகள்போல் அடிபிரியாததொரு ஞமலியும் திண்ணனாருடன் தொடர்ந்துவந்தது. திண்ணனார் திருக்காளத்திசேர்ந்த பின்னர் இவர்கள் யாவரும் அகன்றுவிடவும் அஞ்ஞமலி அவரை அகலாது உடன்றொடர்ந்து நின்றது என்பதீண்டுணர்தற்பாலதாம் "செருப்படியும் நாயடியுந் திருவலகான் மாற்றியபின்" (787) என்பது காண்க. "வேடுவன் நாயொடும் புகுந்து" என்ற நக்கீரர் அருளிய திருக்கண்ணப்பதேவர் திருமறமும் காண்க.

**நீடிய சரி தருநீழலின் விரைகேழல் படர்வது** எனக **சரி** - மலைசசாரல **தரு** - மரஙகள **நீழல்** - மரஙகளசெறிநது நீணடு வளாநதமையால நீழலும மிககது அவ விருணட நீழலைததுணையாககொணடு விரைநது கேழல படாவதாயிறறு தருநீடியவாக லின **நிழலும்** நீணடு, **நீழல்** எனறுயிறறு இவாகள செனற நேரம நீணடநிழலதரும காலையின முனனேரமாயினதும நினைவு கூாக **கேழல்** - பனறி **கேழலுககுத** துணை யாய நினறதெனற குறிபபுபெற **நீழல்** எனச சநதமபடவும கூறினா 89

**739.** குன்றியைநிகா முன்செறவெரி கொடுவிழியிடி குரனீள
பனறியுமடல வனறிறலொடு படாநெறிநெடி தோடித
துனறியதொரு குனறடிவரை சுலவியசெறி சூழற
செனறதனிடை நின்றதுவலி தெருமரமா நிரையில. ௬௦

**(இ - ள்)** வெளிபபடை குனறிமணியைப போனறனவாய முனனே பிதிாந தனவாயச செறுமபடி எரிகினறனவாயக கொடியனவாகிய கணகளையும, இடி போனறு முழஙகும குரலையும உடைய நீளபனறியும மிகக வலிய திறமையுடன ஓடுகினற வழியிலே நெடுநதூரம ஓடிப பொருநதியதொரு குனறினடியில மலையிற சுறறுவிககுமொரு சூழலிலே போய மேலும செலல வலியிழநது அஙகுளள மாககூட டததினிடை நினறது

**(வி - ரை) குன்றியை. . விழி** - **குன்றி** - குனறிமணி உருணடு பசநத சிவப பினிடையிற கரியகணமணி பிதிாநது தோனறலாற குனறிமணியை ஒததெனறா மெயயும உருவுமபறறி வநத உவமம சினததாற சிவநத கணணெடு செனறதாதலின **செற எரி கோடு விழி** எனறா. குனறியை நிகாவிழி, எரிவிழி, கொடுவிழி என அடை மூனறும விழியோடியைசையும. முனனரும **கனல்விழ் சிதறி (736)** எனறா **முன்செற** எனறது கண பிதிாநத நிலை குறிததது. நெடுநதூரம ஓடியதனுல பினனரும பிதிாநது சிவநததாம. **இடிகுரல்** - அசசம சினம முதலியவறறு லலைபபுணடபோது பெருங குரலால் உரபபிககொணடே போதல பனறியினியலபாம. இதுபறறியே முனனரும **கருமுகில் இடிகுரல் (736)** எனறது காணக

**நீள்பன்றி** - நீணட உடலுடைய எனக இவவளவும நீணட தூரம ஓடிய என றலுமாம.

**அடல் வன் திறலோடு** - **அடல்** - **வன்(மை)** - **திறல்** - மூனறும வலிமைப பொருளபறறிய ஒரு பொருடபனமொழி , மிகுதி குறிததுநினறன

**படர்நெறி நெடிது ஓடி** - பலகாதஙகள (741) செறிகானில மிகக விசையில ஓடி - இததனை தூரமும இவாகளைத தபபித தனனுயிா காகக ஓடிய திறலுடைமையால **அடல் வன் றிறல்** என விதநது ஓதினா.

**துன்றியது ஒரு குன்று அடி** - அஙகுப பொருநதியதாகிய ஒரு குனறின அடியில. **குன்று** - பெருமலைசசாரியில இளைதத சிறுமலை **வரை சுலவிய செறி சூழல்** - மலையில சாாநதாரை மீள அறியாது சுழலவைககினற வழியுடைய ஒரு அடாநத சோலையில

**வலிதெருமா** - மேலும ஓடுதறகு எறற உடல வலியில இளைததலால நினறதறகுக காரணங கூறியபடி. **தெருமா மாநிரையில் நின்றது** என மாறறுக **தெருமரல்** - இளைத தல - எயததல **மாநிரை** - மாசசெறிவில **நின்றது** - மேல ஓடமாடடாது நினறது

**நெறிசூழல்** எனவும, **வழிதெருமா** எனவும பாடஙகொணடு மேறசெலல வழிசுழல எனறுரைபபாருமுணடு காடடில வாழும பனறி முதலியவை செலல வழியினறி நிறறல இயலபனறுதலானும, **சுலவு சூழல்** எனறதனுல சுறறிச சுழலவிககும வழி யுடையதெனபது பெறபபடுதலின மேலும **நெறி** எனறும **வழிதெருமா** எனறும கூற

வேண்டாமையானும், சூழலிடை அதன் நிலையறிபவர் என வரும்பாட்டிற் கூறுத லானும் அவை பாடமன்றென்பது. 90

740. அத்தருவன்ர சுழலிடையடை யதனிலையறி பவர்முன
கைத்தெரிகணை யினிலடுவது கருதலர்விசை கடுகி
மொய்த்தெழுசுடர் விடுசுரிகையை முனைபெறவெதி ருருவிக
குத்தினருடன் முறிபடவெறி குலமறவர்கள் டலைவர். ௬௧

(இ - ள்) வெளிப்படை. கொலைச்செயல் பூண்ட மறக்குலத்தவர்களின் தலைவரா கிய திண்ணனார் அந்த மரங்கள் வளர்ந்த சூழலினிடையில் அப்பன்றியின் நிலையினை முன் அறிந்தவராய்த் தமது கையிற்றெரிந்து எய்யும் அம்புகளினால் எய்துகொல்ல எண் ணுதவராய வேகத்தால் அதனை அணுகி நேர்ப்போர் பெறுமாறு மொய்த்து எழுகின்ற ஒளிவிடும் உடைவாளை எதிரில் உருவி அதனுடல் துண்டமபடுமாறு குத்தினார்.

(வி - ரை) அத்தருவளர் சூழல் - மேற்பாட்டில் சுலவிய செறிசூழல் என உரைத்த அந்தச் சோலை. சூழல் - மரங்களாற் சூழப்பட்ட இடம். சுழல - சூழல் என்றுமியிறு.

அதன்நிலை முன் அறிபவர் - என்மாற்றுக. அது நிற்கு நிலையை முன்னர் அறிந் தவராதலின். அறிந்தவர் என்பது அறிபவர் என இயல்பாகக் காலமயங்கி வந்தது. முன் இவ்வாறு தப்பி ஓடிய பிராணிகள் பின்னர் ஓடாது நிற்குநிலையை முன்பழக்கத் தாலும் இப்போது அப்பன்றியின்பின் நெடுந்தூரம் ஓடிவந்த முன்அனுபவத்தாலும். நிலை - மனநிலையும் உடல் நிலையும்.

கைத்தேரி கணையினி லடுவது கருதலர் - தோந்து எடுத்த அம்பினால் எய்து கொல்ல நினைத்தாரிலர் தனக்குக் கேடு வருவதனை அறிந்த பிராணிகள் முதலில் உயிர்க் குத் தப்பி ஓடும், அஃதியலாதபோது எதிர்த்துப் பாய்ந்து தனக்குக் கேடுசூழு மதனை அடாத்துத் தப்ப முயலும் இஃது பிராணிகளி னியற்கை இதனை முன்னர் அறிவா ராதலின் அப்பன்றி எதிர்த்துத் தம்மேற் பாய நின்ற நிலையில் அதனை நேர்முகமாகக் கிட்டிமற்போர் செய்வார்போலச் சுரிகையாற் குத்துவதன்றித் தூரத்திலிருந்து அம்பு எய்வது வீரத்துக்கு இழுக்காம் எனவெண்ணி யதனாற் கணையினில் அடுவது கருதா ராயினார் என்பதாம். கைக்கணை - தேரிகணை எனக் கூட்டுக. கணையினில் - இல் - மூன்றனுருபின் கருவிப்பொருளில் வந்தது.

சுரிகை - சுடர்விடும் என்ற அடைமொழி வேட்டைவினைக்காகக் கூர்மைப்படுத் திய நிலைகுறித்தது. சுரிகை அணுகப்போரிலும், வில், அம்பு சேய்மைப் போரிலும் பயன்படுவன. இது பற்றியே வேட்டைக்கு வருவார் இதனையும் தாங்கி வந்தனர். 710 பார்க்க. இச்சுரிகை இவர் தந்தை நாகன்பாற்பெற்ற அரசஅடையாளமுமாம். எவ் விலங்கையும் அணுகிப் பிளந்து வெல்வது விலங்கி னரசாகிய சிங்கத்தின் தன்மை.அது போல அரச இலக்கணம்பெற விசையிற் கடுகிச் சுரிகையாற் குத்தினார் என்றார். "அரி யேறுமவர்" (737) என்றது காண்க.

முனைபெற - நேர்முகப் போர்நிலையினைப் பெறுமாறு. எதிர் - எதிர்முகமாய் நின்று. உடல்முறிபடக் குத்தினர் எனக்கூட்டுக. குத்துஞ்செயல் முன்னரும் அதன் விளைவாகிய உடல் முறிபடும் செயல் பின்னரும் நிகழவனவாதலின் அந்நிகழ்ச்சி முறையில் வைத்தார்.

எறி மறவர் எனக. எறிதல் (கொல்லுதல்) இவர் வாழ்க்கைத்திறம். "குற்றமே குணமாவாழ்வான்" - "கொல எறி குத்தென்றார்த்துக் குழுமிய வோசை" (614) என் றவைகாணக. எறிதல் தூரத்தினின்று எறியும் அம்புமுதலிய படையினா னிகழ்த்து வது. எறிமறவர் என்றதனால் எனவேடர் பெரும்பாலும் விலங்குகளை அணுகாது தூரத்திருந்து எறியுஞ்செயலுடையார் என்ற குறிப்பும், தலைவர் என்றதனால் அவர்கள

போலல்லாது இவா வீரததுடன அணுகி எதிாகினறு சுரிகையாற குததினா என்ற குறிபபும காணக. 730 பாாகக 91

வேறு

741. வேடர்தங கரிய செஙகண் விலலியாா விசையிற குதத
மாடிரு துணியாய் வீழநத வாாகததைக் கண்டு நாணன
"காடனே! யிதனபின னினறு காதஙகள் பலவந தெய்ததோம,
ஆடவன கொனறா னசசோ!" வெனறவ ரடியிற றாழ்நதார். கூ௨

(இ - ள்) வெளிபபடை. வேடா தலைவராகிய கரியமேனியும செஙகணணு முடைய திணணனா விசையிற குததியதனாலே பககததில இரணடு துணடமாய விழுநதபனறியை நாணன கணடு, "காடனே! இனறு இதன பினனே பலகாதஙகள வநது களைததோம ஆணமகனாகிய இவா கொனறாா. அசசோ"! என்று கூறி இருவரும அவரடியிலே வணஙகினாாகள

(வி - ரை) வேடர்தம் .வில்லியார் - சிலைவேடா என்றபடி. வேடா எலலாரும வில ஏநதியவாகளேயாயினும அவாகளுள இவாககே விலலின தலைமை பொருநதிய தெனபதாம. வில்லியார் - விலலவாகளுள எலலாம மிகக விலலவராகிய தலைவா என்ற பொருளில வநதது வில்லுககு விசயன என்றபடி முறபிறபபிலே விலவிததைை யிற றலைவராய நினறதும குறிபபு விலலியாா தனிவேடடை (783) எனறும, மேலும பலவாறு இவா வில ஏநதியதனை விதநது ஓதுதல காணக. "வரிநத வெஞசிலைககு மணமதிதத வீரனே" எனறாா விலலிபுததூராரும. (13 ம நாள போா)

வில்லியார் விசையிற் குத்த - தமககு அதனால எவவிதக கெடுதியும நோாதபடி தூரமிருநது எயது கொல்லக கூடிய விலலும அமபும இருககவும வீரததாற போா அறங கருதி அணுககசசெனறு சுரிகையாற குதத என மேறபாடடின கருததை அனுவதிததுக கூறியது அதனைப பாராடடி வறபுறுததற பொருடடு

நாணன் - அவரது அடிபிரியாத மெயகாவலாகளாகிய இருவருள நாணன அவா பால அணுககததொணடும துணிசசலுங கொணடவன ஆதலின அவன இவவாறு கூறுகினறான சரிதப பினனிகழசசியில காடன முகலியாறறங கரையில தீககடையவும பனறியை வதககிப பாதுகாககவும உளள தாழநத பணியாளனாய நிறக, நாணன திணணனாககு முனசெனறு காளததிமலைமேல வழிகாடடவும, உபதேசமொழிகள போனற பலவறறையும சொலலவும, இறைவனபாற கூடடிச சோககவும உயாபணியின றுணையாயினன எனபதும காணக.

இன்று காதங்கள் பல வந்து எய்த்தோம் - பல - இரணடுககு மேறபட்டவை. "நலலற நூலகளிற சொலலறம பல, சில, இலலறந துறவற மெனசசிறந தனவே" எனபுழிச சில எனபது இரணடையும, பல எனபது இரணடின மிகக எணணையும உணாததிநிறறல காணக வடமொழியில ஒனறு - இரணடு - அதன மேறபடடவை எனக குறிகக ஒருமை இருமை - பனமை என வகுபபா. இது சிறுபானமை தமிழிலும வழஙகும. காதம் - பதது நாழிகை யளவு கொணடது. எனவே இஙகுத திணணனும வேடாக ளிருவரும பனறிபபின மூனறு காதஙகளுககுக (30 நாழிகை தூரததுககுக) குறையாமல ஓடி வநதுளளாா எனறு ஊகிககலாம விடலைகளாகிய இவாகள பின் வநது எய்த்தோம் எனறதனாலும இவாகள நெடுநதூரம ஓடிவநது பினபறறித தொடா மாட்டாது இளைததமை துணியபபடும.

ஆடவன் கொன்றன் அச்சோ! - விடலைகளாகிய அவவிருவரும எயததுப பின வரவும், இவா சிறிதும இளைககாது முனனே விசையிற கடுகிசசெனறு பனறியைக குததி வீழததினது இவாது வீரமும உடல வலிமையும குறிததது. இதனாலே அவ விடலைகளிருவரும அறபுதமுறறு "முன பலமுறை வேடடையிற பழகிய நாம் எயத

துப பினனடைநதோம் ஆனுல் முதல வேட்டை (கன்னிவேட்டை)யில வநத இவர் முனசெனறு கொனறா! இவரே ஆட்வா!" எனறு போறறி வணஙகினா எனக. **ஆடவன்** - ஆணதனமை மிககவன. **அடியிற்றழ்ந்தார்** - வியநது போறறும முறை. **அச்சோ** - ஆசசரியசசொல் 92

742. மறறவா திண்ண னாககு மொழிகினறா "வழிவந தாறற
வுறறது பசிவந தெமமை யுதவிய விதனைக காயசசிச
சறறுநீ யருநதி யாமுந தினறுதண் ணீாககு டிதது
வெறறிகொள வேட்டைக காடு குறுகுவோ மெல்ல" வெனறார்.௯௩

**(இ - ள்)** வெளிபபடை மேலும அவாகள திணணனை நோககிச சொலகினற வாகளாய, "வழிநடநது வநததனுலே மிகப பசிவநது எமமைப பொருநதியது, (ஆதலின) உதவிய இபபனறியைக காயசசி நீ சிறிது அருநதி, நாஙகளும தினறு தணணீா குடிதது வெறறிகொளளும வேட்டைககாட்டை மெலலசசெனறு அடைவோம்" எனறு சொனனாகள.

**(வி - ரை)** **மற்று** - அஙஙனம வியநது கூறியதனை விடுதது மேலும. **மற்று**-வினை மாறறுப பொருளில் வநதது **அவர்** - அவவிருவரும. மறறவா என ஒரு சொலலாககக கொணடு உரைபபாருமுணடு. **மொழிகின்றார்** - சொல்வாராகி முறறெசசம மேற பாட்டில நாணன ஒருவன பேசினன இஙகு இருவரும சொனனாகள எனக

**வழிவநது** - வழியினகண வருதலால் ஏழனுருபுதொககது **வநது** - வினையெசசத திரிபு , காரணப பொருள தநதது.

**ஆற்ற பசிவநது எம்மை உற்றது** - எனக கூட்டுக **ஆற்ற** மிகுதியாய. **உதவிய** - கைககுக கிட்டியதாகிய நீ கொனறு தநத எனறலுமாம **இதனை** - இபபனறியினை. **காய்ச்சி** - தீயில் வதககி வதககிப பககுவபபடுததும முறை 767 - 774 - 795 முதலிய பாட்டுககளில விரிததிருததல காணக

**சற்று நீ அருநதி யாமும் தின்று** - சுவைக கலபபுககுரிய உயாநத மான முதலாகிய வேறு ஊனும தேனும பிறவும ஈஙகு இலலையாக,இது தாழநத பனறியிறைசசியொனறே யாதலானும, இவா இளமை, வீரம, முதலிய திணமை படைததமையால தமமைப போல எயபபிலலாது னினறாராதலின உணவு வேட்கை அதிகமிலா எனறமையாலும பிறவாறறாலும இபபனறி யிறைசசியை இவா மிக உணணா எனறு கருதி, **நீ** - **சற்று** - **அருநதி** எனறும, **யாம்** அவவாறனறி வயிறு நிறைய இவவோரிறைசசியினையே மிகுதி யும தினபோம் எனற குறிபபுபபெற **யாமும் தின்று** எனறும கூறியவறறின நயமும சொலலாறறலும பொருட்செறிவும காணக. **நீ** - நீயும - உமமை தொககது **யாமும்** - எசசவுமமை **அருநதல்** பொதுவினை. **தின்னல்**-நாலவகை உணடிகளில ஒனறு இரண டும உணவு உடகொளளுதல எனறு பொருளபடுச, சுவை பாாதது அளவுபடச் சிறிது உணணுதலுககு **அருநதல்** எனறும, அளவுபடாது மிகுதிபபடப பெருநதீனியாய உணணுதலுககுத **தின்னுதல்** எனறும வழஙகும தலைவா உணடபின பணியாளா உணணுமுறை குறிததலும காணக உயாநதோரை அருநதுக எனபதும, தாழநதோ ரைத தினக எனபதும வழககு

**தண்ணீர்குடித்து** - உறறதுபசி எனறு பசியைமட்டும கூறினுரேனும அதனேடு உடனவருவதாகிய தாகமும இனமபறறி அறிநதுகொளளபபடுமாதலின தாகம **உற்றது** எனறு சொல்லாமலே **தண்ணீர்குடித்து** எனறனா "வைகிருளின புலாகாலை" (705) யில வேட்டைககாட்டுககுப போநத இவாகள "கதிரவனுசசி நணண" (750) உளள இதுகாலமவரை வேட்டைவினைமுயனறும,ஓடியும கடுஙகானிற கடுவெயிலில் அலைநதன ராதலின பெருமபசியோடு கடுநதாகமுஙகொணடனா எனக.

**வெற்றிகொள் வேட்டைக்காடு**-மீதூர்கின்ற விலங்கினங்களை மாற்றார்களாகவைத்து வேட்டையைப் போர் என்றும், வேடர்களைச் சேனை என்றும் கூறியதற்கேற்ப **வெற்றி கொள்** என்றார் **வெற்றி**-விலங்கினமனைத்தையும் இவர்களது குறியினின்று தப்பாதுமடிதலும், அவை ஒன்றும் இவர்க்கு எவ்வகை ஊறுஞ்செய்ய வலியிலாதொழிதலும், மொய்வலை களை அறுத்து நெடிதோடிய இப்பன்றியும் துணிக்கப்படுதலும் ஆகியவற்றால் இக் **கன்னிவேட்டை** வெற்றிகரமாக நிகழ்ந்தமைகுறித்தது.

**வேட்டைக்காடு** - இவர்கள் வேட்டைக்காக வளைத்துச் சூழல்செய்த பரப்புடைய காடு 721 - 722 - 723 - 725 பார்க்க.

**துருதுவோம் மெல்ல** - களைப்பினமிகுதியானும், உண்டபின் கடியநடைகூடாமை யானும், வேட்டைவினை வெற்றிபெற்று முடிந்தமையானும் இவ்வாறு கூறினர். முன் னர் ஓடிவந்த கடியவேகத்திற்செல்லுதல் இனி அவசியமில்லை என்றபடி அவர்களது இளைப்பும் மனவெழுச்சியின்மையும் விரைவின்மையும் குறிப்பார் மெல்லக்குறுகு வோம் என்னாது **துருதுவோம் மெல்ல** என்று மாற்றிக் கூறினர். 93

743\. என்றவர் கூற நோக்கித், திண்ணனார் "தண்ணீ ரெங்கே
நன்றுமிவ் வனத்தி லுள்ள?" தென்றுரை செய்ய, நாணன்
"நின்றவிப் பெரிய தேக்கி னப்புறஞ் சென்று னீண்ட
குன்றினுக் கயலே யோடுங் குளிர்ந்தபொன் முகலி" யென்றான். ௯௩

(இ - ள்) வெளிப்படை. அவர்கள் இவ்வாறு சொல்லத், திண்ணனார் அவர்களை நோக்கி "இவ்வனத்தினுள்ளேயும் தண்ணீர் எங்கே நன்று உள்ளது ?" என்றுகேட்க, "முன்னேநின்ற இந்தத் தேக்கமரச்சோலையைக்கடந்துசென்றால் அங்கே நீண்ட குன்றின் பக்கத்திற் குளிர்ந்த பொன்முகலியாறு ஓடும்" என்று நாணன் சொன்னான்.

(வி - ரை) **நோக்கி** - அவர்கள் சொல்லியதை ஊன்றி எண்ணி என்றலுமாம்.

**தண்ணீர் இவ்வனத்திலும் எங்கே நன்று உள்ளது** என உம்மைபிரித்துக் கூட்டி யுரைத்துக்கொள்க. நீரில்லாத இக்கானகத்துள்ளும் குடிக்கத்தக்கதாய நீர் நன்று காணவுள்ளதெங்கே என்றபடி **நன்று**-காட்டுநீர்கள் பெரும்பாலும் குடிக்கத்தகாதவை யாயும் நோய் செய்வனவாயும் உள்ளன என்றது கருதி இவ்வாறு கேட்டார் உம்மை பலகாதமும் இக்காட்டிற் காணப்படாத நீரின் அருமை குறித்தது. **இவ்வனம்** என்ற தில் இகரச்சுட்டும் நாம் கண்டுபோந்த இந்த என அக்கருத்தே பற்றியது **நன்றும்** - அப்படியே செய்வோம் என்றுரைப்பாரும், உம் அசை எனக்கொண்டு நன்று தண்ணீர் எனக் கூட்டியுரைப்பாரும், நன்று பெரிதென்றுரைப்பாரும் உண்டு. **உரைசெய்ய** - வினவ என்ற பொருளில் வந்தது.

**நாணன்** - இருவரையும் நோக்கிக்கேட்ட வினாவுக்கு, அவருள் நாணன் விடை சொன்னான் இவ்விருவருள் இவனே அறிவும் மிக்க அனுபவமும் படைத்தவன், காளத்திகாண நீபோதின் நல்ல காட்சியே காணும் (745) என்று திண்ணனாரது அன் பையும் ஆர்வத்தையும் வளர்த்தவன் அவர் காளத்தியேறி இறைவனைக்கண்டு அணைந்து பற்றிக்கொள்ளுந்தனையும் இவனே வழிகாட்டியாகவும் உற்றதுரைக்கும் உறுதுணையாக வும் நின்றவன் மலையேறிய உச்சிநேரத்திற் கேட்ட ஐந்துதுந்துபி ஓசையை இது என்ன என்று கேட்ட திண்ணனார்க்கு, "இம்மலைப்பெருந்தேன் சூழ்ந்து மதுமலர் ஈக்கள் மொய்த்து மருங்கெழு மொலிகொல்" (750) என்றவன். அங்கு இறைவர் திருமேனியிற் கண்ட பூவுநீரும் ஒரு பார்ப்பான் செய்த பூசைச்செயல் என்று தான் முன்னுள் கண்டு அறிந்த அறிவு கொண்டு பூசைமுறையினை இவன் உணர்த்தியவதனால் நாய னார்க்கு இனியசெய்கை இவைகொலாம் என்று கடைப்பிடித்து அவர் அரியபூசை பியற்றத் துணைக்காரணமாயிருந்தவன் (757 - 758) தமசாரப்பைவிட்டொழிந்த இவரது

நிலையை "வங்கினைப்பற்றிப் போதா வல்லுடும்பு என்ன" என்று (765) உள்ளவாறு காடனுக்குச்சொல்லும் திறத்தால் இவனது அறிவின்றிறம் உணரப்படும் நாகனுக்கும் வேட்டையில் ஏவலாளனாகி உற்றதுணைவனாய் அவனோடு காளத்திக்குவந்தவன் இவனே யாம் என்றதனால் இவனது தொடர்பும் முதிர்ந்த அனுபவமும் வயதும் அறியப்படும் 741ல் உரைத்தவையும் மேல்வருவனவும் காண்க.

**நின்ற இப்பெரிய தேக்கின் அப்புறம்** - இகரச்சுட்டு முன்னால் அண்மையில் காணப்பட்ட நிலைகுறித்தது **நின்ற** - முருடு, வளைவு முதலியன இன்றி நேராக நீண்டுவளரும் தேக்கின்றன்மையும், **பெரிய** - அவற்றின் பருத்த அரையும் குறித்தன **தேக்கு** - தேக்கமரச் சோலைக்கு ஆகுபெயர். முகலியாற்றின் கரையருகினில் தேக்கஞ் சோலைகள் மிகுதியாம் என்பது "சந்தமா ரகிலொடு சாதிதேக்க மம்மர,முந்துமா முகலியின் கரையினில்" என்று ஆளுடையபிள்ளையார் இதனைத் தெரியக்காட்டியருளியமையானுமறியப்படும் **அப்புறம்** - தேக்கினுக்கு இப்புறம் இவர்களும், அதற்கப்புறத்தே காளத்திமலையும் ஆக இடையில் பெரியதேக்கு **நின்ற**தென்பதாம் **நின்ற** குன்றையும் முகலியையும் மறைத்துத் தடையாய் நின்ற என்ற குறிப்புமாம்

**நீண்டகுன்று** - தொடர்ச்சியாய நீண்டமலைவரிசையில் உள்ளதொரு குன்று என்பதாம். இடைவிட்டுவிட்டு நீண்டுசெல்லும் கிழக்குத்தொடர்ச்சி மலைகளில் ஒன்று திருக்காளத்திமலை "குலவரை பாரப்பாய கயிலை" (திருவலஞ்சுழி - 8 - பிள்ளையார்).

**குன்றினுக்கயலே குளிர்ந்த பொன்முகலி ஓடும்** எனக் இளைப்பும் பசியும் நீர் வேட்கையும் போக்கிக் குளிர்ச்சிசெய்யவல்லதென்ற குறிப்புப்பெறக் **குளிர்ந்த** என்ற அடைமொழிதந்து கூறினான் அதனை மனத்தால் எண்ணி வாக்கினாற்சொல்லிய போதே குளிர்ச்சியைச்செய்ததென்ற குறிப்பாற் **குளிர்ந்த** என இறந்தகாலத்தாற் சொன்னான் **பொன்முகலி** - இது வடமொழியிற் சொர்ணமுகி எனவழங்கப்படும் தேவாரங்களில் **முகலி**என ஆளப்பட்டுள்ளது பொன்மையோடு ஒலியுமுடைமையின் இப்பேர்பெற்றது முகரம் - ஒலி, **முகரி** - ஒலியுடையது பேதமின்றி ரகரம் லகரமாயும் வருமாதலின் முகரி முகலிஎன வந்தது "பொன்மையோடு, கலியுடை மையிற் போ பொன்மு கலியென வுரைத்துப் போனை" (பொன்முகரிச்சருக்கம் - 58) என்ற சீகாளத்திப்புராணங் காண்க. பிறவி வெப்பமும் போக்குவது என்றதுங் குறிப்பு.

இப்பாட்டாற் **றீர்த்தவிசேடங்** கூறப்பட்டது 94

744. பொங்கிய சினவில் வேடன் சொன்னபின், "போவோ மங்கே;
யிங்கிது தன்னைக் கொண்டு போதுமி" ன்றென்று, தாமு
மங்கது நோக்கிச் சென்றார்; காவத மரையிற் கண்டார்
செங்கணே றுடையார் வைகுந் திருமலைச் சாரற் சோலை. ௩௫

(இ - ள்) வெளிப்படை. மேன்மேற்பொங்கிய சினமுடைய வில்லேந்திய வேடனாகிய நாணன் இவ்வாறுசொன்னபின், திண்ணனார் "நாம் அங்கே போவோம், இந்தப் பன்றியினை எடுத்துக்கொண்டு வாருங்கள்" என்றுசொல்லித், தாமும் அதனைநோக்கிச் சென்றனர் அரைக்காததூரஞ் சென்றபின் செங்கண் இடபத்தையுடைய சிவபெருமான் எழுந்தருளிய **திருக்காளத்திமலைச்சாரற்** சோலைகண்டனர்

(வி - ரை) **பொங்கிய சினவில்** - வில்லை உடையானது சினம் வில்லின்மேல் ஏற்றப்பட்டது உபசாரம். சினவேடன் எனக்கூட்டியுரைப்பினுமமையும்

**அங்கே போவோம்** என மாற்றுக வினைமுற்று முன்வந்தது அவரது தீவிரங் குறித்தது **இங்கு இதுதன்னை** - இங்குநின்றும் இப்பன்றியை. **இது** - அண்மைச் சுட்டு முன்புகிடந்த பன்றியைச் சுட்டிற்று. **இதுதன்னை** - **தன்** சாரியைபெற்று உருபேற்ற சுட்டுப்பெயர்.

**கொண்டு போதுமின்** - பன்றியின் உடல் மிகுகனமுடையது. அச்சாதியுள்ளும் இக்காட்டுப்பன்றி வகை மிகப்பருத்துப் பெரும்பாரமுடையது என்பர். பெரும்பன்றி (791) என்றது காண்க. விடலைகளாகிய வலிய இருவருங்கூடிச் சுமக்கும் பாரமாதலின் இவ்விருவரையும் நோக்கிக் கொண்டு போதுமின் என்றார்.

**தாழும்** - ஆவல்கொண்ட தாழும். உம்மை இறந்தது தழுவியது.

**அங்குஅது - அங்கு** - சேய்மைச்சுட்டு அப்புறம் சென்றால் என்று சுட்டிய அவ்விடம். **அது** - "குன்றினுக்கயலே ஓடும்" என்ற அப்பொன்முகலி யாறு **அது** நீண்ட குன்று என்றலுமாம். **நோக்கி** - குறித்து குறிவைத்து "கண்டு கொண்டே", "சேர்பெற நோக்கி நின்றார்" (777) என்பவை காண்க.

**சென்றார் - கண்டார்** - சென்றதும் கண்டதுமாகிய இவை விரைவில் முடிந்தன என்பார் இவ் வினைமுற்றுக்களை அடுத்து வைத்துக் கூறினார். இச்சொற்களின் விரைவில் அரைக்காதத்தூரமும் கடந்தனர் என்பது.

**செங்கண்ஏறு-செங்கண்** - கோபங்குறித்தது. கொல்லேறு, சினவேறு, முரணேறு என்ற வழக்குக்கள் காண்க. ஏற்றினது இயல்பு செங்கணுடைமை என்றலுமாம்.

**உடையார்** - கொடியாகவும் ஊர்தியாகவும் உடையவர்.

**திருமலைச்சாரற் சோலைகண்டார்** - என்மாற்றுக போவோம் அங்கே என்மாற்றிக் கூறி நின்ற மனவேகம்போலவே, செயலும், வேகமாய் முற்றியது என்று குறிக்கப் பயனிலைமுன் வந்தது.

**திருமலைச் சாரற்சோலை** - மலையின்சாரலில் உள்ளசோலை உயர்ந்த இடமாதலின் முதலிற் காட்சிக்குப்புலப்பட்டது மலையும், பின்னாகக்காணப்படுவது அதன்சாரலும், அதன்பின் சோலையுமாம். இவை வேறுவேறாகத் தெரியும் சவிகற்பகக் காட்சியின்முறையில் வைத்தார். முன்னாச் சேய்மையில் நிகழ்வது மலையும் சாரலும் சோலையுமாகிய மூன்றுஞ் சேர்ந்துள்ள நிருவிகற்பகக்காட்சியாதலின் அவ்வாறு முறைக்கின்றதுகாண்க.

**திருமலை** - காளத்தி மேலே திருமலைச்சருக்கம் என்றஇடத்தும், பிறாண்டும் திருமலைஎன்றது கயிலையைக்குறிக்கும் "சித்திநிகழ் வயிரவராய்த் **திருமலை**யின் றணைகின்றார்" - **சிறுத்-புரா** - 25 காளத்தியும் கயிலையாம் இது தென்கயிலைஎனப்படும் கயிலைபாதிகாளத்திபாதி யந்தாதியும் இக்கருத்தேபற்றியது. அப்பர்சுவாமிகள் இம்மலைமேற் றூளபணிந்த குறிப்பினால் கயிலையினிலவீற்றிருந்த பெருங்கோலங் காணுமது காதலித்து அந்த யாத்திரையிற் புறப்பட்டனர் ஆளுடையபிள்ளையாரும், ஆளுடையநம்பிகளும், இங்குநின்றே திருக்கயிலையைப் பாடியருளினர் அருச்சுனர் கயிலைமலைச்சாரலிற் கேட்ட வரத்தை அவரே திண்ணனாராகி இங்குப் பெறப்போகின்றார் என்ற குறிப்புக்களெல்லாம் பெற இங்குத் **திருமலை** என்ற பெயரார்க்கூறினார்.

**கண்டார்** - மலையும் சாரலும் சோலையும் கண்டஇக்காட்சி, திண்ணனாரது பசி, தாகம், இளைப்பு முதலியவற்றை மறப்பித்து அவரது உள்ளத்தைக் கொள்ளைகொண்டு "தோன்றுங் குன்றின் நணுவோம்" என்று தடுக்கலாகாப்பேராசையை விளைத்தது பற்றி இதனை இவ்வாறு விதந்துகூறினார்.

இப்பாட்டுத் தலவிசேடங் கூறிற்று 95

745. "நாணனே! தோன்றுங் குன்றி னண்ணுவோ" மென்ன, நாணன்,
"காணநீ போதி னல்ல காட்சியே காணு, மிந்தச்
சேணுயர் திருக்கா ளத்தி மலைமிசை யெழுந்து செவ்வே
கோணமில் குடுமித் தேவ ரிருப்பர், கும் பிடலா" மென்றான். கூகூ

(இ - ள்) வெளிப்படை. "நாணனே! முன்னே தோன்றும் குன்றின்கண் சேர்வோம்" என்று திண்ணனார் சொல்ல, நாணன், "நீ அங்கே காணப்போவாயாகில்

**நல்ல காட்சியே** காணப்படும், சேணில் உயரும் இந்தத் திருக்காளத்திமலையின்மேல் எழுந்து செம்மைபெறக் கோணமில்லையாகச் செய்யும் **குடுமித்தேவர்** இருப்பார், நாம் கும்பிடலாம்" என்று சொன்னான்.

**(வி - ரை) தோன்றும் குன்றில்** - முதலிற் கண்ணுக்குப் புலப்பட்டது குன்றின் உயர்ந்த சிகரமாதலின் அது அவர் கருத்தைக் கவர்ந்தது.

**காண காணும் - நீ காணப்போதின்** எனக். காண்பதற்கென்று நீ போவாயானால். இவ்வகையிடங்களுக்குப் போதுவார் பலரும் போய்வந்த மட்டில் அமைவரேயன்றி அங்குள்ள சிறப்புக்களைக் காணமலே வருவர் என்பது **கண்கூடு** ஆதலின், நண்ணுவோம் என்று தன் தலைவன் கூற அவ்வாணைக் குட்பட்டு உடன்படும் நாணன், அவ்வாறு நீ காணும்பொருட்டே செல்வாயானால், ஏனையோர்போலல்லாது நீ காணும் சிறப்பு இன்னதென்று கூறுவானாகி, அது நல்ல காட்சியே என அறிவுறுத்துகின்றான் அக்காட்சி இன்னதாம் என மேலும் வற்புறுத்திக் கூறுகின்றான். "குன்றின் நண்ணுவோம், அதனைக் காணல்வேண்டும்; காண்பது நல்ல காட்சி, அஃது இதுவாம்" என்றவாறு இக்குன்றவர் கடவுட் காட்சியில் வைத்தகருத்துப் பாராட்டத்தக்கது.

**காண நீபோதின்** என்று நாணன் உரைத்தவாறு உண்மையில் நாயனார் காண்பதற்கே அங்குப்போகின்றார் ஏனையோர் போலல்லாது, "ஆவமுன் பெருக ஆரா அன்பினிற் கண்டுகொண்டே நேர்பெற நோக்கி னின்றார்" (777) என்பது காண்க.

**நல்ல காட்சியே காணும்** - **காட்சி** - காணப்படுவது. **காணும்** - காணப்படும் படுவிகுதிதொக்கது இவர்காணும் காட்சி இறைவனது அருட்டிருநோக்கம்பெற்று அவன் காட்டக்காணும் காட்சியாதலின் **நல்ல காட்சியே** என்றார் ஏகாரம் பிரிநிலை. தேற்றமுமாம் **நல்லகாட்சியாவது** அகம்புறமாகிய கரணங்களால் எதனைக் காணவேண்டுமென்று நூல்கள் விதிக்கின்றனவோ அதனையே காணுதல். "கண்காள் காண்மின்களோ-கடல் நஞ்சுண்ட கண்டன்றனை, யெண்டோள் வீசிநின் றாடும் பிரான்றனைக் (கண்காள்)" என்றது தமிழ்மறை "காணுங் கண்ணாற் காண்பது மெய்த்தொண்டே"—(தண்டி-புரா-2).

**இந்த கும்பிடலாம்** - நல்லகாட்சி இதுவாமென்று நாணன் கூறியது **சேண் உயர்** வானில் உயர்ந்துவிளங்கும். எழுனுருபு தொக்கது உயர்ந்து தோன்றியதனால் முன்னர்த் "தோன்றும் குன்று" என்றார். அவ்வாறு திண்ணனார் "தோன்றுங்குன்று" என்ற அதன்பெயரை அவருக்கு அறிவுறுத்துவான் **இந்த** என்று கையாற்சுட்டிக் காட்டித், **திருக்காளத்திமலை** என்று வாயினாற் பேர் கூறினான். "பெரிய தேக்கி னப்புறஞ் சென்றால் நீண்ட, குன்று" (743) என்று நாணன்கூறக் கேள்விமாத்திரத்தால் அறிந்த நாயனார், இங்கு அதனைக் கண்ணுக்குப் புலப்படக் கண்டறிந்தபோது அவன் சொல்லியபடியே "தோன்றும் குன்று" என்று போகுறியாது கூறியது காண்க

**மலைமிசைஎழுந்து செவ்வே** - மலையினின்றும் வேறுஎன்றிமுளைத்ததுபோல மேல் எழுந்து செம்மைபெற. **கோணம்இல்** - கோணத்தை இல்லையாகச்செய்யும் **கோணம்** - குற்றம் இது கோண - கோணை எனவும் வழங்கும் "யான்செய்தேன் பிறர்செய்தா ரென்னதியா னென்னுமிக் கோணை" (சிவஞானசித்தியார் - 10 சூத்திரம் - உ)

**குடுமித்தேவர்** - **குடுமி**-உச்சி மலையின் உச்சியிலிருப்பவர் தலையின்மேல் உச்சியிலிருப்பதால் தலைமயிராகக்குறைந்துகுடுமிஎனப்படும் கானவர் காளத்தியப்பரை இப்பெயரால் அறிந்து கும்பிட்டனரெனக் வேதங்களுள் முடிவினிற்பது அதர்வணமாம் அதன் சிரம் அதர்வசிரசு எனப்படும். அதன் சிகையாயுள்ள அதர்வசிகை "ஏனையவற்றை யெல்லாங் கைவிட்டு மங்களஞ்செய்பவனாகிய சிவனொருவனே தியானிக்கற்பாலன். அதர்வசிகை முடிந்தது" என்று முடிபுகூறுகின்றது அவ்வுச்சியில் முடிந்தமுடிபாய் விளங்குபவன் இவ்விறைவன் என்பதும் குறிப்பாம். உபநிடதத்துச்சியில் விளங்கும் போதக்காட்சி என்னும் வழக்குங்காண்க.

நாணன் மேலே 743ல் சொல்லியவை "குன்றினுக் கயலே யோடும் குளிர்ந்த பொன் முகலி" என்றது இவரை வழிப்படுத்திய முதல் உபதேச மொழி, இப்பாட்டிற் கூறியன இரண்டாவது உபதேச மொழிகளாம்.

மேலிருபாட்டிலும் முறையே தீர்த்த விசேடமும் தலவிசேடமும் கூறப்பட்டது போல இப்பாட்டால் மூர்த்திவிசேடம் கூறப்பட்டது காண்க. 96

746. "ஆவதென்? இதனைக் கண்டிங் கணைதொறு மென்மேற் பாரம்
போவதொன் றுளது போலும், ஆசையும் பொங்கி மேன்மேல்
மேவிய நெஞ்சும் வேறோர் விருப்புற விரையா நிற்கும்;
தேவரங் கிருப்ப தெங்கே? போ"தென் றார் திண்ண னார்தாம். ௯௭

(இ-ள்) வெளிப்படை. "இவ்வாறு ஆவது என்னை? இம்மலையைக்கண்டு இவ்விடத்தே அணுகிச்செல்லுந்தோறும் என்மேல்உள்ள பாரம் குறைவதுபோல அனுபவம் உள்ளதாகின்றது, ஆசையும்பொங்கி மேலும்மேலும் பொருந்திய நெஞ்சமும் வேறொரு விருப்பம்கொண்டதாக விரைந்துசெல்லாநிற்கும், அங்கே தேவர் இருப்பிடம் எங்குள்ளது? போவாயாக" என்று திண்ணனார் கூறினார்.

(வி-ரை) **கண்டுஇங்கு அணைதோறும்** - மேற்பாட்டிற் கூறியபடி பேசிக்கொண்டு இருவரும் மலையைநோக்கி நடந்து செல்கின்றாராதலின் இவ்வாறு கூறினார்.

**போவது போலும் உளது** என்றுகூட்டுக. அடிபெயர்த்து வைக்குந்தோறும் அவ்வளவிற்குச் சிறிதுசிறிதாய் என்பாரம் குறைவதுபோன்ற அனுபவம் நிகழ்கின்றது. **போலும்** - போல்வதாகிய பெயரெச்சம். ஒவ்வொன்றாயக் குறையும் அளவுகுறிக்க **உளது ஒன்று போவது** என்றும், **அணைதோறும்** என்றும் கூறினார்.

**ஆசையும் பொங்கி** - தோன்றுமக்குன்றில் நண்ணுவோம் என்று முன்னாளெழுந்த ஆசையும் என உம்மை இறந்தது தழுவியது. அவ்வாறெழுந்த ஆசை அடங்காது மேலும் மேலும் பொங்கிவளர்ந்தது என்க.

**நெஞ்சும் - விரையா நிற்கும்** - மனவேகம் என்றபடி உடல் அணைவதன் முன்னே நெஞ்சு மிக விரைகின்றது. **நெஞ்சும்**-எச்சவும்மை. **வேறுஓர் விருப்புஉற** - விருப்பு - விருப்பமும்; **உற** - மிக; உம்மைதொக்கது. காணவேண்டுமென்னும் ஆசையேயன்றி இன்னதென்றறியப்படாத மற்றோர் விருப்பமும் இன்னதென்றுணரவாராமையின் **வேறுஓர்** என்றார். இது முன்னைப்பிறவியின் தொடர்ச்சிபற்றி இவருள்ளத்தில் எழுந்தது. "முந்தை யறிவின் தொடர்ச்சியினால் முகைத்த மலரின் வாசம்போற், சிந்தை மலர உடன்மலருஞ் செவ்வி யுணர்வு" என்ற சண்டேசநாயனார் புராணமும் "ஒருமைக் கட் டான்கற்ற கல்வி யொருவற், கெழுமையு மேமாப் புடைத்து" என்ற திருக்குறளும் இக்கருத்தை விளக்குவன. "முன்புசெய் தவத்தி னீட்டம்" என்று பின்னாகக் கூறுவதும் காண்க. தோன்றுங் குன்றி னண்ணுவோம் என்று முன்னர் எழுந்த ஆசை இவரால் காரணமறியப்பட்டதும், இங்குஉறும் வேறு ஓர் விருப்பம் காரணமறியப்படாததும் ஆம். **விளையாநிற்கும்** என்பது பாடமாயின் ஆசைபொங்கி மேவிய நெஞ்சினுள் அவ்வாசையினையன்றி வேறு ஒரு விருப்பமும் மிகவிளைகின்றது என இக்கருத்துக்கேற்ப உரைத்துக்கொள்க. **விளைதல்** - சிறிதாயத் தோன்றி வளர்தல்.

**தேவர்** - நாணன் சொல்லியதனால் இவர் அறிந்த குடுமித்தேவர். **அங்குத் தேவர் எங்கே இருப்பது?** என்க. **எங்கே** - மலையில் அவர் இருப்பதாகக் குறித்த இடம் எது? என்றபடி. **அங்கு** - அக்குன்றில் - சேணுயர்மலையில். **போது** - போவாயாக.

தத்துவ தாத்துவிகங்களாகிய தொன்னூற்றாறும் தன்னின் வேறாகக்கண்டு கடந்த நிலையில் உடல்முதலிய கருவிகரணங்கள் பாரமாகக்காணப்படுக் கழல்வனவாம். அது வரை அவற்றிற்பற்றுண்டு அவற்றைச் சுமைஎன்றுணராது சுகமென்றும், அவற்றையே

தானென்றும் கண்டு, சுமந்து திரிந்த உயிர் இப்போது சுமை என்று அறிந்தது. பெரும்பாரம் சுமந்திளைத்தவன் அது குறையக்குறையக் களிப்பதுபோல, இந்நிலையடைந்த உயிரும் களிப்படையும். இப்பாரம் குறையக்குறைய இறைவனை அணையும் ஆசையும் மிகும் அதுவரை ஆணவத்தோடு ஒற்றித்துநின்று அறிவிழந்த உயிர் அதனைக் கண்டு உவர்ப்படைந்து விட்டுப் பின்னர் மெய்ஞ்ஞானத் தாளுவினோடு ஒற்றித்து நிற்கத் தலைப்படும்.

> "அருத்தியால் குரம்பை தன்னிற் றெண்ணூற்றங் கறுவர் நின்று
> விருத்திதான் றருக வென்று வேதனை பலவுஞ் செய்ய
> வருத்தியால் வல்ல வாறு வந்துவந் தடைய நின்ற
> வருந்தியார்க் கன்பர் போலு மதிகைவீ ரட்ட னாரே" (4)

என்ற திருநேரிசைக்கருத்தையும் காண்க. இவ்விளைவின்றன்மை இப்பாட்டிற் றிண்ணனார் தம் அனுபவநிலையைக் கூறும்வகையாற் குறிக்கப்பட்டது. இது 96 பாட்டுக்களையுங் கடந்த மேல் 97 வது திருப்பாட்டாக அமைந்த தெய்வீக அமைப்பும் காண்க. மாணிக்க வாசகசுவாமிகள் திருப்பெருந்துறையை அடையும்போது இத்தன்மைத்தானதொரு நிலையை அடைந்தனர் என்ற வரலாறுங்காண்க. 97

747. உரைசெய்து விரைந்து செல்ல வவர்களு முடனே போந்து
கரைவளர் கழையின் முத்துங் காரகிற் குறடுஞ் சந்தும்
வரைதரு மணியும் பொன்னும் வயிரமும் புளினந் தோறுந்
திரைகண்முன் றிரட்டி வைத்த திருமுக லியினைச் சார்ந்தார். ௯௮

(இ-ள்.) வெளிப்படை. (திண்ணனார் மேற்கண்டவாறு) சொல்லி விரைந்துசெல்ல, அவ்விருவரும் கூடவே சென்று, கரையில் இருமருங்கும் ஓங்கிவளரும் மூங்கிலின் முத்துக்களையும், காரகிற் கட்டைகளையும், சந்தனமரங்களையும், மலையில் விளையும் ஏனை மணிகளையும், பொன்னையும், வயிரத்தையும் மணற்குவியல்களிலெங்கும் அலைகளால் முன்றிரட்டிச் சேர்த்துவைத்த திருமுகலியாற்றினை அணைந்தார்கள்.

(வி-ரை.) விரைந்து செல்ல - விரைவு முன் ஆசையும் விருப்பும் என்று சொன்ன வற்றாலுளதாகிய ஆவல் மிகுதி குறித்தது. திண்ணனார் - செல்ல எனக.

செல்ல - போந்து - (மூவரும்) - திருமுகலியினைச் சார்ந்தார் எனக் கூட்டுக.

**கரைவளர் கழையின் முத்தும்** - முகலியின் இருகரையிலும் மூங்கில்கள் உயர வளர்ந்திருக்கின்றன. அவற்றின் முதிர்ந்தவற்றில் விளைந்து உதிர்ந்த முத்துக்களை ஆறு அடித்து வந்தது என்றதாம். "அலைகொள்புன லருவிபல சுனைகள்வழி யிழியவய னிலவு முதுவேய், கலகலென வொளிகொள்கதிர் முத்தமவை சிந்துகா ளத்திமலையே" (5) என்ற ஆளுடையபிள்ளையார் தேவாரங் காண்க.

**கார் அகில் குறடு சந்து** - "சந்தமார் அகிலொடு உந்துமாமுகலியின் கரையினில்" என்ற ஆளுடையபிள்ளையாரது திருக்காளத்தித் தேவாரங் காண்க. **குறடு** - கட்டைகள். அகிற் குறடும் சந்தும் முறிந்து வீழ்ந்தனவும் உலர்ந்தனவும் வெள்ளத்தில் பறிக்கப்பட்டனவுமாம்.

**வரைதருமணி** - முத்தும் பவளமும் வயிரமும் ஒழிந்த ஏனையமணிகள். முத்து முன்னாகக் கூறினார். பவளம் கடல்படுபொருளாம்.

**வயிரம்** - விலையில் மிகுதியும், குணத்திற் குறைவுமுடைத்தாதலால் வேறு பிரித்துக் கடையிற் கூறினார்

**புளினம்** - அருவியின் நீரோட்டத்தாற் குவிக்கப்படும் சிறுமணற் குவியல்கள்

**திரைகள்முன் திரட்டிவைத்த** - சலசலவென்று அலைந்து ஓடும் அருவிநீரால் மணற் குவியல்களும் அவற்றின் ஓரத்தில் அவ்வவற்றின் மென்மை வன்மைக் கேற்றபடி மணி

பொன்முதலியனவும் வரிசைபெறச் சேர்த்துவைத்த முன்-முன்னால் காணத்தக்கதாகக் கரையில் ஓரத்தில். "முத்துமாமணிகளும் எத்துமாமுகலியின் கரையினில்" என்ற ஆளுடையபிள்ளையார் தேவாரமுங் காண்க.

**திரட்டிவைத்த திருமுகலி** - "அறியாம லேனு மறிந்தேனுஞ் செய்து, செறிகின்ற தீவினைக ளெல்லாம்-நெறியினுறு, நன்முகிலச்சோ காளத்தி நாத னடிபணிந்து, பொன்முகலி யாடுதலும் போம்" (74) என்று கயிலைபாதி காளத்திபாதியந்தாதியிற் கூறியபடி, தன்னையணைந்து தன்னுடைப்படிந்தோர் சிவபூசைசெய்து முத்திபெற்று உய்யும்பொருட்டுப் பூசைக்குரியபொருள்களாய நறும்புகையூட்ட அகிலும், அரைத்து மெய்ப்பூசிட்டுச் சாத்தச்சந்தனமும்,மஞ்சனப்புனலினும் ஆக்கியநீரிலும் இட மணிகளும் பொன்னுமாக வெளிப்பட, முகலியாறு, திரட்டிக் காட்டிவைத்தது என்றதொரு தற்குறிப்பேற்றக் குறிப்புமகாண்க. 236 பார்க்க. முகலியினுட்படிந்தோர் முத்திபெறுவாரென "உலகி லெங்கணு மில்லதோ ரதிசய மொன்றித, தலைமை கொண்டபொன் முகலியுட் டாழ்ந்தவ ரியாருந், தொலைவி றுன்பங்கள் பலதருஞ் சூழ்வினைப் பிறப்பா, மலைநெ டுங்கடற் கரைமிசை யேறுவ ரன்றே" (பொன்முகலிச்சருக்கம் - 91) என்று அதிசயச்சுவை பெறச் சீகாளத்திப்புராணங் கூறும் "இம்மை யேதருஞ் சோறுங் கூறையும்" என்றபடி தன்னை அணைந்தார்க்கு அந்த முத்தியேயன்றி இம்மைநலங்களையும் தருதற்பொருட்டு இந்தி முன் மணியும்பொன்னும் முதலியவற்றைத் திரட்டிவைத்திருக்கும் என்றதொரு குறிப்புப்பொருளுமகாண்க. 98

*748. ஆங்கதன் கரையின் பாங்கோ ரணிநிழற் கேழ்விட்டு
வாங்குவிற் காட்ட னன்னை மரக்கடை தீக்கோல் பண்ணி
"யீங்குநீ நெருப்புக் காண்பா யிம்மலை யேறிக் கண்டு
நாங்களவந் தணைவோ" மென்று நாணனுந் தாமும் போந்தார். ௯௯

(இ - ள்) வெளிப்படை. அங்கு அவ்வாற்றின் கரையின் பக்கத்தில் ஒரு அமைதியான மாநிழலிலே பன்றியின் உடலை யிடுவித்து வளர்ந்த வில்லேந்திய காடனை நோக்கித் திண்ணனார் "மரத்தினால் தீக்கடைகோல் செய்து இங்கு நீ நெருப்பு உண்டாக்குவாயாக, இந்த மலையிலேறி நாங்கள் கண்டுவந்து சேருவோம்" என்று சொல்லி நாணனும் தாமும் சென்றார்கள்.

(வி - ரை) **அணிநிழல்**-அணி - அழகு. இங்கு அமைதி குறித்தது. **நிழல்**-ஆற்றின் கரையினிற் சோலையிலுள்ள மரநிழல். "மந்தமார் பொழில்வளர் "என்ற தேவாரமுங் காண்க. இறந்த பன்றியின் உடலை வெயிலில் இட்டுவைத்தால் ஊன் விரைவிற் கெட்டுவிடும். ஆதலின் அதனை இடத்தக்க நிழல் வேண்டும். தீக்கடைந்து காணவும்,தீவளர்த்து ஊனை வதக்குதற்கும் காற்று மிகுதியில்லாத அமைதியான இடம்வேண்டும். ஆதலின் இவ்வமைதிகள் பெற்ற மரநிழல் என்பார் **அணிநிழல்** என்றார்.

**மரத் தீக்கடைகோல்** என மாற்றுக. **தீக்கடைகோல் பண்ணுதல்** - கடைந்து நெருப்பு உண்டாக்குதற்குத் தக்கபடி காய்ந்தமைந்த மரக்கட்டையை நேர்செய்தல். "அக்கினியின்கூறு அதிகமாயிருக்கின்ற மரத்தின்கொம்பைத் தீக்கடைகோலாகச் செய்து" என்பர் மகாலிங்கையர். இதனை அரணி என்பது வடமொழி. "விறகிற்றீயினன் முறுக வாங்கிக்கடைய" என்ற அப்பர்சுவாமிகள் தேவாரமும், "காட்டாகிற் றோன்றி" என்ற சிவஞானபோதம் ஒன்பதாஞ்சூத்திர உதாரணவெண்பாவும் அதற்குக, கோலைநட்டுக் கயிற்றினாற் சுற்றிக்கடையவே காட்டத்தினின்று அங்கி தோன்றுமாறுபோல என்ற வுரையுங் காண்க. மரத்தில் தீ மறைந்துள்ளதென்றும், விரையக் கடைதலால் அது வெளிப்படுமென்றும் உள்ள தத்துவஞானம் இவ்வேடர்கள் காட்சியளவையா லறிந்த உண்மையாம். இதனை இவர்கள் தமக்கு வேண்டியபோது தீ உண



திருக்காளத்தித் திருமலையும் திருக்கோயிலும் பொன்முகலியாறும்

—பாட்டு - 749 - பக்கம் - ௯௪௧.

டாக்கப் பயன்படுத்திக் கொள்வா யாகங்களில் அரணியில் தீக்கடைந்து எடுத்தல் மரபு. "அரணி தந்தசுட ராகுதி தோறும" (247) நெருப்புப்பெட்டி - தீப்பெட்டி - (Match box) இல்லாவிடின் உயிர்வாழ முடியாதபடி தாழ்ந்து விட்டநிலையில் உள்ள இந்நாள் "நாகரிக" உலகர், தேவையான சிறுபொருளையும் தமக்குத்தாமே உதவி செய்துகொள்ள இயலாதவாறு பரதந்திரப்பட்ட தமது அபாய நிலையை உணர்ந்து கொள்வாரகளானால் அவ்வுணர்ச்சி நற்பயனதருவதாம்

**நெருப்புக் காண்பாய்** - நெருப்பை உண்டாக்குவாய் உள்ளே மறைந்துநின்ற பொருளாகியதீயை வெளிப்படச் செய்வாய்

**கண்டு**-"நல்ல காட்சியே காணும்"(745)என்றபடி அககாட்சிகண்டு.விறகிலமறைந்த நெருப்பை நீ கோலாற்கடைந்து காண்பாய் முன்னைப்பிறவியில் "வஞ்சமனத் தஞ் சொடுக்கி வைகலுநற பூசனையால், நஞ்சமுது செய்தருளு நம்பி யெனவே நினைந்து"ம், "உறவுகோல்நட்டு உணர்வுகயிற்றினால் முறுகவாங்கிக் கடைந்"தும் நான தியானித்துத் தவஞ்செய்துகண்ட பொருள் இப்பிறவியில் இதுவரை மறைந்துநின்றது,அதனை இம்மலை மேல் ஏறி வெளிப்படக்காண்பேன் என்றதொரு குறிப்புமகாண்க.

**நாணனும் தாழும்** - பின்வரக்கடவனுகிய நாணன வழிகாட்டி முனசெல்வதால் (752) நாணனும என் முனவைத்துக் கூறினார்　　99

749.　அளிமிடை கரைசூழ சோலை யலர்கள்கொண் டணைந்த வாற்றின
　　றெளிபுன லிழிந்து சிந்தை தெளிவுறுந் திண்ண னார்தாம்
　　களிவரு மகிழ்ச்சி பொங்கக் காளத்தி கண்டு கொண்டு
　　குளிர்வரு நதியூ டேகிக் குலவரைச் சாரல் சேர்ந்தார்.　　கூ00

**(இ - ள்)** வெளிப்படை வண்டுகள்மொய்த்த கரையினைச்சூழ்ந்த சோலைகளின் மலர்களைத் தாங்கிக்கொண்டு அணைந்த முகலியாற்றின் தெளிந்தபுனலிலே இறங்கிச் சிந்தைதெளிதலுறுகின்ற திண்ணனார், களிப்புவருதற்கேதுவாகிய மகிழ்ச்சி மேனமேற் பொங்கத் திருக்காளத்திமலையைக் கண்டுகொண்டே குளிர்ச்சியோடு வருகின்ற அந்நதி யின் ஊடேபோய் உயர்ந்தமலைச்சாரலிற் சேர்ந்தனர்

**(வி - ரை) அளிமிடைசோலை** எனக் **அலர்கள் கொண்டணைந்த ஆற்றின்** - திண்ணனாரை எதிர்கொள்வதற்கு மங்கலப்பொருளாகிய மலர்களைக்கொண்டணைந்த தென்ற பொருளும் காண்க

"வண்டி ரைத்தெழு செழுமலர்ப் பிறங்கலு மணியுமா ரமுமுந்தித்
தண்ட லைப்பல வளத்தொடும் வருபுனற் சூழ்ந்துசே வடிதாழ்ந்
தெண்டி ரைக்கடற் பவளமும் பணிலமுஞ் செழுமணித் திரளுமுந்துங்
கொண்டி ரட்டியுந் தோதமங் கெதிர்கொளக் கொள்ளிடங் கடந்தேறி" (146)

என்ற திருஞானசம்பந்தநாயனார் புராணமுங்காண்க. முகலியாறு மலர்களை வாரிக் கொண்டுவருமியல்புடையதெனபது "முழுமலர்த் திரள்களும் எத்துமா முகலியின்" என்ற ஆளுடையபிள்ளையார் தேவாரத்தானுமறிக.

**தெளிபுனல் இழிந்து சிந்தைதெளிவுறும்** - இதன் நீரினைத் தொடுதலாலே மயல் தீர்ந்து மனந்தெளியும் என்றமையாற் றீர்த்தச்சிறப்புரைத்ததுமாம் "ஆடக முகலிதா னுண வப்பெயர், நீடிய வழக்கற நீக்கு நீர்தாய" (79) என்ற சீகாளத்திப்புராணமுங் காணக "ஆவதென்" (746) எனமுன்னர் மனந்தெளியாது நின்றநிலைமாறி இப்போது தெளிவுறுகின்றது என்றபடி

**தெளிபுனல்** - என்றுமென்றும் தெளிவுடையது. **தெளி** - தெளிவிக்கும் எனக் கொண்டு சிந்தைமயல்தீர்த்துத் தெளிவிக்கும்புனல் என்பதுமாம்.நாயனார்இவ்வாற்றின

அடைந்தது தைமாதமாகலின் அப்பருவம் இதில்தெளிவுடையதாய மிக்க நீர் ஓடும் காலமாம் என்பதும் காண்க.

**சிந்தை தெளிவுறும்** - இதுவரைநின்ற தமது சூலம் முதலிய இவ்வுலகச்சார்பாகிய மயக்கவுணர்ச்சிகளும், "ஆவதென்" என்ற ஐயமும் நீங்கி உண்மையுணர்ச்சியாகிய சிவ ஞானந்தத்திற் றெளிவுபொருந்தவும்.

**திண்ணனார்தாம்** - மேற்பாட்டிற்கூறியபடி போந்தஇருவருள் **இவர்தாம் கண்டு கொண்டு** என்பதாம்.

**களிவருமகிழ்ச்சிபொங்க** - **களி** - மகிழ்ச்சியின் முதிர்ந்த அவசமாகிய நிலை, களிப்புவருமாறு - மகிழ்ச்சிமீக்கூர

**காளத்தி கண்டுகொண்டு** - உள்ளும் புறமும் காட்சிக்கு வேறொன்றும் விடய மாகாமற் காளத்தியையே கண்டவண்ணமாக

**நதிஊடு** - நதியின் குறுக்கே கடந்து **சாரல்** - சார்ந்தஇடம் - மலைச்சரிவு 100

750. கதிரவ னுச்சி நண்ணக் கடவுண்மால் வரையி னுச்சி
யதிர்தரு மோசை யைந்து மார்கலி முழக்கங் காட்ட,
"விதுவென்கொ? னாணா?"வென்றாக்"கிம்மலைப் பெருந்தேன் சூழ்ந்து
மதுமல ரீக்கண் மொய்த்து மருங்கெழு மொலிகொ" லென்றான்.

(இ - ள்) கதிரவன் உச்சிநண்ண - ஞாயிறு வானவீதியின் உச்சிசேர, கடவுள் காட்ட - தெய்வத்தன்மையுடைய பெரிய அம்மலையின் உச்சியில் அதிர்கின்ற ஐந்து தேவதுந்துபிஓசைகளும் கடல்முழக்கம்போல முழங்க, "இது ". என்றார்க்கு "நாணனே இது என்கொல்!" என்று கேட்ட திண்ணனாருக்கு, "இம்மலை. ஒலிகொல்" என்றான்- "இம்மலையின் பெருந்தேனைச் சூழ்ந்துகொண்டு தேன்பொருந்திய மலர்களிலிருந்து வரும் தேனீக்கள் மொய்த்துப் பின்பு பக்கங்களிலே மீள எழுகின்றதனால் உள்ளதாகிய ஒலிபோலும்" என்று நாணன் கூறினான்

(வி - ரை) **கதிரவன் உச்சிநண்ண** - பகலில் உச்சிப்போதாக **கதிரவன்**-ஞாயிறு- சூரியன் அவனது கதிர்களே கதிரெனத் தக்கன் என்பது **உச்சி** - மேலிடம். இங்கு வானவீதியின்முகட்டைக் குறித்தது உருண்ட நிலஉலகமாகிய அண்டம் தன்னையும் சுற்றிக்கொண்டு சூரியனையும் சுற்றிவரும் இவ்வாறு சுற்றிவருமவட்டம் வானவீதிஎனப் படும் "சென்றுருளும் கதிரிரண்டும் விசும்பில வைத்தார்" என்ற அப்பர்சுவாமிகள் திருத்தாண்டகத்தில் இவ்வண்டங்களுக்குச் செலலுதல் உருளுதல ஆகிய இரண்டு சுழற்சிகள் உள்ளநிலை குறித்தது காண்க நிலஉலக அண்டம் தன்னைச் சுற்றிய சுழற்சி ஒருநாள் அதனிற் சூரியனுக்கு எதிர்ப்படும் பாதி பகல் எனப்படும் அதனிற் பாதியில் ஞாயிறு உச்சியிற் காணப்படுவன். இந்நேரமே நிலத்தில் அவ்விடத்துக்கு உச்சியாம். இதனை உலக வழக்கில ஞாயிற்றின்மேலேற்றி அவன் உச்சிசேர என வழங்கப்படும். இதுபற்றியே ஆசிரியரும் இங்குக் **கதிரவ னுச்சி நண்ண** என்றார் "உச்சம் போதா லூரூர் திரிய" என்ற ஆளுடையநம்பிகள் (திருக்கச்சூராலக்கோயில்) தேவாரமும், "கடும்பகற் போது" என அதனை விரித்துரைத்த ஏயர்கோன்கலிக்காமநாயனார் புராணமும் (178) காண்க. இதுபற்றிமுன் 685-ல உரைத்தவை பார்க்க.

**கடவுள் மால் வரையின் உச்சி**-**கடவுள்**-இங்குத் தெய்வத்தன்மை குறித்தது இத் தன்மைத்தாதலினன்றே இம்மலை தன் காட்சியளவின் இவர்பால உலகஆசை போக்கி வேறுஆசையும் விருப்பும்பொங்க விளைவித்தது (745 - 746) **மால்** - பெரிய **கடவுள் வரை** கடவுள் எழுந்தருளியிருக்குமமலை என்றலுமாம். **உச்சி**-இங்கு மலையின்மேலிடம்- முகடுகுறித்தது. **மால்** - மயக்கம் எனக்கொண்டு கடவுளிடத்து மாலவிளைக்கும் மலை என்றலுமாம். "தேவமால" (769) என்றது காண்க.

***ஓசை ஐந்து** - தேவதுந்துபி என்னும் தேவவாத்திய ஓசைவிசேடங்கள் ஐந்து. இவை தேவர்கள் இம்மலைமேல் வந்து இறைவனை உச்சிப்போதில் வழிபடும்போது முழக்கப்படுவன. இது தென்கயிலையாதலின் கயிலையிற்போலவே இங்கும் பிரமன் முதலிய தேவர்கள் வந்து வழிபடுவர். இவ்வரலாறுகள் சீகாளத்திப்புராண முதலியவற்றுட் காண்க. இங்கு ஓசை ஐந்து என்பன ஹ்ருஸ்வம், தீர்க்கம் முதலாகிய உச்சரிக்குமவகை ஐந்து என்று கூறுவாருமுண்டு. **ஆர்கலி முழக்கம்காட்ட** - கடல்முழக்கம் போல முழங்க.

கயிலையில் தேவர்கள் வந்து வழிபடுமுண்மை "மேன்மை நான்மறை நாதமும் விஞ்சையர், கான வீணையி னோசையும்" (14), "பனிவிசும்பி லமரர் பணிந்துசூழ், அனித கோடி யணிமுடி மாலையும்" (15) என்ற திருப்பாட்டுக்களாலறிக. காளத்திமலை திருக்கயிலையேயாம் என்பது முன்னர் "திருமலை" (744) என்றவிடத்து உரைத்தவற்றானறிக.

**"இது என்கொல் நாணா!" என்றார்க்கு** - நாணா! இதுஎன? என்ற திண்ணனாருக்கு வினையாலணையும் பெயர். தேவதுந்துபி கேட்ட திண்ணனார் தாம் முன் கேட்டறியாத அது இன்னதென்றறியவாராமையின் ஐயமுற்று **இது என் கொல்?** என வினவுகின்றார். **கொல்** - ஐயப்பொருள் தரும் இடைச்சொல். "கொல்லே ஐயம்" (தொல் - இடை - 20). நாணனும் இவ்வாறே "ஒலிகொல்" என ஐயப்பட விடைகூறுவதும் காண்க. பாசவுலகம் திண்ணனாரை விடுகின்றதும், வீட்டுலகம் தொடுகின்றதுமாகிய நிலை இது. உலகத்தொடர்புணர்ச்சியுடன் திண்ணனார் உலகினரை விளித்துப் பேசிய இறுதிப் பேச்சு இதுவேயாம். இதன்பின்னர்ச் சின்னேரத்தில் இறைவனருட் பார்வையால் அன்புருவமேயாகித் தம்மையும் மறந்த நிலைபெறுகின்றாராதலின் (753) உலகினருடன் பேச்சொழிந்தது எனக் (757ல் கேட்டது ஒருவரையும் விளிக்காது தாமாகப் பேசியதாம்.)

**இம்மலைப் பெருந்தேன் ..ஒலிகொல்!** - இவர் கேட்டதுபோலத் தேவதுந்துபி கேட்கப்பெறும் புண்ணியவசமில்லாதவன் நாணன். அவன் எந்த ஓசையும் கேட்டானல்லன். ஆதலின் ஒலிகொல் என்று ஐயத்தாற் கூறினான். பெருந்தேன் ஓசைகளை அவன்முன் கேட்டறிந்த பழக்கத்தால் திண்ணனார் கேட்டுவினவிய ஓசையும் அதுவாகத்தானிருத்தல் வேண்டும் என்றுகருதி விடைகூறினான். முன்னர் "நல்ல காட்சியே காணும்", "கோணமில் குடுமித்தேவர் இருப்பர் கும்பிடலாம்" என்று கூறியபடி இங்கும் அவனை யறியாமலே, உண்மை, அவன் வாக்கில் வெளிப்பட்டுத் திண்ணனாரை மேலும் இறைவனிடத்தில் ஈடுபடுத்திச் செலுத்தியது. இது அவன் கூறிய மூன்றாவது உபதேச மொழியாயிற்று. என்னை? **இம்மலைப் பெருந்தேன் சூழ்ந்து** இம்மலையில் எழுந்தருளிய பெரிய இன்ப வடிவாகிய இறைவனைச் சூழ்ந்துகொண்டு; **மதுமலர் ஈக்கள்**-இறைவனை நாடியணையும் சிந்தையுடைய பக்குவான்மாக்கள், **மொய்த்து மருங்கு எழும் ஒலி** - நெருங்கி வாழ்த்தித் துதிக்கும் ஒலி, என்ற உண்மைப்பொருள்படச் சிறப்பதும் காண்க. இறைவனைப் பெருந்தேனாகப் பாராட்டினர் பெரியோர் "அந்த இடைமருதி லானந்தத் தேனிருந்த, பொந்தைப் பரவிநாம் பூவல்லி கொய்யாமோ" என்ற திருவாசகமும், "புகழ மாமருதிற் பெருந்தேன் முகந்துகொண் டுண்டு" என்ற திருவிடைமருதூர் மும்மணிக்கோவையும் (3) முதலிய திருவாக்குக்கள் காண்க. 242ம் பாட்டின்கீழ் உரைத்தவையும் காண்க.

**பெருந்தேன் சூழ்ந்து** - ஒவ்வோர் தேன்கூட்டிலும் தலைமையான **இராணி ஈ** என்னும் பெருவண்டு ஒன்று உண்டு என்றும், அதன் ஆணைப்படியே அந்தக் கூட்டினைச்

* இவ்வகையான தேவஓசைகள் தென்கைலாயமென்னப்படும் **வெள்ளிமலையின்மேல்** (இது கோயம்புத்தூர்ச் சில்லா திருப்பேரூருக்கு மேற்கில் 20 நாழிகையளவில் உள்ள நீண்ட மலைத்தொடரின் ஒரு குன்று) இப்போதும் நள்ளிரவிலும் அதிகாலையிலும் கேட்கப்படுகின்றன. பேரூர்ப்புராணம் விமமிதப்படலம் பார்க்க.

சூழ்ந்துவாழும் எல்லா ஈக்களுமகூடிய சமூக வாழக்கைகததிறமும நடைபெறும என்றும், பிறவும நவீனா கூறும ஆராயசசியுரைகளுக்கிணங்க இங்குப் பெருந்தேன் என்பதறகுப பெருந்தேனவணடு எனறுரைததலும பொருந்தும். 101

751. முன்புசெய் தவத்தி னீட்ட முடிவிலா வின்ப மான
வன்பினை யெடுத்துக் காட்ட வளவிலா வார்வம் பொங்கி
மன்பெருங் காதல் கூர வள்ளலார் மலையை நோக்கி
யென்புநெக் குருகி யுள்ளத் தெழுபெரு வேட்கை யோடும், ௧௦௨

752 நாணனு மன்பு முன்பு நளிர்வரை யேறத் தாமும்
பேணுதத் துவங்க ளென்னும் பெருகுசோ பான மேறி
யாணையாஞ் சிவத்தைச் சார வணைபவர் போல வையர்
நீணிலை மலையை யேறி நேர்படச் செல்லும் போதில், ௧௦௩

753. திங்களசேர் சடையார் தம்மைச் சென்றவர் காணு முன்னே
யங்கணர் கருணை கூர்ந்த வருட்டிரு நோக்க மெய்தத்
தங்கிய பவத்தின் முன்னைச் சார்புவிட் டகல நீங்கிப்
பொங்கிய வொளியி னீழற் பொருவிலன் புருவ மானார், ௧௦௪

751 (இ - ள்) முன்பு ... காட்ட - முன்னேசெய்த தவத்தின் தொகுதி முடிவில்லாத இன்பமாகிய அன்பை எடுத்துக்காட்டாநிற்ப, அளவிலா ... கூர - அளவில்லாத ஆர்வம்பொங்கி நிலைத்த பெருங்காதலாகச் சிறக்க, வள்ளலார் .. வேட்கையோடும் - வள்ளலாராகிய இறைவரது மலையைநோக்கி எலும்புகள் உள்ளுருக உள்ளத்தினுள்ளே எழுந்த பெரியஆசையோடும், ௧௦௨

752 (இ - ள்) நாணனும ... ஏற - நாணனும அன்பும தமக்குமுன்னே குளிர்ந்த மலையை ஏறிச்செல்ல, தாமும - திண்ணனார்தாமும, பேணு ... போல - பேணுகின்ற தத்துவங்கள் என்கிற பெருகும படிகளையேறிச் சத்தியேவடிவமாகிய சிவத்தைச்சார அணைபவர்களாகிய சிவயோகிகள்போல, ஐயர் ... போதில் - ஐயரது நீண்டநிலைமையுடைய மலையைஏறி நேர்பட்ட போகும்போதில், ௧௦௩

753 (இ - ள்) திங்கள்சேர் ... எய்த - (அவ்வாறு) சென்ற திண்ணனாராகிய அவர் பிறைச்சந்திரன் சேர்ந்த சடையாரைக் காணுமுன்னர் அங்கணருடைய கருணை மிகுந்த அருள்கொண்ட திருநோக்கம் இவர்மேல் பொருந்த, தங்கிய ... நீங்கி - தங்கிய பிறவியின் முன்சார்புகள் இவரைவிட்டுஅகல அவற்றினின்று நீங்கி, பொங்கிய ... ஆனார் - பொங்கியஒளியின் நீழலிலே ஒப்பற்றஅன்பே தமதுஉருவமாக ஆயினார். ௧௦௪

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டன.

751 (வி - ரை) முன்பு செய்தவத்தின் ஈட்டம் - முன்பு - முன்பிறவி. செய் தவத்தின் ஈட்டம்-அருச்சுனனாயிருந்து இவர்செய்த தவங்களின் தொகுதி. அதற்கு முன் பல பிறவிகளினுஞ்செய்த தவங்களெல்லாம் அவ்வருச்சுனப் பிறப்பிற் றவஞ்செய்தற்கேதுவாயின வெனக் "தவமுந் தவமுடையார்க் காகும்" என்றதுங் காண்க. இவற்றின் வரலாறு மாபாரதத்தில் அருச்சுனன்றீர்த்தயாத்திரைச் சருக்கம், அருச்சுனன்தவநிலைச்சருக்கம், சீகாளத்திப்புராணம் சிலந்திமுதல் முற்கதைச்சருக்கம் முதலியவற்றிற் கண்டுகொள்க. இத்தவத்தின் பெருமை,

"வஞ்சமனத் தஞ்சொடுக்கி வைகலுநற் பூசனையால்
நஞ்சமுது செய்தருளு நம்பியென வேகினையும





பொனமுகலியாறறினினறும் கணணபபா திருமலை ஏறிசசெனற படிகள

—பாட்டு - 752 - பககம - ௩௯௪





பெருநதலையூா (கோவை சிலலா) கோயிலும்,

அதில அருசசுனா - கணணபபா ஒருசேரக் காணும திருவுருவஙகளும.

—பாடடு - 751 - பககம - ௯௪௫

பஞ்சவரிற் பார்த்தனுக்குப் பாசுபத மீந்துகந்தான்
கொஞ்சுகிளி மஞ்சணவு கோளிலியெம் பெருமானே"

என்று ஆளுடையபிள்ளையாரால் பாராட்டப்பட்டது காண்க. இங்கு **முன்புசெய் தவத்தினீட்டம்** என்று பொதுப்படக் குறித்தாரன்றி, ஆசிரியர் அப்பிறப்பும் செய்தவமும் இன்னவெனக்கூறினாரல்லர் இஃதவர் மரபு என்க.

"உன்னுடைய மனக்கவலை யொழிநீயுன் னுடன்பிறந்தாள்
முன்னமே முனியாகி யெனையடையத் தவமுயன்றாள்" (திருநா புரா 48) எனவும்,
"பண்புரி நற்றவத்துப் பழுதினள் விறைவழுவுந் தொண்டர்" (ஷை) எனவும்,
"வாள் திருத்தொண்டி னெறிவாழ,வருஞானத் தவமுனிவர் வாகீசர்"(ஷை)எனவும்
அப்பர் சுவாமிகளது முன் பிறப்பைப்பற்றிக் குறித்தனர்.

"பண்டுதிரு வடிமறவாப் பான்மையோர் தமைப்பரமர்
மண்டுதவ மறைக்குலத்தோர் வழிபாட்டி னளித்தருள" எனவும்,
"தொண்டினிலை தரவருவார் தொடர்ந்த பிரிவுணர் வொருகாற்
கொண்டெழலும்" எனவும்,
"தம்மேலைச் சார்புணர்ந்தோ? சாரும்பிள் ளைமைதானோ?" எனவும்,
"பவமறவென் னைமுன்னா ளாண்டவப் பண்பு கூட்ட
நவமலர்ப் பாதங் கூட்டு மெனனுநல் லுணர்வு நல்க" (1245) எனவும்,

ஆளுடையபிள்ளையாரது முன்னைத் திருத்தொண்டினிலையைக் கூறினர் இவ்வாறு குறிப்பாற் கூறுவதன்றி அவையின்னவென விரித்தாரலர். அவை அவ்வப்புராணச் சரிதங்களிற் கூறவேண்டிய நியதியும் இன்றியமையாத தொடர்பும் இன்மையான என்க.

ஆளுடையநம்பிகளது முன்பின்வரலாறுகள் திருமலைச்சருக்கத்திலும் வெள்ளானைச்சருக்கத்திலும் கூறியுள்ளாரே? எனின், அவர் இப்புராணகாவியத்தலைவராதலாலும் இப்புராணத்துக்கு மூலமாகிய திருத்தொண்டத்தொகை வரலாறும், இப்புராணம் வந்தவரலாறும் கூறவேண்டியது இன்றியமையாததாலாலும் கூறினர் என்க.

கோச்செங்கட்சோழர் ஆதிமூர்த்தியருளால் முன்னுணர்ந்து பிறந்து அரசாண்டு தான் அமைத்த சிவாலயங்களனைத்தும் யானைபுகாத மாடக்கோயில்களாக எடுப்பித்த சரித அமைப்புக்கூறுதல் இன்றியமையாத தொடர்பாதலின் அவரது முன்சரிதங்கூறினாரென்பது காணப்படும். எனவே இவற்றால் ஆசிரியர் இம்மரபு பிழையாமை காண்க.

"வாமானன்றோ வல்ல வயப்போர் விசயனைப்போல்,தாமா ருலகிற் றவமுடையார் - தாமாராக்குங், காண்டற் கரியராயக் **காளத்தி யாள்வாரைத், தீண்டத்தாம் பெற்றமை யாற் சென்று"** (70) என்ற திருப்பாட்டாலும், "வாளா பொழுது கழிக்கின்றார் மானுடவர், கேளாகொ லந்தோ கிறிபட்டார் - **கீளாடை, யண்ணற் கணுக்கராய்க் காளத்தி யுண்ணின்ற, கண்ணப்ப ராவார் கதை**" (12), "**கதையிலே கேளீர்** கயிலாய நோக்கிப், புதையிருட்கண் மாலோடும் போகிச் - சிதையாயச்சீரத், தீர்த்தனபாற் பாசுபதம் பெற்றுச் செருக்களத்திற், **பார்த்தன்போர் வென்றிலனோ பண்டு**" (13) என்றுகூட்டியுரைத்த தொடர்பாலும், கயிலைபாதி காளத்திபாதியந்தாதியிலும், "ஒட்டி, விசையன் விசையளப்பான் வேடுருவ மாகி, யசைய வுடற்றிரியா நின்று - விசையிற்ற, பேசுபதப் பான் பிழைபொறுத்து **மற்றவர்க்குப், பாசுபத மீந்த பதம் போற்றி** - (அந்த) **நேசத் தால்**, வாயினீர் கொண்டு மகுடத் துமிழ்ந்திறைச்சி, யாயசீரப் போனகமா வங்கமைத்துத் - தூயசீரக், **கண்ணிடந்த கண்ணப்பர்** தம்மைமிகக் காதலித்து, **விண்ணுலக** மீந்த விறல்போற்றி - மண்ணின்மேல், காளத்தி போற்றி கயிலைமலை போற்றி" என்று கூட்டியுரைத்த தொடர்பால்போற்றித்திருக்கலிவெண்பாவிலும் பதினொராந்திருமுறையில் நக்கீரதேவர் அருளியவாற்றால் இவரது முன்னொடர்பு அறியக்கிடத்தல்காண்க.

பாரதப்போர் வெல்லுதற்குப் பாசுபதப்படை பெறும்பொருட்டு அருச்சுனர் திருக்கயிலாயமலைச்சாரலில் அரியதவஞ்செய்ய இறைவர் வெளிப்பட்டனர் அவரைக் கண்டு அர்ச்சுனர் பாசுபதம் வேண்டாது முத்தியை வேண்டினர் அவர் "நீவிரும்பித் தவஞ்செய்த பாசுபதத்தை இப்போது தருவோம் இன்று வேண்டிய முத்தியைக் காளத்தியிற் றருவோம் எம்மை வேடனென்று இகழ்ந்தமையால் வேடனாகப்பிறந்து காளத்தியில் எம்மை அடைவாய்" என்றருள அவ்வாறே அருச்சுனர் வந்து அடைந் தனர் என்று சீகாளத்திபுராணம் கூறும்.

"பத்தியிற் பணிந்துபின் பாண்டு மைந்தனு, 'மத்தவுன் னருளினு லடிய னேனுய், மெத்தவெம் பவத்தினுன் மிகவு நொந்தனன், முத்தியை யரு'ளென முதல்வன் கூறிடும் (63);

" 'வாங்குவிற் றடக்கையாய் வாரி சூழ்நிலத்,தோங்கிய பகைஞரை யொறுக்கு மாற்றினு னீங்கறு கணைபெறச் சிந்தை செய்துநீ, யோங்கிய தவமிக வுஞற்றி வைகினுய் (64) ,

"முன்னிய பகழிநீ கோடி முன்'னெனத், தன்னிகர் சங்கரன் றுன ளித்'தெமை, யின்னல்செய் வேடனென் றிகழ்ந்து கூறினை, யன்னதால் வேடுவ வாச ஞகியே(65),

"தென்றிசைக் கயிலையைச் சென்று சேர்ந்துநீ,குன்றவில் லன்புருக்கொண்டு நம்மைய[(66), னன்றிகொ ளிலிங்கபூ சனைநற் பத்தியா,லொன்றையு முணர்ந்திடா துவந்துசெய்தரோ

"கோலமே முதலிய விலங்கு கொன்றுநீ, சாலவே தசையமு தருத்திச் சாருநா ளேலவே முத்தியு மீதும் போ'வெனு, நீலமார் களத்திறை நீங்கி னுனரோ. (67)

என்பது சீகாளத்திப்புராணம் (சிலந்தி முதல முற்கதைச் சருக்கம்).

இறைவன் அருளியவாறே அருச்சுனர் வேடராய்ப் பிறந்து திண்ணனராய்த் திருக்காளத்தியை அடைந்தனர். முன்னர்த் தவஞ்செய்த திருக்கயிலைமலைச் சாரல் திருக்காளத்திமலைச்சாரல், முன்தவநிலையில் இறைவனைக்காண ஒருபன்றி துணைக் காரணமாயின்றதுபோல இங்குக் காளத்தியப்பரைக் காண்பதற்கும் ஒருபன்றி துணை யாய்வந்து அழைத்துச்சென்றது, என்றிவ்வாறு தொடர்புகள் பலவும் பொருந்தக் கண்டுகொள்க. காளத்திகயிலையேயாம் என்பது சீகாளத்திப்புராணம் நக்கீரச்சருக்கத் திலும் உணர்க. "கயிலாயத் துச்சி யுள்ளான் காளத்தி யானவனென் கண்ணு ளானே", "காளத்தி காணப் பட்ட கண்ணுதன்காண்" என்பவை தமிழ்வேதத் திரு வாக்குக்கள்.

**முடிவிலா இன்பமான அன்பினை எடுத்துக்காட்ட** - **முடிவிலா** - காலத்தா லும் இடத்தாலும் அளவுபடாத - முடிவுபெறாத "பேரா ஒழியாப் பிரிவில்லா மறவா நினையா அளவிலா மாளா இன்பம்" என்ற திருவாசகம் காண்க **முடிவு** - அழிவு என்று கொண்டு அழிவில்லாத என்றலுமாம் "இறவாத இன்ப அன்பு" என்றது காண்க உலகத்து இன்பங்கள் எல்லாம் ஒருகாலத்தில் அழிந்து ஒழிவன இறைவனது இன்பம் ஒன்றே என்றைக்கும் முடிவு இல்லாதது என்றதாம் "ற்றிலாப் பதங்கள் யாவை யுங் கடந்த இன்பமே என்னுடை யன்பே" என்ற திருவாசகத்திலும் இக்கருத்தே காண்க. **இன்பமான அன்பு** - அன்புதானே முடிவிலா இன்பமாகவிளையும். **ஆன** என்றது ஆயின - அதுவாயவிளைந்த-என்ற பொருளில்வந்தது "அன்பே சிவமாவ தாரு மறிகிலார்" என்ற திருமந்திரமுங்காண்க. அந்தமில் இன்பத் தழிவில் வீட்டுக்கு ஏது வாகிய அன்பு "இனியன் றன்னடைந் தார்க்கிடை மருதனே" என்றது தமிழ்வேதம்.

**எடுத்துக்காட்ட** - உள்ளிருந்து உயிருணர்ச்சிக்குப் புலனாக்க இவர்முன்பு தவஞ் செய்து பண்பட்டுத்திருந்தியமையால் அது அன்பினையும், அந்தஅன்பே முடிவான இன்பத்தினையும் இவர்க்கு உணர்த்தியன முன்னைத்தவமுடையாரே இவ்வாறு காண் பர் திருக்காளத்தியைக்காணும் ஏனையோர் எவரும் இவ்வாறு கண்டிலையாமைக்கு

இந்நிலைமையே காரணமாம். காட்ட - காட்டலால் எனக. பொங்குதற்குக் காரணங் கூறியவாறு.

**தவம்** என்றது ஈண்டுச் சிவபூசை குறித்தது. ஏனைத்தேவர்களை நோக்கிச் செய்வன முடிவிலா இன்பமான அன்பினைக் காட்டுந் தவமாகா "செத்துச் செத்துப் பிறப்பதே தேவென்று, பத்தி செய்மனப் பாறைகட் கேறுமோ" என்றதுகாண்க. மாபாரதம் 13-ம்நாட் போர்ச்சருக்கங் கைலாசயாத்திரை கூறியிடத்துப் "பாவை பங்கன் மேற் புரிந்தில வின்னமும் பூசை யென்றனன்", "மனமொன்றியே சிவாகம வுரையிற் சாத்தினன்" என்ற இவை முதலியவற்றானறிக. "தவத்தினி லுணர்த்த விட்டு" என்ற ஞானசாத்திரமுங்காண்க. ஈண்டுத் தவத்தினீட்டம் காட்டியமுறை வினை - நீர்வேட்கையால் குளிர்ந்த நதிகாணவந்த திண்ணனார் அரைக்காவதத்தில் மலைச் சாரற்சோலைகண்டார், அக்காட்சி அக்குன்றில் நண்ணுவோம் என்ற விருப்பைத்தந்தது, நாணன் அங்குப்போயின் நல்லகாட்சிகாணும் எனக்கேட்டதும் தன்மேற்பாரம்போவது போலத் தோன்றிற்று, ஆசைமிக்கு நெஞ்சிலவேறோர் விருப்புவிரைந்தது, அவ்வாறே நதியூடுவந்தாராகச் சிந்தைதெளிவுற்றது, இந்நிலையில் பின்னும் காளத்திகண்டு கொண்டு நதிகடந்து சாரல்சேர்ந்தார், அங்கு நாணன் 'இம்மலைப்பெருந்தேன் சூழ்ந் ததுமலர் ஈக்களமொய்த்த' ஒலியினையும் அதனாலபெரிய இன்பநிலையத்தினையும் நினை வூட்டினான், அப்போது முன்னைத்தவம் முடிவிலாஇன்பமாய விளைந்த அன்பினை எடுத்துக் காட்டிற்று, காட்டவே இன்பத்தை அடைய முயலுதல் ஆன்மாக்களின் இயல்பாதலின், அதனில் அளவிலா ஆர்வம்பொங்கிற்று - என்று இவ்வாறு முன் உரைத்த மனநிகழ்ச்சி மாறுபாடுகளினும், திண்ணனார் உலகநிலைவிட்டுச் சிவசாயுச் பெறச்செல்லும் படிமுறையான செயல்களினும் வைத்துக் கண்டுகொள்க. இக்கருத்துப் பற்றியே "பேணுதத் துவங்க ளென்னும் பெருகுசோ பான மேறி" என வரும் பாட்டிற் கூறினார் தவப்பெருக்கினாலே உயிர் உலகத்தை விட்டுவிட்டுச் சிவத்தைப்பற்று கின்றதென்ற உண்மையும் காண்க.

**ஆர்வம்பொங்கி** - தவம்உள்ளிருந்து இன்பமான அன்பை உயிருக்குக்காட்ட அவ் வுயிருணர்ச்சி அளவுபடாமற் பொங்கி.

**மன்பெருங் காதல் கூர** - நிலைத்த பெருங்காதலாகச் சிறந்துவர. இது அந்த உயி ருணர்ச்சி மனத்திலே தாக்கி மிக்க காதலாய் மாறிய நிலைகுறித்தது. **மன்னுதல்** - பின் னர் எஞ்ஞான்றும் மாறாது நிலைத்தல்.

**வள்ளலார் மலையை நோக்கி-வள்ளலார்-இறைவர்.** "காளத்தி கண்டுகொண்"டே (749) வந்தவர் காதல்கூர்ந்ததனால் அதனையே நோக்கி எனக. **நோக்குதல்** - ஊன்றிப் பார்த்தல. ஒருபொருளை மிக இச்சித்தவன் அதனையேநோக்கிக் குறிவைத்துச்செல்வது உலக ஒழுக்கத்தினும் காணப்படும். காதல்மிக்கபோது அதுவே வெளிப்பட மற்றெல்லா வற்றையும் மறந்து சரித்தலுங் காணப்படும். உருவெளிப்பாடு முதலிய அகப்பொருட் டுறைகளும் இக்கருத்துப்பற்றியன. ஒருபொருள்வெறி (Monomania) என்று சாத் திரிகள் கூறும் மனநிலை இதனோடொத்ததாம்.

**என்புநெக்குருகி** - பெருங்காதல் கூர்ந்தபோது உள்ளதாம் மெய்ப்பாடு. உடலுக் காதாரமாயுள்ள எலும்பும் உள்ளுருகி. எனவே உடல்முழுதும் பரவசமாய் உருகிற்று என்பதாம். **நெக்குஉருகி** - மிகஉருகி எனக. எலும்பும் தன்து கடினத்தன்மை நெகிழ்ந்து இளகி மென்மையை அடைந்து. "புன்புலால் யாக்கை புரைபுரை கனிய... என்பெலாமுருக்கி" என்ற திருவாசகமும் காண்க.

**வேட்கை** - காதலித்தபொருளைப் பெறுதற்கண்உள்ளதாகும் உள்ளநிகழ்ச்சி. 102

752. **(வி - ரை) அன்பு** - இது ஆர்வம், காதல், வேட்கை என ஒன்றின்ஒன்று மிக்க மூன்றுநிலையில் வெளிப்பட்டது. இவை இச்சா சத்தியினெழுச்சி. அது (இச்சை)

முன்னாகச்சென்றது. அதனை அன்பு முன்பு நளிர்வரை ஏற என்றார். **நாணனும் அன்பும்** - எண்ணுமமை **தாழும்** - உம்மை இறந்ததுதழுவியது.

**பேணுதத்துவங்கள் ஏறி - பேணுதல்** - போஷித்தல் - வளர்த்தல். கண்ணுக்கு விளக்குப்போலத் தத்துவங்கள் ஆன்மாவுக்குச் சகலநிலையில் அறிவு இச்சை செயல்களின் வளர்ச்சிக்குக்கருவியாய அவற்றைவளர்த்தலின் **பேணுதத்துவங்கள்** என்றார் "வரும்வளர் நம்மைப் பேணு மம்மைகாண" என்ற காரைக்காலம்மையார் புராணங் காண்க. **பேணுதல்** - வழிபாடுசெய்தல் என்றலுமாம் "கொன்றையா னடியலாற் பேணா எம்பிரான் சம்பந்தன்" என்ற திருத்தொண்டத்தொகை காண்க. தத்துவங்களை வழிபாடுசெய்தல் சிவபூசையில் பதுமாசனபூசையிலும், நிர்வாணதீட்சையில் அத்துவசோதனையிலும் நமாந்தமாகத் தத்துவங்களைவழிபடுதல் இம்முறைகள் ஆகமங்களில் விதிக்கப்பட்டன.

**தத்துவங்கள் என்னும் பெருந்தசோபானம்** - இங்குத் தத்துவமென்றது சுத்தம் அசுத்தமென்ற இருவகை மாயையினின்றுந்தோன்றிய நிலமுதல் சிவமீறாகஉள்ள முப்பத்தாறினையுமாம். இவைகளைத் தத்துவம் என்றது எல்லாஉயிர்களுக்கும் போகத்தைக்கொடுப்பனவாயப் பிரளயம்வரைஉள்ளனஎன்னும் பொருளபற்றியாம். நிலமுதலாக ஒவ்வொன்றினையுமஏறி அனைத்தையுங்கடந்து பரம்பொருளை அணைதற்குப் படிகள் போல இவை அமைதலின் **தத்துவப்படி** - **தத்துவசோபானம்** என்பர். முதலாவதாகிய **நிலம் நூறுகோடி** *யோசனைப்பரப்புடையது. நிலத்துக்குப் பத்துமடங்கு விரிந்தது அப்புத்தத்துவம் இவ்வாறே அப்புமுதல் குணத்தத்துவமவரை ஒன்றுக்கொன்று பத்துமடங்கு விரிவுள்ளன; அதன்மேற் பிரகிருதிமுதல் அசுத்தமாயாதத்துவமவரை ஒன்றுக்கொன்று நூறுமடங்குவிரிவும், சுத்தவித்தைமுதல் சதாசிவதத்துவமவரை ஒன்றுக்கொன்று ஆயிரமடங்கு விரிவுமுடையன. அதன்மேற் சத்திதத்துவம் இலக்கமமடங்கு விரிவுடையது. அதன்மேற் சிவதத்துவம் எல்லைகடந்தது இவ்வாறு இவை ஒன்றினொன்று மேல்விரிந்துசெல்லுதலின் **பெருந்தசோபானம்** என்றார்.

**ஆணையாம்சிவம்** - புறம்பொருளை நோக்காது பேரறிவுமாத்திரமாய் நிற்கின்ற சைதன்னியமே சிவம் அச்சிவம் உயிர்களுக்குப் பசுத்துவத்தைநீக்கிச் சிவத்துவத்தை விளக்குதலில் உள்ளதாகிய இரக்கமேஅருள் ஆதலின் **ஆணையாம் சிவம்** என்றார் அருள் - சத்தி - ஆணைஎன்பன ஒருபொருட்சொற்கள். "ஆணையின் நீக்க மின்றி நிற்கு மன்றே" என்பது சிவஞானபோதம் இனி, அச்சிவமென்னும்பொருள் உயிர்கட்கு அருளும்பொருட்டுத் தோன்றுங்கால் அருளாகிய ஆணையினிடமாகத் தோன்றுதலின் **ஆணைஆம்** என்றார் என்றுரைத்தலுமாம் இப்பொருட்கு **ஆணை** - ஆணையினிடத்து,

* **யோசனையாவது** 24 அங்குலம்கொண்ட முழத்தினாலே 16000 கொண்டது ஒரு குரோசமாக,நான்கு குரோசங்கள்கொண்டது ஒருயோசனையாம் எனவே 64000முழம் ஒருயோசனைஎனப்படும் இதுபற்றி, "சாளரத்திறப்பூரன் றும ஞாயிற்றின்கதிரின் அதிநுட்பமாயத் தோன்றும நுண்ணிய துகள் அணுவெனப்படும் அஃதெண்மடங்கு கொண்டது திரிசர அணு அஃதெண்மடங்குகொண்டது கசாக்கிரம் அஃதெண்மடங்கு கொண்டது இலீக்கை அஃதெண்மடங்குகொண்டது யூகை அஃதெண்மடங்கு கொண்டது இயவைநெல்லு இயவைநெல்லுக்கலம் எட்டுக்கொண்டது ஓரங்குலம் அங்குலம் இருபத்துநான்குகொண்டது ஒருமுழம் முழம் நான்குகொண்டது ஒரு வில் விலலிரண்டுகொண்டது ஒருதண்டம். தண்டம் இரண்டாயிரங்கொண்டது ஒரு குரோசம் குரோசம் நான்குகொண்டது ஒருயோசனை , ஆகலான் இந்தஅளவையாற் சாதாரண புடவித்தத்துவமாகிய அண்டமநூறுகோடியோசனை ஆழ வகல நீளங்களையுடையது" என்று சிவஞானபாடியம் 2, 3 ல "அரவுதன" என்ற வெண்பாவின்கீழ் உரைத்தவைகாண்க வில் ஒருஅளவுஎன்பது "பட்டிகை யெட்டா தங்கு நூறு விற்கிடக்கை முன்னே போனது" (திருஞான புரா - 815) என்றதனாலும் அறிக.

**ஆம்** - தோன்றுமென்வுரைத்துக்கொள்க "முன்னருட் சத்தி தன்பால்முகிழ்க்குந்தான் முளையான" என்றசிவஞானசித்தியார்(1-68)ரும்,அதற்கு"அவன் யாண்டுஞ் சத்தியினிட மாகவே தோன்றுவானென்றித் தானுக வேறு தோன்றுன" என்னும் பொழிப்புரையுங் காண்க. இதற்குத் தனக்குமேற்பட்ட ஆணையில்லாதசிவம் என்றுரைப்பாருமுண்டு

**சார**-முன்சார்ந்துநின்ற பாசச்சார்பைவிட்டுச் சிவத்தைச்சார ஆணவத்தொட்டதது விதமாதலை விட்டு, மெய்ஞ்ஞானத் தாணுவினேடத்துவிதமாயச் சாரஎனக. சார்பு - "சார்புணர்ந்து" என்ற திருக்குறளுங்காண்க.

**அணைபவர்போல** - **அணைபவர்** - சிவயோகிகள் இவர்கள் நிலமுதற் சிவமீறுகிய 36 தத்துவங்களையும் படிமுறையானே ஏறி நீக்கிச் சிவத்தை அணைந்துசார்வார் "பூத முங் கரணம் பொறிகளைம்புலனும் பொருந்திய குணங்களோர் மூன்றும், நாதமுங் கடந்த வெளியிலே நீயு நானுமாய் நிற்குநா ளுளதோ?" என்ற **பட்டினத்தடிகள்** திருப்பாட்டும், "ஆறு றையுநீத் ததன்மே னிலையைப், பேறு வடியேன் பெறுமா றுளதோ?" என்ற கந்தரனுபூதியுங்காண்க

**ஐயர்** - பெருமையுடையவர். ஐம்புலன்களையும் வென்றமுனிவர். **ஐயர்மலை**-ஐயர் கள் வாழ்கின்றமலை என்பதாம். "ஐந்துமா றடக்கி யுள்ளா ரரும்பெருஞ் சோதி யாலும்" (780) என்று பின்னர்க் கூறுவதனுல் இம்மலையில் முனிவர்கள் தவஞ்செய்து வாழ்தல் பெறப்படும் தலபுராணசரிதங்களுங் காண்க இனி, ஐயர்-இறைவன் என்று கொண்டு, அவர் எழுந்தருளிய மலை என்றலுமாம். ஐயர் - (776) என்றதுங்காண்க

**நீள்நிலை** - **நீள்** - நெடுந்தூரம் வடிவத்தாலும் நீளுவது **நீள்நிலை** முக்காலத்தி லும் ஒப்ப நீளுந்தன்மையுடையது. இத்தலம் ஐந்துயோசனை அகலமும் பத்துயோசனை நீளமும் உடையதுஎன்பது திருக்காளத்திப்புராணம் சூதசங்கிதை முதலியவற்று னறி யப்படும் இதுகயிலையேயாதலின் என்றும் அழியாது நிலைத்த தன்மையுடையது எனக

**நேர்பட** - எதிர்ப்பட எந்தப்பேற்றினைப் பெறுதற்கு அவதரித்தனரோ அதனைப் பெற. எதிர்ப்படுதல் என்பதுணர்த்தும் நேர்படுதல் என்னும்சொல் ஈண்டு நேர்பட்ட வழிப் பெறும் பயனைப்பெற என்ற பொருளில்வந்தது "கீழ்ச்செய் தவத்தாற் கிழியீடு நேர்பட்டு" என்ற திருவாசகத்தின் சொல்லும் பொருளும் இங்குவைத்துக் காண்க

**அணையும்போதில்** அங்கணர் அருட்டிரு நோக்கமெய்த என்று வரும்பாட்டுடன் கூட்டிமுடிக்க. 103

753 (வி - ரை) **சென்றவர் சடையார் தம்மைக் காணுமுன்னே** எனமாற்றுக. **சென்றவர்** - நேர்பட்டச் சென்றவராகிய திண்ணனுர் வினையாலணையும் பெயர்.

**காணுமுன்னே** - காணுதற்குமுன் என்றது **காணுமுன்** என நின்றது

**அங்கணர்** - கிருபைக் கண்ணுடையவர். கண்ணுக்கு அழகாவது கண்ணேட்ட முடைமை **கருணைகூர்ந்த அருட்டிருநோக்கமெய்த** என்று இப்பொருளை இங்குச் சொற்பொருள் விரித்துக்காட்டியதும் காண்க அருட்பார்வை செய்கின்றாராதலின் இங்கு இப்பெயராற்கூறினர். 39-147 பாட்டுக்களும் காண்க

**கருணைகூர்ந்த அருள் திருநோக்கம்** - கருணைகூர்ந்த நோக்கம், அருட்டிருநோக்கம் எனக்கூட்டுக. **கருணைகூர்ந்த நோக்கமாவது** இருவினைப்பயனை ஊட்டித் திரோதான உருவமாய் நின்ற மறக்கருணை மாறி, அறக்கருணையாய்ச்சிறந்த நோக்கம் **அருள்திரு நோக்கம்** என்பது சட்சுதீட்சை. இதனை, "சிஷ்ய: ஸமீக்ஷ்யதே பாசபந்த விமோக்ஷாய தீக்ஷேயம் சாக்ஷுஷீபவேத்" (பாசபந்தம் நீங்கும்பொருட்டுச் சீடன் [ஆசாரியனுல்] பார்க்கப்படுகிறுன்) என்று ஆகமங்கூறும் "முன் சினமருவு திரோதாயி கருணையாகித் திருந்தியசத் திநிபாதந் திகழு மன்றே" என்ற ஞானசாத்திரத்தால் (சிவப்பிரகாசம் - 48) கருணைகூர்ந்த திருநோக்கம் விளக்கப்பட்டது.

**நோக்கம் எய்த** - அருட்பார்வை இவர்பாற்பொருந்த. "தானென்னைப், பார்த்தான் பழையவினைப் பஞ்சமலக் கொத்தையெல்லாம், தீர்த்தான் நினைவுவே றாக்கினான் - ஏத்

தரிய, தொண்ணூற்றறுவர்பயில் தொகுதிற் றுவக்கறுத்தான், கண்ணூறு தேனமுதங் காட்டினான்" என்ற நெஞ்சுவிடுதூதுங் காண்க. இத்திருநோக்கம் முன்னுடை கயிலாயத்தில், காளத்திநாதர் பூசைசெய்து "சாருநா ளேலவே முத்தியு மீதும்போ"'வென்று அருளிச்செய்த காலத்து இறைவன் பார்த்த அருட்பார்வையின் தொடர்ச்சியாதலின் அவர் (திண்ணனார்) காணுமுன் எய்தியது அவரது முன்னைத்தவம் இதற்குக் காரணமாம். ஏனையோர்க்கும் அவ்வாறெய்தாமைக்கு அவ்வவர் தவமின்மையே காரணமென வும் இறைவன் யாவரையும் ஒன்றாகவே காண்பவன் எனவும் கண்டு கொள்க.

**தங்கியபவம்** - இவ்வுலகில்வந்த வேடராகிய இப்பிறப்பு. **பவம்** - பிறத்தல் - உண் டாதல். இனி, இதற்குத் **தங்கிய** - எஞ்சிநின்ற, **பவம்** - பிறப்பு என்று கூறலுமாம் இவ்வொருபிறப்பே இவர்க்கு எஞ்சிநின்றது என்றபடி.

**முன்னைச்சார்பு விட்டு அகல** - **முன்னைச்சார்பு** - அநாதியே தொடர்ந்துநின்ற சார்பாகிய மல மாயை கன்மங்கள். **விட்டு அகல** - விடுத்துப்போக. **விடுதல்** - சோகத்தை யின்றுதல். **நீங்கி** - அவற்றினின்றும் விடுபட்டு.

**அருள்திருநோக்கால் முன்னைச்சார்புவிட்டு நீங்குதல்**-"உயிர், தான் முன்னேசெய்து கொள்ளப்பட்ட புண்ணிய விசேடத்தாற் றனக்கு அந்தரியாமியாய் இதுகாறுமுண்ணின் றுணர்த்திவந்த பரம்பொருளே இப்பொழுது குருவடிவமுங்கொண் டெழுந்தருளிவந்து **சிவதீக்கைசெய்து**, 'மன்னவகுமாரனாகியநீ ஐம்பொறிகளாகிய வேடருட்பட்டு வளர்ந்து நின் பெருந்தகைமை அறியாது மயங்கியிடர்ப்பட்டாய், நின்பெருந்தகைமையாவது இவ் வியல்பிற்'றென்றறிவுறுப்ப, அறிந்தமாத்திரையே, அவ்வேடரை விட்டு நீங்கி, அன்னிய மின்றி, அநன்னியமாந் தன்மையின் நிலைபெற்று, அம்முதல்வன் றிருவடிகளையணையும்" என்று சிவஞானபோதம் எட்டாஞ்சூத்திரத்தின் பிண்டப்பொழிப்புரைக்குமாற்றால் எமது மாதவச்சிவஞானசுவாமிகள் இதனை விளக்கியதுங்காண்க.

**பொங்கிய ஒளியின் நீழல்** - **பொங்குதல்** - விரிந்துவிளங்குதல். **ஒளியின் நீழல்**- ஒளியினது நீழலின்கண் **ஒளி** என்றது ஈண்டுக் காளத்திநாதரை **நீழல்** - அவரதுதிரு வடி அத்திருவடியினிடத்து "திருக்காளத்தி யுள்ளிருந்த **ஒளியே** யுன்னையல்லா லொன்று முணரேனே" என்ற ஆளுடையநம்பிகளது தேவாரமும், "அடித்தொண்டர் துன்னு நிழலாவன...அடித்தலமே" என்ற திருவிருத்தமும், "தண்ணிழலாம்பதி" என்ற சிவஞானபோதம் ஒன்பதாஞ்சூத்திரமும், அதனுரையுங் காண்க இறைவனைப் **பேரொளி** யாகத் தியானித்தல் சிவாகமங்களில் விதிக்கப்பட்டது. "ஆயிர ஞாயிறு போலு மாயிர நீண்முடி யானும்" என்ற அப்பர்சுவாமிகளது (திருவாரூர்-பண்-காந்தாரம்-8) தேவார மும், "ஞாயிறு கட்டற்கண் டாஅங், கோவற விமைக்குஞ் சேண்விளங் கவிரொளி" என்ற திருமுருகாற்றுப்படையும், பிறவுங்காண்க. கண்டம், கண்டாகண்டம், அகண்டம் என ஒளிகள் மூவகைப்படும். கண்டஒளிகளாகிய விளக்குமுதலியவையும், கண்டாகண்ட ஒளிகளெனப்படும் இரவி - மதிமுதலியனவும் அகண்டஒளியாகிய சிவவொளியின்முன் னர்ப் பிரகாசிக்கமாட்டா சிவவொளியே ஏனைஎல்லா வொளிகளுக்கும் ஒளிதரும் காரண மாம் ஆன்மஞானம், ஏனை அந்தக்கரணஞான, இந்திரியஞானங்களின் மிக்கு அவற்றிற்கு மூலமாய் நிற்பதுபோலச் சிவவொளியே ஏனை எல்லாவொளிகட்கும் மேலாய்நிற்பது அது சுயஞ்சோதி, பரஞ்சோதி, அலகில்சோதி என்று பலதிறப்பட அறியப்படும் "சோதியே சுடரே சூழொளி விளக்கே" என்ற திருவாசகத்தில் இவ்வியல்பு விளக் கப்பட்டமை காண்க. "ஒளியா யொளியத் தொளியா யொளியத் தொளியுந் தணிதரு மொளியாகி" என்ற பேரூர்ப்புராண (நிருத்தப்படலம்)முங் காண்க.

**பொருவில் அன்பு உருவம் ஆனார்** - நீழலின்கண்ணே அன்புஅடங்காது மீதூர்ந்த அன்பே தமக்கு வடிவமாக ஆயினார் முன்புசெய்தவத்தினீட்டம் முடிவிலா இன்ப மான அன்பினை எடுத்துக்காட்டிற்று, அருட்டிருநோக்கத்தால் முன்னைச்சார்புவிட்டு அகன்றது, அகலவே பொங்கியஒளியினீழலைச் சேர்பட்டார், படுதலும் அதனிடத்து

அடங்காது மீதூர்ந்த அன்பே வடிவமாகப்பெற்றார் என்பதாம். இனி, அன்பே சிவம்; சிவன்சார்ந்ததன் வண்ணமாவன்; சிவனைச்சார்ந்தசீவன் அவன்திருவாகிய அன்புருவ மாவன் என்றலுமாம். "பரிவின்றன்மையுருவுகொண்டனையவன்"-கல்லாடனார். 104

754. மாகமார் திருக்காளத்தி மலையெழு கொழுந்தா யுள்ள
ஏகநா யகரைக் கண்டார், எழுந்தபே ருவகை யன்பின்
வேகமா னதுமேற் செல்ல மிக்கதோர் விரைவி னோடு
மோகமா யோடிச் சென்றார், தழுவினார்; மோந்து நின்றார். ௧௦௫

(இ - ள்) வெளிப்படை. ஆகாயத்தை அளாவி நிறைந்தோங்கிய திருக்காளத்தி மலையில் எழும் கொழுந்தாகியுள்ள ஏகநாயகராகிய இறைவரைத் (திண்ணனார்) கண்டார், அக்காட்சியால் எழுந்த பெரிய மகிழ்ச்சியாகிய அன்பினது வேகமானது மேற் செல்ல, மிகுந்ததோர் விரைவினோடும், மோகமாகி ஓடிச்சென்று (அவரைத்) தழுவிக் கொண்டு உச்சிமோந்து நின்றனர்.

(வி - ரை) மாகம் - ஆகாயம். ஆர்தல் - நிறைதல். மாகமார்-ஆகாயத்தை அளாவ உயர்ந்து நிறைந்த. மாகம் - ஆகுபெயராய் விண்ணவரைக் குறித்ததாகக் கொண்டு, விண்ணவர்கள் வணங்குதற்பொருட்டுக்கூடி நிறைந்த என்றுரைப்பது மொன்று. "கடவுண்மால் வரையி னுச்சி அதிர்தரும் ஓசை யைந்தும்" (750) என்றுகூறியதும் காண்க. மாகமாவது பூமிக்கும் சுவர்க்கத்திற்கும் நடு என்பார் பரிமேலழகர் (பரிபாடல்-க. 47).

மலை எழு கொழுந்து-மலையின் சிகரத்தில் எழுந்துவிளங்கும் கொழுந்துபோல்பவர். கொழுந்து - தாவரங்களிற் றளிர்தோன்று முறைப்பு. மலை சிவமாக, இவர் அதன் இளைய நுனிப்பகுதிபோல்வார் என்றதாம். குடுமித்தேவர் என்றதுமிது. இத்தலத் தேவாரத்தில் ஆளுடையநம்பிகள் "கொழுந்தே! யென குணக்கடலே!" (8) என்று போற்றியதும் காண்க. "கோடேக கொழுந்தே!" என்ற தேவாரமும், "சைவக்கொழுந்தே! தவக் கடலே!" என்ற கந்தர்கலி வெண்பாவும் காண்க. சுயம்பு, காணம், ஆரிடம், முதலியன வாய் வகுக்கப்பட்ட இலிங்கங்களுள்ளே இமமூர்த்தி மலையின் உச்சியில் அருவுருவத் திருமேனியாகிய சதாசிவமூர்த்தமாய்ச் சுயம்புவாய் முளைத்தெழுந்த மூர்த்தி என்பது.

ஏகநாயகர் - தனிமுதற் கடவுள். "ஒருவனே போற்றி", "ஒருவனென்னு மொருவன்", "ஏகநா யகனை யிமையவர்க் கரசை" என்றற்றொடக்கத்த தமிழ்மறைகளும், "ஒன்றென்ற தொன்றேகாண் ஒன்றேபதி" என்பதுமுதலிய ஞானசாத்திரமும் காண்க. "சிவன் ஒருவனே கர்த்தா, பிறர் ஒருவரின்று" என வேதாந்தங்கள் கூறுகின்றன. "பிரபஞ்சம் விசித்திர காரியமாய்க் காணப்படுதலின் இவ்வாறுநடாத்தும் முதற்கடவுள் முற்றுணர்வும் அளவிலாற்றலும் பேரருளும் சுதந்தரமும் முதலிய நிரதிசய குணங்களுடையனென்பதூஉம் பெறப்பட்டது படவே இத்தன்மையனாகிய முதற்கடவுளொருவனே யமையுமாகலின் வேறுமத்தன்மையருண்டெனக்கொள்ளின் மிகையென்னுங் குற்றமாம். அல்லதூஉம் இலக்கணத்துள் ஒருவாற்றானும் வேற்றுமையில்வழி இலக்கியம் பலவாதல் செல்லாதென்னுங் கருத்தால் 'ஒன்றலா வொன்று' என வரையறுத் தோதினார்" என்று சிவஞானபோதம் முதற்சூத்திரத்தில் "ஒன்றலா வொன்றால்" என்னும் வெண்பாவின்கீழ் எமது மாதவச்சிவஞானசுவாமிகள் உரைத்தவையுங்காண்க.

கண்டார் - "தேவரங் கிருப்ப தெங்கே" என்று அளவிலாஆர்வம் பொங்கிக் காதல் கூரப் பெருவேட்கையோடும் (751) காணப்பதற்கு வந்த திண்ணனார், தேவரைக் காணு முன்னே தேவரது அருட்கண்ணால் காணப்பெற்றார். பெறவே அவரது உயிரும் கரணங்களும் "அங்கண் மாயை யாக்கையின்மே லளவின் றுயர்ந்த சிவமயமாய்ப், பொங்கி யெழுந்த திருவருளின் மூழ்கி" (சண்டேசர் புரா - 55) விளங்கின. இவ்வாறு சிவமயமாகப்பெற்ற கண்களாற் கண்டார்.

**எழுந்த பேருவகை அன்பின் வேகம்** - **எழுந்த** - முன்னர் உள்ளேயின்று இப்போது மேல்எழுந்த **பேருவகை** - பெருமகிழ்ச்சியாகிய இன்பம் **அன்பு** - இன்பமான அன்பு. **வேகம்** - ஆர்வம், காதல், வேட்கை என (751) மேற்சொல்லப்பட்டவை. **வேகம்** - சிவானந்தத்திற்கு ஏதுவாகிய அன்பின் கதி என்பார் இராமநாதச்செட்டியார் இங்கு வேகம் என்றது பசி,தாகம்,தூக்கமுதலிய உபாதிவசப்பட்ட வேகமன்று இந்த வேகங்கள் கெட்டபோதே சிவத்தை அடைவதாகிய இங்குக் குறித்த அன்பின் வேகம் - சிவவேகம் - உண்டாகும "வேகங் கெடுத்தாண்ட வேந்தன் அடிபோற்றி" என்பது திருவாசகம் இந்த வேகம் உள்ளடங்காது மேலெழுந்து இவரைத் தன்வசப்படுத்தி ஈர்த்துச்சென்றது இவர் தமவசமிழந்து தம்மை முற்றும் மறந்தார், இறைவர் வசமேயாயினார் இந்நிலையினை மேல்வரும் இரண்டு பாட்டுக்களிற்கூறுவார் இதன்மேல் வரும் சரித நிகழ்ச்சிகள் யாவும் இந்நிலையின் நிகழ்வன.

**மோகம்** - குறித்தபொருளிடத்து அதிகஆசை. **தழுவுதல்** - **மோந்துநிற்றல்** முதலியவை அன்பு மேலீட்டால் நிகழ்வன. இதனைக் குறிக்க **மோகமாய்** என்றார்.

**சென்றார்** - **தழுவினார்** - **(நின்றார்)** என்ற வினைமுற்றுக்கள் சென்று தழுவி மோந்து (நின்றார்) என எச்சப்பொருள் தந்தன திண்ணனார் முன்னம் குடுமித்தேவர் என்ற அவரது நாமம்கேட்டார்; அதன்பின் செவ்வே கோணமில . தேவர் இருப்பர் என்று அவரிருக்கும் வண்ணம் கேட்டார்; பின்னர்த் திருக்காளத்திமலைமிசை என்று அவனுடைய ஊர்கேட்டார், இவ்வாற்றால் வேகமாய் ஓடிச்சென்று அவர் வசமாகித் தழுவிக் கொண்டார், தாயதந்தையரையும் உலக ஒழுக்கம் முதலிய முன்னைச் சார்புகளையும் அன்றே விட்டார்; தம்மையு மறந்தார், அத்தேவரது தாள்களைத் தலைப்பட்டார் என் நிந்தநிலைகளை,

"முன்ன மவனுடைய நாமங் கேட்டாள், மூர்த்தி யவனிருக்கும் வண்ணங் கேட்டாள்,
பின்னை யவனுடைய வாரூர் கேட்டாள், பெயர்த்து மவனுக்கே பிச்சி யானாள் ,
அன்னையையு மத்தனையு மன்றே நீத்தாள், அகன்று ளகலிடத்தார் ராசா ரத்தைத் ,
தன்னை மறந்தாட்ன் னாமங் கெட்டாள், தலைப்பட்டா ணங்கை தலைவன் றாளே"

என்ற திருத்தாண்டகத்தி லருளிச் செய்யப்பட்டவாறு கண்டு கொள்க. இவையே முன்னைத் தவத்திற்கேற்றவாறு உயிர்கள்பெறும் பக்குவநிலையில் அடையும் அனுபவங்களாம். 105

755\. நெடிதுபோ துயிர்த்து நின்று, நிறைந்தெழு மயிர்க்கா றோறும்
வடிவெலாம் புளகம் பொங்க, மலர்க்கண்ணீ ரருவி பாய,
"அடியனேற் கிவர்தா மிங்கே யகப்பட்டா ரச்சோ!" வென்று
படியிலாப் பரிவு தானோ படிவமாம் பரிசு தோன்ற, ௧௦௬

756 வெம்மறக் குலத்து வந்த வேட்டுவச் சாதி யார்போற்
கைம்மலை கரடி வேங்கை யரித்திரி கானந் தன்னில்
உம்முடன் றுணையா யுள்ளா ரொருவரு மின்றிக் கெட்டேன்
இம்மலை தனியே நீரிங் கிருப்பதே!" யென்று நைந்தார். ௧௦௭

755 (இ - ள்) வெளிப்படை நெடுநேரம் அவ்வாறு மோந்து நின்று, தமது திருமேனியெங்கும் எழுந்த மயிர்க்கால்தோறும் புளகம் பொங்கவும், மலர்போன்ற கண்களினின்று கண்ணீர் அருவிபோலப் பாய்ந்து வடியவும், "அடியேனுக்கு இவர் தாம் இங்கு அகப்பட்டனரே ! அச்சோ ! (இது என்ன அதிசயம்?)" என்று தாமே கூறி, ஒப்பில்லாத அன்புதானே ஒருவடிவமாயிற்று என்னும் தன்மை புலப்பட, ௧௦௬

756 (இ - ள்) வெளிப்படை. "கொடிய மறக்குலத்தில் வந்த வேட்டுவச் சாதியாரைப்போல, யானை காடி புலி சிங்கம் முதலிய கொடிய விலங்குகள் திரிதற்கிடமாகிய காட்டிலே, உம்முடன் துணையாயுள்ளவர்கள் ஒருவருமில்லாமல், ஓ! கெட்டேன்!, நீர் இம்மலையில் தனியே யிருப்பதோ?" என்றுகூறி மனம் நைந்தனர். ௧௦௭

இவ்விரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

755. (வி - ரை) நெடிதுபோது உயிர்த்து நின்று - எழுந்த பெருமகிழ்வும் அன்பும் கூடிய வேகத்தால் விரைவில் ஓடித் தழுவி மோந்து நின்றாராதலின் அவ்வேகமும் மோகமும் தணியும்வரை நீண்டநேரம் மோந்த வண்ணமாக நின்றதாம்.

நிறைந்து எழும் மயிர்க்கால் தோறும் - செறிவாய் நிறைந்துள்ள மயிர்களின் அடியிடங்கள் ஒவ்வொன்றிலும் வடிவு எலாம் - உடல்முழுவதும் புளகம் பொங்குதல் - (உரோமகூபங்கள்) மயிர்களின் வேர்களிருக்கும் இடங்கள் மேற்கிளம்பி மிகக் காட்டுதல் இஃது அளவற்ற ஆனந்தத்தாலாவது. உடல் வேகம் மனவேகங்களால் உடலிற் சூடு கொண்ட இரத்தம்,உழைப்புமிக்க அந்தந்த இடங்களுக்கு விரைவாகச் செலுத்தப்பட்டு ஓடும் ; அதனால் வேர்வையுண்டாம் , கண்ணீரவரும் இங்கு அன்பின் வேகம் மிகவே உள்ளம் நெகிழ்ந்தது உள்ளத்தால் இயக்கப்படும் உடல்முழுதும் இரத்தம் அதிகவிசையில் ஓட மயிர்ப்புளகமும் கண்ணீர்ப் பெருக்கமும் உண்டாயின.

மலர்க்கண் தாமரை மலர்போன்ற கண்களிலிருந்து, ஐந்தனுருபுதொக்கது 'பூவெனப் படுவது பொறிவாழ் பூவே' என்றபடி, மலர் என்ற பொதுப்பெயர் இங்குத் தாமரையைக் குறித்தது. அருவிநீர்பாய எனக் அருவிபோலக் கண்ணீர் இடையறாது பாய்ந்து வர உவமவுருபு தொக்கது "பெருமானே எனக்கேட்டு வேட்ட நெஞ்சாய்ப் பள்ளந்தாழுறுபுனலிற் கீழ்மே லாகப் பதைத்துருகு மவர்" என்ற திருவாசகத்திற் குறித்தநிலை இது.

அடியனேற்கு இவர்தாம் இங்கே அகப்பட்டார் இங்கு இவர் தாம் அடியேனாகிய எனக்குக் கிடைத்தனர் அகப்படுதல் - தன்னுட்படுதல் , பெற்றபொருளாதல். மிகக் கீழான அடிமைக்கு மிகமேலான இவர் கிடைத்துவிட்டனரே !. "யாவர்க்கு மேலாமளவிலாச் சீருடையான்!, யாவர்க்குங் கீழா மடியேனை-யாவரும், பெற்றறியா வின்பத்துள் வைத்தாய்க்கென் னெம்பெருமான்!, மற்றறியேன் செய்யும் வகை" என்ற திருவாசகக் கருத்தை இங்குவைத்து நோக்குக. "என்ன புண்ணியஞ் செய்தனை நெஞ்சமே ?", "எனக்கு அருளியவா றார்பெறுவா ரச்சோவே !", "ஆரும் பெறாத வறிவு பெற்றேன் பெற்றதார் பெறுவாருலகில் ?" என்பனவாதி திருவாசகங்களைக் காண்க.

அச்சோ ! - வியப்புச்சொல் இன்பமான ஆச்சரியக்குறிப்பு

படியிலாப் பரிவு தோன்ற படி - ஒப்பு படியிலா - ஒப்பில்லாத - இதன்படி வேறொன்றும் இல்லாத. பரிவு - அன்பு. இணையற்றஅன்பே ஒரு வடிவாயிற்று என்னுந்தன்மை வெளிப்பட பரிசு - தன்மை படிவம் - வடிவம். "கண்ணப்பனொப்பதோர் அன்பின்மை" என்ற திருவாசகம் இதனை எதிர்மறைப் பண்பில் வைத்து ஒப்பித்துக்கூறிற்று இதனையே "கண்ணப்ப னொப்பதோ ரன்பின்மை யென்றமையால்" என்று ஞானசாத்திரமும் (திருக்களிற்றுப்படியார் - 52) எடுத்தாண்டது காண்க.

பரிசுதோன்ற - என்று - நைந்தார் என வரும்பாட்டுடன் கூட்டிமுடிக்க. 106

756. (வி - ரை) வெம்மறக்குலம் - வேட்டுவச் சாதி. சாதி பெரும்பிரிவு, குலம் சாதியினுட்பிரிவு. குடிமை என்னும் அதிகாரத்தில் சாதியாகிய வருணம் நான்கனுள் குலவேறுபாடுண்மை விளக்கினார். அரசசாதியுள் சேரர்குலம் சோழகுலம் என்பன காண்க. "சாதிகுலம் பிறப்பு" என்பது திருவாசகம். சிறுபான்மை ஆகுபெயரான இவ்விரண்டும் மாறிக்கூறுவதும் உண்டு. "சாதியும் வேதியன் றாதை" -(திருவாசகம்), "தம்மானை யறியாத சாதியார்"-(தேவாரம்) என்பன நற்சாதிப் பிரிவு

பற்றியன "சூத்ரா: சுத்த குலோத்பவா:" என்ற சிவாகமத்தில் சாதிக்கட்பிரிவு குலமாதல் காண்க. இந்நூலுட் பெரும்பாலும் சாதிகுலம் இரண்டும் ஒரு பொருளில் வருகின்றன. "ஓங்கிய நாற்குலத்து உயர்ந்தனவு மிழிந்தனவு மான சாதி" என்பது காண்க. குலப்பிறப்பாலும் மறம்பூண்டார், தொழிலாலும் வேட்டை (மறவினை) செய்வார்; ஆதலின் கருணையற்றவராவார், கொல், எறி, குத்து என்னும் வாழ்க்கையே வாழ்பவராகிய கொடுமையுள்ளார்; அவர்களே கொடுவிலங்குகள் வாழும் இக்கானில் தனியிருத்தற்பாலர். அவ்வாறன்றி மிக்இனியராய்க், கருணையே உருவாகவுடைய தேவரீர் இங்குத் தனியாய் இருத்தல் தகுமோ என்றதாம் வேடர் காட்டில் தனியிருப்பர் என்றது இவரது முன்னனுபவஞானத்தின் வாசனையுணர்ச்சி இங்கு இவர் தம்மைமறந்த நிலையினும் அது வந்ததாகக்கியது

**கைம்மலை** - யானை கையையுடைய மலைபோன்றது உவமையாகுபெயர் அது யானைக்குப் பெயராய் வழங்கலாயிற்று கைவரை - (736) என்றதுகாண்க. **கைம்மலை-காடி - வேங்கை - அரி** - இவையனைத்தும் கொடிய பெருவிலங்குகள். **வேங்கை** - புலி. **திரி** என்றதனால் அக்கானத்தில் இவை எப்போதும் எவ்விடத்திலும் எதிர்ப்பட உள்ளதன்மை குறிக்கப்பட்டது

**உம்முடன் துணையாயுள்ளார் ஒருவரும் இன்றி** - விலங்குகளவரின் உம்மைக் காத்தற்குற்ற துணையாக உள்ளவர்கள் எவருமுடன் இல்லாமல். விலங்குகள் இத்தேவர்க்கு ஊறுசெய்தலகூடும் என்பது திண்ணனார்கொண்ட அச்சம். பின்னர் "இரவு சேரும் வெவ்விலங் குளவென றஞ்சு"வதும் (776), தேவரது கண்ணில் உதிரங்கண்டபோது இந்தநினைவுபற்றியே, அப்புண்ணினை "விலங்கின் சாதி ஆளிமுன்னாகியுள்ள வினைத்தவோ"என்றஞ்சுவதும் காண்க. இதுவும் இவர்க்கு இப்பிறவியின் அனுபவஞானத்தின் எஞ்சியவாசனை. தம்மை முற்றும் மறந்து பசி, பயம், இன்பம், துன்பம் முதலிய உலகநினைவு யாதும் இல்லாத சீவன்முத்த நிலையை யடைந்தாராயினும் திண்ணனார், எந்தத் தேவரிடத்து அன்புருவமாயினாரோ அவர் பொருட்டுப் பசி, சுவை, பயம், இன்பம், துன்பம் முதலிய உலக நினைவு கொண்டுள்ளவராயினார் அந்நினைவினிடமாகத் தமது உலக அனுபவவாசனைபற்றி இவ்வாறு மறக்குலமும், விலங்குகளும், அவை மக்களுக்கு ஊறுசெய்யும் தன்மையும், கடுங்கானம் மக்கள்வாழத் தகுதியற்ற தன்மையும் பிறவும் நினைவுகொள்கின்றார் இவர்தமக் கமுது செய்ய இறைச்சியு மிடுவர் ரிலலை (760), நீபசித் திருக்க விங்கு நிறகவுங் கில்லேன் (762), வாலிய சுவைமுன் காண்பான் வாயினிலதுக்கி (767), இனியஎம் பிரானார் சாலப் பசிப்பர் (771), வேறுவே றினங்கள் வேட்டை வினைத்தொழில் விரகினாலே, ஊறுசெய் காலஞ் சிந்தித்து (782), (791) முதல் (797) வரை உள்ளவை, சுவைகண்டேன், தேனுமுடன் கலந்ததித் தித்திக்கும் (789) என்றவை முதலிய நினைவுகள் யாவும் இப்பிறவியின் உலகஅனுபவம் பற்றிய ஞானத்தின் எழுந்த வாசனை பற்றியனவேயாம். "எனக்குமாறு மீளிவெம் மறவர் செய்தா ருளர்கொலோ" (816) என்று தம்முடைய இப்பிறப்பின் முன்நினைவும் தேவரின் பொருட்டாயத் தமது விருப்பு வெறுப்பு முதலிய நினைவுகளும் நோக்கத் காண்க. தம்பொருட்டுத் தம் நினைவு முற்றும் இலராகியும், ஆனால், தேவர்பொருட்டுத் தம் நினைவு முற்றும் உளராகியும் நிகழ்ந்தது இந்த ஆறுநாள்களிற் சீவன்முத்தியினிலை இவரது உலகவாழ்க்கை என்று தெளிக

**உம்முடன் றுணையா யுள்ளார் ஒருவரும் இன்றி** என்பது முற்றும் உண்மையே!. **துணை** - ஒப்புமை. இத்தேவர் தமக்குவமையிலாதவர் இவர் ஒருவரே பதி இவ்வுண்மையை வேதாகமமாதி எல்லாநூல்களும் எடுத்து முழக்குகின்றன நீர் யாவர்க்கும் துணையாவதன்றி உமக்குத் துணையாவார் பிறரெவரும் இல்லை என்ற கருத்துமகாண்க

**கேட்டேன்!** - அவலக் குறிப்புச்சொல். இவ்வாறு கண்டதனால் நான் கேட்டேநதவனானேன். பின்னர்ப், பாவியேன் கண்ட வண்ணம் (818) என்றதும் காண்க.

**இம்மலை...நைந்தார்** ஆளுடையநம்பிகள் திருக்கோடிக் குழகரைக் கடற்கரையிற் றனியேயிருக்கக் கண்டபோது "கொடியேன் கண்கள் கண்டன" என்று தம்மைநொந்து கொண்ட மனநெகிழ்ச்சியை இங்கு வைத்துக் காண்க.

**இருப்பதே?** - இருப்பது தக்கதா? ஏகாரவினா எதிர்மறை குறித்தது. **நைந்தார்** - மனமிக வருந்தினார் "வீரா"(781)மன்னைந்து தேவர்க்குவரும் ஏதத்துக்குவருந்தினார்.

நின்று - போங்க - பாய - அச்சோ! என்று - பரிவுதோன்ற - இருப்பதே! என்று நைந்தார் - என இவ்விரண்டு பாட்டுக்களையும் தொடர்ந்து முடிக்க. 107

757. கைச்சிலை விழுந்த தோரார் காளையார் மீள "விந்தப்
பச்சிலை யோடு பூவும் பறித்திட்டு நீரும் வார்த்து
மச்சிது செய்தார் யாரோ?" வென்றலு மருங்கு நின்ற
வச்சிலை நாணன் றானு "நானிது வறிந்தே" னென்பான், ௱௮

758. "வன்றிற லுந்தை யோடு மாவேட்டை யாடிப் பண்டிக்
குன்றிடை வந்தோ மாகக், குளிர்ந்தநீ ரிவரை யாட்டி,
யொன்றிய விலைப்பூச் சூட்டி, யூட்டி, முன் பறைந்தோர் பார்ப்பா
னன்றிது செய்தா, னின்று மவன்செய்தா னாகு"மென்றான். ௱௯

757. (இ - ள்) வெளிப்படை. கையிலிருந்த வில் கீழேவிழுந்ததை உணராதவராகிக், காளைபோன்றாராகிய திண்ணனார், மீண்டு, "இந்தப் பச்சிலையுடனே பூவும் பறித்து இட்டு, நீரையும்வார்த்து, நல்ல இக்காரியத்தைச் செய்தவர் யாவரோ?" என்றலும், பக்கத்தில் நின்ற வில் ஏந்திய அந்நாணன்றானும், "நான் இதனை அறிந்துளேன்" என்று சொல்வானாய், ௱௮

758 (இ - ள்) வெளிப்படை. "வலியதிறலுடைய உன் தந்தையோடு விலங்குகளை வேட்டையாடி முன்ஒருகாலத்தில் நாங்கள் இந்தக் குன்றினிடத்துவந்தோமாகக், குளிர்ந்தநீரால் இவரைஆட்டிப், பொருந்திய இலையையும் பூவையுஞ்சூட்டி, (உணவும்) ஊட்டி, முன்னே (சிலமொழிகள்) சொல்லி, ஒருபார்ப்பான் இதனை அன்றுசெய்தான்; (ஆதலால்) இன்றும் அவன் இது செய்தானாகும்" என்றுசொன்னான். ௱௯

இவ்விரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

757 (வி - ரை) **கைச்சிலை** - கையிலேந்திய வில். **விழுந்தது** - கைப்பிடிநழுவிக் கீழேவிழுந்தது மிக்கஅன்பினால் காளத்தியப்பரைத் தழுவித் தம்மை மறந்து நின்றாராதலின் கையிற்பிடித்த பிடி நீங்க வில் கீழ்வீழ்ந்தது. மிக்கதுயரத்தால் உடல் அவசப்பட்டபோதும் இவ்வாறு நிகழும் என்பது "கையில் ஊனும் சிலையுடன் சிதறி வீழ" (814) என்ற விடத்துக்காண்க. இன்பத் துன்பங்கள் மிக்கூர்ந்தபோது உடலவசமிழந்ததனால் இவை உளவாகும்.

**சிலை கையினின்றும் வீழ்ந்தது** என்று கூட்டியுரைப்பதுமாம். **ஓரார்** - உணராதவராகி மீள - "அகப்பட்டாரச்சோ!" (755) என்றும், "தனியே நீரிங்கிருப்பதே" (756) என்றும் கூறியவற்றோடு மீண்டுமென்க.

**இந்த** - தேவர்திருமேனியில் தாம் நேரே பக்கத்திற்கண்ட இலை - பூ - நீர் என்ற இவற்றைச்சுட்டிய அண்மைச்சுட்டு.

**இலையோடுபூவும் பறித்திட்டு நீரும்வார்த்து** - இவை பூசையின் அங்கமாக ஆகமங்களில் விதிக்கப்பட்டவை "பூவொடு நீர்சுமந் தேத்தி", "பறித்திட்ட விலையும் முகையும் எல்லாம்", "சலம்பூவொடு தூபம்" முதலிய தமிழ்மறைத் திருவாக்குக்கள்காண்க. பறித்ததும், இட்டதும், வார்த்ததும் இவர் கண்டிலரேனும், **பறித்திட்டு** என மாறுசெடி

கொடிகளினின்றும பறித்தாலன்றி இவைகிடையா என்ற முன் அனுபவத்தின் வழி வந்த அனுமானத்தால பறித்து என்றும, இடுதல் - வார்த்தல் என்ற இவைகள, செய்யும ஒருவாது செய்கையில்லாவிடின இங்குத திருமேனியிற்காண இயைபில்லை என்ற அனுபவ அனுமானத்தால இட்டு - வார்த்துச் - செய்தார் யாரோ ? என்றும வினவினார்.

மச்சிது - மஞ்சு - அழகு மஞ்சிது நன்றாகிய இதனை 'மஞ்சுடை மணிநகு மாலை மண்டபம'' -(சூளாமணி) மஞ்சு என்பது எதுகைநோக்கி மச்சு என விகாரப்பட்டு நின்றது இது தமிழிலிருந்து பிறந்த தெலுங்குமொழியில மஞ்சிது என வழங்கிவருதல காணக தமிழில பண்டை உலகவழக்கிலும நூலவழக்கிலும இருந்த பலமொழிகள தமிழ்வழக்காறொழிந்தும, தமிழினின்றும பிறந்த தெலுங்கு மலையாள முதலியவற்றில புகுந்து அவ்வாறே வழக்கில நின்றுவருதல காணப்படும. இவை தமிழின் தூய்மையும, தாய்மையும காட்டுவனவாம. கடை - ஆவணவீதி என்ப பொருள்படும அங்காடி என்ற மொழி பழந்தமிழ் நூலகளிலும பேச்சுவழக்கிலும இருந்தது. நாளங்காடி - (தினப்படி கூடும கடை - நாட்சந்தை) என்பது சிலப்பதிகாரகாலத்தில வழங்கிவந்த பழந்தமிழ் மொழி இது தமிழ்வழக்கொழிந்தும தெலுங்கில், அங்கிடி என இன்றும வழங்கிவருதல காணக. பழந்தமிழ்மொழிகளான குப்பாயம, கடவு, படிஞாயிறு, புழை (ஆறு), ஊண (சோறு), களி(விளையாட்டு) முதலிய பல செம்மொழிகள இவ்வாறே மலையாளத்தில வழங்கிவருதலும்காணக.

இவ்வாறன்றி மஞ்சு - குற்றம - அநுசிதம என்று உரைகூறுவாருமுண்டு. திண்ணப்பனார், பூச்சூட்டலும, நீராட்டலும குற்றமென்றும தகாதசெயலென்றும நினைத்தற்குக காரணமின்று அன்றியும செய்தார் யார்ரோ ? என்று வினவினரேயன்றி இவ்வநுசிதம என செய்தார் எனக்கேட்டனரல்லா முன்னைநாள அவர் மங்கலநீச் சுனை படிந்தனர் (705). அற்றைநாளிலதானே மூலலை குறிஞ்சி வெட்சிப்பூவும், முறி கொண்ட கண்ணியும சூடினர் (706) எனவே, இவை தூய்மையும அணியுமசெய்வன என்ற உணர்ச்சியுடன வினவினராதலவேண்டும. இதுபற்றியே பின்னர் "நாயனுக்கினிய செய்கை, எண்ணிய வினைகொ லாமென நிதுகட்ப பிடித்துக கொண் "டார். இககருத்தால இவ்வினாவிற்கு விடைகூறிய நாணனும "ஓ பார்ப்பான இவை செய்தான " (758) என்றுகூறினனன்றி இவை தீயனவன்று, நல்லனவேயென்று குறிக்குமாற்றதுவும எடுத்துக்கூறினனல்லன. ஆதலின அஃதுரையன்றெனக. மற்றிது என்பது எதுகைநோக்கி மச்சிதுஎன நின்றதென்பாருமுண்டு.

என்றலும் - செய்தார் யாரே ? என்ற இவ்வினாவைத திண்ணனார் நாணனை நோக்கிக கேட்டனரல்லா அவர் தம்முடைய உலக இருப்பினையே முற்றும மறந்தாராதலின அவர்துக்கண்கள அடுத்துநின்ற நாணனைக்காணுதல ஒழிந்தன , அவன் சொன்ன சொற்களில தேவரைப்பற்றியனவற்றையன்றிப பிறமொழிகளை அவர் செவிகள கேட்டொழிந்தன. பிரியாமல உடன்தொடர்ந்ததோர் நாயினையும அவர் அறிந்தாரிலர். பிறதுறை வேட்கை முற்றுநீங்கினார். 765, 766 பாட்டுக்கள இந்நிலையினை விளக்கியதுகாணக ஆதலின இவ்வினா ஐயப்பட்டு அவர் தமக்குத்தாமே நிகழ்த்தினாரன்றி எவரையும முன்னிலைப்படுத்திக கேட்டவரல்லர் எனக. இதுபோலன்றி முன்னர் மலையேறும்போது கேட்ட ஒலியைப்பற்றி வினவுவார் நாணனை முன்னிலைப்படுத்தி " இது என்கொல நாணா ? " என்று வினவியதும காணக.

மருங்குநின்ற அச்சிலை நாணன்தானும் - அவர் தன்னைநோக்கி வினவாவிடினும் மருங்கு நின்றதனால் அதனைக கேட்டவனாதலானும, தன்தலைவனது ஐயத்தை நீக்கும பொறுப்புடையவனாதலானும நாணன்தானாகவே முந்திக்கொண்டு " இது நான அறிந்தேன " என்று தொடங்கிக கொண்டவனாய வருமபாட்டிற் கண்டவாறு விடைசொல்கின்றான இககருத்துப்பற்றியே நாணன் தானும் என்றார்.

**நான் இது அறிந்தேன்** - **இது** - இது செய்தார் யாரோ ? என்ற வினவிற்குறித்த **இது அறிந்தேன்** - அறிந்தவகையை வரும்பாட்டில் விரித்துக்கூறுகின்றான் அறிந்தேன், அறிந்தது எப்படியெனில் இப்படியாம் எனக.

**என்பான்** - என்று சொல்வானாகி முற்றெச்சம். என்பான் (ஆகி) - என்றான் என வரும்பாட்டுடன் முடித்துக்கொள்க. 108

758 (வி - ரை) **வன்றிறல் உந்தை** - வலியதிறலுடைய உம்தந்தை. **வன்மை-திறல்** - ஒரு பொருட்பன்மொழி மிகுதி குறித்தது. இவ்வாறுகூறியது ஒருஅரசனைக் கூறுவான் அவனது மெய்க்கீர்த்தியொடு புணர்த்திக்கூறும் மரபுபற்றியாம். His Majesty என்றிவ்வாறு பலவும் புணர்த்துக்கூறும் நவீன மரபுங்காண்க. **வன்றிறல்-உந்தை** வேட்டையாடுதற்குரிய மிக்க வலிமைபெற்றிருந்த அக்காலத்து என்றதும் குறிப்பு.

**மா வேட்டை** - **மா** - விலங்குகள். திங்களமுறை வேட்டைவினை (693) என்றபடி இப்போது ஆடிவந்ததுபோல முன்னாளொருமுறை யாடிவந்த வேட்டை. **மா** - பெரிய என்றலுமாம். **பண்டு** - முன்னொருகாலத்து. நாகன் "வில்லின் பெருமுயற்சி மெலிவானு" (692)கிப பன்னாளாயினமையின் அதற்கு முற்பட்டதொருகாலத்து என்றதாம். மா வேட்டையாடும் ஒவ்வோர்முறையும் இங்கு வருவதென்றில்லாமல் ஏதோ ஒருமுறைவந்த குறிப்பும்பெறப் **பண்டு** என்றதுமாம்.

**வந்தோம் ஆக** - வரவே, **ஆக** - ஆகவே **நீர்** - நீரால். **இலைப்பூ** - இலையோடு பூவும். "தன்றலை தங்கிய சருகிலை யுதிர்த்து"—**திருக்கண்ணப்பதேவர் திருமறம்.**

**குளிர்ந்தநீர் ஆட்டி** - **ஒன்றிய இலை பூ சூட்டி**-இவை ஆகமத்திலவிதித்த திருமஞ்சன - அலங்கார - அர்ச்சனைவிதிகள்.

**குளிர்ந்த நீர்** - அதிகாலையில், புதிதாய்வந்த குளிர்ந்த நீரைப் புதுத் துணியால் வடித்துப் புதுப்பானையிலிட்டு அறுகும்பூவுந் தூவிவைத்து அதுகொண்டு திருமஞ்சனமாட்டுதல் வேண்டுமென்பது ஆகமவிதி. (நெய்யபிடேகத்தின் பின்னர்மட்டும் இளவெந்நீர் ஆட்டுதல் வேண்டுமென்ப) **ஒன்றிய இலைப்பூ** - ஒன்றிய-பொருந்திய விதித்த. மூர்த்திகட்கும் காலத்திற்கும் ஏற்றனவாய விதிக்கப்பட்ட. இவை இங்கு, கூவிளம், அறுகு, துமபை, கொன்றை, வெள்ளெருக்கு, ஊமத்தை முதலியவையாம். நீரும் பூவும் இலையும் பூசைக்கு இன்றியமையாதனவாம். "புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு" என்பது திருமந்திரம். நாணன் இந்நூல்விதிகளை அறியானாயினும் சிவகோசரியார் ஆகம விதிப்படிசெய்த சிவபூசையை உடனிருந்து உள்ளபடி கண்டுணர்ந்தவனாதலின் இவ்வாறு கூறினன். இதுகேட்ட திண்ணனாரும் விதியினை அறியாது செயலைமட்டும் கடைப்பிடித்து நீரும் பூவும் இலையும் என்றவைமட்டும் கருதிக்கொண்டு பூசித்தார். அதீதநிலையிலஉள்ள அவர் செயல்கள், விதிகடந்தவேனும், அவற்றை இறைவனும் உகந்துகொண்டார்.

**ஊட்டி - முன்பறைந்து** - குளிர்நீராட்டுதலையும், பூச்சூட்டுதலையும்போலவே இவற்றையும் நாணன் தான் கண்டமட்டில் அறிவித்தான். நீரையும் இலைப்பூவையும் அவன் பார்த்தான். ஊட்டியபொருள் - நிவேதனம் - இன்னதென்று பாராதவனாதலால் அது இன்னதென்னாது **ஊட்டி** என்று வாளாகூறினான். தேவர்நிவேதனங்களை யாரும் பார்க்கலாகாது என்பது விதியாம். ஊட்டியஉணவு இன்னதென்று இவன் கூறாமையாற்றானே திண்ணனார் தமது முன்னைஉணர்வுகொண்டு அதனை **இறைச்சி** என்று நிச்சயித்து அதனையே ஊட்டினார். **ஊட்டி - முன்பறைந்து** - குழவிகளுக்குத் தாய் எடுத்துச் சிறிதுசிறிதாய வாயில் ஊட்டுவதுபோலும் அன்புடன் நிவேதனத்தின் சிறுபகுதி எடுத்துத் தேவரது திருவாயின்முன் காட்டித் தேவரீர் இதனை அமுதுசெய்தருளும் என்றுபிரார்த்தித்து அதன்பொருட்டுச் சுவாகாந்தமாக உரிய மந்திரத்தைச் சொல்லி

இவவாறு ஐநதுமுறை ஊட்டுவிததல வேணடுமெனபது ஆகமவிதி. நாணனதுமொழி கள இககுறிபபுமபெற இருததலகாணக இது கடைபபிடிதத திணணனும 774 - 799 பாட்டுககளிறகணடவாறு மொழிகள்சொல்லி அமுதுசெயவித்தலும காணக

முன் - திருமுனபு. பறைநது - ஏதோசில சொறகளசொலலி. பறைதல் - சொல லுதல் தமிழநாட்டிற பெருவழககாெருழிநத இமமொழி மலையாளததில இபபொரு ளில நினறு வழஙகுதலகாணக. யாழபபாணததில தமிழிலும வழஙகுவது முனபு அறைநது - சொல்லி - எனறலுமாம.

பார்ப்பான் மெய்பபொருளைப பாாபபவன எனற காரணததால முனிவரைக குறிதது வநதது. அஃது அம்முனிவா கோததிரததில வநதோாககுங காரண விடுகுறி யளவாய வழஙகி ஒரு சாதியாரை உணாததியொழிநததாம.

அன்றிது செய்தான் இன்றும் அவன் செய்தானுகும் இது பூாவககாட்சி யனு மானம மணததைக கொணடு இது இனன மலா எனறறிவதுபோலக காண்க அனறு அவன இது செயதல கணடேன இனறு அசசெயலே கணடேன. செயதானைக காணேன. செயவோரினறிச செயவினையினமையின இசசெயலை முனசெயயககணட அவனே செயதானுகும எனற அனுமானப பிரமாணததால அறிநத ஞானம. கலவிப பயிறசியிலலாத இவவேடரிடததும அனுமான அறிவு நிகழநது பயனபடுமவகைககாணக. அன்று பணடு இககுனறிடை வநத அனறு. இது - இது செயதாா யாரோ? எனறு வினவிய இது இதுசெய்தான் - இதுபோனற செயல் செயதான அவன செய்தான் ஆகும் - அவனே செயதானுதல வேணடும.

அவன் செய்ததாகும் எனபது பாடமாயின இது அவன செயதது ஆகும எனக. செய்தது - துவவிகுதிபெறற தொழிறபெயா. 109

759. உணணிறைந தெழுநத தேனு மொழியினறி யாரா வனபிற
றிணணனுா "திருககா ளததி நாயனாாக கினிய செயகை
யெணணிய விவைகொ லா"மென் றிதுகடைப பிடிததுக கொணடவ
வணணலைப பிரிய மாட்டா வளவிலா தரவு நீட, ௧௧௦

760. "இவாதமைக கணடே னுககுத தனியரா யிருநதா, ரெனனே !
யிவாதமக கமுது செயய விறைசசியு மிடுவா ரிலலை,
யிவாதமைப பிரிய வொணணு; தெனசெயகே, னினியான சால
விவாதமக கிறைசசி கொணடிங கெயதவும வேணடு மெனறு, ௧௧௧

761. போதுவா; மீண்டு செலவர், புலனுவா; மீளப போவா;
காதலி னுககி நிறபா, கனறகல புனிறறுப போலவா,
"நாதனே யமுது செயய நலலமெல லிறைசசி நானே
கோததறத தெரிநது வேறு கொணடிங்கு வருவே" னென்பாா; ௧௧௨

763. "ஆாதம ராக நீரிங கிருபபதென றகல மாட்டேன;
நீாபசித திருகக விஙகு நிறகவுங கிலலேல" னெனறு
சோாதரு கணணீா வாரப போயவரத துணிநதா ராகி
வார்சிலை யெடுத்துக கொணடு மலாககையாற றெழுது போநதாா.

759 (இ - ள்) வெளிபபடை உளளததிலே நிறைநது எழுநததாயினும, இடை யீடிலலாது பெருகிய அளவுபடாத அனபினுலே திருககாளததி நாயனாாகிய குடுமித தேவருககு இனிய செயகைகள எணணபபட்ட இவையே போலும" எனறு திணண

னார் இதனையே கடைப்பிடித்துக் கொண்டு, அந்த அண்ணலாரைப் பிரியமாட்டாத அளவற்ற ஆதரவு பெருக, ௧௩௦

760 (இ - ள்) வெளிப்படை. இவரைக் கண்டவனுகிய எனக்கு இவர் தனியராய் இருந்தார், என்னே! இவருக்கு அமுதுசெய்ய இறைச்சி இடுவாரும் இல்லை; இவர் தம்மைப் பிரியவும் முடியாது, யான் என்னசெய்வேன்? இனி நான் இவர்க்குவேண்டுமளவு இறைச்சியைக் கொண்டு இங்குச் சேரவும் வேண்டும்'' என்று எண்ணி, ௧௩௧

761 (இ - ள்) வெளிப்படை. (சிறிது தூரம்) போவார், மீண்டு வருவார், தழுவிக்கொள்வார், மீளப்போவார், காதலால் நோக்கி நிற்பார், கன்றினைவிட்டுப் போகும் ஈன்றணிய பசுவினைப் போல்வார், "நாதனே! தேவரீர் அமுதுசெய்ய நல்ல மெல்லிய இறைச்சியை நானே குற்றமறத் தெரிந்து அமைத்துக்கொண்டு இங்கே வருவேன்'' என்பார், ௧௩௨

762. (இ - ள்) வெளிப்படை. "உமக்கு யாரைத்துணையாகக் கொண்டு நீர் இங்கிருப்பது? என்ற எண்ணத்தால் உம்மைப் பிரிந்து போகமாட்டேன், நீர் பசியோடு இருக்க இங்குநிற்கவும் ஆற்றேன்'' என்றுசொல்லிச் சோர்கின்ற கண்ணீர் விடாது பெருகிவர, ஒருவாறு போய்வரத் துணிவுகொண்டவராய்ப், பெரியவில்லை எடுத்துக் கொண்டு, தமது மலர்போன்ற கைகளாற் றேவரைத்தொழுது போயினார். ௧௩௩

இந்நான்கு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

759. (வி - ரை) உள்நிறைந்து எழுந்தேனும்-மனத்தினுள்ளக முற்றும் வேறொன்று நிற்கும் இடமின்றி நிறைந்து மேலெழுந்ததேயாயினும் முகைமலரின் வாசம்நிறைந்து வெளிப்படுமாறுபோல முன்னையறிவின்றொடர்ச்சியினாலே சிந்தைவிரிய அதனுடனே நிறைந்துவிரியும் செவ்வியன்பாகிய வுணர்ச்சியாதலின் உள்நிறைந்து எழுந்தது என்றார்

**எழுந்தேனும் ஒழிவின்றிஆரா** - எழுந்ததேயாயினும் மேலும் ஓய்தலில்லாமல் தொடர்ந்து அடங்காது பெருகிய. ஏனும் என்னும் வினையெச்சவிகுதி நிறைந்து எழுந்ததாயினும் உள்ளத்தின் அளவில் நில்லாமல் மேன்மேலும் அளவின்றிப் பெருகுதலைக்குறித்தது. "எழுந்தபே ருவகை யன்பின் வேகம்'' (754) என்றதுகாண்க ஒழிவின்றி - சிறிது போதுமின்று கழிவதன்றிய இடையறாதுநின்ற. "காண வுள்ளத்தைக் கண்டு காட்டலின், அயரா அன்பின் அரன்கழல் செலுமே'' என்று சிவப்பேற்றினை எடுத்துக்காட்டும் சிவஞானபோதத்திற (11-ம் சூ) கூறியபடி இங்கு இறைவர் கருணைகூர்ந்த அருட்டிரு நோக்கஞ்செய்து இவரது உள்ளத்தைக்கண்டு காட்டினாராதலின் அயர்த்தலில்லாத அன்பு இடைவிடாது மேன்மேற் பெருகிஎழுந்தது ஆர்தல் - நிறைதலெனக்கொண்டு **ஆரா** எப்போதும் நிறைவுபெறாத - அடங்காத - போதியதென்று முற்றுப்பெறாத என்றுரைத்தலுமாம் "நின்பூசனை யென்று முடிவதில்லை நம்பாலென'' (திருக்குறிப்பு - புரா - 68) என்றபொருளை இங்குவைத்துக்காண்க

**திருக்காளத்திநாயனர்** - திருக்காளத்தியில் எழுந்தருளிய தலைவர். குடுமித்தேவர். **நாயனர்** - தலைவர்.

**இனிய செய்கை எண்ணிய இவைகோலாம்** - இனிய - உகந்த-விரும்பிய எண்ணிய - எண்ணப்பட்ட படு விகுதிதொக்கது பெரியோர்களால் தக்கதென எண்ணப்பட்ட - எல்லாநூற்றுறைகளாலும் இனியவை என எண்ணப்பட்ட. தேவர் தமக்கு இனியசெய்கை என்று எண்ணிய என்றலுமாம் **இவைகோலாம்** - இவையேபோலும் தேவர்திருமேனியில் தாம் பொருந்தக்கண்டவற்றாலும், நாணன் பண்டும் இவற்றையே கண்டேன் என்றறிவித்தமையாலும், பண்டுதொட்டு நடைபெற்று வருகின்றமையால் இவர் விரும்பியவை இவையேபோலும் எனத்துணிந்தார். "எண்ணி லாகம மியம்பிய

இறைவாதாம விரும்பும் உணமை யாவது பூசனை " - (திருககுறிபபு - புரா-51) எனற கருததுஙகாணக.

**இது கடைப்பிடித்து** - இதுவே செயயததககதெனறு உறுதியாகபபிடிததது. **கடைப்பிடித்தல்** விடாதுபறறுதல. " நனமை கடைபபிடி "-**ஆத்திசூடி. இது** - "**இது** செயதாா யாரோ ? எனறதிறகுறிததததும, நாணன அனறிது செயதான எனறதாற் போநததும ஆகிய இது. நீராடடலும இலைபபூசசூடடலும ஊடடலுமஆகிய **இது.**

**அண்ணலைப்பிரியமாட்டா ஆதரவு**-இது கடைபபிடிததாராதலின நீருமஇலையும பூவும ஊனும வேணடும, அவை தேடிககொணர இவரைபபிரிதல வேணடுமே எனற நினைவுவநதது வரவே பிரியமாடடாத ஆதரவு நீடிறறு எனக **ஆதரவு** ஆசை. **நீட**-மிக

**பிரியமாட்டாதளவில்**—எனபதும பாடம. 110

760. (வி - ரை) **கண்டேனுக்கு** - கணடஎனககு. எனது காடசிக்கு. **தனியர்** - வேறு துணையிலலாதவா உமமுடனறுணையாயுளளாா ஒருவருமினறி (107) எனற விடததுரைததவை காணக **கண்டேன்** வினையாலணையும பெயா. 'அயலே குடி தானிருநதாற குறறமாமோ ? கொடியேன கணகள் கணடன கோடிககுழகீா ' எனற ஆளுடைய நமபிகள மனககருததும இஙகு வைததுககாணக.

**என்னே !** - இது எனன நிலைமை ? தனியராயினமையின நான பிரியாது துணை யிருததலவேணடும

**இறைச்சி இடுவாரும் இல்லை** எனறு உமமை பிரிததுககூடடுக.துணையிருபபாரில லாததனறி எனறு உமமை இறநதது தழுவியது இலலை, ஆதலின நானபிரிநதுபோய் இறைசசி கொணரவுமவேணடும. ஆனால மேலே சொனன காரணததால **பிரியலொண் ணுது** எனறது அதனமேல் நிகழநத உளளநிகழசசி. பிரியாமலிருககவுமவேணடும - பிரியவுமவேணடும. ஆதலின **என்செய்கேன்** எனறாா **இறைச்சி** - உணவு. 758 - ல் உரைததவைபாாகக. தமது பசியைமறநதாா. ஆனால தேவாபசியை அறிநது அதனைத தீாககத தமபசி தீாககுமவகைபோல இறைசசிதேட முறபடடாா

திணணனாா புணணியமெனறும பாவமெனறும தெரியாது வேட்டுவததொழிலில ஈடுபட்டாா. இப்போது சிவததில ஈடுபடடு அனபராயினாா எனறும, அனபா தமது உணவை ஆண்டவனுககு ஊடடுவா எனறும, அனபு பாவபுணணிய நிலையைககடநதது எனறும, பாவபுணணியஙகளிற கட்டுபபட்டுழலவோா அனபு நிலையிலிருபபோருடைய செயலகளைத தமமதியால ஆராயநது முடிவு காணப்புகுவது அறியாமை எனறும, திணணனாா இஙகுச்செயத செயலகள அனபுவழி நிகழவனவாதலின அவறறைக கடடுப பாடுகளில நுழைததுபபாாபபதே தவறு எனறும, இறைவன விருமபுவது அனபு - கட்டுப்பாடனறு எனறும இஙகு விசேடவுரை காணபாருமுணடு. இவை சில மயககங கட்குக காரணமாதலின இவறறை விளஙக உணாநதுகொளளுதல வேணடும விதிநிலை எனறும, விதிகடநதநிலை எனறும உயிாகளஇறைவனை அடையுமவழிகள இரணடுஉள என. இவையிரணடும அனபுபறறியே எழுவன. புண்ணியபாவஙகளுககு அனபும அன பினமையுமே காரணமாம. இவையும இறைவன விதிதத விதிகளினபடி வருவனவே யன்றி இவை மனிதா தமமனம போனவாறு ஒதுககிக கொளளககூடியனவல்ல கொலையும் புலையும பாவமெனபது இறைவன வகுதத வேதநூலகளில விதிததது. கொலையும புலையும எனற இவை எலலா நூலகளாலும அறிஞாகளாலும உலகாயாவாக கும ஒபபக கடியப்படடன.

" மாஹிமசியாத " (கொலைசெயயாதே) "தாமமசா"-எனபது வேதம. "அறவினை யாதெனிற கொலலாமை" எனபது திருககுறள "நல்ல நினைபபொழிய நாளகளி லாருயி ரைக, கொலல நினைபபதுவுங குறறமு மறவொழிய" எனபது தமிழவேதம (ஆளுடைய நமபிகளதேவாரம - திருவாரூா-புறநீாமை-4). இவறறை வெறுஙகட்டுபபாடுகள எனபது பெருநதவறும.அனபின வழியேயினறு விதிவிலககுககளை அறிநது விதிவழி யொழுகித

தவஞ்செய்யின் அன்புமுறுகும் சிவனருள் சிறக்கும். முடிவில் அன்பே உருவாகி உலகக் கட்டுவிட்டுச் சிவத்தைச்சாரும் நிலை வரும் அப்போது விதிவிலக்குக்கள் தோன்றா; விதிகடந்தசெயலும் நிகழும். அவைதாம் புண்ணியபாவங்கள் என்ற விதிகளுக்குக் கட்டுப்படா என்பது துணிபு தூங்கியவன் கைப்பாக்குப் போல உலகச்சிந்தை தானாகவே நழுவியபின் இந்நிலை உள்தாம். அன்றியும் சுவர்க்கநரகங்களுக்கும், மீளப்பிறவிக்கும் ஏதுவாகிய புண்ணியபாவங்களை, முத்திக்கே ஏதுவாகிய சிவபுண்ணியங்களோடு மயங்கியுணர்தல் பெருந்தவறு. அன்பின் வழிநின்று நூல்கள் விதித்த விதியொழுக்கமும், உலகைமறந்து விதிகடந்த ஒழுக்கமுமாகிய இரண்டும்உயிர்களின் பக்குவநோக்கி இறைவன் அருளுதலால் இவையிரண்டும் அவன் விரும்புவனவேயாம் இச்சரித்ததில் அன்புபற்றி விதிவழி ஒழுகிப் பூசித்த சிவகோசரியாரையும், அவ்வன்பே பற்றி விதிகடந்து பூசித்த திண்ணனாரையும் இறைவன் ஆட்கொண்டமை காண்க. இவ்வாறன்றி உலகினை ஒருவாற்றானும் விடாதுபற்றிக்கொண் டுழல்வோர் உலகை மறந்தோர்போலத் தம்மை மதித்தோ அல்லது விதிவிலக்குக்களை அறியாமலோ, விதிதவறித், தமது உணவு என்கின்ற காரணத்தால் அதனையே இறைவனுக்கும் ஊட்டுவதும், விதிதவறிய பிறவும் செய்யின் அவைஅன்புநிலை யாகாது பெரும்பாவமேயாம் எனக்

**பிரிய ஒண்ணுது - பிரிய** - பிரியவும் பிரியாது இருக்கவும் ஒண்ணாது என எதிராது தழுவிய எச்ச உம்மை தொக்கது கொடுவிலங்குகள் திரியும் கானமாதலின் இவ்வாறு நினைந்தனர். 756 பார்க்க உண்மையில் உயிர்கள் இறைவனைப் பிரிய ஒண்ணாதன என்பது ஞானசாத்திர முடிபுதானே?

**எய்தவும் வேண்டும்** - பிரிய ஒண்ணாத நான் பிரிந்துபோய் இவர்க்கு இறைச்சி கொண்டு சேர்தலும் வேண்டுமென உம்மை இறந்தது தழுவியது **தனியராய் இருந்தார்**- ஆதலின் **பிரியஒண்ணாது , இடுவார்இல்லை** - ஆதலின் **எய்தவும் வேண்டும்** என நிரனிறையாகவைத்துக் காரணகாரியமாகவும் கண்டுகொள்க

**என்செய்கேன்** - இதனை 762-ல் விரித்துரைத்தனர். 111

761 (வி - ரை) **போதுவர்** சிறிது தூரம் போவார். இறைச்சி கொண்டு எய்தவும் வேண்டுமென்ற எண்ணம் தீவிரமாய் இறுதியில் நிகழ்ந்ததனால் அதனை முன்னிட்டுப் போவார் எனக்

**மீண்டு செல்வர்** - அவ்வாறு துணிந்து முன்செலவும் செயல்மாறி ஊக்கிய ஊசல் போலப் பின்வரும் செயலாகியது தனியராயினமையாற் பிரிய ஒண்ணாதென்ற எண்ணம் தோன்றி அவரைப் பின்னிழுக்கவே மீண்டு செல்வார் எனக்

**புல்லுவர்** - சிறிதகன்று போனதாலும், பின்னரும் அகன்று வரவேண்டுதலாலும் பிரிவு ஆற்றும் பொருட்டுத் தழுவிக்கொள்வர்.

**மீளப்போவர்** - பின் வந்த ஊசல் மீள முன்செல்வதுபோல இவரது பசிக்கு இறைச்சி வேண்டும் என்ற எண்ணம் மேலோங்க மறுபடியும் போவாராயினர்.

**காதலின் நோக்கி நிற்பர்** - போயவரும் எண்ணம் மேலிட்டதாகவே முன்னர் வந்ததுபோல மீண்டு வாராது, சென்று, சிறிது தூரத்தில் நின்றபடியே ஆசையோடு நோக்கி நிற்பாராயினர். இந்நிலையினையே

" அன்புடனோக்கி நிற்ப ரழுவார்கை தொழுவர் வீழ்வர்
இன்புற வெழுவர் பின்பா லேகுவ ரிரங்கி மீள்வர் "

எனவரும் திருப்பாட்டிற் (திருவாதவூரர் புராணம் - திருப்பெருந்துறைச்சருக்கம் - 128) கூறுதலும் காணக.

**கன்று அகல் புனிற்று ஆ போல்வர்-புனிற்று ஆ**-ஈன்றணிய பசு. இது கன்றைப் பிரியமாட்டாது நிற்பதனையும், மேய்ச்சற் காட்டுக்குப் போவதற்குச் சிறிது போவதனையும், கன்றின்மேல் உள்ள அன்புமேலீட்டினால் செல்லாது மீண்டு வருவதனையும்

நாம காணகிறோம் இதனைப பேரனபுககு உதாரணமாகப பெரியோா கூறுவா இஙகு இறைவன கன்றாகவும், திணணனாா அதனை ஊடடுவிததறக காககும தாயாகவும கொளளபபடடதும உனனுக. இது திணணனாரது அனபே வடிவாகிய உளளநிலை நோககியாம இதுபறறி 214ம திருபபாடடில “ ஈனறஆன கனைபபுக கேடட கனறு ” எனற விடத துரைததலையும பாாகக

இறைவனே எல்லா வுயிாககும எலலாங கொடுததுத தாயபோலக காபபவன. “ தாயே யாகி வளர்ததனை போறறி ”, “ தாயு மாயெனக கேதலை கணணுமாய ” எனபனவாதி அளவிலலாத தமிழுமறைத திருவாககுககள காணக. தாயுமானவராகியதும, பனறிககுட்டிககுப பாலகொடுததது‌ம முதலிய திருவிளையாடலகளும காணக. “சேணிடை விட்ட கனறு கோவினைக கணடணைந ததுவென”(வெள்ளானைச சருககம்-42) முதலியனவும இஙகு நினைவுகூாக. ஆனால், இநநிலை மாறி இறைவனைக கனறெனககொணடு தாம அவரை வளாககும தாய எனறுஎணணி மனமுழுதுமகொடுதத பெரியோர்களுமுணடு இதுபறறியனறோ காரைககாலமமையாரை “மறறிவள் நமமைப பேணும அமமைகாண ” எனறுசொலலி இறைவன அவரை “ அமமையே ” எனறழைததனா ?

கனறினைப பிரியமாட்டாது பசு திருமபித்திருமபி நினறு கனறினைப பாாததுக கசிநதுருகுவதுமுணடு “கறறாவின மனமபோலக கசிநதுருக வேணடுவனே”-திருவாசகம், “ ஈறறா விருப்பிற போறறுபு நோககி ”-பொருநராற்றுப்படை - 151, “ கனறகல புனிறறா வெனனக கசிநதிரு கணணீா வாா, நினறுநின றிறைஞசி யையா நீததியோ வெனறு கொநது ” - திருவாதவூரர் புராணம் - திருப்பெருந்துறை - 150 எனறவையும காணக.

**நல்ல மெல் இறைச்சி** இவாககேறறவாறு தெரிநத சுவையுடைய மெலலிய இறைசசி. **நானே கோது அறத்தேர்ந்து**-குறறநீஙகுமாறு நானே சுவை பாாததறிநது. பிறரெவரும அனறி **நானே** எனக. வேறெவரும அனபோடுசெயயாா. செயதறகு வேறெவரும இலலை எனறபடி. மருஙகுநினற நாணனும பிறாஎவரும உளளாா எனற நினைவுமுறறும மறநதார் எனபதுகாணக இககருததுபபறறியே “ ஆதம ராக நீரிங கிருபபதுஎன றகல மாட்டேன” என வருமபாடடிற கூறுவதும காணக,

**வருவேன்** எனற இதனால போதல குறிபபிறகூறினாா உலகவழககிலும இவவாறு வழஙகுதல காணக “ செலலாமை யுணடே லெனககுரை மறறுநின, வலவரவு வாழவாரக குரை ” எனற திருககுறளில இதன நுணுககம புலபபடுததியது காணக.

**என்பார்** - செலவா - போவா - திறபா - எனபன அவரது செயலநிலையும, **போல்வர்** எனபது அவாமனநிலையும, **என்பார்** எனபது சொலநிலையும உணாததின 112

762. **(வி - ரை) தமர்ஆர்ஆக இங்குநீர் இருப்பது** எனமாறறுக. நமமவா - நமர் எனவருவதுபோலத தமமவா எனபது **தமர்** எனநினறது **தமர்** - துணைவா - “ துணையா யுளளாா ” (756) **ஆர்தமராக** - யாரைத துணையாககொணடு. **இங்கு** - கைமமலை காடி வேஙகை யரிதிரி கானம ”(756)மாகிய இஙகு **என்று அகலமாட்டேன்** - எனற காரணததால பிரிநதுபோகமாடடேன , ஆயினும. **நிற்கவும்கில்லேன்** - நிறகவும மாடடேன **கில்** - ஆறறலுணாததும இடைநிலை

**அகலமாட்டேன் - நிற்கவுங்கில்லேன்** - முானனை இரணடுநிலைகளுடபட்டு ஊசலாடிய அவரது மனநிலைகுறிததது இவை மேறபாடடிற கூறியபடி **திணணனார் தேவரைக காதலின் நோக்கிநின்று சொல்லியவை**

**சோர்தரு கண்ணீர் வார - கண்ணீர் சோர்தல்** - கணகளினினறு நீாதுளிதது வடிதல் **வார்தல்** - மிககுபபெருகுதல.

**போய்வாத் துணிந்தார்** - மேலும தாமதிததால பசி மேலும அதிகரிககுமாதலாலும, இவா இதுவரை தனிததிருககக கணடாராதலின தனியிருநது ஆறறும அனுபவ

முடையார் என்றறியவந்ததனாலும், விரைவில் திரும்பிவர எண்ணியபடியாலும் போதலில் மனங்கொண்டார். ஊசலாடிய உள்ளம் ஒன்றிற்றுணிந்தற்குக் காரணம் குறிப்பிற் கூறிய படி. வா என்றதன் நுணுக்கம் காண்க. மேற்பாட்டில் வருவேன் என்றதும் அது அன்றியும், போதலின்றி வருதலின்மையின் போதலில் மனம் வைத்தனர். தேவர்பால் வருதல் அவர் துணிபேயன்றிப் போதல் அவரது திருவுளக்குறிப்பன்று எனப்பார் போகத்துணிந்தார் என்னாது போய வரத்துணிந்தார் என்றார்.

**வார்சிலை** - பெரியவில் இது மேருமலைபோன்றதென்றும், பாரப்பெருவில் என்றும் முன்கூறியவை காண்க.

**எடுத்துக்கொண்டு** - கையிற்றாங்கியிருந்த வில் அவரையறியாது முன்னாக கீழே வீழ்ந்து (757) விட்டமையின், இறைச்சி கொண்டுவருதற்கு வில்வேண்டுமே என்று எண்ணமவர், அதனைத்தேடி எடுத்துக்கொண்டு என்றார்.

**தொழுது** - தமது பிரிவாற்றாமைக்காகவும், பிரிதலின்பொருட்டு மன்னிப்புக்காக வும் தாம் மீளவருமவரை அவர் ஆற்றியிருத்தற்காகவும் தொழுதனர்.

அன்பில் திண்ணனார் - இது கடைப்பிடித்துக்கொண்டு - பிரியமாட்டாது - ஆதரவுநீட - என்று (எண்ணி) - போதுவர் - மீண்டுசெல்வார் - புல்லுவார் - போவர் - மிறபர் - போலவர் - எனப்பார் - என்று - கண்ணீர்வார்த - துணிந்தாராகிச் சிலைஎடுத்துக் கொண்டு-தொழுது போந்தார் என்று இந்நான்கு பாட்டுக்களையும் தொடர்ந்து முடித் துக்கொள்க. 113

763. முன்புநின் றரிதி னீங்கி மொய்வரை யிழிந்து நாணன்
பின்புவந் தணைய முன்னைப் பிறதுறை வேட்கை நீங்கி
யன்புகொண் டேயப்பச் செல்லு மவர்திரு முகலி யாற்றின்
பொன்புனை கரையி லேறிப் புதுமலர்க் காவிற் புக்கார். ககச

(இ - ள்) வெளிப்படை. (தேவரின்) திருமுன்பினின்றும் இவ்வாறு அரிதாய நீங்கி மொய்த்த மலையினின்று கீழேஇறங்கி, நாணன் பின்புவந்து சேர, முன்னைய வாகிய வேற்றுத்துறைகளின் ஆசைஒழிந்து, அன்பேதம்மைப் பற்றிக்கொண்டு செலுத் தச்செல்கின்ற அவர், திருமுகலியாற்றினது பொன்றிரண்டு அழகுசெய்யும் அப்புறக் கரையில் ஏறிப், புதியமலர்கள் நிறைந்தசோலையிற் புகுந்தனர்.

(வி - ரை) **முன்பு** - திருமுன்பு - சந்நிதானம். **நின்று** - ஐந்தாவதன் சொல்லுருபு. **அரிதில் நீங்கி** - நீங்கத்தரிக்கமுடியாத நிலையில்நீங்கி இங்கு இவ்வாறன்றித் திருமுன்பு நெடுநேரம்நின்று பின் நீங்கி என்றுரைப்பாருமுண்டு. அஃதுரையன்மையுணர்க.

**மொய்வரை** - பல குன்றுகளும் மொய்த்த - சேர்ந்த - அம்மலை "திருக்காளத்தித் திருமலையிம் மலைகளில்யார் தென்று கேட்டார்" என்ற ஆளுடையபிள்ளையார்புரா ணம் (1020) காண்க. மரங்களும், சோலைகளும், மதுமலர்களும் **மொய்த்த** என்றலு மாம்.

**நாணன் பின்பு வந்தணைய** - மலைஏறும்போது நாணன்முன்பு வழிகாட்டிச் (752) சென்றான். இப்போது வழிகாட்டவேண்டிய அவசியமில்லை மேலும் திண்ண னாரது தீவிரகதிக்குமுன் செல்லுதல் நாணனாலும் வேறெவராலும் இயலாது அன்றி யும் அவர் துநிலைகண்டு அஞ்சிப் பின்வந்தான் என்றலுமாம் இனித் திண்ணனார்செல்ல அவரைப்பின்பற்றியே உலகர் வந்தணையவேண்டுமே என்ற குறிப்பும் காண்க.

**முன்னைப் பிறதுறை வேட்கை நீங்கி** - மலையேறிக், கண்டு, வந்து அணைந்து, பன்றி இறைச்சி தின்று, தண்ணீர் குடித்து, வேட்டைக்காடு மெல்லக் குறுகுவோம் என்பன முதலாக முன்னேயிருந்த பிறதுறைகளின் வேட்கைகளினின்றும் நீங்கி அவை தாமாகவே இவரைவிட்டன ; இவர் நீக்கினவன்று. "முன்னைச் சார்பு

விட்டகல நீங்கி" (753) என்றதுகாண்க. முன்னைச் சார்புவிட்டு நீங்கியும் இங்கு இறைச்சிக்குச் செல்கின்ற செயல் நிகழ்ந்தது, இது வேட்கையால் நிகழ்ந்ததன்று கருவிகளை வேட்கையேகொண்டு செலுத்தித் தொழில்செய்விக்கும். இச்சாசத்தியின் வழியே கிரியாசத்தி செல்லுமென்பர் ஆனால் இவர்க்கு அந்தப் பிறதுறை வேட்கை நீங்கின படியால் இங்கு இறைவர்க்கு இறைச்சிதருவதாகிய செயலில் அன்பே கொண்டுசெலுத்திற்று ஆதலின் **வேட்கைநீங்கி - அன்புகொண்டுய்ப்ப** என்றார்.

**பொன்புனைகரை**-முகலியாறு பொன்னை உந்திவருதல் முன் உரைக்கப்பட்டது. 747 பார்க்க. ஆற்றில் அடித்துவரப்பட்ட பொன்னினால் அணிசெய்யப்பெற்ற கரை

**ஏறி** - மலையினின்றும் இழிந்தபின், தாம் முன்பு போந்தவாறே திரும்ப நதியூடேகி (749) ஆற்றின் எதிர்ப்புறக் கரையில் ஏறி எனக்

**புதுமலர்க் காவில் புக்கார்** - அணிநிழற் கேழல்இட்ட (748) இடம் அளிமிடை கரைசூழ்சோலை (749) யாதலின் அந்நிலைப்பினால் அங்குச் சென்றனர். அது தேவர்க்குப் பன்றியிறைச்சியும் பூவும் இலையும் கொணரும் பொருட்டாம் 114

764. காடனு மெதிரே சென்று தொழுது "தீக் கடைந்து வைத்தேன் ;
கோடுடை யேன முங்கள் குறிப்படி யுறுப்பை யெல்லா
மாடுற நோக்கிக் கொள்ளு, மறித்துநாம் போகைக் கின்று
நீடநீர் தாழ்த்த தென்னோ?" வென்றலு நின்ற நாணன், ௧௧௫

765. "அங்கிவன் மலையிற் றேவர் தம்மைக்கண் டணைத்துக் கொண்டு
வங்கினைப் பற்றிப் போகா வல்லுடும் பென்ன நீங்கா,
னிங்குமத் தேவர் தின்ன விறைச்சிகொண் டேகப் போந்தான் ;
நங்குலத் தலைமை விட்டான் ; னலப்பட்டான் றேவர்க்" கென்றான்.

764 (இ - ள்) வெளிப்படை (அங்குநின்ற) காடனும் எதிரில்வந்து தொழுது, "தீக்கடைந்து வைத்தேன், கொம்பினையுடைய பன்றியின் உறுப்புக்களையெல்லாம் உங்கள் அடையாளப்படி அங்கங்கிருக்கப் பார்த்துக்கொள்ளும் இன்று நாம் மீண்டு போதலுக்குக் காலம் நீடும்படி நீர் தாமதித்த தென்னகாரணம்?" என்று வினவுதலும், பக்கத்தில் நின்ற நாணன், ௧௧௫

765 (இ - ள்) வெளிப்படை "அங்கே இவன் மலையில் குடுமித்தேவரைக் கண்டு அணைத்துக்கொண்டு **வங்கினைப் பிடித்துக்கொண்டு விடாத வலிய உடும்பைப்போல** நீங்காதவனாயினான், இங்கும் அந்தத் தேவர் தின்னுதற்கு இறைச்சிகொண்டு போவதற்காக வந்தான், நமது குலத்தலைமையை விட்டான், தேவர்க்கே ஆளாயினான்" என்று சொன்னான். ௧௧௬

இவ்விரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டன

764 (வி - ரை) **காடனும்** - "தீக்கடை மரக்கோல்பண்ணி ஙங்கு நீ செருப்புக் காண்பாய்" (742) என்று பன்றியை ஒப்புவிக்கப்பெற்ற காடனும் உம்மை இறந்தது தழுவியது

**தொழுது** - தலைவனிடம் அறிவிக்கும் முறைப்படி வணங்கி. **தீக்கடைந்து வைத்தேன்** - உமமுடைய உத்தரவுப்படி தீக்கடைந்துவைத்துள்ளேன் என்றான்

**ஏன உறுப்பை எல்லாம் குறிப்படி மாடுற நோக்கிக் கொள்ளும்** எனக்கூட்டுக. ஒப்புவித்த மாமிசத்தை இவ்வாறு அடையாளங் காட்டி மீள ஒப்புவிப்பது இவர்களுக்குள் வழங்கியதொரு வழக்கமாம் "நண்டுக்கு நரியைக் காவல் வைப்பதுபோல" என்ற பழமொழிப்படிக்கில்லாது இவன் அப்பன்றி இறைச்சியின் சிறுபகுதியேனும்

தான தினனுமல, ஒப்புவிததபடியே வைததிருபபதற கறிகுறியாக இவவாறு தமது மரபு வழககப்படி கூறினுன எனக இககருததுபபறறியே நகை வியாபாரிகள் நகை மணிகள முதலியவறறை பொதிதிறநது காட்டிககொடுதது வாஙகும வழககமும காண்க

**கோடு உடை ஏனம்** - கொமபுடைமை பனறியினியலபு "என முளைககொம பவை பூணடு" எனற தேவாரம காணக **மாடு உற** - அவவபபககததேயிருகக

**இன்று நாம் மறித்துப் போகைக்கு** எனக **மறித்து** - மீட்டும வேட்டைக காட்டுககுத திருமபிப போதலுககு.

**போகை** - போதல - செலலுதல கை விகுதிபெறறு வநத தொழிற பெயர்

**நீட** - அதிக காலம ஆகுமபடி.

**நின்ற நாணன்** - காடன சொலலியவை திண்ணனா செவியிலேறவிலலை அவ ரது காடசிககு அவன புலபபட்டானுமலலன "முகததைநோக்கா" (766) எனபது காணக. ஆதலின அவனுககு நாணன விடைசொலவானுயினுன. 115

765. (வி - ரை) **கண்டு அணைத்துக் கொண்டு**-கணடவுடனே தழுவிக்கொண்டு. கணடாா - ஓடிச சென்றுா - தழுவினா (754) எனற செயலகளை நேரிறகணடா ருதலின நாணன இவவாறு தொடாபுபடக கூறினுன **அணைத்துக் கொள்ளுதல்** - தழுவுதல தழுவினா (754), புலலுவா (761) என்றவை காணக

**வங்கினைப்பற்றிப் போகா வல் உடும்பு என்ன** - இது இவாகளுககுள உவ மானமாய வழஙகிய பழமொழியாம வேட்டாகள பேசசில அவாகள வழககுக கேறற தனமையில உவமைகூறி யமைததது ஆசிரியது பெருஙகவிததிறமையாம உடுமபு எவவிடமாயினும பறறினுல விடா இயலபுடையது நோரான சமனிடமனறி, வளைநத வஙகு ஆயின அவவிடதது அதனபிடி மிகவலிதாய விடாபபிடியாயிருககும எனபதாம். உடுமபு பிடிததது, வஙகு அதறகுத தன வளைநத அமைபபு இயலபினுல இடங கொடுதது விடாபபிடிககு மேலும உதவி செயதது எனற உவமானபபடி இஙகுத திண் ணனும பிடிததனா, அதறகுத தேவரும தமது அருட்டிரு நோககம செயது தமமை அவா விடாது பறறககொடுதது உதவியருளினர் எனற குறிபபும கணடுகொளக. "அநத விடைமருதில ஆனநதத தேனிருநத, பொநதைப் பரவி" எனற திருவாசகத தில இறைவனை முழையாககூறியது காணக சொலவோன மரபு வழககுபபடி உவமை கூறுந திறததினைச சிநதாமணியில ஓா இடையன வாககில வைதது "வெண் ணெயபோன றூறினியள மேமபாலபோற றீஞசொலலள, உணண வுருககிய வானெய போன மேனியள" (480) எனக கூறியதனையும இஙகுவைதது ஒபபுநோககுக

**வங்கு** - வளைநத உளளிடமுளள முழை. மரபபொநது எனறலுமாம. விடாது பறறுதறகுரிய இயலபுடன வஙகு நிறக, உடுமபுசென்று பறறுதலபோலத தனனை உயிாகள அடைநது பறறுமாறு கருணையுடன இறைவனநிறக உயிாகள அடைநது பறறுவா எனற குறிபபும காணக நாணனது வாககில அவனையுமறியாது முனனா வநத உணமைப பொலிவுடைய உபதேசமொழிகளபோல இவவுவமானமும உணமை உளளுறைப பொலிவும உயாநத தனமைநவிறசிப பொலிவும பெறறு விளஙகுதல கணடு களிகக **வல்உடும்பு** - **வலிமை** - இயலபாலே அதனபிடியினவலிமை **உடும்பென்ன நீங்கான்** - உடுமபு பிடிததபிடி விடாதது, இவனும அவரைபபறறி விடாதவனுனன. **உடும்பு என்ன** - உடுமபு நீஙகாமைபோல தொழிலபறறிவநத உவமம.

**இங்கும்** - நீஙகி இஙகுப போநதுளளானே எனில அவவாறு இஙகுபபோநததும எனறபடி எசசவுமமை **தின்ன** - உணண. அவவேட்டாகளின பேசசுவழககுபபடி **தின்ன** எனறது காணக

**கொண்டேக** - கொணடு தேவரிடம மீணடுபோக காடன் எண்ணியபடி வேட் டைக காட்டுககு மறிததுபபோக வனறி எனபது குறிப்பு.

**விட்டான்** - நீங்கினான். "பிறப்பினொடு மிறப்பினொடும் பிணங்குவார் விடுநீ" என்றபடி (சிவஞான சித்தியார் 12 - 2) விட்டார் - நீத்தார் - அறத்துறந்தார் என்க. **விடுநீ (448) விட்டான் (485)** என்ற இடங்களிலுரைத்தவையுங் காண்க.

**நலப்பட்டான் தேவர்க்கு** - உலகத் தொடர்பு விட்ட உயிர் இறைவனைப் பற்றுதல் உண்மை. பற்றுக்கோடின்றி உயிர்கள் நில்லா. அவை மலசார்பினைப் பற்றி நிற்பன. அச்சார்புவிட்ட இறைசார்பினைப் பற்றும் என்பது ஞானசாத்திர முடிபு. இக்கருத்துப் புலப்படக் குலத்தலைமைவிட்டான் - தேவர்க்கு நலப்பட்டான் என்று கூட்டியுரைத்த குறிப்பும் காண்க.

"தன்னுமங் கெட்டாள் தலைப்பட்டாள் நங்கை தலைவன்றாளே" என்ற தேவாரமுங்காண்க. 753ல் உரைத்தவையும் பிறவும் நோக்குக. குலத்தலைமை முதலிய உலகச்சார்பாகிய அசத்தின்பாலும், இறைவனாகிய சத்தின்பாலுஞ் சார்ந்ததன் வண்ணமாய்நிற்கும் தன்மையுடைய உயிர் சதசத்து எனப்படும். இது அவ்விரண்டினிடையும் நிற்கும் **விட்டான் - தலைப்பட்டான்** என, உயிரின்நிலையைக் குலத்தலைமைக்கும் **தேவர்க்கும்** இடையில் வைத்த இயையும், இதுபற்றியே தேவர்க்கு நலப்பட்டான் என்னுது மாற்றியமைத்த குறிப்பும் உன்னுக. மேற்கூறிய தேவாரத்தினும் இவ்வாறே கண்டுகொள்க. "இருதிறன் அறிவுள திரண்டலா ஆன்மா" என்றது சிவஞான போதம் (7-ம் சூத்). ஸ்ரீ பஞ்சாக்கர வைப்புமுறையும் இக்கருத்தே பற்றியதென்பது ஞானதேசிகர்பாற் றெளிக.

நாணன் இவ்வாறு மாற்றியுரைத்தது தாம் அரியதலைவனைப் பெற்றும் பெருந் தொழிந்த ஆற்றாமைபற்றி. இஃதுலகியல் வழக்கிலுங் காணப்படும். இதனைவிடுதலும் அதனைத் தொடுதலுமாகிய தொடர்பின்விரைவும் குறிப்பதாம்.

**நலப்படுதல்** - மீளா ஆளாகுதல்

**தேவர்** - நாணன்குறித்தது குடுமித்தேவரை. சிவபெருமான் ஒருவரே மெய்த் தேவர் பிறர் தேவரெனப்படுதல் உபசாரமாத்திரையா யொழியும். அத்தேவர்களுக்கும் இவர் தேவராவார்.

> "அத்தேவர் தேவ ரவர்தேவ ரென்றிங்ஙன்
> பொய்த்தேவு பேசிப் புலம்புகின்ற பூதலத்தே
> பற்றேது மில்லாதென் பற்றறநான் பற்றிநின்ற
> மெய்த்தேவர் தேவர்க்கே சென்றூதாய் கோத்தும்பீ"

என்ற திருவாசகக் கருத்தை இங்கு இச்சரித நிகழ்ச்சியினும், சொல்லாற்றலினும் வைத்துக்காண்க. இத்தேவரைச் சிவகோசரியாரும் "தனிமுதலாம் பரனென்று" (789) அறிந்ததலும், இவரே கயிலாயநாதர் என்பதும் காண்க.

**தேவர்க்கின்னம்**—என்பதும்பாடம். 116

766. "என்செய்தாய் திண்ணா! நீதான், என்னமால் கொண்டாய்? யெங்கள் முன்பெரு முதலி யல்லை யோ?"வென், முகத்தை நோக்கார், வன்பெரும் பன்றி தன்னை யெரியினில் வதக்கி மிக்க வின்புறு தசைகள் வெவ்வே றம்பினி லீர்ந்து கொண்டு, ககஎ

767 கோலினிற் கோத்துக் காய்ச்சிக் கொழுந்தசை பதத்தில் வேவ வாலிய சுவையுண் காண்பான் வாயினி லதுக்கிப் பார்த்துச் சாலவு மினிய வெல்லாஞ் சருகிலை யிணைத்த கல்லை யேலவே கோலிக் கூட வதனமிசை யிடுவா ரானார். ககஅ

766 (இ - ள்) வெளிப்படை "திண்ணா! என்னகாரியம் செய்தாய்! நீதான் என்ன மயக்கம்கொண்டாய்? நீ வேடர்களாகிய எங்களது முன்னைப் பெருமுதல்வனல்லையோ?" என்று காடன்கேட்க, அவன் முகத்தையும் நோக்காதவராகி, வலிய பெரிய பன்றியினை நெருப்பில் இட்டு வதக்கி, மிக்க இன்பமுடைய தசைகளை வேறு வேறாக அம்பினால் ஈர்ந்துகொண்டு, ௧௧௭

767 (இ - ள்) வெளிப்படை கோலிற் கோத்துக்காய்ச்சி அந்தக்கொழுப்புடைய தசைகள் நல்ல பதத்தில்வேக, அவற்றின் இனியசுவையை முன்காணப்பதற்காக வாயில் இட்டுப் பல்லினால் அதுக்கிச் சுவைபார்த்து, அவற்றில் மிக இனியவற்றையெல்லாம் முன்னரே இலைச்சருகுகளைச் சேர்த்த கல்லை தைத்து அதில் ஒன்றுசேர இடுவாராயினார் ௧௧௮

766 (வி - ரை) என் செய்தாய் - என்ன விபரீதம் செய்துவிட்டாய்! என்று ஆச்சரியக் குறிப்புப்படக் கூறியது

என்னமால் கொண்டாய் - என்னவிதமான மயக்கத்தினுள் அகப்பட்டுக்கொண்டாய்? மால்கொள்ளுதல் - மயக்கத்தினுட்படுதல் "தேவுமால் கொண்டார் ஸிந்தத் திண்ணனை" (769) என்று இதனைத் தெய்வத்தாலாகிய மயக்கம் என்று அவர்கள்கொண்டது காண்க.

முதலி - முதல்வன் - தலைவன் எங்கள் முதல்வனல்லையோ என்றது "முன்னை நாளில் அரசுரிமையேற்றதால் எங்களைக் காப்பாற்றும் கடமை உன்மேல் உள்ளது. அதன்பொருட்டே இங்கு வேட்டைக்கு வந்தனை, நீ இவ்வாறு கைவிட்டால் எங்களைக் காப்பவர்யார்?" என்று அவருக்கு நினைவூட்டினால் அவர் மயக்கம்தீரும் என்று எண்ணினவனாகி இவ்வாறு அவரிடம் கூறினன்

முகத்தை நோக்கார் - காடன்சொல்லிய சொற்கள் செவிக்குப் புலப்படாதது போலக் காடனும் அவர்கண்ணுக்குப் புலப்படவில்லை. ஆதலின் அவன் முகத்தைப் பார்க்கவில்லை இந்நிலையின் இயல்பைச் சண்டேசநாயனார்புராணம் 49, 50 ம் திருப்பாட்டுக்களில் விரிவாயக் காணலாம் ஆனால், காதல்கொண்ட அந்தேவரைப்பற்றிய செயல்கள் காட்சிப்படும், சொற்களும் செவிப்புலப்படும் எனக. 758 ல் உரைத்தவைகாண்க

பன்றி - தாம் சுரிகையால் துணிந்து அங்குக் கொண்டுவரச்செய்து கீழவிட்ட அப்பன்றி

வதக்கி - இது இறைச்சியை உணவாகச் செய்தலில் முதற்செயல் வதக்குதல் மென்மைபெறத் தீயினகண் வேகவைத்தல்

மிக்க இன்புறு தசைகள் - அப்பன்றியின் இறைச்சியில் மிகச்சுவையும் இன்பமுந்தரும் தசைப்பகுதிகள். அம்பினால் வெவ்வேறு ஈர்ந்து - அவ்வினிய பகுதிகள் அதனுடலில் வெவ்வேறு பாகங்களில் உள்ளனவாதலின் அப்பாகங்களைத் தனித்தனி அம்பினால் அரிந்து பிரித்து எடுத்து கொண்டு - வேறாக எடுத்துக்கொண்டு. வேறு பிரித்துக்கொள்ளுதல் இறைச்சியைச் சித்தஞ் செய்தலில் இரண்டாவது செயல் 117

767. (வி - ரை) கோலினிற் கோத்துக் காய்ச்சி - இறைச்சியை உணவாக்குவதில் மூன்றாஞ்செய்கை. வனவேடர்கள் முதலிய பழங்காலமக்கள் இறைச்சி சமைத்தற்கு இக்கால நாகரிகமக்கள் கைக்கொள்ளும் காண்டி - முள் - கோல - சட்டி முதலிய உபகரணங்களின்றிச் சமைத்து உண்டவகை காண்க மரக்கட்டைகோல் நெருப்பைக் கண்டு தந்தது. காய்ந்த கட்டைகள் நெருப்பைவளர்த்தன அம்பு தசையை வேறாக்கித் தந்து. வேறொருகோல் இறைச்சியைக்கோத்து அனலிற்காய்ச்ச உதவிற்று. சருகிலைக் கல்லையே கொள்கலமாயிற்று எனக. இவை 793 - 794-ம் திருப்பாட்டுக்களில் விரித்துக் காட்டப்பட்டது.

**கோத்துக் காய்ச்சுதல்** - ஒரு கோலில் இறைச்சியின் பகுதிகளைக் கோத்துக் கோலினைப் பற்றியவாறே அவற்றைத் தீயில் மேலேகாட்டிச் சூடேறப்பண்ணுதல். அதனை இட்டுக் காய்ச்சுதற்குரிய பாத்திரமின்மையானும் கோலிற் கோத்துத் தீயின் உயரப்பிடித்துக் காய்ச்சுவர். "நெடுங் கோல்கோத்துக் கனலின்கண் உறக்காய்ச்சி" (795) என்றதுங் காண்க. முதலில் வதக்குதல் அதன் உடல்முழுதும் ஒரு பாகமாக வெந்து பக்குவப்பட அதன் இனிய பகுதிகள் இலக்குவில் அரிந்தெடுக்க உதவியாதற் பொருட்டு இங்கு மறுமுறை காய்ச்சுதல் அவை செம்மையாய வெந்து உணவாக அமைதற் பொருட்டு.

**கொழுந் தசை** - கொழுவிய தசை. கொழுப்பு என்ற நெய்ப்பசையுள்ள மாமிசப் பகுதி

**பதத்தில் வேவ** - நெருப்பின்மேல் காட்டியதனால் தசையினின்று கொழுப்பாகிய நெய் மேல்வந்து தீயில் விழாது வடிய அந்நெய் முழுதினாலும் அத்தசை பதம்பட வேவச்செய்து. **பதமாவது** - அதிகமாயக் காய்ச்சின் தசை கருகியும், சுருங்கக் காய்ச்சின் செம்மையாய வேகாமலும் போய உணவுக்குப் பயன்படாது. ஆதலின் இவ்விரண்டு மில்லாத நேரான பக்குவம் **வாலிய** - இனிய.

**அதுக்கிப் பார்த்து** - சிறிதுமென்று சுவைபார்த்து.

**சாலவும் இனிய எல்லாம்** - முன்பாட்டில் இன்புறு தசைகள் வெவ்வேறு கொண்டு என்றது கையினிற்றெரிந்த அளவுக்கு இனிய பகுதிகள் இங்கு **இனிய** என்றவை அவற்றுள்ளேயும் தீயிற் சமைக்கப்பட்டபின் வாயினுற் சுவைத்தறிந்தவற்றில் மிகவும் இனிய பகுதிகள். எனவே, இனியவற்றுள் இனியவாகிய தசைப்பகுதிகள் என்றபடி **ஏலவே இலைச்சருக்கு இணைத்த கல்லை கோலி** எனக.

**ஏலவே** - அதற்குப் பொருந்த **பொருந்துமாவது** - கல்லை இணைக்கும் பொருத்தமும், பன்றியிறைச்சி இடுதற்குரிய பொருத்தமும், கொண்டுபோதற்குரிய பொருத்த மும் பிறவுமாம் **இலைச்சருக்கு** - வாடிய இலை இங்குத் தேக்கிலையால் இணைத்தனர் என்றறியப்படும் (793). இவை கல்லையிணைத்தற்குப் பொருந்தச் செய்து **கோலி** - கல்லையினையும் தாமே கோலினார், பணியாளரிருவர் இருந்தமை புணராராதலின் எனக **கல்லை** - உணவு வைக்கும் கொள்கலம். எச்சில் செய்யப்பட்டு எறியப்பட்ட இலையை எச்சிற்கல்லை என்னும் வழக்குங்காண்க

**கூட** - மேன்மேல் சுவைபாரத்த பகுதிகள் ஒவ்வொன்றாகச் சேர்ந்து கூட. **அதன் மிசை** - கல்லையினிடத்து.

**கோலிக் கூட்டி** - என்பதும் பாடம். 118

768\. மருங்குநின் றவர்கள் பின்னு மயன்மிக முதிர்ந்தார் ; “என்னே !
யருமபெற லிறைச்சி காய்ச்சி யதுக்கிவே றுமிழா நின்றான் ;
பெருமபசி யுடைய னேனும் பேச்சில ; னமக்கும் பேறு
தருமபரி சுணரான் ; மற்றைத் தசைபுறத் தெறியா நின்றான் ; ௧௧௬

769\. “தேவுமால் கொண்டா னிந்தத் திண்ணனை ; மற் றிதனைத் தீர்க்க
லாவதொன் றறியோம் , தேவ ராட்டியை நாக னோடு
மேவிநாங் கொணர்ந்து தீர்க்க வேண்டுமவ் வேட்டைக் காட்டி
லேவலாட் களையுங் கொண்டு போது ”மென் றெண்ணிப் போனார்.

768 **(இ - ள்)** வெளிப்படை பக்கத்தில் நின்றவர்களாகிய நாணனும் காடனும் “மேலும் மிக மயக்கம் முதிர்ந்தவனாயினன் ; என்னே ! அரியதாயப் பெற்ற இப் பன்றியிறைச்சியைக் காய்ச்சி அதுக்கிப் புறம்பு வேறே உமிழுகின்றான் ; தான் பெரும

பசியை உடையவனேயாயினும் (உண்ணும்) பேச்சிலான், பெற்ற இதனை எங்களுக்குத் தம் கொடுக்கும் பரிசுணராதவனுமான், ஏனை இறைச்சியைப் புறத்து எறிகின்றான்"

769 (இ - ள்) வெளிப்படை. 'இந்தத் திண்ணன் தெய்வ மயக்கம் கொண்டான்; இதனைத் தீர்க்கும் வழியொன்றினையும் நாம் அறியோம்; நாம் ஊருக்குப் போய்த் தேவராட்டியை நாகனோடு கொண்டுவந்து இதனைத் தீர்க்க வேண்டும், அந்த வேட்டைக்காட்டில் நின்ற ஏனைய ஏவலாட்களையும் கூட்டிக்கொண்டு ஊருக்குப்போவோம்" என்று எண்ணிப் போயினார். ௧௨௦

இவ்விரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டன.

768 (வி - ரை) **மருங்கு நின்றவர்கள்** - காடன் - நாணன் எனுமிருவரே. வேறு வேடர்கள் அங்கில்லை. வேறு வேடர்களுமிருந்தனர் என்று கொண்டுரைப்பாருமுண்டு.

**பின்னும்** - மேலும். **மிகமுதிர்ந்தான்** - மிக அதிகமாகக் கொண்டான். முதிர்ந்த மயல் கொண்டான் என்பதாம். மயலின் முதிர்ச்சி அதனைக் கொண்டார்மேல் ஏற்றப்பட்டது. மயக்கம் மேன்மேலும் முதிர்ந்து பெருகிவிட்டது என்க. பெருகியதென்றற்கு அடையாளமாகத் தாங் கண்டவற்றைப் பின்வருமாறு குறிக்கின்றார்கள். உமிழாநின்றான் - பேச்சிலன் - பரிசுணரான் - எறியா நின்றான் - ஆதலின் மயல்மிக முதிர்ந்தான் என்றதாம். **என்னே** - மயலின் விளைவுதான் என்ன ஆச்சரியம்.

**அரும்பெறல் இறைச்சி** - காட்டுப்பன்றி யிறைச்சியை இவர்கள் மிகமேலாக மதித்திருந்தார்கள் என்பது. மிக முயன்று - வருந்தப்பட்டுப்பெற்ற என்றலுமாம். 741-ல் இதனைப்பெற்ற அருமையை இவர்கள் வியந்து பாராட்டியது காண்க.

**அதுக்குதல்** - பல்லினிடை வைத்துச் சிறிது மெல்லுதல். **வேறு** - தனியாக. **உமிழாநின்றான் - எறியாநின்றான்** - ஆநின்று என்ற நிகழ்கால இடைநிலைகள் பலமுறை உமிழ்தலையும் எறிதலையும் செய்கின்றதனைக் குறித்தன. சில தசைகளை உமிழ்ந்தும், வேறு சிலவற்றை எறிந்தும் என்க.

கல்லையில் இட்டவற்றை இவர்கள் உமிழ்தல் என்றும், புறத்துத் துப்பிய ஏனையவற்றை எறிதல்என்றும் கொண்டனர். அவர் உட்கொள்ளாதநிலையில் இரண்டுமொத்தனவாயினும், கல்லையில் இட்டவையும் தின்னாதவையாயினும், அவற்றை வேறு ஒரு பயன்கருதியதுபோல அவ்வாறு செய்கின்றார் என்றறிந்தமையால் இங்ஙனம் பிரித்துக் கூறினார்கள். இன்புறு தசைகளைமட்டும் அம்பில் ஈர்ந்துகொண்டு பிறவற்றைக் கழித்தனர். அவற்றுள்ளும் சுவைத்தவற்றில் சாலவும் இனியவல்லாதவற்றைப் புறத்துக் கழித்து உமிழ்ந்தனர். இவ்விரண்டினையும் **மற்றைத் தசை - எறியா நின்றான்** - என்றனர்.

**பெரும்பசி யுடையன்** - தமது பசியின் அளவுகொண்டு அவர் பசியினையும் அனுமானத்தால் அறிந்தனர். அவர் தம்மையும் மறந்து பசி முதலியவற்றையும் மறந்த நிலையுற்றதனை இவர்கள் அறிந்திலர்.

**பேச்சிலன்** - பசியை மாற்றிக்கொள்ளும் செயல் சிறிதுமிலர். நம்முடன் ஒரு பேச்சுமற்றனர் என்றலுமாம்.

**பேறு** - பெற்ற இறைச்சி. உண்மையில் அவர்பெற்ற **கடவுட்பேறு** இவர்கட்குத் தருமவகையிலில்லை என்ற குறிப்பும் காணத்தக்கது. 119

769. (வி - ரை) **தேவுமால்** - கடவுட்பித்து. கடவுளைப்பற்றிய பித்து. கடவுளால் மேல்கொள்ளப்பட்ட பித்து என்றலுமாம். இதனை **மருள், ஆவேசம்** முதலிய பெயர்களாற் கூறுவர்.

**தீர்க்கல் ஆவது ஒன்று** - தீர்த்தற்கு ஆகும்வழி ஒன்றனையும். **தீர்த்தற்கு** - என நான்கனுருபும், **ஒன்றும்** என்னும் முற்றும்மையும் விரித்துரைக்க.

**நாம் மேவி நாகனோடு தேவராட்டியைக் கொணர்ந்து** என மாற்றுக. **மேவி** - உடுப்பூருக்குச் சென்று, இந்தத் தேவுமால் தீர்த்தற்குரியவள் அவளே

என்றெண்ணிய சிறப்புப்பற்றித் தேவராட்டியை முன்வைத்தனர். நோய் கண்ட போது அதனைப் போக்கற்குரிய மருந்துவனது பெயர் முதலில் நினைவுக்கு வருதல்போல அவளது நினைவே இவர்கள் மனத்தில் முதலில் நிகழ்ந்தது. மால் தீர்த்தற்கன்றாயினும் தன் மகன் நிலையறிந்து ஆவன பிற பலவும் செய்தற்பொருட்டுத் தேவராட்டியை அடுத்து நினைவு வரத்தக்கவனும், இந்நிலையினால் முதலாகப் பந்தப்பட்டவனும் தந்தை நாகனே யாதலின் நாகனோடு என்று அவனை அடுத்து வைத்து, இவ்விருவரும் ஒன்றுபோல இங்கு உடன்வரத்தக்கார் என்று குறிக்க உடனிகழ்ச்சிப் பொருளில் ஓடு என்ற மூன்றனுருபு புணர்த்திக் கூறினார். ஓடு விகுதியை நாகன் பாற் சார்த்திக் கூறியது சிறப்புநோக்கி. **தீர்க்கவேண்டும் - இதனை** - (தேவுமாலினை) - எனச் செயப்படுபொருள் வருவிக்க.

**அவ்வேட்டைக்கான்** - அந்தக்காடு நாம் அதிகாலையிற் போந்து வேட்டையாடிப் பல காதங்கள் பிரிந்துவந்த அந்த என்று இடத்தாற் சேய்மை குறிக்க அ என்ற சேய்மைச் சுட்டாற் கூறினார்.

**ஏவல் ஆட்கள்** - வார் வலைகொண்டு காடுசூழ்ந்தும், வேவுபார்த்தும், இயங்கள் முழக்கியும் வேட்டையாடியும், பிறவாறும் தலைவன் ஏவலில் நின்று பணிசெய்த வேடர் இவர்கள் மீளி வேடர் - (717), மள்ளர் (718), வெற்பர் (719), வேடர் (720), வேடு (721), வேடர்சேனை (722,) ஒற்றர் (723), முதலிய பெயர்களால் முன்னாகக் கூறப்பட்டனர்

**போதும்** - உடுப்பூருக்குப் போவோம், **என்றுஎண்ணி** - என்றிவ்வாறு அவ்விருவரும் ஒருவர்க் கொருவர் பேசித் துணிந்து. 120

770. கானவர் போன தோரார், கடிதினிற் கல்லை யின்க
ணூனமு தமைத்துக் கொண்டு, மஞ்சன மாட்ட வுன்னி
மாநதி நன்னீர் தூய வாயினிற் கொண்டு, கொய்த
தூநறும் பள்ளித் தாமங் குஞ்சிமேற் றுதையக் கொண்டார், ௧௨௧

771. தனுவொரு கையில் வெய்ய சரத்துடன் றாங்கிக் கல்லைப்
புனிதமெல் லிறைச்சி நல்ல போனக மொருகை யேந்தி
யினியவெம் பிரானார் சாலப் பசிப்பரென் றிரங்கி யேங்கி
நனிவிரைந் திறைவர் வெற்பை நண்ணினார் திண்ண னார்தாம் ௧௨௨

770 (இ - ள்) வெளிப்படை. திண்ணனார்தாம், வேடர்களிருவரும் போனதை உணராதவராய், விரைவிலே கல்லையில் ஊனமுதைத் திருந்த அமைத்துக்கொண்டு, தேவரைத் திருமஞ்சனம் ஆட்ட எண்ணித், தமது தூய வாயினிடத்துப் பெரிய நதியின் நல்ல நீரைக்கொண்டு, பறித்தனவாகிய தூய நறிய திருப்பள்ளித்தாமங்களைத் தமது (தூய)தலைமயிரினிடத்தில் நிறையக் கொண்டவராய், ௧௨௧

771 (இ - ள்) வெளிப்படை. வெவ்விய அம்பினோடு வில்லை ஒரு கையில் தாங்கிக் கல்லையினிடத்து இட்ட தூய மெல்லிய இறைச்சியாகிய நல்ல திருவமுதினை ஒரு கையில் ஏந்தி "இனியவராகிய எமது பெருமானார் மிகவும் பசித்திருப்பார்" என்று இரங்கி, ஏங்கி, மிக விரைந்து, இறைவரது மலையினைச் சேர்ந்தனர் ௧௨௨

இவ்விருபாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிவு கொண்டன

770 (வி - ரை) **ஓரார்**-உணராதவராய் முற்றெச்சம் உணராமைக்குக் காரணம் முன்னர் முகத்தை நோக்கார் (761) என்ற விடத்தும், பிறாண்டும் உரைக்கப்பட்டது

கல்லையில் அமுதமைத்துக் கொண்டு, வாயினில் மஞ்சனநீர்கொண்டு, குஞ்சி மேற் பள்ளித்தாமங் கொண்டு என, நீராட்டல் - பூச்சூட்டல் - அமுதூட்டல் என்று

தாம் கடைப்பிடித்த மூன்றற்கும் உரிய திருச்சாதனங்களைத் தேடிக் கொண்டதனை இப்பாட்டாலும், இவற்றை ஏந்திக்கொண்டு மலைமேற் சென்றதனை வரும் பாட்டாலும் கூறினாராதலின் இவையிரண்டும் தொடர்ந்து ஒருமுடிபுப்பட்டப் பொருள் கொள்ளப் பட்டன. 559 - 560 - பாட்டுக்களிலும் இது போன்ற அமைப்புக் காண்க.

திண்ணனார் தாம் - ஓரார் - (ஆகி) கொண்டு - கொண்டு - கொண்டார் (ஆகித்) தாங்கி - ஏந்தி - இரங்கி ஏங்கி - விரைந்து - வெற்பை நண்ணினார் என இவை இரண்டு பாட்டுக்களையும் கூட்டி முடித்துக் கொள்க.

**கடிதினில்** - தாமதப்படாமல் - விரைந்து. தேவருக்குப் பசி மிக முடுகுமென்ற கவலையினால் எல்லாம் விரைவில் முடித்த கருத்துக் குறித்தது. இதனைப் பசிப்பார் என்று இரங்கி ஏங்கி என வரும்பாட்டில் குறித்ததும், அதுபற்றியே **நனி விரைந்து நண்ணினார்** என்றதும் காண்க.

**ஊன் - அமுது** - ஊனாகிய அமுது. பண்புத் தொகை. இதனைப் பெரிய அளவிற்குக் கொண்டனர் என்பது "குவப்பெருந் தடக்கை வேடன் கொடுஞ்சிலை யிறைச்சிப் பாரம்" (திருச்சாய்க்காடு 8) என்ற திருநேரிசையா லறியப்படும்.

**அமைத்துக்கொண்டு** சாலவு மினியவற்றை ஒவ்வோர் பகுதியாகச் சுவை பார்த்து உமிழ்ந்தவற்றை ஒன்றுகூட்டி ஏந்திச்செல்வதற்குரியபடி அமைத்து.

**மஞ்சனம் ஆட்ட** - நீராட்ட. நதி பெருமையினையும், அதன் நீர் நன்மையினை யும், அதனைக் கொள்ளும் கொள்கலம் தூய்மையினையும் உடையன என்பார், **மாநதி - நன்னீர் தூயவாய்** என்ற அடைமொழிகளாற் சாற்றினார். இவை திருமஞ்சன நீர் அமைக்கு விதிகளைக் குறித்தவாறும். "குளிர்ந்தநீர்" (758) என்றவிடத்துரைத்தவை காண்க. "வாயகலச மாகவழி பாடுசெயும் வேடன்" என்ற ஆளுடைபிள்ளையாரது இத்தலத் தேவாரமுங் காண்க. "தூயவாய்க்கலசமாட்ட" என்பது திருநேரிசை.

**தூநறும் பள்ளித்தாமம்**-தூய்மை-இவரால் கொய்யப்பெற்றமையாலும், **நறுமை**-புதுமலர்களானதாலும் பெறப்பட்டன. "புதுமலர்க்காவில்" (763) என்றது காண்க. இவ் விரண்டு அடைமொழிகளால் பள்ளித்தாமத்தின் இலக்கணங் குறித்தபடியாம். இதனை ஆகமங்களினும், புட்பவிதி முதலிய நூல்களிலும் காண்க. எறிபத்தநாயனார்புராணத்து உரைத்தவையும், முருகநாயனார் புராணத்து உரைப்பவையுங் காண்க.

**குஞ்சிமேல் துதைய** குஞ்சி - தலைமயிர். தலைமயிரைப் பூக்கூடையாகக்கொண்டு அதனுள் நெருங்கப் பள்ளித்தாமங்களை அமைத்துக்கொண்டனர். இடைச்சருக்கம் நோக்கித் **துதையக்கொண்டனர்** எனக் தூய என்றதனைக் குஞ்சியுடனும் சேர்த்துக.

**கொண்டார்** - கொண்டாராகி முற்றெச்சம். கொண்டு-கொண்டு - கொண்டாராய் என எறிபத்தர்புராணம் 560-ம் பாட்டினும் இவ்வாறே கூறியதும் காண்க. இவ்வாறு தனித்தனி பிரித்து ஒரே சொல்லால் முடிபுகாட்டிக் கூறுதல் அந்தச் செயல்கள் ஒவ் வொன்றையும் பிரித்துக் காட்டிக் கற்போர் மனத்தை அவற்றிற் புகுத்தற்பொருட்டும், அவையாவும் ஒன்றுபோலவே சிவபூசைக்குரியவை என அறிவுறுத்தற் பொருட்டுமாம்.

771. (வி - ரை) **ஒரு கையில் வெய்ய சரத்துடன் தனுதாங்கி** என மாற்றுக.

**கல்லை போனகம் ஏந்தி** - அவர் ஏந்தியது கல்லையினை. இறைச்சிப் போனகம் அதனுள் நின்றது. போனகக் கல்லை ஏந்தி என்னாது **கல்லைப் போனகம் ஏந்தி** என்றார், போனகத்திற்குக் கொள்கலமாகியமட்டில் கல்லை நின்றலின் அதனை ஏந்துதல் அவர் கருத்தன்று, போனகம் நிவேதிக்கும் உணவாதலின் அதனை ஏந்துதலே அவர் கருதியதென்று குறிக்கும்பொருட்டென்பதாம். **மேல் இறைச்சி** - சுவைகாணத் தாம் வாயினில் மென்ற - அதுக்கிப் பார்த்த - இறைச்சி என்றகுறிப்புமாம்.

**இனிய என்று** - இது அவர் மனத்தில் எண்ணியது. உள்ள நிகழ்ச்சி.

**இரங்கி ஏங்கி** - இவை அவர் மனநிலை. தேவர்பசிக்கு அவர் இரங்கினார். **இரங்குதல்** - பரிவுகொள்ளுதல். "பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து" என்ற

திருவாசகமும், " கன்றகல புனிற்று " (791) என்றதுங்காண்க. ஏங்குதல் இதுவரை தாழ்க்க நேர்ந்ததே ! முன்பே பசிதீர்க்க என்னால் இயலவில்லையே ! என்ற ஏக்கம்.

**நணி - விரைந்து.** மிகவிரைவாக பசிதீர்க்கும் ஆவலால் மிகவிரைந்தனர்.

**நண்ணினார் திண்ணனார்தாம்** - செயவினை முற்றிய விரைவுகுறிக்கப் பயனிலையை முன்னுரைத்தனர்.

நீர்சுமந்து, திருப்பள்ளித்தாமங் கொண்டு, ஊனமுது ஏந்தி விரைதல் மெய்யினாலும், பசிப்பார் என்று இரங்கி ஏங்குதல் மனத்தினாலும் நிகழ்ந்தன. திருவாயிற் றிருமஞ்சனநீர் நிறையக்கொண்டதனால் வாக்கினால் பணிசெய்ய இயலாமையின் இவ்விரண்டுமே கூறினார். இறைவனுக்குத் திருப்பணிசெய்தலில் வேண்டப்பட்டு விதித்த மன மொழி மெய்களின் ஒருமைப்பாடும் ஆவமும் குறித்ததுகாண்க. 122

772\. இளைத்தனர் நாய னாரென் றீண்டச்சென், றெய்தி, வெற்பின்
முளைத்தெழு முதலைக் கண்டு, முடிமிசை மலரைக் காலில்
வளைத்தபொற் செருப்பான் மாற்றி, வாயின்மஞ் சனநீர் தன்னை
விளைத்தவன் புமிழ்வார் போல விமலனார் முடிமேல் விட்டார். ௧௨௩

(இ - ள்) வெளிப்படை. தமது தலைவராகிய தேவர் இளைத்தனர் என்று, வேகமாய்ப்போய், மலையில் முளைத்தெழுந்த முதல்வராகிய அவரைக் கண்டு, அவரது திருமுடிமேல் இருந்த மலர்களைத் தமது காலிலணிந்த அழகிய செருப்பினாலே மாற்றித், திருவாயிலிருந்த திருமஞ்சனநீரை விளைந்த அன்பினை உமிழ்வார்போல விமலனாரது திருமுடியின்மேல் விட்டனர்.

(வி - ரை) **இளைத்தனர்** - பசியால் மேனியிளைக்கும் இயல்புபற்றி இவ்வாறு எண்ணினார். **இளைத்தல்** - காரணங்கள் சத்திகுறைதல். களைத்தல் என்றலுமாம். தேவரது இளைப்பே இவர்மனத்தின் முன் நின்றபடியால் பின்வரும் பயனிலையாகிய இளைத்தனர் என்றதனை முன்வைத்துக் கூறினார்.

**நாயனார்** - 759 பார்க்க. **என்று** - என்று எண்ணிக் கவலைகொண்டு. முன்பாட்டிற் **சாலப்பசிப்பர்** என்ற கவலை தொடர்ந்து நின்றதென்பது.

**ஈண்ட** - விரைவுகுறித்தது "ஈண்டநீ வருவாயோலம்" (432) என்றதுகாண்க.

**கண்டு** - இதுவரை பிரிந்திருந்தமையால் திரும்பிச் சென்றவுடன் மிக்க ஆவத்தோடும் கண்டு எனக்-

**முடிமிசை மாற்றி** - நாட்பூசையின் தொடக்கம் முன்னைப் பூசையின் நின்மாலியங் களைதலாதலின், முதலில் நாதனார் முடிமேலிருந்த மலர்களைச் செருப்புக் காலால் மாற்றினார். பழம்பூக் களைதலினை நாணன் சொன்னவனல்லனாயினும் பழய பூக்களைக் களைந்தாலல்லது நீர் வார்த்தற்கும் புதிய பூச்சாத்துதற்கும் இடையில்லை என்றறிந்து திண்ணனார் இதனைச் செய்தனர். முன்பிறப்பிற் பூசனை செய்த வாசனை பற்றி இவ்வாறு செய்தார் என்றலுமாம். பழம்பூக் களைந்தபின் அபிடேகஞ் செய்தல்வேண்டுமாதலின் வாயின் மஞ்சனநீர்தன்னை இறைவன் றிருமேனியில் விட்டனர். கைகளில் வில்லும் இறைச்சியுமேந்துதலாற் காலால் மாற்றினார்.

**முளைத்தெழுமுதல்** தானாய் முளைத்து எழுந்த முதல்வர், சுயம்பு மூர்த்தி. மலைமிசை யெழுந்து (745) என்றதும், மலையெழு கொழுந்தாயுள்ள (654) என்றதும் காண்க. **முதல்** - முழுமுதல்வர் - ஏகநாயகர் - எல்லார்க்கும் முன்னவர்.

**காலில் வளைத்த பொற் செருப்பு** - காலின்கண் வளைந்து சூழ்ந்த அழகிய செருப்பு. நீடு செருப்பு விருப்பு வாய்ப்ப (711) என்றவிடத் துரைத்தவை காண்க. " பொன்னார் திருவடி " என்புழிப்போல **பொன்** என்று அருமைப்படக்கூறிய திறமும் உணர்க.

**நீர் தன்னை - முடிமேல் விட்டார்** - என்று முடிக்க நீர் விடுதல் என்பது வழக்கு. ". .தொழுற, பூசனை தன்னைப் புகக்கொரு காலில், தொடுசெருப் படியால் நீக்கி வாயில், இடுபுனல் மேனியி லாட்டித் தன்றலை, தங்கிய துவர்ப்பூ வேற்றி யிறைச்சியிற், பெரிதும் போனகம் படைத்துப் பிரானைக், கண்டுகண் களிப்பக் கசிந்து காதலில், கொண்டோர் கூத்துமுன் னாடிக் குரைகழல், அன்பொடு மிறுக விறைஞ்சி யார்வ, அன்பொடு கானக மடையும்", என நக்கீரர் (திருக்கண்ணப்பதேவர் திருமறம் 57 - 66) கூறும் முறையினையும் காண்க.

**விளைந்த அன்பு** - விளைந்த என்பது எதனை நோக்கி விளைந்த என விகாரமாயிற்று? முன்பு செய்தவம் காரணமாக இப்போது தானே விளைந்த அன்பு - இவர்க்கு முன்னைப் பிறவியினின்றும் உடன்வந்த குணவிசேடமாம் என்பது 675-ல் உரைத்தவற்றாலும் உணர்க.

**அன்பு உமிழ்வார் போல** - வாய் கலசமாகக் கொண்டுவந்த நீரினால் நீராட்டு வித்தல் தம்முள்ளே விளைந்த அன்பினை உமிழ்ந்ததுபோல இருந்தது என்பதாம். அன்பு காரணமாக நிகழ்ந்த செயலுக்கு அன்பினையே உவமித்தது இதற்கு உவமை பிறிதின்மையும் தோன்றக் கூறியபடியாம். வாயின் மஞ்சனநீரை முடிமேல் விட்டது அன்பினை உமிழ்ந்தது போன்றது என்றமையின் தற்குறிப்பேற்ற உவமையின் பாற்படும். "பொருவில் அன்பு உருவமானார் (753) என்றபடி இவர் முழுதும் அன்பே உருவமாக ஆயினவராதலின், அன்புருவத்தில் அன்பினையன்றி வேறொன்றும் விளையாமையால் அவ்வாறு உள்ளே விளைந்த அன்பினையே மேலவழியுமாறு உமிழ்ந்தார் என்பது கருத்து. 460 752 திருப்பாட்டுக்களின் கீழ் உரைத்தவையுங் காண்க.

*" பூட்டு கார்முகந் தன்னொடு தோன்றிய புயலவர், பூட்டு தண்புன னந்தியங் கிரிமிசை யுகுத்தல், வேட்டு வக்குலத் திண்ணனார் மஞ்சன மிமலற், காட்டு கின்ற தோர் தனிச்செயல் போன்றுள தன்றே" என்ற கந்தபுராணத் திருப்பாட்டில் (ஆற்றுப்படலம் - 6) இக்கருத்தை உவமை முகத்தால் வைத்துப் பாராட்டியிருத்தலும் இங்குவைத்துக் காண்க.

**விமலனார்** - நின்மலராதலின் அவரை மஞ்சன மாட்டித் தூய்மைப் படுத்துதல் வேண்டப்படுவதன்று. அன்பினில் ஆடுதலையே அவர் விரும்புவாராதலின் இங்கு இவரது திருவாய்நீர் மஞ்சனத்தை விரும்பி ஏற்றனர் என்ற கருத்துப் புலப்பட இங்கு இப்பெயரால் கூறினார். 806 பார்க்க. இத்தன்மையினைப் பின்னர் 818ல் "விமலனார்" என்று திண்ணனார் திருவாக்கால் குறிப்பதும் காண்க. அவர் இயல்பாகவே பாசங்களினீங்கியவர், திண்ணனார் பொருவில் அன்பு உருவமாயினவர். ஆதலின் இவரது வாய்நீரால் அவரது தூய்மை அருசிதப்படவில்லை என்பதும் குறிப்பு "யாவையும் சூனியஞ் சத்தெதிராதலின்" என்றபடி, சத்தின்முன் அசத்து விளக்கமுறாது. இங்கு இந்த அன்பாகிய சத்து விளக்கிட உணராத விடத்துச் சிவகோசரியார் இச்செயல்களை அருசிதமென்றனர் பின்னர் இறைவனார் "அவனுடைய வடிவெல்லாம் நமக்கன்பு" (186), "அவனுடைய செயலெல்லாம் நமக்கினியவாம்" என்று காட்டவே (807), இவை தூயனவாகிய பரிசெல்லாம் காணகின்றார்.

*இத்திருப்பாட்டில் கரிய பெரிய மேகம் இந்திரவில் ஏந்தியதும், மேகமாகிய வாயினில் நீரினைக் கொண்டதும், அதனையே நந்திமலைமேல் உகுத்ததும் திண்ணனாருக்கு மெய்யும் உருவும் வினையும் பயனும் பற்றிய முற்றுவமமாக அமைந்திருத்தல் காண்க. **நந்தி** என்பது இறைவனது பெயராயினமையின் அதுவும் முற்றுவமத்திற்கு அங்கமாயப் பொருந்தி அழகுசெய்து நின்றது. விளைந்த அன்பு உமிழ்வார்போல என்றதனைத் தனக்குவமையில்லாத **தனிச் செயல்** என்றார். கருவரை காளமேக மேந்தியதென்ன (664) என்ற விடத்துத் திண்ணனார்க்குக் காளமேகத்தை உவமை கூறிய கருத்தினைத் தொடர்ந்த விரிவுரை போல இப்பாட்டு விளங்குகின்றதும் காண்க.

விட்டார் - உமிழ்ந்தார் - மஞ்சனமாக வார்த்தார். மஞ்சன மாட்ட எண்ணி நதியின் நீரினை வாயினில் கொண்டார் (770) என உரைத்தபடி, இவர் இந்நீரினைக் கொண்டு அபிடேகம் செய்வதாகப் பாவித்தார். இங்கு விட்டார் என்பது பாவனாபிடேகம் என ஆகமங்களில் விதித்தபடிக்குள்ளதொரு வழிபாட்டுச் செயல் எனக். ஒரு வாயின் அளவுமட்டிற் கொண்ட நீர் இறைவனது திருமேனி முழுதும் ஆட்டுதற்குச் சிறிதும் போதாமையால் இங்குத் திண்ணனார் அந்த நீரினால் இறைவன் திருமேனி முழுதும் நீராட்டியமைந்தனராகப் பாவித்துக்கொண்டனர் என்பது கொள்ளத்தக்கது. இறைவனும் அந்தப் பாவனையினுள்ளே நின்று அமர்ந்துகொண்டு பாவனைப்பயனை அருளினர் எனக. "பாவிப்பார் மனம் பாவிக் கொண்டானை" என்பது தேவாரம். சண்டீச நாயனார் ஆட்டிய பாலாகிய திருமஞ்சனத்தை வெண்மணலிலிங்கத் திருமேனியினுள்ளிருந்து, "அன்ப ரன்பின் பாலுள்ளதாய, மூள வமர்ந்த நயப்பாடு முதிர்ந்த பற்று முற்றச்சூழ், கோள மதனி லுண்ணிறைந்து குறித்த பூசை கொண்"டருளியதும் இங்கு உன்னுக. திண்ணனார் என்ற எழுவாய் மேற்பாட்டினின்றும் வருவிக்க. 123

773. தலைமிசைச் சுமந்த பள்ளித் தாமத்தைத் தடங்கா ளத்தி
மலைமிசைத் தம்பி ரானார் முடிமிசை வணங்கிச் சாத்திச்,
சிலைமிசைப் பொலிந்த செங்கைத் திண்ணனார் சேர்த்த கல்லை
யிலைமிசைப் படைத்த வூனின் றிருவமு தெதிரே வைத்து, ௧௨௪

774. "கொழுவிய தசைக ளெல்லாங் கோலினிற் றெரிந்து கோத்தங்
கழலுறு பதத்திற் காய்ச்சிப், பல்லினா லதுக்கி, நாவிற்
பழகிய வினிமை பார்த்துப், படைத்தவிவ் விறைச்சி, சால
அழகிது, நாய னீரே! யமுதுசெய் தருளும்" என்றார். ௧௨௫

773. (இ - ள்) வெளிப்படை. வில்லின்மேல் விளங்கிய செம்மையாகிய கையினை யுடைய திண்ணனார் தமது தலையின்மேற் குடுமியிற் சுமந்துகொண்டுவந்த திருப்பள்ளித்தாமத்தைப் பெரிய காளத்திமலையின்மேல் எழுந்த தமது பெருமானாருடைய திருமுடியின்மீது வணங்கிச்சாத்திச், சேர்த்துத்தைத்த சருகு இலைக் கல்லையிற்கொண்ட ஊனாகிய திருவமுதினை எதிரில்வைத்து, ௧௨௪

774. (இ - ள்) வெளிப்படை. "கொழுப்பினையுடைய தசைகளை யெல்லாம் தெரிந்து அரிந்தெடுத்துக் கோலினிற்கோத்து அங்கு நெருப்பில் உற்றபதம்பொருந்தக் காய்ச்சியபின், பல்லினால் அதுக்கி, முன் பழகியநாவினால் இனிய சுவை ஆராய்ந்து பார்த்துப் படைத்த இவ்விறைச்சி மிகவும் அழகியது; நாயனீரே! தேவரீர் இதனை அமுதுசெய்தருளும்" என்றார். ௧௨௫

இவ்விரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபுகொண்டன.

773. (வி - ரை) தலைமிசை - தலையின்மேல்உள்ள குடுமியின்மேல். குஞ்சிமேற் றுதையக்கொண்டார் (770) என்றதுகாண்க. உடலில் உயர்ந்தது தலை, அதனின் மேலாகிய உச்சியிலுள்ளது குஞ்சி குடுமி; தேவர்க்குரிய திருப்பள்ளித்தாமத்தை அதனினும்மேலாக வைத்தனர் என்று திண்ணனார் அதைப்போற்றிய தன்மை குறிக்கப்பட்டதாம். சுமந்த - மிகுதியாக - சுமையாகக் கொணர்ந்த. "பூவொடு நீர்சுமக்கும் நின்னடியார்", பூநாளுந் தலைசுமப்ப என்பனவாதி திருவாக்குக்கள் காண்க.

தம்பிரானார் - திண்ணனார் இவரைத் தமது தலைவராக - இனிய பிரானாராகக் கொண்ட அன்புநிலை குறிக்க இவ்வாறு கூறினார். "இனிய எம்பிரானார்" (771) என்றது காண்க.

முடிமிசை வணங்கிச்சாத்தி - ஒரு கையினில் அம்பும்வில்லும், மற்ற ஒருகையினில் ஊனமுதும்கொண்டனர் ஆதலின், கையால் எடுத்துச்சாத்துதல் இயலாமையின் தமது

தலையினைத் தேவரது திருமுடியின்மேல் வருமாறு நின்று வணங்கித் தலையிற்கொண்ட திருப்பள்ளித்தாமத்தை அவரது திருமுடியின்மேல் உதிர்த்தனர் எனக் இதனையே சாத்தி என்றார் வணங்கி என்றது தமதுமுடி அவர்முடிமேல் வரும்படி வளைந்து - குனிந்து - எனக். வணக்கம் - பூச்சூட்டும்போது வணங்கி அச்செயல்செய்யவேண்டிய வழிபாட்டுமுறையும் குறித்தபடிகாண்க

இப்போது நாம் கண்டுதரிசிக்கும் திருக்காளத்திநாதரது திருமுடிமீது தமது திருமுடியினால் வணங்கிப் பூக்களை உதிர்க்கவேண்டுமாயின் திண்ணனார் இக்காலத்து நாம் காணும் மனித வாக்கத்தாரின் மிக்நீண்ட உடல் நீளத்தின் இரண்டு பங்குக்குமேல் அதிக நீண்ட திருமேனியுடையாராயிருந்திருத்தல்வேண்டுமென்பது ஊகிக்கஉள்ளது

**சிலைமிசைப் பொலிந்த** - வில்லினை உள்வைத்துப் பிடித்த **செங்கை** - செம்மையுடைய-அழகிய - திருக்கை. **இலைசேர்ந்த கல்லை மிசைப்படைத்த** எனமாற்றுக 124

774 (வி - ரை) **கோழுவிய** கொழுப்போடு கூடிய இன்புறுத்சைகள் வெவ்வேறமபினி வீரந்து கொண்டு (766), கொழுந்தசை (767) என்றவை காண்க. "கறிவிரவு நெய்சோறு" (ஆளுடைய நம்பிகள் தேவாரம்) என்றதுபோலக் கொழுப்புடன் கலந்திருத்தலால் இவையே ஊனினது மிக இனிய பகுதிகள்

**கோழுவிய .இவ்விறைச்சி** - திண்ணனார் அவற்றைத் தேர்ந்து எடுத்துச் சமைத்த செயலினையும் அவற்றின் இனிமையினையும் தமது தேவருக்கு எடுத்துச் சொல்லிப் புகட்டும் அன்பின்றிறத்தை உணர்த்த இவ்வாறு கூறினார் இவை 766 - 767-ல் உரைக்கப்பட்டன அமுதுபடைக்கச் செய்த செயல்களை யெல்லாம் தெரிந்து. கோத்து - காய்ச்சி - அதுக்கி - பார்த்து - படைத்த என்று இவ்வளவும் தனித்தனி கூறியது இச்செயல்கள் ஒவ்வொன்றும் இவை தேவர்க்கு இனிய அமுதுபடைக்க வேண்டும் என்ற ஒருமைப்பட்ட உணர்ச்சியுடனே திண்ணனார் முன்னர் எண்ணிச் செய்தனர் என்பதைக் குறித்ததாம். சிவபூசைக்கு வேண்டிய நீர் - பூ - அமுது முதலிய யாவையும் இவ்வாறே அவ்வவற்றில் அழுந்திய ஒருமைப்பட்ட மனத்துடன் எண்ணியெண்ணி அமைத்தல் வேண்டும் என்ற சிவாகம விதிகளையும் இங்கு வைத்துக் காண்க முன்னி (559), நெஞ்சில் வாலிய நேசம் கொண்டு (560), என உரைத்தவற்றை இங்கு நினைவுகூர்க.

**பழகிய நாவில் இனிமை பார்த்து** - என்று கூட்டுக. முன் பழக்கமுடைய நாவினால் இனிய சுவையுடைய ஊனினை அறிந்து. இரசம் என்ற புலனுக்கு உரிய பொறி நாவேயாம் ஆதலின், இனிமை பார்த்து என்றமே அமையுமாயினும் பல நாட் சுவைத்துச் சுவைத்துப் பார்த்துணட பழக்கமுள்ள நாவினது முன்அனுபவத்தின் றுணைகொண்டு இதன் சுவையினை அறிந்தாராதலின் இது தவறுபடாது நிச்சயிக்கப்பட்ட இனிமையுடையது என வற்புறுத்தற் பொருட்டு **நாவில்** என்று கூறியதுடன் அதற்குப் **பழகிய** என்ற அடைமொழியும் தந்தோதினார்

**சால அழகிது** மிக இனியது. முன்னர் **மச்சிது** என்றதன் கருத்தும் இது குழவிகட்கு உணவு ஊட்டும் தாயமார், அவ்வுணவின் சிறப்பும், அமைப்பும், படைப்பும் தனித்தனி எடுத்துக் கூறி ஊட்டும் அன்பினியல்பு இங்கு வைத்துக் காண்க

**நாயனீரே !** - தலைவரே !. **அமுது செய்தருளும்** - அமுது செய்யக் கடவீர். இம்மொழிகள் சொல்லியது, பார்ப்பான் முன்பறைந்து ஊட்டினன் என்று நாணன் உபதேசித்த அதனைத் திண்ணனார் கடைப்பிடித்து அவ்வாறே செய்த செயல் எனக.

இறைவரை அமுதூட்டுவிக்கும் ஆகம மந்திரங்களும், "இது இன்ன அமுது; இதனைத் தேவரீர் உண்டருளும்" என்ற இக்கருத்தே பற்றியன வாதலும் காண்க. 758-ல் உரைத்தவை பார்க்க.

பூசைக்குரிய பொருள்களைச் சோதித்தவகையை மேல் 770-771ல் தொடர்ந்து கூறியதுபோலப் பூசையினையை இவ்விரண்டுபாட்டுக்களிற் றொடர்ந்துகூறினார். 125

775. அன்னவிம் மொழிகள் சொல்லி யமுதுசெய் வித்த வேடர்
மன்னனார் திருக்கா ளத்தி மலையினார்க் கினிய நல்லூன்
இன்னமும் வேண்டு மென்னு மெழுபெருங் காதல் கண்டு
பன்னெடுங் கரங்கள் கூப்பிப் பகலவன் மலையிற் றாழ்ந்தான். ௧௨௬

(இ - ள்) வெளிப்படை. அத்தன்மையவாகிய இந்த மொழிகளைச் சொல்லி அமுதூட்டிய வேடர் தலைவனாரது உள்ளத்திலே திருக்காளத்தி மலையிறைவருக்கு இனிய நல்ல ஊன் இன்னமும் வேண்டும் என்று எழுகின்ற பெருத்த ஆசையினைக் கண்டு, தனது பலவாகிய நீண்ட கரங்களையும் குவித்துப் பகலோன் மலையிலே தாழ்ந்தனன்.

(வி - ரை) **அன்ன இம்மொழிகள்** - அத்தன்மை யுடையனவாகிய அந்த ஆகமங்களில் விதித்த மந்திரங்களின் கருத்தே பற்றிய தன்மையுடைய என அகரம் உலகறிசுட்டு.

**இம்மொழிகள்** - மேலே கூறிய இவையும் இவைபோன்ற பல இனியமொழிகளும். இவை பலவும் தாயார் தம் சேய்கட்கு உணவு ஊட்டும் காலத்து அன்பினில் ஊறி இயல்பின் எழுவன காண்க. 799 பார்க்க.

**அமுது செய்வித்த** - ஊட்டிய. ஊட்டி (758) என்ற விடத்துரைத்தவை பார்க்க. செய்வித்த என்றதனால் இறைவன் அதனை ஏற்றுக் கொண்டமை குறிப்பாம்.

**வேடர் மன்னனார்** - திண்ணனார் அன்றைக்கு முன்னாளில் மன்னராகப் பட்டம் சூட்டிக் கொள்ளப்பெற்றவர்.

**திருக்காளத்தி மலையினார்** - குடுமித் தேவர்.

**இன்னமும் வேண்டும்** - மேலும் ஊட்ட வேண்டும்.

**காதல் கண்டு** - திண்ணனாரது ஆசையைக் கண்டு. வேடர் மன்னனார் காதல் என்று கூட்டுக. ஆறும் வேற்றுமைத் தொகை.

**பன்னெடுங் கரங்கள்** - அனேகங் கோடியாகிய நீண்ட கதிர்கள். **கரம்** கதிர். கிரணம் என்பர். **கூப்பி** - குவித்துக்கொண்டு சத்தியைமடக்கி மறைத்துக்கொண்டு.

**மலையில் தாழ்ந்தான்** - அத்தமன மலையின்கீழ் இறங்கி மறைந்தான். நாம் இருக்கும் நில உலகமாகிய அண்டம் சுழல்வதால் பகலவனுடைய பார்வையினின்று மறைவதைப் பகலவன் மறைவதாகக் கூறுதல் உலக வழக்கு. **கதிரவன் உச்சி நண்ண** (750) என்ற விடத்துரைத்தவை பார்க்க. இரவி. எழும்போதில் 783 என்றதும், இவை போல்வன பிறவும் இவ்வாறே கண்டுகொள்க.

இனி, இங்கு, **கரம்** - கைஎனவும், **தாழ்ந்தான்** - வணங்கினான் எனவும் கொண்டு இவரது அன்பின் பெருமையைக்கண்டு கதிரவன் தனது பலபலவாகிய கைகளையும் கூப்பிக்கொண்டு மலைமேல் வணங்கினான் என்று பிறிதோர் பொருள் உரைக்கநின்ற குறிப்பும் காண்க.

**காதல் கண்டு கதிரவன் மலையில் தாழ்ந்தான்** என்றது இன்னமும் அமுதூட்ட வேண்டும் என்று திண்ணனார் காதல்கொண்டனர், அதற்காகப் பகல்போய் இரவு வருதலும், இரவுபோய்ப் பகல் வருதலும் வேண்டும், அவ்வாறு இரவும் பகலும் வருதற்கு முறையேதானும் மேலைமலையிற் றாழ்ந்து கீழ்கடலிற் றோன்றல்வேண்டும், பின்னர் அவர் காதலித்த ஊன்பெறுதற்கு அவ்விலங்குகளைக் காட்டுதலும்வேண்டும், இவ்வாறு திண்ணனாருக்கு ஊழியஞ்செய்து அவரருளினைப் பெறுவோமென்று கருதியவன்போலக் கதிரவன் தாழ்ந்தனன் என்றதாம். திண்ணனாரது பெருங்காதல் கண்டு தாழ்ந்தனன் எனக் தற்குறிப்பேற்ற அணி.

இக்கருத்தைத் தொடர்ந்துகொண்டு "மாவிலைக் கஇடக்குரு திரைஎடுத்துக் கைகாட்டு வான்போலக் கதிர்காட்டி எழும்போதில" (783) என்று கதிரவன் அன

றிரவுகழிந்த விடியற்காலை எழுவதனையும் தொடர்கிலைத் தற்குறிப்பேற்ற உவமையணி யில் அழகுபெற அமைத்த சிறப்பும் காண்க. 303-ம் பாட்டும் பார்க்க. 126

776. அவ்வழி யந்தி மாலை யணைதலு மிரவு சேரும்
வெவ்விலங் குளவென் றஞ்சி மெய்ம்மையின் வேறு கொள்ளாச்
செவ்விய வன்பு தாங்கித் திருக்கையிற் சிலையுந் தாங்கி
மைவரை யென்ன வையர் மருங்குநின் றகலா நின்றார். ௧௨௭

(இ - ள்) வெளிப்படை. அவ்வழியே அந்திமாலை வரவும் (திண்ணனார்) இரவிலே சேரும் கொடிய விலங்குகள் இங்குள்ளன என்று பயந்து உண்மையினின்றும் வேறு படாத செம்மையாகிய அன்பினை மனத்தினுள்ளே தாங்கித், திருக்கையிலே (புறத் திலே) வில்லையுந்தாங்கி இறைவரின் பக்கத்தினின்றும் கரியமலைபோல நீங்காது நின்றனர்.

(வி - ரை) அவ்வழி - கதிரவன் மலையிற்றாழ்ந்த அவ்வழியிலே - அதனைத் தொடர்ந்து.

அந்திமாலை - அந்தி - செவ்வானம். அந்தியைக் கொண்ட மாலைக்காலம். அந்தி வண்ணன் என்பது காண்க. கதிரவன் ஒளி போய் நண்பகல் கழிதலும் மாலை வருதலும் நாட்போதில் வெவ்வேறு கூறுகள் என்பது குறிக்க அணைதலும் என்றார். இவை யிரண்டிற்கும் வெவ்வேறு தன்மைகளும் குணங்களும் உள்ளன. இவ்வாறே நாட் கூறுகள், காலக்கூறுகள் பிறவற்றிற்கும் உள்ள குணத்தன்மை வேறுபாடுகளும் கண்டு கொள்க. ஒளியின் இன்மையே இருள் என்பது தவறு. ஒளியும் இருளும் வெவ்வேறு பொருள்கள் என்ற சாத்திர உண்மை இங்கு விளக்கப்படுதலும் காண்க. ஒளியும் இரு ளும் பகலுமிரவுமாகிய காலக்கூறுகளில் நிகழும் பொருள்கள். ஒளியும் இருளும் பிராக் கிருதமும், காலம் மாயேயமுமாம் கங்குல்தான்.. இருளின்கணம் (454), இருள் யாமத்து (454) என்றவை காண்க.

இரவு சேரும் வெவ்விலங்கு உள என்று அஞ்சி - இரவு சேரும் - இரவிலே சஞ்சரிக்கும் இயல்புடைய. இது கொடுவிலங்குகள் எல்லாவற்றினுக்கு மியல்பாம். கைம்மலை கரடி வேங்கை யரிதிரி கானம் (756) என்றது காண்க. இவ்விலங்குகளை யஞ்சியே இவர், துணையின்றித் தனியாய் இருந்த இறைவரைப் பிரியமாட்டாது (762) வருந்தினார் என்பதும் முன்னாகக் கண்டோம். இவ்வாறன்றிச் சேரும் என்ற தனை வினைமுற்றாக்கக் கொண்டு, இராக்காலம் சேரும்-வரும், (இங்கு) விலங்குகள் உள என்றலுமாம்; விலங்கு உள, அவை இரவிற் சேரும் என்று உரைத்தலுமாம். விலங்கின் பொதுமை நீக்க வெம்மை என்ற அடைமொழி தந்தோதினார்.

சிலையும் தாங்கி - எய்வதற்குச் சித்தமாக வில்லைப்பிடித்துக்கொண்டு. அகத் துள்ளே அன்பு தாங்கியதனோடு கையிற் சிலையும் என உம்மை இறந்தது தழுவியது. உள்ளே அன்பு தாங்கிய மனமாகிய உட்கரணத்தால் ஏவப்பட்டுப் புறக்கரணமாகிய கையில் சிலைதாங்கி எனக் இதத்தொடர்பை ஈரிடத்தும் தாங்கி என்ற ஒரே சொற் றந்து பிணைத்து ஓதினார் இஃது ஆசிரியரது கவிநயமாகிய மரபு எனக. 770-ம் ஆண்டுரைத்தவையும் பார்க்க.

மெய்ம்மையின் வேறு கொள்ளாச் செவ்விய அன்பு-உண்மைத் தன்மையினைத் தவிர வேறு ஒன்றும் தன்னகத்துப் பொருந்தாத செம்மையாகிய அன்பு. "தன் னெஞ் சறிவது பொய்யற்க", "வஞ்ச மனத்தான் படிற்றொழுக்கம்" என்றபடி பிற ரெல்லாம் கொள்ளும் அன்பு உண்மையினையேயன்றிப் பிறவற்றையும் உள்ளே பொருந்தக் கொண்டிருப்பன. இவரது அன்பு வேறொன்றினையும் உட்கலவாத தூய மையுடையது என்பதாம்.

இனி இதற்கு இவ்வாறன்றி, **மெய்ம்மை** - சத்து - சத்தாந்தன்மை, (இது இறை வணங்கிய பொருள்), **வேறு கொள்ளா** - திரிவுபடாத, சத்தினிடத்தினின்றும் திரிவு படாத; **செவ்விய**-வேறுபடாமையாகிய, (செம்மை - செப்பம், வேறுபடாமையே செப்பமாம்) என்றுரைத்தலுமொன்று. **தாங்கி** - சிந்தையில் என வருவிக்க.

**ஐயர் மருங்கு** - குடுமித் தேவரது பக்கல், ஆறும் வேற்றுமைத் தொகை 752 பார்க்க. **மருங்கு நின்று** - பக்கலினின்றும். **அகலா** - அகலாது - நீங்காது துவ்விகுதி குறைந்த வினையெச்சம். "முறைகாக்கு முட்டாச் செயின்" (செங்கோன்மை - குறள்) என்புழிப் போலக்கொள்க. பக்கலிலிருந்து நீங்காது நின்றனர் **மருங்கு நின்று** **நின்று** - ஐந்தாம் வேற்றுமைச் சொல்லுருபு. உம்மை தொக்கது.

**நின்றார்** - நிற்றலையே செய்தார். இருத்தல், படுத்தல் முதலிய வேறெச்செயலும் செய்தாரிலர் இவ்வாறு விலங்குகள் வாராது காவல்செய்தற் பொருட்டு இந்நாளிலும் அரசமாளிகைகள் - நிதிநிலயங்கள் முதலியவற்றைக் காவல் செய்வோர் துப்பாக்கி - கத்தி - முதலிய படைகளை ஏந்தியவண்ணமீக நின்றபடியும், உலாவியும், காவல்புரியும் வழக்கினை இங்குவைத்துக் காண்க. "வில்லையேந் தியகை யோடும் வீரன் கங்குல் எல்லைகாண் பளவு நின்றான், இமைப்பில நயனம்" என்ற கம்பர்பாட்டுங் காண்க. "அவனே தானே யாகிய வந்நெறி, யேக னாகி இறைபணி நிற்க" என்று சிவஞான போதம் (10-சூத்) உணர்த்தும் இலக்கணத்துக் கிலக்கியமாய **நின்றார்** என்பதும் கண்டுகொள்க. அதனாலே மெய்ம்மையின் வேறுகொள்ளாச் செவ்விய அன்பு தாங்கி என்றதுமாம்.

**அகலாநின்றார்** - பக்கலினின்றும் அகலகின்றாராயினார், நிகழ்கால வினைமுற்று என்றுரைப்பாருமுண்டு. அது பொருந்தாமை அறிக. 127

*777. சார்வருந் **த**வங்கள் செய்து முனிவரு மமரர் தாமுங்
கார்வரை யடவி சேர்ந்துங் காணுதற் கரியார் தம்மை
யார்வமுன் பெருக வாரா வன்பினிற் கண்டு கொண்டே
நேர்பெற நோக்கி நின்றார் நீளிரு ணீங்க நின்றார். ௧௨௮

**(இ - ள்)** வெளிப்படை. சார்தற்கரியனவாகிய தவங்களைச் செய்தும், மேகங்கள் தவழும் மலைகளையும் காடுகளையும் சேர்ந்தும், முனிவர்களும் தேவர்கள்தாமும் காணுதற் கரியவராகிய சிவபெருமானை ஆசைமுன்னே பெருக ஆராத அன்பினாலே கண்டுகொண்ட படியே நேர்பெற நோக்கி நின்றார்; நீண்ட இருள் நீங்கும்படி நின்றார் (திண்ணனார்).

**(வி - ரை) சார்வரும் தவங்கள்** - விரதம், யோகம் முதலியன. **தவம்** - தபித்தல் வாட்டுதல் - என்ற பொருளில், இங்கு, உடலைவாட்டிப் புலன்களை ஒறுக்கும் முயற்சியிற் செய்யப்படுவனவாகிய சாதனங்களைக் குறித்து நின்றொழிந்தது. அவை வெயிற்காலத்துத் தீயினிடை நிற்றல், குளிர்காலத்து நீரினிடை நிற்றல், இட்டிகளை இயற்றல் முதலியன.

"மலர்தலை யுலகத்துப் பலபல மாக்கள், மக்களை மனைவியை யொக்கலை யொரீஇ,
மனையும் பிறவுந் துறந்து நினைவருங், காடு மலையும் புக்குக் கோடையிற்,
கைம்மே னிமிர்த்துக் காலொன்று முடக்கி, மெய்வகை நெருப்பி னழுவத்து நின்று,
மாரி நாளிலும் வார்பனி நாளிலு, நீரிடை மூழ்கி நெடிது கிடந்துஞ்,
சடையைப் புனைந்துந் தலையைப் பறித்து, முடையைத் துறந்து முண்ணு துழன்றுங்,
காயுங் கிழங்குங் காற்றுதிர் சருகும், வாயுவு நீரும் வந்தன வருந்தியுங், [கவ
களரிலுங் கல்லிலுங் கண்படை கொண்டுந், தளர்வுறு மியாக்கையைத் தளர்வித் தாங்
ரம்மை முத்தி யடைவதற் காகத், **தம்மைத் தாமே சாலவு மொறுப்பர்...**"
—**திருவிடைமருதூர் மும்மணிக்கோவை (19)**

என்று பட்டினத்தடிகள் இவற்றை விரித்துரைத்தது காண்க.

**செய்து** - செய்தும் சிறப்பும்மை தொக்கது.

**முனிவர்** - மனனசீலமுடையார். **அமரர்** - சாவா மருந்துணணல் முதலியவற்றால் மரணத்தைத் தடுத்து நிற்பவராவாரேனும்; இவர்கள் முதலியோரினும் உயர்ந்த நிலையுடைமையால் முனிவர் முன்வைக்கப்பட்டனர். உம்மைகள் உயர்வுசிறப்பு.

**வரை அடவி** - வரைகளையும் அடவிகளையும். அடவி மாக்கள் அடாநத காடு. **தவங்கள் செய்தும் அடவி சேர்ந்தும்** எனக. **செய்து சேர்ந்தும், சேர்ந்து செய்தும்,** எனக் கூட்டியுரைப்பினுமாம். "புற்று மாய்மர மாய்ப்புனல் காலே யுண்டி யாய்அண்ட வாணரும் பிறரும், வற்றி யாருநின் மலரடி காணா மன்ன!" (செத்திலாப்பத்து - 2) என்பது திருவாசகம்.

**காணுதற்கு அரியார்** - அருந்தவங்களாலும் காண்டற்கரியார். இவை ஆன்மபோத முனைப்பின்றிச் செய்யப்படுவன ஆதலின் அரியாராயினார். அன்புமிகுதியால் ஆன்மபோதம் சிவபோதத்துள்ளடங்கி நின்றவழி இறைவர் எளியராய் வெளிப்பட்டருளுவர் என்பது எல்லா நூல்கட்கும் துணிபாம். "முத்திக் குழன்று முனிவர்குழாம் நனிவாட - அத்திக் கருளி அடியேனை யாண்டுகொண்டு - பத்தி கடலுட் பதித்த பரஞ்சோதி" என்ற திருவாசகக் கருத்தும் உன்னுக. இதுபற்றியே இங்கு "ஆர்வமுன் பெருக ஆரா அன்பினிற் கண்டு கொண்டே" என்பின்னாகக் கூறுவது காண்க.

**ஆரா அன்பினிற் கண்டுகொண்டே** மேன்மேல் வளர்ந்து மீதூரும் அன்பாதலின் அதனுள் இறைவன் வெளிப்பட, அவனைக் கண்ட வண்ணமாகவே "பாசங் கழித்த கண்களா லானுருக் கண்டுகொண்டு" (திருவாத உப - படலம் - 38) என்பது திருவிளையாடற் புராணம்.

**நேர் பெற நோக்குதல்** - காண்பானும் காட்சிப் பொருளும் காட்சியும் வேறு தோன்றாமல் ஒன்றும் வண்ணம் ஊன்றிப்பார்த்தல். **நின்றார்** - அசசெயலிலே நிலைத்து நின்றனர். மேற்பாட்டில் **அகலா நின்றார்** என்றதும் காண்க. மேற்பாட்டால் அவர் நின்ற புறச்செயலும், இப்பாட்டால் அவர் நின்ற அகச்செயலும் கூறப்பட்டன.

**நீள் இருள் நீங்க நின்றார்** - **நீள் இருள்** - நீண்டு சென்றதாகிய அவ்விரவு. தலைவனிடத்துப் பணி செய்யும் அன்புமிகுதி யுடையார்க்கு அந்தப் பணிவிடைக்கும் தமக்கும் இடையில் இடையூறுய்த்த தடுத்துநிற்கும் காலம் சிறிதேயாயினும் அது ஊழிபோல நீண்டுக் காட்டும் என்பது அகத்திணையினியல்பாம். "மிகுபுலவிப் புணர்ச்சிக்கண் ஊழியா மொருகணந்தான், அவ்வூழி யொருகணமாம்" (ஏயர்கோன் - புராண 268) என்று இதன் இயல்பை உடன்பாட்டிலும் எதிர்மறையிலும் வைத்து ஆசிரியர் சுவைபடக் காட்டுவது காண்க.

**நீங்க நின்றார்** - நீள் இருள் நீங்குதலை எதிர்பார்த்து நின்றார் உணர்வந்தான் என்புழிப்போலக் கொள்க. "புலரும் படியன் றிரவும்" (222) என்றபடி, இந்நீண்ட இரவு நீங்குவதனையும், பொழுது விடிவதனையும், இறைவனைப் பின்னரும் ஊட்டுவதனையும் எதிர்பார்த்து நின்றனர். இனி, **நீள் இருள் நீங்க** - அநாதியே பந்தித்து உயிருடன் தொடர்ந்த நீண்ட இருளாகிய ஆணவமலம் நீங்கியதனாலே - முன்னர் அங்கணரது அருட்டிரு நோக்க மெய்த்த தங்கிய பவத்தின் முன்னைச் சார்புவிட்டகல நீங்கியதனாலே, **நின்றார்** - சிவத்தோடொன்றிய நிலை பெற்றனர், என்ற குறிப்பும் காண்க. ஆணவமலம் நீங்காதவழிக் கறங்கோலைபோல ஆன்மா ஒருவழியில் நில்லாது சுழற்சியுறும். "மலங்களைந் தாற்சுழல் வன்றயி ரிற்பொரு மத்துறவே", "வன்மத்திட வுடைந்து, தாழியைப் பாவு தயிர்போற் றளர்ந்தேன்" என்ற திருவாசகங்கள் காண்க. ஆதலின் ஆணவமலம் நீங்கியதனால் **நின்றார்** என்பது.

**நீங்க நின்றார்** - மேற் பாட்டில் அகலா நின்றார் என்றார், எவ்வகை நின்றாரெனின்? நேர் பெற நோக்கி நின்றார்; எவ்வளவும் நின்றார் எனின்? நீளிருள் நீங்கு

மளவும் நின்றார் என இவ்விரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து பொருள் பொருந்த உரைத்துக் கொள்ள நின்றன

**நோக்கி நின்றார்......நீள் இருள் நீங்கநின்றார்** - இருள்நீங்க - உயிர்கள் இருளை நீங்க என்று கொண்டு, அவர் நோக்கி நின்றதனால் உலகத்தில் உயிர்கள் அன்பினனிலைகண்டு ஆணவஇருள் நீங்கி உய்யுமாறு நின்றார் என்றதொரு குறிப்புமகாண்க. **நீங்கநின்றார்** - நின்றாராகிய திண்ணனார் என வினையாலணையும் பெயராக்கிப் பெரிய மலவிருள் அகத்தினின்று நீங்கும்படி நின்றவராகிய திண்ணனார் நோபெற நோக்கி நின்றார் என்று பொருள்கொண்டு கூட்டி உரைப்பாருமுண்டு. 128

778\. கழைசொரி தரளக் குன்றிற் கதிர்நில வொருபாற் பொங்க,
முழையர வுமிழ்ந்த செய்ய மணிவெயி லொருபான் மொய்ப்பத்
தழைகதிர்ப் பரிதி யோடுஞ் சந்திரன் றலையு வாவிற்
குழையணி காதர் வெற்பைக் கும்பிடச் சென்று [illegible]ம். கஉகூ

**(இ - ள்)** வெளிப்படை. மூங்கில்கள் சொரியும் முத்துக்குவைகளின் கதிராகிய நிலவு ஒருபக்கம் பொங்குதலாலும், குகைகளிற் பாம்புகள் உமிழ்ந்த சிவந்தமணிகளின் செஞ்சுடர் ஒருபக்கம் மொய்த்தலாலும், அத்தோற்றமானது சந்திரன் தழைத்த கதிர்களையுடைய ஞாயிற்றினுடனே கூடிக் குழையணிந்த செவியினையுடைய சிவபெருமானது இந்தத் திருமலையைத் தலையுவாவிற் சேவிக்க வந்தாற் போன்றிருந்தது

**(வி - ரை) தரளக்குன்று** - முத்துக்குவை. குன்றுபோற் குவிந்தன என்பார் **குன்று** என்றார். **கழை** - மூங்கில். மூங்கில் குறிஞ்சிக் கருப்பொருள், மூங்கிலிலிருந்து முத்துக்கள் விளைந்துபடும். வேரல் விளையுங் குளிர்முத்தும (492) என்ற விடத்துரைத்தவை பார்க்க. அங்குக **குளிர்முத்து** என்றதற்கேற்ப ஈண்டுக் **கதிர்நிலவு** என்று சந்திரனுக்குவமித்தார். முத்துக்களினின்று வரும் கதிர்கள் வெள்ளியனவாயும் தண்ணியனவாயும் இருக்கும் என்பது கருத்து.

**முழை** - மலைப்பொந்துகள்-குகைகள். இவற்றைப் பெருவிலங்குகள், மலைப்பெரும் பாம்புகள் முதலியவை தமது இருக்கைகளாகக் கொண்டு வாழும்.

**அரவு உமிழ்ந்த செய்யமணி** - அரவுகளில் உயர்ந்தவை தம் தலையில் மாணிக்க மணிகளைக் கொண்டுள்ளன வென்பதும், அந்த மணிகள் தாமே செவ்விய மிக்க ஒளி வீசுவன என்பதும், அரவுகள் இந்த மணிகளை இராக்காலங்களில் வெளியில் உமிழ்ந்து அவ்வொளியின் உதவிகொண்டு உலாவி இரைதேடி வந்து பின்னர் அவற்றை மீள உட்கொண்டுவிடும் என்பதும் பழமரபாய் வழங்கிவரும் உண்மைகள். "ஊருமர வமொளிகொண் மாமணி யுமிழ்ந்தவை யுலாவி வரலாற், காரிருள் கடிந்துகன கமென விளங்குகா ளத்தி மலையே" - (சாதாரி - 7) என்ற ஆளுடையபிள்ளையாரது இத்தலத் தேவாரத்தில் இக்கருத்து விளங்கிநிற்றல் காண்க.

**மணிவெயில்** - சிவந்த அரதனமணிகள் வொளிவீசும் செஞ்சுடர் **வெயில்** - சூரியவொளிபோன்ற செங்கதிர் குறித்தது.

**பொங்க - மொய்ப்ப** - பல மணிகளினின்று பலபுறமும் மிகுவீசும் மிகுதியும் தொகுதியும் குறித்தன. பொங்குதலால் - மொய்த்தலால் எனக் காரணப்பொருளில் வந்த வினையெச்சங்கள் ஒக்கும் என்ற வினைமுற்றுக்கொண்டு முடிந்தன.

**தழைகதிர்ப் பரிதி**-(மதியின் கதிர்போலன்றித்) தழைத்து வீசும் வெங்கதிருடைய ஞாயிறு **தழைத்தலாவது** காலைப்போதிலிருந்து நாட்கூறு மேலேறக் கதிரின் ஒளியும் வெப்பமும் கூர்ந்து மிகுதல். "காலையே போன்றிலங்கு மேனி, கடும்பகலின், வேலையே போன்றிலங்கும் வெண்ணீறு, - மாலையின், றாங்குருவே போலுஞ் சடைக் கற்றை" என்று அற்புதத்திருவந்தாதியில் அம்மையார் ஞாயிற்றின் கதிர் தழைத்துக்

காட்டும் வகையை அழகுபெற எல்லாம் இறைவனது திருமேனியாக உவமித்துக் காட்டுதல்காண்க.

**பரிதி** - சூரியன் - ஞாயிறு. பரிதி, சந்திரன் என்ற உவமப்பொருள்களின் பொதுத் தன்மையை நினைவுறுத்தற்கு நிலவு - வெயில் - என்று கூறினார். சந்திரன் பரிதியோடு சென்றால் ஒக்குமென மாற்றி உவமத்தை நிரனிறையாக்கிக் கொள்க.

**தலையுவா** - அமாவாசி. சந்திரனும் சூரியனும் உலக அண்டங்களின் சுழற்சியில் வான வீதியில் நேரிட்டுக்காண நிற்கும் நாளும், எதிர் எதிர் காண நிற்கும் நாளும் என இரண்டும் உவா எனப்படும். இவற்றை அமாவாசி, பௌர்ணமி என வழங்குவர். மதியின் கலைகள் சேரத் தலைப்படும் காலமாதலின் அமாவாசியினைத் தலையுவா - என்ற பெயரால் வழங்குவர் என்ப.

**குழை அணி காதர்** - குடுமித்தேவர் சிவபெருமானது திருச்செவிகளிரண்டில், வலது செவியிற் குழையும் இடது செவியிற் றோடும் உள்ளன என்பர். குழை மகர மீன் வடிவினதாய் அமைந்த காதணி.

**வெற்பைக் கும்பிட** - வெற்பின் இறைவரைக் கும்பிடலன்றி வெற்பினையே கும்பிட என்றதும் குறிப்பு. இறைவன் எழுந்தருளிய இடமாதலானும், இது கயிலையே யாதலானும் இதனை வலம் வந்து கும்பிடுதல் மரபு. "தாழ்ந்தெழுந்து திருமலையைத் தொழுது கொண்டே" என்றதும் (திருஞான புரா - 1022) காண்க.

**கும்பிடச் சென்றால்** - கும்பிடச் செல்வதாயின் அவ்விரு சுடர்களது விளக்கங்களின் தோற்றத்தை ஒக்கும் தன்மைநவிற்சியை உள்ளுறுத்த தற்குறிப்பேற்றம். **போங்க** - **மோய்ப்ப** - அத்தோற்றம் ஒக்கும் என எழுவாய் தொக்கி நின்றது.

திண்ணனார் நீள் இருள் நீங்க நின்றாராதலின், அவ்விரவின் இருள் நீங்குமவகையினைக் கூறுவார், முதலில் இரவின் முன் பாகத்தில் இருள்கூடிக் கலந்தபகுதியைத் தலையுவாப்போல என இப்பாட்டாற் கூறினார். அது கடந்து செல்ல இருள் முற்றிய நடு இரவுப் பகுதியை நீலமணிச் சோதியால் இரவிருள் ஒதுங்கினாற் போல் என வரும்பாட்டாற் கூறுகின்றார். அதன்மேல், விடியும் இரவின் பிற்பகுதியைப் பல வொளிகளால் 'இரவொன்றில்லை" எனக் கூறுவார். இவ்வாறு திண்ணனார் குடுமித் தேவனாரக் காவல் செய்யும் இரவு முழுதும் உறங்காமற் கழித்ததனை அறிவுறுத்தும் சிறப்புக்காண்க. இரவு முழுதும் திண்ணனார் தேவரை ஆரா அன்பினிற் கண்டு கொண்டே நோ்பெற நோக்கி நின்றனராதலின், அம்மலையின் அவ்விரவு முழுதினும் அதற்குத்துணையாகத், தாள்மும் மணிகளும் நீலமணிகளும் இமைத்தன ; தீபமரங்களும் மணிவிளக்கொளிகளும் விளக்கஞ் செய்தன ; ஐந்தடக்கிய பெரியோர் தியானவொளியுடன் சோதி விரித்தனர் , என அம்மலைமுழுமையும் இருள் நீங்கியதாய உணர் வொளி மயமாகக் காட்டியதும் ஆசிரியரது தெய்வமணக்கும் செய்யுள் நயமாம்.

**வெற்புக்கும்பிட**—என்பதும் பாடம்　　129

779. விரவுபன் மணிகள் கான்ற விரிகதிர்ப் படலை பொங்க
மரகத மொளிகொ ணீல மணிகளு மிமைக்குஞ் சோதி
பொரவிரு சுடருங் கஞ்சிப் போயின புடைகட் டோறு
மிரவிரு ளொதுங்கி னாலே போன்றுள தெங்கு மெங்கும். ௧௩௦

(இ - ள்) வெளிப்படை. (மேலும்) அங்குப்பொருந்திய பலவகைமணிகளும் வெளிவிட்ட விரிந்த கதிர்ப்பரப்புப் பொங்குதலால், மரகதமணிகளும், ஒளி பொருந்திய நீலமணிகளும் இமைக்கும் சோதியானது, இருசுடர்களாகிய சூரிய சந்திரர்கள் பொர, அதற்குப் பயந்து ஒளிந்து போயின பக்கங்களிலெல்லாம் இரவும் இருளும் ஒதுங்கினதுவே போன்ற தோற்றம் எங்கெங்கும் உள்ளது.

(வி - ரை) **பன்மணிகள்** - முத்தும் அரதனமும் மாகதமும் நீலமும் ஒழிந்த ஏனை வைர முதலிய மணிகள்

**விரிகதிர்ப்படலை** விரிந்து வீசுகின்ற கிரணங்களின் கூட்டம் கிரணத்தொகுதி படலை - பரப்பு - விரிவு **பொங்க** - மிகவிளங்க. பொங்க இமைக்கும் சோதி எனக் கூட்டுக "கதிர்மணியின் வளரொளிக ளிருளகல நிலவுகா லுந்தி மலையே" என்ற ஆளுடையபிள்ளையார் தேவாரமுங் காண்க.

**மாகதமும் நீலமணிகளும்** - எனக் எண்ணும்மை தொகக்து.

**இமைக்கும்** - கண்ணிமைத்தல்போல விட்டுவிட்டு ஒளிவீசும். ஒளிபடும்போது கதிர்காட்டுதல் "விலகி விலலுமிழ" என்றது காண்க.

**போர் இருசுடருக்கு அஞ்சி** - இருசுடரும் அடர, அதனுக்கு அஞ்சி. சுடர்பொருத லாவது போர்செய்து துரத்துதல்போல இருளை எதிர்நில்லாது ஓட்டச்செய்தல்.

**இருசுடர்** - சூரிய சந்திரர்கள்.

**இரவு இருள்** - இரவும் இருளும் இருளும் இருள் பொதுளிய இரவும் என மாற்றி உம்மை விரித்துரைக்க. சூரியனாற் றுரத்தப்பட்ட இருளும், சந்திரனாற் றுரத்தப்பட்ட இரவும்.

மாகதமும் நீலமணிகளும் கரியஒளி காட்டும் மணிகளாம். ஏனைமணிகளினின்றும் வீசப்பட்ட கதிர்த்தொகுதிகள் இவற்றின்மேற் றாக்கவே ஒளிக்கதிர் எதிர்வீசும் போது இக்கரிய மணிகள் தமது ஒளி காணப்பட்டு மறையும் தோற்றம் சூரிய சந்திரர்களாற் றுரத்தப்பட்ட இருளும் இரவும் ஒருபுடை ஒதுங்கித் தமது ஒளிகள் விட்டுவிட்டுக் காணுதல் போன்றிருந்தது என்பதாம் மேற்பாட்டிற் பரிதியுடன் சந்திரன் கூடிவந்தாற்போலும் எனக் கூறினாராதலின் அதனையே தொடர்ந்து அவ்வாறு போந்த இருசுடர்களும் பொர இருள் ஒதுங்கினாற்போல என்று இப்பாட்டில் உவமை கூறினார் நீலமணிகள் பக்கங்களில் ஒளி வீசுதலால் இங்ஙனங் கூறினார்

ஒளியின்முன் இருள் நில்லா தென்பது சாத்திர உண்மை. திண்ணனார் நீளிருள் நீங்க நின்றார் (777), அதற்குத் துணையாய இருசுடர் போந்தன (778), சுடர்போதவே இருள் ஒதுங்கிற்று (779), அவ்வா றொதுங்கிய இருள்,மேலும் அங்குள்ள வேறு சோதிக ளால் தன் வலி முற்று மடங்க இராக்கால மென்பதில்லையாயிற்று, (780) திண்ணனார் நீளிருள் நீங்க நிற்றலுக்கு இவை துணையாகச் சேவகஞ் செய்தன என்று இம்மூன்று பாட்டுக்களாலும் தொடர்ந்ததோருண்மை புலப்பட நிற்றலும் காண்க

பிறிதெவ்வாற்றாலும் காணுதற்கரியார் தம்மை அன்பினிற் கண்டுகொண்டே நிற் றலால் அகத்தே சிவவொளிப்பிழம்பு தோற்றலால் திணிந்த அகவிருள் இல்லை எனும் படியாயிற்று. அகவிருளில்லை யாயினாக்குப் புறவிருள் தோற்றாதாதலின் புறவிருளும் இல்லையென்றாயிற்று அகவிருள் நீங்கச் சிவவொளி துணைசெய்தாற் போலப், புற விருள் இல்லையாக்கச்செய்ய மணிகளும் தீபமரங்களும் பெருஞ்சோதியுந்துணைசெய்தன என்பதாம் "காவி லுள்ளமாம் விசும்பிடைக் காசற விளங்கும், பாசி லாசசுடர்க் குதய மீறின்மையாற் பகலு, மிரவு நோபாடக் கண்டிலா" (வாதவூரடிகளுக் குபதேசித்த படலம் 39) என்ற திருவிளையாடற் புராணக் கருத்தினையும் இங்கு வைத்துக் காண்க "சிதா நிதயோ ஹ்ருதாகாசே பரதிபாதி நிரந்தரம், நாஸ்தமேதி நசோதேதி" என்பது அபியுத்தர் வாக்கியம்.

இப்பாட்டிற்கு இவ்வாறன்றி, இருசுடருக்கு அஞ்சிப் புடைகள்தோறும் ஒதுங்கிய இருளை மணிகளின் சுடர்ப்படலையும், இமைக்குஞ் சோதியும் பொருதல் போன்றன என்றும், மேற்பாட்டிற் சந்திர சூரியர்களுக்கு முத்துக்களையும் மணிகளையும் ஒப்புக் கூறியமையின் அதற்கேற்ப அச்சுடர்களுக்குப் பகையாகிய இருளைத் தமக்கும் பகை எனக் கருதி இருளை அங்கங்குச் சென்றழித்தன என்றும் உரை கூறுவாருமுண்டு.

அஃதுரையன்மை தெளிக. அவர் இப்பாட்டின் உவமைக்கூற்றின் தேற்றத்தை அறிந்திலர் எனக். 130

780. செந்தழ லொளியிற் றோன்றுந் தீபமா மரங்க ளாலு,
மந்திகண் முழையில் வைத்த மணிவிளக் கொளிக ளாலு,
மைந்துமா றடக்கி யுள்ளா ரரும்பெருஞ் சோதி யாலு,
மெந்தையார் திருக்கா ளத்தி மலையினி லிரவொன் றில்லை. ௧௩௧

(இ - ள்) வெளிப்படை. சிவந்த தீச்சுடரின் ஒளிபோல மிக்க ஒளிவீசும் பெரிய சோதி மரங்களின் விளக்கத்தாலும், மந்திகள் கற்பொந்துகளில் (தமக்கு விளக்காக) வைத்த முத்துமணிகளின் ஒளிகளாலும், மாறுசெய்யும் ஐம்புலன்களையும் அடக்கிய அருமுனிவர்களின் அரியபெரிய சோதியாலும் எந்தையாராகிய சிவபெருமானது திருக்காளத்தி மலையில் இரவு ஒன்றுதல் இல்லையாம்.

(வி - ரை) மா தீபமரம் - சோதிவிருட்சம் என்பர். இது பகலில் ஏனை மரங்கள் போல இருந்தும், இரவில் பெரியஒளியாய் நெடுந்தூரத்தினும் காணப்பட்டுப் பக்கங்களெங்கும் விளக்கஞ்செய்யும் இயல்புடையதோர் சிறந்த தெய்வீகமுடைய மரம். அற்புதமுடைய சிறந்த காடு மலைகளில் இதனைக்காணலாம். இதனைக் காயசித்தி மூலிகைகளில் ஒன்றாயக் கருதுவர். தீபமரம் என்றமையால் இனம்பற்றிச் சோதிப்புல்லும் சோதிவல்லியும் உடன்கொள்ளப்படும். தீபமரத்தைப்பற்றி, "ஒதுறும் பாற்கிணற்றுக் கீழ்த்திசையில் யோசனைமூன் றளவிற் காணும், சோதிமரமுளது" (விமமிதப்படலம்-7) என்று பேரூர்ப்புராணத்துட் கூறுதல்காண்க.

செந்தழல் ஒளி - செந்தீ மூண்டெரியும் பெரியஒளி. ஒளியில் தோன்றும்-ஒளி போன்ற விளக்கத்துடன் இரவிலே தோன்றுகின்ற. மரங்களாலும் - மரங்களின் ஒளியாலும்.

முழையில் மந்திகள் வைத்த - குரங்குகள் தாம் வாழிடமாகிய குகைகளில் தமக்கு விளக்காகப் பயன்படுமாறு கொண்டுவந்து வைத்த.

விளக்குமணி ஒளிகளாலும் என்மாற்றுக. தூக்கணம் முதலிய பறவைகள் தம் கூடுகளில் விளக்கஞ்செய்ய மின்மினி முதலியவற்றை வைக்கும் இயல்பை இங்கு உன்னுக. மனிதனேயன்றி, ஏனைய உயிர்வகைகளில் அறிவுபடைத்த சில உயிர்கள் இவ்வாறு தம் இருக்கைகளை இன்பவீடாகப் பலவகைகளிலும் ஆக்கிக்கொள்ளு மியல்புடையனவாம். இவ்வியல்புகளைப் பலவகைப் பிராணிகளின் அமைப்புக்களையும் வாழ்க்கைத் திறங்களையும் கூறும் உயிர்வருக்க நூல்களிற் கண்டுகொள்க. குரங்குகள் (வால - நரம்) வானரம் எனப்பட்டு, மனித வருக்கத்திற்கு அடுத்த கீழ்ப்படியில் அறிவமைந்த பிராணிகள் என ஒருசார் உயிர்வருக்க நூலார் வகுத்துள்ளதும் காண்க.

மந்தி - பெண்குரங் கென்றுகொண்டு பொருள் கூறுவாருமுண்டு (கடுவன் - ஆண்குரங்கு.) வீட்டிற்கு விளக்கேற்றுதல் பெண்களின் கடமைகளில் முதன்மையாக வைத்துப் பேசப்படும் வழக்கையும், "தையலார் கொண்டாடும் விளக்கீடு" என்ற தேவாரத்தினையும் காட்டிக், "கைம்மக வேந்திக் கடுவனொ டூடிக் கழைபாய்வான், செம்முக மந்தி கருவரை யேறும் சிராப்பள்ளி", "மந்தி கடுவனோ டூடி மலைப்புறம்" என்ற தேவார ஆட்சிகளும் அன்னார் காட்டுவர். ஏனைச்சீவ வருப்பின் இல்வாழ்க்கைத் திறத்தை "மனையுறை குருவி வளைவாய்ச் சேவல், சினைமுதிர் பேடைச் செவ்வி நோக்கி, ஈனில் இழைக்க வேண்டி யாறு, அன்புபொறை கூர மென்மென முயங்கிக், கண்ணுடைக் கரும்பி னுண்டோடு கவரும், பெருவளந் தழீஇய பீடுசால் கிடக்கை" என்று திருவாரூர் மும்மணிக் கோவை(19)யிற் கழறிற்றறிவார் நாயனார் அருளியதாலு மறிக.

முழை - பொந்து. குரங்குகள் மலைப்பிளவு முதலிய பொந்துகளில் வாழும் இயற்கையுடையன.

**மாறுஐந்து அடக்கிஉள்ளார்** என்மாறுக ஐந்து - ஐம்புலன்கள். எண்ணலளவையாகுபெயர். மாறிமாறிவஞ்சித்து உயிர்களைப் பிறவிச்சுழியிற் கீழ்வீழ்த்தும் ஐம்புலன்களையும் அடக்கிய பெருமுனிவர்கள். ஐம்புலன்களையும் அடக்குதலாவது தம்மை அவை வசப்படுத்தி அதிகாரஞ்செய்து செலுத்தும்படிவிட்டு அவற்றின்கீழ் அடிமையாய்த் தாம் அமைந்துநின்று ஒழுகியாது, தம் ஏவலின்வழி அவைநின்று பணிசெய்யுமாறு அவற்றை அடக்கி ஆளுதல். அவற்றின் மயக்கத்திற்குட்படாது தம் வயமுடையராகுதல். ஐம்புலச் சேட்டையை யில்லையாக்கிக்கொள்ளுதல். "ஞானிகளாயுள்ளார்க ணான்மறையை முழுதுணர்ந்தைம் புலன்கள் செற்று, மோனிகளாய முனிச்செல்வர் தனித்திருந்து தவம்புரியு முதுகுன்றமே" (ஆளுடையபிள்ளையார் தேவாரம்), "தம்மை யைந்து புலனும்பின் செல்லுந் தகையார்" (சண்டேசர் புரா - 2) என்பனவாதி திருவாக்குக்கள் காண்க

**அடக்குதல்** - செயல் இல்லையாக ஒழித்தல் அன்று. "தலையே நீவணங்காய்," "கண்காள் காண்மின்களோ," என்பன முதலாகிய ஆணைவழி ஒழுகி இறைவன்பணி செய்து நிற்றற்கு இவை வேண்டப்படுதலின் அவ்வாறு இவற்றை ஒழித்துவிட்டால் பிறவிப்பயனில்லையாய் ஒழியும் இக்கருத்துப்பற்றியே "அஞ்சு மடக்கடக் கென்ப ரறிவிலார், அஞ்சு மடக்கு மமரரு மங்கில்லை, அஞ்சு மடக்கி லசேதன மாமென்றிட், டஞ்சு மடக்கா வறிவறிந் தேனே" (7 ம் தந் 330 - ஐந்திந்திரியமடக்கு முறைமை) என்றருளினார் திருமூலர்.

**மாறுஐந்து** - மாறு செய்யும் ஐந்தாகலின் சொல்வைப்பு முறையும் மாற்றியருளினார். "மாறி நின்றென்னை மயக்கிடும் வஞ்சப் புலனைந்தின் வழியடைத்து" என்பது திருவாசகம். **மாறுசெய்தல்** - நிலைதிரித்தல் - வஞ்சித்து வசப்படுத்துதல். ஒருபுலன் செய்தத்னை மற்றொருபுலன் செய்யாது வேறொரு வழியில் ஈர்த்துத் தள்ளுதலும், நிற்கவேண்டிய நிலையில் நிலலாது நெறிபிறழச் செய்தலும் ஆம் இது "ஒரு புலனுகரும் போதங் கொன்றிலை, ஒன்றன் பாலும், வருபயன் மாறி மாறி வந்திடு மெல்லா மாறும" (2-94) என்ற சிவஞானசித்தியாரில் விளக்கப்படுதல்காண்க **ஆறுஐந்தும்** என மாற்றி **ஆறு** - வழி எனக்கொண்டு ஐம்புலன்களின் வழிகளை அடைத்து என்று கூறுதலுமாம். வழியாவன புலன்கள் "ஆற்று மைம்புலத் தாறுசென் மேலையோர்" (அவையடக்கம் - 7) என்ற கந்தபுராணமுங்காண்க.

இவ்வாறன்றி ஐந்தும் (புலனும்) ஆறும் என எண்ணும்மை தொக்கதாகக்கொண்டு **ஆறு** என்பது காமக் குரோத, லோப, மோக, மத, மாச்சரியமென்னும் ஆறுகுற்றங்களையுங் குறித்ததாகக் கூறுவதுமாம் "துன்றும் புலனைந்துட னாறு தொகுத்த குற்றம், வென்று" - (சோமாசி புரா - 5) என்றது காண்க. உட்கரண புறக்கரணங்களின் றொடர்பைப்பற்றி 252-ல் உரைத்தவைகாண்க,

**அரும்பெருஞ்சோதி** - மோனிகளாகிய முனிச்செல்வர்களிடமிருந்து காணப்படும் தியானவிளக்கமாகிய ஞானஒளியின் வெளித்தோற்றம். **அருமை** - அவ்வாறு அடக்கார் தாம் பெறுதற்கருமையும், **பெருமை** - அளவிடலாகாமையுங் குறித்தன **சோதி** - தவமகிமையினால் நெடுந்தூரத்துக் காணபார்க்கு அவருடம்பு ஒளிப்பிழம்பாயத் தோன்றுவது என்பர் ஆறுமுகத்தம்பிரானார் அவரணிந்த திருநீற்றின் ஒளி என்றலுமாம். சோதிமயமான நீற்றைச் சோதியென்றார். "பராவண மாவது நீறு" என்றது வேதம். திருநீற்றினால் புறஇருளும் நீங்குதல் முருகர் புராணம் - 2, திருஞானசம்பந்தர் புராணம் - 6 இவற்றானறிக

**எந்தையார்** எமது தந்தையார். "எந்தை யீசனெம் பெருமான்" (ஆளுடைய பிள்ளையார் - திருநெல்வாயிலரத்துறை), "எந்தையு மெந்தை தந்தை தந்தையு மாய

வீசா" - (திருநேரிசை-திருவீழிமிழலை-7), "யாவர்க்கும் தந்தைதா யெனுமவரிப் படி யளித்தார்" (திருஞான - புரா - 69) முதலிய திருவாக்குக்கள் காண்க.

இரவு ஒன்று இல்லை - ஒன்று - ஒன்றுதல் - பொருந்துதல். ஒன்றும் என்றதில் உம்மைதொக்கதாகக் கொண்டு ஒரு சிறிதும் என்றலுமாம். பிறஇடங்களிற்போல இரவு என்ற ஒரு பொருளில்லை எனலுமாம். இரவு - சூரியன் ஒளிபெறாத நாட்பகுதி. நிலவுலகம் சூரியனையும் தன்னையும் சுற்றும் சுழற்சியிலே அதன் ஒரு பகுதி இரவுக் காலம் கொண்டதாகும். சூரியன் ஒளி வீசும் பகுதி பகல் எனப்படும். நில அண்டத்தின் கீழ் மேல் என்ற இருபகுதியினும் ஆளுகை செல்லுதலால் "ஆங்கில அரசுக்குட்பட்ட நிலப்பரப்பிற் சூரியன் அத்தமிக்கின்றதில்லை" (The sun never sets on the British Empire) என்று இக்கருத்துப்பற்றியே வழங்குவதும் காண்க. ஞாயிறு ஒளிவீசப் பெறாத காலம் இரவு எனப்படும் அவ்விரவு தன்னியல்பாகிய இருட் செறிவு, உயிர்களைத் துயில் முதலியவற்றிற்செலுத்துதல் முதலிய குணங்களுடையது. ஆயின் இங்குத் திருக்காளத்தி மலையில் ஞாயிற்றின் ஒளியில்லையாயினும், அதனின் மிக்க சோதிமாமர ஒளி, மணியொளி, ஐந்தடக்கியோர் அரும்பெருஞ்சோதி என்ற மூவகைச்சோதிகளு மிருத்தலால் வேறிடங்களிற் சேரும் அந்த இரவு இல்லை என்றார். சோதிமரம் செந்தழல் ஒளியும், முத்துக்கள் சந்திரன் ஒளியும், ஐந்தடக்கியோர் சூரியனது மிக்க ஒளியும் காட்டலால், ஏனைஇடங்களிற் பகலில் சூரியன் ஒளி ஒன்றுமே காட்ட, இங்கு இரவில் அதனின்மிக்க மூவொளியும் தோன்ற நிற்பதனால் ஏனை இடங்களிற் பொருந்தும் இரவு இங்கு இல்லை என்ற குறிப்பும் காண்க. இரவு இல்லை என்றது இரவு ஒன்றில்லை என்றதும் இக்கருத்துப் பற்றியேயாம்.

அருட்பெரியோர் வாழ்கின்றதும் காலங்கடந்ததுமாகிய கயிலைமலையிலும், கயிலையே யாகிய காளத்தி மலையிலும் சூரியன் மற்றைத் தேவர்களுடன் வந்து வழிபடுதற் குரியவனேயன்றி ஏனையிடங்களிற் செய்தல்போல இங்குப் பகல் இரவுகளைச் செய்தற்கு வலியிலன் என்றதும் குறிப்பாம். இதுபற்றியே "பரிதியோடு சந்திரன்...... கும்பிடச் சென்று லோகமும்" என்றதும் காண்க.

இரவுசேரும் விலங்கு உள என்று அஞ்சினார் (776) திண்ணனார் ஆதலின் நீள் இருள் நீங்கச் (777) சிலையுடன் நின்றனர். அதன் பொருட்டு இரவு இல்லாதவகை பரிதியோடு சந்திரன் கூடி வந்தாலென்ன முத்துக்களும் செம்மணிகளும் ஒளி பொங்க உமிழ்ந்தன (778); பன்மணிகளும் மரகதமும் நீலமும் இமைத்தன (779); தீபமரங்களும் மணிவிளக்குக்களும் ஐந்தடக்கினார் அருஞ்சோதியும் இரவையில்லையாக்கின (780) என்றிவ்வாறு இவ்வைந்து பாட்டுக்களும் தொடர்ச்சியாய்ப் பொருள்பட, அவ்விரவு கழியுந்தனையும், காணும் பொருள்களையும், காட்சிகளையும் ஆசிரியர்கண்டு காட்டுகின்ற திறம் காண்க. திண்ணனார் இரவு கழித்தது போலவே நாமும் உடன் கழித்துச் சரிதப் போக்கை உணருமாறு செய்தத் திறமுங் காண்க.

மணியொளி விளக்கத்தாலும் - என்பதும் பாடம். 131

781. வருங்கறைப் பொழுது நீங்கி மல்கிய யாமஞ் சென்று
சுருங்கிட வறிந்த புள்ளின் சூழ்சிலம் போசை கேட்டுக்
கருங்கட லென்ன நின்ற கண்டுயி லாத வீரர்
அரும்பெறற் றம்பி ரானார்க் கமுதுகொண் டணைய வேண்டி, ௧௮௨

*782. ஏறுகாற் பன்றி யோடு மிருங்கலை புன்மான் மற்றும்
வேறுவே றினங்கள் வேட்டை வினைத்தொழில் விரகி னாலே

ஊறுசெய் காலஞ் சிந்தித் துருமிகத் தெரியாப் போதின்
மாறடு சிலையுங் கொண்டு வள்ளலைத் தொழுது போந்தார். ௧௩௩

781. (இ - ள்) வெளிப்படை. முன்னிரவு நீங்கி அதனோடு இருள் நிறைந்த யாமமும் கழிந்து சென்று இரவு சுருங்க, இதனை அறிந்த புட்கள் நிறைந்த தொகுதியாகச் சிலம்புதலின் ஓசையைக் கேட்டுக், கரிய கடல் போல நின்று கண்துயிலா திருந்த வீரராகிய திண்ணனார் தாம் பெறுதற்கு அரியவராயப் பெற்ற தமது பெருமானுக்கு ஊனமுதம் தேடிக்கொண்டு வந்து அணைவதற்கு வேண்டி, ௧௩௨

782. (இ - ள்) வெளிப்படை. எறும் குறிய கால்களையுடைய பன்றியோடும், பெரிய கலையும் புல்மான்களும் ஏனைய வெவ்வேறு விலங்கினமு மாகியவற்றை வேட்டை செய்வினைத் தொழிலின் தந்திரத்தினாலே கொன்று கைப்படுத்தற்குரிய காலத்தை நினைத்து, உருவம் மிகத் தெரியாத பொழுதாகிய அதிகாலையில், பகை எவற்றையும் அழிக்கவல்ல தமது வில்லினையுங் கைக்கொண்டு, வள்ளலாராகிய குடுமித் தேவரைத் தொழுது போந்தனர் ௧௩௩

இவ்விரண்டு பாட்டுக்களுந் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

781. (வி - ரை) **வரும்** - அந்திமாலை (776)யினை அடுத்து வருகின்ற. மாலைக்கும் நடுயாமத்துக்கும் இடையில் உள்ள காலம் பையணமாலை (304)யின் பின் இருண்டது நீண்டவான (305) என்றுரைத்தது காண்க.

**கறைப்பொழுது** - **கறை** - கருமை **கறைப்பொழுது** - கருமையையுடைய காலம். **மல்கிய** - இருள் நிறைந்த மல்குதற்கு எழுவாய் வருவிக்கப்பட்டது. **யாமம்** - இங்கு நடுயாமங் குறித்தது. **சுருங்கிட** - இரவுக்காலஞ் சுருங்க. எழுவாய் வருவிக்க.

**அறிந்த புள்ளின் சூழ்சிலம்பு ஓசை** - **அறிந்த** - இரவு சுருங்கியதனை அறிந்த. **புள்**-கோழியும் ஏனைப்புட்களும். "கோழி சிலம்பச் சிலம்புங் குருகெங்கும்", "கூவின பூங்குயில் கூவின கோழி குருகுக ளியம்பின" என்ற திருவாசகங்கள் காண்க. **புள்**-தொகுதியொருமை. **சூழ்**-நிறைந்த. **சிலம்புஓசை** சிலம்புதலின் உள்தாம் ஓசை. **சிலம்புதல்**-ஒலித்தல் இரவுக் காலம் சுருங்க வைகறைக் காலம் வரும் இப்புட்கள் வைகறையிற் சிலம்பும் இயல்புடையன. "புலம்பின போதென்று புட்கள் சிலம்ப" என்று தற்குறிப்பேற்றம் பட்டத் திருமூலநாயனார் அருளியது காண்க.

**கருங்கடல் என்ன நின்று கண்துயிலாத வீரர்** - முன்னர் மைவரை யென்ன (776) உருவம்பற்றிய உவமமாக உரைத்த ஆசிரியர் இங்கு உருவும் வினையும் பயனும் பற்றிய உவமமாகத் திண்ணனாரைக் கருங்கடல் என்றார். துயிலாமையாகிய எதிர்மறைத் தொழிலும், அன்பினின்று பெருகும் அருள் மேகம் பொழிதற்கிடமாதலின் பயனும் பற்றி உவமை எழுந்தவாறு கண்டுகொள்க "பயன்றூக்கார் செய்த உதவி நயன்றூக்கின், நன்மை கடலிற் பெரிது" (செய்ந்நன்றியறிதல்-3) என்றபடி இங்குக் கடல் என்ற குறிப்பும் காண்க. கடல் (நிலப்பரப்பிற்) கிடந்தும் துயிலாது; இவர் நின்று துயிலாதவர் என்பது துயிலாமை பொதுவிலக்கணம். கடல் துயிலாமை அகப்பொருள்களில் விதந்து பேசப்படும் இங்கும் அன்பு மீதூர்தல் என்னும் அகப்பொருட்டன்மை பற்றியே துயிலாமை போந்ததும் காண்க. "ஆர்த்துன் னமிழ்துந் திருவு மதியு மிழந்தவநீ, பேர்த்து மிரைப்பொழி யாய்பழி நோக்காய் பெருங்கடலே" (173), "ஓங்கனை மேவிப் புரண்டு விழுந்தெழுந் தோலமிட்டுத், தீங்கணைந் தோரலலுந் தேறாய் கலங்கிச் செறிகடலே, யாங்கணைந் தார்க்கினை யுமுளரோசென் றகன்றவரே" (179) என்ற திருக்கோவையார்த் திருவாக்குக்களும் காண்க. "கயிலை மாமலை மேவிய கடலே" (செத்-10) என்ற திருவாசகத்தில் இறைவனை மலைமேலிருந்த கடல் என்றதும் நினைவு கூர்க. **கண் துயிலாத** - கண்டு கொண்டே நோபெற நோக்கி நீள்இருள் நீங்க நின்றார் (777) என்றதன்றிக் கண்துயிலாமை பெறப்பட்டமையின் இது இயல்புணர்த்தல் என்றமட்டில்

அமைந்த நின்றபடியும் நடந்துகொண்டும் துயில்வார் உளராதலின் இவர் கண் துயிலாதே நின்றவர் என்ற குறிப்புமாம். வீரர் - இவரது பிற வீரங்களை நீக்க, ஆன்மாவைப் பீடித்துநிற்கும் தாமதகுணச் செயலாகிய துயிலை வெல்வதும், பிறரால் காணற்கரியராகிய இறைவரைக் கண்டுகொண்டே நிற்பதும், "வஞ்சமனத் தஞ்சொடுக்கி வைகலுநற் பூசனையா, னஞ்சமுது செய்தருளு நம்பியென வேநினையும்" முன்னைப் பிறவியின் செயலினும் மிக்குத் தம்மையுமறந்து இறைவனையே நினையும் வீரமும் குறிக்க இங்கு வீரர் என்றார் "ஈர வன்பினர் யாதுங் குறைவிலார் வீரம்" (144) என்றது காண்க.

**அரும்பெறல்** - பெறுதற்கரிதாகப் பெற்றவர். "அடியனேற் கிவர்தா மிங்கே யகப்பட்டா ரச்சோ" (755) என்றதுகாண்க. "அருமையி லெளிய வழகே போற்றி" **திருவாசகம்.** "அரும்பெறன் மரபிற் பெரும்பெயர் முருக!" **திருமுருகாற்றுப்படை.**

**தம்பிரானார்** - தமக்குப் பெருமான். எம்பிரான் நிற்றது (819) என்பது காண்க. தமக்குரிமைபாராட்டிய பொருளும்படக் கூறினார்.

**கொண்டு** - சித்தஞ் செய்துகொண்டு. உரிய வகையில் தேடிப் பக்குவப்படுத்தி அமைத்துக்கொண்டு.

**அணையவேண்டி** - மீண்டு இவர்பால் அணைதலை வேண்டினாராய். வேண்டிப் போந்தார் என வரும்பாட்டுடன் கூட்டிமுடிக்க. வேண்டித் - தொழுது என்றுகூட்டி உரை கொள்வாருமுளர். அது பொருந்தாதென்க.

வைகிய யாமம்—என்பதும் பாடம். 132

782 (வி - ரை) **ஏறுகாற் பன்றி** . வயிறு பெரிதாய்க் கீழே தாழ்ந்து தொங்க, அதற்குள் ஏறியதாய்க்காட்டும் குறிய கால்களையுடைய பன்றி. உடலுக்குத் தக்க காலில்லாமையின் ஏறுகால் என்றார் என்பர் ஆறுமுகத்தம்பிரானார். செங்குத்தான மலைகளிலும் ஏறும் காலினையுடைய என்பாருமுண்டு.

**பன்றியோடும்** - பன்றியை முன்வைத்து ஓடு உருபுதந்து ஏனை விலங்குகளையெல்லாம் ஒருசேரப் பின்வைத்தது இச்சரிதத் தொடர்பிற் பன்றிக்குள்ள சிறப்பு நோக்கி. அடலேனம் புலிகரடி (693), ஏனமோடு மானினங்கள் (727), பன்றியும் புலியுமெண்கும் (652) என முன்னர் உரைத்தவற்றையும் உன்னுக. இவ்வேடர் முதலியோர் ஏனை இறைச்சிகளினும் பன்றியிறைச்சியை மிக விரும்பியுண்ணும் இயல்புங் குறித்தது.

**இருங்கலை** - பெரியனவாய்க் கிளைத்து நீண்ட கொம்புகளையுடைய கலைமான். கலைமான் (728) என்றவிடத் துரைத்தவைகாண்க.

**புனமான்** - மலைகளிலும் மலைச்சார்புடைய தாழிடங்களிலும் தினைப்புன முதலியவற்றை மேய்ந்து வாழும் மான் சாதி.

**மற்றும் வேறுவேறு இனங்கள்** - மானின் வேறு பல வகைகளும், மானல்லாத வேறு விலங்கினங்களும் வெவ்வேறென்னுது **வேறுவேறு இனங்கள்** என்ற கருத்து மிது. மானின் பலவகைகளைப்பற்றி 728-ல் பார்க்க. **இனங்கள்** இரண்டனுருபு தொக்கது. **இனங்களை ஊறுசெய்காலம்** என முடிக்க.

**வேட்டைவினைத்தொழில் விரகு** - வேட்டைத்தந்திரம். **வேட்டைவினை**-வேட்டையாகிய செயல். **தொழில் விரகு** - தொழிற்குரிய தந்திரம். உபாயம் - சாமாதியம் என்பர். **வினைத்தொழில்** என்று கூட்டி இருபெயரொட்டாக உரைப்பினுமாம். கைம்மைவினை (461) என்றதுங்காண்க

**ஊறுசெய்காலம்** - ஊறுபடுத்திக் கொல்வதற்கு ஏற்ற நேரம். வைகிருளின் புலர்காலை (705) என்ற விடத்துரைத்தவைகாண்க. **ஊறுசெய்தல்** - இங்குக் கொல்லுதல் குறித்தது. **சிந்தித்து** - தக்கநேரம் இதுவேயாமென்று நினைத்துத் துணிந்து.

**உருமிக்கத் தெரியாப் போது**-விலங்கினத்தின் உருவம் தமக்கும், தம் உருவம் அவற்றுக்கும் விளக்கமாய்த் தெரியாத விடியற்காலம். கழிகின்ற இரவின் இருளும், வருகின்ற பகலின் ஒளியும் விரவியுள்ள காலம்.

**மிகத்தெரியா** - உருத்தெரியாத இரவாயின் விலங்கினத்தைக் கண்டு வேட்டையாட இயலாது. உருத்தெரியும் காலைப்போதாயின் அவை தம்மைக் கண்டு ஓடி மறைந்துவிடும். ஆதலின் சிறிது தெரிந்தும் முற்றும் தெரியாமலும் உள்ள நேரமே வேட்டையாடுதற்குரிய தென்பது வேடர் கையாண்ட முறை என்று குறிப்பார் உருத் தெரியா என்னாது உருமிக்கத்தெரியா என்றார்.

**மாறு** - பகை. **அடுதல்** - அழித்தல். **மாறடுசிலை** - பகையா யெதிர்ப்பது எதுவாயினும் அழிக்கவல்ல வில். பார்ப்பெருவில் (711) என்றதும் பிறவுங் காண்க.

**வள்ளல்** - குடுமித்தேவர். **தொழுதுபோந்தார்** - பிரிதலின் வணங்கிப் போயினார். பிரியும்பொழுது வணங்குதல் மரபு. முன்னரும் "மலர்க்கையாற் றொழுது போந்தார்" (762) என்றது காண்க. இதற்கு விலங்கினம் அப்புறம் போகவொட்டாமற் கொல்லுதல் வேண்டித் தொழுதனர் என்றுரை கூறுவாருமுண்டு. அஃதுரையன்றென விடுக்க. சுருங்கிட - வீரர் - ஓசைகேட்டு - அணையவேண்டி - சிந்தித்து - போதில் - கொண்டு - தொழுது போந்தார் என்று முடிக்க. 133

வேறு

783\. மொய்காட்டு மிருள்வாங்கி முகங்காட்டுந் தேரிரவி
மெய்காட்டு மன்புடைய வில்லியார் தனிவேட்டை
யெய்காட்டின் மாவளைக்க விட்டகருந் திரையெடுத்துக்
கைகாட்டு வான்போலக் கதிர்காட்டி யெழும்போதில், ௧௩௪

784\. எய்தியசீ ராகமத்தி லியம்பியபூ சனைக்கேற்பக்
கொய்தமல ருமபுனலு முதலான கொண்டணைந்தார்
மைதழையுங் கண்டத்து மலைமருந்தை வழிபாடு
செய்துவருந் தவமுடைய முனிவர்சிவ கோசரியார். ௧௩௫

783\. (இ - ள்) வெளிப்படை. செறிந்த இருளை நீக்கி முகத்தைக் காட்டுகின்ற தேரில்வருகின்ற சூரியன், உண்மைத் தன்மையினையே காட்டுகின்ற அன்புருவமாகிய வில் ஏந்திய திண்ணனார் ஒப்பற்ற வேட்டையிலே எய்கின்ற காட்டு விலங்குகளைக் கொல்வதற்கு வளைக்க, அவைகளை மறைத்து முன்னே இட்ட கருந்திரையை நீக்கி அவற்றைக் கண்டு கொள்க என்று கைகாட்டுவான் போலக் கதிர்களைக் காட்டி மேலெழும்பும் போதிலே, ௧௩௪

784\. (இ - ள்) வெளிப்படை. சிறப்புப் பொருந்திய சிவாகமங்களிற் சொல்லப்பட்ட சிவபூசை விதிகளுக்கேற்றபடி கொய்துகொண்ட மலர்களும், எடுத்துக்கொண்ட நறும்புனலும் முதலான பூசைப் பொருள்களைக் கொண்டு, விடம் விளங்கும் கண்டத்தினையுடைய அந்த மலையின் எழும் மருந்தாகிய காளத்திநாதரை நியதியாய் வழிபாடுசெய்து வருதலாகிய தவமுடைய சிவகோசரியார் என்ற முனிவர் வந்து அணைந்தனர். ௧௩௫

இவ்விரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

783\. (வி - ரை) **மொய்காட்டும்** - மொய்த்து விளங்கும் செறிவினை எடுத்துக் காட்டுகின்ற. **வாங்கி** - பிரித்து நீக்கி.

**முகங்காட்டும்** - முகமண்டலத்தைக் காட்டும். ஒருவர் முகத்தை மற்றவர்க்குக் காட்டும் என்று கூறுதலுமாம். முகம் ஆகுபெயராற் கண்ணை யுணர்த்திற்று எனக்கொண்டு கண்ணுக்குப் பொருள்களைக் காட்டும் என்றலும் பொருந்தும்.

**தேர்இரவி** - வெவவேறாகிய ஏழு நிறமுள்ள ஏழுகுதிரைகளைப் பூட்டிய ஒற்றைச் சக்கரமுடையதோர் தேரில் சூரியன் ஊர்ந்து வருவதாகக் கூறுதல் மரபு. 303 பார்க்க.

**மெய் காட்டும் அன்புடைய**-"மெய்மையின் வேறு கொள்ளாச் செவ்விய அன்பு" (776) என்றதும் ஆண்டுரைத்தவையுங் காண்க. **மெய்** - சத்து - இறைவன், **மெய் காட்டும்** - இறைவனைத் தமக்குள் அமையக் காட்டும் என்றுரைத்தலுமாம். "உள்ளத் திறநெறிகின்ற மெய்ம்மை யன்பி னுருவினையு மவ்வன்பி னுள்ளே மன்னும், வெள்ளச் செஞ் சடைக்கற்றை நெற்றிச் செங்கண் விமலரையு முடன்கண்ட" (திருஞான-புரா-1023) என்றது காண்க.

**வில்லியார்** - வில்லையுடைய திண்ணனார். **தனி** - ஒப்பற்ற. தனித்துச் சென்ற என்றுரைப்பாருமுண்டு. **எய்** - முள்ளம் பன்றிகள் நிறைந்த என்றுரைப்பாருமுளர்.

**மாவளைக்க இட்ட கருந்திரை** - வேட்டையாடுமுன் விலங்குகள் தப்பி ஓடாமல் வேட்டைக் காட்டை வளைத்துக் காவல் செய்தல் குறித்தது. 724 பார்க்க. **உருமிக்க** தெரியாப்போதிற் போகதாராதலின் இரவி எழுந்து, முன் மூடிய கருந்திரையை எடுத்துக் கையினால் விலங்குகளைச் சுட்டிக் காட்டுவான்போலக் கதிர்களை விரித்துக் காட்டினன் எனக். தற்குறிப்பேற்ற உவமை. **கதிர்** - கரம் எனவும்படும். இச்சிலேடைப் பொருள்படக் **கைகாட்டுவான் போலக் கதிர் காட்டி** என்றார்.

குடுமித் தேவர்க்கு இன்னமும் ஊன் ஊட்டவேண்டுமென்ற திண்ணனாரது ஆசை கண்டு மலையிற்றுழந்தானாதலின் (775), அச்செயலைத் தொடர்ந்து அவர் ஆசைப்பட்ட ஊன் பெறும் வழியைக் காட்டுவானாகி, அவ்வூன் உள்ள விலங்குகளை மறைத்துநின்ற திரையை எடுத்துக் கைகாட்டுவான் போல என்று தொடர்நிலைத்தற்குறிப்பேற்ற உவமையாகக் கூறினது காண்க **காட்டினமர்விளைக்க** என்றும் பாடங்கொள்வர்.

எழும்போதில் - கொண்டு-அணைந்தார் என வரும் பாட்டுடன் கூட்டிமுடிக்க. 184

784. (வி - ரை) **எய்திய** - இறைவனிடத்திருந்து வந்த என்றலுமாம். **சீர் எய்திய ஆகமம்** என மாற்றுக. **ஆகமம்** - சிவாகமம். **சீர்** - சிறப்பு. சிவாகமங்களின் சிறப்புச் சத்திநிபாதர்க்குரியதாதல். இவை, பாசத்தையும் உயிர்களையும் இறைவனையும் அறிவித்து, பாசங்களிற் கட்டுப்பட்டுழலும் உயிர்கள் அவற்றினின்று நீங்கி இறைவனை யறிந்து பற்றி, வீடுபெற்று இன்பமடையும் நெறிகளை வகுத்துக் கூறுவனவாம். **ஆ** - இறைவன், **க** - உயிர், **ம** - மலம் - (பாசம்) எனும் இவை முதலிய பொருளைப் பெயரமைப் பினாலே அறிவித்து நிற்றல் காண்க. **மலம்** சடம் எனக்காட்ட உயிரொடு கூடிய வழி யல்லது இயங்காத ம என்ற மெய் யெழுத்தாலும், **உயிர்** அவ்வாறன்றி உயிர்க்குயிராகிய இறைவனால் வியாபிக்கப்பட்டு இயக்கப்படும் தன்மையும் மலத்தாற் பீடிக்கப்படும் தன்மையும் உடையதாயச் **சதசத்து** எனப் படுதலால் க என்ற உயிர்மெய்யெழுத் தாலும், **இறைவன்** இவ்விருதிறமுமன்றி மேம்பட்ட முதல்வனாய், அவற்றை இயக்குப வனாய் உள்ளவனாதலின் **ஆ** என்ற உயிர் எழுத்தாலும், குறிக்கப்பட்டது என்பர். எனவே முப்பொருள்களையும் உணர்த்தி உயிர்கள் உண்மை கண்டு ஒழுகி உய்யுமபடி செய்யும் நூல்கள் என்றதாம். "ஆ - சிவஞானம், க - முத்தி, ம - மலநாசம் எனனும் பொருண்மேனிற்றலால் உயிர்களுக்கு மலநாசம் செய்து சிவஞானத்தை யுதிப்பித்து முத்தி சாதனமாகும் நூலெனவும், ஆ என்பது பாசம், க என்பது பசு, ம என்பது பதி எனப் பொருள்படு" தலால் திரிபதார்த்தத்தை உணர்த்தும் நூல் எனவும் கொள்ளப்படும்.

**சிவாகமங்கள் இருபத்தெட்டென்பர்.** "அஞ்சன மேனி யரிவையொர் பாகத்த, னஞ்சொ டிருபத்து மூன்றுள வாகம, மஞ்சலி கூப்பி யறுபத் தறுவரு, மஞ்சா முகத்தி லரும்பொருள் கேட்டதே" என்பது திருமூலர் திருமந்திரம் (ஆகமச் சிறப்பு - முதற் றந்திரம்-57). அவையாவன காமிகம், யோகசம், சிந்தியம், காரணம், அசிதம், தீப்தம், சூக்குமம், சகசிரம், அஞ்சுமான், சுப்பிரபேதம், விசயம், நிச்சுவாசம், சுவாயம்புவம்,

அனலம, வீரம, இரௌரவம, மகுடம, விமலம, சநதிரஞானம, முகவிம்பம, புரோற கீதம, இலளிதம, சிததம, சநதானம, சருவோததமம, பாரமேச்சுரம, கிரணம், வாதுளம எனபன. இவற்றின வழிநூல நாரசிஙகம முதல விசுவானமகம ஈருகிய இருநூறறேழெனப. இவறறை உபாகமஙகள எனபா. இவை சிவபெருமானுலே தமது மகாசதாசிவமூரத்தத்தின உச்சி முகத்தினிடமுள்ள ஐமமுகஙகளாலும அருளிச செயயப்பட்டன எனபா. "மனனு மாமலை மகேநதிர மதனிற, சொனன வாகமந தோற்று வித தருளியும்.. ..மாவேட டாகிய வாகமம வாஙகியும, மற்றவை தமமை மகேநதிரததிருந, துறறவைம முகஙக ளாறபணித தருளியும." (கீரததித திருவகவல-10—20) எனற திருவாசகஙகளும, திருமூலா திருமநதிர முதலியனவுங காணக. ஆகமஙகள ஞானம, யோகம, கிரியை, சரியை எனற நானகு பாதஙகளை யுடையன. வேத சிவாகமஙக ளிரணடும பதிவாக்கியஙகளாதலின மேறபிரமாணம வேணடப்படாது தமக்குத்தாமே பிரமாணமாம சிவாகமஙகளை "வேதாநதத தெளிவாஞ சைவ சித்தாநதம்" எனபா. உயிாகளுக்கு இறைவனைக் காட்டிக் கூட்டிமுடிக்கினற வரையில எல்லாப பொருளகளையும சிவாகமஙகள கூறுதலின இவை முடிநதமுடிபு அல்லது சித்தாந்தம் எனப்படும. இவற்றில ஞானபாதம, பதி பசு பாசம எனனு முப்பொருளகளையும், யோகபாதம சிவயோகத்தையும, கிரியாபாதம மநதிரஙகளின உததாரம சநதியா வநதனம் பூசை செபம ஓமம எனறிவற்றையும, சரியாபாதம சமயாசாரஙகளையும அறிவிப்பன. சிவன கோயிலகளெஙகும நிததிய, நைமித்திக, பவித்திர முதலிய பூசைகளும, கோயில கட்டுதல, பிரதிட்டை செயதல முதலியனவும், உயிாகளுக்குரிய கருமநியமஙகளும், தீக்கை, ஆனமாரதத பூசை முதலியனவும இவற்றில விதித்தபடியே நடைபெறத்தக்கன. இவை வேதஙகளிலேனும வேறு நூலகளிலேனும விதிக்கப்பட்டில.

பூசலாா நாயஞா நினைப்பினுல் எடுதத கோயிலும, அவா சரித்ததிற கணட காடவ அரசா எடுதத கச்சிக்கற்றளியும, அவற்றின பிரதிட்டைகளும, ஆகம விதிப்படியே அமைநதனவாம. மனுசசோழா சிவாலயஙகளின பூசனைக்குத துஙக ஆகமஞ்சொனன முறைமையால அஙகஙகும வேணடும நிபநதம ஆராயநது அமைதத செயதி திருநகரச் சிறப்பிலும (100), சோழவரசா புறமிடஙகொணடாாக்கு வேதாகமநூல் விதிவிளஙக நிபநதம பலவும, வீதி விடஙகப பெருமானுக்குப பஙகுனி யுததிரத திருநாட் சிறப்புக் குரியனவும அரியணையின மீது இருநது அமைததாா எனபது நமிநநதியடிக ளுய ஞா புராணத்திலும அறிகினறேம. உமை யமமையாா "ஆகம விதியெலாஞ் செயத" பாராதத பூசையியலபினைத திருக்குறிப்புத தொணட நாயஞா புராணத்திலும, ஆகமங் களின "நினற விதியின விளையாட்டா னிறைநத வரும பூசனை" யாகச சணடீசுர நாயஞா செயத ஆனமாரதத பூசை யியலபினை அவா தம புராணத்திலும காண்க. இவ வாகமஙகளை இறைவன உமையமமையாருக்கு உபதேசித்தருளினா. அவற்றைக் கேட் டருளிய அமமையாாக்கு, அவவாறு "எணணி லாகம மியமபிய விறைவா தாம விருமபும உணமையாவது பூசனை என"வும உரைததருளினா. அதனையே கொணடு அமமையாா அவவாறே தமது நிததியமாகிய பூசை செயது உயிாகளுக்குப் போகஙகளையும முததியினையும அடையும வழிகாட்டி வாழும தநதருளகினறுா எனபதும அறியப்படும. இவைபற்றித திருக்குறிப்புத்தொணடநாயஞா புராணத்தினுள 50 முதல 71 திருப்பாட்டுக்களிற கூறியனவும, பிறவும காணக. இஙகு இச்சரித்திரத்திலும சிவ கோசரியாா ஆகம விதிப்படியே பூசையும, பவித்திர முதலியன செயது வழிபடுதலும, அவா வழிபட்டவாறு கேட்டு அநநெறியே திணணஞரும ஒழுகித திருமஞ்சன முதலிய வழிபாடுசெயதலும, இவாகட்கு இறைவன அருள செயதலும காணக.

**இயம்பிய** - மணணினிற பிறநதாா பெறும பயனிவையேயாம எனறு எடுத்துச சொல்லிய. "எணணிலாகம மியமபிய" எனறதுஙகாணக.

**பூசனைக்கு** - பூசனைக்காக. **ஏற்பக்கொய்த மலரும்** - ஏற்பக்கொய்தலாவது விதித்த படி கொய்தலாம். இவைபற்றி எறிபத்த நாயனார் புராணத்திலும், பின் முருகநாயனார் புராணத்திலும் காண்க.

**ஏற்ப** - ஏற்பக்கொண்ட புனலும் முதலான என்றும் கூட்டி உரைத்துக்கொள்க. **முதலான** - அமுது முதலாயினவற்றை. இரண்டாம் வேற்றுமைத் தொகை. **கொண்டு**. ஏற்ப அமைத்துக்கொண்டு.

**அணைந்தார் சிவகோசரியார்** - என்ப பயனிலையை முன் வைத்தார் அவரது தீவிர பத்தியும் அன்பும் அவாமுன் அணைந்தன என்று குறிக்க "அன்பு முன்பு நளிர்வரை யேற" (752) என்றது நினைவுகூர்க.

**மைதழையும் கண்டம்** - திருநீலகண்டம். **மை** - விடம். **தழைதல்** - நின்று விளங் கிப்பயன்றருதல். இதன் பொருள் முன்னர்த் திருநீலகண்டநாயனார் புராணத்துரைக் கப்பட்டது. **தழையும்** - தழைப்பிக்கும் - தழைக்கச்செய்யும் என்ப பிறவினையாகக் கொண்டு, அழித்தலைச் செய்யும் விடம் இங்கு நின்று உயிர்களை அழியாது அருள் பெற் றுய்ந்து தழைக்கச் செய்தற்கிடமாகிய கண்டம் என்றலுமாம். **மை** - கருமை. அதனை யுடைய விடத்துக்காயினமையின் பண்பாகு பெயர்

**மலைமருந்து** - மலையில் எழுந்த மருந்தாகிய காளத்தியப்பர். மலையின் மருந்து கள் சிறப்புடையன என்பது மருத்துவ நூல். **மருந்து** - எல்லா நோய்க்கும் கொடிய தாகிய பிறவிப்பிணி தீர்க்கும் மருந்து. மருந்து போல்வாரை மருந்தென்றார். அவரே மருந்துமாகிப் பிணி தீர்ப்பார் என்றலுமாம். "மருந்து மாகித் தீராநோய் தீர்த்தருள வல்லான்" (திருப்புள்ளிருக்குவேளூர் - திருத்தாண்டகம்) என்ற தேவாரமுங்காண்க. மரணத்தைச் செய்யும் மையானது தழையினும் அந்த மரணத்தைப் போக்கும் மருந்து அவரேயாவார் என்ற குறிப்புப்பெற இங்கு **மருந்து** என்றார். "ஆயிர மரவ மார்த்த வமுதனே" (தனி நேரிசை) என்றது காண்க. "பிறவிப்(பெரும்)பிணிக்கோர் மருந்தே" (திருவாசகம்-புணர்ச்சிப்பத்து - 9), (மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்).

**வழிபாடு செய்துவரும் தவம்** - சிவ வழிபாடு செய்துவருதற் கேதுவாகிய தவம் **வழிபாடு** - சிவபூசை. சிவபூசையே தவமெனப்படும். அது செய்து வருவதற்கும் முன் னைத் தவம் வேண்டும். "தவமும் தவமுடையார்க் காகும்" என்றது காண்க. சண்டீசர ஆனுடைய பிள்ளையார் புராணங்களும் கருதுக

**சிவகோசரியார்** - சிவத்தையே எப்போதும் கோசரித்துக் கொண்டிருப்பவர் என் பதுபொருள் இஃது இவர்க்குக் காரண இடுகுறிப் பெயராயமைந்தது சிவபாத விருத் யர் என்றது போலக்காண்க. "எட்டுக்கொண் டார்தமைத் தொட்டுக் கொண்டே நின்றார்" என்ற திருவுந்தியார்க் கருத்தும் காண்க. **கோசரித்தல்** - அறிவுக்கு விடய மாக்கிக் கொள்ளுதல் - தியானித்தல். சிந்தை நியமம் (785), தணிந்த மனம் (789), புனைதவம் (808) என்பன இவரது நிலையினை யுணர்த்துவன காண்க. வாக்குமனாதீத கோசரமாய் நின்ற வதுவே சத்தாயுள்ள சிவமாதலின் அந்தச் சிவத்தையே அறிவுக் கறிவாகச் சிவஞானத்தால் அறிந்து நிற்பவர். "அதுவென் றறிய விரண்டலல் ஞுங்கறிவு ணிற்ற, லறியுமறி வேசிவமு மாம்" (சிவஞான போதம் -6-ம் சூத்), "என்னுளே மன்னி நின்ற சீர்மைய தாயி னானை என்னுளே நினைய மாட்டேன்" (குறைந்த திருநேரிசை 4) என்றவையுங்காண்க.

**முனிவராகிய சிவகோசரியார்** எனக். **அணைந்தார்** என்ற மொழியின் தகுதியும் சிறப்பும் முன்னர் உரைக்கப்பட்டன. அணைந்தோர்தன்மை குறிப்பதும் காண்க. "பொருட்பற்றிச் செய்கின்ற பூசனைகள் போலவிளங்க" (திருத்தோணோ - 3) என்ற திருவாசகமும் சிந்திக்க.

785. வந்துதிரு மலையின்கண் வானவர்நா யகர்மருங்கு
சிந்தைநிய மத்தோடுஞ் செல்கின்றார் திருமுன்பு
வெந்தவிறைச் சியுமெலும்புங் கண்டகல மிதித்தோடி
"யிந்தவநு சிதங்கெட்டே னியார்செய்தா ரோ?" என்றழிவார், கருசு

786. "மேவநேர் வரவஞ்சா வேடுவரே யிதுசெய்தார்;
தேவதே வீசனே! திருமுன்பே யிதுசெய்து
போவதே! யிவ்வண்ணம் புகுதநீர் திருவுள்ள
மாவதே?" யெனப்பதறி யழுதுவிழுந் தலமந்தார். கருஎ

785. (இ - ள்) வெளிப்படை. திருமலையில் வந்து தேவர் பெருமானது பக்கத்தில் சிந்தை நியமத்துடனே செல்கின்றவராகிய அமர்முனிவர், வெந்த இறைச்சியும் எலும்பும் சன்னிதானத்திற் கிடக்கக் கண்டு, தூரத்தே தாண்டி மிதித்து ஓடிப்போய், "ஓ! கெட்டேன்! இந்த அநுசிதத்தை யாவர் செய்தனர்?" என்று மனமழிவாராகி, கருசு

786. (இ - ள்) வெளிப்படை. திருமுன்பு நேர்பொருந்த வருதற்கு அஞ்சாத வேடர்களே இது செய்தாராதல் வேண்டும், தேவதேவீசனே! உமது திருமுன்பிலேயும் இவ்வநுசிதத்தை அவர்கள் செய்து போவதா? இவ்வண்ணம் அநுசிதம் வந்துபுகுவதற்கும் தேவரீர் திருவுள்ளம் செய்வதா?" என்று பதறி விழுந்து மிக்க துன்பமடைந்தார். கருஎ

இவ்விரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

785. (வி - ரை) **திருமலையின்கண் வந்து** - என மாற்றுக. **வானவர்நாயகர்** - தேவர்க்கெல்லாந்தலைவர். "யாதோர் தேவ ரெனப்படு வார்க்கெலா, மாதே வனலா றேவர்மற் றில்லையே" என்ற திருக்குறுந்தொகையுங் காண்க. **மருங்கு** - பக்கம். "நம்பக்கலன்பு" என்றதுங்காண்க.

**சிந்தை நியமம்** - சிந்தையினது நியமம். ஆறாம்வேற்றுமைத் தொகை. பண்புத் தற்கிழமை. சிந்தைக்குரியதாய - சிந்தையினாற் செய்யப்படுவதாய - விதிக்கப்பட்ட நியமம். அவை சிவத்தோடொன்றவைத்திருத்தல், சாந்தமுடைமை முதலாயின. **நியமம்** - அடக்கம் - வரம்பு. சிந்தையின் நியமம் கூறவே, ஏனை-வாக்கு - உடல் நியமங்களும் உடன் கொள்ளப்படும்.

**செல்கின்றார்** - (மனம்) அழிவார் - அலமந்தார் என வரும்பாட்டுடன் கூட்டுக.

**வெந்த இறைச்சியும் எலும்பும் கண்டு** - இவை திண்ணனார் குடுமித்தேவரை யூட்டிய பாவனையினால் அவர் உண்டருளியனவாகக் கொண்டவை.

**அகலமிதித்து ஓடி** - அநுசிதப்பொருள்களாதலின் அவை காலிற்படாதபடி தூரத்து எட்டி அடிவைத்து.

**கெட்டேன்** - இந்த அநுசிதம் யார் செய்தார் என்று பொருள் தொடர்ந்து செல்லாதபடி, கெட்டேன் என்ற அவலச்சொல் குறுக்கிட்டது முனிவரது உள்ளப் பதைப்பின் மிகுதி உணர்த்திற்று. 136

786. (வி - ரை) **நேர் மேவ வர அஞ்சா** - என மாற்றுக. மேற்பாட்டிற் கூறியபடி உள்ளமழிந்து மிகப்பதைத்தமையால் சொற்கள் தடுமாறி முன்பின்னாயின. **மேவ நேர்வா** என்றுபாடங் கொண்டு சன்னிதிமுன் வருதற்கு மனம் நேர்வாத என்றும், **அஞ்சா** - அஞ்சா இயல்புடைய என்றும் உரைப்பாருமுண்டு. ஓசை ஒழுங்கு செவ்வே செல்லாமையானும் பிறவாற்றானும் இப்பாட்டின் பொருத்தம் ஆராயத்தக்கது.

கோயில் அமைப்பும் பிரதிட்டை பூசை முதலியனவும் வகுத்த சிவாகமங்களுள் சனனிதானத்திற் பொருந்த இன்னாஇன்ன அளவு மேவ வருதல் கூடுமென்று விதித்த லால் சோர வரத் தகாத வேடர் சிவாபராதத்துக்கு அஞ்சாது வந்தனர் எனச் சிவ கோசரியார் மனமுடைந்தனர். சிவாகம விதிப்படி பூசித்தாராதலின் அவ்விதியைக் கடந்த செயல் காணச் சகியாதவராயினர் எனக. **அஞ்சுதல்** - பழியச்சம் தம்பால் அச் சமு மருளு மென்று மடைவிலார் (656) என்றபடி கொலை யஞ்சாவேடராதலின் சோ மேவ வருதலாலுள்ளதாகும் சிவாபராதமாகிய பழிக்கு மஞ்சாராவர் ஆதலின் அவரே இது செய்தாராதல் வேண்டும் என்றனுமானித்தனர் சிவகோசரியார் மேற்பாட்டில் "யார் செய்தார்?" என்ற எண்ணம் வந்தது, செய்தாரைக் கண்டிலர், செய்கை கண்டனர், திருமுன் இவை கிடக்கச் செய்தலின் சோவா அஞ்சாமையும், கிடக்கும் பொருள் வெந்த இறைச்சியு மெலும்பு மாதலின் கொலையஞ் சாமையும் அச்செயலுக் குள்ளே கண்டார், இவையுடையார் வேடுவராதலின், இங்கு இது செய்தார் அவ வேடுவரே என்பதனுமானத்தாற் றுணிந்தனர் வேடுவரது அடையாளமாகிய செருப்படி யும் நாயடியும் இதற்கு மேலும் துணை செய்தன எனக இவ்வாறே "அன்றிது செய்தா ரின்றும் அவன் செய்த தாகும்" (758) என்று நாணன் துணிந்ததும் காண்க.

**செய்தார்** - செய்தாராதல் வேண்டும் என்ற துணிபு குறித்தது.

**தேவதே வீசனே** - பெருந் தேவர்க்குந் தேவராய், அத்தேவர்கள் சிவாபராதம் செய்தபோது அவர் தம பிழைகளுக்குரிய தண்டஞ்செய் தொழுக்கும் தேவரீர் இவ் வேடர்கள் திருமுன்பு செய்த இவ்வபசாரத்துக்குத் தக்க தண்டனை கொடுக்கும் வன்மையும் தன்மையு முடையீர் என்பது குறிப்பு. தேவதேவேசனே எனக் குண சந்தியாய் வருதற்பாலது இவ்வாறு திரிந்து நின்றது மரூஉ. "இடையுரி வடசொலி னியம்பின கொளாதவும்" என்ற விதியாற் கொள்க. **தேவதேவ!** - தேவர்களுக்குந் தேவ!, **ஈசனே** - ஆளுபவனே! என்ப பிரித்துரைத்தலுமாம்.

**திருமுன்பே** - திருமுன்பேயும் உயர்வு சிறப்பும்மை தொக்கது ஏகாரம் தேற் றம். **போவதே** - செய்தும், அழிவு பெறாது போவதா? **போவதே** - **ஆவதே** - ஏகாரங்கள் வினா இது தகாதென்ற அவல முள்ளுறுத்த வினாப்பொருளில் வந்தன.

**இதற்கு நீர் திருஉள்ளம் ஆவதே** - உமது திருவுள்ள மிசைவில்லாவிட்டால் இது முற்றுப் பெற்று நிகழ்ந்திராது தக்கயாகம் போலச் செய்தோனும் செயலும் நாசமுற் றிருப்பா அவ்வாறன்றி இது நிகழ்ந்து முற்றுப் பெற்றிருக்கக் காண்டலின் தேவரீர் திருவுள்ளமிருத்தல் வேண்டும் அவ்வாறு இதற்கும் திருவுள்ளம் செய்திருப்பதா? "உன்றனக் கழகா?", "உன்றனக் கினிதே" என்று திருக் கண்ணப்பதேவர் திரு மறத்தில் நக்கீரதேவர் கூறியது காண்க

**பதறி விழுந்து அலமந்தார்** - சிவாபராதமாகிய அநுசிதம் சன்னிதியில் நிகழக்கண்ட ஆற்றாமை குறித்தன **அலமருதல்** - மிக்க துன்பத்தால் மனஞ்சுழலுதல்   137

787\. "பொருப்பிலெழுஞ் சுடர்க்கொழுந்தின் பூசனையுந் தாழக்கநான்
இருப்பதினி யென்?"னென்றவ் விறைச்சியெலும் புடனிலையுஞ்
செருப்படியு நாயடியுந் திருவலகான் மாற்றியபின்
விருப்பினொடுந் திருமுகலிப் புனன்மூழ்கி விரைந்தணைந்தார். ௧௩௮

(இ - ள்) வெளிப்படை "மலையில் முளைத்தெழுந்த சுடராகக் கொழுந்தாகிய காளத்தியப்பருடைய பூசனையும் தாழக்கும்படி நான் இங்கே இருப்பதென்னை?" என்று எண்ணி, அந்த இறைச்சியையும் எலும்பையு முடன்கிடந்த இலையினையும் செருப்படி நாயடிகளின் சுவடுகளையும் திருவலகினால் மாற்றிய பின்னர், விருப்பத்தி னோடும் திருமுகலியாற்றில் நீர் மூழ்கி விரைந்து வந்தணைந்தனர் சிவகோசரியார்;

(வி - ரை) **பொருப்பில் எழும் சுடர்க்கொழுந்து** - முன்னாகக் கண்டபோது மலை எழு கொழுந்து (754) என்றார்; இங்குச் சுடர்க்கொழுந்து என்றார். சிவகோசரியார் ஆகமப்படி பூசித்துத் தியானிக்கும் தவமுடைய முனிவர் (784) ராதலின் இறைவரைப் புறப்பூசையும் அகப்பூசையும் செய்வார். புறப்பூசையில் மலை எழு கொழுந்தாயும், அகப்பூசையில் பேரொளியாயும் வழிபடுவாராதலின் இங்குப் பொருப்பிலெழுஞ் சுடர்க்கொழுந்தென்றார். மேலும் மலை சுடர் உருவினதாயின் அதன் கொழுந்து நுனியில் எழுந்து விளங்கும் என்ற குறிப்பும் காண்க.

**பூசனையும் தாழ்க்க** - முன்னர் அநுசிதம் புகுந்ததுவுமன்றிப் பூசையும் காலந் தாழ்த்துழக்க என்று எச்ச உம்மை இறந்தது தழுவியது. சிறப்பும்மை என்றலுமாம். **தாழ்க்க** - தாமதிக்குமாறு.

**இருப்பது இனி என் ?** - இங்கு இனி இருப்பது எத்தன்மையாயிருக்கின்றது. **என்** - குறிப்பு வினைமுற்று. இவ்வகை அநுசிதம் நேரிடின் விதித்தபடி விரைவிற் பவித்திரம் செய்து பூசித்தல் வேண்டும், அவ்வாறு செய்யாமற்றாழ்த்து நிற்பது பிழை என்பது முனிவர் கருத்து.

**இறைச்சி எலும்புடன் இலை** - இறைச்சியும் அதனுள் நின்ற எலும்புங்கொண்ட தேக்கிலைக் கல்லை (773) இலையை மாற்றுதலாவது அகற்றுதல்.

**செருப்படியும் நாயடியும் மாற்றுதல்** - அவ்வடிச்சுவடுகளும் அவற்றிற் போந்த அசுத்த முதலியனவும் இல்லையாகும்படி திருவலகினால் விளக்கித் தூய்மை செய்தல். "ஏங்கொரு வேடுவன் நாயொடும் புகுந்து மிதித்துழக்கி" என்றும், "தொடர்ந்த நாயொடு தோன்றினன்" என்றும் திருக்கண்ணப்ப தேவர் திருமறத்தில் நக்கீரதேவர் உரைத்தவாற்றால், நாயும் திண்ணனாருடன் றொடர்ந்து வந்தமை பெறப்படும். நாய் வந்த செய்தியை இங்கு ஆசிரியர் முன்னாகக் கூறவில்லையாயினும் **நாயடியும்** என்றமையால் ஒரு நாய் திண்ணனாரைப் பிரியாது பின் றொடர்ந்து வந்தது என்பதுய்த்துணர வைத்தார். இதற்கு இவ்வாறன்றித், திண்ணனார் வேட்டைக்கெழுந்து போனவுடன், அந்த இறைச்சியைத் தின்ன வந்த காட்டிலுள்ள நாய்களின் அடி என்றுரைப்பார் மகாலிங்கையர். திருவலகிடுதலாவது திருக்கோயில் முற்றத்திற் காணும் அநுசிதங்களைப் போக்கி விளக்குதலாம். **திருவலகி**டும் திருப்பணி செய்தலின் பயனை "விளக்கினார் பெற்ற இன்பம் மெழுக்கினற் பதிற்றி யாகும்" என்று (திருநேரிசை) அப்பர் சுவாமிகள் அருளியது காண்க.

**விருப்பு** - வழிபாடு செய்தலில் வைத்த ஆர்வம்.

**புனன்மூழ்கி** - முன்னமே மூழ்கி மலரும் புனலும் முதலாயினவற்றைக் கொண்டு விதிப்படி சிந்தை நியமத்தோடு வந்தவராயினும், இறைச்சி எலும்பு முதலிய பிணப் பண்டங்களாகிய அநுசிதங்களைத் தீண்டி மாற்றினாராதலின் அவற்றின் றொடக்கினால் உண்டாயின இழிவைப் போக்கிக்கொள்ள மீண்டும் மூழ்கினார் என்பதாம். **திருமுக லிப்புனல்** உடலுக்கும் உயிருக்கும் ஒப்பத் தூய்மைசெய்யவல்லது என்பது மேலுரைக்கப்பட்டது.

**விரைந்து** - பூசனையுந் தாழ்க்க நான் இருப்பதென்? என்றகன்றாராதலின் விரைந்து வந்தனர். 138

788\. பழுதுபுகுந் ததுதீரப் பவித்திரமாஞ் செயல்புரிந்து
தொழுதுபெறு வனகொண்டு தூயபூ சனைதொடங்கி
வழுவில்திரு மஞ்சனமே முதலாக வரும்பூசை
முழுதுமுறை மையின்முடித்து முதல்வனார் கழல்பணிந்தார். ௯௫௯

(இ - ள்) வெளிப்படை. பழுது புகுந்ததனால் உண்டாயின் தீங்கைத் தீர்த்தற்குரிய பவித்திரமாகிய செயல்களைச் செய்து வணங்கிப், பூசைக்குக் கிடைத்த பொருள்களை அமைத்துக் கொண்டு, நாள்நாளும் வழக்கப்படிச் செய்யும் தூயபூசையினைத் தொடங்கிக், குற்றமில்லாத திருமஞ்சனமாட்டுதல் முதலாக வருகின்ற பூசையின் செயல்களை யெல்லாம் ஆகமங்களின் விதித்த முறைப்படி முடித்து, முதல்வனாரது திருவடிகளை வணங்கினார் சிவகோசரியார்.

(வி - ரை) **பழுது புகுந்தது தீரப் பவித்திரமாஞ் செயல்** - இறைவன் தூயவுடம்பினன், அவனது திருக்கோயில் தூய்மையுடையது, எனவே, அதனைத் தூய்மை செய்தல் வேண்டுவதென்றதற்கு? என்பாரை நோக்கிப், பழுது அங்குப் புகுந்துவிட்டதாதலின் அதனைத் தீர்க்கப் பவித்திரமாஞ் செயல் புரிந்து என்றார். **பவித்திரம்**-தூய்மை பரிசுத்தம். இச்செயல்கள் பவித்திரஞ் செய்வனவாதலின் பவித்திரம் எனப்பட்டன. "பவித்திர மாந்திரு முண்டத் தானை" (தொழற்பாலதே யென்னும் திருக்குறுந் தொகை). பரம அபரம ஆகிய சடங்குகளிலும் தீக்கை முதலியவற்றிலும், தருப்பைப் புல்லால் முடிந்து கைவிரலில் அணியப்படும் புல்லின் கோவை மோதிரம் தூய்மை செய்வது என்ற இப்பொருள் பற்றியே பவித்திரம் என்று வழங்கப்படுவதும் காண்க. இங்ஙனம் நேர்ந்த குற்றங்கட்குத் தீர்வு பவித்திரம். இதனைப் பிராயச்சித்தம் என்று உரைப்பது வழக்கு. இங்குக் கண்டபடி நேர்ந்தவற்றிற்குத் தீர்வாக உள்ள விதிகள் சிவாகமங்களிற் கூறப்பட்டுள்ளன. அவை புண்ணியாகம் - ஸ்நபனம் - சாந்தி ஓமம் - செபம் முதலியனவாம். அவையே இங்குப் **பவித்திரம்** எனப்பட்டன. இங்ஙனமன்றித் தெரியாது நேர்ந்தவற்றிற் கெல்லாம் தீர்வாகப் பவித்திரோற்சவம் என்ற உற்சவப்பகுதியும் சிவாகம விதிகளுட் காணப்படும். நித்தியகருமத்திற் குறைவு நேர்ந்துவிட்டது அப்போதே செய்யப்படவேண்டுவதாகிய பவித்திரம் நித்தியமாகக் கொள்ளப்படும்.

**செயல்புரிந்து .. பூசனைதொடங்கி** - நித்திய பூசனையிற் பழுதுகள் புகுந்தனவாயின், முன்னே அவற்றிற்குத் தீர்வு செய்யும் சடங்குசெய்து, பின்னர் நித்திய பூசைதொடங்குதல் விதியாதலின், பவித்திரமாஞ் செயல் முன் புரிந்து, பூசனையைப் பின்னர்த் தொடங்கினார். **பூசனை** - நித்தியபூசை.

**தொழுது** - பவித்திரமாஞ் செயல் முற்றியபின் மேலும் பழுதும் இடையூறும் புகுதாவண்ணம் தொழுது.

**பெறுவன கொண்டு - பெறுவன** - அன்றைப்பூசனைக்குக் கிடைப்பனவாகிய புனல் மலர் முதலியன. **கொண்டு** - தேடி அமைத்துக் கொண்டு. பெறுவனகொண்டு என்றதனாற் பெற்றவற்றை அன்பினால் நிரப்பி என்றதும் கொள்க. "தேடாதன அன்பினி னிரப்பி" (சண்டேசர புராணம் 36). அன்றைப் "பூசனைக்கேற்பக் கொய்த மலரும் புனலும் முதலான கொண்டு" (784) முனிவர் முன்னர் அணைந்தாராயினும் அருசிதமாயினமையின் அவற்றைக் கழித்தனர்; வேண்டும் பொருள்களை மீண்டும் தேடுதலிற் காலந்தாழ்க்காது அங்கு அப்போதைக்குக் கிடைத்த மலர் முதலியவற்றைத் தேடிப் பெற்றனர் என்று குறிக்க இவ்வாறு கூறினார்.

**வழுவில் திருமஞ்சனமே முதலாக** - பரார்த்த பூசையில், மூர்த்திகளுக்கு நித்திய பூசையின் முதலிற் செய்யக்கடவன திருமஞ்சனமும் அதன் முன்பு நின்மாலியங்களைதல் முதலியனவுமேயாதலின் **முதலாக** என்றார். **வழுவில்** - மஞ்சனமாட்டும் நீரினாலும், ஆட்டும் திறத்தாலும், அது போழ்து செய்யும் செபம் தியானம் பாவனை முதலியவற்றாலும் வழுவில்லாத. மன மொழி மெய் என்றிவற்றின் ஒருமைப்பாட்டின் வழுவில்லாத என்றலுமாம். **திருமஞ்சனம்** - இறைவன் திருமேனியை நீராலும், விதித்த ஏனைத் திரவியங்களாலும் ஆட்டுதல் அபிடேகம் என்பர். "அன்பர் வார்த்தகண

ணருவி மஞசன சாலை" (திருசசாட்டியககுடி. 2) எனபது கருவூரா தேவா திரு விசைப்பா

**வரும்பூசை முழுதும்** - திருமஞசனததின பின செயய வேணடுவனவாகிய திரு வொறறுடை சாததல, இலையும பூவும சூட்டி அலஙகரிததல, அருசசிததல, அமுதூட்டல, வலமவருதல், தொழுதல, தியானிததல முதலியன. இவைபறறிய விதிகளைச் சிவாகமஙகளுட் கணடுகொளக. திருநீலநககா புராணம 9 - 10 திருபபாட்டுககளும, பிறவும பாாகக

**முறைமையின்** - சிவாகமஙகளில வகுதத முறையிலே - விதிததபடி.

**கழல்பணிந்தார்** - இது பூசைமுடிவிற செயயும வணககம 139

*789. பணிநதெழுநது, "தனிமுதலாம் பர"னென்று பன்முறையாற்
றுணிநதமறை மொழியாலே துதிசெயது, சுடாததிஙக
ளணிநதசடை முடிககறறை யஙகணரை விடைகொண்டு,
தணிநதமனத திருமுனிவா தபோவனததி னிடைசசாாநதார். கசo

(இ - ள்) வெளிப்படை. பணிநது எழுநது, "எல்லார்க்கும் சிவபெருமானே முழுமுதற் கடவுளாவார்" எனறு பல முறையாலும துணிநது ஓலமிடும வேத மநதிரங களினாலே துதிதது, ஒளியையுடைய சநதிரனை யணிநத சடைககறறை முடியினை யுடைய அஙகணராகிய காளததியபபரிடம விடைபெறறுககொணடு, தணிவு பெறற மன முடைய சிவகோசரியாராகிய திருமுனிவா தாம தவஞசெயயும வனததிற சாாநதனா

(வி - ரை) "**தனிமுதலாம்பரன்**" என்று பன் முறையால் துணிநத மறை மொழி விசுவகாரணன, விசுவரூபன, விசுவாதிகன, விசுவசேவியன எனபன முதலாக வேதஙகளாலே பலவகையாலும துணிநது துதிககப பெற்ற வேதமநதிரஙகள. **பன்முறையால்** - பல முறைகளாலும முறறுமமை தொககது பனமுறையாவன நமக சமகஙகளிற கூறியபடியும மறறும பலபடியும சிவபெருமானே முழுமுதற கடவுள எனத துணிநது துதிததல. இவறறை, சிவபெருமான யாவுமானவா, அவரே யாவுமல லாதவா, சிவனை ஒபபாரும அவனின மிககாருமிலலை, சிவன எணகுணமுடையவா, சிவபெருமான ஒருவரே பிறபபிறபபிலலாதவா, சிவன வேதாகம முதலிய எலலா நூலகளுககும காததா, சிவபெருமான எணணிறநத கண, கால, சிரம முதலியவறறை யுடையவா, அவா எல்லா நாமஙகளாலுங கூறபபட்டு எலலாமாயுள்ளாா, அவா சோதி யுட் சோதி, சிறியதிற சிறியா, பெரியதிற பெரியா, சிவனே பசுபதி, அவரே தேவதேவா எனபனவாகிய வேதவாககியஙகளிற காணக. **மறை மொழி** - அதாவசிகை, சுவேதாசுவதரம முதலியன. இஙகுப **பவன்** முதலிய எட்டு நாமஙகளாற றுதிததுப பூசை முடிவில அட்டபுட்பம சாததும முறை குறிககபபட்டதெனபாருமுணடு

**சுடர்த்திங்கள்** - முனனாக குறைநத ஒளியை மீணடும சிவனருளால வளரப பெறறு அநத ஒளியை யுடைய திஙகள - மூனறும பிறைச சநதிரன. திருவருளாலே வளாநத ஒளி எனறு குறிககச **சுடர்** எனறு சிறபபிததாா

**திங்கள் அணிநதசடை - அங்கணர்** - இவவிரணடும சேரக கூறியது, இறைவா தமது திருமுனபே இவவநுசிதம நிகழப பாாததனரே எனறெழுநத முனிவாது மனக கொதிபபையும பதைபபையும மாறறி அஙகணமையுடன அவாககு உணமையனபின றிறததைத தேறறமபெற உணாததியருளும திருவருளின அஙகணமை பறறியாம்.

**தணிநதமனம்** - காம முதலிய தீககுணஙகளை யெல்லாம வெனறு ஐநதவிதது ஆனற சாநதமுடைய மனம இது பெருமுனிவாகளது மனததின றனமை யெனபாா **திருமுனிவர்** எனறாா இககருததுபபறறியே வருமபாட்டிற **பெருமுனிவர்** எனறதும காணக. முனனா 785 - 786 - பாடல்களிற போநத கொதிபபும பதைபபும முதலி

யன சைவசீலங் காகருந திறததின அனபுபற்றி எழுநதன வாதலின குற்றமாகாமை யோடு, தணிநத மனததுககு மாறுபடா எனபதாம். "அறததிறகே யனபுசார பெனப வறியார், மறததிறகு மஃதே துணை" என்ற திருககுறளும் காண்க. "பறறி லாநெறிப் பரசம யஙகளைப பாறறும, செற்ற மேவிய சீலமு முடையராய்த திகழவார" (திரு ஞான - புரா - 1037) என்றதும, "மறைகளினறனை சைவ நிந்தனை பொறுமனமும" என்று திருநநதிதேவா கேட்ட வரமும காணக முன்னாக கொதிதத மனம பூசை யினால தணிநத மனமாயிற்றென்று உரை கூறுவாருமுண்டு.

**விடைகொண்டு** வழிபாட்டின முடிவில இறைவனை வணங்கி விடைபெறறுச் செல்லுதல் மரபு **அங்கணரை** - அஙகணரிடம. உருபு மயககம்.

**தபோவனம்** தவஞ்செயதற கிடமாகிய காடு    140

*790. இவவண்ணம் பெருமுனிவ ரேகினா ; ரினியிப்பால
மைவணணக கருஙகுஞசி வனவேடா பெருமானார்
கைவணணச சிலைவளைததுக கானவேட்டை தனியாடிச்
செயவண்ணத திறமொழிவேன் றீவினையின் றிறமொழிவேன். கசக

(இ - ள்) வெளிபபடை. இவவாறு பெருமுனிவா செனறனா, இனி, இஙகுக காட்டினிடத்து, மையினது வணணமாகிய கரிய குடுமியினையுடைய வனவேடா தலை வனா கையினாலே அழகிய விலலினை வளைததுக கானவேட்டையைத தனியாக ஆடிச செயயும வினைததிறததினை மொழிவேன, அதனால தீவினையினது திறததினை ஒழிவேன

(வி - ரை) **இவ்வண்ணம் பெருமுனிவர் ஏகினார்** - சரித நிகழ்ச்சியில (இஙஙுச சன்னிதியில) இவவாறாக முனிவரின பூசைச செயல முற்றிய பகுதியை முடிததுக காட்டி, ஆசிரியா, மேலே அஙகுக காட்டில திண்ணனாரது வேட்டைவினை சொலகினறு ராதலின, இதுவரை கூறிய சரிதப போக்கை இவவாறு முடிததுக கொண்டனா.

**இனி - இப்பால்** - மேறசொலலபபடுவது வேறு பொருள என்று குறிகக இவ வாறு கூறித தொடஙகுகினறாா.

**இப்பால்** - இபபகுதியிலே திண்ணனார் வள்ளலைத தொழுது வேட்டைககுப போநத (782) இபபுறததிலே. இபபோது நமது கருததுமுனிவா ஒளிததிருந்த அங்கு நின்றும இறைவர்ககு அமுதுபெறும பொருட்டு வேட்டைககாகக் காட்டுககுப்போன திண்ணனாரிடம திருமபிச சென்றதனால **இப்பால்** என்ற அணமைச்சுட்டினாற கூறினாா

**மைவண்ணக் கருங்குஞ்சி**-மிகச் செறிவாகிய கருமை வணண நீடிய மைககுழம பாமென (455) என்றது காணக **மைவண்ணம்** - உருவம பெற்ற இருள என்றலுமாம "பொனவணண மெவவணண மவவணண மேனி" எனபுழிபபோல **வண்ணம்** என்ற தனை உவம உருபாககொணடு, மைபோன்ற எனபாருமுணடு மைவணண வேடா, கருஙகுஞசி வேடா எனக கூட்டியுரைததலுமாம்.

**கை** - கையினால **வண்ணச்சிலை கைவளைத்து** என மாறறுக. சிலைக்கு வண்ண மாவது வலிமை, குறி தவிராது அமபினைச செலுததும நேர்மை, வளைகக முறியாத தனமை முதலியன **வண்ணம்** - அழகு.

**வேட்டை தனிஆடி** - முன்னைநாள் வநததுபோல மறற வேட்டைமக்கள் பலரும் உடனினறித தாமே தனியாக வேட்டையாடி **தனிவேட்டை** என்று கூட்டியுரைத் தலுமாம இதுபோலத தமமை முறறும மறநது தேவரையே முறறுகினைந்து அவர்க் காகவே தம அனுபவஙகொணடு ஆடிய வேட்டை பிறிதொன்றில்லையாதலின தனி என்றதுமாம.

**செய் திற(த்தின்) வண்ணம்** எனக் **திறமொழிவேன் - திறமொழிவேன்** - சொற்சிலேடை. திறத்தினை மொழிவேனாதலின் அத்துணையான் திறத்தினை ஒழிவேனாவேன் என்றதாம். இனிச் சொல்லப்புகும் வேட்டைவினைத் திறம், முன்னை நாளின் வேடர்களுடன் கூடியாடிய வேட்டைபோலல்லாது பிறிதொன்றின் ஆசையின்றி இறைவனையே நினைந்து அவனருள்வழி நிகழும் வேட்டையாதலின் அருட்செயலாயிற்று. கொன்றருளி என வரும்பாட்டிற் கூறுதலும் காண்க. அருட்செயல்களைக் கூறுதல் தீவினையை ஒழிக்கும் சாதனங்களில் ஒன்றுமென்பது ஞான சாத்திரமுடிபு. ஆதலின் இவ்வேட்டைத் திறம் மொழிவேன்; அதனால் தீவினைத் திறம் ஒழிவேன் என்றார். இவ்வேட்டை, கொலையாகிய தீவினையாகாது, அதனைச் சொல்கின்ற நமது தீவினையை ஒழிக்கும் நல்வினையே யாயிற்று என்றபடி. இவ்வாறு கூறிய இதனாற் பின்வரும் செய்தியினது அருட்சிறப்பை, இதனைப் படிப்போர் மறந்து வேறு பொருள்பற்றிச் சென்றுவிடாமல் அதனையே ஊன்றி நினைக்குமாறு செய்வதாம் இது ஆசிரியரது கவிமரபு "ஒருமணத் திறத்தி னங்கு நிகழ்ந்தது மொழிவே னுய்ந்தேன்" (173) எனவும், "மூவாண்டி னுலகுய்ய நிகழ்ந்ததனை மொழிகின்றேன்" (திருஞான புரா - 54) எனவும் கூறும் மரபு காண்க 141

791. திருமலையின் புறம்போன திண்ணனார் செறிதுறுகற்
பெருமலைக ளிடைச்சரிவிற் பெரும்பன்றி புனமேய்ந்து
வருவனவுந் துணிபடுத்து மானினங்கள் கானிடைநின்
றொருவழிச்சென் றேறுதுறை யொளிநின்று கொன்றருளி, ௧௪௨

792. பயில்விளியாற் கலையழைத்துப் பாடுபெற வூடுருவும்
அயில்முகவெங் கணைபோக்கி யடியொற்றி மரையினங்கள்
துயிலிடையிற் கிடையெய்து தொடர்ந்துகட மைகளெய்து
வெயில்படுவெங் கதிர்முதிரத் தனிவேட்டை வினைமுடித்தார். ௧௪௩

791 (இ - ள்) வெளிப்படை. திருமலைப் புறத்திலே சென்ற திண்ணனார் செறிந்து துறுகின்ற கற்களையுடைய பெரிய மலைகளினிடைச் சரிவிலே புனங்களை மேய்ந்து வருகின்ற பெரும்பன்றிகளைத் துண்டித்தும், காட்டிலிருந்து ஒருவழியாகப் போய் ஏறுகின்ற மானவகைகளை அங்கு அவை தம்மையறியாதவாறு ஒளித்து நின்று **கொன்றருளியும்**, ௧௪௨

792. (இ - ள்) வெளிப்படை கலைமானைப்போலக் கூப்பிடும் பயிலோசையினாலே கூவி, அவைகள் அணுகியபோது அவை வருந்த அவற்றின் உடலில் ஊடுருவிச் செல்லும் கூரிய நுனியுடைய வெவ்விய அம்புகளைப் போக்கியும், அடிச்சுவடுகளினாற் கண்டு மரையினங்களைத் துயிலுமிடத்தில் அவற்றை எய்தும், கடமைகளைத் தொடர்ந்து எய்தும், இவ்வாறாக வெயில் தருகின்ற வெப்பமிகுந்த கதிர்கள் முதிரத் தனியாகிய வேட்டைத் தொழிலை முடித்தனர் ௧௪௩

இவ்விரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன.

791 (வி ரை) **திருமலை** - திருக்காளத்திமலை 744 - பார்க்க

**செறிதுறுகல் பெருமலை** - செறிந்தனவாயும் முன்னே நீண்டு துறுகின்றனவாயும் உள்ள பெருங் கற்பாறைகளையுடைய பெருமலைகள் இவை கிழக்குத்தொடர் மலையிற் காளத்தியை யடுத்துள்ள பல தனிமலைகள் "அப்பா லெண்ணில்பெரு வரைகளிரு மருங்கு மெங்கும், நிறையருவி நிரைபலவாய்" (1015), "கண்ணப்பர் திருப்பாதச் செருப்புத் தோய, மானவரிச் சிலைவேட்டை யாடுங் கானும்" (1017), "இசைவிளங்கு

தமிழவிரகா திருககாளததித திருமலையிம் மலைகளிலயா தெனறு கேட்டார்" (1019) எனவரும ஆளுடைய பிளளையாா புராணத திருவாககுககள் காண்க.

**மலைகளிடைச் சரிவு** - இரு மலைகளிடையே சரிவாகிய தாழ்ந்த இடங்கள இவற் றில மலையினறிவரும அருவிநீாகளின ஓட்டம இருததலால மரங்கள ஓங்கிவளரும். இவையே மலைவாணா தினைப்புன முதலியனவும உணடாககுமிடங்களுமாம் சரி என பது பாடமாயின மலைசசாரலில எனக

**புனம் மேய்ந்து** - தினைபபுன முதலியவறறை அழிதது அவற்றின பயிர்களைத தினறு **புன்மேய்ந்து** எனப பாடஙகொணடுரைபபாருமுணடு. பனறியை முதலில வைததுக கூறியதுபறறி முன உரைததவைபபாகக. பனறியிறைசசி, மானவகை யிறைசசிகளையே இவவேடரும் மலைவாணரும மிகவிரும்பி உண்பாராதலின அவற றையே முனனரும இஙகும் சுட்டினாா. 782 பாாகக.

**ஒருவழிச் சென்று ஏறுதுறை ஒளிநின்று** - இது வேட்டைவினையின ஒரு தநதிரம. பாாத காட்டின பலபககஙகளிலும கூட்டமாக மேயாநதுவரும் மான முதலியவை நீா குடிததல, வேறுகாடு மலைகளிற புகுதல முதலாகிய கருமஙகளுககாக வேறிடஙகளிற போகநேரிடும. அவவாறு செலலுகையில் சில இடஙகளில் அவை செலல நெருங்கிய ஒரேவழிதா னிருககுமாதலின அவவிடஙகளில அவை திரளாகச் செலலமுடியாது ஒன றனபின ஒனறாகவே செலல நேரும. அஙகு மறறைபபுறததில், அவை, தமமைக் காணுதவாறு ஒளிததிருநது அவை ஏறிவரும அததுறையில வரவர ஒனறொன்றாகக கொனறுவிடுதல வேட்டைவினையின ஒரு தநதிரமாம

**கொன்றருளி**-இஙகுக கொலைசெயலை அருளி எனறதுகுறிகக கொலை பாவவினை யாம எனபது பொதுவிதி அதுவே இஙகு அருட்செயலாயிறறு எனறார் எனனை ? விலஙகுகளாக இழிபிறவி எடுதத இவவுயிாகள அறிவு விளககமினறிக காட்டில் வேண் டியவாறு சரிததுப பயிாகளையும உயிாகளையும அழிததுததிரிநது ஒருநாள இறககும , அவவவறறின கனமததுககேறறவாறு மீளவும்பிறககும , இவவாறு உழலுவதனறிச் சிவனை உணாநது தமதுடல பொருள ஆவியை அவனுககெனறு கொடுதது ஈடேறுவது இவறறுககுக கூடாததாம ஆனல் இஙகுத திணணனாது திருககையினறு கொலலப் பட்டமையாலும, இவை சிவனுககுகநத அமுதாம என்ற அவருடைய பாவனையாலும செயலாலும இவறறின இறைசசி திருவமுதாக வுதவுதலினலும சிவபுணணியம கிடைக கபபெறறு இவை உயாநதனவாம். இப்பெருமபேற்றினை இவைகட்குக கொடுததலால் இஙகுக **கொன்றருளி** எனறாா விதிககபபட்ட தாவரஙகளின, தளிா, இலை, பூ, வேர், குறடு எனறிவவுறுபபுகளைககொணடு சிவனுககுச் சாததுதல் சிவபுணணியமாகி,அதன பயன அததாவரஙகளும பெறறுயகினறன எனற நூறகருததும இஙகு வைததுககாணக (ஒளியினீழலில) ஒளியாயிருநது - சிவமாயிருநது - கொனறு அருளிபபாடு தநதாா எனறது தொனிபபொருள 142

792. (வி - ரை) **பயில்விளி** - விலஙகுகள கூவுவனபோல ஓசைசெய்தல இத னைப பயிலோசை யெனபர். இது வனவேடர் கைவநத பழககம இநநாளிலும மலை வாணரிடம இதனைக காணலாகும.

**பயில்விளியாற் கலையழைத்து** - விளியோசை கேட்டு விலஙகுகள அதனைத தம் மினஙகளின ஓசையென மயஙகி உடனவாநதணைய அபபோது அவறறைப் பிடிததும் வேட்டையாடியும பயனபடுத்திக கொளவது வேட்டைத தநதிரஙகளில் ஒன்று. இது வும இநநாளிற காணலாம.

**அயில்முகம்**-கூரியநுனி. **வெங்கணை-வெம்மை** - கொடுமை , **விளியால்** எமாற்றி அழைதது அவறறை வஞசிததுக கொலலுதலா லிஙகு **வெம்மை** எனறடைமொழி தநதாா.

**அடி ஒற்றி** - அவைகூடித் துயிலும் கிடையை அவற்றினது அடிச்சுவட்டின் வழியே சென்று அறிந்து. **கிடை** - கிடக்குமிடம். " ஓதுகிடை " (சண்டேசர - புரா. 3) என்றதும் காண்க. மான், மரை முதலிய பிராணிகளுக்குள்ளம்புடைய உயிர்வருக்கங்கள் ஒன்றுகூடி வாழும் இயல்பினால் அவையிருக்குமிடம் **கிடை** எனப்படுவது வழக்கு.

**வெயில்படு வெங்கதிர் - வெயில்** - இங்கு ஒளிகுறித்தது. உச்சிவரையில் நாட்கூறு ஏற ஞாயிற்றின் கதிர்கள் ஒளியும் வெப்பமும் மிகுத்தருவன. **படுதல்** - உண்டாதல், தருதல். **முதிர** - முதிரும் வேளைவர. **கதிர்முதிர்தல்** 12 நாழிகையளவு ஆதலும் உச்சிவேளை வருதலும் குறித்தது. "காலையே போன்றிலங்கு மேனி கடும்பகலின், வேலையே போன்றிலங்கும் வெண்ணீறு" என்று அற்புதத்திருவந்தாதியில் அம்மையார் அருளியவாற்றானும் அறிக. காலையிற் சிவந்து வெப்பங்குறைந்து காட்டும் வெயிற்கதிர் கடும்பகலில் வெள்ளிய ஒளியும் வெப்ப மிகுதியும் கொள்ளுதல் காணப்படும். " வெம்புந்திய கதிரோனொளி " (11) என்ற ஆளுடைய பிள்ளையாரது திருவண்ணாமலைத்தேவாரமும் காண்க. **கதிர்முதிர - முடித்தார்** எனக்கூட்டுக.

**தனிவேட்டை** - தனியாடி (790), தனிப்பெரு வேட்டை (810). துணிபடுத்து - கொன்றருளி - கணைபோக்கி - கிடையெய்து - தொடர்ந்தெய்து - என அவ்வப்பிராணிகளுக்குரியவாறு செயல்வினைகளை வெவ்வேறு உரிய வினைச்சொற்களாற்கூறி அவ்வினைகளின் வேற்றுமை புலப்படுத்தியது காண்க. எண்ணுமமைகள் தொக்கன இங்குக் கூறியன ஏனைவேடர்களினுதவியின்றித் திருவமுதமைக்கத் தனியாகச் செய்த வேட்டை வினைத்தொழில்கள். காடுவளைத்தல், மாளமுப்புதல், பலரும் பலபுறமும் வேட்டையாடுதல் என முன்னாகக் (717—735) கூறியன தொகுதியாயக் கூடிய வேடர்கள், விலங்குகள் மிக நெருங்கி மீதூர்ந்து வருதலைத் தடுக்கும் பொருட்டு ஆம் பெருவேட்டை வினை என்பது காண்க.

திண்ணனார் - துணிபடுத்து - கொன்றருளி - கணைபோக்கி - எய்து - எய்து - கதிர்முதிர - வேட்டை வினைமுடித்தார் என இவ்விரண்டு பாட்டுக்களையும் தொடர்ந்து முடித்துக்கொள்க. 143

793\. பட்டவன விலங்கெல்லாம் படர்வனத்தி லொருசூழ
விட்டருகு தீக்கடைகோ லிருஞ்சுரிகை தனையுருவி
வெட்டிநறுங் கோற்றேனை மிகமுறித்துத் தேக்கிலையால்
வட்டமுறு பெருங்கலிலை மருங்குபுடை படவமைத்தார். ௧௪௪

(இ - ள்) வெளிப்படை. இவ்வாறு வேட்டையிற்பட்ட விலங்குகளையெல்லாம் படர்வனத்தில் ஒரு சூழலில் பக்கத்தே இட்டு, வலிய உடைவாளை உருவித் தீக்கடைகோல் வெட்டி, நறியகொம்புத்தேனையும் வேண்டுமளவும் முறித்துத் தேக்கிலையால் வட்டமாகிய பெரிய கலலைகளை உள்ளிடம் பரப்புடையனவாகத் தைத்து அமைத்தனர்.

(வி ரை) இப்பாட்டால் அமுதுப்பொருள் சித்தமாக்குதலின் முதலிற்செய்வினைகளைக் (Preliminaries என்பர் நவீனர்) குறித்தார். இவர் அரசகுமாரராயிருந்தும் ஏவலாட்கள் செய்யும் இவ்வேலைக் கூறுபாடுகளையெல்லாம் இவ்வளவு நன்கறிந்து செய்யவல்லராயினர் என்பது குறிக்கத்தக்கது.

**பட்ட**-வேட்டையில் கொல்லப்பட்ட. **விலங்கெல்லாம் ஒரு சூழல் இட்டு** - வேட்டையாடிய பின் முதலிற் செய்யப்பட்ட வேலை அவ்விலங்குகளை ஒன்றுசேர்த்தல். இங்கு ஒரு துறையில் ஒளிநின்று கொன்றும், பயில்விளியா லழைத்துக் கணைபோக்கியும், துயிலிடையிற்கிடை யெய்தும், தொடர்ந்து எய்தும், இவ்வாறு பலபடி வேட்டையாடிக் கொன்றவை பரந்த காட்டில் அங்கங்குக் கிடக்குமாதலின் அவற்றைக் கொணர்ந்து ஒரு சூழலில் சேர்த்தல் முதலிற் செய்யும் வினையாம்.

**படர்வனம்** - செறிநது பரநத காடு. **சூழல்** - மரஙகள சூழநத இடம. 739 பார்கக. மரசசூழலாகிய இடம தீயுண்டாககி இறைச்சிகளை வதககிப பககுவ மாககுதற குத தகக தெனபதாம். அணிகிழற கேழலிட்டு (748) எனறவிடத துரைததலை பார்கக.

**அருகுஇட்டு** எனமாறறுக. எல்லா விலங்குகளையும ஒனறுசேரப் பககமாக இட்டு. ஒனறு சேரதது எல்லாம அருகுஇட்டு எனக. **அருகுவெட்டி** எனறு கூட்டிப பககத திலே உளள மரததில் தீககடைகோல வெட்டி எனறுரைததலுமாம.

**இருஞ்சுரிகை** - வலிய உடைவாள சுரிகை உருவி அதுகொணடு தீககடைகோல் வெட்டி என்க. இதுவே பனறியைக குததின சுரிகை. "மொயததெழு சுடாவிடு சுரிகை" (740).

**கோல்தேனும் மிக முறித்து - கோற்றேன்** - மரங்களிற சிறு கிளைகளிலும செடிகளிலும சிறுவகைத தேனீககள ஈட்டும தேனகூடுகள. கூடுசிதைநது தேன சிநதி விடாதபடி அசசிறு கிளைகளைத தேனகூடுகளுடன அசைவினறிக கையால் ஒடிதத லால **முறித்து** எனறார். இவை சிறு கூடுகளாதலின் வேண்டுமளவு தேனைப பெறுதற குப பல கூடுகளை எடுததல குறிகக **மிக** எனறார். பெருமரஙகளின பெருங்கிளைகளிலும, மரபபொநதுகளிலும, மலைபபாறைகளிலும பெருந் தேனீக்கள ஈட்டுவன **பெருந் தேன்** எனபபடும. "இமமலைப பெருநதேன" (750), "அந்த இடைமருதில் ஆனநதத தேனிருநத பொநதை" (திருவாசகம) எனபனகாணக அவை பெரிய அளவுளளவை. ஆதலில தேனும அதிகம தருவன. ஆனால அவறறைத தேடிக காணலும், அழிததுத தேன பெறுதலும அரிது அபபெருந தேனீககள பெருநதுனபமும விளைபபன **கோற் றேன்** அவவாறனறிக காடுகளில எஙகும இலகுவிற கிடைப்பன ; இவறறின ஈககளும் எளிதில அகறறககூடியன, ஆதலின இவை பலவறறைத் திண்ணனார் முறிததுப் பயன படுததிககொணடனர் எனபதாம. "கோறறே னெனககெனகோ" எனற திருவாசகம காணக. கூடு இருககும கிளையை முறிததலைக **கோற்றேன்முறித்தல்** எனவழஙகுதல்மரபு.

**முறித்தல்** - மிக அசைவுபடாமல கையினால ஒடிததல இறைசசிககாகும விலஙகு களை அருகு இட்டதுபோல அவவிறைச்சியினுட் பிழிநது கலககும தேன்கூடுகளையும் மறறொருபுறம பககததில அமைததுக கொணடனர்.

**வட்டமுறு பெருங்கல்லை** - தேககிலையால வட்டமாகத தைதத பெரிய கொளகலம். தேககுமரச சோலை, மலையின அருகிலும முகலி ஆறறின இருகரையிலும மிக வளரந திருநதன எனபது முனனர் உரைககப்பட்டது. 743 முதலியவை பாரகக தேககிலை மிகுதியாகவும அடுததும கிடைபபதுடன அளவால அகனறு பெரியனவாயும "இறைச சிபபாரந" தாஙகும வலுவுடையனவாயுமுள்ளன. அனறியும இறைசசியிடுவதறகுப் பொருநதிய கொளகலமுமாம ஆதலின தேககிலையாற கல்லை யமைததனர் **மருங்கு புடைபட** - உளளிடம பககஙகளில இடமபடவும வாயகுறுகவும இருகக. 144

794. இநதனததை முறிததடுககி யெரிகடையு மரணியினில்
வெநதழலைப பிறபபிதது மிகவளாதது மிருகஙகள
கொநதியயி லலகமபாற் குட்டமிட்டுக கொழுபபரிநது
வநதனகொண டெழுநதழலில வககுவன வககுவிதது, ௧௪௫

795. வாயம்பா லழிபபதுவும வகுபபதுவுஞ் செய்தவறறி
னுயவுறப பிறைசசியெலா மரிநதொருகல் லையிலிட்டுக
காயநெடுங கோலகோததுக கனலினக ணுறககாய்ச்சித
தூயதிரு வமுதமைககச சுவைகாண லுறுகின்றார், ௧௪௬

796. எண்ணிறந்த கடவுளருக் கிடுமுணவு கொண்டேட்டும்
வண்ணவெரி வாயின்கண் வைத்ததெனக் காளததி

808. கனவுநிலை நீங்கியபின் விழித்துணர்ந்து கங்குலிடைப்
புனைதவத்து மாமுனிவர் புலர்வளவுங் கண்டுயிலார்
மனமுறுமற் புதமாகி வரும்பயமு முடனாகித்
துனைபுரவித் தனித்தேர்மேற் றோன்றுவான் கதிர்தோன்ற, ௧௫௯

*809. முன்னைநாள் போல்வந்து திருமுகலிப் புனன்மூழ்கிப்,
பன்முறையுந் தம்பிரா னருள்செய்த படிநினைந்து,
மன்னுதிருக் காளத்தி மலையேறி, முன்புபோற்
பிஞ்ஞகனைப் பூசித்துப் பின்பாக வொளித்திருந்தார். ௧௬௦

808. (இ - ள்) புனைதவத்து மாமுனிவர்-கொள்ளப்பட்ட தவத்திற் சிறந்த பெருமுனிவராகிய சிவகோசரியார், கனவு ... உணர்ந்து - கனவாகிய நிலையினின்றும் நீங்கியபின் விழிப்பு நிலையினை யடைந்து (கனவிற் கண்ட பொருளை) உணர்ந்து, புலர்வளவும் கங்குலிடைக் கண்டுயிலார் - பொழுது விடியுமளவும் அவ்விரவில் தூங்காதவராகி, மனமுறும் ....உடனாகி - மனத்தில் மிக்க அற்புதமும், (அது முடுகியதனால்) வரும் பயமும் உடன் உடையாராய், துனைபுரவி தோன்ற - வேகமுடைய குதிரை பூண்ட தனித் தேரின் மேல் தோன்றும் ஞாயிற்றின் கதிர்கள் தோன்றிய அளவிலே,

809 (இ - ள்) வெளிப்படை. முன்னாளிற்போல வந்து திருமுகலியின் நீரின் மூழ்கித் தமக்குப் பெருமானாகிய காளத்தியப்பர் கனவில் அருள் செய்தபடியினைப் பலமுறையும் நினைந்துகொண்டே, நிலைபெற்ற திருக்காளத்தி மலையில் ஏறி முன்பு போல அக்கடவுளைப் பூசித்துப் பின்புறமாக ஒளித்திருந்தார். ௧௬௦

இவ்விரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

808 (வி - ரை) **கனவுநிலை** - சொப்பனாவத்தை என்பர். **பின் விழித்தெழுந்து** - அந்நிலையினின்றும் நீங்கி விழித்திருக்குநிலையினை - சாக்கிராவத்தையை - அடைந்து. சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்பன உடலில் ஆன்மாவின் அவத்தைபேதங்கள் எனவும், இவற்றில் முறையே புருவநடு, கழுத்து, இருதயம், நாபி மூலாதாரம் என்ற இடங்களில் ஆன்மா தங்குமெனவும் கூறுவர். கனவுநிலையில் கண்டத்தானத்தில் நின்று சூக்கும உடலின் வழி ஆன்மா தொழில் செய்யும்; பின்னர் விழிப்பு நிலையடையும் போது புருவநடுவில் நின்று தூல உடலின் வழி ஐம்பொறிகளாலும் உணர்ந்து தொழிலியற்றும்.

**உணர்ந்து** - கனவில் இறைவனருளியவற்றை நனவில் உணர்ந்து. நனவிற் கண்டபலவற்றையும் கனவில் மறந்தும், கனவிற் கண்டபலவற்றையும் நனவில் உணராமலும் இருப்பது உயிரியல்பாம். இங்கு அவ்வாறன்றிக் கனவில் இறைவன் அருளியவை முற்றும் முனிவர் நனவில் உணர்ந்தார் என்பதாம்.

**புலர்வளவும் கங்குலிடைக் கண்டுயிலார்** என மாற்றுக. கனவு கண்டபின் உறங்கினவர் நற்கனவின் பயனை இழப்பர் என்பது ஒருமரபு. இரவின் கடையாமத்திற் கண்ட கனா உடன் பலன்தரும் என்பர். உடனே பலன் தந்ததாகலின் இது விடியற் காலையிற் கண்டதென்று ஊகிக்கப்படும். ஆதலின் இறைவனருளை எதிர்பார்த்து விழித்திருந்தனர் என்பதுமாம். இரவில் நான்காம் சாமத்திலும் பின்னரும் உறங்கலாகாது என்பதும் விதி. "வைகறை யாமந் துயிலெழுந்து" என்ற ஆசாரக் கோவை காண்க. "மறையவ னறிவுற் றெழுந்து" என்ற திருமறமும் சிந்திக்க. அற்புதமும் பயமும் துயிலாமைக்குக் காரணமாம் என்றலுமொன்று.

**புனைதவத்து** - **புனைதல்** - மேற்கொள்ளுதல் - செய்தல். **தவத்துப்புனை** - என மாற்றித் தவத்தினை மேற்கொண்ட என்றுரைப்பாருமுண்டு.

**மனம்உறும் அற்புதம்** - **அற்புதம்** - இனனதெனறறியபபடாததோா பெருமித உணாச்சி இஙகுத தாம அறியாதநிலையில இறைவனருளியபடி விளஙகிய வேடராகிய திணணனாது பெருமையும, அதனை இறைவனே முனனினறு தமமை அறியவைததது அனபா கூடடததுச சோககும அருமையும **அற்புத**மெனபபடடன. "அதத னணடு தன னடியரிற கூடடிய **அற்புதமறியேனே**" எனற திருவாசகக கருததுமகாண்க

**வரும்பயமும் உடன்ஆகி** **பயம்** - முனஉளதாகிய அறபுதங காரணமாக அதனால விளைநதது ஆதலின **வரும்** பயம எனறும, **உடன்ஆகி** எனறும கூறினாா. இறைவன அறிவிகக அறிநதவையும, இனிககாடடக காணபவையும முனனா அறியவாராது மாறு கப பலபலவும எணணியும செயதும வரநோநததே எனும நினைவு **பயத்**தை விளைத தது வேடனாது பெருமையையும அதனைநோககத தமது சிறுமையையும பிழைகளை யும அபபிழைபாராது பொறுதது இறைவன அருளியவறறையும உணாநதபோது **பயம்** வநதது "எததனையு மரியநீ யெளியை யானை யெனையாணடு கொணடிரஙகி யேனறு கொணடாய, பிததனேன பேதையேன பேயே னாயேன பிழைததனக ளெத தனையும பொறுததா யனறே!, யிததனையு மெமபரமோ வைய! வையோ? வெமபெரு மான றிருககருணை யிருநத வாறே" (தனிததிருததாணடகம) எனறது காணக **அற்புதம்** எனறதறகு வேடராது தீயசெயல சிவபெருமானுககு இபபடியு மிருநததோ எனற ஆசசரியம எனவும, சாமானிய வேடா தேவாகடகுமரிய நிலையினையும சிவபெரு மானால பாராடடபபடும நிலையினையும அடைநதனரே எனறு எணணிய ஆசசரியம எனவும உரைபபாருமுணடு.

இவவாறு அறபுதமும பயமும உடனாகிய மனநிலையோடு முனிவா அநநாளில இதனமேற செயலகளையும செயதனா எனறு மேலவரும பாடடுடன கூடடி உரைத துக கொளக உடனாகி - வநது - மூழகி - நினைநது - ஏறி - பூசிதது - ஒளிதது - இருந தாா எனறு முடிகக இமமனநிலையுடனே இசசெயலக ளொவவொனறும நிகழநதன எனபதாம இதனையே நககீரதேவா "மறையவ னறிவுற றெழுநது, மனமிகக கூசி வைகறைக குளிததுத, தானமுன செயவதோா, பொறபுடைப பூசனை புகழ்தரச செயது, தோனறு வணண மிருநதன னாக" எனறு திருமறததுள அருளினா.

**துனைபுரவி** - வேகமாகச செலலும குதிரை **துனை** - விரைவு "உராததுனைத தோததெனை" (சிவஞானபோதம) **தோன்றுவான்** என எதிாகால வினையாலணையும பெயராற கூறினமையாலும, தோனறுவான தோனற எனனாது **கதிர் தோன்ற** எனற மையாலும ஞாயிறு உதிககாது அவனது கதிாகளின றோறறம மடடும காணத தொடஙகி யெனறு தெரிகினறேம இதனை **அருணோதயம்** எனவும, ஞாயிறறினறோற றததைச **சூரியோதயம்** எனவும கூறுவா "கணணா ரிரவி **கதிர்**வநது காாகரபப", "அருணனிந திரனறிசை யணுகின னிருளபோ யகனறது" எனற திருவாசகஙகள காணக. எனவே, ஞாயிறு தோனறச சில நாழிகைகளின முனபே முனிவா செனறு புனலமூழகிக கடனமுடிததாா எனபதாம இதனை "வைகறைக குளிதது" எனறு மேறகாடடிய திருமறம உணாததிறறு.

**கனைபுரவி**—எனபதும பாடம 159

809 (வி - ரை) **முன்னைநாள்போல்** - முனனாடகளிற செயதத வழககமபோல எனக இவை திணணனா இறைவரைக கணடு பூசிதத இரணடாம நாளுககு முநதிய நாளகள **நாள்**-சாதியொருமை **முன்னைநாள்**-முதலநாள எனபா சுபபராய செடடியாா. **வநது** தவஞ் செயயும வனததிலிருநது திருமலையினடிவாரததுககு வநது **மூழ்கிவநது** எனறுகூடடியுரைததலுமாம

**தம்பிரான் அருள் செய்தபடி(யைப்) பன்முறையும் நினைநது** - என மாறறுக பனமுறையும நினைதலாவது பலவாறறானும வைததுச சிநதிததல. இவைமுன **அற் புதமும் வரும் பயமும் உடனாகி** எனற விடததுரைககபபடடன.

**வந்து - மூழ்கி - ஏறி - பூசித்து** - இவை யாவும் முன்னைநாள்களிற்போல நிகழ்ந்தன; மூழ்கியபின் பூசனைக்குரிய பூ - நீர் முதலிய பொருள்களைத் தேடுதலும், மலையேறிச் செல்லுதலும் திருவருட்டிறத்தினைச் சிந்தித்த வண்ணமாகவே நிகழ்ந்தன என்பார் **நினைந்து - ஏறி** என்றார்.

**முன்புபோற் பூசித்து** - "முன்னைநாள் போல்வந்து" என்றலே யமையும், மீண்டும் முன்புபோல என்றல் வேண்டா எனின், அற்றன்று; இந்நாட் பூசையில் முன்னாள்களிற் செய்ததுபோல இறைச்சியும் எலும்புங் கலலையும் திருவலகால் மாற்றுதலும், மீண்டும் புனன்மூழ்கி வருதலும், பவித்திரமாஞ் செயல் புரிதலும் அது பற்றிய பிரார்த்தனையும் நிகழவில்லை எனவும், திருவருளின் றிறத்தினை எண்ணி யுருகிச் சாந்தி பெற்று மனம் இருந்தது எனவும் குறிப்பார் மீண்டும் **முன்புபோல்** என்றாரென்பதாம். ஆனால் இந்நாளிற் றிருமுன்பு கிடந்த இறைச்சி முதலியவற்றை மாற்றினரோ? அன்றோ? எனின் மாற்றினர் என்றே கொள்க. ஆயின் அவற்றை இறைவன் தமக்கு இனியவாமென்று அறிவித்தமையின் அவை அநுசிதமென்று உணர்தலின்றி ஏனை நின்மாலியங்களோ டொப்பக் கண்டு அகற்றிய பின்னர் அந்நாட்பூசையினை முடித்தனர் என்பது ஊகிக்கநின்றது. இக்கருத்துத் "தான முன் செய்வதோர், பொற்புடைப் பூசை புகழ்தரச் செய்து" என்ற திருமறத்தால் விளங்குதல்காண்க. இவ்வாறன்றி முன்னைநாட்களிற் செய்தபூசை தாம் அநுசிதம் என்று கொண்டதற்குப் பிராயச்சித்தமென்றும், அன்று செய்தது அநுசிதமல்லாததை அநுசிதமென்ற தமது பிழையைப் போக்கச்செய்த பிராயச்சித்தமென்றுங்கூறி அன்றையநாளிலும் பவித்திரபூசை செய்தனர் என்று உரைப்பாருமுண்டு. அஃதுரையன்றென வுணர்க.

**பின்பாக** - பின்புறமாக. காளத்திநாதருக்குப் பின்புறமிருந்த மரங்களின் மறைவில் என்பர் மகாலிங்கையர். **பின்பு ஆக** எனப்பிரித்துப் பின்பு தமக்கு ஆக்கமுள்ளதாக என்றலுமாம். ஆக்கமாவது சிவனருள்நெறி விளங்கக் கண்டுய்தல்.

இப்பாட்டாற் சிவகோசரியார் ஆறாம் நாளிற் பூசை முடித்த திறங் கூறப்பட்டது. இவை முன்னைநாள்போல நிகழ்ந்தன என்றலே யமையும், வந்து மூழ்கி ஏறி என விரித்துக் கூறியது மிகையாம் பிறவெனின்; அற்றன்று. அந்நான்கு நாளினும் பூசித்தல் முதலியவற்றில் முனிவர் பெருங்கவலை கொண்டனர், இந்நாளிலோவெனின், "மனக் கவலை ஒழிக" என இறைவர் ஆணையிட அறிந்தாராதலின், கவலைக்கிடனின்றிச் சாந்தி பெற்ற மனத்தோடு இவை நிகழ்ந்தன என்பார் இச்செயல்களை வேறு வேறு பிரித்துக் கூறினார். அன்றியும், பூசனைக் கேற்பக் கொய்த மலரும் புனலும் முதலான கொண்டு அணைந்தார் (784), வந்து திருமலையின்கண் வானவர் நாயகர் மருங்கு சிந்தை நியமத்தோடு செல்கின்றார் (785) எனக் கூறியதன்றி வருதல் - மூழ்குதல் - மலையேறுதலாதிய செயல்களை முன்னர் விரித்துக் கூறாமையும் உணரப்படும். 160

வேறு

810. கருமுகி லென்ன நின்ற கண்படா வில்லி யார்தாம்
வருமுறை யாறு நாளில் வருமிர வொழிந்த காலை
யருமறை முனிவ னார்வந் தணைவதன் முன்னம் போந்து,
தருமுறை முன்பு போலத் தனிப்பெரு வேட்டை யாடி, ககக

811. மாறிலூ னமுது நல்ல மஞ்சனப் புனலுஞ் சென்னி
யேறுநாண் மலரும் வெவ்வே றியல்பினி லமைத்துக் கொண்டு,

தேறுவார்க் கமுதமான செல்வனார் திருக்கா ளத்தி
யாறுசேர் சடையார் தம்மை யணுகவந் தணையா நின்றார். ௧௱௨

812 "இத்தனை பொழுது தாழ்த்தே" னென்றுவிரைந் தேகுவார் முன்
மொய்த்தபல் சகுன மெல்லா முறைமுறை தீங்கு செய்ய,
"இத்தகு தீய புட்க ளீண்டமு னுதிரங் காட்டும்;
அத்தனுக்கென்கொல் கெட்டேன்! அடுத்தது?" என் றணையும்போதில்,

813 அண்ணலார் திருக்கா ளத்தி யடிகளார் முனிவ னார்க்குத்
திண்ணனார் பரிவு காட்டத் திருநய னத்தி லொன்றில்
துண்ணென வுதிரம் பாய விருந்தனர்; தூரத் தேயவ்
வண்ணவெஞ் சிலையார் கண்டு வல்விரைந் தோடி வந்தார். ௧௱௪

810 (இ - ள்) முறைவரும் ஆறுமநாளில் - (தாம் இறைவரைக் கண்டபின்) முறையாகவரும் ஆறுமநாளிலே, வரும் இரவு ஒழிந்தகாலை - மாறிவரும் இரவு நீங்கிய புலர்காலையில், அருமறை. முன்னம் - அரியமறையில் வல்ல முனிவர் வந்து அணைவதற்கு முன்னே, கருமுகில் தாம - கரியமுகில்போல் நின்ற கண்துயில் கொள்ளாத வில்லினையேந்திய திண்ணனார், போகி - திருமுன்பு நின்றும் நீங்கிப் போய், தருமுறை ஆடி - ஊனமுதம் தரும் முறையில் முன்புபோலத் தனித்த பெரியவேட்டையின் ஆடி, ௧௱௧

811. (இ - ள்) மாறில் மலரும் - நிகரில்லாத ஊனமுதத்தினையும், நல்லதிரு மஞ்சன நீரினையும், சென்னியில் ஏறும் புதியமலர்களையும், வெவ்வேறு கொண்டு - வெவ்வேறாந்தன்மையில் அமைத்துக் கொண்டு, தேறுவார்க்கு .. அணையாநின்றார் - தெளிந்து தேறுகின்ற அன்பர்களுக்கு அமுதம்போன்ற செல்வனாரும் திருக்காளத்தியில் எழுந்தருளியவருமாகிய கங்கை ஆறு சேர்ந்த சடையாரை அணுகுதற்கு வந்து அணைகின்றவராகி, ௧௱௨

812 (இ - ள்) "இத்தனை .. முன் - "இவ்வளவு நேரம் தாழ்த்து விட்டேன்" என்று எண்ணி விரைவாகச் செல்பவரின் முன்னே, மொய்த்த செய்ய - கூடிய பல சகுனங்கள் யாவையும் தீமையுள்ளதாம் என்று அறிவித்தலைச் செய்ய, "இத்தகு . அடுத்தது?" என்று - "தீமைகாட்டும் இத்தகைய சகுனங்கள் முன்னே நெருங்கி இரத்தக் குறியைக் காட்டுகின்றன, அதனால் எனது அத்தனாருக்கு அடுத்தது யாதோ? ஓ! கெட்டேன்!" என்று, அணையும்போதில் அணைகின்றபோது, ௧௱௩

813 (இ - ள்) அண்ணலார் . காட்ட - பெருமையுடைய காளத்தியப்பர் சிவகோசரி முனிவனாருக்குத் திண்ணனாரது அன்பின் திறத்தினைக் காட்டுவதற்காக, திருநயனத்தில் இருந்தனர் - தமது திருக்கண்களுள் ஒன்றிலே துண்ணென்று இரத்தம் பாய்ந்து வெளியே ஓடி வழியுமாறு காட்டியிருந்தனராக, அவ்வண்ண வெஞ்சிலையார் - அந்த அழகிய கொடிய வில்லினையுடைய திண்ணனார், தூரத்தே கண்டு - அதனைத் தூரத்திற் கண்டு, வல்விரைந்து ஓடிவந்தார் - மிக விரைவாக ஓடிவந்தனர்

இந்நான்கு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன

810 (வி - ரை) **கருமுகில் என்ன** கரியமுகில்போல. கருக்கொண்ட மேகம் என்று கொண்டு அருள்நீரைக் கருக்கொண்டு பொழியும் அன்பு மேகம் என்று கொள்ளின் உருவும் பயனும் பற்றிவந்த வுவமை. **என்ன** - உவமவுருபு - மேகம் உலகோம்புதல்போல விலங்குகள் வாராமற் குடுமித்தேவரைக் காவல் புரிதலின் கருமுகில் என்றார் எனவும், பண்புந் தொழிலும் பற்றிவந்த உவமை எனவும் கூறுவர் சுப்பராயச

செடியார். கருவரை காளமேக மேந்திய தென்ன (664) என்று தொடக்கத்திற் கூறினார்.

**நின்ற கண்படாவில்லியார்** - "அல்லுறங்கார" (800) என்றபடி முன் ஐந்து நாட்களிலும் இரவிற் றுயில்கொள்ளாமல் வில் ஏந்திக் காவல் புரிந்தது குறிக்க இவ்வாறு கூறினார். திருக்கையிற் சிலையுந் தாங்கி, மைவரை யென்ன வையார் மருங்கு **நின்** றகலா **நின்றார்** (776), நேர் பெறநோக்கி **நின்றார்** (777) என முன்னரும் கூறினர்.

**வரும் முறை ஆறாம் நாளில்** - திண்ணனார் திருக்காளத்தியப்பரைக் கண்டு அவரருளுக்காலச் சிவத்தன்மை பெற்றுப் பூசித்து வரும் அம்முறையில் ஆறாவது நாளின்கண் ஆறாநாளாகிய இந்நாளே திண்ணனார் சிவப்பேறடைந்த திருநாள் என்பது குறிப்பார் ஐந்தா நாளிர வென்றது இவ்வாறு கூறினார். **வருமுறை** - என்பதற்கு முறையாய - கிரமப்படி - வரும் எனவும், நாடோறும் நடந்து வரும் முறைப்படி எனவும், திருவருள் வெளிப்பாடு வரும் எனவும் பலவாறு உரை கூறுவாருமுண்டு.

**நாளில்** - நாளிற் காலை என்று கூட்டுக. **வரும்** - மாறிமாறி வரும். "இரவு போம் பகல் வருமாகில"-திருவிசைப்பா. **ஆறாம் நாளில்** - ஆறு நாளிற் கண்ணப்பர் பேறடைந்தனர் என்பது "நாளாறிற் கண்ணிட நப்பவல் லேனல்லன்" என்ற பட்டினத்தடிகள் திருவாக்கானு முணரப்படும்.

**இரவு ஒழிந்த காலை** - இராப்போது கழிய மேல்வரும் வைகறை - விடியற்காலம் குறித்தது.

**அருமறை** என்றும், **அருமுனிவர்** என்றும் கூட்டியுரைக்க நின்றது முன்னைநாட்களில் உண்மை விளங்காது மறைக்கப்பட்டு அன்று மறை நீங்கி விளக்கம்பெற நின்றவர் என்ற குறிப்பால் இங்கு **மறைமுனிவர்** என்றார். திண்ணனாரது அன்புநிலை யின்ன தென்று கூறாது "நாளைக்குக் காட்டுவோம் காண்பாய்" என்று மறை மொழியால் இறைவர் அருளினாராதலின் அம்மறை மொழிகளையே போற்றிய மன்ன ரென்று இங்கு விசேடவுரை காண்பாருமுண்டு.

**அணைவதன் முன்னம் போகி** - இங்குத் திண்ணனாரது செயல்களை யெல்லாம் ஒரே தொடர்பாயக்கூறி முடித்துக் காட்டவேண்டுமென்னுங் கருத்தால் ஆசிரியர், முனிவரது செயல்களைக் கனவுணர்ச்சி முதல் பின்பாக ஒளித்திருந்துகாண அமைந்தது வரை ஒரு சேரத் தொடர்ந்து மேல் உரைத்து முடித்துக் கொண்டனர் ஆதலின் அதற்கிடையில் திண்ணனார் வைகறையில், உருகித தெரியாப்போதில், வேட்டைக்குச் செல்லும் செயல் நிகழ்ந்த அதனைச் சரித்திரத்தின் காலநிகழ்ச்சி முறையில் ஆங்குக் கூறாது இங்கு வேறாகத் தொடங்கிக் கொண்டனர் திண்ணனாரது அந்நாட் செயல்களையும் இடைப்பிறவரலின்றித் தொடர்ந்து கூறுதலும் ஆசிரியர் கருத்தாம்.

**தருமுறை முன்புபோல** - முன்பு தருமுறைபோல எனக. ஊன்முதைத் தரும் எனச் செயப்படுபொருள் வருவிக்க.

**முறை** - இம்முறைகள், விலலும் தெரிந்து கொண்ட அம்பும் கொண்டு போதல், வைகறையிற் போதுதல், தொழுது போதல் முதலாக 782ல் கூறியனவும், வேட்டை செயவினை முறையாக 792 793 ல கூறியனவும் ஆம். முனிவனார் "முன்னைநாள் போல்வந்து . முன்புபோற் பூசித்தார்" என்றவாறே, திண்ணனாரும் **முன்புபோல்** வேட்டையாடினார் என்ற நயமும் காண்க.

**தனிப்பெரு வேட்டை** - ஒப்பற்ற பெரிய வேட்டைவினை. கான்வேட்டை தனியாடி (790), தனிவேட்டைவினை (792) என முன்னாகக்கூறிய ஆசிரியர் இங்குத் தனிப்பெருவேட்டை என்றது, இவ்வேட்டை முந்திய நான்கு நாட்களின் வேட்டைபோலப் பூசைக்கு வேண்டும் ஊனஅமுதம் உதவுதலின்றித் திருவருள் வெளிப்பாட்டுக் குதவினதாய முடியும் நிலைபற்றியாம் அவை சாதனமும், இது அச்சாதனங்களால் அடையப்படும் சாத்தியமும் (பயனும்) ஆகிமுடிதலின் அவற்றினும் இவ்வேட்டை பெருமை

யுடைத்தென்பது கருதியபடி. பின்னர் வெவ்வே றியல்பினி லமைத்துக் கொண்டு என்ற குறிப்புமிது.

திண்ணப்பனார் பேறடைந்ததாகிய இந்த ஆறுநாட் சரிதப்பகுதியைக் கூறும் ஆசிரியர்,முன்சொல்லிவந்த கொச்சகக்கலிப்பா யாப்பினை மாற்றி,அறுசீர்க்கழிநெடிலடி விருத்தத்தாற் கூறுகின்ற பொருத்தமும் காண்க. "குறியிலறு குணத்தாண்டு கொண்டார்" என்றபடி இறைவன் ஆறுகுணமுடையவனாதலின், அத்தன்மையினை அடியவர் பெருமானாகிய திண்ணனாருக்கும் அருளித் தமது பக்கத்தில் இருத்திய இப்பகுதியை அறுசீர்விருத்தத்தாற் கூறிய பொருத்தமும், அந்த மூவிருகுணங்களுமே முகங்களா யமைந்த ஆறுமுகப்பெருமான் திருவருளால் அவதரித்தவரது சிறப்பு ஆறுசீர்ப் பாட்டால் முடிக்கும் பொருத்தமும் காண்க.

161

முன்புபோகி—என்பதும் பாடம்

811. (வி - ரை) மாறுஇல் ஊன் அமுது - மாறுஇல் ஒப்பில்லாத ஈட்டுதல் சமைத்தல் - சுவைபார்த்தல் முதலிய புறச்செயல்களாலும், இச்செயல்களைத் தூண்டிய அன்பாகிய அகச்செயலாலும் ஒப்பரிய ஊன்அமுது - ஊனாகிய அமுது. முன்னாட்களில் ஈட்டிய ஊனினும் சிறந்த என்றலுமாம் முன்னாட்கள் போலன்றி அன்று உடும்பும் அடித்துச் சமைத்துக் கொணர்ந்தனர் என்பது "கடும்பகல் வேட்டையிற் காதலித் தடித்த, உடும்பொடு" என்ற திருமறத்தா லறியப்படும்

நல்ல மஞ்சனப் புனல் - "மாந்தி நன்னீர் தூய வாயினிற் கொண்டு" (770) என்றதும், ஆண்டுரைத்தவையும் பார்க்க. மஞ்சனநீரும் அதனைக் கொள்ளும் கலமும் ஒக்க நன்மையுடையன ஆதலின் நல்ல என்றார். நல்ல மஞ்சனம் என்றுகொண்டு நன்மை தரும் திருமஞ்சனம் என்றலுமாம். இன்னின்ன பொருள்களால் திருமஞ்சனமாட்டுதல் இன்னின்ன பயன்தரும் என்று ஆகமங்களிற் கூறுதல் காண்க

சென்னி ஏறும் நாள் மலர்-" தூநறும் பள்ளித்தாமங் குஞ்சிமேற் றுதையக் கொண்டார் " (770) என்றபடி திருப்பள்ளித்தாமத்தைக் குடுமியிற்செருகி அமைத்துக்கொண்டனராதலின் சென்னிஏறும் என்றார் இறைவனது சென்னியில் ஏறுவதற்காகக் கொண்ட என்றலுமாம்.

வெவ்வேறு இயல்பினில் அமைத்துக் கொண்டு - வெவ்வேறியல்பாவன தனித் தனி சிறப்புடையனவாகிய இயல்பு அன்றுகொண்ட ஊனமுத முதலியன முன்னை நாட்களிற் கொண்டவற்றினும் சிறந்தன என்பது மேற்பாட்டின் குறிப்பு மேன்மேல் வந்து எழும் அன்பால் (800) என்றபடி அன்பு நாளுக்குநாள் மேலெழுந்து மிகத்தாதலின் அவ்வாறு மிகுக்கக்கூடிய அன்பின் எழுச்சியால் அமைத்தலின் இவை வெவ்வேறியல்பினைக் கொண்டன எனக.

இனி முன்னை ஐந்து நாட்களினும் அமைத்த அமுது, நீர், பூ இவற்றினியல்பின இவை வேறாயின என்றலுமாம்.

முன்னாட்களிற்கொண்ட பொருள்கள் அவர் எண்ணியபடி இறைவன் திருப்பூசைக் குப் பயன்பட்டன இன்று அவ்வாறன்றி இறைவன் "அவனுடைய செயலெல்லா நமக் கினிய வாமென்று " (806) முன்னைநாளிரவே உகந்துகொண்ட பாங்கினால் திருவருள் வெளிப்பாட்டுக்குத் துணைக்கருவிகளாயமைந்த இயல்பின வன்றி, அவர் எண்ணி யமைத் துக் கொண்டவாறு அன்றைநாளிற் பூசிக்கப் பயன்படாத இயல்புடையனவாயின என் பதும் குறிப்பு இது " வாயினன்னீர் சிந்திட. ஊனும் சிதறிவீழ . கொந்தலர் பள்ளித்தாமங் குஞ்சியின் றலைந்து சோர " (814) என்றுரைத்தவாற்றா னறியப்படும். அன்று முன்னை நாட்களிற்போலப் பூசை நடவாது, கண்ணிடந்து சாத்தியதும் சாத்த ஒருப்பட்டதும் ஆகிய பூசையே நிகழ்ந்தது என்பதுங்காண்க.

**தேறுவார்க்கு அமுதமான செல்வனார் - தேறுவார்** - சிவபெருமானே முழுமுதலாகிய பசுபதியாவர் எனத் தெள்ளத் தேறித் தெளிந்த அறிவுடையவர். கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டைகூடுதல் என்ற நான்கனுள் தெளிந்து நிட்டைகூடுதலைக் கைவந்தவர்களே **தேறுவார்** எனப்படுவர். அவர்களுக்கே இறைவர் அமுதமாகுவர் என்பது. **அமுதம்** - நிலைபேறுடையதாய உள்ளத்தே ஊறும் இன்பவூற்று, மரணத்தை நீக்கும் இனிய மருந்து. **செல்வனார்** - அதனிற் குறைவில்லாதவர். 'செல்வன் திருக்காளத்தியு ளப்பன்" என்று திருமறத்தில் நக்கீரர் இப்பகுதியிற் கூறியதும், "அடிசார்ந் தவர்க்கு முடியா இன்பம், நிறையக் கொடுப்பினும் குறையாச் செல்வ" (திருவிடை - மும் - 22) என்று பட்டினத்தடிகள் அருளியதும் இங்கு நினைவுகூர்க.

**தேறுவார்** - "தெள்ளத் தேறித் தெளிந்து தித்திப்பதோர், உள்ளத் தேற லமுத வொளிவெளி" (தனித் திருக்குறுந்தொகை), "தேறிய தொண்டரைச் செந்நெறிக்கே, யேற்றுந் தகையன" (திருவிருத்தம் - திருஇன்னம்பர் - 7) என்றற்றொடக்கத்து அப்பர் சுவாமிகள் திருவாக்குக்களும் காண்க. "இவரே முதற்றேவ ரெல்லார்க்கு மிக்கார், இவரல்லா ரென்றிருக்க வேண்டாம் - கவராதே, காதலித்தின் னேதந்தீர்ந் தேற காளத்தி யாள்வார்சீ, ராதரித்த தெய்வமே யாம்" (கைலைபாதி - அந்தாதி - 72), "அவர்க்கே யெழுபிறப்பு மாளாவோ மென்று, மவர்க்கேநா மன்பாவ தல்லால் - பவர்ச்சடைமேற், பாகாப்போழ் சூடு மவர்க்கல்லான் மற்றொருவர்க், காகாப்போ மெஞ்ஞான்று மாள்" (அற்புதத் திருவந்தாதி - 3) என்றபடி பசுபதியார்க்கு ஆளாயத் தொண்டுசெய்வதனையன்றி வேறறியாத தன்மையிலே சிறந்தோர்கள் **தேறுவார்** எனப்பெறுவர். "உன்னடியார் தாள் பணிவோ மாங்கவர்க்கே பாங்காவோம், அன்னவரே யெங்கணவ ராவா ரவருகந்து, சொன்னபரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம், இன்ன வகையே யெமக்கெங்கோ னல்குதியேல், என்ன குறையுமிலோம்", "எங்கொங்கை நின்னன்ப ரல்லார்தோள் சேரற்க, எங்கை யுனக்கல்லா தெப்பணியுஞ் செய்யற்க, கங்குல் பகலெங்கண் மற்றொன்றுங் காணற்க, இங்கிப் பரிசே யெமக்கெங்கோ னல்குதியேல், எங்கெழிலென் ஞாயி றெமக்கு" (திருவெம்பாவை - 9,19) எனவரும் திருவாசகங்களிற் கூறுவதும் இவர்களது பண்பாம்.

**ஆறுசேர்சடையார்** - ஆறு அருட்பெருக்கையும், சடை அன்பின் நெறியினது விரிவையும் குறிப்பாலுணர்த்துதலின் இங்கு இவ்வாறு கூறினார்.

**அணுகவந்து** - சேரும்பொருட்டு வந்து. **அணுகுதல்** - வேட்டைக் காட்டிற் சென்று தூரத்தே நின்றவர் இடத்தால் அணிமையில் வருதலும், பின்னர்க் காளத்தியாரைப் பிரியாது வலத்தே நிற்கும் நிலைபெற வருதலும் குறித்தது. திருவடிசார அணைதல் குறிப்பு. "சிவத்தைச் சார அணைபவர் போல" (752) என்று இதனை முன்னர்க் குறித்ததும் காண்க. முன்னை நாள்களிற் போலன்றி, இன்று வருதல் மீளாது அணுகி நிற்றலுக்கேயாம் என்றுணர்த்தினார் என்பதுமாம். இறைவன் அன்பர்க்கு அணுக்கன் என்ற இயல்பும் காணத்தக்கது.

**அணையா நின்றார்** அணைகின்றனராய. நிகழ்காலத்துவந்த முற்றெச்சம். வில்லியார் - காலை - போகி - ஆடி (810) - கொண்டு - அணுகவந்து அணையா நின்றார் (811) - விரைந்தேகுவார் முன் - தீங்கு செய்ய, என்று அணையும் போதில் (812) - கண்டு - ஓடிவந்தார் (813) என இந்நான்கு பாட்டுக்களையும் தொடர்ந்து முடிக்க. இவ்வாறன்றி அணைகின்றாராயினார் என நிகழ்கால வினைமுற்றாக்கக் கொண்டு முடித்துரைப்பாருமுண்டு. அணையாநின்றார் - பெயராகக் கொண்டு, (சேரும் அத்திண்ணனார் என) வினைமுற்றுப் பெயராய் நிற்றலால் முதலில் அகரச்சுட்டுத் தொக்கி நின்றது என்பார் சுப்பராயச் செட்டியார்.

812. (வி - ரை) **இத்தனைபொழுது தாழ்த்தேன்** முந்திய நான்கு நாட்களினும் "வெயில்படுவெங் கதிர்முதிரு"ம் (792) நேரம்வர நண்பகலின் முன் வேட்டை முடித்தார். இன்று "இரவியும் வானறனிமுகட்டில் வந்தழல் சிந்தக, கடும்பகல் வேட்டையில்" (திருமறம் - நக்கீரர்) என்றறியப்படுதலின் ஞாயிற்றின் கதிர் முதிர்ந்து கடும் பகல் ஆயின்பின் வேட்டை முடித்தார் ஆதலின் **தாழ்த்தே**னென்றிரங்கினார். அன்பு மிகுதியாற் பொழுது தாழத்ததாகத் தோற்றிற்று என்றுரைத்தலுமாம். நீள் இருள் (777) என்ற விடத்துரைத்தவை பார்க்க.

**மொய்த்த பல் சகுனம் எல்லாம்** - மொய்த்தல் - செறிதல் **பல்** - பலபல தொகையும் வகையும் குறித்தன. **சகுனம்** - பின்னாவரும் நன்மைதீமைகளைத் தமது காட்சி - குரல் முதலியவற்றாலுணர்த்தும் பறவை முதலியன. இவற்றை **நிமித்தம்** - என்றும் கூறுவர். **எல்லாம்** - ஒன்று போலவே யாவும்

**முறை முறை** - அவ்வவையும் தத்தம் பாங்கிலே **தீங்கு செய்ய** - செய்ய - என் றது எடுத்துக் காட்ட என்ற பொருளில் வந்தது. 700-ம் திருப்பாட்டில் குறிகள் என்ற விடத்துரைத்தவை பார்க்க.

**இத்தகு தீய புட்கள்** - **புட்கள்** - சகுனங்கள். அவற்றுள் காக்கை - கரிக்குருவி யிடமாதல் கெடுதி குறிக்குமென்பர் "கூகையோ டாந்தை தீய, புள்ளின் மான் தம் மிற் பூசலிட் டழிவு சாற்றும்" - (திருஞான - புரா - 632) என்றபடி ஆந்தை கூகை கூவிப் பூசலிடுதல் அழிவு காட்டுவன செம்போத்துக் காணுதல் இரத்தப் பெருக்குக் காட்டு மென்று கூறுவர்.

**ஈண்ட** - விரைய. **காட்டும்** - காட்டா நிற்கும் இச்சகுனங்களாற் குறித்தபொருள் விரைவின் நிகழும் என்பது.

**கேட்டேன்! அத்தனுக்கு என்கொல் அடுத்தது?** என மாற்றுக. தமது அறி வெல்லாம் அத்தனையன்றி வேறொன்றும் அறியாமையால் சகுனப்பலன் அத்தனுக்கு அடுக்கும் என்றறியவே மிக்க இரக்கம் வந்தது. ஆதலின் **கேட்டேன்!** என்றார். பிற ரெல்லாம் தங்கள் தங்களது நன்மை தீமைகளையே முன்வைத்தெண்ணுவராதலின் இத்தன்மையான சகுனப்பலன் தம்மைச்சாருமே என்றிரங்குவர் இங்குத் திண்ண னார் தம்மையும் மறந்தனராதலின் **அத்தனுக்கு அடுத்தது என்** என்றனர் "ஆவியி னினிய வெங்க ளத்தனுக் கடுத்த தென்னோ?" (818) என்று பின்னாகக் கதறுகின்ற நிலை காண்க. **கேட்டேன்** சகுனப்பலன் நிச்சயமாதலின் அத்துணிபுபற்றி இறந்த காலத்தாற் கூறினார். சகுனப்புட்கள் உதிரங்காட்டும் என்றது திண்ணனாருக்கு முன் அனுபவ வாசனையின்ற போந்த அறிவு 163

813. (வி - ரை) **அண்ணலார்** - பெருமையினையுடையார். திண்ணனாரையும், அவரது பரிவு காட்டிய வழியால் முனிவனாரையும் ஆட்கொள்ளும் கருணையின் பெருமைபற்றி இங்கு இப்பெயரால் கூறினார்

**அடிகளார்** - மிகப் பெரியவர் பெரியாரிலெல்லாம் பெரியார் என்றபடி. **அண்ண லார் அடிகளார்** - என இரண்டு முறை பெருமையே குறித்தது திண்ணனாரும் முனிவ னாரும் ஆகிய மாறுபட்ட இருவரையும் ஒக்க ஆட்கொண்ட பெருமையும், அதன் பொருட்டுத் தாம் உருவத்திருமேனி தாங்கினின்று கண்களைபோல உருக்காட்டி அவற்றில் மாயாகாரியம்போன்ற உதிரமும் காட்டிநின்ற எளிமையும் கருதியது.

**திண்ணனார் பரிவு** பண்புத் தற்கிழமைப் பொருளில் வந்த ஆறும் வேற்றுமைத் தொகை **பரிவு காட்ட** - முனிவனார்க்குத் திண்ணனாரது பரிவினைக் காட்டுதற்குக் கண் ணில் ஒன்றில் உதிரம்பாய, அது கண்டு திண்ணனார் தமது கண்ணையிடந்து அப்ப, அச்செயல் அதனைத் தூண்டிய பரிவினை எடுத்துக் காட்ட, அதனை முனிவர் காண என்றிவ்வாறு ஒன்றனையொன்று பற்றிய சாதனமாய் உதிரம்பாய இருத்தல் பரிவு

தாட்டிறறு எனக. "நீங்காக் குணததுக கோசரிக கனறவ, னேசங காட்ட" எனற கல்லாடதேவர் அருளிய திருமறறும காணக.

**திருநயனத்தில்** - நயனஙகளில். **சாதியொருமை ஒன்று** - வலது கண பாரகக **நயனம் ஒன்று** எனறதனல உருவததிருமேனியும, **காளத்தி அடிகளார்** எனறதனல அதறகுக காரணமாய முனபோநத அருவுருவததிருமேனியும, **அண்ணலார்** எனறதனல அதற்கு முனனினற அருவததிருமேனியும குறிதத படிகாணக "உருமேனி தரிததுக கொணட தென்றலு முருவி றநத, அருமேனி யதுவுங கணடோ மருவுரு வான போது, திருமேனி யுபயங கணடோஞ செப்பிய மூனறு நநதங,கருமேனி கழிகக வநத கருணையின விளைவு காணே" (சிததி-2) எனற உணமைநூல உரையுமகாணக "செலவன் றிருககா ளததியு ளபபன, திருமேனியில மூனறு கணணு யாஙகொரு கணணிலு முதிர, மொழியா திருநதன னுக" (திருமறம) எனறபடி காளததியடிகளாரது சிவலிஙகததிருமேனியில ஒருமுகமும் அதில மூனறு கணகளும காணபபட்டு அவறறுள வலககணணில உதிரம துணணென்று பாயும்படி பெருமான இருநதனர் எனறதாம

**உதிரம் துண்ணெனப் பாய** - இரததம விரைநது ஓடிச் சிநத. **இருந்தனர்** - தோறறங காணுமாறு செயது வீறறிருந தருளினர். மாயாகாரியமாய எழு தாதுககளாலாகிய உடமபு அவரககு இலலை யாதலின உதிரம பாயநததிலலை. "மநதிரமே சோரியா" எனவும, "இநதிர சாலம புரிவோன யாவரையும தான மயககும, தநதிரததிற சாராது சாரவதுபோல" எனவும கநதா கலிவெணபாவினுள உரைததவை காணக உதிரம பாயவதுபோனற காட்சியே காணபபட்ட தெனபது கருதது.

**அவ்வண்ண வேஞ்சிலையார் தூரத்தேகண்டு** - அகரம முனனறி சுட்டு. யாவர் காணும பொருட்டுத தேவர் அவவாறு இருநதனரோ அநதச சிலையார் எனக **சிலையார்** - விலலையுடையவராகிய திணணனார். அவ்வண்ணம் வருநதிய எனக

**தூரத்தேகண்டு** - அனபு மேலீட்டினல அததனுககு அடுதத தெனகொல் என அதுவே கவலையாக வநதனராதலின தூரததே கணடனர். **கண்டு** - இருநத நிலையை எனச செயபபடு பொருள வருவிகக

**வல் - விரைந்து** - ஒரு பொருட் பன மொழி மிகுதி குறிததன மிகக விரைவில எனக சேயினிடததுப புணகணட தாயின பரிவும செயலும இஙகுக கருதுக

இததிருப பாட்டுமுதல "நினறசெங குருதி கணடார்" (823) எனபது வரை ஒரு தொடராகக கொணடும, இவறறில வரும கணடார் முதலிய வினைமுறறுககளையெலலாம முறறெச்சஙகளாகக கொணடும உரை கூறுவர் சுபபராயச செட்டியார். குருதிகணடபின திணணனாடால தனிததனி நிகழநத மன நிகழசசிகளையும,அவறறிற கேறற புறச செயலகளையும தனிததனி வேறு காட்டிக குறிககுமாறு முறறு வினைகளாற கூறிய ஆசிரியர் கருததுககு அவ்வுரை பொருநதா தெனக அவவாறு கொளளுதறகு வேறு காரணமுமிலலை எனபது. 164

814. வநதவர் குருதி கணடார் ; மயஙகினர் , வாயி னனனீர்
சிநதிடக, கையி லூனுஞ் சிலையுடன சிதறி வீழக,
கொநதலர் பளளித தாமங குஞசியின் றலைநது சோரப,
பைநதழை யலஙகன மார்பர் நிலததிடைப பதைததது வீழ்ந்தார்.

(இ - ள்) வெளிபபடை. இவவாறுவநத பசிய தழைகளாலாகிய மாலையணிநத மார்பினையுடைய திணணனார், உதிரம பாயதலைக கணடனர், மயஙகினர் ; திருவாயிற் கொணட நலல திருமஞசன நீர் சிநதவும, கையினினறும ஊனமுதம விலலுடனே சிதறி விழவும, கொததாக விரியும திருபபளளித தாமம குடுமியினினறு குலைநது அலைநது சோரவும இவவாறாக நிலததில மனமழிநது பதைததது விழுநதார்.

**(வி - ரை)** வந்தவர் - மார்பர் - கண்டார், மயங்கினார், வீழ்ந்தார் என முடிக்க. வந்தவராகிய மார்பர் **வந்தவர்** - வினையாலணையும்பெயர்.

**குருதி கண்டார்** - தேவர் குருதிபாய இருந்தனர், அதனைத் தூரத்தேகண்டு ஓடி வந்தவர் முதலில் தேற்றமாக அக்குருதியினையே கண்டனர். இறைவனது திருமேனியிற்கண்ட பிறதோற்றங்களினும் குருதியே அவர் காட்சிக்கு முன்னே புலப்பட்டது. சகுனங்கள் உதிரங்காட்டும் எனக் கவலைப்பட்டு வந்தபடி தூரத்தே குருதியைக் கண்டு ஓடிவந்தனர். அஃது ஐயக் காட்சி. வந்து தேற்றம்பெற அக்குருதியினையே கண்டார் இது தெளிவுக் காட்சி ஆதலின் கூறியது கூறலாகாமையுணர்க. இக் கருத்துப்பற்றியே பின்னரும் குருதி நின்றது கண்டார் என்றும் நின்ற செங்குருதி கண்டார் (823) என்றதுங் காண்க.

**கண்டார் - மயங்கினர்** - கண்டார் ஆதலின் மயங்கினார் கண்டதும் அக்காட்சியே மயக்கத்தை விளைத்தது எனக். ஆயின் கோழை மனமுடையார் பலரும் குருதிகண்டு மயங்குவாராதலின் அதுபோலன்று எனக் குறிக்க **அலங்கல் மார்பர்** என்று இவரது மார்பின் வலியவீரத்தைக் குறித்தனர் "மண்டமர் கடந்தநின் வென்றாடகலம்" (திருமுருகாற்றுப்படை) என்றபடி மார்பின் வன்மையே **வீரங்குறிப்பதாம்** வேட்டையிலும் குருதிப்பெருக்கிலுமே **வீரத் தொழில் செய்யும்** அவர் மயங்கியது அன்புபற்றியேயாயிற்று என்பது குறிப்பு **மயங்குதல்** அறிவு பிறழ்தல் குருதி கண்ட காட்சி மயக்கத்தை விளைக்க, அதனால் உடலைத் தாங்கிநிற்கும் கன்மேந்திரியங்களும் அவற்றை நேர்நிற்கச் செய்து தொழிற்படுத்தும் அசைவுநரம்புகளும் நிலைதவிரவே, உடல் பதைத்துக் கீழேவிழும் ஆதலின் **கண்டார் மயங்கினர் - பதைத்து வீழ்ந்தார்** எனத் தொடர்புபடக் கூறினார்.

**நன்னீர்சிந்திட - சிலையுடன் ஊன் வீழ - பள்ளித்தாமம் சோர** - தேவர்க்கென மிக்க அன்புடன் அரிதின் முயன்று அமைத்து, இத்தனைப்பொழுது தாழ்த்தேனென்று இரங்கிப் பரிவுடன்வந்தவர், இப்பொருள்களைத் தம் உயிரினும் பெரிது காப்பார், இங்கு அவற்றையும் காக்க இயலாமல் முற்றும் சோர்ந்தனர் எனச் சோர்வின் மிகுதி குறித்தது. எனவே இவை அவர் எண்ணியபடி அன்றைப் பூசைக்கு உதவாது போயின. முன்னை நாளிரவில் முன்பே இவற்றை இறைவன் உகந்துகொண்டனராதலின் இவை நின்மாலியமாயின, ஆதலின் பூசைக்குதவா ஆயின என்ற குறிப்புமாம். கண்ணைத் தோண்டி அப்பித் தேவரது வலப்பக்கத்தில் நிலைத்து நிற்கப்பெற்ற பேறுடன் அன்றை நாட் பூசையும் சரிதமும் முற்றுப்பெறுதல் காண்க. 811-ல் உரைத்தவை பார்க்க.

**கையில் ஊனும் சிலையுடன் சிதறிவீழ - கையில்** - கைகளினின்றும். ஐந்தனுருபு தொக்கது. இரண்டு கைகளையும் ஒருறுப்பாகவைத்து ஓதியதனால் **கையில்** என ஒருமைப்படக் கூறினார். வலதுகையில் ஏந்திய ஊன்கல்லையும் இடதுகையிற் பிடித்த சிலையுமெனக். சிலை பகலில் ஊன்பெறவும் இரவிற் காவல்புரியவும் துணையாதலால் தேவரது திருப்பணிக்கு ஊனைவிட இன்றியமையாத சிறப்புடையதென்பார் ஒருங்குசேர்த்துக் கூறியதோடு, உடனிகழ்ச்சிப் பொருளில் வந்த மூன்றனுருபைச் சிலையுடன் புணர்த்தி ஓதினார். இருகைகளும் வசமிழக்க அவற்றிற்றாங்கிய ஊனும் சிலையும் ஒருங்கு வீழ்ந்தன எனக்.

**நீர்சிந்திட - ஊன் சிதறிவீழ - பள்ளித்தாமம் சோர** - அவ்வப் பொருளுக்கேற்ற வெவ்வேறு செயல் குறிக்க வெவ்வேறு வினையெச்சங்களாற் கூறினார். வாயினின்றும் நீர் சிறிது சிறிதாகச் **சிந்தியது**, கல்லையிற்கொண்ட பற்பல வகைப்பட்ட **ஊன்துண்டங்கள்**, கல்லைவீழவே பலபலவாகப் பல இடங்களிற் **சிதறின**, அவ்வாறன்றிப் பள்ளித் தாமம் இலகுவான பூவும் இலையுமாயினமையின் ஒருங்கு வீழாமல் அவிழ்ந்த குடுமியிற் சிலவும் நிலத்திற் சிலவுமாகச் **சோர்ந்தன** என்றபடி.

**கொந்து அலர்** - கொத்தாக அப்போது புதிதாய இதழ் விரிந்த புதியின மலர்ந்த பூக்களையே திண்ணனார் தேடிப் பறித்தனர் என்பது. இதுவே விதியுமாம்

**பைந்தழை அலங்கல்** - இது திண்ணனாரது திருமார்பதற்கு இயற்கை யடைமொழி. சாதியடை என்பார். அன்றையகாலில் மார்பில் மாலை யணிந்திருந்தனர் என்பதன்று.

**பதைப்பு** - உள்ளப்பதைப்பின் மெய்ப்பாடு இது சிறிய அன்புடைய ஏனை உலகினரிடத்தும் காணப்படுவதென்றால் மெய்யன்பே உருவாகிய திண்ணனார்பால் உண்டாதல் வியப்பன்றெனக.

**வீழ்ந்தார்** - தேவரைக் காக்க நின்றவர் தமமையும் காக்க-தாங்க-முடியாத நிலையினராயினார் காணல், மயங்கல், வீழ்தல், சோர்தல்-வீழ்தல்-கூடிநிற்றலால் கூட்டவணி என்பது சுப்பராயச் செட்டியாருரை 165

815 விழுந்தவ ரெழுந்து சென்று துடைத்தனர் குருதி, வீழ்வ
தொழிந்திடக் காணார்; செய்வ தறிந்தில ருயிர்த்து மீள
வழிந்துபோய் வீழ்ந்தார், தேறி "யாரிது செய்தார்?" ரென்னு
வெழுந்தனர்; திசைக ளெங்கும் பார்த்தனர், ரெடுத்தார் வில்லும்,

816. வாளியுந் தெரிந்து கொண்"டிம் மலையிடை யெனக்கு மாறா
மீளிமை மறவர் செய்தா ருளாரகொலோ? விலங்கின் சாதி
யாளிமுன் னாகி யுள்ள விளைத்தவோ? வறியேன்" னென்று
நீளிருங் குன்றச் சார னெடிதிடை நேடிச் சென்றார். ௧௧௬௭

815 (இ-ள்) வெளிப்படை. வீழ்ந்த திண்ணனார் எழுந்துபோய் உதிரத்தைத் துடைத்தனர், அவ்வுதிரம் பாய்தல் நிற்கக் கண்டாரிலர்; செய்யக்கடவது இன்னதென்று அறிந்திலர், பெருமூச்சுவிட்டு மீளவும் செயலழிந்துபோய் வீழ்ந்தனர், பின்னர் மனந்தேறி "இது செய்தார் யாவர்?" என்று எண்ணி எழுந்தனர், எல்லாத் திக்குகளினும் பார்த்தனர், வில்லையும் எடுத்தனர் ௧௧௬௬

816. (இ-ள்) வெளிப்படை ஏற்ற அம்புகளைத் தேர்ந்து எடுத்துக்கொண்டு, 'இந்த மலையில் எனக்கு மாறாக வலிமையுடைய கொடியவேடர்கள் செய்தனரோ? சிங்கம் முதலாகவுள்ள விலங்கினங்கள் செய்தனவோ? தெரியேன்" என்று எண்ணி, நீண்ட பெரிய குன்றின் சாரலில் நெடுந்தூரம் தேடிச் சென்றார் ௧௧௬௭

இவ்விரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன

815 (வி-ரை) **துடைத்தனர் குருதி**, அக்குருதி வீழ்வது எனச் சுட்டுப் பெயர் வருவிக்க குருதி என்பது சிங்கநோக்காக முன்னும் சென்று குருதி துடைத்தனர் என இயைந்தது என்றலுமாம

**ஒழிந்திடக்காணார்** - ஒழிந்திலது என்னாது இவ்வாறு கூறியது ஒழியக் "காணடலே கருத்தாய நினைந்திருந்"தார் திண்ணனார் என்பதுணர்த்தி வற்புறுத்தற் பொருட்டு மேற்பாட்டிற் **குருதிகண்டார்** என்றவிடத் துரைத்தவையும் பார்க்க

**துடைத்தனர், காணார், அறிந்திலர், வீழ்ந்தார், எழுந்தனர், பார்த்தனர், எடுத்தார்** என இவ்வொரு பாட்டில் ஏழு தனி வினைமுற்றுக்கள் வைத்தோதியது திண்ணனாரது மனத்தில் அவலமிகுதியினால் ஒன்றன்பின்னொன்றாய் விட்டுவிட்டு விரைவில் நிகழ்ந்த வேறுபாடுகளையும், அவற்றாற் றூண்டப்பட்ட செயல்களையும் அவ்வாறே நாடகச்சுவைபடக் காட்டுதற்பொருட்டு அன்பு பலவாறாக உருவெடுத்தலும் உணர்த்தப்பட்டது. அது தாங்கலாற்றாது மயக்கும், தீர்வு தேடச்செய்யும், வேறுபல முயற்சியிலும் ஊக்கும், வீராவேசம் தோன்றிப் பழிவாங்கத் தூண்டும்; ஒன்றுமாற்றாதபோது வீழ்ந்து

கதறி யழச்செயயும். உலகியலிற காணும இாகிலேகள் யாவும இங்குப் பெருகிலேயில நிகழநதன எனபது கண்டுகொளக

**செய்வதறிந்திலர்** - இதறகுத தீாவாக யாது செயததககதென் றறிய வாராது நினறனா.

**அழிந்து வீழ்ந்தார்** - மனமழிநது பதைததது வீழ்நதனர் என முன உரைககபபட்டமையின இஙகுச செயலழிநது வீழநதனா எனக

**தேறி** - மீணடும மனம தேறி இஙகுத **தேறுதல்** - இனனது எணணுவது - செயவது - என று தோனறு து மயஙகி வீழநத நிலையினினறும தேறி ஒருவழிச செலலுதல எனனும பொருளில் வநதது **தேறி** - எணணி எனறலுமாம. **யார் இது தேறிச் செய்தார்** என று கூட்டி இதனையும எணணிச செயதாா யாவர் என றுரைததலும ஒன று

**எழுநதனர்** - தேறி, யாவா இது செயதனா என நினைநதவுடன இது செயதாரைக கணடு ஒறுககவேணடுமென று வீரமும சினமும தோனறின. அவை தோனறவே, முனனிருநத கையறுநிலையாகிய வீழசசியிலிருநது மேறகிளமபி எழுநதனா எனபதாம. புணணிறகுத தீாவு தேடுதலினும பழிவாஙகுமியலபே முறபட்டு நிறபது உலகியல அதுமாறி இறைவன பொருட்டாய நிகழநதது.

**திசைகள் எங்கும் பார்த்தனர்** - இது வீரததின பெருமிதச செயல.

**எடுத்தார் வில்லும்** எனறதும, வினையை முனவைததது மும அககுறிபபு. **வில்லும்** - பினனா வாளியும தெரிநது என்றதனுல் உமமை எதிரது தழீஇயது எணணுமமை எனறலுமாம. **எடுத்தார்** - கையினினறும சிலை வீழநததெனறு மேறபாட்டிற கணடோமாதலின அவவாறு வீழநத விலலினை எடுததாா எனபது

**வில்லும் அம்பும் எடுத்துக் கொண்டது**, இது செயதாரைக கணடால ஒறுதது ஒழிககும வீரததிறம பறறியது எனபது மேலவரும பாட்டானறிக 166

816. **(வி - ரை) வாளியும் தெரிநதுகொண்டு** - செயலழிநது வீழநதவா தேறி விலலும எடுதது, ஏறற அமபுகளையும தெரிநதுகொளளவலலாாயினா. உமமை எச்சமும சிறபபுமாம.

**எனக்கு மாறு மீளி வேம்மறவர்** - உலகச்சாாபுகளையும தமமையும மறநதுநினற திணணனுருககு இஙகு **எனக்கு** எனத தமது நினைவும, **மாறு** என மாறுபாடு - பகை - சினம் முதலிய நினைவும, **மீளி வேம்மறவர்** - என வேடா முதலிய உலகச்சாாபு நினைவும போநதன. தமது பசி, உறககம முதலியவை தோனறு து மறநதாாககு எவவாறு தேவாது பசி முதலியவை தோறறிச செயல் நிகழக காரணமாயினவோ, அவவாறே, ஈண்டும தேவரைககாககும தமககுப பகையாய ஊறு செயதாரை எணணியபோது தாம முனனை உலக அனுபவததிற கணட தமது இருபபும பகையும முதலிய தொடாபுகள நினைவுககுவநதன. 756-ம பாட்டில உரைததவை பாாகக சணடீசநாயனுா சரிததததில, அவாபூசை செயதபோது மறறொனறு மறிநதிலா, அஙகுவநத தமது பிதாவைக கணடிலா, அவன கூறிய கொடிதா மொழியுங கேட்டிலா, அவன தமது திருமுதுகிறபுடைததனையும உணாநதிலா , ஆனுல இறைவனுககுத திருமஞ்சனம ஆட்டுதறகு வைதத பாறகுடததை அததீயோன காலாலிடறிச சிநதிய செயலகண்டனா , அவனைப பிதாவும குருவும மறையோனுமாகிய எசசதததன என று அறிநதனா , அவன செயத சிவாபராதம தணடிககற்பாலது என றுணாநதனா , அதன பொருட்டுக கோலும எடுததனா , அது திருவருளால மழுவாயிட அவனறுளகளை எறிநதனா என ற நிகழசசிகளை இஙகு வைததுப பொருநதக கணடுகொளக திணணனுா பினனாச செயவனவும இவவாறே கணடுகொளக

சீவன முததிககும பரமுததிககும உளள வேறுபாடு இஙகுக கருதததககதாம். சீவன முததா இறைபணியின ஏகமாகி நினறு அபபணியின பொருட்டு உடல உணாவுடன இறைவனைப பொருநதி இருப்பா , பரமுததா அவவாறனறி இறை

வனிற கலந்து தொழும்பாய அனுபவித்து நிறபா. சீவன முத்தா நிலையாவது உடல் முதலிய கருவிகரணங்களுடனிருக்கும போதே முத்தியைத் தலைக்கூடி நிற்றல். அவா களது அறிவு, இச்சை, செயல்கள இறைவனது திருப்பணிமாத்திரையாய வியாபரிக்கும திருப்பணிக்கு முட்டுப்பாடு வரும்போது அவைகட்கு வாசனையினால் உலகிய லுணாச்சி புலப்பட்டு அவவிடையூறறைப போக்கும அளவில தொழிற்படும்.இதனையே 753, 803, 806-ம திருப்பாட்டுக்களில விரித்தருளினா இஃது அணைந்தோா தனமை எனச சிவஞானபோதம 12-ம சூத்திரத்திற கூறப்படுதல காணக.

திண்ணனா காளத்தியப்பரைக கண்டபோதே, அவாது அருளுக்குத் துணையாற சீவனமுத்த நிலையடைந்தனா அதனபின ஆறு நாளும அந்நிலையில உலகிற சரித்தனா சீவன முத்தாக்கும் ஒரோவழிப, புறத்தே அறி விச்சை செயல்கள வியாபரிக்கு மெனவும, அஃது அவாக்காகாமையின ஆணவ மாயை காமிய மெனனு மலங்களைக களைவா எனவும், அதற்கு அவர்தம செயல் வியாபரிக்குங்காற் சிவாலயத்தைப பரமேசுவரனெனவே கண்டு வழிபடுவா எனவும், அவவாறு வழிபட்டுத் தானது வாயக் காணுங் தவாக்குக் கடைந்த விறகிற றீக் காணுதல் போல இறைவன வெளிப் படுத்த தானதுவாயத் தோனறி யருளுவன எனவும சிவஞான போத மாபாடியத் துரைத்தவை காணக

**மீளி வெம்மறவர் - விலங்கின்சாதி** - இத்தகைய கொடுமை செயவாா மறவரே யாவா, ஆனால இத தேவாபால எவாக்கும மாறுபாடு உண்டாதறகியைபில்லை, இவா "மேவினா பிரியமாட்டா விமலனுர் - ஆவியினினியா" (813), ஆதலின இதற்குக் காரணம அவவேடா எனபாற பூண்ட மாறுபாடுதானோ ?, என்று எண்ணி **எனக்கு மாறு** எனறா அவவாறு அவாகள செயததனறாயின காரணமின்றியும ஊறு செயயும குணமுடைய விலங்கின சாதி விளைத்திருத்தல வேண்டும ; வெவவிலங்குகள வெனறஞ்சி இரவு முழுதும காவல புரிந்தேனனறோ ? என்று நினைத்தாா. **உளர் கொலோ ? - கோல் -** ஐயப்பாடு உணாத்துவதாதலின தமக்குமாறாக வேடா உளர் எனபதில் திண்ணனா துணிவுபெறவில்லை ஆதலின அவாகளை ஒழித்து விலங்கின சாதியை எண்ணினா. இருகாரணமுங் கருதி வில்லும அம்பும எடுத்துத் தேடிப் போந்தனா எனபதாம.

**ஆளி -** சிங்கம. யாளி எனறுரைப்பாருமுண்டு. இது முன காலத்தில இருந்து இக்காலத்து மரபு ஒழிந்ததொரு பெரிய கொடிய விலங்குச்சாதி. நீண்ட மூக்குடைய புலி போனற தென்றும், சிங்கத்தினையும வெல்லக்கூடிய தென்றும கூறுவா. **ஆளி - முன்னாகி -** என விலங்கினத்தில முதனமை பெற்றதனைக் கூறி ஏனையவெல்லாம அதனுள அடக்கினா ஆகி எனபது செயவெனெச்சத் திரிபு.

**அறியேன் -** இதனிலுந் துணிவுபெறவில்லை யெனபதாம

**நீள் இருங் குன்றச் சாரல் -** தொடாந்து நீண்ட பெருமலைகள். விலங்கினந் தேடிச் சென்றாராதலின அவை தங்குமிடமாகிய மலைச் சாரல்களிற் சென்றனா.

**நெடிது இடை நேடி -** நெடுந்தூரமவரை பல வழியாலும தேடி 167

817\. வேட்டைக் காணா ; தீய விலங்குகள மருங்கு மெங்கு
நாடியுங் காணா ; மீண்டு நாயனா தமபால வந்து
நீடிய சோகத் தோடு நிறைமலாப பாதம் பற்றி
மாடுறக் கட்டிக் கொண்டு கதறினா் கண்ணீா வாா ; கசுஅ

818\. "பாவியேன் கண்ட வண்ணம் பரமனாக் கடுத்த தென்னோ ?
வாவியி னினிய வெங்க ளத்தனாக் கடுத்த தெனனோ ?

மேவினார் பிரிய மாட்டா விமலனார்க் கடுத்த தென்னே?
யாவதொன் றறிகிலே னியா னென்செய்கே" னென்று பின்னும்,

819. "என்செய்தால் தீரு மோதான்?, எம்பிரான் திறத்துத் தீங்கு
முன்செய்தார் தம்மைக் காணேன்; மொய்கழல் வேட ரென்று
மின்செய்வார் பகழிப் புண்கட் காகுமெய் மருந்து தேடிப்
பொன்செய்தாழ் வரையிற் கொண்டு வருவன்" என்று போனார்.

817. (இ - ள்) வெளிப்படை. (அவ்வாறு தேடிய திண்ணனார்) வேடர்களைக் காணார், தீய விலங்குகளைப் பக்கங்களிலும் வேறு எங்கும் நாடியும் காணார், மீண்டு திருக்காளத்தியப்பரிடம் வந்து நீடிய பெருஞ் சோகத்தோடு நிறைமலர்ப் பாதங்களைப் பிடித்துப் பக்கம் பொருந்தக் கட்டிக் கொண்டு, கண்ணீர் பெருகக் கதறுவாராகி, ௧௬௮

818 (இ - ள்) வெளிப்படை. "இப்பரமனார்க்குப் பாவியேன் நான் கண்டபடி இவ்வாறு அடுத்தது என்னே?, உயிரினும் இனியவராகிய எங்கள் அத்தனார்க்கு இது அடுத்ததென்னே?, வந்து பொருந்தினவர்கள் விட்டுப் பிரியமாட்டாத விமலனார்க்கு இங்கு அடுத்ததென்னே? செய்யலாவதாகிய காரியமொன்றும் யான் அறிகிலேன்" என்று கதறி மீளவும் (எண்ணுவாராய்), ௧௬௯

819 (இ - ள்) வெளிப்படை. "என்ன செய்தால் இது தீருமோ? (அறியேன்), எமது பெருமானிடத்து இத் தீங்கு முன் செய்தவர்களைக் காணேன், மொய்த்த வீரக் கழலையணிந்த வேடர்கள் ஒளியுடைய கொடியஅம்பினால் உளவாம் புண்களை எப்போதும் தீர்க்கும் நிச்சயமான மருந்துகளைப் பொன் செய்யும் மலையின் தாழ்வரையினிடத்திருந்து தேடிக்கொண்டு வருவேன்" என்று சொல்லிப் போயினார். ௧௭௦

இம் மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

817. (வி - ரை) **வேடரைக் காணார்** - இத்தீங்கினைச் செய்திருக்கக் கூடுமென்று தாம் எண்ணிய பகையிரண்டனுள் முதலில் எண்ணியபடி வேடர்களைக் காணார்; ஆதலின் அதன்பின் தீய விலங்கின் சாதியைத் தேடினார்.

**விலங்குகள் .. காணார்** - விலங்குகள் பகலில் வெளியிற் றங்காது ஒளியிடத்துப் பதுங்கிக் கிடக்குமாதலின் அவ்விடங்களை **மருங்கும் எங்கும்** என்றார். **மருங்கும்** என்பது அணிய இடங்களையும், **எங்கும்** என்றது காட்சிக்குச் சேய பதிவு இடங்களையும் குறித்தன. **காணார் - காணார்** - ஒன்றுபோலவே ஐயப்பட்ட இரு பகைகளும் காணாவாயின என்பார் **காணார்** என்ற சொல்லால் இரண்டிடத்தும் குறித்தார்.

**மீண்டு வந்து** தீங்குசெய்தன பகை என்றெண்ணியபடி பகைகள் காணாமையின் பழிவாங்கும் வீராவேசம் இதனுட் குறைந்து விடவே, புண்ணுக்குத் தீர்வு தேடாமலும், இத்தனைப்பொழுது தேவரைப் பிரிந்தும், தாழ்த்தோமே என்ற நினைவு வந்தது. வரவே, பகை தேடித் திரிந்த சேய காட்டினின்றும் விரைந்து மீண்டு தேவரிடம் வந்தனர். **நாயனார்** - தலைவர் - காளத்தியப்பர் **நீடிய சோகம்**-பெருகிய வருத்தம் துன்பம் கவலை என்பவற்றின் மிகுதியால் உளதாகும் விளைவு **சோகம்** எனப்படும். நாயனாரது கண்ணிற் குருதி பாய்ப்பாய இவரது சோகமும் பெருகுகின்றது. ஒருவனுக்கு இரத்தம் பெருக வெளிப்படின் (loss of blood) அவனுக்குச் சோகமுளதாம் என்பர். ஆயின் இங்குக் காளத்தி **நாயனார்** வடிவமும் திண்ணப்ப **நாயனார்** வடிவமும் சிவோகம்பாவனையினால் ஒன்றேயாய அன்பு வடிவமாயினமையின் அவர்க்குக் குருதி பாயப்பாய இவர்க்குச் சோகம் நீடிற்று என்பதும் குறிப்பு.

**நிறைமலர்ப்பாதம்** - மலர் நிறை பாதம் எனக் "நின்போ லமரர்க ணீண்முடி சாய்த்து நினைந்துருகத், பைம்போ துழக்கிப் பவளந் தழைப்பன பாங்கறியார்,

யெனப்போ லிகளப்பறித் திட்ட விலையு முகையுமெல்லா, மம்போ தெனக்கொள்ளு மையனை யாறனடித்தலமே" (திருவிருத்தம்) என்றபடி மேலாகிய விண்ணவர்களும் அவரின் மேலாகிய அடியவர்களும் நிறைய இட்ட மலர்களையுடைய பாதம் என்பது. "அட்டபுட்ப மவைகொண்டடி போற்றி நல்ல, கரியவனான் முகனும் மடியும் முடியும் காண்பரிய, பரியவன்" (நட்டராகம் - பழமண்ணிப் படிக்கரை - 8) என்ற நம்பிகளது தேவாரமும் காண்க. "முடியால் வானவர்கள் முயங்கும் திருக்காளத்தியாய்" என்ற ஆளுடையபிள்ளையாரது இத்தலத்தேவார (7) மும், "கடவுள்மால் வரையி னுச்சி யதிற்தரு மோகை யையந்து" (750) என்றதும் இம்மலையிற்றேவர் பூசித்தலை உணர்த்துவன. அன்று காலை சிவகோசரி முனிவர் அருச்சித்த நிறைந்த பூக்களையுடைய பாதம் என்றலுமாம். யாங்கணும் நிறைந்த செந்தாமரை மலர்போன்ற பாதம் என்றலும் பொருந்தும். இதற்கு, மணம் நிறைந்த மலர்போன்ற பாதம் என்றும், தேன் நிறைந்த மலர்போன்ற என்றும், தமது உள்ளக்கமலத்தில் நிறைந்த என்றும் பற்பலவாறுரைப்பாருமுண்டு.

**மார்புறக் கட்டிக்கொண்டு** - திருமேனியின் பக்கம் பொருந்தத் தழுவிக் கட்டிக் கொண்டு.

**கதறுதல்** - பெருந்துக்கத்தால் ஓலமிட்டுக் கதறுதல். **வார்தல்** - பெருகுதல். ஒழுகுதல் ஓலமிட்டுக் கதறும் வகை மேல்வரும் பாட்டிற் கூறுவார்.

"**பார்த்து** நடுக்குற்றுப் **பதைத்து மனஞ்சுழன்று,வாய்ப்புனல் சிந்தக் கையிலூ னொடு கணைசிலை சிந்த**" (814), **நிலம்படப் புரண்டு** நெடிதினிற் றேறிச (815), **சிலைக் கோடும் படைகடி தேடுத்துப்** படுத்தவ, ரடுத்த விவ்வனத் துளரெனத் திரிந்தாஅங், கின்மை கண்டு (815—816—817), நன்மையிற் றக்கன **மருந்துகள் பிழியவும் பிழி** தொறு, நெக்கிழி குருதியைக் கண்டு நிலைதளர்ந் (819—820—821)தென, **னத்தனுக் கடுத்ததென் னத்தனுக் கடுத்ததென்** னென, றன்பொடு **கனற்றி** ' (817—818) என்று திருக்கண்ணப்பதேவர் திருமறத்தில் நக்கீரதேவர் அருளியதனை ஆசிரியர் விரித்தருளிய திறங் காண்க. 168

818 (வி - ரை) **பாவியேன் கண்டவண்ணம்** - நான் பாவியாதலின் என் கண்கள் இது கண்டன; அவை கண்டவாறு என்னோ அடுத்தது? என்க. "கொடியேன் கண்கள் கண்டன கோடிக் குழகீர்" என்ற ஆளுடையநம்பிகளது தேவாரக் கருத்தை இங்கு வைத்துக் காண்க. "நானேயோ தவஞ்செய்தேன்" ... "நானபாவிய ஞெனுலனை நல்காயென லாமே" என்ற திருவாசகமும் காண்க. உலக வழக்கிலும், தம்மால் அன்பு செய்யப்பட்டார்க்கு ஓர் தீங்குவரக் காணில் அதனைத் தம்மேல் ஏற்றிப் பாவியேன் - என்கண் செய்த பாவம் - என்கை செய்த பாவம் - என்றிவ்வாறு வைத்து வழங்குவதும் கருதுக. நான் தீயசகுனங் கண்டவண்ணம் என்றலுமாம்.

**அடுத்தது என்னோ?** - வந்து அடுத்தது என்? யாது காரணம்பற்றியது? ஓகாரம் இரக்கப்பொருளில் வந்தது.

**ஆவியி னினிய எங்கள் அத்தனார்** - "என்னிலும் (எனக்கு) இனியான் ஒருவன் உளன்" என்ற திருக்குறுந்தொகை காண்க. **அத்தனார்** - யாவர்க்குந் தந்தையார். இனியாதற்குக் காரணங் குறித்தபடி. **எங்கள்** - மேற்பாட்டில் **எம்பிரான்** என்றது போல வாளா பெயராய் நின்றது. தமது சிறப்புரிமை பற்றியது என்றலுமாம்.

**மேவினார்பிரியமாட்டாவிமலனார்** - **விமலன்**-மலமற்றவர். பிரியமாட்டாமைக்குக் காரணங் கூறியபடி. மலமாசில்லாதவராதலின், மேவிக் கண்டார் காதலிக்கவும் பிரியா திருக்கவும் உள்ளவர் என்பது. 806-ம் பாட்டிற் கூறியபடி தம் அறிவிச்சை செயல்கள் அவனுடையனவேயாகி விளங்கியவர் திண்ணனாராதலின் அவர் திருவாக்கில் வைத்து இறைவர் தமதுண்மையை விளக்குகின்றார். இயல்பாகவே பாசங்களினின்று நீங்கியவர்

தமமை மேவினாது பாசஙகளைப போககித தமமைப் பிரியாதிருககும நிலையருள பவா எனறு பதியிலககணங காட்டிய குறிபபும காணததககது. மாட்டா எனற சொறகுறிப்பும அது ஆவியினினியராதலின மேவினா பிரியமாட்டாதவா எனற உணமை, "என்னுயிருக கினனமுதா மெழிலாரூர்ப பெருமானே, வனனெஞசக களவனேன மறநதிரேன" (கழறிறறிவாா புராணம, 160) எனறவிட்டது நமபிகளது தேவாரததிலும காணக.

**ஆவது**-அடாததாய அடுதத இததீஙகுககு மாறறுவது தீாககும உபாயம. **ஒன்று**-ஒனறும. முறறுமமை தொககது. **ஒன்று** சிறிது என்னும பொருளில வநதது. " கணபதி யொனறறியான் "—நமபிகள தேவாரம

**என்செயகேன்** - இதனைத தீாகக எனன செயகுவேன ? "செயவதொனறு மறி யேனே " எனற திருவாசகக கருததினை இஙகு வைததுக காணக. **செய்கேன்** - செய யக கடவேன. **க** - எதிாகால இடைநிலை. **என்று**-என இவவாறு கதறி. **பின்னும்** - பினனரும வருமபாட்டிற கூறியவாறு எணணிபபோயினா என முடிததுக கொளக

819. **(வி - ரை) என் செய்தால் தீருமோ ?** - "ஆவதொனறறியேன" "எனசெய் வேன " எனறு மனமழிநத திணணனா இதனை எவவகையாலும தீாததல் வேணடு மனறே? எனன செயகை செயதால இது தீருமோ என மேலும எணணிச சூழவேன என றெணண மிடுவோராயினர். குருதி கணடதும முதலில மயங்கி வீழநதாா, பின தேறி இதுசெயதாரை ஒறுபபேன் எனறு வீராவேசததாற றேடினா , பகை ஒனறும காணாமையால மனக கொதிபபும தமொறறமும நீஙகச, சோகததோடு கதறினா, அதன பினனா இததீஙகினை எவவகையானுந தீாததல வேணடுமே, அதனை எணணிச செயவேன எனறு நிதானிததது ஆராயத தொடஙகினா இஃது இபபோது அவரது மனநிலை. இவவாறே மேல் வருவனவுங காணக

**என் செய்தால் தீரும்** - என செய்கே னெனறதைத தொடாநத மனநிகழசசி

**தீங்கு முன்செய்தார் தம்மைக் காணேன்** - தீஙகு செயதாரைத தணடிததல அத தீஙகினால விளைநத துனபததைப போககாவிடினும துனபபபடுவாாககு ஒருவாறறுல் மனஅமைதி உணடாககும வகையால ஒருவகைத தீாவாகமேறகொளவது உயிரியற்கை யாம இதுபறறியே முனனாத திணணனா " யாா இதுசெயதாா ?" எனறு கிளமபி வேட்டையும விலஙகினததையும தேடிச சென்றனா அககருததினைத தொடாநதே இஙகுக **காணேன்** எனறாா செயதாரைக கணடு ஒறுததிருநதேனாகில அது அமமட் டில ஒருவகைத தீாவாகி, மேலும இஙஙனம விளையா வணணம தடுபபதுடன, அவரால நோநத புணணின மூலததை அறிநது அதறகுத தககபடி மாறறுச செயது தீாகக லாகும எனபதும கருதியதாம

**மின்செய்வார் பகழிப்புண்** - விளககமுடைய கூரிய அமபுகளாலாகிய புண இப புண எதனாலுணடாகியது எனறு அறிநதிலரேனும, நோயமூலம நாடாது நோயைமட் டும நாடி மருநது செயயும நவீன மருததுவாபோலப, புணணின விளைவாகிய உதிரம பாயதலும பிறவும கணடு, பகழிபபுணணிலும இவை காணபபடுதலால் அதன தீாவாகிய மருநதே இதறகும ஆம எனறு அனுமான அளவையாற றுணிநது, **பகழிப் புண்தீர்க்கும் மெய்ம்மருந்து** தேடினா எனக

**மெய்ம்மருந்து** - பிழையாத - நிசசயமாகிய - மூலிகைகள **மெய்** - உடல எனக் கொணடு உடறபுற மருநது எனறலுமாம உயிரைச சாாநத பவநோய தீாக்குமருநது வேறுணமையுமறிக

**பொன் செய்வரைத் தாழ்வில்** - என மாறறுக **தாழ்வரை** - இலமுன - முன றில என வருவதுபோல வரைததாழ(வு) எனறபாலது **தாழ்வரை** எனவநதது **தாழ்வு** - பளளம - தாழநத இடததை யுணாததுதலின ஆகுபெயா "பளளநதா முறுபுனலிற கீழமேலாக " (திருவாசகம), "அனன தனறிருத தாழவரை" (28) எனறவை காண்க.

**பொன்சேய்** - பொனவிளையும் நிலத்தின விளைவனவும், பொதுவாய் மலையின் விளைவனவும் ஆகிய மருநது மூலிகைகள மிகக வீரியமுளளன எனபா. பொனமுகலி பெருகுதற்கிடமாதலின **பொன்சேய்** வரை எனறா முகலி இமமலையினினறு பொனகொழிதது வருதல் மேல் 747-ல் உரைககப்பட்டது **பொன்** - அழகு எனக் கொண் டுரைபபாருமுணடு.

**கொண்டு வருவன் நான் என்று போனார்** - தேடி எடுததுககொணடு நான வரு வேன எனறு சொலலிபபோயினா **சொல்லுதல்** - தேவாககு அறிவிதது அவரைத தேறறுதல கருதியது.

**வருவன் என்று போனார்** - செயகை போதலேயாயினும, திண்ணனா முனகருதி யது வருதலேயாம வரும ஆவலே அவா கருததின மிககிருநதது எனபது குறிப்பு. உலக வழககிலும போகினறவாகள போகினறேனென அமங்கலமாகக கூறாமல வரு கினறேன எனறு சொலலிபபோகும மரபும. இதுபோனற கருததுடையதாம.

**மருந்து நாடி** — எனபதும பாடம். 170

820. நினைததனர் வேறு வேறு நெருங்கிய வனங்க ளெங்கு
மினத்திடைப பிரிந்த சேங்க ணேறென வெருக்கொண் டெய்திப
புனத்திடைப பறிததுக் கொண்டு பூதநா யகன்பால் வைத்த
மனத்தினுங கடிது வந்தம் மருந்துகள் பிழிந்து வார்த்தார். ௧௭௧

(இ - ள்) வெளிப்படை (திண்ணனா மருநது மூலிகைகளையும அவையிருககு மிடங்களையும) எண்ணினவராய வேறுவேறு நெருங்கிய காடுகளில எங்கும, தன்னினத தினினறும பிரிந்த செங்கணணுடைய இடபத்தினைபபோல, வெருட்சியுடனபோயப புனங்களில மருநது மூலிகைகளைப பறிததுககொணடு, பூதநாதனாகிய காளத்தியப பரிடம தாமவைதத மனத்தினவேகத்தினும மிககவிரைவாகத திருமபிவநது அந்த மருந துகளைப பிழிநது அவருடைய கணணில வாாததனா.

(வி - ரை) **நினைத்தனர்** - நினைததனராகி. முறறெச்சம நினைததனர் பறிதது எனககூட்டுக.

**வேறுவேறு வனங்கள்** - வெவவேறாகிய - வெவவேறு வகைப்பட்ட காடுகள். **நெருங்கிய** - மரஞ் செடி கொடிகளடர்ந்த; **எங்கும்** - எங்கெங்கும் - முழுதும்.

**இனத்திடைப் பிரிந்த சேங்கண்ஏறு என** - **சேங்கண் ஏறு** - இங்கு இடபவுறுதி னைக குறிததது **வெருக் கொள்ளுதல்** - எதிர்பாராது சடுதியில நோநத பயத்தால வெருணடு மருட்சியடைதல. **வெருவுதல்** - பயப்படுதல உலகவழக்கில இதனை விருக கெனறு பயநது என மருவிவழங்குவா. தன இனததினினறு பிரிநதஇடபம இவவாறு வெருணடு கண சிவநதும காது கூப்பியும இனம இருநததிசை நோககித தேடியும அலறியும ஓடுதல கணகூடாதலின அதனை உவமிததாா **ஏறு** - வீரததினைவிடாத தனமையும குறிப்பதாம. இது மெயயும தொழிலுமபற்றிய உவமை

**இனத்தினைப் பிரிந்த** என்ற உவமைமுகததாற காளததியப்பரைத திண்ணனா ருககு இனம எனபதும, ஏறு - பசுவானமா எனபதும குறிப்பாம **இனம்** - அவ வாககம கூடி அமைதி பெறுதற்குரியதாய, அதறகுச சுகநதருவதாய, அதன தலைமை யதாயச, சிததாயுளள பசுபதியைக குறிககும பசுவபபட்ட ஆனமாககள தாம சோந திருநத பதியினைப பிரிநதால இவவாறு வெருககொணடு அலைவா என்ற உண்மை நூறகருததும இங்குப புலப்படுதல காணக. **சேங்கண்** எனபதும உயிரின செம்மை யாகிய பக்குவககுறிப்பு இதன விரிவு சிவஞானபோதம 8-ம சூததிரததுளளும, பிறாணடுமகணடுகொளக மாணிககவாசக சுவாமிகள "ஐயனே நினைபபிரிநது மாற்ற கிலலேன" (வாத - உப - பட. 55) எனறு அலறிய சரிதம காணக. ஆளுடைய

பிள்ளையார் புராணத்திலும் "தொடர்ந்தபிரி வுணர்வோர்க்காம், கொண்டெழலும் வேட்கைகொண்டார் போலெழுவர் குறிப்பயலாய" (55) என இவ்வாறே கூறுதல் காண்க. "எத்தனைநாள் பிரிந்திருக்கே னென்னாரூர் இறைவனையே", "எவ்வண நான் பிரிந்திருக்கேன்", "எங்குலக்கப் பிரிந்திருக்கேன்", "என்ன நான் பிரிந்திருக் கேன்", "எப்படிப் பிரிந்திருக்கேன்", "என்னைப் பிரிந்திருக்கேன்", "எற்றுளனுயப் பிரிந்திருக்கேன்" என்று ஆளுடைய நம்பிகள் (திருவாரூர் - பழமபஞ்சுரம்) பாசுரந் தோறும் பலப்பலவாறு பரிந்து இரங்கியதும் காண்க.

**நினைந்தனர் - பறித்து** - இவையிரண்டாகும் செயப்படுபொருள் வருவிக்க.

**பூதநாயகன்** - சிவபூதங்கள் முதலிய கணங்களுக்கெல்லாம் தலைவன். கோடிகோடி குறட்சிறு பூதங்கள் (16) சுற்றி ஆடவும், பாடவும், ஏவல் செய்யவும் அவைகட்கெல்லாம் தலைவராய்ச் சிவபெருமான் வீற்றிருப்பர் என்பது வேதசிவாகமங்களான் அறியப்படும் உண்மை. "பொன்றி மணிவிளக்குப் பூதம் பற்ற", "பாரிடங்கள் பணிசெய்ய" (தேவாரம்) "ஒவா வணுக்கச் சேவகத்தி னுள்ளோர் பூத கணநாதர்" (ஏயர்கோன் - புரா - 332) முதலிய எண்ணிறந்த திருவாக்குக்களும், "பூதபதயோகம்" என்ற சிவாஷ்டோத்தரமும் காண்க. **பூதம்** - உயிர்கள் என்று கொண்டு உயிர்க்குயிராய் நின்று இயக்கும் தலைவன் என்றலுமாம். "பூதம் யாவையி னுள்ளலர் போதென", "பூதபரம்பரை" என்பன காண்க.

**பூதநாயகன்பால் வைத்த மனத்தினும் கடிது** - மனவேகம் மிக்க கடிதிற் செல்வது. "வாயுவேகம் மனோவேகம்" என்ற வழக்கும் காண்க. திண்ணனார் மனம் வேறெங்கும் செல்லாது பூதநாயகனிடமே செல்லுதலால் அவர் பால்வைத்த என்றார். மருந்து தேடிப் பறித்தபின் மிக வேகமாய் நாயகனிடம் சென்ற குறிப்புப் பெற மனத்தினும் கடிது என்றார். முன்னே "நாணனு மன்பு முன்பு நளிர்வரை யேற" (751) என்றபடி அன்பு முன்போய்த் திண்ணனாரை இழுத்துச் செல்ல அவர் அதனைப் பின்பற்றிப் போயினர். இங்கு அந்த மனத்தினும் மருந்து பிழிந்துவார்த்துப் புண்தீர்க்கும் ஆர்வம் மிக்கதால் அவர் சென்ற செலவின் வேகம் மிக்கது. மனம் வருதற்குமுன் இவர் வந்தனர் என்பது எண்ணம் முற்றுவதற்கு முன் அதனாற் றூண்டப்பட்ட செயல் முற்றியதெனச் செயலின் விரைவு குறித்தபடியாம்.

**மனத்தினும்** - இன் - உறழ்பொருவில் வந்த ஐந்தனுருபு. உம்மை உயர்வுசிறப்பு.

**அம்மருந்துகள் பிழிந்து வார்த்தார்** - தேடி - நினைந்து - பறித்து - கொண்டு - கடிது அவ்வந்த - அந்த என அகரம் முன்னறி சுட்டு. **பிழிதல் - வார்த்தல்** - மருந்துமூலிகைகளாகிய பசிலைகளை ஏற்றவாறு பிழிதலும் குருதிபொங்கும் புண் உள்ள இடம் தெரிந்து வார்த்தலும் மருத்துவம் செய்யும் முறைகள் குறித்தன. "நோய்நாடி நோய் முதனாடி யதுதணிக்கும், வாய்நாடி வாய்ப்பச் செயல்" என்ற திருக்குறளும் அதன்கீழ் ஆசிரியர் பரிமேலழகருரைத்தனவும் இங்கு நினைவு கூர்க. இம்மருத்துவமுறை திண்ணனார்க்கு முன் அனுபவ வாசனையால் நேர்ந்த அறிவு. இம்மருந்து இலைகளைச் சல்லியகரணி என்பர் வடநூலார். (சல்லியம்-அம்பு, ஈட்டி) இத்தகைய சல்லியகரணி முதலிய பல மூலிகைகள் மலைகளில் உள்ளன என்று இராமாயணம் கூறும்.

**பிசைந்து வார்த்தார்** — என்பதும் பாடம். 171

821\. மற்றவர் பிழிந்து வார்த்த மருந்தினாற் றிருக்கா ளத்திக்
கொற்றவர் கண்ணிற் புண்ணீர் குறைபடாத் தொழுகக் கண்டே
"யிற்றையி னிலைமைக் கென்னே வினிச்செய" லென்று பார்ப்பார்
"குற்றநோய் தீர்ப்ப தூனுக் கூ"னென்னு முரைமுன் கண்டார். ௧௭௨

(இ - ள்) வெளிப்படை. இவ்வாறு மற்றுப் பிழிந்து வார்த்த மருந்தினால் திருக்காளத்தி யப்பருடைய கண்ணின் புண்ணினின்று வரும் குருதிநீர் குறைவுபடாமல் முன்

போலவே வழிய, அவர்கண்டு "இக்காளின் நிலைமைக்குத் தீர்வாக இனிச் செய்வது என்னையோ?" என்று ஆராய்ந்து எண்ணுவார் "ஊனே ஊனுக்கு உற்ற நோய் தீர்ப்பது" என்னும் பழமொழி தம் நினைவின் முன்வர உணர்ந்தார்.

(வி - ரை) மற்று - அசை. மற்றுப் பிழிந்து எனவும், அவர் கண்டே எனவும் கூட்டுக. மாற்று என்பது மற்று என விகாரப்பட்டது என்றலுமாம். மாற்று - தீர்வு. கொற்றவர் - தலைவர் முன்னர் முதல்வனார், நாயனார் என்றதற்கேற்ப இங்குக் கொற்றவர் என்றார் கொற்றமாவது தாம் பெரியாராயினும் அன்பாகக் கதிர்வந்து ஆட்படுத்தும் தன்மை.

புண்நீர் - புண்ணினின்றும் போந்தநீர், குருதி. உடலின் மேலிடம் எங்கும் போர்த்த மேற்றோலைப் பிளந்து உள்ளிருக்கும் தசை குருதி முதலியவை வெளியிற் காணப்படுவதே புண் எனப்படும் புண் - (Injury) என்பதற்கு (Breach of the continuity of the cutaneous membrane) மேற்றோலின் தொடர்ச்சி அறுபடுதல் என்று நவீன அயல்நாட்டு மருத்துவர் கொள்ளும் வரையறையும் காண்க. உடலின் உள்ளே ஓடிப் புணர்ந்திய நிறப்பினின்றும் வெளிவரும் செந்நீர் குருதி - இரத்தம்-எனப்படும்.

இற்றையின் நிலைமை - தமது தலைவர்க்கு இன்று இந்த நோய்கண்டதும், அது, தாம் இதுவரை முயன்றும் எவ்வாற்றானும் தீராமையும் ஆகிய நிலைமை

என்னே இனிச் செயல் என்று பார்ப்பார் - இதுவரை செய்த உபாயங்கள் பயனற்றவையா யொழியவும், மனஞ்சலித்துவிடாது மேலும் ஆய்ந்தனர். இதுவும் உலகியற்கை "இறுவரை காறு முயல்ப" என்பது நீதிநூல் பார்ப்பார் - வினைப்பெயர் ஆராய்வாராகிய திண்ணனார் பார்ப்பார் - கண்டனர் எனக் கூட்டிமுடிக்க பார்த்தல் இங்கு மனத்தினுள் ஆய்ந்து பார்த்தலின்மேனின்றது

உற்றநோய் ..உரை - உரை - பழமொழி, "ஊனுக்குஊன்" என்பது பழமொழி உற்றநோய் தீர்ப்பது என்பது அதற்கு உரை "மாமஸம் மாமஸேந வர்த்ததே" என்னும் மேற்கோளுங் காண்க ஊனுக்கு உற்றநோய் தீர்ப்பது ஊன் எனமாற்றி உரைத்துக் கொள்க. இது அந்நாளில் வேடர்களுக்குள் வழங்கிய பழமொழிகளில் ஒன்று என்று தெரிகின்றது. இவர்களது குலத்தொழிலாகிய வேட்டைப் போரில் பலகாலும் உடற்பகுதிகள் சிதையக் காண்பாராதலின் அதற்கு இவ்வாறு ஆகியதொரு தீர்வும் கண்டு அதனைப் பழமொழியாகவும் வழங்கினர் என்பதாம். மனிதரது உடற்பகுதிகள் சிதைந்து ஊறுபட்டபோது பிற மனிதருடல்களிலேனும், பிற விலங்கு முதலியவற்றி னுடல்களிலேனும் அவற்றிற்கு ஒத்த பகுதிகளைப் பெற்று இரத்தசூடு மாறு முன்னம் சிதைந்த பகுதிகளில் ஒட்டிப் புணர்ந்த்துவதென்ற வொருவகை மருத்துவ முறையினை இந்நாள் நவீன மருத்துவரும் கையாளுகின்றனர் மக்களின் உடலில் எலும்பின் பகுதி ஊறுபட்டால் அதனை நீக்கி வேறு உடலின் எலும்பின் ஒத்தபகுதியைச் சோதித்துப் பொருத்துவதும், வேறு பலபகுதிகளைப் பொருத்துவதும், மனிதரது கண் புண்ணுகவே அதனைக்குடைந்து எடுக்கவேண்டிவந்தபோது நாய், பூனைமுதலிய பிராணிகளின் கண்களைத்தோண்டி உடனே அப்பி வைத்திடுவதும் ஆகிய இவைபோன்ற மருத்துவ முறைகள் இந்நாளில் மேம்பட்டனவாகச் சொல்லப்பட்ட மருத்துவச் சாலைகளில் செய்யப்படுகின்றன இவை பண்டைநாளில் வனவேடர் கையாண்டதொரு பழைய வழக்கத்தின் வழிவந்த எச்சம் என்று சொல்லக்கூடியதாகின்றது மருத்துவம், உழவு முதலிய கலைஞானங்களின் அனுபவ உண்மைகளைப் பழமொழிகளாக வழங்குவது நம் நாட்டிலும் ஏனை நாடுகளினும் உள்ள வழக்கமாம். ஒத்ததற்கு ஒத்தமுறை (Like for like) என்ற ஒப்புத்தீர்வு முறை (Homeopathy)ப் பழமொழியும் இதுபோன்ற பிறவும், இவைபோன்ற ஏனைக் கலைஞானப் பழமொழிகளும் காண்க

கலைஞானங்களின் அனுபவ உண்மைகள் மறதி முதலிய காரணங்களால் மாறுபடாது நிலைத்து நிலவவும், எளிதில் யாவரும் பயிலவும், நினைவுகூரவும் அவற்றைப்

பழமொழிகளாக வழங்கும் வழக்கம் உதவிபுரிகின்றது. அவ்வழக்கம் இங்கு அரிய பெரிய செயலுக்கும், செயலின் விளக்கத்துக்கும் பயன்பட்ட வரலாறு இச்சரித்தி ரத்திற் காணலாம்.

**முன் கண்டார்** - மனக்கண்ணின் முன்னே வரக்கண்டனர் - நினைவுக்கு வர அறிந் தனர். முன்னுரை என்றக்கூட்டிப் பழமொழி என்று கொள்ளலுமாம.

**இழியக் கண்டும்**—என்பதும் பாடம். 172

822. "இதற்கினி யென்க ணம்பா லிடந்தப்பி னெந்தை யார்கண்
அதற்கிது மருந்தாய்ப் புண்ணீ ரிறக்கவு மடுக்கு" மென்று
மதர்த்தெழு முள்ளத் தோடு மகிழ்ந்துமுன் னிருந்து தங்கண்
முதற்சர மடுத்து வாங்கி முதல்வர்தங் கண்ணி லப்ப, ௧௭௩

823. நின்றசெங் குருதி கண்டார்; நிலத்தினின் றேறப் பாய்ந்தார்;
குன்றென வளர்ந்த தோள்கள் கொட்டினார், கூத்து மாடி
"நன்றுநான் செய்த விந்த மதி"யென நகையுந் தோன்ற
வொன்றிய களிப்பி னாலே யுன்மத்தர் போல மிக்கார். ௧௭௪

822. (இ - ள்) வெளிப்படை. "இனி இம்மருந்து செய்தற்காக, என்னுடைய கண்ணை அம்பினாலே தோண்டி அப்பினால் எமது பெருமானாரது கண்ணிலே நோக்கத் தோயினுக்கு இதுவே மருந்தாகி, அதனால் புண்ணினின்று போதுகின்ற குருதிநீர் வாராமல் நிற்கவும் கூடும்" என்று எண்ணிக், களித்து எழுகின்ற உள்ளத்தோடும் மகிழ்ந்து திருமுன்பு இருந்துகொண்டு, தமது கண்முதலைச் சரத்தினாலே ஊன்றித் தோண்டி எடுத்துக் கையில் வாங்கி முதல்வனாரது கண்ணில் அப்ப, ௧௭௩

823. (இ - ள்) வெளிப்படை. குருதி நின்றதைக் கண்டார், அந்தப் பெருமகிழ்ச் சியினாலே நிலத்தினின்று உயரப்பாய்ந்து குதித்தார், மலைபோல வளர்ந்த தமது தோள்களைக் கொட்டினார், கூத்தும் ஆடி "நான் செய்த இந்த மதி - யோசனை - மிக நன்று" என்று சிரிப்புத் தோன்றப் பொருந்திய களிப்பினாலே உன்மத்தர் போன்ற நிலையில் மிக்கவராயினார். ௧௭௪

இவ்விரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

822. (வி - ரை) இதற்கு - "ஊனுக்கூன்" என முன்கண்ட உரையாற் றெரிந்த மருந்து பெறுதற்கு முதல்வனாரது புண்ணுகிய ஊனில் அப்புதற்கு அது போன்ற கண்ணுகிய ஊன்பெற வேண்டிய அதனுக்கு. இதற்கு - இந்நோய்க்கு என் றலுமாம்.

**என்கண் இடந்து அப்பின்** - கண்ணுகிய ஊன் வேண்டும் அதற்கு மான் முதலியவற்றைக் கொன்று அவற்றின் கண்ணைத் தோண்டி அப்பலாகுமே யெனின் அது தாமதப்படுதலோடு இறந்த பிராணியின் அங்கமாதலின் சூடுதணிந்து ஒவ்வா மலும்போம். கொடுக்கத்தக்க கண்ணையுடைய தாம் பக்கத்திலிருப்ப வேறெங்கும் இதனைத் தேடவேண்டுவதில்லை எனத் துணிந்தனர். யாக்கைதன் பரிசு அற்ற (803) நிலையிலிருந்தனராதலின் அவ்வியாக்கையினின்ற கண்ணை நினைத்தனரன்றி அதனை யிடக்கும் போதும் இடந்தபின்னும் உளதாகும் துன்பமுதலாயினவற்றை நினைந்தா ரில்லை.

**என்கண்** - ஞானேந்திரியங்கள் ஐந்தும் இருக்குமிடமாதலின் தலையே எண் சாணுடம்பில் முதன்மை பெற்றதாம். அவ்வைந்தனுள்ளும், சேய்மையிலுஞ் சென் றியைந்தறிதலாற் கண் சிறந்தது என்ற குறிப்பால் என்கண் என்று விதந்து கூறினார்.

இறைவனது கண்ணினின்றும் போந்த குருதியின்றது அருளாற் போந்தவா திண்ணனாராதலின் கண்கொடுத்தல் முறையேயாம் என்ற குறிப்பும் பெற என்கண் - என்றார் எனலுமாம்.

புண்ணீர் - புண்ணிலிருந்து வடியும் குருதியாகிய செந்நீர்.

நிற்கவும் அடீக்கும் - வடியாமல் நிற்கவும் கூடும் உம்மை ஐயம்பற்றி வந்தது. "அப்பியும் காண்பன" என்ற திருமறமும் காண்க.

மதர்த்து எழும் - களிப்புற்றதனால் எழுகின்ற. மதர்த்தல் - மகிழ்தல் - களிப்புறுதல். எழுதல் - பூரித்தல் காரியம் கைகூடுமுன்பே இவ்வாறு மருந்தாகவுதவும் பேறு பெற்றதற்கு மகிழ்ந்தனர்.

முன் இருந்து - திருமுன் வீற்றிருந்து-மருந்துகள் பிழிந்து வார்க்கும்போது நின்ற திண்ணனார் இப்போது கண்ணைத்தோண்டி வாங்கும்போது அசைவின்றியிருப்பதற்காக இருந்தனர் எனக. உடற்பகுதிகளை மருத்துவர் அறுக்கும்போது அசைவற்றிருத்தல் வேண்டுமென்பது முறை. மடுத்து - வைத்து - ஊன்றி. வாங்கி - கண்ணைத் தோண்டிப் பிரித்து. வேறாக எடுத்து.

தங்கண் முதல் - எனக் கண்முதல் - கண்ணின் வேர். முதல் - வேர் அடிப்பாகம். "தின்முதல் வழிபட்ட தன்மகற் றடிந்த தொண்டர்" (கோயினான் - 40), "வெஞ்சின மாசுணந் தன்முதல் முருக்க, நென் முதற்சூழ்ந்த நீசசிறு பாம்பு" (ஷை 8) என்பனகாண்க. முதற்சாம் என்றுகூட்டி முதன்மையான அம்பு என்றுரைத்தலுமாம் முதன்மையாவது திண்ணப்பனாரைக் கண்ணப்பனாராக ஆக்குதற்குரியபடி வலது கண்ணைத் தோண்டியும், இடது கண்ணைத் தோண்ட ஊன்றியும் உதவிய சிறப்பு. பின்னரும் ஒருதனிப்பகழி (826) என்றதுகாண்க. இச்சிறப்புப்பற்றிக் "கணைகோள் கண்ணப்பர்" (தக்கேசி - திருவின்றியூர் - 2) என்று நம்பிகள் அருளிய குறிப்புங்காண்க இடக்கண்ணுக்கு இரண்டாமுறை அம்பு எடுத்தலின் இதனை முதற்சாம் என்றார் என்றுரைப்பாருமுண்டு.

சாம் மடுத்தல் - அம்பினை ஊன்றுதல். "கணையது மடுத்து", "மற்றைக் கண்ணிலும் வடிக்கணை மடுத்தனன்" என்பன திருமறத் திருவாக்கு. வாங்கி - தோண்டியெடுத்த கண்ணினைக் கையில்வாங்கி. "கையில் வாங்கி" என்பது திருமறம்.

சாம் எடுத்து—என்பதும் பாடம்.

173

823 (வி - ரை) நின்ற செங்குருதி கண்டார் - குருதி வெளிவராத நிலைமையைக் கண்டாராதலின் செங்குருதி நின்றதுகண்டார் என்மாற்றிப் பொருள்கொள்க "வென்ற வைம் புலனால் மிக்கீர்" (401) என்றதுபோலக் காண்க "நீங்கிய நாணொடு" என்றாற் போல இவ்வாறு வருதல் பொருத்தமில் புணர்ச்சி எனப்படும் சுப்பராய செட்டியாருரை.

நிலத்தினின்று ஏறப்பாய்ந்தார் - இங்குக்கூறிய ஏறப்பாய்தல், தோள்கொட்டுதல், கூத்தாடுதல், நகை தோன்றுதல், உன்மத்தர் போலாதல் எனுமிவை பெருமகிழ்ச்சியால் வெளிப்படக்காணும் உடற்செயல்கள். முன் குருதி கண்டபோது மனமும் மெய்யும் மொழியும் முட்டங்கி மயங்கிச் சோர்ந்து நிலத்திடைப் பதைத்து வீழ்ந்தார் (814) குருதி நிற்கக்கண்ட இப்போது அவை தழைக்கத் தாமும் நின்று ஏறப்பாய்ந்தார் ஏறப்பாய்தல் - நின்ற இடத்தினின்றும் உயரக்கிளம்பிக் குதித்தல்.

குன்றென வளர்ந்த தோள்கள் கொட்டினர் - வளர்ந்த - குருதி கண்டபோது கையிற் சிலையுடன் ஊனும் சிதறிவீழ்த்தித் (814) தோள்கள் மெலிந்தன, குருதி நிற்கக் காணலும் அம்மகிழ்ச்சி மிகவே அவை குன்றுபோல வளர்ச்சிபெற்றன எனக் குன்றென - முன்னாகக் குன்றுபோல வளர்ச்சிபெற்றும் இப்போது மெலிந்த தோள்கள் தமது முன்னைநிலையாகிய குன்றுபோல "செவ்வரை போற்புய மிரண்டும்" (701) என்றதுகாண்க நாயகனைப் பிரிந்த சோகத்தால் நாயகிக்கு உடல் மெலிந்து கைவளை கழ

னுதலும் அவ்வேக கூடியவழி உடல் பூரித்தலுக் கைவளை உடைதலும் முதலியனவாக அப்பொருணூல்களிற் பேசப்படும் நிலைகளினியல்பை இங்குக் குறிக்க.

**கூத்தும் ஆடி** - தம்மை மறந்து கூத்தாடுதல் மிக்க மகிழ்ச்சியின் விளைவு "குமிறுதலும், தட்டமிடுதலும், கூத்தாடுதலும் உவகை மிகுதியில் நிகழும் மெய்ப்பாடு" (சித்தியார் 12-2) என்ற பொழிப்புரையும் காண்க "ஆசையொடு மரனடியா ரடியாரை யடைந்திட் டவர்கரும முன்கரும மாகச் செய்து" என்ற ஞானசாத்திரத் (12 - 2) திருவாக்கிற் கண்டவாறு இங்குத் திண்ணனார் அரனையே யணைந்தனர், அரனை ஆசையொடும் அடைந்தார், அவர் கருமந் தன் கருமமாகச் செய்தார், அவர் பிரானை யாகிய அருண்ஞானக் குறியினின்று தம்மை மறந்து அவரையே கும்பிட்டு அருச்சித்தார்; இங்கு அவரது நோய்தீரக் கண்டபோது உவகையினுற்ற கூத்தும் ஆடினார், சீவன் முத்த நிலையாகிய பரம உபசாந்தத்தை அடைந்தனர்-என்பது க. சதாசிவ செட்டியார் உரைக் குறிப்பு.

**நான் செய்த இந்தமதி நன்று** - என மாற்றுக. மதி - எண்ணம் - ஆலோசனை மதித்தற்குக் கருவியின்றொழிற்பாடு. செய்தமதி - மதி - உள்ள நிகழ்ச்சி, செய்தல் - உட்கருவியின்றொழில் மதி மதியாற்றூண்டப்பட்ட செயலுக்கு ஆகு பெயரென்றலுமாம்.

**ஒன்றியகளிப்பினாலே உன்மத்தர் போல** - ஒன்றிய - பொருந்திய - முன்னிருந்த சோகமும் கவலையும் நீங்க இப்போது வந்து சேர்ந்த. களிப்பினாலே உன்மத்தர் போலாகுதல் மதமிகுந்தபோது உள்தாம் உட்கரணப் புறக்கரணநிலை. உன்மத்தர் - மதம்மிக்கவர். உத் - மேல். உற்பாதம், உற்பவம், உற்பீசம் என்பவை காண்க. மத்தம் - மதத்தாலாகும் நிலை.

**மீக்கூர்** - இந்நிலையின் மெய்ப்பாடுகளின் மிகுதியுடையராயினர்.

**துன்றெனவனைதும்**—என்பதும் பாடம். 174

824. வலத்திருக் கண்ணிற் றங்க ணப்பிய வள்ள லார்தந்
நலத்தினைப் பின்னுங் காட்ட நாயனார் மற்றைக் கண்ணில்
உலப்பில்செங் குருதி பாயக் கண்டன ருலகில் வேடர்
குலப்பெருந் தவத்தால் வந்த கொள்கையி னும்பர் மேலார், கஎரு

825. கண்டபின் "கெட்டே ! னெங்கள் காளத்தி யார்கண் ணொன்று
புண்டரு குருதி நிற்க, மற்றைக்கண் குருதி பொங்கி
மண்டுமற் றிதனுக் கஞ்சேன் மருந்துகை கண்டேன், இன்னும்
உண்டொரு கண் ; அக் கண்ணை யிடந்தப்பி யொழிப்பே" னென்று

826. கண்ணுதல் கண்ணிற் றங்க ணிடந்தப்பிற் காணு நேர்பா
டெண்ணுவார் தம்பி ரான்றன் றிருக்கண்ணில் இடக்கா லூன்றி
உண்ணிறை விருப்பி னோடு மொருதனிப் பகழி கொண்டு
திண்ணனார் கண்ணி லூன்றத் தரித்திலர் தேவ தேவர், கஎஎ

827. செங்கண்வெள் விடையின் பாகர், திண்ணனார் தம்மை யாண்ட
அங்கணர், திருக்கா ளத்தி யற்புதர் திருக்கை யம்பாற்
றங்கண்முன் னிடக்குங் கையைத் தடுக்கமுன் றடுக்கு நாகக்
கங்கண ரமுத வாக்குக் "கண்ணப்ப நிற்க" வென்ற. கஎஅ

824. (இ - ள்) நாயனார் - தலைவராகிய காளத்தியப்பர் ; வலத்திருக் கண்ணில்.. காட்ட - தமது வலது திருக்கண்ணிலே தம் வலக்கண்ணைத் தோண்டி அப்பிய வள்ளலா ராகிய கண்ணப்ப நாயனாரது நன்றாந் தன்மையை மேலும் காட்டுதற்பொருட்டு , மற றைக் கண்ணில். ..கண்டனர் - தமது மற்றைக்கண்ணாகிய இடது கண்ணில் இடை யறாது செங்குருதி பாயுந்திறியும்படி செய்தனர் , உலகில் மேலோர் - இவ்வுலகிலே வேடர்குலம் செய்த பெருந்தவங் காரணமாக அதனில் வந்தவதரித்த, கொள்கையினாலே தேவரினும் மேலவராயின திண்ணனார் (அதனைக்கண்டு), கஎ௫

825 (இ - ள்) கண்டபின் - கண்டவுடன் , "கெட்டேன்... .திறக-ஓ ! கெட் டேன் ! எமது காளத்தியப்பருடைய கண்களில் ஒன்றில் வந்த புண்ணினின்று பாய்ந்த குருதிவராமல் நின்றுவிட , மற்றைக்கண் .மண்டும்-மற்றைக்கண்ணில் குருதி பொங்கி மிகுகின்றது , மருந்து கைகண்டேன் - இந்நோய்தீர்க்கும் மருந்தினை அனுபவத்திற் கண்டு கொண்டேன் , மற்றிதனுக்கு அஞ்சேன் - வரத்தகாத இது வந்ததனுக்கு அஞ்சமாட்டேன் , இன்னும்... கண் - எனக்கு இன்னும் ஒரு கண் எஞ்சியுள ளது , அக்கண்ணை என்று - அந்தக் கண்ணைத் தோண்டித் தேவர் கண்ணில் அப்பி இந்நோயினைத் தீர்ப்பேன் " எனத் துணிந்து ; கஎசு

826. (இ - ள்) தங்கண் இடந்து - தமது கண்ணைத் தோண்டி ; கண்ணுதல் கண் ணில் அப்பின் - நுதற் கண்ணினையுடைய தேவரது கண்ணிலே அப்பினால் , காணும் நோக்கு எண்ணுவார் - காணும் நோக்கட்டினை எண்ணுவாராய் , தம்பிரான் . . ஊன்ற - திண்ணனார் தமது பெருமானுடைய அத்திருக்கண்ணிலே தமது இடக் காலினை எடுத்து ஊன்றிக்கொண்டு மனதில் நிறைந்தெழுந்த விருப்பத்தோடும் ஒப் பற்ற ஒரு அம்பினை எடுத்து அதனைத் தமது கண்ணில் ஊன்றவே , தேவதேவர் தரித் திலர் - தேவ தேவராகிய காளத்திநாதர் தரித்திலராதலின், கஎஎ

827. (இ - ள்) செங்கண் பாகர் - சிவந்த கண்ணையுடைய வெள்ளை விடையினை ஊர்தியாகவுடையவரும் ; திண்ணனார்.... அங்கணர் - திண்ணனாரை ஆட்கொண்ட அங்கணமையுடையவரும் ஆகிய, திருக்காளத்தி.. .திருக்கை-அத்திருக்காளத்தி யற் புதரது திருக்கை (தோன்றி), அம்பால் . கையை - அம்புகொண்டு கண்ணைத் தோண்ட முயற்சித்த அவரது கையினை; தடுக்க - தடுக்காநிற்க, நாக்கங்கணர் அமுதவாக்கு - பாம் பைக் கங்கணமாகத்தரித்த இறைவரது அமுதமாகிய திருவாக்கு, மூன்றடுக்கு - மூன்று முறை, " கண்ணப்ப நிற்க " என்ற - " கண்ணப்பனே நில் !" என்றன கஎஅ

இந்நான்கு திருப்பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன

824 (வி - ரை) கண் அப்பிய வள்ளலார் - கண்ணை இடந்து அப்பியதனால் வள்ளலாந்தன்மை வெளிப்படக் காண நின்றவர் அப்பிய - காரணப்பொருளில் வந்த பெயரெச்சம். வள்ளலார் - முன்னர் ஒரு கண் அப்பியதோடு பின்னும் மற்றைக் கண்ணையும் இடந்து அப்ப ஒருப்படுபவர் என்ற குறிப்புப்பெற இங்கு வள்ளலார் என்றார் முன்னர் "வள்ளலார் மலையை நோக்கி" (751) எனக் காளத்திநாதரை வள்ள லார் என்றார் " உள்ளதே தோற்ற " என்ற சிவஞானபோத உதாரண வெண்பா வில் (2 சூ - 2 அ) வள்ளலவன் என்றவிடத்து "வள்ளல் என்றார் தற்பயன் குறியாது வேண்டுவார் வேண்டியவாறே நல்கும் அருளுடைமை நோக்கி " என்று சிற்றுரையிற் கூறியது காண்க. இங்கு அவ்வள்ளலாருக்கும் வேண்டுவதை வேண்டியவாறே கொடுக் கும் வள்ளன்மைபூண்டதனாற் கண்ணப்பநாயனாரையும் அவ்வாறே வள்ளலார் என்ற சுவைகாணக ஏனை வள்ளல்கள் எனப்படுவோர் புகழ் முதலியவற்றை விரும்பித் தமது புறப்பற்றுயுள்ளவற்றைத் தருவர் " யாதனின் யாதனி னீங்கியான் நோதல், அதனி னதனி னிலன் " என்றபடி கொடைப்பொருள்களா லுளதாகும் உபாதி நீங்குதலாகிய

மற்ற இதனுககு என்றது மற்றிதனுக்கு என வகதது மற்ற - வாததகாத - வேறு பாடாகிய இதனுக்கு மற்று அஞ்சேன் என்று கூட்டியுரைததலுமாம.

மற்றது கை கண்டேன்-"அஞசவ தஞசாமை பேதைமை"யாதலின அஞசேன என்றதறகுக காரணங கூறியவாறு கைககண்டேனாதலின அஞசேன எனக கைகூடும எனபுழிப்போலக கை உறுதிப பொருள்தரும (உபசாககம) இடைச்சொல முன்னர் கிறகவும அடுக்கும (822) என்ற ஐயப்பாட்டினிற கணணைத தோணடினா. இப்போது அநத ஐயம நீஙகியதனால உறுதிபெறறெழுநத துணிவு குறிததது.

ஒழிப்பேன் - குருதி பெருகும நோயினைத தீர்ப்பேன செயபபடுபொருள வருவிகக

என்று - என மனததிற றுணிநது.

கெட்டேன! ஒன்று கிறக - மறறைககண குருதிமணடும் - அஞசேன் - கை கண டேன-உணடு - அப்பி ஒழிப்பேன என இவவாறு விரைவில ஒன்றனபின ஒன்றுவரக கூறியது மிகக விரைவில அவரது உள்ளததில தொடாநது நிகழநத பலவேறு மன நிகழச்சிகளை அவவாறே குறிததறகாமெனக. முன்னா 815-லும இவவாறுரைததது காணக 176

826. (வி - ரை) கண்ணுதல் - இறைவா காட்டிய அருட்கண காரணமாக நிகழநத இசசரிதம முடியுமிடமாதலின இங்கு இபபெயராற கூறினா. கண்ணுதல் - நுதலில - நெறறியில - கணணுடையவா. சிவபெருமான. "வலவிருளா யெலலா வுலகுடனறுன மூடவிரு ளோடுமவகை நெறறி யொறறைககண படைததுகநத உததமன" (தகக ராகம - கலயநலலூா - 4) என்று ஆளுடைய நமபிகள அருளியபடி உலகுககு ஒளி நெறியாகிய அனபுநெறியினைக காட்டி உதவும திருககண எனபதுகுறிபபு. சிவககண ணாகிய வலககண்ணாற பாசநீககமும, அருட்கண்ணாகிய இடககணணாற சிவமயமாககலும, ஞானககணணாகிய நெறறிககண்ணாலசிவானநதானுபவ முறுவிததலும் செய்கினறாராத லின கணணபபரைத தம வலபபககததே என்றுமமாறுது நிறகவைககும இப்போது இபபெயராற கூறினா என்று ஆலாலசுநதரம பிளளை இங்கு விசேடவுரை காணபா.

காணும் நேர்பாடு எண்ணுவார் - நேர்பாடு - கண்ணுககுக கண் நோபபடு அமை யும பொருததம. காணும் - காணவேண்டிய. காணததகக தெரியததகக காணு தல இங்குப பரிசததாலுணாதல் குறிததது

கண்ணில் இடக்கால் ஊன்றி - கண்ணில் - கணணின பககததில. தமது எஞசிய ஒருகணணையும இடநதுவிடின அதனை அப்புதறகுரிய இறைவனது இடதுகண இருககுமிடம தெரியாதாகையால், அநத இடததை அடையாளம கணடுகொள்ள ஊனறினா எனக கண தோணடியவுடன அதன குடு தணியாமலும இரததம குளிரா மலும உடனே அடபிலலமட்டுமே ஊனெனுடூன ஒட்டிச்சேரும ஆதலின, இதறகாக வறிதே தடவி முயன்று தாமதபபடாதபடி இவவாறு முனனெசசரிககை செயதனா.

ஒரு தனிப்பகழ் - ஒபபறற பெருமையுடைய அமபு.

கண்ணில் ஊன்ற - தேவரது கணணிற காலூனறலும, பின்னாத தம கணணில் அமபூனறலும தேவரது புணநீககும தீவிரததால விரைவில ஒன்றுபோல நிகழந தன எனபதனை ஊன்றி - ஊன்ற என்றதனாற குறிததார.

தரித்திலர் - தரிததிலராதலின வலககணணை இடநதபபியதனைத தரிதத இறை வா, அமபினை இடதுகணணி லூனறலும தரிததிலா என்றா. வலதுகண தமதுபாகமும இடதுகண அமமையாரது கருணைப பாகமுமாதலின அப்பாகததிறகுரிய இடதுகண ணைத தோணடபபாராததலைத தமது பேரருள் தரியாதாயிறறு அதனால கையைப பிடிததுககொணடு "வலததில் நிறக" என்று பேரருள் புரிநதார என வரும்பாட்டிற குறிததல கருதுக.

தேவதேவர் தரிதநிலராதலின் (அகதப்) பாகர் - அங்கணர் - அற்புதர்-திருக்கை-தவிக்கும் ; வாக்கு - என்ற - என வரும்பாட்டுடன் கூட்டி முடித்துக்கொள்க

உண்ணிறை காதலோடும்—என்பதும் பாடம் 177

827. (வி - ரை) செங்கண் - விடைக்கு இயற்கையடைமொழி வெள்விடை - இறைவனது இடபம் வெண்ணிறமுடையதாகச் சொல்வது மரபு. "நரை வெள்ளே றொன்றுடையானை" (திருச்சிரா - குறிஞ்சி - 1) என்ற ஆளுடைய பிள்ளையார் திருவாக்கும் பிறவும் காண்க. செம்மை - வெம்மை - முரண்தொடை. பாகர் - ஊர்ந்து செலுத்துபவர் - யானைப்பாகர் முதலிய வழக்குக்களைக் காண்க பாகன் என்ற சொல்வழக்கைச் சிலேடையாகவைத்துப் 'படமாடும் பாம்பணை யானுக்கும் பாவை நல்லாடனக்கும், வடமாடு மால்விடை யேற்றுக்கும் பாகனைய" (திருநாவலூர் - நட்டராகம் - 9) என்றருளிய ஆளுடையநம்பிகள் தேவாரமும் கருதுக விடையின்பாகர் விடை - அறம் விதிவழி நடத்தல் அறமாம் இறைவன் சொன்ன விதியே அறமாவது

திண்ணனார் தம்மை ஆண்ட அங்கணர் - இறைவன் சொன்ன விதியாகிய ஆகமப் "பொருட்பற்றிச் செய்கின்ற பூசனைகள் போல விளங்கத்" திண்ணனார் பூசை செய்தனராதலின் அவரை ஆண்டனரென்பார் பாகர் - என்றதனை அடுத்து ஆண்ட அங்கணர் என்றார். முன்னர் அருட்கண் நோக்கத்தால் ஆட்கொண்டனர். இங்குக் குருதி பெருக்கின்ற அழகிய திருக்கண்காட்டி ஆட்கொண்டனர் என்ற குறிப்புப்பட அங்கணர் - என்றார் முன்பு தந்தது பாசநீக்கம் என்பது 803ம் திருப்பாட்டால் உரைக்கப்பட்டது. இங்குத் தந்தது சிவப்பேறு என்பது என் வலத்தில் நிற்க - என்றதனுலறியப்படும்.

அங்கண்மையாவது கருணையின் தன்மையன்றோ ? இங்குக்கண்ணைக் கொண்டு நோய் செய்தது அங்கண்மையாகுமோ? எனின், மதர்த்தெழு முள்ளத்தோடு மகிழ்ந்து (822) என்றும், உண்ணிறை விருப்பினோடும் (826) என்றும் அறிகின்றபடி இது திண்ணனார்க்கு வருத்தமும் நோயும் செய்யாது இன்பமே விளைத்ததாகலின் அங்கண்மையேயாம் என்க.

அற்புதர் - ஞானமே வடிவாயுள்ளவர் அற்புதம் - ஞானம் வேதவழிவருவது சைவநெறி "வேதப் பயனாஞ் சைவம்" (சண்டீசர் புரா 2) சைவவழிவருவது பத்தி "வேதநெறி சைவநெறி பத்திநெறி வழாது" என்பது திருவிளையாடற் புராணம் அன்புநெறிக்கு அருளும் முறை ஞானமும் வீடும் தருதலாமென்க

வாக்கங்கணர் அமுதவாக்கு மூன்றடுக்கு "கண்ணப்ப நிற்க" என்ற எனக் கூட்டுக. மூன்றடுக்காவது நில்லு கண்ணப்ப என்று மூன்றுமுறை சொல்லுதல் "நில்லு கண்ணப்ப! நில்லுகண்ணப்ப! என்னன்புடைத்தோன்றல் நில்லுகண்ணப்ப!" என வரும் நக்கீர தேவரருளிய திருமறப்பகுதிகளும் "ஒல்லைநம்புண் ஒழிந்தது பாராய்! நல்லை! நல்லை! எனப்பெறுந் திருவேட்டுவர்" எனத் திருமறத்தினுட் கல்லாட தேவநாயனார் அருளியதும் காண்க.

நீடுக்கை யம்பரற்றங்கண் முன்னிடக்குங் கையைத் தடுக்க - சிவலிங்கத் திருமேனியினின்று ஒருகை முளைக்கச் செய்து அதனால் கண்ணப்பரது கையினை அம்பட்னே பிடித்து அவர் கண்ணைத்தோண்டும் செய்கையைத் தடுத்து "இன்னுரை யதனொடு மெழுந்சிவ லிங்கந், தனனிடைப் பிறந்த தடமலர்க் கையார்,வன்னவன் றனகை யம்பொடு மகப்படப், பிடித்தருளினன்","ஆண்டகை, ஒருகை யாலு மிருகை பிடித்து" எனவரும் திருவாக்குக்களைக் காண்க வாக்கினாற்றடுத்தலே போதும், கையினால் பிடித்துத் தடுத்தல் வேண்டா எனின், அவர்க்கு அவர் செவியிற்புக்கு, அது அறிவிலேதாக்கி, அறிவினால் ஏவப்பட்ட கை அவ்வறிவினாலே மீளத் தடுக்கப்படுதல் வேண்டும். அதன்முன் செயலில் முனைந்து நின்ற கை தடுக்கப்படுதல் வேண்டுமாதலின்

திருக்கை பிடித்துக் கொண்டது. அற்றாயின் கையினைப் பிடித்தலேபோதுமாதலின் ஈண்டு வாக்கு எதற்கு எனின் அவர்க்குப் பொருள் அறிவித்து அமுதமாக்குதற்கு வாக்கு வேண்டப்படுமெனக். இதுபற்றியே "இன்னுரை யதனொடு மெழிற்சிவ லிங்கர் தன்னிடைப் பிறந்த தடமலர்க் கையால்" என்றருளியது திருமறம். கண்ணப்பரது தீவிரதரச் செயல் நோக்கி இரண்டும் வேண்டப்பட்டன என்றலுமாம். உற்றுமுன் பிடித்த என மேல்வரும் பாட்டிற் கூறியதும் காண்க.

இடக்கும்கையை - இடப்பக்கத்துக் குனிந்து அமம்பினைக் கண்ணில் ஊன்றிய கையை. தடுக்க - தடுத்தல், அது முயன்றபடி கண்ணைத் தோண்டாதவாறு அதனைப் பிடித்துக் கொள்ளுதல்.

நாககங்கணர் - அமுதவாக்கு - மரணத்தை விளைக்கும் விடமுள்ள நாகம் கையிற் கங்கணமாக அமையினும் வாக்கு அதனை நீக்கும் அமுதமாம் என்படி. அமுத வாக்கு - இறத்தலும் மீளவும் பிறத்தலுமின்றி மீளாநெறியாகிய முத்தியின்பத் திற் கண்ணப்பரை "என் வலத்தில் நிற்க" என்று இதனையடுத்து இப்போது இருத்துவதாகலின் இவ்வாறு கூறினார். அமுதம் - இறவாத இன்பமுத்தி.

அன்பர் தங்கண்—தடுக்குமன் . என்றே—தடுக்கமன் .என்றே—என்பனவும் பாடங்கள்　　17

828. கானவர் பெருமா னார்தங் கண்ணிடந் தப்பும் போது
முனமுற் றுகந்த வைய ருற்றுமுன் பிடிக்கும் போது
ஞானமா முனிவர் கண்டார்; நான்முகன் முதலா யுள்ள
வானவர் வளர்பூ மாரி பொழிந்தனர் மறைக ளார்ப்ப.　　கஎகூ

(இ - ள்) வெளிப்படை. வேடர்தலைவராகிய கண்ணப்பர் தமது கண்ணைத்தோண்டித் தேவர்கண்ணில் அப்பிய காலத்தும், அவர் ஊட்டிய ஊனமுதத்தை உவந்து கொண்டருளிய ஐயராகிய காளத்திநாதர் அவர் மற்றைக்கண்ணைத் தோண்டும் கையைத் தோண்டும் முன்னே பொருந்திப் பிடித்த காலத்தும், ஞானப்பெரு முனிவராகிய சிவகோசரியார் கண்டனர். வேதங்கள் ஆர்த்துப் பிரமதேவர் முதலிய தேவர்கள் கற்பகப் பூமலர் மழை பொழிந்தனர்.　　கஎகூ

(வி - ரை) கண்இடந்து அப்பும் போதும் - முதலில் வலக்கண்ணைத் தோண்டி அப்பிய காலத்தும். இடக்கண்ணை என்ற சுப்பராய செட்டியாருரை பிழைபோலும்.

முன் உற்றுப் பிடிக்கும் போதும் என மாற்றுக. உம்மைகள் எண்ணின்கண் வந்தன. அப்பியது முன்னும் பிடித்தது பின்னும் நிகழ்ந்தன. அப்பின என்னாது அப்பும் போதும் என்றதனால் அதுபற்றிய முன் நிகழ்ச்சிகளையும், இவையிரண்டுங் கூறவே இடைப்பட்ட எல்லா நிகழ்ச்சிகளையும் கண்டார் என்பது. ஊனமுது வந்த என்ற குறிப்புமது.

ஊன் அமுது உவந்த ஐயர் - தள்ளத்தக்க ஊனைக் கொள்ளத்தக்க அமுதமாக மிக மகிழ்ந்துகொண்ட பெருமை யுடையாராதலின் அதனைத் தொடர்ந்தே அவ்வூனைப் பெற்றும் சமைத்தும் ஊட்டியும் தொழில் செய்த கையினைப் பிடித்துக் கொண்டனர் என்பது தொனிக்கின்றது காண்க. கானவூ னமுத மாக்கும் சிலை (681) என இதனை முன்னாகக் குறிப்பிட்டதும் கருதத்தக்கது.

ஞானமா முனிவர் - சிவஞானமுடைய பெருமுனிவர். சிவகோசரியார். முன்னர் மாமுனிவர் (801) என்றார். இங்கு இறைவனருளினால் காட்டவும் உணர்த்தவும் பட்ட ஞானத்தைப் பெற்றவர் என்பார் ஞானமாமுனிவர் என்றார்.

கண்டார் - செயல் காட்டக்காண்கின்றாய (807) என்றதனால், செயல்களின் மூலம் புரிவைக் காட்டுவிக்க அச்செயல்களையும் கண்டார், அவற்றால் அறியப்படும்

உள்ளநிகழ்ச்சி யாகிய அன்பின் பெருக்கையும் கண்டார் எனச் செய்யப்படுபொருள் கருவிக்க. முனிவர்க்கும், அவர் மூலம் ஏனைய ஆன்மாக்களுக்கும் காட்ட இறைவர் இவ ளாறு நிகழ்த்தினாராதலின் கண்டார் என அவற்றின் பலன் கூறினார்.

**மறைகளார்ப்ப** - வேதங்களைத் தேவர்கள் சொல்லிப் பூமழை பொழிந்தனர் என்க. வேதமந்திரங்கள் திருவருள் வெளிப்பாடுபெற்றுத் தாமே நாதத்தினின்று தோன்றி ஒலித்தன என்றலுமாம். "ஓதுமறை யோரிற் றொலித்திடினு மோவா, வேதமொழி யாலொளி விளங்கியெழு மெங்கும்"—(திருஞான-புரா 31), "இயற்றுபவ ரின்றியுமியம்பு, மங்கல முழக்கொலி மலிந்த" (டி - 33) என்றவை காண்க. கற்பகப் பூமாரி பொழிதல் முதலிய நிகழ்ச்சிகள் திருவருள்வெளிப்பாடு நோக்கப் போதெல்லாம் நிகழ்வன 398 முதலியவை பார்க்க. "அருளலும், விண்மிசை வானவர், மலர் மழை பொழிந்தனர்;விளையொலி படக்க, துந்துபி கறங்கின, தொல்சீர் முனிவரு மேத்தினர்" என்றது திருமறம்.

**பிடித்தபோதும்—பூவின்மாரி** - என்பனவும் பாட்டுகள் 179

௮௨௯. பேறினி யிதன்மே லுண்டோ ? பிரான்றிருக் கண்ணில் வந்த
ஊறுகண் டஞ்சித் தங்க ணிடந்தப்ப வுதவுங் கையை
யேறுயர்த் தவர்தங் கையாற் பிடித்துக்கொண் "டென்வ லத்தின்
மாறிலாய் ! நிற்க "வென்று மன்னுபே ரருள்பு ரிந்தார் ௧௮௦

(இ - ள்) பிரான்.... .அஞ்சி - தமது பெருமானது திருக்கண்ணினுக்கு வந்த ஊறினைக் கண்டு பயந்து, தங்கண்.....கையை - தமது இடக்கண்ணைத் தோண்டி அப்புதற்கு உதவுகின்ற கண்ணப்பரது கையை, ஏறுயர்த்தவர் ..பிடித்துக் கொண்டு - இடபக்கொடியை உயர்த்தியவராகிய காளத்தியப்பர் தமது கையினாற்பிடித்துக்கொண்டு, மாறிலாய் !-ஒப்புயர்வற்றவனே !, என் வலத்தில் - எனது வலது பக்கத்தில்; நிற்க. . புரிந்தார் - நிற்பாயாக என்று நிலைபெற்ற பெரிய திருவருளினைச் செய்தனர். பேறு.. உண்டோ ? (ஆதலால்) இனி யிதன்மேற் பெறத்தக்க பயன் வேறுமுண்டோ ? இல்லை.

(வி - ரை) **போதல் புரிந்தார் பேறு இனி இதன்மேல் உண்டோ ?** - இங்கு வலப்பக்கத்தில் நிற்க என்றருளப் பெற்ற கண்ணப்ப நாயனாரும் அவ்வாறருளி அவரது இடப்பக்கத்தில் தாம் அமைந்து நின்ற காளத்திநாயனாரும் பூட்டிய வில்லின் இருதலை போலப் பிரித்துணராத நிலையிற் பிணைந்தனர் என்பது குறிக்க இவ்வாறு பூட்டுவிற் பொருள்கோள் பெற வைத்தது குறிக்க.

**இனி இதன்மேல் பேறு உண்டோ** எனக. **பேறு** இங்கு இதன்மேல் உண்டோ என்றதனால் சிவசாயுச்சியமாகிய முடிந்த பதம் குறித்தது. அருள் ஞானக் குறியின் அருள் நோக்கத்தால் மலமூன்று மறுமாய், அவனே தானே ஆகிய அந்நெறியில் ஏகனுகி இறைபணி செய்தனராதலின் இவர் பெற்றது பரமுத்தியேயாம் என்றும், வேறு சிலர் கூறுவதுபோலச் சிவபூசையாகிய கிரியைக்குரிய சாமீபமாகிய பதம் மட்டு மன்று என்றும் விசேட உரை காண்பர் ஆலாலசுந்தரம் பிள்ளை.

**உண்டோ?** - ஆன்மாக்கள் அடையத்தக்க பேறு இதற்குமேல் வேறொன்றுமில்லை என்று வினா எதிர்மறை குறித்தது."கற்றதனா லாய பயனென்கொல்" என்புழிப்போல வேறு இல்லை என்னுது உண்டோ என வினாச் சொல்லாற்கூறியது உறுதிப் பொருள் தருதற்பொருட்டு "கலைமலிந்த சீர்நம்பி கண்ணப்பர்"தலின் கற்றதனாலாய முடிந்த பயனைப் பெற்றனர் என்ற இத்திருக்குறட் பொருட் குறிப்பும் காண்க. கண்ணப்பர் தாம் யாவரினும் மிக்க பேறுபெற்றனர் என்பது கருத்து. இதுபற்றியே திருவாதவூரடிகள் முதலிய பரமாசாரிய மூர்த்திகளாலும் மற்றும் எல்லாப் பெரியோர்களாலும் துதிக்கப்பெற்றனர் எனக.



திருககாளததிக கணணப்பா திருவுருவம்

—பாட்டு - 829 - பககம - ௧௦௪௮



அனனியா படை எடுபபினபோது
திருககாளததிநாதா திருவுருவமாக
அமைககபபடடது
திருக்கோயிலி னுட்சுற்றில் உள்ளது.

**திருக்கண்** - பிரானது ஞானத திருமேனியில எவவித ஊனமும் இல்லாத கண். **வந்த** - தோற்றப்பட்ட. **ஊறு** - உறுவது. ஆகுபெயராயப் புண்ணையும் அதிற் பெருகிய உதிரத்தையும குறிததது. **ஊறு** - பேறு தொழிலாகு பெயர்கள.

**அஞ்சி-அவர்க்குத் தீங்கு-ஊறு** - சேர்ந்ததற்கு அஞ்சினாரேயன்றித தம் கண்ணைத தோண்டுதற்கு அஞ்சினாரலலா எனபது தோனறத **தங்கண் இடந்து அப்ப** எனறார.

**அப்ப உதவும் கை** - **உதவும்** - வலது கணணைத தோணட உதவின என இறந்த காலப பெயரெசசமாகவும்,இடது கணணைத தோணட உதவி நிற்கும என எதிர்காலப் பெயரெசசமாகவும இவவரிய செயலகளிரணடினையும **உதவும்** என்ற ஒருசொல்லாலே குறிகக உதவும சொல அருமை காணக

**உதவும் கை** - உயிரின இசசையறிநது உதவுவது கையின பண்பு எனபது குறிபபு; "உடுககை யிழநதவன கை போல" எனற திருககுறளானறிக எனபார் சுபபராய செட்டியார

**ஏறு உயர்த்தவர்** - காளததி நாதா. தருமசொரூபமாகிய விடையினை ஊாநது அருளவது போல அதனையே கொடியாக உயாததியும கையாறபிடிததவாறு அவவறத்தின வழியே அனபு செயத இவரையும கையாற பிடிதது தமது சாயுச்சியததிறகு உயர்ததினா எனறது குறிபபு விடையினபாகா (827) எனறதில உரைததவை பாாக்க.

**தம்கையால்** - சிவலிஙகததிருமேனியினின்றும தோனறிய கையினாலே உதவும் கைககுப் பிரதி உபகாரம தமது கையாற பிடிததலாம எனபது போலக கையாற பிடிததனா எனறதும குறிபபு.

**என்வலத்தில்-வலத்தில்** - வலபபககததில. இடப்பககததில உமையமமையாரும் திருமாலும உளளாாகள எனற குறிபபினால வலததில எனறார. இடம அம்மையாரது பாகமாக, வலம தமது பாகமாதலின அதனில் நிறுததினா என்பதுமாம். அமமையாருககு இடமே இடமாகக் கொடுததவா இவாககும் வலமே இடமாகக கொடுததாா எனற நயமும, சககரம வேணடித தமது ஒரு கணணைத தோண்டி அருசசிதத திருமாலுககு எளிய இடபபாகமும, தனககென ஒனறும வேணடாது இறைவன திருககணணில் வநத ஊறுகணடு அஞசி அதன பொருட்டே தமது ஒருகணணை அப்பி உதவியும் மறறொரு கணணையும உதவ நினறும பணி செய்த இவாககு வலப்பாகமும கொடுததனா எனற நயமும் காணக வலம் - மேமபாடு - வெறறி - எனககொண்டு அனபே சிவமாவது சிவததின வலமாதலால அதனில் நீ நிறபாய எனறா எனறகுறிப்புமாம்.

**மாறு இலாய் வலத்தில் நிற்க எனக** - ஒபபும உயாவுமிலலாதவனே நீ வலததில் நிறபாயாக. **வலத்தின் நிற்க** - எனப பிரிதது, **வலம்** - வலலமை, **இன்** - உவமவுருபு எனககொணடு, அருள வடிவாகிய சததி "நீரின தனமை அனல வெமமையென" அகலாது சமவாயமாக நீககமினறி நிறறலபோல, அனபு வடிவாகிய நீ பிறிவறியாது அததுவிதமாக நிறக எனபதும குறிபபு. "ஒளியெனன நிலலெனறான" எனபது பஞசாககரப பஃறொடை **நிற்க** - நிலைபேறு பெறறு நிறக எனறதுமாம.

**மன்னு பேருருள்** - நிலைபெறும பெரியதிருவருள. அனபிற பெரியவருககு அருளாற பெரியது செயதனா எனக.

**ஏறுகைத்தவர்**—எனபது பாடம். 180

830\. மஙகுல்வாழ் திருககா ளததி மனனனாா கண்ணிற புண்ணீர்
தஙகினை மாறறப பெற்ற தலைவாதா டலைமேற் கொணடே
கஙகைவாழ் சடையாா வாழுங கடவூரிற கலய னாராம்
பொஙகிய புகழின் மிக்கார் திருததொணடு புகல லுற்றேன். கஅக

(இ - ள்) வெளிபபடை. மேகம் வாழுதறகிடமாகிய திருககாளததியில் எழுநதருளிய இறைவரது திருககண்களிற கணட புண்ணில வரும செந்நீரைத தமது

கண்ணினால் மாற்றும் பேறுபெற்ற தலைவராகிய கண்ணப்ப நாயனாரது திருத் தாள்களை எனது தலையின் மேலே அணிந்துகொண்டே, கங்கை வாழும் சடையினை யுடைய சிவபெருமான் எழுந்தருளிய திருக்கடவூரில் கலயனாராகிய மிகுந்த புகழினால் மேம்பட்டவரது திருத்தொண்டினை இனிச் சொல்லத் தொடங்குகின்றேன். ௧௮௧

(வி - ரை) மஞ்சுல்வாழ் - ஆகாயத்தில் மேக மண்டலங்கள் உள்ள அளவும் உயர்ந்திருத்தலின் மேகம் எப்போதும் வாழ்ந்திருக்கின்றது என்பது. வாழ் திருக்காளத்தி - முக்கால வினைத்தொகை எப்போதும் பனியால் மூடப்பெற்ற இமயம் என்னும் திருக்கயிலை போலவது திருக்காளத்தி யென்ற குறிப்புப்பெற இவ் வாறு கூறினார் இத்திருமலையிற் றவழ்ந்திருத்தலின் மேகம் தான் வாழ்வடைந்தது என்ற குறிப்புமாம். "வானின் றுலகம் வழங்கி வருதலால்" (குறள்) என்றபடி வேறு இடங்களில் உள்ள மேகம் உலகை வாழ்விக்கும். ஆனால் இங்குத் தவழும் மேகம்தான் வாழ்வை யடைந்தது என்றவாறும். சேணுயர் திருக்காளத்தி (745), மாகமார் திருக்காளத்தி (754) முதலியவை காண்க. இனி, "கருவரை காளமேக மேந்திய தென்ன" (664) என்றபடி அன்பு மழை பொழிகின்ற மேகம் போன்ற கண்ணப்பர் நிலைத்து வாழ்கின்ற என்றுரைத்தலுமாம்.

மாற்றப் பேற்ற - மாற்றும் பேறுபெற்ற. பெற்ற என்பதற்குச் செயப்படு பொருள் வருவிக்க இவ்வாறன்றி இதனை ஒரு சொல்லெனக் கொண்டு மாற்றிய எனக் கொள்வோருமுண்டு. எல்லா ஆன்மாக்களது எல்லா நோயும் தீர்க்கும் வைத்திய நாதராகிய இறைவரது புண்ணீரைத் தமது கண்ணே மருந்தாகக் கொண்டு தீர்த்த முறையின் அருமை பற்றி மாற்றப்பேற்ற என்று விதந்தோதினார்.

தலைவர் - நாயனார். அன்பினிற் றலைவர் ஆன்மாக்களை அன்பு நெறி காட்டி வழிப்படுத்தலால் அவைகட்கெல்லாந் தலைவர் என்றலுமாம்.

தாள் தலைமேற் கொண்டே - தாள்களைத் தலையின்மேல் தலைக்கணியாகச் சூடிக் கொண்டு. தாள் + தலை = தாடலை என்ற தொடர் சிவனோடத்துவித முத்திக் கலப்பினைக் குறிக்கச் சைவ மரபில் வழங்குவதாம். "பொல்லா ரிணைமலர் நல்லார் புனைவரே" என்ற சிவஞானபோத மங்கல வாழ்த்திற்குத் தாடலைபோல் அடங்கி நிற்பர் என் றுரைத்ததும், "தாடலைபோற்கூடி" (இன்புறு - 4) என்ற திருவருட் பயனும் காண்க. கொண்டே - கொண்டு அந்தத் துணையினாலே புகலலுற்றேன் என்பது கருத்து.

கங்கைவாழ் சடையார் - சிவபெருமான். 831 பார்க்க.

கடவூரில். மிக்கார் - மேல்வருஞ் சரிதமுடையாரின் ஊரும், பேரும், தன்மை யும், சரிதக் குறிப்பும் உணர்த்தித் தோற்றுவாய் செய்தபடியாம். பொங்கிய புகழின் மிக்கார் செல்வம் மிகப் பெற்றதும், திருப்பனந்தாள் இறைவரை நேர் காணப் பெற்றதும், ஆளுடையபிள்ளையார் ஆளுடைய அரசு என்ற இவ்விரு பெருமக்களையும் நேரே தமது திருமனையில் வைத்துப் பூசித்து உபசரிக்கும் பேறு பெற்றதும் என இவ்வாறு மேன்மேல் உயரும் அழியாப் புகழ்பெற்ற சிறப்பு நோக்கி இவ்வாறு கூறினார். பொங்கிய என்றதனாற் செல்வம் பொங்கப் பெற்றதும், புகழ் என்றதனால் அரசர் யானை சேனைகளாற் காணமுடியாத, சிவனிலைத்த காட்சிகண்டதும், மிக்கார் என்றதனால் சைவசமய பரமாசாரிய மூர்த்திகளை நேரே பூசித்து அமுதூட்டிய சிறப்பும் குறித்தார்.

திருத்தொண்டு - திருத்தொண்டுகள். சாதியொருமை. திருத்தொண்டின் திறம் கூறும் சரிதம் என்றலுமாம்.

இது கவிகூற்று ஆசிரியர் தாம் கையாண்ட முறைப்படி இதனால் இதுவரை கூறிவந்த இச்சரிதத்தை உபசங்காரம் செய்து முடித்துக்காட்டி, மேல்வரும் புராணத் திற்குத் தோற்றுவாய் செய்தனர். இதனுள் இவ்விரண்டு சரிதங்களும் சுருங்க விளக்கப் படுதல் காண்க.

# அநுபந்தம்

## இப்புராணத்திற் காணப்படும் இடைச்செருகல்கள் (பக்கம் - ௪0௧௯)

806 ம் பாட்டின்கீழ்ச் சில பிரதிகளில் கீழ்வரும் இவ்வைந்து பாட்டுகளும் காணப் படுகின்றன. இவை வெள்ளி பாடல்கள் என்னும் இடைச்செருகல்களாம் என்பது பல பெரியோர்களின் துணிபு. பல பிரதிகளில் இவை காணப்படவில்லை. ஆதலின் பல பதிப்புகளிலும் இவற்றைப் புராணத்திற் சேர்த்துப் பதிக்காமலே விடுத்தனர். தி. க. சுப்பராயச்செட்டியார் பதித்த கண்ணப்பநாயனார் புராண உரைப்பதிப்பில் இப்பாடல்களைச் சேர்க்காது முடித்து, இறுதியில் இவற்றை மூலபாடமாக மட்டும் "வெள்ளிக் கவிகள்" என்று தலைப்பிட்டு அச்சிட்டு, "இவ்வைந்து செய்யுள்களும் சேக்கிழார்நாயனார் அருளிய செய்யுள்கள் அல்லாமையால் அவற்றோடு சேர்க்காமலும் பொருளெழுதாதும் விட்டனம்" என்று குறிப்பும் எழுதியுள்ளார். இவைபற்றி 806 உரையின் கீழ் எழுதிய அடிக்குறிப்பும் காண்க. அன்பர்கள் பார்வைக்காக இப்பாடல்கள்மட்டும் சில குறிப்புகளுடன் இங்குத் தரப்படுகின்றன.

1 பொருப்பினில்வந் தவன்செய்யும் பூசனைக்கு முன்பென்மே
லருப்புறுமென் மலர்முன்னே யலைவீக்கு மாதரவால்
விருப்புறுமன் பெனும்வெள்ளக் கால்பெருகிற் றெனவீழ்ந்த
செருப்படியென் னிளம்பருவச் சேயடியிற் சிறப்புடைத்தால்

குறிப்பு :—இளம்பருவச் சேய - முருகன். "செருப்படி யாவன் விருப்புறு துவலே" என்பது திருமறம். கடல்பெருகிற்றென - எம்மிளம் என்பனவும் பாடங்கள்.

2 உருகியவன் பொழிவின்றி நிறைந்தவவ னுருவென்னும்
பெருகியகொள் கலமுகத்திற் பிறங்கியினி தொழுகுதலா
லொருமுனிவன் செவியுமிழு முயர்கங்கை முதற்றீர்த்தப்
பொருபுனலி னெனக்கவன்றன் வாயுமிழும் புனல்புனிதம்.

குறிப்பு —"எழிலவன் வாய்து தூயபொற் குடமே, யதனிற் றங்குநீர் கங்கையின் புனலே" என்ற திருமறக் கருத்துக்காண்க. ஒரு முனிவன் - சந்நு முனிவன். பகீரதன் சிவபெருமானை வேண்டிக்கொணர்ந்த கங்கை, செல்லும்வழியில் தவஞ்செய்துகொண்டிருந்த சந்நுமுனிவனது ஆசிரமத்தினூடு சென்றதனால் அதனை அவன் குடித்துவிட்டனன் எனவும், பின்னர்ப் பகீரதன் வேண்டத் தன் செவியின்வழியே அதனை மீளவிட்டனன் எனவும் அதனாற் கங்கைக்குச் சாந்நவி என்று பெயர்வந்தது எனவும் புராணங்கள் கூறும். கங்கையினும் திண்ணனாரது வாய்நீர் புனிதமென்ற இப் பாட்டின் கருத்து 666-ம் பாட்டிற்காண்க. செவியிலுமிழ் - என்பதும் பாடம்

3. இம்மலைவந் தெனையடைந்த கானவன்ற னியல்பாலே
மெய்ம்மலரு மனபுமேல் விரிந்தனபோல் விழுதலாற்
செம்மலர்மே லயனெடுமான் முதற்றேவர் வந்துபுனை
யெம்மலரு மவன்றலையா லிடுமலர்போ லெனக்கொவ்வா.

குறிப்பு :—இப்பாடல் "அவன்றலைத் தங்கிய சருகிலை தருப்பையிற், பொதிந்த வங்குலி கற்பகத் தலரே" என்ற திருமறத்தின் கருத்தையே கொண்டது காண்க. அயனெடுமால் - என்பதும் பாடம்.

4. வெய்யகன்ற் பதங்கொள்ள வெந்துளதோ வெனுமன்பா
லையுமன்றத் தினிமையினி லையமிக மென்றிட்டாற்

செய்புமறை வேள்வியோர முன்புதருக திருநதவிபி
லெய்யும்வரிச் சிலையவனரு ளிட்டவூ னெனககினிய.

குறிப்பு :—இப்பாட்டிற கண்ட பொருள 796 ல மிக அழகாக ஆசிரியராற கூறப்பட்டமை காணக. "அவனுகக இட்ட விறைசசி யெனககுநன, மாதவ ரிட்ட செய்பா லவிபே" என்ற திருமறததின பொருளும காணததககது. "சுவைமுன காண்பான வாயினி லதுககிப் பாாதது" (767), "சுவைகாண லுறுகினறா" (795), "காவினக விடுமிவைசசி" (797) எனற புராணத திருவாககுககளோடு "மையமிக மென்றிடல" எனறது பொருததமாக காணபபடவில்லை செய்யமறை எனபதும பாடம.

5\. மனபெருமா மறைமொழிகண மாமுனிவா மகிழநதுரைககு
மினபமொழித தோததிரஙகண மநதிரஙக ளியாவையினு
முனபிருநத மறறவனறன் முகமலா வகநெகிழ
வனபினினைக தெனையலலா லறிவுறு மொழிநலல.

குறிப்பு :—மன்பெரு மாமறை - "மனபெ ருநதிரு மாமறை" (331) பாாகக. எனையல்லால் அறிவுறு - எனற கருதது "அவனுடைய வறிவெல்லா நமையறியு மறிவு" (806) எனறதனுற போநதவாறுகாணக அகநேகிழ்நத - என்பதுமபாடம.

இவவைநது பாட்டுககளினும ஒனறுபோலவே "சிறபபுடைததால்"—முதலியன வாக ஈற்றடி வீறறுச்சிறிற பயனிலைவைதது முடிபுகாட்டிய முறை ஆசிரியரது வாககு களதுடன பொருநதுவதாகக காணபபடவிலலை

---

சுருக்கம் —திருக்காளததிக கணணப்பருடைய திருநாடு போத்தப்பி நாடு எனபதாகும். அதில உடுப்பூர் எனபது அவா அவதரிதத பதியாகும அநநாட்டில

நாடு ; நகரம் ; மக்கள்

வாழபவாகள குனறவாாகிய வேடாகள. இவாகளது வீடுகளின முனறிலகளில உளள விளா மரஙகளில வாாவலை தொஙகும, பனறி, புலி, கரடி, கடமை முதலிய இனஙகளின பாாவை மிருகஙகள அஙகே கட்டப்பட்டு உணஙகிககிடககும, பாறை முனறிலில மலைநெல காயும அஙகுப் புலிககுட்டி யானைககனறு எனறிவறறோடு வேடாகளது புனறலைச சிறுமகாாகள விளையாடுவாாகள அனபுடன அணையும பெட்டை மானகளோடு வேடா சிறுமிகள விளையாடுவாாகள். அவவேடாகள கொலைபபடைகளை ஏநதுவா, வனகணமையுடையவா; கொடுஞ்சொல் வழஙகுவா அவாகளது துடி, கொமபு, சிறுபறை முதலியவறறின ஓசையுடன், சதநிதது ஓடும மலையருவிகளின ஓசையும எஙகும உளளன. ஆறலைததுணபது இவவேடாகளின வாழககை அவாகள அயறபுலஙகளினின்று கவாநது கொண்டுவநத ஆனிரைகளும மேகமபோல முழஙகும யானைகளும அஙகு உள்ளன. இமமறவா கரிய உடமபும வனமெுழிலும உடையாா ; அசசம அருள எனபன எனறும அடைவிலலாதாா. மலைததேனும ஊனும கலநத சோறு இவாகளது உணவாம.

அவவேடாககரசன நாகன் எனபவன. இநநாயனுரை மகனுகப் பெறுதறகு அவன முனனைத தவமுடையானுயினும பிறபபின சாாபினுலே குறறமே குண

தந்தை, தாயர்

மாககொணடு வாழபவன, கொடியவன, விறமெுழிலிற சிறநத வீர சிஙகமபோனறவன. அவனது மனைவியாகிய தத்தை வேடாகளது பழங்குடியில் வநதவள. சஙகு மணிகளுடன கோதத புலிபபறுலி பூணட அசசந தரும பெண சிஙகம போனறவள.

ஒப்பற்ற சிறப்புடைய அவர்களுக்கு நீண்டகாலம் புதல்வப்பேறு இல்லாம லிருந்தது. அவர்களுக்கு அது அரிதாம் என்று எவரும் சொல்லலாயினர். அதனைப் பெறுதலில் அவர்களுக்குக் காதல்மிக்கது. அதன் பொருட்டு முருகப் பெருமானது திருமுன்றிலிற் சென்று பரவுக்கடன் பலவும் செய்து வழிபட்டனர், சேவலும் மயிலும் விட்டனர், தோரணமணிகள் தூக்கி னர், மலர்மாலைகள் தொங்க விட்டனர், குரவைக் கூத்துடன் அணங்காடல் நிகழ்த்திப் பெருவிழாச் செய்தனர். வெற்றிவேற் பெருமானது திருவருளினாலே வேடர் குலம் விளங்கும்படி தத்தையினிடம் கருப்பம் தரித்தது. மாதந்தோறும் பலிகள் போக்கி வெறியாட்டியற்றினர். உரியமாதங்கள் நிரம்பக், கருங்கடலானது சந்திரனைப் பெற்றது போலத் **தத்தை மகவை ஈன்றனள்.** மகிழ்ச்சி மீக்கூர வேடர்கள் மணி மழை சிந்தித் துடி முதலிய மங்கல இயங்கள் முழக்கினர். எங்கும் மலர்மழை பொழிந்தது. தேவ துந்துபிகள் முழங்கின. மலைச்சீறூர்க் குடிகள் பெருவிழாக் கொண்டாடினர். கரிய மலை **காளமேகத்தை** ஏந்தியதுபோல நாகன் புதல்வரை எடுத்துக் கொண்டான். அப்போது அழகிய அக்குழவி புலிக்குட்டிபோலப் பொலிந்தது, அவ்வேடர்களது அளவிலேயன்றி உலக முழுதும் போற்றும் நற்குறிகளுடன் விளங்கியது. அம்மகவு, கையில் எந்துதற் கருமையாயிருந்தமையால் நாகன் அதற்குத் **திண்ணன்** என்று பேர் வைத்து யாவரையும் அவ்வாறே அழைக்கும்படி சொன்னான்.

**திருவவதாரமும் பேரிடுதலும்**

புண்ணியப் பொருளான திருவுருவுடைய அக்குழவிக்கு வேடர்களது மரபின்படி பல அணிகலன்களை அணிந்தனர். தெய்வங்களுக்குப் பருவந்தோறும் பெருமடையிட்டு வழிபட்டனர். திண்ணனார் ஓராண்டு நிறைவெய்திச் செல்லத் தளர் நடையிட்டு நடந்தனர், பின், நாட்செல்லக் குதலைமொழி பேசிப் பெற்றோர்க்கும் மற்றோர்க்கும் இன்பமூட்டினர், பின் குறுநடை கொண்டு சிறுதுடிக் குறடு உருட்டி விளையாடினர், ஐந்தாண்டு செல்லச் சீறூர்ப்புறத்து உழலை வேலியின் புறச்சிறு கானிற் போகி முயல், காட்டுப்பன்றி, புலி, செந்நாய் முதலிய கொடுவிலங்குக் குட்டிகள் பலவற்றையும் விசையில் ஓடிப் பிடித்து வந்து முன்றிலில் மரத்தாளிற் கட்டி வளர்த்தனர், இவ்வாறு விளையாடி வளர்ந்து வில் வித்தை பயிலும் பருவம் சேர்ந்தனர். இவர்க்கு வில்வித்தை தொடங்குவிக்கும் பொருட்டு நல்லநாட் குறித்து நாகன் பக்கத்து மலைகளின் ஆட்சியுடைய வேடர் தலை வர்களுக்கும் தனது குடிகளுக்கும் சொல்லி யனுப்பினான். வேடர்களும் தலைவர்கள் பலருமாக மலைபடுபலன்கள் பலவற்றையும் கொண்டுவந்து சேர்ந்தனர், வில்லினுக்கும் திண்ணனாருக்கும் புலிநரம்பினாற் காப்புச்சேர்த்து வாழ்த்தினர், ஏழுநாள் வில்விழாக் கொண்டாடினர். ஏழாநாளாகிய நல்ல நாளில் நல்ல உச்சிவேளையில் நல்லாசிரியனைக் கொண்டு திண்ணனாரை வில் பிடிப்பித்தார்கள். அதுமுதற்கொண்டு அவர் வில் வித்தையினை நாளும் திறம்பட முற்றக்கற்றவராயப் பதினாறு வயது நிரம்பிய இளஞ் சிங்கம் போன்ற காளைப்பருவமடைந்தனர்.

**வளர்ப்பும் விற்பயிற்சியும்**

இவ்வாறு திண்ணனார் பருவ நிரம்பிய காலத்தில் நாகன் மிக மூப்படைந்து வில் முயற்சியில் மெலிவடைந்தான். காட்டிற் பன்றி, புலி, கரடி, முதலிய மிருகங்கள் மிக நெருங்கிப் பயிர்களுக்கும் உயிர்களுக்கும் கேடு விளைத்தன. அதனை வேடர்கள் தமது தலைவனாகிய நாகனுக்கு அறிவித்து முறையிட்டார்கள். அவன், "மூப்பினாலே முன்போல வேட்டை முயற்சியில்லேன், என் மகனை உங்கள் தலைவனாகக் கொள்ளுங்கள்" என்று சொல்ல, அவர்களும் இசைந்தனர். நாகன் மகனுக்குச் சொல்லி விட்டான். தேவராட்டியை வரவழைத்துத் தன் மகன் கன்னிவேட்டைக்குப் போவதால் (கன்னிவேட்டை-முதல் முறையாகச் செய்யும் வேட்டை) வனதெய்வங்கள் மகிழும்படி காடுபலி யூட்டுக என் றான். அவளும் ஆசிகூறி, வேண்டுவனவற்றைக் குறைவின்றிக் கொண்டு போனாள்.

**மலையாளும் உரிமை சூட்டப் பெறுதல்**

அழைத்தபடியே திண்ணனாரும் வந்து நாகனை வணங்கினார். அவரைத் தழுவிக்கொண்டு, புலித்தோலாசனத்தில் தன்னோடு ஒருசேர முன்னிருக்க வைத்து, அவரை நோக்கி "எனக்கு மூப்பு மேலிட்டதனால் இனி என் முயற்சியினால் வேட்டையாட எனக்குக் கருத்தில்லை. எனக்கு மேலாகச் சிலைமலையார் குலக்காவல் பூண்டு உன்னுடைய மாபுரிமையாகிய மலையாட்சியைத் தாங்குவாயாக!" என்று சொல்லித் தன் அரச அடையாளமாகிய உடைதோலையும் சுரிகையையும் கையிற் கொடுத்துப் பட்டம் சூட்டினான். திண்ணனார் தந்தை நிலையிறுக்கிரங்கினார், ஆனால் தமது குலத்தலைமைக்குக் குறைவின்றிக் காக்கவேண்டுமென்னும் குறிப்பினால் அதனை மறுக்காது சிந்தை பரங்கொள்ளினார். நாகன் மகிழ்ந்து ஆசிகூறி வேட்டைமேற் செல்ல அவருக்கு விடை கொடுத்தான்.

விடைபெற்ற திண்ணனார் மங்கல நீராடலை படிந்து, அன்றிரவு மனையில் வைகி, விடியற்காலம் விற்சாலையிற்புக்கு வேட்டைக் கோலங்கொண்டனர். தலையிற் குஞ்சியை

**திண்ணனாரது கன்னி வேட்டைத் திறம்**

நிமிரக் கட்டித் தளிர்களாற் கட்டப்பட்ட கொண்டைமாலையும் அதில் மயிலிறகும் அதன்மேல் முல்லைமாலையும் குறிஞ்சி வெட்சிப் பூக்களும் சூடினார், முன்னெற்றியில் குன்றிமணிகளை இடையிடை வைத்துப் புரித்த மயிர்க்கயிறு சாத்தினார், காதுகளில் வெண்சங்கத் தோடுகளும், கழுத்தில் பல்கறை மாலையும் சன்ன வீரமும், மார்பில் யானைத் தந்தத்தை அளவுபட அரிந்த கோத்தமாலையும் அணிந்தனர், தோள்களில் வாகுவலயங்களும் முன்கைகளிற் கங்கணங்களும் விரலுக்குக் கைக்கோதையும் பூட்டினர், இடுப்பில் புலித்தோலாடை சாத்தி, உடைதோல் வீக்கி, அதிற் சுரிகையும் பூண்டனர்; காலில் வீரக்கழலும், திருப்பாதங்களில்நீடு செருப்பும் அணிந்தனர்; பாரப் பெருவில்லினைப் பணிந்து தாளமடுத்து ஏந்திச் சிறுநாணொலி கொண்டு தக்க அம்புகளையும் தெரிந்து கொண்டார் அப்போது காடு பலியூட்டிய சருப்பொரி முதலியவற்றுடன் வந்து தேவராட்டி அவரது திருநெற்றியிற் சேடைசாத்தி, "உன் தந்தை தந்தைக்கும் இந்நன்மைகள் உள்ளவல்ல, உன் வலிமை நம்மளவில் நில்லாது பெரிதாகும்" என்று வாழ்த்தினள் திண்ணனார் அவளுக்கு எதிர் சிறப்புச்செய்து போக்கி வேட்டைக்குப் புறப்பட்டனர். அவர் முன்பு வில்லேந்திய வேடர் கூட்டம் சென்றது. வேட்டை நாய்கள் பக்கங்களிற் பலபுறமும் வந்தன. எண்ணில்லாத பார்வை மிருகங்களைக் கொண்டு எம்மருங்கும் வேடர் சென்றனர் கொம்பு, சிறுபறை, பம்பை முதலியவற்றை முழக்கிக்கொண்டும் கையர் லோசைசெய்தும் வேடர்கள் வேட்டைக் காடுவளைத்தனர். காடாயும் ஒற்றர்கள் பன்றிகளும் மான் கூட்டங்களும் துன்றிய இடங்களை அடிச்சுவடுகண்டு அறிந்து சொல்லவே, வலிய வேடர்கள் பலபுறமும் ஓடினர். இவ்வாறு சென்றவர்கள் ஓடி எறிந்தும், வார் போக்கியும் யோசனைப்பரப்புள்ள காட்டைக் காவல்செய்தபின் திண்ணனாரும் ஏனைவேடர்களும் அக்காட்டினுள் வேட்டை நாய்களைப் பலபுறமும் அட்டமாக விட்டுச் சென்றனர். துடி, பம்பை முதலிய வாத்திய ஓசைகளினால் மிருகங்களைப் பதிவிடங்களிலிருந்தும் எழுப்பினர் பன்றிகளும், மான்வகைகளும், யானை காட்டுப்பசு முதலியனவும் ஆகிய பல மிருகங்களும் வெருண்டு எழுந்து மேற்பாய அவற்றினை வேடர்கள் சீறி அம்புகளினாற் கொன்றனர். காலறுவனவும், தலைதுமிவனவும், குடல் சொரிவனவும், அம்பு தைக்கத் துவண்டு வீழுவனவுமாக மான் வகைகள் பல பட்டன பல சிங்கங்களும் யானைகளும் புலிகளும் பட்டன பலபுறமும் வெருவி ஓடிய விலங்குகளை நாய்கள் பற்றிக் கவர்ந்தன இவை, இருவினை வலையிடைப்பட்டுச் சுழன்று வழிச்சேர முயலும் மனத்தை அவ்வாறு செல்லாது தடைசெய்து தம் வசப்படுத்திய ஐம்பொறிகளைப் போன்றிருந்தன இவ்வாறு படுகொலை செய்யும் வேட்டைவினையிலும் வேடர்கள் சிறுயானைக் கன்றுகளையும், ஏனை விலங்குகளின் சிறுகுட்டிகளையும், கருவுடைய பெட்டைவிலங்குகளையும் எய்யாது விடுத்தனர்

இவ்வாறு மூண்ட கொலை புரியும் வேட்டை நிகழும்போது கருமேகம்போன்றதொரு காட்டுப்பன்றி மேகம்போலக் கர்ச்சித்து வலைகளையறுத்து வேடர்களையும் தப்பி மிக்க வேகத்தில் ஓடிற்று. அதனை வேடர்களுள் ஒருவரும் அறிந்திலராகவும் சிங்கம்போன்ற திண்ணனார் அதனைப் பின்றொடர்ந்து ஓடினார், அவரடிபிரியாத மெய்காவலாளர்களாகிய நாணன், காடன் என்ற இருவரும் அவரைத்தொடர்ந்து ஓடினர். அப்பன்றி வேட்டை நாய்களையும் தப்பிக்,காட்டில் நெடுந்தூரம் ஓடி, மேற்செல்ல வன்மையின்றி யிளைத்து, ஒரு மரச்சூழலில் நின்றது. அதனைத் தூரத்தில் நின்று அம்பினாலெய்து கொல்ல நினையாமல், வீரராகிய திண்ணனார் அணுகச்சென்று உடைவாளினை உருவிக் குத்தி இருதுண்டுபடுத்திக் கொன்றனர். அது கண்டு அவ்விரு வேடர்களும் அவரைப் புகழ்ந்து, அவரடி வீழ்ந்து "நெடுந்தூரம் ஓடி வந்ததனால் எமக்கு மிக்க பசிவந்தது, கிடைத்த இப்பன்றியைத் தீயில் வதக்கித்தின்று தண்ணீர் குடித்துப் பின் வேட்டைக் காட்டுக்கு மெல்லப் போவோம்" என்றார்கள். திண்ணனார் "நல்ல தண்ணீர் இவ்வனத்தினுள் எங்குள்ள"தென்று கேட்க, அவர்கள் "முன்னிருக்கும் இப்பெரிய தேக்குமரச்சோலையைத் தாண்டிப்போனால் ஒரு மலைதோன்றும்; அதன் அயலிற் குளிர்ந்த பொன்முகலியாறு ஓடும்" என்று சொன்னார்கள்.

**வேட்டையிற் பன்றி தப்பி ஓடுதலும் திருக்காளத்திச் சாரல் சேர்தலும்**

"அங்குப் போவோம், இப்பன்றியை எடுத்து வாருங்கள்" என்று கட்டளையிட்டு மூவருமாகச் சென்றனர். சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் திருக்காளத்தி மலையின் சாரற்சோலையை அரைக்காத தூரத்திற் கண்ணுற்றார்கள். "நாணனே! இங்குத் தோன்றும் குன்றிற்போவோம்" எனத் திண்ணனார்கூற, நாணன், "அங்குப் போனால் நல்ல காட்சியே காணும், இம்மலையில் செவ்வே எழுந்து கோணயில் குடுமித்தேவர் இருப்பார், கும்பிடலாம்" என்று சொன்னான். "இஃது ஆவதென்ன ஆச்சரியம்! இதனைக் கண்டு சேருந்தோறும் என்மேல் உள்ளதொரு பாரம் குறைந்து வருவது போல ஓர் அனுபவம் உண்டாகின்றது ஆசை பொங்கிய மனத்தில் வேறுமோர் விருப்பம் விளைகின்றது அங்குத் தேவர் இருக்கும் இடம் எங்கே? போதுவாயாக" என்றார் திண்ணனார் இவ்வாறு சொல்லிக்கொண்டு மூவரும் திருமுகலியை யடைந்தனர். அதன் கரையில் ஒரு சோலை நிழலிலே பன்றியை இட்டுக் காடனை நோக்கி "நீ இங்கு மரக் கடைகோல் பண்ணி நெருப்பை உண்டாக்கு. இம்மலையேறிக் கண்டு நாங்கள் வந்தணைவோம்" என்று சொல்லி நாணனுடன் திண்ணனார் போயினார் திருக்காளத்தியைக் கண்டவண்ணமாகவே ஆற்றில் இறங்கிக் கடந்து சென்று திருமலைச்சாரல் சேர்ந்தனர் அப்போது சூரியன் உச்சியிற் சேர்ந்தனன். அத்திருமலையின் உச்சியில் பஞ்சதுந்துபி ஓசைகள் கடல்போல முழங்கின. அது கேட்ட திண்ணனார் "இது என் கொல்? நாணா!" என்று கேட்க, அவன் "இம்மலைப் பெருந்தேனைச் சூழ்ந்துகொண்டு மதுமலர் ஈக்கள் மொய்த்தெழும் ஓசைபோலும்" என்றான் முன்னேசெய்த தவத்தின்பெருக்கமானது முடிவில்லாத அன்பை எடுத்துக்காட்ட, அதனால் அளவில்லாத ஆசைபொங்க, எலும்பும் உருகுமாறு உள்ளே எழுந்த பெருவேட்கையோடும் திருமலையை நோக்கித் திண்ணனார் சென்றனர் நாணனும் அன்பும் முன்பு வழிகாட்ட, ஏறிச் சென்று பேணுதத்துவங்களென்னும் படிகளையேறி, ஆணையாகியசிவத்தை யடைபவர்போலத் திண்ணனார் நீண்ட மலையை ஏறி நோக்கச் சென்றனர் அவ்வாறு சென்றவர் காளத்திநாதரைக் காணுதற்முன்னே அவரது கருணை கூர்ந்த அருட்டிருநோக்கம் இவர்மேற் பதிந்தது பிறப்பிற் றங்கிய முன்னைச் சார்புகள் எல்லாம் விட்டகன்றன திண்ணனார் ஒப்பற்ற அன்பே உருவமாக ஆயினார் அந்நிலையில் திருக்காளத்தி நாயகரைக் கண்டார். பெருமகிழ்ச்சியாகிய அன்பின் வேகத்தினால் மிக விரைந்து ஓடிச்சென்று தழுவி

**திருக்காளத்தி கண்டு சேர்தல்**

**காளத்தியப்பர் அருணோக்கத் தால்அன்புருவ மாதல்**

ளர்; உச்சி மோந்தார்; நெடுநேரம் பெருமூச்சுவிட்டு நின்றார்; மயிர்க்கால் தோறும் புளகம் பொங்கிற்று. கண்களினின்றும் நீர் அருவிபோலப் பாய்ந்தது. "அடியேனுக்கு இவர் தாம் இங்கே அகப்பட்டார்! அச்சோ!" என்று ஒப்பற்ற அன்புநிலை தோன்ற "ஐயோ! யானை புலி முதலிய கொடிய விலங்குகள் திரியும் இக்காட்டில் மறவேடுவர் போல நீர் தனியே இருப்பதோ?" என்று மனம் நைந்தார். கையிற்றாங்கிய வில் அவரை யறியாமலே, நழுவி வீழ்ந்தது. தேவர்மேல் இருந்த அடையாளங்களைக் கண்டு "இவர்க்கு இந்தப் பச்சிலையோடு பூவுமிட்டு நீரும் வார்த்து இச்செயல் செய்தார் யாரோ?" என்றனர். உடனின்ற நாணன் "இது நான் அறிந்துளேன். உன் தந்தையோடு முன்காலத்தில் ஒரு நாள் வேட்டையாடி இம்மலையில் வந்தோம். அப்போது ஒரு பார்ப்பான் இவரைக் குளிர்ந்த நீராலாட்டி, இலையும் பூவும் சூட்டி, உணவு ஊட்டி முன்னே ஏதோ சொல்லிப் போயினன். இன்றும் அவனே செய்தானாகும்" என்று சொன்னான். அது கேட்ட திண்ணனார், திருக்காளத்தி நாயனாருக்கு இனிய செய்கைகள் இவையே என்று இதனையே கடைப்பிடித்துக் கொண்டனர். "இவர் தனியராயிருக்கின்றார், இவரைப் பிரியவும் ஒண்ணாது. இவர் உண்ண இறைச்சியுமிடுவாரில்லை, அதனாற் பிரிந்துபோய் இறைச்சிகொண்டு வரவும் வேண்டும்" என்று எண்ணமிட்டவராய்ச் சிறிது போவர், மீண்டு வருவர், தழுவிக் கொள்வர், மீளவும் போவர், ஆசையொடும் பார்த்து நிற்பர், "நானேபோய் நல்ல இறைச்சியைக் குற்றமறத் தெரிந்து கொண்டு வருவேன்" என்பர். "யாவர் உமக்குத் துணையாவார்?" என்று போகத்துணியேன், நீர் பசித்திருக்கப் பார்த்துக்கொண்டு இங்கு நிற்கவும் மாட்டேன்' என்று கண்ணீர் பெருக, ஒருவாறு போய்வரத் துணிந்து வில்லும் அம்பும் எடுத்துக் கொண்டு தேவரை வணங்கிப் போயினார்.

இவ்வாறு அரிதின் நீங்கிய திண்ணனார் உலகில் பிறந்துறைகளின் வேட்கை முற்றும் நீங்கினவராய், அன்பினாற் செலுத்தப்பட்டுப் போய்த், திருமுகலியாற்றினைக்

**முதல் நாட் பூசை**

கடந்து அக்கரையிற் சோலையைச் சேர்ந்தனர். காடன் எதிரில் வந்து தொழுது, "தீக்கடைந்து வைத்தேன், பன்றியின் உறுப்புக்களை யெல்லாம் உங்கள் குறிப்படி சரிபார்த்துக் கொள்ளுங்கள், நாம் திரும்பிப்போதற்கு இவ்வளவு நேரம் நீங்கள் தாழ்த்தது என்ன காரணம்?" என்றான். அதற்கு நாணன், "அங்கு இவன், வங்கினைப் பற்றிப் போகாத வல்லுடும்பு போல மலையிற் றேவரைப் பற்றிக் கொண்டு விட்டு நீங்காதவனானான், இங்கும் அத்தேவர் தின்பதற்கு இறைச்சி கொண்டு போகவே போந்தனன், நமது குலத் தலைமையை விட்டான்; தேவர்க்கே கலப்பட்டான்" என்றான். காடன் "திண்ணா! என்ன காரியம் செய்தாய்? என்ன மயக்கங்கொண்டாய்? நீ எமது குலமுதல்வனல்லவா?" என்று சொல்லத், திண்ணனார் அவனது முகத்தையும் நோக்காராய்ப் பன்றியைத் தீயில் வதக்கினார். நல்ல தசைப்பகுதிகளை வேறுவேறாக அம்பினால் அரிந்து கோலிற் கோத்துக் காய்ச்சிப் பதத்தில் வேவவைத்து நல்ல சுவைப்பகுதியைக் காணும் பொருட்டு வாயிற்போட்டு அதுக்கிப் பார்த்து நல்லனவற்றை முன்னாகத் தைத்துக் கொண்ட தேக்கிலைக் கல்லையில் இட்டார். பக்கத்தில் நின்ற நாணனும் காடனும் "இவன் மயக்கம் முதிர்ந்தனன், நல்ல இறைச்சியைக் காய்ச்சி அதுக்கி உமிழ்கின்றான், பசிக்க உடையனாகிலும் பேச்சிலான், நமக்கும் பேறுதரும் தன்மையும் உணர்வில்லை, இத்திண்ணன் தேவர் மயக்கங்கொண்டான், இதனைத் தீர்க்கும் வழியையறியோம், நாகனைத் தேவராட்டியுடன் கூட்டிவந்து இதனைத் தீர்க்கவேண்டும், வேட்டைக் காட்டுக்குச் சென்று ஏனை ஏவலாட்களையும் கூட்டிச் செல்வோம்" என்று தமக்குள் எண்ணி முடித்துப் போய்விட்டார்கள். அவர்கள் போனதை இவர் அறியார். விரைவில் கல்லையில் ஊனமுதம் அமைத்துக் கொண்டனர். திருமஞ்சனத்துக்காகப் பொன்முகலியின் நல்ல நீரைத் தமது தூய வாயினில் முகந்து

கொண்டார். தூய நறிய பூ இலைகளைத் தமது குடுமிமேற் செறிய வைத்துக் கொண்டார். ஒரு கையில் வில்லும் அம்பும் மற்றொருகையில் ஊனமுதக் கலையும் ஏந்தினார். தேவர் மிகப்பசித்திருப்பார் என்று இரங்கி மிக விரைவாக மலையை அடைந்தனர். பசியால் நாயனார் இளைத்தனர் என்று எண்ணி விரைவாகச் சென்று அவரது திருமுடியில் இருந்த மலர்களைத் தமது காலில் வளைத்த அழகிய செருப்பினால் மாற்றினார். வாயிற் கொண்ட திருமஞ்சன நீரை விளைத்த அன்பை உமிழ்வார் போல அவரது திருமுடிமேல் விட்டார். தம் குஞ்சியிலே கொண்டுவந்த திருப்பள்ளித்தாமத்தை அவரது திருமுடியிலே வணங்கிச்சாத்தினார்; ஊனமுதக் கலையைத் திருமுன்னர் வைத்துக் "கொழுத்த தசைகளைத் தெரிந்து கோலிற் கோத்து, அனலிற் பதத்திற்காய்ச்சிப், பல்லினால் அதுக்கி, நாவினாற் பழகிய இனிமையும் பார்த்து நான் படைத்த இவ்விறைச்சி மிக இனியது நாயனீரே! தேவரீர் அமுது செய்தருளும்" என்று சொல்லித் தேவரை ஊட்டினார்.

**முதல் நாள் இரவு**

இவ்வாறு பூசைசெய்த திண்ணனார் மேலும் இறைச்சியை அவருக்கு ஊட்ட வேண்டும் என்று விரும்பி ஆசைகொண்டனர். அது கண்டவன்போலச் சூரியன் மலையிற்றாழ்ந்தான். அந்திமாலையும் அணைந்தது. இரவில் விலங்குகள் வந்து தீமைசெய்யும் என்று அஞ்சியவராய்த் திண்ணனார் உண்மையன்பு தாங்கிக் கையிற் சிலையுந்தாங்கி, இறைவர் பக்கத்தில் நின்று இரவு முழுதும் உறங்காது காவல்புரிந்தனர். பெருமுனிவர்களும் தேவர்களும் மலையிலும் காட்டிலும் சேர்ந்து பெருந்தவம் செய்தும் காணுதற்கரிய இறைவரை ஆராத அன்பினில் நேர்பெறக் கண்டுகொண்டே நீண்ட இருள் நீங்க நின்றார். முத்து, செம்மணி முதலியவைகள் எங்கும் மின்னின, பச்சை, நீலம் முதலியனவும் விட்டுவிட்டு ஒளி வீசின, சோதிமரங்களும், முழைகளில் விளக்காக மந்திகள் வைத்த மணிகளும், மாமுனிவர்களது அரும்பெருஞ் சோதியும் பேரொளி செய்தன. ஆதலின் எந்தையாரது திருக்காளத்தி மலையில் இரவொன்றில்லை.

**இரண்டாம் நாட் சிவகோசரியார் பூசை**

இரவு நீங்கப் புட்கள் சிலம்பும் ஓசை கேட்டுப் புலர் காலையில் உருமிகத் தெரியாப்போதில் தேவரைத்தொழுது, வில்லேந்தி, அவர்க்கு அமுதுகொண்டு அணைவதற்காகத் திண்ணனார் போயினர். சூழ்ந்திருந்த கருந்திரையை நீக்கிக் கைகாட்டுவோனைப்போலக் கதிர்காட்டி ஞாயிறு எழுந்தனன். அப்போது, காளத்திநாதரை ஆகமவிதிப்படி பூசித்துவரும் தவமுடைய **சிவகோசரி முனிவர்** வழக்கம்போலப் பூசை செய்தற்பொருட்டுப் பூவும் நீரும் பிறவுங்கொண்டு அணைந்தனர். சிந்தை நியமத்துடன் திருமுன்பு செல்கின்றபோது அவர் அங்கு வெந்த இறைச்சியும் எலும்பும் கிடக்கக்கண்டார்; அகலத்தாண்டி மிதித்தோடினர்; "ஓ கெட்டேன்! யாவர் இவ்வநுசிதம் செய்தனர்? திருமுன்பு நோவர அஞ்சாத வேடரே இது செய்திருத்தல்வேண்டும், தேவதேவீசனே! உமது திருமுன்பிலேயும் இதுசெய்து அவர்கள் போவதா? இதற்குத் தேவரீர் திருவுள்ளம் இசைவதா?" என்று அழுதார், விழுந்தார், அலமந்தார். அதன்பின் பூசையினைத் தாழ்க்காது செய்யும் பொருட்டுத் திருவலகால் அந்த இறைச்சியெலும்புக் கலையினையும், செருப்படிச்சுவட்டினையும், நாயடிச்சுவட்டினையும் மாற்றினார். பின்னர்த் திருப்பொன்முகலியில் மூழ்கி விரைந்து வந்தனர். புகுந்த அத்தீங்கை நீக்கும் பவித்திரமாகிய செயல் செய்து தொழுது அற்றைக்கு அங்குப் பெறுவனவற்றைக் கொண்டு திருமஞ்சன முதலிய பூசை முழுதும் முறையாகச் செய்து முடித்து இறைவனை வணங்கினர். "தனிமுதலாம் பரன்" என்று பன்முறையும் துணிந்த மறைமொழிகளாலே துதி செய்து இறைவனிடம் விடைபெற்றுக்கொண்டு தபோவனத்திற் போயினர்.

இப்பால், திண்ணனார், பெருமலைச்சாரலில் புனமேய்ந்து வரும் பெரும்பன்றிகளைத் தனிப்பதேயும், மானினங்கள் ஒருவழிச் சென்று ஏறும் துறையில் ஒளி நின்று கொன்றருளியும், பயிலோசையாற் கலைகளை அழைத்து அம்பு எய்தும், மரையினங்களைத் துயிலும் இடையில் எய்தும், கடமைகளைத் தொடர்ந்து எய்தும் இவ்வாறு உச்சி வேளை வெயில் முதிர வேட்டை முடித்தனர். இப்படிக் கொன்ற விலங்குகளை ஒரு சூழலிற் சேர்த்தனர்.

**இரண்டாம் நாள் திண்ணனார் பூசை**

அருகே தீக்கடைகோல் வெட்டினர். கோற்றேனைகளையும் வேண்டுமளவும் மிக முறித்தனர். வட்டமாக உள்ளிடம் அகலமாகப் பெருங்கல்லைகளைத் தேக்கிலையாற் கோலிக் கொண்டனர். விறகுகளை முறித்து அடுக்கித் தீ உண்டாக்கி வளர்த்தனர். மிருகங்களை அம்பின்றைக் கொத்திக் குடைமிட்டு, இறைச்சிகளில் வதக்குவவைவற்றை வதக்கிக், கூரிய அம்பின்றைக் கீறிவகுத்து ஒரு கல்லையிலிட்டுப், பின்பு கோலிற் கோத்துக் கனலிற் பதம் பொருந்தக் காய்ச்சினர். எண்ணில்லாத தேவர்களுக்கு இடும் அவியுணவைத் தீக்கடவுளின் வாயில் வைத்ததுபோலக் காளத்திநாதருக்கு ஆகும் பரிசு சோதித்துச் சுவை கண்டு அமுது அமைப்பதற்குத் திண்ணனார் தமது திருவாயில் ஊனமுது அமைத்தனர். இவ்வாறு சுவை பார்த்த நல்ல இறைச்சிப் பகுதிகளை ஒரு கல்லையிற் படைத்து அதில் தேன் பிழிந்து கலந்தனர். திருப்பள்ளித்தாமமும் தூய திருமஞ்சனமும் முன்புபோலக் கொண்டு விரைவில் வந்தனர். திருக்காளத்தியப்பரை அடைந்து முனிவர் பூசை நின்மாலியங்களை முன்புபோல நீக்கி முன்னாட்போலவே பூசையினை முடிப்பாராய், ஊனமுதத்தைக் கல்லையுடன் திருமுன்பு வைத்து, "இது நேற்றுக்கொண்ட ஊனமுதைவிட நன்று, எந்தையோடு மான், கலை, மரை, கடமை இவைகளின் ஆகிய இறைச்சி, அடியேனும் சுவைகண்டேன், தேனும் உடன் கலந்தது; தித்திக்கும்" என மொழிந்து அன்போடு தேவரை அமுது செய்வித்தனர்.

**மூன்றாவது நான்காவது நாட்களில் இவர் பூசை**

திண்ணனார் இவ்வாறு தமது ஒப்புயர்வற்ற பூசைசெய்து அந்நெறியிலொழுகுவாராகிக் காளத்தியப்பர் திருமுன்பு இரவில் உறங்காதவரும் பகலில் வேட்டையாடுவாருமாயினர். பெருமுனிவரும் நாள்தோறும் வந்து வேடர்பூசைக்காக மனந்தளர்ந்து அதனைத் தீமை என்றுகொண்டு, நீக்கித், தூய்மைசெய்து ஆகமங்களின் விதித்தபடி அருச்சித்து அந்நெறியில் ஒழுகுவாராயினர்.

**நாகன் வந்து கண்டு திண்ணனாரைக் கைவிட்டகலுதல்**

நாணனொடு காடனும்போய் நிகழ்ந்தவற்றையெல்லாம் நாகனிடம் சொல்ல, அவன், உணவும் உறக்கமுமில்லாதவனாய்த் தேவராட்டியையும் கூட்டிக்கொண்டு மகனார்பால் வந்தான். அவர்கள் தாங்களறிந்தபடியெல்லாம் பேசித்தும் அவர் தமது குறியில் வாராமைகண்டு கைவிட்டகன்றனர். வேதகத்தினால் இரும்பு பொன்னாகியதுபோல முன்பு திருக்காளத்தி முதல்வனாரது அருட்டிருநோக்கத்தால் யாக்கைப் பரிசும் இருவினையும் மலமூன்றும் அற அன்புபிழம்பாகித் திரிவாராகிய திண்ணனார் அவர்களுடைய கருத்தின் அளவில் அமைவரோ? அமையார்.

**ஐந்தாநாள் முனிவர் பூசையும் திண்ணனார் பூசையும்**

அந்நிலையிலே திண்ணனார் அறிந்தவாறு பூசித்தனர். முனிவர் ஆகமப்படிபூசித்து "என்னுடைய நாயகனே! இதுசெய்தாரைக் காணேன். இத்தீமையை உனது திருவருளால் ஒழித்தருளவேண்டும்" என்று பிரார்த்தித்துப் போயினர். அன்று இரவு முனிவர்து கனவில் இறைவர் எழுந்தருளி "அவனை வேடுவனென்று நீ நினையாதே! அவன் செயல்களை நாம் உரைக்கக் கேள். அவன் வடிவமெல்லாம் நம்மிடத்துக்கொண்ட அன்பேயாம்! அவன் அறிவுமுழுமையும் நம்மையறியும் அறிவேயாம்! அவனது செயல்கள் எல்லாம் நமக்கு இனியனவேயாம்! அவனது நிலையிது. நாளைக்கு நீ நம

பக்கல் ஒளித்திருந்தால் நம்மிடத்து அவனுக்கிருக்கும் பரிவின் தன்மையெல்லாம் காணகின்றாய். மனக்கவலை ஒழிக!'' என்றருளிச்செய்து போயினார்.

ஆறாநாள் முனிவர் பூசை - திண்ணனார் கண்ணப்பராதல்

முனிவர் கனவுநீங்கி விழித்தெழுந்து விடியுமளவும் துயிலாதவராகி, அற்புதமும் பயமுமடைந்து, அருணோதயகாலத்தில் எழுந்து முன்னுளிற்போலவந்து திருமுகலியில் மூழ்கினார். பலமுறையும் தமது பெருமானது அருளிப்பாட்டை நினைந்தபடியே திருக்காளத்தி மலையேறி இறைவனைப் பூசித்துப் பின்பாக ஒளித்திருந்தனர். திண்ணனார் ஆறாவதுநாள் அதிகாலையில் முனிவனார் வருவதன்முன் போய் முன்புபோலத் தனிப்பெரு வேட்டையாடினார். ஒப்பற்ற ஊனமுதமும், திருமுடியில் ஏறும் புதுமலரும், நல்ல திருமஞ்சனமும் வெவ்வேறியல்பினில் அமைத்துக்கொண்டு, இத்தனைநேரம் தாழ்த்தேன் என்று மிகவிரைவாகத் திருக்காளத்தியப்பரிடம் வந்தணையாநின்றார். அவர்முன்கூடிய பலசகுனங்களும் தீங்குகுறித்துக்காட்டின. “இத்தீயபுட்கள் உதிரங் காட்டுகின்றனவே! ஓ கெட்டேன்! என் அத்தனுக்கு என்ன நேர்ந்ததோ?” என்று திண்ணனார் அணையும்போதில், அவரது அன்பை முனிவர்க்குக் காட்டும் பொருட்டுத் திருக்காளத்தியப்பர் தமது சிவலிங்கத் திருமேனியில் முகமும் அதில் மூன்று கண்களுமாகக் காட்டி, அக்கண்களுள் வலத்திருக்கண்ணில் துண்ணென உதிரம் பாயக் காட்டியிருந்தனர். இதனைத் தூரத்திற் கண்ட திண்ணனார் வல்விரைந்தோடி வந்தார், குருதியைக் கண்டார், வாயிலிருந்த நன்னீர் சிந்திற்று, கல்லையுடன் ஊனமுதம் கையிலிருந்து வீழ்ந்து சிதறிற்று, மற்றைக் கையிலிருந்த வில்லும் வீழ்ந்தது, குஞ்சியினின்றும் புதுமலர்கள் அலைந்து சோர்ந்தன. திண்ணனார் நிலத்திற் பதைத்து வீழ்ந்தார்; பின் எழுந்தார், சென்று இரத்தத்தைத் துடைத்தார்; இரத்தம் வீழ்வது நிற்கவில்லை. மனமழிந்து பின்னும் வீழ்ந்தார் சிறிது தேறி “இதனை யாவர் செய்தவர்” என்று வில்லும் எடுத்து அம்புகளையும் தெரிந்துகொண்டு, “எனக்குப் பகையாய இம்மலையிற் கொடிய வேடுவர் செய்தாருளரோகொலோ? சிங்கம் முதலிய கொடுவிலங்குகள் செய்தனவோ? கண்டறிந்து ஒறுப்பேன்” என்று அக்குன்றச் சாரலில் நெடுந்தூரமும் பக்கத்திலும் வேறெங்கும் தேடிச்சென்றார். வேடர்களையும் விலங்குகளையும் காணவில்லை மீண்டும் திருக்காளத்தி நாதரிடம் வந்து அவரது பாதங்களைத் தழுவிக் கட்டிக்கொண்டு, “பாவியேன் கண்ட வண்ணம் இப்பரமனார்க்கு என்னோ அடுத்தது? உயிரினும் இனிய இவ்வத்தனுக்கு என்னோ அடுத்தது? மேவினர் பிரியமாட்டாத இவ்விமலனார்க்கு என்னோ அடுத்தது? செய்யலாவதொன்று மறியகில்லேனே!” என்று கண்ணீர் வாரக் கதறினார் பின், “என்ன செய்தால் இது தீருமோ? இத்தீங்கு செய்தாரைக் காணேனே! வேடர்களது அம்புப் புண்களை நிச்சயமாகத் தீர்க்கும் மூலிகைகளை இம்மலையிற் பொன்செய்யும் தாழ்வரையிற் றேடிக் கொண்டு வருவேன்” என்று போனார் இனத்தினிற் பிரிந்த ஏறுபோல வெருக்கொண்டு, வேறு வேறு வனங்களெங்கும் நினைத்து அம்மூலிகைகளைப் பறித்துக் கொண்டு நாதரிடம் வைத்துத் தமது மனவேகத்தினும் கடிது திரும்பினார் அந்த மருந்துகளைப் பிழிந்து தேவரது கண்ணில் வார்த்தார் குருதி நிற்கவில்லை இன்று, இதற்கு இனிச் செய்வதென்னே என்று எண்ணிப் பார்த்தார் “ஊனுக்கு ஊனே” உற்ற நோய் தீர்ப்பது என்ற பழமொழி அவரது நினைவுக்கு வந்தது வரவே, இனி, என் கண்ணைத் தோண்டி அப்பினால் புண்ணீர் நிற்கவுங் கூடும் என்று, உடனே, மகிழ்ச்சியுடன் திருமுன்பு இருந்து தமது வலக்கண்ணைக் கூரிய அம்பினாற்றோண்டி முதல்வர் கண்ணில் அப்பினார் குருதி வாராமல் நின்றது கண்டார், குதித்தார், தோள் கொட்டினார்; கூத்தாடினார், “நான் செய்த இந்த மதி மிக நன்று” என்று நகைத்தார், உன்மத்தர்போலாயினார்.

**கண்ணப்பர் காளத்தியப்பரின் வலத்தில் என்றும் நிற்றல்**

வலக்கண்ணிற் கண்ணப்பிய வள்ளலாராகிய கண்ணப்ப தேவரின் நலத்தினைப் பின்னும் காட்டுதற்காகக் காளத்திநாதர் தமது இடக்கண்ணில் உதிரம்பாயக் கண்டனர். அதனைக் கண்ணப்பர் கண்டனர் "ஓ! கெட்டேன்! எனது நாயகர்க்கு ஒரு கண் குருதி நிற்க, மற்றைக் கண் குருதி மண்டிப் பொங்கியது. இதற்கு அஞ்சேன், மருந்து கைக்கண்டேன். எனக்கு இன்னும் ஒரு கண் உண்டு. அதனைத் தோண்டி அப்பி இப்புண்ணை ஒழிப்பேன்" என்று துணிந்தார். கண்ணுதல் கண்ணில் தமது கண்ணை அவ்வாறு அப்பும்போது நோக்கு காணும் பொருட்டு அவரது கண்ணில் தமது இடது காலை ஊன்றிக் கொண்டார். உள்நிறைந்த விருப்பத்தோடும் ஒப்பற்ற தனிப்பகழி கொண்டு தமது இடது கண்ணில் ஊன்றினார். தேவதேவர் சரிதத்திலர் அவரது திருமேனியில் முளைத்தெழுந்த கை கண்ணப்பனாரது திருக்கையினை அம்புடன் பிடித்துக் கொண்டது. அதற்கு முன் அவரது அருமநாயகரினின்றும் "நில்லு கண்ணப்ப! நில்லு கண்ணப்ப! என் அன்புடைத் தோன்றல் நில்லு கண்ணப்ப!" என்று மும்முறை எழுந்து தடுத்தது. இவை முழுதும் ஞானப் பெருமுனிவர் கண்டார். வேதங்கள் முழங்கப் பிரமன் முதலிய தேவர்கள் கற்பகப் புதுப்பூமழை பொழிந்தனர். கையைப் பிடித்துக் கொண்ட இறைவர் கண்ணப்பரை "மாறிலாய்! என் வலத்தில் நிற்க" என்றே நிலைபெற்ற பேரருள் புரிந்தனர்.

---

**தலவிசேடம்.**—**திருக்காளத்தி** - இத்தலம் **சீகாளத்தி** எனவும் வழங்கப்பெறும். இது திருத்தொண்டைநாட்டிற் பாடல் பெற்ற 32 தலங்களுள் 19-வது தலம். பொன்முகலி யாற்றின் கீழ்க்கரையிலுள்ளது. ஐம்பூதப்பெருந் தலங்களுள் **வாயுத்தலமாம்**. வாயுவின் இயக்கம் இறைவனின் பக்கத்தில் உள்ள திருவிளக்குச்சுடரின் அசைவினால் இன்றும் காணத்தக்கது. இது **தென்கயிலாயம்** எனப்படும். இம்மலையிற் றரிசித்த குறிப்பினால் திருக்கயிலாயத்தினை நினைந்து திருஞானசம்பந்த சுவாமிகளும் சுந்தரமூர்த்திகளும் இங்கிருந்தபடி வடக்கே நோக்கித் துதித்துத் திருப்பதிகங்கள் கட்டளையிட்டருளினர். அப்பர் சுவாமிகள் "தாணுவினை அம்மலைமேற் றாளபணிந்த குறிப்பினால், பேணுதிருக் கயிலைமலை வீற்றிருந்த பெருங்கோலம், காணுமது காதலித்தாக, "கயிலாயத் துச்சியுள்ளான் காளத்தியான்" என்று நாதனையென் கண்ணுளான் என்று துதித்துத் திருக்கயிலாய யாத்திரையில் வழிபட்டனர். இக்குறிப்புப்பற்றியே நக்கீரர் கயிலைபாதி காளத்திபாதி யந்தாதி பாடினர். ஆறாதாரத்தலங்களுள் **விசுத்தித் தானத்தலம்** என்ப. இது மகாபுராணங்களாலும் போற்றப்பட்ட பெருந்தலம். விட்டுணுமூர்த்தி, பிரமதேவர், இலக்குமி, சரசுவதி, திக்குப்பாலகர் முதலிய தேவர்களும், சனகாதி முனிவர்கள், அகத்தியர் வசிட்டர், உரோமசர் முதலிய பெருமுனிவர்களும், சுவேதாசுவதராதிய நூற்றுப்பன்னிரு தேவ இருடிகளும், யோகினிகளும், அக்கினிப்பிரபன் முதலிய அசுரர்களும், ஆதிசேடன் முதலிய நாகர்களும், மணிமான் முதலிய இயக்கர்களும், முசுகுந்தர் முதலிய பேரரசர்களும், நக்கீரர் இருகணியர் முதலிய அளவிறந்த பெரியோர்களும் பூசித்துப் பேறு பெற்ற தலம். **சீ** (சிலந்தி), **காளம்** (பாம்பு), **அத்தி** (யானை) என்ற மூன்றும் பூசித்துக் கதியடைந்த சிறப்பினைச் சீகாளத்தி என்ற தனது பெயராலே விளக்கி நிற்கும் தலம். (புள்ளிருக்கு வேளூர் - திருவாவினன்குடி என்பனபோல,) இத்தலத்து இறைவனது சிவலிங்கத் திருமேனி இரண்டு நீண்ட யானைக்கொம்புகள் கூடியன போன்றுள்ளது. அதன் உச்சியில் "ஐந்து கொலாமவ் வராடர வின்படம்" என்றபடி ஐந்தலைப் பாம்பின் படமும், அடியிற் சிலந்தியுருவமும் இன்றும் காணப்படுத் தலப்பேர் போலவே, நாதரும் சீகாளத்தியாய் விளங்குகின்ற பெருமையுடையது. **அன்பே உருவமாய்நின்ற கண்ணப்பர்** பூசித்து ஆறுநாளிற் பெரும்பேறு பெற்ற பெருஞ்சிறப்பு வாய்ந்ததனை உலகமறியும்.

கண்ணப்பரது பெருமையைச் சைவ சமய பரமாசாரியர் நால்வர்களும் துதித்துள்ளார் கள்; பட்டினத்தடிகள் முதலிய முற்றத்துறந்த ஞான முனிவர்களும் பாராட்டிச் சிர மேற் கொண்டனர்; சங்கராசாரியார் முதலிய மதாசாரியர்களும் போற்றி வணங்கினர் பல பெரியோர்களும் காளத்தியப்பரோடொப்பக் கண்ணப்பரையும் வணங்கிய சிறப் புடைய தலமாம். இங்கு ஆளுடைய பிள்ளையார் இறைவனைக் "கும்பிட்ட பயன் காண் பார்போல் மெய்வேடர் பெருமானைக் கண்டு வீழ்ந்து" வணங்கினர் என்பது பெரியபுரா ணம் சைவத்தெய்வத் திருமுறைகள் யாவும் எடுத்துப் போற்றுகின்ற கண்ணப்பரோடு பிரிக்கப்படாமல் இணைத்துப் பேசப்படுகின்ற சிறப்பு இத்தலத்துக்குரியது. இறைவனு டைய ஆணைப்படி அவரது வலப்பக்கத்தில் கண்ணப்பர் வெளிப்பட எழுந்தருளி யிருக் கிறார். அதுவன்றி, மலைமேல் நான்கு இடங்களில் கண்ணப்பர் சந்நிதிகள் உண்டு. திரு ஞானசம்பந்த சுவாமிகள் கண்ணப்ப நாயனாரை நினைந்து இத்தலத்துக்கெழுந்தரு ளும்போது வழியில் திருக்காளத்தி மலையைக் கண்டவுடன் பாடியருளிய பதிகத்தில் திருக்கண்ணப்பரது சரித்தத்தைச் சிந்தித்து "வாய்கலச மாகவழி பாடுசெயும் வேடன் மலராகுநயனங் காயகணையி னிடந்தீசனடி கூடுகா ளத்திமலையே" என்று பாடித் துதித்தனர் (மதுரைக்கு வரும் வழியில் மங்கையர்க்கரசியார் குலச்சிறையார் என் றிருவரும் பணியும் திருவாலவாய் என்று பாடியருளியதுபோல, பின்னர் இங்கிருந்து புறப்பட்டு எழுந்தருளும்போது நகருக்கு வெளியே வழியிற் புறத்துநின்று "எந்தையா ரிணையடி யென் மனத்துள்ளவே" என்று அவ்விறைவனைத் தம் மனத்துள் எழுந் தருளுவித்துத் துதித்துப் போந்தனர்.

சுவாமி - காளத்தியப்பர் - கணநாதர் - குடுமித்தேவர் தேவியார் - ஞானப்பூங் கோதையம்மையார் சுவாமி அம்மையார் பெயர்கள் இத்தலத் திருத்தாண்டகத்துட் காண்க. விநாயகர் - ஐஞ்சந்தி விநாயகர் தலவிருக்கம் - கல்லால மரம் - வில்வம் - தீர்த்தம் - பொன்முகலி; இது இங்கு வடக்கு நோக்கிச் செல்வதாற் சிறப்புடைய தென்பர். பிரம தீர்த்தம், சரசுவதி தீர்த்தம், சூரிய தீர்த்தம் முதலியனவும் உண்டு. இதற்குத் திருப்பதிகங்கள் 4. இரண்டு தல புராணங்களும் பல பிரபந்தங்களும் உண்டு.

இதனை இரேணுகுண்டா என்ற இருப்புப்பாதைச் சந்தி கடந்து சென்று காளத்தி என்ற (M. S. M.) இருப்புப்பாதை நிலயத்திலிருந்து வடகிழக்கே கற்சாலை யில் 2 நாழிகை யளவில் அடையலாம்.

---

கற்பனை :—(1) உலகினியல்

1 நாவலர் புகழ்ந்து போற்று நல்வளம் பெருகி நிறப்பது நல்ல நாடாம்

2. புலிக்குட்டி, யானைக்கன்று முதலிய இளவிலங்குகளுடன் ஆடும் வீரமுடை யார்கள் மலைவாணர்களது சிறுவர்கள். அவர்தம் சிறுமியர் அன்புடனணையும் பெட்டை மான்களுடன் ஆடுவர். சிறுவர் சிறுமியர்களின் ஆடல் வகைகளும், கலைப்பயிற்சி களும் வெவ்வேறியல்பினையுடையன இருவர்க்கும் ஒரே பயிற்சி தருதல் இயற் கைக்கு மாறுபட்டது

3 ஒரு மக்கட் கூட்டத்தாரின் வாழ்க்கைத்திறனை, அவர் பெரும்பான்மை வழங்கும் சொற்களாலறியப்படும். கொல், எறி, குத்து என்று ஆர்க்கும் ஓசைமிகுவது வேடரின் வாழ்க்கை இயல்பு காட்டுவதாம்

4 வன்றொழில் மறவர் அச்சமும் அருளும் என்றும் தம்பால் அடைவில்லாதவர்.

5 முருகப்பெருமான் தம்மை யியல்பின் வழிபட்டோர்க்கு மக்கட் பேற்றை யும் பிற எல்லா நலன்களையும் ஈந்தருளுவர்.

6 வன்வேடர்களிற் றாயும் தந்தையும் அவர்தம் குழவிகளும் கரிய நிறமுடை யவர் இவர்களிற் றாய்தந்தையர் மகவை ஈன்றெடுத்து ஏந்திமகிழ்தல் "பானமதியுவரி யீன்றால்" எனவும், "கருவரை காளமேக மேந்திய" தெனவும் காணுமியல்புடையது.

7. குழவிகளிற் காணும் குறிகள் அவற்றின் பிற்றை வாழ்வின் பெருமை சிறுமைகளைக் காட்டும்.

8. பருவந்தோறும் உரிய தெய்வங்களுக்குப் பெருமடை கொடுத்தலும், காப்பணிதல், ஐயவிப்புகையூட்டுதல் முதலியவை செய்தலும் குழவிகட்கு வரும் தீங்குகளைப் போக்குவனவாம்.

9. வில்வித்தை முதலிய கலைகளின் பயிற்சி, நன்னாளிலே, தெய்வந்தொழுது விழாக்கொண்டாடி, கலாசிரியன் பாற் றொடங்கத்தக்கது.

10. எந்தக் கலைப்பயிற்சியும் இடையில் விடப்படாமல் முற்றக்கற்றற் குரியது

11 உலகியற் கலைகள் முற்றக்கற்றலுக்குப் பதினாறு வயது ஏற்ற எல்லையாம்

12. உடலைப்பற்றிய கலைத்தொழில்களின் முயற்சி மூப்புவரக் குறைந்துவிடும்

13. மிருகங்கள் மீதூர்ந்து வந்து பயிர்களுக்கும் உயிர்களுக்கும் கேடு செய்யாத வண்ணம் நிங்கள் முறை வேட்டை செய்து அவற்றை அளவில் நிறுத்துவது மலைவாணர் மரபுக்குரிய வழக்கு.

14. தன் கீழ் வாழும் குடிகள் இனிதுண்டு தீங்கின்றி யிருக்கச் செய்தல் செங்கோலரசின் இன்றியமையாப் பெருங்கடமை.

15. மரபு வழிவழி வரும் அரசுரிமையேயாயினும், அது குடி மக்களின் அங்கீகாரத்தையும் விருப்பத்தையும் பற்றி நிற்பது உண்மை யரசாங்கத்தியல்பு

16. அரச குடும்பத்தார்களுக்கும் குடிகட்கும் நன்மை செய்தற்காகத் தேவபூசை செய்துவரப் படிதரம் வைத்துத், தேவராட்டியை நியமித்தலும், அந்நெறி வழிவழி வரச்செய்தலும் மலைவாணர்களுட் பழைய வழக்கம்

17. கன்னி வேட்டை தொடங்குமுன் வனதெய்வங்கள் மகிழக் காடுபலியூட்டுதல் வனவேடர்களின் வழக்கம்

18 மலைவேடர்களுள் அரசுரிமை தந்தைக்குப் பின் மகனுக்கு வழிவழி வருவதாயினும் மூப்படைந்த தந்தை தன் மகனுக்குத் தானே மரபுரிமை தந்து பட்டம் சூட்டுதலும் வழக்கு.

19 புலித்தோலிருக்கையில் அரசன் தன்னுடன் ஒரு சேர மகனை வைத்து "நமது மரபுரிமையை இனி நீ தாங்குவாய்" என்று சொல்லி உடை தோலும் சுரிகையும் கையிற் கொடுத்தல் மலை வேடர்களுள் அரசபட்டம் சூடும் முறை.

20. உச்சிவேளையை ஒரு நல்ல வேளையாகக் கொண்டு ஒழுகுதல் வேடர் மரபு. திண்ணனார் வில் பிடித்ததும் (689), அவர் முதலிற் காளத்திமலை யேறினதும் (750), இறுதியில் முதல்வனை யணைய மலையேறியதும் இவ்வேளையாம்.

21. வனவேடர் திங்கள் முறை வேட்டைக்குப் பலருங்கூடி உரியபடி தம்மை அலங்கரித்துக்கொண்டு, வில்லும் அம்புகளும் கொண்டு, பறைகள் முழக்கி, வேட்டை நாய்களுடன் பார்வை மிருகங்களையும் கொண்டு, போதல் மரபு

22. கொலையே புரியும் வேட்டையிலும் மலைவேடர்கள் கையாளும் அறநீதிகள் பல உண்டு விலங்குகளின் பின்புறமிருந்து அம்புஎய்யாது முன்னிருந்தே எய்தல்வேட்டையின் ஓர் அறமாம் அவர்களுள் வீரராயுள்ளோர் யானை, சிங்கம், புலி முதலிய பெருவிலங்குகளை வேட்டையாடுவர் அறப்பிராணிகளை எதிர்த்துக் கொல்லார் யானைக்கன்றுகள், ஏனை விலங்கினங்களின் இளமை, கருவுடைய பெட்டைகள் இவற்றை வேட்டையாடி அலைத்தல் செய்யார். ஓடி நின்ற பகைவிலங்கினைத் தூரத்தினின்று அம்பு எய்து கொல்லாது பக்கத்தில் நெருங்கிச் சுரிகையாற் றுணித்தல் அவர்களுள் வீரர் செயல்

## (2) அன்பினியல்

23 ஆவியினினியவர் சிவபெருமான். அவரிடத்திலே அன்பு செலுத்துவதே இன்பம் பயக்கும். ஏனைய விடத்துச் செலுத்தப்படுபவை எல்லாம் துன்பமாய் முடியும்.

24. கேட்ட மாத்திரத்தில் அன்பு பெருகி நிலையழிதல் தலையன்பாம் "முன்னவனுடைய நாமம் கேட்டாள்; மூர்த்தி யவனிருக்கும் வண்ணங் கேட்டாள், பின்னை யவனுடைய வாரூர் கேட்டாள்; பெயர்த்துமவனுக்கே பிச்சியானாள்" என்றபடி, இங்குத் திண்ணனார், "இந்தச் சேணுயர் திருக்காளத்தி மலைமிசை யெழுந்து செவ்வே, கோணமில் குடுமித்தேவர் இருப்பர் கும்பிடலாம்" என்று அவர் நாமமும், இருக்கும் வண்ணமும் ஊரும் கேட்டவுடன் அவ்விடத்தே அணைபவர் தம்மேற் பாரம் போவது போலும் உளது என வசமிழந்து தலையன்பு மீக்கூர்ந்தனர்

25 பல பிறவிகளிற் செய்து சேர்த்த தவங்களும், பயன் குறியாது செய்த சிவ புண்ணியங்களும் ஆகிய இவற்றின் மிகுதிப்பாட்டாற் சிவபெருமானிடத்துப் பத்தி விளைவதாம் திண்ணப்பனார், முற்பிறவியில் அருச்சுனனாயிருந்து தவஞ்செய்து பெற்ற வரத்தினால் திருக்காளத்தியைக் கண்டவுடனே பற்றிக்கொண்டு பேறடைந்தனர்.

26 சிவன்பாற் சென்றடைபவர்கள் உண்மையிலே தத்துவங்களாகிய படிகளையே கடந்து அணைபவராவர்.

27 நாயகன் நாயகி பேரைக் கேட்டவுடன் வசமழிதல் தலையன்புடையார் தன்மை. கண்டபோது வசமிழத்தல் இடையன்புக்கும், கூடியபோது அவசப்படுதல் கடையன்புக்கும் இலக்கணமென்பர். ஆகவே கேட்டலும் வசமிழக்கும் தலையன்புடையார்க்கு நாயகனைக் காணலும் கூடுதலும் உண்டாயினபோது அளவுகடந்து அன்பு மிகப் பெருகும். இது இங்கே நாயகனுடைய பெயரும் வண்ணமும் ஊரும் கேட்டு அவர்க்கே பிச்சராகிய திண்ணனார் சென்று அவரைக் கண்டதும் அன்பின் வேகம் மேற்செலல் மோகம் மிக்கு ஓடிச்சென்று தழுவினதாலும், மோந்து உயிர்த்து நெடிதுபோது நின்று திருமேனி யெங்கும் புளகம் பொங்கவும் கண்ணீர் அருவிபோலப் பாயவும் இருந்ததனாலும் உணரப்படும்.

28. அன்புடையார் செய்கை எவையேயாயினும் அவை அன்பு செய்யப்பட்டார்க்கு உவகையே விளைக்கும்; அநுசிதத்தையும் உசிதமேயாக்கும். "குறையாத உவகைக் கண்ணீ, ராரூக வானந்தத் தடியார் செய்த வனாசாரம் பொறுத்தருளி யவர் மே லென்றும், சீரூர் பெருமான்" (திருமாற்பேறு - திருத்தாண்டகம் - 5) என்ற அப்பர்சுவாமிகள் திருவாக்கும், "அவனுடைய செயலெல்லாம் நமக்கினிய வாமென்று" இறைவன் உணர்த்தியருளியதும் காண்க.

29 அன்பின் விளைந்த முதிர்ச்சியிலே, அன்பு செய்வாரும் அன்பு செய்யப்பட்டாரும் பிறிவறியாது ஒன்றாந்தன்மை பெறுவர். சிவனிடத்து முதிரும் அன்பு சிவமாய் விளைந்து முடிவிலா இன்பமாகிய சிவத்துவத்தை விளங்கச்செய்யும் "புணர்ச்சிபு ளாயிழை மேலன்பு போல, வுணர்ச்சியு ளாங்கே யொடுங்கவல் லார்க்குக், குணர்ச்சியிலாது குலாவி யுலாவி, யணைத்தலு மின்ப மதுவிது வாமே", "அன்பே சிவமாவது" என்பன திருமந்திரம்.

30 சிவனிடத் தன்புமிகுந்து முதிர்ச்சி யுற்றார்க்கு ஏனை உலக அனுபவங்கள் தோன்றா. சிவானுபவமும் அதற்காவனவும் மட்டுமே தோற்றப்படும்

31 அன்பு செய்வார் தம்மால் அன்பு செய்யப்பட்டார்க்கு இனியவையே தமக்கு இனியவையாகவும், அவர் துன்பம் தமது துன்பமாகவும் கொண்டொழுகுவர், தமக்கென்று வேறு செய்யலும் வேண்டார், வேறு இன்ப துன்பங்களு மிவர்க்கில்லை.

32 அன்பின் முதிர்ச்சியுடையாரது சொற்செயல்கள் உன்மத்தர் செயல்போல உலகம் காணத்தக்கனவா யிருக்கும். "பித்த னென்றெனை யுலகவர் பகர்வதோர் காரண மிதுகேளீர்", "பித்தித்து வென்பபிறர் நகைக்கவரு நாளாஞ், சத்திபதிய" முதலியவை காண்க "தேவுமால் கொண்டா னிந்தத் திண்ணன்" என வேடர்கள் திண்ணனாரைக் கண்டதும் காண்க.

33. மெய்யினின்று வேறெவற்றையும் உட்கொள்ளாத அன்புக்குச் சிவன் வெளிப்படுவன். "காவி லாதபே ரன்பினுக் கெளிவரும் குரவன்" என்றது காண்க.

34. அரிய தவஞ்செய்தும் மலையும் காடும் சோரதும் தேவர்களாலும் முனிவர்களாலும் காணுதற்கரிய சிவனை ஆராவன்பினிற் ஆரவமபெருகும் நிலையிற் காணலாகும்.

35. ஐம்புலனடக்கியாண்ட முனிவர்பாற்,காணத்தக்க பெருஞ்சோதி விளங்கித் தோன்றும்.

36. யாமஞ்சென்ற இரவு சுருங்கிய வைகறைப்பொழுதினைப் புட்கள் அறிந்து சிலம்பும் , அந்தப் புலர்காலையில் எழுந்து தெய்வவழிபாடும் அதற்குரியனவும் செய்தல் வேண்டும்.

37. இறைவனுக்கு உகந்த பூசைமுறைகளை அவர்தாமே வகுத்த ஆகமங்கள் எடுத்து இயம்பும்.

38. இறைவன் உரு - அருவுரு என்னும் திருமேனி கொண்டெழுந்தருளிய திருமுன்னர்ச் சிந்தை நியமத்தோடு செல்லுதல் வேண்டும்.

39. ‘ சிவபெருமானே தனி முதல்வனாகிய பரமன் ” என்று பலமுறையும் வேதங்கள் அறிந்து முறையிடும்.

40. எண்ணிறந்த கடவுளருக்கும் இடும் உணவை எரிக்கடவுள் தன்வாயிலே கொண்டு ஊட்டுவன.

41. சிவபெருமானது அருளாணைக்கத்தால் மாயாமல காரியங்களாகிய மாயேயம் எனப்படும் உடம்பு முதலியவற்றின் பரிசும், இருவினைகளும், மும்மலங்களும் அறும். அவ்வாறு அறப்பெற்றவர்கள் பிராரத்தானுபவத்தின் நிமித்தம் உடம்போடுவாழ்ந்தாலும் சிவன்முத்தராகி அன்புபிழம்பாகித் திரிவார். உலகைப் பாரார். உலகின் வழிவாரார்.

42. பக்குவப்பட்ட அடியார்களுக்குக் கனவில் உணர்த்துவது இறைவன்செய்யும் அருளிப்பாடுகளில் ஒன்றாகும்

43. அன்பு அதன் விளைவாகிய புறச்செயல்களாலே அறியப்படுவதாம்.

44. தீயபுட்கென்ற தீச்சகுனங்கள் உதிரங்காட்டும். அன்பின் முதிர்ச்சியுடையோர் தாம்காணும் தீச்சகுனங்களின் பலன் தமக்கு வருமென்றெண்ணாது தம்மால் அன்பு செய்யப்பட்டார்க்கு வரும் தீங்குகுறித்ததென்று எண்ணி மனங் கவல்வர்.

45. அன்பே இன்பம் , அன்பே சிவம் கலப்பில்லாத முடிவில்லாத இன்பத்திற்கு இருப்பிடம் சிவபெருமானேயாவர். சிவன்பாலன்பு எல்லையற்ற இன்பத்தைக் காட்டி விளைவிக்கும்

46. கண்ணப்பநாயனார் அன்பின் உயர்ந்த எல்லைக்கு இலக்கியமாய் விளங்குபவர்.

47. சிவகோசரியார்க்கும், அவர் மூலம் ஏழையடியார்களாகிய எம்போலிய உலகர்க்கும் கண்ணப்பரது அன்பின்றிறத்தைக் இறைவன் காட்டி யருளினார் அதனைக் கண்ணப்பரார் கண்ணுதலார் காட்டார்காலே? இதன் பொருட்டு இறைவன் திருமேனியிற் கண்ணினுதிரம் பாயக் கண்டது அவரது பொருட்டிறமாம்

48. கண்ணப்பரது அன்பின்றிறம், அன்பு செய்த அவரும் அன்பு செய்யப்பட்டு அவரை ஆண்ட காளத்தியாருமே அறியக்கூடியது ஏனையோரால் அறிதற்கரியது “ கண்ணப்ப னொப்பதோர் அன்பு ” என்ற திருவாசகமும், அதற்குக் “ கண்ணப்பனொப்பதோ ரன்பின்மை யென்றதனால் ” என்று உரை செய்த திருக்களிற்றுப்படியாரும் சிந்திக்கத்தக்கன.

49 திருஞானசம்பந்த சுவாமிகள் புண்ணியப்பதினாறாண்டிற் றிருப்பெருமணத்தில் ஞானத்திருமணத்திற் சிவபெருமானிடம் புக்கு ஒன்றி உடனானார். கண்ணப்ப நாயனாரும் அவ்வாறே எண்ணிரண்டாண்டின் செவ்வியிற் றிருக்காளத்திநாதரை அணைந்து மீளாநெறியில் அவரது வலத்தே நின்றருளினர். இருவரும் முருகப்பெருமான் திருவருள்பதிந்த பெரியார்கள் என்பது சிந்திக்கத்தக்கது.

கண்ணப்பநாயனார் புராணம் முற்றும்



# சேர்க்கை

## (1) கண்ணப்பநாயனார்புராணத்திற் காணும் உவமை முதலிய அணிகளுட் சில

| வரிசை எண் | புராணப் பாட்டு எண் | |
|---|---|---|
| 655 | 6 | இடிக்குர லெழிலிபோடு மாறுகொண் முழக்கம் காட்டு மதக்கைமா. |
| 656 | 7 | மைச்செறிந் தனையமேனி |
| 657 | 8 | வெஞ்சின மடங்கல் போல்வான். |
| 658 | 9 | சூரியப் பிணவு போல்வாள் |
| 662 | 13 | பான்மதி யுவரி யீன்றலென |
| 663 | 14 | முத்தும் மணியும் வேடர் பொழிதரு மழை. |
| 664 | 15 | கருவரை காளமேக மேந்திய தென்ன. |
| 666 | 17 | புண்ணியப் பொருளா யுள்ள பொருவில்சீ ருருவினான் |
| 671 | 22 | புண்ணியக் கங்கைநீரிற் புனிதமாந் திருவாய்நீர் |
| 673 | 24 | அடிச்சிறு தளிர். |
| 681 | 32 | மேருவானது கடலினஞ்ச மாக்கிட அவர்க்கே பின்னுங் கானவூ னமுத மாக்கும் சிலை. |
| 682 | 33 | நாகர் குலம்விளங்கரிய குன்று |
| 683 | 34 | செய்வரை புயப்ப |
| 689 | 40 | பொங்கொளிக் கரும்போ ரேறு. |
| 690 | 41 | கானவர்க் கரிய சிங்கம். |
| 691 | 42 | (1) கலைவளர் திங்களே போல். (2) எல்லை யில்லாப் புண்ணியந் தோன்றி மேன்மேல் வளர் வதன் பொலிவு போல்வார் |
| 692 | 43 | மைவண்ண வரைநெடுந்தோள் நாகன். |
| 695 | 46 | கிளைத்த சிலைக்கிழத்த தத்தை. |
| 701 | 52 | மைவிரவு நறுங்குஞ்சி வாசக் கண்ணி மணிநீல மலைபோன்று வந்த தென்ன. |
| 705 | 56 | செங்கண்வயக் கோளரியே றன்ன திண்மை |
| 707 | 58 | (1) மின்னிறத் திகழ்சங்கு விளங்கு வெண்டோடு. (2) மாமதிபோல. |
| 708 | 59 | ஏனக்கோடு துண்டப் பிறைபோல்வன |
| 712 | 63 | துங்கப்பெருமாமழை போன்று துண்ணெனவுருவிப்ப. |
| 713 | 64 | வல்லேறு போல்வார். |
| 714 | 65 | பானற்குலமாமலரிற் படர் சோதியார். |
| 716 | 67 | கைப்பற்றிய திண்சிலைக் கார்மழை மேக மென்ன. |
| 717 | 68 | ஆளியேறு போல ஏதும் அண்ணலார் |
| 718 | 69 | வென்றி மங்கை பாதம் முன் சென்று மீளுமாறு போல்வ செய்ய நாவின் வாய |
| 719 | 70 | சாவலைத் தொடக்கறுக்க ஏதுமையர் முன். வலைத் திறஞ்சமைத்து. |
| 720 | 71 | வேணியார்தமைக் கண்ணி னீடு பார்வை யொன்று கொண்டு காணு மன்பர்முன் ..எண்ணில்பார்வை கொண்டு. |

| வரிசை எண் | புராணப் பாட்டு எண் | |
|---|---|---|
| 722 | 73 | அடைட சேர்வரும் வேடர் சேனை கடறபரபபி டைப்புகும... களிகதி கனனி ஒததது. |
| 730 | 81 | தன்னெறியொறிா பொருவனகிகா தலையனபல கலைகள. |
| 731 | 82 | வருமிரவொரு பகலினைவன வெனமிடையுமஅவ வனமே. |
| 732 | 83 | மதிபிரிவுற வருமெனவிழு முழையைக கோவொடு பயில்பணிதொடா மிலையுள. |
| 733 | 84 | கடலவிரிபுனல கொளவிழுவன கருமுகிலென . புதல வனமேல கரு மலைகாடிக ளொடுவிழுவன. |
| 734 | 85 | இருவினைவலை யிடைகிலே சுழலபவா நெறிசோபுல னுறமனனிடை தடைசெயத பொறிகளினளவு பலதுறைகளில் நுழைமா கவா சாய் உள. |
| 736 | 87 | பெய்கருமுகிலென இடியொடு எனமமுடுகிய |
| 739 | 90 | குன்றிலையகிர் எரிகொடுவிழி ; இடிகுரல். |
| 746 | 97 | என்மேற் பாசம்போலதொன றுளது போலும |
| 750 | 101 | அதிர்தரு மோசை யைகதம் ஆகலி முழககம காட்ட |
| 752 | 103 | பேணுதற் குவக்க னௌனும பெருகுசோ பானம ஏறி ஆணையாம் சிவத்தைச் சார அணைபவர் போல. |
| 756 | 107 | வேட்டுவச் சாதியார போல கானில தனியே இருபபதே |
| 761 | 112 | கன்றகல் புனிற்றுப் போல்வர். |
| 765 | 116 | வல்வினைப் பற்றிப் போகா வல்லுமேம் பேன்ன நீங்கான். |
| 772 | 123 | விளைததஅன்பு உமிழ்வார் போல வாயினமஞ சனநீர் தனனை விமலனூ முடிமேல விட்டார |
| 775 | 126 | காளததி மனனனுாககு இனிய நலனுன இனனமும் வேணடுமென னும வேடா மனனனுாது காதலகணடு காககளை கூடபிய பகல வன மலையிற ருழநதான |
| 776 | 127 | மைவரை யென்ன. |
| 777 | 128 | காணுதற கரியார தமமை அன்பினிற் கண்டு கொண்டு |
| 778 | 129 | பரிதியோடுஞ சகதிரன் றலையுவாவில வெறபைககுமபிடச் சென ரு லொககும. |
| 779 | 130 | இருளடருக் கஞசி இரவிருள புடைகள தோறும ஒதுஙகினுலே போனதுளது. |
| 780 | 131 | (சோதிகளால்) திருககாளததி மலையினி லிரவொன றிலலை. |
| 783 | 134 | இரவி மாவினைகக இடடகருக திரையெடுததுக கைகாட்டுவான போல கதிர்காடடிஎழும போது. |
| 790 | 141 | (1) மைவணணக கருகுஞசி , (2) செயவணணத திறமொழிவேன தீவினையின திறமொழிவேன |
| 796 | 147 | கடவுளருககு இடுமுணவு கொணடுஊட்டும எரிவாயிலவைததெதன. |
| 806 | 157 | வடிவெலலா கமபகக லனபு |
| 810 | 161 | கதமுகி லென்ன நின்ற கண்படா வில்லியார் |
| 811 | 162 | தேறுவாாக கமுதமான செல்வனூ. |
| 818 | 169 | ஆவியி னினிய எகை ளததனூ, |

| வரிசை எண் | புராணப் பாட்டு எண் | |
|---|---|---|
| 820 | 171 | (1) இனத்திடைப் பிரிந்த சேங்கனேறென வெருக்கொண்டு. (2) பூதநா யகனபால வைத்த மனத்தினுங கடிது வந்து. |
| 821 | 172 | உற்றநோய தீர்பப தானுக கூடுனனு முனை. |
| 823 | 174 | (1) குன்றென வளர்ந்த தோளகள. (2) களிப்பினுலே உன்மத்தர் போல. |
| 827 | 178 | நாக கணகண ரமுத வாககு |

குறிப்பு :—இப்புராண முழுவதினும் தனமையணி முதலிய பலவும் சிறக்கக் காணலாம எலலா அணிகளையும குறித்தற் கிடநதாராமையின உவமை, உருவகம், தற்குறிப்பேற்ற முதலிய சில பொருளணிகளும, சிற்சில சொலலணிகளும் மட்டுமே இங்குத திரட்டப்பட்டன.

---

(2) கண்ணப்பநாயனுர்புராணத்தினிற் காணும்

ஞானசாத்திரக் கருத்துக்களுட் சில

1 நல்ல புதலவரைப பெறுதல முன்னை நற்றவத்தால் வரும (8)

2 முருகன வழிபாடு மகப்பேறு முதலிய எலலா வரங்களையும கொடுக்கும. வேண்டுவார் வேண்டுவதே யீவது இறைவனியல்பு. (12)

3 வனதெய்வங்கள் பலியூட்டலின மகிழும. (47)

4. ஆவேச பககத்தால மனிதாமீது தெயவம நிகழுதல உணடு. (52 - 65)

5 புறத்தொழில பிறவேயாயினும அகச்செயலால பாச வலைததொடக்கறுக்க நிகழும பெரியோா உளா முன்னைத தவமுடையோர்க்குப் புறச்செயல்களே தவப்பய னைத்தரும செயல்களாக மாறும. (70 - 71)

6. நலவினை தீவினை என்ற இரண்டும் மக்களை வசப்படுத்தி மீளப்பிறவித் தளளுவன இவையிரண்டினையும ஒன்றுபோலவே கண்டு கழிப்பர் அறிவுடையோர். இவற்றுட் சிக்குண்டு கலங்கும் மனம இவற்றினின்றும விடுதிபெற நன்னெறியிற்சேர முயலும. அதனைப புலன்வழிச செல்லுமாறு தடைசெய்து ஐம்பொறிகள பற்றி ஈாக்கும இயல்புடையன. (85)

7. சத்திநிபாத நிலைபெற்ற பக்குவமுடையாாக்கு அததீவிரம் மிகவே, உடற் பாசங் குறைவது போலத் தோனறும. நெஞ்சினில் அதுவரை இருந்த முன விருப்பங் கள்போக வேறு ஓா விருப்பம விளையும உலகை மறந்து இறைவனைக்கணடு அடை யும் வேகம மிகும (97)

8 ஓசையைந்து எனப்படும தேவவோசைகள உளநாட்ட மிக்கோாக்குப புலப்படும , உலகநாட்ட நிலையுடையோாக்குப புலப்படா (101)

9 முன்னைப் பிறவியிற்செய்த தவத்தின ஈட்டம முடுகி விளைந்து பயனதரும காலையில முடிவிலா இன்பமான அன்பை எடுத்துக்காட்டும. (102)

10. தத்துவப்படிகளையேறி மேற்சென்றால முடிவில் ஆணையாம சிவத்தைச்சார அணைதல பெறலாம. (103)

11 இறைவனது கருணை கூர்ந்த அருட்டிரு நோக்கம எய்தினோா பிறப்பின முன்னைச சார்புகளினீங்குவா, சிவவொளி நிழலில அன்புருவமாகுவா. (104)

12. மேற்கூறியவாறு சீவன முத்தநிலை யடைந்தோா உலகை மறந்து பாலா பித்தா பசாசா போன்ற நிலையடைகுவா. தமமை மறப்பா.

13. தரிசனவேதி என்னும் குளிகை எதிர்ப்பட்ட மாத்திரையில் இரும்பு பொன்னாவது போல இறைவனது அருளைக் கண்டவே ஆன்மாக்கள் யாக்கையின் பரிசம் நீங்கியவர்களாய் மல மூன்றும் அறப்பெற்று அன்பே உருவமாகுவர் (154)

14. பெருந்தவஞ் செய்த பெருமுனிவரும் தேவரும் காணமுடியாத கடவுளை யாவரும் பெருகும் ஆர்வ அன்பினில் வெளிப்படக் காணலாகும் (128)

15. இறைவனது பூசை முறைகள் அவரே இயம்பிய சிவாகமங்களில் விதிக்கப்பட்டன. இவை அன்போடும் சிரத்தை நியமத்தோடும் செய்யத்தக்கனவாம். இவை தவம் எனப்படும். இவையும் முன்னைத் தவத்தால் கிடைப்பன (135)

16. இறைவர் தேறலாகக் கமழ்தமாகத் திகழ்பவர் (162) அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழ் என்பவர், புன்கணீர் பூசல் தரும் என்ற உண்மையும் இங்குக் காணப்படும். சிவனிடத்து அன்பே உருவமாய்ச் சிவசாயுச்சியம் பெற்றுச் சிவனோடொருங்கிருக்கும் பேற்றினுக்குமேற் பேறு பிறிதொன்றில்லை. (180)

---

## (3) கண்ணப்பநாயனார்புராணத்தில் கண்ட பெயர்களைக் குறித்த

## சரித்திரக் குறிப்புக்கள்

[இராவ்பகதூர் - திரு. C. M. இராமச்சந்திர செட்டியார், B.A.B.L., F.R.G.S., அவர்கள் தொகுத்துதவியது ]

### 1. நாடு :—போத்தப்பி நாடு

கண்ணப்ப நாயனார் அவதரித்த நாட்டின் பெயர் போத்தப்பி நாடு என்று சேக்கிழார் பெருமான் குறித்திருக்கின்றார். இப்பெயர் அதன் தலைநகராயிருந்த பொத்தப்பி என்ற ஊரினால் வந்தது எனலாம். பொத்தப்பி என்ற ஊர் தற்காலத்திய கடப்பை ஜில்லாவில் புல்லம்பேட்டை தாலூகாவில் உள்ள ஒரு சிறிய ஊர். இவ்வூர் வடபெண்ணை நதியின் (உத்தரபினாகினி) உபநதியாகிய செய்யாற்றின் (தெலுங்கில் செயயேறு) மேல் கரையில் இருக்கின்றது. இவ்வூருக்கு அருகில் செய்யாறு தெற்கே இருந்து வடக்கே ஓடிச் சித்தவட்டம் தாலூகாவில் வடபெண்ணையுடன் கலக்கிறது. பொத்தப்பியில் ஜனத்தொகை 1875-ல் 2188-ம்,1915-ல் 1453ம்,ஆக இருந்தது இவ்வூர் அரக்கோணம் - குண்டக்கல் இருப்புப் பாதையில் இராசம்பேட்டை என்ற நிலையத்தினின்று வடக்கே 15 கல்லில் இருக்கின்றது. வசிப்பதற்கு இனிமையான ஊர் பண்டைய காலச் சரித்திரப்பெருமை கொண்டது. இது சுமார் 1000 கி. பி. முதல் கொண்டு இந்நாட்டு அரசரின் தலைநகராக இருந்து வந்தது. இதனை 7 நூற்றாண்டுகள் வரை பற்பல அரச மரபினர்கள் இருப்பிடமாகக் கொண்டிருந்தார்கள். முதன் முதலில் இவ்வூரை இராசதானியாகக் கொண்ட அரசவம்சம் தெலுங்கு சோடர் என்ற சோழவம்சக் கிளையினர். இவ்வூரில் இரண்டு பண்டைய ஆலயங்கள் உண்டு. ஒன்று மூலத்தானேசுரம் என்ற சிவாலயம். அது கி. பி. 1193-ல் தெலுங்கு சோழரால் புதுப்பிக்கப்பட்டது. மற்றொன்று கோபாலசுவாமி கோயில் என்ற பெருமாள் கோயில். அது கி. பி. 1459-ல் மாட்ல அரசன் அனந்தராமராஜு என்பவனால் தாபிக்கப்பெற்றது. அவ்வரசனே "காகுஸ்த விஜயம்" என்ற தெலுங்கு நூலைப்பாடியவன். அவ்வூரிலிருந்த பண்டைக் காலத்துக் கோட்டை அழிந்து கிடக்கின்றது. சகம் 1001-ல் இராமசோடராஜனும், 1180 ல் மனுமசித்தனும் ஆண்டார்கள். மனுமசித்தன் தெலுங்கு மகாகவி திக்கனசோமயாஜியை ஆதரித்தவன். குலோத்துங்கசோழன் III-ன் கீழ் குறுநில மன்னனாக இந்நாட்டை ஆண்டவன் மதுராந்தகப் பொத்தப்பிச்சோழ சித்தி அரயன். பிறகு விஜய

ங்கரத்தாரும பினனா மாட்ல அரசர்களும ஆணடு வநதனா சகம 1640-ல் மாட்ல மன்னன குமாா காநத ராஜன ஆலயததின ஒரு பகுதியைப புதுபபிததான.

**நாட்டின் பரப்பு**.—அடியில கண்ட ஊாகள அவைகளிலுள்ள ஆலயக கல்வெட்டுககளைககொணடு பொததபபி நாட்டைச சாாநதவை என அறிகிறோம 1 அததிராலா எனற பரசுராமீசுவரா ஆலயம். 2 குண்டலூரு.—அகதநீசுவரா ஆலயம 3 கொததமலலி.—பொததபபி காட்டுக கொததமலலி. 4 நநதலூரு —மேறபாககை நாட்டு கிராநதனூா (பழைய பெயா) 5. தஙகடோ —சிததேசுவரா ஆலயம.

இவைகளைத தவிர சிததவட்டம, நெலலூா முதலியவைகளிலுள்ள ஆலயஙகளிலும பொததபபி நாடு குறிககபபடடுளளது மேறகூறிய விவரஙகளிலிருநது பொததபபி நாடு தறகாலப புலலமபேடடை தாலூககா முழுவதையுமே அடககிக கொணடிருநதது எனறு கூறலாம். தஞசைச் சோழமன்னாகள காலததில அவர்கள ஆடசிககுடபடடிருநத தெலுஙகுநாடு அதிராஜேநதிர மணடலம் எனற பெயரால் வழஙகிறறு அதன கிளைநாடு ஒனறிறகுப பாககைநாடு என்று பெயா. அது தற்காலக கடபபை, நெல்லூா ஜிலலாககளைக கொணடிருநதது கடபபைப் பாகம மேற்குப் பாககை நாடெனறும, நெலலூாப பாகம கீழ்ப்பாககை நாடெனறும் வழஙகி வந்தது. மேறபாககை நாட்டின ஒரு பிரிவிறகு பொததபபிநாடு எனற பெயரும இருநதது. இநநாடு காளததி நாட்டிறகு அடுததது எனபதைக கவனிகக.

**அரசபரம்பரை**:—முனனமே கூறியபடி சுமாா கி பி. 1000ல தெலுஙகு சோழாகள பொததபபி நாடடை ஆணடு வநதனா. அதுவேயனறிப பாககைநாடு முழுவதுமே அவாகள வசபபடடிருநதது சோழா எனற தமிழ்ப்பதம சோடா எனறு தெலுஙகில வழஙகிவநதது இவாகள தஞ்சைச சோழாகளின கிளையினராக இருநது தெலுஙகு நாடடு இராஜபபிரதிநிதிகளாயச் சென்றிருகக வேணடும பினனா அவர்களே வமசபாமபரையாக ஆள ஆரமபிததனர் முதல முதலில தாசவாமன பாகராஷ்டிரததைக கைபபறறிக கொணடு பொததப்பியைத தலைநகராககிக் கொணடு ஆண்டுவந்தான. அவனுடைய சநததியாா மதுராநதகப் பொததபபிச் சோழா எனற படடம வைத்துக் கொணடனர். இவவமசததார் தஞ்சைச சோழர்களான குலோததுஙகன் 1. விக்கிரமன, குலோத்துஙகன 2, இராஜ ராஜன் 3 இவாகள் காலஙகளில (11, 12. 13 நூறறுணடுகள) குறுநிலமனனர்களாக விளங்கினாகள் சோழ அரசர்கள் பெருமை குறையவே பொததப்பிச சோழர்கள மேனமை பெறறனா அவர்களில் திக்கன பொததபபிசசோழன பிரககியாதி அடைநதான. அவன மகன மனுமசிததி கவிஞேதஞகித திககன சோமயாஜியை ஆநதிரபாரதம எழுதச செய்தனன. பினனுல இநநாடு வாரஙகல வசமாகி, இவவூா கி பி 1350-ல முகமதியாகளால் பிடிக்கபபடடு அவாகள வசமாயிறறு பினனா விஜயநகரததாா ஆளுகைககு உடபடடது. அவாகள ஆட்சியில மாடல மனனாகள இநநாடடின குறுநில மனனாகளானாகள. பொததபபிச சோழாகள காலததில காளததி, திருப்பதி முதலிய பிரதேசஙகளை யாதவராயாகள ஆணடு வநதனா. இவவிருவமசஙகளுககும விவாக சமபநதம உணடு

**நிலப்பான்மை**:—இநநாடு ஒரு செழிபபான பளளததாககில அமாநதிருககிறது இபபளளததாககின வழியாகததான தறகாலததில அரககோணம - கடபபை இருபபுப பாதை ஓடுகிறது இதன மேறகில சேஷாசலம மலைததொடரும கிழககில் பல சிறு மலைததொடாகளும இருககினறன. செயயாறறுப பாயசசல இநநாட்டைச செழிபபாககுகிறது மலைததொடாகளும அடுததே இருபபதால காடுகள அடாநதிருககினறன. பல நூறறுணடுக்ளுககு முன இபபிரதேசததில காடுகள அடாநது இருந்தன. அவைகளில வேடாகள மிகுதியாக வாழ்நது வநதனா. அருகிலுளள காடுகளில் மிருகங்களை வேடடையாடிப பிழைபபது அவாகள தொழில இபபோதும அவவேடாகளின வம்சததினா இநநாடுகளில ஏராளமாக வசிககிறாாகள. வேடர்-எனற தமிழ்ப்பதம பேடர் -

என்று கன்னடத்திலும், போய - என்று தெலுங்கிலும் வழங்கி வருகிறது. வேடர்குலத் தலைவர்கள் அந்நாட்டு மலைக்கோட்டைகளுக்குத் தலைவர்களாக இருந்து வந்தார்கள். அவர்களைத் தமிழ் நாட்டுப் பண்டைய கால வேளிர்கள் போன்றவர்கள் என்று சொல்லலாம். இவர்களுடைய வீரச் செயல்களைப் பற்றிப் பல சரிதங்கள் உண்டு. இக்குலத்தில் அவதரித்தவர் கண்ணப்ப நாயனார். இக்காலத்திலும் அந்நாயனாரை வேடர்கள் உச்சியின் மேற் கொண்டு பூசித்து வருகின்றனர். மைசூர் நாட்டு ஹிரியூரில் வேடர் குலத்தார்கள் கண்ணப்ப நாயனார் திருமடம் கட்டிக் கொண்டாடி வருகிறார்கள். ஆகவே, கன்னடநாட்டிலும் நாயனார் பெருமை பரவியிருக்கிறது அல்லவா?

மக்கள் :—முன் காலத்தில் அந்நாட்டு மக்களிற் சிறந்தவர்கள் வேடர்கள் என்று சொன்னோம். அவர்களுடைய பழக்க வழக்கங்கள் குறிஞ்சி நிலத்திற்கு ஏற்றனவாக இருந்தன. வேடர்கள் இக்காலத்திலும் தங்கள் பண்டைய பழக்க வழக்கங்களை விடாமல் போற்றி வருகிறார்கள். தமிழ்ச் சில்லாக்களில் தெற்கே செல்லச் செல்ல அவர்களுடைய நாகரிகம் மிகத் தாழ்ந்து கிடக்கிறது. மலையாளத்தில் வேடர்கள் இப்போதும் காட்டு மனிதர்கள் போல அநாகரிகமாக இருக்கிறார்கள். ஆனால் தமிழ் நாட்டில் அந்த வகுப்பிற்கு இணையாக இருக்கும் வேட்டுவர்கள் நாகரிகத்தில் முன்னுக்கு வந்திருக்கிறார்கள். அம்பலக்காரர் என்ற மற்றொரு வகையாரும் முன்னேற்றம் அடைந்தவர்களே. அம்பலக்காரர்களும் வேடர்களும் கண்ணப்ப நாயனாருடைய வம்சத்தினர்கள் என்று தங்களைப் பெருமைப்படுத்திப் பேசிக் கொள்கிறார்கள். தெலுங்கு போயர்களோ தாங்கள் வால்மீகி ரிஷியினுடைய சந்ததிகள் என்று சொல்லிக்கொள்ளுகிறார்கள். முன் காலத்தில் பொத்தப்பிநாட்டு மக்கள் தமிழ் மொழி பேசினவர்களாக இருக்க வேண்டும். வேடர்கள் தமிழ்மொழியையே தம் தாய் மொழியாகக் கொண்டிருத்தல் வேண்டும். ஏறக்குறைய 1000 ஆண்டுகளுக்கு இப்பால் ஏற்பட்ட கல்வெட்டுக்களிலே பெரும்பாலும் தமிழ் மொழி வழங்கப்பட்டிருக்கும்போது 2000 ஆண்டுகளுக்கு முந்தின் கண்டிப்பாகத் தமிழ் மொழியையே அந்நாட்டார் வழங்கி இருக்க வேண்டும் அல்லவா? ஊர்ப்பெயர்கள் மக்கள் பெயர்கள் எல்லாம் தமிழ் மயமாகவே இருக்கின்றன. மேலும் ஆறுகளின் பெயர்களும், மலைகளின் பெயர்களும் தமிழ் மொழியின. பெண்ணையாறு, செய்யாறு (சேயாறு) இவைகளைக் காண்க. சேய்+ஆறு=சேயாறு—முருகக் கடவுள் ஆறு என்பொருள்படும். முருகக்கடவுள் வேடர்களின் குலதெய்வம் அல்லவா? பொத்தப்பிச் சிவாலயத்தின் சுவாமியின் பெயர் மூலத்தானேசுவரர் என்றால் அதுவும் தமிழ்மயமேயன்றோ?

## 2. நாயனாரின் ஊர்

கண்ணப்ப நாயனாருடைய குடும்பத்தார் வசித்த ஊர் உடுப்பூர் என்று பெரிய புராணம் கூறுகிறது. பொத்தப்பி நாட்டு ஊர்களின் பெயர்களில் உடுப்பூர் என்ற பெயர் இப்போது கிடைக்கவில்லை. ஆனால் உடுக்கூர் என்ற பெயர் ஒன்று அங்கே காண்கிறோம். இது இராசம்பேட்டைக்கு அருகில் உள்ளது. உடுப்பூர் என்ற பெயரே உடுக்கூர் என்று திரிந்தது போலும். இவ்வூர்க்கு மேல் புறத்தில் மலைகளும் காடுகளும் அடர்ந்திருந்தபடியால் அவர்கள் தலைவனான நாகன் அங்கே வேட்டையாடி வசித்து வந்திருத்தல் வேண்டும். அந்நாடு அக்காலத்தில் தமிழ்நாடாக இருந்ததினால் வேடர் மக்கள் நாகன், தத்தை, காடன், நாணன், திண்ணன் என்ற தமிழ்ப் பெயர்களையே இட்டு வந்திருக்கலாம். திண்ணனார் வேட்டையாடிக் காதங்கள் பல சென்று பொன்முகலியாற்றை (சுவர்ணமுகி) அடைந்ததினால் அவ்விரண்டு இடங்களுக்கும் நடுவில் 40 கல் தூரம் இருந்திருக்க வேண்டும். இப்போதும் பொத்தப்பிநாட்டு உடுக்கூருக்கும் சீகாளத்திக்கும் 40 கல் தூரம்தான் இருக்கிறது.

## 3. பொன்முகலியாறு

இதனைச் சுவர்ணமுகி என்று வடமொழியிலும் தெலுங்கிலும் வழங்குவார்கள். கல்வெட்டில் வடமொழியில் கனகமுகரி என்று கண்டிருக்கிறது. இந்த ஆறு சித்தூர்ச் சில்லாவில் திருமலையின் மேற்குச் சரிவில் உற்பத்தியாகிச் சந்திரகிரிக்கு அருகில் ஓடித் திருப்பதிப் பள்ளத்தாக்கின் வழியாகக் கிழக்கே ஓடிப் பிறகு வடகிழக்கே திரும்பிச் சீகாளத்திக்கு அருகில் பாய்ந்து, பிறகு வடகிழக்காக ஓடி துகராச பட்டணத்திற்கருகில் கடலில் பாய்கிறது. இதன் நீளம் ஏறக்குறைய 50, 60 கல் இருக்கலாம். இது கண்ணப்பநாயனார் சரித்திரத்திலும் தேவாரப்பதிகத்திலும் சிறப்புப் பெற்றது. "சந்தமாரகிலொடு" என்ற சம்பந்தர் பதிகத்தில் இந்நதியில் சந்தனம், அகில், சாதி, தேக்கு முதலிய மரங்கள் உந்திக்கொண்டு வெள்ளம் செல்லும் காட்சி எடுத்தாளப்பட்டுள்ளது. காளத்திக்கருகில் இந்நதி உத்தரவாகினியாக ஓடும் பெருமைகொண்டது. கங்கை நதியே இந்த ஆறாக வந்ததாகச் சீகாளத்திப் புராணம் கூறும். கல்வெட்டுக்களில் மணிகங்கை என்ற பெயர் காண்கிறோம். அப்புராணமே கல்வெட்டிற் கண்ட மணிகங்கை என்ற பெயருக்குக் காரணமாக இருக்கலாம். அதன் கரையில் உள்ள ஆலயத் திறைவற்கு மணிகங்கேசுவரர் என்று பெயர் உண்டு. அவ்வாற்றின் கிழக்கில் சிறு குன்றுகளின் அருகில் உள்ளது காளத்தி நகரம்.

## 4. சீகாளத்தி

இவ்வூர் இரண்டு குன்றுகளுக்கு இடையில் அழகாக அமைந்திருக்கிறது. வடக்கே உள்ள குன்றின்மீது துர்க்கையின் ஆலயமிருக்கின்றது. தெற்கே உள்ள குன்றின்மீது **கண்ணப்பேசுவரர்** ஆலயம் உள்ளது. கண்ணப்ப தேவரால் பூசிக்கப் பெற்றமையால் அப்பெயர் ஏற்பட்டது. கண்ணப்பர் உருவம் ஒரு சிறு ஆலயத்தில் வைக்கப்பட்டிருக்கிறது. கண்ணப்பர் மலைக்கு மேல்புறமாகக் காளத்தீசுவரருடைய பெரிய ஆலயம் உள்ளது. காளத்தீசுவரர் வாயுலிங்கம் என்பது யாவரும் அறிந்த செய்தி. ஆலயத்திற்கு வடகிழக்கில் இரண்டு பெரிய கோபுரங்களும் ஒரு பெரிய இரதமும் இருக்கின்றன. ஆலயத்திற்குத் தென்புறத்தில் காசி விசுவநாதர், மணிகண்டேசுவரர் (மணிகங்கேசர் என்பது கல்வெட்டு) ஆலயங்கள் இருக்கின்றன. மணிகண்டேசர் ஆலயத்துச் சுவரில் பல கல்வெட்டுக்கள் இருக்கின்றன. அவற்றில் ஒன்றில் (202/92) கண்ணப்பதேவர் சரிதம் வரையப்பட்டிருக்கிறது. கண்ணப்பர் மலையின் ஒரு சரிவில் பிரமனுடைய ஆலயம் இருக்கின்றது. பிரமதேவர் ஆலயத்தின் வடபுறத்தில் சிவ வடிவங்களைப் பாறையில் செதுக்கியிருக்கிறார்கள். அதற்குத் தெற்கில் அகத்தீசர் ஆலயமும் மலைக்கு எதிர்ப்புறத்தில் பாரத்துவாச தீர்த்தம் என்ற கிலமாகிய குளமும் உண்டு. ஊர் நடுவில் வரதராஜர் கோயிலும் காளத்திச் சமீன்தாரின் அரண்மனையும் இருக்கின்றன. கல்வெட்டுகளின்படி காளத்திக்கு மும்முடிச்சோழபுரம், கண்ணப்பபுரம் என்ற பெயர்கள் இருந்தன.

## 5. காளத்தீசர் ஆலயம்

இது பெரிய ஆலயம். இதனைச் சில ஆண்டுகளுக்குமுன் தேவகோட்டை நகரத்துச் செட்டி மக்களில் திரு இராமநாதன் செட்டியார் குடும்பத்தார் புதுப்பித்தார்கள். அவர்கள் சீர்ணோத்தாரணம் செய்வதற்கு முன்னும் பின்னும் பல கல்வெட்டுகளை அதிகாரிகள் பிரதி எடுத்து வைத்திருக்கிறார்கள். அக்கல்வெட்டுகளிலிருந்து பல அருமையான செய்திகளை நாம் அறியலாம்.

**கல்வெட்டுக்களைப் பதித்த அரச வம்சத்தினர்கள் :**—(1) சோழர்கள்—இராஜராஜன் (958—1012) முதல் இராஜராஜன் III (13 நூ வரை). (2) வாரங்கல் காகதி

## 3. பொன்முகலியாறு

இதனைச் சுவாணமுகி எனறு வடமொழியிலும தெலுஙகிலும வழஙகுவாாகள. கலவெட்டில் வடமொழியில் கனகமுகாி எனறு கணடிருககிறது இநத ஆறு சிறறாாச சிலலாவில திருமலையின மேறகுச சாிவில உறபததியாகிச சநதிரகிாிககு அருகில ஓடிக திருபபதிப பளளததாககின வழியாகக கிழககே ஓடிப பிறகு வடகிழககே திருமபிச சீகா ளததிககு அருகில பாயநது, பிறகு வடகிழககாக ஓடி துகராச பட்டணததிறகருகில கடலில பாயகிறது இதன நீளம ஏறககுறைய 50, 60 கல் இருககலாம. இது கண ணபபநாயனாா சாிததததிலும தேவாரப்பதிகததிலும சிறபபுப பெறறது "சநதமா ரகிலொடு" எனற சமபநதா பதிகததில இநநதியில சநதனம, அகில, சாதி, தேககு முதலிய மரஙகள உநதிககொணடு வெளளம செலலும காடசி எடுததாளபபடடுளளது காளததிககருகில இநநதி உததரவாகினியாக ஓடும பெருமைகொணடது கஙகை நதியே இநத ஆறாக வநததாகச சீகாளததிப புராணம கூறும கலவெட்டுககளில மணி கஙகை எனற பெயா காணகிறோம அபபுராணமே கலவெட்டிற கண்ட மணிகஙகை எனற பெயருககுக காரணமாக இருககலாம அதன கரையில உளள ஆலயத திறை வறகு மணிகஙகேசுவரா எனறு பெயா உணடு. அவவாறறின கிழககில சிறு குனறு களின அருகில உளளது காளததி நகரம

## 4. சீகாளத்தி

இவவூா இரணடு குனறுகளுககு இடையில அழகாக அமைநதிருககிறது வடககே உளள குனறினமீது துாககையின ஆலயமிருககினறது தெறகே உளள குனறினமீது **கண்ணப்பேசுவார்** ஆலயம உளளது கணணபப தேவாரால பூசிககப பெறறமையால அபபெயா ஏறபடடது கணணபபா உருவம ஒரு சிறு ஆல யததில வைககபபட்டிருககிறது. கணணப்பா மலைககு மேலபுறமாகக காளததீசுவா ருடைய பெரிய ஆலயம உளளது காளததீசுவரா வாயுலிஙகம எனபது யாவரும அறிநத செயதி ஆலயததிறகு வடகிழககில இரண்டு பெரிய கோபுரஙகளும ஒரு பெரிய இரதமும இருககினறன ஆலயததிறகுத தெனபுறததில காசி விசுவநாதா, மணி கணடேசுவா (மணிகஙகேசா எனபது கலவெட்டு) ஆலயஙகள இருககினறன. மணி கணடேசா ஆலயததுச சுவாில பல கலவெடடுககள இருககினறன அவறறில ஒனறில (202/92) கணணபபதேவா சாிதம வரையப்பபட்டிருககிறது கணணபபாமலையின ஒரு சாிவில பிரமனுடைய ஆலயம இருககின்றது பிரமதேவாஆலயததின வடபுறத தில சிவ வடிவஙகளைப பாறையில செதுககியிருககிறாா்கள, அதறகுத தெறகில அகததீசா ஆலயமும மலைககு எதிாபபுறததில பாரதவாச தீாததம எனற கிலமாகிய குளமும உணடு ஊா நடுவில வரதராஜா கோயிலும காளததிச சமீனதாரா அரண மனையும இருககினறன கலவெடடுககளினபடி காளததிககு மும்முடிசசோழபுரம, கணணபபபுரம எனற பெயாகள இருநதன

## 5. காளததீசர் ஆலயம்

இது பெரிய ஆலயம இதனைச சில ஆணடுகளுககுமுன தேவகோட்டை நகரத துச செட்டி மககளில திரு இராமநாதன செட்டியாா குமபததாா புதுபபிததாாகள. அவாகள சீரணோததாரணம செயவதறகு முனனும பினனும பல கலவெட்டுககளை அதி காாிகள பிரதி எடுதது வைததிருககிறாாகள. அக கலவெடடுககளிலிருநது பல அருமை யான செயதிகளை நாம அறியலாம.

**கல்வெட்டுக்களைப் பதித்த அரச வம்சத்தினர்கள்.**—(1) சோழாகள—இராஜ ராஜன (958—1012) முதல இராஜராஜன III (13 நூ வரை). (2) வாரஙகல் காகதி

ணப்ப தேவருககுத தனி ஆலயம உணடு அதில 8 கலவெடடுககள இருககினறன அவைகள கிருஷண தேவன அசசுதராயன இவாகள காலததியவை ஆகவே அவ வாலயம விஜய நகரததாா காலததில தான ஏறபடடிருகக வேணடும். 1449-முதல 1467 வரை (12) மேலும ஆலயததில கணணபபதேவா வெணகலபபிரதிமை ஒனறும அவரது சிறபம ஒனறும இருககினறன (723 D of 1921, 22 & 726-D of 1921, 22) வெணகலப பிரதிமையின உருவம சாககாா அறிககை 1921-22 பககம 3-ல காணக

## 7. கண்ணபப நாயனுர்

இவரது பெயா காணும கலவெடடுககள சிலவே கிடைததிருககினறன இராஜாதிராஜச சோழன 5-ம ஆணடில *திருக்கண்ணப்பதேவர் பெயராலே கமுகுக தோபபு ஒனறு வைபபதறகாகப பூதானம செயயபபட்டது (125/22) எனறு காளத திக கலவெட்டொனறு கூறுகிறது திருபபதிககடுதத யோகிமலலாபுரததில உளள பாசுராமீசா ஆலயததில ஒரு கலவெடடில திருககண்ணப்ப தேவர் காவணம் எனற பெயா குறிதது, அதன மாகேசுவராககுப பூதானம செயததும, திருககண்ணப்ப தேவா ஆராதனைககுப பூதானம செயததும கணடிருககிறது (No 36 திருபபதி தேவஸதானக கலவெடடு-270/04)

“ ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவன சககரவாததிகள ஸ்ரீராஜராஜ தேவாககு யாணடு 9-வது தைம மாசதது ஜயஙகொணட சோழமணடலதது பெருமபாணபபாடிக திருவேஙகடக கோடடக துத திருககுடவூா நாடடுப பிரமதேயம திருசசுகனூா பிபபிலாதீசுரமுடைய மகா தேவாககு சாளுககி வீரசிஙகதேவரான யாதவராயறகு திருக்கண்ணப்பதேவர் திருக்காவணத்திலே சிமகேசுவரறகும தானததாளாககும திபபிலாதீசுவரமுடையாா கோயில் தானததாா அறிவிதத இடதது .. . ..ையும திருசசுகனூா சபையாரையும். ..... . .திருக்கண்ணப்ப தேவர் திருக்காவணத்திலே . ..கலவெடடுபபடி .. ....திருக்கண்ணப்ப தேவர்க்கு திப பிலாதீசுவாகோயில மகேசுரரும ..... இபபடிக கலவெட்டித திருவிடடுககுடுததபடி . ......”

இககலவெட்டினபடி முநதி ராஜ ராஜ I-23-ம ஆணடில செயத உபயததை கடத தாமல இருநததைபபறறி, ராஜ ராஜ III 9-வது ஆணடில வீர நரசிஙக யாதவராயன முனபு வழககுததொடர, அவா விசாரிதது அநதப பணததைத திருபபிக கொடுககும படி கட்டளையிடட விவரம கணடிருககிறது. தொகை கண்ணப்ப தேவாககுக கொடுககப படடது. மேலும (202/83) காளததியில உளள வடமொழிக கலவெடடு ஒனறில கணணபபா சரிதம விவரமாகக கூறபபடடிருககிறது.

அவவடமொழிச சுலோகஙகளின சுருககம .

4 “ வேடா தலைவன குளுஙியிற சூடபபெறற மலாகள பூதபதியின மௌலியில அணியபபெறறன. அவவேடனால உதவபபடட இறைசசி பூதகணஙகளுககும அச்சததை விளைவிததது.

5. அவன கணணைப பறிதது ஈநதது - பகதியில முதிாநதவாகளும வியபபைத தநதது. அவனது உமிழநீா சமபுவின சுததியின பொருடடுச செயயபபடட அபிஷேக நீராயிறறு.

6. பிரமனது தலையும, நாகமும, சநதிரனும, வேடாதலைவன கால செருபபும காளததி நாதனுககுப பேரணிகளாயின

7. அடுததடுததுவரும அலைகளுடைய கஙகாநதியை ஒததும வாரணததால முககப் படடதுமான கனகமுகரி (சுவாணமுகலி-பொனமுகலி) யின மூலதது வடவிருகஷமே தனயம செயததெனனலாம

---

*திருக்கண்ணப்பதேவர் எனறபெயரால இநநாயனுா வழஙகப்பட்டனா எனபது இவரது சரிததிரஙகூறும பதினோராந திருமுறையிலுளள திருமறஙகளிரணடும இப பெயராலே அமைநதிருபபதனாலும அறியபபடும.

8. காளமுகம் (பாம்பு) அத்தியும் (யானை) ஆற்றும் நித்திய பூசனையில் கனகமுகரியும் அதன் போக்குக்குத் தடையாய் நின்ற ஏகம்பரமும் அணியும் ஆடையும் ஆயின.

9. ஒரு கணிகையைப் பதித்து உதவி புறம் போன நிறையும் அதிவேகமாயத் தோன்றா நினைத்தன வில் பெண் ஒருபாகன் அது வளையணிந்த இடக்கை அதற்குத் தடையாய் நின்றது.

10. எரிமுகத்து ஆம்பு கைகொண்டு வழிவாய அகசைகத்துப் புரமெரித்தோனது மேரு வைத் தனுவாகக் கொண்டதும் திரிபுரமக்குச் (தேவர்)களைவெல்லுதற்படி உயர்த்தப்பட்டது மான கை ஆதாரமிற்று."

(வடமொழிப் பத்ம புரா - உத்த காண் - 144 சருக்கம் (சு 20 - 98)-ல் கண்ட சரிதம் கண்ணப்ப நாயனார் சரிதம் போன்றுள்ளது.)

மேலும் தஞ்சைசில்லா திருவலஞ்சுழிக் கபாதீசா ஆலயத்தில் இராஜராஜா II-12-வது ஆண்டில் (628/02) திருநாவுக்கரசா, திருவாதவூரடிகள், **திருக்கண்ணப்ப தேவர்** பிரதிமைகளுக்குப் பூதானம் செய்ததாகக் கண்டிருக்கிறது (26-3-1158). புதுக் கோட்டைச் சீமை திருவரன்குளத்து ஹரதீர்த்தேசுவரா ஆலயத்தில் (261/1914) கண்ணப்பநாயனார் உருவத்தைச் சகம் 1378 வைகாசி 20-ல் பிரதிட்டை செய்ததாகக் கண்டிருக்கிறது. இன்னமும் இவ்வாறான பிற்காலத்துப் பிரதிட்டைகள் பல இருக்கின்றன.

**கண்ணப்ப தேவரது பழமை :**—கண்ணப்பதேவருடைய அன்பின்பெருமையை மணிவாசகனார், சம்பந்தா முதலிய சைவப் பெரியார்களும் நக்கீரா முதலிய சங்கப் புலவர்களும், அருளிச் செய்ததிலிருந்தே அவர்காலம் மிகப் பழமையானதென்று அறியலாம். தமிழ்மொழியேயன்றி வடமொழியிலும் அவரது கீர்த்தி பாராட்டப் பெற்றிருக்கிறது. ஆதிசங்கரர் தம் சிவானந்த லஹரியில்,

" மார்க்கா வர்த்தித பாதுகா பசுபதே ரங்கஸ்ய கூர்ச்சாயதே
கண்டூஷாம்பு நிஷேசனம் புரரிபோர் திவ்யாபிஷேகாயதே
கிஞ்சித் பக்ஷித மாம்ஸ சேஷ கபலம் நவ்யோப ஹாராயதே
பக்திஃ கிம் ந கரோதி அஹோ வனசரோ பக்தாவதம்சாயதே

என்ற சுலோகத்தினால் அவரைப் பாராட்டியிருக்கிறார். இதில் சம்பந்தரது தேவாரக் கருத்தே உள்ளதைக் காணலாம்.

" வேயனைய தோளுமையோர் பாகமது வாகவிடை யேறிசடைமேல்
தூயமதி சூடிசுடு காடினட மாடிமலை தன்னை வினவில்
வாய்கலச மாகவழி பாடுசெயும் வேடன்மலர் ராகுநயனம்
காயகணை யிடனிடந் தீசனடி கூடுகா ளத்திமலையே "—திருவிராகம் 4.

ஆதிசங்கரர் கி பி 788-ல் இருந்ததாகச் சிலரும், கி மு 41-ல் இருந்ததாகப் பலரும் கூறுகின்றனர். கி மு 41 ஆக இருந்தால் கண்ணப்பர் அதற்குப் பலவாண்டுகளுக்கு முந்தியிருத்தல் வேண்டும்.* மேலும் †பெருந்தலையூர் - முதலான பல பண்டைய ஆலயங்களில் கண்ணப்பருடைய சரித உருவங்களைக் காண்கிறோம். அவைகளும் அவருடைய பழமையை எடுத்தாளுகின்றன.

*பஞ்ச பாண்டவர்களில் ஒருவராகிய அருச்சுனர் கண்ணப்பராக அவதரித்து முத்தியடைந்தனர் என்று புராணங்களால் அறியப்படுதலாற் **கண்ணப்பர்** காலம் கலியுகத்தின் தொடக்கமாம் என்பர்.

† பெருந்தலையூர் - இத்தலம் கோயமுத்தூர்ச் சில்லாவில் பவானிதாலுகாவில் பவானிக்கு அருகில் உள்ளது. அங்குப் பழைய சிவாலயமுண்டு. அதில் கண்ணப்பருடைய திருவுருவமும், அருச்சுனருடைய திருவுருவமும் பழங்கால முதல் ஒருசேர வைத்துத் தாபித்துப் பூசிக்கப்பட்டு வருகின்றன. அந்நாட்டுப் பக்கம் கண்ணப்பரைத் தலைவராகக் கொண்டு போற்றும் வேட்டுவர் என்ற சாதியார் மிகவுள்ளார்கள்.

# பெயர் விளக்கம்



(எண்கள் பாட்டுவரிசை எண்களைக் குறிக்கும்)

**ஆகமம்** - 784, 804 ஆகமவிதி 801. சிவபெருமானால் ஈசான முதலிய ஐந்து திருமுகங்களினின்றும் அருளப் பெற்றவை. மூவகைப் பந்தமுடைய எல்லாவுயிர்களும் பாசநீங்கிச் சிவனையடையும் சரியையாதி நால்வகை நெறிகளையும் வகுத்துக் கூறுவன. சிவாலய அமைப்பும் பிரதிட்டையும், ஆன்மார்த்த - பரார்த்த, நித்திய - நைமித்திய பூசையியலும், பவித்திர விதிகளும் என்ற மூன்று பிரிவுடையன. சிவாலய பூசைகட்கெல்லாம் இவையே பிரமாணம். காமிக முதல் வாதுளமீறாக இவை இருபத்தெட்டென்பர். இவற்றின் வழிவந்த 207 உபாகமங்களும் உண்டு. இவை பதி - பசு - பாச மென்ற மூன்று பொருள்களையும் காட்டி ஞானத்தை விளக்குவனவாம். வேதம் பொது என்றும், இவை சிறப்பாகிய முடிந்த முடிபென்றுங் கூறுப. வேதம் உலகர்க்கென்றும், சிவாகமம் சத்திநிபாதர்க்கு என்றும் அறியப்படும் 784 உரை காண்க.

**ஆசிரியன்** - 686 விஞ்சைத்தனுத் தொழில் வலவர் 689 வில்வித்தை முதலியன பயிற்றும் உபாத்தியாயன்.

**இருசுடர்** - 672 சூரியனும் சந்திரனும். இவர்கள் சிவபெருமானுக்கு முறையே வலது கண்ணும் இடது கண்ணுமாவர் இவர்கள் தலையுவா நாட்களிற் கூடுவர் என்ப.

**இறவுளர்** - 665 வேடர்கள் - மலைவாணர் இப்பெயர் கோயமுத்தூர் சில்லாவிலும் வேறு சில இடங்களிலும் இப்பொழுதும் வழங்கப்படுகிறது.

**உடுப்பூர்** - 651. கண்ணப்ப நாயனார் அவதரித்த ஊர் சரிதக் குறிப்புக்காண்க.

**எண்ணிறந்த கடவுளர்** - 796. சிவபெருமானல்லாத ஏனை விட்டுணு பிரமன் இந்திரன் வருணன் இயமன் முதலிய தேவர்கள் (796 உரை பார்க்க)

**ஒற்றர்** - 733 காட்டாயப்பவர். போரிற் பகைவரது உளவறிந்து சொல்லும் தூதர் போல வேட்டைக் காட்டில் மிருகங்கள் தங்கும் நிலையினை முன்சென்று அறிவர்.

**ஓசை ஐந்து** - 750. ஐந்து வகையான தேவவாத்தியங்களின் முழக்கு.

**கங்கை** - 671, 830. கயிலையில் உள்ள ஏழு புண்ணிய தீர்த்தங்களுள் ஒன்று. பெருநதிகளுள் ஒன்று. மிகப்புனித முடையது தன்னுட் படிந்தாரைப் புனித மாக்குவது. வான நதியாதலின் இது ஆகாய கங்கை எனப்படும். பகீரதன் வேண்டச் சிவபெருமான் இதனை ஒரு சடையிற்றாங்கிச் சிறிதளவாகப் பூமியில் விட்டருளினார்.

**கடவூர்** - 830 தல விசேடம் பார்க்க.

**கண்ணப்பர்** - 650. கண்படாவில்லியார் 810, வண்ணவெஞ்சிலையார் 813, பைந்தழை யலங்கன்மார்பர் 814, வள்ளலார் 824, கொள்கையினும்பர் மேலார் 824, அன்பர் 827, கண்ணப்ப! 827, கானவர் பெருமானார் 828, தலைவர் 830, கருங்கதிர் விரிக்கு மேனிக் காமரு குழவி 665, அண்ணல் 666, புண்ணியப் பொருளாயுள்ள பொருவிலசீ ருருவினான் 666, மைந்தனார் 677, நாகனார் பயந்த நாகர்குலம் விளங்க கரிய குன்றின் கோலமுன் கை 682, பொங்கொளிக் கரும்போ ரேறு 689, கானவர்க் கரிய சிங்கம் 690, எல்லையில்லாப் புண்ணியந் தோன்றி மேன்மேல் வளர்வதன் பொலிவு போல்வார் 691, பான்றகுல மலரிற் படர் சோதியார் 714, அல்லேறு போல்வார் 713, வள்ளல் 715, அண்ணலார் 717, சாரலைத் தொடக்கறுக்க ஏகும் ஐயர் 719, வேணியார் தமைக் கண்ணினீடு பார்வையொன்று கொண்டு காணு மன்பர் 700, குரிசில் 731, மறவர்களரியேறனையவர் 737, மலை காவலர் 738, குலமறவர்கள் தலைவர் 740, வேடர்தங் கரிய செங்கண் வில்லியார் 741, ஆடவன் 741, காளையார் 757, கருங்கடலென்ன நின்று கண்டுயிலாத வீரர் 789, வேடர் மன்னனார் 775,

வர் 805. மறைமுனிவர் 807 திண்ணனார் காளத்தியப்பரைக் காண்பதற்கு முன் சிவாகமங்களில் விதித்த பூசை முறைப்படி நாளும் அதிகாலையிற் பொன்முகலியிற் படிந்து புனிதமாய்க் காளத்தியப்பரை மலர் புனல் முதலியவை கொண்டு சிந்தை நியமத்துடன் திருமஞ்சனமாட்டியும், பூச்சூட்டியும், திருவமுதூட்டியும் அருச்சித்துவந்த முனிவர் தினமும் அவ்வாறு பூசித்த பின்னர்த் தபோவனத்திற் றவஞ் செய்யும் மறைமுனிவர் திண்ணனார் பூசித்த பிறகு மறுநாள் இறைவர் திருமுன்பு இறைச்சியும், எலும்பும், நாயடியும் கண்டு பதைபதைத்து அவற்றை மாற்றிப் பவித்திரஞ் செய்து பூசித்தனர். இவ்வாறு தினமும் நான்கு நாட்கள் கண்டு, இதனை மாற்றியருளுமாறு இறைவனை வேண்டினர். “நாளை அவனது அன்பே வடிவாம் தன்மை காட்டுவேன்” என்று கனவில் இவருக்கு இறைவன் அறிவித்து அதற்காக மறுநாள் (ஆறாவது நாள்) தமது வலக்கண்ணில் உதிரம் பாய இருந்தனர். அதுகண்டு திண்ணனார் தமது வலதுகண்ணைத்தோண்டி அப்பிக் குருதிநிற்கக் கண்டனர், பின் இடது கண்ணிற் குருதிபாயத் தமது இடது - கண்ணையும் தோண்ட ஒருப்பட்டு அம்பினை ஊன்றியபோது தன் திருக்கையாற் பிடித்தும் திருவாயாற் கூறியும் தடுத்து “என் வலத்தில் நிற்க” என்றருளினர் இவையாவும் இம்முனிவர்க்குக் காட்டுதற்கே இறைவன் செய்தருளினர் இச்சரித நிகழ்ச்சிக்கும், அதனால், மேம்பட்டதான அன்பின்றிறம் உலகில் விளங்கி உலகமுய்தற்கும் காரணராயிருந்த புண்ணியமுனிவர். இவர் செய்தது ஆகம விதிப்படி உள்ள பூசையாதலின் திண்ணனார் பூசையினை விதிக்கு மாறாகக்கண்டு அஞ்சினர் ஆயினும், அது, இவர்பூசைமுறையினையே பின்பற்றித் தம்மைமறந்து அன்பே யுருவமாகச் செய்யப்பட்டமையின் இறைவனுக்கு உகந்ததாயிற்றென்று கண்டனர்.

**சிவபெருமான்** - பிஞ்ஞகன் 809. தேறுவாராக் கமுதமான செல்வனார் 816, ஆறுசேர் சடையார் 816, அத்தன் 817, அண்ணலார் 817, பரமனார் 818, அத்தனார் 818, விமலனார் 772, 818, எம்பிரான் 819, பூதநாயகன் - 820, எந்தையார் 788, 822, முதல்வர் 822, முதல்வனார் 788, கண்ணுதல் 826, தம்பிரான் 826, தேவதேவர் 826, விடையின் பாகர் 827, அங்கணர் 753, 827, நாகக்கங்கணர் 828, ஊனமு துவந்த ஐயர் 828, பிரான் 829, எறியாத்தவர் 829, புரங்கள் செற்ற விடையவர் 650, வேதவாய்மைக் காவலர் 650, புரங்கள் செற்ற எந்தையார் 661, தேனலர் கொன்றையார் 681, தண்ணிலா வட்டம்பு கொன்றைதங்கு வேணியார் 700, செங்கணேறுடையார் 744, **வள்ளலார்** 751, திங்கள் சேர்சடையார் 753, ஏகநாயர் 754, இனிய எம்பிரானார் 771, ஐயர் (சிவபெருமான்) 776, முனிவரு மமரர் தாமுங் காணுதற் கரியார் 777, குழையணிகாதர் 778, **வள்ளல்** 783, அரும்பெற்ற நம்பிரானார் 789, மைதழையுங் கண்டத்து மலைமருந்து 784, வானவர் நாயகர் 785, தேவதேவேசன் 786, பொருப்பிலெழுஞ் சுடர்க்கொழுந்து 787, தனிமுதலாம்பரன் 789, சுடர்த்திங்க ளணிந்தசடை முடிக்கற்றை அங்கணர் 789, இமையோர் தலைவனார் 791, புனற்சடிலத்திருமுடியார் 807.

**சீறூர்** 664 - 680 குறிஞ்சி நிலத்து ஊர் சிறுகுடி குறிச்சி எனவும்படும்

**சேடை** 697 - 715 தெய்வ வழுத்துதற்குரிய அட்சதை வேடர் இதனை மலைநெல் லரிசியால் ஆக்கிக்கொள்வர்.

**தத்தை** 658 662 கண்ணப்ப நாயனாரது தாயார். நாகனது மனைவி. மறவர் தாயத்து ஆன்ற தொல்குடியில் வந்தவள். பெண் சிங்கம் போல்வாள்

**தலை உவா** 778 அமாவாசியை. மறைமதி என்பர்.

**தனிமுதலாம் பரன்** 789 சிவபெருமானே முழுமுதற் கடவுள் என்று பன்முறையும் துணிந்த மறைமொழி. 789 உரை பார்க்க

**திங்கள்முறை வேட்டை** 693 மிருகங்கள் ஊர்க்குள் மேலிட்டு வாராதபடி செய்ய மாதந்தோறும், அல்லது குறித்த சில மாதங்களுக்கொருமுறை, ஊர்வேடர் தமது தலைவருடன் திரண்டு சென்று வேட்டையாடுதல்.

**திண்ணன்** 666, 678, 695, 696, 700, 711, 769 கண்ணபப நாயனருககுத் தநதையால இடபபெறற பிளளைபபெயா. குழநதைப பருவததில தநதை இவரைக கையிலெடுததபோது திணணெனறிருநத படியால இபபெயரிடடான. திணணனா 642 - 701 703 - 705 - 724 - 742 - 743 - 746 - 749 - 759 - 771 - 773 - 813 826 - 827. திணணா ! 766

**திருக்காளத்தி** 650 - 754 - 759 இது தெனகயிலை எனபபடும கணணப்பாககுச சிவபெருமான அருளசெயத மலை. சீகாளததி எனபபடும. சீ - சிலநதி, காளம - பாமபு, அததி - யானை இவைகள பூசிததமையால இபபெயரெயதியது. தலவிசேடம பாாகக திருமலை 744, 785, 791. திருககாளததிமலை 745-754-788-798 - 809. காளததி 749, காளததிமலை 773, திருககாளததி 816

**திருக்காளத்தியப்பர்** - திருககாளததி மனனனா 830, திருககாளததி மலையினா 775 - 788 - 798 - 809, திருககாளததி முதலவனா 803, திருககாளததி அடிகளாா 817, திருககாளததிக கொறறவா 821, திருககாளததி யறபுதா 827, கடவுள மால வரை 750, வளளலாாமலை 751, களிாவரை 752, திருககாளததி மலை எழு கொழுநது 754, திருககாளததி நாயனா 759, இறைவா வெறபு 771, வெறபின முனைதகெழு முதல 772, தடஙகாளததி மலைமிசைத தமபிரானா 773, குழையணி காதா (வெறபு) 778, திருககாளததியணணலாா 796, காளததியபபா 800.

**தீபமா மரங்கள்** 788. சோதி மரம எனபா. இரவில நெடுந தூரததில தெரியக கூடியதாக ஒளி வீசும ஒருவகை மரம பகலில ஒளிதராது. யோகம - மருததுவம முதலிய கலைகளின வழககுககும பெரிதும பயனபடுவது.

**துணங்கை** 688. எழுவா மகளிா கைகோததாடும ஒருவகைக கூததது

**தெய்வப் பெருமடை** - 668. தெயவஙகளுககுப படைககும பெருஞசோறு முதலியவை.

**தேவராட்டி** - 696, 769. வேடா தலைவா மரபில அவாகளது குடுமப நனமையின பொருட்டுத தெயவஙகடகுப பலியிடடும - தொழுதும, பாவும தொழிலில வழிவழி நியமிககபபடட குறமுது மகள தேவராடடி எனபது தெயவததால ஆளப்பெறறவள தெயவமேறப பெறறவள - எனற பொருளில வநத பெயா. அணஙகுடையாடடி 716, அணஙகு சாாநதாள 698, கடவுட பொறையாடடி 714, படிமததாள 698, தெயவஙிகழ குறமுதியாள 700, வரைசசூராடடி 700, அணஙகுறைவாள 802, எனறு பலவாறும சொலலபபடுபவள. இவளமேல தெயவம ஆவேசிததுளளது எனபது வேடாது நமபிககை. பூசைககாக அரசனால இறைசசி - தேன ஈயல முதலிய படிமுறை பெறறு வாழபவள.

**தேவுமால்** 769. தேவரிடதது மிகக பறறினால மயககஙகொணடு உலகை மறததல.

**நாகன்** 656, 661, 678, 692, 694, 769, 802 கணணபபநாயனாின தநதை, பொததப்பி நாட்டு மலைவேடாககரசன, உடுபபூரில இருநது அரசுசெயத தலைவன, வெஞசின மடஙகல போலவான, வெகுகாலம பிளளைபபேறினறி வருநதி முருகப பெருமானை வழிபடடுக கணணபப நாயனாரை மகனாகப பெறற முனனைத தவமுடையான, அவருககுத திணணனெனப பிளளைப பெயரிடடு வளாததது, உரியபடி வில விததையைப பயிறறி, அரசுரிமை சூடடிக, கனனிவேடடைக கனுபபினன, அவா அனறைககே காளததியிற குடுமித்தேவரைக கணடு பறறிககொணடு தேவுமால கொணடு விடடாா எனறு நாணன காடன இவாகளாற கேடடுத தேவராடடியுடன போயத தானறிநதவா றெல்லாம பேதிபபவும அவா தஙகள குறிவாராமையிற கைவிடடு வநதவன. 696, 698, 702

**நாணன்** 738, 741, 745, 748, 750, 757, 764, 802. திண்ணனாருடன் கன்னி வேட்டைக்குச் சென்று அவரடிப்பிரியா விடலைகளாகி மெய்காவலாளராயிருந்த இருவரிலொருவன் நாகனுக்கும் மெய்காவலாளனாயிருந்து முதிர்ந்த அனுபவமும் அறிவுமுடையவன்; திண்ணனாருடன் பன்றியைத் தொடர்ந்தோடியவன், இவனே திண்ணனாரைக் காளத்தி மலைக்கு முன்சென்று வழிகாட்டி அழைத்துப்போய் அம்மலையின் காட்சி-ஐந்தோசை - குடுமித்தேவர்-அவரை வழிபடுமுறை முதலியவற்றை அறிவித்து வழிப்படுத்தி விட்டவன். மலைமேல் அவர் குடுமித்தேவரைப் பற்றிக்கொண்ட தன்மையை உடனிருந்து அறிந்து "வங்கினைப்பற்றிப் போகா வல்லுடும்பென்ன"த் "தேவுமால் கொண்டான்" என்று அதனைக் காடனுக்கு அறிவுறுத்தியவன். பின்னர் நாகனையும் தேவராட்டியையும் அழைத்து வந்து அறிந்தவகை யெல்லாம் பேதித்தும் தம்குறி வாராமையிற் கைவிட்டுப் போயினவன் நாணு! 750.

**நாயனார்** - 759. 722 - 817 - 824 தலைவர். யாவர்க்கும் தலைவராகிய சிவபெருமானைக் குறிக்கும் இச்சொல் அவனடியார்களாய் உலகுக்குத் தலைவராய் உலகை ஆளுதற்குரிய பெரியோர்களைக் குறிக்க வழங்குவது சைவமரபு. நாயனீரே! 774.

**நான்முகன்** - 828. இவர் ஐந்துமுகத்துடனிருந்தவர் அகந்தை கொண்டபோது பைரவமூர்த்தி ஒருமுகத்தைக் கிள்ளி விட்டதனால் நான்முகனாயினர். இறைவன் செய்த தண்டனையாதலாற் கிள்ளப்பட்ட தலையினைப் படைத்துக் கொள்ள வலியிலராயினார் தன்னால் படைக்கப்பட்ட திலோத்தமையின் அழகைக்காணும் பொருட்டு நான்குதிக்கிலும் நான்கு முகங்கள் கொண்டனர் என்ப "அயனை அனங்கனை அந்தகனைச் சந்திரனை, வயனங்கண் மாயா வடுச்செய்தான் காணேடீ, நயனங்கள் மூன்றுடைய நாயகனே தண்டித்தாற், சயமன்றே வானவர்க்குத் தாழ்குழலாய் சாழலோ?" என்றது திருவாசகம்.

**பார்க்கடன்** 659 - 680. தெய்வம் பரவிச் சடங்குடன் செய்யும் நேர்ச்சிக் கடன்முறை

**பரிதி** - 778. சூரியன். நவக்கோள்களுள் ஒன்று இராசக்கிரகம் என்பர். "இருசுடர்" என்றவிடத் துரைத்தன பார்க்க. பகலவன் மலையிற்றாழ்ந்தான் 775. தேரிரவி எழும்போது 783. துனைபுரவித் தனித்தேர்மேற் றோன்றுவான் 808.

**பவித்திரமாஞ்செயல்** - 788 திருக்கோயிலில் அனுசிதம் நிகழ்ந்தால் அதனை மாற்றச் சிவாகமப்படி புனிதம் செய்யும் சடங்கு - மந்திரம் - பாவனைமுதலியவிதிகள்.

**புரங்கள்** - 650 திரிபுரம் எனப்படும். பொன் - வெள்ளி - செம்பு இவற்றாலாகிய மதில்களையுடைய பறக்குமியல்புள்ள மூன்று நகரங்கள் இவற்றில் அசுரர்கள் வாழ்ந்து உலகை அலைத்தனர் இவற்றைச் சிவபெருமான் தமது புன்சிரிப்பினால் எரித்தனர். ஆனால் இவற்றுள் வாழ்ந்த சிவனடியார்களாகிய மூவர் (தாரகாட்சன் - கமலாட்சன் - வித்யுன்மாலி என்றவர்கள்) மட்டும் காப்பாற்றப்பட்டனர் அவர்களிருவரே இறைவன் கோயில்வாயிற் காவலராவர் மற்றவர் திருக்கூத்திற்குக் குடமுழா முழக்குபவர். "மூவெயில் செற்ற ஞான்றுய்ந்த மூவரிலிருவர் நின்திருக் கோயிலின் வாய்தல், காவ லாளரென் றேவிய பின்னை யொருவ னீகரி காடரங் காக, மானை நோக்கியோர் மாநடம் மகிழ மணிமுழா முழக்கவருள் செய்த, தேவ தேவ" என்பது நம்பிகளது (திருப்புன்கூர் (8) தக்கேசி) தேவாரம்

**போத்தப்பி** - நாயனார் அவதரித்த திருநாடு. சரித்திரக் குறிப்புப் பார்க்க.

**பொன் முகலி** - 743. காளத்தி மலையின் அடிவாரஞ்சேர வடக்கு நோக்கி ஓடும் ஆறு. தன்னுட் படிந்தார்க்கு உடற்றூய்மையும் உயிர்த் தூய்மையும் தந்து ஈடேற்றும் புண்ணிய நதி; திருமுறைகளிற் போற்றப்பெற்றது. சரித ஆராய்ச்சிக் குறிப்புப் பார்க்க. திருமுகலி - 747, 787, 809. திருமுகலியாறு 763.

**மரக்கடை நீக்கோல்** 748 - 793 காய்ந்த மரக்கட்டையை மற்றொரு காய்ந்த மரத்தினுடன் விசையிற் கடைதலால் தீயினை உண்டாக்கும்படி முன்னுளில் வேடர்களுள் வழங்கியதொரு வழக்கு. தீக்கடையுங் கோல். எரிகடையுமரணி 794

**மலமூன்று** 803. **ஆணவம்** - **மாயை** - கன்மமெனப்படும் பாசங்கள் **ஆணவம்** - சகசமலம் - மூலமலம் எனப்படும் இது செம்பிற்களிம்புபோல அநாதியே உயிர்களின் அறிவு தொழில்களை மறைப்பது. **கன்மம்** - மூலகன்மம். முதலுறப்பவத்தில் சூக்கும தேகம் பெறுதற் கேதுவாகியது. அகிலாண்டேசுவரி பதிகம் பார்க்க.

**மாயை** இருவினைப் பயனனுபவித்தற் பொருட்டுவரும் தநு கரண முதலியவற்றக்கு முதற் காரணமாயிருப்பது. (803) உரைப்பகுதி பார்க்க

**முருகவேள்** 659 குமார தெய்வம். குறிஞ்சிக் கடவுள். உடுப்பூரில் இவரது திருமுன்றிலில் சேவலும் மயிலும் விட்டும், தோரண மணிகள் தூக்கியும், மாலைகள் தொங்கவைத்தும், குரவைக் கூத்தொடு அணங்காடல்செய்தும்,பெருவிழா எடுத்ததன் பயனுகக் காசன் திண்ணனென்னும் மகனைப் பெற்றுன் இவர் முப்புரஞ்செற்ற சிவபெருமான் திருமைந்தர் மயில் ஊர்தியுடையவர். கிரவுஞ்சமலையைப் பிளந்த வெற்றியுடைய வேலேந்திய பெருமையுடையவர் சரிதமும் பிறசிறப்பும் கந்தபுராணத்துக் காண்க இவரையே போற்றும் அருணகிரியார் திருப்புகழையும் ஓதியுய்க. போரணி நெடுவேலோன் 660. எந்தையார் மைந்தர் 661. வரையுரங் கிழித்ததிண்மை அயிலுடைத்தடக்கை வென்றி யண்ணலார் 661 மயிலுடைக் கொற்றவூர்தி 661.வென்றிவேள் 678

**மா எழுப்புதல்** 726 காடு சுற்றிலும் காவல் செய்தமைத்த பின் புதர் முதலிய மறைவிடங்களில் ஒளித்திருக்கும் விலங்குகளைப் பறைபை முதலிய இயங்கள் முழக்கியும், கை தட்டியும், வாயாற் கூவியும், மற்றும் பலவகை ஓசைசெய்தும், நாய்களை ஏவியும் அச்சுறுத்தி அவ்விடங்களிலிருந்து வெளிவரச் செய்தல்

**முன்பு செய்தவம்** 751 முன்பிறப்பிற் செய்த தவம் இப்பிறப்பின் வரும் மேன்மைக்கு முன்பிறப்பின் றவம் காரணம் என்பர் 751 உரை பார்க்க. திண்ணனார் தந்தை நாகனும் அவரை மகனுகப்பெற முன்னைத்தவஞ் செய்தான் தவமுன் செய்தான் 657.

**மேரு** 681. மகாமேருமலை. பொன்மலை என்ப இதனை நடுவைத்துச் சூரியன் முதலிய அண்டங்கள் சுற்றி வருவன என்பது மரபு இதனைத் திரிபுர சங்கார காலத்தில் சிவபெருமான் வில்லாக வளைத்துக் கையிலேந்தினர் என்பன மாபுராணங்கள்

**யாக்கைதன் பரிசு**-803. மாயேயங்களாகிய தநுவும் கரணங்களும் உரை பார்க்க

**வரை ஆட்சி** 695 மலைவேடர்களின் தலைவனுக அவர்களை ஆளும் அரசுரிமை. பொருப்புரிமை 699 சிலைமலையர் குலக்காவல் 702 மரபுரிமை 702 குலத்தலைமை 703.

**வனதெய்வங்கள்** - 700 காடுகளில் வாழும் சிறு தெய்வங்கள் இவை பலிகள் பெருமடை முதலியவற்றுல் தம்மை வழிபட்டோரைக் காத்துச் சிறு நன்மைகள் செய்வன என்றும், வழிபடாவிடில் தீங்கு செய்வன என்றும் வேடர் நம்புவர். இவை மகிழப் பலியிடுவதனைக் "காடுபலி யூட்டுதல்" என்பர். காட்டிலுறை தெய்வங்கள் 697

**வாளிதேர்தல்** 713 அம்புகள் வேட்டைக்குத் தகுதியாயுள்ள தன்மையைச் சோதித்தல்

**வில் விழா** 680 விற்பயிற்சி தொடங்குதற்குச் செய்யும் விழா. சிலை விழா 685.

**விற் பிடித்தல்** 678 வில்விழாக் கொண்டாடி நல்லாசிரியன்பால் நல்வேளையில் வில்லைப்பிடித்துக் கலை பயிலத் தொடங்குதல். வித்தியாரம்பம் என்ப.

**வினையிரண்டு** 803 புனருற்பவத்துக் கேதுவாக உயிரால் ஈட்டப்பட்ட அறமும் பாவமும். உரை பார்க்க

**வெறியாட்டு** 662 முருகப் பெருமானைக் குறித்து ஆடும் ஆடல் வகையுள் ஒன்று.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# 11. குங்குலியக்கலயநாயனார் புராணம்

## தொகை

"கடவூரிற் கலயன்ற னடியார்க்கு மடியேன்" —திருத்தொண்டத்தொகை

## வகை

"ஏய்ந்த கயிற்றுத்தன் கண்டத்திற் பூட்டி யெழிற்பனந்தாட்
சாய்ந்த சிவனிலைத் தானென்பர் காதலி தாலிகொடுத்
தாய்ந்தநற் குங்குலி யங்கொண் டனற்புகை காலனைமுன்
காய்ந்த வரற்கிட்ட தென்கட வூரிற் கலயனையே."
—திருத்தொண்டர் திருவந்தாதி

## விரி

831. வாய்ந்தநீர் வளத்தா லோங்கி மன்னிய பொன்னி நாட்டில்
ஏய்ந்தசீர் மறையோர் வாழு மெய்ப்பதி யெறிநீர்க் கங்கை
தோய்ந்தநீள் சடையார் பண்டு தொண்டர்மேல் வந்த கூற்றைக்
காய்ந்தசே வடியார் நீடி யிருப்பது கடவூ ராகும். க

புராணம்:—இறைவனுக்குக் குங்குலியத் தூபமிட்டுத் திருப்பணிசெய்த கலயர் என்னும் பெயரினையுடைய நாயனாரது சரிதவரலாறும் பண்புங் கூறும் பகுதி. நிறுத்த முறையானே இலைமலிந்த சருக்கத்து நான்காவது கலய நாயனார் புராணங்கூறத் தொடங்குகின்றார்.

தொகை.—திருக்கடவூரில் அவதரித்த கலயனாரது அடியவர்களுக்கு நான் அடிமையாவேன். இந்நாயனாரது ஊரும் பேரும் பேசிற்று.

வகை:—காதலியின் தாலியைக் கொடுத்துக் குங்குலியங் கொண்டு, காலனைக் காய்ந்த அரனுக்கு அனற்புகையிட்ட தென்கடவூரிற் கலயனாரைக், கயிற்றினைத் தன் கண்டத்திற்பூட்டிப் பனந்தாட் சிவனை நிலைப்பித்தவர் என்பர் எனக் கூட்டி உரைத்துக் கொள்க. காதலி - தம்மாற் காதலிக்கப்பட்டவர். தாலிகொடுத்து 842 - பார்க்க, ஆய்ந்தநற் குங்குலியம் - ஒப்பில் குங்குலியம் - (840), அங்கணர் பூசைக்கான நாறுகுங் குலியம் ஈதேல் (841), என விரித்தவை காண்க. நற்குங்குலியம் - சிவபூசைக்காயினமையும் நறுமணமுடைமையும் குறிக்க நல் என்றார். கொடுத்து - கொண்டு - விலையாகத் தாலியைக் கொடுத்து வாங்கிக்கொண்டு. அனற்புகை - அனலால் விடும்புகை. முன்-முன்னாள், பண்டு (831), அந்தணரைக் கொண்டுபோவதற்கு முன் என்றலுமாம். காய்ந்த - சினந்த - உதைத்தருட்டிய. கூற்றைக் காய்ந்த (831), தென் - தென்றிசையில் உள்ள, கடவூர் - கடக்கும் ஊர். கடப்பிக்கும் ஊர் என்றலுமாம். வடநாட்டில் உள்ள காசியும் காலனை உதைத்த ஊர் எனப்படுதலால் அதனின்றும் வேறுணரத் தென் என்றாரென்றலுமாம். கலயர் - நாயனாரது பேர் 835 பார்க்க. ஏய்ந்தகயிறு திருமேனிப் பூங்கச் சேய்ந்த மானவன் கயிறு (857). ஏய்ந்த-பொருந்திய. சிவலிங்கத்

திருமேனியிற் பூங்கச்சிற் பூண்ட. சாய்ந்த - முன் சாய்ந்திருந்த. 852-ல் உரைத்தவையும் தலவிசேடமும் பார்க்க. சிவன் - சிவபெருமானது இலிங்கத்திருமேனி. ஆகுபெயர். இரண்டனுருபு தொக்கது. நிலைத்தான் - நிலைப்பித்தான். பிறவினைப் பொருள் கொள்க. நிலைப்பித்தல் - நேர்நிற்கச்செய்தல்.

இதனால் நாயனாரது ஊரும் பேரும் சரிதவரலாறும் பண்பும் வகுத்துக்கூறப்பட்டன காண்க. இவற்றை விரிநூல் விரித்தபடியைப் புராணத்துட் கண்டுகொள்க.

831. (இ - ள்) வாய்ந்த . . ...நாட்டின் - நீர் பொருந்தியதனாலுளதாம் வளத்தினாலே சிறந்து ஓங்கி நிலைபெற்ற காவிரிபாயும் **சோழநாட்டில்**, வாய்ந்த . . பதி - சிறப்புப் பொருந்திய வேதியர்கள் வாழ்தற்கிடமாகிய மதில்சூழ்ந்த ஊர், எறிநீர் ......சடையார் - அலைகளை வீசும் நீரையுடைய கங்கையாறு தோய்ந்த நீண்ட சடையினையுடையாரும், அண்டு...... சேவடியார் - தொண்டராகிய மார்க்கண்டேயர்மேல் உயிர்கொள்ள வந்த காலனை முன் உதைத்த சிவந்த திருவடியினையுடையாரும் ஆகிய சிவபெருமான்; நீடி. ....ஆகும் - நிலைத்து வாழ்வதான **திருக்கடவூர்** என்பதாகும்.

(வி - ரை) **நீர்வாய்ந்த வளத்தால்** என மாற்றுக. நீரின் வாய்ப்பாவது உயிர்க்கும் பயிர்க்கும் நிலத்துக்கும் பொருந்தியதாகுதல். குடகு நாட்டினும் கொங்கு நாட்டினும் போந்த காவிரிநீர் இங்குச் சோழநாட்டில் வந்து வாய்ந்த - பொருந்திய - என்றலுமாம். திருநாட்டுச் சிறப்பிற் கூறியவை பார்க்க.

**நீர் வளத்தால் ஓங்கி மன்னிய** - நீர்வளம் ஒன்றனானே சிறந்து நிலை பெற்ற.

**பொன்னிநாடு** - சோழநாட்டைப் பொன்னிநாடு, நீர்நாடு, காவிரிநாடு என்பன வாதி பெயர்களாற் கூறுவது ஆசிரியமரபு. காவிரி, தான் தொடக்க முதலாகச்செல்லும் ஏனைநாடுகளிற் பயன் தராது, சோழநாட்டுக்கே பெரும்பயன் தருதலால் இவ்வாறு கூறுவது மரபு. கன்னடதேயத்திற் காவிரி பயன்றருதல் பின்னுள்ள வழக்கு.

**சீர்வாய்ந்த** - என மாற்றுக. மறையோரின் சீராவன அவர்களது பிறப்பொழுக்கமாகிய வைதிகசீலத்தானும் வேத உள்ளுறையாகிய சைவசீலத்தானும் சிறப்புறுதல்.

**மறையோர்வாழும் பதி** - இச் சரிதநாயகராகிய கலயநாயனார் மறையவர் மரபினராதலின் அதனை முற்குறிப்பாகக் காட்டியபடி. சண்டேசுரபுராணம் (1), ஆளுடைய பிள்ளையார் புராணம் (7, 9), திருநீலநக்க புராணம் (1) முதலியவை பார்க்க. மறையோர் மரபினர் தனித்த ஊர்களும் பதிகளும் உண்டு. இவைபோல்வன சதுர்வேதிமங்கலம் என்று வழங்கப்பட்டன என்பது கல்வெட்டுக்களால் அறியப்படும்.

**எறிநீர்க் கங்கை தோய்ந்தநீள் சடையார்** அலைகளால் நீரினை மேலே வீசும் கங்கையாறு. உலகங்களை அழிக்கவல்லதாயப் பல்லாயிர முகங்களாகப் பரந்திழிந்த கங்கை என்ற சரிதக்குறிப்பும் காண்க. "நெடுங்கங்கை" (311) என்றவிடத்துரைத்தவை காண்க. **எறிநீர்** என்றது இவ்வாறு மேல் அலைகளால் எறிதலேயன்றிக் கீழ் ஊற்றுச் சார்வுகளின் வழிப்பட இடமும் செல்லும்படி பரப்புதலும் குறித்தது. திருத்தில்லையிற் சிற்றம்பலத்தி னருகே உள்ள பரமானந்த கூபத்தில் ஐப்பசி மாதத்துப் பூர்வ பக்க அமாவாசையிற் கங்கை வருகின்றது என்ற மரபும், திருஅவிநாசியிற் காசிக்கங்கைக் கிணற்று வரலாறும், திருக்குடந்தை மகாமக வரலாறும் இவைபோன்றன அங்கங்குள்ள சான்றுகளும் இங்குக் கருதத்தக்கன. **தோய்ந்த நீள்சடை** - எறியும் நீராயினும் அவ்வாற்றை [illegible] அமைவதாகக்கொண்ட சடை. **தோய்ந்த** - சடைக்கற்றையின் ஒரு பகுதியில் கட்டுப்பட்டு நின்ற. 45-ம் உரை பார்க்க. **நீள்சடை** கங்கையின் பாரத்துக்குத் தக்கபடி நீளுஞ்சடை. மார்க்கண்டேயர் பூசிக்கும்பொருட்டுக் கங்கை வருகின்றதென்று வழங்கும் இத்தலத்துத் தீர்த்தமும், அதன் நீரினையே இங்கு அமிர்தகடேசருக்கு நாளும் திருமஞ்சனமாட்டும் வழக்கும் காண்க. (தலவிசேடம்

பார்க்க.) காசியினின்றும் கங்கை கடவூர்வரை நீர் எறிந்து பரவமாகில் இவரது சடை யும் அவ்வளவும் நீண்டு இங்கு விளக்கமுறும் என்ற உட்குறிப்பும் காண்க. இக்குறிப் பினையே இச்சரித்திரத்தில் பலவிடத்தும் (835, 837, 841, 848 முதலியன) ஆசிரியர் காட்டுதலும் 830-ல் தேற்றம்பெற முதலில் வைத்துக்காட்டியதும் காண்க.

**தொண்டர்** - மார்க்கண்டேயர். **மேல்வந்த கூற்று** - பதினாறுவயது என்ற அவர் வாழ்நாளின் எல்லை யணுகிற்று என்று அவருடைய உயிர் கவரும்பொருட்டு வந்த காலன். **கூற்று** - காலன் - இயம தூதன். "தருமராசற்காய் வந்த கூற்றினை" என்ற திருத்தாண்டகம் காண்க. **மேல்வந்த** - குறித்துவந்த என்ற பொருளில் வந்தது. **பண்டு** - முன். இது முன்ஒரு கற்பத்தில் காசியில் நிகழ்ந்ததாகக் கந்தபுராணம் கூறும்.

**காய்ந்த சேவடியார்** - சேவடியினால் உதைத்துக் காய்ந்தவர். **காய்தல்** - உயிர் கவர்தல் - கொல்லுதல். இச்சரிதம் இத்தலத் தேவாரங்களிலெல்லாம் போற்றப்படுத லும், இப்புராணத்தினுட் (847 முதலிய) பலஇடத்திலும் குறிக்கப்படுதலும் காண்க. இத்தலத்தில் காலசங்காரமூர்த்தி சிறக்க வழிபடப்பெறுகின்றதும், அவரது திருவிழா பெருஞ்சிறப்பாகப் போற்றப்படுகின்றதும் காணத்தக்கன. (தலவிசேடம் பார்க்க.)

**நீடியிருத்தல்** - இப்பெருமையுடன் என்றும் நீங்காது விளக்கமாக வீற்றிருத்தல்.

**இருப்பது** - இருப்பதாகிய அவ்வூர். **கடவூர்** - அமிர்தகடம் - கலயம் - சிவலிங்கத் திருமேனியாக உருக்கொண்டு எழுந்தருளிய ஊர் ஆதலின் கடவூர் - கடபுரி எனப் பட்டது என்பது புராண வரலாறு. கால பயத்தைக் கடத்தற்குதவும் ஊர் என்றலுமாம்.

இப்பாட்டினால் இப்புராணத்துக்குரிய ஆறு - நாடு - நகரம் - குடிவளம் - மூர்த்தி - தலம் - தீர்த்தம்-சரிதம் முதலிய சிறப்புக்கள் பலவும் ஒருங்கேகூறிய அழகு காண்க. 1

832. வயலெலாம் விளைசெஞ் சாலி; வரம்பெலாம் வளையின் முத்தம்;
அயலெலாம் வேள்விச் சாலை, யணையெலாங் கழுநீர்க் கற்றை;
புயலெலாங் கமுகின் காடு, புறமெலா மதன்சீர் போற்றல்;
செயலெலாந் தொழில்க ளாறே செழுந்திருக் கடவூ ரென்றும். ௨

(இ-ள்) வெளிப்படை. செழுமையும் திருவுமுடைய அத்திருக்கடவூரில் எக் காலத்தும் வயல்களிலெல்லாம் விளைகின்ற செந்நெல் உண்டு; வயல் வரம்புகளிலெங் கும் சங்குகளும் அவையீன்ற இனிய முத்துக்களும் உள்ளன; வயல்களின் பக்கங்களி லெங்கும் வேள்விச்சாலைகள் உள்ளன; அணைகளிலெங்கும் செங்கழுநீர்களின் தொகுதி உண்டு; காடுபோலச் செழித்த கமுகுச் சோலைகளில் எல்லாம் மேகங்கள் உள்ளன; அவற்றின் புற இடங்களில் எங்கும் அதன் சிறப்பைப் போற்றுதல் உள் ளதாம்; செய்வன எல்லாம் ஆறு தொழில்களேயாக வுள்ளன.

(வி-ரை) **எலாம்** - என்ற இடங்களினும் உண்டு என்னும் குறிப்பு வினைமுற்று விரித்துரைத்துக்கொள்க. இவ்வாறு வினையைத் தொகவைத்து அழகு பொருந்த அடுக்கிக் கூறுதல் ஆசிரியரது சிறப்பியல்புகளில் ஒன்றும். 65 - 67, 76 - 83 முதலிய பாட்டுக்கள் பார்க்க.

**வயல்** - பொன்னிநீரின் வளத்தால் ஓங்கியது என்றதனால் மருதத்திணைப்பகுதி யிற் சேர்தல் தெரிவிக்கப்பட்டமையால் வயலின் சிறப்பினை விதந்தோதினார்.

**செஞ்சாலி** - செந்நெல். இதுவே இறைவனது பூசைக்கும் உணவுக்கும் சிறந் தது. கார்நெல் இங்கு விளைபடுதலில்லை எனவும், அது சிறப்புடைத் தன்றெனவும் உணர்த்தப்பட்டதும் காண்க. அரிவாட்டாயநாயனார் புராணம் பார்க்க.

**வரம்பெலாம் வளையின் முத்தம்** - **வளை** - சங்கு. **இன்** - இனிய. வளையும் அவை ஈன்ற முத்துக்களும் உம்மைத்தொகை. வளைகளீன்ற முத்து என்றலுமாம். தண்டாளுஞ் சொரிபணிலம் (63) என்றவிடத்து உரைத்தவை பார்க்க.

அந்நிலத்துக்கும் ஒழுக்கத்துக்கும் உரியது குறிஞ்சிமுதலாகக் கூறப்பட்ட ஐந்திணைக்கும் ஐவகைப்பண்ணும் யாழும் பாடலும் உண்டு முலைக்குரிய முல்லைப்பண்ணும் கொடிப்பாலையும் பிறவும் ஆனுயர் புராணத்துக் காண்க. **சாமம் பாடல்** தொழில்களாற்றே என்ற அவ்வொழுக்கத்துக் குரியது அப்பாடல்களைக் கூறியதோடு **குழுமியாடும்** என வயலின் செயலும், **சடங்குடை** எனச் சாலையின்செயலும் கூறிய தும் காண்க. செயலும்பாட்டும் ஒருங்குசேர்ந்த தன்மையும் உடன்குறித்த சுவையும் காணத்தக்கது.

**பாடல்** - இரண்டும் சாதியொருமை. மருதப்பண் வகை நான்கென்றும், சாமம் அளவிறந்த பாடல்வகை யுடையதென்றும் கூறுவர். ஆதலின் சரிடத்தும் **எழுவன** என்றார். வேள்விகளில் பிரமா என்ற ஆசிரியனும், ஹோதாக்கள், இருத்விக்கள், உத்கா தாக்கள் என்ற மூவகைச் செயலாளர்களும் உளர். இவர்களுக்கு நந்நான்கு உபகாத தாக்களாகப் பதினாறு உபகாதத்தாக்கள் உளர். இவர்களுள் உத்காதாக்கள் சாமவேதம் பாடிக் கானஞ்செய்வர். இவரெல்லாம்கூடித் தத்தம் இடங்களில் இருந்து உரியசடங்கு கள் செய்து ஒன்றுசேர்ந்து பாடுதலாலும் **எழுவன** என்றார்.

**குடங்கையின் அகன்ற** - கண் விசாலமாக அகன்றிருத்தல் பெண்களின் அழ கிலக்கணங்களில் ஒன்றென்பர். விசாலாட்சி என்ற பெயர்வழக்கும் காண்க.

**உண்கண்** - மைஉண்ட - தீட்டிய கண். மை என்பது வருவிக்க. **கடைசியர்** - மருதநிலத்து மக்கள். இவர்கள் உழவுத்தொழிலுக்கு இன்றியமையாது வேண்டப்படுவ ராதலின் அந்நிலத்தைச் சொல்லுமிடங்களிலெங்கும் இவர்களையும் உடன்சேர்த்துக் கூறுவர் புலவோர். 63 - 66 முதலியவை காண்க.

**மருதம்பாடல்** - இத்திணைக்குரிய பண். **இடம்படு** - **படுதல்** உண்டாதல் என் னும் பொருளில்வந்தது. மலைபடுபொருள் என்புழிப்போலக்காண்க. **இடமுடைய** - இடமகன்ற எனக.

**வடம்புரி முந்நூல்** - பல இழைகளால் வடமாக முறுக்கப்பட்ட பூணூல்.

**மறையோர் வைதிகச் செய்கை** எனமாற்றுக. **வைதிகச் செயகை** - வேதவிதிப் படி செய்யும் சடங்குகள். **சடங்குடை இடங்கள்** - வேள்விச் சாலைகள்.

**சாமம்** - நான்கு வேதங்களில் ஒன்று. வேதத்திற்குப் பொதுப்பெயராய் வந்த தென்றலுமாம்.

**மருதம் பாடல் - சாமம் பாடல்** - இரண்டாம் வேற்றுமைத்தொகை. பாட்டால் எழும் ஓசைஎழுவன எனக. இது **மறையோர்வாழ மேயிற்பதி** என்றமையால் அவர் களும், அவர்களது நிலங்களை அவராணையின் ஒழுகி உழுது பயிரிடும் மக்களும் கூறப்பட் டார்கள். ஏனைமரபினர் அருகியிருப்பர். இதுபற்றி விறன்மிண்டநாயனார் புராணத் துரைத்தவையும் பிறவும் பார்க்க.

**நெடிய உண்கண்**—என்பதும் பாடம். 3

௩34. துங்கநீண் மருப்பின் மேதி படிந்துபால் சொரிந்த வாவிச்
செங்கயல் பாய்ந்து வாசக் கமலமுந் தீம்பா லாறும்,
மங்குலேய் மாடச் சாலை மருங்கிறை யொதுங்கு மஞ்சும்
அங்கவை பொழிந்த நீரு மாகுதிப் புகைப்பா லாறும். ௪

(இ - ள்) வெளிப்படை. நீண்ட கொம்புகளையுடைய பெரிய எருமைகள் தோய்ந்து பால்சொரிந்த பொய்கைகளில் செங்கயல் பாய்தலால் அந்நீர் தெறித்த மண முடைய தாமரைகளும் தீம்பாலின் வாசமுடையனவாகும், மேகந்தவழுமளவும் உயர்ந்த மாடங்களையுடைய வேள்விச்சாலைகளின் பக்கத்திற் சிறிது ஒதுங்கும் மேகங்களும் அங்கு அவை பொழிந்தநீரும், ஆகுதிகளின் புகைப் பகுதியின் மணமுடையன வாகும்.

**(வி - ரை)** மேல் மூன்றுபாட்டுக்களிற் கூறிய நீரால் வளம்பெற்ற நிலமும் அந் நிலத்துக்குரிய மறையோரும் என்றவற்றையே அநுவதித்து வேறொருவகையாற் பின் னர்க் கூறி முடிக்கின்றார். ஆற்றைக்கண்டு அதன்வழியே போந்தான் ஒருவன் அத் னூல் வளம்பட்ட நாட்டினைக் காண்பான். பிறகு அந்நாட்டின் உள்ளே செல்ல அதன் சிறப்புடைய நகரங்காண்பான் (831) அவ்வாறு செல்லும்போது நகரப்புறத்துள்ள வயலும் சோலையும் அங்குப் புறநகரிலுள்ள வேள்விச்சாலையும் கண்டுசெல்வான் (832) அவ்வாறு காட்சிப்பட்ட பொருள்களினின்றும் போந்த ஒலிகள் பின்பு அவ னுக்குப் புலப்படும் (833) அப்பொருள்களினின்று வரும் மணங்கள் அதன்பின்னரே அறியப்படும் (834) என்றின்மூன்றிற் கூறிய அழகுகாணக. ஒளியலைகள் மிக்கவேகத் திலும், ஒலி அலைகள் அதனிற் பன்மடங்கு குறைந்தவேகத்திலும், நாற்றஅணுக்கள் அதனிற் பன்மடங்கு குறைந்த வேகத்திலும் செல்வன என்பதும், இதுவேயன்றி, ஒளியுணர்வு ஏனையுணர்வுகளினும் மிக விரைவிற் புலனாகின்றதன் காரணம் பிற இந்திரியங்களைப் போலல்லாது கண்ணிந்திரியம் தன்னிலையினின்று முன்சென்று பொருள்களிற்றாக்கி விடயிக்கின்றதனாலும் ஆவதாம் என்பதும் சாத்திரம் 67-ல் உரைத்தவையும் பிறவும் பார்க்க.

**துங்கநீள் ..வாவி** - இதனால் மேதிகளினியல்பு குறித்த தன்மையணிச் சிறப்புக் காணக. மேதிகள் நீர்நிலைகளுட் படிந்து உழக்கி நெடுநேரம் தோய்ந்துகிடக்குமியல் பும், அவை எப்போதும் மிக்க பால்சுரந்து சொரியுமியல்பும், அவற்றின் வண்ணமும், உருவும் ஒருங்குகாட்டினார். நீர்வளமும் ஊர்வளமும் குறித்தவாறுமாம். **சொரிந்த** - சொரிதற்கிடமாகிய. **நீள்மருப்பின் துங்க மேதி** - எனமாற்றுக. **பால் சோரிதல்** இது இயல்பானே மிக்கபால் சுரத்தலாலாவது. மேதிகள் கொழுத்துச் செழித்தலா லும், அன்புகூர்தலாலும் தாமாகப் பால்சொரியும். "கறவா மேபால் பொழிந்தன வால்" என்ற சண்டேசுநாயனாபுராண வாலாறும், "வருமேனிச் செங்கண்வரால் மடி முட்டப் பால்சொரிய, கருமேதி தனைக்கொண்டு கரைபுரளவ திரைவாவி" என்ற திருநாவுக்கரசுநாயனார் புராணமு(8)ம் பிறவுங்காணக. **பாய்ந்து** பாய்தலால்.

**வாசக்கமலமும்**-முன்னர் இடையின் வாசமுடைய கமலமும் தன்தியற்கை மணத் தன்மை நீங்காவ வாசக்கமலமும் உவமை உயர்வுசிறப்பு

**துங்கமேதி** - பரிய வன்மையுடைய எருமைகள் இக்கருத்தே பற்றி "உரு மேக மென்மேதி" (திருநா - புரா - 8) என்பர் பின்னாகக் கூறுவார்

**தீம்பால் நாறும்** - பாலின் நலமணமும் சுவையும் கூறியபடி இவை நமது உணர்ச்சிக்குப் புலனாகாதவாறு இந்நாளின் **பால்** மாறியது கலிகாலக் கொடுமைகளுள் ஒன்று எனக.

**மங்குல்தோய் மாடச்சாலை** - **சாலை** - வேள்விச்சாலைகள் (832). இவற்றில் நியதி யாய் நிகழும் தீயின்தொழிலால் இவை தீப்பற்றுதப்படி இவற்றை மிக உயர்வுடைய மாடங்களாக அமைத்தல் வழக்கு

**மருங்கு இறை ஒதுங்கும் மஞ்சு** - மேகந்தவழும் அளவு உயர்ந்துள்ளன ஆதலின் அவை செல்கையில் சிறிது ஒதுங்குவன என்பது. **மஞ்சு** - சாதிஒருமை. Passing clouds என்பர் நவீனர்

**மஞ்சும் அங்கு அவை பொழிந்த நீரும்** - ஒதுங்கும்போது அந்தச்சாலை மாடங்க ளாகத் தாக்கிய மேகங்கள் நீர் பொழிந்து செல்வன. இக்காட்சி உயர்ந்த மலைகளினும் மழைச்சாரல்களில் மழை விட்டுவிட்டுப் பெய்யும் ஏனையிடங்களினும் காணலாம்

**அங்கு** என்றதனால் பிறஇடங்களில் மஞ்சும் நீரும் ஆகுதிப்புகை நாறுகின்ற நிலையிலையாம் என்பது

**ஆகுதிப் புகைப்பால் நாறும்** - வேள்விப்புகையின் பகுதி மணக்கும் எனக. **புகைப்பால்** - புகைப்பினாலே, **நாறும்** - தோன்றும் - உண்டாகும் என்று கொண்டு

வேள்வியின் பயனாக மஞ்சும் நீரும் - மழையும் - உண்டாகும் என்றலாகக் கொள்ளுதும் காண்க "வேள்வி நற்பயன் வீழ்புன லாவது", (823) "உலகில் இன்புறச் சந்தவேள்விகள் முதல் சங்க ராகக்குமுன், வந்தவாச சனைவழி பாடு மன்னவாம" (822) என்ற ஆளுடையபிள்ளையார் புராணமும் பிறவும் காண்க.

மாடச்சோலை—என்பதும் பாடம். 4

835. மருவிய திருவின் மிக்க வளம்பதி யதனில் வாழ்வார்
அருமறை முந்நூன் மார்பி னந்தணர் கலய ரென்பார்
பெருநதி யணியும் வேணிப் பிரான்கழல் பேணி நாளும்
உருகிய வன்பு கூர்ந்த சிந்தையா ரொழுக்க மிக்கார். ௫

**(இ - ள்)** வெளிப்படை. பொருந்திய திருவினாலே மிகுந்த வளத்தையுடைய அந்தப் பதியில் வாழ்வாராகிய அரிய மறைவிதிப்படி பூணூல் அணிந்த மார்பினையுடைய அந்தணராவார் **கலயர்** என்று சொல்லப்படுவார். கங்கையினை அணியும் சடையினையுடைய சிவபெருமானது திருவடிகளைப் போற்றித் தினமும் உருகிய அன்பு மிக்க மனத்தையுடையவரும் நல்லொழுக்க மிகுந்தவருமாவார்.

**(வி - ரை)** **மருவிய**-மேற்பாட்டிற் கூறியபடி வேள்விப் புகைப்போல் நாறும் மழை நீரின் பெருக்கினுற் பொருந்திய. இறைவன் ஆணையினால் குபேரன் தன் பெருநிதியம் கொணர்ந்து சோதத்தனால் வந்து மருவிய. **திருவருட்சாதனமாகிய திருவும்**, அதனால் வினை எந்தச் செல்வத்துக்கு மில்லாததாகிய மிக்க **வளமும்** என்று இச்சரித நிகழ்ச்சியின் குறிப்பும் காண்க. **வளம்** - இவ்வுலக வளமும் அவ்வுலக வளமும்.

**வாழ்வார்** - வாழ்வாராகிய கலயர் என்பார் சிந்தையாரும் ஒழுக்கமிக்காருமாவார் என முடிக்க.

**மறைமுந்நூல்** - மறைகளில் விதித்தபடி மறைமந்திரங்களோதி அணியப்படுவதும், மறை ஓதும் உரிமையுடைமை ஏற்று அதற்கடையாளமாவதும் ஆகிய முந்நூல் எனக. **முந்நூல்** - மூன்றாகச் சேர்க்கப்பட்ட இழைகளையுடைய நூல் பிரமசாரிக்கு மூன்று இழையும், இல்வாழ்வானுக்கு இருமூன்றாக ஆறிழையும், அவருள் மக்களுடையானுக்கு மும்மூன்றாக ஒன்பதிழையும் கொண்ட நூல் அணிதல் விதி, ஆதலின் **முந்நூல்** என்ப படும் இங்கு முந்நூல் - மும்மூன்றிழை குறித்தது "ஒன்பது போலவர் மார்பினி னூலிழை" என்று அப்பர் சுவாமிகள் தனித்திருக்குறுந்தொகையில் இறைவனது பூணூலைப்பற்றி அருளுதலும், "ஒன்பது கொண்ட மூன்றுபுரி நுண்ஞான" என்ற திருமுருகாற்றுப்படையும் காண்க. இவ்வாறன்றி **அருமறை** அந்தணர் என்று கூட்டியுரைப்பினுமமையும்.

**அந்தணர்** - மறைமுந்நூன் மார்பினர் என்றலே அமையும், அந்தணர் என்றது மிகையாமெனின் அற்றன்று, அரசரும் வணிகரும் நூலணிய மறைவிதி யுளதாதலின் அவரினின்று பிரிக்க **அந்தணர்** என்றார். ஆயின் **அந்தணர்** என்றலேயமையும் **மறைமுந்நூல்** என்றல் மிகையாமெனின், அற்றன்று. அந்தணர்களுள் ஆச்சிரமபேதம்பற்றியும் பிறவாற்றாலும் முந்நூல் அணிதல் இல்லாத அறவோரும் உளராதலின் இவர் அவ்வாறன்றி மறைவிதிப்படி இல்வாழ்க்கையினின்ற அந்தணர் என்று காட்ட **மறைமுந்நூல் மார்பின்** என்றலும் வேண்டுவதாயிற்று

**கலயர்** - இது திருக்கடவூர் இறைவனது பெயர் **கலயம்** கலசம் - குடம் தேவர்கள் கொணர்ந்த அமிர்தகலசமே சிவலிங்கத் திருமேனியாக உருக்கொண்டெழுந்தருளிய தலம் என்ற தலசரிதம் காண்க. அக்காரணம்பற்றி இங்கு இறைவர் **கலயர்** என வழங்கப் பெறுவர். அந்தந்தத் தலத்து எழுந்தருளிய கடவுளரின் பெயரை அவ்வவரை வழி

“ வஞசநமன வாதனைககும் வனபிறவி வேதனைககும, அஞசி யுனையடைநதே னையா பராபரமே ” எனற தாயுமானாாபாடலும காணக

**மாலும் நான்முகனும் காணு வடிவு** - விடடுணுவும பிரமனும அடியும முடியும காணமாட்டாது கீழுமமேலும நீணடிருநத பெரிய அழறறாணுருவம.

**காணு வடிவுகொண்டு எதிரே வநது** - காணமுடியாது நினறவா காணுமாறுஅன தோா வடிவுகொணடு தாமே எதிரிலவநது ஆணவம உளளவழிக காணுவடிவாய நின றதும,ஆணவஙகெடடுத தானறறவழி எதிாவநததும ஆம எனறு குறிககப்பெருநதேவா களும பெருமுயறசி செயதும காணவொணணுதவா தாமே வெளிவருவா எனறா “ கனவிலுந தேவாக கரியாய போறறி, நனவிலு நாயேற கருளினை போறறி ” என பனவாதி எணணிறநத தமிழமறைகளகாணக

**பயங்கெடுத் தருளும் ஆற்றல் . . எதிரேவநது - செற்றார்** - இஙகுக காணும வடிவு கொணடு எதிாவநதது அடியவாககுப பயமபோககி அருளசெயயும பொருடடேயனறிக காலன காணுமபடியாகவனறு எனபது அவனுமகாண வநதனரே யெனின செல லுககு இறைததநீா புலலுககுமாவதுபோல அவனுமகணடான எனக. **ஆனல் அது** பாலனுககுப பயஙகெடுதது அருளும வடிவமாயிருநதது காலனுககு அதுவே உதைத திருட்டிச சஙகரிககும பயஙகொடுககும வடிவமாயிருநதது. எதிாவருதல அடியார்க்கும, செறுதல அலலாாககுமாக நினறது. ஒரேநிலையில இவவிரணடு தனமைகளும நினற பெருமையை நககீரதேவநாயனாா கோபபபிரசாதம (பதினோராந திருமுறை) எனற நூலில “மறைபயில மாாககண டேயாக கருளியும” எனவும,“மறிகட லுலகின மனனுயிா கவருங,கூறறுவன றனககோா கூறறுவனாகியும” எனறு பாராடடினா இவவாறு உதை படடபோது அதனுல வருநதுதலினறிப பிரம விட்டுணுககளுககும காணக கிடைககாத திருவடியை யான அறியபபெறறேன எனறு காலன இறுமாநதனன எனனும் இககருத தையே அபபா சுவாமிகள “ மேலு மறிநதில னன்முகன் மேறசெனறு கீழிடநது, **மாலு மறிந்திலன்** மாலுறற தேவழி பாடுசெயயும, **பாலன்** மிசைசசெனறு **பாசம்** விசிறி மறிநதசிநதைக, **கால** னறிநதா னறிதற கரியான கழலடியே”எனற திருவிருத ததகிலுள நகைசசுவைபட அருளிய அழகு காணக இததேவாாத திருவாககினை நினைவூடடி ஆசிரியா **பாலனும்** எனறும, வழிபாடுசெயயும காரணததால எதிாவநதாா எனற கருததைக குறிககப **பற்ற** எனறும, நானமுகன-மாலு மறிநதிலன எனறதனை **மாலு நான்முகனுங் காணு** எனறும, கூறியவாறறால “ முனனோா மொழிபொருளே யனறி யவாமொழியும, பொனனேபோற போறறுவம ” எனறபடி எடுததுக காட டிய அருமை நோககுக. **பற்ற எதிர்வநது செற்றார்**-பறறினுல வெளிவருவா, பறறிலலா வழி வெளிபபடாா எனறு இறைவனது அருளையும அதனை யடையும சாதனததையும குறிதத நயமும காணக. “ மறைய நினறுளன மாமணிச சோதியான, உறவு கோனட டுணாவு கயிறறினுன, முறுக வாஙகிக கடையமுன் னிற்குமே ” எனற கருததும இது. மாலு நானமுகனும பறறிலலாது திருவடியைப தேடியமையால வெளிபபடாது, பினனா இறைஞசியபோது வெளிபபடடனா எனபதும, பறறும வழிகள இவை யிவை யாம எனபதும இலிஙகபுராணத திருககுறுநதொகையினுள அபபா சுவாமிகள பல வாறறானும வறபுறுததி அழகுபட அருளியது காணக “ நனறுநகு நாணமலரா னல லிருககு மநதிரஙகொண, **டோன்றிவழி பாடு**செய லுறறவனற னுேஙகுயிாமேற, கனறிவரு காலனுயிா கணடவனுக கனறளிததான ” (திருஞான - தேவாரம - பண் - பழநதககராகம-திருககோளிலி 3), “ பததெழு மநதிர மஞசெழுத தோதிப பரிவி னுெடு,மிததெழு மாணித னினனுயி ருணண வெகுணடடாதத, கததெழு காலனைக கணகுரு திபபுன லாறொழுக, வுதைததெழு சேவடி யானகட வூருறை யுததமனே ” (திருவிருததம - 2), எனபனவாதி எணணிறநத தமிழமறைத திருவாககுககளில இப பெருமை பாராடடித துதிககபபெறறது காணக. “ மாாககணடாக காக மறலிபடட

பாடையுன்னிப், பாரகிலன்பாக சென்னப்பெங்காண பராபரமே" என்ற தாயுமானார் பாடலும், பிறவும் கண்டு கொள்க.

**குங்குலியத் தூபம்**-குங்குலியம் என்பது தூளாக்கி அனலிலிட்டுப் புகைத்தலால் நன்மணங் கமழும் ஒரு வாசனைப் பண்டம். இது மலைக்காடுகளில் விளையும் ஒருவகை மரப் பிசின். இதனைக் குக்குலு குக்குலு என்பர் வடமொழியாளர்.

**கெற்றர்க்குக் கமழ்ந்த குங்கிலியத் தூபம்** - இறைவனது வழிபாட்டுக்கு உரிய தூய சிவாகமங்களில் விதித்த குங்குலியத்தூபம் திருவிளக்கும் தூபமும் வழிபாட்டுக்கு இன்றியமையாதன. இவற்றை விதிப்படி உள்ளன்போடு இடுவோர்க்கு இறைவன் அருள்கின்றார் என்பது "விரும்பிநல் விளக்குத் தூபம் விதியினால் விட வல்லோர்க்குக் கரும்பினிற் கட்டி போல்வார் கடவூர்வீ ரட்டனாரே" என்று இத்தலத் திருநேரிசையினுள்ளும் 'சங்கொலிப் பித்திடு மின்சிறு காலைத் தடவழலிற், குங்குலியப் புகைக் கூட்டென்றுங் காட்டி" என்று திருவாரூர்த் திருவிருத்தத்துள்ளும் அப்பர் சுவாமிகள் எடுத்துக் காட்டியருளினர். இங்குத் தூபத்தைக் குறித்தது இந்நாயனாரது சரித வாசகமாதலின். குறிக்க சிறப்பாய விதித்த ஐவகைத் தூபங்களுட் குங்குலியம் ஒன்று. அவை "குக்தருகத், துய்யபெருங் கருப்பூரந் தன்னியகா ரகிலவெண்மை, மெய்திப்பசந் தனமினிய குக்குலுவு மெனவறிக" என்ற சிவதருமோத்திரத்தா லறிக. "சலம்பூ வொடு தூபமறந் தறியேன்" என்றது முதலிய திருவாக்குக்கள் காண்க.

**சாலவே நிறைந்து விம்ம** - மிக்க செறிவும் பரப்பும் குறித்த ஒரு பொருட்பன்மொழி. **விம்முதல்** நிறைவாகி மேற்கிளம்புதல்.

**தலைநிற்றல்** - அதுவே சிறந்த செய்தொழிலாக முனைத்தல்.

**உள்ளார்** - சிவத்திருப்பணி செய்தலின் உளராயினார். அவ்வாறு சிவப்பணி எதுவும் செய்யாத ஏனையோர் பிறந்தும் பிறவாதவர் எனப்படுவர் என்பது குறிப்பு. "பேசாத நாளெல்லாம் பிறவா நாளே", "உளரானார் உளரானார்" (திரு நா புரா-16) முதலியவை காண்க.

**மறையோன் போற்ற**—என்பதும் பாடம். (

837. கங்கைநீர் கலிக்குஞ் சென்னிக் கண்ணுத லெம்பி ராற்குப்
பொங்குகுங் குலியத் தூபம் பொலிவுறப் போற்றிச் செல்ல
வங்கவ ரருளி னாலே வறுமைவந் தடைந்த பின்னுந்
தங்கணா யகர்க்குத் தாமுன் செய்பணி தவாமை யுய்த்தார். ௭

(இ - ள்) கங்கைநீர் எம்பிராற்கு - கங்கையின் நீர் ஒலித்தற்கிடமாகிய திருமுடியும் நுதற்கண்ணுமுடைய எமது சிவபெருமானுக்கு, பொங்கு செல்ல மேன்மேற் செறிந்து பரந்து கிளம்பும் குங்குலியத்தூபத்தைச் சிறப்புப் பொருந்தி விளங்கும்படி தவிராது பேணிச் செலுத்தி வந்தாராக, அங்கு - அந்நாளில், அவர் பின்னும் அவருடைய திருவருளினாலே வறுமை வந்தடையவே அதன் பின்னரும், தங்கள் கடகநாா - தமது பெருமானுக்குத் தாம் அவ்வறுமை வருமுன்பு செய்துவந்த அத் திருப்பணியைத் தவிர்தலில்லாது முன்போலவே செய்து வருவாராயினர்.

(வி - ரை) **கலித்தல்** - ஒலித்தல். பெருவெள்ளமாய்ப் பாய்ந்திரைத்து வந்த கங்கை திரைவனது அவிர்சடையின் கண்டனவில் மிகைதவிர்ந்து சிறிதாயடங்கிற்று என்ன பேரிரைச்சல் செய்யும் இயல்பினையுடையதாம் என்பது. விரிந்து ஓடுகின்ற நீர் சிறைசெய்கப்போது பேரொலி செய்யும் எனக.

**நீர்கலிக்கும் சென்னி - கண்ணுதல்** - நுதற்கண் கோபத்தையும், நீர்கலித்தல் பிரசாதத்தையும் குறிப்பன. இங்குக் காலனை யுதைத்த அருட்டிய நிக்கிரகமும், மார்க்கண்டேயரைக் காத்த அனுக்கிரகமும் செய்த ஒருவர் என்பது குறிப்பாம்.

**துங்கு லியப் போங்குதூபம்** எனக். **பொலிவுற** - தூபத்துக்குப் பொலிவாவது மிக்க நன்மணம் பொருந்திச் செறிந்திருத்தல். "சாலவே நிறைந்து விம்ம" என முன்னாகக் கூறியது மிது.

**போற்றி** - சோர்வுபடாமற் பேணி. **செல்ல** - செலுத்த. இவ்வாறு நடத்த.

**அங்கு** - அந்நாளில். அங்கு இடச்சுட்டுக்காலங் குறித்தது.

**அருளினாலே வறுமை வந்து அடைந்த பின்னும்** - இதுபற்றி 445ம் திருப்பாட்டினும் பிறண்டு முறைத்தவை பார்க்க அடியார்களுக்கு வறுமையாகிய துன்பம் வரச் செய்தலும் அருளாமோ? எனின், இது உண்மையில்லை யறியாதார் கூற்றேயா மெனக் என்னை? செல்வ வறுமைகளும் இன்பதுன்பங்களும் ஒன்றுபோலவே அவ்வவர் வினைக்குத் தக்கபடி இறைவன் தர வருவன "விரைந்தாளு நல்குரவே", "நோவுள்ளார் வாயுள்ளான்" என்ற தேவாரத் திருவாக்குக்களின்படி வறுமை முதலிய துன்பங்கள் அடிமையை அளக்கும் கருவிகளாகவும் இறைவன் தருவன "ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்" என்றபடி இன்ப துன்பங்களிரண்டையும் ஒன்று போலவே காணுவதாகிய இருவினையொப்பு என்ற பக்குவமில்லை வரும்படி செய்து, அடியார்களை ஆட்கொள்ளுதல் அருளேயாதல் காணக்.

**பின்னும்** - உயர்வு சிறப்பொடு கூடிய எச்சவும்மை. வறுமையினும் திருப்பணி தவாது உய்த்தலின் அருமை குறித்தது. பின்னும் தவாமை உய்த்தார் எனக் 'வளஞ்சுருங்கவும், முன்னை மாறில் திருப்பணிக்கண் முதிர்ந்த கொள்கைய ராயினார்" (446) என்றதும் காணக். **தவாமை** - குறைவில்லாதபடி **உய்த்தல்** - கொண்டு செலுத்துதல்.

**முன் செய்பணி** - வறுமை வருவதற்குமுன் சாலவே நிறைந்து விம்மக் கமழ்தூபமிட்டுச்செய்தபடி என்பார் **முன்செய்** என்றார் செய்தபடி எனக். 7

838. இந்நெறி யொழுகு நாளி லிலம்பாடு நீடு செல்ல
நன்னில முற்றும் விற்று நாடிய வடிமை விற்றும்
பன்னெடுந் தனங்கண் மாளப் பயின்மனை வாழ்க்கை தன்னின்
மன்னிய சுற்றத் தோடு மக்களும் வருந்தி னார்கள். அ

(இ - ள்) வெளிப்படை - இந்நெறியிலே ஒழுகுகின்ற காலத்தில் வறுமை மிகவும் முடுகியதாதலின், தமது நல்ல நிலங்களையெல்லாம் விற்றும், நாடியுள்ள அடிமைகளை விற்றும் இவ்வாறு தமது பல பெரிய செல்வங்கள் எல்லாம் தீர்ந்து போயினவாகவே, பயின்ற இல்வாழ்க்கையிற் பொருந்திய சுற்றத்தார்களுடனே மக்களும் வருந்தினார்கள்.

(வி - ரை) **இந்நெறி** - மேற்பாட்டிற் கூறிய படி வறுமை வந்தடைந்த பின்னும் முன் செய்பணியில் தவாமை உய்த்த ஒழுக்கம்.

**இலம்பாடு** - இல்லாமை - வறுமை **பாடு** - தொழிற்பெயர்விகுதி **நீடு செல்லுதல்** - மிகமுடுகுதல்.

**நன்னிலம்** - நன்செய் உணவுக்கு இன்றியமையாத நெல்லினை நேரே தருதலால் இவற்றை நல் என்ற அடைமொழி தந்து வழங்குவது மரபு ஏனை நிலங்கள் தரும் விளைவுகள் நெல்லைப்போல அத்துணைச் சிறப்பில ஆகலான் அவற்றைப் **புன்செய்** என வழங்குவர் **நன்னிலம்** - சிறந்த விலையுயர்ந்த நிலம் என்றலுமாம்

**முற்றும்விற்றும்** - **முற்றும்** - என்ற முற்றும்மை நல்ல நிலங்களினும் ஒன்றும் ஒழியாது எல்லா நிலமும் விற்றனர் என்பது குறித்தது புன்செய்கள் இன்றியமையாதனவல்ல ஆதலானும், வருவாய் குறைந்தனவாகலானும் பல நிலங்களுமுடையவன் விற்கவேண்டிவரின் அவற்றையே முதலில் விற்பன் அதன் பின்னரே ஏனை நல்லன வற்றில் தனக்கு உணவுக்கு வேண்டும் அளவுமட்டில் வைத்துக் கொண்டு, ஏனைய வற்றை விற்பன். இங்கு அவ்வாறன்றி நல்ல நில முழுதும் விற்றனர் எனபதாம்

**நாடிய அடிமை** - தம்மையே ஆதரவாக நாடியுள்ள எனவும், தாம் நாடிக்கொண்ட எனவும் இருவழியும் கொள்ள நின்றது. அடிமைகளைக் கொள்ளுதலும் விற்றலும் அக்காலத்து வழக்கு. அடிமைவிற்பனை ஆங்கிலேயராளுகையின் பின் அரசாங்க நியமமாகிய சட்டங்களால் ஒழிக்கப்பட்டதென்பர். ஆள் அடமானப்பத்திரங்களும், முன் கொண்டு பெற்ற கூலி ஒப்பந்தங்களும் முதலாயின இன்றைக்கும் நடைமுறையில் உள்ளனவாதலின் அடிமைவிற்பனையும் அடிமை ஒற்றியும் உண்மையில் ஒழிந்தனவாகக் கருத இடமில்லை. முன்னாளில் பிறப்பாலும் இசைவு என்ற ஒப்பந்தத்தாலும் இருவகை அடிமை வழக்கம் உண்டென்பது தடுத்தாட்கொண்ட புராணத்துட் (183 - 210) காணப்படும். மனைவியையும் விற்கும் வழக்கும் உள்ளதென்பது கலிநீதி நாடனார் புராணத்தாலும், அரிச்சந்திரன் கதை முதலியவற்றாலும் அறியப்படும். "இருந்தென்னை யாண்டுகொள் விற்றுக்கொள் ஒற்றிவை" (திருவாசகம்-நீத்-விண-18), "தனிப்பட்டென்னைப் பொன்னை, ஊனறிகின் றுரைவாக கொற்றிவைத் தாயினனை பொற்றியெல்லாளு, சென்று கொண்டாய்" (அப்பர் தேவாரம் - திருவிருத்தம் - திருவேகம்பம் - 9) முதலிய திருவாக்குக்களால் அடிமைகளை விற்பதேயன்றி ஒற்றிவைக்கும் வழக்கும் உண்டென்பதறியப்படும். இதுபற்றி இந்நாள் நவீனர்கூறும் இகழ்ந்துரைகள் பொருளில்லாமென்றொழிக. என்னை? உலகுமுழுதும் ஒருவனுக்கொருவன் அடிமைப்பட்டே-அடிமை வேலை செய்தே-உலக வாழ்க்கை நடைபெறுகின்றது. எந்த உருவத்திலாயினும் அடிமை செய்யாது உலகம் நடைபெறுதென்பது சிறிது ஆராய்வோருக்கும் பெரிதும் புலனாமெனக் இவ்வாறு பல வழியாலும் பல உருவத்தாலும் உலகத்துக்கு அடிமையாதலை ஒழித்து இறைவனுக்கு அடிமைப்பட்டு நிற்போமாயின் எல்லாத் தீங்கையும் நீங்கி இன்பமடைவோம் என்பது வேதசிவாகமங்களின் துணிபாம். இதுவே அநாதியாக அறிஞர்கள் கைக்கொண்டொழுகும் ஒழுக்கமுமாம். "மீளா அடிமை யுமக்கே யாளாய்ப் பிறரை வேண்டாதே. ஆளாயிருக்கும் அடியார்" என்ற நம்பிகள் திருவாக்கினுல் அடிமையிலிருந்து மீட்டுக் கொள்ளுதலும் உண்டென்பது போதரும். "ஆளென்ப புந்தியினவ் தடைந்தில மத்தனை, றுளி னேவல தலையி னியற்றி, வழிவழி வந்த டாயினம்" என்ற கோயிலுன் மணிமாலை (24)யும், "கொற்றத் திறலந்தை தந்தைதன் றந்தைதெந் கூட்டமெல்லாந், தெற்றச் சடையாய் நின்றடிப்பட்ட" என்ற திருத்தொண்டர் திருவந்தாதி (35)யும், இதனை எடுத்தாண்டு "எம்பிரானெ னெந்தை தந்தை தந்தைதெம் கூட்ட மெல்லாந், தம்பிரா னீரே யென்று வழிவழிச் சார்ந்து வாழு, மம்பரின் மிக்க வாழ்க்கை யென்னை" என்ற ஏயர்கோன்புராணம் (392), "யானு மென்பால் வருமுறை மரபுளோரும் வழித்தொண்டு செய்தற்கோலை" (205), காண்க. இவற்றால் வழிவழிவரும் அடிமைவழக்கமும் உண்டென்பதும் பெறப்படும்.

**பல் நேடும் தனங்கள்** - பலவகைப்பட்ட பெருத்த செல்வங்கள். வகையாலும் தொகையாலும் பெருமை குறிக்கப் பல - நெடு(மை) என்ற இரண்டடைமொழிகள் புணர்த்தியோதினார். அசையாப் பொருளும் அறிவில் பொருளுமாகிய உடைமைகளிற் சிறந்த நனிலங்களை முதலிற் கூறிக் கழித்ததுவும், அதன்பின் அசையும் பொருளும் அறிவுடைப் பொருள்களுமாகிய அடிமைகளைப் பின்னாகக் கூறிக் கழித்ததுவும் கருத்தத்தக்கது. எனவே நிலமுதல் அடிமைவரை எல்லாவகைப் பெருஞ் செல்வங்களும் விட்டுக் கழிந்தன எனக. அதுபற்றி மாள என்றதும் காண்க.

**சுற்றத்தோடு மக்களும்** - சிறப்புக் காட்டும் ஓடு உருபைச் சுற்றத்துடன் சாத்தி பொருவியத்து இவ்வொழுக்கை நிலையில் சுற்றந்தழுவலின் இன்றியமையாச் சிறப்பையும், காட்டத்தாற், சுற்றமவந்த பின்னரே மக்கள் வரும் முறைமைச் சிறப்பையும் வற்புறுத்துதற்கு. "பட்டற்ற கண்ணும் பழமைபா ராட்டுதல், சுற்றத்தார் கண்ணே யுள" என்ற திருக்குறளும் காண்க. **மக்களும்** - வருந்தப் பாராத மக்களும் என உம்மை உயர்வு சிறப்பு. மக்கள் வருந்தியது கூறவே தாமும் மனைவியாரும் முன்னர் வருந்தியது

கூறுமலே பெறப்படுமாதலின் அதனைக் கூறாது விடுத்தனர். சுற்றத்தாராவார் " அற்ற குளத்தி லறுநீர்ப் பறவைபோ, லுற்றுழித் தீர்வார் உறவல்லர் – அக்குளத்திற், கொட்டியு மாம்பலு நெய்தலும் போலவே, யொட்டி யுறுவா ருறவு " என்றபடி செல்வத்திற்கூடி வறுமை வந்தகாலத்தில் நீங்கிவிடாது, தாமும் கூடவே ஒட்டி உலரும் உறவினர். ஆதலின் இவர்களை வறுமையிலும் காத்தல் கடனாயிற்று. இதனை " ஒக்கல் " என ஐம் புலத்தார் கடனுள் ஒன்றாக வைத்தோதியது நீதிநூல். இது பற்றியே இவர்கள்டம் மக்களையும் ஒன்றுபோலவே பார்த்து அம்மையார் தாலி கொடுத்து நெற் கொள்ளச் சொன்னார் என்க. 8

839. யாதொன்று மில்லை யாகி யிருபக லுணவு மாறிப்
பேதுறு மைந்த ரோடு பெருகுசுற் றத்தை நோக்கிக்
காதல்செய் மனைவி யார்தங் கணவனார் கலய னார்கைக்
கோதின்மங் கலநூற் றாலி கொடுத்து" நெற் கொள்ளு "மென்றார். ௯

(இ - ள்) வெளிப்படை - உணவுக்குரிய சாதனம் யாதொன்றும் கிடையாதாகி, இரண்டு பகல் உணவு இல்லாமல், வருந்துகின்ற மைந்தர்களோடும் பெருகிய சுற்றத் தாரையும் பார்த்துக் காதலையுடைய மனைவியார் தமது கணவராகிய கலயனாரது கையில் குற்றமில்லாத மங்கலநூற் றாலியைக் கொடுத்து "இதற்கு நெல் வாங்கி வாரும்"என்று சொன்னார்

(வி - ரை) யாதொன்றும் - உணவுப் பொருள்களேனும், அவற்றைத் தேடுதற் குரிய செல்வம் முதலிய பண்டமாற்றுப் பொருள்களேனும் எவையும்.

இருபகல் - பகல் இங்கு நாளைக்குறித்தது

உணவுமாறி - உணவில்லாமல். பேதுறுதல் - வருந்துதல்.

மைந்தரோடும் - சுற்றத்தை - இது மனைவியாரது மனநிலை குறித்த இடமாத லானும், முதலிற் பசிதீர்க்கத் தக்கவர் இளஞ்சிறாரேயாதலானும், தாயினது அன்பின் பெருக்கு ஒப்பற்றதாதலானும் இங்கு மைந்தரை முதலில் வைத்தோதினார். இது பற்றியே காதல்செய் மனைவியார் என்றதுமாம்.

கோதில் மங்கலநூல் தாலி - கோது - குற்றம் இங்கு இச்செயல் குற்றமற்ற இல்வாழ்க்கை யொழுக்கங் குறித்தலின் கோதில் எனத் தாலியின்மேலேற்றிக் கூறி னார் மங்கலநூல்-மங்கலத்துடன் வருவதானும், சுமங்கலியத்துவமாகிய தன்மை காட் டும் அடையாளமாதலானும் இவ்வாறு கூறியபடியாம் மணமகளின் கழுத்தில் மண மகன் மங்கலநூலணிவதுவே மணச்சடங்குகளில் இன்றியமையாப்பகுதி. நூலுடன் தாலியும் பிறவும் கோத்தணிவது பிற்கால வழக்குப்போலும். நூலையேவிட்டுப் பொற் சரடு அணியும் இந்நாளின் புது வழக்கு நூல் வழக்குக்கு மாறுபட்டதெனப். "மங்கல நூல் சாத்தி" என்று திருவிளையாடற் புராணத்தில் மீனாட்சியம்மையார் திருமணப் படலத்தினும், "மங்கல நாணை மணிக்கள மார்த்து" என்று கந்த புராணத்தில் தெய்வ யானையம்மையார் திருமணப்படல (247) த்திலும் கூறுவது காண்க மங்கல நூல் மட்டுமே சுமங்கிலிகட்கு இன்றியமையாத தெனபதும், பெருங்கேடு வருங்கால் மங்கல நூலிற்கோத்த பொற்றாலியையும் வேறுபிரித்து எடுத்துப் பயன்படுத்திக் கொள்ளலா மெனபதும் அறநூல் விதியாமாதலின் இங்கு மனைவியார் மங்கல நூலை மட்டும் அணிந்துகொண்டு தாலியை நூலினின்றும் பிரித்து எடுத்து நெற்கொள்ளக் கொடுத் தனர். கோதில் மங்கல நூல் என்ற இதனால் இச்செயலால் மங்கலத்துக் கிழுக்கின் றெனபதும் குறிப்பு சுமங்கிலித்துவத்தை நூலே குறிப்பதாம் எனபது "அம்பொன் மணி நூல்தாங்கா தனைத்துமியாக்கு மருள்தாங்கி" (திருநா. புரா - 84) என்றதனாலும் அறிக. 9

840. அப்பொழு ததனைக் கொண்டு நெற்கொள்வா னவரும் போக
ஒப்பிலக் குங் குலியங் கொண்டோர் வணிகனு மெதிர்வந் துற்றான்;
"இப்பொதி யென்கொல்?" லென்றா ருள்ளவா றியம்பக் கேட்டு
முப்புரி முந்நூன் மார்பர் முகமலர்ந் திதனைச் சொன்னார், ௧௦

841. "ஆறுசெஞ் சடைமேல் வைத்த வங்கணர் பூசைக் கேற்ற
நாறுகுங் குலிய மீதே லின்று பெற்றேன், நல்ல
பேறுமற் றிதன்மே லுண்டோ? பெறும்பேறு பெற்று வைத்து
வேறினிக் கொள்வ தென்?" னென்ன றுரைத்தெழும் விருப்பின் மிக்கார்,

842. "பொன்றரத் தாரு"மென்று புகன்றிட வணிகன் றானும்
"என்றர விசைந்த?" தென்னத் தாலியைக் கலய ரீந்தார்;
அன்றவ னதனை வாங்கி யப்பொதி கொடுப்பக் கொண்டு
நின்றிலா விரைந்து சென்றார் நிறைந்தெழு களிப்பி னோடும். ௧௨

840. (இ-ள்) வெளிப்படை. அப்பொழுது அத்தாலியினைக் கொண்டு நெற்கொள்ளும் பொருட்டு அவரும் போக, ஒப்பற்ற குங்குலியப் பொதியினைக் கொண்டு ஒரு வணிகன் எதிரே வந்து சேர்ந்தனன்; "இந்தப் பொதி என்ன" என்று கேட்டவருக்கு அவன் உள்ளபடி சொல்ல அதனைக் கேட்டு முப்புரியாகிய மூன்று நூல் அணிந்த மார்பினையுடைய அவர் முகமலர்ச்சியுடன் பின்வருமாறு சொல்வாராயினர், ௧௦

841. (இ-ள்) வெளிப்படை. "கங்கையைச் சிவந்த சடையின்மேல் வைத்த அங்கணருடைய பூசைக்கேற்றதான நறுமணமுள்ள குங்குலியம் இதுவானால், நான் பெரும்பேறு இன்று பெற்றவனாயினேன், இதன் மேலும் நல்லபேறு வேறுண்டோ?, பெறுதற்கரிய இப்பேற்றினைப் பெற்று வைத்திருந்தும், இனி வேறு கொள்ளத்தக்கது என்ன உளது?" என்று எழுகின்ற விருப்பத்தில் மிகுந்தவராகி, ௧௧

842. (இ-ள்) வெளிப்படை. "நான் உமக்குப் பொன்னைத்தர நீர் இக்குங்குலியத்தினைத் தாரும்" என்று கலயர் சொல்ல, வணிகனும் "தேவரீர் எதனைக் கொடுக்க இசைந்தீர்?" என்றான், கலயர் தாலியை ஈந்தனர், அப்போதே அவன் அதனை வாங்கிக் கொண்டு அந்தப் பொதியைக் கொடுத்தான். அதனைப் பெற்றுக் கொண்ட கலயர் அங்குச் சிறிதும் நில்லாமல் உள்ளே நிறைந்த பெருமகிழ்ச்சியுடன் விரைந்து சென்றனர்

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன

840. (வி-ரை) **அவரும் நெற்கொள்வான் போக** - எனக் **கொள்வான்** - கொள்ளும் பொருட்டு; வான் ஈற்று வினையெச்சம்.

**ஒப்பில்** - ஒப்பற்ற தன்மையாவது இன்று அது கொண்டதனால் விளையும் பயன் குறித்தது.

**ஓர் வணிகன்** - குங்குலியமும் ஒப்பற்றது; அதனைக் கொணர்ந்தவனும் ஒப்பற்றவன் என்பார் ஓர் என்றார். இறைவனே இவ்வாறு எழுந்தருளினன் என்பதும் குறிப்பு. "திருத்தொண்டர் ஒருவர்" என்ற காரைக்காலம்மையார் புராணத்(17)திலும் இக்குறிப்புக் காண்க.

**என்றார்க்கு** - என்று கேட்டாராகிய அவருக்கு. **மார்பர்** - கேட்ட அந்த மார்பர் [illegible] எச்சம் வருவிக்க. **முப்புரிமுந்நூல்** - 835 பார்க்க. மக்களும் (838) மைந்தரும் (839) என்றமையால் மூன்று இழைநூல் மூன்று அணிந்தவர் எனக்.

**முகமலர்ந்து** - முகமலர்ச்சி அகமலர்ச்சியாலாகிய மெய்ப்பாடு. அகமகிழ்வின் காரணம் நாயனார் திருவாக்கில் வைத்து ஆசிரியர் கூறுகின்றார் "அடுத்தது காட்டும்

பளிங்குபோ னெஞ்சங், கடுத்தது காட்டு முகம்" என்பது குறள். முகமலர்ச்சியாலன்றி அகமலர்ச்சி காணவொண்ணாதாதலின் முகமலர்ச்சி கூறவே இரண்டும் பெறப்பட்டது. சிந்தைமகிழ முகமலரும். அதற்கேற்ற மொழி பின்னர் வரும். அம்முறையில் வைத்து ஓதியதும் காண்க. இதனை - வரும்பாட்டிற் கூறுகின்றபடி.

**வெண்ணூல்மார்பர்**—என்பதும் பாடம்  10

**841. (வி - ரை) செஞ்சடைமேல் ஆறு வைத்த** என மாற்றுக. **வைத்தஅங்கணர்.** அங்கணராதற்கு அடையாளங்காட்டியபடி. சடைமேல் ஆறுவைத்ததனால் தமது அங்கணமையாகிய அருட்டிறத்தைக் காட்டியவர் என்பது குறிப்பு.

**அங்கணர் பூசைக்கேற்ற** - எனவும், **வேறு இனிக்கொள்வதேன்?** எனவும் கூறியவதனால், பிறவெல்லாவற்றினும் அவர் பூசையேவிரும்பிச் செய்யத்தக்கது என்பதும், அதுவே உறுதிதரும் அருளைப்பெறச் செய்வதாம் என்பதும் நாயனார் திருவுளத் திற் கருதினார் என்றபடியாம்

**நல்ல பேறு** - நன்மையெல்லாம் தரத்தக்க பேறு. இதனால் தாம் கொள்ள எண்ணிவந்த நெல் முதலிய எவற்றைக் கொண்டாலும் அவை நல்ல பேறாகா என்று நாயனார் எண்ணினார் என்பது குறிப்பு

**வேறு இனிக்கொள்வதேன்? வேறு** - என்றது பூசைக்குரியவற்றின் புறம் பாயின. தமக்கும் மனைவியார் மக்கள் சுற்றத்தார் முதலியோர்க்கும் பசித்துன்பம் போக்க நெற்கொள்ளும் முயற்சியை **வேறு** - என்று ஒதுக்கி அவையெல்லாவற்றினும் அங்கணர்பூசையினையே சிறந்ததெனக் கொண்டது மனைவிமக்களுடன் கூடிய இல் வாழ்க்கையினுள்ளிருந்தும் சிவபெருமானிடத்து இவர்க்கிருந்த அயரா அன்பின் றிறங் காட்டியது "விரும்புநல் வினைக்குத் தூபம் விதியினால் விடவல் லார்க்குக், கரும்பினிற் கட்டி போல்வார் கடவூர்வீ ரட்ட னாரே" என்ற அப்பர் சுவாமிகளது மெய்த்திருவாக் கின்படி மிடியும்பசியும் கவலையும் முதலிய துன்பங்களையெல்லாம் களைந்து பூசையின் இன்பமே கரும்பின் கட்டிபோல ஊறுகின்றதனை இங்குக் கண்டுகொள்க. இதன் பின்விளைவுகளும் இவ்வாறே இனியனவாதலும் உன்னுக.

**இன்று நான் நல்ல பேறு பெற்றேன்** - எனக. **பெற்றேன்** - பெறுவேன் என எதிர்காலத்துக் கூறற்பாலது **பெற்றேன்** என உறுதிபற்றி இறந்த காலத்தில் வந்தது **நல்லபேறு** என்றதனையே வற்புறுத்திப் பின்னரும் **பெறற்பேறு** என்றார்.

**இதன் மேல் மற்றுப்பேறு உண்டோ?** இல்லை என்றதாம். ஓகாரம் எதிர்மறை குறித்தது. **பேறு** என்ற சொல்வருவிக்க.

**பெறற்பேறு** - எல்லாராலும் பெறுதற்கரிய பேறு பெற எனபது இன்மை குறிக்காது பெறுதற்கு அருமை குறித்து நின்றது "பெறுதற் கரிய பிறவியைப் பெற்றும், பெறுதற் கரிய பிரானடி பேணார், பெறுதற் கரிய பிராணிக ளெல்லாம், பெறுதற் கரியதோர் பேறிழந் தாரே" என்ற திருமூலர் திருமந்திரக்கருத்தை இங்கு வைத் துக் காண்க. குங்குலிய மூட்டுதல் மிகச்சிறந்த பேறு என்று காண்பதற்குத் திருவை யாற்றில் தெற்குக்கோபுரவாயிலில் ஆட்கொண்டார் சந்நிதியில் இன்றும் குங்குலியக் குழியில் நிரந்தரமாய் அது எரிக்கப்படுதல் காண்க.

**வைத்து** - உம்மை தொக்கது **வேறு** - தாம் கருதிவந்த நெல் முதலாகிய உண வுப்பண்டம் இவற்றை **வேறு** என்றொதுக்கியது அவை உடம்போடு ஒழியும் பயன் றருதலல்லது இதுபோல உயிர்க்குறுதி தாராமை கருதி

**உரைத்து** பிறரொருவரையும் பாராது தமக்குத்தாமே சொல்லிக்கொண்டு

**எழும் விருப்பின் மிக்கார்** - உள்ளிருந்து மேன்மேல் எழுகின்ற விருப்பத்தின் மிகுதியும் உடையாராகி

**ஈதே**—என்பதும் பாடம்.  11

842. (வி - ரை) **பொன் தரத் தாரும்** - இது வணிகனை நோக்கி நாயனார் கூறியது. விலைப்பாகப் பொன்னை நான் தர அதனைப் பெற்றுக்கொண்டு இக்குங்குலியப் பொதியினைத் தாரும்.

**பொன்** என்றது இங்குப் பொன்னாலாகிய அணியைக் குறித்து வந்தது போலும்.

**என் தர இசைந்தது** - பொன் என்றதனால் அப்பொன்னாவது - பொன்னணியாவது - யாது என்றபடி. "பொன்னணிவ" ரென்ற வழக்கும், "நிறை பொன்னணிபக் கருதுகின்றார் பல" (195) என்ற திருக்கோவையாரும் காண்க.

**தாலியை ஈந்தார்** - அவ்வாறு வினவிய வணிகனுக்கு அது இன்னதெனவாய் கூறாது - சொல்லிக் காலந்தாழ்க்காது - செயலிலே தாலியை ஈந்து அவ்வழியால் விடை தந்தனர் என்க. பூசைக்கான பொருள் தேடுதலின் தீவிரம் குறித்தது.

**அதனை வாங்கி அப்பொதி கொடுப்ப** - அதனை வாங்கிக்கொண்டு அதற்கீடாக அந்தப் பொதியினைக் கொடுக்க. விலைபற்றி நாயனார் சிந்தித்திலரேனும், கொண்ட பொருளுக்கு நேராகக் கண்டவன்போல அவன் அப்பொதியினைக் கொடுத்தான் என்பது குறிப்பு.

**நின்றிலர் விரைந்து சென்றார்** - பூசைச்சாதனம் அருமையிற் பெற்ற ஆர்வமும் தொடர்பணியில் வைத்த தீவிர அன்பும் குறித்தது.

தமக்குரியதேயாயினும் உரித்தன்றேயாயினும், நன்றேயாயினும் தீதேயாயினும், ஏதேனும் ஒரு தொழில் செய்து பிழைக்கவறியாது, உடைமை விற்றும் அடிமை விற்றும் உணவின்றிப் பட்டினி கிடந்தும் தாலியையும் விற்க முயன்றும் உணவு தேடுவது சோம்பர் செயலாம் என்று அறிவார்போன்ற சில நவீனர் இகழ்தலுங்கூடும். மிடியும் பசியும் வருத்தியபோதும் தமக்குரிய தொழிலையன்றி வேறு தொழில் செய்து உயிர் வாழ எண்ணமாட்டார் பெரியோர் என்பது இந்நாயனாரது வாழ்க்கையால் அறியப்படும் உண்மை நீதிகளுள் ஒன்றாம். ஆனால் எமது பெருமக்கள் தொழில் செய்தும், கூலிவேலை செய்தும் சீவித்தலை இகழ்ந்தாரல்லர். "அல்லல் நல்குர வாயிடக் **கூலிக்கு, நெல்லறுத்தும்**" என்று அரிவாட்டாய நாயனார் சரிதமும், "வளமுடையார் பாலெண்ணெய் கொடுபோய்மாறிக் கூறிக், கொள்முயலுஞ் செய்கையும் மற்றவர்கொடாமையினால், ... தன்னுடன் முட்டவாதாருஞ் சக்கரவெந் திரம்புரிந்து, கண்ணில்வரும் பணிசெய்து பெறுங்கூலி காதலித்தார்", "செக்குநிறை வெள்ளாட்டிப் பதமறிந்து திலதயிலம் பகுத்துமாட்டும் மிகவுழந்தும் பாண்டிலவரு மெருதுய்த்தும், **தக்கதொழிற் பெறுங் கூலி** தாங்கொண்டு" என்ற கலியநாயனார் சரிதமும், பிறவும் இவ்வுண்மையை விளக்குவன. ஆனால் இப்பெரியார்கள் பலரும் தத்தம் மரபுக்கும் தகுதிக்கும் உரிய தொழில்களையும் அவ்வகையிற் பெறும் கூலி வேலைகளையுமே செய்ததமையும் குறிக்க. "புலி பசித்தாலும் புல் தின்னாது" என்று கொடுவிலங்கின் மேல் வைத்துக் காட்டும் நியதியையும் மறந்து, தொழில் யாவும் ஒன்றே-யாரும் எத்தொழிலும் செய்யலாகும்- எது செய்தேனும் பிழைத்தல் வேண்டும் என்று கூறும் நவீனக் கொள்கையினை அறிவுடையோர் கொள்ளார். "ஈன்றாள் பசிகாண்பா னாயினுஞ் செய்யற்க, சான்றோர் பழிக்கும் வினை" என்ற நீதிக்கு இச்சரிதம் இலக்கியமாம். இதுபற்றியே "செயல் எலாம் தொழில்க ளாமே" என்று தொடக்கத்தில் வற்புறுத்திக் காட்டினார். இவற்றால் வேதியர்க்கு வேறு தொழில்கள் உரித்தாகாமையும் காணப்படும். "இறந்த மூப்பினராகிய இருமுது குரவரும் கற்புடை மனைவியும் குழவியும் பசியால் வருந்து மெல்லைக்கண் தீயன பலவும் செய்தாயினும் புறந்தருக" என்னும் அறநூற் பொதுவிதியினை அறிவுடைச் சான்றோர் மேற்கொள்ளா ரென்பது துணிபு.

**நின்றிலர் மகிழ்ந்து**—என்பதும் பாடம்.

843. விடையவர் வீரட் டானம் விரைந்துசென் றெய்தி யென்னை
யுடையவ ரெம்மை யாளு மொருவர்தம் பண்டா ரத்தில்
அடைவுற வொடுக்கி யெல்லா மயர்த்தெழு மன்பு பொங்கச்
சடையவர் மலர்த்தாள் போற்றி யிருந்தனர் தமக்கொப் பில்லார் ௧௩

(இ - ள்) வெளிப்படை. தமக்கு ஒப்பில்லாதவராகிய கலயனார், விடையினையுடைய சிவபெருமானது வீரட்டானத் திருக்கோயிலுக்கு விரைவாகச் சென்று சேர்ந்து என்னையடிமைப் பொருளாக உடையவரும் நம்மை ஆளுகின்ற ஒருவரும் ஆகிய இறைவருடைய பண்டாரத்திலே அந்தப் பொதியினை முழுதும் சேமித்துப், பிற எல்லாவற்றையும் மறந்து எழுகின்ற அன்பு பொங்க அந்தச் சடையவருடைய மலர் போன்ற பாதங்களைத் துதித்துக் கொண்டு அங்கே இருந்தனர்.

(வி - ரை) **விரைந்து சென்று எய்தி** - விரைவு அவரது ஆர்வங்குறித்தது. மேற் பாட்டுப் பார்க்க.

**என்னை உடையவர் - எம்மை ஆளும் ஒருவர்** - இது கவிகூற்று. உயிர்ப்பொருள் உயிரில் பொருள், அறிவுப் பொருள் அறிவில் பொருள் என்ற பகுப்புக்களிலே பட்ட எல்லாவற்றையும் தமது அடிமையாகவும் உடைமையாகவும் கொண்டவர் இறைவர் என்பது. "எல்லாமுன் உடைமையே எல்லாமுன் அடிமையே" என்ற தாயுமானார் பாட்டும் காண்க. **ஒருவர்** - இவ்வாறுள்ள தலைவர் ஒருவரே என்பது வேத முதலாகிய எல்லா உண்மை நூல்களின் துணிபு. "ஒன்றென்ற தொன்றேகாண் ஒன்றேபதி" என்பது (சிவஞானபோ -2- உதாரணம்) ஞான நூல்.

**பண்டாரம்**-சேமம் பொக்கிஷம் என்பர். இறைவனது பெருந்திருவாகிய முத்தி சாதனங்களை உபதேசிக்கும் தேசிகர்களைப் பண்டார சன்னிதிகள் என்று வழங்கும் வழக்கும், 'அடியவர்க்கு மூலபண்டாரம் வழங்குகின்றான் வந்து முந்துமினே" என்ற திருவாசக முதலியனவும் காண்க.

**அடைவுற ஒடுக்கி** - அப்பொதியிற் கொண்ட குங்குலியமுழுதும் அமைவுபடும்படி சேமித்து.

**எல்லாம் அயர்த்து** - பிற எல்லாவற்றையும் மறந்து. அவை, மனைவி மக்களும் சுற்றமும் தாமும் பசியால் வருந்துதலும், அதற்காக நெற்கொள்ளத் தாலிகொண்டு வந்ததும் பிறவுமாம்.

**அயர்த்தல்** - மறத்தல் "அயர்த்தனையோ நம்மைப் பாடுதற்கு" (திருஞான - புரா - 1010), "எம்பிரானறனை யெறியா தயர்த்தேன" (சாக்கியா புரா - 15) முதலியவை காண்க. **எல்லாம் ஆர்ந்தெழும்** என்பது பாடமாயின் முற்றும் நிறைந்து மேலெழுகின்ற எனக.

**சடையவர்** - 830-831 முதலியவற்றில் இதுபற்றி முன் உரைத்தவை பார்க்க.

**தமக்கொப்பில்லார் (ஆதலின்) இருந்தனர்** எனக. இவ்வாறு செய்தலும், பின்னர் அன்பு பொங்க இருத்தலும் பிறர்க்கு அரிதாமாதலின் **ஒப்பில்லார்** என்றார்.

**நம்மையாளும்**—என்பதும் பாடம் 13

844. அன்பரங் கிருப்ப நம்ப ரருளினா லளகை வேந்தன்
றனப்பெரு நிதியந் தூர்த்துத் தரணிமே னெருங்க வெங்கும்
பொன்பயில் குவையு நெல்லும் பொருவில்பல் வளனும் பொங்க
மனப்பெருஞ் செல்வ மாக்கி வைத்தன்ன மனையி னீட. ௧௪

(இ - ள்) வெளிப்படை. இவ்வாறு அன்பர் அங்கே திருவீரட்டானத்தில் இருந்தாராக, நம்பரது திருவருளினாலே குபேரன் தனது பெருநிதியத்தைப் பூமியில்

நெருங்கும்படியாகக் கொண்டுவந்து அவரது திருமனையில் எவ்விடத்தும் நீடியிருக்கும் படி பொன் நிரம்பிய குவைகளும் நெல்லும் ஒப்பற்ற பிறவளங்களும் மேன்மேற் பொங்க நிலைத்த பெரிய செல்வமாகி வைத்தனன்.

**(வி - ரை) அன்பர் அங்கு இருப்ப** - அன்பு பொங்கிய நிலையினராதலின் அங்கு இருந்தார் என்பது குறிக்க **அன்பர்** என்ற சொல்லாலும், தம்மை நம்புவார்க்கு எளிய நாயகராதலின் **நம்பர்** என்ற சொல்லாலும் கூறினார். "எம்பிரா னெம்மை யாளு மம்மானே யென்று தம்மை,நம்புவார்க் கன்பர் போலு நாகவீச் சரவ னாரே" என்ற திருநேரிசையும் காண்க. இக்கருத்துப்பட மேற்பாட்டில் "என்னை யுடையவர் எம்மை யாளும் ஒருவர்" என்றதும் காண்க. தினமும் ஆன்மார்த்தமாகத் தாம் வழிபடுந் தலமாகிய திருநாகேச்சரத்தினது மேற்கூறிய தேவாரத்தினைக் குறிப் பினால் ஆசிரியர் இவ்வாறு குறித்தனர் போலும். நம்புவார்க்கன்பர் - நம்பர் - என்ற தன்மை, மார்க்கண்டர்க்காக மறலியை உதைத்தவாற்றால் இத்தலத்துக்குச் சிறப்பாக உரியதுமாம்.

**அருளினால்** - ஆணையினாலே "தன்கட னடியேனையுந் தாங்குதல், என்கடன் பணி செய்து கிடப்பதே" என்ற திருவாக்குச் சிந்திக்க.

**அளகை வேந்தன்** - குபேரன். திசைகாவலாளர் எண்மரில் அடியார்களுக்கு நிதி கொடுக்கவென்று வடதிசைக் காவலனாகச் சிவபெருமானால் நியமித்து வைக்கப் பட்டவன், சிவபெருமான் தோழன் எனவும், நிதிக்கிழவன் எனவும் பெறுபவன். 444 - 465 பார்க்க.

**பொன் பயில் குவை** குவை - குவி என்னும் பகுதி திரிந்து ஐ விகுதிபெற்றது. **பொற்குவைகள் இனி வேண்டும்** குங்குலியம், நெல் முதலியவை கொள்ளவும், **நெல்** இப்போது வேண்டும் குறைவு தீர்த்தற்கும், **பல்வளன்** - பிற உணவுப் பண்ட முதலிய வற்றுக்கும் உதவும் பொருட்டு இவ்வாறு பலவும் வைக்கப்பட்டன என்றபடி. பொன்னை மட்டில் வைத்தால் அதுகொண்டு ஏனைய எல்லாம் பெறலாமாதலின் பிறவற்றை வைத்தல் ஏற்றுக்கு? எனின், பொன் கொண்டு நெல் முதலியவைபெறத் தாமத மாம், அதுவரை அன்பரும் குடும்பமும் பசித்திருப்பதனை இறைவர் பொறாராதலின் உடனே சமைத்தற் பொருட்டு எல்லாம் கைக்கொள்ளக்கூடியதாக வைக்க அருளினார் எனக. நெல்லை அரிசியாக்கும் சிரமமும் தாமதமும் பொறாத இறைவர் அரிசியும் வைத்தனர் என 846ல் கூறியதும் காண்க. பசித்திருப்போர்க்குக் காசு கொடுப்பதும்,பொன்னொன்றே வேண்டுமென்று தேடியலைவதுமாகிய இந்நாள் வழக்குக்கள் சிறப்பில்லவெனக.

**மன்பெரும் செல்வம்** - சிவனுக்கு அடிமைசெய்தற்றுறை போந்த புண்ணியச் செல்வமாகலின், ஏனைச் செல்வங்களைப்போல அழிந்துபடாது நிலைத்த பெரிய செல்வ மாயிற்று என்றார். இவை புண்ணிய விளைவாதலாற் பின்னர் ஆண்டானது பூசைக் கும், அடியார்க்கும் திருக்கூட்டத்துடன் எழுந்தருளிய சைவசமய பரமாசாரியர்களிரு வரின் பூசைக்கும் உதவின என்பதும் குறிப்பு. 852 பார்க்க. "நின் பொருளைக் கொள்ளலர், மற்றதாற்றி வீட்டப் பட்ட வினையவை புனித மான, திறத்தாலே நமக்கு நம்மைச் சேர்ந்தவர் தமக்கு மாக, முறத்தாவில் வாத வூர னுதவினன்" (மண்சுமந்த - 62) என்ற திருவிளையாடற் புராணத்துட் கூறியபடி சிவதருமத்தாற் போந்த பொருள் களே சிவதருமங்களுக்குதவுமெனக.

14

845. மற்றவர் மனைவி யாரு மக்களும் பசியால் வாடி
யுற்றறநா ளிரவு தன்னி லயர்வுறத் துயிலும் போதில்
நற்றவக் கொடிய னார்க்குக் கனவிடை நாத னல்கத்
தெற்றென வுணர்ந்து செல்வங் கண்டபின் சிந்தை செய்வார், கற

846. கொம்பனா ரில்லம் எங்குங் குறைவிலா நிறைவிற் காணும்
அம்பொனின் குவையு நெல்லு மரிசியு முதலா யுள்ள
எம்பிரா னருளா மென்றே யிருகரங் குவித்துப் போற்றித்
தம்பெருங் கணவ னார்க்குத் திருவமு தமைக்கச் சார்ந்தார். ௧௬

845 (இ - ள்) வெளிப்படை - இவ்வாறிருந்த அவருடைய மனைவியாரும் மக்களும் பசியினால் வாட்டமுற்று அன்று இரவில் அயர்ந்து தூங்கும்போது நல்ல தவத்தின் கொடிபோல்வாராகிய மனைவியாருக்குக் கனவில் இறைவன் இவ்விளைவுகளை உணர்த்தி யருளினாராக, அவர் உணர்ந்து எழுந்து கனவிற்கண்டபடி உள்ள செல்வங்களை யெல்லாம் கண்டபின் மேல்வருமாறு எண்ணுவாராயினர், ௧௫

846. (இ - ள்) வெளிப்படை - இளந்தளிர்க் கொம்புபோன்ற அவர், தமது திருமனை முழுமையும் குறைவில்லாத நிறைவினால் காணப்பட்ட அழகிய பொற்குவையும், நெல்லும், அரிசியும் முதலாயுள்ள எல்லாம் எமது பெருமானது திருவருளே யாம் என்று சிந்தித்து, இருகைகளையும் சிரசின்மேற் குவித்துத், துதித்துத், தமது நாயகராகிய ஒப்பற்ற பெரிய நாயனாருக்குத் திருவமுது சமைக்கச் (பாகசாலையைச்) சார்ந்தனர் ௧௬

இவ்விரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டன

845. (வி - ரை) **பசியால் வாடி - அயர்வுறத் துயிலும்போதில்** - முன்னர் இருபகல் உணவின்றிப் பசித்திருந்தனர் (839). மூன்றாநாளாகிய அன்று நெற்கொள்ளும்படி தாலியைக்கொடுத்தும் நெல் வாராமையால் இன்றும் பசித்தனர், ஆதலின் வாடி மிக்க களைத்து அயர்ந்து துயின்றனர் எத்தனை வாடினும் பகலிற் றுயில்கொள்ளுதல் ஆகாது என நூல்கள் விதித்தலின், அயர்வும் பசியும் மிக்கிருந்தும் இவர்கள் பகலிற்றுயிலாது **இரவுதன்னிற் றுயின்**றனர் என்றார்

**நல்தவக் கோடி அனார்** நல்ல தவத்தின்முளைத்து விளைந்த கொடிபோன்றவர். சிவபூசை அடியார்பூசையாகிய தவமேசெய்யும் நாயனாராகிய கொழு கொம்பிற்படர்ந்த கொடி என்றலுமாம

**நாதன் கோடி அனார்க்குக் கனவிடை நல்க** எனக **நல்க** - இவ்விளைவுகளை உணரும் உணர்ச்சியை நல்க என **நல்க** என்றதற்குச் செயப்படுபொருள் வருவிக்க.

நாதன் இவ்விளைவுகளைக் கலயனார்க்கு அறிவிக்காமல் மனைவியார்க்கு அறிவித்ததும், பின்னர் நாயனார் இவற்றைக்கண்டு மனைவியாரைக் கேட்டு அவர்சொல்ல அறிந்துகொள்ளுமாறு வைத்ததும் என்னை எனின் ?, இவையாவும் அம்மையார் தந்த கோதில் மங்கலநூற்றாலி கொடுத்துக் குங்குலியப்பொதி கொண்டதன் விளைவாதலானும், முன்னர் அறிந்து எழுந்து நாயனார் வருமுன்பே அமுது சமைத்து அவரையும் அடியார்களையும் ஊட்ட வேண்டுமாதலானும் மனைவியார்க்கு அறிவித்ததும், பின்னர்ப் "பாலடிசில் உண்டு பருவரல் ஒழிக" என்று நாயனார்க்கு அறிவித்ததும் ஆம் எனக மனைவியாரது கற்பின் பெருமையும் அடியார்களைப் பணனூள் அமுதூட்டிய அன்பின் பெருமையும் காட்டியபடியுமாம

**தேற்றென உணர்ந்து கண்டபின்** - கனவில் தெளிவாகக்கண்டது போன்று, கனவுநிலை நீங்கி நனவு நிலைபெற்றுக் கண்ட பின்பு என்றதாம **உணர்ந்துகண்டபின்** - துயிலுணர்ந்து கண்டபின் என்றலுமாம. 15

846 (வி - ரை) கொடியனார்க்கு - கனவிடை - நல்க - உணர்ந்து - கண்டபின் (அக)கொம்பனார் - சிந்தை செய்வார்-காணும் - பொன்குவை முதலாயுள்ள (வற்றை) "அருளாம" என்றே - போற்றி - அமுது அமைக்கச்சார்ந்தார் என்று இவ்விரண்டு பாட்டுக்களையும் தொடர்ந்து முடித்துக்கொள்க.

**சிந்தை செய்வா(ராய்) அருளாம் என்றே போற்றி** - எனக

**குறைவிலா நிறைவு** - " குறைவிலா நிறைவே " என்ற திருவாசகத்தை இங்கு நினைவு கூாக. ஒன்றாகக்கொன்று என்றும் குறைவுபடாத நிறைவாந்தன்மை குறை விலா நிறைவுடைய இறைவா தமது தன்மைக் கேற்பக் கொடுத்தார் எனக. **காணும்** காணப்படும். படுவிகுதி தொக்க செய்யப்பாட்டு வினைப்பெயரெச்சம்.

**உள்ள** - உள்ளவை அசாவீறறு பலவின்பாற் பெயா இரண்டனுருபுதொக்கது

**அருளாம் என்றே கரங்குவித்துப் போற்றி** - அந்தப் பொன் - நெல் அரிசி முதலியவற்றை அவ்வப்பொருள்களாகக் காணாது எம்பெருமானுடைய அருளையே கண்டார். ஆதலின் கரங்குவித்துத் தொழுது துதித்தார் இவை அருளால் வந்தன என்று அருளால் உணர்ந்து அருள் என்று போற்றினா. திருவருளாற் போந்த பொருள் களைத் திருவருட் சொரூபமாகவே கண்டு வணங்குதல் பெரியோர் இயல்பு திருவாத் துறையில் முத்துச்சிவிகை இறைவனருளாற் போந்ததென்று கனவில் உணர்த்த உணர்ந்த திருஞானசம்பந்தநாயனார் அதனை நனவிற் கண்டதும், " அரத்துறை அடி களதம் அருளே " என்று திருப்பதிகம்பாடி வணங்கியதும் இங்கு நினைவுகூாக " நல லான தன்பால புகலிவேந்தா கண்ணுதல் கருணை வெள்ள மாயிர முகத்தாற் கண டாா " என்ற ஆளுடையபிள்ளையாா புராணம் (1108) காணக.

**தம்பெரும் கணவனா்** - உலகாகளுள உடம்பொடொழியும் ஏனைக்கணவாகள் போலல்லாது, திருவருள் விளைவிலே கூட்டுவித்து உயிாக்குறுதி தரும் கணவா காயனா, என்று குறிக்கப் பெருங்கணவனா என்றும், கொழுநற் றொழுதெழும் பெருங்கற்பு வாய்ந்தவரென்று குறிக்கத் தம் என்றும் கூறினா 16

847. காலனைக் காய்ந்த செய்ய காலனா கலய னாரம்
ஆலுமன் புடைய சிந்தை யடியவ ரறியு மாற்றால்
" சாலநீ பசித்தா யுன்றன் றடநெடு மனையி னண்ணிப்
பாலினின் னடிசி லுண்டு பருவர லொழிக " வென்றார். கஎ

**(இ - ள்)** வெளிப்படை காலனை உதைத்தருட்டிய சிவந்த காலினையுடைய சிவ பெருமான் கலயனாாகிய, திருஅடியில் நிறைந்த அன்புபூண்ட சிந்தையுடையவா அறி யும்படி " நீ மிகப்பசித்தாய், உனது விசாலமாகிய பெரிய வீட்டிற் சோந்து பாலுடன் கலந்த இனிய உணவை உண்டு பசித்துன்ப நீங்குவாயாக " என்றருளிச்செய்தார

**(வி - ரை) காலனைக் காய்ந்த செய்ய காலனா்**-851 பாரகக **காலன் - காலனா்** சொற்பின் வருநிலை **காலன்** - இயமன்-கூற்றுவன். சிவபெருமானது ஆணையின்படி காலத்தைப் பாாத்து அதன் கிரமப்படி உயிாகளைக் கொண்டு சேர்ப்பவன் **காலனா்** - காலினை உடையவா **செய்ய காலனா்** உதைத்தமையாற் சிவந்தது எனபதும் குறிப்பு சிவப்பு இராசசத்தின் நிறமாதலின், "காலனுருவிா மாளக் கறுத்தன" என்றபடி அவரது சினக்குறித்த திருவடியின்மேல் ஏற்றிக் கூறினா் என்றலுமாம் " நினபோ லமாாகள் நீண்முடிச் சாய்ந்து நீணாந்துந்தக், கைம்போ திழக்கிய **பவளந் தழைப்பன** " என்ற திருவிருத்தத்தின் கருத்தும் காணக

**அடி ஆலும் அன்புடைய சிந்தையவர்**-எனக கொண்டுகூட்டுக திருவடியினில் நிறைந்த அன்பு கொண்ட சிந்தையாதலின் அதனுள் தமது பசியும் மனைவி மக்கள் முதலியோா பசி முதலிய எவையும் முளையா, அதனால் அவா **அறியும்படி** இறைவன் அறிவித்தார் என்பார் **அறியும் ஆற்றல்** என்றார் திருவடித் தியானத்தில் உறைத்து நிற பாாக்கு உலகமும் அதனுள் அனுபவங்களும் தோன்றா இதனை " மண்டு காதல ருச் சனையில் வைத்தார் மற்றொன் றறிந்திலரால்" என்ற சண்டேசநாயனா புராணத்திலும் பிறண்டும் காணக இதனை உணாத்தவே " எல்லாம் அயாத்தெழு மன்பு பொங்கச், சடையவா மலாத்தாள் போற்றி யிருந்தனா " (943) என்றது காணக.

**சாலநீபசித்தாய்** - நாயனார் தமது பசியையும் தாம் அறியாது சிவசிந்தியான நிட்டையில் வீற்றிருந்தாராதலின், அவரது பசியை அவர்க்கு அறிவுறுத்தவே "சாலநீ பசித்தாய்" என்றிறைவன் அருளியபடி. "உன் பசியினையும் உன் மனைவி மக்கள் முதலியோர் பசியினையும் நீ அறியாய், நாம் அறிவோம் நாம் அறிவிக்க நீ அறிவாய்" என்றது குறிப்பு மனவசீகர நிபுணனால் வசீகரிக்கப்பட்ட ஒருவன் அந்நிபுணன் சொல்லியவாறெல்லாம் அனுபவங் கூடியும், அவன் சொல்லாதவழி அனுபவங் கைகூடாமலும் உள்ள நிலையை இங்கு வைத்துக் காண்க "அறிவிக்க வன்றி யறியா வுளங்கள்" என்பது ஞானநூல். ஏனைய உயிர்கள் ஆணவ மயக்கிலாழ்ந்து கிடத்தலின் இறைவனை அறியா இங்கு நாயனார் சிவனடி பரவிய சிந்தையில் ஆழ்ந்து கிடத்தலின் உடம்பை அறியாதிருந்தனார், ஆதலின் **அடியவர் அறியும் ஆற்றல்** என்றார்.

**பாலின் இன் அடிசில்**-பாலுடன் கலந்த இனிய அமுது இன் உவம உருபாகக் கொண்டு, தாயினது பாலினும் அதிக சுவையும் குணமும் கொண்ட அடிசில் என்றுரைத்தலுமாம் "தாயக்குப் பின் தாரம்", "மனைவி கணவனை ஊட்டுவித்தலிற் காப்பதில் தாய்போல இருத்தல் வேண்டும்" என்பன உலகநூல் நீதிகளாதலின் இங்கு மனைவியார் இனி ஊட்டப்போகும் அடிசில் தாயின் பாலினும் இனிமையுடையதாம் என்பதும் குறிப்பு மற்றொரு வகையாலும் இவ்வடிசில் இனிதேயாம், என்னை?, எல்லாவுயிர்களுக்கும் "பாணினை நாடும் தாயினுஞ் சாலப் பரிந்து" அளிக்கும் தாயதந்தையாகிய நம்பாருளிய அடிசிலாதலின் இது "அன்னைமுலைத் தீம்பாலி னரிய சுவைத்"தேயாம் எனக் நம்பாருளினால் (844) எம்பிரான் அருளாம் (846), அருள்தர (849) என்று அருட்சத்தியைப் போற்றியது காண்க இனி, **பால்** பான்மை எனக் கொண்டு, உனது அன்பின் தன்மைக் கேற்ற பான்மையினால் வந்த இனிய அடிசில் என்றுரைத்தலு மொன்று.

**பருவரல் ஒழிக** - இப்போது உன் பசி முதலியதுன்பங்களை நீ அறியாய்; நாம் அறிவிக்க அவற்றை அறிவாயாதலின் அத்துன்பம் தீர ஒழிக என்ற துணிபினால் இப்பிறவியில் மட்டுமன்றி இனி என்றுமன்றும் அத்துன்பம் உனக்கில்லாமல் தீர்வதாகிய முத்தி நிலையும் பெறுக என்பதும் உடன்குறிக்கப்பட்டது.

**என்றார்** - அசரீரி எனப்படும் தமது எங்கும் நிறைந்த ஒலியினால் அவர் செவிப் புலப்படுமாறு கூறியருளினார் நேரே காட்சிதந்து சொல்லியருளினார் எனபாருமுண்டு. அஃதுரையன்றெனக. 17

848 கலயனா ரதனைக் கேளாக், கைதொழு திறைஞ்சிக், கங்கை
யலைபுனற் சென்னி யார்த மருண்மறுத் திருக்க வஞ்சித்,
தலைமிசைப் பணிமேற் கொண்டு சங்கரன் கோயி னின்று
மலைநிகர் மாடவீதி மருங்குதம் மனையைச் சார்ந்தார். ௧௮

**(இ - ள்)** வெளிப்படை. கலயனார், அவ்வாற இறைவர் கூறிய அருளிப்பாட்டினைக் கேட்டுக் கைகளாற்றொழுது வணங்கிக், கங்கையாற்றினைச் சூடிய சிரத்தினையுடைய பெருமானது திருவருளினை மறுத்து மனையிற் போகாது கோயிலில் தங்கியிருக்க அஞ்சியவராகி, அப்பணியைச்சிரமேற் கொண்டு, சங்கரனாரது திருக்கோயிலினின்றும் போந்து, மலைபோன்ற மாடங்கள் நிறைந்த திருவீதியில் சேர்ந்து, அங்குத் தமது திருமனையினைச் சார்ந்தனர்.

**(வி - ரை) அதனை** - அவ்வாறு இறைவன் அறிவித்த அதனை **கேளா** - கேட்டு. செவிப்புலப்படக் கேட்டு.

**கைதொழுது இறைஞ்சி** - திருவருள் வெளிப்பாட்டினைக் கண்டபோது இறைஞ்சுதல் முறையாம், அதுவே அடியார்களினியல்புமாம். மனைவியார் பொன்குவை கொல

**வில்ஒத்த நுதல்**-பெண்மை யுறுப்பிலக்கணங்களுட்டலையிற் றலைமையாயினதைக் குறிக்கவே ஏனையவெல்லாம் உடன்குறிக்கப்பட்டன.

**விளைவு எல்லாம்** - பொன்முதலிய பல வளங்களையும் குறிக்க **எல்லாம்** என்றார். பொன்னும் நிலத்தினின் விளைவு என்றே காணப்படும். **என்கொல்** - வந்த வாறு என்பது வருவிக்க.

**அல்லொத்த கண்டன் எம்மான் அருள்** - சிவபெருமானது திருவருட் பெருமைக்கு எடுத்துக்காட்டாக விளங்கும் திருநீலகண்டத்தினை இங்குக் குறித்தார். நாயனாரும் மனைவியாரும் இதில் அன்பு செலுத்தியவர்கள் போலும். திருநீலகண்டநாயனார் புராணம் பார்க்க. தேவமாதர்கள் தாலியிழக்காமற் காத்த நீலகண்டனே என் தாலியைப் நான் நீக்காமற் காத்தவன் என்றதும் குறிப்பாம். **அல்** - இருள் இங்கு இது கரிய நிறத்தினால் சிவபெருமானது கண்டத்தில் விளங்கும் விடத்தை ஒத்திருத்தலின் அதனைக் குறித்தது. **எம்மான்** - யாவர்க்கும் தலைவனாதலின் தன்னை அடைந்தோர்களது துன்பஞ் சகிக்கலாற்றாது விரைந்து அருள்பவன், ஆதலின் நமக்கும் அருள் செய்தனன் என்பதாம்.

**அருள்தர** - எம்மான் தர என்னாது எம்மான் அருள்தர என்றது சிந்திக்கத்தக்கது. திருவருட்சத்தியே தரவந்தது. மேல் **அருளாம்** - (846) என்றார் இப்பொருள்களில் எல்லாம் மனைவியார் அவ்வப்பொருள்களைக் காணாது சிவனது திருவருளையே வெளிப்படக் கண்டார். "நந்தம்மை யாளுடையான், டன்னிற் பிரிவிலா வெங்கோமான் னன் பாகத்து, முன்னி யவணமக்கு முன்சுரக்கு மின்னருளே, யென்னப் பொழியாய் மழையேலோ ரெம்பாவாய்" என்ற திருவாசகத்தில் உலகத்துன்ப நீங்கப் பொழியும் மழையினை அருளே என்று கண்டு காட்டியபடி இவ்வம்மையாரும் கண்டினார். நாயனார் தாலியைக் குங்குலியத்துக்கு மாறியதும், திருக்கோயில் சேர்ந்திருந்ததும், இறைவன் ஆணைசெய்ததும் முதலியனவாக இடையில் நிகழ்ந்தனவொன்றும் இவ்வம்மையார் அறிந்திலரேனும் இவ்வாறு கூறியது, என்றும் எல்லாம் இறைவன் தருளேயாகக் காணும் அவரது செம்மை பெற்ற திருமனத்தின் இயல்பு காட்டியது இதுபற்றியே **அருள்தர** என்று அருட்சத்தியைத் துதித்தனர் எனக்.

**விளைவெல்லாம்** - வெயிலெல்லாம் என்பதுபோல ஒருமையிற் பன்மை வந்தது, ஆதலின் **வந்தது** என்னும் ஒருமைவினை கொண்டது. 19

850. மின்னிடை மடவார் கூற மிக்கசீர்க் கலய னார்தா
மன்னிய பெருஞ்செல் வத்து வளமலி சிறப்பை நோக்கி
"யென்னையு மாளுந் தன்மைக் கெந்தையெம் பெருமா னீசன்
றன்னருளிருந்த வண்ண" மென்றுகை தலைமேற் கொண்டார். உo

(இ - ள்) வெளிப்படை. மின்போன்ற இடையையுடைய மடவாராகிய அம்மையார் இவ்வாறு சொல்லச் சிறப்புமிக்க கலயனார் நிலைபெற்ற பெருஞ்செல்வங்களின் வளமிக்க சிறப்பை நோக்கி, "என்னையும் ஆட்கொண்டருளுகின்ற தன்மைக்கு எந்தையும் எமது பெருமானும் ஈசனுமாகிய சிவபெருமானது திருவருள் இருந்த வண்ணம் தான் என்னே?" என்று கைகளைத் தலைமேற்கொண்டு துதித்தார்.

(வி - ரை) **மின்இடை** - இடைசிறுத்தது துவளுதல் பெண்களின் சிறந்த உடலிலக்கணங்களுள் ஒன்று. **மடவார்** - மடமையையுடையார். **மடம்** - "கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமையாகிய நாற்குணத்துள் ஒன்றாய குணம்பற்றி மகளிர்க்குப் பெயராயமைந்தது. கணவனார் வினவியபோது தாம் அறிந்ததனைச் சொல்லும் கடமைபற்றி உரைத்தனர் என்ற குறிப்புப்பெற இங்கு மடமை என்ற தன்மைபற்றிக் கூறினார். "கைவருகற் புடைநெறியாற் கணவனுரை கடவாமை, மெய்வழியன் றென விளம்பல் விடமாட்டார்" என்ற காரைக்காலம்மையார் புராண (27)க் கருத்துங்

காண்க. இடை - என்றது உத்தமமாகிய உடலிலக்கணத்தையும், மடமை என்றது உயர்ந்த குணவிலக்கணத்தையும் குறித்தன. மடம் - மடமான என்புழிப்போல இளமை என்றலுமாம்.

கூற மிக்க சீர் - பாலின் இன் அடிசில் உண்டு பருவரல் ஒழிக என்று இறைவன் அருளியபோது இவ்வணங்கு அருளிய தேனை அறியாராதலின், அதனை அம்மையார் கூற அறிந்து அதனின் முன்னினும் மிகுந்த சிறப்பினைப் பெற்ற எனக்க.

மன்னிய சிறப்பை - தாம் கண்ட செல்வங்களின் நிலைபெற்ற தன்மையும் பெருமையும், வளப்பமும் நிறைந்த சிறப்பை. மன்னுதல் - தமது முன்னைச் செல்வம் போல மறைந்து ஒழிவதொழியாது நிலை பெறுதல். பெருமை - தந்தருளிய இறைவரது பெருமைக் கேற்ற பெருமை. வளம் - பொருட்டன்மையின் வளப்பம். சிறப்பு - திருவருட்பேற்றின் செம்மை. இச்சிறப்புக்கள் இவைபோன்ற வேறெச் செல்வங்களுக்கும் இல்லாத தன்மை. நோக்குதல் - கூர்ந்து பார்த்தல்.

என்னையும் . வண்ணம் - என்னையும் - ஆட்கொள்ளத்தக்க தகுதியில்லாத என்னையும் என உம்மை இழிவு சிறப்பு. "என்னையு மாண்டுகொண் டின்னருள் புரியும்" (திருப்பள்ளியெழுச்சி 4) என்ற திருவாசகமும், "என்னையு மடிய னாக்கி யிருவினை நீக்கி யாண்ட" என்ற கந்தபுராணமும் பிறவும் காண்க.

எந்தை எம்பெருமான் ஈசன் - "எந்தை ஈசன் எம்பெருமான் ஏறமர் கடவுள் என்றேத்தி" (திருவாதவூர் 1) என்ற ஆளுடையபிள்ளையார் தேவாரம் காண்க. இந்நாயனார் ஆளுடையபிள்ளையாரிடத்து மிக்க அன்பு பூண்டிருந்து அவரது திருப்பதிகங்களைப் பயின்றிருந்த பழக்கத்தால் அது கொண்டே துதித்தனர் போலும். அக்காலத்திற் றிருப்பதிகங்கள் மிகப் பயிலப்பட்டன என்பது "பண்ணின் கிளவி மணிவாயும் பதிகச் செழுந்தேன் பொழியுமால்" என்ற முருகநாயனார் புராணம் (3) த்தாலும், "தெள்ளு மோசைத் திருப்பதி கங்களைப் பிள்ளை பாடிய கேட்பன பூவைகள்" என்ற திருநகரச்சிறப்பி (8) னாலும், பிறவாற்றாலும் அறியப்படும். தகுதியில்லாத தமக்கும் இப்பெரிய திருவருளைத் தந்தது "நாயச்சிவிகை யேற்று வித்தது" போலும் என்ற நினைவு வருதலும், அது வந்தபோது சிவிகை பெற்ற திருப்பாட்டு நினைவுகூர்தலும், இடம்பெறும். "சிந்தை செய்யவாக கல்லாப் பெற்றுக்கை கூடுவ தன்றால்" என்றபடி இந்நாயனார் 'எல்லாம் தயாதந்தெழும் அன்பு பொங்கச் சடையவர் மலர்த்தாள் போற்றியிருந்தனர்' ஆதலின் இத்திருவருள் கைகூடப் பெற்றனர் என்பதும் கருதுக. எந்தை - தந்தை தம்மக்களைக் காத்தல் கடனும் என்பார் முதலில் எந்தை என்றார். தந்தை என்ற உரிமை பாராட்டத் தான் தகுதியற்றேனாயினும் எமது தலைவனாதலின் ஆட்கொண்டனர் என்று நினைந்து பின்னர் எம்பெருமான் என்றார். "துணைமாலை சூட்டநான் றூயே னல்லேன்" என்று அப்பர் சுவாமிகள் அருளியபடி அவ்வாறு அவர்க்கு ஆட்படும் தகுதியிலலாமையின் அவர் எல்லாவுயிர்க்கும் இறைவனுப "எல்லா வுயிர்க்கும் போகமாம் பூங்கழல்" களை யுடையானுதலின் அம்முறையில் எம்மை ஆட்கொண்டனர் என்பார் பின்னர் ஈசன் என்றார். "என்னப்பனெம்பிரா னெல்லார்க்குந் தானீசன்" (திருச்சாழல் 2) என்ற திருவாசகமும் நோக்குக.

அருள் இருந்த வண்ணம் - முத்துச்சிவிகை பெற்றபோது "என்னையும் பொருளாக வின்னருள் புரிந்தருளும், பொன்னடித் தாமரை (திருஞான - புரா - 226)யின் "அருள் வந்தவாறுமற் றிவ்வண்ணமோ" (மேற்படி 224) என்ற ஆளுடைய பிள்ளையாரும், திருவாலவாயுடையார் திருமுன்பு சேர்ந்தபோது அவர் தமக்குத் திருமுகம் கொடுத்தனுப்பிய அருளிப்பாட்டை எண்ணி 'அடியேனைப் பொருளாக அளித்த திருமுகக்கருணை, முடிவென்னே யென்றென்றே மொழிதடுமாற' வீழ்ந்து வணங்கிக் கழறிற்றறிவார் நாயனாரும் பாராட்டியதும், பிறவும் இங்கு நினைவு கூர்க.

தன்மைத் தேநந்தை — என்பதும் பாடம்.

*851. பதுமநற் றிருவின் மிக்கார் பரிகலந் திருத்திக் கொண்டு
கதுமெனக் கணவ னாரைக் கண்ணுதற் கன்ப ரோடும்
விதிமுறை தீப மேந்தி மேவுமின் னடிசி லூட்ட
வதுநுகர்ந் தின்ப மார்ந்தா ரருமறைக் கலய னாரும். உக

(இ - ள்) வெளிப்படை. தாமரையில் வீற்றிருக்கும் நல்ல திருவினும் மிகுந்த அம்மையார் பரிகலம் திருத்தி யமைத்துக்கொண்டு விரைவாகத் தமது கணவனாரைச் சிவபெருமானுக்கன்பர்களோடும் விதிப்படி தீபம் முதலிய ஏந்திப் பூசைசெய்து இனிய அமுதினை ஊட்ட, அரிய மறைவல்லவராகிய கலயனார் அதனை நுகர்ந்து இன்பநிறைந்தனர்.

(வி - ரை) **பதுமம் நல் திரு** - செந்தாமரையில் உள்ள இலக்குமி. உருவாலும் திருவாலும் ஒப்புமை பெறினும், நற்றிரு என்றது அவரினும் அருளால் மிகுந்த அம்மையாரது மேம்பாடு கருதுதற்கு எல்லைப்பொருளாய எண்ணப்படும் பேறுபெற்றமைபற்றி. **மிக்கார்** - அருளால் மிகுந்தவர். அந்தப் பதுமத்திரு ஒவ்வோர் காலம் தமது கணவரை யிழக்கவும் அதனால் தாலியிழக்கவும் பெற்று, அதன் பொருட்டுச் சிவபெருமானை நோக்கித் தவங்கிடந்து மீளப்பெற்றுத் தாலிதாங்குவர். அவ்வாறன்றி இவ்வம்மையார் தமது தாலியை இறைவனது தூபத்திருப்பணிக்கே ஈகப் பெற்று, அதன் விளைவாகிய மாளாச்செல்வங்களையும் பெற்று, அடியார்களோடும் ஆளுடைய அரசுகள் ஆளுடைய பிள்ளையார் என்ற இருபெரு மக்களையும் பூசித்து அமுதூட்டவும் ஆனபணி புரியவும் பேறுபெற்றவர் என்ற சிறப்பெல்லாங் குறிக்கத் **திருவின் மிக்கார்** என்றார். அன்றியும் **பதுமத்திரு** வானவர் தமது செல்வ விளைவுகளைச் சிவனருளின் யாகக் காண்டலின்றி வாழ்ந்து கழிவர். இவ்வம்மையார் போலக் கணவனாரை அடியார்களுடன் விதிமுறை பூசித்துபசரித்தூட்டப்பெறாது தமது நாயகரின் மார்பிற் றங்கி அவரால் உபசரிக்கப்பெற்று வாழ்வார் என்ற குறிப்பும் காணத்தக்கது. இவ்வாறன்றி உருவினால் மட்டும் ஒப்புக்கூறாமிடத்து அதுபற்றியே கூறுவர் ஆசிரியர். "தேனலர் கமலப் போதிற் றிருவினு முருவ மிக்கார்" (864) என்றது காண்க.

**பரிகலம்** - உண்கலம் - வாழைக்குருத்து. **திருத்துதல்** - அரிந்துகொண்டு ஒழுங்குபட அமைத்தல்.

**கதுமென** - கணவனார் மூன்றுபகல் உணவின்றிப் பசியால் வாடியிருந்தமை கருதி விரைவாகச் சமைத்து ஊட்டினர் என்பது "திருவமு தமைக்கச் சார்ந்தார்" (846) என்று அடிசில் சமைக்கப் புகுந்ததனை மட்டிற் கூறிய ஆசிரியர், சமைத்ததனைக் கூறாது, அமுதமைக்கச் சார்ந்தார் - பரிகலந்திருத்தி - ஊட்ட என்று விரைவுபடக் கூறியது நாயனாரது பசி தாங்கலாற்றாது ஊட்டுந்திறத்தில் அம்மையாரகத்திருந்த ஆர்வமும், அதனின் மிக ஆசிரியர்களுள்ள தீவிரமும் குறித்தது.

**கணவனாரை அன்பரோடும்** - உடனிகழ்ச்சிப் பொருளில் வந்த ஒடு என்ற மூன்றனுருபு ஒப்பாக வைத்துப் பூசித்து ஊட்டிய பரிசு குறித்தது. அம்மையார் கலயனாரைக் கணவனார் என்ற உடற்பொருத்தம்பற்றிய அளவில் நில்லாது, அதனின் மேலாக உயிரொடு பொருந்திய சிவனடியாராகவும் எண்ணி ஊட்டினார் என்ற குறிப்பும் காண்க. "எங்கொங்கை நின்னன்ப ரல்லார்தோள் சேரற்க, எங்கை யுனக்கல்லா தெப்பணியும் செய்யற்க", "உன்னடியார் தாள்பணிவோ மாங்கவர்க்கே பாங்கா வோம், அன்னவரே யெங்கணவ ராவா ரவருகந்து, சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோம்" (திருவெம்பாவை - 19 9) என்பனவாதி திருவாசகங்கள் இந்த மனநிலையை நன்கு விளக்குவன. இதுபற்றியே **விதிமுறை தீப மேந்திப்** பூசித்து ஊட்டினார் என்றதும் காண்க. ஒடு என்ற உருபை அன்பரோடு புணர்த்திக் கூறியது சிறப்புப்பற்றி. ஆயின் அன்பரோடும் கணவனாரை யென்னாது கணவனாரை முன்

வைத்தோதியது மூன்றுபகல் பட்டினியிருந்த அவரது பசித்தீர்க்கும் ஆர்வமிகுதியும், இவ்விளைவுகட்கும் திருவருளுக்கும் அவரது அயரா அன்பே காரணம் என்று கொண்டமையும் அம்மையாரது மனத்தில் மிக்கு நின்றமைபற்றியாம்.

**கண்ணுறுதந்து** - கணவனார் என்றதற்கும் அன்பர் என்றதற்கும் இடையில் கண்ணுதல் அமரக் கூறியது அவரது அன்பே திருநீற்றாரையும் இடைநின்று பிணைத்து ஒட்டுகிறபடியாம் என்பது குறித்தது.

**கண்ணுதற்கு அன்பர்** - மாகேசுரர்கள். **அன்பரோடும்** - தனியுணவுண்ணாது சிவனடியார்களோடு இருந்து உடனுண்ணுதல் வேண்டுமென்னும் உண்மை உத்தராபதியாராய் வந்த சிவபெருமான் திருவாக்கினால் சிறுத்தொண்டநாயனார் புராணத்துள் விரிக்கப்படுதல் இங்கு நினைவுகூர்க.

**விதிமுறை** - மாகேசுரபூசைக்குச் சிவாகமங்களில் விதித்த முறைப்படி. இதனை 443ல் பார்க்க.

**தீபம் ஏந்தி** - தலைமைபற்றித் தீபத்தைக் கூறினாரேனும் இனம்பற்றி ஏனைத் தூப முதலியனவும் உடன்கொள்ளப்படும். அந்நேரம் இரவுக்காலமாதலின் விதிப்படி தீபமேற்றினார் என்றுரைப்பாருமுளர்.

**மேவும்** - திருவருளாற் பொருந்திய வளங்களாலாகிய.

**இன்அடிசில் ஊட்ட** - 442 - 443 பார்க்க. **ஊட்ட** - தாய் ஊட்டுவதுபோல அன்புகூர ஊட்டுதல் வேண்டுமென்பது விதி. *

**அது நுகர்ந்து-அது** - அவ்வாறூட்டிய இனிய அடிசில். **நுகர்தல்** - உண்ணுதல் மட்டிலடங்காது மனங்களி கூர்தலுங் குறித்தது.

**இன்பம் ஆர்ந்தார்** - "இன் அடிசில் உண்டு பருவரல் ஒழிக" (847) என்று இறைவன் அருள்புரிந்தாரெனவே அது இறைவனருளாகவும் மாகேசுரப் பிரசாதமாகவும் பெற்றதாகலான் நீங்கா நிறைவாகிய இன்பம் ஆர்ந்தனர். இவ்வின்பம், உண்டபின் சின்னேரத்திற் கழிந்து பின்னும் பசியின் துன்பங் கூட்டுவதாகிய வெறும் உணவின் இன்பமன்று. 21

852\. ஊர்தொறும் பலிகொண் டுய்க்கு மொருவன் றருளி னாலே
பாரினி லார்ந்த செல்வ முடையராம் பண்பி னீடிச்
சீருடை யடிசி னல்ல செழுங்கறி தயிர்நெய் பாலா
லார்தரு காதல்கூர வடியவர்க் குதவு நாளில், ௨௨

* இவ்வாறு பூசித்து ஊட்டப்பெறும் அன்பர் என்ற மாகேசுரர்களாவார், தேசிகர், நிருவாண தீக்கைபெற்றோர், விசேட தீக்கைபெற்றோர், சமயதீக்கைபெற்றோர் என நான்குவகைப்படுவர். இவர்களை விதிப்படி பூசித்துத் திருவமுதுசெய்வித்தல் **மாகேசுரபூசை** எனப்படும். மகேசுரனை வழிபடுவோர் மாகேசுரர்களாவார். சிவதீக்கை பெறாதோர் மாகேசுரர்களாயிருத்தற்குத் தகுதியுடையரல்லர். சிவனையும், குருவையும், சமயத்தையும், சிவசாத்திரங்களையும் நிந்தைசெய்வோரும், சிவத்திரவியத்தை அபகரித்தவர்களும், நித்தியகருமங்களை விட்டவர்களும், மாகேசுரபூசைக்குத் தகுதியுடையரல்லர். மாகேசுரர்களைப் பூசித்து அமுதூட்டுவோர் சிவபதங்களில் அடைகுவர். ஏனையோர்க்கு அமுதூட்டுதல் அன்னதானம் எனப் பெயர்பெற்றுப் பசு புண்ணியமாகிப் போகங்களுக்கு ஏதுவாகிச் சுவர்க்கலோக முதலியவற்றைத் தருமேயன்றிச் சிவபுண்ணியமாகாது, சிவபதம்பெறத் துணையும் செய்யாது. சமயம், விசேடம், நிருவாணம், ஆசாரியாபிடேகம் என்னும் நால்வகைத் தீக்கை பெற்றோர்களை வைத்து மாகேசுரபூசைசெய்வோர் நால்வகைச் சிவபதங்களைப் பெறுவர். திருஞான. புரா - 111 - முதலியவை பார்க்க.

853. செங்கண்வெள் ளேற்றின் பாகன் திருப்பனந் தாளின் மேவு
மங்கணன் செம்மை கண்டு கும்பிட லரச னார்வம்
பொங்கித்தன் வேழ மெல்லாம் பூட்டவு நேர்நில் லாமைக்
கங்குலும் பகலுந் தீராக் கவலையுற் றழுங்கிச் செல்ல, ௨௩

854. மன்னவன் வருத்தங் கேட்டு மாசறு புகழின் மிக்க
நன்னெறிக் கலய னார்தா நாதனை நேரே காணு
மந்நெறி தலைநின் றானென் றரசனை விரும்பித் தாமு
மின்னெறித் தனைய வேணி விகிர்தனை வணங்க வந்தார். ௨௪

852. (இ-ள்) வெளிப்படை. ஊர்கள் தோறும் பலிகொள்ளும் சிவபெருமானது திருவருளினாலே இவ்வுலகில் நிறைந்த செல்வமுடையவராகிய தன்மையில் மிகுந்து, சிறந்த அமுதினை, நல்ல செழிய கறி, தயிர், நெய், பால் இவற்றுடன் நிறைய மிக்க அன்புடன் சிவனடியவர்களுக்கு உதவுகின்ற நாளிலே, ௨௨

853 (இ-ள்) வெளிப்படை. செங்கண்ணுடைய வெள்ளை எருதின் பாகராகிய திருப்பனந்தாளில் எழுந்தருளியிருக்கும் அங்கணரை நேரே நிற்கும் தன்மையைக் கண்டு கும்பிடவேண்டுமென்று அரசன் ஆசை பொங்கித் தமது யானை முதலியவை யெல்லாம் பூட்டவும் இறைவரது திருமேனி நேர் நில்லாதபடியால் அரசன் இரவும் பகலும் தீராத கவலையுற்று மனம் வருந்திச் செல்ல, ௨௩

854 (இ-ள்) வெளிப்படை. அந்த அரசனது வருத்தத்தைக் கேள்விப்பட்டுக் குற்றமற்ற புகழும், நன்னெறி யொழுகும் ஒழுக்கமும் உடைய கலயனார் இறைவனை நேர் காணும் அந்நெறியிலே தலைநின்றான் என்று அவ்வரசனை விரும்பி, மின்னல் நெறிகொண்டாற்போன்ற சடைமுடியுடைய விகிர்தராகிய சிவபெருமானை வணங்குதற்பொருட்டு வழிபட்டனர். ௨௪

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

852 (வி-ரை) **ஊர்தோறும்** - எவ்வூரினுமுள்ள எவ்வுயிர்களிடத்தும். **ஊர்** ஆகுபெயர்.

**பலிகொண்டு உய்க்கும்** - பலி - பிச்சை. **கொண்டுய்க்கும்** என்பது ஒரு சொன்னீர்மைத்தாய்க் கொள்ளும் என்ற பொருளில் வந்தது. பலியைத்தான் கொண்டு, பலி இட்டோரைத் தன்னது பதத்திற் செலுத்துகின்ற என்றலுமாம். இப்பொருட்கு **உய்த்தல்** - செலுத்துதல் - வைத்தல் என்க. "பத்திசெய் யடியரைப் பரம்பரத் துய்ப்பவன்" என்பது திருவாசகம். **உய்த்தலாவது** - "நிரந்தர மாக நினையு மடியார், இரந்துண்டு தன்னடி பெட்டச் செய்"தல் என்று கொள்ளுதலுமொன்று. இறைவன் பிட்சாடனராக எழுந்தருளிப் பிச்சை ஏற்கும் வரலாறு கந்தபுராணத்துட் காண்க. இதனைப் பற்பலவாறும் பாராட்டுவது அன்பர் வழக்கு. "துள்ளுமறி யாமனது பலி கொடுத்தேன்" என்று தாயுமானார் கூறியபடி இவர் கொள்ளும் பலியாவது ஆன்மாக்களின் பசுபோதமும் அதற்கு விடயமாகிய வினைப்பயன்களுமாம். **ஊர்தோறும்** - என்ற கருத்தைப்பற்றி "இங்குநம் மில்லங்கள் தோறு மெழுந்தருளிச், செங்கமலப் பொற்பாதந் தந்தருளும் சேவகனை" (திருவெம்பாவை 17) என்ற திருவாசகத்தினை உன்னுக. இவைபற்றி 413ல் உரைத்தவையும் பார்க்க.

**ஒருவன்** - ஒப்பற்றவன். "நின்னுவார் பிறரின்றி நீயே யானாய்" (தனித்திருத் தாண்டகம் 7) என்றபடி சிவபெருமான் ஒருவனே பதி-தலைவன் என்பதாம். "ஒருவர்" (843) என்ற விடத்துரைத்தவை பார்க்க.

**ஒருவனது அருளினாலே செல்வமுடையாராம் பண்பின் நீடி** - அவர் பிச்சை கொள்வாராயினும் தம்மை யடைந்தார்க்கு எல்லாச் செல்வமும் அருள்வல்லார் என

தவறு கோயில்களிலேயும் சிதைவுபட்ட பகுதிகளைமட்டும் சிலதவணை அவ்வப்போது முன்னிருந்த அவ்வாறே செப்பனிட வேண்டுமென்பது விதி. "சாரர் லிங்கம் பறித்தொன்றிற் ருபித்தால், ஆவதன் முன்னே யரசு நிலைகெடும், சாவதன் முன்னே பெருநோ யடுத்திடும், காவலன் போநந்தி கட்டுரைத் தானே", "கட்டுவித் தாமதிற் கல்லொன்று வாங்கிடில் வெட்டுவிக் கும்மபி டேகத் தரசரை, மூட்டுவிக் கும்முனி வேதிய ராயினும், வெட்டுவித் தேவிடும் விண்ணவ னாணையே" என்பனவாதி திருமூலர் திருமந்திரங்கள் காண்க. விதி இவ்வாறாயினும் "உவப்பதனைக் குற்றந் தோன்றாக் கெடும்" என்றபடி **ஆர்வம் பொங்கியதனால்** விதியையும் கடந்து இது செய்தனன் என்ற குறிப்புங் காண்க.

இத்தலத்து இறைவர் திருமேனி சாய்ந்து நின்றதன் வரலாறு தலவிசேடத்துக் காண்க. திருவருள் வெளிப்பாட்டினை யாவரும் உணர்ந்து உய்யும் பொருட்டுச், சாய்ந்த இறைவர் அவ்வாறே சாய்ந்து நின்ற நிலையை மாற்றி நேர்செய்து கும்பிடும் ஆர்வம் அரசன் அன்பினால் மேற்கொண்டவனாயினும் அது விதிகடந்த தென்று குறிப்பித்தது முன்னுக. திருப்பேரூரில் காமதேனுவின் கன்றின் கால்குளப்புச் சுவடுகளும், திருமூலவாயிலில் அரிவாள் வெட்டுச்சுவடும், காஞ்சியில் அம்மையாரது வளைத் தழும்பும் முலைச்சுவடும், இவ்வாறு ஆங்காங்குக் கொண்ட எண்ணிறந்த திருவடையாளங்களும் தமது திருவருள் வெளிப்பாட்டினை யாவரும் காணுமாறு இறைவர் தாங்கி நிற்பனவாம். அவற்றை அவ்வாறே கண்டு கும்பிடவேண்டு மென்பது ஆகமவிதி. ஆதலின் அரசனது ஆர்வங்கண்டும் யானைசேனைகளின் முயற்சிக்கு மெல்லாங் கடந்து இறைவர், திருமேனி நிமிராது நின்றனர் என்பதும் காண்க. பின்னர் நேர்நின்றனரே? எனின், அதுபற்றிக் கீழே 858ம் திருப்பாட்டில் உரைப்பவை பார்க்க.

**வேழம் எல்லாம் பூட்டவும் நேர்நில்லாமை** - பிராணிகளில் மிகப் பலமுடையன யானைகள், அவ்வியானைகள் பலகொண்ட யானைப்படை முழுதும் பூட்டி இழுக்கவும் நேர்நில்லாமையால் யானை சேனைகளின் பலத்தைப் பெரிதாக அரசன் எண்ணினனேயன்றி அவைகளுக்குப் பலந்தந்த இறைவனது பலத்தையெண்ணித் தாழ்ந்த மனத்தோடு புக்கவனல்லன். ஆதலின் இறைவர் நேர்நின்றிலர். **ஆனால் நாயனார் கழுத்திற் கயிறு** பூட்டியவுடன் நேர்நின்றனர் - தமது உடல் உயிர் முயற்சியால் இறைவனை ஆழ நீள அளவு காணப்போமென்று தேடிய பிரம விட்டுணுக்களுக்கு எட்டாது நின்று, பின்னர் அவர்கள் தமது ஆற்றலின்மையுணர்ந்து துதித்தபோது வெளிப்பட்டருளினர் என்பதை அப்பர்சுவாமிகள் இலிங்கபுராணத் திருக்குறுந்தொகையினுள் விளக்கியருளிய உண்மையினை நினைவுகூர்க. **நில்லாமை** - நில்லாதபடியால் அதன்பொருட்டு.

**அழுங்கிச்செல்ல** - வருந்தி இவ்வாறு நாள்செல்ல.

**பைங்கண் வெள்ளேற்றின்**—என்பதும் பாடம். 23

854 **(வி - ரை) கேட்டு** - கேட்டவுடனே கேட்டலும்.

**மாசறு புகழ்** - எவ்விதக்குற்றமும் இல்லாத புகழ். குற்றமில்லாத புகழ் நன்னெறி நிற்றலோடிணைந்ததென்பார் **புகழின் மிக்க நன்னெறி** என்றார். இப்புகழ் இயல்பினால் இல்வாழ்க்கை வாழ்ந்து ஈகையிற் சிறந்தலான் வருவதென்பர். இங்கு நாயனாரது புகழ் தமக்கொப்பில்லாத (843)ஈகையால் வந்த செயற்கரிய செய்கைச் சிறப்பினால் உலகறிந்து போற்றப்பட்டமையின் **மாசறுபுகழ்** என்று இங்கு எடுத்துக்காட்டினார். இதுபற்றியே தொடக்கத்தில் "**பொங்கிய புகழின் மிக்கார்**" (830) என்று தேற்றம்பெறக் கூறியதும்காண்க.

**நாதனை நேரேகாணும் அந்நெறி தலைநின்றான் என்று**-பிறிது கருத்தின்றி இறைவனை நேர்கண்டு கும்பிடும் அந்நெறிபற்றி நின்றான் என்றமையால். **விரும்பி** - அரசன் நற்செயலை விரும்பியபடியால் அவனை விரும்பினார். இந்நிலையிலேயே அரசனைக் காணு

தல் விரும்பார் என்பது. சிவவழிபாட்டில் அரசன் கொண்ட விருப்பமே இவர் விருப்பத்தை அவன்பால் செலுத்தியதென்க.

**மின் நெறித்து அனைய வேணி** - மின்னலைத்தான் உருப்பட்டு நெறிவும் செறிவும் கொண்டுவந்தாற் போன்ற சடை.

**விகிர்தன்** - மாயையைப் பலபல பேதப்படுத்தி உயிர்கட்குப் பற்பலவிதமாகிய தனு கரண புவன போகங்களாக ஆக்கியும் போக்கியும் அளித்தும் செயல்செய்ய வல்லவன்.

**வேணி விகிர்தன்** - சடையப்பர் என்ற இத்தலச் சுவாமி பெயர்க்குறிப்பு.

**வந்தார்** - திருக்கடவூரினின்று புறப்படுத் திருப்பனந்தாளுக்கு வர வழிப் பட்டனர் என்றபொருளில் வந்தது

அருளினாலே - பணியிலகீழ் - உதவும் நாளில் - அரசன் கவலையுற்று அழுங்கிச் செல்ல, கலயனார் - கேட்டு - நெறி தலைநின்றுசென்னார் - விரும்பி - விகிர்தனை வணங்க வந்தார் என இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து உரைத்துக் கொள்க. 24

855. மழுவுடைச் செய்ய கையர் கோயில்கள் மருங்கு சென்று
தொழுதுபோந் தணைபி ளேடுந் தொன்மறை நெறிவ ழாமை
முழுதுல கினையும் போற்ற மூன்றெரி புரப்போர் வாழுஞ்
செழுமலர்ச் சோலை வேலித் திருப்பனந் தாளிற் சேர்ந்தார். உரு

**(இ - ள்)** வெளிப்படை. மழுவேந்திய சிவந்த கையினையுடைய சிவபெருமான் எழுந்தருளிய அம்மருங்குள்ள திருக்கோயில்களுக்கும் சென்று, தொழுது, மேற்போந்து, எல்லா வுலகங்களையும் காக்கும் பொருட்டு வேதவிதி வழுவாமல் ஆகவனீயம் முதலிய முத்தீக்களையும் வளர்த்துக் காத்துவருகின்ற மறையோர் வாழ்கின்ற செழிப்புடைய பூஞ்சோலைகள் சூழ்ந்த திருப்பனந்தாளிற் சேர்ந்தனர்.

**(வி -ரை)** **மழுவுடைச் செய்ய கையர்** - மானும் மழுவும் சிவபெருமான் கையில் ஏந்திய திருவடையாளங்கள். "பரசு ஹஸ்தாய நம" என்பது சிவாட்டோத்தரம்.

**கோயில்கள் மருங்குசென்று தொழுது போந்து** - திருக்கடவூரிலிருந்து திருப்பனந்தாளுக்கு வரும் நாயனார் வழியில் இடையில் உள்ள சிவதலங்களைச் சென்று வணங்கிப் போந்தனர். அவை திருவாக்கூர்த் தான்தோன்றிமாடம், திருச்செம்பொன் பள்ளி, செம்பொனார் கோயில், திருமயிலாடுதுறை (மாயூரம்), திருத்துருத்தி (குற்றாலம்), திருவாவடுதுறை, குரங்காடுதுறை (ஆடுதுறை), திருமங்கலக்குடி முதலியனவாம். இவ்வழி ஏறக்குறைய 35 நாழிகை அளவு உள்ளது. ஒரு தலத்தினின்றும் மற்றொரு தலங் குறித்து யாத்திரை செய்வோர் நேரே அங்குச் சென்று விடாது, இடையில் தலங்களிருப்பின் அவற்றையும்சென்று தரிசித்துக்கொண்டு செல்லவேண்டுமென்பது முறை. இதனை நம்போலியர் கண்டு ஒழுகி உய்தற்பொருட்டு ஆசிரியர் அங்கங்கும் எடுத்துக் காட்டிச் செல்வர். "கறையணிந்தார் பாதஞ்சீ சரமும் பாடி, முன்னணைந்த பதிபிறவும் பணிந்து போற்றி" (896), "அங்கருள் பெற்றுப் போந்து முன்ன மணைந்தபதி களுவினைஞ்சி" (901) என்று திருஞானசம்பந்த நாயனார் புராணத்தாலும் பிறவாற்றாலும் நடைபட்ட தலங்கள் முன்பு தரிசித்தவையாயினும் அவ்வழியே வறிது செல்லாது மீண்டும் அவற்றைத் தொழுது செல்லும் முறை காட்டப்பட்டமை காண்க. இவ்வாறு ஒழுகாது இந்நாளில் நம்மனோர் செய்யும் தலயாத்திரைகள் முறையற்றன என்பது

**தொன்மறை நெறி புரப்போர்** - மறையோர் மறைவிதிப்படி முத்தீயோற்று உலகமுய்யும் பொருட்டே யாமனறிந் தங்கலங்கருதி யனறென்பது. "கற்றுங் கேள்வி ட்மிக கலியை வாராமே, செற்றார்" (குறிஞ்சி - கோயில் - 1) என்றது ஆளுடையபிள்ளையார் தேவாரம். "வருமுறை யெரிமூன் றோம்பி மன்னுயி ரருளான

மலக " (354) என்றவிடத்து உரைத்தவையும் பார்க்க. அன்றியும், மூன்றெரி என்னும் சைவயாகங்கள் மழைக்குக் காரணமாம், மழையின்றி உலகம் போ..... என்பதனாலும் மழைதுல கிலையும் போற்று மூன்றெரி புரப்போர் என்றார் என்பதுமமையும் எரிபுரப்போர் - மறையவர்.

மலர்ச்சோலை வேலி - மலர்ச்சோலைகள் நாற்புறமும் சூழ்தலால் அவை அந்நகரத்துக்கு வேலியிட்டனபோல உள்ளன என்பது. 25

856. காதலா லரச னுற்ற வருத்தமுங் களிற்றி னோடு
தீதிலவன் சேனை செய்யுந் திருப்பணி நேர்ப டாமை
மேதினி மிசையே யெய்த்து வீழ்ந்திளைப் பதுவு நோக்கி
மாதவக் கலயா தாமு மனத்தினில் வருத்த மெய்தி, ௨௬

857. சேனையு மானை பூண்ட திரளுமெய்த் தெழாமை நோக்கி
"யானுமிவ் விளைப்புற் றெய்க்கு மிதுபெற வேண்டு" மென்று
தேனலர் கொன்றை யார்தந் திருமேனிப் பூங்கச் சேய்ந்த
மானவன் கயிறு பூண்டு கழுத்தினால் வருந்த லுற்றார். ௨௭

856 (இ - ள்) வெளிப்படை. தான் கொண்ட ஆசையினாலே அரசன் அடைந்த வருத்தத்தினையும், யானைகளோடு குற்றமற்ற சேனைகளும் தாம் செய்யும் திருப்பணி நேர்படாமையினாலே நிலத்தின் மேலே களைத்து வீழ்ந்து இளைப்பதனையும் மாதவராகிய கலயனார் நோக்கி மனதில் வருத்தங்கொண்டு, ௨௬

857 (இ - ள்) வெளிப்படை. சேனையும், யானைகளாகக் கொண்ட கூட்டமும் இளைத்து மேல் எழமாட்டாதிருக்கிற நிலையை நோக்கி, "நானும் இந்த இளைப்பினைப் பொருந்தி மெலியும் இப்பேறு பெறவேண்டும்" என்று உட்கொண்டு, தேன் நிறைந்து அலர்கின்ற கொன்றையணிந்த இறைவனது திருமேனியிற் பூண்ட பூங்கச் சிறப்பொருந்திய பெரிய வலிய கயிற்றைப் பூட்டித் தமது கழுத்தினாலே வருந்தி இழுக்கத் தொடங்கினார். ௨௭

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

856 (வி - ரை) காதல் - "அங்கணனைச் செம்மைக்கண்டு கும்பிடக்கொண்ட ஆர்வம்" (853). காதலால் உற்ற வருத்தம் - காதல் நிறைவேறாததால் அக்காதல் காரணமாகப் பொருந்திய வருத்தம்.

வருத்தமும் - இளைப்பதுவும் நோக்கி - அரசனுடைய ஏவுதற்கருத்தாவும், யானை சேனைகளாகிய இயற்றுதற் கருத்தாவும் என்ற இருதிறத்தாரின் வருத்தமும் சொல்லப்பட்டன.

களிற்றினோடு - சேனை - யானைகளுடன் சேனைவீரர்களும்.

தீதில்வன் சேனை - வலியசேனைகளேயாயினும் இங்குத் தமக்குரிய கொலைப் போர் முதலிய தீங்கு ஒன்றும் செய்தில என்பார் தீதில் - என்றார்.

நேர்படாமை - முற்றுப்பெறாமை. நேர்படல் - பொருந்துதல் "காலநேர் படுதல் பார்த்தய னிற்ப" (219) "காணு நேர்பா டெண்ணுவார்" என்றவை காண்க.

எய்த்து வீழ்ந்து இளைப்பதுவும் - கைகூடாத பணியில் மேலும் மேலும் முயல்வதனால் எய்ப்பு உளதாம், எய்ப்பு மிகவே உடல் விழும், பன்முறை வீழ்ந்ததனால் இளைப்பு உண்டாகும், இளைப்பு அதிகரிக்கவே, வீழ்ந்தவர் மீண்டும் மேல் எழாத நிலை உண்டாம் இதனையே வரும் பாட்டில் "எய்த்து எழாமை நோக்கி" என்றார்.

நோக்கி - கூர்ந்துபார்த்து. வருத்தமும் இளைப்பதுவும்-இரண்டனுருபுகள் தொக்கன.

**மாதவக் கலயனார்** - உயர்ந்த நோன்பு நோற்றல் தவத்திற்கு உரு என்ப; ஆதலின் அரசனும் சேனைகளும் உற்ற வருத்தம் பொறாராயினார். அது பற்றி **மாதவர்** என்ற அடைமொழி புணர்த்தினார்.

**நீதிலாச் சேனை** - என்பதும் பாடம். 26

857. (வி - ரை) **ஆனைபூண்ட திரள்** - எழுமெல்லாம் (853) பூட்டியதனால் **திரள்** - என்றார். **திரள்** - கூட்டம்; சேனை - சேனைவீரர்கள்.

**எய்த்து எழாமை** - எய்த்தலினால் எழமாட்டார் இருந்த நிலைமையினை.

**நோக்கி** - எழாமை கண்டார் அதனை; அவற்றின் மாட்டாமையும், அதன் காரணமாகிய எய்ப்பும் கருதி அறிந்தார் என்பதாம். இது பற்றியே மேற்பாட்டிலும் **நோக்கி** - என்றார்.

**'யானும் வேண்டும்'' என்று** - இது நாயனார் கருதியது **என்று** - என்று கருதி. யானும் பூட்டி இழுத்து நேர் நிற்கச் செய்வேன் என்றுவது, இத்திருப்பணியில் யானும் முயல்வேன் என்றுவது நாயனார் கருதினாரல்லர். யானைகளும் சேனைகளும் செய்ய மாட்டாத தொன்றைத் தனது சக்திகொண்டு நாயனார் செய்யத் துணிந்தாரென்னில் அது மதிப்புடையவர் செய்கையன்றாகும்; யான் அக்காரியத்தை நோக்காணப்பேன் என்று எண்ணினால் அது அகங்காரத்தின் பாற்படும். மேலும், முன்னர் 853ல் உரைத்த சிவ தருமவியலுக்கும் மாறுபடும். "எய்ப்புறு நிலைக்கும் இது பெறவேண்டும்'' என்றதனால் இக்காரியம் தம்மால் இயலாது இளைப்போம் என்ற துணிபே நாயனார் கொண்டனர் என்பது தெளிவாம். ஆயின், நாயனார் இதில் முயன்றது என்னையோ வெனின்? யானை சேனைகளின் மெலிவைத் தானும் ஒருபங்கு கூறு கொண்டு தாங்கி அம்மெலிவைக் குறைத்து அம்மட்டில் அவற்றின் வருத்தத்தை நீக்குவேன் என்ற அளவே இதில் துணிந்தனர் எனக். அரசன் செய்கை ஆணவத்தால் மேற்கொள்ளப்படாது செம்மைகண்டு கும்பிடக்கொண்ட ஆர்வத்தால் தூண்டப்பட்டமையால் அதில் அரசன் கொண்ட அன்பின் நெறியினைக் காண விரும்பியே (854) நாயனார் திருப்பனந்தாளிற் சேர்ந்தனர். இவ்வாறு கொண்ட அன்புடைப்பணியில் இளைத்தார் வருத்தத்தைக் குறைத்தல் அன்பர்பணியுமாம் அருமுமாமாதலின் நாயனார் அதில் முட்டினார். ஒத்த அன்புடையார் உள்ளக் கருத்து கூறுகொள்வதனால், இன்பங்களாயின், அவை மிகும்; துன்பங்களாயின் அவை குறையும், என்பது உலகியலிற் காணப்படும். இதுபற்றியே ஒருவனுக்குத் தோன்றாத் துன்பம் நேர்ந்தபோது அன்புடையார் பலருஞ் சென்று சேர்ந்து உசாவியிருத்தல் உலகவழக்காயிற்று; இன்பத்தில் பலருங்கூடுதலும் இக்கருத்தே பற்றியது. "துயரகற்ற மாட்டாதேன் வருந்துமிது, தனதுறுபே ரிடர் யானுறத் தாங்குவதே கருமமென'' (127) என்று மனுநீதிச்சோழர் துணிந்ததும் இங்கு நினைவுகூர்க. ஆண்டுரைத்தவையும் பார்க்க.

**தேன் அலர் கொன்றை** - **தேன்** - வண்டு எனவும், **அலர்** - அலர்த்தப்படும் என வுடன்கொண்டு, வண்டுகளால் ஊதி அலர்த்தப்படும் கொன்றை என்றலுமாம்.

**திருமேனிப் பூங்கச்சு ஏய்ந்த** - பூட்டி இழுக்கும் வலிய கயிறுகள் இறைவரது நிலைக்கத் திருமேனியிற் பட்டு ஊறுபடாதமல் அத்திருமேனியைப் பூங்கச்சுக்களாகப் பட்டு முதலியவற்றாற் பொதிந்து அவற்றிற் பொருந்திய கயிறு பூட்டினார் என்பதாம்.

**மான வன் கயிறு** - மானம் - பெரிது. யானைத் திரளும் சேனைகளும் பூட்டி இழுத்த கயிற்றின் வலிக்குத் தக்கவாறு கயிறு பெரிதாயும் வலிதாயும் இருந்ததெனக்.

**கழுத்தினும் பூண்டு** எனக் **வருந்தலுற்றார்** - நாயனார் அக்கயிற்றினைத் தமது கழுத்தினிற் பூட்டி வருந்தி இழுக்கத்தொடங்கினார் என்பதாம். 27

௮௫௮. நண்ணிய வொருமை யன்பி னூறு பாசத் தாலே
திண்ணிய தொண்டர் பூட்டி யிளைத்தபின் றிறம்பி நிற்க

வொன்றுமோ? கலய னாத மொருபபாடு கணட போதே
யணணலாா நேரே நின்றா, ரமரரும விசுமபி லாாததாா,   உஅ

859. பாரமிசை நெருஙக வெஙகும பரபபினா பயிலபூ மாரி,
தோமலி தானை மனனன சேனையுங களிறு மெலலாங
காாபெறு கானம் போலக களிததன, கைகள கூபபி
வாாகழல வேநதன தொணடா மலரடி தலைமேல வைதது,   உகூ

860. "விணபயில புரஙகள வேவ வைதிகத தேரின் மேருத
திணசிலை குனிய நின்றா செநநிலை காணச செயதீா;
மணபகிாந தவனுங காணா மலரடி யிரணடும் யாரே
பண்புடை யடியா ரலலாற பரிநதுநோ காண வலலார்?"   கூ0

861. என்றுமெய்த தொண்டா தமமை யேததியங கெமபி ரானுக
கொன்றிய பணிகண மற்று முளளன பலவுஞ செயது
நின்றவெண கவிகை மனன னீஙகவு, நீஙகா லனபா
மன்றிடை யாடல செய்யு மலாககழல வாழ்த்தி வைகி,   கூக

862. சிலபகல் கழிநத பினபு திருககட வூரி னணணி
நிலவுதம பணியிற றஙகி நிகழுநா ணிகரில் காழித
தலைவராம பிளளை யாருந தாண்டகச சதுர ராகு
மலாபுக ழரசுங கூட வஙகெழுந தருளக கணடு,   கூஉ

863 மாறிலா மகிழ்சசி பொஙக வெதிரகொண்டு மனையி லெய்தி
யீறிலா வனபின மிககாாக் கினனமு தேறற மாறறல
ஆறுநற சுவைக ளோஙக வமைததவ ரருளை யன்றி
நாறுபூங கொனறை வேணி நமபாத மருளும் பெறறார்.   கூங

858 (இ - ள்) நணணிய பாசததாலே - ஒருமை பொருநதிய அனபாகிய நாரி னால இயனற கயிறறினாலே, திணணிய ஒணணுமோ - திணமையுடைய தொணடா பூட்டி இளைபபடைநத பினனரும அககருததுககு மாறுபடடு முன போலச சாயாது நிறக இறைவாககு முடியுமோ?, கலயனாாதம நின்றா - கலயனாாது மனததில எழுநத ஒருமைபபாட்டினைக கணட அபபொழுதே பெருமையுடைய பிரானாா நேரே நின்றனா, அமரரும...ஆாததாா - தேவர்களும ஆகாயததில மகிழ்சசியினால ஆரவாரித தனராகி,   உஅ

859. (இ - ள்) வெளிபபடை. பூமியினமேல எஙகும நெருஙகுமபடி அதிகமாகக கறபகப பூமழை பரபபினா, தோகளால மிகுநத மனனனுடைய சேனைகளும யானை களும ஆகிய இவை எலலாம மேகததைப பெறற சோலைபோல மகிழ்நதன; வீரக கழல கட்டிய அரசன கைகளைக கூபபித தொழுது தொணடருடைய மலாபோனற பாதஙகளைத தலைமேறகொணடு வணஙகி,   உகூ

860 (இ - ள்) வெளிபபடை. "விணணிற பறககினற முபபுரஙகளும வேகுமபடி வேதபபுரவி பூணட தேரில மேருமலையை வலிய விலலாக வளைதது நினற சடையபபருடைய நோ நிறகும நிலையினை அடியேன தரிசிககுமபடி செயதருளினீா!. மணணைப பிளநது சென்ற திருமாலும தேடிக காண முடியாத (சிவபெருமானது) மலா போனற திருவடிக ளிரணடினையும பணபு மிகக அடியவாகளலலாது வேறு யாவரோ அனபினால நோ காண வலலவா?",   கூ0

861 (இ - ள்) வெளிப்படை. என்று இவ்வாறு மெய்த்தொண்டராகிய நாயனாரைத் துதித்து அத்தலத்தில் இறைவருக்குப் பொருந்திய மற்றும் திருப்பணிகள் பல உறைப்புஞ் செய்து, பின்னர், நிலைத்த வெண்கொற்றக் குடையுடைய அவ்வரசனது நகரத்துக்குப் போயினார்; அதன் பின்னும், ஒப்பற்ற அன்பராகிய கலயனாரும் அம்பலத்தினில் ஆடல்புரிகின்ற மலர்போன்ற பாதங்களை வாழ்த்தி அங்குத் தங்கி,

862. (இ - ள்) வெளிப்படை. சில நாள்கள் கழிந்த பின்பு அங்கு நின்றும் போந்து திருக்கடவூரிற் சேர்ந்து நிலைபெற்ற தமது திருப்பணியில் ஒழுகி வருகின்ற நாட்களிலே, ஒப்பற்ற சீகாழித் தலைவராகிய ஆளுடைய பிள்ளையாரும் தாண்டக வேந்தராகிய மிக்குப் பெருகும் புகழுடைய ஆளுடைய அரசுகளும் ஒன்றாக அங்கு எழுந்தருளக் கண்டு, ௩௨

863. (இ - ள்) வெளிப்படை. நிகரில்லாத மகிழ்ச்சி பொங்க அவர்களை எதிர்கொண்டு சென்று அழைத்து வந்து, தமது திருமனையில் எய்தி, எல்லையில்லாத அன்பின் மிக்க அவர்களுக்கு இனிய அமுதினை அவர்களது பெருமைக்கு ஏற்றபடியாக நல்ல ஆறு சுவைகளும் பொருந்த அமைத்து ஊட்டி, அவர்களது திருவருளினைப் பெற்றதேயன்றி, மணமுடைய அழகிய கொன்றைமலர் அணிந்த இறைவருடைய திருவருளினையும் பெற்றார். ௩௩

இந்த ஆறு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

858. (வி - ரை) ஒருமை நண்ணிய அன்பின் நார் உறு பாசம் - என்று கூட்டுக. ஒன்றிய சிந்தையின்ற பொருந்திய அன்பாகிய நார் இழைகளால் முறுக்கப்பட்ட கயிறு "ஒன்றியிருந்து நினைமின்கள்" என்ற திருவிருத்தம் காண்க. ஒன்றுதல் வேறொன்றிலும் செல்லாது அதனிலே பொருந்துதல். "உறவு கோல்நட் டுணர்வு கயிற்றினால், முறுக வாங்கிக் கடையமுன் னிற்குமே" என்பது முதலியனவும் இக்கருத்துப்பற்றியன.

அன்பின்நார் உறுபாசத்தால் பூட்டி எனக் நாயனார் பூங்கச்சிறுகட்டிய கயிற்றினைக் கழுத்திற் பூட்டி வருந்தலுற்றாராயினும், உண்மையில், அவர் பூட்டி ஈர்த்திழுத்தது அன்புநார்ப் பாசமேயாகும் என்பது. இறைவன் நேரே நின்றது புறத்திலே பூண்ட கயிற்றுக் கன்று, அகத்திற் கட்டிய அன்புக் கயிற்றுக்கேயாம் என்பது கருத்து. புறக் கயிற்றுக்கு நேர்வாராயின் முன்னர் யானை சேனைகளின் முயற்சிக்கே பயன் தந்திருத்தல் வேண்டும். அவ்வாறன்றி யானை சேனைகளின் வருந்திய முயற்சிகளின் மிக்கு நாயனார்பால் கண்டது அன்புநார்ப் பாசமொன்றேயாம் என்று காட்டுவார், ஒருமை அன்பின் நாருறு பாசத்தாலே பூட்டி யிளைத்தபின் திறம்பிநிற்க ஒண்ணுமோ? என்று வற்புறுத்தி எதிர்மறை வினாவினை வைத்துக்கூறினார். இவ்வாறன்றி, அன்பினார் - அன்பராகிய நாயனார் பொருந்திய கயிற்றினாலே என்று கொண்டுரைப்பாருமுளர்.

திண்ணிய - திண்மை - அன்பின் மிக்க திருத்தொண்டின் வலிமை. "எண்ணிய எண்ணியாங் கெய்துப எண்ணியார், திண்ணியர் ஆகப் பெறின்" என்றதன் கருத்தினை நோக்குக சிந்திக்க. தாமும் மனைவியார் மக்கள் சுற்றம் என்றிவரும் இருபகல் உணவின்றி வருந்திடும் அதற்காக நெற்கொள்ளக் கொண்டு சென்ற தாலியை இறைவர்க்குக் குங்குலியங் கொண்ட திண்மை குறித்தது.

பூட்டி இளைத்த - எய்க்கும் இவ்விளைப்பு யானும் பெறவேண்டுமென்ற மனவொருமைப்பாட்டுடனே பூட்டியிழுத்து இளைத்த ஒருப்பாடு கண்டபோதே என்ற கருத்தும் அது.

பின் - பின்று - ஒண்ணுமோ? - ஒண்ணாது வினா எதிர்மறை குறித்தது. கண்ட பின்னும், பின்னிற்பாக ஒண்ணாதாயின் நோக்கிற்றல் வேண்டுமே? எப்போது நோக்கினார் எனில்? ஒருப்பாடு கண்டபோதே நேரே நின்றார் எனக.

கூறினார். "கூவலும் அமைத்து மாடு கோயிலும் சூழ மதிலும் போகத், வாவியும் தொட்டு மற்றும் வேண்டுவ வகுத்து" என்று பூசலார் நாயனார் புராணம் (8) காண்க. இவை பற்றிய விரிவு சிவாகமங்களுட் கண்டு கொள்க.

**நின்று** - திருப்பணிகள் முற்றுமவரை அங்குத் தங்கிய என்பதாம். வேந்தர் தாங்களாயச் சிவாலயத் திருப்பணிகள் செய்விக்கும் அன்பர்கள் அவற்றை அதிகாரிகள் பிறர் கண்காணிக்கவிட்டுத் தாம் வேறு காரியங்கள் பார்த்து இராமல், அத்திருப்பணிகள் முழுதும் தாமே நேரில் இருந்து கண்காணித்து முடிக்க வேண்டுமென்பது முறையும் விதியுமாம். இங்குத் திருப்பணிகள் முழுவதும் அரசன்தானே கூட இருந்து முடித்தனன் என்பார் **நின்று** என்றார். ஆவதும் அன்பும் காரணமாக மெய்வருத்தம் பார்த்தலும் இளைப்பாறுதலுமின்றியும், இருத்தலும் கிடத்தலுமின்றியும், **நின்றபடியே** கண்காணித்து என்ற குறிப்பும் காண்க.

**வெண்கவிகை** - அரச அடையாளங்களில் ஒன்று என்ற மாத்திரையாய் நின்றது. இங்கு அரசன் வெண்கவிகை நிழற்ற அதன்கீழ் நின்றனன் என்பதன்று. வெண்கொற்றக்குடை அளிசெய்தலைக் குறிக்கும் உருவகம்.

**நீங்கவும்** - அத்தலத்தினின்று தன் தலைநகருக்குச் சென்ற பின்னரும் அரசன் நீங்கவும் தாம் நீங்காராய் வைகினார் என உம்மை உயர்வு சிறப்புக் குறித்தது.

**நிகரில் அன்பர் (ஆதலின்) வைகி** எனக் **வைகி** - தங்கி "நாதனை நேரே காணும் அந்நெறி தலைநின்றான் என்று அரசனை விரும்பி (854)ய நாயனார் திருப்பணித் தாளிற் சேர்ந்தனர் அவன் நீங்கவும் தாம் நீங்காது பின்னரும் அங்குத் தங்கி வாழ்ந்திருந்ததற்கு அவரது அயரா அன்பே காரணமாம் என்பார் **நிகரில் அன்பர்** என்றார்.

**மன்றிடை ஆடல் செய்யும் மலர்க்கழல் வாழ்த்தி** - **மன்று** - திருவம்பலம். ஐந்தொழில் நடனம் செய்யும் என்பது இறைவனது அம்பலத்து அருட்கூத்து அடியாராக வெளிவந்த அத்திருவருளையே எண்ணி எண்ணி வாழ்த்திக்கொண்டு பலநாள் அங்குத் தங்கினார் என்பது கருத்து. யானை சேனைகளாற் கூடாதது தம்மாற் கூடிற்று என்று எண்ணினாரல்லர் திருப்பணியில் முயன்ற அவற்றின் இளைப்பைத் தாமும் கூறுகொண்டு குறைக்க எண்ணிய எண்ணத்தினுக்கிரங்கி இறைவன் நேர் நின்று அருளிய பெருங் கருணைத் திறத்தையே எண்ணினார். தமது சிறுமையினையும் இறைவரது அருளின் பெருமையினையுமே எண்ணி எண்ணி ஆராமை மிகுதியால் அத்திருவருளை வாழ்த்தி வைகினார் என்பது. **கழல்** - திருவடி - சிவசத்தி. 31

862 **(வி - ரை) பகல்** - இங்கு நாள் என்ற பொருளில் வந்தது.

**நிலவு தம் பணியில் தங்கி**-தாம் முட்டின்றி நியமமாகச் செய்துவந்த குங்குலியத் தூபத் திருப்பணி - **நிலவு** - வறுமைவந்த காலத்தும் விடாது நிலவிய **பணியிற்றங்குதலாவது** பணிசெய்து அதில் வாழ்வடைதல்.

**நிகழும் நாள்** - வாழ்கின்ற காலத்தில். **நிகழ்தல்** - நடத்தல் - செல்லுதல்.

**நிகரில் காழித் தலைவர்** - நிகரில் காழி என்றும், நிகரில் தலைவர் என்றும் கூட்டியுரைக்க நின்றது. காழியின் தனிநிகரில்லாச் சிறப்பு ஆளுடைய பிள்ளையாரருளிய வழிமொழித் திருவிராகம், பல்பெயர்ப்பத்து, திருவெழுகூற்றிருக்கை, திருச்சக்கர மாற்று, ஈரடி, திருவியமகம் முதலிய திருப்பதிகங்களானும், "பெருநெறிய பிரமாபுரம்" (நட்டபாடை - பிரமாபுரம் - 11), "நற்புலவர் தாம்புகழ் பொற்பதி (காந் பஞ்ச பூந்தராய 10), "போதனைப்போன் மறையோர் பயிலும்புகலி" (வியா - குறி - புகலி. 11), "கலையின் மேவும் மனத்தோர் இரப்போர்க்குக் கரப்பிலார், பொலியும் மந்தண் பொழில்சூழ்ந்த தழகாரும்புகலி" (செவ்வழி - புகலி - 8), "பொய்யர் காவினை நத்தணர் வாழும் புறவம்" (குறிஞ்சி - புறவம் - 1), "கரிதனைப் பண்டுரி செய்தோன் பாவனை செய்யும் பதி" (குறிஞ்சி - புறவம் 7), "காதலாற், சைவர் பாசுபதர்கள் வணங்கும்

சண்பை நகர்" (தக்கேசி சண்பை - 4), "உரவார் கலையின் கவிதைப் புலவர்க் கொருநாளுங், கரவா வண்கைக் கற்றவர் சேருங் கலிக்காழி" (குறிஞ்சி - காழி - 1), "கற்றல்கேட்ட லுடையார்கள் வாழ் கலிக்காழி" (காந்தாரம் - காழி 3), "விலங்கலமர் புயன் மறந்து மீன்சனிபுக் கூன்சலிக்குங் காலந் தானுங், கலங்கலிலா மனப்பெருவன் கையுடைய மெய்யர்வாழ் கழுமலமே" (மேகரா - குறி - கழுமலம்-3), "தருந்தடக்கை முத்தழலோர் மனைகடொறு மிறைவனது தன்மை பாடிக், கருந்தடங்கண் ணார்கழல் பந் தம்மானைப் பாட்டயருங் கழுமலமே" (ஷெ 2), "பரக்குமலர் புகழார் பழியவை பார்த்துப் பலபல வறங்களே பயிற்றிக், கரக்குமா றறியா வண்மையால் வாழுங் கழுமல நகர்" (புறநீர்மை - கழுமலம் 8), "ஞானங் கருதினர் உலகிற் கருத்துடை யார்சேர் கழுமலநகர்" (ஷெ 5), "கலையாரொரு கருத்தொகை கற்றோர் மிகுகூட்டம், விலையாயின சொற்றேர்தரு வேணுபுரம்" (நட்டபாடை) என்பனவாதி ஆளுடைய பிள்ளையார் அருளிய தேவாரங்களாலும், அவர் புராணத்துட்கூறிய தலச் சிறப்புக்களாலும் பிறவாற்றானுமறிக. **நிகரில் தலைவர்** என்ற அவரது ஒப்பற்ற தலைவராந் தன்மை, அவர் புராணத்துள் 69, 70, 71 திருப்பாட்டுக்கள் முதலியவற்றாலும், அவர் சரித நிகழ்ச்சிகள் பலவற்றாலும், ஆளுடைய அரசுகள் ஆளுடைய நம்பிகள் முதலிய பரமாசாரியர்களும், சங்கராசாரியார் முதலிய சமயத் தாபகர்களும் வழிபட்டுத் துதித்தவாற்றாலும், இறைவன் செய்யும் அருட்டொழிலாகிய முத்திப்பேற்றைத் தன்னடைந்தோர்க்கு அருளும் தன்மையாலும், பிறவாற்றாலும் அறிக.

**பிள்ளையார்** - ஆளுடைய பிள்ளையார் உலகுக்கெல்லாம் தந்தை தாயாகிய தோணிபுரேசர் பெரிய நாயகியம்மையாரிவர்களுக்குப் பிள்ளையாராய் அருண்ஞானப்பா லூட்டப்பெற்று வளர்ந்தமையால் இப்பெயர் பெற்றனர். "யாவர்க்குந் தந்தைதா யெனுமவரிப் படியளித்தார், ஆவதனா லாளுடைய பிள்ளையாராய" - (திருஞான - புரா - 69) என்றது பார்க்க.

**தாண்டகச் சதுரர்** - திருத்தாண்டகத்தில் தனி வல்லமை யுடையார். **தாண்டகம்** - ஒற்று நீக்கிப் பெரும்பான்மை 26 எழுத்துக்களின் மிக்க தாண்டக அடியால் வருமாறு யாக்கப்பட்ட ஒருவகைச் சந்தமுடைய தமிழ்ப்பா அமைதி பெற்ற பாவிகற்பம் இது அளவழித்தாண்டகம் அளவியற்றாண்டகம் என்ற இருபகுப்பினை யுடையது தேவாரம் அருளிய மூவர் முதலிகளில் அரசுகள் ஒருவரே திருத்தாண்டகம் என்னும் இந்தப் பண்ணுடைய தேவாரப் பாக்கள் அருளியவர் இப்பாக்கள் பயில்வோரது உள்ளமும் உய்யவிடும் உருக்கி இறைவனுக்கு ஆளாந்தன்மையிற் செலுத்தும் தன்மையிற் சிறந்து விளங்குவன. இதனால் இவர்க்குத் தாண்டகவேந்தர் என்ற சிறப்புப் பெயர் வழங்கும். **சதுரர்** - சதுரப்பாடு - வன்மை - உடையவர் **அரசு** - என்றது தாண்டகத்தில் வல்லார் என்ற குறிப்பும் பற்றியது

**அலர்புகழ் அரசு** - எங்கும் பரவிய புகழினையுடைய திருநாவுக்கரசர். இவரது பக்தி பரவி மக்களை ஆட்கொண்ட திறம் "காண்டகைமை யின்றியுமுன் கலந்த பெருங் கேண்மையினார்", "பொங்குகடற் கன்மிதப்பிற் போந்தேறு மவர்பெருமை, யங்கணரும் புவனத்தி லறியாதா ரியாருளரே" என்ற அப்பூதிநாயனார் புராணத்தாலும், பிறவாற்றானுமறிக

**கூட அங்கு எழுந்தருள** - ஒன்றாகச் சேர்ந்து அங்குத் திருக்கடவூருக்கு வந்தருள. இவ்விரு பெருமக்களும் இங்கு எழுந்தருளிக் கூற்றுதைத்த பொன்னடிகளை வணங்கிக் கூடியிருந்து திருமடத்தில் அமர்ந்து அவரால் பூசிக்கப்பெற்ற சரிதம் அவ்வவர் புராணங்களுட் கூறப்பட்டன திருநா - புரா - 247ம் திருப்பாட்டும், திருஞான - புராணம் 533—536 திருப்பாட்டுக்களும் பார்க்க பரமாசாரியர்களான இவ்விரு பெருமக்களும் இரண்டாவது முறை சந்தித்த செயல் திருப்புகலூரில் நிகழ்ந்தது. அங்கு நின்றும் அவ்விருவரும் ஒன்று கூடியே தலயாத்திரை செய்து திருவம்பாதத்தலத்தை வணங்கிக்

கொண்டு வரும் வழியில் இங்கு எழுந்தருளித் தரிசித்தனர் இங்கு நின்றும் திருவாக்கூர், திருமீயச்சூர், திருப்பாம்புரம் முதலிய தலங்களை வணங்கித் திருவீழிமிழலை சேர்ந்தனர் என்பது சரிதம்

**கூட எழுந்தருள** - ஒன்றுகூடி வர. பெரியோர்களது வருகையை இவ்வாறுபசரித்துக் கூறுதல் சைவமரபு. இப்பெரியோர்கள் கூடிச்செய்த யாத்திரை வழிச்செலவில் இவர்கள் ஒன்றாகச் செல்லாது அரசுகள் முன்னரும், அவரைப் பின்பற்றிப் பிள்ளையாரும் செல்லுதலும் தலங்களிற் சேர்தலும் முறை ஆயினும் இருவரும் தலங்களைக் கூடித் தரிசித்துச் சென்றதனால் கூட என்றார். 32

863. (வி - ரை) **மாறிலா மகிழ்ச்சி பொங்க** - ஆதரவுக் காதல் கூர அடியவர்களுக்கு நாளும் திருவமுதூட்டும் (852) தன்மையுடைய கலயனார், பேரடியார்களும் பரமாசாரியார்களுமாகிய இருபெருமக்களும் கூட எழுந்தருளக் கண்டபோது இதுவரையுமில்லாத ஒப்பற்ற மகிழ்ச்சி மேன்மேற் பொங்கநின்றனர் என்பது இயல்பேயாம். அடியார்களை அமுதூட்டிப் பணி செய்ததன் பயனாகவும் அதற்குப் பரிசாகவும் இது எய்தியதென்று எண்ணி, மாறிலா மகிழ்ச்சி பொங்கினார் என்பதுமாம்.

**ஈறுஇலா அன்பின் மிக்கார்க்கு** - எல்லையற்ற - அளவு காணமுடியாத - அன்பினால் மிகுந்தவர்களாகிய அவ்விரு பெருமக்களுக்கும். அவர்களது அன்பின் மிகுதியினாலன்றே, அவர்களை இறைவன் ஆட்கொண்டனர், அவர்கள் உலகை ஆட்கொள்ளும் பரம ஆசாரியர்களாக விளங்கினர் என்க

**ஏற்கும் ஆற்றல் ஆறு நற்சுவைகள் ஓங்க இன்னமுது அமைத்து** எனக. **ஏற்கும் ஆற்றல்** பேரடியார்கள் என்ற தன்மைக்கும், அதற்கு மேலாகச் சிவனாலாட்கொள்ளப்பட்ட பரமாசாரியர்கள் என்ற தன்மைக்கும் தக்கபடி. "பிள்ளையாரொழுந் தருளிய பெருமைக்குத் தக்க" என்ற திருநீலநக்கர் புராணம் (27) காண்க. **நற்சுவைகள் ஓங்க** - வெறும் நாவின் சுவையாலன்றிக் குணத்தாலும் உயர்வுடைய என்பார் **நற்சுவை** என்றார் **இன்அமுது-இன்** - இனிய இதனால் அமுதுக்கான உணவுப்பண்டங்களின் இனிமை, அமுது அமைத்தலின் இனிமை, அன்பின் இனிமை முதலியன எல்லாம் அடக்கிக்கொள்க. 443 - 852 முதலியவை பார்க்க.

**அவர் அருளேயன்றி நம்பர்தம் அருளும் பெற்றார்**-முன்னாகக் கலயனார் அடியார்களை இனிய திருஅமுதூட்டிய வகையால் **சங்கமவழிபாடு** செய்து **அவர்களருள்** பெற்றனர். அதுகாரணமாகப் பரமாசாரியர்களாகிய இரு பெருமக்களது அரிய சேவையும் கிடைக்கப்பெற்று வழிபடுக **குருவருள்** பெற்றனர் அதனால் அதன் வழியே இலிங்க வழிபாட்டிற் கிடைக்கும் **சிவனருளும்** பெற்றனர். இவ்வாறு குரு லிங்க சங்கமமென்ற மூவகை வழிபாடுகளின் அருட்பேறும் கலயனார் ஒருங்கே பெற்றனர் என்பதாம்

**அன்பின் மிக்கார்க்கு ..அமுது அமைத்து .நம்பர் அருளும் பெற்றார்** - என்றதனால் அன்பர்களை ஊட்டிய அச்செயலாலே அவர்களருளோடு அரனருளும் பெற்றார் என்பதாயிற்று "படமாடக் கோயிற் பகவற்கு தாமே" என்றபடி அன்பர்களுக்குள்ளே நின்று மகிழ்ந்து அரன் உண்டு அருளுகின்றான் என்பது உண்மை. இக்கருத்துப்பற்றியே "உள்ளத்திற் றெளிகின்ற மெய்ம்மை யன்பி னுருவினையு மவ்வன்பி னுள்ளே மன்னும், வெள்ளச்செஞ் சடைக்கற்றை நெற்றிச் செங்கண் விமலரையு முடன்கண்ட விருப்பும் பொங்க" (திருஞான - புரா - 1023) என்று கண்ணப்ப நாயனாரைத் துதித்தது காண்க பசுவின் வாயிலே ஊட்டிய புல் உணவு இரத்தமாக மாறி அதன் உடல் முழுதும் பரவிப் பின்னர்ப் பாலாக உருக்கொண்டு முலைக்காம்பில் வெளிவருவதுபோல அடியார்களுக்கு ஊட்டிய அமுது அருளாக உருப்பட்டுச் சிவலிங்கத்திற் போந்து வெளிப்படும் என்பது ஞானசாத்திர முடிபு.

**சிவபதநிழலிற் சேர்ந்தார்** - சிவபதமாவது சிவன் தருளின் நிலை - அஃதாவது அவன் தருட்சத்தி வியாபகம். பிறவிவெப்பத்தினின்றும் நீக்கிக் குளிர்விப்பதனால் இதனை அடிநிழல் என்பது மரபு 308ல் **தண்மை** - என்றதற்கும், 4[illegible]ல் **கழல் நிழல்** என்றதற்கும் உரைத்தவை பார்க்க.

**பதநிழலிற் சேர்தலாவது** - அருள் நிறைவுக்குள் அடங்கி நிற்றல். "பின்பே சுத் திருந்த, விருகாற் குரம்பை யிதுநா னுடைய திதுபிறர் தருவா ரென்னுதலின் றிரு வடிக் கீழோர் தலைமறைப்பே" என்ற திருவிருத்தக் கருத்தும் உன்னுக. 34

865. தேனக்க கோதை மாதர் திருநெடுந் தாலி மாறிக்
கூனற்றண் பிறையி னார்க்குக் குங்குலி யங்கொண் டுய்த்த
பான்மையிற் றிண்ண கலய னாரைப் பணிந்தவ ரருளி னாலே
மானக்கஞ் சாறர் மிக்க வண்புகழ் வழுத்த லுற்றேன். ௧௫

**(இ - ள்)** வெளிப்படை. தேனலர்ந்த மலர்மாலை யணிந்த மனைவியாரது திருநெடுந்தாலியைக் கொடுத்து, வளைந்த குளிர்ச்சியுடைய பிறைச்சந்திரனைத் தலையிற் சூடிய இறைவருக்கு ஏற்ற குங்குலியத் தூபத்திருப்பணி முட்டுப்படாது செலுத்திய பான்மையும் திண்மையும் உடைய கலயனாரைப் பணிந்து, அவரது அருளினாலே, மானக்கஞ்சாற நாயனாரது மிக்க வண்மையுடைய திருத்தொண்டினை இனித் துதிக்கத் தொடங்குகின்றேன்.

**(வி - ரை) தேன்நக்க** - மலர்கள் அலரும் பருவத்தில் தேன் சொரியும் அப்போது அவை நகுவன போன்றிருக்கும் என்பது உபசாரவழக்கு. "முருகுயிர்க்க நகைக்கும் பதத்தி னுடன்பறித்த, அலகின் மலர்கள்" (முருகர் புரா - 7) என்றதும், "ஈன்றுநக்கு நாண்மலரால்" (பழந்தக்கராகம் திருஞான-தேவா - கோளிலி - 3) என்றதும் பிறவும் காண்க.

**கோதை மாதர்** - மலர்மாலையணிந்த அம்மையார் - கலயனாரின் மனைவியார்.

**திருநெடுந்தாலி** - தாலியை நாணினின்றும் எடுத்துக் கொடுத்தனரேனும் அஃது இடையறாது நீளும் மங்கலத்துக்குக் காரணமாயிற் றென்பார் **தேனக்க கோதை** - என்றும் **திரு** - என்றும், **நெடு** - என்றும் கூறினார். **நெடுமை** - நாணினின்று பிரிந்த காலத்தும் பின்னரும் நீண்டு நிகழ்ந்த மங்கலத்துக்கும் அருட்செல்வம் பொருட் செல்வங்களாகிய பெருஞ் செல்வப் பேற்றுக்கும், உடல் பேணத்தந்ததுவே உயிரைப் பேணுதற்கு உதவிய சிறப்புக்கும் காரணமாயினமை குறித்தது. **மாறி** - பிரதியாகக் கொடுத்து. பண்ட **மாற்று** என்ற வழக்கும் காண்க.

**கூனல்தண் பிறையினார்-கூன்**-முதுகு வளைந்த நிலை உவவுவளவு. "கூனற் றிங்கட் குறுங்கண்ணி" (செவ்வழி நாகை - 1) என்ற ஆளுடைய பிள்ளையார் தேவாரங் காண்க. "வளர்வாய மதிமிளிரும் (காளுடு முள்ளுரா 1) என்ற மெய்கண்ட தேவாரமும் இக்கருத்துப் பற்றியது. **தண்மை** - நிலாவின்குணவியல்பு. **பிறையினார்** பிறைசூடிய சிவா-சிவ பெருமான்.

**உய்த்தல்** - செலுத்துதல் தாம் செய்துவந்த தூபத்திருப்பணியும் அடியார்பணியும் முட்டுப்படாது செலுத்திய எனக் உய்த்தலுக்குச் செயப்படுபொருள் வருவிக்க.

**பான்மை** - இங்கு அன்பின்தன்மை குறித்தது **திண்மை** மனஉறுதிப்பாடு. கேடுகளிலும் மனமமாறாது ஒருப்பட்ட உள்ளத்தின் வலிமை "ஆளுடையா ரடியவர் தம் **திண்மை** யொழுக்க நடை செலுத்தி" (496) என்றது பார்க்க.

**பணிந்து அவர் அருளினாலே** - பணிந்ததனால் பெற்ற அவரது திருவருளினால். மானக்கஞ்சாறர் வண்புகழ் வழுத்தப் புகுதற்கு அருட்டுணை வேண்டியிருத்தலின் கலயனாரது திண்ணிய அருள் அதற்குத் துணைசெய்யும் என்பதாம்.

**மானக்கஞ்சாறர்** - கஞ்சாறு என்ற தலத்தில் அவதரித்து வாழ்ந்த பெரியார் ஆதலினாலே இப்பெயர் பெற்றார். ஆனாயர் குடிமாறர் என்ற பெயர் காண்க. **மானம்** - பெருமை.

**மிக்கவண்புகழ் வண்மை** - கொடை - வள்ளன்மை. மிக்க கொடையினால் போந்த புகழ். இங்கு **வண்மை**-அடியார்கள் விரும்பியது கொடுத்தலின் மேனின்றது. இஃது இவர் சரித உள்ளுறையாம். இவ்வாறு குறிப்பினால் சரித உள்ளுறை கூறித் தொடங்கிக் காட்டும் ஆசிரியர் இயல்பு "ஒரு மகள் கூந்தல் தன்னை வதுவைநா ளொருவர்க் கீந்த, பெருந்தகையார்" (902) என்று இவ்வண்மையாவது இது என்று இப்புராண முடிவில் முடித்துக்காட்டிய திறமும் காண்க.

**புகழ் வழுத்தல் உற்றேன்** சரிதமுற்றும் சொல்லவல்லேனல்லேன், அவரது வள்ளன்மையால் போந்த திருத்தொண்டினைத் துதிக்கின்ற மட்டில் அமைவேன் என்றதாம். **புகழ்** - அதனையுடைய தொண்டிற்காயிற்று; ஆகுபெயர்.

இப்பாட்டு கவிக்கூற்று. "தாலி மாறிக் குங்குலியங்கொண்டு" "உய்த்த" என்றவாற்றால் இவரைக் கூறிவந்த இச்சரிதம் முழுதும் வடித்து முடித்துக்காட்டி, இனி வரும் சரிதத்துக்கு "வண்புகழ்" என்று தோற்றுவாய் செய்தனர். இது ஆசிரியர் மரபு. 35

---

**சரிதச் சுருக்கம்**.—காவிரிபாயும் **சோழவளநாட்டில் திருக்கடவூர்** என்றதொரு தலமுண்டு. அது இறைவன் வீரஞ்செய்த எட்டுத்தலங்களில் ஒன்றதலின் **கடவூர் வீரட்டானம்** என்று பெயர் பெறும். காலனை உதைத்த வீரம் இங்கு நிகழ்ந்ததாம். இத்தலத்தில் மறையவர்கள் சிறந்து வாழ்வார்கள். அவர்களுள் **கலயனார்** என்ற பெரியார் ஒருவர் இருந்தனர். அவர் சிவனடிபேணும் சிறந்த அன்புடையவர், நல்லொழுக்கத்திற் சிறந்தவர். அத்தலத்தே எழுந்தருளிய அமிர்தகடேசருக்கு விதிப்படி தூபம் இடும் திருப்பணியை நியதியாகச் செய்து வந்தார்.

அந்நாளில் திருவருளாலே அவருக்கு வறுமை வந்தது. அதன் பின்னரும் அத்திருப்பணியை வழுவாது செய்து வந்தனர். வறுமை மிகவே தமது நல்ல நிலமுழுமையையும் அடிமைகளையும் விற்றும் பணிசெய்தனர். வறுமை மேலும் முதிர்கியதனால் தாமும் மனைவி மக்களும் சுற்றமும் உணவுக்குச் சாதனமொன்றுமின்றி இரண்டு நாள் உணவின்றி வருந்தினார்கள். இது கண்ட மனைவியார் கலயனார் கையில் குற்றமற்ற தமது மங்கல நாணில் அணிந்த தாலியை எடுத்துக்கொடுத்து "இதற்கு நெற்கொள்ளும்" என்றனர். அதனைக் கொண்டு அவர் நெற்கொள்ளச் சென்றபோது எதிரில் ஒரு வணிகன் ஒப்பில்லாத குங்குலியப் பொதிகொண்டு வந்தான். அதனை அறிந்த கலயனார் "இறைவனுக்கேற்ற மணமுடைய குங்குலியம் இது ஆயின், இன்று நல்ல பேறு பெற்றேன்; பெரும் பேறாக இதனைப் பெற்றுவைத்தும் வேறு கொள்ளத்தக்கது என்ன உள்ளது?" என்று துணிந்து, பொன்பெற்றுக்கொண்டு அதனைத் தருமாறு வணிகனைக் கேட்கவே, அவனும் மகிழ்ந்து அவர் தந்த தாலியை ஏற்றுக்கொண்டு குங்குலியப் பொதியினைக் கொடுத்துச் சென்றான். கலயனார் சிந்தை மகிழ்வுடன் விரைந்து சென்று திருவீரட்டானத்திற் சேர்ந்து, இறைவரது பண்டாரத்தில் (சேமம்) அப்பொதியின் குங்குலியத்தை எல்லாம் சேர்த்துத் திருப்பணிசெய்து சிவசிந்தையுடன் அங்கே தங்கினார்.

இங்கு மனைவியாரும் மக்களும் பசியால் மிகவருந்தி அயர்ந்து தூங்கினர். அப்பொழுது இறைவருடைய திருவருளினாலே குபேரன் தனது செல்வத்தைப் பூமியில் பொழிந்து நிறைத்தலாக் கலயனாரது மனைமுழுதும் பொற்குவையும் நெற்குவையும் அரிசி முதலிய பிற எல்லா வளங்களுமாக ஆக்கிவைத்தனன். இதனை இறைவர் அம்மையாருக்குக் கனவில் உணர்த்த, அவர் உணர்ந்தெழுந்து செல்வங்களை நோக்கினர்; அவ்வளவில் இறைவரருள் என்று கண்டு தொழுதனர், தமது கணவனார்க்குத் திரு

வமுது சமைக்கலாயினர். அங்குத் திருக்கோயிலில் கலயனார்க்கு "[illegible] பசித்தனை! உனமனையிற்சென்று பாலின் அடிசில் உண்டு [illegible]" என்று இறைவர் கட்டளையிட்டருளினார். அத்திருவருள் மறாத்திருப்பக்தர் [illegible] வந்தனர். செல்வமெல்லாம் கண்டனர், திருமனையாரை நோக்கி "இவையெல்லாம் என்ன சொல்?" என்று கேட்க அவர் "திருநீலகண்டராகிய எம்பிரானருள்" என்றார். கலயனார் கைகூப்பி வணங்கி "என்னையும் ஆட்கொண்ட எம்பெருமான் திருவருள் இருந்தபடி இதுவோ?" என்று [illegible] மனைவியார் படைத்த திருவமுதினை கலயனார் சிவனடியார்களோடு திருத்தி [illegible] பூசித்து இன்னமுதூட்டினார். அது நுகர்ந்து கலயனார் இன்பமார்ந்தார். இவ்வாறு இறைவரருளால் உலகில் நிறைந்த செல்வமுடையராகி அடியவர்களுக்கெல்லாம் நல்ல துணிப அமுதூட்டியும் உதவியும் வாழ்ந்திருந்தனர்.

இந்நாளில் திருப்பனந்தாளில் இறைவர் திருமேனி, தாடகை என்னும் அசுர மாதுக்கு அருளும் பொருட்டுச் சாய்ந்து அவ்வாறே இருக்கத் அதனை நோக்கிறக் கண்டு கும்பிடவேண்டுமென்று ஆசை கொண்ட [illegible] மன்னன் பானைகளோடும் சேனைகளையும் பூட்டித் திருமேனியினை நிமிர்த்த முயன்றான். இறைவர் நேர்நிற்க வில்லை. யானை சேனைகள் இளைத்து வீழ்ந்தன. அரசன் புண்பட்டு கவன்றிருந்தனன். இதனைக் கேட்டனர் கலயனார் [illegible] அரசனை விரும்பித் திருக்கடவூரினின்றும் போந்து திருப்பனந்தாள் சேர்ந்தனர். யானை சேனைகள் இளைத்து வீழ்ந்து எழமாட்டாதவகையைக் கண்டு வருந்தினார். "இவ்விளைப்பினை நானும் கூறுகொண்டு அவ்வளவிற்கு இவ்வருத்தத்தைத் துய்க்க முயல்வேன்" என்று துணிந்தார். இறைவரது திருமேனிப் பூங்கச்சிற் கட்டிய பெரிய வலிய கயிற்றினைத் தமகழுத்திற்பூட்டி இழுத்து வருந்தலுற்றார். இவர் இவ்வாறு செய்தலினைக் கண்ட பின் இறைவர் நிற்கவொண்ணுமோ? இவர்தமது அன்பின் ஒருமைப்பாட்டினைக் கண்டபோதே அண்ணலார் நேர்நின்றார். தேவர்கள் விண்ணில் ஆர்த்துப் பூமாரி பெய்தனர். வாடிய சோலை மேகம் பொழிந்து களிப்பதுபோல யானைசேனைகள் களித்தன. சோழமன்னன் கலயனாரது பாதங்களில் வீழ்ந்து வணங்கி, மேருவை வில்லாக வளைத்துப் புரமெரித்த கடவுளை நேர்நிற்கச் செய்தீர்! திருமாலும் காணாத மலரடியிணைகளை அன்புடையடியார் [illegible] அல்லாது யாவர்?" என்று துதித்தான் பின்னர் அரசன் இறைவர்க்குப் [illegible] பணிகள் பலவுஞ்செய்து தனது நகரத்துக்குச் சென்றான். அரசன் போயின பின்னரும் கலயனார் சிலகாலம் இறைவனைப் பிரியலாற்றாது அங்குத் தங்கி வழிபட்டுப் பின் திருக்கடவூர் சேர்ந்தனர்.

சிலநாள்களின் பின்னர் ஆளுடையபிள்ளையாரும் ஆளுடையஅரசுகளும் கூடித் திருக்கடவூருக்கு எழுந்தருளினார்கள். [illegible] கலயனார் அவர்களை எதிர்கொண்டு அழைத்துத் தமது திருமனையில் [illegible] இன்னமுது அளித்து வழிபட்டு அவர்கள் திருவருளைப் [illegible] அருள் பெற்றார்.

இவ்வாறு கலயனார் அரனுக்கும் அடியவர்க்கும் [illegible] பணிகள் பலவும் செய்து வாழ்ந்திருந்து சிவபெருமானது திருவடி நீழலிற் சேர்ந்தனர்.

---

**தலவிசேடம்.**—(1) திருக்கடவூர்—இது சோழநாட்டுத் [illegible] பெற்றன வாகிக் காவிரிக்குத் தென்கரையிலுள்ள [illegible] 47வது திருத்தலம். சிவபெருமான் வீரங்கள்செய்த "அட்ட வீரட்டம்" என்னும் எட்டுத்தலங்களுள் மார்க்கண்டேயருக்காகக் காலனை உதைத்தருட்டிய காலசங்கார வீரம் நிகழ்ந்த தலம். இச்சரிதத்தைப் பலபடத் துதித்துக் "கூற்றம் பதைப்ப உதைத்துங்கனே, புருட்டிய சேவடி யான்கட வூருறை யுத்தமனே", "காலனைக் காய்ந்த பிரான்" "காலனை அன்றுதைத்து" என்பன முதலிய அப்பர் சுவாமிகளது இத்தலத் திருவிருத்தங்களிலும், [illegible]

திருமுறைகளிலும் வரும் எண்ணிறந்த திருவாக்குக்களும் காண்க. பதுமகற்பத்தில் பிரமதேவர் சிவஞானம் பெறத் தவஞ்செய்து சிவபெருமானருளிய சிவஞான விதையிட்டு உண்டாகிய வில்வமரத்தை யுண்டுபட்ட காரணத்தால் இது **வில்வாரண்ய** மெனப்படும். இந்த மூர்த்தி 'ஆதிவில்வாரணேசுவரர்' என்ற நாமத்துடன் கர்ப்பக்கிருகத்தின் வட சுற்றில் வடதிருமாளிகைப்பத்தியின் கீழ்க்கோடியில் குகைக்கு வடகீழ்ப்பாகத்தில் அமர்ந்திருக்கின்றார். இரதந்தர கற்பத்தில் தூய்மையுடைய இடமாகிய இத்தலத்தில் வைத்து உண்ணும் பொருட்டு விட்டுணுமுதலிய தேவர்கள் அமிர்தத்தைக் குடத்திலிட்டு இங்குக் கொண்டுவந்து வைத்தனர். அதுவே **அமிர்தலிங்கமாக** உருப்பட்டு ஊன்றிக் கொண்டது. ஆதலின் இத்தலம் **கடவூர் கடபுரி** எனப்படும், சுவாமி **அமிர்தகடேசுவரர்** என வழங்கப் பெறுவர்.

அகஸ்தியர் பூசித்த **பாப விமோசனலிங்கம்** திருவாலயத்தினுள் காலசங்கார மூர்த்தி எழுந்தருளியுள்ள மண்டபத்திலும், புலஸ்தியர் பூசித்த **புண்ணியவர்த்தன லிங்கம்** திருமூலத்தானத்தினை அடுத்த சுற்றில் வடக்கில் தனியாலயத்திலும் தோற்றமாக உள்ளன. காலனை உதைத்த திருக்கோலமாக வெளிப்பட்ட சிறப்புடன் **கால சங்காரமூர்த்தி** ஆலயத்தினுட்புறம் தனி மண்டபத்தில் தெற்குநோக்கி எழுந்தருளியுள்ளார்.

"பத்தியாய் நினைவோ ரருள்வாய் மடுத்துப் பருகுதோ றமுதமொத் தவர்க்கே
தித்தியா விருக்குந் தேவர்கா ளிவர்தந் திருவுரு விருந்தவா பாரீர்!"

என்று பூந்துருத்தி நம்பிகாடநம்பிகள் திருவிசைப்பாவிற் கூறியபடி இவரது அருமைத் திருக்கோலம் கண்டு தரிசிக்கத் தக்கதாம். சிறிதே உயர்ந்து தூக்கிய இனித்தமுடைய இடது பொற்பாதமும், நீவிர் அடையத்தக்கது இதுவே என அத்திருவடியை இடது திருக்கரத்தாற் சுட்டிக் காட்டிய திருவிரலும், கொவ்வைச் செவ்வாயிற் பொலியும் குமிண் சிரிப்பின் அருளும், கீழ்நோக்கியூன்றிய திரிசூலப்படையும், திருவடியின்கீழ் உதையுண்டு வீழ்ந்து குண்டோதரனால் காலைக் கயிற்றாற்கட்டி யீர்க்கப்பட்டுக் கிடக்கும் காலனும், அவனது பாசத்தினின்றுய்யக் காக்கப்பட்டுத் துதித்து நிற்கும் மார்க்கண்டேயரும், இடது பக்கத்தில் இத்திருவுருட் கூத்தை உயிர்களின்பொருட்டுச் சாட்சியாகக் கண்டு காட்சி கொடுத்து நின்றருளும் **பாலாம்பிகையம்மையாரும்**, இனிமை பொருந்தக் கண்டுய்யத்தக்க திருவுருவங்களாம். இவர் சந்நிதியின் நேரெதிரே அறுபத்துமூவர் மண்டபத்தில், திருவருளால் மீள உயிர்பெற்றுச் சிவனடியாரிடத்துப் புடையிலும் போகாத ஆணையும் வரமும் பெற்ற தனது எருமையூர்தியுடன் துதித்து நிற்கின்ற காலனையும் காணலாம். இத்தலத்தில் அவதரித்து வாழ்ந்து சிவபத்தி அடியார் பத்திகளிற் சிறந்து முத்தியடைந்த **குங்குலியக் கலயநாயனார்** சரிதம் மேலே அவர் புராணத்துட் பார்க்கக் காண்க. இவரது திருமனை இருந்த இடம் ஆலயத்தின் வடக்கு மடவளாகம், (அஃதாவது வடக்கு உள்வீதி) கீழ்க்கோடியில் உள்ளதென்று வழங்குகின்றனர். **காரி நாயனாரும்** இத்தலத்தில் அவதரித்துச் சொல்விளங்கப் பொருள் மறைத்துக் கவிபாடி அரசர்களிடம் பெற்ற பொருள்கொண்டு பலதிருப்பணிகள் செய்து முத்தியடைந்தனர். எழு கன்னியர் வாசுகி - நாககை முதலியோர் இங்கு வழிபட்டுப் பேறுபெற்றனர். மார்க்கண்டேயர் பூசைக்காகக் காசியிலிருந்து இங்கு கங்கை வரவழைத்தனரும், அதுவே இத்தலத்தினின்றும் ஒரு நாழிகையளவில் உள்ள திருக்கடவூர் மயான ஆலயத்தின் தென்பாகத்தில் மணசாலையில் இப்போது கிணறாக உள்ளதென்று அறியப்படுகிறது. இத்தீர்த்தமே அமிர்த கடேசருக்கு நித்தியப்படி திருமஞ்சனமாம். இத்தீர்த்தம் தினந்தோறும் சகடத்திற் கொணர்ந்து சுவாமி அம்பாளுக்கு அபிஷேகமாகி வருகிறது. இதர தீர்த்தங்கள் - காசி கங்கையுட்பட - இங்கு அபிடேகம் செய்யப்படுவதில்லை.

பங்குனி மாதத்து அசுவினி நாளில் அமிர்தகடேசர் ஆலய தீர்த்தங் கொடுப்பது பெருஞ்சிறப்பாம். அந்நாளில் மட்டும் அன்பர்கள் யாவரும் இங்கு முழுகலாம். அத்திருநாளில் இன்றும் எடுத்துவைக்கச் [illegible] குடம் திருத்தலத்தில் இன்றும் வெளிப்படை. மார்க்கண்டேயர் தவஞ் செய்து கங்கை கொணர்ந்து பூசித்த பிலத்துவார வழி இன்றும் காணத்தக்கதாய்த் திருமூலத்தானத்தை யடுத்த வடக்குச் சுற்றில் பிட்சாடனமூர்த்தி வைக்கப்பட்டிருக்கும் அறையில் ஆதி வில்வாரணியேசுவரர் ஆலயத்துள் தென்பாலுள்ளது. அவர் தம்முடன் பூசைக்காகக் கொணர்ந்த பிஞ்சி எனும் சாதிக்கொடி வழிவழியாய்த் தழைத்து ஓங்கித் திருமூலத்தானத்துத் தென்சுற்றில் நின்று புஷ்பித்துவருவது இன்றும் காணத்தக்கதாம். இம்மலர் சுவாமி அம்மையார் உபயோகத்திற்கு மட்டுமே உரியது. இக்காரணத்தால் இத்தலம் பிஞ்சிலாரணியம் எனவும் வழங்கப்பெறும். இத்தல அம்பிகையாகிய **அபிராமி அம்மையார்** - அமிர்தகடேசுவரர் ஆலயத்திற்கு அடுத்த வெளிச்சுற்றில் தென்மேற்கில் கிழக்குநோக்கிய தனியாலயத்துள் விசேட வெளிப்பாடாகிய அருட் பெருஞ் சிறப்புடன் எழுந்தருளியுள்ளார். இத்தலத்தே அவதரித்து அம்மையாரிடம் பேரன்பு பூண்டு வழிபட்ட அபிராமிப்பட்டரின் பொருட்டு அமாவாசையன்று பூரண சந்திரனைத் தோற்றுவித்த அம்மையாரது பேரருட்சரிதம் பெருஞ் சிறப்பாக அறியப் படுகின்றது. அம்மையாரை அக்கனம் பொருட்டுத் துதித்து "உதிக்கின்ற செங்கதிர்" என்று தொடங்கிப் பாடிய அபிராமியந்தாதியை இன்றும் பல அன்பர்கள் படித்துப் பயன் பெறுகின்றனர். இவர் சந்ததி பாரதிவம்சமென இன்று முள்ளது.

**அமிர்த புஷ்கரணித் தீர்த்தம்** - கிழக்குக் கோபுரத்தின் மேற்கிலும் - அமிர்த கடேசர் கோயிலின் கிழக்கிலும் **காலதீர்த்தம்** - ஆலயத்திற்கு மேற்கில் 50 கஜ அளவு தூரத்திலும் உள்ளன. இது ஆனைக்குளம் என்றும் வழங்குகிறது. இத்தீர்த்தக்கரையில் **எதிர்காலேஸ்வரர்** அமர்ந்திருக்கும் ஒரு ஆலயம் இருக்கிறது. தேவர்கள் கொணர்ந்த அமிர்தகுடத்தை எடுத்து மறைத்துப் பின்னர் அவர்கள் வேண்டத் தந்தமையால் **கள்ளவாரணப் பிள்ளையார்** என இத்தலவிநாயகர் அழைக்கப் பெறுவர். இத்தலம் மேற்கு நோக்கிய சந்நிதி. காலசங்கார உற்சவம் சித்திரைமாதப் பூரணை தீர்த்தத்துடன் முடிவதான இரதோற்சவத்தில் 6ம் திருநாளில் கொண்டாடப்பெறும். இத்திருத்தலத்தில் பிரதிவருட கார்த்திகை சோமவாரங்களில் மாலைக்காலங்களில் 1008 சங்காபிடேகம் வலம்புரி சங்குகளுடன் ஆகம முறைப்படி நடந்து வருவது அன்பர்கள் தரிசனம் செய்ய வேண்டியதாகும். மிருத்யுஞ்சய ஓமம் - ஜபம் - சாந்தி முதலியன செய்ய வேண்டிய உத்தம க்ஷேத்திரம் இதுவே. பக்தர்கள் செய்து சித்திபெற்று வருகின்றனர்*.

சைவசித்தாந்த சாத்திரங்கள் பதினான்கில் முதலாக வைத்தெண்ணப்பட்ட திருவுந்தியாருளிய திருவியலூர் உய்யவந்ததேவநாயனாரது [illegible] ஆளுடைய தேவநாயனாரின் மாணவராயும், அவரது ஆசிரியன் பெயரையே தமக்குத் தீட்சாநாமமாகச் சூட்டப்பெற்றவராயும், அத்திருவுந்தியாரின் கருத்துக்களை அதன்வழி விளக்குவதாய சைவசித்தாந்த சாத்திரங்களுள் இரண்டாவதாக வைத்தெண்ணப்படும் **திருக்களிற்றுப்படியாரை** யருளியவராயும் உள்ள (திருக்கடவூர்) **உய்யவந்ததேவ நாயனார்** இத்தலத்திலே அவதரித்தவராவர்.

இதற்கு மூவர் முதலிகளும் அருளிய தேவாரங்களுண்டு. பதிகங்கள் ஐந்து. அன்பரொருவரியற்றிய உலா ஒன்றும் உண்டு. தென்னிந்திய இருப்புப்பாதையில் மாயவரம்

---

*இத்தல விசேடக் குறிப்புக்கள் பலவும் தந்துதவியவர்கள் திருத்தருமபுர வாதீனம் திருக்கடவூர்க் கட்டளை ஸ்ரீமத் இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகளவர்.

காககமபாடி கிளையில் திருக்கடையூர் என்ற நிலையத்தினின்று ½ நாழிகையளவில் இது அடையத்தக்கது. இத்திருத்தலம் **தருமபுர ஆதீனத்திற்குச்** சொந்தமாய் அவ்வாதீனக் கர்த்தர்களின் மேற்பார்வையில் நன்கு பரிபாலிக்கப்பட்டு வருகின்றது. அவ்வாதீனத்தைச் சேர்ந்த கட்டளை மடமும் தெற்கு மாடவீதியில் அமைந்துள்ளது. இத்தலத்தில் அமிர்தநாராயணப் பெருமாள் அமர்ந்திருக்கும் ஒரு வைணவ ஆலயமும் சிவாலயத்தின் தெற்கு வீதிக்குத் தென்பாகத்தில் இருக்கிறது.

2. **திருப்பனந்தாள்.**—இது சோழவளநாட்டில் காவிரிக்கு வடகரையில் தேவாரப் பாடல் பெற்ற தலங்களுள் 39 வது திருத்தலம். இங்குப் பனை தலவிருக்கமாதலாலும் பனையின் அடியில் (தாளில்) இறைவன் எழுந்தருளியிருத்தலாலும் **பனந்தாள்** எனப் பெயர் பெற்றது. இந்த ஆண்பனைமரங்களிரண்டும் திருக்கோயில் திருமாளிகை இரண்டாவது சுற்றுக்குள் அம்மையார் ஆலயத்துக்கு எதிரில் இருக்கின்றன. இவற்றின் பக்கத்தில் இறைவன் தாடகைக்குத் தலைசாய்ந்து அருளளித்த உருவமுள்ளது. **தாடகேச்சுரம்** என்பது திருக்கோயிலின் பெயர். **தாடகை** என்ற பெண் பூசித்துப் பேறு பெற்ற காரணத்தால் இது இப்பெயரால் வழங்கப்படும். "பனந்தாட் டாடகையீச்சுரமே" என்று முடியும் அமைத்து ஆளுடைய பிள்ளையார் திருப்பதிகம் அருளினார்.

**தாடகை பூசித்த வரலாறு**—தாடகை என்ற அசுர மாது புத்திரப்பேற்றை வேண்டிப் பிரமதேவர் ஆணைப்படி இத்தலத்து வந்து வழிபட்டு வருங்கால், ஒருநாள் மாலைசாத்தும்போது ஆடை நெகிழ்ந்துவிட, அதனை இரண்டு முழங்கைகளினாலும் இடுக்கிக்கொண்டு, மாலை சாத்த இயலாது வருந்திய அவளுக்கிரங்கிச் சுவாமி திருமுடி சாய்த்து மாலையை ஏற்றருளினார் என்பது தலபுராணம் தாடகைச் சருக்கத்தில் கண்டது. இத்தாடகை இத்தலத்தில் வாழ்ந்த சிவப்பிராமணப் பெண் என்றும் அவள் பொருட்டு மேற்கண்டவாறு சுவாமி சாய்ந்தருளினார் என்றும் வரலாறு கூறுவர் மகாலிங்கையர். இது பற்றி 853ல் உரைத்தவையும் பார்க்க.

தாடகையம்மையாருக்காகச் சாய்ந்த திருமேனி, யாவர்க்கும் அவ்வருள் புலப்படுமாறு பின்னரும் சாய்ந்தேயிருந்ததும், பின்னர், இறைவனை நேர்கண்டு கும்பிட எண்ணிப் பல சேனைகளுடன் வருந்திய சோழமன்னன் பொருட்டு வந்த குங்குலியக் கலயனாரது அன்புக்காக நிமிர்ந்தருளியதும் இப்புராணத்துட் பேசப்பட்டன.

பிரமாவினாலும், ஐராவதயானையாலும், யட்சகன்னிகையான தாடகையாலும், சூரியனாலும், சந்திரனாலும், வாசுகியின் பெண்ணாகிய நாககன்னிகையாலும், சங்கு என்ற பெயருள்ள வேடஅரசனாலும், யஞ்ஞகுப்தன் என்ற வியாபாரியாலும், **வீரசோழ** மகாராசாவினாலும், **குங்குலியக்கலய நாயனாராலும்** பூசிக்கப்பட்டது என்பது வடமொழிச்சுவடி. இத்தலத்தில் உமாதேவியார் ஐந்து கிளையுடைய பனைமரத்தடியில் விளங்கிய இறைவனைப் பூசித்து ஞானோபதேசம் பெற்றனர். பிரமதேவர், ஐராவதம், இந்திரன், தாடகை, அகத்தியர், விட்டுணு, சூரியன், சந்திரன், ஆதிசேடன், நாககன்னிகை முதலியோர் பூசித்து வரம்பெற்றனர். நாருகன்னன், தருமசேனன், சங்குகன்னன், காகம், எஞ்ஞகுப்தன் முதலியோர் இதிற் பேறுபெற்றனர். **பொய்கை**—[illegible] பிரமதீர்த்தம் முதலியபல தீர்த்தங்கள் பூசித்து வழிபட்டார் பெயரால் விளங்குகின்றன. இவற்றுள் பிரமதீர்த்தமும், அம்மையார் ஆலயத்தின் முன்புள்ள காசிதீர்த்தமும், மண்ணியாறும் சிறப்பாயுள்ளன. ஒவ்வொராண்டும் பங்குனி மாதத்தில் மூன்று நாளவரை சூரியபூசை தவறாது நிகழும். திருச்செந்திலில் முருகப் பெருமான் திருவருளால் ஊமை நீங்கிக் கலைஞானம் நிறைந்து விளங்கிய ஸ்ரீமத் குமரகுருபர சுவாமிகள் (1642) திருக்கயிலாய பரம்பரைத் திருத்தருமபுரம் ஆதீனம் நான்காவது பட்டம் குருமூர்த்தமா யெழுந்தருளிய

*ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணி தேசிக ஞானசம்பந்த குருமூர்த்திகளின் ஆணையின்படி காசி யாத்திரை செய்து காசியில் நவாபினால் தமக்குக் கிடைத்த பெரும்பொருள் கொண்டு இப்போது குமாரசுவாமி மடம் (கேதாரகட்டம்) என்று விளங்கும் திருமடத்தைத் தாபித்தனர். ஸ்ரீமத் ஆதி குமரகுருபர சுவாமிகளின் வழிவழி 6 பட்டம்வரை காசியில் உள்ள மடம் ஒன்றே யிருந்தது. 6வது பட்டத்தில் வந்த ஸ்ரீமத் தில்லைநாயகத் தம்பிரான் சுவாமிகள் இத்தலத்திற்கு வந்து இங்குப் பெருமை பெற்று விளங்கும் "காசிமடத்"தைத் தாபித்து அதற்குத் தாம் தேடிய பெரும் பொருளால் நிலங்களும் தேடினர். (இவர்காலம் 1720 - 1756 என்ப) இவரோடு மூன் ஆறுபட்டம். இத் திருமடத்தின் மரபின் இவர் பின் பட்டத்து வந்த அதிபர்களும் இவ்வாறே தாம்தாம் பெரும் பொருளீட்டினர் இவ்வாறு இரண்டானும் இத்திருமடமும் காசியில் உள்ள பெருமடமும் சிறப்புற்று விளங்குகின்றன. இதன் வழிவழிவரும் அதிபர்கள் "காசிவாசி" என்ற பட்டத்துடன் விளங்குவர். இந்நாள் இதன் அதிபராக விளங்கும் ஸ்ரீமத் காசிவாசி சுவாமிநாதத் தம்பிரான் சுவாமிகள் அந்தப்பரம்பரையின் வந்த பல அரிய தமிழ் நூல்களையும், தொல்காப்பியம் முதலிய பழந்தமிழ் நூல்களையும் அச்சிட்டும், சென்னைச் சர்வகலாசாலைத் தமிழ் வித்துவான் தேர்தலில் முதற்றரம் முதற்றரமாகத் தேர்ச்சி பெற்றோர்க்கு ஆண்டுதோறும் ஆயிரம் வெண்பொற் காசுப் பெரும் பரிசு அளித்தும் தமிழ்பரப்பி ஊக்கம் தந்து உதவிவரும் அரிய முயற்சிகள் தமிழுலகம் போற்றிக் காணத்தக்கன. இத்தலபுராணம் தமிழ்ச் செய்யுளால் இயற்றியவர் செஞ்சடைவேதிய தேசிகர். இது அச்சில் வரவில்லை. இத்தலபுராணத்துக் குங்குலியக் கலயநாயனார் சரிதம் சிற்சில மாறுபாடுகளுடன் பேசப்படுகின்றது. இப் புராணம் வடமொழியில் பிரமபுராணம் 69வது அத்தியாயத்தில் ஸநத்சனத் குமார சம்வாதத்தில் 350 சுலோகங்களிற் கூறப்பட்டுள்ளது. தமிழ்மொழி பெயர்ப்பில் புராண வரலாறு முதல் குங்குலியக்கலயர் சருக்கம்வரை 19 சருக்கங்களில் 889 செய்யுட்களில் அமைந்துள்ளது.

இத்தலத்துச் சுவாமிபெயர் - செஞ்சடை வேதியர் - சடையப்பர். இப்பெயர் திருஞானசம்பந்தர் இத்தலத்தேவாரத்தில் முதற்றிருப்பாட்டிற் போற்றப்படுதல் காணக. அம்மையார் - பெரிய நாயகியார். தல விநாயகர்-ஆண்ட விநாயகர். தலவிருக்கம் - பனை. தீர்த்தம் - பொய்கை என்னும், பிரமதீர்த்தம், மண்ணியாறு முதலியன. பொய்கை திருப்பதிகம் 10-வது பாட்டிற்போற்றப்பட்டது. இது கோயிலுக்குக் கீழ் பாகத்திலுள்ளது. மேற்கு நோக்கிய சந்நிதி. பதிகம் 1. இதனை, ஆடுதுறை நிலயத்தி லிருந்து வடக்கில் கற்சாலை வழியாய் 6 நாழிகையளவில் அடையலாம். வண்டி வசதிகள் உண்டு.

---

**கற்பனை:—**(1) சிவசந்நிதியில் உண்மையன்புடன் விருப்பமுற்று நறுமணமுடைய குங்குலியத்தூபம் கமழவித்தல் சிவபுண்ணியமாம்.

2. அத்திருப்பணிக்கு இறைவர் மகிழ்ந்து கருணையினாற் கூடியபோல் இனிய திருவருள் புரிவர்.

---

* உக்அ-ம் பக்கத்தில் இப்பெயர் ஸ்ரீ ஞானப்பிரகாச தேசிகர் என்றிருப்பதனை இவ்வாறு திருத்திக்கொள்க.

இதன் வரலாறுகள் சென்னை உயர்தர நீதிமன்றம் 10 Madras 375 என்ற அறிக்கையிற் கண்டபடி குறிக்கப்பட்டன. விரிவு ஆண்டுக் கண்டுகொள்க. இவ் விவரங்களும் தலவிசேடக் குறிப்புக்குரிய தலபுராணக் குறிப்புகளும் இத்திருமடத்தின் அதிபர் ஸ்ரீமத் காசிவாசி சுவாமிநாதத் தம்பிரான் சுவாமிகள் அன்புடன் அளித்துதவினார்கள்.

3 தமது திருவடிகளை மெய்யன்போடு ஒருப்பட்ட சிந்தையுடன் பற்றுவார்க்குச் சிவபெருமான் காலபயத்தினை நீக்கியருளுவார்

4 சிவபெருமான் திருவடிகளில் உருகிய அன்பு கூர்ந்து மேன்மேல் எழுகின்ற வேட்கையுடன் சிவத்திருப்பணிகள் செய்தல் வேண்டும்.

5. சிவத்திருப்பணிகள் செய்துவரும் காலத்தில் வறுமை முதலிய இடையூறுகள் தோன்று மேன்மேல் வந்தடர்வனவாயினும் அவற்றைப் பொருட்படுத்தாமலும், அவற்றால் வருந்தாமலும் தமது பணியிற் சலியாது செய்துவருதல் அன்புடையார் திறம் அத்திறத்தினுள் நின்று, அந்த அன்பினை உகந்து நிகரில்லாத பேரின்பத்தனைத் அருளுவார் சிவபெருமான்.

6 தாமும் மனைவியாரும் மக்களும் இரண்டு நாள் பசியோடு கிடக்க நேர்ந்தபோதும் அப்பசி தீர்ப்பதற்கு நெல்வாங்கக் கொண்டுபோயின தாலியினைக் கொடுத்து, எதிர்ப்பட்ட குங்குலியப் பொதியினை இறைவரது தூபப்பணிக்கு வாங்கிய கலயனாரது செய்தி அன்புடையார்க்குத் திருத்தொண்டின் உறைப்பினை எடுத்துக்காட்டும் சிறந்த இலக்கியமாம் இதனை முன்வைத்துக் கொண்டு சிவனடித் தொண்டில் மக்கள் அன்புடன் முயல்வார்களாயிற் பெரும்பயன் பெறுவர்

7 சிவபெருமான் திருப்பணிகளின் நற்பயன் இம்மை யின்பங்களையும் தருவன இவ்வுண்மைக்கு இந்நாயனாரது சரிதமே ஏற்றசான்றாகும். "இம்மையே தருஞ் சோறுங் கூறையும் ஏத்த லாமிடர் கெடலுமாம், அம்மை யேசிவ லோக மாள்வதற் கியாது மையுற வில்லையே" என்ற ஆளுடையநம்பிகள் (திருப்புகலூர்) தேவாரமுங் காண்க அள வற்ற அடியார்களுக்கு உளமகிழ அமுதூட்டிய நலத்தினால் இளையான்குடிமாறர் அளவற்ற நிதிபெற்றுக் குபேரன் போல வாழ்ந்திருந்தனர் "அரிய நீர்மையி லருந்தவம் புரிந்தர னடியார்க்,குரிய வர்ச்சனை புலப்பில செய்தவந் நலத்தால்" சிவநேசர் பூம்பாவையம்மை யாரைப் பெற்றனர் (திருஞான புரா 1040) சிவபெருமானைப் பூசித்து மகாவிட்டுணு வும் கண்ணனும் மகப்பேறு பெற்றனர் இவை போல்வன பலவும் இங்கு நினைவு கூர்க. தம் கொள்கைப்படி மோட்சம் என்ற நிர்வாணபதம் வேண்டினால் தமது புத்த விகாரங்களுக்கு (கோயில்) போகிப் பௌத்தர்கள் இலங்கையில் (ஈழம்), செல்வம் உடற் சுகம் மக்கள் முதலிய இம்மைச் சுகங்களை வேண்டியபோது அங்குள்ள சிவன் கோயில் விநாயகர்கோயில், கதிரேசன் கோயில்களிற் சென்று அருச்சனை முதலானவைசெய்து வழி படுகின்றார்கள் நம் சைவர்கள் இம்மை வரங்கள் வேண்டி அன்னியமதக் கோயில்களில் சென்று வரங்கிடக்கக் காண்கின்றோம் இஃதென்ன கொடுமை! 'வேண்டுவார் வேண்டு வதே யீவான்'' ஆகிய நமது சிவபெருமான் எல்லாம் வல்லவராய் எல்லாந் தரவல்லவராம் என்ற நம்பிக்கை யில்லாதவர்களைச் சைவர் என்று சொல்லுவதெப்படி ?

8 கணவர் - மக்கள் - சுற்றத்தார் முதலிய குடும்பத்தார்களைப் பசி யில்லாது பார்த்துச் சோறிட்டுக் காத்தல் மனைக்கிழத்தியாகிய மனைவியின் கடன் இதுவே இல் வாழ்க்கையின் உண்மையியல் தாம் என்றும் நீக்கலாகாது அணியும் மங்கலநூற் றாலி கொடுத்தும் அதுகொண்டு நெல் பெற்றும் இக்கடமையைச் செய்ய ஒருப்பட்ட கலய னாருடைய மனைவியாரது அரிய செயலும் பெருமையும் பெண்ணுலகம் இலக்கியமாகக் கொண்டு போற்றத்தக்கன

9 நெல் கொண்டுவாருக என்று செலுத்திய கற்புடையம்மையாருக்கு நிறைந்த செல் வங்கொடுத்ததும், அதனைக் கணவர் அறியு முன்பு அவருக்கு அறிவித்ததும், அவர் முன்னம் கலயனாரை அறியவைத்ததும் கற்புடைமைக்குக் கடவுள் வைத்த கருணையின் பரிசுகளாம்

10 சிவனருளாற் பெற்ற செல்வமுதலிய பொருள்களை அவனருளாகவே கண்டு வணங்கி ஏற்றல் முறை ஆளுடையபிள்ளையார் தமக்குச் சிவபெருமான் அளித்த

முதற்சிவிகையை வலம் வந்து வணங்கிப் பின்னர் அதில் வீற்றிருந்ததும், பூம்பாவையாரைக் கண்ணுதல் கருணை வெள்ளமாகக் கண்டதும் நினைவு கூர்க.

11. சிவபெருமான் தம்பாற் செய்யும் அருட்டிறங்களைக் கண்டபோதும் "தகுதியில்லாத சிறியேனாகிய என்னையும் பொருளாக எண்ணி இறைவர் இத்தகைய பேரருள் புரிந்தனர்" என்று நினைந்து மனமுருகுதல் அன்பின் றிறம்.

12. சிவனடியார்களைப் பூசித்து அவர்களுக்கேற்றபடி இனிய அமுதூட்டும் மாகேசுரபூசை செய்து வழிபடுதல் சிறந்த சிவதருமம். அவ்வடியார்களது மகிழ்ச்சிக்குள்ளே சிவபெருமான் அமர்ந்து நின்று, பூசையும் அமுதும் உவந்து ஏற்றுக்கொண்டு, தானும் மகிழ்ந்து அருள் புரிவார்.

13. அன்பாளிகளாகி வழிபடுவார்கள் எவ்வாறாயினும் அவர்களது எளிமையும் சிறுமையும் பாராது அவர்களுக்கெளியனாகத் திருமுடி சாய்த்துக் கொடுத்தும் அவர்கள் வழிபாட்டை ஏற்றருளுவர் சிவபெருமான்.

14. ஒரு அடியார் பொருட்டுச் சாய்த்த அருட்கோல அடையாளங்களை ஏனை உயிர்கள் அறிந்துய்யுமாறு பின்னருங் காட்டிநிற்பது சிவனருட் பெருமையாம். திருநீலகண்டம் முதலியவை காண்க.

15. சிவன் றிருமேனியிற் றங்கிய அருளடையாளங்களை அவ்வாறே வைத்து வழிபடுதல் வேண்டும். அவற்றை மாற்றி நோக்கக் கூடிய ஆசைகொள்ளுதலும் அன்பு வகையேயாயினும், மேற்கொள்ளற்பாலதன்று. ஆயினும் அன்புபற்றி யெழுந்த அவ்வாசையினையும் உரிய வகையால் நிறைவாக்கி யருளுதலும் சிவபெருமானது கருணையியல்பு.

16. தேவர்க்குமரிய இறைவரது திருமேனியை நேர்காணப், பண்புடையடியார்களல்லாது வேறெவரும் வல்லரல்லர்.

17. ஆசாரியர்களைப் பூசித்து ஏற்குமாறு வழிபட்டு இன்னமுதூட்டுதல் சிவதருமம்.

18. அவ்வாறு செய்யும் வழிபாட்டினால் அவர்களது அருளேயன்றிச் சிவபெருமான் றிருவருளும் உண்டாகும்.

19. குரு, இலிங்கம், சங்கமம் என்ற மூன்றும் வழிபாடு செய்தற்குரிய இடங்களாம். இம்மூன்றிலும் நின்று அவ்வழிபாட்டினை ஏற்றுச் சிவபெருமான் அருள்புரிவர்.

20. அடிமை வழக்கு முன்னுளிலிருந்தது, இந்நாளில்லை என்பர். உலக முழுதும் பலவாற்றானும் அடிமைப்பட்டே வாழ்கின்றது.* மக்கள் யாவரும் உலகுக்கு அடிமையாய் ஒழிகின்றார்கள், அதைவிட்டு இறைவனுக்கு மீளா அடிமையாய்க் கண்டு ஒழுகினால் பிறவித்துன்பத்தினின்று நீங்குவர்.



* "பொன்னுக் கொருசார், புடவைக் கொருசார், போற்று பசிக்கொருசார், - புதிய நறுஞ்சுவை யடிசில் பெறும்படி போதர வொருசார், மனனுக் கொருசார், மனைவிக் கொருசார், மனைக்கென் றொருசார் - வாழ்வின் பின்னுடன் கொருசா ரென்றே வாணாள் வீணாய், என்னைப் பலவு மடிமை யிறுத்திக் கேவல்கொண் டனவால் - எளியே னுய்வகை யின்னருள் செய்தே யொருசார் தனைநினையக், கன்னடி மைக்கணு மென்னை யளித்தவ தாலோ தாலேலோ" என்ற (என்து) அவிநாசிக் கருணாம்பிகை பிள்ளைத் தமிழ் (தால் 8)க் கருத்தைக் காண்க.

உ
திருச்சிற்றம்பலம்

# 12. மானக்கஞ்சாற நாயனார் புராணம்

## தொகை

“ மலைமலிந்த தோள்வள்ளல் மானக்கஞ்சாறன்
… ..   …..அடியார்க்கு மடியேன்”—திருத்தொண்டத்தொகை

## வகை

“ கலச முலைக்கன்னி காதற் புதல்வி கமழ்குழலை
நலமெய் தவத்தவன் பஞ்ச வடிக்கிவை நல்கென லும்
அலகு மெனக்கரு தாதவள் கூந்த லரிந்தளித்தான்
மலைமலி மதிற்கஞ்சை மானக்கஞ் சாற னெனும்வள்ளலே ”
—திருத்தொண்டர் திருவந்தாதி

## விரி

866. மேலாறு செஞ்சடைமேல் வைத்தவர்தாம் விரும்பியது
நூலாறு நன்குணர்வோர் தாம்பாடு நோன்மையது
சேலாறு தேன்பொழியக் கொழுங்கனியின் சாறொழுகு
காலாறு வயற்கரும்பின் கமழ்சாறூர் கஞ்சாறூர்.

புராணம்:—பெருமையுடைய கஞ்சாறூரில் வாழ்ந்த பெரியோருடைய சரித வரலாறும் பண்பும் கூறும் பகுதி. இனி, நிறுத்த முறையானே இலைமலிந்த சருக்கத்தில் ஐந்தாவதாகிய மானக்கஞ்சாற நாயனார் புராணங் கூறத் தொடங்குகின்றார்.

தொகை:—மலையின் தன்மைபோன்ற தன்மை மிகுந்த தோள்களையுடைய வள்ளலாகிய மானக்கஞ்சாற நாயனாருடைய அடியார்க்கும் அடியேன் ஆவேன்.

மலை - இங்கு ஆகுபெயராய் மலையின் தன்மைகளைக் குறித்து நின்றது. அவை உயர்ச்சி, வலிமை, பெருமை, நிலைபிறழாமை, “ வறப்பினும் வளந்தரும் வண்மை” முதலியன. மலிதல் - மிகப் பொருந்துதல். தோள்களின் பெருமை முதலியவற்றால் இவ்வாறு உவமையணி பொருத்தக் கூறினார். இவர் “ அரசர்சேனாபதியாகு செப்பவருங் குடிவிளங்க” (872) என விரிநூல் கூறுதலின் சேனாபதித் தன்மைக்கேற்ப உயர்ந்த வலிய பெரிய தோள்களை யுடையவர் என்று இக்கருத்தை விரிநூல் விரித்துக்கூறியது காண்க. ஆண்டுரைப் பவையும் காண்க. வள்ளல் - வரையாது கொடுப்போன். இது இவரது சரிதக் குறிப்புக் குறித்தது. இதனை “ அலகு மெனக்கரு தாதவள் கூந்த லரிந்தளித்தான் ” என்றும், வள்ளலே” என்றும் வகைநூல் போற்றுதல் “ வண்புகழ்” (865), “பொருள் செய்கை யெனப்பெற்றே னெனக்கூந்த லடியிலரிந்து மலர்க்கரத்தி னிடைநீட்ட ” (895), “ ஒருமகள் கூந்தலினை வதுவைநா ளொருவர்க்கீந்த பெருமையார் ” (902) என விரிநூல் விரித்துக் காட்டியவாறு. மானம் - பெருமை. பெருமையார் (902)

என்றது காண்க. மானக்கஞ்சாறனடியார்க்கு மடியேன் - நாயனடியார்க்கு மடியேன் என்னத் தனித்தனிக் கூட்டுக.*

வகை :—மானக்கஞ்சாறனென்னும் வள்ளலே, மாவிரதியாகிய தவவேடத்தவர் "அது நமக்குப் பஞ்சவடிக்கு ஆகும்" என்று கூறிய அளவில், இது தகாதென்று எண்ணாது கன்னியாகிய காதற்புதல்வியின் மலர்க்கூந்தலை அடியோடு அரிந்தளித்தான் என்க.

கலசமுலைக்கன்னி என்றதனால் (880) மணப்பருவம் வந்தவள் என்பதும் காதற் புதல்வி என்றதனால் (875 - 876) பிள்ளைப்பேறு இல்லாது சிவபெருமானை வழுத்தி அரிதிற்பெற்றுத் தாம் மிக்க அன்புபூண்ட மகள் என்பதும், கமழ்குழல் என்றதனால் (894) மணத்தின்பொருட்டு அலங்கரிக்கப்பட்ட கூந்தல் என்பதும், அறிவிக்கப்பட்டன. தவத்தவன்-மாவிரதத் தவவேடம் பூண்டவன் நல்கு எனலும்-"சோறு" என்று வெளிப்படையாய் வேண்டாது குறிப்பாய் வேண்டுதலும் நமது "பஞ்ச வடிக்கு ஆம் என்றார்" (894) என்ற விரிநூற் பிரமாணத்தால் இங்ஙனம் கொள்ளப்பட்டது. நல்கு - விருப்பம் "யாவையுமோ கூறுவதன் முன்னவர் தங் குறிப்பறிந்து கொடுத்தருள் வார்"(874) என்று விரிநூல் தொடக்கத்தில் இதனை விளக்கியதும் காண்க. அலசுதல் பொருந்தாத தன்மை தருதல்-கெடுதி தருதல் "அலசாம லகா யெனுமா யிழையே" (இந்தளம் திருவானைக்கா - 8) என்ற ஆளுடைய பிள்ளையார் தேவாரம் காண்க.

மலைசெய் - மலையின் தன்மைபோன்ற மலை - ஆகுபெயர். செய் - உவமவுருபு. முதனூலுக் கேற்றவாறு தோள் என்பது வருவித்து மலைபோலுந் தோளார் மானக்கஞ்சாறன் என்று கூட்டுக. மலைசெய் மதில் என்று கொண்டு மலைபோன்றுயர்ந்த வியன்மதில் என்றுரைத்தலுமாம். கஞ்சை - கஞ்சாறூர் என்பது மருவிக் கஞ்சை என வந்தது.

நாயனாரது ஊரும் மரபும் குடியும் தொழிலும் குணமும் வீறும் பேரும் அடிமைத்திறத்தின் மேன்மையும் முதலியவை முதனூல் தொகுத்துணர்த்திற்று. அவரது ஊரும் பேரும் குணநலமும் செய்த திருத்தொண்டும் சரித வரலாறும் பிறவும் வகைநூல் வகுத்துக் காட்டிற்று. இவற்றின் துணையால் திருவருள் காட்டியவாறு அவை விரிந்தபடி விரிநூலுட் கண்டு கொள்க.

---

* முதனூலாகிய திருத்தொண்டத்தொகையினுள் அரையடியில் ஒவ்வோர் நாயன்மாரைத் துதித்து "அடியேன்" என்று போற்றுதல் பெருவழக்கம். ஓரடியில் "அடியேன்" என்பதிடையிடாது ஒருசேர இரண்டு நாயன்மாரைக் கூறிப் போற்றியிருப்பது இங்கும் "கறைக்கண்டன் கழலடி", "மடல்சூழ்ந்த" என்ற ஈரடிகளிலுமாம். "கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன் கலியன் - கழற்சத்தி வரிஞ்சையர் கோனடியார்க்கு மடியேன்", "மன்னியசீர் மறைநாவ னின்றவூர்ப் பூசல் வரிவளையாள் மானிக்கு நேசனுக்கு மடியேன்" என்ற இரண்டடிகளில் ஓரடியில் மூன்று நாயன்மார்கள் ஒருசேரப் போற்றப்பட்டார்கள். "முருகனுக்கு முருத்திர பசுபதிக்கு மடியேன்", "பெருமிழலைக் குறும்பர்க்கும் பேயார்க்கு மடியேன்", "நாட்டமிகு தண்டிக்கு மூர்க்கர்க்கு மடியேன்" என்ற மூன்றிடங்களில் அரையடியில் இரண்டு நாயன்மார்கள் துதிக்கப்பட்டனர். "திருநின்ற செம்மை" "வார்கொண்ட வனமுலையாள்", "நிறைக்கொண்ட சிந்தையால்", "துறைக் கொண்ட செம்பவளம்" "கடல்சூழ்ந்த உலகெலாம்", "புடைசூழ்ந்த புலியதண்மேல்" என்ற ஆறிடங்களில் ஒவ்வோரடியில் ஒவ்வோர் நாயன்மார் தனித் தனி துதிக்கப்பட்டமை காண்க. "மெய்ம்மையே திருமேனி", "வம்பறாவரிவண்டு" என்ற ஈரிடத்தும் ஒன்றரை அடிகளில் முறையே சண்டீசபிள்ளையார் - ஆளுடைய பிள்ளையார் என்ற இவர்களைப் போற்றியிருத்தல் காண்க. இஃது இவ்விருவரும் இறைவரது திருக்குமாரர்களாகிய முறையின் குறிப்புப் போலும். இவை பெரியோர்களால் ஆராயத்தக்கன.

**கோல்ஆறு.** **கமழ்சாறு ஊர்** - சிறு கொம்புகளில் கட்டிய கோற்றேன்கள் நிறைந்து கூடுகிழிய, அத்தேன் அக்கொம்புகளின் வழியே மெல்ல வழிந்து பொழிந்தன; அத்தேனொடு அக்கொம்புகளிற் பழுப்பாரினறிப் பழுத்துக் கொழுத்த வெடித்த கனிகளின் சாறு ஒழுகிக்கூடின தேன், கனமுடையதாய இனிப் வழிவதாகலின் கீழ்வீழாமல் கொம்புகளின் வழியே வழியும் தன்மையால் **தேன் கோலாறு பொழிய** என்றார். **கொழுங்கனியின் சாறு** தேனிலும் சிறிது அதிகமாகிய இளக்கமுடையதாயச் செட்டவும் விரைந்து ஒழுகவும் கூடியதாகலின் **சாறு ஒழுகும்** என்றார் "வாழைப்பழ மா தேமாவின் கனிகிழிந்த மதுநறுஞ்சேப, கிரந்தரசீ விலக்கடையால் ஒழுகுஞ்சாலை" என்ற (திருஞான - புரா - 7) தும், "முக்கனியின் சாறொழுகிச் சேறுலரா . முது குன்றமே" என்ற (ஆளுடையபிள்ளையார் தேவா) தும் காண்க. மெல்லப் பொழியும் தேனுடன் அதனினும் விரைந்து ஒழுகும் கனியின் சாறு கூடிட்டே இரண்டும் சேர்ந்து காலவாய்போல ஓடின.

**கரும்பின் சாறு ஆறு** - கருப்பஞ்சாறு இவ்விரண்டினும் மிக்க நீர்போல ஓடும் தன்மையுடையதாதலின் அதனை **ஆறு** என்றார். 'கடிக்கால் வெட்டித்தீய கரும்பு தந்த பைம்புனல் காலேவாரா மேலேபாய் கழமல் வளநகரே" (திருஞா - தேவா - திருத்தாளச்சதி - 10) பார்க்க.

கரும்பின் சாறு ஆறாகப் பெருக, அந்த ஆற்றினுள் மேற்கூறிய தேனும் கனிச் சாறும் கூடிய காலவாய் வந்து சேர்ந்து அதனோடு தேன் மணமும் கனிகளின் மணமும் கமழச்செய்தது என்பதாம். சிறு காலவாய்கள் ஆறுகளிற் கூடுவதும் அவற்றால் ஆறு வளம் பெறுவதும் ஆகிய இயற்கையிற் காணப்படும் உண்மையினையும் இங்கு வைத்துக் காண்க. இதனால் இந்நாடு ஆற்றின் வளமுடைய மருதநிலத்தினைப் பற்றப் பட்டதென்பதும், மருதக் கருப்பொருள்களாகிய சோலைகளும் கனிகளும் கரும்பும் கொழுத்துச் செழித்து விளையும் வளமுடையதென்பதும் பிறவும் அறிவிக்கு முகத்தால் **ஆறு, நாடு,** நிலம், நகர், பொருள், குடி முதலிய பல சிறப்புக்களேயும் இவ்வொரு பாட்டின் ஒரு பகுதியிற் பெறும்படி அமைத்த இலக்கியச் சுவையும் கவிநயமும் குறிக்கத்தக்கன. நூலாறு நன்குணர்வோர் தாம் பாடும் நோன்மைக்கு இவையே எடுத்துக்காட்டாய் விளங்கும் தன்மையும் காண்க.

**கமழ்சாறூர் கஞ்சாறூர்** - நாயனமார்களது திருத்தலப் பெயர்களைச் சந்தம்பெற அமைத்து அணிபடுத்திச் சொல்வது ஆசிரியரது மரபுகளில் ஒன்று. "தெய்வநெறிச் சிவம்பெருக்கும் திருவாரூர் திருவாரூர்" (திருநா-புரா-12), "எய்தும் பெருமை எவ்வுலகு மேறூர் ரேம்ப பேறூரால்" (நமிநந்தி - புரா 1) "மறைத்திரு வாக்கூ ராக்கூர்" (சிறப்புலி-புரா - 1) "உளனுறையூர் முறையூர்" (புகழச்சோழர் புரா - 1), "செல்வ நீடூர் திருநீடூர்" (முனை - புரா - 1) முதலியவை காண்க. இப்பாட்டிலும் வரும் பாட்டுக்களிலும் ஆசிரியர் இச்சரித நிகழ்ச்சியின் குறிப்புப்பட நாடு நகரம் குடிவளம் முதலியவற்றைக் கூறும் சுவை கருதுக.

**மேலாறு செஞ்சடைமேல் வைத்தவர் தாம் விரும்பியது** என்பது 'வேண்டுதல் வேண்டாமை" யில்லாராய, ஒரு பொருளையும் விரும்பாத இறைவர், பிறர் எவரும் விரும்பாத தலையிற் கழித்த மயிரை "இவள் தன் மயிர் நமக்குப் பஞ்சவடிக்கு ஆம்" என விரும்பிய சரிதம் குறிப்பது. "தலையின் இழிந்த மயிரனையார்" எனத் திருவள்ளுவனார் இதனை ஒழுக்க இழிவுக்கு உதாரணமாகக் கூறியவாறு தலையினின்றும் கழித்த மயிர் பண்புடைய மக்கள் விரும்பார். மனிதர் கழித்த மயிரையும் விலைப்படுத்தவும், முடியாகத் தலைக்கு மகளிர் கொண்டு முடிக்கவும் உள்ளவழக்கம் நாகரிகம் என்னும் அநாகரிகக் கோரங்களின் ஒன்றாத லின் அது விதியும் ஆனரேனொழுக்கமும் ஆகாது. **தாம் விரும்பியது** என்றதனால் அவர் தாமேயன்றிப் பிறர் விரும்பாதது என்ற தொனியும் காண்க. இவ்வாறு

வீதிகளையுடைய **கஞ்சாறூர்**, மனைசா[illegible] [illegible] இல்லறத்தின் வழியே [illegible] [illegible] நலவினை பூண்ட பெருமைமக்களவம் ஆகிய குடிகள் [illegible], [illegible] முற்றதாம் (ஆ - உளச)

(வி **ரை**) **சாலும் மனையறம் - நிலைமனையறம்** [illegible] சாலபாவது நன்னெறியி[illegible] [illegible] தவ[illegible] "[illegible]" கிய உககண ஆதார" (ஆசா[illegible] - ட[illegible] - 5) [illegible] இல்வினை னிருந்து செய்ய அ[illegible]. **நிலை** - [illegible] **சாலு**[illegible] மூன்று நிலையினாக்கும் [illegible] [illegible] முதலியன உதவ[illegible] வலைமை எனபது பொருந்தும்.

**சாலும் மனையறத்தின் வழிவந்த வளம் பெருகும் குடி** - அ[illegible]நூல்களால் விதிக்கப்பட்டவாறே இல்லற[illegible] அதன் வழிபால [illegible] பெருகவாழும் குடிகள் எனக. இல்லறத்தின் சால்புக்குரிய விதிகள் திருக்குறள் முதலிய அறநூல்களுட் காண்க. இதன் அருமைப்பாட்டைச் சிதம்பர மும்மணிக்கோவையில் குமரகுருபர சுவாமிகள் தொகுத்தருளியவாற்றாலும், பிறவாற்றாலும் அறிந்துகொள்க. இதன் அருமையும் பெருமையும் குறித்தே இதனை எண்டிக குடிச்சிறப்புக்களுக்கும் பகுதியுள் முதற்கண் வைத்து விதந்து கூறினார்.

**வினைசாலும் உழவுதொழில்** - தொழில்களுள் எல்லாம் சால்பு - தன்மை மிக்கது உழவு தொழில் என்பதாம். "சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம்" என்றும், "அஃதாற்றா தெழுவாரை யெல்லாம் பொறுத்து" தலினால் "உழுவார் உலகத்தார்க்கு ஆணி" என்றும், "மற்றெல்லாம் தொழுதுண்டு பின்செல்பவர்" என்றும் காரணம் காட்டித் திருவள்ளுவ நாயனார் எல்லாத் தொழிலினும் "உழவே தலை" யாதலை வற்புறுத்தியுள்ளது காண்க. இக்கருத்துப் பற்றியே **வினைசாலும்** என்றும், அதனாலே **மிக்க** என்றும், அதனாலே பெருமை பெற்றனவாகிய **பெருங்குடி** என்றும் கூறினார். "மேழிச் செல்வம் கோழை படாது" என்பது நீதி.

**புனை** - அணிபுனை என்று எழுவாய் வருவிக்க. **சாயல் மயில் அனையார்** - **சாயல்** சாயலின் உவமைக்குப் பொருந்த தன்மை கூறியபடி. ஒப்புப் பொருளில் வந்த ஐந்தனுருபு விரிக்க.

**நடம்புரியப் புகல்முழவம் கனை சாறு**-சாறு - விழா, இங்கு மக்கள் பொருட்டாக நிகழும் மண முதலிய சிறப்புக்களைக் குறித்தது. **நடம்புரியப் புகல்முழவம்** ஆடற் பெண்கள் நடமாட அதற்குப் பொருந்த முழக்கப்படும் முழவு. ஆடலும் அதற்கிசைந்த முழவும் விழாவிற்குரிய அங்கங்களாம். 'மடவார்கள் நடமாட முழவதிர", "[illegible] மென்றாங்கேறிச் சேயிழையார் நடமாட", "முகில்முழவ மயில்களாடல் நடமாட" என்வரும் ஆளுடைய பிள்ளையார் தேவார முதலியன காண்க. **புகல்**-ஆடலுக்கு இசையச் சத்தித்தலைக் குறித்தது. ஆடலுக்குப் பொருந்தப் பேசுவது போலும் என்று உருவக நயம்படவுங் கொள்க. **கனை** என்று குறிப்பும் அது **கனைத்தல்** சத்தித்தல். **புகல்**[illegible] லாராலும் எடுத்துச் சொல்லப்பட்ட என்றுரைப்பாருமுண்டு.

**நாடமாடப் புகல் முழவம்** - நடமாடும் ஒலியலைகள் தாக்க, அவ்வதிர்ச்சியினாலே தானாகவே சத்திக்கின்ற முழவு என்றலுமாம்.

மேற்பாட்டிற் கூறிய **மாடம், அரங்கு, மறுகு** என்ற மூன்றினும் அம்முறையே தொடர்ந்து, **மாடம்** - பெருங்குடிதுவன்றி எனவும், **அரங்கம்** - மயிலனையார் நடம்புரியப் புகல்முழவம் எனவும், **மறுகு** - சாறு மல்கு வீதி எனவும் சிறப்புக் **கூறியது காண்க**.

இவ்விரண்டு பாட்டினும் கூறிய கொடி, தோரணம், பூரண கும்பம், நடம்புரியப் புகல் முழவம், சாறு என்பன இச்சரித்திரத்தினுள் வரும் மணத்திறத்தின் பெருவிழாச் சிறப்பினையும், மனைசாலும் நிலையறம் - உழவு தொழில் - பெருங்குடி என்பன நாயனா

ரையும், கலிக்காமனாரையும்; நகிற்கொடி, சாயல் மயிலனையார் நாயனாரின் மகளாரை யும் குறிப்பால் உணர்த்துவதும் காண்க.

**கன்னசாறு கஞ்சாறு** - சொல்லணி. 866 பார்க்க. **கஞ்சாறு**-ஊர்ப்பெயர் தேவார ஆட்சி போற்றப்பட்டது தலவிசேடம் பார்க்க.

**வழிவந்து—புனைமுழவம்**—என்பனவும் பாடங்கள். 6

872. அப்பதியிற் குலப்பதியா யரசர்சே னாபதியாஞ்
செப்பவருங் குடிவிளங்கத் திருவவதா ரஞ்செய்தார்
மெய்ப்பொருளை யறிந்துணர்ந்தார் விழுமியவே ளாண்குடிமை
வைப்பனைய மேன்மையினார் மானக்கஞ் சாறனார். எ

(இ - ள்) மெய்ப்பொருளை ... மானக்கஞ்சாறனார் - உண்மைப் பொருளை அறிந்து அதனை எப்போதும் சிந்தித்து உணர்வினிற் கொண்டவரும், தூய வேளாண் மரபின் செம்மை வைப்புப் போன்ற மேன்மையுடையவருமாகிய **மானக்கஞ்சாறனார்**, அப்பதியில் ... அவதாரஞ் செய்தார் - அந்தத் தலத்தில் வழிவழி வாழ்கின்ற மேம்பாடுடையவராய அரசர் சேனாபதியாகிய சுட்டிக் கூறத்தக்க குடி விளங்கும்படி திருவவதாரஞ் செய்தனர்.

(வி - ரை) இப்பாட்டினால் நாயனாரது மரபும், மரபின் உட்குடியும், உள்ள நிறைவும், வழிவழி வாழ்க்கையும் முதலிய சிறப்புக்கள் பலவும் ஒருங்கு பேசப்பட்டன.

**மெய்ப்பொருள்** - மெய்ப்பொருணாயனார் புராணமும், 481-ல் உரைத்தவையும் பார்க்க.

**அறிந்து உணர்ந்தார் - அறிதல் உணர்தல்** இவை வெவ்வேறு உணர்ச்சி நிலை குறித்தன. **அறிந்து** என்றதனாற் கேட்டலும் சிந்தித்தலும், **உணர்ந்து** என்றதனாற் தெளிதலும் நிட்டை கூடலும் உணர்த்தப்பட்டன. மெய்ப்பொருளானது ஞானேந்திரிய அறிவு அந்தக்கரண அறிவு என்னும் பாச அறிவினாலும், உயிரறிவு எனப்படும் பசு அறிவினாலும் அறிப்படாததாம், சிவஞானமாகிய மெய்யுணர்ச்சியால் மட்டும் அறியப்படுவதாம் உண்மைப் பொருளென்பது இங்குக் குறிக்கப்பட்டது.

**அப்பதியில் குலப்பதி** - அவ்வூரில் வழிவழி நிலைத்த குடிகளுள் முதன்மை யுடையவர். இக்காரணம்பற்றியே முதன்மையார், முதலியார் என்ற குடிப்பெயர்கள் போந்தன என்ப. இவர்களுக்கு ஊராண்மை நாட்டாண்மை முதலிய ஊர் முதன்மைப் பட்டப் பெயர்களும் வழங்கும். இவர்களின் குடிச்சிறப்புக்களை ஆசிரியர் பல இடத்தும் விதந்து பேசுதலும், உமாபதி சிவாசாரியார் திருத்தொண்டர் புராண வரலாற்றினுட் பாராட்டியிருத்தலும் காண்க.

**அரசர் சேனாபதியாம் செப்பவருங் குடி** - அரசரிடத்துச் சேனாபதியாகும் தொழிலும் வேளாளர்க்கு உரியது. இது இவர்களுட் சில குடிகளில் வழிவழியாய் வருவ தொன்றாதலின் இவ்வாறு கூறினார். இந்நாயனாரது மகளாரை மணம் புரியவந்த ஏயர்கோனாரும் இதுபோலவே சேனாபதிக்குடியினில் வந்தவர் என்பது "ஓங்குகுல [illegible]" (881), "எந்தமது மரபினுக்குத் தகும்பரிசா லேயுமென" (882) என்றவற்றாலும், ஏயர்கோனார் புராணத்தினுள் "ஏயர்கோக்குடிதான்" "மன்னிநீடிய வளவர் சேனாபதிக்குடியாம்" (5) என்று கூறுவதனாலும் விளங்கும். திலகவதியம்மை யாருக்கு மணம் பேசிய கலிப்பகையாரும் அரசர் சேனாபதியாராகப் போர் புரிந்து உயிர் கொடுத்துப் புகழ் கொண்ட சரிதத்தையும் இங்கு நினைவு கூர்க. இதனை "வேந்து விடு தொழிலிற் படையுங் கண்ணியும், வாய்ந்தன வென்ப அவர்பெறும் பொருளே" (பொருள் - மரபு - 81) என்ற தொல்காப்பியத்தினாலும் காண்க.

லாக்குந் தனித்தனிவே றடியேனை யாளாக்கினார்" பாடிய பணிந்தும் நம்பியாரூரர் இவ்வொழுக்கத்தை விளக்கியருளியதும் நினைவு கூர்க.

**அணிவு** - அணியாக அணிந்து கொள்ளுதல்.

**ஆளாகும் பதம்** - ஆளாகின்ற உள்ளத் தன்மையின் தகுதி. **பதம்** - பக்குவம் - பரிபாகம். **பதம்** - சொல் என்று கொண்டு வாக்கின் செய்கையைக் குறிப்பதாக உரைப்பாரு முண்டு.

**தணிவில் பெரும்பேறு** - தணிவில்லாமையாவது எக்காலமும் குறைவுபடாமை. **பெரும்பேறு** - பெறின் பிறந்தமை பெறுவதுண்டோ? என்றபடி இதனிற் பெரியபேறு வேறு இல்லை என்பது.

**தொழில்** - இப்பேற்றினால் மேற்கொள்ளப்பட்ட செய்தொழில். அப்பேற்றினைப் பெறுதற்குச் சாதனமாகச் செய்யுந் தொழில் என்றலுமாம். இப்பொருளில் பேற்றின் காரியத்தை முன்வைத்து அதன் காரணமாகிய தொழிலை அடுத்து வைத்ததாகக் காட்டினார். உடலெடுத்த பிறவிக்குப் பயனாவது அன்பர் ஏவல்செய்யும் தொழில் என்றுரைத்தலுமொன்று. "கும்பிட்ட பயன் காண்பார்போல" (திருஞான - புரா 1023) என்றதும், "நேய மலிந்தவர் வேடமும் - . ..அரனெனத் தொழுமே" என்ற சிவஞான போதக (12 சூத்) கருத்தும் காண்க.

**கழல்சார்ந்த துணிவு** திருத்தொண்டினுறைப்பாலாகிய துணிபு. "சார்புணர்ந்து" (குறள்) என்றபடி சார்தற்குக் கழலைச் சார்ந்ததனால் உண்டாகிய துணிவு. "ஒருவர் தமர்நாம் அஞ்சுவதி யாதொன்று மில்லை யஞ்ச வருவது மில்லை", "என் உளமே புகுந்த வதனால், ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன் வியாழன் வெள்ளி சனி பாம்பிரண்டு முடனே, ஆசறு நல்ல நல்ல அவை நல்ல நல்ல அடியா ரவர்க்கு மிகவே", "இடரினுந் தளரினு மெனதுறு நோய் தொடரினு முனகழ றொழுதெழுவேன", "கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும் நற்றுணை யாவது நமச்சி வாயவே", "சேவடிக் கீழ்ச்சென்றங், கிருமாந் திருப்பன் கொலோ", "திருவுமெய்ப் பொருளுஞ் செல்வமு மெனக்குன் சீருடைக் கழல்களென் றெண்ணி, ஒருவரை மதியா துறாமைகள் செய்து ஊடிடு முறைப்பனாய்த் திரிவேன" என்பனவாதி திருவாக்குக்களா லறியப்படுமிந் துணிவு.

**தொண்டர்க்கே** - ஏகாரம் தேற்றத்தோடு பிரிநிலையுமாம்.

**ஏவல் செய்யும் தொழில்** - அதுவே தமது நியதியாகச் செய்யும் செய்தொழிலாக. உடம்பளவில் பயன்விளைத்த தொழிலும் வினைத்தொழில் போலாது, உயிரளவினும் தொடர்ந்து பற்றுதலால் இதுவே தொழிலாம் என்ற கருத்துடன் நியதியாய்ச் செய்யும் தொழிலாக. 8

874. மாறில்பெருஞ் செல்வத்து வளம்பெருக மற்றதெலாம்
ஆறுலவுஞ் சடைக்கற்றை யந்தணார் தம்மடியாராம்
பேறுபெருந் திருவுடையா ருடையாரென் றியாவையுநேர்
கூறுவதன் முன்னவர்தங் குறிப்பறிந்து கொடுத்துள்ளார்.

(இ - ள்) ஒப்பற்ற பெருஞ்செல்வத்தின் வளங்கள் பெருகவே அவ்வளங்களை யெல்லாம், கங்கையாறு உலாவுஞ் சடைமுடியுடைய சிவபெருமானது அடியவர்களாகிய பேறுடைய பெருந்திருவுடையவர்களே உடையவர்களாவார் என்று கொண்டு அவையெல்லாவற்றையும் அவர்கள் கேட்கக் கூறு முன்னமே, அவர்களது மனக் குறிப்பை அறிந்து கொடுத்து வந்தார்.

புறநோக்கும் கண்ட வுணர்வு துறந்தார்போல" என்ற தண்டியடிகள் புராணக் கருத்தினை இங்குச் சிந்திக்க. தம் முன் பணிந்து ஐந்துங்கழுந்தோய்த் தாழ்ந்தெழுந்தவாறு கூந்தலின் புறமே தோற்றப்படுமாதலின் புறநோக்கி என்றார் எனவும், புறம்கூந்தல் எனக் கொண்டு முதுகினிற் கிடந்த கூந்தல் எனவும் உரைப்பாருமுண்டு.

**அஞ்சலி மெய்த்தொண்டர்** - மகளாரைக் கொணர்ந்து பணிவித்த நாயனார் மாவிரதியரைத் தாமும் அஞ்சலி செய்தபடியே நின்றனர் என்பதாம். **மெய்** - இயற்கையடைமொழி.

**அணங்கு இவள்** - அணங்கு போன்ற இவள் என உவமஉருபு விரிக்க. **அணங்கு** - தெய்வப் பெண்.

**மயிர்** - எவ்வகை உயர்வான கூந்தலேயாயினும் தலையினின்று களையப்பட்டபின் "தலையினிழிந்த மயிர்" என்று இகழ்ந்தொதுக்கப் படுவதோர் அசுத்தப் பொருளாமாதலின் இங்கு **மயிர்** என்று இலேசுபடக் கூறினார். மஞ்சுதழைத்தது போலும் என்பது முதலிய பெருமைகளுடையது என்று எண்ணுது நாம் இதனை **மயிர்** என்ற மட்டிலே கருதுவோம் என்பதும், அரிந்த பின்னர் அதனை மீள அவ்வாறே வளரக் கொடுத்துவிடுவோம் என்பதும், இவ்வாறு இழிந்ததாகக் கருதும் மயிரேயாயினும் நாம் தரிக்கும் உயர்ந்த மயிர்க்கயிற்றுப் பூணூலுக்கு ஆகும் என்பதும், உயர்ந்த பயன்தருவதாம் என்பதும் ஆகிய இவை குறிக்கவே **மயிர் - பஞ்சவடிக்கு - ஆம்** என்றார்.

**பஞ்சவடி** - மயிர்க்கயிற்றாலியன்ற பூணூல் வடம் (**பஞ்சம் - விரிவு; வடி** - வடம்) மயிரினால் அகலமாகப் பின்னல் செய்த மயிர்க்கயிற்றுப் பூணூல் வடம். "மயிர்க்கயிறு தரித்தான் றன்னை", "பஞ்சவடி மார்பினானை" முதலிய தேவாரங்கள் காண்க.

**அடித்தலங் கொடுப்பார் பஞ்சவடிக்கு ஆம் என்றார்** - என்று கூட்டுக. **கொடுப்பார்** - வினையாலணையும் பெயர். பரவ அடித்தலம் கொடுக்கு மியல்புடையார் ஆதலின் மயிர் பஞ்சவடிக்காம் என்றார் என்க. **பரவுதல்** - மன மொழி மெய்களால் வழிபடுதல். பஞ்சவடிக்காக மயிரை அரிந்து நீட்டிய நாயனார் பரவ அவர்க்குத் தம் அடித்தலமாகிய **முத்தி கொடுப்பாராகி - என்றார்** என்று கூட்டிக் **கொடுப்பார்** என்றதனை வினைமுற்றெச்சமாகக் கொண்டுரைப்பினுமமையும். அடித்தலம் கொடுத்ததனை 898 - ல் கூறுகின்றார்.

**அலர்ந்தமலர்க் கூந்தல்**—என்பதும் பாடம். 29

895. அருள்செய்த மொழிகேளா வடற்சுரிகை தனையுருவிப்,
"பொருள்செய்தா மெனப்பெற்றே" னெனக்கொண்டு, பூங்கொடிதன்
இருள்செய்த கருங்கூந்த லடியிலரிந், தெதிர்நின்று
மருள்செய்த பிறப்பறுப்பார் மலர்க்கரத்தி னிடைநீட்ட, ௩௦

896. வாங்குவார் போனின்ற மறைப்பொருளா மவர்மறைந்து
பாங்கின்மலை வல்லியுடன் பழையமழ விடையேறி
யோங்கியவிண் மிசைவந்தார், பொலிவிசும்பு நிலநெருங்கத்
தூங்கியபொன் மலர்மாரி, தொழும்பர்தொழு தெதிர்விழுந்தார். ௩௧

895 (இ - ள்) வெளிப்படை. இவ்வாறு அருளிச் செய்த மொழிகளைக் கேட்டு மானக்கஞ்சாறனார் வலிமையுடைய உடைவாளை உருவிப், "பொருட்படுத்தி (இது பஞ்சவடிக்கு)ஆம் என்று சொல்லப்பெற்றேன்" என்று மனத்துட்கொண்டு, பூங்கொடி போன்ற மகளாரது இருள்செய்த கரிய கூந்தலை அடியில் அரிந்து, எதிரே நின்று, மயக்கம் செய்யும் பிறப்பை யறுப்பாருடைய மலர்க்கையில் நீட்ட, ௩௦

896 (இ - ள்) வெளிப்படை. அதனை வாங்குவார்போல நின்ற மறைப்பொருளாகிய அவர் மறைந்து, பக்கத்தில் பார்வதியம்மையாரோடு, தமது பழைய இளைய இடப வேற்றினையேறி, மேலோங்கிய ஆகாயத்தின் மேல் வெளிப்பட்டு வந்தருளினார். ஒளி பொருந்திய ஆகாயமும் நிலமும் நிறைய அழகிய கற்பகப்பூமாரி பெய்தது. அன்பராகிய மானக்கஞ்சாறனார் தொழுது எதிரே நிலமுற வீழ்ந்தனர் ருக

இவ்விரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன

895. (வி - ரை) அடல் சுரிகை அடல் - போர் எனக்கொண்டு போர்க்கருவியாகிய சுரிகை எனப்பொருளுரைப்பதுண்டு

**பொருள் செய்து ஆம் எனப் பெற்றேன்** - பொருளல்லாத இதனையும் பொருட்படுத்தி "இதுபஞ்சவடிக்கு ஆகும்" என்று சொல்லும்பேறு பெற்றேன் என்க. இங்குப் "பொருள் செய்தாம், எனப்பெற்றேன்" என்று பாடங் கொண்டு, பொருள் - முற்பிறப்பிற் செய்த நல்லகருமம் என்று உரை கொண்டு, முன் செய்த நற்றவத்தால் இவ்வாறு கொடுப்பது ஒருவற்குக்கிடைக்கும், நான் என்ன புண்ணியஞ் செய்தேன? என்று உரைகொள்வர் மகாலிங்கையர். பெரும்பொருளை ஆக்கிக்கொண்டவன் போல (இப்பெரியார் இதனைக் கேட்கப்) பெற்றேன் என்பது ஆறுமுகத் தம்பிரானுரை. இதனை மறுத்து, மொழிகேட்டு அதற்கு உண்மைப் பொருள் செய்து, அதன்படி செய்யத்துணிந்து, இதனை ஆம் என்று செய்யும்பேறு பெற்றேன் என மகிழ்ந்து என்று கூறுவர் ஆலாலசுந்தரம்பிள்ளை.

**இருள் செய்த** - இருள் - கருநிறங்குறித்து நின்றது ஆகுபெயர் **இருள் செய்த** - கருநிறம்பரப்பிய "கருங்கதிர் விரிக்கு மேனி" என்றது காண்க. **இருள்** - மயக்கம் எனக்கொண்டு, கூந்தல் அழகியது - உடற்கூறு அழகியது என்றெல்லாம் இவ்வுடலைப் பற்றிக் கொண்டு அலையும் உலகியல்பு குறித்ததாக உரைப்பதுமாம் உலகர் அவ்வாறு மயங்காவண்ணம் காட்டும் நிலையில், இதுவரை **இருள் செய்த - மயக்கம் செய்த** - இனி உண்மைகாணக் காரணமாயின-கூந்தல் என்று இப்பொருட்குக் குறிப்பு உரைத்துக் கொள்க மானக்கஞ்சாறனார்போல "மெய்ப்பொருளை யறிந்துணர"ராத (872) வரை உலகாக்கு மகளிரது கூந்தல் முதலியவை **இருள்** - மயக்கம் - செய்வன என்ற பொது இலக்கணமாகக் கூறியதாகக் கொள்க இதனைத் தொடர்ந்து **மருள் செய்த பிறப்பறுப்பார்** என்றதும் உன்னுக. **இருள்** - ஆகுபெயராய் மேகத்தை உணர்த்தியதெனவும், **செய்த** - உவமஉருபெனவும் கொண்டு மேகம் போன்ற கரிய கூந்தல் என்றலுமாம மேல **மஞ்சுதழைத்தென** என்றது காண்க

**அடியில் அரிந்து** - அந்தப் பற்றுச் சிறிதும் எஞ்சிநில்லாவகை அடியோடு களைந்து என்பது குறிப்பு "பாசப் பழிமுதல் பறிப்பார்போல" என்றது காண்க

**எதிர்நின்ற**-முன்னே நின்றவராகிய பிறப்பறுக்கு முதல்வர் "தாவிய வனுடனிருந்துங் காணாத தற்பரன்" (ஆளுடையபிள்ளையார்-திருக்கோவிலி) என்றபடி எதிரேவரக் காணமுடியாதவர் இவருக்கு எதிர்வந்து நின்றார் என்பது குறிப்பு **எதிர்நின்ற மருள்** என்றுகொண்டு, உயிர்களை அறிவு மயங்கச்செய்து தம் இனமாகிய தலைவனை யடையாமல் எதிர்த்துக்கட்டி அது காரணமாகப் பிறப்பில் வீழ்த்தும் மயக்கம் என்றுரைக்க நிற்பதும் சிந்திக்க. "**பொருளல்லவற்றைப் பொருளென்றுணரும், மருளானு** மாணாப்பிறப்பு" என்ற திருக்குறட் கருத்து இங்குத் தோற்றுவதனையும் உன்னுக கூந்தல் முதலியனவாய மெய் என்று போபெற்ற **பொருள**லலாத பொய்யினைப் பொருளெனக் கொண்டு அவற்றுக்காவனவே செய்து இறந்து பிறந்துழலும் **மருளி**னல் ஆகிய மானிட வாழ்க்கையை நோக்கி இவ்வாறு கூறினார் என்பதும் காண்க

இனி, உலகபோகப் பொருள்கள் **பொருளல்ல** என்று தள்ளுதலும், அவையே **பொருளாம்** என்று கொண்டுழலுதலும் ஆகிய இரண்டும் தவறுடையன; சிவனுக்கும் அடியாருக்கும் பயன்படும் அவ்வளவிற்கே பொருளாம் என்றுணர மருள்செய்த பிறப்ப

றும் என்று சொற்றுணைத்துக்கொள்ளுதலும் ஆம். "ஆவன ஆகுமென்று" (470) என்றதும் காண்க.

**மருள்செய்த பிறப்பு அறுப்பார்** - "மையல் செய்திம் மண்ணின்மேற் பிறக்கு மாறு காட்டினாய்" (திருஞா - தேவா - நட்டராகம் - திருத்துருத்தி - 5) என்றபடி மரு ளினாலாகிய பிறவியினை அறுத்தற்குத் **திருவடித்தலம் கொடுப்பதற்காக எதிர்நின்று** செய்த இச்செயல் முடிகின்ற இடமாதலின் இங்கு இத்தன்மையாற் கூறினார்.

**பிறப்பு அறுப்பார் மலர்க்கரம்** - தமது கையினாற் காட்டும் ஞானமுத்திரையால் பிறப்பு அறுமவகை கூட்டுவார் என்று குறிப்பும் காண்க. (மானக்கஞ்சாறர்) - நீட்ட - (அவர்) - மறைந்து - வந்தார் என வரும்பாட்டுடன் கூட்டி முடிக்க. பெற்றேன் என - கொண்டு-அரிந்து-நீட்ட என்ற வினைகட்கு, மானக்கஞ்சாறர் என எழுவாய் வருவிக்க.

896 (வி - ரை) **நின்ற** - மேலே **எதிர்நின்று** (895) என்றார். திருவுருத்திரம், நின்ற திருத்தாண்டகம் முதலிய திருமறைகளா லறியப்படுமாறு, எல்லாமாய் நிறபவ ராதலின் மாவிரத முனிவராய் வந்து நின்றார் - எதிர் நின்றார் - இங்கு வாங்குவார்போல நின்றார் - இனி அவரே மறைந்து நிற்பார் விடைமே னிற்பார் எனக். இதுபற்றியே **இங்கு மறைப்பொருளாமவர்** என்றும், **மறைந்து** என்றும் கூறியதாம் **மறைப்பொரு ளாம் அவர்** என்றது தம் உண்மைக்கோல மறைந்துவரும் பொருள் என்று குறிப்பதும் காண்க.

**மலைவல்லி** - மலையரசன் மகளாய் வந்த கொடிபோலவாராகிய உமையம்மை

**பாங்கின்** - ஒரு கூற்றிலே **பாங்கின் வந்தார்** என்று கூட்டி, அருளும் பாங்கிலே இவ்வாறு அருட்கூறுடன் வெளிப்பட எழுந்தருளினார் என்றலுமாம்.

**பழைய மழவிடை - பழைய** - எஞ்ஞான்றும் தமக்குரிய என்ற பொருளில் வந் தது. **மழ** என்றது எண்ணிலாக்காலத்தாற் பழமைபெறினும், மாறாத இளமையுடைய தெனக் குறித்தது.

**ஓங்கிய விண்** - எல்லாவற்றினும் உயர்ந்து நிறைந்த ஞானாகாயம் முன்னர்கீழே இருநிலத்தின் மிசைத் திருவடிதோய வந்தவர் (889), இங்கு மேல் ஓங்கிய விண்மிசை வந்தார் எனக்.

**பொன்மலர் மாரி தூங்கிய - பொன்மலர் - பொன்** அழகு குறித்தது பொன் னிறமுடைய கற்பகமலர் என்பாருமுண்டு **தூங்கியது** என்பது துவ்வீறு குறைந்து நின்றது. **தூங்கிய பொன்மலர் மாரி** - மிக்க கற்பகப் பூமழை நெருங்க என்றலுமாம் தூங்கிருள் என்றதற்குச் செறிந்த இருள் என்று நச்சினார்க்கினியர் உரை கொள்வது காண்க.

**விசும்பு நிலம்** - விசும்பும் நிலமும் எண்ணும்மைகள் தொக்கன **விசும்பின் நிலம் நெருங்க** என்பது பாடமாயின் ஆகாயத்தின் வெளிமுழுதும் எனக் விசும்பி னின்றும் நிலத்தின்மேல் நெருங்க என்றலுமாம்.

**தொழுது எதிர் விழுந்தார்** - தொழுதுகொண்டே கீழ் வீழ்ந்தனர் "தொழுதெழு வாள" என்ற குறளிற்போலக் கொள்க வந்ததனைக்கண்டவுடன் தொழுதலும் வீழ் தலும் ஒருங்கே நிகழ்ந்தனவாயினும் அவ்விரண்டனுள் முன்னைப் பழக்கத்தாற் கைகள் தாமாக முன்னர்ச் சிரமேற் குவிந்தன என்பார் **தொழுது** என முன் வைத்தனர். இதுபற்றியே இங்குத் **தொழும்பர்** என்ற சொல்லாற் கூறினார் "தொண்டர்க்கே யேவல்செயும் தொழில்பூண்டார்" (873) என்றதொடக்கத்திற் கூறியதனை நினைக்க 31

897\. விழுந்தெழுந்து மெய்ம்மறந்த மெய்யன்பர் தமக்குமதிக்
கொழுந்தலைய விழுங்கங்கை குதித்தசடைக் கூத்தனார்
"எழும்பரிவு நம்பக்க லுனக்கிருந்த பரிசிந்தச்
செழும்புவனங் களிலேறச் செய்தோ"மென் றருள்செய்தார். ௩௨

(இ - ள்) வெளிப்படை. (எதிரிற் கீழே) விழுந்து எழுந்து மெய்ம்மறந்து நின்ற மெய்யன்பருக்குப், பிறைச்சந்திரன் அலையும்படி பெருகி விழுகின்ற கங்கையாறு பொங்கிய சடையினையுடைய கூத்தனார், "உனக்கு எம்மிடத்து எழுகின்ற அன்பின் தன்மையை இந்தச் செழித்த உலகங்களில் ஏறும்படி செய்தோம்" என்று அறிவித்து அத் தமது திருவருளினைச் செய்தனர்.

(வி - ரை) விழுந்து எழுந்து - எதிர் விழுந்ததனை மேற்கூறினாராதலின் அவ்வாறு விழுந்தவர் எழுந்து எனக.

மெய்ம்மறந்த - "செய்வதொன்று மறியேனே" (திருவாசகம் - திருச்சதகம்). "ஒன்று மறிந்திலர் வாதவூர் முனிவர்" (திருவிளை - புரா - வாத - உப - பட - 47) என்றபடி இன்ன நிலைமையினர் என்றறியாது நின்றனர் என்றதாம்.

மெய்ம்மறந்த மெய்யன்பர் - மெய் என்ற பெயரால் வழங்கும் பொய்யாகிய உடலையும் உடல் சூழ்ந்தவற்றையும் உடலினுள் வாழும் தம்மையும் மறந்தார். ஆனால் மெய்யாகிய அன்பு மயமாய் விளங்கினார் என்றதாம். பொய்யன்புக் கெட்டாத இறைவர் கஞ்சாறனார் காண வெளிப்பட்டது அவரது உண்மையன்பு பற்றி என்றபடியாம்.

இறைவரது அருள் வெளிப்பாடுகள் மானக்கஞ்சாறனார் பொருட்டு நிகழ்ந்து அவர்க்கு முதலில் அறிவிக்கப்பட்டனவாகலான் அன்பர் தமக்கு என்றார்.

மதிக் கொழுந்து - மூன்றாம் பிறை மேல் தழைக்க உள்ளதாதலின் கொழுந்து என்றார். கொழுந்துபோல்வதனைக் கொழுந்தென்றது உபசாரம்.

அலையவிழும் - கங்கைப் பெருக்கின் அலைகள் ததும்பி வீழ அதன் கரையாகிய சடையில் உள்ள சந்திரன் அலைகின்ற தென்பது கருத்து.

ததித்த சடை - ஆகாயத்திலிருந்து பூமியில் இறங்குவதற்குமுன் கங்கை சிவபெருமானது சடையில் ஆயிரமாமுகத்திலேயே பெருகிய வேகத்தால் இறங்கியதனைக் ததித்த என்றார். ததித்தற்கிடமாகிய சடை.

எழும்பரிவு - மேன்மேலும் அதிகரிக்கும் அன்பு "மேன்மேல்வந் தெழுமன் பால" (800) என்றது பார்க்க. உனக்கு நம் பக்கல் எழும் பரிவு இருந்த பரிசு என மாற்றுக.

ஏறச்செய்தல் - உணரச்செய்தல்-உணர்த்துதல். "அறிவிக்க வன்றி அறியா வுளங்கள்" என்றவாறு படிமுறையால் இறைவர் உணர்த்தினாலன்றி உயிர்கள் உண்மை உணரமாட்டா. "நினையுமா நினையே" என்று (திருவிசைப்பா - கோயில்) திருமாளிகைத்தேவர் அருளியவாறு இறைவர் இங்குச் செழும்புவனங்கள் பரிவின் பரிசு உணரத் தாம் உணர்ந்தருளினர் என்பதாம்.

அருள் செய்தார் - அருளாவன அறிவித்தலும், தமது காட்சி கொடுத்தலும், கருணைத்திறம் போற்றும் பெரும்பேறு நேர்பெறத் தந்து தமதுலகத்திற் சேரச் செய்தலும் ஆம்.

அருள்செய்தார் என்றதற் கேற்பக் கூத்தனார் என்றதும் காண்க. அருள்செய்தார் - சொன்னார் எனப்பாருமுண்டு. 32

893 மருங்குபெருங் கணநாதர் போற்றிசைப்ப வானவர்கள்
நெருங்கவிடை மேற்கொண்டு நின்றவர்முன் னின்றவர்தாம்
ஒருங்கியநெஞ் சொடுகரங்க ளுச்சியின்மேற் குவித்தையர்
பெருங்கருணைத் திறம்போற்றும் பெரும்பேறு நேர்பெற்றார். ௩௩

(இ - ள்) வெளிப்படை. பக்கத்திற் பெரிய கணநாதர்கள் துதிக்கவும், தேவர்கள் நெருங்கி வரவும், இடபவாகனத்தினை ஏறி வந்துநின்ற பெருமான்முன் நின்றவராகிய

மானக்கஞ்சாறனார், ஒன்றுபட்ட மனத்துடனே, கைகளை உச்சிமேற் கூப்பிக்கொண்டு, சிவபெருமானது பெரிய கருணைத் திறத்தை எந்நாளும் துதிக்கும் பெரும்பேற்றினை நேரே பெற்றனர்.

**(வி - ரை) பெருங்கணநாதர்** - பெரிய சிவகணத் தலைவர்கள்.

**நின்றவர்முன் நின்றவர்** - சொற்பொருட்பின் வருநிலை. (விடைமிசை) **நின்றவர்** என்றதற்கு வந்துநின்ற இறைவர் எனவும், (முன்) **நின்றவர்** என்றதற்கு எழுந்து நின்றவர் எனவும் கொள்க.

**ஒருங்கிய நெஞ்சு** - "ஒன்றியிருந்து நினைமின்கள்" (கோயில் திருவிருத்தம்), "ஒருங்கிய மனத்தோடு" (திருவெழுகூற்றிருக்கை), "ஒருவனையு மல்லா துணரா துள்ளம்" (திருத்தாண்டகம்) என்றபடி பிறிதொன்றினும் செல்லாது, சிவபெருமானிடத்தில் முழுமையும் நிலைத்த மனம்.

**கரங்கள் உச்சியின்மேற் குவித்து** - "தொழுது விழுந்தார்" (896) என்றது போல இச்செயல் பயிற்சி வசத்தால் தானாகவே நிகழ்வது.

**ஐயர்** - பெருமையையுடையவர் - சிவபெருமான்.

**பெருங் கருணைத் திறம்** - தம்மையும் ஒரு பொருட்படுத்தி இறைவர் தாமே மாவிரதியாராக வந்ததும், மயிரினைக் கேட்டதும், மறைந்ததும், விடைமேல் வெளிப்பட வந்ததும், பரிவு புவனங்களில் ஏறச் செய்தோம் என்றும் செய்த அருட்டிறங்களையே பேரருள் என்று எண்ணியெண்ணிச் சிந்தை நைந்து போற்றினாராதலின் **திறம் போற்றும்** என்றார்.

**நெஞ்சு - கரம் - போற்றும்** - என்றவற்றால் முறையே மனம் - மெய் - மொழி என்ற முக்கரணங்களின் செயலும் கூறினார்.

**ஒருங்கிய நெஞ்சோடு** - முக்கரணங்களும் இறைவர் பாலனவாக ஒருவழிப்பட்டுச் சென்றன என்பார் **ஒருங்கிய** என்றார். ஏனை, மெய்ம்மொழிகளின் தொழில்களுக்கும் மன இயக்கமே காரணமாதற் சிறப்புடைமை பற்றி **ஒருங்கிய நெஞ்சோடு** என்று அவற்றை மனத்தொடு புணர்த்தியோதினார். **பெரும்பேறு**-பெறுதற்கரிய பெரிய பேறு. இங்கு இறைவர்பாற் கூடுதலாகிய முத்திப்பேறு குறித்தது. திருவடிமறவாது போற்றியிருத்தல் முத்தி யிலக்கணமென்பது "ஏகமாய் நின்றே" என்னும் சிவஞானபோதம் நோக்குக.

**நேர்பெற்றார்** - நேரே பெற்றனர் எனக் உடனே பெற்றார் என்றலுமாம். நேராகப் பெற்றார் - அடையப்பெற்றார் என்பாருமுண்டு. 33

899. தொண்டனார் தமக்கருளிச், சூழ்ந்திமையோர் துதிசெய்ய
இண்டைவார் சடைமுடியார் எழுந்தருளிப் போயினார்
வண்டுவார் குழற்கொடியைக் கைப்பிடிக்க, மணக்கோலம்
கண்டவர்கள் கண்களிப்பக், கலிக்காமர் வந்தணைந்தார் ௫௪

**(இ - ள்)** வெளிப்படை. தொண்டனாருக்கு இவ்வாறு அருளிச் செய்தபின், தேவர்கள் சூழ்ந்து துதிக்க, இண்டை மாலையை யணிந்த நீண்ட சடையினையுடைய சிவபெருமான் மறைந்தருளினார். வண்டுகள் மொய்த்தற்கிடமாகிய கூந்தலினையுடைய மணமகளாரை மணஞ் செய்துகொள்ளும் பொருட்டு, மணக்கோலத்தைக் கண்டவர்களுடைய கண்கள் களிப்படையும்படி கலிக்காமனார் வந்தணைந்தனர்.

**(வி - ரை) தொண்டனார் தமக்கு** - மெய்யன்பர் தமக்கு (897) என்றது பார்க்க.

**இமையோர் சூழ்ந்து துதிசெய்ய** - எனைய மானக்கஞ்சாறனார் பெற்ற பெரும்பேற்றைப் பற்றித் தேவர்கள் துதித்தனர். இப்பேறு தமக்குப் பெறுதற்கரியதாயினமை கருதியும் துதித்தனர் எனக.

**இண்டை** - முடிக்கணியும் மாலைவகை "தொண்டரஞ்சுகளிறும் மடக்கிச் சுரும்பார் மலர், இண்டை கட்டி வழிபாடு செய்யுமிடம்" (திருஞா - தேவா செவ்வழி -

கேதாரம் - 1) என்ற தேவாரமும், " இணைச்சுருக்கும் தாமம் " (முருகர் புரா - 9) என்றதும் காண்க

**எழுந்தருளிப் போயினர்** - மறைந்தருளினர் என்ற பொருள் தரும் மரபு வழக்கு

**வண்டுவார்குழல்** - அச்சமயம் மணமகளாரின் கூந்தல் அடியில் அரிந்து எடுக்கப்பட்டமையின், இது குழலுக்கு இயற்கை யடைமொழி மாத்திரையாய் நின்றது பின்னர் இவர் கைப்பிடிக்குமுன் திருவருளால் இப்பூங்கொடியார் புனைந்த மலர்க்குழலினை முன்னிருந்தவாறே பெறப்போகும் நிலையின் குறிப்புமாம் மணமகளாரை வண்டுவார் குழலாராக எண்ணினர் என்றலுமாம்

**கைப்பிடிக்க** - மணஞ்செய்ய. 885 பார்க்க " நற்றவக் கன்னி யார்கை ஞானசம்பந்தர் செங்கை, பற்றுதற் குரிய பண்பிற் பழுதினற் பொழுது நண்ண " (திருஞா - புரா - 1237) என்றவிடத்து இதன் முதன்மை தேற்றப்படுதல் காண்க

**மணக்கோலம் கண்டவர்கள் கண்களிப்ப** - 171 - 172-ம் பிறவும் பார்க்க

**கலிக்காமனர்** - முன்னர் ஏயர்பெருமகன் (881), ஏயர்கோனர் (883), ஏயர்குலப் பெருமான் (885), என்றும், பின்னரும் ஏயர்குல மன்னவனர் (900) என்றும் கூறும் ஆசிரியர் இங்கு அவரது பெயராற் கூறுதல் குறிக்கொள்க. " ஏயருடை " என்ற குடிப் பெயரும் காண்க **புகுந்தார்** திருமனையில் என்று வருவித்துக்கொள்க.

**போயினர் புகுந்தார்** - இறைவர் எழுந்தருளிப் போயினதையும், மணமகனர் புகுந்ததையும் இவ்வொரு பாட்டில் நயம்படச் சேர்த்துக் கூறியது இவ்விரண்டும் ஒரே காலத்தில் உடனிகழ்ந்தத்தனைக் குறிப்பதற்காம்.

**கைப்பிடிக்கும்**—என்பதும் பாடம்　　34

900. வந்தணைந்த வேயர்குல மன்னவனர் மற்றந்தச்
சிந்தைநினை வரியசெயல் செறிந்தவர்பாற் கேட்டருளிப்,
புந்தியினின் மிகவுவந்து, புனிதனரருள்போற்றிச்,
சிந்தைதளர்ந், தருள்செய்த திருவாக்கின் றிறங்கேட்டு,　　௩௫

901. மனந்தளர்ந் திடர்நீங்கி, வானவர்நா யகரருளாற்
புனைந்தமலர்க் குழல்பெற்ற பூங்கொடியை மணம்புணர்ந்து,
தனம்பொழிந்து, பெருவதுவை யுலகெலாந் தலைசிறப்ப
வினம்பெருத்த தம்முடைய வெயின்மூதூர் சென்றணைந்தார்.　　௩௬

900 (இ - ள்) வந்தணைந்த மன்னவனர் - வந்து சேர்ந்த ஏயர்கோனர் கலிக்காமனர், மற்று உவந்து - மனத்தாலும் நினைத்தற்கரியதாகிய அந்தச் செயலை அங்குக் கூடியிருந்தவர்களபாற் கேட்டருளிப் புந்தியில் மிக மகிழ்ச்சியடைந்து, புனிதனரருள் போற்றி - இறைவர் செய்த திருவருளினைத் துதித்து, சிந்தை தளர்ந்து - பின்னர் மனந்தளர்ந்து, அருள்செய்த . கேட்டு - அருளிச் செய்த திருவாக்கின் றிறத்தினைக் கேட்டு,　　௩௫

901 (இ - ள்) மனம் நீங்கி - மனந்தளர்ந்ததனால் உண்டாகிய துன்பம் நீங்கியவராய், வானவர் மணம்புணர்ந்து - தேவதேவருடைய திருவருளினால் முன்புனைந்திருந்த வண்ணமே மலர்களணிந்த கூந்தலினை வளரப்பெற்ற பூங்கொடி போன்ற மணமகளாரை மணஞ்செய்து, தனம் .தலைசிறப்ப - நிதிகளை யாவர்க்கும் மிகக் கொடுத்துப் பெருங்கலியாண மகிழ்ச்சி உலகெங்கும் ஓங்கிச் சிறக்கச் செய்து, இனம் சென்றணைந்தார் - சுற்றத்தார்கூடிப் பெருக நிறைந்த தமது மதில் சூழ்ந்த பழவூரினைச் சென்று சேர்ந்தனர்　　௩௬

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டன.

900. (வி - ரை) **மற்று அந்த** - தாம் எண்ணிவந்த அதனுக்கு வேறாக எதிர்பாராது நிகழ்ந்த அந்த. **சிந்தை நினைவு அரிய செயல்** - ஒருமகள் கூந்தலை மணநாளில் அரிந்து மாவிரதியார் கையில் நீட்டியதும், அவர் மறைந்தருளியதும், நாயனார் பேறுபெற்றதும் ஆகிய இவை இவை மூன்றும் கூறுசெய்து பிரித்துக் காணமுடியாதபடி ஒரு சேர உடனிகழ்ந்தமையின் ஒருமையிற் கூறினார். **நினைவரிய** - சிந்தையாலும் நினைத்தற்கு அரிய. உயர்வு சிறப்பு உம்மைதொக்கது.

**செறிந்தவர்பால் கேட்டருளி** - "தங்குலமேனை சுற்றமெலாம் தயங்குபெருங் களி சிறப்ப" (884) என்றபடி அங்குக் கூட்டமாகக் கூடியிருந்த சுற்றத்தாரும் ஏனையோரும் ஆகியவர்கள் சொல்லக் கேட்டனர் என்க. மானக்கஞ்சாறனார் பெரும்பேறு நேர் பெற்று (898) இறைவரை யணைந்துவிட்டனராதலின் அங்கு நின்ற பிறர்பால் இச்செயல் கேட்டனர் என்றறியப்படும். **கேட்டருளி** - கலிக்காமனாரது திருத்தொண்டின் பெருமை நோக்கி இவ்வாறு கூறினார்.

**புந்தியினின் மிக உவந்து** - கேட்ட பொருளைப் புத்தி நிச்சயிக்குமாதலின் அவ்வாறு நிச்சயித்து மிக உவந்தனர். சிந்தையினும் நினைவரிய செயல் நிகழ்ச்சியிற் கூடியது மிக வுவக்கத் தக்கதாம் என்று மிக மகிழ்ந்தனர் என்க. இது அவரது திருவுள்ளத்தில் **முதலில் நிகழ்ந்த நிகழ்ச்சி** தமது திருத்தொண்டில் முதிர்ச்சியினால் தொண்டர் பணியில் மானக்கஞ்சாறனாரக்கிருந்த உறைப்பினை நோக்கி உவந்தனர்.

**புனிதனார் அருள்போற்றி** - புத்தியின் காரியமாய உவப்பு நிகழ்ந்ததாகலின் அதனாலே, அந்நிகழ்ச்சிக்கு அருள் காரணமாமென அறிந்து அருளைப் போற்றினர். புனிதன் ஆர் அருள் என்று பிரித்துரைக்கவும் நின்றது. **ஆர்** - நிறைந்த - பெரிய. **சிந்தை தளர்ந்து** - இது அவரது மனத்தினுள் நிகழ்ந்த **இரண்டாவது நிகழ்ச்சி. தளர்தல்** - முயற்சி குறைதல் - இளைத்தல். இவ்வருணலம் கண்டு தரிசிக்கும்பேறு தமக்குக் கிடைக்கவில்லையே என்று மனந்தளர்ந்தனர் என்க.

**அருள் செய்த திருவாக்கின் திறம்** என்றது "நமபக்க லுனக்கிருந்த பரிவிந்தச் செழும்புவனங் களிலேறச் செய்தோம்" (897) என்றருளிய திருவாக்கின் தன்மை.

**கேட்டு மனந்தளரும் இடர்நீங்கி** - அருணிகழ்ச்சிகளை நேரே காணும்பேறு தாம் பெருமைபற்றிக் கலிக்காமனார் **சிந்தை தளர்ந்தனர்** ஆனால் அன்பினதிறத்தை உலகில் ஏறச் செய்வதற்கே இறைவர் இவ்வருள் வெளிப்பாட்டினைச் செய்தனர் என்ற திருவாக்கின்றிறம் கேட்ட அதனால் அவ்வாறு உணர்த்தப்பட்டாருட்பட்ட தாமும், அந்த அன்பினதிறமும் அருளினதிறமும் உணர்ந்து உய்திபெற்றனர். நேர் காணப்பெற்ற திருப்பின உள்தாகும், அருட்டிற மறிந்துயவதாகிய, பயனையே கேட்ட இதனால் பெற்றனராதலின் **இடர் நீங்கினர்** என்க. இது அவரது திருவுள்ளத்தில் நிகழ்ந்த **மூன்றாவது நிகழ்ச்சி** **கேட்டு** - செறிந்தவர்பால் கேட்டு என வருவித்துக் கொள்க. **அங்குச் செறிந்தவர்** என்றதனால் நிகழ்ந்த அன்பு வெளிப்பாடு, அருள் வெளிப்பாடு, அருளிய திருவாக்கு என்பவற்றைத் தாம் நேரே கண்டும் கேட்டும் உணர்ந்த கூட்டத்தார்கள் என்றதாம். ஒரு பொருளை நேரிற் கண்டவர் கேட்டவர்கள்பால் கேட்டலே **நேர்சாட்சியம்** (Direct evidence) ஆகும் என்பதும் அது நம்பத்தக்கதாம் என்பதும் இந்நாள் நவீனரின் வழக்குநூல் விதிகளுமாம்.

**சிந்தை தளர்ந்து** - என்றதற்கு இவ்வாறன்றி, இச்செயல் மண நிகழ்ந்தபின் நிகழ்ந் திருப்பின் தமக்கும் அப்பேறு கிடைத்திருக்குமே என்ற கருத்தினால் **மனந்தளர்ந்தனர்** என்றும்; சுவாமியினால் கூந்தல் விரும்பிக் கொள்ளப்பட்ட பெண்ணை எவ்வாறு மணப்பது என்று மனந் **தளர்ந்தார்** என்றும், முண்டிதமான பெண்ணை எவ்வாறு மணப்பதென **மனந்தளர்ந்தனர்** என்றும், மனைவியின் மயிர் அரியுண்டமைக்கு **மனந்தளர்ந்தனர்** என்றும், பேரடியாராகிய மானக்கஞ்சாறனார் தமது மணத்துக்கு இல்லாமல் சிவபெருமானை அணைந்தது பற்றியும் அதனால் சுற்றத்தார் வருந்துதல் பற்றியும் **மனந்**

தளர்ந்தனர் எனறும, மறறும பலவாறும உரை கூறுவாருமுளா இவறறின பொருத தஙகள ஆராயநது கொளளததககன

**அருள்செய்த திருவாக்கின் திறம்** - "உனககும அருள செயவோம" எனவும், "நீ துககபபடாதே, மனஙகளிபபாக அநதப பெணணை மணநதுகொள" என்று எழுநத வாாதனை எனவும, "இவறறிறகு நீ வருநதாது மணஞ செய" எனறெழுநதவாறு எனவும பலவாறும உரைகூறுவாருமுணடு. இவவாறு பினனும ஒரு திருவாககு எழுநத தெனபதறகு ஆதரவு காணபபடவிலலை அவவாறு எழுநது கேடகபபடடிருபபின திருவாககுக கேடடு எனறுது திருவாககினறிறம் கேடடு என றுகூறுதறகு ஏதுவிலலை. 'அருள செயதவாககு" "என்ன" "இவவணணமெழுநதது கேடடு" (மூாததி-புரா 21 22 23) பாாகக **திருவாக்கின்றிறமாவது** "உமககுச சோபனமாகுக" (892) எனறெழுநத திருவாககு எனறும, அதில உமக்கு எனற பனமையால கலிககாமஞரை யும உளளடககியது ஆசிரியாகிய அததிருவாககினறிறம் எனறும உரைபபா ஆலால சுநதரமபிளளை　35

901 (வி - ரை) மணநதவரும் இடர் நீங்கியதன காரணம மேலுரைககபபடடது

**வானவர் ...பூங்கோடி** - தேவ தேவராதலின ஆககுதல, அழிததல முதலிய எலலாம வலலவா, அவரது அருள களையபபட்ட கூநதலை முன இருநதவாறே மீள வளரச செயதது எனக **புனைந்தமலர்க்குழல்** - **மணக்கோலம் புனைந்திருந்த தேனக்க மலர்க்கூந்தல்** (893), என முன அரிநதெடுககபபடடவாறே மீளவுளதா யினமை குறிததா சிறுததொணடநாயஞா சரிததததில சமைதது இலையிற படைதத கறி, மீளப பாலகனுக வாத திருவருள செயததெனறல, வளருந தனமைததாய குழல விரைவில வளாநத இது ஓா அறபுதமனறே! **பூங்கோடி** - கொடிபோலவாா **மலர்க் குழல் பெற்ற** எனற இககுறிபபினைக கொணடு, கலிககாமஞா குழல களையபபடட பெணணை எவவாறு மணபபதெனறு மனநதளாநதனா எனபாா சிலா அருணிகழச்சி காணுமபேறு பெறவிலலை எனச சிநதைதளாநதனராதலின கலிககாமஞா காணுமபடி **புனைந்தமலர்க்குழல்பெறத்** தரும இவவருள வெளிபபாடடினை இறைவா செயதருளி னா எனக. **புனைந்தமலர்க்குழல்** - அரியுமமுன, தேனககமலாககூநதல (893), மலாக கூநதல (894) எனறும, மீளககுழல வளாநதபின, இஙகுப **புனைந்தமலர்க்குழல்** என றும கூறிய ஆசிரியா இடையில, அடியில அரிநதெடுககபபடட நிலையில, **வண்டுவார் குழல்** என்று வாளா கூறிய நயம சிநதிகக

**தனம்பொழிந்து** - கயாணததில மணமகன வீடடாா தமது இயல்புககேறற படி இரவலா முதலியோாககு ஈகையிற சிறததல இயலபு அரசா சேனுபதிககுடியில வநத ஏயாகோனா தம நிலைமைககேறறவாறும, அவவாறே அரசா சேனுபதிககுடியில வநதாராயத திருவருள பெறறுப போநத மானககஞசாறனாது பெருமைககும புனைநதமலாககுழல மீளபபெறற மகளாரது பெருமைககும ஏறறவாறும, இருவாககும இடையாடிச செயத சிவபெருமானது திருவருட சிறப்பினுககேறறவாறும **தனம் பொழிந்தனர்** எனக இதனால **அது பெருவதுவையாகி உலகெலாம் தலைசிறக்க** ஓஙகி விளஙகிறறு எனபதாம

**தலைசிறத்தலாவது** - புகழ மேமபடப பாராடடபபெறுதல

**இனம்பெருக** - மணததின பினனா இருபாலின இனததவாகளும ஒருஙகு கூடிச செலலுதலாலும, கலிககாமஞருடன தம சாலபுநிறை சுறறம தலைநிறையக(885) கூடி வா, அவாகளோடு மானககஞசாறனாது நீளசுறறமெலாம (884) ஒபபரிய இப பெருவதுவையினுற பிணைககபபடடு ஒனறுகூடுதலாலும, முன வநததனைவிட மிகப பெருஙகூடடமாதலின **இனம்பெருக** எனறு தேறறம பெற எடுததுக கூறினா.

**தம்முடைய எயில்மூதூர்** - இது திருபபெருமஙகலம எனபதாம ஏயாகோன - புரா (1) பாாகக இதன சிறபபு அபபுராணம 2, 3, 4 பாடடுககளிற பேசபபடுதல

காணக இது திருபபுனகூருககு வடககில ஒரு நாழிகையளவில மடசாலையில உள ளது திருககோயிலும அதில ஏயாகோனாது திருவுருவமும உணடு சைவா பூசை நாயனாது உறசவம கொணடாடுகினறனா பன்னிருவேலி எனற கிராமமும உணடு தலசசிறபபும பிறவும விரிவாய ஏயாகோனா புராணததிற கணடுகொளக

பொழிந்த—எனபதும பாடம 36

## வேறு

902 ஒருமகள கூநத றனனை வதுவைநா ளொருவாக கீநத
பெருமையாா தனமை போறறும பெருமையென னளவிற றாமே?
மருவிய கமாிற புகக மாவடு விடே'லென னோசை
யுரிமையாற கேடக வலலாா திறமினி யுரைகக லுறறேன. ருஎ

(இ - ள்) வெளிபபடை. ஒரு மகளாாின கூநதலினை அவரது மணநாளில ஒருவ ராகிய மாவிரதியாபால அரிநது நீடடிய பெருமையுடைய மானககஞசாறனாது திறத தினைத துதிககும பெருமை எனது அளவில அடஙகுவதாகுமோ? ஆகாது பொருந திய நிலததின வெடிபபிலே சிநதிய மாவடுவினை இறைவா எறறுககொணட "விடேல" எனனு மோசையினை உரிமையினால கேடகவலலாராகிய அாிவாடடாயநாயனாது சரிததததிறததினை இனிப பேசத தொடஙகுகினறேன.

(வி ரை) இது கவிககூறறு ஆசிரியா தமது மரபினபடி இதுவரை கூறிவநத சரிததததை முடிததுககாடடி இனிப பேசபபுகும சரிததததுககுத தோறறுவாய செய கினறாா

ஒருமகள் - ஒருவர்-இரணடிடததும ஒபபறறதனமை குறிததது காணக ஒருமகள் சில நாட பிளளைபபேறினறிச சிவபெருமானை வழுததிப பெறறெடுதது அரிதின வளாதத மகளாா என முன (885 - 876) விரிததோதிய அருமைபபாடுகள எலலாம தோனற ஒருமகள் எனறாா ஒருமகள் - ஒரே மகள, இரணடாவது மகளாதல மகனாதல இலலாதவா எனற குறிபபுமாம ஒருமகள் கலிககாமனாருககு மணவாடடியாகக கொடுகக இசைவு தநதுவிடடபடியினால தமது மகள எனற உரிமை நீஙகி, அவருககு உரிமையாயினாா, ஆதலின தமமகள எனனாது ஒருமகள் எனறாா எனற தொனியும காணக திலகவதியமமையாா சரிதததிலும இவவாறு பிறாககுரியவ ராயினவரின கூநதலை அரிநது கொடுததுதவிய செயறகரிதாய எனக

கூநதல் தன்னை தன்னை எனறது சுடடுரைச சுவைபட வநதது சிறபபுமமை தொகக தெனறலுமாம

வதுவைநாள் - பெணகளின கூநதலரிநது முணடிதமாககுதல வைதவியம குறிக கும நிலைகாடடுமாதலின அதனை ஒருவரும செயயாா, மேலும மஙகலஞ செயவதாகிய மணநாளில அதனைச செயய ஒருபபடுவோரிலா, இனனும இது உயிா கொடுததலினும கொடியதாய ஆயுள உளளளவும அவவமமையாறைத துனப நிலையில வைபபதாகுமாத லின எவரும இது செயயத துணியாா எனற குறிபபுககள காணக

ஒருவர் - சைவ மாவிரத முனிவா எனற திருநீறறுநெறித தொடாபு ஒனறலலாது வேறு ஒரு தொடாசசியும பறறாத ஒருவர் எனபதும குறிபபு அவரே ஒபபறற வா - சிவபெருமான எனபதும குறிபபாம

ஈநத பெருமையார் - ஈநத - ஈதல் எனபது சொலலாறறலால இழிநதோனிரப புரை குறிககும * "ஆவிறகு நீரென றிரைபபினு நாவிற, கிரவி னிளிவநத தில" (குறள) எனபது நீதியாதலின மாவிரதியாா கூநதலைக கேடட இரபபின இழி

* "நலலாா குணஙக ளுரைபபதுவும நனறே" எனற நீதி நூலும காணக.

பும, இரபபுப பொருளாகிய கூநதல தலையின இழிநக மயிர எனபபடும இழிபும, கருதி ஈநத என இழிநதோ ரிரபபுரைக குறிபபுபபடக கூறினார போலும

ஈநத அருஙகொடையினற போநத பெருமை எனபார ஈநத பெருமை எனறார். **பெருமையார்** - ஈநத செயறகரிதாகியசெயல செயத பெரியார

**போற்றும் பெருமை** பெரியார தனமையைப போறறுவது பெருமை தருவதாம எனறுணாததியவாறு **பெருமையார் பெருமை போற்றும் தன்மை யென் னளவிற் றமே ?** எனறு கூட்டி யுரைபபதுமாம

**என் அளவிற்று ஆமே ? -** ஆகாது என ஏகார வினா எதிாமறை குறிததது

இவவாறருல இதுவரை கூறிய மானககஞசாறனாது சரிததைதச சாரமாக வடிதது எடுதது முடிததுககாட்டிய அழகு கணடுகளிக்க

**மருவிய வல்லார் திறம்** இஃது மேலவரும அரிவாட்டாயனார சரித சாரததை முகவுரையாகச சுருககி அறிவிததபடியாம இதனையே அனுவாதமுகததால அபபுராண முடிவில "**முன்னிலை கமரே**யாக முதலவனார அமுது செயயச, செஙகெலி னரிசி சிந தசசெவியுற வடுவி னோசை, யஙகிலை கேட்ட தொணடா" (924)எனறதுகாணக இங்கு "மாவடு" விடேல "எனனோசை உரிமையாற **கேட்க வல்லார்**" எனறு எதிாகாலத திலும, "வடுவின ஓசைகேட்ட தொணடா" எனறு பினனா (924) இறநத காலததி லும கூறியதும குறிககொளக.

**மருவிய கமர் - மருவிய** பொருநதிய இறைவரை ஊட்டகசொணடுபோயின செஙகெலலரிசி முதலிய சிவ **சாதனங்கள் மருவிய** (916) எனவும, அனபரது கழுததரி யும அரிவாளைப பறறும ஐயரது வீசிய திருககையும மாவடு " விடேல விடேல" என னும ஓசையும **ஒக்கவே எழுதற்கிடமாய மருவிய** (919) எனவும், முதலவா **அமுதுசெய்** யும முனனிலையாக **மருவிய** (924) எனவும வரும சரித நிகழசசிகள பலவும மருவ **மரு விய** எனற அழகு காணக

"**விடேல்" என் ஓசை** - 919 பாரகக இது மாவடுவை விசையிற கடிததலின உளதாம ஓசை "வடுவின ஓசை" (924), மாவடு "விடேல விடேல" எனறோசை யும (919) எனறவை காணக.

**உரிமை** - அவவோசையினைக கேட்கும தகுதி. இததகுதி 917 - 918 பாட்டுக களில விரிததுரைககபபட்டது காணக

**கேட்க வல்லார் திறம்** - கேட்கும உரிமையும கேட்டறகுரிய வனமையும உடையவா அனபினால உரிமையும, அனபு முறுகிய நிலையில வனமையும உளவாவன எனக **திறம்** - சரித வரலாறு **வல்லார்** எனறதறகேறப இதனைத **திறம்** எனறார வலலாராயின செயதி எனக

**பெருமையார் தம்மை**—எனறதும பாடம     37

---

**சரிதச் சுருக்கம்** —**சோழ** வளநாட்டில **கஞ்சாறூர்** எனபது செழிதத மருதநில ஊாகளிற சிறநது விளஙகுவது அவவூரில வயலகளும வாவிகளும மிளிாவன வள மிகுதியால செறபயிர கமுகளவும உயாநதுவளரும மாடஙகள மதிலகளாற சூழபபட் டுக கொடி தோரணம நிறைகுடம முதலியவறறால அலஙகரிககபபட்டுளளன வழிவழி யாய உழவு தொழிலிற சிறநத வேளாண பழஙகுடிகள அஙகுவிளஙகின வீதிகளில திருவிழா முழககஙகளும மிககன

அவவூரில மெயபபொருளை அறிநதுணாநதாராய, **வேளாண் குலத்தின்** சேமநிதி போனறாராய அரசா **சேனாபதிக் குடி** விளஙக **மானக்கஞ்சாறனார்** அவதரிததாா அவா, அரனடியாரகளே தமமையும தமது உடைமைகளையும உடையவாகளெனறு உணாநது, அவாகளுககே ஏவல செயயும தொழிலபூணடு, அவாகள வேணடுவனவறறைக

கூறுவதன் முன் குறிப்பறிந்து கொடுத்து வந்தனர். அப்பெரியவர்க்கு முன் சிலகாலம் பிள்ளைப் பேறில்லாமலிருந்ததனால் மகப்பேறு கருதிச் சிவபெருமானை வழுத்தினார். அவரது திருவருளினாலே இப் பிறவிக் கொடுஞ்சூழலினின்றும் பிழைக்கும் நெறியைத் தமக்குத் தேடித்தரும் ஒரு பெண்மகவை அவர் பெற்றெடுத்தார். நகரமெல்லாம் களி சிறந்து மகிழ, எல்லார்க்கும் பெருங்கொடையளித்து அப்பெண்மகவைச் சிறப்பாக வளர்த்து வந்தனர். மகவும் வளர்ச்சியடைந்து உரிய வயதில் மணப்பருவமடைந்தது.

அந்தப் பெண்கொடியை ஏயர்கோனாருக்கு மணம் செய்ய முதியோர்கள் வந்து மகட்பேசினர். மானக்கஞ்சாறனாரும் ‘எந்தம் மரபினுக்குத் தகும் தன்மையில் இது பொருந்தும்’’ என்று மணமிசைந்தனர். இதனை அம்முதியோர்கள் அறிவிப்ப ஏயர்கோனாரும் மிகவிரும்பி மகிழ்ந்தனர். இருதிறத்தார்க்கும் பொருந்தக் கலியாண நாளினை மதி நூல் வல்லவர் வகுத்தனர். மானக்கஞ்சாறனாரது திருமனையிலும் நகரிலும் மண அணிகள் செய்தனர். ஏயர்கோனாரும் தமது சால்பு நிறை சுற்றம் நிறைந்து சூழ மணவெழுச்சியின் அணி விளங்கக் கஞ்சாறூரின் மருங்கு அணைவாராயினர்.

மணஎழுச்சி கஞ்சாறூரில் வந்து அணைவதற்கு முன், மகட்பெற்ற வள்ளலாரது உள்ளநிலைப் பொருளாகிய சிவபெருமான் ஒரு மாவிரத முனிவராகக் கோலம் பூண்டு உலகம் உய்யும் பொருட்டு அங்கு வருவாராயினர். அவரது நெற்றியில் மூன்று கீற்றுக இட்ட திருநீறு - குடுமி வைத்து ஒழுங்கின் மயிர்களைந்த திருமுடி - அக்குடுமி நுனியிற் கோத்த எலும்புமணி - காதில் வெள்ளெலும்பாலாகிய குண்டலம் - மார்பில் எலும்புமணித் தாழ்வடம் - தோளில் யோகப் பட்டிகையும் மயிர்க்கயிற்றின் பூணூலும் - ஒருகையில் திருநீற்றுப் பொக்கணம் - ஒரு முன்கையில் எலும்பு மணி ஒன்று கோத்த கயிறு - இடையில் கோவணமும் அதன்மேல் அசைகின்ற உடையுமாய் - இவ்வாறு நிலந்தோய்ந்த எழுதரிய திருவடியும் அதில் திருப்பஞ்சமுத்திரையுமாக விளங்கத், திருமேனி முழுதும் நெருப்பை மறைத்த பொடிபோலத் திருநீற்றினைப் பரக்கப் பூசிக்கொண்டு, தமது திருவடிகள் நீடும் மனமுடைய அன்பரது திருமனையினுட் புகுந்தனர். அதுகண்ட பெருந்தொண்டனார் மகிழ்ந்து எதிர் எழுந்து “தேவரீர் இவ்விடத்தே வருகையினால் அடியேன் உய்ந்தேன்” என்று அன்போடும் பணிந்தார். அவர் “இங்கு மங்கலம் நிகழ்வதென்ன?” என்று கேட்க, அன்பர் “அடியேன் பெற்ற பெண்கொடியின் மணம்” என்றனர். அவர் “மற்றுமக்குச் சோபனம் ஆகுக” என்று ஆசி கூறினர். உடனே மானக்கஞ்சாறனார் பணிந்து, மனையினுட் சென்று, மணக் கோலம் புனைந்திருந்த திருமகளாரைக் கொணர்ந்து, அவரது திருவடியிற் பணிவித்தனர். மாவிரதியாராகிய பெருமான் மணமகளாரது மேகந்தழைத்தது போல நீண்டு வளர்ந்த மலர்க் கூந்தற்புறம் நோக்கித், தொண்டரைப் பார்த்து, “இவளது மயிர் நமக்குப் பஞ்சவடிக்கு ஆகும்” என்றார். அது கேட்ட தொண்டனார் “இவர் இதனைப் பொருட் படுத்தி ‘நமக்கு ஆம்’ எனக் கேட்கும் பேறு பெற்றேன்” என்று கொண்டு, உடனே உடைவாளை உருவி அக்கூந்தலை அடியில் அரிந்து அவர் கையில் நீட்டினார். அதனை வாங்குவார் போல நின்ற அவர் அந்நிலையின் மறைந்து, தமது பழைய மழவிடைமேல் பார்வதியம்மையாருடன் ஆகாயத்தில் வந்து காட்சி தந்தனர். தொழும்பனார் தொழுது வீழ்ந்தெழுந்து மெய்ம்மறந்து நின்றனர். கங்கைச்சடையிற் சூடிய அருட்கூத்தனார் “நம்மிடத்தில் உனக்குள்ள அன்பின் தன்மையை உலகமெலாம் அறியச்செய்தோம்” என்று மெய்யன்பர்க்குத் தமது திருவருளினைச் செய்தனர். அவரை என்றும் துதித்திருக்கும் மீளாநெறியாகிய பெரும்பேற்றினை அன்பனார் நேரே பெற்றனர். இறைவரும் இமையோர் சூழ்ந்து துதிக்க மறைந்தருளினர்.

இதுபொழுதில், காண்பவர் கண் களிகொள்ள மணமகனாராகிய கலிக்காமனார் மணமனையினிற் புகுந்தனர். மனத்தாலும் நினைத்தற்கரிய அச்செயலை அங்குக் கூடி

யிருந்தவாற்றைக் கேட்டு மகிழ்ந்து அரனருளைப் போற்றினார். இதனைக் கண்டியும்பேறு தமக்குக் கிடைக்கவில்லையே என்று மனந்தளர்ந்தனர். இறைவன் அருளிய திருவாக்கின் திறம் கேட்டு மனத்தளர்ச்சி நீங்கினார். மணமகளார், புனைந்த மலர்க்கூந்தலை மீளத் திருவருளால் முன்போலப் பெற்றனர். கலிக்காமனார் அவரை மணஞ்செய்துகொண்டு, தக்கவாறு யாவர்க்கும் நிதிமழை பொழிந்து, மணமகிழ்ச்சி உலகெங்கும் சிறக்கச்செய்து பெருகிய இனத்தாருடன் தமது நகரத்தினைச் சென்றணைந்தனர்.

---

**தலவிசேடம்** — **கஞ்சாறூர்** - இத்தலம் ஆனதாண்டவபுரம் என்னும் தென்னிந்திய இருப்புப்பாதை நிலயம் உள்ள ஊராம் என்றறியப்படுகின்றது. அந்நிலயத்திலிருந்து ஊருக்குள் கிழக்கில் ¼ நாழிகை யளவில் பழைய சிவாலயம் உண்டு. இப்போது புதுப்பிக்கப்பட்டுள்ளது. ஆனந்த தாண்டவபுரம் என்பது ஆனதாண்டவபுரம் என மருவி வழங்குகின்றது. இத்தலத்துச் சுவாமி பெயர் **பஞ்சவடீசுவரர்** என்பதாம். இது இச்சரித்தத்தைத் தொடர்ந்துள்ளது காண்க. பாரிசாதவனேசுவரர், பாரத்துவாசேசுவரர், ஆனந்தமுனீசுவரர் என்ற பேர்களும் உண்டென்று தலபுராணம் கூறும். இத்தலத்தின் கிழக்கே 4 நாழிகை யளவில் கஞ்சனூபுரம் என மருவி வழங்கும் கஞ்சநகரம் என்ற ஊரும், வடக்கே 6 நாழிகையளவில் வடகஞ்சாறு என வழங்குவதோர் ஊரும் உள்ளன. இவற்றால் இத்தலமே நாயனாரது ஊர் என்றது உறுதிப்படுகின்றது. 45 ஆண்டுகளின்முன் இத்தலத்தின் அருகில் மிகப் பழயவாகிய சில செப்புத் திருவுருவங்கள் நிலத்தினின்றும் எடுக்கப்பட்டன. அவற்றுள் விநாயகர் - சோமாக்கந்தர் - உமையம்மையார் - சண்டேசர் - பிச்சாடனர் - **சடாநாதர் என்னும் மாவிரதியார்-மானக் கஞ்சாறனூர் - அப்பர் சுவாமிகள் - திருஞானசம்பந்த சுவாமிகள் - காட்சி நாதர் என்னும் கல்யாணசுந்தரர்** முதலிய பழந் திருவுருவங்கள் இருந்தன. அவை இத்திருக்கோயிலில் வைத்துப் பூசிக்கப்படுகின்றன. **மாவிரதியார்** திருக்கோலமும் நாயனார் திருக்கோலமும் இப்புராணத்தினுட் கூறப்படும் எல்லா அடையாளங்களுடன் விளங்குகின்றன. மாவிரதியார் - நாயனார் - திருவுருவங்களை இவ்வாறெடுத்துப் பூசிக்கப்பட்ட நாள் முதல் இவ்வூர் சீரும் செல்வமும் செழிக்க ஓங்கி வருகின்றதென்றும் அறியப்படுகின்றது. இவ்வூரின் மேல்புறம் வல்லத்துவழி என வழங்கும் வெல்லத்து வழியின் நிலங்கள் இப்போதும் கரும்புப் பயிர் மிகச் செழித்து விளைவன என்று பேர்பெற்றன. இது "வயற்கரும்பின் கமழ்சாறூர் கஞ்சாறூர்" என்ற இப்புராண முதற் பாசுர உண்மையை விளக்கி நிற்கின்றது. "கஞ்சனூர் **கஞ்சாறு** பஞ்சாக்கையும் கயிலாய நாதனையே காணலாமே" என்ற க்ஷேத்திரக்கோவைத் திருத்தாண்டகத்தில் இத்தலம் போற்றப்பட்டிருத்தலும் இதன் பழமையினையும் மேன்மையினையும் விளக்கும்.

இத்தலத்துக்கு வடமொழியில் ஒரு தல புராணம் உண்டு. அது காந்தமா புராணத்தில் க்ஷேத்திர காண்டம் - உபரிபாகம் 61 முதல் 69 வரை உள்ள அத்தியாயங்களில் விரிக்கப்பட்டதென்பர். அதில் இந்நாயனார் பெயர் மானகாந்தன் என வழங்கப்படுகின்றது. நாயனாரது சரிதம் சில சிறு மாறுதல்களுடன் இப்புராணம் பேசுகின்றது. மானக்கஞ்சாறனாரது மனைவியார் கல்யாணசுந்தரி எனவும், கலிக்காமனாருக்குச் சந்திரவாணன் எனவும் அவரது பிதா சந்திரகாந்தன் எனவும், இவ்வாறு தமக்குத் தோற்றிய வாறு வடமொழியிற் சரித வரலாறும் பெயர்களும் புனைந்து இத்தமிழ்ப் புராண சரித்தத்தை வடவர் வழங்கினர் என்ப. பஞ்சவடி என்பதனை ஐந்து கயிறு என்ப பொருள் கொண்டு இதில் விரிக்கப்படுகின்றதும் காணலாம்.

---

**கற்பனை :—1.** நூறபயன னகுணாவோராற பாடபபடுவது நகாஙகளுககுச சிறபபுத தருவதாம

2 அவவவவிடஙகளில நிகழநத சிறநத சரிதககுறிபபுககளை அஙகுச் சூழநதுளள நிலம நீா தாவா முதலிய இயறகைபபொருளகளே காட்டி நிறபனவாகக கணடு காட்டு மியலபு சிறநத பெருங்கவிகளில அமைவதாம

3. அறததினிலையின சாலபுடையது மனையறம, வினைகளிற சாலபுடையது உழவு

4. விழாககள் மலிவது நகாஙகளின சிறபபுககாட்டும.

5 அரசா சேனாபதியாயிருததலும வேளாளாகளுககு உரியது அவவகையில வழிவழி வரும குடிகளும உணடு

6. மெயபபொருளை அறிநதுணாநத பெரியோாகள சிவபெருமான தொண டர்ககே ஏவல செயவா தமமையும தம பொருளகளையும அவாகளது உடைமைப பொருளெனறெணணி அவா வேணடுவனவறறைக குறிபபறிநது கொடுபபா இவை பெருஞ சிவபுண்ணியஙகளாயச சிவவாழவைத தேடிக்கொடுப்பன

7 சிவபெருமானது வழிபாடு நனமககட்பேறு முதலிய உலக போகப பயன களையும இறுதியில வீடுபேறறையும தாவவலலது

8. பெணமகப பேறும ஒருவறகுப பிறவியினினறும பிழைககும உயாநெறியி னைக கூட்டுவிககும.

9. ஒதத மாபும அானபால ஒதத அனபும உடையாாககே உயாகுடிப்பிறநதோா மகட்கொடை நோவா

10 மணததாற பிணைககபபடும இருதிறததாாககும நோவாய நறபயனறாப பொருநதுமாறு மண நாள வகுததல மதிநூல வலலவா கடன

11. திருநீறறினை நிறையபபூசி, எலுமபணிகள, மயிாககயிறறிகிய பஞசவடி, யோகபட்டிகை, திருநீறறுப பொககணம, கடிசூததிர உடை முதலியன தாஙகி வருதல மாவிரதர் எனற சைவ உட்சமயததாா மேறகொளளும கோலமாம

12. மணமககளைப பெரியோாபாற பணிவிததது அவாகளது ஆசிபெறச செயதல முநதையோா மாபு

13. ஒரு மகளின மலாககூநதலை மணநாளில அடியில அரிநது (அடியாாககு) மாவிரதியாாககுத தாவவலலது உறைபபுடைய பேரனபின திறம

14 இவவாறு பறறுககள அறககளையக கணட நிலையே இறைவனை வெளிபபடக காணும நிலையாம. அனபு முறுகி விளைதலினகண அருளும வெளிபபடத தோனறும. தமது எஞசினினற இடது கணணையும தோணட அமபினை ஊனறியபோது கணணப ருககும, கறபாறையில தலையை மோத முறபட்டபோது திருககுறிபபுத தொணடருக கும இறைவனது வளையணிநத இடதுகை வெளிபபடத தோனறி அசசெயலகளைத தடுததுப பேறுதநத சரிதஙகளும அவை போனறனவும இஙகு நினைவுகூாதத தககன

15. தமது ஒரு மகளாரின மலாககூநதலை மணநாளில அடியோடு அரிநத அக கணமே உலகப்பறறு அடியோடு அரிநதெடுககபபட்டதாம. “அறறது பறறெனிலுறறது வீடு”, “அறறவாக கறறசிவன” எனபன காணக

16 எநதக காலததில எபபொருளைக கொடுததல பிறாககு இயலாததாகுமோ அதனைக கொடுததலே செயறகரிய செயகை தாமும மனைவி மககள சுறறமும இரு பகல உணவிலலாது வருநதிய நிலையில, நெறகொளளக கொணடுசெனற தாலியினைக், குஙகுலியததிறகு மாறிய அரிய செயதியும, உணவிலலாது தாம வருநதவும, வநத அடி யாாககு உணவளிகக வயலில விதைதத நெலலைவாரியும வீட்டுக கூரையை அறுததும அமுது சமைதது அருளுசெயலும அவவாறாயின பிறவும இஙகு எணணததககன.

18 அனபினறிறததை யாவரும அறியசசெயது உலகினரை நலவழிப்படுததி ஆட்கொளளுதல சிவபெருமானது பேருட்டிறம அடியாாகளபால சிவன வெளிப பட எழுநதருளிவநது செயயும பேருட்டிருவிளையாடலகள பலவும இநத வுளளுறை கொணடன

19 பெரியோாகளை அவாகளது பெயாாற சுட்டி வழஙகததானும ஒருப்படமாட டாா நலலோா. இஙகு இநநாயனாாது இயறபெயா விளஙகவிலலை. மானமுடைய கஞசாறறூரினா எனப பொருளபடும பெரியவா என மானககஞசாறனாா எனறே உல கம வழஙகியது காணக **மானம்** - பெருமை எனப இது உயாகுடிப பிறநதாாககு உரிய குணஙகளுள முதனமை பெறறுக குடிபபிறபபினை நிறுததுதலுடையதெனறும, அஃ தாவது எஞஞானறும தநநிலையிற றாழாமையும தெயவததாற றாழ்வு வநதுழி உயிா வாழாமையுமாம எனறும உரைபபா ஆசிரியா பரிமேலழகா இசசரிததததில மூன றிடஙகளில மட்டும (872 - 882 - 893) மானககஞசாறனாா எனவும, இரணடிடஙகளில கஞசாறா (883 - 885) எனவும வழஙகிய ஆசிரியா இவவாறு சுட்டுதல தானும அஞசிப பெரியவா (875), மலாககழலகளறியாமை யறியாதாா (875), வளளலாா (884), அடிநீடு மனததனபா (890), சிறநத பெருநதொணடனாா (891), நலமிகுமனபா (892), மெயததொணடா (894), தொழுமபா (897), மெயயனபா (897), நினறவா் முனநினற வா (898), தொணடனாா (899), பெருமையாா (902) எனறு பல திறததானும சுட்டிக் கூறுதல கருதததககது

மானக்கஞ்சாறநாயனாாபுராண முறறும்



# 13. அரிவாட்டாயநாயனார்புராணம்



தொகை

(மலைமலிநத தோளவளளல மானககஞ சாறன)
எஞசாத வாட்டாய னடியாாககு மடியேன.

—திருத்தொண்டத்தொகை

வகை

வளளற பிராறகமு தேநதி வருவோ னுகலு"மிஙகே
வெளளச சடையா! யமுதுசெய யாவிடி லெனறலையைத
தளளத தகு "மெனறு வாட்பூட் டியதட்ங கையினனகாண
அளளற பழனக கணமங் கலத்தரி வாட்டாயனே

விரி

903. வருபபு னறபொன்னி நாட்டொரு வாழ்பதி
சுரும்பு வணடொடு சூழ்நது முரனறிட
விருபபு மெனக ணுடையவாய விட்டுநீள
கரும்பு தேனபொழி யுஙகண மங்கலம்.

புராணம் :—அரிவாட்டாயர் என்ற பெயருடைய நாயனாரது சரித வரலாறும் பண்புங் கூறும் பகுதி. நிறுத்தமுறையானே இலைமலிந்தசருக்கத்தில் ஆறாவதாய அரிவாட்டாயரது சரிதங்கூறத் தொடங்குகின்றார்.

தொகை :—குறைவுபடாத அரிவாளினையுடைய தாயனாரது அடியார்களுக்கு நான் அடியேனாவேன். நாடோறும் சிவனுக்கு ஊட்டிவந்த செந்நெல்லரிசி முதலியன தமது நிலையிற்றாழ்வு வருமாறு அவை கமரிற் சிந்தியபோது உலகில் யான் எனது என்று உள்ள பற்றுக்கள் ஒன்றும் எஞ்சாது முழுவதும் அற, உயிரினை நீக்கத் துணிந்து கழுத்தை அரிந்து, தாழ்வு வாராமற் காத்த செய்தி குறிக்க எஞ்சாத வாள் என்றார். வாள் - நெல்லறுக்கும் அரிவாள். தாயர்-நாயனாரது பெயர். இதன் விரி 923ல் பார்க்க.

வகை :—வள்ளலாகிய சிவபெருமானுக்கு அமுது ஏந்தி வருபவர் அப்பொருள்கள் நிலத்தின் கமரிற் சிந்த, "கங்கைசூடிய சடையரே! இவற்றை இங்கே அமுது செய்யாவிடில் என் தலையை அரிந்து தள்ளுதல் தகுதி" என்று அரிவாளைக் கழுத்திற் பூட்டி அரிந்த வலிய கையினை உடையவர், சேலுடைய வயல்சூழ்ந்த கணமங்கலத்தில் அவதரித்த அரிவாட்டாயர் என்பவரேயாம்.

வள்ளற்பிரான் - பேரருட் கொடையுடையவர்-சிவபெருமான். அமுது - இங்குத் திருவமுதுக்குரிய செந்நெல்லரிசியும், செங்கீரையும், மாவடுவும் குறித்தன. உகலும் - உம்மீற்று வினையெச்சம். உகுதல் - சிந்துதல். வெள்ளம் - கங்கை. தலையைத் தள்ளத்தகும் - 918 பார்க்க. தடங்கை - தலையை உடலினின்றும் வேறு தள்ளுமாறு தம் கழுத்தை அரியும் பெருவலிமை குறித்தது. கணமங்கலம் - நாயனாரது ஊர்.

முதனூல் பெரும் சரித நிகழ்ச்சிக் குறிப்பும் பேசிற்று. வகைநூல் பேரும் ஊரும் சரிதநிகழ்ச்சியும் பண்பும் வகுத்தோதியது. இவை விரிந்தபடியை விரிநூலுட் காண்க.

903. (இ - ள்) வெளிப்படை. புனல் வருகின்ற காவிரி பாயும் நாட்டில் வாழ்வுடைய ஒரு பதியாகும், சுரும்புகள் வண்டுகளோடு சூழ்ந்து முரல, விரும்பப்படும் மெல்லிய கண்களுடைய வாய் விட்டு நீளும் கரும்பு தேனினைச் சொரிதற்கிடமாகிய கணமங்கலம் என்ற ஊர்.

(வி - ரை) புனல்வரும் பொன்னி - என மாற்றுக. என்றும் பொய்க்காமலும் பருவம் மாறாமலும் நீர் வருகின்ற காவிரி என்க. "பூந்தண் பொன்னி யெந்நாளும் பொய்யார் தளிக்கும் புனல்நாடு" (சண்டீசர் புரா 1) என்றது காண்க. இவ்வாறன்றி வருபுனல் என்றதற்கு அகத்தியரது சிறிய கமண்டலத்தினின்றும் பெருகிவரும் என்றுரைப்பாருமுண்டு.

வாழ் ஒருபதி எனக் வாழ்பதி - முக்காலத்துக்கும் பொதுவாகிய வினைத்தொகை. பதியில் உள்ளாரது வாழ்வு பதியின் மேலேற்றப்பட்டது. வாழ்விக்கும்பதி எனப் பிறவினையாகப் பொருள் கொள்ளலுமாம். ஒருபதி - ஒரு - ஒப்பற்ற. இஃது இச்சரித நிகழ்ச்சிப் பெருமையின் விளைவாகிய சிறப்பு.

சுரும்பு - ஆண் வண்டு, வண்டு - பெண் வண்டு. இது மரபு வழக்கு. ஒரு உருபினைப் பெண்வண்டொடு புணர்த்திக் கூறியது சிறப்பு நோக்கி. "சோலையில் வண்டினங்கள் சுரும்போடிசை முரல" (திருவாரூர் - வியாழக்குறிஞ்சி 2), "தேனும் வண்டு மின்னிசை பாடுந் திருப்பாசூர்" (காந்தாரம்-11), "சுரும்புந் தும்பியும் சூழ்சடையார்" - (தண்டலைநீணெறி - 1) என்ற ஆளுடையபிள்ளையார் தேவாரங்களும் பிறவுங் காண்க. வண்டு - தேன் வண்டு என்பாருமுண்டு.

முரன்றிட - பண் பாடி ஒலிக்க ("கமலவண்டு), தூய நீறுபூனை தொண்டர்கள் என்னச் சென்று சென்றுமுரல்கின்றன கண்டு" (242) பார்க்க. முரலச் சிறப்பக் கரும்பு தேன் சொரியும் கணமங்கலம் எனக் கூட்டிக்கொள்க. இவ்வாறன்றி, முரன்றிட - விரும்பும் மென்கண் உடையக் கரும்பு வாய்விட்டுத் தேன் சொரியும் என்று



1. கணமஙகலததிடல

—பாடடு - 917 - பககம - சகளகூ (கமா)

2. அரிவாடடாய நாயனா



தணடலைநீணெறி (ஊடடிததணடலை)

அரிவாடடாயநாயனா வழிபட்ட கோயில

—பாடடு - 903 - பககம - ககசுரு

தொடர்புபடுத்திக் கூட்டி, **மூரன்றிட** - மூரன்றிடலால், மெல்லியவாயின கண்கள் உடையவே கரும்பு தேன் சொரியும் என்று காரணகாரியப்பொருளில் வந்த வினையெச்சமாக உரைத்தலுமாம். இப்பொருளில், நல்ல பாட்டுக்கேட்டோர் உள்ளமுருகிக் கண்ணீர் பெருக்குமியல்பு குறித்த தற்குறிப்பேற்ற அணியாம். இசையினுக்குச் சராசர வுயிர்களும் அசேதனங்களும் இளகுவன என்பது இசையினியல்பாம். ஆனாயநாயனார் புராணம் 30, 31, 34, 36 பாட்டுக்கள் பார்க்க. "மருவியகால் விசைத்தசையா, மரங் கண்மலர்ச் சினைசலியா; கருவரைவீ ழருவிகளுங் கான்யாறுங் கலித்தோடா" (ஷை 35) என்றதும் பிறவும் காண்க. இசை பாடினால் அது கேட்டுப் பசுக்கள் அதிகம் பால் சுரக்கும் என்பதும் உயிர்நூற் சாத்திரிகள் கண்டவுண்மை. முருகா - புரா - (4), திருநா - புரா - 158-ம் பார்க்க.

மூரன்றிடத் தேன் பொழியும் என்றது பசியாற்றாது கதறுவோர்க்கு உணவு ஈயும் கருணையாளரியல்பையும் நினைவூட்டுவது காண்க.

**மூரன்றிட மென்கண் உடைய** - மென்கண் ஆகி உடைய வண்டுகள் பண்முரல, வலிய கணுக்கள் இளகி மெலியவாயின. இவ்வாறு கணுக்கள் உண்மெலிதலினால் அவற்றின் மேற்பரவியதோலும் உடன்பொதிந்த தேனைக் கட்டித் தாங்கமாட்டாது **விட்டு** வாய்பிளந்தது, வாய்விடவே, மிக உள்ளூறிய தேன் வெளிச்சொரிந்தது எனக் கண்டுகொள்க. கரும்புகளிற் கணுக்களின் பாகங்கள் கடினமானவை. இவ்வா றன்றி **மென்கண் உடைய** என்றதற்கு மெல்லிய கண்களுடைய என்று கூறும் உரை பொருந்தாமை யறிக. "கருஞ்சட்ட மிளகவளர் கரும்பு" என்ற ஆளுடைய பிள்ளையாரது திருக்கழுமலத் (மேகராகக் குறிஞ்சி) தேவாரத்தினும் கரும்புக்கணுக் களின் வன்மை காட்டப்படுதல் காண்க. கரும்பின் கணு அல்லாத பகுதி மெல்லி யனவாதலும் காண்க

கண், வாய் என்ற உறுப்புக்களின் பெயர்களுள் தொனித்தலும், கணமங்கலம் என்ற பெயருக்கேற்பப் பலவகை மங்கலப் பொருள்களையும் சுட்டுதலும் காண்க

**தேன்** - இங்கு இனிமையுடைய கருப்பஞ்சாறு குறித்தது. **சோரியும்** - சொரி தற் கிடமாகிய.

இத்தலம் (கணமங்கலம்) திருத்தண்டலை நீணெறிக்கு மிக அணிமையில் (அதனின் றும் ¼ நாழிகை) உள்ளதென் றறியப்படுதலின் அதனை நினைவிற்கொண்டு, நம் போலியருக்கு நினைவூட்டும் பொருட்டு அத்தலத்தின் ஆளுடைய பிள்ளையாரது "**விரும்பு** திங்களுங் கங்கையும் விம்மவே, **சுரும்பு தும்பியுஞ்** சூழ்சடை யார்க்கிடங், **கரும்புஞ் செந்நெலுங்** காய்கமு கின்வளம், நெருங்கு தண்டலை நீணெறி காண்மினே" என்ற திருப்பதிக முதற்பாசுரத்தின் சொல்லும், பொருளும், யாப்பும் ஆதியவற்றை அடி யொற்றியே ஆசிரியர் அமைத்திருத்தல் சிந்திக்கற்பாலது. இப்பாட்டிற் **கரும்பும்**, வரும் பாட்டிற் **செந்நெல்லுங்** கூறியதும் காண்க.

**கணமங்கலம்** - தலவிசேடம் பார்க்க. 1

904. செந்நெ லார்வயற் கட்டசெந் தாமரை
முன்னர் நந்துமிழ் முத்தஞ் சொரிந்திடத்
துன்னு மள்ளர்கை மேற்கொண்டு தோன்றுவார்
மன்னு பங்கய மாநிதி போன்றுளார். ௨

(இ - ள்) வெளிப்படை. செந்நெற் பயிர் நிறைந்த வயல்களிற் களையாகப் பிடுங் கப்பட்ட தாமரைப் பூக்களை, அவற்றில் முன்னமே சங்கு ஈன்று தங்கிய முத்துக்களைச் சொரிந்திடும்படி நெருங்கிய மள்ளர்கள் கையிற்கொண்டு தோன்றுவதனால், (அவர்கள்) பங்கய மாநிதி கொண்ட தேவர்கள் போன்று உள்ளார்கள்.

(வி - ரை) **செந்நெல்** - கார் நெல்லினும் செந்நெல் சிறந்தது என்றியும் இச் சரித நிகழ்ச்சியினைக் காட்டும் சிறப்பும் வாய்ந்தது. 908 - 913 பார்க்க. எங்கும் செந்நெல்லேயாகி விளங்கும் தன்மை குறிப்பிற்காட்டிய படியுமாம்.

**கட்ட** - களையப்பட்ட. களைகட்டல் என்பது உழவு மரபு வழக்கு. தாமரையைக் களையாகக் களையும் வயல்கள் இந்நாளிலும் பல இடங்களிற் காணவுள்ளன.

**செந்தாமரை, முன்னர் நந்து உமிழ் முத்தம், சொரிந்திட** - தாமரைகளில் முத்து விளைவதில்லை. அவை முத்தம் சொரிந்திடல் வேண்டுமாயின் பிற இடத்தினின்று பெற்றிருத்தல் வேண்டும். களையப்படுமுன்பே சங்குகள் அவற்றில் ஏறி முத்துக்களை ஈன்றன. அம்முத்துக்கள் அங்குத் தங்கிக்கிடந்தன. பின்னாகக் களையப்பட்ட தாமரை அவற்றைச் சொரிந்தன என இத்துணையும் அடக்கிச் சுருங்கக்கூறிய அழகு காண்க.

**மன்னு பங்கய மாநிதி** - பதுமநிதி. தாமரை வடிவுடையதொரு நிதி. அது குறையாச் செல்வமுடையது. இதுபோன்று சங்கு வடிவமுள்ள சங்கநிதி என்றதொரு நிதியும் உண்டு. இவையிரண்டினையும் நிதிக்கிழவனாகிய குபேரன் உடையவன் என்பது மரபு. "சங்கநிதி பதுமநிதி யிரண்டுந் தந்து" என்பது திருத்தாண்டகம். **மன்னு** - எடுக்க எடுக்கக் குறையாது நிலைத்த தன்மை குறித்தது. **மாநிதி** என்றதனாலும் குறையாத பெருமை குறிக்கப்பட்டது. **நிதி** நிதியுடைய தேவர். ஆகுபெயர். 2

905. வளத்தின் மீடும் பதியதன் கணவரி
யுளர்த்து மைம்பா லுடையோர் முகத்தினும்,
களத்தின் மீதும், கயல்பாய் வயல்யுற
குளத்தும், நீளும் குழையுடை நீலங்கள். ௩

(இ - ள்) வளத்தில் . முகத்தினும் - வளத்தால் நீடும் அந்தப் பதியில் வண்டுகள் குடைகின்ற கூந்தலினையுடைய பெண்களின் முகத்திலும், **குழை உடை நீலங்கள் நீளும்** - குழையை எட்டுகின்ற நீல மலர்போன்ற கண்கள் நீள்வன, களத்தின் மீதும் - (அவர்களுடைய) கழுத்தின் மேலும், **குழை உடை நீலங்கள் நீளும்** - குழைவாகச் செய்யப்பட்ட நீலமணிகளையுடைய அணிகள் விளங்குவன, கயல் பாய் குளத்தும் - கயல் மீன்கள் பாய்வதற்கிடமாகிய வயல்களின் பக்கத்துள்ள குளத்திலும், **குழை உடை நீலங்கள் நீளும்** - குழைகளை உடைய நீலோற்பலங்கள் நீண்டு படர்ந்து பூக்கும்.

(வி - ரை) முகத்தினும், களத்தின் மீதும், குளத்தும், குழை உடை நீலங்கள் நீளும் என்று தனித்தனி கூட்டி முடித்துக் கொள்க.

**வரி உளர்த்தும் முகத்தும் நீளும்** - **வரி** - வண்டுகள். **உளர்த்துதல்** - ஊதிக் குடைதல். **ஐம்பால்** - முடி (உச்சியின் முடித்தல்), குழல் (சுருட்டி முடித்தல்), தொங்கல் (முடிந்து தொங்க விடுதல்), பனிச்சை(பின்னி விடுதல்), சுருள் (பின் சொருகுதலும் பல வகையாகச் சுருட்டி முடிதலும்) என்ற ஐந்துவகையாகப் புனையப் படுதலின் கூந்தலினை ஐம்பால் என வழங்குதல் மரபு *

**முகத்தினும்** - முகத்தினும், குறித்த ஏனையிடங்களினும் என உம்மை எண்ணும்மை. **முகத்தில் குழை உடை நீலங்கள் நீளுதலாவது** முகத்தில் உள்ள கண்கள் காதளவு நீண்டிருத்தல். இங்குக் **குழை** - காதணியையும், **நீலம்** - நீலமலர் போன்ற கண்

* இந்நாளில் இது மாறி மற்றும் பலவேறு வகைகளாகப் புனையப்படுதலும், ஒருவகையாலும் புனையப்படாமல் தூங்கவிடப் படுதலும், குறுகத் தறித்துப் பாப்ப விடுதலும் ஆகிய வழக்குகள் புகுந்து விட்டமையின் ஐம்பால் என்பது இடுகுறி யளவாய் ஒழிந்து நின்றது.

களையும உணாததின. காதளவும நீணடிருததலால காதில அணிநத குழையைக கணகள எட்டுகின்றன அதனால காதுகளேயனறிக கணகளும குழையுடையன என்று சொலலததககனவாய நீணடன என்ற குறிபபுமாம. **குழை உடை** - குழைகளை உடைககின்ற என்றுரைபபாருமுணடு.

**களத்தின் மீதும் - குழையுடை நீலங்கள் நீளும்** - குழைவையுடைய வேலைப பாடமைநத நீல மணிகள பொருநதிய நீணட அணிகள (அபபெணகளின) கழுததில விளஙகின. இஙகுக **குழை** - குழைவாகிய வடிவையும, **நீலம்** - நீல மணிகளையும **களம்** - கழுததையும உணாததினறன நீல மணிகளை அழுததிக குழைநது நீணடு தோஙகும சஙகிலிபோன்ற அணிகள கழுததிலணியப படுவது அந்நாளின வழககுப் போலும **களம்** - நெறகளம என்று கொணடு நெறகளததிலும நீலஙகள (கொடிகள) நீணடு படரும எனபா இராமநாதச செட்டியார

**கயல். .குளத்தும் குழை உடை நீலங்கள் நீளும்** - வயலகளி னயலிற குளஙகள உளளன. அவவயலகளின அயலிலுளள குளஙகளிலுள நீணடு படாநத நீலம மலாகளைப பூததன வயலகளிலும அயலிற குளததிலும என்றுரைபபினு மமையும. இஙகுக **குழை** - கொடியின இலைகளையும, மலரின இதழகளையும, **நீலங்கள்** - நீல மலாகளையும அககொடிகளையும உணாததின **நீளும்** - படாநது வளாநது செழிககும.

மேற பாட்டிற **பங்கயமாநிதியுடையார் போன்று தோன்றும் மள்ளர்கள்** என்றது, வயலகள எலலாம செந நெலலேயாகி விளையககணடு, தாம உணவின்றி வருநதியும, இஃதடியேன செயத புணணியம என்று மகிழநது, நெலலறுததுப பெறும செநநெற கூலியெலலாம இறைவனை ஊட்டிய குறையா நிதிபோன்ற வளளல தாயனாரையும, இபபாட்டில, **முகத்தினும் குழையுடை நீலங்கள் நீளும்** என்றது, தாயனாது அனபின செயலகளையும, அவா கொணடு சென்ற பொருளகள கமரில வீழநததனையும, அவா தமது ஊட்டியை யரிநததனையும, இறைவனது திருககை அவா கையைப பிடிகக ஊறு நீஙகியதனையும தம கணகளாற கணட மனைவியாரையும குறிப்பாலுணாததுவது சிநதிகக

**நீடும் குழை யடை**—எனபதும பாடம 3

906. அககு லபபதி தனனி லறநெறித்
தககமாமனை வாழ்ககையிற றஙகினா
தொகக மாநிதித தொனமையி லோஙகிய
மிகக செலவததுவேளாண டலைமையாா.

**(இ - ள்)** வெளிபபடை. அநத நலலபதியில தகுதி வாயநத பெருமையுடைய இலவாழககையில தஙகியவா பழைமையாகக கூடிய பெரு நிதியினால மிகுதியாகிய செலவ நிறைநத வேளாணமையிற றலைமையாகியவா

**(வி - ரை) குலப்பதி - குலம்** - இஙகு நலஙகுறிததது.

**அறநெறி** - இவரது வாழககை முழுதும அற நெறியில நினறது குறிததா

**தக்க** - அவவாறு நினறதினால தகுதிபெறற இலலறததின **தகுதி** பறறிக "கறறூற றுறைபோயக கடிமனைக கிழவ, னறகுண நிறைநத கறபுடை மனைவியோ, டனபு மருளுந தாஙகி யினசொலின, விருநது புறநதந தருநதவாப பேணி, யைவகை வேளவியு மாறறி யிவவகை, நலலற நிரபபிப பலபுகழ நிறீஇப, பிறனமனை நயவா னறன்மனை **வாழ்க்கைக்கு**, வரையா நாளின மகபபேறு குறிததுப, பெருநலந துயககும பெறறித தனறே". "அதனால, இநநிலை யிரணடு மெமமனோாக கியலா" என்று குமரகுருபரசுவாமிகள சிதமபரமுமமணிககோவையில விதநது எடுததோதினா,

**மன்னு** என்றார். மாவடு உணவைச் சிறணிக்க உதவுவது என்ப **துணர்** - கொத்து வடு-மிக இளைய உவாப்பிஞ்சு "மாவடு வகிரன்ன கண்ணிபங்கா" என்பது திருவாசகம்

**அமுது செய்விப்பரால்** - ஒவ்வொரு நாளும் நியதியாய ஊட்டுவிப்பார் **ஆல்** - நியதிபிழையாத உறுதிக் குறிப்புத் தரும் அசை **செய்விப்பர்** - பூசைக்குரிய சிவ வேதியர்களைக் கொண்டு அமுதமைப்பித்து ஊட்டுவித்தார் என்ற குறிப்புப் பெறப் பிறவினையாற் கூறினார் **வேதியர்க்கு ஆம்** - என்ற முற்குறிப்பும் அது தாயனார் என்ற எழுவாய் மேற்பாட்டிலிருந்து வருவிக்க 6

909. இந்த நன்னிலை யின்னல்வந் தெய்தினுஞ்
சிந்தை நீங்காச் செயலி னுவந்திட
முந்தை வேத முதல்வ ரவர்வழி
வந்த செல்வ மறியாமை மாற்றினார். ௭

(இ - ள்) வெளிப்படை. இந்த நல்ல திருத்தொண்டினைத் துன்பம் வந்த காலத்திலும், மனத்தில் விடாதுபற்றிச் செய்கையின் முடிப்பதனைத் தாம் மகிழ்ந்து ஏற்றுக் கொண்டு அவரைத் தமமிடத்தே வைக்க, முன்னாகிய வேதங்களுக்கு முதல்வராகிய சிவபெருமான், அவர்க்கு வழி வழி வந்த மிக்க செல்வங்களை அவை போயின வழி அறிய முடியாதபடி மாற்றினார்

(வி - ரை) **நன்னிலை** - சிவத் திருத்தொண்டின் தன்மையாதலின் **நன்னிலை** என்றார் **இன்னல் வந்து எய்தினும்**-**இன்னல்** துன்பம்-இடையூறு **வந்து எய்தினும்** என்ற இலேசானே, திருத்தொண்டராதலின் இவர்க்கு இன்னல் வருதற்கேதுவில்லை என்றும், வேறு காரணங்களால் வரினும் என்றும் குறிப்பிட்டபடியாம் "இன்பமே யெந்நாளும் துன்பமில்லை", "ஒன்றினாற் குறையுடையோ மல்லோ மன்றே," "யாதுங் குறைவிலார்" என்பன வாதிய திருவாக்குக்களால் அடியார்கள் எந்நாளும் துன்ப மில்லார் என்பதறியப்படும். ஆதலின் **எய்தினும் சிந்தை நீங்காச் செயல்** என்றார் "மாதொர் பாகர் மலர்த்தாள் மறப்பிலார், ஓது காத லுறைப்பி னெறிநின்றார்" என்றது காண்க. "இடரினுந் தளரினு மெனதுறுநோய், தொடரினு முனகழல் தொழு தெழுவேன்" என்பனவாதியாக ஆளுடையபிள்ளையார் திருவாவடுதுறைப் பதிகத்தினுட் பாசுரந்தோறும் அருளியவை காண்க

**செயலின் உவந்து** - செயலில் தாம் மகிழ்ந்து அருள்புரிந்து, **இட** - நித்தியமான தமது உலகத்தில் வைக்க எனக

இங்கு, இவ்வாறன்றி, இன்னல்வரினும் மனத்து நீங்காது வைத்துச் செய்வதில் தாயனார் மகிழ்வடையச் செய்யுமாறு அவரது செல்வத்தை மாற்றினார் என்றும், இதனைக் கண்டு இன்னல் வரினும் மன நீங்காது உலகத்தார் மகிழ்ந்திட என்றும் உரைப்பாருமுண்டு தாயனாரது சிந்தைநீங்காச் செயலில் இறைவர் உவந்தனாரென்பது பின்னர் "நன்று நீ புரிந்த செய்கை . என்றும் நம உலகில் வாழ்வாய" (922) என அருளியதனால் அறியப்படும்

**முந்தை வேதம்** - எல்லா ஞானங்களுக்கும் - வித்தைகளுக்கும்-மூலமாகிய வேதம் **வேதம்** - வித - (ஞானம்) என்ற பகுதிப்படியாயப் பிறந்த பெயர்

**அவர் வழிவந்த செல்வம்** - அவரது முந்தையோர் காலமுதல் தொன்று தொட்டு வழி வழி வந்த பழஞ் செல்வம

**அறியாமை** இன்ன வழியாற் போயிற்று என்று யாரும் தெரிய முடியாதபடி. அவர் தெரிய முடியாதபடி என்றலுமாம் முன் செல்வமிருந்த நிலையை அனுமானத்தாலும் அறிய முடியாதபடி முழுவதும் என்ற குறிப்பும் காண்க

**மாற்றுதல்** - மறைத்தல் 7

910. மேவு செலவங களிறுண் விளங்கனி
யாவ தாகி யழியவு மனபினுல
பாவை பாகாககு முன்பு பயின்றவத
தாவில செயகை தவிாநதிலா தாயனா. அ

(இ - ள்) வெளிபபடை. பொருநத செலவஙகள வேழமுணட விளஙகனியின தனமையே பெறறு அழியவும, பாாவதி பாகனுருககு அனபினுல முன செயது பழ கிய, அநதக குறறமறற திருதவெதாணடினை தாயனா தவிாநதாரலலா

(வி - ரை) மேவு - வழி வழியாக வநத பொருநதும.

**களிறு உண் விளங்கனி - களிறு** - யானை. வேழம - இஙகு விளஙகனிககு வரும யானைநோய எனற பொருள குறிததது விளஙகனியைக **களிறு உண்ணுதலாவது** இந நோய பறறிய அதனுல விளஙகனி மேறபாாவையில முழுககனியாகக காணபபடினும உளளீடறுதல. " **வேழம் -** வெளளிலுககு (விளஙகனிககு) வருவதோா நோய ". " தேரை போயிறறெனறுற போலவதோா நோய எனக. இனி, யானையுணடது வேறுவிதமென றுரைபப "—(சீவக சிநதாமணி 232 நசசினாககினியருரை) " வெதுமபி வேழ, முணடிடு கனியா மெனன வுணாவுபோ யுருகா நினறா "—(தடச காணடம - கநதபுரா - ததீசியுத - பட - 40)

**(விளங்கனி) ஆவது ஆகி அழியவும் -** (விளஙகனிபோல) வெளிப பாாவைககு ஆவது - உளளது - போலததோனறி எனக **அழியவும் -** உளளே ஒனறுமிலலாத படியால அழிநது போகவும இஙகுச செலவம அழிதல எனறது அது மாறி மறைநது போதல குறிததது

**அன்பினுல் -** முதனிலைத தீபமாககொணடு, அனபினுற பயினற எனவும, அன பினுற றவிாநதிலா எனவும கூடடி உரைகக நினறது

**முன்பு-**செலவததோடிருநத முனகாலமெலலாம **பயிலுதல் -** தவிராது செயதல.

**தாவில் செய்கை -** பொருட குறறம, செயறகுறறம, மனககுறறம முதலிய எககுறறமும இலலாது விதிபபடி செயதுமுடிதத திருதவெதாணடு. **செய்கை** முறறிய செயல குறிததது. முனனாட்டில " சிநதை நீஙகாச **செயல்** " எனறதும, " நீ புரிநத **செய்கை** " (922) எனபதும காணக

**தாயனுர் தவிர்நதிலர்** எனக. தவிராது செயது வருவதில அவருககிருநத தீவிரங குறிககப பயனிலையை முன வைததோதினா. **தாயனுர்** இஃது குறிபபினுல தாய இலலாராகிய இறைவாககுத தாய போல அனபுடன அவரை ஒரு நாளுந தவிராது நியதியாயப பரிநது ஊடடினுா எனறுரைககவும நினறது

**பாவை பங்கர்க்கு**—எனபதும பாடம 8

911. அலல னலகுர வாயிடக கூலிககு
நெல்ல றுததுமெயந நீடிய வனபினுல
நலல செநநெலிற பெறறன நாயனுாக
கோலலை யினனமு தாககொண் டொழுகுவாா,

912. சாலி நேடி யறுததவை தாமபெறுங
கூலி யெலலாந திருவமு தாககொணடு
நீல நெலலரி கூலிகொண டுண்ணுநாள
மால யறகரி யாரது மாறறுவாா, க0

வேறு

913. நணணிய வயலக ளெலலாம நாடொறு முனனங காண
வண்ணவாா கதிாசசெநு சாலி யாககிட, மகிழநது சிநதை

யண்ணலா ரறுதத கூலி கொண்''டிஃ தடியேன செயத
புண்ணிய'' மெனறு, போத வமுதுசெய விபபா ராஞா. கக

911. (இ - ள்) வெளிபபடை. துனபநதரும வறுமை ஆயிடவே, கூலிககு நெல அறுததும உணமையின நீடிய அனபிஞல, அககூலியில நலல செநநெலலிற பெறறவறறைச சிவபெருமாஞகு விரைவில இனிய திருவமுதாக ஆககி ஒழுகு வாராய, க

912. (இ - ள்) வெளிபபடை. செநநெல தேடிபபோய அறுததுக கூலியாகத தாம பெறும செநநெலலை எலலாம இறைவனுககுத திருவமுதாக அமைததுக கொணடு, காரநெல அரிநது பெறற கூலிக காரநெலலிஞல தாம உணவாககிககொணடு ஒழுகுகினற காலததில், மாலுககும அயனுககும அரியாராகிய சிவபெருமான அதனை மாறறுவாராகி, க0

913 (இ - ள்) வெளிபபடை. பொருநதிய வயலகளில எல்லாம நாளதோறும முனகாணுமாறு அழகிய நீணட கதிரகளையுடைய செநநெலலே விளைவதாக ஆககியிட, அது கணடு பெருமையுடைய தாயஞா, "இஃது அடியேன செயத புணணியமே யாம" எனறு கொணடு மனமகிழநது, அதனை அறுதத கூலிச செநநெலலினைக கொணடு, இறைவரை நிரமப அமுது செயவிபபாா ஆயிஞா கக

இமமூனறு பாடடுககளும தொடாநது ஒரு முடிபு கொணடன

911. (வி - ரை) **அல்லல் நல்குரவு** துனபமே செயயும தரிததிரம - "நலகுரவெனனும தொலவிடம பிழைததும" எனறு திருவாசகம அருளியபடி,உயிாபோமாறு துனபமே செயயும விடம போலவதாதலின **அல்லல்** எனருா. "அலலலெனசெயு மருவினை யெனசெயும . அடிமைபூண டேனுககே", "அறவன, சேவடி யடைநதன மலலலொன றிலமே" எனபனவாதி தேவாரத திருவாககுககளை இஙகு நினைவு கூாக

**கூலிக்கு நெல் அறுத்தும்** - கூலிககாக ஏறறு நெல அறுதது எனறது நெறகூலி பெறும வழககம குறிததது கூலி - கூலிககாகப பெறும நெல குறிததது இஙகுச **செந்நெலிற் பெற்றன** எனறும, வருமபாடடில "கூலி எல்லாம திருவமுதாககொணடு, நீல நெலலரி கூலிகொண டுணணும" எனறும, அதனமேல வருமபாடடில "அறுதத கூலிகொணடு இஃது அடியேனசெயத புணணியம" எனறும வருவன காணக நெல முதலிய விளைபொருளகளையே கூலியாகக கொடுககும இநநாள வழககமும காணக. கலியநாயஞா "தககதொழிறபெறுங கூலி" எணணெயகொணடு திருவிளககிட்ட சரிதமும இஙகு நினைவு கூாக **அறுத்தும்** - உமமை உயாவு சிறபபு **மேய் நீடிய அன்பிஞல்** - வாயமை, தானம, தவம முதலிய எலலா நறகுணஙகளையும நலகுரவு போககி விடுமெ னபா ஆஞல தாயஞரிடதது நலகுரவு வரினும அவை குறையாது நீடியிருநத தறகு உணமையனபே காரணமாயிறறு எனக **மேய்** - உடல எனறு கொணடு, மனம அனபிஞல நீடியதன பயஞக உடலின முயறசியிலும நீடியதஞல உடமபால வருநதிபபெறற கூலிச செநநெலலைத திருவமுதாககொணடாா எனறலுமாம. வறுமை முதலிய கேடுகளவரினும மனம இடுககணபடடழியாது உடல வருநதி முயனறு அததுனபஙகளை நீககல வேணடுமெ எனற நீதிநூற கருததினையும இஙகுச சிநதிகக "தெயவததா ஞகா தெனினும முயறசிதன, **மெய்வருந்தக் கூலி தரும்**" எனற திருககுறளின சொலலும பொருளும இஙகுப பொருததமுடைமை காணக.

**நல்ல** - குணததால நலல **பெற்றன** - கூலியாகப பெறறவறறை இரணடனுருபு தொககது.

**நாயஞர்** - தலைவா-சிவபெருமான "அழகிது நாயனீரே" (774) முதலியவை பாாகக. தலைவா எனறு குறிககும இபபெயா அவரே போனறு எம தலைவாகளாகிய அடியாாகளுககும வழஙகுவதாயிறறு.

**ஒல்லை** - விரைவாக. நெல் அறுத்துக் கூலிபெற்று வரக் காலந் தாழ்க்குமாதலின் அதுவரை இறைவர் பசித்திருப்பாரோ எனக்கருதி விரைவில் ஊட்டுவிக்கும் ஆர்வம் குறித்தது. ஒல்லை - பழமையாகிய-எப்போதும் உண்பிக்கும் நியதிப்படி என்றலுமாம்.

**இன்அமுதா - அமுதா** அமுதாக - இறைவர்க்கு இனிய திருவமுது ஆகுமாறு அமைத்துக்கொண்டு.

**ஒழுகுவார்** - முற்றெச்சம். ஒழுகுவாராகி - திருஅமுதாகக் கொண்டு - என வரும் பாட்டுடன் கூட்டி முடித்துக்கொள்க. 9

912 (வி - ரை) **சாலி** - இங்குச் செஞ்சாலி, செந்நெல் குறித்தது. **நேடுதல்** - தேடுதல்.

**அறுத்து அவைதாம் பெறும் கூலி - அறுத்து** - அறுத்ததற்காக. **அவை** - அவற்றில் - அச்செந்நெல்லில். **கூலி** - கூலிநெல்.

**எல்லாம் அமுதாக் கொண்டு** - அக்கூலிச் செந்நெல்லில் ஒரு பகுதியும் தமக்கென்று ஆக்கிக் கொள்ளாமல் முழுமையும் இறைவரது திருவமுதுக்காகவே அமைத்துக் கொண்டு என்பார் **எல்லாம்** என்றார்.

**நீலநெல்** - கார்நெல். **கூலிகொண்டு** கூலியாகக் கிடைத்த கார் நெல்லினால்.

**உண்ணும் நாள்** - தமது உணவு ஆக்கிச் சீவிக்கும் நாளில்.

**மால் அயற்கு அரியார்** - சிவபெருமான். **அதுமாற்றுவார் - அது** - அதனையும்; கார்நெற்கூலி கொண்டு உண்ணும் செயலையும் சிறப்பு உம்மை தொக்கது. முன்னாச் செல்வம் அறியாமை மாற்றி (909) யதனோடு அதனையும் என இறந்தது தழுவிய எச்ச உம்மை என்று கொள்ளுதலுமாம். **மாற்றுவார்** மாற்றுவாராகி முற்றெச்சம். **மாற்றுவார்** ஆக்கிட என வரும்பாட்டுடன் கூட்டுக. **அரியார்** - அவர்களது அறிவினைத் திரோதான சத்தியால் மறைத்துத் தாம் வெளிப்படாது நிற்பவர். "மற்றவரறியா மாணிக்க மலையை" என்ற திருவிசைப்பாக் காண்க.

**அரியார் அதுமாற்றுவார்** - அரியார் என்றதனால் மறைத்தற் றொழிலையும், **மாற்றுவார்** என்றதனால் முன்னர் அதனால் ஆன்ம சிற்சத்தியை மறைத்துக் கன்மங்களை ஊட்டிக் கழிப்பித்துப் பக்குவப்படுத்தி இருவினை ஒப்பும் மல பரிபாகமும் வரச்செய்து பின்னர் அந்த மறைத்தற் றொழிலை **மாற்றிய** அருட்டொழிலையும் குறிப்பாலுணர்த்தினார்.

இங்குக் கார்நெல்லை மாற்றிச் செந்நெல்லாக்கியதும் இக்குறிப்புப்படநிற்பது உன்னுக. கார்நெல் உணவு கொண்டு இருந்த நாயனார் அவ்வனுபவம் கழிய நின்றது கருமானுபவம் நீங்கி வீடு பெறும் பக்குவம் பெற்ற நிலையினையும், செந்நெல்லை இறைவர்க்கு ஊட்டியது, தாமும் செம்மையேயாகிய சிவபதத்தில் (922) என்றும் வாழும் நிலையும் குறித்தன.

இறைவர் அது மாற்றுவாராகவே, ஆசிரியரும் இதுவரை கூறிவந்த யாப்பினைத் தாமும் மாற்றுவாராய், மேல்வரும் சரிதப்பகுதியை அறுசீர் விருத்தத்தாற் கூறத் தொடங்குதல் காண்க. 10

913 (வி - ரை) **நண்ணிய** - (அதுமாற்றுவாராகிய 912) இறைவரது திருவுள்ளம் நண்ணிய நாயனார் நண்ணிய என்று உரைப்பினுமமையும். **வண்ணவார் கதிர் - வண்ணம்** - நெற்கதிர்களின் திரட்சியும், **வார்** - அவற்றின் நீளமும் குறித்தன. கதிர்கள் அதிகம் மணிப்பிடியுள்ளனவாயும் பெரியனவாயும் வளர்ந்தன.

**சிந்தை** மனத்தின் செயலையும், **என்று** - வாக்கின் செயலையும், **அமுது செய்விப்பார்** - மெய்யின் (உடலின்) செயலையும் ஆக முக்கரணங்களும் ஒன்றிய திருத்தொண்டு குறித்தது காண்க.

**சிந்தை மகிழ்ந்து** எனக் வினைச்சொல் முன்னர் வந்தது நிகழ்ச்சியின் தீவிரம் குறித்தது.

**அண்ணலார்** - தாயனாரது செயலின் அருமையும் பெருமையும் விளங்குமிட மாதலின் இங்கு இப்பெயரால் கூறினார் "வள்ளலார் இளையான்குடிப்பதி மாறனார்" (456) என்றதும், இவ்வாறு கூறும் பிறவும் காண்க.

**இஃது** - இவ்வாறு கூலி எல்லாம் செந்நெல்லேயாகப் பெற்றது.

**அடியேன் செய்த புண்ணியம்** - சிவத் தொண்டு செய்ய வாய்ப்பது முன் செய்த பெரும் புண்ணிய விசேடத்தாலன்றிக் கிட்டாதென்பது உண்மையாதலின், தம் கூலி முழுதும் சிவனுக்கே அமுதாகப் பயன்படும் பேறு முன் செய்த புண்ணியத்தால் கிடைத்த தென்றார். "என்ன புண்ணியஞ் செய்தனை நெஞ்சமே யிருங்கடல் வையத்து, முன்னை நீபுரி நல்வினைப் பயனிடை" (திருவலஞ்சுழி - நட்டராகம் - 1) என்ற ஆளுடைய பிள்ளையார் தேவாரக் கருத்தினை இங்குச் சிந்திக்க.

**போத** - நிரம்ப, மிகுதியாக. "பூதிசாதனத்தவர் முன் போற்றப் போதேன்" (சிறுத - புரா - 45) என்புழிக் காண்க. **போதுதல்** - செல்லுதல் என்று கொண்டு, தமது திருத்தொண்டு முட்டுப்படாது மேற்செல்ல என்றலுமாம்.

**போத அமுது** - போதம் - தற்போதம் - பசுபோதமாகிய அமுது என்றுரைக்க நின்ற தொனிக்குறிப்பும் காண்க. தாயனார் தமது உணவுக்கு நெல் இல்லையே என்ற உணர்ச்சி முற்றும் அற்றவராய் இறைவரது திருவமுதுக் காவதாய் எல்லாம் செஞ்சாலியேயாக விளைந்ததுபற்றிச் சிந்தை மகிழ்ந்ததுமன்றி, "இஃது அடியேன் செய்த புண்ணியம்" என்றும் கொண்டாராதலின் செந்நெல்லை அமுது செய்வித்தத் தோடு தற்போதத்தையும் பலியாக்கினார் எனவும், அதனை அவர் விரும்பியவாறே இறைவர் மகிழ்ந்து அமுது செய்தனர் எனவும் கொள்ளக் கிடப்பதும் கருத்துத் தக்கது 'தறுகட் பாசக, கள்ளவினைப் பசுபோதக் கவளமிடக் களிந்துண்டு' (பாயிரம்) என்ற திருவிளையாடற் புராணம் காண்க. "அன்பெனு மமுது" என்பது வாயிலார் புராணம்.

**அமுது செய்விப்பார் ஆனார்** - ஊட்டுவிப்பாராயினார். **ஆனார்** என்றது இவ்வாறு பல நாளும் செய்தனர் என்பது குறித்தது. **வைகலும்** என வரும்பாட்டிற் கூறியது காண்க.

**ஆனார்** - ஆயினார்; ஆக்கம் பெற்றனர், இவ்வாறல்லாத பிறர் எல்லாம் ஆனாராகாது போனாரகளேயாவர் என்ற குறிப்பும் காண்க. "போற்றிலார் ஆக்கைக்கே இரை தேடி யலமந்து, காக்கைக் கேயிரை யாகிக் கழிவரே" என்ற தனித்திருக்குறுந் தொகை முதலியவற்றின் கருத்துக்களும் காண்க. 11

914. வைகலு முணவி லாமை மனைப்படப் பையினிற் புக்கு
நைகரமில்லா வன்பி னங்கைகை யடக்கு கொய்து
பெய்கலத் தமைத்து வைக்கப் பெருந்தகை யருந்தித் தங்கள்
செய்கடன் முட்டா வண்ணந் திருப்பணி செய்யு நாளில், கஉ

915. மனைமருங் கடக்கு மாள வடநெடு வான மீனே
யனையவர் தண்ணீர் வார்க்க வமுதுசெய் தன்ப ரூரும்
வினைசெயன் முடித்துச் செல்ல மேவுநா ளொருநாண் மிக்க
முனைவனார் தொண்டர்க் கங்கு நிகழ்ந்தது மொழியப் பெற்றேன். கங

914 (இ - ள்) வெளிப்படை. நாள்தோறும் உணவில்லாமையினாலே, குறைவு படாத அன்பினையுடைய மனைவியார் வீட்டுக் கொல்லையிற்புகுந்து கையினாற் பறிக்கும் இலைக்கறிகளைப் பறித்துச், சமைத்து, உண்கலத்தில் இட, அதனையே உண்டு, தாங்கள் நியதியாகச் செய்த திருத்தொண்டின் கடமை முட்டுப்படாதபடி திருப்பணியிடைச் செய்து வருநாளில்,

கஉ

915. (இ - ள்) வெளிப்படை. வீட்டின் பக்கத்தில் இருந்த இலைக்கறிகள் அற்றுப்போகவும், அருந்ததியே போன்ற கற்பினையுடைய மனைவியார், தண்ணீரை வார்க்க அதனையே அமுது செய்து, அன்பனாரும், தமது திருத்தொழிலையும் அருஞ்செயலையும் முடித்துச் செல்வாராக, இவ்வாறு பொருந்துகின்ற நாட்களிலே ஒருநாள், முதல்வனா ரது பெருந்தொண்டருக்கு அங்கு நிகழ்ந்ததனை, இனி எடுத்துச்சொல்லும் பேறு பெற்றேன். ௧௬

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

914 (வி - ரை) **வைகலும் உணவு இலாமை** - தமது கூலி முழுவதும் செந்நெல்லேயாக, அதனை முற்றும் இறைவரை அமுது செய்வித்தாராதலின் தமது உணவுக்கு நெல் இல்லையாகலான் எனக் இதனால் அவர் இறைவரை ஊட்டிய அமுதத்தினைச் சிவநிர்மாலியம் உட்கொள்ளலாகாது என்ற விதியினால் தாம் உட்கொள்ள வில்லை என்பதும் போந்ததாம். **வைகலும்** - உம்மை இவ்வாறு பல நாட்களும் நிகழ்ந்தமை குறித்தது. **உணவு** - நெல்லரிசி யமுதம் குறித்தது. **இலாமை** இல்லாமையால்.

**மனைப்படப்பை** - வீட்டுக் கொல்லைத் தோட்டம்.

**புக்கு - கொய்து** "தொக்க மாநிதித் தொன்மையில் ஓங்கிய மிக்க செல்வ" த்தி லிருந்தவராதலின் இவ்வம்மையார் தாமே கொல்லையுட் புகுந்து இலைக்கறிவகை தேடிப் பழகாதவர் என்பது குறிப்பு. "அல்லல் நல்குர வாயிட" (911) என்றமையால் முன்னே மிக்க செல்வத்திலிருந்த இவர்க்கு இப்போது இடம் பொருள் ஏவல் முதலிய ஒன்றும் இல்லையாயின என்பதாயிற்று.

**நைகரம்** - குறைவு. நல்குரவு வந்தபோது அன்பு குறைவுபட்டுறுவது உலகியல்பு; அவ்வாறன்றி இவ்வம்மையார் நல்குரவினும் குறைவுபடாத அன்புடன் விளங்கினார் என்பது. நைகரமில்லா நங்கை என்று கூட்டி, **நைகரம்** - வருத்தம் - துன்பம் - என்று கொண்டு இந்நிலைமை வந்ததனுக்கு அம்மையார் சிறிதும் வருந்தினாரலர் என்றுரைப்பாருமுண்டு.

சிவபெருமானது திருத்தொண்டில் இவ்விருவரும் கருத்து ஒருமித்து ஆதரவு செய்தனர் என்றும், தமக்கு வந்த இந்நிலைமையினால் சிறிதுங்கவலையின்றித் திருப்பணியில் ஈடுபட்டனர் என்றும் காட்ட இவ்வாறு விதந்து கூறினார். மேற்பாட்டிற் கூறிய வாறு, நாயனார் "இஃதடியேன் செய்த புண்ணியம்" என்று கொண்ட கருத்தினையே அம்மையாரும் கொண்டிருந்தனர் எனக் இறைவரை ஊட்டிய சிறப்பின் மகிழ்ந்தாரல்லது இவ்விரு பெருமக்களும் தங்களுக்கு உணவிலாமையை நினைத்தாரலர் என்பதாம். **அன்பு** - சிவன்பாலன்பும் தமது கணவனார்பாலன்பும் குறித்தது.

**கை அடகு** - கையினாற் பறிக்கப்படும் கீரை. **அடகு** - இலைக்கறி, கீரைவகை. இவை பெரும்பாலும் மனிதரால் பயிர் செய்யப்படாது தாமாக முளைத்தவை.

**பெய்கலம்** உணவு பெய்யும் பாத்திரம் - உண்கலம் இலை - சருகு முதலியன. கொய்து அமைத்துப் பெய்கலத்து வைக்க எனக் கூட்டுக. **அமைத்து** - சமைத்து.

**பெருந்தகை** - தமது பசித்துன்பத்தை யெண்ணாது அடகும் நீரும் உண்டு கொண்டு, இறைவருக்கு அமுதூட்டுவதனையே கருதி மகிழ்ந்த பெருமையின் தகுதி குறித்தது.

**தங்கள் செய்கடன்** - இருவரும் சேர்ந்துசெய்த என்பது குறிக்கத் **தங்கள்** என்றார். இருவரும் கூடிச்செய்த விவரம் 915-916 பாட்டுக்களிற் காண்க. **செய்கடன்** - கடமைப்பாடாக மேற்கொண்டு செய்தது.

**திருப்பணி** - அமுதூட்டுதலும், அதற்காவன செய்தலுமாம். அவை கூலிவேலை செய்து செந்நெலும் - கீரையும் - மாவடுவும் தேடுதல், ஆன் ஐந்து பெறுதல் முதலி

யன **மூட்டா வண்ணம் செய்யும்** - "செய்பணி தவாமை யுய்த்தார்" (837) என்றது காண்க.

**நைந்தால் - நங்கை மற்றடகு - நங்கையார் - செலுத்துநாளில்**—என்பனவும பாடங்கள். 12

915. (வி - ரை) **நெடு வட வான மீன் எனக** வடமீன் - அருந்ததி நெடுமை நீண்ட புகழுடைய கற்புக்குறித்தது வடக்கில் நீண்ட தூரத்தில் தோற்றப்படும் என்றலுமாம். **மீனே** - ஏகாரம் தேற்றம். **மீனே அனையவர்** - கற்பினால் அருந்ததியே போல்வார். கற்பினுக்கு எடுத்துக்காட்டாக அருந்ததி மீன் உருவுடன் விளங்குதலால் கல்யாணங்களில் அருந்ததி பார்த்தல் ஒரு சடங்காக வழங்குகின்றது "சாலினி மங்கலை தன்னொடு கண்டான" (தெய்வ-அம்மை - திருமண - 253) என்ற கந்தபுராணமும் காண்க (சாலினி - அருந்ததி)

**தண்ணீர் வார்க்க அமுதுசெய்து** - தண்ணீரைத் தாகந் தீர்ப்பதற்குரியதாகக் கொண்டதன்றிப் பசிதீர்க்கும் உணவுப் பண்டமாகவும் கொண்டார் என்று குறிப்பார் பருகி என்னாது **அமுதுசெய்து** என்றார் "துப்பார்க்குத் துப்பாய தூஉ மழை" என்ற திருக்குறளும் காண்க.

**வினைசெயல்** - வினை - செந்நெல் - செங்கீரை - மாவடு - ஆன ஐந்து தேடுதலும், நெல்லுக்காகக் கூலி வேலை செய்தலும் முதலிய தொழில். **செயல்** - வினையாற் பெற்ற வற்றை இறைவனுக்குத் திருவமுதாக்கி ஊட்டுதல்.

**செல்ல மேவுநாள்** - செல்லும்படி - ஒழுகும்படி - பொருந்தும் நாட்களிலே.

**முனைவனாது மிக்க தொண்டர் எனக. மிக்க** - அன்பினால் மிக்க. பெருமை மிக்க. **முனைவர்** - முன்னவர் - தலைவர் - சிவபெருமான்.

**மொழியப் பெற்றேன்** - சொல்லும் பேறு எனக்குக் கிடைத்தது. இப்பெரியவரது புண்ணிய சரிதத்தை, அதிலும், அதனுட் சிவனருள் விளைவு தேற்றமாகும் இப்பகுதியைச் சொல்வது பெரும்பேறு என்பது பெரியோர்களது சிவசரிதங்களை நினைப்பதும், சொல்லுதலும், கேட்டலும் சிவபுண்ணியங்களாம் "தண்பசி வெம்புகழ் சாற்றல்" (திருவாதவூர் - புரா - திருப்பெரு - சரு - 69), முதலியவை காண்க திருவருள் விளக்கமாகும் இடங்களை இவ்வாறு விதந்து கூறிக் கேட்போரை எச்சரித்து வழிப்படுத்துதல் ஆசிரியரது மரபு 790-ல் உரைத்தவை பார்க்க

**தொண்டனார்** - மேல் இப்பாட்டில் **வினை செயல்களை** அன்பு ஊக்கியிட்ச் செய்தல் குறிக்க **அன்பனார்** என்ற ஆசிரியர், இனிவரும் நிகழ்ச்சி, தொண்டு செய்கின்ற விடத்து நிகழ்வதாகலின் **தொண்டர்க்கு அங்கு** நிகழ்ந்தது என்று குறித்தார் 13

916. முன்புபோன் முதல்வனாரை யமுதுசெய் விக்க மூளும்
அன்புபோற் றூய செந்நெ லரிசிமா வடுமென் கீரை
துன்புபோ மனத்துத் தொண்டர் கூடையிற் சுமந்து போதப்
பின்புபோ மனைவி யாரான் பெற்றவஞ் சேந்திச் சென்றார். கச

(இ - ள்) வெளிப்படை முன்போல முதல்வரை அமுது செய்விப்பதற்காக, மூண்டு மேன்மேல் எழும் அவரது **அன்புபோலவே தூயதாகிய** செந்நெல்லரிசியினையும், மாவடுவினையும், மெல்லிய செங்கீரையினையும் துன்பம் நீங்கிய மனத்தையுடைய தொண்டராகிய தாயனார் கூடையில் வைத்துச் சுமந்து செல்ல, அவர் பின்பு செல்லும் திருமனைவியார் **ஆனைந்து** என்னும் பஞ்சகவ்வியத்தை மட்கலத்திற் கொண்டு கையில் ஏந்திச் சென்றார்.

(வி - ரை) **முன்புபோல்** - முன்னை நாட்களிற்போல-வழக்கம்போல.

**முதல்வனாரை** - சிவபெருமானே தலைவா, உயிாகள யாவும அவர்கு அடிமை கள என்ற உணமை யறிநது அதனுல அவரை ஊட்டும மியதி பூணடொழுகியவா தாய ஞராதலின இஙகு **முதல்வனர்** எனருா

**மூளும் அன்புபோல் தூய** - தாயனா இறைவரை அனபினுல ஊட்டும அரிசி முதலாயினவறறுககு உவமிககபபடும பொருள உலகததில வேறிலலையாதலின இவ ரது மூளும அனபினையே உவமிததாா நலகுரவினுலும பசியாலும துனபததாலும குறைவுபடாது நாளுளும வளாவதாம எனபது குறிகக **மூளும்** எனறு முககாலததுக கும பொதுவாகிய நிகழகாலப பெயரெசசததினுற கூறினா

**செநநெல் அரிசி - மாவடு - மென்கீரை** - இவறறின தனமைகள 928ல் விவரிக கப்பட்டன இவறறைத திருககோயிலுககுக கொணடு சென்று அஙகுச சமைபபிததது அமுது செயவிததனா எனறு குறிகக **அரிசி** முதலாகக கூறினா. இறைவாககாகும திருவமுது திருககோயிலுககுள திருமடைபபள்ளியிற செயயத தககது எனபதும வெளியிற சமைததுக கொணாவது தகாதெனபதும ஆகமஙகளில விதிககப்பட்டன.

**துன்புபோம் மனம்** - துனபம எனபதன சுவடு தானும காணமுடியாமல மறைநது போகும மனம

**பின்பு .சென்றார்** - இதனுல தாயனாரும மனைவியாரும அனபு ஒருமிததுச் செயத திருததொணடு விளககபபட்டது தாயனா முனனாச செலல அவரைப பின பறறி மனைவியாா பின சென்றனா, அரிசி முதலியவை பெருமபாரமாயுளளனவாத லின தாயனா அவறறைக கூடையிற சுமநது செலல மனைவியாா ஆனைநதினையும மட கலததில ஏநதிச சென்றனா **கூடையில்** என்றதனுல திருவமுதுககாகும பொருள களின அளவும கருதி யுணாததககது. மடகலம மேறபாட்டினுற காணக. இறைவா பூசையைக கணவனும மனைவியாரும ஒருமிததுச செயதல வேணடுமெனறதனைத திருநீலநகக நாயனா புராணத (8, 9 பாட்டுககள்) தாலும அறிக. இவவியலபு விலங கினஙகளினும நலலறிவுடைய சில பிராணிகள மேறகொணடொழுகின எனபது, "பிடியெலாம பினசெலப பெருஙகைமமா மலாதழீஇ, விடியலே தடமூழகி விதியி னுல வழிபடும" (1), மானமா மடப்பிடி வனகையா லலகிடக, கானமாா கடகரி வழி படும" (7) (பண - கொலலி - கானபபோ) என்ற ஆளுடைய பிளளையாா தேவார முதலியவறறு னறியபபடும திருககழுககுனறில இனமாய இநநாளிலும வநது வழி படும இரட்டைக கழுகுகளின வழககும காணக.

**ஆன்பேற்ற அஞ்சு** - "ஆனுறற வைநது மமாநதாய போறறி" (ஐயாறு - திருத தாணடகம்) முதலிய தமிழ மறைகள காணக பஞசகவவியம எனபது வடமொழி. இவை பசுவினது பால - தயிா - நெய - மூததிரம - சாணம எனபன இவறறின அளவும, சோககும முறையும, உரிய பாவனை - மநதிரம செயகை முதலியனவும சிவாகமஙகளுட் கணடு கொளக.* 14

---

*சில நவீன ஆராயசசியாளா இவறறில பசு மூததிரம, பசுசசாணம என்ற இரண டினையும நீககி, மோரும வெணணெயும சோதது ஐநதாகக கணககிடவும தொடஙகி யுளளாா இது மிகத திரிபுளளதோா ராராயசசியாம. சிவாகமஙகளின பிரமாணததை உடனபடாதாாககு ஆனைநதின விசாரம வேணடுவதிலலை. இனனோருடன சிவாகம சிததாநத சைவாககு விவகரிககும ஆகம அளவையின றொடாபுமிலலையாகும.

ஆகமபபடிககுளள ஆடசி காண விருமபுவோா தொனறு தொடடுவரும வழககும காணலாம இதுவேயுமனறி, இதுபறறிய,

"இவனே திருவணணாமலை உடையாாககுப் பஞசகவயமாடியருள நிததமும **இறுகாலை** சநதி யில திருவணணாமலை எனனும நாழியால கோமூததிரம உழககும, கோமயம ஆழாககும, பாலநாழி உழககும, தயிா நாழி உரியும, நெய நாழியும ஆக இபபடி நிததமும

எனற திருவணணாமலைக கலவெட்டுக குறிபபும காணக. (S. I. I. Vol. 8. 1937.

917. போதரா நின்ற போது புலர்ந்துகா றளர்ந்து தப்பி
மாதரார் வருந்தி வீழ்வார் மட்கல மூடு கையாற்
காதலா லணைத்து மெல்லாங் கமரிடைச் சிந்தக் கண்டு
பூதநா யகர்தந் தொண்டர் "போவதங் கினியே" னென்று, கரு

918. நல்லசெங் கீரை தூய மாவடு வரிசி சிந்த,
"அல்லரீத் தாள வல்லா ரமுதுசெய் தருளு மப்பே
றெல்லையி றீமை யேனிங் கெய்திடப் பெற்றி லே"னென்
றொல்லையி லரிவாட் பூட்டி யூட்டியை யரிய லுற்றார்; கசு

919. "ஆட்கொளு மையர் தாமிங் கமுதுசெய் திலர்கொ"லென்னுப்
பூட்டிய வரிவாள் பற்றிப் புரையற விரவு மன்பு
காட்டிய நெறியி னுள்ளந் தண்டறக் கழுத்தி னோடே
யூட்டியு மரியா நின்ற ருறுப்பிறப் பரிவா ரோத்தார். கஎ

917. (இ - ள்) போதரா நின்ற...தப்பி - (இவ்வாறு) போகின்ற போது உடல் வாடியிருந்ததனால் கால் தளர்ந்து தப்பி, வருந்தி வீழ்வார் - வருந்தி வீழ்கின்றவரை, மட்கல மூடுகையால் காதலால் மாதரார் அணைத்தும் - அணைந்து கொண்ட மட்கலத்தை மூடும் கையினால், விழாமற் காக்கும் ஆசையினால் மனைவியார் அவரை அணைத்தும், எல்லாம்...கண்டு - செந்நெல்லரிசி, மாவடு, செங்கீரை என்ற எல்லாம் நிலப்பிளப்பிலே சிந்த, அதுகண்டு, பூத நாயகர் தம்தொண்டர் - பூதநாயகராகிய சிவபெருமானுடைய தொண்டராம் தாயனார், "இனி என் அங்குப்போவது" என்று - "இனி என் அங்குப் போதல் வேண்டும்" என்று, கரு

918. (இ - ள்) வெளிப்படை "நல்லசெங்கீரையும், தூயமாவடுவும், அரிசியும் சிந்தியிட்டதனால், அன்பரீக்கி ஆட்கொள்ளவல்லாராகிய சிவபெருமான் அவற்றை அமுதுசெய்து அதற்கருள்கின்ற அந்தப் பேற்றினை அளவில்லாத தீமையையுடையேன் இங்குக் கிடைக்கப்பெற்றேனில்லையே" என்று விரைவில் அரிவாளைப் பூட்டித் தமது ஊட்டியை அரியலுற்றாராய், கசு

919. (இ - ள்) வெளிப்படை "என்னை ஆட்கொள்ளும் பெருமானார்தாம் இங்கு அமுது செய்தாரிலர்கொல்!" என்று கழுத்தின்றிற் பூட்டிய அரிவாளினைப் பிடித்துக்கொண்டு, குற்றநீங்கப் பொருந்தும் அன்பு காட்டிய வழியில் நெஞ்சங்குழல

றெ 66. P. 34 S. 10. இது இராசேந்திர சோழர் I உடைய 19-வது ஆண்டுக் கல்வெட்டு கி பி. 1030 கல்வெட்டுத் துறை ஆராய்ச்சியாளர் திரு. K. V. சுப்பிரமணிய ஐயர் "கொங்குமலர்" பத்திரிகைக்கு எடுத்து எழுதியுதவியது IV. p 72)

இந்தக் கல்வெட்டில் இவ்வைந்தும் இன்னின்னவாம் என்று கூறி அவற்றின் சோக்கையளவு முதலியனவும் விதிக்கப்பட்டுள்ளன. ஆனைந்து - ஆன்பெற்ற அஞ்சு - என்றற்றொடக்கத்த திருவாக்குக்களால் இவையைந்தும் ஆவிடத்தினின்று தோன்றும் வெவ்வேறான பொருள்கள் எனப்படுதறியப்படும். பாலதிரிந்து வேறு பொருளாகிய தயிராதலும், தயிரைக் கடைந்து அல்லது பாலைத் திரட்டி எடுக்கப்படும் வெண்ணெயை உருக்கச் செய் என்றதோர் வேறு பொருள் பெறுதலும் உணரப்படும். மோரும் வெண்ணெயும் அங்ஙனம் வேறு தனிப் பொருள்களாகாமையும் கண்டு கொள்க. மருத்து நூல் முறையில் பஞ்சகவ்விய நெய் முதலிய மருந்துகளுக்குக் கூட்டும் பொருள்கள் இவ்வைந்துமே யாதலும், இவ்வாறல்லாது மோரும் வெண்ணெயும் சேர்ப்பின் அவை பயன்றராமையும் பிறவும் காண்க

பிளவுபட்டு அறும்படி கழுத்தினோடு மிடறறினை அரிவாராயினார், பொருந்திய பிறப்பினை அரிவார் போனார். கஎ

இந்த மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

917. (வி - ரை) **போதரா நின்றபோது** - போதும் பொழுதில். **போதருதல்** - போதல் **ஆநின்று** - நிகழ்கால இடைநிலை. **போதராநின்ற** - போந்து மேல் அடி பெயர்க்கமாட்டாமல் நின்ற என்ற குறிப்பும் பெற நிற்றல் காண்க.

**புலர்ந்து, கால்தளர்ந்து, வருந்தி, தப்பி, வீழ்வார்** என்று கூட்டுக.

**புலர்தல்** - உணவில்லாமையால் உடல் வாடுதல்.

**கால் தளர்தல்** - கால்கள் மேல் அடிபெயர்த்தலும், உடலைத் தாங்குதலும் மாட்டாது நிலைகெடுதல் **தப்பி** - போகின்ற நிலையும் நிற்கின்ற நிலையும் தவறி புலர்ந்ததனால் கால் தளர்தலும், அதனால் வருந்தலும், அதனால் தப்புதலும், அதனால் வீழ்தலும் நிகழ்ந்தன என்ற இம்முறையில் வரும் வினைகளைக் காரணங் குறிக்கும் வினையெச்சங்களாற் கூறிப்போதல் காண்க

**மாதரார்** - மனைவியார். மாதரார் - கையால் அணைத்தும் என்று கூட்டிக்கொள்க.

**மட்கலம்** - ஆனைந்து கொண்ட கலம். இதனால் ஆன்பெற்ற ஐந்தினையும் மட்கலத்திற் கொண்டு சென்றார் என்றறியப்படும் நாயனார் அரிசி முதலியவற்றைக் கூடையிற் சுமந்து செல்ல, மனைவியார் அவர்பின் ஆனைந்து ஏந்திச் சென்றார் என மேற்பாட்டிற் கூறினார் அதனை ஏந்திய கொள்கலம் இன்னதென அங்குக் கூறாமையின் அது மட்கலமா மென்பதை மட்டும் இங்குக் குறித்த முறை காண்க.

**மூடு கை** - செல்லும் வழியில் அசுத்தங்கள் வீழாதபடி காக்கும் முறைபற்றிக் கலத்தைக் கையால் மூடிச்சென்றனர். இடது கையினால் கலத்தை ஏந்தியும் வலது கையினால் அதனை மேலே மூடியும் சென்ற மனைவியார் அங்ஙனம் மூடிய வலது கையினால், கணவனாரை வீழாவண்ணம் அணைத்தனர் எனக.

வீழ்வாரை - மாதரார் - கையால் - காதலால் - அணைத்தும் என்று மாற்றிப் பொருள் கொள்க. இங்ஙனம் முறையிற் கூறாது மாதரார் - வீழ்வாரை - என முன் வைத்துக் கூறியது கால் தப்பியதைக் கண்ட மனைவியார் அவர் **வீழாமுன்** தடுக்க அணைத்ததனை உணர்த்தும் பொருட்டு கால் தப்பிய நிலைக்கும் வீழ்கின்ற நிலைக்கும் இடையில் **மாதரார்** அணைத்த செயல் நிகழ்ந்தமையின் அதனை அம்முறையே நாடகச் சுவைபடக் கூறிய நயம் காண்க **வீழ்வார்** - வீழ்வாரை, இரண்டனுருபு விரிக்க.

**மட்கலமும்** - கூடை (915)யுமே அல்லல் நல்குரவு (911) ஆயின நிலையில் உள்ளார் எளிதிற்பெறும் கொள்கலங்களாம் என்பதும் காண்க.

**காதலால்** - கணவனார் வீழாமற் றடுக்கும் ஆசையாலும், அதற்கு மேலாக, அவ்வாறு தடுப்பதன் மூலம், அவர் இறைவனுக்காகச் சுமந்து சென்ற கூடையினுள்ள பொருள்கள் வீழாமற் றடுக்கும் ஆசையாலும் எனக

**கமர்** - நிலவெடிப்பு அக்காலம் நிலங்களிற் பயிர் அறுக்கப்பட்டு நிலம் வெடிப்புக்களுடன் உள்ள காலமென்பதறியப்படும். நாயனார் பேறு பெற்றது தை மாதத்து ஆதிரை நாளாதலும் சிந்திக்க இந்நிலம் நாயனாரது ஊராகிய கணமங்கலத்துக்கும் அவர் வழிபட்ட திருத்தண்டலை நீணெறிக்கும் இடையில் உள்ள வயல் இது இந்நாள் வழக்கிலும் காணப்படும் **இடை** - ஏழனுருபு.

**பூதநாயகர்** - சிவ பூதகணங்களின் தலைவர்-சிவபெருமான். ஐம்பூதங்களில் ஒன்றாகிய நிலத்தினின்று வெளிப்பட்டு நாயனார்க்கு அருள்புரிகின்றாராதலின் இங்கு இப்பெயராற் கூறினார் என விசேடவுரை காண்பர் ஆலாலசுந்தரம் பிள்ளை.

**இனி அங்குப் போவது ஏன்** என மாற்றுக **ஏன்** என்ற வினாப் பயனின்மை குறித்தது தொண்டர் - கண்டு - இனி - ஏன் - போவது? - என்று (916), என -

ஊட்டியை அரியலுறரு(ராய) (917), என்ரு-அரியலுறுரா (ஆகிய அவா)-அரிவாா ஒத தாா (918) என இமமூனறு பாடடுககளையும கூடடி முடிகக. அந்த - திருககோயிலுககு.

என்னேன்று—எனபதும பாடம. 15

918 (வி - ரை) நல்ல - புழுககடி, வாடல, முறறல, பழுபபு முதலிய கேடுஇனறி எனக மென்கீரை (915) எனறது காணக நல்ல - நனமை செயயும எனறு இயறகை யடைமொழியாககககொண டுரைபபினுமாம

தூய - மேல, கீரைககு நல்ல எனறதற குரைததவாறே, மாவடுவுககும பொருநத உரைததுக கொளக. மனனு பைநதுணா மாவடு (908) என இதன இயறகையினை முனனா உணாததியதனுல இஙகு அதன தனமைகள பொருநதக கொளக

அரிசி - செநநெல இனனமுது (908), தூய செநநெல அரிசி (915) என இதன இயல்பும தனமையும முனனரே கூறினராதலின, முதனமையாயின இதனை இஙகு அடைமொழியினறி அரிசி என வாளா கூறினா.

அல்லல்தீர்த்து ஆளவல்லார் அல்லல் - பிறவித துனபமும அதறகேதுவாகிய இருவினைகளும. தீர்த்தல் - நுகாவிததுக கழிபபிததல. அல்லல்தீர்த்து எனறதனுற பாசநீககமும, ஆள எனறதனுற சிவபபேறும ஆகிய இருபயனும குறிததாா வல்லார் எனறது அவவனமை இவாககே எளிதின அமைவதெனறும, வேறெவாககும இனறெனறும குறிததபடியாம. "தீரா நோய தீர்ததருள வல்லான் றனனை" (புளளிருககு வேளூா) எனற திருததாணடகமும, இவவாறு வரும திருவாககுககளும காணக திருததொணடாற பெறுமபேறு நிறைவுறும இடமாதலின இஙகு இவவாறு கூறினா

அமுதுசெய்து (அதற்கு) அருளும் எனக அமுதுசெய்து எனபது நியதியாகிய திருததொணடினை ஏறறுககொளளுதலையும, அருளும் அப்பேறு எனறது அதறகு இறைவன அருளபுரிதலினையும குறிபபன அருளும அப் பேறு - அருள செயயும அநத - அருளினைப பெறுகினற அநதப பேறு. அகரம் தேறறந குறிதத முனனறி சுடடு.

எல்லையில் தீமையேன் ஆதலின பெறறிலேன எனறு பெறறிலாமைககுக காரணம கூறியவாறு.

இங்கு - இவவிடததே இநதக கமரினிடமாக "போவது அஙகு இனியேன?" எனற முனபாடடுக காணக இனறு எனற பொருளில வநததெனறலுமாம

ஊட்டி - மிடறு கழுததின முனபாகம அரியலுறருராய - அரியா னினரூா - ஒததாா - எனறு வருமபாடடுடன கூடடி முடிகக 16

919 (வி - ரை) ஆட்கொள்ளும் ஐயர் - மேறபாடடில "ஆளவலலாா" எனறத னைத தொடாநது இவவாறு கூறினா ஆட்கொள்ளும் - ஆளாக அமைநது செயயும ஏவலை ஏறறுககொளளும "கூடுமே நாயடியேன செயகுற றேவல" (திருவாரூா) எனற திருததாணடகம முதலியவை காணக. ஆடகொளளும எனறதற கேறப ஐயர் - தலைவா - எனரூா.

தாம் - அடியேன ஊடடும பாஙகினனறித தாமாகவே உவநது. இங்கு - இவ விடதது. இநதக கமரில.

செய்திலர் கொல் - செயதாரிலலைபோலும. கொல் - அசைநிலை.

அரிசி முதலியன கமரில சிநதக கணட தாயனூா, இனி இறைவனது திருமுன போவதிற பயனிலலை எனறு, போவது அங்கு இனி ஏன? (916) எனறு எணணினூா. ஆதலின, "ஐயரே! தேவரீா எஙகும நிறைநதவா, இநதக கமரும உமது திருமேனி யாமாதலின இப பொருளகளை இங்கே அமுதுகொணடருளலவேணடும, இலலையேல நியதி பிழைதத எனது தலை வீழததத தகுவதாம" எனறு விணணபபிததனா.

இவ்வாறு விண்ணப்பம் செய்தனர் என்பது "இங்கே, வெள்ளச் சடையாய்!, அமுது செய்யாவிடில் என் தலையைத், தள்ளத்தகும்" என்ற திருவந்தாதியாற் பெறப்படும். சொற் பல்காமைப் பொருட்டு ஆசிரியர் அதனை இங்கு எடுத்துக்கூறாது, வழிநூலுட் காணப்பட்டதனை எண்டுக்கொண்டு பெய்துரைக்க வைத்தார். "இந்த அமுதுசெய்தருளும் அப்பேறு பெற்றிலேன்" (917) என்றும், "இந்த அமுதுசெய் திலாகொல" என்றும் உரைத்த கருத்தும் அது. இதனைத் தொடர்ந்து பின்னரும் "கமரில் வந்திங் கமுதுசெய் பரனே" (921) என்றதும் காண்க.

இப்படி விண்ணப்பித்த நாயனார், தாம் வேண்டியவாறு ஐயர் அமுது செய்தருளிய குறிப்புப் பெறாமையின் "அமுது செய்திடப் பெற்றிலேன் எல்லையில் தீமையேன்" எனத் துணிந்து, முன் உட்கொண்டபடியே தலையைத் தள்ளும் பொருட்டு அரிவாள் பூட்டி ஊட்டியை அரிவாராயினர் என்பது மேற்பாட்டி லுரைக்கப்பட்டது. அக் குறிப்பாவன, என்றும் செஞ்சடை வேதியரை அமுது செய்விக்கும்போது நாயனார் கேட்ட "விடேல்" என்ற ஓசை முதலியவை போலும் அன்றி, 'இன்று இங்கு அமுது செய்தமை தெரியுமாறு இவ்வோசை கேட்க வேண்டும்' என உட்கொண்டனர் என்றும் கொள்ளக் கிடக்கின்றது. இவ்வாறு கொள்ளாக்கால் பின்னர் "விடேல் விடேல்" என்றோசையைப் பரமனார் அமுதுசெய்தருளியதற் கடையாளமாகத் நாயனார் கொள்ளுதற்கு ஏதுவின்றெனக. இக்கருத்துப் பற்றியே தொடக்கத்தில் "கமரிற் புக்க மாவடு விடேல் எனனோசை உரிமையாற் கேட்க வல்லார்" (902) என்றதும் இங்குச்சிந்திக்கற்பாலது "விடேல் விடேல்" என திருமுறை மிகவும் கேட்ட குறிப்புமது. நாளும் நியதியாகக் கேட்பித்த திருச்சிலம்பினோசையைக் கழறிற்றறிவார்நாயனார் ஒரு நாட் பூசைமுடிவிற் கேளாதொழிய, மதிமயங்கித், தம்மாற் பிழை நேர்ந்ததென அஞ்சி உடைவாளை மார்பில் நாட்டுதலும், இறைவர் விரைந்து அவ்வோசையினை **மிகவு மிசைப்பித்தார்** என்ற சரிதம் இங்கு நினைவு கூரத்தக்கது.

இறைவரது திருவருட் குறிப்பினையும் திருவுள்ளத்தையும் அவரால் ஆட்கொள்ளப் பெற்ற பெரியோர்கள் அறியவல்லார்கள் என்பது "தொண்டர் தண்கய மூழ்கித் துணையலுஞ் சாந்தமும் புகையுங், கொண்டு கொண்டடி பரவிக் **குறிப்பறி** முருகன் செய் **கோலம்** - (ஆளுடையபிள்ளையார்-பியந்தைக் காந்தாரம்-3) என்ற திருப்புகலூர் வர்த்தமானீச்சரத் தேவாரத்தாலும், "வாது செய்த **திருவுள்ளமே**", "வாதில் வென்றழிக்கத் **திருவுள்ளமே**" (ஆளுடைய பிள்ளையாரது) என்ற திருவாலவாய்த் திருப்பதிகங்களாலும், 'பிழைத்**தச் செவ்வி யறியாதே** திறப்பித்தேனுக் கேயல்லால்" என்ற (திருநா-புரா-280) ஆளுடைய அரசுகள் சரிதத்தாலும், "பூசைக் கமர்ந்த பெருங்கூத்தர் பொற்பார் சிலம்பி னொலியளித்தார்" என்ற (கழறிற்-புரா 24) கழறிற்றறிவார் சரித வரலாற்றினாலும், பிறவாற்றாலும் தேற்றம் பெற அறியக் கிடக்கும் உண்மையாம். ஒவ்வோர் பொருள்பற்றித் தெய்வத் திருவுள்ள மறியும்படி, வாய்ச்சொல், நிமித்தம் அறிதல், குறிகேட்டல், உத்தரவு கேட்டல் முதலிய வழக்குகள் இந்நாளிலும் சாதாரண மக்களிடத்தும் நிகழ்வது காண்க.

நியதியின்படி ஓசை கேட்கப் பெறாமையால் "**அமுது** செய்திலா கொல்" என்று துணிந்த நாயனார், அத்துணிபுபற்றி **அன்பு காட்டிய நெறியினாலே** கழுத்தினோடும் ஊட்டியும் அரிவாராயினார். **என்று** - என்று நிச்சயித்து. **பூட்டிய** - "அரிவாள் பூட்டி" என மேற்பாட்டிற் கூறியபடி பூட்டிய. "வாட்பூட்டிய" என்றது திருவந்தாதி.

**புரை அற** - குற்றம் நீங்க. புரை - "எல்லையில் தீமையேன்" (917) என்ற அவை

**விரவும் அன்பு காட்டிய நெறியில் . . .அரியா நின்றார்** - இவ்வாறு தலையைத் தள்ளும்படி தம் கழுத்தைத் தாமே அரிந்துகொள்ளுதல் அற நூல்களால் விலக்கப்பட்ட தற்கொலை என்ற பாவமாகாதோ? எனின், ஆகாது, இது பொருந்திய அன்பு காட்டும் நெறியே யாகும் என்றதாம். "தீயில் வீழ்கிலேன் திணிவரை யுருள்கிலேன்

செழுங்கடல் புகுவேனே", "முட்டிலேன் றலைகீறேன்" என்பனவாதிய திருவாசகங்களும், "உயிர்நீப்பர் மானம் வரின்" என்ற திருக்குறளும், பிறவும் காண்க. நாயகனைப் பிரிந்த கற்புடை மடவார் உயிர் துறத்தலும், துணைபிரிந்த அன்றில்கள் இறத்தலும் போன்றவை **விரவும் அன்பு காட்டிய நெறியேயாவன** என்பதனை இங்கு நினைவு கூர்க. "பேசாத நாளெல்லாம் பிறவா நாளே" (திருத்தாண்டகம்), "சொல்லாதன கொழு நாவல்ல சோதியுட் சோதிதன்பேர், செல்லாச் செவிமரந் தேறித் தொழாத கை மண்டிணிந்த, கல்லா நினையா மனம் **வணங்காத் தலையும் பொறையா,** மல்லா வவயவந் தானு மனிதர்க் கசேதனமே" (பொன்வண்ணத்தந்தாதி - 142) என்றபடி இறைவனுக் காட்படாத உடலும் அவயவங்களும் தள்ளத் தகுந்தன என்பது ஞான நூற் றுணிபாம். இறைவனது "தூய நாண்மலர்ப் பாதந் தொடர்ந்துளார்" ஆகிய (907) தாயனார் அத்தொடர்பாலாகிய ஆட்செய்யப் பெறுந் தன்மையின் நீங்கியதாக எண்ணியபோது, தலைமகனது பிரிவாற்றாமையால் தலைமகள் அடையும் கையறு நிலையை அடைந்தவராகி, அவ்வாறு பொருந்திய **அன்பு காட்டிய நெறியாலே** இப்படித் துணிந்தனர் என்று ஆசிரியர் அமைதி காட்டியது காண்க.

**உள்ளந் தண்டு அற** - கழுத்தினுள்ளேயுள்ள அழகிய தண்டு அறும்படி. அன்பு நெறியினின்றும் மனது விலகாதபடி என்றுரைப்பாரு முண்டு.

**ஊட்டியும் கழுத்தினோடே** என மாற்றுக. மிடறும் - பின் கழுத்தும். கழுத்து முழுமையும்.

**அரியா நின்றார்** - தம் கழுத்தைத் தாமே அரிதல் வலிந்தசெய லாதலானும், அதற்கு இங்குக் கொண்ட கருவி, போர் வாள் முதலிய வலிய கருவியல்லாது அரிவாளே யாதலானும், அச்செயல் ஒரு வீச்சில் நிகழாது பின்னும் முன்னுமாகப் பன்முறை அரிவாளை வலிந்து ஊன்றி ஈர்த்தலால் நிகழுங் கால நீட்டிப்புக் குறிக்க இவ்வாறு **ஆநின்று** என்ற நிகழ்கால இடைநிலை தந்து கூறினார். **அரியா நின்றார்** - அரிந்து கொண்டு நின்றார் என்றலுமாம். **நிற்றல்** - அச்செயலிற் பிழையாது தொடர்தல்.

**உறு பிறப்பு அரிவார் ஒத்தார்** - "பாசப் பழிமுதல் பறிப்பார்போல" (460) என்றவிடத் துரைத்தவை பார்க்க. பிறப்பு உறுகின்ற நிலையை அறக்களைந்து வீடு பெறுவார் போன்றார் எனக் இச்செயலின் பின்விளைவும் குறித்தது.

**அரியா நின்றார்** - அரிகின்றாராகிய அவர் வினையாலணையும் பெயர் அரியா நின்றார் - ஒத்தார் என முடிந்தது. 17

920. மாசறு சிந்தை யன்பர் கழுத்தரி யரிவாட் பற்று
மாசில்வண் கையை மாற்ற வம்பலத் தாடு மையர்
வீசிய செய்ய கையு, மாவடு "விடேல்வி டேல்"லென்
ஞோசையுங், கமரி னின்று மோக்கவே யெழுந்த வன்றே ௧௮

(இ-ள்) வெளிப்படை. குற்றமறுக்குஞ் சிந்தையுடைய அன்பர் தமது கழுத்தை அரிகின்ற அரிவாளைப் பிடிக்கும், குற்றமில்லாத வண்மையுடைய கையின் செயலைத் தடுக்க அம்பலத்தாடும் ஐயரது வீசிய செய்ய இடது திருக்கையும், மாவடுவினது "விடேல் விடேல்" என்ற ஓசையும் கமரிலிருந்து அப்போதே ஒருசேர எழுந்தன.

(வி-ரை) **மாசறுசிந்தை** - மாசு அறுக்கும் சிந்தை எனக். மேற்பாட்டிற் "புரைஅற" என்றார். **மாசு** - முன் குறித்த **புரை தீமை** - (918) என்ற அவை. தமது தீமையினாலே இறைவர் அமுது செய்திலர் என்றும், இறைவருக் காட்படாது இருக்கும் பிறப்புத் தள்ளத்தக்கது என்றும் உறுதி பெற்றாராதலின் அதனை **அறுக்கச்** சிந்தையுள் எண்ணினார் என்பார் **மாசு அறு சிந்தை** என்றார்.

**அன்பர்** - ஞானி என்ற பொருளில் வந்தது. "இருஞ்சுரபிக் கெங்கும், உருகக் காண ஒண்ணாத பானமூலப்பால் விம்மி யொழுகுவது போலவெளிப்பட் டருளுவன **அன்பர்க்கே**" என்று (சிவஞானசித்தி - 12, 4) விட்டது "அன்ப ரொன்றாது ஈண்டு ஞானிகண்மேற்று, 'அன்பரொடு மரீஇ' என்புழிப்போல" என்றுரைத்ததும், சிவஞானபோதம் 12 ம் சூத்திரம், **அன்பரோடு** என்றதற்கு "அங்ஙனம் அயரா அன்பு செய்யும் மெய்ஞ்ஞானிகளோடு" என்றுரைத்ததும் காண்க.

**அன்பர் கழுத்து அரி அரிவாள்** - கழுத்தரியும் வன்செயல் அன்பினால் ஆகியது என "அன்பு காட்டிய நெறி" என்று மேற்பாட்டிற் கூறியதனை அநுவதித்தது இங்கு **அன்பர்** என்றார்.

**ஆசில் வண்கையை** - **ஆசு** - குற்றம் கையினுக்குக் குற்றமாவது கைகளாற் செய்யத்தக்கவற்றைச் செய்யாமையும், செய்யத்தகாதவற்றைச் செய்தலுமாம் செய்யத்தக்கவை "கைகாள் கூப்பித் தொழீர் கடி மாமலர் தூவிநின்று" (அப்பர்சுவாமிகள் - திருவங்கமாலை) என்று தமிழ்மறையால் விதிக்கப்பட்டன. அவை இறைவனது வழிபாடும், அதற்கான செய்யும் சரியை கிரியை என்றவற்றிற் பட்டனவுமாம் நாயனாரது கைகள் தமக்குணவில்லாத போதும் கூலி செய்தும் திருப்பணி முட்டாது செய்தும் வந்தனவாதலின் இவ்வாறு கூறினார் இங்குக் கழுத்தரிதலாகிய வலிந்த செயல் செய்யினும் அக்கையினுக்குக் குற்றம் சாராதென வற்புறுத்துவார் **ஆசில்** என்றார் குற்றமாகாமை மேலுரைக்கப்பட்டது **வண்மை** - திருப்பணி முட்டுப்படக் காணும் காலத்து உயிரையும் ஈடாகத் தரும் வள்ளன்மை **கையை** - கைசெய்யும் செயல் முயற்சியினை. **கை** - என்பது அது செய்யும் செயல் முயற்சிக்காகி வந்தது ஆகுபெயர்

**மாற்ற** - இங்குத் தடுக்க என்ற பொருளில் வந்தது

**அம்பலத்து ஆடும் ஐயர்** - அருட் கூத்தர் **வீசிய செய்ய கை** - இடது கை. வீசுகரம் என்ப "சிக்கன வா வீசுகரம்", "பொருந்தி விமைப்பிலி யவ்வென்ற பொற்கை" முதலிய திருவாக்குக்கள் காண்க ஐயரது இடதுபாகம் அருளாகிய அம்மையாருடையதாதலின், அத்திருக்கை அருளுடையதெனபார் **வீசிய செய்ய கை** என்றார். கந்தைபுடைத்திட வெற்றுங் கற்பாறையில் திருக்குறிப்புத் தொண்டர் தமது தலையை மோதப் புக்கபோது, அங்கு "வந்தெழுந்து பிடித்தத்தணி வளைத்தழும்பர் மலர்ச்செங்கை" (திருக்குறி - புரா) என்ற வரலாறு இங்குச் சிந்திக்கத்தக்கது.

**கமரினின்றும் கையும் ஓசையும் ஒக்கவே எழுந்த** எனக. கண்ணப்ப நாயனார் இடது கண்ணைத் தோண்ட அம்பு ஊன்றிய கையினை இறைவரது வளையலணிந்த இடது கை சிவலிங்கத்திலிருந்து முளைத்துத் தடுத்ததுவும், 'கண்ணப்ப நிற்க' என்ற வாக்கும் உடன் எழுந்ததுவும் இங்கு நினைவு கூர்க 827 பார்க்க.

**மாவடு விடேல் விடேல் என்னேசை** - மாவடுவினைக் கடித்தலால் உள்தாகும் விடேல் என்ற ஓசை மாவடுவின் ஓசை எனக செய்யப்படு பொருட் காரகத்தினை வந்த ஆறனுருபும் பயனும் உடன் றொக்கு நின்றன "வடுவின் ஓசை" (925, 626) என்பவற்றை நோக்குக 902 பார்க்க அடுக்கு உறுதியும் மிகுதியும் குறித்தது. "சிலம்பி ஞெசைமிகவு மிசைப்பித்தார்" (கழறிற் - புரா - 42) என்ற வரலாற்றை இங்கு நினைவு கூர்க

**எழுந்ததன்றே** என்பது பாடமாயின் தனித்தனி கூட்டிக்கொள்க **அன்றே** - அப்போதே.

இவ்விடத்து "ஆண்டவன் கோயிலில் மட்டும் வீற்றிருக்கின்றானில்லை என்பதும், அன்பர்கட்கு அவன் எங்கிருந்தும் அருள்செய்வான் என்பதும், அவன் எங்கும் நீக்கமற நிறைந்துள்ள ஒருவன் என்பதும் விளங்குவது காண்க" என விசேடவுரை காண்பாருமுண்டு. இறைவனைத் திருக்கோயிலுள்ளிருக்கும் திருமேனியில் வழிபடு

வோர் அவன் திருக்கோயிலினுள்ள மடமே வீற்றிருக்கின்றான் என்றும் ஏனையிடங்களில் அவனது நிறைவு இல்லை என்றும் கொள்கின்றார்கள் என்று குறிப்புடன் இவ்வுரை காணப்படுகின்றது. திருக்கோயிலினுட் சிவலிங்கத் திருமேனியிலும், அடியார் திருவேடத்திலும் இறைவன் தயிரின் நெய்போல வெளிப்பட்டும், ஏனையிடங்களிற் பாலின் நெய்போல மறைந்தும் விளங்குவன் என்பது உண்மைநூற் றுணிபு.

“கண்டதொரு மந்திரத்தால்” என்ற சிவஞான போதம் (2ம் சூத்) உதாரண வெண்பாவில் “விறகிற் கடைகோலாற்றீ கடைந்துழி விளங்கும் அல்லுழி விளங்குவ தன்றாற்போல, உயிர்கட்குப் புத்திமுத்தி யளித்தற் பொருட்டுக் காணப்பட்ட தாவர வடிவின்கட் கலப்பினால் அதுவே தானாய், அதுவன்றி வேறு பொருளுமாமியல்புடைய முதல்வன், அதுவே தானாகக் காணுதார்க்குத் தம்மாலறியப்பட்ட தொரு மந்திர சாந்நித்திய மில்வழி அவ்வடிவின்கண் விளங்காது நின்று, அஃதுள்வழி விளங்கித் தோன்றும் பொருளாய், அவ்வாற்றன்றி அவ்வடிவே அவனுக்குக் காணப்பெறும் உண்மைத் தவமுடையார்க்கு அப்பெற்றியனேயாய் விளங்கித் தோன்றான் கொல்லோ?” என்று எமது மாதவச் சிவஞான முனிவர் உரைத்தனவும், இவ்வாறே “திருக்கோயிலுள்ளிருக்குந் திருமேனி தன்னை” என்ற சிவஞான சித்தியாரின் (12 4) கீழ் உரைத்தனவும் இங்குச் சிந்திக்கத்தக்கன.

விறகிற்றீப் போலவும், பாலின் நெய்போலவும் மணியிற் கதிர் போலவும் எங்கும் நிறைந்து மறைந்து நிற்கும் இறைவன் இம் மூன்றிலும் “முறுக வாங்கிக் கடைய முன்னிற்குமே” என்றபடி தீவிரதர முடைய அன்பர்க்கே அவர்களது பக்குவ முதிர்ச்சியால் அவர் நினைத்தவிடத்தில் வெளிப்படுவன் என்பதும், ஏனையோர்க்கு அவ்வாறு வெளிப்பட விளங்கான் என்பதும் துணிபு. திருக்கோயிலினுள் இறைவனது வெளிப்பாடும், ஈண்டுத் தாயனார்க்குக் கமரே முன்னிலையாக வெளிப்பாடும் அன்பின் தீவிர பேதம் குறித்தனவாகலின் எல்லார்க்கும் இவ்வாறு கூடாமையின் இங்கு இவ்விசேட வுரையின் பொருத்தம் ஆராயத் தக்கது. அன்றியும் அற்றை நாளைக்குமுன் வரை தாயனாரும் திருக்கோயிலுள்ளிருக்கும் திருமேனியிலே இறைவனை வழிபட்டனர் என்பதும், அன்றைக்கும் “அங்குப் போவதேன்” என்றதும் உன்னுக. 18

921. திருக்கைசென் றரிவாட் பற்றுந் திண்கையைப் பிடித்த போது
வெருக்கொடுங் கூறு நீங்க வெவ்வினை விட்டு நீங்கிப்
பெருக்கவே மகிழ்ச்சி நீடத், தம்பிரான் பேணித் தந்த
வருட்பெருங் கருணை நோக்கி யஞ்சலி கூப்பி நின்று, ௧௯

922 “அடியனே னறிவி லாமை கண்டுமென் னடிமை வேண்டிப்
படியிசைக் கமரில் வந்திங் கமுதுசெய் பரனே போற்றி!
துடியிடை பாகமான தூயநற் சோதி போற்றி!
பொடியணி பவள மேனிப் புரிசடைப் புராண போற்றி!” ௨௦

923. என்றவர் போற்றி செய்ய விடபவா கனனாய்த் தோன்றி,
“நன்றுநீ புரிந்த செய்கை, நன்னுத லுடனே கூட
என்றுநம் முலகின் வாழ்வா” யென்றவ ருடனே நண்ண
மன்றுளே யாடு மையா மழவிடை யுகைத்துச் சென்றார். ௨௧

921. (இ - ள்) வெளிப்படை. (இறைவருடைய அவ்வாறெழுந்த) திருக்கை சென்று, அரிவாளினைப் பற்றும் (தாயனாரது) வலிய கையைப் பிடித்தபோது, அவர் வெருக்கொண்டு, அப்போதே அரிவாளினால் உள்ளதாகிய புண் நீங்க வெவ்வினையும்

விட்டு நீங்கிப, பெருகக்வே மகிழச்சிநீட்டத், தமது பெருமானாா தம்மைப பேணித தநத அருட்பெருங கருணையினை நோககிக, கைகளை அஞசலியாகக குவிததுநின்று, கக

922 (இ - ள்) வெளிபபடை. "அடியனேனது அறிவில்லாமையைக கணடு வைததும எனது அடிமையை வேணடிப பொருட்படுததி நிலத்தினமேற கமரிலே வநது இஙகு அமுதுசெய பரனே போறறி! துடிபோனற இடையையுடைய உமை யமமையாரை ஒரு பாகததிலுடைய தூய நலல சோதியே போறறி!, திருநீறறினை யணிநத பவளம போனற திருமேனியையும, புரிசடையையும உடைய புராணனே போறறி!'', உ௦

923. (இ - ள்) வெளிபபடை எனறு அவா துதிகக, இடபவாகனராக வெளிப படக காடசிகொடுதது, "நீ புரிநத செயகை நனறு, நனனுதலையுடைய உனது மனைவியுடன எனறும நீஙகாது நமது உலகததில வாழவாயாக!" எனறு அருளிச செயது, அமபலத்தாடும ஐயா, அவா தமமுடனே நணணத, தமது இளைய விடையினை ஊாநது எழுநதருளிப போயினர் உக

இமமூனறு பாட்டுககளும தொடாநது ஒரு முடிபு கொணடன.

921 (வி - ரை) திருக்கை - ஐயரது இடது கை "வீசிய செயய கை" (919) எனக கூறிய அநதக கை. "எழுநதது" என மேறபாட்டில அதன வெளிபபாட் டைக கூறினா, இஙகு, "செனறு" - "பிடிதத" என அதன ஞெழிறபாட்டைக கூறினா, இறைவனது "செனறடையாத திரு"வினைத தருவதாதலால அதனைத திருக்கை எனறு சிறபபிததாா

திண்கை தாயனாது கை மனததின திணமை கையினமேல ஏறறபபட்டது. மேறபாட்டில கையினது செயலின வணமைபறறி வண்கை எனற ஆசிரியா, இஙகு அசசெயலின செயதறகரிய திணமை பறறித திண்கை எனறா. திண்மையாவது நினைததது முடிககும ஆறறல கலஙகா நிலைமை எனபா பரிமேலழகா. "எணணிய வெணணியாங கெயதுப வெணணியாா, திணணிய ராகப பெறின" (குறள) எனறபடி இஙகுத தாயனா தமது செயகையினால தாம ஊட்டிய அமுதினை இறைவா உணட தைக காண எணணிய கருததை எணணியாங கெயதினா எனபது தோனற இஙகுத திண்மை எனற அடைமொழி புணாததோதினா.

வெருக்கொடு - வெருக்கோள்ளுதல் - தாம எதிாபாராதபடி சடுதியில் தமது கை பிடிககபபட்டதும, அதனால தமது கழுததரியும செயல தடுககபபட்டதும உணாந ததனால உளதாகிய அறபுத உணாசசியின மெயபபாடு "வெருககோளுற றஞசீஇக" (260) எனறவிடத துரைததவை பாாகக. "வெருககொணடாா போலமுவா குறிப பயலாய" (திருஞான - புரா - 55) எனறதும பிறவும காணக.

வெருக்கொண்டது மனததின முதலில எழுநத நிகழச்சி ஊறுநீங்க உணாநதது இரணடாவது நிகழசசி, மகிழ்ச்சி நீடியது மூனறாவது நிகழசசி இவை நிகழநத முறை பறறி அமமுறையிற கூறினா. ஊறு - அரிவாளினால கழுததை அரிநததனால உறற புண நீங்க - திருவருளால புணமாறி முனபோலாக.

வெவ்வினைவிட்டு நீங்கி - வெவ்வினை - கடிய வலிநத செயலாகிய கழுததரிதல். வெம்மை - விருபபம எனறு கொணடு, தாமே விருமபிச்செயத செயல எனறுரைப் பினுமமையும வெவ்வினை - பிறவிககுக காரணமாகிய மூலவினையின பகுதி எனறும, நீங்கி - சததிமடஙகி மறைநது எனறும போநத குறிபபும காணக இறைவரது திருக கையினால பிடிககபபட்டமையாலும, ஊறு நீஙகியமையினாலும, மாயை யாககை நீஙகிச் சிவயாககை பெறறனா இவவாறு பாசநீககம பெறற தாயனா சிவபபேறு பெறுதல 922 ல உரைககபபட்டது காணக.

**மகிழ்ச்சி பெருக்கவே நீட** என்க பெருக்கம் - அளவினாலும், **நீடுதல்** - காலத்தாலும் மிகுதல் குறித்தன. **மகிழ்ச்சி பெருகுதல்** இங்கு " விடேல் விடேல் " என்ற ஓசை கேட்டதனால் இறைவர் அமுது செய்தனர் என்று உணர்தலாலும், தமது நியதியாகிய திருப்பணி முற்றுப்பெற இறைவர் ஏற்றுக் கொண்டமையாலும் உண்டாகிய தென்க. ஊறுநீங்கியதனாலன்று. எறிபத்த நாயனார் வாளினைத் தமது கழுத்திற்பூட்டி அரிந்திடலுற்ற போதில் புகழ்ச்சோழநாயனார் அந்த வாளும் கையும் விடாதுபற்றிப் பிடித்தபோது, " மாதவர் வருந்தி நிற்ப " (597) என்ற செய்தியையும், ஆண்டுரைத்த வற்றையும், இங்கு ஒப்பு நோக்குக

**அருட்பெருங்கருணை** - கை பிடித்ததும், விடேல் என்ற ஓசை மிகவும் கேட்பித்ததும், ஊறுநீக்கியதும் முதலிய இவை. 19

922. **(வி - ரை) அறிவிலாமையாவது** - உள்குவார் உளத்திற் றெல்லாமுடனிருந்தறிவார் இறைவர் என்றும், அமுது செய்தருளவேண்டிக் கொண்ட அவவேண்டுதலின் கண்ணே நிறைந்து அவ்வாறே செய்தருளுவார் என்றும் துணிவுற அறியாது ஐயப்பட்டு அமுது செய்ததற்கு அறிகுறியாக " விடேல் " என்ற ஓசை வேண்டுதல்

**என் அடிமை வேண்டி** - யான் அடியவனாய் உள்ளதலை விரும்பி அடிமைச் செயலை விரும்பி என்றலுமாம்.

**இங்கு அழுதுசெய் பரன்** - **இங்கு** - கமரில், **அழுதுசெய்** - விடேல் என்றோசையாற் புலனாயினபடி அமுது செய்தருளிய. **பரன்**-பெரியவன்-மகத்தானவன். தாழ்ந்த இடத்தில் வெளிப்பட்டதும், அறிவிலாமை கண்டும் அடிமைவேண்டி அமுது செய்ததும், அதற்கடையாளமாக ஓசை கேட்பித்ததும் அவரது மகத்துவத்தை விளக்கியன என்பது குறிப்பு. **பரன்** (எல்லாப் பொருள்கட்கும்) அப்பாற் பட்டவன் என்றலுமாம்.

**துடி இடை பாகமான** - **துடி** - உடுக்கை மேலும் கீழும் பெருத்து, இடை சிறுத்துள்ளமையால், இருமுகமும் விரிந்து நடுச்சிறுத்த உடுக்கை, இடைக்கு, மெய்பற்றி வந்த உவமம்.

**துடியிடை** - இடையினையுடைய உமையம்மையார் அம்மையார் உவமைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை பாகம் தமக்குச் செய்த அருள் குறிப்பதாகலின் இவ்வாறு தொடர்ந்து கூறினார்

**பொடி** - திருநீறு **பவளமேனி** - இறைவனது திருமேனி வன்ன பேதங்களாற் றாக்கப்படாத பளிங்கு போன்றதாம் சுத்தஸ்படிக சங்காசம் என்பர் வடவர். " சுத்தமார் பளிங்கின் பெருமலை " என்பது தமிழ்மறை. ஆயினும் " பொன்னைமை நீலாதி வன்னம் பொருந்திடப் பளிங்கிவற்றின், தன்மையாய் நிற்கும் " என்பவாதலின், " எரியலா லுருவ மில்லை " என்றபடி நின்ற எரியுருவத்தையே பவளம்போலக் காட்டியது என்பதாம் " பவளம்போல் மேனியிற் பால்வெண்ணீறும் " (திருவிருத்தம் - திருக்கோயில்) என்ற தமிழ்மறை இதனை நினைவு கூர்விப்பதாம்.

**புரிசடை - புரி** - பலபுரியாக - வடமாக - திரித்த **புரிதல்**-எப்போதும் சொல்லுதல் என்றுகொண்டு, கங்கை, பிறை, நகுதலை முதலியவற்றைத் தாங்கிக் கொண்டு உலகை வாழ்வித்த கருணை கருதி, அறிஞர் யாவராலும் எப்போதும் **துதித்து** எடுத்துச் சொல்லப்படும் எனவும், " கபர்த்திநே நம " என்று சிவாட்டோத்தரத்தில் துதித்துச் சொல்லப்படும் எனவும் உரை கொள்ளுதலுமாம்.

**புராணன்** - பழைமையானவன் - முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம் பொருள் எனக்கு அருள் செய்தாய், அருள் உன் இயல்பு, அது உனக்குப் பழமையாயுள்ளது என்றதாம். 20

923. (வி - ரை) என்று அவர் போற்றி செய்ய - அவர் - வெருக்கொடு - நீங்க - நீங்கி - நீட நோக்கி - கூப்பி - நின்று - போற்றி - போற்றி - போற்றி என்று போற்றி செய்ய எனக்

அவர் - "மாசறு சிந்தை அன்பர்" என மேற்பாட்டிற் கூறிய அவர்.

நின்று போற்றி செய்ய - ஐயர் - தோன்றி - "வாழ்வாய்" என்று - அவர் உடனே நண்ண - சென்றார் - என இம்மூன்று பாட்டுக்களையும் தொடர்ந்து முடித்துக்கொள்க.

"நன்று வாழ்வாய்" - இது இறைவர் நாயனாரை நோக்கி அருளிய திருவாக்கு நன்று நீ புரிந்த செய்கை-நாயனாரது செயற்கருஞ்செய்கையைப் பாராட்டிய அருமைப் பாடு குறித்தது "நாம் சொல்லிய அறநூல்களில் தற்கொலை தீது என்று விதித்த நாமே, எம்மிடத்து அன்பின்றிறத்தால் செய்த இதனை நன்று எனக் கொள்ளற்காயது இச்செயல்" என்றுரைக்கவும் நின்றது காண்க.

நன்னுதல் - நல்ல நுதலினை யுடைய உன் மனைவி. உடனே கூட - "கைகர மில்லா அன்பின் மங்கை கை யடக்கு கொய்து, பெய்கலத் தமைத்து வைக்க" (914) எனவும், "வடநெடு வான மீனே யனையவர் தண்ணீர் வார்க்க" (915) எனவும் கூறிய வாற்றால் அடியார்பணியும், "பின்புபோம் மனைவியாரும் பெற்றவரு சேர்ந்திச் சென்றார்" (915) என்றும், "மாதரார் மடக்கல மூடு கையால் காதலர் வணைத்தும்" (916) என்றும் கூறியவாற்றால் அரன்பணியும் உடனிருந்து புரிந்தனராதலின் தமது நாயகருடனே கூடச் சிவலோக வாழ்வு பெற்றனர். திருநீலகண்டநாயனாரது மனைவியாருக்கும் (402), இயற்பகைநாயனாரது மனைவியாருக்கும் (437), இளையான்குடிமாற நாயனாரது மனைவியாருக்கும் (465) இன்னும் இவர்கள் போன்றுள்ள தேவியார்க்கும் இவ்வாறே இறைவர் அருளியது இங்கு நினைவு கூர்க

நம் உலகில் என்றும் வாழ்வாய் என்க மீளாத நிலையில் சிவலோக வாழ்வு பெற்றிருப்பாய் என்று - என்று அருளிச்செய்து அவர் உடனே நண்ண-நாயனாரும் மனைவியாரும் தம்முடனே வர சென்றார் - எழுந்தருளிப் போயினார்.

ஒன்றி நம்முலகில்—என்பதும் பாடம் 21

924. பரிவுறு சிந்தை யன்பர் பரம்பொரு ளாகி யுள்ள
"பெரியவ ரமுது செய்யப் பெற்றிலே" னென்று, மாவின்
வரிவடு விடேலெ ன்றுமுன், வன்கழுத் தரிவாள் பூட்டி
யரிதலா "லரிவாட் டாய" ராயினார் தூய நாமம். ௨௨

(இ - ள்) வெளிப்படை அன்பு பொருந்திய சிந்தையினையுடைய அன்பராகிய நாயனார், "பரம்பொருளாகியுள்ள பெரியவராகிய சிவபெருமான் இங்கு அமுது செய்யும் பேறு பெற்றிலேன்" என்று கொண்டு வரியினையுடைய மாவடுவினது "விடேல்" என்ற ஓசையினை அவர் கேட்பிக்கு முன்பு, தம் வன் கழுத்தினை அரி வாளினைப் பூட்டி அரிதலினாலே அரிவாட்டாயர் என்ற தூய பெயரினை உடையார் ஆயினார்,

(வி - ரை) இப்பாட்டுக் கவிகூற்று.

பரிவுறு சிந்தை - பரிவு அன்பு. மாசறு சிந்தை அன்பர் (919), அன்பு காட்டிய நெறியின் (918) என உரைத்தவற்றை இங்கு நினைவு கூர்க

பரம்பொருள் பெரியவர் - எல்லாப் பொருள்களுக்கும் அப்பாற்பட்ட - கடந்த - எல்லையாயுள்ள பொருள் "உலகுய்ய நடமாடும் எல்லை" (திருநாளை - புரா - 35,), "அலகில் கலையின் பொருட்கெல்லை யாடுங் கழலே" (சண்டீசர் புரா - 15) என்பன கூறிய திருவாக்குக்களும், முன்னர் "அமுதுசெய் யரனே" (921) என்றவிடத் துரைத்தவையும் காண்க.

**அமுது செய்யப்பெற்றிலேன்** - 917, 918 பாாகக

**வரிவடு** - நிறமுடைய மாவடு மனனு பைநதுணா மாவடு (908) எனறது காணக

**வன்கழுத்து** - அரிநதும அரியுணணுமலும, பினனா அருளால ஊறு நீஙகியும, இறைவனது கழுததுபபோல எனறு நிலைதத வாழவுபெறறும விளஙகிய தனமை குறிகக **வன்மை** எனற அடைமொழி தநதோதினா

**நாமம்** - **தாயன்** எனபது அவாது பெயா. **அர்** - உயாவு குறிதத பனமை விகுதி மாறா - மாறனா - (440) எனபுழிபபோல

**தூய நாமம் அரிவாட்டாயர் ஆயினர்** எனக **தூய** - தூயமையைத தரததகக. திருததொணடததொகையுள ஆளுடையநமபிகள இககருததுபபறறியே ' எஞசாத வாட்டாயன அடியாாககு மடியேன " எனறு துதிகக நினறமையும, அதனைத துதிதது உலகம தீமை நீஙகித தூயமைபெறறு உயகினறமையும குறிககத **தூய** எனறா. அடியாா திருநாமஙகள தூயமை செயவனவாம என, "அடியிணைகள, சிநதனைசெய திநதத **திருநாமக்** கோவையினை, மநதிரமாக கொணடு மயிாசிலிாதது நைநதுருகி, மெய யனபா லெனறும விளமபப பெறுவாாகள, கைதவமும புலலறிவுங கறபனையும - மைய **லுந தீர்ந**, தததுவிதா னநத வகணடபரி பூரணததில, நிததியமாய வாழவாா நிசம " எனறு திருததொணடா திருநாமககோவையினுள எமது மாதவச சிவஞானசுவாமிகள போறறி அருளியிருபபது காணக. "திருஞான சமபநதா " எனற **நாமமநதிரம்** சொலலக கேட்டலும பாணடியர் அயாசசியை நீஙகினா (திருஞான - புரா 721) எனற வரலாறும இஙகு நினைவு கூாக 22

925. முன்னிலை கமரே யாக முதலவனா ரமுது செயயச
செஙகெலி னரிசி சிநதச செவியுற வடுவி னோசை
யஙகிலை கேட்ட தொணட ரடியிணை தொழுது வாழததி
மனனுமா னுயா செயகை யறிநதவா வழுதத லுறறேன. ௨௩

**(இ - ள்)** செஙகெலின அரிசி சிநத - செஙகெலலரிசி முதலியவை சிநதியிட, கமரே முனனிலையாக - அவை சிநதிய அநதக கமரே **முன்னிலையாக**, முதலவனா அமுது செயய - இறைவா திருஅமுது செயதருள, அஙகிலை அஙகிலையில, வடுவின ஓசை செவியுறக கேட்ட தொணடா மாவிடுவனது "விடேல" எனற ஓசையைத தம காதுகள பொருநதக கேட்டதாகிய பேறுபெறற தொணடராகிய தாயனாாது; அடியிணை. வாழததி திருவடியிணையைத தொழுது துதிதது, அததுணையானே, மன னும உறறும - நிலைபெறற ஆனயாது செயகையினைத தெரிநதபடி துதிககத தொடஙகுகினறேன.

**(வி - ரை) முன்னிலை** - இறைவா அமுது செயதருளுதறகு முனனிலையாயுற றது **கமரே முன்னிலையாக** எனக இதனமுனனாத தாயனாாது அமுதுகொளவ தறகு முனனிலையாயுறறது சிவலிஙகத திருமேனி, இஙகு அநத முனனிலை கமரே யாயிறறு **முன்னிலை** - வெளிபபடும இடம அபிவியததி ஸதானமெனபா வட வா இறைவா அமுது செயதருள உறற முனனிலைகள இரணடே யெனபா, அவை சிவலிஙகத திருமேனியும சஙகமத திருமேனியும எனபன "தாவர சஙக மஙக ளெனறிரண டுருவினினறு, மாபரன பூசை கொணடு மனனுயிாக கருளை வைப பன" (சிவஞானசிததி 2, 28) எனறதனுலறிக இஙகு இறைவா பூசை கொணடது தாவரமாகிய சிவலிஙகத திருமேனியாம இநதக கமரே அசசிவலிஙகமாயிறறு எனக. **முன்னிலை** எனபது இஙகுச சிவலிஙகம எனற பொருளில வநதது எனபது ஸ்ரீமத செபபறைச சிதமபர சுவாமிகள கணட உரைககுறிபபு **முன்னிலை** - காரணம எனபா ஆலாலசுநதரமபிளளை.

**செந்நெலின் அரிசி** - முதனமைபறறி அரிசியைச் சொனனவதனால உதவியுண வாகிய செஙகீரையும மாவடுவும இனம பறறி உடனகொளளப்படும

**அந்நிலை** - அவவிடதது - அப்பொழுதே அரிசி சிநத, முதலவனார் கமரே முன் னிலையாக அமுதுசெயய, அநநிலை வடுவின ஓசை செவியுறக கேட்ட தொண்டா எனக கூட்டிக கொளக.

**முன்னிலை. தொண்டர்** - இவவாறு ஆசிரியா எடுததுககாட்டிய பெருமைபற றியே "செயயி லுகுதத திருபபடி மாறறதனை, "ஐயய! விதுவமுது செய்"கெனறு—பையவிருந, துட்டி யறுததவாககே யூட்டி யறுததவரை, நாட்டியுரை செயவ தெனனோ நாம" (20) எனவும், "கலவிற கமரிற் கதிரவாளிற் சாணையினில், வலலுப பலகையினில வாதனையைச—சொலலும, அகமாராககத தாலவர்கள மாறறினாகா ணையா, சகமாரககத தாலனறே தான" (50)—(திருககளிற்றுப்படியாா) எனவும் விதநது எடுதது ஞானசாததிரம ஓதியதும காணக

**மன்னும் ஆனுயர்** - இவவுலகததிலிருநது குழல வாசிததபடியே அருளால அந நினற நிலையே ஐயாமருஙகு அணைநது, அததிருககுழல வாசனை முதலவனாா எபபோ தும கேட்க அவா மருஙகு அணைநது எனறும உளளாராதலின (964) **மன்னும்** - நிலை பெறும எனறாா. இவவுலகததில போநத அநநிலையே வீட்டுலகததிலும **மன்னும்** எனற குறிபபுக காணக

ஆசிரியா தமது மரபினபடி இதுவரை கூறிவநத சரிததிரததின சாரததை வடிதது எடுதது முடிததுக காட்டி, இனிமேல வரும சரிததததுககுத தோறறுவாய செயகினறாா

**செய்கை** - திருவைந தெழுததை உளளுறையாகக கொணட பணணிசையினை வேயங குழலில வாசிதது உலகெலலாம இசை மயமாககி, அதுவே ஐயனறன றிருச செவியினருகணையப பெருககிய அருளுசெயகை (960 - 961). திருககுழல வாசனை எனபா ஆசிரியா 23

---

**சரிதச் சுருக்கம்**:—சோழர்களது காவிரிநாட்டில் **கணமங்கலம்** எனபது ஒரு பதி. அது நீரவளம், நிலவளம், பயிரவளம முதலியவறறாற சிறநது விளஙகுவது. அதில மிகக செலவதது **வேளாளர் குலத்துத் தலைமையராய**, மனையறததின வாழவா ராயச, சிவபெருமானது திருபபாதஙகளைத தொடாநது பறறுகினறவராய்த **தாயனார்** எனற திருநாமம உடையவராய, ஒரு பெரியாா இருநதாா. அவா சிவபெருமானுககு எறறன எனறு செநநெலலரிசியும, செஙகீரையும, மாவடுவும நாளதோறும கொணடு வநது திருவமுது செயவிபபாராயினாா.

இததிருததொணடினை அவா வறுமைவநத காலததும விடாது செயது வருவாா என உலகுககுககாட்டி அதுகொணடு உலகை உயவிககும பொருட்டு, இறைவா அவரது வழிவழி வநத செலவததை அறியாதவாறு மாறறினாா. அதனால அவரது செலவம **யானையுண்ட விளங்கனி** போல உளளீடறறு மறைநதது. அபபோதும தாயனாா பாவை பஙகருககுத தாம முன செயதுவநத திருபபணியை முட்டாது செயது வருவா ராயினாா கூலிககு நெலலறுதது வாழவாராயச, செநநெலலரிநத செநநெற கூலியாகக கிடைததததனை யெலலாம இறைவருககுத திருவமுது ஆககினா, காாநெலலரிநத காா நெற கூலிகொணடு தாம உணடுவநதனா. இநநிலையினையும மாறற இறைவா திருவுள ளம பறறவே வயலகளில எலலாம நலல நீணட செநநெலலே யாகி விளைநதன. அவறறை அறுதத நெறகூலியினைக கொணடு, "இஃது அடியேன செயத புணணி யமேயாகும" எனறு சிநதை மகிழநது, தாயனாா அககூலியெல்லாம திருவமுதுககே யாககினா குறையாத அனபினையுடைய மனைவியாா உணவுககாக வீட்டுககொல்லையில உளள கீரைவகைகளைக கொயது சமைதது இடப, பெருநதகையாா அருநதித, திருப

பணியை முட்டாது செயதுவநதனா மனைப படப்பையில உள்ள கீரை வகைகள தீரவே, வடமீன அனைய மனைவியாா தணணீரை வாாகக, அதனை அனபனுா அமுது செயது முனபோலப் பணிசெயது வநதனர்.

ஒரு நாள இறைவாககு ஊடட அவரது அனபு போனற தூய செநநெலலரிசியும, பசிய மாவடுவும்,மென கீரையும தொணடனுா கூடையிற சுமநது செலல, அவாபினபு மனைவியாா மடகலததில் ஆனைநது எநதிச செனறனா. இவவாறு செலலுமபோது திருமேனி வாடியதனுல காலதளாநது தபபித தாயனுா வீழவாராக, மடகலம மூடும கையினுல காதலால மனைவியாா அணைததும, கூடையிற கொணடவை எலலாம கமரிற சிநதின. அதுகணடு, தாயனுா, " இனி அஙகு என போதல வேணடும ? " எனறு வருநதி, " இவறறை இஙகே அமுதுசெயதருளாவிடில நான உயிா வாழமாடடேன , என ஊடடியை அறுததுத தலையை வேறுகத தளளுவேன " எனறு இறைவரை வேணடினா. இறைவா திரு அமுதுசெயயத தாழததமை கணடு, " அளவிலலாத தீமையுடையேன, இறைவா அமுது செயயும பேறு பெறறிலேன" எனறு, உறுபிறப பினை அரிவாா போனறு அரிவாள கொணடு உளளந தணடு அறுமபடி கழுததினை அரியத தொடஙகினா.

கமரினினறும, அமபலததாடும ஐயரது வீசிய கையும, மாவடு "விடேல விடேல" எனற ஓசையும உடனே ஒருஙகு எழுநதன இறைவரது திருககை அனபரது கழுத தரியும திணணிய கையினைப பிடிததுக கொளளவே, அவரும அச செயல தவிாநதனா அரிநத ஊறும நீஙகியது.

அனபனுா, அஞசலிகூபபி நினறு, " அடியேனது அறிவிலலாமையைக கணடும என அடிமை வேணடிக கமரில வநது இஙகு அமுது செயதருளும பரனே போறறி !" எனறு பலவாறு துதிதது வணஙகினா இறைவா இடப வாகனராயத தோனறி " நீ புரிநத செயகை நனறு!, உன மனைவியுடனே கூட நமமுலகில எனறும வாழ வாயாக !" எனறு அருளிச செயது, அவா உடனே நணணத திருவமபலததில எழுந தருளினா

" இறைவா அமுது செயயும பேறு பெறறிலேன " எனறு கழுததினை அரிவாளி னுல அரிதலால அவா அரிவாட்டாயர் எனற தூய நாமததையுடையாராயினுா.

---

**தலவிசேடம்.—கணமங்கலம்** - இததலம சோழநாடடில உளளது. இது திருத துறைபபூணடி இருபபுபபாதை நிலயததுககு வடககே இரணடு நாழிகையளவில, திரு வாரூருககுச செலலும பெருவழியில உளள, திருததணடலை நீணெறிககுக (காவிரிக குத தெனகரை - 110வது தலம) கீழபால $\frac{1}{4}$ நாழிகை யளவில உளளது ஊா இபபோது அழிநது படடது ஊரிருநத (நததம) இடததுககுக **கணமங்கலத் திடல்** எனறுபெயா வழஙகுகினறது தொனறுதொடடு வரும இபபெயா வழககைத தவிர வேறு கலவெடடு முதலிய ஆதாரவுகள கிடைககவிலலை தணடலை நீணெறி, தாயனுா செநநெல்லரிசி முதலியன கொணடு இறைவரை ஊடடி, நாடோறும வழிபடட தலம. இது **ஊட்டித் தணடலை** எனவும வழஙகப பெறுகினறது ஊடடித தணணடை என வரலாறறுற பெறற பெயா இஙஙனம மருவி வழஙகுவதுபோலும

---

**கற்பனை** :—1. அறநெறிகளில மனைவாழககைகொணட அறம தகுதிபெறறது.

2 ஞாயிறறின ஒளி மிகுதி கொணடு விளைவதால செநநெல குணததில உயாந தது அது இறைவரது திருவமுதுககும, பெரியோா அமுதுககும சிறநதது அவவா றனறிக காாநெல ஞாயிறறின ஒளி குறைநதகாலததில விளைவதால குணததிற குறைநதது.

3. செநநெல் அரிசியும, செஙகீரையும, மாவடுவும இறைவனுககு அமுதுசெய விததல சிறநத சிவபுணணியம.

4 வறுமையும துனபமும வநதகாலததிலும் திருததொணடின செயலை விடாதுசெய்வா பெரியோா.

5. செல்வமிகக நிலையில இருநத தாயனா அநநிலை மாறித தாம கூலிககு நெல லரிநது பிழைகக நோநத காலததில அககூலிநெற கொணடும திருததொணடினை விடாது செயத செயகை உயதிபெறும உளளமுடைய உலகம பினபறறததககது

6 கூலி நெலலினுளளும தாம பெறற சிறநத செநநெலலை இறைவாது திருவமுதுககு ஆககித, தாழநத காாநெறகூலி கொணடு தாம உணடு வாழநத தாயனாது அருளுசெயல உலகை உயவிககவலல சிறநத உதாரணமாம. சிறநதனவாகத தாநதாம கொளவனவறறையே இறைவனுககு ஆககுதல வேணடும. “ விருமபின கொடுககை பரமபாறகெனறு, புரிகுழற றேவியைப பரிவுடன கொடுதத, பெரிய அனபின வரகுண தேவா ” வரலாறு சிநதிககததககது.

7 உணவுககெனக கொணட காாநெல மாறி, எலலாம செநநெலலேயாகி விளைநதது கணட தாயனா தமககு உணவுககு நெல இல்லாமையை மறநது, அவவாறு தாம பெறும செநநெற கூலி முழுதும இறைவனுககே திருவமுதாககியதுமனறி, அவவாறு ஆககபபெறற இது,தமது பெரும புணணியம எனறு மகிழநததும, தாம கீரையும தணணீரும உணடு சீவிததுதும மிக அரிய பெரிய செயலகள. இநநிலைமை கைவரபபெறறா பெரியாா , அவாகளே இறைவனருள பெற உரியாா

8 கணவனோடு ஒருமிதத கருததுடன அமைநது அதறகு எறறவாறு மனைவாழககை நடததிய தாயனாது மனைவியாரின உதாரணம பெணணுலகம கணடு போறறிப பினபறறத தகுநதது

9 கணவனா கருததமைநது அவாது திருபபணியில ஒனறுகூடி ஒழுகிய ஒழுககமே தாயனாது மனைவியாககு அவரைப பிரியாதநிலையிற சிவலோகப பெருவாழவும் தேடித தநதமை உலகம கணடு போறறததககது. “ மாதரொடு மாடவாகள வநதடியிறைஞசிநிறை மாமலாகளதூஉயக, கோதைவரி வணடிசைகொள கீதமுரல் கினறவளா கோகரணமே ” - (சாதாரி - 2) எனற ஆளுடைய பிளளையாா தேவாரம சிநதிககததககது.

10. இறைவா எஙகுமுளளாா எனறறிநத ஞானிகள அவரை எவவிடததும முனனிலையாககிககொணடு வழிபடுவா இறைவா தமமை வழிபடுவோரின பககுவததுககேறறவாறு அஙகஙகும வெளிபபடடு அருளபுரிவா.

11. தாம நியதியாகச செயதுவநத திருததொணடுககு முட்டுபபாடு நோநதபோது பெரியோா உயிாவாழத தரியாா

12 அனபு காட்டிய நெறியிற செயயபபடடபோது, தறகொலையும, அறநூலால விலககபபடட பாவமாகாமற, பெரியோாகளாலும போறறபபடட புணணியமேயாம. இநத அனபுசசெயல சிவனிடமாகச செயயபபடடபோது வீடடுககு வாயிலாகும.

13. அரிவாடடாயநாயனாபுராணம் முறறும



உ

திருச்சிற்றம்பலம்

# 14. ஆனாய நாயனார் புராணம்

## தொகை

" அலைமலிந்த புனன்மங்கை ஆனாயர்க் கடியேன் "
—திருத்தொண்டத்தொகை

## வகை

தாயவன் யாவுக்குந் தாழ்சடை மேற்றனித் திங்கள்வைத்த
தூயவன் பாதந் தொடர்ந்துதொல் சீர்துளை யாற்பரவும்
வேயவன் மேன்மழ நாட்டு விரிபுனன் மங்கலக்கோன்
ஆயவ னானாய னென்னை யுவந்தாண் டருளினனே.
—திருத்தொண்டர் திருவந்தாதி

## விரி

926. மாடு விரைப்பொலி சோலையின் வான்மதி வந்தேறச்,
சூடு பரப்பிய பண்ணை வரம்பு சுரும்பேறற்,
ஈடு பெருக்கிய போர்களின் மேக மிளைத்தேற,
நீடு வளத்தது மேன்மழ நாடெனு நீர்நாடு. க

**புராணம்:**—ஆனாயர் என்ற பெயரால் அறியப்படும் நாயனாரது சரித வரலாறும் பண்புங் கூறும் பகுதி. நிறுத்த முறையானே இலைமலிந்த சருக்கத்து ஏழாவது ஆனாய நாயனாரது புராணங்கூறத் தொடங்குகின்றார்.

**தொகை:**—அலைகள் பெருகிய புனல் சூழ்ந்த **திருமங்கலம்** என்ற தலத்தில் அவதரித்த **ஆனாயருக்கு** அடியேனாவேன்.

**மங்கை** - திருமங்கலம். **ஆனாயர்** - ஆன் ஆயர் - ஆ மேய்க்கும் ஆயர் குலத்தவர் ஆனாயர் (932) என்றது காண்க. நாயனாரது இயற்பெயர் விளங்கவில்லை. ஊரும் ஊர்ச்சிறப்பும், பேரும், தொழிலும், திருத்தொண்டின் குறிப்பும் முதனூல் பேசிற்று

**வகை:**—யாவைக்கும் தாயானவரும், சடைமேற் பிறைவைத்த தூயவரும் ஆகிய சிவபெருமானுடைய திருவடிகளை மனத்தில் விடாது பற்றி, அத்தொடர்ச்சியாலே அவருடைய பழமையாகிய சீர்களை வேய்ங்குழல் நாதத்தினாற் பரவுகின்ற, மேன்மழ நாட்டு நீர்வளம் மிக்க திருமங்கலத்தின் ஆனாயர் என்னை மகிழ்ந்து ஆட்கொண்டருளியவர்

மேன்மழ நாட்டு மங்கலக்கோன் ஆனாயன், தூயவன் பாதம் தொடர்ந்து அவனது சீர் துளையாற் பரவுபவன், அவன் என்னை ஆண்டவன் என முடித்துக்கொள்க. **தாயவன் யாவுக்கும்** "தாயவனாண் உலகுக்கு" (க்ஷசிதத்திருத்தாண்டகம்) **தொடர்தல்**-விடாது பற்றுதல் குறித்தது. துளைவேயாற் பரவுபவன் என மாற்றுக. துளைகளின் வழியே பண் எழுப்பிப் பரவுதலால் **துளையாற் பரவும்** என்றார். **மங்கலம்** - நகரப்பெயர். **விரிபுனன் மங்கலம்** " அலைமலிந்த புனன்மங்கை" என்பது முதனூல், (தொகை). **என்னை உவந்து ஆண்டவன்** " அடியேன் " என்ற முதனூல் முடிபின் தாற்பரிய முணர்த்திற்று. யான் **அடியேன்** எனப் பணிதலும், அவனும் என்னை ஆண்டனன்.

**உவந்து** - அடிமையை ஏற்றுக்கொண்டு **விரிபுனல்** இரண்டு ஆறுகள் கூடிச் சேர்தலால் இவ்வாறு கூறினார். "இது அலைமலிந்த புனல்" என்ற முதனூற் பொருளை எடுத்து ஆண்டு வற்புறுத்தியதாம்.

நாயனாரது, **நாடு** - மேன்மழ நாடு - (925), **நகரம்** - விரிபுனல் மங்கலம் (931); **பெயரும் குலமும் தொழிலும்** ஆனாயர் "ஆயர் குலத்தவர்" (932); "ஆனிரை அளித்து அள்ளார்" (934), **திருத்தொண்டின் திறமும் வரலாறும்-தோல் சீர் துளையாற் பரவும் வேயவன்** என்றது - "தம் பெருமானடி அன்புறு கானத்தின் மேவு துளைக்கருவிக் குழல் வாசனை மேற்கொண்டார்" (936) (937), (938), "வாயினின் மெய்யின் வழுந்து மனத்தின் வினைப்பாலின் பிரானடியல்லது பேணுதார்" (933), "கொன்றையினை நோக்கி அன்பை உடையவர்பால மடை திறந்தார்" (945),(950),(952), **தூயவன்-** அருட்கருணை கானுய தவவலியுடன் (661), **சடைமேற் றனித்திங்கள் வைத்த தூயவன்** - மதி நாறும் சடைதாழ (961), **நாறுதல்** - தோன்றுதல் - முளைத்தல் இவ்வாறு விரிவாய இப்பொருள்களை விரிநூல் விரித்தன்மை கண்டுகொள்க.

926. **(இ - ள்)** மேன்மழ...நீர்நாடு - **மேன்மழநாடு** என்று சொல்லப்படும் நீர் வளம் மிக்க நாடு, மாடு வந்து ஏற - பக்கங்களில் பரவுகின்ற வாசனையுடைய அழகிய சோலைகளில் வானமதி வந்து ஏறவும், சூடு. சுரும்பு ஏற - சூட்டிக்கும் நெல்லரிகள் பரப்பிய பண்ணையின் வரம்புகளில் வண்டுகள் ஏறவும், ஈடு ..இளைத்து ஏற - மேன் மேல் அடுக்கியுயர்த்த வைக்கோற் போர்களில் மேகங்கள் இளைத்து ஏறவும், நீடு வளத்தது - நிலை பெறும் வளத்தையுடையது.

**(வி - ரை) விரைப்பொலிசோலை** - **விரை** - மணம், **பொலிதல்** - அழகுடன் விளங்குதல் கண்ணுக்கினிய காட்சியழகு மட்டும் கொண்டு மணமில்லாத சோலைகளைப் பெருஞ்சிரமப்பட்டு வைத்துக் களிக்கும் இந்நாளமாக்கள் இதனைச் சிந்திப்பார் களாக.

**வான்மதி வந்து ஏற** - மிக உயர்ந்து வளர்ந்த சோலையின் உயர்ச்சி குறித்த உயர்வுநவிற்சியணி மதி வானவீதியிற் செல்லுவதாயினும், இச்சோலையினது வானளாவிய உயர்ச்சியினால் கீழிருந்து, புறத்துக் காண்போர்க்கு, அது (மதி) இதனுள் வந்து நுழைந்து மேல் ஏறுவதாகப் புலப்படும் என்பது **ஏறுதல்** - மதி, முளைத்த இடத்தினின்றும் பொழுதேற ஏற மேற்போதல். "வெண்மதியம், சோலைதொறு நுழைந்து புறப் படும்பொழுது" (திருஞான - புரா 8) என்ற இடத்து இக்கருத்தை மேலும் நயம்பட விரித்தது காண்க. சோலையின் மரங்களின் உயர்ச்சியை "மந்தியும் அறியா மரன்பயில் அடுக்கத்து" என்று உயர்வு நவிற்சிபடக் கூறும் திருமுருகாற்றுப் படையும், "வான மதிதடவ லுற்ற விளமந்தி, கான முதுவேயின் கண்ணேறித்-தானங், கிருந்துயர்க் கைநீட்டு மீங்கோயே நம்மேல், வருந்துயரந் தீர்ப்பான் மலை" என்ற ஈங்கோய்மலை யெழுபதும் (68) பிறவும் காண்க.

**சூடு பரப்பிய பண்ணை** - **சூடு** - நெற்கதிர்களில், தலையடியில் உதிராத மணிகளை உதிர்க்கும்பொருட்டுப் பரப்பிய நெல் அரிகள் இவற்றை மேதிகளால் மிதிப்பித்து (கடாவிடுதல் என்பர்) நெல்லுதிர்த்துச் சேர்த்தல் மரபு (அரிகளை முதலில் அடித்த போது உதிராத நெல் தலையுதிரி எனப்படும்) 73ல் உரைத்ததைப் பார்க்க.

**சூடு சுரும்பு ஏற** - சூடு உதிர்க்கப் பரப்பிய வயல்களில், வரம்புகளில் வண்டுகள் ஏறுதலாவது சூடு அரிகள் பரப்பும்போது அங்குத் தாமரை நீலம் முதலிய கொடிகளும் மலர்களும் உள்ளமையால் அவற்றின் மொய்த்த வண்டுகள் தப்பி ஓடுதற்கு ஒதுங்கி அங்குநின்றும் வரம்புகளில் ஏறுதல். "அரிதரு செந்நெற் சூட்டி னடுக்கிய

அடுக்கல் சேர்ப்பார்.. விரிமலராக் கறறை வேரி பொழிந்திழி வெறபு வைப்பார் " (73) என்றது காண்க.

**ஈடு பெருக்கிய போர்** - சூடு அடித்தபின் வைக்கோல்களைப் பெரும் குவியல்களாக அடுக்கிக் குவித்த போர்கள். ஈடு - ஆதி நீண்டுவந்த முதனிலைத் தொழிற் பெயர். **ஈடு** - இடுதலினாலே - ஒன்றன்மேல் ஒன்று குவியலாக இடப்படுதலினாலே **போர்** - வைக்கோற்போர் **ஈடு** - ஒன்றுக்கொன்று சமமாகச் செய்த என்றும், பெருமைமிகச் செய்த என்றும் உரைகூறுவாரும், **போர்** - நெற்போர் என்பாரும் உண்டு. இவை பொருந்தாமை யறிக.

**போர்களின் மேகம் இளைத்து ஏற** என்றது தாழவரும் மேகங்கள் தங்கக் கூடிய வளவிலே மிக உயர்ந்தனவாக வைக்கோற் போர்கள் இடப்பட்டன எனக. இன்றைக்கும் மலைபோல நிமிர்ந்து காணக்கூடியபடி மிக உயரமாகிய வைக்கோற் போர்கள் இந் நாட்டின் புறங்களிலும் (இத்திருமங்கல்) நகரிலும் காணலாம். **இளைத்து ஏறுதல்** - மெல்லத் தவழ்தல் இலக்கணை. "சோலைகள் மேலோடும், வெங்கதிர் தங்க விளங்கிய மேன்மழ நன்னாடு" (931) என்றதும் அங்கு உரைப்பவையும் இங்குவைத்துச் சிந்திக்க.

**மேன்மழநாடு** - இது நாட்டின் பெயர். **மழநாடு**-மழவர் என்ற மரபினர்வாழ்வதும், அம்மரபினரால் அரசு செய்யப் பெற்றதும் ஆகிய நாடு இது மேன் மழநாடு, கீழ் மழநாடு முதலிய பல பிரிவுகளையுடையதென் றறியப்படும் திருப்பாச்சிலாச் சிராமத்தைத் தலை நகராகக் கொண்டு **கொல்லி மழவன்** அரசு புரிந்த நாடும் மழநாட்டின் ஒரு பிரிவு. அது கீழ் மழநாடு என்பது போலும் கொல்லிமழவனும் அவனது மரபினரும் வழி வழியாகச் சிவனடிச் சார்புடைய சைவமரபு அரசர்கள் என்பது, "மறிவளரும் கையார் பாதம் பற்றியே வருங்குலத்துப் பான்மையினு லுதலினால்" (திருஞான - புரா 312) என்றமையாலும், பிறவாற்றாலும் அறியப்படும் மழநாடு சோழ நாட்டின் ஒரு பகுதி. மழவ அரசர்களும் சோழ மன்னர்களின் கீழ் வாழ்ந்த சிற்றரசர்களில் ஒருவராகும் என்ப- கொங்கு மழநாடு என்ற ஒரு பகுதியும் உண்டு பிற வரலாறுகள் சரித ஆராய்ச்சிக் குறிப்பிற் கண்டு கொள்க

**நீர் நாடு** - நீர் வளம் பொருந்திய நாடு எனக "அலைமலிந்த புனல்" என்பது முதனூல். அதனை வழிநூலுள் (திருவந்தாதி) "விரிபுனல்" என்றார். அதனையே ஆசிரியர் "நீர்" என்றனர்

**நீடு வளத்தது நீடு** - முக்காலத்துக்கும் பொதுவாகிய வினைத்தொகை இவ்வாக்கின் பயனுக இந்நாளிலும் இந்நாடு **நீடும்** வளமுடையதாய் விளங்குதல் கண்கூடு

சரர்சரமெல்லாம் சந்த இசைமயமாக்கிய ஆனாய நாயனாரது சரிதமாதலின் சந்தப்பா யாப்பினால் ஆசிரியர் தொடக்கம் செய்கின்ற நயம் காண்க 1

927. நீவி நிதம்ப வுழத்தியர் நெய்க்குழன் மைச்சுருல்
மேவி யுறங்குவ மென்சிறை வண்டு, விரைக்கஞ்சப்
பூவி லுறங்குவ நீள்கயல், பூமலி தேமாவின்
காவி னறுங்குளிர் நீழ லுறங்குவ கார்மேதி. உ

(இ - ள்) நீவி வண்டு - கொய்சகம் வைத்து உடுத்திய ஆடையை மேலணிந்த அல்குலையுடைய உழத்தியர்களது நெய் பூசிய குழலின் கரிய சுருளைப் பொருந்தி மெல்லிய சிறையினையுடைய வண்டுகள் உறங்குவன, விரை கயல் வாசனையுடைய தாமரைப் பூவில் நீண்ட கயல் மீன்கள் உறங்குவன, பூமலி கார் மேதி - தேமாஞ் சோலையின் நறிய மணமும் குளிர்ச்சியு முடைய நீழலில் கார்மேதி உறங்குவன.

(வி - ரை) நீவி - கொயசகம. பெணகள் ஆடை உடுககும வகையுள ஒனறு, உழததியா உடுககுமியலபு குறிததது.

நெய்க்குழல் நெய் - மயிாசசாநது மைச் சூழலில் எனக- கரிய குழலின செறிவு.

மென் சிறைவணடு - நீள் கயல - கார் மேதி என இம்மூனறின தனமைகளை உணாததுமாறு அடைமொழிகள புணாததிய நயம காணக.

வணடும, கயலும, மேதியும எனற இவைதானும முறையே நெய்க்குழற சூழலிலும, விளைக் கஞசததிலும, நறுநதேமா ஙீழலிலும, உறஙகுவ என்றதனால இசசரிததததினுள இசையின வாசனை யறியாத "நிறபனவும சரிப்பனவும இசை மயமாய, மெயவாழும புலனகரண மேவிய வொனருயின" எனற நிகழசசியைப் பகுததறிவறற அஃறிணையாகிய இப பிராணிகளின வைததுக கணடு காட்டும ஆசிரியரது தெயவக கணகாடசிததிறம கணடு களிகக 867 முதலியவறறில உரைததவையும பாாகக

வணடு, குழறகுழல மேவி உறஙகுவ, கயல், பூவில உறஙகுவ, மேதி, நறு நீழல உறஙகுவ எனககூட்டி உரைததுக கொளக வைபபு முறை மாறறி எழுவாயகள் மூனறும பின வைததோதினா, அனவ உறககததின மயஙகியதும வாசனையின மயஙகியதும ஆகிய மாறுதல அறிவிககும குறிபபுபபறறி. 2

928 வனனிலை மளள ருகைபப வெழுநத மாக்கோவை
பனமுறை வநதெழு மோசை பயினற முழககததால
அனன மருஙகுறை தணடுறை வாவி யதனபாலைக
கனன லடுமபுகை யானமுகில செயவ கருபபாலை. ௩

(இ - ள்) கருபபாலை கரும்பு ஆலைகள, வனனிலை...முழககததால - வலிமையினால மளளாகள செலுதத எழுநத இணைமரஙகள பல முறையும சுறறி வருதலால எழும ஓசை பயினற முழககததாலும, அனனம புகையால - பககஙகளில அனனஙகள தஙகுகினற குளிாநத துறையையுடைய வாவிகளின பககததில கருபபஞசாறு காயசசுகினற புகையினாலும, முகில செயவ - முகிலின காடசிபோனற தனமையைக காடடுவன

(வி - ரை) வன்னிலை - வலிய நிலை மளளா வனனிலையால உகைப்ப எனக. வலிய நிலையாவது வலிய கருமபினை அடுதறகுரிய வனமை. நிலை - நிலையினால. வனனிலையான மளளா எனறு கூட்டி உரைததலுமொனறு.

மாக்கோவை - கருமபு அடுதலுககாக - சாறு பிழிதலுககாக - மாஙகளை இணைதது சுறறிடும ஆலையமைபபு

பன்முறை வந்து எழும் ஓசை - பல முறையும ஆலையைச சுறறிவரச செயததலால உளதாம ஓசை முழக்கம் - பேரோசை. வந்து - வருதலால. ஆலையாக இணைதத மரஙகள சுறறுதலாலும, அவை வலிய கருமபினை உடைததுச் சாறுபிழிதலின உணடாகும வலிய முயறசியாலும எழும ஓசை பெரிதாம எனக "கருஞசகடமிளகவளா கருமபு" எனற ஆளுடைய பிளளையாரது திருககழுமலத தேவாரததால ஆலைககும வலியனவாயுளள கருமபுகளின நிலை குறிககபபடடது காணக

ஓசை பயின்ற முழக்கம் - பல ஓசைகளும கூடியதனால முழககமாயிறறு. பயின்ற - பல ஒனறு கூடுதல குறிததது நீஙகாத எனறலுமாம.

முழககததால புகையால வாவியதன பால - கருபபாலை - முகில செயவ எனக கூட்டி முடிகக.

முழக்கத்தாலும் புகையாலும் முகில்செய்வ எனபதாம எணணுமமைகள தொககன. செய்வ - உவமவுருபு. உருவும வினையும பறறி வநத உவமை.

**அன்னம் மருங்கு உறை** - எனபது வாவியின சிறபபு. அனனஙகளின கூட்டம வாவியினினறு மேறகிளமபும வெணமேகம ஆகவும, **புகை** - சூல் கொணட மேகம ஆகவும உருவகப்படுததிக கொளக

**கன்னல் அடும்புகை** - கருபபஞ சாறறைக காயசசுதலால எழுமபுகை. **கன்னல்** இஙகு அதன சாறறுககு ஆயிறறு. ஆகுபெயா

**கருப்பாலை** - கருமபு அடுகினற ஆலை. கருபபாலை எனபது மரபு வழககு

சூடு பரபபிய பணணைகள உளளன (925), அவறறின பககம வயலகளில உழததியா உழவு தொழில பலவும செயதனா, பணணைகளின பககததில மாஞசோலைகளும வாவிகளும உளளன (926), அசசோலைகளின பககம கருமபப பயிா உணடு, கருமபு ஆலைகளின முழககமும புகையும அவவாவிகளின பககததில மேகஙகள கூடியன போனற தோறறம விளைததன (928) என இமமூனறு பாடலகளையும தொடாநது பொருளகொளக நீாநிலையின பககம மேகம கூடுமியலபும குறிகக 3

929. பொஙகிய மாநதி நீடலை யுநது புனறசஙகந
துஙக விலைகக தலிபபுதன மீது தொடககிபபோய்த
தஙகிய பாசடை சூழகொடி யூடு தவழநதேறிப
பைஙகமு கினறலை முதத முதிாககுவ பாளையென். ௬

(இ - ள்) பொஙகிய.. சஙகம பெருகிய பெருநதியின நீணட அலைப்புனல உநதிய சஙகுகள, துஙக தொடககிப போய - பெரிய இலைகளையுடைய வாழைப புதலகளின மேலே தொடாநது சென்று, தஙகிய. தவழநது - அநத வாழையின பசிய இலைகளைச சுறறிய கொடிகளின வழியே தவழ்நது, பைஙகமுகினதலை - பசிய கமுகின உசசியில; ஏறி - ஏறிச சோநது அஙகு, பாளை என முததம உதிாககுவ - அவறறினபாளைகள பூ உதிாபபனபோல முததுககளைச சொரிவன.

(வி - ரை) அலைபபுனல உநதுசஙகம - கதலிபபுதலமீது தொடககிபபோய - கொடியூடு தவழநது - கமுகினறலை ஏறிப - பாளை என முததம உதிாககுவ எனத தொடாபுபடுததி வினைமுடிபும பொருளும உரைததுககொளக

**பொங்கிய மாநதி நீடுஅலை** - நதி பெரிது, அது பெருகிறறு, பெருககினால நீணட அலைகள உணடாயின, அலைகள சஙகுகளை உநதின எனக

**பொங்குதல்** - வெளளததால பெருககெடுததல பெருநதியில வெளளம வநத போது நீா மேலஉயாநது இருகரையிலும அருகில உளள பயிாகளை நீாில மூழகுமபடி செயயும அபபோது நீாில மிதநதுவரும பொருளகள அபபயிாகள - மரஙகள - முதலியவறறின மேலே தஙகுவது இயலபாம.

**நீடு அலைப்புனல் உந்து சங்கம்** "கடலேறித திரைமோதிக காவிாியி னுடன வநது கஙகுல வைகித, திடலேறிச சாிசஙகு செழுமுததஙீனறலைககுந திருவையாறே" (மேகரா - குறி - 2) என்ற ஆளுடைபிளளையாா தேவாரங காணக.

**துங்கம்** - பெரிது "இததுஙக வேழம" (590) **துங்கஇலை** - பெரிய நீணட இலை, வாழைமடல ஏனை இலைகளிலும நீணடு அகனறு பெருததிருபபது குறிததது.

**கதலிப்புதல்** - செறிநது புதலாக முளைதத வாழைபபயிா ஆறறின கரைகளில உரயிகுதியாலும, நீாவளததாலும, பறிபபாாினமையாலும வாழைகள செழிதது வளருமியலபு குறிததது

**தொடக்கி** - தொடாநது **தங்கிய பாசடை** அஙகுத தஙகிய பசியஇலை. **பாசடை** - வெறறிலைக கொடி எனறலுமாம

**சூழ்கொடி ஊடு தவழ்ந்து** வாழைகளின மேலும அஙகிருநது தொடாநது பககததிலுளள கமுகுகளின மேலும சூழநது படாநத கொடிகளிடையே **ஊாநது**. இவவாறு

கொடிகள் மரங்களின்மீதுப் படாவது இயல்பு. வாழைப்பயிரினுடன் கமுகும் வைத்தலுமுண்டு.

**பைங்கமுகின் தலை ஏறி** எனக். தலை உச்சி **தலை** - ஏழனுருபாகக்கொண்டு கமுகினிடத்து என்றுரைப்பினுமாம். **பைங்கமுகு** - பசிய கமுகு. **பாளை என முத்தம் உதிர்க்குவ** - பாளைகளின் பூக்கள் முத்துப் போன்றன என்பது உவமம். அதனை மாற்றி முத்துக்கள் பாளைகளின் பூக்கள்போல உதிர்க்கப்பட்டன என்பது உவமை நயம் மிகுதிபடக்கூறியதாம். நிலவளம் நீர்வளமிகுதி குறித்த உவமச்சிறப்பு.

மேலே நெல்லும் (925), மாவும் (926), கரும்பும் (927) கூறிய ஆசிரியர், இப்பாட்டால் வாழையும் கமுகும் கூறும் வைப்புமுறையும் அமைதியும் அழகும் காண்க. கதலிப்புதலும், பாசடைக் கொடியும், பைங்கமுகும் என எல்லாம் கூடிய மிக்க பசுமையும் புதுமையுமாகிய இனிய காட்சியின் அழகும் குறிக்கப்பட்டது.

இந்நான்கு பாட்டாலும் மேன்மழ நாடெனும் நீர் நாடு (925) என்பதன் மிக்க மருத நிலச் சிறப்புக்கூறினார். சோலை - பணை - நெல்-மா - கரும்பு - வாழை - கமுகு இவை மருதநிலக் கருப்பொருள்கள், உழவு - தொழில், உழத்தியர் மள்ளர் - அந்நில மக்கள்; நெல் - கரும்பு - வாழை - மா - அதன் உணவுகை, என்றிவ்வாறு பலவும் காண அணிபெறக் கோத்த அமைதி காண்க.

இனி, மேல்வரும் இரண்டு பாட்டுக்களால் இம்மருதத்தினை அடுத்துத் திணை மயக்கத்தாற் சேர்ந்துள்ளதும், இந்நாளிலும் காணத்தக்கதாய் விளங்குவதும், இப்புராண முடைய ஆனாயநாயனாரது சரித்தத் தொடர்பும் உரிமையும் உடையதுமாகிய முல்லையின் சிறப்பும் உடன் கூறுகின்ற வகையினால் நாட்டுச் சிறப்பினைக் காட்டி அதன் மேல் நகரச்சிறப்பு உரைத்தல் கண்டுகொள்க. 4

**உதுப்பன**—என்பதும் பாடம்.

930\. அலவி மலர்ப்பழ னத்தய லோர்பா லானிளம்
ஒலலை முழுப்பை யுகைப்பி னுழக்கு குழக்கன்று
கொல்லை மடக்குல மானமறி யோடு குதித்தோடும்
மலகு வளத்தது முல்லை யுடுத்த மருங்கோர்பால ௫

(இ - ள்) அலவி அயல் - அகவிதழ் நிறைந்த பூக்களையுடைய வயல்களின் அருகில், ஓர்பால் - ஒரு பக்கத்தில், முல்லை உடுத்த மருங்கு - முல்லைப்பகுதி சூழ்ந்த பக்கிலம், நாகுஇள ஆன் ஏனும் - மிக்க இளமையையுடைய பசு ஈன்ற, ஒலலை. உழக்கு - உகைத்தலினால் (முல்லைநிலத்து) மாஞ்செடிகளின் தலையிடத்தை விரைவில் உழக்குகின்ற, குழக்கன்று - மிக இளைய கன்று, கொல்லை வளத்தது - கொல்லையில் உள்ள அழகிய கூட்டமாகிய மான் கன்றுகளுடன் கூடிக் குதித்து ஓடுகின்ற நிறைந்த வளத்தையுடையது.

(வி - ரை) **அல்லிமலர்** - அலவி - அகவிதழ். அலலிப் பூ எனினுமமையும்.

**பழனத்தயல் ஓர்பால் முல்லை உடுத்த மருங்கு** என்று கூட்டுக. இது மருதமும் முல்லையும் கூடிய நிலப்பகுதி கூறியதாம் இதனை முல்லையும் மருதமும் மயங்கிய திணைமயக்கம் என்பது தமிழ் இலக்கணமரபு. திணைமயக்கமாவது ஒருதிணைக்குரிய பொருளும் ஒழுக்கமும் அடுத்த திணைப்பொருள் ஒழுக்கங்களுடன் விரவிக்கூடி நிகழ்வது என்ப. இவ்வாறு தமிழிலக்கணம் வகுத்த நானிலப்பகுதிகளும் அவை விரவிய திணைமயக்கமும் வகுத்து ஆசிரியர் காட்டிய இலக்கிய அமைதியினைத் திருக்குறிப்புத் தொண்டநாயனார் புராணத்தினுள் (6—47) விரிவாகக் கண்டுகொள்க. இப்பாட்டினும் மேல்வரும் பாட்டினும் கூறிய முல்லையும் மருதமும் மயங்கிய திணைமயக்க அமைதி அப்புராணத்தினுள் "இயலு மன்னமுந் தோகையு மெதிரெதிர் பயில, **வயலு முல்லையு மியைவன** பலவுள மருங்கு" (45) என்ற விடத்துக்காண்க.

**நாகு இளையபசு - நாகு இள ஆன்** - மிக இளமை குறித்தது. அவ்வாறே **குழக்கன்று** மிக்க இளமை குறித்தது. "பானமறை நாகு" (935) என்றது பார்க்க.

முல்லை உடுத்த மருங்கு ஓர்பால் ஆன் ஈனும் கன்று மான்மறியோடு குதித்தோடும் வளத்தது என்று கூட்டிமுடிக்க.

**கோல்லை மான்மறி** - புனக்கொல்லையில் வளர்க்கும் மான்கன்று. புனங்களில் வந்து மேயும் மான் கூட்டத்தில் உள்ள கன்று என்றலுமாம். **மடக்குலமான்** - அழகிய கூட்டமாகிய மான்கள். **மடமை** - அழகு குறித்தது இளமை என்றும், மருட்சியுடைமை என்றும் உரைப்பினுமமையும். **மான்** - முல்லைக் கருப்பொருளாகிய மா "நீர்நசைஇ வேட்கையின் மானின்று விளக்கும் கானமும்" (சிலப - காடுகாண் - 78) என்பதனுள் முல்லைக்கருப்பொருளாகிய மாக் கூறினார் என்ற அடியார்க்கு நல்லார் உரை (பதிகம்) காண்க **ஆன்** - மருதக்கருப்பொருள் ஆன்கன்று முல்லை முழுப்பை உகைத்தலாலும் மான் மறியோடு குதித்தலாலும் இந்த இருதிணையும் மயங்கிய ஒழுக்கம் கூறியபடி. பின்னர், ஆனிரை மேய்க்கும் தொழில் பூண்ட முல்லைநில மகனாராகிய ஆனாயர் "நீர்நாடு" எனப்பட்ட மழநாட்டுப் பகுதியில் நிரைமேய்த்துக் குழலூதிப் பேறுபெற்ற வரலாற்றினைத் திணைமயக்கம் காட்டுமுகத்தால், சரித்தத் தொடக்கத்தில் முற்குறிப்புப் பெற எடுத்துக் கூறினார் என்பதாம்.

ஆன்கன்று மான்மறியோடு கூடிக் குதித்தோடு மியல்பு இவ்விரண்டும், உயிர் வகுப்பில், கவர் குளம்புடைய ஓரினத்தைச் சேர்ந்தவை என உயிர்ப்பகுப்புக் கூறும் சாத்திரிகள் கண்ட உண்மையினை விளக்குவதாகும்.

**முழுப்பை உகைப்பின் உழக்கு குழக்கன்று** - **முழுப்பு** - முகடு. உச்சிப்பரப்பு என்ற பொருளில் அருகி வழங்குவதோர் சொல். இது **மோழுப்பு** என்றும் வரும்; இங்கு முல்லைச் சோலையின் மேற்பரப்புக் குறித்தது முல்லை முழுப்பை உகைப்பின் ஒல்லை உழக்கு குழக்கன்று என்று கூட்டிக்கொள்க. "மணமவிரி தருதே மாம்பொழில் முழுப்பின் மழைதவழ" (கோயில் - 1) "சடையும் பிறைதவழ முழுப்பும்" (ஷை 9) என்ற கருவூர்த்தேவர் திருவிசைப்பாக் காண்க சோலையின் முழுப்பைக் கன்று உகைப்பின் உழக்குதலாவது துள்ளிவிளையாடும் ஆன் கன்று சோலை மரங்களின் அடியில் உராய்ந்தும் மோதியும் முட்டியும் அசைத்தலால் அவற்றின் மேற்பாகம் அசைந்துபடுதல் **உகைத்தல்** - அசைத்தல் **உழக்குதல்** - தலைதடுமாறச் செய்தல்

**முழுப்பை** - கருவின் முழுப்பையினை என்றுகொண்டு, ஈன்று வெளிவருவதன் முன்னே தாயின் கருப்பையை உண்ணின்று உகைத்து உழக்கின கன்று, பிறந்தவுடன் சிறிதுபோதில் அங்குள்ள மான் கன்றுகளோடு குதித்தோடுகின்ற தென்றுரைப்பாரும், **முழுப்பு** - புதல் என்று கொண்டு சிறுகானின் புதல்களை ஆன்கன்று உகைத்து உழப்புவன என்றுரைப்பாரு முண்டு.

**முல்லை உடுத்த மருங்கு** - முல்லை நிலப்பகுதி சூழ்ந்த பக்க இடம் **உடுத்தல்** - சூழ்தல்.

ஆனிரை காக்கும் ஆனாய நாயனாரது சரித்தத்தொடர்பு நோக்கி ஆன்கன்றினை முதலிற் கூறினார். 5

**மடக்குறு**—என்பதும் பாடம்

931\. கண்மலர் காவிகள் பாய விருப்பன கார்முல்லைத்
தண்ணகை வெண்முகை மேவு சுரும்பு, தடஞ்சாலிப்
பண்ணை யெழுங்கயல் பாய விருப்பன காயாவின்
வண்ண நறுஞ்சினை மேவிய வன்சிறை வண்டானம். ௬

**(இ - ள்)** கார்முல்லை...சுரும்பு - காரில் மலரும் முல்லையின் குளிர்ந்த பற்போன்ற வெள்ளிய பூக்களிலுள்ள வண்டுகள், கண்மலர். இருப்பன - கண்போல மலரும் கருங்

குவளை மலர்களிற் பாய உள்ளன ; காயாவின்...வண்டானம் - காயாமரத்தின் அழகிய செழித்த கிளைகளிலுள்ள நாரைகள் , தடஞ்சாலி... . இருப்பன - பெரிய நெற் பயிரையுடைய பணைகளினின்று மேலெழுந்து துள்ளுகின்ற கயல்களின்மீது பாய இருப்பன.

(வி - ரை) கண்மலர் காவி - கண்போல் மலரும் காவி என்றும், கள் மிகுதி யாக மலர்கின்ற காவி என்றும் இரட்டுற உரைக்க நின்றது. முல்லைப் பூவிலுள்ள தேனினும்,காவிகளிற்,றேன்,மிகக்கு இருப்பதனால் முல்லையைவிட்டுக் காவிகளில் சுரும்பு பாய்ந்தன என்ற குறிப்பும் காண்க. பல்லைவிடக் கண் சிறந்த உறுப்பாதலின் நகை போன்ற முல்லை முகையினை விட்டுக் கண்போன்ற காவிகளில் பாயவிருப்பன எனவும், கண்ணுக்கு உவமையாக விளங்கும் வண்டினங்கள் தமக்கு மாறாகக் காவிகளும் கண் போல மலர்தலாற் பகைகொண்டு அவற்றின்மேற் பாய்ந்தன என்றும் தற்குறிப் பேற்றம் பெறக் கூறிய நயமும் காண்க

பாய்தல் - ஓரிடம் நோக்கி விரைவாக ஓடுதல் - தாவுதல் - பறத்தல்.

பாய இருப்பன - சுரும்பு காவிகளிற்பாய இருப்பன, வண்டானம் கயல்கள் பாய (பாய்தலை நோக்கி - அல்லது பாய்தலால் அவற்றைத்தின்று) இருப்பன என்று, பாய இருப்பன என்றதொரு சொற்றொடரை ஈரிடத்தும் வெவ்வேறு பொருள்படச் சிலேடை என்னும் அணி பெறவைத்த தமிழ்ச்சுவை காண்க. இவ்வாறே மூர்த்தி நாயனார் புராணத்துள் 2 - 3 - 5 - 6 பாட்டுக்களில் வரும் தமிழ்ச் சுவையும் காண்க.

கண் மலர் காவி-"காவியிருங் கருங்குவளை கருநெய்தல் கண்காட்டுங் கழுமலமே" (மேகரா - குறி 1) என்ற ஆளுடைய பிள்ளையார் தேவாரமும், "கரும்பருகே கருங் குவளை கண்வளரும் கழனிக் கமலங்கள் முகமலருங் கலயநல்லூர் காணே" (தக்கரா - 1) என்ற ஆளுடைய நம்பிகள் தேவாரமும், "எற்படக் கண் போன் மலர்ந்த காமர் சுனைமலர், அஞ்சிறை வண்டி னரிக்கண மொலிக்கும்" என்ற திருமுருகாற்றுப்படையும், இவைபோல்வன பிறவும் காண்க. மாலையில் மலரும் முல்லையில் மொய்த்துத் தேனுண்ட சுரும்பு, காலையுணவு வேண்டி எற்பட மலரும் காவிகளில் பாய்தலை நோக்கி இருப்பன என்ற உட்குறிப்பும் காண்க (எற்பாடு-காலை, படுதல் - உண்டாதல்)

தண்ணகை வெண் முகை. நகை - பல் பல்லுக்குத் தண்மை புன்னகை காட்டு தல். நகை போன்ற எனக். முல்லை முகைக்கு வெண்மையும் தண்மையும் அலரும் பருவத்தே உளதாவதாம். முகை - அலரும் பருவத்து அரும்பு குறித்தது நகை - ஒளி என்பாருமுண்டு

காயா - கருநீல நிறமுடைய சிறு கொத்துப் பூக்களைப் பூக்கும் ஒருவகை மரம் இது முல்லையைச் சார்ந்த மரமாம். அதன் கருப்பொருள்களுள் ஒன்று இதனால் முல்லைத்திணையும், வண்டானம் - தாராவும் - நீர்க்கோழியும் போன்று நாரையும் மரு தக் கருப்பொருளாதலின், அதனால் மருதத்திணையும் குறித்த திணைமயக்கம் காயா - மலர்வாவிக் கரையில் முளைத்தெழுந்தது.

வண்ணம் - பருமையும், நறுமை - செழிப்பும் குறித்தன

வண்டானம் கயல்பாய இருப்பன என்றது "ஓடு மீன் ஓடி உறுமீன் வருமளவும், வாடி யிருக்குமாம் கொக்கு " என்றபடி கயல் துள்ளி எழும் சமயம் நோக்கி அவற்றின் மீது பாய்ந்து கொத்தித் தின்பதற்குக் காத்திருக்கும் நாரைகளின் இயற்கை குறித்தது இக்கருத்து " கூரால் வாய்நிறையக் கொண்டயலே கோட்டகத்தில், தாராமல் காக் கூரிற் றூன்றோன்றி மாடமே" (சீகா - 2) என்ற ஆளுடைய பிள்ளையார் தேவாரத்தி னுள் விளங்குதல் காண்க.

எழும் கயல் - கயல்கள் துள்ளிக் குதித்து நீர்மேல் எழும் இயல்புடையன. " குதித்து நீர்மேல் விழுந்த கயல் " (மேகரா - குறி - திருவீழி - 8) என்ற ஆளுடைய பிள்ளையார் தேவாரமும் பிறவும் காண்க

காவியும கயலும மருதப பொருளகள். அவை தநத மிடததே இருப்பன; முலலைச சுரும்பும காயாவின வணடானமும தததம இடததைவிடடு அயல வயலிற பாயவன என்பார பாய இருப்பன என்றார இதனால மருதம பெருமபானமையும முல்லை சிறுபானமையும உடையது இநநாடடின தனமையாம என்று காடடியதன்றி, "பழனத தயல முல்லை உடுதத மருஙகோர பால" என முனபாட்டிற கூறிய முல்லையும மருதமும கூடிய திணைமயககததினை விளககிய நயமும காணக

மேனமழநாடு முறறும் சீர நாடாகிய சோழநாட்டின ஒரு சிறு பகுதியாம என்ற அமைப்பினை விளககிய படியும காணக. 6

அஞ்சிறை—என்பதும பாடம.

932 போஙகரில வணடு புறமபலை சோலைகண மேலோடும
வெஙகதிர தஙக விளஙகிய மேன்மழ நன்னாடாம்
அஙகது மணணி னருஙகல மாக, வதறகேயோர
மஙகல மானது மஙகல மாகிய வாழ்கொளுார. எ

(இ - ள்) போஙகரில. சோலைகள - மரககொமபின புறதது வணடுகள அலைதற கிடமாகிய சோலைகளில, மேலோடும விளஙகிய - மேலே வான வீதியில ஓடுகினற ஞாயிற்றின வெப்பம பொருந்திய கதிரகள தஙகுமபடி விளஙகிய, மேனமழ ..ஆக - நனமையுடைய மேன் மழ நாடு எனகினற அநநாடு இமமணணுலகததிறகு அரிய அணியே ஆக, அதறகே. வாழகொளுார - வாழவு தருகினற திருமங்கலம் எனகினற பெரிய பழைய ஊரானது அநநாட்டினுககு ஒபபறற மஙகலமாகியதாம.

(வி - ரை) போங்கர் - மரககிளைகள போங்கரில் புறம்பு வண்டு அலை எனக வணடுகள மரககிளைகளின புறததே அலைதலாவது கிளைகளிற பூதத பூககளிற் றேன உண்ணும பொருடடு மேறபுறததிற சுறறிக கொணடிருததல

அலை சோலைகள் மேல் - அலைதறகிடமாகிய சோலைகளின மேலே மேல் - ஏழனுருபு எனக கொணடு சோலைகளினிடதது என்றலுமாம.

கதிர் தங்கச் சோலைகள் விளங்கிய நாடு எனக சோலைகளின வெஙகதிர தஙகுதலாவது மாஙகளின செறிவினால சோலைகள பகலிலும இருணடிருததல ஞாயிற்றின கதிரகள உளளே நுழைநது தரையிற்றாகக முடியாதபடி சோலைகளின மேற புறததே தஙகிவிடடன என்பது குறிப்பு "இருளபடப பொதுளிய", "மநதியு மறியா", என்ற திருமுருகாற்றுப படையும "வெயினுழை பறியா" முதலிய வழககுககளும காணக வெங்கதிர் என்றதனால ஞாயிற்றின கதிரகள குறிககபபட்டன.

மேன்மழ நன்னாடாம் அங்கு அது - மேன்மழ நாடு - 925 பாரகக நன்(மை) இடைப்பிறவரல "சேதிநனனாடு" - 467 என்ற விடததுரைததவை பாரகக.

அங்கு அது - அது - முன்னறிசுடடு.

மண்ணின் அருங்கலமாக அதற்கே ஓர் மங்கலம் ஆனது - "மஙகல மென்ப மனைமாட்சி மற்றத, னனகல நனமககட பேறு" என்ற குறளிற காட்டியது போல இஙகு நாட்டினையும நகரததினையும அருஙகலமும மஙகலமுமாக எடுததுக காட்டினார. கலனிலலாத போதிலும மஙகலம சிறககும கலனகள (அணிகள) அரியனவாயினும மஙகலமிலலாத போது சிறபபுபெறா ஆயின மககடபேறிலலாத போதினும மனைமாட்சி சிறககும, ஆதலின மனைமாட்சியினை மஙகலமாகவும மககடபேற்றை அதன நனகலனாகவும திருககுறள எடுததுக காட்டிற்று.

ஆனால, மேன் மழநாடு மேறகூறியபடி வளம பெரிதுடைமையால மணணுக கருங்கலமேயாயினும அணிகலனாய சிறபபதன்றி மஙகலமாகிய சிறபபுடையதாகாது என்று குறிகக அதனை அருங்கலம் என்றும, அவவருங கலனுககு மஙகலநதருவது





திருமஙகலம கோயில விமானம்

—பாடடு - 932 - பககம - கஉ00

ஆனைய நாயனா

—பாடடு - 940–943 - பககம - கஉ0எ

அந்த நகரமாகிய **மங்கலமே**யா மென்றும ஆசிரியா எடுததுக்காட்டிய அழகும உள்ளுறையும காண்க " உலகுக கெலலா மஙக லநதரு மழவிளம போதகம " என்று ஆளுடைய பிள்ளையாரைக் கூறியதும காணக.

**அருங்கல மாதல்** - நாடுகள பலவற்றுள்ளும மேற கூறியவாறு வளமும் சிறபபு முடைமையினால உலகுககணியாய விளஙகுதல.

**மங்கலமாதல்** உலகச சாாபாகிய வளஙகள எலலாமிருப்பினும சிவசசாாபாகிய செலவமிலலாத போது அவை மஙகலம பெறா வாதலின, அநத மஙகலமாகிய சிவசசாா புடையதாகச செயதல " மறறவை பெறற நீடுபயன " (441), " வநத செல்வததின வளததினால வருபயன " (504), " மணணி னிறபிறந தாாபெறும பயன " (திருஞான புரா-1087) முதலியவை பாாகக **மங்கல**நகா இநநாடடுககும உலகுககும மஙகலநதரும சிவசசாாபு பெறுவிததல, பினனா "வையநதன னை யு நிறைதது வானுநதன வயமாககி" (961) என்றது முதலிய சரித நிகழசசிகளாலறிக. சிவம - மஙகலம என்ற பொருளுந தருவ தெனப

**மங்கல மாகிய வாழ்மூதூர் - வாழ்** - வாழவுதரும வாழவிககும எனப பிறவினைப பொருளில வநதது. சிவவாழவுடைய என்றலுமாம **மூதூர்** - பழமையாகிய ஊா இது இபபோதும இபபெயரால வழஙகபபெறுகின்றது இதனைப " புனை **மங்கை** " என்று முதனூல (திருததொணடத தொகை) பேசிய அழகும அருமைபபாடும காணக தலவிசேடம பாாகக 7

933. ஒபபில பெருஙகுடி நீடிய தனமையி லோவாமே
தபபில வளஙகள பெருககி யறமபுரி சாலபோடுஞ
செபப வுயாநத சிறப்பின மலிநதது சீாமேவும
அபபதி மனனிய வாயா குலத்தவ ராஞயா. அ

**(இ - ள்)** வெளிப்படை. (அமமூதூா) ஒபபற்ற பெருஙகுடிகள நெடுஙகாலமாக நீடி வருகின்ற தனமையால ஒருகாலததும நீஙகாதே, தவறுதலிலலாத வளஙகள யாவும பெருகசசெயது அறஙகளைச செயகின்ற சாலபுடனே எடுததுககாட்டாகச சொலலும படி உயாவுடைய சிறபபினால மிகுநததாகும. அவவாறு சீாபொருநதிய அநதப பதி யில நிலைதத **ஆயர்குல**ததினைச சாாநதவா **ஆனாயர்** என்ற பெரியாா.

**(வி - ரை) ஓவாமே - ஓவுதல்** ஒழிதல. " ஓவற விமைககுஞ் சேணவிளங கவி ரொளி" (திருமுருகாற்றுபபடை) **தப்பில் வளங்கள்** - ஒருவகையாலுஙகுறைவிலலாத வளஙகள **ஓவாமே** என்றது இடையறாது பெருகுதல குறிததது **தப்பில்** என்றத னால பிழைபடா நெறியில ஈட்டபபட்டமையும், **பெருக்கி** என்றதனால மேனமேலும பெருக ஈட்டுதலும குறிககபபட்டன.

**அறம்புரி சால்பு** - அறவழியிற் றேடிய செலவததைப பெருககியதனால உள தாகும சாலபு நிறைநதிருததல " நின பொருளக ளெலலாம, அறததாற்றி னீட் டப பட்ட வனையவை புனித மான திறததாலே " (திருவாதவூ - உபதே - படலம - ) என்ற திருவிளையாடற் புராணக கருததுக காணக. பொருளகளை ஈட்டுதலும, ஈட் டபபட்டவற்றைச செலவிடலும அறததாற்றின நிகழநதன எனபதாம. **சால்பு** - 885 பாாகக **செப்ப** - உயாவாகச சுட்டிககாட்ட - எடுததுசசொலல

**ஆயர் குலத்தவர் ஆனாயர்** - ஆனமேயககும ஆயாகுலததவராதலின ஆனாயா எனப பெறறாா என்ற குறிபபுபபட இவவாறு கூறினாா. **ஆனாயர்** - காரணப் பெயா. இவரது இயறபெயா விளஙகவில்லை

**ஆயர்குலம்** - பழநதமிழககுடிகளுட் சோநத இடையா குலம். இது வேறு; யாதவா குலம வேறு தொலகாபபியம சிலபபதிகாரம முதலிய மிகப பழநதமிழ நூலகளிலும ஆயாகுலமும தொழிலும பிறவும பேசபபடும. இவாகள மூலலை நில

மக்கள் யதுஎன்ற அரசன் வழிவந்த சூரியகுலத்து க்ஷத்திரியர்கள் யாதவர் எனப் படுவர். கண்ணன் அம்மரபில் வந்தமையால் யாதவன் எனப்படுவன் அவன் இடைச் சேரியில் வளர்ந்து பயின்றமையால் அத்தொடர்புபற்றி இடையர்கள் யாதவர் என்று மயங்கி யறியப்படுவர் என்ப.

**மேவிய**—என்பதும் பாடம். 8

934. ஆயர் குலத்தை விளக்கிட வந்துத யஞ்செய்தார் ;
தூய சுடர்த்திரு நீறு விரும்பு தொழும்புள்ளார் ;
வாயினின் மெய்யின் வழுத்து மனத்தின் வினைப்பாலிற்
பேயுட னாடு பிரானடி யல்லது பேணாதார். கூ

**(இ - ள்)** வெளிப்படை. (அவர்) ஆயர்குலத்தை விளக்கம் செய்திட இவ்வுலகில் வந்து அவதரித்தவர், தூயஒளி வீசுகின்ற திருநீற்றினை விரும்பும் திருத்தொண்டில் நின்றவர், வாக்கினாலும், உண்மைபெற வழுத்தும் மனத்தினாலும், செயல் வகையினா லும் பேயோடாடுகின்ற சிவபெருமான் றிருவடிகளை யல்லது வேறொன்றினையும் பேணாதவர்.

**(வி - ரை) குலத்தை விளக்கிட** - குலத்தை விளக்குதலாவது சிவ வழிபாட்டில் நிறுத்தி வழிகாட்டுதல் இவர் அவதரித்த குலம் என்று இவரால் குலம் உலகில் விளங்கப் பெறுதல் என்றலுமாம் 872ல் உரைத்தவை பார்க்க திருத்தொண்டத் தொகையி னுள் திருமூலரும் இந்நாயனாரும் ஆகிய இருவரே ஆயர் குலத்தவராவர். அவருள் சிவ யோகியாரான திருமூலர், இறந்துபோய்க்கிடந்த மூலனென்ற இடையனது உடலினுட் புகுந்து மூலராய் விளங்கியவர். எனவே, இந்நாயனார் ஒருவரே ஆயர் குலத்திற்றோன் றியபடி சிவனடியாராய் விளங்கி அந்நிலையே சிவலோகத்திலும் வாழ்பவர். ஆதலின் இவ்வாறு சிறப்பித்தார்.

**உதயம் செய்தார்** - விளக்குதல் ஞாயிறு - மதி முதலிய பேரொளிப் பொருள் களின் செயல் **விளக்கிட** என்றதற்கேற்ப **உதயம் செய்தார்** என்றார்

**தூய சுடர்த் திருநீறு** ஏனைய ஒளிப்பொருள்களிற் காணப்படாத **தூய்மையுடன்** விளங்கும் **சுடர்** இச்சுடர் தூய்மைசெய்வது என்பதுமாம் "சுத்தம தாவது நீறு", "புண்ணிய மாவது நீறு" என்ற தேவாரத் திருவாக்குகளும், "வெண்ணீற்றொளி போற்றி நின்று" (திருஞான புரா - 216) என்ற மாபுராணமும் காண்க.

**திருநீறு விரும்பு தொழும்பு** - திருநீறு வீடு தரும் சாதனம் என்று கொண்டு அதற்குத் தொண்டு புரிதல் "நீற்றினை நிறையப் பூ" சுதலும், நீறு பூசினாரைக் காணில் காதல் கொள்ளுதல் - உள்ள முருகுதல் - போற்றுதல் - அவர் வேண்டுவன செய்தல் முதலியவையும் திருநீற்றுத்தொண்டு எனப்படும். சிவபெருமான் றிருத்தொண்டாவன திருநீற்றுத் தொண்டேயாம் என்றலும் பொருந்தும்

**வாயினின் வினைப்பாலின்**-வாக்கு, மனம், காயம் என்ற மூன்றும். இன்னுருபு கள் மூன்றும் கருவிப் பொருளில் வரும் **ஆன்** என்ற மூன்றனுருபாயப் பொருள் தந்து நின்றன.

**வினைப்பால்** - உடலாற் செயல் செய்தல்

**மெய்யின் வழுத்தும் மனத்தின்-மெய்** - உண்மை. உண்மை கூடாதச் சிந்திக்கும் மனத்தினால் உண்மை கூட நினைப்பவர் மனத்தினுள் இறைவர் வெளிப்பட நின்றருளு வர் "நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே, புக்கு நிற்கும்பொன் னார்சடைப் புண்ணி யன்", "கரவாடும் வன்னெஞ்சர்க் கரியானைக் கரவார்பால், விரவாடும் பெருமானை", "வஞ்சனையா லஞ்செழுத்தும் வழுத்து வாக்குச் சேயானை" "மெய்ம்மையன் பருள் மெய்ம்மை மேவினார்" முதலிய திருவாக்குகள் காண்க.

**வினைப்பால்** - என்பதற்குச் செயலின் பொதுமை என்றும், **மெய்** - உடம்பு - காயம் - என்றும் கொண்டு, வாய், மெய், மனம் என்ற மூன்றின் செயலால் எனத் தனித்தனி கூட்டி உரைத்தலுமாம். "மானிடப் பிறவி தானும் வகுத்தது மனவாக் காயத், தானிடத் தைந்து மாடு மரன்பணிக் காக வன்றோ" (சித்தியார் - 2 - 92) பார்க்க.

**பேயுடன் ஆடும் பிரான்** சிவபெருமான் **பேய்** - சிவ கணமாகிய சுத்த தத்துவ உடம்புடைய நற்கணம் சிவபூதங்கள். பௌதிகமாகிய வாயு சரீரமுடைய பைசாசங்க ளல்ல. "பேயாய நற்கணத்தி லொன்றாய நாம" (அற்புத - அந் - 86) என்ற அம்மை யார் திருப்பாட்டும் "பாரிடம் பாணி செய்யப் பறை கட்சிறு பல்கணப் பேய், சீரொடும் பாட லாட லிலயஞ்சிதை யாத கொள்கை" (பஞ்சமம் - திருவொற்றியூர் 2) என்ற ஆளுடைய பிள்ளையார் தேவாரம் முதலியவை பார்க்க. பேயோடாடி என்பது நிகண்டில் சிவபெருமானது பெயர்களிலொன்றாக ஓதப்படுதலும் காண்க. பேயோ டாடுதல் அவரது நித்தியத்துவம் பரத்துவம் முதலிய தன்மைகள் குறிக்கும்.

**அடி அல்லது பேணுதார்** - எதிர்மறையாற் கூறினார் நியதி பிழையாமையும் உறு திப்பாடும் குறித்தற்கு. 875ல் உரைத்தவை பார்க்க.

இப்பாட்டால் ஆனாயரது உயிரின் நிலையாகிய அகவாழ்வாகிய சிவச்சார்பு கூறப் பட்டது. வரும்பாட்டில் உடல் பற்றிய புறவாழ்வாகிய உலக நிலை கூறுவார் உயிர் பற்றிய அகவாழ்க்கையின் சிறப்பு நோக்கி அதனை முன்வைத்தோதினார். 9

935\. ஆனிரை கூட வகன்புற விற்கொடு சென்றேறிக்
கானுறை தீய விலங்குறு நோய்கள் கடிந்தெங்குந்
தூநறு மென்பு லருந்தி விரும்பிய தூநீருண்
டூனமி லாய முலப்பில பல்க வளித்துள்ளார். க0

(இ - ள்) வெளிப்படை. (அவர்) பசுக்கூட்டங்களை, அகன்ற முல்லைநிலக்காட்டிற்கு ஒருங்கு சேரக் கொண்டுபோய்க் காட்டில் உள்ள கொடிய விலங்குகளாலும் பொருந் தும் நோய்களாலும் வரும் துன்பங்களை நீக்கிக் காத்து, எங்கும் தூய நறிய மெல்லிய புல்லை அருந்தி விரும்பும் தூய நீரினை உண்டு, குற்றமில்லாதபடி பசுக்கூட்டங்கள் அளவில்லாது பெருகும்படிக் காப்பாற்றினார்.

**(வி - ரை)** கூடக் - கொண்டு, - சென்று, - ஏறிக், - கடிந்து, - ஆயம் - அருந்தி - உண்டு - பல்க, - அளித்துள்ளார் எனக் கூட்டி முடித்துக்கொள்க.

**கூடக்கோடு சென்று ஏறி** என்பது ஆனிரைகளைச் சேர்த்துத் தம்முடனேகூடக் கொண்டு செல்லுதல் குறித்தது.

**கடிந்து-அளித்து-உள்ளார்** என்பது தீமை நீக்கிக் காத்தலும் நன்மை பெறும்படி காத்தலும் குறித்தது. பசுபதியாகிய சிவபெருமான் பசுக்கூட்டங்களாகிய உயிர்களைக் காக்கும் பாச நீக்கமும் சிவப்பேறுமாகிய இரண்டும் இங்கு உட்குறிப்பிற் பெறப்படுவ தும் காண்க. "திறங்கொண்ட வடியார்மேற் றீவினைநோய் வாராமே" என்ற ஆளுடையபிள்ளையார் தேவாரமும் பிறவும் காண்க.

**அகன் புறவு** - அகன்ற காடு. மருத நிலத்தினை அடுத்துப் புறத்தே உள்ள முல் லைப் பகுதி **புறவு** எனப்படும். "மணணிக் கரையின் வளர்**புறவின்** மாடும" (சண்டே சா - புரா - 27), "அருகுவளர் **புறவில்**" (ஷை 33), "அங்கட் கடுக்கைக்கு **முல் லைப் புறவம்**" (திருவொற்றியூர்த் திருவிருத்தம் - 10) முதலியவை காண்க.

**கோடு, சென்று, ஏறி** - **கோடு** என்றது பசுக்கள் இருக்கும் வீடுகளிலிருந்து அழைத்துக் கூட்டிக்கொள்ளுதலும், **சென்று** என்றது அங்கு நின்றும் புறவுக்குக் கூட்டிப்போதலும் **ஏறி** என்றது புறவுக்குள் ஏற்ற இடங்களிற் புகுதலும் ஆகிய செயல் கள் குறித்தன. இவற்றை ஏற்ற ஒவ்வோர் சொல்லாற் கூறும் அமைதி காண்க.

**தீய விலங்கு** - பசுக்களுக்கு ஊறு செய்யும் புலி, சிறுத்தை, நரி முதலியவை.

**உறு நோய்கள்** - கானலில பசுககளைத தாககும நோயகள. இவை கொடுங்காற்று தீர முதலிய காரணங்களால வருபவை விலஙகும நோயகளும கடிநது எனக எண ணுமமைகள தொககன இவவாறனறி விலஙகுகளால வரும நோயகள எனறுரைப் பாருமுணடு

**தூநறு மென்புல் அருநதி** - **தூ** - தூயமையும, **நறு** - புதுமையும சுவையுடைமை யும, **மேன்** உணணுதற கெளிமையும குறிதத அடைமொழிகள இநத அடைமொழி களால பசுககளை உணபிககததகக புலலுணவில நலலுணவின இயலபை எடுததுக காட்டியது காணக.

**தூநீர்** எனபதும அவை உணணததகக நலல நீரின இயலபு காட்டிறறு

பசுககள உணணததகாத பல கெட்ட உணவும, கெடுதி செயயும பல கெட்ட நீர நிலைகளும கானலில உளளனவாதலின, அது தெரிநது விலககி, நலல புலலுணவும நனனீரும உளள இடஙகளில பசுககூட்டததை மேயததுக காததனா எனக இதுவே பசுககளைக காககும முறை எனபது சணடேசநாயனா மருதபபுறவில ஆனிரை காததவரலாறறானும அறியப்படும அவாதம புராணம 26-ம பாட்டுப் பாாகக

**ஊனமில் ஆயம் உலப்பில பல்க** - ஊனமில - கெடுதியிலலாதபடி. கேடு இலலா வகை - விலஙகும நோயும கடிநதமையால ஊனமிலலையாயின. **உலப்பில** - அளவிலலாதனவாக

**பல்குதல்** - பெருகுதல. புலலும நீரும நனகு பெறுதலால உலபபிலவாகப பெருகின

**ஊனம் இல் ஆயம்** - மககளுடல வளாசசிககு இனறியமையாத நலல உணவாகிய பால தயிர் நெய எனபவறறையும, மககளின உயிா உயதி பெறுதறகு இனறியமை யாத இறைவன வழிபாட்டுககுரிய சாதனமாகிய பஞசகவவியம எனபபடும ஆனைந தினையும திருநீறறின மூலததையும தநது, உடலுககும உயிருககும ஒருஙகே **ஊனத்தை இல்லையாகச் செய்யும்** ஆயஙகள எனற பொருளும படினறது இவ வாறு உலபபிலவாகப பலகிய ஆனிரைகள வெவவேறினஙகளாகக காககபபடும திறம வருமபாட்டிற கூறுவாா

**தூநிறை**—எனபதும பாடம 10

936\. கனறொடு பானமறை நாகு கறபபன பாலாவும
புனறலை மெனசினை யாறொடு நீடு புனிறறாவும
வெனறி விடைககுல மோடு மினநதொறும வெவவேறே
துனறி நிறைநதுள சூழ லுடனபல தொழுஙகள. கக

**(இ - ள்)** வெளிபபடை கனறுகளோடு, பால கறவை மாறிய இளமபசு, பால கறககும பசு, சிறிய மயிருளள தலையினையும மெனமையையும உடைய சினைபபசு, ஈன றணிய பசு எனறிவையும, வெறறியுடைய விடைகளின கூட்டததோடு இவவாறு இனஙகள தனிததனியாக நெருஙகி நிறைநதுளள இடஙகளுடன கூடிய பல தொழு வஙகள உளளன.

**(வி - ரை)** மேறபாட்டில "ஆயம - பலக - அளிததுளளாா" எனறதனை, அளித தது இவவாறெனை இபபாட்டால விரிததுக கூறுகினறாா

**கன்றொடு** - ஒடு உருபு தநதோதியது, கனறுகளைப பாதுகாககுமபோது பசுககள - எருதுகளின வேறாகபபிரிததுக காககபபட்டன எனபது குறிகக இவவாறே "விடைக் குல மோடும்" எனறு எருதுககூட்டம வேறுபிரிதது அளிககபபட்டதனையும ஒடும் எனறதனால பிரிததுக காட்டியதும காணக முதலிற காககபபடவேணடிய தகுதி நோககிக கனறுகளை முதலில வைததுக கூறினாா. விடைகள வலிமையால தமமை

யும ஏனையவறறையும காககும தனமை காட்ட **வென்றி** எனற அடை தநது இறுதி யில வைததாா

**நாகு - பாலா - சினைஆன் - புனிற்று** - எனபன பசுககூட்டஙகளின பல வேறு வகை குறிததன தொகக இடஙகளிலும எணணுமமைகள விரிததுரைகக. **பால் மறை நாகு** - பால கறககும பருவம மாறிய நாகு , வினைததொகை. **மறை** - மறைநத - மறைதத **பால் மறை** - பெயா எனககொணடு பாலவறறிய பசு எனறலுமாம **நாகு** - இளமபசு. **கறப்பன** - கறபபனவாகிய, **பால் ஆ** - பாலதரும பருவததுளள பசு. **மென்மை** - சினைபபசுககள கருபபொறையினால உடல வலிமை தளாதல குறித தது **நீடு புனிற்று ஆ** - ஈனறணிய பசுககள பாலதரும காலம நீடியிருககும நிலை குறிகக **நீடு** எனறாா ; பெருமையுடைய எனறும, கனறினிடதது அனபு மிகக என றும கொளளுதலும ஆம மிகவும ஈனறணிய எனறலுமாம

**வென்றி விடைக்குலம்** - சிவபெருமான உமையமமையாரோடும எழுநதருளி வநது அடியாாககு வேணடும வரஙகொடுததுக கருணைசெய நிலையில ஊாதியாகிய விடைததேவரின குலம எனபது குறிபபு **வென்றி** - வலிய பாசககூட்டததின வனமைகள யாவும சிதைவுபடுததி நனமை முழுதுமதரும வெறறி குறிததது. "சடை யாா தேவாகடம பிராட்டி யுடனே சேரமிசைக, கொளளுஞ சினமால விடைததேவா குலமன றேவிச சுரபிகுலம" (22) எனற சணடீசநாயனாா புராணததின கருதது நோககுக

**இனநதோறும் வெவ்வேறே துன்றி நிறைநதுள** - கனறு இனம - பசு வகை யினஙகள - எருதுகளின இனம எனறிவறறின கூட்டஙகள வெவவேறாகப பிரிததுத தொழுவஙகளில காககபபட்டன அவவவறறின தகுதிககேறப நோயகடிநதும உணவு தநதும பாதுகாககப படுவதனுககு இவவாறு இனம பிரிதது அளிககபபடுதல பெரிதும துணை செயயுமாதலின முனனோாகள இமமுறையினைக கையாணடனா. இவவிதியும மரபும இநநாளில புறககணிககபபட்டும மறநதுபட்டும போயினமை வருந தததககதாம இவவாறு இனம பிரிககாமற காககபபடுதலால நனமை பெறுததுமனறி, உளவாகும கேடுகளும பல **துன்றுதல்** - கூட்டம நெருஙகுதலும, **நிறைதல்** - அக கூட்டததினுள இனம நிறைதலும குறிததன.

ஆனினஙகளை இவவாறு இனமபறறி வெவவேறாகப பிரிததுக காததல, அவை பலகிப பெருகுதலுககு இனறியமையாததாம ஆதலின இது விதியும மரபும ஆயிறறு மேறபாட்டிற கூறியபடி தீமை கடிநது நலலுணவு ஊட்டி மேயததுக காததலும இனறியமையாததாம. இவறறின இனறியமையாமைபறறிச சணடீசநாயனாா புரா ணததினுளளும ஆசிரியா தேறறம பெற இவறறை எடுததுக காட்டி வறபுறுததி யிருததனமை காணலாம.

ஊாகளின பககததுப புறவில ஆனிரைகளுககாக இருககவேணடிய ஊாமநதை, மேயசசற காடு முதலியவை, மககளின தகாத பேராசையால விழுஙகபபட்டுக கால நடைகளுககு மேயசசலிடமெனபதே யிலலாமற போயிறறு. முனனோா ஒழுககஙகளை யும நலவாழககை விதிகளையும கடநது மககள ஒழுகுவதனால நீாததுறைகள யாவும அசுததமான அழுககுநீா நிலைகளாய மாறிவிட்டன இததவறுகளைத திருததுவதறகு மககள கவலைகொளளாமையினால பசுககள பாலும பயனும பெருகவரும நிலை மாறிறறு "தோறகனறு காட்டிக கறவாா , கறநத பால, பாறபட்டாா ருணணாா" எனறு நீதி நூலகளால விலககபபட்ட பாவஙகள நமது "நாகரிக" நகரஙகளில மலிநது காணும காட்சிகளாயின ஆனிரைகள (காமதேனுககள) மககளின உடலையும உயிரையும காதது ஈடேறறக கடவுளால கொடுககபபட்ட சேமவைபபுககளாம எனபது உலக நூலகளாலும, சணடீசநாயனாா புராணம முதலிய உணமைநூலகளாலும அறியப படும உணமை. இதனை முறறிலும மறநது பசுககளையே தினறு உழலும பெரும

பாவம் பெருகி நிகழும் இந்நாளில், உலகம் செழித்து உய்வதெங்ஙனமோ? என்பது அறிஞர்களின் வினா. ஆனிரைகள் செழிக்காது நடையுடற் கூடுகளாயத் திரியக் காணும் இந்நாளில் மக்களின் சுகமும் அதற்குத்தக மெலிந்து காணப்படும் என்பது அறிஞர் கண்ட உண்மை. இவற்றையெல்லாம் சிந்தித்து உலகம் திருந்த ஒழுகி உய்வதாக. 11

937. ஆவி னிரைக்குல மப்படி பல்க வளித்தென்று
கோவல ரேவல புரிந்திட வாயர் குலம்பேணுங்
காவல ரதம்பெரு மானடி யன்புறு கானத்தின்
மேவு துளைக்கரு விக்குழல் வாசனை மேற்கொண்டார். ௧௨

(இ - ள்) வெளிப்படை. ஆனிரையின் தொகுதிகள் அவ்வாறு பெருகும்படி காப்பாற்றிக், கோபாலர்களாகிய இடையர்கள் என்றும் தமது சொல்வழியே ஒழுகித் தமது ஏவல்களைச் செய்து நிற்க, ஆயர்குலத்தைக் காப்பாற்றும் பெரியாராகிய ஆனாயர், சிவபெருமானது திருவடிகளில் அன்பு பொருந்திய இசையுடனே துளைக்கருவிக் குழல் வாசித்தலை மேற்கொண்டார்.

(வி - ரை) அப்படி அளித்தலாவது மேலிரண்டு பாட்டுக்களினும் சொல்லியபடி பாதுகாத்தல். பல்குதல் - பெருகுதல். என்றும் என்றதனை அளித்து என்றதனோடும், புரிந்திட என்றதனோடும் தனித்தனி கூட்டிப் பொருள் கொள்ளுமாறு இடையில் வைத்த அமைதி காண்க.

கோவலர் - கோபாலர் - இடையர் "இடைமகன்" (சண்டேசர் புரா - 24). ஏவல் புரிந்திட - ஏனையிடையர் தமது ஏவல் கேட்டு ஆனிரைக் குலங்களைக் காத்து வந்தார்களாக, இவர், அவர்களைத் தம் ஏவல்வழி நிறுத்தித் தலைவராய் விளங்கினார் என்க. இதனை 943-945ல் விரித்திருத்தலும் காண்க.

அடி அன்புறு .வாசனை - கானம் திருவடி யன்புடன் கூடாதபோது வெறும் புலனின்பமா யொழியும். ஆதலின் அடியன்புறு கானத்தின் மேவும் என்று விசேடித்தார். இந்தக் கானமே இறைவன்றன் திருச்செவியி னருகணையப் பெருகும் தன்மையுடையதென்பது 942ல் அறியப்படும். அது குறிக்க இங்கு இவ்வாறு தொடங்கிக்கொண்டார். கானம் - இசைக்கலை. துளைக்கருவி துளைகளின் வழியே இசை ஓசையினை வெளிப்படுக்கும் ஊது கருவி.

துளைக்கருவிக் குழல் துளைக் கருவியாகிய குழல். துளைகளின் எண் - வரிசை - தொழில்செய்யும் முறை முதலியவற்றை 938, 948, 949, 951, 952, 954 என்ற திருப்பாட்டுக்களில் விரிக்கப்பட்டமை காண்க. இசையினையுடைய துளைமேவிய கருவிக்குழல் என்றலுமாம்.

குழல் வாசனை - குழல் வாசித்தலினை. மேற்கொள்ளுதல் - மேற்கொண்டு பல நாளும் பயிலுதல். வாசனை - வாசித்தல் என்ற பொருளில் வழங்கும் இசைக்கலை மரபு வழக்கு. 961, 965 பார்க்க. குழல் - குழல் வாசித்தலை, வாசனை - பூர்வவாசனையினால் என்றுரைத்தலுமாம். 12

வேறு

938. முந்தைமறை நூன்மரபின் மொழிந்தமுறை யெழுந்தவேய்
அந்தமுத லிரண்டி னரிந்துநரம் புறுதானம்
வந்ததுளை நிரையாக்கி வாயுமுதல் வழங்குதுளை
யந்தமிலசீ ரிடையீட்டி னங்குலியெண் களிலமைத்து, ௧௩

939. எடுத்தகுழற் கருவியினி லெம்பிரா னெழுத்தைந்தும்
தொடுத்தமுறை யேழிசையின் சுருதிபெற வாசித்துத்

தடுத்தசரா சரங்களெலாந் தங்கவருந் தங்கருணை
யடுத்தவிசை யமுதளித்துச் செல்கின்றா, ரங்கொருநாள், கச

940. வாசமலர்ப் பிணைபொங்க மயிர்நுழுதி, மருங்குயர்ந்த
தேசுடைய சிகழிகையிற் செறிகண்ணித் தொடைசெருகிப்,
பாசிலைமென் கொடியின்வடம் பயில்நறு விலிபுனைந்து,
காசுடைநா ணதற்கயலே கருஞ்சுருளின் புறங்கட்டி, கரு

941. வெண்கோட்ட விலைச்சுருளிற் பைந்தோட்டு விரைத்தோன்றித்
தண்கோல மலர்புனைந்த வடிகாதி னொளித்தயங்கத்,
திண்கோல நெற்றியின்மேற் றிருநீற்றி னொளிகண்டோர்
கண்கோட்ட னிறைந்தாராக் கவினவிளங்க மிசையணிந்து, கசு

942. நிறைந்தநீ றணிமார்பி னிரைமுல்லை முகைச்சுருக்கிச்
செறிந்தபுனை வடந்தாழத், திரடோளின் புடையலங்கல்
லறைந்தசுரும் பிசையருமப, வரையுடுத்த மரவுரியின்
புறந்தழையின் மலிதானைப் பூம்பட்டுப் பொலிந்தசைய, கஎ

943. சேவடியிற் றொடுதோலுஞ் செங்கையினில் வெண்கோலும்
மேவுமிசை வேய்ங்குழலு மிகவிளங்க, வினைசெய்யுங்
காவல்புரி வல்லாயர் கன்றுடையா னிரைசூழப்,
பூவலர்தாரக் கோவலனா நிரைகாக்கப் புறம்போந்தார். கஅ

938. (இ - ள்) முந்தை...வேய் - பழைமையாகிய இசை(க்கலை)வேத நூல்களில் மொழிந்த மரபின் முறைப்படி எழுந்து வளர்ந்த மூங்கிலில், அந்தம் நுனியில், கால (இல்) - நான்கு பங்கிலும், முதல் (இல்) அடியில், இரண்டில் - இரண்டு பங்கிலும், அரிந்து - அரிந்து, இடைப்பட்ட பாகத்தை எடுத்து, நரம்பு. ஆக்கி - சுரங்கள் எழும் தானங்களின் வந்த துளைகளின் வரிசையைச் செய்து, முதல் வாயு வழங்குதுளை - முதலில் காற்று உண்டாகும் துளையையும், அந்தமில். அமைத்து - கேடில்லாத சிறப்பினையுடைய இடைவெளி ஒவ்வோர் அங்குல அளவில் துளைகள் செய்து, கங

939. (இ - ள்) வெளிப்படை - இவ்வாறு எடுக்கப்பட்ட வேய்ங்குழலாகிய துளையிசைக் கருவியில் எமது பெருமானுடைய திருவைந்தெழுத்தினையும் தொடுத்தமுறையில் வரும் ஏழிசைகளினுடைய சுருதி பெறும்படி வாசித்து, அதனால் வேறு வழியிற் செல்லாமல் இசையினாற்றடுக்கப்பட்ட சராசரங்கள் எல்லாமும் பொருந்த வரும் தமது கருணையுடன் கூடிய இசையமுதத்தினை அளித்துச் செல்கின்றாராகியவர் (கோவலனார் 943) அங்கோர் நாளில், கச

940. (இ - ள்) வாசமலர்ப்பிணை பொங்க - மணமுடைய மலர் மாலை விளங்கிக் காட்ட, மயிர்நுழுதி சிகழிகையில் - மயிரைக்கோதிப் பக்கத்தில் மேலுயரும்படி விளக்கமாக எடுத்து முடித்த சிகழிகையில், செறி ..செருகி - நெருங்கக் கட்டிய கண்ணிமாலையைச் செருகி, பாசிலை புனைந்து - பசிய இலையுடைய மெல்லிய கொடிகளாலாகிய வடத்தில் நறுவிலியைப் புனைந்து, காசறு கட்டி - பொன் காசுகள் கட்டிய கயிற்றினால் கரிய மயிர் முடியின் புறத்தினைக்கட்டி, கரு

941 (இ - ள்) வெண்கோட்டல் தயங்க - வெண்காந்தளின் இலைச்சுருளிலே பச்சையித்தழும் மணமும் உடைய செங்காந்தளின் குளிர்ந்த அழகிய மலரை அணிந்த

வடிந்த காதின் ஒளி விளங்க, திணிகோல் .அணிந்து - திண்ணிய அழகிய நெற்றியின்மேல் பூசிய திருநீற்றின் ஒளியானது கண்டார்து கண்களைக் கொள்ளுதல் நிறைந்து அமைவுபடாத அழகு விளங்கும்படி உடலின்மேல் அணிந்து, கசு

942. (இ - ள்) நிறைந்த தாழ - நிறைவாகத் திருநீற்றினை அணிந்த மார்பி னிடத்து வரிசையாக முல்லையரும்பினைச் சுருக்கி நெருங்கப் புனைந்த மாலை தாழ்ந்து தொங்க, திரள் தோளின் ..அரும்ப - பருத்த தோள்களின் மேல் அணிந்த மாலை யின் பூக்கள் - அவற்றின் மொய்த்து வண்டுகள் பாடிய இசையினால் மலர, அரை உடுத்த . அசைய - திருவரையில் உடுத்த மரவுரியாடையின் புறத்தில் தழை களாலியன்ற அழகிய பட்டுப்போன்ற மேலாடை அழகாக அசைய, கஎ

943 (இ - ள்) வெளிப்படை சிவந்த திருவடியிலே தொடுதோலும், செங்கை யிலே வெள்ளியகோலும் பொருந்திய இசையினைத் தரும் வேய்ங்குழலும் மிக்க விளக் கத்தைச் செய்யத், தமது ஏவலின்படி தொழில் செய்யும் காவல்புரிகின்ற வலிய ஆயர் களும், கன்றுகளோடு கூடிய ஆனிரைகளும் தம்மைச் சூழ்ந்து வரப், பூக்கள் மலர் கின்ற மாலையணிந்த கோவலராகிய ஆனாயர் ஆனிரை காப்பதற்குப் புறம்போந்தனர்

இந்த ஆறு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன

938 (வி - ரை) முந்தைமறை - உபவேதங்கள் நான்கில் ஒன்றாகியது காந்தருவ வேதம் என்னும் இசைக்கலையாதலின் **முந்தைமறை** என்றார். உபவேதங்கள் நான் காவன ஆயுள்வேதம், தநுர்வேதம், காந்தருவவேதம், அர்த்தவேதம் என்பன.

**மறை மொழிந்த மரபின் முறை எழுந்த வேய்**-அதில் விதித்த இலக்கணமமையும் படி எழுந்து வளர்ந்த மூங்கில் " உயர்ந்த ஒத்த நிலத்திற் பெருக வளர்ந்து, நாலு காற்றுமயங்கின் நாதமில்லையாகலான், மயங்கா நிலத்தின்கண், இளமையும் நெடும் பிராயமுமின்றி ஒரு புருடாயுப்புக்க பெரிய மரத்தை வெட்டி, ஒருபுருடாகாரமாகச் செய்து, அதனை நிழலிலே ஆற இடடுவைத்து, திருக்குதல் பிளத்தல் போழ்ந்துபடுதல் செய்கை யறிந்து, ஒரு யாண்டு சென்றபின் இலக்கணவகையான **வங்கியம்** செய்யப் படும்" என்பது அடியார்க்கு நல்லாருரை (சிலப - 3 - அரங்கே - 26) இவ்வுரைக் குறிப்பிற் கண்டவற்றுள் மூங்கிலுக்குப் பொருந்துவன ஏற்ற பெற்றி கைக்கொள் ளப்படும் எனக்

மூங்கிலினால் மட்டும் அன்றிச் சந்தனம், செங்காலி, கருங்காலி வெண்கலம் என் றிவற்றானும் வங்கியம் என்னும் குழற்கருவி செய்யப்படும் என்ப இவற்றுள் மூங் கில் பொழுது செய்யும் என்றும், உத்தமமென்றும் கூறுப இங்கு ஆனாயர் சிறப்புடைய உத்தமமாகிய மூங்கிற் குழற்கருவியினையே கைக்கொண்டனர் என்பது **வேய்** என் றதனாலறிவிக்கப்பட்டது. இதனையே மேல்வரும் பாட்டில் "எடுத்தகுழற் கருவியினில்" என்றும், "இசைவேய்ங் குழலும்" (943) என்றும், "வேய்ங் கருவிகளில்" (947) என் றும் கூறுகின்றார்.

**அந்தம் முதல் நால் இரண்டில்** - அந்தத்தில் நாலில், முதலில் இரண்டில் என்று முறை நிரனிறையாகக் கூட்டிப் பொருள் உரைக்க **அந்தம்** - நுனி, **முதல்** - அடி **அந்தம் - நுனி** என்பது " அந்தாவசிகை ", " ஒரும் வேதாந்தமென்றுச்சியிற் பழுத்த " முதலிய வழக்குக்களாற் காண்க.

**நரம்பு உறுதானம்** - இசை பிறப்பதற்குக் காரணமாய, வீணை, யாழ் முதலியவற் றில் தந்திரிகளையும், குழற்கருவியில் விரல் உளர்துளைகளையும் குறிக்கும் ஆகுபெய ராய் அதனால் எழுப்பப்படும் சுருதிக்கு - இசைக்கு - ஆயிற்று **நரம்பு உறுதானம்** என்பது சுருதி கிளம்பும் இடம் என்ற பொருளில் வந்தது. இதனை மெட்டு என்பது கிராமிய வழக்கு

**தானம் வந்த துளை நிரை ஆக்கி** - முதலில், சுருதி எழுமையும் தானங்களையும் அவற்றிற்குரிய துளை செய்யும் இடங்களையும் வரிசைபெறக் குறித்துக்கொண்டு என்றவாம். இத்துளைகள் ஏழு. "எழுவிர லிடையிட்ட" (948) என்றவிடத் துரைப்பவை காண்க.

**வாயு வழங்கு முதல்துளை** எனக் காற்றுண்டாக்கும் துளை.

**இடையீட்டின் அங்குலி எண்களில் அமைத்து** - துளைகளுக்கு இடைவெளி ஒவ்வோர் அங்குலமாக இருக்கும்படி துளை செய்து 13

939. (வி - ரை) **எடுத்த குழற்கருவி** - (மேற்சொல்லியவாறு) எடுக்கப்பட்ட குழலாகிய கருவி. பருமையும் நீளமும் இலக்கணத்துடனமைந்து, விரலிடையிட்ட விரலுளார்துளையும் ஊதுதுளையுமுடைத்தாயச், சுரபேதங்கள் நிலைகுலையாமல் அளவறுக்கப்பட்டு நின்ற வங்கியம் (சிலப் ந - அரங் - அரும்பதவுரை) தோற்கருவிகள் துளைக் கருவிகளாதியாக எண்ணப்பட்ட இசை இன்னியங்களில் முதன்மை பெற்றதாய **எடுத்துச்** சொல்லப்பட்டது குழல் என்ற குறிப்பும் காண்க. குழலும் யாழும் என்ற இரண்டினையுமே மிகச் சிறந்த இன்னிசைக்கருவிகளாக **எடுத்தும்**, இவ்விரண்டனுள்ளும் குழலே முதன்மை பெற்றதெனச் சிறப்பித்தும் **எடுத்தனர்** நமபெரியோர் "குழலினிது யாழினி தென்ப" என்ற திருக்குறள் காண்க. இவ்விரண்டும் சுரபேதங்களால் இனிய மழலைபோலச் சொற்களின் ஓசையே விளக்கும் தன்மையுடையன என்ப

**தடுத்த சராசரங்களெலாந் தங்க** இசையின் வசப்பட்ட உணர்ச்சி நிறைவினாலே, வேறு வழியிற் செல்லாமற் றடுக்கப்பட்ட சரம் அசரம் ஆகிய எல்லாவுயிர்களும் அந்நிலையிலே தங்கும்படி இதனை 954 முதல் 962 வரை விரித்துக் கூறுவார்

**தம் கருணை அடுத்த இசை அமுது** - தமது கருணை பொருந்திய இசையாகிய அமுது திருவைந்தெழுத்துடன் கூடிய இன்னிசையே இவர்க்குச் சாவா மூவா நிலையையளித்தலால் **அமுது** என்றார் துன்ப உணர்ச்சி நீக்கி இன்ப உணர்ச்சியை எவ்வுயிர்க்கும் ஆக்குதலால் **அமுது** என்றார் என்றலுமாம். இசையினால் பல நோய்களும் நீங்குகின்றன என்பது மருத்துவநூற் றுணிபுகளுள் ஒன்று **கருணை அடுத்த** - இது எல்லாவுயிர்க்கும் பயன்றருவதாக என்னும் தண்ணளி. **தம் கருணை தங்க** - தமது கருணையில் மூழ்கும்படியாக என்றலுமாம்

**அளித்துச் செல்கின்றார் - செல்லுதல்** - பலநாளும் கொடுத்து வந்த வழக்கமுடையராகுதல் குறித்தது செல்கின்றாராகிய கோவலனார் எனக் வினையாலணையும் பெயர். செல்கின்றார் - புறம் போந்தார் (943) எனக்கூட்டி முடிக்க.

அமைத்து - வாசித்து - அளித்து - செல்கின்றாராகிய - கோவலனார் நுழுதி - செருகி - புனைந்து - புறங்கட்டி - ஒளிதயங்க கவின் விளங்க - அணிந்து - தாழ - அசைய - விளங்க - சூழ புறம் போந்தார் என இந்த ஆறுபாட்டுக்களையும் கூட்டி முடித்துக்கொள்க.

**ஒருநாள்** - அஃது ஒப்பற்றநாள் சிவபெருமான் நேரே எழுந்தருளி இவர்க்குப் பேறு கொடுக்கும் பெருந்திருநாள் என்பது குறிப்பு. 14

940. (வி - ரை) **மயிர் நுழுதி**. மயிரைக் கோதி

**உயர்ந்த - சிகழி** உயர எடுத்து முடித்துக் கட்டிய குடுமி.

**செறிகண்ணித் தொடை** - பூக்களை நெருக்கமாகக் கட்டிய கொண்டைமாலை

**பாசிலை புனைந்து** - பசிய இலையுடைய கொடியினை வடமாக முறுக்கி அதில் மிக விரவும்படி நறுவிலிப் பூக்களைப் புனைந்து நறுவிலி இலை என்று கூறுவாருமுண்டு. **நறுவிலி** - முல்லைக் கருப்பொருளாகிய மரம்

**கருஞ்சுருள்** - கரிய மயிர்ச்சுருள் முடிச்சு இதன் புறத்தைக் கொடியின் வடத்தின் அருகே அமையும்படி வைத்துக் காசுடை நாணினால் கட்டி எனக.

**கருஞ்சுருளின் புறம்** எனறதறகுக கரிய சுருணட பசசிலையின வெளிமபு ஓரம் எனபாரு முணடு. 15

941. (வி - ரை) **வெண்கோடல்** - வெணகாநதள **தோன்றி** - செஙகாநதள. இது மணமுடையதாதலின **விரைத் தோன்றி** எனறூா இதனது மிகக செநநிறத தால இதனைத தீபபோலவதென றுபசரிததுக கூறுவதும வழககு " துயிலாரோ யாந தோனறத தோனறிததீத தோனற" (11 ம திருமுறை - திருவாரூா மும்மணிக கோவை - 5) எனற சோமான பெருமாணாயனாரது அழகிய திருவாககுக காணக

**தண் கோலமலர்** - கவினிறற கணகவரும அழகும குளிாசசியும உடைய செங காநதட பூ எனக

**வடிகாது** - கீழததொஙகிய காது **வடிதல்** - தொஙகுதல் வெணகாநத ளிலையைச் சுருட்டி, அதற கிடையில செஙகாநதட பூவினை வைதது, அதனை வடிநத காதில் அணிநதார் எனக. ஆண மககளும வடிகாதுடையாராகுதல முனனுள வழககு.

**காதின் ஒளி** - காதுகளின இயலபாகிய நிறததுடன வெணகாநத ளிலையின நிற மும செஙகாநதளின நிறமுமகூட இமமூனறு நிறஙகளின சோககை விளஙகியதனுல் **காதின் ஒளிதயங்க** எனறூா. **தயங்குதல்** - விளஙகுதல வேயஙகுழலின ஊதிய ஐந தெழுத தினனிசையினை எவவுயிாகளையும கேடபிததது, இறைவாது திருசசெவியி னருகணையப பெருககுதலாலும், அவவாறு பெருககுவதறகுத தாம முனபு கேட்டா லனறி இயலாமையானும அதறகுரிய காதுகளை இபபடிச சிறபபிததாா எனற குறிப புமகாணக கேடடறகுரிய செவிகளைச சிறபபிததமைபறறித "தமபாடல பரமாபாற செலலுமுறை பெறுவதறகுத திருச்செவியைச சிறபபிததது" எனறதும (திருஞா - புரா 75) காணக.

**திண்கோல நெற்றி** - வனமையும அழகும உடைய நெறறி.

**கண்கோடல்** - கணணினைக கொளளுதறறனமை **கண்** - சாதியொருமை.

**கண் கோடல் நிறைந்து ஆராக் கவின்** - கணணைக கவாநது கொளளுதறறனமை நிறைநது மேலும இடஙகொளளாதபடி ததுமபும அழகு

**விளங்க** - விளஙகுமபடி நெறறியினமேல ஒளி விளஙகுமபடி திருநீறறினை மிசை அணிநதாா எனக

**கண்டோர் விளங்க** எனறது நாயனாா புனைநத திருககோல முழுமையும அழகு விளஙகியனவேயாயினும அவறறுககெலலாம மேலாயக, கணடோா கணகள சலிககாமல் கணகொளளாக காடசியாக மேல விளஙகியது திருநெறறியின திருநீறறுப பொலிவு எனறபடி. இது உயிாககுச சாாபாகியுளள மேமபடட சிவசசாாபின விளககமாதலின ஏனை உடற பொலிவுகளின மிககு விளஙகிக, கணடோரை வசீகரிததது எனறதாம. " திகழநத நீறறின உரு " (394) எனறவிடததுரைததவை பாாகக 16

942 (வி ரை) **முல்லைமுகை** முலலை நிலததுக கருபபொருளாகிய பூ, இது மாபுககும உரியதா மெனபா. மாாபின விளஙகுவதாகலின இதனை **முல்லை** எனறு இஙகு விரிததுக கூறினாா முனனாச சிகழிகையிற செறிகணணித தொடையினையும (940), பினவரும தோளினபுடை யலஙகலினையும இனனவெனக கூறுமையும இதன சிறபபுக காடடுதறகாம. **முல்லை நிரைமுகை** எனக **சுருக்கிச் செறிந்த புனைவடம்** என பது முலலைப பூககளை நெருஙகக கோததுப புனையும மாலைவகை **மார்பின் வடம் தாழ** எனறு கூடடுக. **நீறணி மார்பின் முல்லைவடம் தாழ** - மாாபில விளஙகும திருநீற றுப பொலிவினுககு முலலைமாலையின பொலிவு குறைநது காடட எனற குறிபபு மாம முன பாடடில "திருநீறறின ஒளி.. ஆராககவின விளஙக" எனறு கூறியதனைத தொடாநது கூறினாா.

**தோளின்புடை யலங்கல்** - மார்பில் தாழும் முல்லை மாலையின் பக்கத்தே தோளில் விளங்கும்படி அணிந்த வேறு மாலை.

**சுரும்பு அறைந்த இசை அலங்கல் அரும்ப** எனக். **அறைந்த இசை** பாடிய இசையினால், **அரும்ப** மலர், காரணப்பொருளில் வந்த மூன்றனுருபு தொக்கது. அலரும் பருவமுடைய மலர்களால் அலங்கல் தொடுக்கப்பட்டதனால் அம்மலர்களினிடத்துத் தேனுண்ண மொய்க்கும் வண்டுகளின் இசையினால் அவை அலர்ந்தன என்றபடி. **அறைந்த சுரும்பு** எனக் கூட்டி, மோதி வீழ்ந்த வண்டுகள் என்றுரைத்து, அலங்கலில் வீழ்ந்த வண்டுகள் இசைபாட என்று உரை கூறுவாருமுண்டு. **புறம் - பட்டு - போலிந்து** - அசைய எனக்.

**தானை அசைய தானை** - ஆடை. மரவுரியினை இடையில் உடுத்து அதன்மேல் தழையாற் புனைந்த மேலாடை இருபுறமும் தொங்க அணிந்தனராதலின் **அசைய** என்றார். **பூம்பட்டு பூ** - அழகும் மென்மையும் குறித்தது. 17

943. (வி - ரை) **சேவடியில் தொடுதோல் தொடுதோல்** - செருப்பு. முல்லைப் புறவில் ஆனிரை மேய்ப்போருக்குச் செருப்பு இன்றியமையாத சாதனமாம். காட்டில் வேட்டையாடுவோர்க்கும் இவ்வாறே. காண்க கண்ணப்ப நாயனார் சரிதமும் குறிக்க. இந்த இரண்டு நாயன்மார்களும் செருப்புத் தொட்ட கோலத்துடனே ஐயர்மருங்கு அமர்கின்றார்களாவர். அச்சிறப்புக் குறிக்கச் **சேவடி** என்றார்.

**வெண்கோல்** - ஆனிரைகளைச் செலுத்தும் சிறுகோல். "கோலுங் கயிறுங் கொண்டுகுழைக் குடுமி யலைய" என்றது (சண்டேசர் புரா - 25) பார்க்க.

**இசைமேவும்** எனக் இச்சரிதம் இசையினால் பொருந்துவதாம் என்ற குறிப்பும் காண்க. **மிக விளங்குதல்** - இம்மூன்றும் தேற்றம் பெற விளங்கித் தோன்றுதல்.

**வினை செய்யும்** - நாயனாரின் ஏவல் வழித் தொழில் புரிகின்ற. "கோவலரேவல் புரிந்திட" (937) என்றது காண்க. **காவல்புரி** - ஆனிரைப்பகுதிகளைக் காக்கும்.

**ஆயரும் ஆனிரையும் சூழ** எனக் எண்ணும்மைகள் தொக்கன.

**பூ அலர் தார்** முல்லைமுகைவடம் தாழ, அலங்கல் அரும்ப, என முன்பாட்டிற் கூறிய பூக்கள் அலரும் மாலைகள்.

**நிரைகாக்க** - அங்குநின்ற பசுக் கூட்டங்களின் தொகுதியேயன்றிப் பசுவர்க்கம் எனப்படும் எல்லா ஆன்மாக்களையும் இச் சரிதத்தாற் பாசநீக்கிக் காவல்பெறச் செய்ய. திருமூல நாயனார், மூலன் மேய்த்த பசுக்களின் துயர்நீக்கச் செய்த செயல், எல்லாப் பசு வர்க்கங்களும் உய்வதற்குரிய திருமந்திரமாய் விளைந்தசெய்தியும் இங்குக்கருதுக. 18

**வேறு**

944. நீலமா மஞ்ஞை யேங்க நிரைக்கொடிப் புறவம் பாடக்
கோலவெண் முகையேர் முல்லைக் கோபவாய் முறுவல் காட்ட
ஆலுமின் னிடைசூழ் மாலைப் பயோதர மசைய வந்தாள்
ஞாலநீ டரங்கி லாடக் காரெனும் பருவ நல்லாள் கக

(இ - ள்) வெளிப்படை. நீலநிறம் பொருந்திய பெரிய மயில்கள் அகவவும், வரிசையாகிய கொடிகளில் உள்ள வண்டுகள் முல்லைப் பண்ணைப் பாடவும், இந்திர கோபமாகிய வாயினில் வண்ணமுடைய வெள்ளி அழகிய முல்லை யரும்புகள் புன்முறுவல் காட்டவும், அசைகின்ற மின்னலாகிய இடையும் சூழும் மாலைப்பொழுதாகிய முலையும் அசையவும் ஞாலமாகிய பெரிய அரங்கத்திலே ஆடுவதற்குக் கார்காலம் என்கின்ற பருவத்தையுடைய பெண் வந்தனள்.

**(வி - ரை)** இப்பாட்டு முற்றுருவகம். முல்லைத் திணைக்குரிய முதற் கருப்பொருள்கள் பலவும் கோத்துக் கார் என்கின்ற பெண் அரங்கில் ஆடுதற்கு வந்ததாக உருவகம் செய்யப்பட்டது.*

**மஞ்ஞை** - மயில் குறிஞ்சிக்குரிய புள்ளாயினும் முல்லை நிலத்தின் வந்து கூடியதனால் "எந்நில மருங்கிற் பூவும் புள்ளும், அந்நிலம் பொழுதொடு வாரா வாயினும், வந்த நிலத்தின் பயத்த வாகும்" (தொல் - அகத் - 19) என்றபடி இங்கு முல்லைக்குரிய தாயிற்று. கார்காலத்திலும் மாலைப்பொழுதிலும் மஞ்ஞைகள் களித்துக் கூவுதல் இயல்பு. **முல்லை** - இந்நிலத்துக்குரிய பூ. **கோபம்** - கார்காலத்தில் பெருக உண்டாகும் சிவப்பு நிறமுடைய இந்திர கோபம் என்கின்ற தம்பலப்பூச்சி. இது பெரும்பாலும் முல்லைப் புறவங்களிற் காணப்படும். மாலைப்பொழுதும் கார்காலமும் முறையே முல்லைக்குரிய சிறுபொழுதும் பெரும்பொழுதுமாம். "காரும் மாலையும் முல்லை" (தொல். அகத் 6) **ஏங்குதல்** - மயில்கூவும் குரல், அகவுதல் எனப்படும்.

**நிரைக்கோடி புறவம் பாட நிரை** - வரிசை. **கோடி - பாட** - கொடிகளில் மொய்த்த வண்டுகள் பாட. **புறவம்** - முல்லைப்பண். **கோடி** - முல்லைக்கொடிகள் போலும். கொடிவண்டு பாட என்றதைக் கொடிபாட என்றது கட்டில் கூப்பிட்டதென்றாற்போல இலக்கணை என்பர்.

**கோப வாயின் முல்லைமுறுவல் காட்ட** எனக்

**மின் இடையும் மாலைப் பயோதரமும்** எனக் எண்ணும்மைகள் தொக்கன. **மின் இடை அசைய** - மின் மெலிந்து ஒல்கி அசைவதாதலின் இடைக்கு மெய்பற்றி வந்த உவமம். **மாலை அசைய** என்றது மாலைப்பொழுது மெல்லச் செல்லுதல் குறித்தது. ஆடற்பெண்கள் ஆடல் தொடங்க வரும்பொழுது இடைஅசையவும் அதனால் முலையசையவும் ஒதுங்கி மெல்ல நடந்து வரும் இயல்பு காண்க.

**மாலைப்பொழுது ஆகிய பயோதரம்** - எனக். மாலைசூடிய பயோதரம் என்ற குறிப்பும் பட நின்றது காண்க.

**பருவ நல்லாள் - பருவம்** - பெரும்பொழுது எனவும், இளமைப்பருவம் எனவும் இருபொருளும் பட உரைக்க நின்றது. **நல்லாள்** - பெண். **நல்லம்** - கருமையை உணர்த்தப் பழந்தமிழில் வழங்கியதோர் சொல் (சூடாமணி) அது இப்போது தமிழில் வழக்கொழிந்தது. தமிழினின்றும் போந்த தெலுங்கு மொழியில் இப்பொருளில் வழக்கில் உள்ளது. கார் எனும் பெண் என்றதனால் அதற்குரிய கருமை நிறம் குறிக்க **நல்லாள்** என்றார்.

**கார்** எனும் ஆடற் பெண்ணுக்கு, **மஞ்ஞை** ஆடலுக்குத்தக உவகை முழக்குதற் கருவியாக, **கோபம்** வாயாக, **முல்லை**யரும்பு முறுவலாக, **மின்**னும் **மாலை**யும் இடையும் முலையுமாக, **ஞாலம்** ஆடரங்காக - உருவகம் செய்யப்பட்டன. ஆடற்கணிகையார் சிவந்த வாயினிற் புன்முறுவல் காட்டிச் சிறுகுரலாற் பாடி இடையும் முலையும் சிறிதே அசைய உவகை முதலிய மெய்ப்பாடு தோன்ற உரிய அவிநயத்துடன் வருதல் ஈண்டுக் கருதுக.

19

*இப்புராணத்தினுள் ஆசிரியர் அருளிய "முந்தைமுறை" (938) என்ற திருப்பாட்டுத் தொடங்கி, "விண்ணவர்கள்" (966) என்றது வரை ஒரு தொடர்ச்சியாயக் கொச்சகக்கலிப்பாவின் இயன்ற செம்பாகச்சிறப்புடைய **யாப்பின்றொடர்பு** நிலைக்கும், "நிரைகாக்கப் புறம்போந்தார்" (943), "செழுங்கொன்றை மருங்கணைந்தார்" (945), "உடையவர்பால் மடைதிறந்தார் (946) என்று தொடர்ந்து செல்லும் **செம்பொருளின்** றொடர்பு நிலைக்கும் இடையே, இப்பாட்டு **வேற்று யாப்பாக**வும், பொருளில் தொடர்பில்லாத தனித்த **வேற்றுப்பொருளாக**வும் வைக்கப்பட்டது போலக் காணப்படுகின்றது. அன்றியும் ஒருவகை யாப்பினால் சரிதம் சொல்லத் தொடங்கிச் செல

**வேறு**

945. எம்மருங்கு நிரைபரப்ப வெடுத்தகோ லுடைப்பொதுவர்
தம்மருங்கு தொழுதணையத் தண்புறவில் வருந்தலைவர்
அம்மருங்கு தாழ்ந்தசினை யலர்மருங்கு மதுவுண்டு
செம்மருந்தண் சுரும்புசூழ் செழுங்கொன்றை மருங்கணைந்தார்.

**(இ - ள்)** வெளிப்படை. எப்பக்கத்திலும் ஆனிரைகளைப் பரவச்செய்து மேய்ப்பதற்காக எடுத்த கோலினையுடைய இடையர்கள் தம்மருங்கில் தம்மைத் தொழுதுவரக், குளிர்ந்த முல்லைப்புறவினிடத்தில் வரும் தலைவராகிய ஆனாயர் அவ்விடத்தே கீழே தாழ்ந்த கிளைகளில் மலர்ந்த பூக்களில் தேனை உண்டு மிக்க களிப்பினைப் பொருந்துகின்ற குளிர்ந்த வண்டுகள் சுழன்று சூழும் செழித்த கொன்றை மரத்தின் பக்கத்திற் சேர்ந்தனர்.

**(வி - ரை) எம்மருங்கும் ..கோல்** - ஆனிரைகளைப், புலனும் நீரும் உள்ள எல்லாப் பக்கங்களிலும் ஒழுங்கிற் பரவி மேயுமாறு விடுத்துக் காப்பதற்காக எடுத்த சிறுகோல். மேய்விடம் பரவியிருத்தலின் அங்கெல்லாம் ஆனிரைகளைப் பரப்பினர் எனபார் **எம்மருங்கும்** என்றார். **கோல்** - ஆனிரை காப்போர் கையிற் கொள்ளும் சிறுகோல் "வெண்கோலும்" (942) என்றது காண்க.

**பொதுவர்** - இடையர். **தொழுது அணைய** ஏவல்புரி கோவலர்களாதலின் தலைவராகிய ஆனாயரைத் தொழுது அணைந்தனர் என்க.

**செம்மரும்** - மிக்க களிக்கும் **செம்மா** - பகுதி. "சீரார் பாட லாட லறாத செம்மாப்பார்ந்து" (குறிஞ்சி - திருவாரூர் - 10) என்ற அப்பர்சுவாமிகள் தேவாரம் முதலியவை காண்க. இங்குச் **செம்மருதல் மதுவுண்ட**மையா லாயிற்றென்றார். வண்டுகளுக் கியல்பாகிய ஆனந்தமுங் கூடிற்றென்க.

**தண்சுரும்பு** - பிற மூயற்சிகளிற் காய்ந்து சூடுண்ட புலன்களுக்குக் குளிர்ந்த - குளிர்ச்சி தருகின்ற - இசையினை ஊதுதலால் **தண்** என்றார். "குளிர்ந்தூதாய் கோத்தும்பீ" என்ற திருவாசகமுங் காண்க.

தாழ்ந்த கொன்றைமரக் கொம்பில் அலர்மது வுண்டு செம்மாப்பு ஆர்ந்து பாடிச் சுழலும் சுரும்பானது, இசையின் விளையும் "ஆனந்தத் தேனிருந்த பொந்து", "ஆனந்தத் தேன்சொரியும் குனிப்புடையான" (திருவாசகம்) என்றபடி சிவானந்தத்தை நாயனார்க்கு அங்கு நினைவூட்டிற்று; ஊட்டவே அவர் அக்கொன்றையினைச் சடையாரும் நிலையில் இவ்வாறு ஒரு பாட்டினை இடையீடுபட வேறு யாப்பினுலை இணைத்தல் ஆசிரியர் மரபும் அன்று மேலும் முன்னும் பின்னும் தொடர்ந்த பொருட்பொருத்தமின்றி, இப்பாட்டு இல்லாமலே சரிதம் தொடர்ந்து செல்லும் நிலையும் காணக்கிடக்கின்றது இன்னும் ஆசிரியரது திருவாக்குக்கே உரிய செம்பொருட் சிறப்புக்களாகிய அடையாள முத்திரைகள் ஒன்றும் இதிற் காணப்படவில்லை இஃதன்றியும் ஆனிரை காக்கப் புறம்போவார் மாலைப்போதிற் போவதும் வழக்கில் இல்லை. இன்னோரன்ன தோற்றங்களால் இஃது ஆசிரியரது திருவாக்கலாத இடைச்செருகலாக இருக்கக்கூடுமோ என்ற ஐயம் மிக அச்சப்பாட்டுடன் தோன்றுகின்றது மேலும் இந்நாயனார் கார்த்திகை மாதத்தில் அத்தநாளன்று திருவடிப்பேறு பெற்றார் என்று கூறப்படுதலின் அது கார்காலமல்லாமையும் உணர்தற்பாலது கொன்றை காரில் மலர்வதாமே எனின் இங்குக் காயும் கனியும் உடன் கண்டதாக (945)க் கூறப்படுதலின் அது அருகிப் பூக்கும் முன்பனிக்காலமாதல் வேண்டுமென்ப

**இதுபற்றி** என்து "சேக்கிழார்" என்ற நூலில் 214 வது பக்கத்தில் உரைத்தவையும் பிறவும் பார்க்க.

ராகிய உடையாராகக் கண்டு அவர்பால் இசையின் மடைதிறந்தார் என்ற குறிப்பும் காண்க. 20

946. சென்றணைந்த வாறுயர் செய்தவிரைத் தாமமென
மன்றனமலர்த் துணர்தூக்கி மருங்குதாழ் சடையார்போல்
நின்றதொரு கொன்றையினை நேர்நோக்கி நின்றுருகி
யொன்றியசிந் தையிலன்பை யுடையவர்பா லன மடைதிறந்தார். உக

(இ - ள்) சென்று ஆறுயர் - சென்று சேர்ந்த ஆறுயர், செய்த விரைத்தாமம் என - கையாற்றொடுத்துச் செய்யப்பட்ட மணமுடைய மாலைபோல, மன்றல் தூக்கி - மணம் பொருந்திய மலர்களாகிய கொத்துக்களைத் தொங்கவிட்டு, மருங்கு சடையார்போல் - பக்கங்களிலே தாழ்ந்து விளங்கும் சடைகளையுடைய சிவபெருமானைப்போல, நின்ற உருகி - நின்ற மணமுடைய கொன்றை மரத்தினை நேராக நோக்கி, நின்று, மனமுருகி, உடையவர்பால் ஒன்றிய சிந்தையில் அன்பை மடை திறந்தார் தம்மையுடையவராகிய சிவபெருமானிடத்தில் ஒன்றுபட்ட மனத்தினின்றும் எழுகின்ற அன்பின் மடையைத் திறந்தனர்.

(வி - ரை) செய்த விரைத்தாமம் செய்த - தொடுக்கப்பட்ட செய்தத்தாமம் விரைத்தாமம் என்று பிரித்துரைத்துக்கொள்க "கொத்தி னிறபொலி கொன்றை கொடுக்கிலே" என்றபடி இங்குக் கொன்றை மலர்கள் இயல்பாகவே கொத்துக்களாகிய அடுக்காய் நீண்டு தொங்குதல், தொடுக்கப்பட்ட மலர்மாலைகள் போன்றது என்றார். உருவுபற்றி வந்த உவமம்

மலர்த்துணர் தூக்கி என்றது பூங்கொத்துக்கள் மாலை அணிந்ததுபோல (மேலே தொங்க) நிற்றல் குறித்தது

மருங்குதாழ் சடையார் போல் - தாழ்சடையார் - சிவபெருமான். கொன்றையின் உருண்ட நீண்ட கனிகள் சடைபோன்றன என்பது கருத்து "மாலையின் றுங்குருவே போலுஞ் சடைக்கற்றை" (அற்பு - அந் 65) என்ற அம்மையார் திருவாசகுக் காண்க அதன் முன்னர், "சடைமேலக் கொன்றை தருகனிகள்" (50) என்ற திருப்பாட்டில் உமைஅம்மையாரது நீலக்குழலானவை கொன்றைக் கனிகள் சடைமேல் விளங்குவன போன்றன என்ற கருத்தும் காண்க 220ல் உரைத்தனவும் பார்க்க

நின்றதொரு கொன்றை மலர்களாகிய கொன்றை மாலையும், கனிகளாகிய சடையும் தாங்குதலால் சிவபெருமானது திருவுருவம் திகழ நின்றதாகிய ஒரு கொன்றை எனக ஒரு - ஒப்பற்ற தன்மை கொன்றை மாலையும் சடையும் சிவபெருமானுக்குரிய திருவடையாளங்கள்

நேர்நோக்கி - கழியக்காணுது கண்ணெதிரே கண்டு தமதுள்ளத்துக் கண்ட தாழ்சடையார் போலவே புறத்தே கண்ட கொன்றை காணப்பட்டது எனக "நித்த ஞாதிலலை மனறுணின ருடல நீடிய கோலநோ காட்ட" (ஏயர்கோன் - புரா - 89) என்றது காண்க நோக்குதல் - ஊன்றிப்பார்த்தல்

நேர்நோக்கி நின்று உருகி ஒன்றிய சிந்தை - முதலில் கொன்றை மலர்த்துணரும் கனியும் கண்டார் அவரது மனம் மொழி மெய் என்ற மூன்றும் சிவனையே பற்றியிருப்பனவாதலின் முன்னே காணும் கொன்றையும் உள்ளே காணும் சிவனுருவமும் நேராக நோக்கினார், அந்நோக்கத்தில் அழுந்தியவராகி, ஆனிரை காக்கப் போந்த செயலை மறந்து நின்றார், அதன்பின் மனம் உருகினார், உருகியதன் பயனாகச் சிந்தை உடையவரிடத்து ஒன்றியவராயினார் என முறையே கண்டுகொள்க.

**மடைதிறந்த**லாவது சிறைபபட்ட நீரினை மடை திறந்து அதன வழியே வெளி யில விடுமபோது அது பெருகியும் மிக விரைந்தும வருவதுபோல, உள்ளிருந்த வேக மாய வெளிவருதல. உடையவா, அனபருளம் புகுதறகும இங்ஙனமே " சிறைபெறு நீர்போற சிந்தைவாயப் பாயுந திருபபெருந் துறையுறை சிவனே" (திருவாசகம்) என்று உவமை கூறுவதும காண்க அஃதாவது அனபின பெருககு உளளே யடங்கியிருகக மாட்டாது வெளிபபடுதல.

**ஒன்றிய சிந்தை** - வேறு பிரிததுணரமாட்டாது ஒன்றாந தனமையிற பட்ட மனது " ஒன்றி யிருந்து நினைமினகள " முதலிய திருவாககுக்கள காண்க. இது பறறி முன்னுரைததவையும பாாகக.

இப்பாட்டினுள் விரைததாமம - மனறனமலா என இரணடு மணம வைததார். இவறறுள் முதலில **விரை** எனறது ஐமபுலனகளில நாறறம எனற வாயிறகாட்சி யுணாசசியினையும, பின **மன்றல்** எனறது அதனை உணணினற சிவககாட்சியுடன இணைததுக கணட தனவேதனைககாட்சி யுணாசசியினையும குறிததன.

காாககொனறை பொதுவாக எலலா நெஞ்சையும கவரும ஆறறல் வாயநதது என்றும, சீவகரணஙகள சிவகரணஙகளாக மாறபபெறறவராயும, எலலாவறறையும சிவ மாகப பாாககும நிலை யெயதியவராயும உள்ள ஆனாயருககுக கொனறை சிவமாகவே தோனறலாயிறறு என்றும, பககுவப்பட்ட உயிாகளுககு இயறகை சிவமாகத தோனறு வது இயலபு என்றும இஙகு விசேட உரை காணபாருமுணடு காாகாலதது நிறைய மலாநத கொனறை பொதுவாக யாவா நெஞ்சையும கவாவதெனபது உணமை. அஃது ஐமபொறிகளிற, கணணுகிய இநதிரியததின வாயிறகாட்சி மட்டுமாய் ஒழி வது. அது வேறு ஆனாயா இஙகுக கொனறையைச சடையாராகக கண்ட காட்சி வேறு. இது வெறும இநதிரியக காட்சியாயக கழியாது. அனறியும சீவகரணங்கள் சிவகரணஙகளாக மாறபபெறறதனுலோ அனறி எலலாவறறையும் சிவமாகப பாாககும நிலை யெயதியதனுலோ உணடாயதும அனறு எனக. இயறகைததோறறம எனபதும அதுவே சிவததோறறம ஆம எனபதும உணாின ஒரு தோறறமேயாம. உணமையால் நோககுஙகால சிவனது ஆணையால், இயறகைப் பொருளாகிய மாயையினினறும தோற றிய ஆககபபொருளே உலகம. அதினினறும தோனறும விகாரஙகளே நோககி அது விகாரமினறி நினறழிதலபறறி, உபசாரமாக இயறகை எனபபடும. இயறகை என்ற தனிபபொருள இலலை. சிவனது ஆணையே உலக இயறகைப பொருள என்பது சாததிரம ஆனாயா முககரணஙகளாலும சிவனடியலலது வேறு பேணுதாா (934), அவவாறு பேணும செயலினைத திருவடியனபுறு கானததின குழல வாசனையேயாக மேறகொணடாா (937), அதனபடி ஐநதெழுததினைச சுருதி பெற வாசிததுச சரா சரஙகளுககுத தம கருணை தஙகும இசையமுது அளிததுவருவாராயினர் (939); இவவொழுககததின முதிாசசியினுலே மலாநத கொனறையின காட்சியும தாம எப் போதும உளளே வைததுக கணட சிவககாட்சியும ஒனறுயிறறு, அது முதிாநது உள ளடஙக மாட்டாது இசைவெளளமாகப பாநதது எனபதாம. 21

947. அன்பூறி மிசைபபொஙகு மமுதவிசைக குழலொலியால்
வனபூதப் படையாளி யெழுததைநதும் வழுத்திததாம
முனபூறி வருமளவின் முறைமையே யெவவுயிரும
என்பூடு கரைந்துருககு மின்னிசைவேயங கருவிகளில், உஉ

948 எழுவிர லிடையிட்ட வினனிசைவங கியமெடுததுத
தாழுமலா வரிவண்டு தாதுபிடிப பனபோலச்

சூழுமுரன் றெழுகின்று தூயபெருந் தனித்துளையில்
வாழியநந் தோன்றலார் மணியதரம் வைத்தூத, உரு

949. முத்திரையே முதலனைத்து முறைத்தானஞ் சோதித்து
வைத்ததுளை யாராய்ச்சி வக்கரனை வழிபோக்கி
யொத்தநிலை யுணர்ந்ததற்பின் னொன்றுமுதற் படிமுறையாம்
அத்தகைமை யாரோசை யமரோசை களினமைத்து, உச

950. மாறுமுதற் பண்ணின்பின் வளர்முல்லைப் பண்ணாக்கி
யேறியதா ரமுமுழையுங் கிழமைகொள விடுந்தானம்
ஆறுலவு சடைமுடியா ரஞ்செழுத்தி னிசைபெருக்கக்
கூறியபட் டடைக்குரலாங் கொடிப்பாலை யினிநிறுத்தி, உரு

951. ஆயவிசைப் புகலனைத்து னமைந்தபுகல் வகையெடுத்து
மேயதுளை பற்றுவன விடுப்பனவாம் விரனிரையிற்
சேயவொளி யிடையலையத் திருவாள னெழுத்தஞ்சுந்
தூயவிசைக் கிளைகொள்ளுந் துறையஞ்சின் முறைவிளைத்தார், உசு

952. மந்தரத்தும் மத்திமத்துந் தாரத்தும் வரன்முறையாற்
றந்திரிகண் மெலிவித்துஞ் சமங்கொண்டும் வலிவித்தும்
அந்தரத்து விரற்றொழில்க ளளவுபெற வசைத்தியக்கிச்
சுந்தரச்செங் கனிவாயும் துளைவாயும் தொடக்குண்ண, உஎ

953. எண்ணியநூற் பெருவண்ண மிடைவண்ணம் வனப்பெனனும்
வண்ணவிசை வகையெல்லா மாதுரிய நாதத்தில்
நண்ணியபா ணியுமியலுந் தூக்குநடை முதற்கதியிற்
பண்ணமைய வெழுமோசை யெம்மருங்கும் பரப்பினார். உஅ

947. (இ - ள்) வெளிப்படை அன்பினில் உள்ளே ஊறி மேலே பொங்கும் அமுதமாகிய இசையினைத் தருகின்ற குழல் ஒலியினாலே, வலிய பூதகணப்படையை ஆளும் சிவபெருமானுடைய திருவைந்தெழுத்தையும் அதித்துத், தாம் முன்பு ஊதி வரும் அளவின் முறைமைப்படியே, எவ்வுயிர்களையும் எலும்பும் உள்ளே நைந்து உருக்கவல்லதாகிய இனிய இசை தரும் வேய்ங்குழற் கருவிகளில், உஉ

948. (இ - ள்) வெளிப்படை ஏழு விரல்கள் இடையிடுபட்ட துளையிட்ட இன்னிசை வங்கியத்தை எடுத்து, தாழ்கின்ற மலர்களில் வண்டுகள் தாது பிடிப்பதுபோலச், சூழ் துளைகளிலும், மூரலுதலும், எழுதலும், நிறலும் செய்து, தூய பெரிய தனித் துளையில், வாழியாகிய நமது தோன்றலார் அழகிய அதரத்தை வைத்து ஊத, உரு

949. (இ - ள்) முத்திரையே சோதித்து - முத்திரைத் துளை முதலாக முறையாகிய தானங்களை ஆராய்ந்து, வைத்ததுளை போக்கி - இசை நூல்களில் விதித்த அளவில் அமைத்துவைத்த ஏனைத் துளைகளை ஆராய்ச்சி செய்வதாகிய வக்கரனையின் வழிப்பட விரல்களை முறையிற் போக்கி; ஒத்தநிலை உணர்ந்ததற்பின் - இசையொத்த திருத்தலை அறிந்துகொண்ட பின்னர், ஒன்று முதல் படிமுறையால் - சட்சம முதல் நிடாதமவரைக்கும் வரிசையாக; அத்தகைமை அமைத்தார் - அத்தன்மையாக எச்சும் தகும் ஆகிய ஓசைகளில் அமைத்தருளி, உச

950. (இ - ள்) மாறுமுதற் பண்ணின்பின் - மாறிவரும் சுரங்களையுடைய குறிஞ்சிப் பண்ணின் பின்னே, வளர்முல்லைப்பண் ஆக்கி - வளரும் முல்லைப் பண்ணினை

ஆக்கி, ஏறிய தாரமும் உழையும் - பாலையாழ்க்கமைந்த தாரமும் உழையும்; கிழமை கொள் இடம் தானம் - கிழமைகொள்ளும்படி இடுகின்ற தானங்களில்; ஆறு . பெருக-கங்கையாறு உலவுதற் கிடமாகிய சடைமுடியுடைய சிவபெருமானது திருவைந்தெழுத்தின் இசை பெருகும்படி, கூறிய பட்டடைக் குரலாம் - சொல்லப்பட்ட இளியைக் குரலாகவுடைய, கொடிப்பாலையினின் நிறுத்தி - கொடிப்பாலையில் நிறுத்தி,

951. (இ - ள்) ஆய.. நான்கின் - உளவாகிய இசையின் புகல் நான்கினிலும்; அமைந்த...எடுத்து - கொடிப்பாலைக் கமைந்த கூறுபாடாகிய திறத்தினை எடுத்து, மேய. நிரையில் - சுரம் எழும்பும் ஏழு துளைகளில் விரல்களைப் பொத்துவதும் விடுப்பதுமாகிய வரிசையின் செயல்களினாலே, சேய ஒளி இடை அலைய - இசையின் செவ்விய ஒளி இடையிலே சஞ்சரித்து விளங்க, திருவாளன் எழுத்து அஞ்சும் - சிவபெருமானது திருவைந்தெழுத்தும், தூய இசைகளைக் கொள்ளும் - தூய்மையான இசையின் ஏற்ற பகுப்பினைக் கொள்கின்ற, துறை அஞ்சின் முறை விளைத்தார் - ஐந்து துறைகளின் ஏற்ற முறையினை விளைவித்தாராகி, ௨௬

952. (இ - ள்) மந்தரத்தும் மத்திமத்தும் தாரத்தும் - மெலிவு சமன் வலிவு என்ற மூவகைச் சுருதியிலும், தந்திரிகள் .வலிவித்தும் - சுரத்தானத்துக்குரிய துளைகளை முறையே மென்மையாகவும் சமமாகவும் வன்மையாகவும் பொத்தி, அந்தரத்து . இயக்கி - இடையிட்ட துளைகளை உரிய அளவு பெறும்படி அசைத்தும் இயக்கியும், சுந்தரம். தொடக்குண்ண - அழகிய சிவந்த கனி போன்ற அதரமும் குழலின் துளைவாயும் ஒன்றுபட்டுக் கூடி யிணங்க, ௨௭

953 (இ - ள்) எண்ணிய எல்லாம் - இசை நூல்களில் அளவுபடுத்திய பெருவண்ணம், இடைவண்ணம், வனப்பு என்கிற இசைவகைகள் எல்லாம் மதுரத்தையுடைய நாதத்தில், நண்ணிய பாணியும் - அமைந்த தாளமும், இயலும் - இசையும், தூக்கும் - தூக்கும், நடைமுதற்கதியில் - நடை முதலிய கதிகளுடன், பண்ண பாடபினா-பண் பொருந்த எழுகின்ற ஓசையை எல்லாப் பக்கங்களிலும் பரவச்செய்தார். ௨௮

இந்த ஏழு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

947. (வி - ரை) **அன்பு ஊறி** - அன்பினில் உள்ளூறி. **இசை அமுது** எனக். உருவகம் முன்னரும் இசையமுது (939) என்றார் ஆண்டுரைத்தவை பார்க்க.

**குழல் ஒலியால் தாம். முன்பு ஊதிவரும் அளவில்** முன்பு - இந்நாளினுக்கு முன்னாட்களில், **ஊதிவரும் அளவின் முறைமையே** - நியதியானபடி அம்முறையிலே. அந்த அளவும் முறையும் 939ல் கூறினார்

**எவ்வுயிரும்.. இன்இசை** - முன் இதனைத் "தடுத்த சராசரங்களெல்லாந் தங்க வரும் தங்கருணை அடுத்த இசையமுது" (939) என்றார் ஏனை இசைகள் யாவும் செவிப்புலனுக்கு விடயமாய் அம்மட்டில் மனத்தினுற் கொள்ளப்பட்டு ஓசை யின்பத்தை விளைத்து ஒழிவன. இந்த இசை அவ்வாறொழியாது உயிரினுக்கும் சிறந்த நன்மையாகிய இன்பந் தரத்தக்கதாய் மனத்தினையும் கடந்து உயிரினுட் புகுவது, எலும்பையும் கரையச்செய்து உருக்குவதாகும் என்பது இதனை மேல் 961, 962ல் முடித்துக் கூறுவதும் காண்க. இது உயிர்க்கு உறுதி தரும் திருவைந்தெழுத்தினை உள்ளுறையாகக் கொண்டமையே இச்சிறப்புக்குக் காரணமாம்

**வேய்ங்கருவிகளின்** பலவகைப்பட்ட மூங்கில்களினால் செய்யப்படும் பலவகைப்பட்ட இசைக்கருவிகள் பலவற்றுள்ளும் தேர்ந்தெடுத்த குழல் எனக். கருவிகளில் - இன்னிசை வங்கியம் எடுத்து என வரும்பாட்டுடன் கூட்டி முடிக்க. 22

948. (வி - ரை) **ஏழுவிரல் இடை இட்ட** இடையிடையே ஒவ்வொரு விரற்கிடை அளவாக இடம் விட்ட எடுத்துளைகளையுடைய.

**இன்இசை வங்கியம்** - இனிய இசையைப் பெருக்கும் குழல். **வங்கியம்** குழலின் மரபுப்பெயர். வங்கியம் - வங்கிசம் - வம்மிசம் என்பன வம்சியம் என்னும் ஒரு சொல்லின் திரிபு வழக்குக்கள். கிழங்காகிய ஒரே வம்மிசத்திலிருந்து புடைத்துக் கிளைத்துத் தோன்றுவதனால் மூங்கிலுக்கு வம்சம் என்ப பெயர் வழங்குவதாயிற்று. வம்சத்தினின்றும் ஆயது வம்சியம்; அது தமிழில் வங்கியம் என்று திரிந்து நின்று, "எண்ணெய்" என்பது போல, ஏனையவற்றிற் றோன்றும் கருவிகட்கும் பெயராயது என்ப. இது நிகண்டினும் எடுக்கப்பட்ட பெயர். குழலுக்கு மூங்கில் உத்தமம் என்பர். "குழல் - **வங்கியம்** அதற்கு மூங்கில், சந்தனம், வெண்கலம், செங்காலி, கருங்காலி, என ஐந்து மாம். இவற்றுள் மூங்கிலிற் செய்வது உத்தமம்" என்பது அடியார்க்கு நல்லார் உரையிற் காணப்படும். இதுவே உத்தமமாதலின் மூங்கிலின் பெயராகிய வங்கியம் என்பதே குழலுக்கு மரபுப்பெயராய் வழங்கலாயிற்று.

**புல்லாங்குழல்** என்ற பெயரும் இப்பொருளினையே குறிக்கும். **புல்** என்ற வகுப்பிற்பட்ட தாவரப் பொருளால் ஆகிய குழல் என்பது பொருள் (புள்ளாங்குழல் என வழங்குவது தவறாகிய மரூஉவழக்கு). தாவரங்களில் காழ்த்த பாகம் வெளியே யிருப்பதால் மூங்கில்வகை புல் என்ற இனத்தைச் சேர்ந்தது என்பர். "புறக்கா ழனவே புல்லென மொழிப" என்பது தொல்காப்பியம் (மரபியல்).

**வங்கியம்** - "இதன் பிண்டியிலக்கணம் - நீளம் இருபது விரல், சுற்றளவு நாலரை விரல். இது துளையிடுமிடத்து நெல்லரிசியில் ஓர் பாதி மாணிறுத்திக் கடைந்து வெண்கலத்தாலே அணைசுபண்ணி இடமுகத்தை யடைத்து வலமுகம் வெளியாக விடப்படும் .. இனித் துளை யளவிலக்கணம் - அளவு இருபது விரல். இதிலே தூப முகத்தின் இரண்டு நீக்கி முதல்வாய் விட்டு, இம் முதல்வாய்க்கு ஏழங்குலம் விட்டு வளைவாயினு மிரண்டு நீக்கி நடுவினின்ற ஒன்பது விரலினும் எட்டுத் துளையிடப்படும். இவற்றுள் ஒன்று **முத்திரை** என்று நீக்கி, நின்ற ஏழினும் ஏழு விரல் வைத்து ஊதப்படும். துளைகளின் இடைப்பரப்பு ஒரு விரலகலம் கொள்ளப்படும்." (அடியார்க்கு நல்லாருரை - சிலப் - அரங் - ஆய்ச)

**ஏழுவிரல் வங்கியம்** - மேலே கூறியபடி ஒன்பது விரலினும் ஒவ்வோர் விரலிடையிட்டு எட்டுத் துளைகளிடப்படுவனவாயினும் ஏழு துளைகளிற் செய்யும் தொழிற்பாட்டின் ஏழிசையும் பிறக்குமாதலானும், இது குழலின் சிறப்பியல்பாதலானும் **ஏழு விரலிடையிட்ட - வங்கியம்** என்றார். ஏழு விரலாவன - இடக்கைப் பெருவிரலும் சிறுவிரலும் நீக்கி மற்றை மூன்று விரலும், வலக்கையிற் பெருவிரலொழிந்த நான்கு விரலுமாம். துளைகள் ஏழினும் ஏழு விரலும் முறையே வைத்து வாசிக்க இவற்றுளே ஏழிசையும் பிறக்கும்; ஏழு துளையினும் ஏழிசையும் எழுத்தாற் பிறக்கும். அவ்வெழுத்தாவன ச ரி-க-ம-ப-த-நி என்பனவாம் எனவும், இவ்வேழெழுத்தினையும் மாத்திரைப்படுத்தித் தொழில் செய்ய இவற்றுளே ஏழிசையும் பிறக்கும் எனவும், இவ்வேழிசையாவன . சட்சம், இடபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம், தைவதம், நிடாதம் என்பனவாம் எனவும், இவற்றுளே தமிழ்ப் பண்கள் பிறக்கும் எனவும் கூறுப * வீணையில் நரம்பு தெறித்தலினுள்ளதாதல்போலக், குழலினுள் விரற்றொழில்

*இக் குறிப்புக்களும், மேல்வருவனவும் பெரும்பாலும் அடியார்க்கு நல்லார் உரை (சிலப். அரங் ஆய்ச)யினைத் தழுவி எழுதப்பட்டன. விரிவுகள் ஆண்டும், இன்னும் விரிந்த இசை நூல்களுள்ளும் கண்டுகொள்க. இவ்வாராய்ச்சியில் வல்லுநராகிய இமயமால்வரை ஸ்ரீமத் விபுலானந்த அடிகள் அவ்வுரைக் குறிப்புக்களிற் சில பகுதிகள் விசாரிப்பிற் றிருத்தி யமைத்துக் காணப்படவேண்டுமென் றறிவித்ததனோடு, தமது ஆராய்ச்சியிற்பட்ட குறிப்புக்களை எழுதி யனுப்புவதாகவும் அன்புடன் வாக்களித் தருளியுள்ளார்கள். அவை கிடைப்பின், பின்னர்ச் சேர்க்கையாகப் பதிப்பிக்கப்படும்.

வகையினால் எழிசையும் பிறத்தலால் விரலினை முதலில் எடுத்தோதி **ஏழு விரலிடை யிட்ட வங்கியம்** என அத்தன்மைபற்றிக் குழலினைக் கூறினார். இதுபற்றியே "மேய துளை பற்றுவன விடுப்பனவாம் விரனிரையில்" (951) எனவும், "விரற்றொழிலக ளளவுபெற வகைத்தியக்கி" (952) எனவும் பின்னர் விரித்துக் கூறுவார்.

**தாழுமலர் நின்று - தாழும்**-மேலிருந்து பாய்ந்து தாழும். விரும்பும் என்றலுமாம். **வண்டு தாது பிடிப்பனபோலச் சூழுமூரன் றெழு நின்று** என்றது மலர்களில் வண்டுகள் மொய்த்து அவற்றின் தேன் உண்ணவும், தாதுக்களை எடுத்துச் செல்லவும் சூழும் மூரலுதல், எழுதல், நிற்றல் என்ற செயல்கள் செய்தலைக் குறித்தது. **தாது** - மகரந்தம். **தாது பிடித்தல்** என்பது தாது நுண்பொடிகளை ஏற்றபடி எடுத்துக் குழைத்துச் சேர்த்துக்கொண்டுபோதல் தாதுப் பொடிகளினால் வண்டுகள் தமது தேன் கூடுகளை அமைக்கும் என்ப. அதன் பொருட்டுத் தாதுத் தூள்களை ஒவ்வொன்றாக மலர்களின் கேசரங்கள் என்ற பூந்தாள்களினின்று எடுத்து ஒன்றுதிரட்டிக்கொண்டு செல்வதற்கு உரிய கால அளவுவரை வண்டுகள் பல மலர்களையும் சூழ்ந்து மூரன்றும், எழுந்தும், நின்றும் தொழில் செய்யும் இத்தொழில்களாற் பலதிறப்பட்ட சுரங்கள் போன்ற ஓசை எழும்பும். ஆதலின் இங்கு இதனை உவமை கூறினார் வினைபற்றிவந்த உவமம் **மூரலுதல்** - ஊதுதல். இது தாதுக்களைப் பூந்தாள்களினின்றும் பிரித்தெடுத்தற்கும் உதவும் **பிடிப்பனபோல** - ஊத என்று கூட்டுக இதனால் விரலுளர்துளை ஏழின் றொழில் கூறினார்.

**தூய பெருந் தனித் துளை** - இதனை முத்திரை என்பர் நாயனாரது மணியதரம் வைத்து ஊதப்பெற்றமையால் தூய (துளை) என்றும், ஏனைத்துளைகளினும் பெரிதாதலின் பெருந் (துளை) என்றும், அவற்றினின்றும் தனியே அமைக்கப்படுதலின் **தனித்** (துளை) என்றும் கூறினார் **வாழிய** - வாழும்பொருட்டு 273 பார்க்க இவரது இசை உயிர்களை வாழ்வித்தல் 939, 961, 962ல் கூறப்பட்டன **தோன்றல்** - தலைவர். நாயனார் என்ற சொற்பொருளை நினைவூட்டுவார் **நம் தோன்றலார்** என்றார் ஆயர்தலைவர் என்றலுமாம் 937, 943 பார்க்க. **மணியதரம்** - அழகிய உதடு **தனித்துளையில் - வைத்தூத** என்ற இதனால் ஊதுதுளையின் றொழில் கூறினார்.

**தாவிப் பிடிப்பன**—என்பதும் பாடம் 23

949 (வி - ரை) **முத்திரையே .. சோதித்து - முத்திரை** - வளைவாயக் கடுத்த எட்டாவது துளை **முறைத்தானம் - அனைத்தும்** எனக் **முறைத்தானங்களாவன** முத்திரை நீக்கிச் சுரங்கள் பிறக்கும் ஏனை ஏழு துளைகள்

**வைத்த துளை** - ஏற்ற கருவியும் துளைகளும் இசைநூலிலக்கணப்படி அமைதலைத் தெரிந்து இட்ட துளைகள். 938ல் விரித்தபடி அமைத்த துளைகள் எனக

**ஆராய்ச்சியாகிய வக்கரனை** எனக **வக்கரனை வழிபோக்கி** சோதனை செய்ய விரல்களை முறையே செலுத்தி. **வக்கரனை** - எல்லா இராகங்களும் குழலின் ஆறு துவாரங்களாலேயே உண்டாகும்படி விரல்களை முறையே செலுத்திச் சமஞ்செய்து சோதித்தல் இசைநூல் மரபுப்பெயர் **வழிபோக்குதல்** - சுரங்களின் வரிசைபெற விரல்களை முறையே மெலிந்தும் சமஞ்செய்தும் வலிந்தும் பொத்துதல்.
இதனைப் "பற்றுவன விடுப்பனவாம் விரனிரையில்" (951) என்பது காண்க.

**ஒத்தநிலை** - அவைகள் ஒத்து நிகழும் நிலைமை. இசைமாறுபடாமல் ஒத்திருத்தல்

**ஒன்று முதல் படிமுறை** - சட்சம முதல் நிடாதம் வரை உள்ள ஏழு சுரங்களின் படிமுறையாகிய வரிசை. முத்திரைக்கடுத்ததுளை சட்சம, அதற்கடுத்தது இடபம, அதற்கடுத்தது காந்தாரம, அதற்கடுத்தது மத்திமம, அதற்கடுத்தது பஞ்சமம, அதற்கடுத்தது தைவதம, அதற்கடுத்தது நிடாதம் என்னும் படிமுறை கொள்ளப்படும் இசைகள் பிறக்குமிடத்துத் தாரத்தில் உழையும், உழையிற் குரலும், குரலில் இளியும்,

இளியுள் துத்தமும், துத்தத்தில் விளரியும், விளரியுள் கைக்கிளையும், கைக்கிளையுள் தாரமும் என ஒன்றினின்றொன்று பிறக்கும் என்னும் படிமுறையும் கொள்ளப்படும்

**ஆரோசை - அமரோசை** - எச்சு - தக்கு என்னும் ஓசை வேறுபாடு. ஏற்றுதல் - இறக்குதல், ஆரோகணம் அவரோகணம் - என்றும் கூறுவர்

**வக்கரனை - படிமுறையாம் - அமைத்தார்** - என்பனவும் பாடங்கள் 24

950 (வி - ரை) **மாறு முதற்பண்** ஐந்திணையினுள் முதலில் வருவது குறிஞ்சியாதலின் **முதற்பண்** என்பது குறிஞ்சிப்பண்ணைக் குறித்தது, **மாறும்** என்றது அப்பண்ணிற்குரிய சுரங்கள் மாறிவருவது குறித்தது. **பண்ணின் பின்** என்று பாடங்கொண்டு முதலில் விஷமமாகப் பாடின பின்பு என்றுரைகூறுவாரு முண்டு. இப்பொருளில் **மாறு** - விஷமம் இது பாடுதலின் ஒரு பேதம் என்பர் இராமநாதச் செட்டியார்

**வளர்முல்லைப்பண் ஆக்கி** - முல்லைக்குரிய பண்ணைச் செய்து. இத்திணைக்கும் நிலத்துக்குமுரிமை பற்றியும் சிறப்புப்பற்றியும் **வளர்** என்ற அடைமொழி தந்து சிறப்பித்தார்

**ஏறியதாரமும் உழையும் கிழமை கொள** - "தாரத்து உழை தோன்றப் பாலையாழ்" என்றபடி பின் பாலையாழ் ஆக்கி என்பதாம் **தாரம்** - உச்சவிசை அது மூக்கா லுண்டாவது, **உழை** - தலையை இடமாக உடைய இசை, **கோடிப்பாலை** - நெஞ்சை இடமாக உடைய இசை. **இளி** என்னும் பண்ணே குரலாக எழும்புவது. **பட்டடை** - அழுத்தம். இவை இராமநாதச் செட்டியார் உரைக்குறிப்பு "**பட்டடை** - நரம்புகளின் இளிக்குப் பெயர்; என்னை? எல்லாப் பண்ணிற்கும் அடிமணையாதலின்" - அடியார்க்கு நல்லார்

**கிழமை** - இசைக்கலை மரபுப்பெயர்களுள் ஒன்று 221-ல் மிடற்றுப்பாடலுக் கேற்ப எடுத்து உரைத்தவை பார்க்க **கிழமைகொள** - பொருந்த என்றுரை கொள்வாருமுண்டு

**இசை** - இராகம். **இடமெதானம்** - கொடிப்பாலையினின் - நிறுத்தி என்று கூட்டுக.

**கோடிப்பாலையினில் நிறுத்தி** - கொடிப்பாலை என்பது பாலையாழ் வகை பலவற்றுள் ஒன்று அவை குரல் குரலாயது செம்பாலை, துத்தங் குரலாயது படுமலைப்பாலை; கைக்கிளை குரலாயது செவ்வழிப்பாலை, உழை குரலாயது அரும்பாலை, இவற்றின் அமைதியுப், பின்னர் இளி குரலாய கொடிப்பாலையினில் **இடுந்தானம் நிறுத்தி** எனக 25

951 (வி - ரை) **இசைப்புகல் நான்கு** - பண், பண்ணியல், திறம், திறத்திறம் என்பன இவற்றைத் திதிப்புகல், பிரக்கிரமப்புகல், சஞ்சாரப்புகல், மூர்ச்சனைப் புகல் என்பர் இராமநாதச் செட்டியார் வந்தனை நான்கு என்றலுமாம்.

**அமைந்த புகல்வகை** - தாம் பாடும் கொடிப்பாலைக்கு அமைந்த கூறுபாடாகிய திறம் "நீடும்புகல் வகையால்" (221) என இவ்விசைக் கூறுபாட்டை முன்னர் மிடற்றுப்பாடலுக் கேற்பக் கூறியதும் காண்க.

**விரல் நிரையில்** - பொத்துவனவும் விடுப்பனவுமாகிய விரல் வரிசைத் தொழிலில். **நிரை** - இங்கு வரிசையின் தொழில் குறித்தது.

**சேய ஒளி** - விரல்களின் சிவந்த ஒளி குழலினிடத்துச் சஞ்சரிக்கும்படி என்பாரும் உண்டு.

**திருவாளன்** - சிவபெருமான். முத்தித் திருவை ஆள்பவர் - வழங்குபவர் அவரது திருவினைப் பெற்று உலகுக்குபகரிக்கும் அடியார்களும் இவ்வாறே திருவாளர்கள் என வழங்கப்படுவர், "தேசமுய்யத் திருத்தொண்டத் தொகைமுன் பணித்த திருவாளன்" (சண்டேசர் புரா - 60) என்றது காண்க

**எழுத்தைந்து** - ஸ்ரீபஞ்சாக்கரம். முன்னர் " எம்பிரா னெழுத்தஞ்சும " (939) என்றது இதற்குமுன் பலநாளும் நியதியாய் வாசித்ததனைக் குறித்ததாம்.

**இசைக்கிளை ஐந்து** - ஆயத்தம், எடுப்பு, உக்கிரம (உற்கிரகம்), சஞ்சாரம், இடாயம் என்பன.

**முறை விளைத்தல்** - இவ்வைந்து கிளைகளிலும் முறையே பண்ணமையப் பாடுதல். **ஆயத்தம்** - மந்தரத்தினின்றும் அனுமந்தரமாகிய கீழ்ஸதாயி வரை சென்று முன் தானத்தில் வந்து முடிவது, **எடுப்பு** - மந்தரத்திலிருந்து பஞ்சமம்வரை போய் மீண்டும் மந்தரத்தில் வந்து முடிவது; **உற்கிரகம்** - மந்தரம் முதல் தாரத்தானம்வரை போய் மீண்டு மந்தரத்தில் வந்து முடிவது, **சஞ்சாரம்** - மந்தரத்திலிருந்து மத்திமம் தாரம் ஆகிய இரண்டினும் போய் இறங்கிக் கீழ்ஸதாயியான அனுமந்தரத்திற் சென்று மீண்டு மந்தரத்தில் வந்து நிற்பது; **இடாயம்** - மந்தரத்தானத்தையே முதன்மையாகச் செய்துகொண்டு, மத்திமம் தாரம் இரண்டினும் சென்று, பின்பு மந்தரத்தையே வலிவுறுத்தி அனுமந்தரத்திற் சென்று மீண்டும் மந்தரத்தில் வந்து முடிவது என்ப. 26

952. (வி - ரை) **மந்தரம்** - மெலிவு, **மத்திமம்** - சமன், **தாரகம்** - வலிவு இவை ஓசை பேதங்கள். இவற்றுக்கு முறையே மெலிவித்தும், சமங்கொண்டும், வலிவித்தும் எனத் தொழிற்பாடு கூறுவது காண்க. இவற்றை முறையே படுத்தலோசை, நலிதலோசை, எடுத்தலோசை என்றுங் கூறுவர், " குறையாகிலே மும்மைப்படி " (221) என்ற விடத்துரைத்தவை பார்க்க.

**தந்திரி** என்றது இங்குக் குழலிசைக் கருவிக் கேற்பத் துளைகளைக் குறித்தது ஆகுபெயர்.

**அந்தரம்** - இடையிட்ட துளைகள் விரலுளர் துளைகள் என்ப.

**அந்தரத்து இயக்கி** - மெலிவும் சமனும் வலிவுமாக வரன்முறையால் ஓசையளவு படுத்துதற்கு விரல்களை அந்தந்த அளவுக்குட் பொத்துதல், விடுத்தல், அசைத்தல் இயக்குதல் முதலிய தொழில்களைச் செய்து எனக்.

**கனிவாய்** - அருள் கனிந்த வாய் என்றலுமாம்.

**துளைவாய்** - குழலின் துளைவாய். குழலின் எட்டுத் துளைகளில் விரல்கள் வைத்து இயக்கிச் சுரங்களைக் காட்டும் ஏழு துளைகள்போக, வாய் வைத்து ஊதும் எட்டாவது துளை இவற்றை முறையே **விரலுளர் துளை** எனவும், **ஊதுதுளை** எனவும் கூறுவர்.

**வாயும் துளைவாயும் தோடக்குண்ணல்** - விரற்றொழில்களால் மெலிவும் சமனும் வலிவும் செய்தற்கேற்றவாறு காற்றுச் செல்வதற்குக் குழலின் துளைவாயில் தமது வாயும் பொருந்தவைத்து ஊதுதல் **தோடக்குண்ணப்-பரப்பினார்** - (947) என வரும் பாட்டுடன் கூட்டி முடிக்க.

**முன்மணிஅதரம் வைத்தூத** என்றது இசை ஒலி செய்யும் தொடக்கத்தினையும், இங்குக் கனிவாயும் **துளைவாயும் தோடக்குண்ண**(ப் பரப்பினார்) என்றது அவ்வாறெழுப்பிய இசையினைப் பாகுபடுத்தி மாதுரியகாதத்தில் பாணியும் இயலும் தூக்கு நடை முதற்பகுதியில் ஒழுங்கு செய்து பரப்புதலையும் குறிப்பனவாதலின் கூறியது கூறலன்மை யுணர்க.

**சுந்தரச் செங்கனிவாய்** - முன், மணியதரம் (948) என்றதற்கேற்ப இங்கு இவ்வாறு கூறினார். இவை நாயனாரது இளங்கிலேயே ஐயர்மருங்கணையும் அருட்டிருமேனிப் பொலிவைப் பாராட்டும் முறை " மாசறுகோலம் " (670), " புண்ணியக் கங்கை நீரிற் புனிதமாந் திருவாய்கீர " (671), " வண்ணமென் பவளச் செவ்வாய் " (672) என்பன முதலாகக் கண்ணப்பநாயனாரது அருட்டிரு மேனியின் பொலிவைப்

பாராட்டியதும, "தாமரைச்செங் கைகளினுற சப்பாணி கொட்டினா" (திருஞான - புரா - 46), "குறுவியர்ப்புத் துளிபருமபக கொழுமபொடியா டியகோலம" (ஷை 52), "பங்கயத்தின் செவவி பழித்து வனப்பேோங்கும் செங்கை" (ஷை 172), "பாத தாமரை" (ஷை 187) என்பன முதலாக ஆளுடையபிள்ளையாரது அருட்டிருமேனிப பொலிவினைப் பாராட்டிய தன்மையும், "தூயவெண்ணீறு துதைந்த பொன் மேனி" (திருநா - புரா - 140) என்பது முதலாக ஆளுடைய அரசுகளின் கருணைப பொலிவைப போற்றிய தன்மையும், பிறவும் இங்கு நினைவு கூரத்தறபாலன. 27

953 (வி - ரை) நூல் எண்ணிய என மாற்றுக நூல்களால் அளவுபடுத்தப் பட்ட. எண்ணுதல் - அளவு படுத்துதல நூல் இசைக்கலை நூல்கள் கந்தருவ வேதம் என்பர் வடவர்

பெருவண்ணம், இடைவண்ணம், வனப்பு இவை வண்ணவகை. வனப்பு - வனப்பு வண்ணம் செய்யுளுக்கு வண்ணம் வனப்பாதல்போல, இசைநூலில் பண் ணுக்கு இவ வண்ணவகைகள் கூறப்படும் எனவும் இவை இக்காலத்தரியன எனவும் கூறுவர் ஆறுமுகத்தமபிரானா

பெருவண்ணம் - நெட்டெழுத்துக்களையே தொடுத்துப பாடுவது எனவும், இடை வண்ணம் - இடையெழுத்து மிகுதி வருவது எனவும், வனப்பு வண்ணம் - எழுத்துக் கள் ஒன்றினெடொன்று பிளவுபடாமல இசைந்து அழகு பொருந்தியிருப்பது எனவும் கூறுப இவை செய்யுட்டன்மை குறிப்பன.

வண்ணம் - சுண்ணம, சுரிதகம, வண்ணம், வரிதகம எனச் சொலவகை நான காம எனவும், அவற்றுள் வண்ணம் நாலனகடியான வருவதெனவும், அதுதான் ஒரு வகையான - பெருவண்ணம், இடைவண்ணம், வனப்பு வண்ணம் என மூனறு வகைப்படும எனவும், அவற்றுட் பெருவண்ணம ஆறுகவும், இடைவண்ணம இருபத தொன்றுகவும், வனப்பு வண்ணம நாறபததொன்றுகவும் (நாறபததொனபதாக என றும பாடபேதமுண்டு) வருமெனவும் கூறுப (சிலப-ந-அரங-அடியார்க்கு நல்லாருரை பார்க்க) இதுவும் சொறகூறுபாடு பற்றியதாம "யாழுங் குழலுஞ் சீரும" (சிலப - அரங - 26) என்ற இடத்துச் சீர் என்றதறகுச் "செமமுறை யுறழ்பே மெய்ந்நிலை கொட்டு, னீட்ட ளிமிழ்த்தல" என்று சொல்லப்பட்டா நின்ற வண்ணக் கூறுபாட்டை யும், இருவகைத் தாளக் கூறுபாட்டையும், பாலை நிலையினையும், பண்ணு நிலையினை யும நிலைப்படுத்துத் தூயதாகக் காட்டும தன்மை", "வண்ணம நிறம" என்ற அடி யார்க்குநல்லாருரையும ஈண்டுச சிந்திக்கத்தக்கது இது இசைக் கூறுபாட்டினைப பற்றியதாம

வண்ண இசை-இசை வகை எல்லாம் என்றாகலின் இங்கு வண்ணம் என்றது யாப்பின் வகையாகிய சொற்கூறுபாடன்றி இசை ஓசைக் கூறுபாடு குறித்ததென்று கொள்ள இடமுண்டு அன்றியும "எழுத்தஞ்சும தொடுத்த முறை எழிசையின் சுருதிபெற வாசித்து" (939), "எழுத்தைந்தும வழுத்தித் தாம முனபூதி வரும" (947) என்று கூறியவாறறால ஆனாய நாயனா திருவைந்தெழுத்தாகிய மந்திரத் தினையே இசைச் சுருதிபெற வாசித்தனர் என்று கொள்ளக்கிடக்கின்றது

ஆனால "உள்ளுறை யஞ்செழுத்தாக" (954) என்றதனால வண்ண இசைவகை களில் வைத்துத் திருவைந்தெழுத்தினை உள்ளுறையாகக் கொண்ட கீத இசை பாடி னா என்று கொள்ளவும இடமுண்டு "பணணொன்ற விசைபாடும", "கீதத்தைத மிகப்பாடும", "அளப்பில கீதஞ் சொனனாக கடிகட்ட மருளு மாறே" என்ற தேவா ரத் திருவாக்குக்கள் ஈண்டுச் சிந்திக்கத்தக்கன

இசை - 221 உரை பார்க்க மாதுரிய நாதம் - மதுரத்தையுடையது மாதுரியம வடசொல முடிபு. நாதம் - இசை ஓசையின் அமைவு.

**பாணி** - தாளம் - 221 பார்க்க. **இயல்** - இராகம். **பாணி** - இராகம் எனவும், **இயல்** - மூர்ச்சனை எனவும் கூறுவாரு முண்டு.

**தூக்கு** - "பாட்டும் பாணியும் தூக்கும்" (சிலப் - ௩ அரங் - 16) என்ற விடத்துத் **தூக்கு** என்பது "இத்தாளங்களின் வழிவரும் செந்தூக்கு, மதலைத் தூக்கு, துணிபுத்தூக்கு, கோயிற்றூக்கு, நிவப்புத்தூக்கு, கழாற்றூக்கு, நெடுந்தூக்கு எனப்பட்ட எழு தூக்குக்களும் என்க. 'ஒருசீர் செந்தூக்க இருசீர்மதலை, முச்சீர் துணிபு நாற்சீர் கோயில், ஐஞ்சீர் நிவப்பே அறுசீர்கழாலே, யெழுசீர் நெடுந்தூக் கென்மனார் புலவர்' என்றாராகலின்" என்று அடியார்க்கு நல்லார் உரைத்தவை பார்க்க. **தூக்கு** - ஏற்றம் என்பாரு முண்டு.

**முதற்கதி** விளம்ப கதி என்ப.

**பண் அமைய எழும் ஓசை** - பண் 221 உரை அடிக்குறிப்புப் பார்க்க. குழலினுள் ஏழிசையும் தோன்றும் என்றதனையும், இவற்றுட் பண் பிறக்கும் என்றதனையும், "ச ரி க ம ப த நி யென் றேழெழுத்தாற் றானம், வரிபரந்த கண்ணினாய் வைத்து—தெரிவரிய, **வேழிசையுந் தோன்று மிவற்றுள்ளே பண்பிறக்குஞ்**, சூழமுதலாஞ் சுத்தத் துளை" என்றதனா லறிக.

பண்ணிசை யமைதியினையும் இசையிலக்கணங்களையும் இசைநூன் மரபுப்படி மிடற்றுப்பாடலுக்கேற்றவாறு 221-ல் ஒருபாட்டாற் சுருக்கி எடுத்துக் கூறிய ஆசிரியர், அதனையே குழற்கருவியின் இசைக்கேற்றவாறு, இசைக்கூறுபாடுகளை, இங்கு 938, 948—953 வரை, இப்பாட்டுக்களான் விரித்துக் கூறுகின்றார். "யாழுங் குழலுஞ் சீருமிடறும்" (சிலப் - ௩ அரங் - 26) என்று முறைப்படுத்தியபடி யாழினோடு சேர்த்து மிடற்றுப்பாட்டுக்கு முன்வைத்து எண்ணப்படும் சிறப்பு வாய்ந்தது குழல். யாழ் குழல் என்ற இரண்டனுள்ளும், சொல்லை அவ்வாறே மழலையழகுபடத் தோற்றுவித்து இசைக்கும் சிறப்புப்பற்றிக் குழலினை முன்வைத்துக் "குழலினி தியாழினி தென்ப" என்று திருக்குறளினுட் பேசினார் அன்றியும் இச்சரிதம் குழலால் விளங்கச் சிறப்புடையது ஆதலின் விரிவு குழலினோடு புணர்த்திக் கூறினார் என்பதாம். இது பற்றியே ஆசிரியர் முன்னர் இசையிலக்கணத்தையும் அமைதியையும் சுருக்கிக் கூறியருளினார் இவ்வாறு பின்னர் ஏற்ற பெற்றி விரிக்கவேண்டிய பகுதியை முன்னாகக் கூற நேர்ந்தபோது சுருக்கிக் கூறுதல் ஆசிரியரது சிறப்பாகிய மரபுகளுள் ஒன்று. கருவியின் இசையியல்பை இங்கு விரிவுபடக் கூறினாராதலின், பின்னர்த் திருநீலகண்ட யாழ்ப்பாணர் பாடிய யாழினிசைபற்றிக் கூறவரும்போது இங்கு வகுத்தவற்றை யுட்படுத்திச் சுருக்கிக் கூறும் பொருத்தமும் காண்க. திருஞான - புரா - 134, 135, 136-லும், திருநீலகண்டயாழ்ப்பாணர் புராணம் 2-லும் கூறிய திறம் நோக்குக. முன்னர் மிடற்றுப்பாடல் இயல்பற்றி 221-ல் உரைத்தவற்றுள் குழற்கருவிக்கேற்ற 28
வற்றை ஈண்டமைத்துக்கொள்க.

954. வள்ளலார் வாசிக்கும் மணித்துளைவாய் வேய்ங்குழலின்
உள்ளுறையஞ் செழுத்தாக வோங்கியெழு மதுரவொலி
வெள்ளநிறைந் தெவ்வுயிர்க்கும் மேலமரர் தருவிளைதேன்
றெள்ளமுதி னுடன்கலந்து செவிவார்ப்ப தெனத்தேக்க, உசு

955 ஆனிரைக ளறுகருந்தி யசைவிடா தணைந்தயர,
பானுரைவாய்த் தாய்முலையிற் பற்றுமிளங் கன்றினமும்
தானுணவு மறந்தொழியத், தடமருப்பின் விடைக்குலமும்
மானமுதலாங் கானவிலங்கு மயிர்முகிழ்த்து வந்தணைய, ஙO

956. ஆடுமயி லினங்களுமங் கசைவயாந்து மருங்கணுக,
வாடுசெவி யிசைநிறைந்த வுள்ளமொடு புள்ளினமு
மாடுபடிந் துணர்வொழிய, மருங்குதொழில் புரிந்தொழுகுங்
கூடியவன் கோவலருங் குறைவினையின் றுறைநின்றூர். ௩௧

954. (இ - ள்) வெளிப்படை. வள்ளலாராகிய ஆனாயர் வாசிக்கின்ற அழகிய துளைவாயினையுடைய வேய்ங்குழலிலே திருவைந்தெழுத்தினை உள்ளுறையாகக் கொண்டொழுகவெடுத்துப் (எம்மருங்கும்) பெருகி எழுகின்ற மதுரம் பொருந்திய இசையொலியின் வெள்ளமானது நிறைந்து எல்லா வுயிர்களிடமும், மேலான வானத்தின் வாழும் தேவர்களது கற்பகமரத்தின் விளைந்த தேனினைத் தெள்ளிய அமுதத்தினுடன் கலந்து செவி வழியாக வார்ப்பதுபோல நிறைக்க, ௨௯

955 (இ - ள்) வெளிப்படை. முன், புல்லருந்திய பசுக்கூட்டங்கள், பின் அசைவிடாமல் இவர் பக்கம் அணைந்து தம்மை மறந்து நிற்கவும், தாய்முலையினைப் பற்றிப் பால் உண்டுகொண்டிருந்ததால் பால்நுரை கொண்ட வாயினையுடைய பசுக்கன்றின் கூட்டமும் பாலுண்ணும் தொழிலைத் தாம் மறந்தொழியவும், வலிய கொம்புகளையுடைய இடபக் கூட்டங்களும் மான் முதலிய காட்டு விலங்குகளும் மயிர் முகிழ்த்து வந்து பக்கத்தில் அணையவும், ௩௦

956. (இ - ள்) வெளிப்படை. ஆடுகின்ற மயிற் கூட்டங்களும் அசைவின்றி அங்குப் பக்கத்தில் வந்து அணையவும், காதுகளின் வழியே சென்ற இசை நிறைந்த உள்ளத்தினோடு பறவைக் கூட்டங்களும் பக்கத்திற் படிந்துவந்து தமமுணர்வு நீங்கவும், மருங்கே ஏவல்புரிந்து ஒழுகும் கூட்டமாகிய வலிய கோவலர்களும் தாம் செய்த ஏவற்றொழில்களை முற்றச்செய்யாது இசைகேட்ட அம்மட்டிற் குறையாக விடுத்து நின்றனர் ௩௧

இம் மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டன

954. (வி - ரை) வள்ளலார் - சராசரங்கட்கெல்லாம் இசையமுது தேக்கித் தங் கருணையின் மூழ்குமாறு அமுதளித்த வள்ளன்மை குறித்தது

குழலின் எழும் ஒலி என்று கூட்டுக

உள்ளுறை அஞ்செழுத்தாக - பண்ணிசைக்கு உள்ளுறைப் பொருள்வேண்டும் உள்ளுறை இல்லாத வெறும் பண்ணும், இராகமும், தாளமும் பயனிலவாம் இதனை உணராத இந்நாண் மாக்கள் உள்ளுறையில்லாத வெறும் இராக தாள விலயங்களிலே மயங்கிப் பலவகைப்பட்ட இசையரங்குகளுட் சிக்கிச் செவிப்புலனின்பத்துக் கடிமைப் பட்டு ஒழிதலுடன் தமது அரியகாலத்தையும் பொருளையும் இழந்துபடுகின்றார்கள் இவ்வாறு ஐம்புலனின்பங்களில் ஒன்றாகிய வொழியும் செவியின்பத்து ளாழ்ந்து கழியும் பிறவி, "ஓசையின் விளிந்த புள்ளுப் போலவும்" என்றபடி, வறிதே கழிந்து சாகும் பிறவியாகுமன்றி, உயிர் ஈடேறுதற்குச் சாதனமாகாது. "சொல்லவல் வேதஞ் சொல்ல வல் கீதஞ் சொல்லுங்கார், சில்லவல் போலும்" (குறிஞ்சி - திருச்சிராப்பள்ளி - 8) என்று ஆளுடைய பிள்ளையார் அருளியபடி சொல்லத்தக்க கீதத்தினையே சொல்லுதல் வேண்டும். இங்குச் சராசரங்களை இசை மயமாக்கி யுருக்கியதும், ஆனாய நாயனாரைச் சிவபெருமானின் திருமுன்பு எப்போதும் வாசித்துக்கொண்டே யிருக்கப் பண்ணினதும் இசையின் உள்ளுறையாகிய திருவைந்தெழுத்தேயாகும் நோய் போக்கி உயிர் காக்கும் மருந்துக்குமேல் இனிய கட்டி பூசி உண்பிப்பதுபோலப், பிறவிநோய் நீக்கி உயிருக்கு மீளா இன்பந் தரவல்ல ஆதி மந்திரமாகிய சீபஞ்சாக்கரத்தினை உயிர்கள் இன்பமாரப் பருகுதற்கு, இசை, மேற்பொதியும் கட்டிபோல உதவியதே யன்றிப் பிறிதில்லை எனக.

**உள்ளுறை** - கொலலினுயா அரிசிபோல, உளளே உறுகினற உணமைப்பொருள.

**அஞ்செழுத்து** - சீபஞசாககர மகாமநதிரம. மநதிரஙகளுக்கெலலாம மூலமாகிய மநதிரம "ஆதி மநதிர மஞ்செழுத தோதுவார் நோககு, மாதி ரததினும மறறை மநதிரவிதி வருமே ?" (திருஞான - புரா - 698) எனறது காணக. "காத லாகிக கசிநது கணணீர மலகி, யோது வாரதமை நனனெறிக குயபபது" (ஆளுடைய பிளளை - கவுசிகம - நமசசிவாயத திருபபதிகம 1), "துஞசலுந துஞச லிலாத போழ தினும, நெஞசக நைநது நினைமின் னுடொறும, வஞசக மறறடி வாழததத வநதகூற, றஞச வுதைததன வஞசெழுததுமே" (ஷெ காநதாரம - பஞசாககரப பதிகம - 1), "கறறுணைப பூட்டியோர கடலிற பாயசசினும, நறறுணை யாவது நமசசி வாயவே" (அபபா - காநதாரபஞசமம - நமசசிவாயபபதிகம - 1), "பணணிய வுலகினிற பயினற பாவததை, நணணிநின் றறுபபது நமசசி வாயவே" (ஷெ 3), "நனனெறி யாவது நமசசி வாயவே" (ஷெ 9), "உனைநான மறககினுஞ சொலலு நா நமசசி வாயவே" (ஆளு - நமபிகள - பழமபஞ - 1) எனபனவாதி திருவாககுக களால, இதனை ஓதும முறையும பயனும நமது பரமாசாரியாகளால வறபுறுததி யருளபபட்டமை காணக இனனும இதுபறறி "விதி எணணுமஞ செழுததே" (9-ம சூத) எனற சிவஞானபோதத்தினுளளும, உணமை விளககம, சிவபபிரகாசம, திருவருட்பயன, கொடிககவி முதலிய ஏனைய மெயகணட சாததிரஙகளுளளும, திரு மூலா திருமநதிரததினும, சிவாகமஙகளினும கணடுகொளக இவை குருமரபின அறிநத அனுபவமுடைய ஞானதேசிகாபால கேட்டு அறிநது உணாநதுகொளளததககன

"இறவாதே வரமபெறறே னெனறு மிகக விராவணனை யிருபதுதோ ணெரிய வூனறி, யுறவாகி யின்னிசைகேட் டிரங்கி மீணடே யுறறபிணி தவிாததருள வலலான றனனை" எனற திருநாவுககரசு திருததாணடகததாலும, "இலஙகையா கோனைத துலஙக மாலவரைக கீழடாத திட்டுக, குறிகோள் பாடலின் இன்னிசை கேட்டுக கோல வாளொடு நாளது கொடுதத, செறிவு" (தககேசி - புனகூா - 9) எனற நமபிகள தேவாரததாலும, பிறவாறறாலு மறியபபடுகினறபடி கழுவாயிலலாத சிவாபராதமாகிய பெருநதீமை தானும சிவநாம இசையினறு நீககபபடுவதெனறால இநதத திருவைந தெழுததி னினனிசை எனனதான செயயாது ? இதுபறறி யனறே "நாளு மின் னிசை யாற்றமிழ் பரபபு ஞான சமபநதா" எனறு இததனமைபறறி ஆளுடையபிளளை யாரை ஆளுடையநமபிகள துதிததருளினா. (தமிழ - சிவனுககு ஆட்படுததும தமிழ).

**தேன் தெள் அமுதினுடன் கலநது** - எனபதறகுப பொருநத, ஒழுகி எனறும, மதுர ஒலி எனறும, வெள்ளம் எனறும நாவின சுவைபபுலனுகிய உருசி யினபமபடக கூறினா. ஒழுகி எழும் - முயறசியானனறி இயறகையாய ஒழுகி எனக

ஒலி வெள்ளம் - முனனாப பரபபினா (953) எனறதனால அவவாறு ஒலி அலை களாகப பரப்பபபட்ட இசை, நீரின அலைகள பரமபரையிற பரவிப பெருகுதலபோல மேலும மேலும பெருகியது எனபதாம.

**அமரர்தரு** - கறபக மரம **தருவிளைதேன்** - கறபக மலாகளின விளைநது எடுககப பட்டதேன. தருவின பூவில விளை எனறபாலது தருவிளை எனறு ஆகுபெயராற கூறப்பட்டது **தேன்** தாவரஙகளின விளைவுகளுள ஒனறெனபது கூறபபட்டதுடன, ஒவவோாவகை மாஞ்செடிகளின விளையும தேன அவவததாவரஙகளின குணமுடைய தாகும நிலையும குறிககபபட்டது வேமபுததேன மருநது வகையுட சிறநத குண முடையதா யெடுககபபட்டதும, பிறவும காணக **மேல்-மேலுலகிலுள்ள - மேலாகிய** எனறலுமாம.

**செவி வார்ப்பது** - செவியினவழி வாரபபது "மறிததெஞ் செவியமுதாய வார்ததபிரான" எனற நாலவா நானமணிமாலை இபபொருள பறறியது.

**நேக்குதல்** - வெளிப்படாது உள் நிறைதல். எவ்வுயிர்க்கும் நேக்க எனக

**வார்ப்பதேன்** - இனிமையும் பயனும் கலந்த செய்திகளுப் பயன்பற்றி வந்த உவமம் 29

955. (வி - ரை) **ஆனிரைகள் கன்றினம் - விடைக்குலம்** இவற்றை இவ்வாறு இனம் பிரித்துப் பாதுகாவல் புரிந்ததுபற்றி 936ல் உரைக்கப்பட்டதனை உன்னுக.

**அறுகு** - பசுக்களின் உணவில் அறுகு முதன்மைபெற்றதாதலின் அதனைக் கூறினாரேனும் இனம்பற்றி ஏனையவும் கொள்ளப்படும்.

**அசைவிடாதணைந்து** - உணவு அருந்திய ஆனிரை, பின் தனியிடத்திருந்து அவ்வுணவை மீளவும் கவளம் கவளமாக வயிற்றினிடமிருந்து வாய்க்குக் கொண்டுவந்து பலமுறையும் மென்று விழுங்கும். இவ்வாறு அசைவிடுதல் உணவு சீரணிக்க உதவுவ தாம் இது கவாகுளம்புடைய தாவரஉணவு உண்ணும் உயிர்களுக்கு இயல்பாகும். இவை அசைவிடாவிட்டால் நோய்கொள்ளும் தாம் இயல்பாயும், இன்றியமையாமலும் செய்யவேண்டிய அசைவிடுதலைத்தானும் செய்யாமல் மறந்து எனக ஆனிரைகளுக்கு அசைவிடுதலின் இன்றியமையாமைபற்றிக், கேட்ட பொருளைத் தனியிடத்திலிருந்து சிந்திக்கவேண்டிய தலைமாணுக்கர்க்கு அவற்றைப் புலவர் உவமித்துள்ளதும் காண்க "அன்ன மாவே. அன்னர் தலை . மாணுக்கர்" என்பது சூத்திரம். அசைவிடாது என்றதற்கு இரை எடாது என்றுரைப்பாருமுண்டு.

**அணைந்து** - மேய்விடங்களினின்று குழலூதுமிடத்துக்கு வந்து **அயர** - இசையின் மயங்கித் தம்மை மறக்க (இசையினை) விரும்ப என்றலுமாம்.

**பால் நுரைவாய் .கன்றினமும்** - தாய்முலைபற்றிப் பாலுண்டுகொண்டிருந்ததலால் வாயில் நுரை பொருந்தும் கன்று இயற்கைநவிற்சி அலங்கார தன்மையணி.

**உணவுதான் மறந்து ஒழிய** எனக. **உணவு** - உண்ணும் தொழில். **மறந்தொழிய** - ஒரு சொன்னீர்மைத்தாய் மறக்க என்ற பொருளில் வந்தது

**தடமருப்பின் விடைக்குலம்** - விடைக் கூட்டங்களின் வலிமை குறித்தது. "வென்றி விடைக்குலம்" (936) என்றது காண்க

**மான் முதலாம் கான் விலங்கு** - கான விலங்குகளில் மனிதருடன் பெண்களுடனும் அன்புடன் பழகி உடன் வளர்வதில் முதலாக வைத்து எண்ணப்படுவதும், அழகுடையதும் மான் ஆதலின், **மான் முதலாம்** என்றார் "அன்புறு காதல் கூர வணையுமான் பிணைகளோடு, மின்புற மருவியாடு மெயிற்றியர் மகளிர்" (653) என்றது காண்க

**மயிர் முகிழ்த்தல்** - இசையின் வசப்பட்டதனாலாகிய மெய்ப்பாடு 30

956. (வி - ரை) **ஆடும் மயிலினங்கள்** - கார்கண்டபோது ஆடுதல் மயிலினங்களின் இயல்பு. ஏனைக் காலத்தும் காலையிலும் மாலையிலும் களிப்பு மிகுதியால் ஆடுவதும் இவற்றினியல்பாம். "ஆலும் மயில்கள் கூவுங் குயில்கள் இன்சொற் கிளிப்பிள்ளை", "வண்டுபாட மயிலால நீலமொட்டலரும் கேதாரம்" (1) (செவ்வழி) "வரைசேர் முகில் முழவ மயில்கள்பல நடமாட" (மேகராகக் குறி) என்று இவற்றினியல்பை ஆளுடைய பிள்ளையார் அருளியது காண்க

**அசைவயர்ந்து வந்து அணைய** மயில்கள் ஆடுதல் தோகையை விரித்தும் ஒருவகை அசைவுடனும் கூடியுள்ளது அந்த அசைவினையும் விட்டு எனக மயில்கள் தாமாக ஆடுதற்கேதுவாகிய மகிழ்ச்சியின் மிக்கதோர் மகிழ்ச்சியை இந்த இசை வெள்ளத்தாற் பெற்றனவாதலின் தமது ஆடலை விட்டு இசையின் வசமாயீர்க்கப்பட்டு இங்கு வந்தணைந்தன என்பது

**செவியூடுபுக்க இசை** எனக **ஊடு புள்ளினமும்** - இசை உள்ளத்தில் நிறைதற்கான வழியைக் கூறியபடி. தோற்செவியுடையன, துளைச்செவியுடையன

என்று பிராணிகள் இரண்டு வகைப்படும். முட்டையிற் பிறப்பனவாகிய புள்ளினம் துளைச் செவியுடையன என்பர். அவ்வாறு உள்ள துளைகளாகிய செவியூடு என்றபடியாம். ஆடும் மயில்கள் ஆடும்போது உண்மகிழ்வு நிறைவன; ஏனைக் கிளி, குயில் முதலிய புள்ளினங்கள் எப்போதும் இணைபிரியாது பாடி மகிழ்ந்து பறந்து திரிவன. இப்படி மகிழ்வு நிறைந்த உள்ளமுடைய புள்ளினம் வெளியே நின்றும் செவியூடுபுக்கு நிறைந்த இசையுள்ளத்தினோடு என விரித்துரைத்துக்கொள்க. புள்ளினத்தின்மகிழ்வு நிறைவாந்தன்மைபற்றியே திருத்தோணிபுரம் (பண் - பழந்தக்கராகம்) தேவாரத்தினுள் “பெடையினொடு மொண்டரங்க விசைபாடு மளியரசே” என்பது முதலாகப் பதிக முழுதும் இப்புள்ளினங்களை விளித்து ஆளுடையபிள்ளையார் அருளியதும், இவ்வாறே திருவாரூர் (பண் - கொல்லி) “குருகுபாய” என்ற திருப்பதிகத்தினுள் “பறக்கு மெங்கிள்ளைகாள் பாடுமெம் பூவைகாள்” என்பது முதலாகப் பதிக முழுதும் புள்ளினங்களை விளித்து ஆளுடையநம்பிகள் அருளியதும் இங்கு உன்னுக.

**மாடு படிந்து உணர்வு ஒழிய - மாடு படிதல்** - தாம் பறந்தும் இருந்தும் உள்ள உயர்ந்த இடங்களினின்றும் ஆனாயர் குழலிசைக்கும் பக்கத்தே இறங்கியிருத்தல். **உணர்வு ஒழிதல்** - தம்முணர்வு மறத்தல் - மனிதர் கையிற் படாது தம் வயமாய்ப் பறந்து வாழும் இவை, தற்காப்பையும் மறந்து மனிதர் கையகப்படுக்கக் கொள்ளும் அளவில் படிந்து இருந்தன என்க.

**தொழில் புரிந்து கோவலர்** - முன்னாக, “கோவலர் ஏவல் புரிந்திட” (937) “வினை செய்யும் காவல்புரி வல்லாயர்” (943), “எடுத்தகோ லுடைப்பொதுவர் தம் மருங்கு தொழுதணைய” (945) என்று கூறப்பட்ட இடையர்கள் இவர்கள் தமது தலைவராகிய ஆனாயரின் சொல்வழி, ஆனிரை, விடைக்குலம், கன்றினம் என்பவற்றைத் தகுதிபெற வெவ்வேறாக வேறு வேறிடங்களிற் கொண்டுய்த்து மேய்த்துக் காவல் புரிபவர்.

**குறைவினையின் துறை நின்றார்** என்றது தலைவர் ஏவியபடி தொழில் புரிந்த இவர்கள் அத்தொழில்களின் இடையில் குழலிசையில் ஈடுபட்டவர்களாய் அத்தொழில்களைக் குறைபட நிறுத்தி மருங்குவந்து நின்றனர் என்பதாம். **குறைவினையின் துறை** - செய்தொழில் முற்றுப்பெறாத நிலையில். இவர்கள் மேய்த்த ஆனினங்கள் மேய்தலை விட்டு வந்தணைந்தமையானும் இவர்களது தொழில் குறைவினையாய் நின்றதும் காண்க.

**கூடியவன்** — என்பதும் பாடம்.

31

957. பணிபுவனங் களினுள்ளார் பயில்பிலங்கள் வழியணைந்தார்;
மணிவரைவா ழரமகளிர் மருங்குமயங் கினர்மலிந்தார்,
தணிவிலொளி விஞ்சையர்கள் சாரணர்கின் னரரமரர்
அணிவிசும்பி லயர்வெய்தி விமானங்கண் மிசையணைந்தார். ௩௨

(இ - ள்) வெளிப்படை. நாகருலகங்களிலுள்ளவர்கள் தாம் முன்பு வந்து பழகிய பாதலப்பிலங்களின் வழியாய் இங்கு வந்து அணைந்தார்கள்; அழகிய மலைகளில் வாழும் தெய்வ மகளிர்கள் இசையால் மயங்கினார்களாகி அம்மருங்கு வந்து மலிந்தனர்; குறையாத ஒளியுடைய விஞ்சையர்களும், சாரணர்களும், கின்னரர்களும், தேவர்களும் தாந் தாம் வாழும் அழகிய ஆகாய நிலைகளிலிருந்து இசைவயப்பட்டவர்களாய்த் தம்மை மறந்து விமானங்களில் வந்து அணைந்தார்கள்.

**(வி - ரை) பணி** - பாம்பு. **பணிபுவனம்** அத்தெய்வப் பகுதியினர் வாழும் உலகம். இது பாதலம் - கீழுலகம் - நாகருலகம் எனவும் வழங்கப்படும்.

**பயில் பிலங்கள் - பயிலுதல்** இங்கு மேலேறி வந்து பழகுதல் குறித்தது. **பயில் பிலம்** - (அவ்வாறு) பழகிய வழிகள். நிலத்தின் கீழே உள்ளனவாகக் கருதப்

படும் பாதல உலகங்களிலிருந்து மேலே நிலவுலகத்துக்கு வரும் வழிகளைப் **பிலத் துவாரங்கள்** என்பது வழக்கு. காஞ்சிபுரத்தில் பதுமமாநாகம் உறையும் பிலத்தினிடைக் காமாட்சியம்மையார் எழுந்தருளியிருந்து சிவபெருமானைப் பூசித்துத் தவஞ் செய்த சரிதம் "அடிய னேனுறை **பிலம**த னிடையே, மனனு கோயில்கொண் டருளு வாய்" (55) என்ற திருக்குறிப்புத்தொண்ட நாயனார் புராணத்துட் காண்க.

**மணி வரைவாழ் அரமகளிர் மணி** - மணிகளையுடைய என்றலுமாம். **அரமகளிர்** - ஓர் தெய்வச்சாதி மகளிர்; மலைகளில் வாழ்பவர். 688 பார்க்க.

**மயங்கினர்** - மயங்கினராகி; முற்றெச்சம். மலைகளை யிடமாகக்கொண்டு வாழ்பவர் அங்கு நின்றும் கீழிறங்கி முல்லை உடுத்த இம்மருங்கில் வருதற்குக் காரணம் கூறிய வாறு. **மலிதல்** - கூட்டமாக நிறைதல்.

**தணிவில் ஒளி. . .அமரர் விஞ்சையர்** - வித்தியாதரர். **விஞ்சை** - வித்தை. **சாரணர்** - இயக்கர் பதினெண்வகைத் தேவகணத்தவர்களுள் ஒரு சாரார். **கின்னரர்** - இசைவல்ல தேவகணங்களுள் ஒருவகையினர். **அமரர்** - தேவகணத்தொருவகை. இந்த நான்கு வகையினரும் தேவகணங்கள் (**திவ்** - ஒளி. **தேவர்** - ஒளியுடைய உடம்புடையவர்கள்) உடம்பின் இயல்பாகிய ஒளியாதலின் **தணிவில் ஒளி** என்றார். தணிவில் ஒளி என்பதனை இந்நான்கு வகுப்பினருடனும் சேர்த்துக. தேவகணங்களில் இசைவல்லோரும் ஆயனார் குழலிசையின் மயங்கித் தம்மை மறந்து விமானங்களில் வந்துஇறங்கினர் என்பது இசையோர்க்கும் சிறப்புப்பற்றி நாக்கை முன்கூறினர்.

**பணி புவனம்** - பாதலம், **மணிவரை** - நிலவுலகம், **அணி விசும்பு** - விண்ணுலகம், இதனால் கீழ் - நடு - மேல் என்ற மூவுலகத்துள்ள தேவசாதியாரும் இவரது இசையின் மயங்கி யணைந்தமை கூறப்பட்டது. 284-ல் உரைத்தவை பார்க்க. "பாரார் விசும்புள்ளார் பாதாளத்தார் புறத்தார்" (திருவம்மானை - 2) என்ற திருவாசகமும் காண்க. 32

958. சுரமகளிர் கற்பகப்பூஞ் சோலைகளின் மருங்கிருந்து
கரமலரி னமுதூட்டுங் கனிவாய்மென் கிள்ளையுடன்
விரவுநறுங் குழலலைய விமானங்கள் விரைந்தேறிப்
பரவியவே ழிசையமுதஞ் செவிமடுத்துப் பருகினார். ௩௩

(இ - ள்) வெளிப்படை - தேவமகளிர்கள் கற்பகப் பூஞ்சோலைகளின் பக்கத்திலிருந்து மலர்போன்ற தமது கைகளால் அமுதூட்டும் கனி பொருந்திய வாயினையுடைய மெல்லிய கிளிகளுடனே தமது கூந்தல் அலையும்படி தத்தம் விமானங்களில் விரைவாக ஏறிவந்து பரவிய ஏழிசை யமுதத்தினைப் பருகினார்கள்.

(வி - ரை) **சுரமகளிர்** விண்ணுலகத்திலுள்ள தேவ மாதர்கள்.

**கற்பகப்பூ...கிள்ளையுடன்** - நறிய கற்பகப் பூஞ்சோலைகளில் அமர்ந்து தமது கைமலர்களால் ஊட்டி வளர்க்கின்ற கனிகளை உண்ணும் வாயினையுடைய கிளிகளுடனே "சிறையாரு மடக்கிளியே யிங்கேவா தேனொடுபால், முறையாலே யுணத் தருவன்" என்ற ஆளுடைய பிள்ளையார் தேவாரம் காண்க. தேனும் பாலும் கனிகளும் முதலியவற்றைத் தாமே தம் கையில் வைத்து ஊட்டிக், கிளி பூவை முதலியவற்றை வளர்த்தல் மகளிர் இயல்புகளுள் ஒன்று என்பது பழைய வழக்காலும் நூல்களாலும் அறியப்படும் உண்மை. "பூவைதந் தாளபொன்னம் பந்துதந்தா ளென்னைப் புல்லிக்கொண்டு, பாவைதந் தாளைபைங் கிளியளித் தாளின்றென் பைந்தொடியே" (குறிப்புரைத்தல் - 200), "என்னனை போயினள் யாண்டையள் ளென்னைப் பருந்தடுமென், றென்னனை போக்கன்றிக் கிள்ளையென் னுள்ளத்தை யீர்கின்றதே" (கிளிமொழிக் கிரங்கல் - 231) என்ற திருக்கோவையாரானும், பிறவாற்றானும் அறிக.

ஆயின, இவவகை யினப அனபு வழககுககளெலலா மொழிநது தினப வனபு வழககுக கள பலவும மகளிர போதுபோககும தொழில்களாகக காணபபடுவது இககாலக கொடு மைகளுள ஒனறு

**கற்பகப் பூஞ்சோலை மருங்கிருத்தல்** - அமமகளிர தமககும, தாம வளர்ததுடடும கிளிகளுககும இனபந தருதறகுத தகக இடமாகக கொணடமை காட்டிறறு **காமல ரின்** - மலாபோனற கைகளால முனபினனுகத தொகக உவமததொகை மெயயும உருவுமபறறிவநத உவமை. **இன்** - கருவிப பொருளில வரும மூனறனுருபினவநதது உருபு மயககம காமாகிய மலரின , உருவகம எனறலுமாம

**அமுதூட்டும் கனிவாய்** - கிளிகளுககுக கனிகளை ஊட்டுவதும, அவை அநதக கனிகளைத தம வாயாற பறறிககொளளுதலும இயலபு. சொவவைக கனிபோனற வாய எனறுரைபபினுமமையும

**மென்கிள்ளை** சிறிய பறவையாதலானும, பேசசும இயலும மெனமையுடையன வாதலானும **மென்கிள்ளை** எனறார விண மாதா கிளளைகளுடன வநதனா எனக. நறிய கறபகப பூஞசோலையின நறுநீழலில அமாநது மெனகிளிகளை அமுதூட்டி அவற றின இனிய மொழி கேட்டு மகிழ்நத இனபததினும மேலாய இககுழலிசையினை விருமபி வநதனா எனபதாம

**குழல் அலைதல்** - வருகையின விரைவினால ஆகியது. "விரைநதேறி" என றது காணக

**விரைவு** - இசையின வசபபட்டு அதனைப பருகும ஆாவம குறிததது "வாரி சையு முலைமடவார மாளிகையின சூளிகைமேல மகபபா ராட்டக, காரிசையும விசும பியஙகுங கணஙகேட்டு மகிழவெயதுங கழுமலமே" (4), "பணணமரு மெனமொழி யார பாலகரைப பாராட்டு மோசை கேட்டு, விணணவர்கள வியப்பெயதி விமானததோ டுமிழியும மிழலை யாமே" (பண மேகராகக குறிஞசி 10) எனற ஆளுடையபிளளை யார தேவாரஙகள இஙகு நினைவு கூாதறபாலன மணணினலலோா பரவிய எழிசை இறைவனது புகழை உளளுறையாகக கொணடிருநதமையானும, இவை தேவருலகத துக கேட்கபபடுதலிலலை யாகலானும விணணவரும இவறறின வயபபட்டு இஙகு வரு தல இயல்பெனக

**பரவிய** - சிவபெருமானது திருவைநதெழுததை உட்கொணடு பரவிய மண ணுலகமேயனறிப பாதலமும விணணுலகமும பரவிய எனறலுமாம "எமமருஙகும பரபபினார" (953), "வையநதன னையுநிறைததது வானுநதன வயமாககி" (962) என பவை காணக 33

**விரவநறுங்**—எனபதும பாடம

959\. நலிவாரு மெலிவாரு முணாவொன்றாய நயததலினால்,
மலிவாயவெள் ளெயிறறரவ மயின்மீது மருண்டுவிழுஞ் ,
சலியாத நிலையரியுந தடங்கரியு முடனசாரும ,
புலிவாயின மருஙகணையும புலவாய புலவாயும். நச

(இ - ள்) நலிவாரும. நயததலினால - வருநதச செயகினறவாகளும அதனால வருநதுகினறவாகளும கொணட உணாசசி ஒனறாக நயபபாடு உறறமையினால , மலி வாய. விழும - வாயில மலியும வெளளிய பறகளையுடைய பாமபு இசையானமருட்சி யடைநது (தன பகையாகிய) மயிலினமேல விழும , சலியாத.. சாரும - சலிதத லிலலாத நிலையினையுடைய சிஙகமும பெரிய யானையினுடன சாாநது வரும , புலி வாயின புலவாய புலவாயும - புலியினது வாயின பககததில புலலைவாயிற கொணட மானும அணையும.

**(வி - ரை) நலிவார்** நலியச் செய்பவர் - துன்பம் விளைவிப்பவர். நலிப்பார் என்ப பிறவினையாகக் கொள்க. **மெலிவார்** - மெலியப்படுவோர். துன்பம் செய்யப் படுவோர். செய்ப்பாட்டு வினைமுறையே விவ் விகுதியும் **படு** விகுதியும் தொக்கன; உணர்ச்சி வேற்றுமை நீங்கியது குறித்தற்கு (விகிருதி - வேறுபாடு)

**உணர்வு ஒன்றாய் நயந்தல்** ஆவது - 'நாம் வலியோம் - இது வலியிலது - இது நமக்கு இரையாவது - இதனைக் கொல்வோம்' என்றும், 'நான் வலியில்லேன் - இதற்கு நான் இரையாவேன் - இது என்னைக் கொல்லும்' என்றும் இருபாலிலும் பகை உறவு என்ற தமது இயல்பாகிய உணர்ச்சி மறந்து, உள்ளத்தில் இசைநிறைத லால் இருபாலிலும் இசை ஒன்றேயாகிய ஒருணர்வுடையனவாகுதல். ஒன்றற் கொன்று பகையாகிய பாம்பும் மயிலும், அரியும் கரியும், புலியும் மானும் உடன்சார் தற்குரிய காரணத்தை விளக்கிக் காட்டியவாறு. இவ்வியல்பு எங்கும் கண்கூடாகக் காணத்தக்கது. மாணிக்கவாசகசுவாமிகள் தில்லைவனத்தில் சிவயோகம் பயின்று தவஞ் செய்திருந்தபோது பிராணிகள் வந்து அவரிடம் கூடின என்று "மானிரையுங் குயவரி யும் வந்தொருங்கு நின்றுரிஞ்ச மயங்கு கானத், தானிரைகன் றெனவிரங்கி மோந்து நக்க வானந்த வருட்கண் ணீரைக், கானிரைப்புள் ளினம் பருக" (திருவிளை - புரா - மண - பட - 96) எனக் கூறியதும் இக்கருத்தே பற்றியது.

**வாய் மலி வேள் எயிறு** எனக் பாம்பின் வாயினுட் பல் பற்கள் உண்டு அவற் றுள் நான்கு, விடத்தினை உகுக்கும் குழாய்போன்ற உள்துளையுடைய வெள்ளிய கூரிய பற்கள்* "தூம்புடைவால் எயிற்று அரவு" (திருமுருகாற்றுப்படை)

**அரவமும் மயிலும்** பகைமைபூண்ட பிராணிகள் மயில் பாம்பினைக் காணிற் கொத்திக் கிழித்துக் கொன்றுவிடும் "மஞ்ஞை குஞ்சரங் கோளிழைக்கும், பாம்பைப் பிடித்துப் படங்கிழித் தாங்கு" என்பது திருக்கோவையார் (21).

**சலியாத நிலை அரி** - காட்டு விலங்கினங்களுக்கெல்லாம் தலைமை பூண்டது சிங்கம். அதனது அசைவில்லா வீரத்தைக் குறிக்கச் **சலியாத நிலை** என்றார்

**புல்வாய** - புல்லைவாயிலே யுடையனவாகிய - புல் மேய்ந்து கொண்டிருந்த-மான் கள் மேலும் மேய்ந்து வயிறு நிறைத்துக் கொள்வதனை விடுத்து அங்கேலயிற் சில புல்லை வாயிற்கொண்டபடியே என்றதாம் "பானுரைவாய்த் தாய்முலையிற் பற்றும்இளங் கன்றினமும்" 955) என்றது காண்க "செவிக்குண வில்லாத போழ்து சிறிது, வயிற் றுக்கு மீயப் படும்" (குறள்). என்ற உண்மை இவ்விலங்கினங்களாலும் விளக்கப் பட்டது போலும் **புல்வாய்** - சிறிய வாயினையுடைய என்பாருமுண்டு 34

960. மருவியகால் விசைத்தசையா; மரங்கள்மலர்ச் சினைசலியா,
கருவரைவீ ழருவிகளுங் கான்யாறுங் கலித்தோடா;
பெருமுகிலின் குலங்கள்புடை பெயர்வொழியப் புனல்சோரா,
இருவிசும்பி னிடைமுழங்கா, வெழுகடலு மிடைதுளும்பா. கூரு

**(இ - ள்)** வெளிப்படை பொருந்திய காற்று விசையாக அசையா, மரங்களின் மலர்பொருந்திய கிளைகள் அசையமாட்டா, கரியமலையினின்றும் வீழ்கின்ற அருவி களும் காட்டாறுகளும் சத்தித்து ஓடமாட்டா, பெரிய முகிற்கூட்டங்கள் புடை பெயர்ச்சியை ஒழிந்து மழை நீரைப் பெய்யமாட்டா, ஆகாயத்தினிடை முழக்கம் செய்யமாட்டா, எழு கடல்களும் அலும்பமாட்டா

**(வி - ரை) மருவிய கால்** - கட்புலப் படாமல் பொருந்திய காற்று வடக்கி னின்றும் வந்து பொருந்திய என்றலுமாம். **விசைத்து அசையா** - தமக்கியல்பாயுள்ள இயக்கத்தின் வேகத்தில் அசையா, **அசைதல்** இயங்குதல். இது காற்றின் இயல்பு

*இதுபற்றி எனது "சேக்கிழார்" 100—104 பக்கங்கள் பார்க்க.

**மரங்கள் மலர்ச்சினை சலியா** - இது காற்று விசையில் அசையாத காரணத்தால் வருவது. மரங்களும் இசை வயப்பட்டுச் சலியாது நின்றன என்றலுமாம். **சலித்தல்** - அசைதல். " சராசரங்களெல்லாம் தங்க " (939), "நிற்பனவும (சரிப்பனவும்) இசைமய மாய " (961) என்றவை காண்க

**வரைவீழ் அருவிகளும் கான்யாறும் கலித்து ஓடா** - வரையின்வீழ் அருவிகள் மேலிருந்து கீழ்நோக்கி வருதலால் மிக்க வேகமாக வீழ்வன " பள்ளந்தாழ் உறுபுனலிற் கீழ்மேலாகப் பதைத்து " என்பது திருவாசகம் மேனின்று கீழ் வீழ்வதனுடன் மலைக் கற்களின் மோதுண்டு அவற்றினிடுக்குகளில் வருதலாலும் இவை மிக்க ஓசை செய்யும் இங்கு இசையின் காரணமாக இவையும் ஓசையின்றி மெல்லென ஓடின என்பது **கலித்தல்** - சத்தித்தல். நீரோட்டங்களும் ஓசையின் காரணமாகச் சுரந் தோடுதலும் சுரவாமற் றுழத்தலும் செய்வன என்பது இன்றும் காணத்தக்கது. கோயமுத்தூர்ச் சில்லா வெள்ளிமலைச் சாரலில் நீர் ஊற்றூறியோடும் பல சுனைகளுள் **கைதட்டிச் சுனை** என்பதொன்றுண்டு இது கைதட்டி விளித்து ஓசை செய்யின் அப்போது சிறிது அதிகமாக நீர்சுரக்கு மியல்புடையது

**முகில்கள் புடைபெயர் வொழிய** - இசையின் றன்மையாலும் முகில்களும் புடை பெயர்ச்சி ஒழிந்து எனக் **புடைபெயர்ச்சி** - ஓரிடத்தினின்றும் பிறிதோரிடம் பெயர்வதும், பல இடங்களினின்றும் போந்து செறிந்து கூடுதலுமாகிய அசைவுகள் " வாயுமிகச் சலிதத்தைவையும் திரட்டும் " (சிவப்பிரகாசம் - 27), " வண்கால் பரந்து சலித்தது திரட்டும் " (உண்மை விளக்கம் - 9) என்றபடி காற்றுச் சலித்தலினால் மேகங்கள் திரட்டப்படுவன. கால் விசைத்தசையா என்றதனாலும் **முகில்கள் புடை பெயர்** வொழிந்தன என்பதாம்

**புனல் சோரா** - மழைநீர் பெய்தல் இல்லை **சோர்தல்** - வீழ்தல் - பெய்தல்.

**விசும்பினிடை முழங்கா** - முகில்கள் தம் சோகக்கைகூர உள்வாக்கும் இடி முத லிய முழக்கங்களையும் ஆகாயத்திற் செய்யாவாயின முகில்கள் புடைபெயர் வொழியவே புனல் சோர்தலும் அதுகாரணமாக மின்சாரம் கூர்தந்து வானிடை முழங்குதலும் இலவாயின. இசையின் வசப்பட்ட முகில்களும் அசைவற்று நின்றன என்பது

**கடலும் இடைதுளும்பா** - காற்று விசைத்தசையாமல் நின்றதனால் கடலும் இசைவசப்பட்டுத் துளும்பாது அலையின்றி நின்றது என்பது 35

961. இவ்வாறு நிற்பனவுஞ் சரிப்பனவு மிசைமயமாய
மெய்வாழும் புலன்கரண மேவியவொன் றாயினவால்
மொய்வாச நறுங்கொன்றை முடிச்சடையா ரடித்தொண்டர்
செவ்வாயின் மிசைவைத்த திருக்குழல்வா சனையுருக்க. ௬௧

(**இ - ள்**) மொய்வாச உருக்க - மொய்த்த வாசனையுடைய நறிய கொன்றை மலரைச் சூடிய முடிச்சடையுடைய சிவபெருமானது அடித்தொண்டராகிய ஆனாயர் சிவந்த வாயின் வைத்து வாசித்த திருக்குழல் வாசனை உட்புகுந்து உருக்குதலினால், இவ்வாறு அசரங்களும் சரங்களும் இசைமயமேயாகித் தமது மெய்யும் அதில் வாழும் புலன்களும் கரணங்களும் இசையாகிய ஒரு தன்மை யடைந்தன

(**வி - ரை**) **நிற்பன சரிப்பன** - " சராசரங்களெல்லாம் " (939) என்றது காண்க. **நிற்பனவாகிய** உயிர்வகைகள், தாவரம் எனப்படுகின்ற மரம் செடி கொடி முதலியன. " மரங்கள் மலர்ச்சினை சலியா " (960) என முன்னர்க் கூறியது காண்க **சரிப்பன** - இயங்கும் உயிர்வகை இவை 955 முதல் 959 வரை கூறப்பட்டன.

**மெய்வாழும்** . ஒன்றாயின முன்னர் " உணர்வொன்றாய நயத்தலினால் " (959) என்றது காண்க **மெய்வாழும் புலன்கரணம்** - மெய்யும், அதில் வாழும் பொறி

களும், அவற்றை இயக்கும் காரணங்களும் எனக். மெய்யினைப் புலன்கள் இயக்க, அப் புலன்களை உட்காரணங்கள் இயக்க, அவற்றை உயிர் உணர்வு இயக்கும் என்பர். முன்னர் வாயிற்காட்சியுணர்வு தோன்றிப், பின் மானதக்காட்சியுணர்வு தோன்றி, அதன் பின்னர்த் தன்வேதனையுணர்வு உயிரின்கண் வந்து தோன்றும் எனவும், இதுவே பரம்பரையில் உணர்வு தோன்றும் முறையாம் எனவும், சிவஞானமாபாடியம், 4 சூத்; "மனமாதி" என்ற உதாரணவெண்பாவின் கீழ் உரைத்தவை பார்க்க.

**மேவிய ஒன்றியின் - ஒன்று** - ஒன்றே தேற்றமும் பிரிநிலையும் குறித்த ஏகாரம் தொக்கது. உள்ளே வந்து பொருந்தி நிறைந்த இசையுணர்வாகிய ஒன்றேயாயின. இவற்றின் அமைதிபற்றி 251—252 திருப்பாட்டுக்களின் கீழ் உரைத்தவை பார்க்க. **ஆல்** - அசை. ஒன்றிய மேவினவால் எனக் கூட்டி, இயக்குதல் இயக்கப்படுதல் என்னும் வேறுபாடின்றி ஒன்றிய மேவின என்றலுமாம்.

**உருக்க - ஒன்றியின** - என்று கூட்டுக. **உருக்க** உருக்கியதனால் காரணப் பொருளில் வந்த வினையெச்சம். **அடித்தொண்டர்** - சடையாரின் திருவடியிலே பதிந்த அன்புடன், மன முதலாயின மூன்று காரணங்களாலும் "அடியலலது பேணுதார்" (934). **மொய்வாச அடித்தொண்டர்** - ஆனயர் செழுங்கொன்றை மருங்கணைந்து (945), சடையார்போல நின்ற அந்நறுங்கொன்றையினை கோகோக்கி நின்றுருகி (946), அதனை உடையவராகவே கண்டு, அன்பு மடைதிறந்தாராதலின் அக் குறிப்புத் தோன்ற இவ்வாறு **கொன்றை முடிச்சடையார்** எனக் கூறினார். இங்குக் கொன்றை நீழலில் நின்று அன்புமடை திறந்து இசைபெருக்கிய ஆனயர், சடையாரின் திருவடி நீழலில் தாம் அமர்ந்திருப்பதாகிய ஒன்றிய சிந்தையினர் என்பார் **சடையார் - அடித்தொண்டர்** என்று கூறினார்.

**தொண்டர் செவ்வாயின்** - சுந்தரச்செங்கனிவாயும் துளைவாயும் தொடக்குண்ண வைத்து ஊதியதனை (952) **மிசைவைத்த** என்றார்.

**வாசனை** - வாசித்தல். வாசித்து (939), குழல் வாசனை (937, 965) உருக்கியதனால் புலன்கரணம் ஒன்றியின ஒன்றியினதன் விளைவை மேல் உரைக்கின்றார். 36

962. மெய்யன்பர் மனத்தன்பின் விளைந்தவிசைக் குழலோசை
வையந்தன் னையுநிறைத்து வானுந்தன் வயமாக்கிப்
பொய்யன்புக் கெட்டாத பொற்பொதுவி னடம்புரியும்
ஐயன்றன் றிருச்செவியி னருகணையப் பெருகியதால். ௩௭

**(இ - ள்)** வெளிப்படை. மெய்யன்பரது அன்பினால் விளைந்த குழலினது இசையோசையானது இந்த உலகத்தையும் நிறைவித்து வானுலகத்தினையும் தன் வசமேயாகச் செய்து, பொய்யன்பினுக்கு எட்டாதவரும், பொன்னம்பலத்தினில் திருக்கூத்து இயற்றுகின்றவரும் ஆகிய ஐயரது திருச்செவியின் பக்கத்தில் அணையும்படி பெருகிற்று.

**(வி - ரை) மெய்யன்ப**ராதலின் அவரது மனத்து அன்பின் விளைந்த குழலோசை ஐயர் செவியினருகணையப் பெருகியது என்பது குறிப்பு. இதனையே வலியுறுத்துவார் **பொய்யன்புக்கெட்டாத** என்று எதிர்மறை முகத்தானுங் கூறினார்.

**குழல் இசை ஓசை** - எனக். இசை ஓசை **நிறைத்து வயமாக்கி** - அணையப் பெருகியது எனக.

**வையத்தை நிறைத்தல்** - 955, 956, 959, 960 பாட்டுக்களினும், **வானத்தை வயமாக்குதல்** 957, 958 பாட்டுக்களினும் கூறினார். **திருச்செவியினருகணையப் பெருகியதன்** விளைவு மேல்வரும் மூன்று பாட்டுக்களானுங் கூறுவார்.

**நிறைத்து - வயமாக்கி - பெருகுதல்**-என்ற தொழிற்பாடுகளின் உள்ளுறை குறிக்கத்தக்கது. தூல சூக்கும காரணநிலைகளுக்கேற்றவாறு கூறியது கண்டுகொள்க. புடை

பெயர்ந்து ஒன்றை யொன்று பரம்பரையிற் றொடர்ந்து சென்று மறைவது ஒலியலைகளின் இயல்பு. நீரினுட் போகட்டதொரு கல்லினால் முதலில் அதனைச்சுற்றி மூண்ட அலைகள் உளவாம்; பின் அவற்றைத் தொடர்ந்து தளர்ந்த அலைகள் உளவாம். பின்னர் அவ்வாறு மெலிந்து கொண்டே சென்று இறுதியில் ஒன்று மசையாமை போல அவை மிக மெலிந்து காணப்படும். அது போலவே ஒலியலைகளும் உண்டாகும் இடத்தினின்றும் மேன்மேற் கிளம்பிச் சென்று சென்று இறுதியில் அதி சூக்குமமாகிய காரணத்தில் ஒடுங்கும். இங்கு ஆனாயர் குழலிசை ஓசை முதலிற் றூலமாகிய ஒலியலைகளாக எம்மருங்கும் பரவி வையத்தை நிறைத்து, அதன்பின் சூக்கும ஒலியலைகளாக மேற்பரவி வானத்தைத் தன் வயமாக்கி, அதன்மேல் அதிசூக்குமமாகிய காரண ஒலியுருவில் ஐயர் திருச்செவியின் அருகு அணையும்படி பெருகியது. அலைகள் முதலில் நாற்புறமும் சுருங்கக் கிளம்பிப் பின்னர் மேன் மேல் விரிவாகப் பெருகுமியல்பு பற்றிப் **பெருகியதால்** என்ற குறிப்பும் காண்க. முன்னர் "எம்மருங்கும் பரப்பினார்" (963) என்றதும் நினைவு கூர்க.

இஃது எல்லாக் குழலோசைகட்கும் எல்லா ஓசை ஒலிகட்கும் இயல்பாமே? எனின், அற்றன்று; பூதசம்பந்தமாய வையந்தனை நிறைத்த மட்டில் நின்று ஒழியும் ஏனைத் தொனியான்மக ஓசைகள் போலல்லாமல் இஃது அஞ்செழுத்தை உள்ளுறையாகக் கொண்டெழுந்த வாணன்மக ஓசையானதால் ஐயன் திருச்செவியி னருகணையப் பெருகியதெனக.

ஆனாயரது குழலிசை இம்மை, மறுமை, வீடு என்னு மூன்றினையும் தரவல்லதாயிற்றென்பதாம். வைய நிறைத்ததனால் இம்மையும், வானம் தன்வயமாக்கியமையால் மறுமையும், ஐயன்றிருச் செவியினருகணைதலால் வீடும் அளிக்கவல்லதாயினமை கூறப்பட்டது. இறைவனைப் பாடுதல் இம்மூன்று பயன்களையும் அளிக்கவல்லதென்பது "எந்தை புகலூர் பாடுமின் புலவீர்காள், இம்மையே தருஞ் சோறுங் கூறையும், ஏத்த லாமிடர் கெடலுமாம், அம்மை யேசிவ லோக மாள்வதற் கியாதுமையுற வில்லையே" (பண் - கொல்லி - திருப்புகலூர் - 1) என்ற ஆளுடைய நம்பிகள் திருவாக்கா னறிக.

**பொய்யன்புக் கெட்டாத - ஐயன்** - எனக் கூட்டுக. "பொக்க மிக்கவர் பூவு நீருங் கண்டு, நக்கு நிற்ப னவர்தமை நாணியே" என்பது தமிழ்மறை. ஐயனது **பொற்போது** என்றது மெய்ஞ்ஞானமேயான அம்பலத்தை. **எட்டாத பொற்போது** என்று கூட்டி உரைத்தலுமாம். **பொற்போது** - பொன்னம்பலம்.

**மெய் அன்பு** - மன மொழி மெய் என்ற மூன்றனுள் சிவபெருமானை யல்லாது வேறொன்றினையும் பற்றாத அன்பு. அங்ஙன மல்லாது தம்மையும் உலகையுமே பற்றுக்கோடாகக் கொண்டு செலுத்தும் அன்பு **பொய்யன்பாம்**.

**ஐயன் றிருச்செவியி னருகணையப் பெருகுதலாவது** கீழுள்ள தத்துவங்களை யெல்லாம் கடந்து சுத்த தத்துவத்தில் விளங்கும் இறைவனிடமும் செல்லும்படி வியாபித்தல்.

ஆயின் "சகஸ்ர சீர்ஷாத புருஷ சகஸ்ராட்ச சகஸ்ரபாத" எனவும், "ஆயிர ஞாயிறு போலு மாயிர நீண்முடி யானும்" (அப்பர் சுவாமிகள் - காந்தாரம் - திருவாரூர் - 8) எனவும், "ஆயிரங் கமல ஞாயி றாயிரமுக் கண்முக கரசர ணத்தோன்" (திருவிசைப்பா - சேந்தனார் - வீழி - 8) எனவும், "எங்கும் திருமேனி" (திருமூலர்) எனவும், "எங்கணும் பணிவதனங்கள்" (கந்தபுரா) எனவும் "எங்குஞ் செவியுடையாய" (திருவிளை - புரா ) எனவும் வரும் திருவாக்குக்களா லறியப்படுகின்றபடி எங்கும் நிறைந்து எல்லாம் கேட்பது இறைவனது தன்மையாதலின், இங்கு "ஐயன் றிருச்செவியி னருகணையப் பெருகியது" என்ற தென்னையோ? எனின், "அவன் மற்றிவ்விடங்களிற் பிரகாசமாய் நின்றே அல்லாதவிடத்து அப்பிரகாசமாய்

நிறலான" (சிவஞானபோதம் 12 சூத் 3 அதி) என்ற ஏதுவை விளக்குவாராகி, அம்முதல்வன் யாங்கணும் வியாபகமாய் நிற்பினும் இவ்விரண்டிடத்து (பத்தரது வேடமும் சிவாலயமும்) மாத்திரையே தயிரின் நெய்போல விளங்கி நிலைபெறறு, அல்லுழியெல்லாம் பாலினெய்போல வெளிப்படாது நிறறலான" என்று எமது மாதவச் சிவஞான சுவாமிகள் சிற்றுரையினுள் உரைத்தது கொண்டு இஃது அமைவு படுத்திக்கொள்ளத்தக்கது.

அன்பின் விளைந்த இசையாதல் பற்றியே, இறைவரும், இது கேட்டவுடன் வெளிப்பட்டுவந்தனா என மேல்வரும் பாட்டிற் கூறுதலும் கருதுக.

**திருச்செவி** - என்பது அரனறன காரசரணதி சாங்கமெல்லாம் அருளே என்ப, ஆதலின் 'சிவனடி சென்னி வைப்பாம்' என்பது போல உபசாரம் இறைவனுக்கு அருளே திருமேனியாம் அத்திருமேனியில் கண் செவி முதலாகிய அவயவப் பகுப்பெல்லாம் அருளே. இக்கருத்துப்பற்றியே "இத்தன்மை நிகழுங்கா ளிவாதிருத்தொண் டிருங்கயிலை, யத்தா திரு வடியிணைக்கீழ்ச் சென்றணைய வருடைய, மெய்த்தன்மை யன்புருங்கா தருளுத்தற்கு விடையவாதாளு, சித்தநிகழ வயிரவராயத் திருமலையின் றணைகின்றா" (25) என்று சிறுத்தொண்டநாயனா புராணத்துட் கூறுதலுங் காணக. 37

963. ஆனாய குழலோசை கேட்டருளி யருட்கருணை
தானாய திருவுள்ள முடையதவ வல்லியுடன்
கானாதி காரணராங் கண்ணுதலா விடையுகைத்து
வானாறு வந்தணைந்தா மதிநாறுஞ் சடைதாழ. ௩௮

(இ - ள்) வெளிப்படை. ஆனாயாது குழலிசை ஓசையினைக் கேட்டருளி, அருட்கருணையேயாகும் திருவுள்ளத்தினையுடைய தவவல்லியாகிய உமையம்மையாருடனே கூட இசைக்கெல்லாம் முதற்காரணராகின்ற கண்ணுதலையுடைய சிவபெருமான், விடையின்மேல் எழுந்தருளிப், பிறைமுளைத்தற்கிடமாகிய சடை தாழுமாறு வானவீதி வழியே வந்து அணைந்தனா.

(வி - ரை) **அருட்கருணை தவவல்லி** - உமையம்மையா சிவமும் சத்தியும் தீயும் சூடும் போலக் குண குணியாயப் பொருந்திய ஒரே பொருள் என்பதும், அருளே சத்தியாம் என்பதும் உண்மைநூற் றுணிபு, ஆதலின் **வல்லியுடன்** என்றும், **கருணைதான் ஆய** என்றும் கூறினா. தானே ஆகிய எனக் பிரிநிலை யேகாரம் தொக்கது. "அருளுண்டாம் ஈசற் கதுசத்தி" என்பது சிவஞானபோதம்.

**அருட்கருணை** சிவனது திருவருட் பெருமையைத் தமிழ்மொழி வழக்குப்பற்றி விளக்குவா **அருள்** என்றும், வடமொழி வழக்குப்பற்றி விளக்குவா **கருணை** என்றும் கூறினா. "ஒரு பொருட் பன்மொழி சிறப்பினின் வழா" என்ற விதிப்படி மிக்க பொருள் குறித்த தென்றலுமாம். "அருளவித் திட்டுக் கருணைநீ பாய்ச்சி" (குமரகுருபரா) என்றதும் காண்க. கருணை பாசநீக்கமும், அருள் சிவப்பேறும் தருவன என்று இங்கு விசேடவுரை காண்பாருமுண்டு.

**தானாய திருவுள்ளம்** - முற்றும் அருளேயாகிய திருவுள்ளம் அத்திருவுள்ளத்தில் நிகழ்வன அருளேயன்றிப் பிறிதில்லை என்பது. "உருவருள" (1 47) என்ற சிவஞானசித்தியார்த் திருவாக்கும், "அருளே யன்றி மற்றுப் புகன்றவையும் அருளொழியப் புகலொணாதே" (18) என்ற சிவப்பிரகாசமும் இங்கு நினைவு கூர்க.

**தவவல்லி** - தவமாவது சிவபூசை என்பதனை உயிர்கள் அறிந்து சிவபூசை செய்து உய்யும் பொருட்டுத் தவஞ்செய்து காட்டினா என்றது குறிப்பு. **வல்லி** - கொடிபோல் வாா. மெய்ப்பற்றி வந்த உவமஆகுபெயா. கொடி கொம்பினைப்பற்றி நிற்பதுபோலச்

சிவத்தைப்பற்றி நிற்பது அவரது அருளாகிய சத்தி எனக். இங்கு ஆனாயருக்கு அருள் செய்து தம் அருகு இருக்கும் நிலையைத் தர வருகின்றாராதலின் கருணை வல்லியுடன் விடையுகைத்து வருகின்றார் முன் உரைத்தலைவு பார்க்க.

கான **ஆதிகாரணர்** என்பது **கானாதி** என வந்தது தீர்க்க சந்தியென்ப. கானம் நாதத்தைப்பற்றிப் பிறக்கின்றது சூக்குமகாரணமாகிய நாதத்தைத் தமக்குத் திருமேனியாக உடையவராதலிற் சிவபெருமான் கானத்துக்கு ஆதிகாரணராவர் என்பது கருத்து. எவ்வகைக் கீதத்துக்கும் வேதத்துக்கும் பிரணவம் காரணம். சிவபெருமான் பிரணவ சொரூபன், ஆதலானும் ஆதிகாரணர் என்றார் "ஈசான: சர்வ வித்யானாம்" என்ற பதிவாக்கியத்தா லறியப்படுகின்றபடி கானம் முதலிய எல்லா வித்தைகளுக்கும் சிவனே இருப்பிடமும் பிறப்பிடமுமாயுள்ளவன் என்பதும் கருத்து. "நாதத்னு மநிசம் சங்கரம் நமாமி" எனவும், "சத்தியோஜாதாதி பஞ்சவக்த்ரஜ ச ரி க ம ப த நி ச சப்தஸ்வர வித்யாலோலம்" எனவும் வழங்கும் தியாகராச ஐயர் கீர்த்தனமும் காண்க.

**மதிநாறும் சடைதாழ - நாறுதல்** முளைத்தல் ஒரு கலையினோடடைந்த பிறைச் சந்திரன் பின்னர் வளரத் தொடங்கியதனால் **நாறும்** என்றார். **நாறும்** - இளமையாகிய என்றுரைப்பாரும் உண்டு. கொன்றையினைச் சடையார்போல நோநோக்கி நின்றுருகி இசைபெருக்கினாராதலின், "ஆரொருவ ருள்குவா ருள்ளத் துள்ளே யவ்வுருவாய் நிற்கின்ற வருளும் தோன்றும்" (திருத்தாண்டகம் திருப்பூவணம்-11), "யாதானு மெனநினைந்தாரக் கெளிதே யாகி" (நின்ற திருத்தாண்டகம்-7) என்றபடி சடைதாழ்ந்த திருமேனியுடன் தோன்றியருளினார் என்பது. 38

964\. திசைமுழுதுங் கணநாதர் தேவர்க்கு முன்னெருங்கி
மிசைமிடைந்து வரும்பொழுது வேற்றொலிகள் விரவாமே
யசையவெழுங் குழலொலிதந் தஞ்செழுத்தாற் றமைப்பரவும்
இசைவிரும்புங் கூத்தனா ரெழுந்தருளி யெதிர்நின்றார். ௩௯

(இ - ள்) வெளிப்படை. எல்லாத் திசைகளினின்றும் தேவர்களுக்கு முன்னே மேல் நெருங்கிச் சிவகணநாதர்கள் வரும்பொழுது, குழலிசைக்கு மாறாகிய வேறொலிகள் இடைப்புகுந்து கலக்காமல், அசைய எழுகின்ற குழல்நாத இசையினில் அமைத்த திருவைந்தெழுத்தினாலே தம்மைப் பரவுகின்ற இசையினை விரும்புகின்ற அருட்கூத்தராகிய சிவபெருமான் (மேற்சொல்லியவாறு) எழுந்தருளி வந்து எதிரில் நின்றார்.

(வி - ரை) **கணநாதர்முன் . நெருங்கி** - இறைவனது திருமுன்பு, கணநாதர்கள் தேவர்களுக்கு முன்னே நிற்கும் உரிமையுடையவர்கள் இதற்கு முன் தேவர்கள் வந்து கூடி இசையின் மயங்கி யணைந்ததனை 957-958 பாட்டுக்களிற் கூறினார் அவர்களுக்கு முன் இடம் பெற்று இருக்கவேண்டியவரும் சிவபெருமானுடன் வருவோரும் ஆதலின் சிவகணங்கள் நெருங்கித் தேவர்களை ஒதுக்கி முற்பட்டு வந்தனர் எனக் "தேவர் கணங்களெல்லாம் நமமிற்பின் பல்ல தெடுக்க வொட்டோம்" திருப்பொற் - 5) என்ற திருவாசகமும் காண்க இவ்வாறு இசையரங்கு முதலியவற்றில் தகுதியில்லாதார் முன் வந்து கூடிக் கொள்ளுதலும், தக்கவர் பின் வந்து அவர்களை ஒதுக்கி யொதுக்கி முன்னிருத்தலும் இயல்பாக இந்நாளிலும் காணும் காட்சியாம்.

**வேற்றொலிகள் விரவாமே இசை விரும்பும்** - என்று கூட்டுக. இறைவர் தம்முடன் வரும் பூதகணங்கள் முதலாயினார் முழக்கும் முழவு சங்கம் முதலிய பலவகை இயங்களின் ஓசை விரவின், குழலின் ஓசை கெடுமாதலின் அவை விரவாமே (வேறொரு ஒலியும் உடன் கலக்காமல்) தனிக்குழலிசையைக் கேட்க விரும்பினார் என்பதாம்- பூதகணங்கள் சத்தமின்றிப் புடைசூழ என்றபடியாம் "தொண்டரை யாளும் தொழில

கணடே, வீதியி லாடிப பாடி மகிழநதே மிடைகினறா, பூதியி னீடும பலகண நாதா புகழவீரா" (ஏயாகோன - புரா - 368) என மறறை யிடஙகளிற கூறுமாறும காணக

**அசைய எழும் குழல் நாதம்** - இசை ஒலியலைகளாகப புடைபெயாநது பரமபரை யிற பரவி மேறசெலலும இயலபுடைய குழலநாதம எனபாா **அசைய எழும்** எனறா மேல 962-ல உரைததவை பாாகக

நாதததாற பரவும எனறது, **நாதத்து அஞ்செழுத்தாற் பரவும்** எனறது, குழலின இசைநாததலுககனறி, அவவிசையின உள்ளுறையாகக கொணட ஐநதெழுததாற பர வியதனாலே சிவபெருமான வெளிபபடடு வநதனா எனறறிவிததறகு அதுகாரண மாகவே **இசை விரும்பும் கூத்தனூர்** எனறும கூறினா

**எதிர் நின்றார்**-"சிவனெனு மோசை யலல தறையோ வுலகிற றிருநினற செமமை யுளதே", "பவனெனு நாமம பிடிததுத திரிநது பனறு ளழைததால, இவனெனைப பனறு ளழைபபொழி யானென றெதிர்ப்படுமே" எனறு அபபாசுவாமிகளருளியபடி நாதத திசையினால ஐநதெழுததாகிய சிவநாமததினைப பிடிததுப பனறுளழைததுப பரவிய ஆனயா முனபு, சிவபெருமான **எதிர்ப்பட்டு** நினறனா அவரது நாமமே திருவைந தெழுததாம எனபது "ஆலைப படுகருமபின சாறு போல வணணிககு மைநதெழுதத நாமத தானசாண", "நின னாமத திருவெழுத தஞசும தோனற", "படைககல மாகவுன னாமத தெழுததஞசென னாவிறகொணடேன" எனபன வாதிய திருவாககுககளால அறியபபடும

**கூத்தனூர்** - அருடகூத துடையாா நடராசா அருளபுரிய வருகினறாராதலின இபபெயாாற கூறினா முனனாப "பொறபொதுவி னடமபுரியும ஐயன" (965), எனறும, பினனாப "பொறபொதுவி னிடைபபுககாா" (966) எனறும கூறிய கருததுமிது 401, 437, 488, 648, 897, 923, முதலியவறறானும இககருததுப பெறபபடுதல காணக. 39

965. முனனினற மழவிடைமேன முதலவனு ரெபபொழுதும
செநநின்ற மனபபெரியோா திருககுழலவா சனைகேடக
"இஙகினற நிலையேநம பாலணைவா" யெனவவரும
அஙகினற நிலைபெயாபபா ரையாதிரு மருஙகணைநதாா ௪௦

(இ - ள்) வெளிபபடை (அவவாறு எதிாபபடடு) முனனே நினற இளமையாகிய விடையினமேலவநத முதலவனாா, செமமைபொருநதிய மனததினையுடைய பெரியோ ராகிய ஆனயாது திருககுழல வாசனையை எபபொழுதும கேடடுககொணடிருபபதற காக, "இஙகுநினற இநநிலைமையாகவே நமமிடதது நீ அணைவாயாக!" எனறருளிச செயய, ஆனயரும அவவாறே அஙகுநினற அநநிலையினைப பெயாநது ஐயரது திரு மருஙகில அணைநதனா.

(வி - ரை) எபபொழுதும வாசனைகேடக - முதலவனாா - "அணைவாய" என, அவரும பெயாபபாா - மருஙகு - அணைநதாா எனறு கூடடி உரைததுககொளக

**செந்நின்ற மனப்பெரியோர்** செமமையில நினற மனம செம்மை சிவததின நிறைவாம தனமை "வளளலாா தமைததிசை நோககிச, சென்னி மேறகரங குவிததுவீழந தெழுநதுசெந நின்று" (திருஞான - புரா - 1053) எனறும, "கரு மென சுருடகுஞசி யுடனலையச செநநின்று" (ஷை 50) எனறும, "அடிககீழச சோநது வீழநது செநநின்று" (ஏயாகோன புரா 240) எனறும உரைததவை மேனியின செமமைநிலை குறிததன இஙகு அது மனததின செமமைநிலை குறிதத தெனபாா **செநநின்ற மனம்** எனறாா மனசசெமமையின பெருமை கருதியே இவரது குழல வாசனை கேடக இறைவா விருமபினா எனக காரணங குறிபபாா உடமபொடு புணாததி யோதினா.

**இந்நின்ற நிலையே** - இங்குக் குழல் வாசித்து நின்ற இந்நிலையில் வண்ணமே. **என** - என்றருளிச்செய்ய

**அவரும்** - அவ்வாறருள்பெற்ற ஆனாயரும்.

**அந்நின்றநிலை பெயர்ப்பார்** - " இந்நின்றநிலை " என்றதற்கேற்ப **அந்நின்றநிலை** என்றார் **பெயர்ப்பார்** - இடம் பெயர்ந்து செல்வாராகி கொன்றையின் நீழலில் நின்று வாசித்த அவ்வண்ணமாகக் குழல் வாசித்துக்கொண்டே சிவபெருமானது மருங்கில் அமர்கின்றனராதலால் அவரது அத்திருக்கோலத்தை உச்சிமுதல் அடிவரை முறையாகப் படம் வரைந்து ஆசிரியர் காட்டிய தன்மையாக மேல் 940—943வரை திருப்பாட்டுக்களிற் கண்டதனை இங்கு நினைவு கூர்க.

**வாசனை** - வாசித்தலை இரண்டனுருபு தொக்கது 937, 961 பார்க்க **கேட்க** - என்றும் கேட்டுக்கொண்டிருக்கும்பொருட்டு

**திருமருங்கு** - பக்கம், சாமீபம் என்ற நிலை 40

966 விண்ணவர்கண் மலர்மாரி மிடைந்துலக மிசைவிளங்க,
எண்ணிலரு முனிவர்குழா மிருக்குமொழி யெடுத்தேத்த,
அண்ணலார் குழற்கருவி யருகிசைத்தங் குடன்செல்லப்,
புண்ணியனு மெழுந்தருளிப் பொற்பொதுவி னிடைப்புக்கார் ௪

(இ - ள்) வெளிப்படை தேவர்கள் பொழியும் கற்பகப் பூமழை நெருங்கி உலகின்மேல் விளங்கவும், அளவில்லாத அருமுனிவர் கூட்டங்கள் மறைமொழிகளாலே எடுத்துத் துதிக்கவும், பெருமையுடைய ஆனாயர் குழலிசையை வாசித்துப் பக்கத்தில் உடன்செல்லவும், புண்ணியப் பொருளாயுள்ள சிவபெருமான் அங்குநின்றும் எழுந்தருளிப் பொன்னம்பலத்தினிடைப் புகுந்தருளினார்

(வி - ரை) **விண்ணவர்கண் மலர்மாரி** - தேவர்கள் பொழியும் பூமழை **மலர்** - கற்பகமலர் இவ்வுலகில் தெய்வ அற்புதங்கள் நிகழும்போது தேவர்கள் பூமழை பொழிவர் 398 முதலியவற்றுள் முன்னுரைத்தவை பார்க்க தேவருலகத்தில் இவ்வகைத் திருவருள் வெளிப்பாடான நிகழ்ச்சிகள் நிகழ்தற்கிடமில்லையாதலின், அவர்கள் பூவுலகின் இவை நிகழக் கண்டபோது இவ்வாறு பாராட்டிப் பூமழை பொழிவர்.

**இருக்குமொழி** - வேதமந்திரங்கள் **இருக்கு** - இங்கு வேதப் பொதுமை குறித்தது இறைவன் றிருவாக்கில் **இருக்கும்மொழி** எனப்படும், **என்றும் இருக்கும்** நித்திய மாயின மொழி எனப்படும் குறிப்பு மொழிகளால் ஏத்த எனக்

**அண்ணலார்** - பெருமையுடையவர் உலகில் அவரது பெருமை விளங்கிய இடமாதலின் இப்பெயராற் கூறினார்.

**குழற்கருவி இசைத்து அங்கு உடன்செல்ல** - குழலவாசனை கேட்க, " நம்பால் அணைவாய் " என்று அருளச்செய்யப் பெற்றாராதலின், அவ்வாணையின்படியே அருகு குழல் இசைத்துச் சென்றார் அன்றுபோலவே இன்றும் என்றும் குழல் வாசித்து ஐயரின் அருகு ஆனாயர் எழுந்தருளி யிருக்கின்றார் எனக்.

" நான் மகிழ்ந்து பாடி அறவாநீ ஆடும் போதுன் னடியின்கீ ழிருக்க " வேண்டும் என்று அம்மையார் தாம் வேண்டிக்கொண்டபடி ஐயரது " எடுத்தருளும் சேவடிக்கீழ் என்றுமிருக்கின்றார் " என்ற சரிதம் இங்கு நினைவு கூர்தற்பாலது. " இடையறுமற் குமபிடும் கொள்கை யீந்தார் " (489), " தமமுன் னெழுதிருக்கும் அழிவில் வான பதங் கொடுத்து " (548), " கணத்தின் முன்னுங் கோமுதற் றலைமை பெற்றார்" (605), ' என்வலத்தில் மாறிலாய் நிற்க " (829), துணையடிகள் தொழுதிருக்க " (திருநாளை - 36), ' நம மனனுலகு பிரியாது வைகுவாய " (திருக்குறிப்பு - 127), " அரனார் மகனா ராயினார் " (சண் - புரா - 59), " சிவலோகத்திற் பழவடிமைப் பாங்கருளி"

(சாக் - புரா - 17), "என்றும் பிரியா தேயிறைஞ்சி யிருக்க" (சிறுத் - புரா - 87), "வன்றொண்ட ராலால சுந்தர ராகித்தாம் வழுவாத, முன்னை நல்வினைத் தொழிற் றலை நின்றனர், முதற்சேரர் பெருமானு நன்மை சேர்கண நாதரா யவர்செய்யு நயப் புறு தொழில்பூண்டார்" (வெள் - சருக் - 49), "கமலினி யாருட னனிந்திதை யாராகி, மலைத் தனிப்பெரு மானமகள் கோயிலிற் றந்தொழில் வழிநின்றார்" (ஷை 50) முதலியவவையும் காண்க

**புண்ணியனார்** - புண்ணியங்களுக்கெல்லாம் பொருளாயும், பிறப்பிடமாயும், இருப்பிடமாயும், சேர்விடமாயும் உள்ளவர். சிவபெருமான்

---

**சரிதச் சுருக்கம்:**—சோழநாட்டின் ஓர் உட்பகுதியாகிய **மேன்மழ நாடு** என்பது நீடும் வளத்தினையுடைய நீர்நாடாம். அதில் தாமரைகள் பூத்த நீர்நிலைகளும் குளிர்ந்த தேமாஞ் சோலைகளும் உண்டு கமுகு வாழை முதலியன அந்நாட்டினின் மிகுந்த பயிர்கள். இவ்வாறுள்ள மருதத்தினைச் சூழ்ந்து ஒருபுறம் காட்டாரம்பமாகிய முல்லைப் பகுதியும் உண்டு இவ்விரண்டும் ஒன்றுகூடுவதால் இவற்றின் ஒழுக்கமும் பொருள்களும் ஒன்றுகூடி மயங்கிய திணைமயக்கமும் இங்குக் காணத்தக்கது

இப்படித்தாகிய மேன்மழநாடு மண்ணுலகிற்கு அருங்கலம்போல உள்ளது அதற்கு மங்கலமாகியது **திருமங்கலம்** என்ற அதன் வாழ் மூதூராகும். அப்பதியில் நீடிய பெருங்குடிகளுள் ஒன்றாகிய **ஆயர்** குலத்தின் குலவிளக்குப்போல **ஆனாயர்** என்ற பெரியார் அவதரித்தார் அவர் தூய திருநீற்றினை விரும்பும் திருத்தொண்டில் நின்றவர், மன மொழி மெய் என்ற முக்கரணங்களாலும் சிவபெருமான் திருவடிகளை யல்லாது வேறொன்றினையும் பேணாதவர், தமது குலத்தொழிலாகிய பசுக் காத்தலைச் செய்வாராயப் பசுக்களைச் சேர்த்து, அகன்ற புறவிற் கொண்டுசென்று, அச்சமும் நோயும் அணுகாமற் காத்து, அவை விரும்பிய நல்ல புல்லும் நன்னீரும் ஊட்டிப், பெருகுமாறு காத்துவருவார். இளங் கன்றுகள், பாலமறை நாகிளம்பசு, கறவைப்பசு, சினைப் பசு, புனிற்றுப்பசு, விடைக்குலம் என்பனவாக அவற்றை வெவ்வேறு பகுத்துக் காவல் புரிவார். இவ்வாறு ஆனிரை காத்துத் தம் சொல்வழிக் கோவலர் தொழில் புரிந்துவர நின்ற இவர், சிவபெருமான் றிருவடியில் அன்புபொருந்திய இசையினையுடைய துளைக் கருவிக் குழல் வாசித்தலை மேற்கொண்டொழுகினார் இசைநூல் விதிப்படி அமைத்த வேய்ங்குழலில் சிவபெருமானது திருவைந் தெழுத்தையும் ஏழிசையின் சுருதிபெற வாசித்துச் சராசரங்களெல்லாம் தமது கருணை பொருந்தக் குழலிசையமுதம் அளித்து வருவாராயினார்

இப்படி நியதியாக ஒழுகுபவர், ஒருநாள், தமது சிகழியிற் கண்ணி செருகி, நறு விலி புனைந்து, கருஞ்சுருளின்புறங் கட்டி, வெண்காந்தட் பசிய இலைச்சுருளிற் செங் காந்தட் பூவினை வைத்துக் காதில் அணிந்து, கண்டோர் மனங்கவர்த் திருநெற்றியில் திருநீற்றினை ஒளிபெற இட்டு, அதனைத் திருமேனியிலும் மார்பிலும் பூசி, முல்லை மாலை யணிந்து, இடையில் மரவுரியுடுத்து, அதன்மேல் தழைப்பூம்பட்டுத் தானை அசையக் கட்டி, திருவடியில் செருப்புப் பூண்டு, **கையினில் வெண்கோலும் வேய்ங் குழலும்** விளங்கக் கொண்டு, கோவலரும் ஆவினமும் சூழப் பசுக்காக்கப் புறம்போந்தார்

போந்த அவர் அங்கு மாலைபோன்ற பூங்கொத்துக்களும் கனிகளும் நிறைந்த தொரு கொன்றையினைக் கண்டார் அது மனத்துள்ளே எப்போதும் கண்டுகொண் டிருந்த, சடையிற் கொன்றைமாலை சூடிய சிவபெருமானைப்போல அவருக்குத் தோன் றிற்று தோன்றவே, அதனை நேர்நோக்கி நின்று உருகினார் ஒன்றுபட்ட சிந்தை யில் ஊறிய அன்பு தம்மையுடையவர்பால் மடைதிறந்த நீர்போலப் பெருகிற்று. அன்பு உள்ளூறிப் பொங்கிய அமுத இசைக்குழலோசையில் சிவபெருமானது திரு வைந்தெழுத்தினையும் உள்ளுறையாக அமைத்து, எல்லா வுயிர்களும் எலும்புங் கரையும

படி வாசிக்கத் தொடங்கினார். நூல் விதிப்படி அமைந்த வங்கியம் என்னும் வேய்ங் குழலின் தனித்துளையில் ஆனாயர் மணியதரம் பொருந்த வைத்து, ஏழிசை முறைப் பட, இசையிலக்கணம் எல்லாம் அமையச்செய்து, திருவைந் தெழுத்தை உள்ளுறையாகக் கொண்ட குழல் இசை ஒலியை எம்மருங்கும் பரப்பினார். அது கற்பகப்பூந் தேனும் தேவாமுதமும் கலந்து வார்ப்பதுபோல எல்லா வுயிர்களுள்ளும் புகுந்து தேக்கிற்று.

ஆனிரையும் கானவிலங்கும் இசைவயப்பட்டுத் தம் உணவும் மறந்து மயிர் முகிழ்த்து வந்தணைந்தன. ஆடும் மயிலினமும் மறப்பறவைப் புள்ளினமும் தம்மை மறந்து இசை நிறைந்த உள்ளமொடு படிந்துவந்தணைந்தன. ஏவல்புரி கோவலரும் தம் தொழில் செய்தலை மறந்து நின்றனர். பாதலத்தின் நாகர்கள் - மலையின்வாழ் அரமகளிர் - விஞ்சையர், கின்னரர் முதலிய தேவகணங்கள் தேவமாதர்கள் என்றிவர்களும் குழலிசையின் வசப்பட்டவராகித் தத்தம் உலகங்களினின்று வந்து அணைந்தனர். நலிவாரும் மெலிவாரும் தம்மியல்பு மறந்து இசையுணர்விலாகிய உணர்ச்சி ஒன்றேயாகி நயத்தலினால், அரவும் மயிலும், அரியும் கரியும், புலியும் மானும் என்றித்திறத்தன வாகிய உயிர்வகைகள் தத்தமது பகைமையை மறந்து ஒன்றுகூடிவந்து கூடின. காற்றும் விசையில் அசையா. மரமும் சலியா. மலைவீழருவிகளும் கானயாறும் கலித்தோடா. வானமுகிலும் ஆழ்கடலும் அசையா. இவ்வாறு திரப்பனவும் சரிப்பனவும் ஆகிய எல்லாம் இசை மயமாகிப் புலனும் கரணமும் ஒன்றாயின.

ஆனாயர் இசைத்த குழலிசையானது வையத்தை நிறைத்தது, வானத்தையும் தன்வசமாக்கிற்று, மேல் ஐயரது திருச்செவியினருகணையவும் பெருகிற்று. சிவபெருமான் இடப வாகனத்தின்மேல் உமையம்மையாருடனே எழுந்தருளி எதிர் நின்று காட்சி தந்தனர். அக்குழல் வாசனை கேட்க, "இந்நிற்ற நிலையே நம்மிடத்தில் அணைவாய்" என்றருளிச்செய்தனர். தேவர்கள் பூமழைபொழிய, முனிவர்கள் துதிக்கக், குழல் வாசித்துக்கொண்டே அந்நின்ற நிலைபெயர்ப்பாராய ஆனாய நாயனார் உடன்செல்லச் சிவபெருமான் பொன்னம்பலத்துள் எழுந்தருளினர்.

---

**தலவிசேடம் :—திருமங்கலம்**-இத்தலம், தென்னிந்திய இருப்புப்பாதை, திருச்சினாப்பள்ளி - விழுப்புரம் வழியில், லால்குடி என்ற நிலயத்தினின்று வடமேற்கில் கற்சாலை வழியாய் 2 நாழிகையில் உள்ள பூவாளூரை அடைந்து, அங்கு நின்றும் மேற்கே மடசாலைக் கரை வழியாய் ஒருநாழிகை யளவில் அடையத்தக்கது. காவிரிக்கு வடகரையில் உள்ளது. பூவாளூரிலிருந்து செல்லும் மடசாலைக்கரை வழியில் ஆறு குறுக்கிடுவதனால் மழைக்காலத்திற் செல்வது கடினம். லால்குடி என்பது திருத்தவத்துறை என்ற தலமாகும். இதற்குப் பதியளித்த தலமாகிய இத்திருத்தவத்துறையைத் திருஞானசம்பந்த சுவாமிகள் தரிசித்துப் பதிகம் பாடியருளினார் என்பது பெரிய புராணத்தினாலறியப்படும் (திருஞான - புரா - 347) திருமங்கலம் கோயிலினுள் உட்சுற்றில் வடமேற்குப் பாகத்தில் ஆனாயர் சிவப்பேறு பெற்ற இடம் தனியாக வகுக்கப்பட்டுள்ளது. அங்குக் கொன்றை நீழலில் நாயனார் குழலிசை வாசிக்கும் திருவுருவங்கள் அமைக்கப்பட்டுப் பூசிக்கப்படுகின்றன. ஆனாயர் திருவுருவம் செப்புப்படிமமும் உண்டு. அவரது உற்சவமும் கொண்டாடப்படுகின்றது. இத்தலத்தில் இரயிக்குவ முனிவர் தமது மூதாதைகளின் நற்கதியின்பொருட்டுத் தவஞ்செய்ய இறைவ னாணையால் உத்தரகயா பற்குனி ஆறு இங்கு இறங்கிவந்தது. இரயிக்குவரது ஆச்சிரமத்தில் இருந்த மானைச் சுவேதகிரி அரசனான சுந்தரன் வேட்டையிற் கொன்றுவிட அவர் அவனைச் சாம்பராகும்படி சாபமிட, அவன் சாப நீக்கம்பெறவேண்டிக்கொள்ள அவரும் இரங்கி, மறு பிறவியில் மன்மதனாகப் பிறந்து சிவபிரானது நெற்றிக் கண்ணினால் சாம்பராகி, மனைவி இரதி வேண்ட மீள வுருவமடையும்படி அருளியபடியே இங்கு

இரதிதவஞ்செய்து பதியை யடைந்தனள் என்பது தலமான்மியம். ஒருகாலத்தில் அசுவினி தேவர்களுக்கு அவிப்பாகங் கொடுக்க மறுத்த இந்திரனைப் பிருகுபுத்திராகிய சியவன முனிவர் அரசிழக்கும்படி சபித்தனர். பின்னொருகாலத்தில் இத்தலத்தில் தவஞ்செய்த உதங்க முனிவருக்கு அமிர்தங் கொடுக்க மறுத்த இந்திரனைத் தரித்திரனாகும்படி அவர் சபித்தனர். இந்திரன் இத்தலத்திற் பூசித்து இந்த இரண்டு சாபங்களினின்றும் நீங்கினன். இலக்குமி பூசித்துப் பேறுபெற்றனள். பரசுராமர் பூசித்துத் தாயைக்கொலைப் பழியினின்றும் நீங்கினர்.

இத் திருக்கோயிலுக்குத் திருமதில் முதலிய கற்றிருப்பணிகள் நிறைவேறிச் சென்ற வெகுதானிய ஆண்டு (1938) ஆனித்திங்கள் 12-ம் நாளில் மகாகும்பாபிடேகம் நிறைவேறியது.*

இத் திருக்கோயில் பண்டைச் சோழ மன்னர்களால் கட்டப்பட்டதென்பது சுவாமி கோவிலைச் சுற்றிச் சுவரில் பொறித்துள்ள பழமையான கல்வெட்டுக்களா லறியலாம். அவற்றிற் சோழர்களால் கொடுக்கப்பட்ட நன்செய் புன்செய் கிராமங்களின் விவரமும், பூசை முறைகளும் காணப்படும். நிலங்களினின்று ஆண்டு ஒன்றுக்குப் பதினாயிரம் வெண்பொன் வரவுவரும். இதனுடன் இணைக்கப்பட்ட நான்கு சிறு கோயில்களும் உண்டு. அவற்றின் படித்தரமும் இதில் அடங்கும். சுவாமி பெயர் - **சாமவேதீசுவரர்**, அம்பிகை **உலகநாயகியம்மையார்**.

---

**கற்பனை** :— **1.** நீர்வளம் நிலவளம் மிகுதியாயின், சிலஅறிவுகளுடைய வண்டு, கயல், மேதி முதலிய பிராணிகளும் சுகவாழ்க்கையான இருக்கைகளைத் தேடியடைவன.

2. நீரின் அலையில் வரும் சில சங்குகள் தவழ்ந்து மரங்களின் உச்சியிலும் ஏறித் தங்கு மியல்புடையன.

3. ஆன்கன்றும் மான்கன்றும் வெவ்வேறு நிலத்தனவாயினும் ஓரினத்தைச் சார்ந்தனவாதலின் தம்மில் உறவுகொள்ளும் தன்மையுடையன. அதுபோல அறிவோரும் நல்லோரும் எந்நிலத்தாராயினும் கூடியபோது உறவு பூண்பர்.

4. வெவ்வேறியல்பினவாகிய முல்லை, மருதம் முதலிய திணை நிலங்கள் அடுத்தடுத்துள்ளபோது ஒன்றன் ஒழுக்கமும் பொருள்களும் மற்றொன்றில் வந்து கலந்து விரவவும்படும்.

5. ஒரு குலத்தில் ஒரு பெரியார் அவதரிப்பாராயின் அவரால் அக் குல முழுதும் விளக்கம் பெறும்.

6. மனம் வாக்குக் காயம் என்ற மூன்று கரணங்களாலும் சிவபெருமான் றிருவடிகளையல்லாது பிறிதொன்றினையும் பேணார் பெரியோர்.

---

*இப் புராண வரலாறுகளைச் சிவ விஷ்ணு க்ஷேத்திர விளக்கம் என்ற நூலிலிருந்து எடுத்து இத்தல ஆலய விசாரணைக் கருத்தரிலொருவரும் என்து நண்பரும் அன்பருமாகிய திரு. தி. வே. அரங்கசாமி ஐயர், பி. ஏ. அவர்கள் எழுதி யுதவியதனோடு இத்தலப் படங்களும் உதவினர். இவருக்கு என் நன்றியுரியது.

இக் கோயிலின் தருமகர்த்தர்களாயிருந்த சகோதரர்கள் அன்பர்கள் சம்புலிங்க முதலியாரும் கந்தசாமி முதலியாரும் இதன் நில வருவாய்கள் பலரால் விழுங்கப்பட்டனவற்றை நீதிமன்ற மூலம் நீண்ட வழக்குக்கள் இட்டு மீட்பதிற் பெருமுயற்சி செய்து மீட்டுச் சுவாமிக்குப் பெருவருவாய் உண்டாக்கினதுமன்றித் திருப்பணியையும் தொடங்கிச் சிலபாகம் செய்தனர். அவர்கள் செய்யாது விடுத்த எஞ்சிய திருமதில் திருப்பணியும் பிறவும் பெருமுயற்சிசெய்து மேற்கண்ட அன்பர் தி. வே. அரங்கசாமி ஐயர் முற்றுப்பெறச் செய்ததுமன்றி மகா கும்பாபிடேகமும் மண்டலாபிடேகமும் நிறைவேற்றினர்.

7. ஆனிரைகளை அகன்புறவிற் கூட்டிக் கொண்டு சென்று, அவற்றுக்குத் தீய விலங்குகளாலும் நோய்களாலும் வரும் ஏதங்களை நீக்கிக் காத்து, நல்ல புல்லுணவும் நல்ல நீரும் ஊட்டி, அவை பெருகும்படி வளர்த்துக் காத்தல் பசுக்காக்கும் முறை

8. இளங் கன்றுகள் - பால்மறை நாகு - கறவைப் பாற்பசு - சினைப்பசு - புனிற்றுப் பசு - விடைக்குலம் என்றிவ்வாறு ஆனிரைகளை வெவ்வேறு வகுத்துப் புறவில் மேய்த்தும், தொழுவங்களிற் சேர்த்தும் வளர்த்தலும் பசுகாக்கும் முறையாகும்.

9. ஆனிரைகாப்போர் வேய்ங்குழலிசை வாசித்தலும் வழக்கு அது பசு காத்தலுக்கும் துணை செய்யு மியல்புடையது.

10. சிவபெருமானது மகாமந்திரமாகவும், எல்லா மந்திரங்களுக்கும் மேலாகிய ஆதிமந்திரமாகவும் உள்ளது சிவநாம மந்திரமாகிய திருவைந்தெழுத்தே யாகும்.

11. திருவைந்தெழுத்தைச் சிவனிடத்து இடையறாது பெருகும் மெய்யன்புடன் உள்ளங் கசிந்து ஓதுவோர் சிவானந்தப் பெருவாழ்வாகிய முத்தியை யடைகுவர்

12. சிவநாமமாகிய திருவைந்தெழுத்தை உள்ளுறையாகக் கொண்டு இசைநூல் விதி தவறாது ஏழிசையின் சுருதிபெற விதிப்படி அமைந்த வேய்ங்குழலால் வாசித்தால் அதனை வாசிப்போர்க்கும் கேட்போர்க்கும் சிவபெருமானிடத்தில் அன்பு வளரும்

13 இசைநூல் விதிப்படி வேய்ங்குழலில் மெய்யன்புடன் திருவைந்தெழுத்தை வாசிக்கும் இன்னிசை எல்லா வுயிர்களையும் தன்வயமாக்கி உருக்கவல்லது, சிவபெருமான் றிருச்செவியினருகணையப் பெருகி அவரை எதிர்வந்து அருள்ச் செய்யவும் வல்லது

14 அசேதனங்களாகிய காற்று, அருவி, முகில், கடல் முதலியனவும் இசைநூல் விதிப்படி வேய்ங்குழலில் திருவைந்தெழுத்தை அமைத்து அன்புடன் ஊதப்படும் குழலிசையின் வசப்பட்டு நிற்பன என்றால், அறிவுடைய சராசரங்களாகிய ஏனை உயிர்கள் ஈடுபடுதல் ஆச்சரியமன்று.

15 ஒன்றுக்கொன்று பகைமையுடைய உயிர்களும் வேய்ங்குழலின் தெய்வ இசையமுதின் வசப்பட்டபோது தத்தம் பகைமையை மறப்பனவாகும் கொடிய பாம்பு, புலி முதலியனவும் குழலின் இசையின் வசப்பட்டுத் தம்மை மறப்பனவாம். இன்னிசையானது பிராணிகளினிடத்து நோய் நீக்கம், கொடுமை நீக்கம், பசி நீக்கம், துன்ப நீக்கம் முதலியவற்றுக்கும், நற்பயன் பெறுதற்கும் காரணமாம்

16 இசைக்கலைக்கும் மற்றும் எல்லாக் கலைகளுக்கும் ஆதிகாரணர் சிவபெருமான்.

## 14. ஆனாயநாயனார்புராணம் முற்றும்

---

## சுந்தரமூர்த்திசுவாமிகள் துதி

---

தொகை

“ ஆரூர னாரூரி லம்மானுக் காளே ”—திருத்தொண்டத்தொகை

வகை

“ அருட்டுறை யத்தற் கடிமைப்பட் டேனினி யல்லனெனும்
பொருட்டுறை யாவதென் னே”யென்ன வல்லவன் பூங்குவளை
யிருட்டுறை நீர்வய னாவற் பதிக்கும் பிரானடைந்தார்
மருட்டுறை நீக்கிநல் வானவழி காட்டிட வல்லவனே. (கசு)

—திருத்தொண்டர் திருவந்தாதி.

விரி

வேறு

967. தீதுகொள் வினைக்கு வாரோம் செஞ்சடைக் கூத்தர் தம்மைக்
காதுகொள் குழைகள் வீசும் கதிர்நில விருள்கால் சீப்ப
மாதுகொள் புலவி நீக்க மனையிடை யிருகால் செல்லத்
தூதுகொள் பவரா நம்மைத் தொழும்புகொண் டுரிமை கொள்வார்.

துதி :—இனி, கிறுத்த முறையானே, "இலைமலிந்த" என்று தொடங்கும் திருத்தொண்டத்தொகைப் பாசுரத்தினுள் "ஆளாக கடியேன்" என்ற சரித்தத் தொகுத்து, "ஆரூரன் ஆரூரில் அம்மானுக் காளே" என்றதனுட் போந்த, ஆரூரப் பெருமானுக்கு ஆளுடைய நம்பிகள் ஆளாயின சரிதப் பகுதியினைக் கூறத் தொடங்கிய ஆசிரியர், நம்பிகளது சரித்தத்தின் ஒரு பகுதியினை உள்ளமைத்து, அவர் ஆளாந் தன்மையைக் காட்டுமுகத்தால் துதியாகக் கூறுகின்றார்

தொகை —(தொகை நூலின் இப்பாசுரத்திற் சொல்லப்பட்ட எறிபத்தர் முதலாகிய ஏழு அடியார்களுக்குத் தனித்தனி அடியேன் ஆகிய) ஆரூரன் திருவாரூர் அம்மானுக்கும் ஆள் என்று தொடர்புபடுத்தி முடிக்க 550ல் உரைத்தவை பார்க்க.

வகை :—"திருஅருட்டுறையுள் எழுந்தருளிய நாதனுக்கு நான் ஆட்பட்டேன், இனி, ஆளல்லேன் என்று சொல்லும் பொருளின் தன்மை எவ்வாறு?" என்று திருப்பதிகத்திற் பாடியருளவல்லவர், குவளை மலர்களின் இருள் தங்குகின்ற துறையுடைய நீர் நிரம்பிய வயல்கள் சூழ்ந்த திருநாவலூர் எனும் திருநகரத்திற்கும் முதல்வர், தம்மை அடைந்தோர் தமது மருளுடைய வழிகளை நீக்கி முத்திநெறியைக்காட்டிட வல்லவரே யாவர்

அருட்டுறை என்னே ? - இது, "அருட் டுறையுள் அத்தாவுனக் காளாயினி யல்லேனென லாமே" என்ற சுந்தரமூர்த்தி சுவாமிகளின் தேவார முதற் பதிகத்திற் போந்த மகுடத்தினைக் குறித்தது அதன் சொல்லையும் பொருளையுமே எடுத்தாண்டு அக்கருத்தினை உரைசெய்து காட்டியவாறு ஆவணங் காட்டி வழக்கில் வென்றருளிய படியும், ஆகாயத்தில் தோன்றி அறிவுறுத்தியபடியும், அத்தா!, உனக்கு நான் பண்டும் இன்றும் என்றும் ஆளாயின படியை உணர்ந்துகொண்டேன், இவ்வாறு உணர்த்தப் பெறுவதற்குமுன் 'ஆள் அல்லேன்' என மறுத்தேனே!, அச்சொற் பொருளின்வழி இனி என்னுவது?, இனி அப்படிச் சொன்னால் அச்சொல் பொருளுடையதாகுமோ? என்றதாம் (பக்கம் ௨௫௨ பார்க்க)

என்ன வல்லவன் - இறைவர் பணித்தவாறு அப்பொருள் கொண்ட "பித்தா பிறைசூடி" என்ற திருப்பதிகம் பாடி, அதற்கேற்ப ஆளாகிப் பணிசெய்து நிற்கும் வன்மைபெற்றவர்.

பூங்குவளை இருட்டுறை நீர் - இருள் துறை என்றும், இருட்டு உறை என்றும் பிரித்துரைக்க நின்றது. குவளையின் நீலநிறம் இருள் செய்வதாதலின் அவ்விருள் பொருந்திய எனக், "சுரும்பலவி குடைநீலத் தகள்லல பகலெல்லாம்" (65), "பான்றகுல மாமல ரிறபடர் சோதியார்" (714) என்றவிடங்களிலுரைத்தவை காண்க.

பதிக்கும்-உம்மை சிறப்பும்மை பதிக்குப்பிரான் என்று பாடங்கொள்ளலுமாம்

அடைந்தோர் வல்லவனே - குருவினது இலக்கணம் முற்றும் அமைந்து அத்தன்மையிற் றலைசிறந்தவர் என்றபடி. மருள்துறை - மயக்கத்தை - அறிவை மயக்குதலைச் - செய்கின்ற வழி பிறவியிற் செலுத்தும் வழி துறை - மோகம், மதம் முதலிய ஏழு பிரிவுகளை உணர்த்தும் என்றலுமாம் "மருளானும் மாணாப் பிறப்பு" (குறள்) என்றபடி, பொருளல்லவற்றைப் பொருள் என்றுணரும் மயக்கமே மருள் எனப்படும்,

அதனை நீக்கி, இது பொருள் என்றறிவித்து நல்வழி காட்டுதல் குருவின் தொழில் **நல் வான்வழி** - பிறவியிற் செலுத்தாத முத்திநெறி **வல்லவனே** - ஏகாரம் தேற்றம். முன்னார்த் திருவந்தாதி (8) துதியில் "ஆட்செய்ய யென்னப்பெற்றவன்" என்று கூறிய சரிதப் பகுதியினைத் தொடர்ந்து இப்பாட்டிற் கூறியது காண்க

967 (இ - ள்) மாதுகொள் புலவி நீக்க - பரவையார் கொண்டிருந்த ஊடலை நீக்கும்பொருட்டு, செஞ்சடைக்கூத்தர் தம்மை - சிவந்த சடையையுடைய கூத்தப் பெருமானை, காதுகொள். காலசீப்ப - காதில் அணிந்த குழைகள் வீசுகின்ற ஒளி யாகிய நிலவு இருளை ஒழிக்க, மனையிடை இருகால் செல்ல - பரவையாரது திரு மாளிகைக்கு இரண்டுமுறை செல்லும்படி, தூது...கொள்வார் - தூதராக ஏவல் கொள்பவராகிய ஆளுடைய நம்பிகள் நம்மை அடிமையாகக்கொண்டு உரிமைகொள்பவ ராவார், தீதுகொள்வினைக்கு வாரோம் - (ஆதலின்) தீமையுடைய வினையின் வழிய தாகிய பிறவியில் நாம் சேரமாட்டோம்

(வி - ரை) **உரிமைகோள்வார் - (ஆதலின்) வினைக்கு வாரோம்** என்று கூட்டி முடித்துக்கொள்க பூட்டுவிற் பொருள்கோள்.

**தீதுகொள் வினைக்கு** - தீமையைப் பயனுக்கக் கொண்ட வினை. தீமை காரணமாக வரும் வினை என்றலுமாம் வினை-இங்கு வினையால் வரும் பிறவி குறித்தது **வினைக்கு** - வினையின்கண் நான்கனுருபு ஏழனுருபின் பொருளில் வந்தது பிறவியிற் சேரோம் எனக் உரிமைகொள்வார் எம்மை வினைக்கு வாராமற் செய்வார் "இருள்சே ரிருவினையும் சேரா" (குறள்)

**தொழும்பு கோள்ளுதல்** - அடிமைப் பணிகளை ஏற்றுக்கொள்ளுதல் **உரிமை கோள்ளுதல்** - உரிமையால் ஏவல்கொள்ளுதல் "அடைந்தோர் மருட்டுறை நீக்கி நல் வான்வழி காட்டிட வல்லவனே" என்ற வகைநூற் பொருளை விரித்துரைத்ததாம்

புலவி நீக்க - கூத்தர் தம்மைத் தூதுகொள்பவர் - நம்மை உரிமைகொள்வார் - (ஆதலின்) வினைக்கு வாரோம் என்று கூட்டுக

**குழைகள்** - சங்கக் குழைகள் **நிலவு** - குழைகளின் வெள்ளிய ஒளியாகிய நிலவு. உருவகம்

**இருள் கால்சீப்ப** - இருளைத் துடைக்க - போக்க **கால்சீத்தல்** - ஒரு சொல்

**மனையிடை** - பரவையார் திருமாளிகையின்கண்

**இருகாற் சேல்ல** - இருமுறை தூது செல்லும்படி (ஏயர்கோ - புரா - 324—374)

**தூதுகோள்பவர்** - தூதாகக் கொண்டவரே தேற்றேகாரம் தொக்கது "இனி அல்லனெனும் பொருட்டுறை யாவதெனனே" என்ற வகைநூற் கருத்தைத் தொடர்ந்து, அத்தனுக்கு அடிமையாகவும் வல்லவர், அவ்வாறு தம்மை ஆளாகக் கொண்டமை காரணமாக அவரைத் தூதுகொண்டு ஏவவும் வல்லவர் என்று கூறினார் "நாயனை யடியா னேவுங் காரிய மென்று" என்றதும் இது (ஏயர்கோ - புரா - 384).

"**அம்மானுக் காளே**" என்ற தொகைநூற் கருத்துக்கு "ஆளாயினேன் இனி யல்லனெனும் பொருட்டுறை யாவதெனனே யென்ன வல்லவன்" என்று வகைநூல் உரை வகுத்தது அதனையே விரிநூல் தொடர்ந்து மேற்கூறியபடி விரித்தது காண்க சருக்கந்தோறும் இவ்வாறு தொகைநூற் சொற்றொடர் சுந்தரமூர்த்தி சுவாமிகளின் சரிதத்தின் வெவ்வேறு பகுதிகளாக விரித்துத் துதி யுருவமாக விரிநூல் பேசும். 550ல் உரைத்தவை பார்க்க

## 3. இலைமலிந்தசருக்கம் முற்றிற்று.



# இலமலிந்த சருக்கம்

## சரித ஆராய்ச்சியுரை

[இராவ்பகதூா - திரு. C. M. இராமசசநதிர செட்டியாா, B.A., B.L , F.R..G.S., அவாகள் அனபுடன உதவிய குறிப்புககளா]

### 1. எறிபத்தநாயனர்

**திருப்பதி - திருக்கருவூர் .**—இது ஒரு பழைய ஊா , கொஙகுநாடடுத தேவாரப பாடலபெறற தலஙகள ஏழனுள ஒனறு இவவூரில பணடையகாலச சினனஙகள் பல கிடைததன. உரோமானிய சககரவாததிகளின நாணயஙகள பல தோணடி எடுககப படடன

| உரோமானிய அரசன் பெயர் | காலம் | தோண்டி எடுக்கப்பட்ட வருடம் |
|---|---|---|
| அகஸதஸ | கி. மு 41—14 கி. பி. | 1878 |
| ஆணடோனியா | கி. மு 8 | 1806 |
| டைபீரியஸ | கி. பி 14—37 | 1806—1878 |
| கிளாடியஸ | ,, 41—54 | 1806 |
| கானஸடானடினஸ | ,, 323—337 | |

மேலும், தாலமி எனற கிரேகக ஆசிரியர் தமது நூலில் 'கோரபோத ரோஸ' எனற இராசசியததிறகு 'கரௌரா' எனற ஊா தலைமை நகா எனறு கூறியிருககின ரூா இமமொழிகளைச 'சேரபதி', 'கரூா' எனறு சிலா பொருள கொளளுகினறனா இதைககொணடு சில ஆராயசசியாளாகள கேரள அலலது சேர நாடடிறகு இககருவூா தலைமை நகராக இருநதது என எழுதியிருககினரூாகள. சேரநாடடுத தலைநகா இக கருவூரோ அலலது மலையாளநாடடுக கொடுஙகோளுரோ எனபது இனனமும வாதத திறகுடபடட ஒருசெயதியெனபா. இவவூாத தலபுராணததில இதனை வஞசுளாரணியம எனறு குறிததிருபபதும, புகலூருககடுதத ஆறுநாடடாா மலையில ஒருபழைய எழுத தில காணும கலவெடடில **வஞ்சி** எனற மொழி இருததலும இஙகே கவனிககத தககவையாமெனவுங கூறுவா

இனி, இவவூா ஆலயததில இருநத கலவெடடுககளில (ஆலயம புதுபபிததபோது அவை அழிககபபடடன) **வஞ்சி** எனற பெயா காணவிலலை பழைய கலவெடடுகக ளெலலாம சோழாகளுடையவையே சேரா கலவெடடு ஒனறும இலலை. இரா ஜேநதிரதேவன (1052—1062), வீரராஜேநதிரன (1064—1070), விககிரமசோழன 1118—1135), குலோததுஙகன III (1178—1216) முதலியவாகளுடைய கலவெடடுக கள இருநதன கொஙகு நாட்டில மறற இடஙகளில இருபபதைப்போல கொங்கு சோழாகளுடைய கலவெடடுககளும இஙகு இலலை ஆகவே கொஙகு நாடடின மறறப பகுதிகள கொஙகு சோழாகளுடைய ஆடசியில இருநதபோது கருவூாப பிரதேசம தஞசை, உறையூாச சோழாகளின நேராக ஆடசியிலே இருநதது எனலவேணடும. ஆககாரணததினாலதான புகழச சோழநாயனூரும திறை வாஙகுவதறகாகத தம தலைநக ரான உறையூரிலிருநது கருவூருககு நேரில வநது இருநதாா போலும !

**நாடு** —கொஙகு நாடு ஆனால அதறகு இராஜேநதிரன காலததில அதிராசராச மணடலம எனறும, விககிரமன காலததில வீரசோழ மணடலம எனறும, குலோத துஙகன III காலததில சோழ கேரள மணடலம எனறும பெயா கொடுககப்படடிருந ததது எனறு அவரவாகளது கல வெடடுககளால அறிகிரேூம.

**உள்நாடுகள் :**—கருவூா இருககும நாடடிறகு வெஙகால நாடு எனறு பெயா. இது கொஙகு மணடலத்து 24 நாடுகளில ஒனறு எனறு கொஙகு மணடல சதகம கூறும.

இந்நாட்டில் கணவதி நல்லூர், செல்வாய்ப்பள்ளி, பாக்கூர், புன்னம், ஆந்தனூர் முதலிய ஊர்கள் உண்டு. தடடையூர் நாடு என்ற மற்றொரு நாடும் உண்டு அதில் மன்னரை, கோளப்பள்ளி, தேவனப்பள்ளி முதலிய ஊர்கள் உண்டு. இவ்வூர்களைக் கருவூர் ஆலயத்திற்குத் தேவதானமாகக் கொடுத்திருந்தார்கள் எனக் கல்வெட்டுக்கள் கூறுகின்றன

**ஊர் .**—கருவூர் இதற்குக் குலோத்துங்கன் III காலத்தில் முடிவழங்கு சோழபுரம் என்ற பேர் இருந்தது

**கோயில் .**—ஆனிலை என்பது. சுவாமிக்கு கருவூர்த் திருவானிலை மகாதேவர் என்ற பெயர் குறிக்கப்பட்டுள்ளது. எந்தக் கல்வெட்டிலும் பசுபதீசுவரர் என்று கூறப்படவில்லை ஆகவே இவ்வடமொழிப் பெயர் தமிழ்ப் பெயரின் மொழி பெயர்ப்பே ஆகும் சுவாமியின் கர்ப்பக்கிருகம், அம்மன் காப்பக் கிருகம், மொட்டைக் கோபுரம் இவைகளில் பழங்காலக் கல்வெட்டுக்கள் இருந்தபடியால் அப்பாகங்கள் மிகப் பழையவை என்பபடும். இக் கல்வெட்டுக்களில் கண்ட இராஜேந்திரன் வீரராஜேந்திரன் இவர்களுடைய மெய்க்கீர்த்திகள் சோழ சரித்திரத்திற்குச் சிறந்த ஆதாரவுகளாக இருக்கின்றன இக்கல்வெட்டுக்களில் இறை, வரி, சிற்றாயம், எல்லை, உகவை, மன்றுபாடு, தெண்டம், குற்றம், எற்சசோறு, கூற்றரிசி முதலிய வரித்திட்டங்களைப் பற்றி அறியலாம் மேலும் சாசனங்கள் எழுதும்போது நிலத்தின் விவரத்தில் “உடும்போடி, ஆமைதவழ், புற்று எழுந்த இடம், சுற்றுப்புல், போக முற்றூட்டு, மேனோக்கிய மரம், கீழ்நோக்கிய கிணறு” முதலிய வாசகம் கண்டு எழுதுவதுண்டு என்பதை இக்கல்வெட்டுக்களால் அறியலாம். இச்சொற்றொடர்களினின்றும் முன்னாளில் வழங்கிய தமிழின் சுவையும் காணப்படும் மேலும் ஒரு கல்வெட்டு, கணமாளர்களுக்குச் சில உரிமைகளைக் கோனேரின்மைகொண்டான் (வீரசோழன்) கொடுத்ததாகக் கூறுகிறது அவ்வுரிமைகள் அதுவரை அவர்களுக்கு இல்லைபோலும்!. அவை நன்மை தின்மைகளில் இரட்டைச்சங்கு ஊதுதல், வீட்டிற்குச் சாந்து பூசுதல், புறப்படும்போது பாதரக்ஷை அணிதல் முதலியன ! மேலும் மற்றொரு கல்வெட்டில் தேவகன்மிகளுக்கு (கோயில் சிப்பந்திகள்) வீட்டிற்கு இரட்டை மாடி கட்டுதல், இரட்டைக்கதவு வைத்தல், பூவினால் அலங்கரித்தல் முதலிய உரிமைகள் கொடுக்கப்பட்டனவாம் !.

மேலும் கி. பி. 1618-ல் எழுதப்பட்ட கருவூர்ப் புராணத்தில் எறிபத்தர் சருக்கம், புகழ்ச்சோழர் சருக்கம் இரண்டும் இருத்தல் காணக் இச்சரித்திரங்கள் பெரியபுராணத்தை ஏறக்குறைய ஒட்டியே பாடப்பட்டிருக்கின்றன.

(இதன் விரிவைச் “ செந்தமிழ்ச் செல்வி ” 12-ம் சிலம்பில் காண்க.)

## 2. ஏனாதி நாயனார்

**திருப்பதி - எயினனூர் .**—சோழநாட்டில் அரிசிலாற்றங்கரையில் உள்ள ஓர் ஊர். எயில் என்றால் மதில் அல்லது அரண் , எயினன் மதில் கொண்ட அரணுக்கு அதிபன் , அவனூர் எயினனூர் ஆகும். பண்டைத் தமிழில் எயினர் என்பது பாலைநிலத்து மக்களின் பெயர், அவர்களுடைய பெண்மக்களின் பெயர் எயிற்றியர். பாலைக்கு எயில் அவசியம் அல்லவா ? ஆனால் இந்த எயினனூர் பாலை நிலத்தில் இல்லை , மருத நிலத்தில் உள்ளது. மருத நிலத்தில் இருக்கலாம் என்பதற்குக் காஞ்சியைச் சுற்றியுள்ள நாட்டிற்கு எயில் நாடு என்ப பெயர் இருத்தலாற் கண்டு கொள்க.

ஏனாதி என்ற மொழி பண்டைத் தமிழ் மன்னர் அளித்து வந்த ஒரு சிறந்த பட்டத்தின் பெயர் அதற்கு அறிகுறியாக ஒரு மோதிரமும் அளிப்பார்கள். அதற்கு ஏனாதி மோதிரம் என்று பெயர் இதனைப் பண்டைய தமிழ் நூல்களில் விவரமாகக் கண்டு கொள்க. இப்பட்டத்தைப்பற்றிக் கல்வெட்டு ஆதாரமும் உண்டு. சென்னைக்

கடுத்த திருவொற்றியூரில் அம்மன் சந்நிதிக் கடுத்த ஒரு கல்தூணில் 237/1912 என்ற இலக்கமிட்ட கல்வெட்டில் பெருமாள் சுந்தர பாண்டிய தேவனின் நிமித்தம் ஏனாதி மேற்குடையான் பெரிய நாயன் என்ற பொத்தப்பிராயன் என்பவன் "எல்லாந் தலையான பெருமாள் திருவாசல்" என்ற வாசலைக் கட்டினதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இச்சுந்தர பாண்டியன் 1251 - 1264 கி பி யில் இருந்தவன் ஆகவே அக்காலத்தில் ஏனாதி பட்டம் தரித்த ஒரு பொத்தப்பிராயன் (கண்ணப்பர் சரிதம் காண்க) இருந்திருக்க வேண்டும் அவன் திருவொற்றியூரில் அம்பாள் சந்நிதியில் திருப்பணி செய்தவன் நாயனார் புகழ் அக்காலத்தில் பரவியிருந்தது

**3. கண்ணப்ப நாயனார்** * * * முன்னரே வெளியிடப் பட்டது.

கண்ணப்ப நாயனார் புராணம் - சோக்கை - IV-X பார்க்க

## 4. குங்கிலியக்கலய நாயனார்

**திருப்பதி - திருக்கடவூர்** —அமிர்தகடேசர் ஆலயத்தில் 38 கல்வெட்டுக்களும், திருக்கடவூர் மயானத்துப் பிரமபுரீசர் ஆலயத்தில் 13 கல்வெட்டுக்களும் உள்ளன அவைகள் பெரும்பாலும் சோழ பாண்டிய மன்னர்கள் காலத்தவையே இராசராஜச் சோழன் I (985 - 1013) முதல் இராஜராஜன் III (1216 - 1248) வரை சோழர்கள் 13 நூற்றாண்டுப் பாண்டியர்கள், கிருஷ்ணதேவராயன் (1509 - 1535) இவர்கள் கல்வெட்டுக்களே முக்கியமானவை இக்கல்வெட்டுக்களில் பூதானச் செய்திகள் குறிக்கப்பட்ட போதிலும் அடியிற்கண்ட குறிப்புக்கள் ஆராயத்தக்கன.

**நாடு** —சோழ வம்சத் தொடக்கத்தில் உய்யக் கொண்டான் வளநாடு என்றும், பிற்காலத்தில் ஜயங்கொண்டசோழ வளநாடு என்றும் பெயர் வழங்கியது.

**உள்நாடு** :—முதலில் அம்பர் நாடு என்றும், பின்னர் ஆக்கூர் நாடு என்றும் வழங்கியது திருஅம்பர், திரு வாக்கூர் என்ற இவ்விரு ஊர்களும் அருகில் உள்ளன. தலைமை நகர் மாற்றத்தினால் நாட்டின் பெயரும் மாறினது போலும்

**ஊர்** .—'படைமேவிய திருக்கடவூர்,' 'உடபடை மேவிய திருக்கடவூர்' என்று காண்கிறோம் "உடபடை மேவிய" என்றிருத்தலால் இங்குப் பெருஞ் சேனையின் ஒரு பிரிவை அரசன் வைத்திருக்கலாம் (Contonment Station) என்று சாசன ஆராய்ச்சி உத்தியோகத்தர்கள் எண்ணுகிறார்கள்

**சுவாமிபெயர் - காலகால ஈசுவரர்** ஆலயம் - திருவீரட்டானம் இவ்வாலயத்தில் எழுந்தருளியிருக்கும் மூர்த்திகள் - காலகாலதேவர், கூத்தாடுதேவர், குலோத்துங்கச் சோழீசர், விக்கிரம சோழீசர் (அவ்வவ்வரசர்கள் தாபித்தவை) இப்போது வழங்கும் வடமொழிப் பெயர் கல்வெட்டுக்களில் இல்லை. திருமயானத்துச் சுவாமியின் பெயர் **திருமயானமுடைய நாயனார்** என்பதே

**சிலசெய்திகள்** —1 குலோத்துங்கன் III காலத்தில் ஆலயப்பணியில் புதிதாக அமர்ந்த இரண்டு சிவாசாரியர்கள் நீக்கப்பட்டுப் பரம்பரைச் சிவாச்சாரியர்கள் நியமிக்கப்பட்டனர்

2. குலசேகரபாண்டியன் காலத்தில் மன்னனுடைய தம்பிகளுக்கு நிலங்களைப் பிரித்துக்கொடுத்த காரணத்தினால் கலகம் ஏற்பட, அரசன் அவைகளை மீட்டுக் கொண்டான் கலகமும் தீர்ந்தது

3 கிருஷ்ணதேவராயன் (1509) காலத்தில்நடந்த இராயச்சூர் யுத்தத்தில் போர் செய்த கடவூர் ஆபத்சகாயர் என்ற பிராமணன் இவ்வாலயத்தில் திருப்பணி செய்தது.

4 காலகாலன் ஈழத்து அரையன் என்ற கவி அகப்பொருள்பற்றிய செய்யுள்களாக இரண்டு கட்டளைக் கலித்துறைக் கவிகளைப் பாடிக்கல்வெட்டிற் பதிப்பித்தார்.

5. குலோத்துங்கன் காலத்திற் **புலியூர்க்கோட்டம் குன்றத்தூர் சேக்கிழார்** அம்மையப்பன் பராந்தக தேவனான கரிகாலசோழ பல்லவராயன் என்பவர் இவ்வால யத்திற்குப் பூ தானம் செய்தார். குன்றத்தூர்ச் சேக்கிழார் என்ற பெயர் குறிப்பிடத் தக்கது.

6. குலோத்துங்கன் 26 ஆண்டு (25/06) கல்வெட்டின்படி கடலூர்ச் சபையார் ஒரு நிலத்தைத் தானம்செய்து அதை விளைநிலமாகத் திருத்திக் குங்குலியக்கலைய நாயனார் திருநாள் நிபந்தங்களுக்காக (அடியார்கள் அமுது உண்ணச்செய்ய) ஏற்பாடு செய்யும்படி உத்தரவு இட்டார்கள். இங்கே நாயனார் பெயர் குறித்திருப்பது நோக் கத்தக்கது.

7. திருமயானமுடைய பெருமாள் ஆலயத்தில் குலோத்துங்கன் III காலத்தில் ஆலயத்தில் வீணை வாசிக்கவும், வேதம், திருஉருத்திரம் இவைகளை ஓதவும் ஏற்பாடு செய்யப்பட்டது.

## 5. மானக்கஞ்சாறர்

**திருப்பதி - கஞ்சாறூர் :—**இது மேலைக்காழி, தலைஞாயிறு என்ற பெயர்களைக் கொண்ட கருப்பறியலூர் (வைத்தீசுவரர் கோயிலுக்கு 4 கல்லில் உள்ள ஒரு ஊர்) என்பது சிலர் கருத்து. இதன் வாயு மூலையில் ஒரு கல்லில் வட கஞ்சாறு என்ற ஒரு சிறு ஊர் இருக்கிறது. இது ஒரு வைப்புத்தலம். இதனையே மானக்கஞ்சாறர் அவதாரத் தலம் என்பர். ஆனால் இது வடகஞ்சாறு என்றிருத்தலால் தென்கஞ்சாறு ஒன்று இருத்தல் வேண்டும். அது இப்போது வழக்கில் இல்லை. என்றாலும் ஆன்தாண்டவ புரத்தில் கீழ்ப்பகுதியில் பஞ்சவடீசர் ஆலயம் ஒன்று இருக்கிறது. இத்தலம்தான் கஞ்சாறூராக இருக்கக்கூடும் என்று அங்கு புதையலில் அகப்பட்ட விக்கிரகங்களினால் அறியக்கூடும். (இப்புராணத் தலவிசேடத்திலுட்காண்க.)

இனி, கஞ்சாறன் என்ற பெயருள்ள இரண்டு கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன. செங்கல்பட்டு நத்தம் சண்பகேசுவரர் ஆலயத்தின் (262/1912) கல்வெட்டின்படி இரா ஜேந்திரச் சோழன் I (1017—1043) மூன்றாவது ஆண்டில் பரமேசுவர மங்கலத்துச் சம்வத்ஸர வாரியச்சபையார் இராஜேந்திரச் சோழன் மண்டபத்தில் (சதுஸ்ஸாலி) கூடி நிலத்தீர்வையை நிச்சயித்தார்கள். நிலத்தீர்வை விதித்த உத்தியோகத்தன் பெயர் "**கஞ்சாறன்** ஐயன் சூரியன்" என்பது. மேலும் திருவொற்றியூரில் ஒரு கல் வெட்டின்படி (188/1912) கங்கபல்லவன் விஜய கம்பவிக்ரம வர்மன் முதலாவது ஆண் டில் சோழ வளநாட்டு இந்தளூர்நாட்டுக் **கஞ்சாறூர்** கிராமத்துக் **கஞ்சாறன் அமர்நீதி** என்ற பல்லவத்தரையன் திருவிளக்கு வைப்பதற்காகப் பொன் தானம் செய்தான். இத னால் சோழநாட்டில் கஞ்சாறூர் இருந்ததென்றும், அவ்வூரான ஒருவன் கஞ்சாறன் அமர்நீதி என்ற பெயரை வகித்துக் கொண்டான் என்றும் தெரிகிறது. இதில் கஞ் சாறன் என்பது அவனது ஊரையும், அமர்நீதி என்பது அவனது பேரையும் குறிப்பன போலும். அவன் அமர்நீதி நாயனாரிடம் அன்பு செலுத்திய மரபினன் போலும்.

## 6. அரிவாட்டாயர்

**திருப்பதி-கணமங்கலம் —**இது சோழநாட்டுத் திருப்பதி மிகவும் செழிப்புற்றது. திருத்துறைப்பூண்டிக்கு வடக்கே $2\frac{1}{2}$ கல்லில் உள்ள தண்டலைச்சேரி என்ற ஊருக்கு $\frac{1}{2}$ கல்லில் இருந்த ஒரு ஊர் இப்போது கணமங்கல மேடு என்ற ஒரு திடல் மாத்திரம் போளவில் இருக்கிறது. தண்டலைச்சேரி என்பது **தண்டலை நீணெறி** என்ற பாடல் பெற்ற மாடக்கோயில். இவ்வாலயத்திற்குத் திருஞானசம்பந்தநாயனார் அருளிச் செய்த தேவாரப்பதிகத்தின் சொற் சிறப்பினையே சேக்கிழார் கணமங்கலத்திற்கு எடுத் தாண்டு வழங்கியிருப்பது குறிப்பிடத்தக்கது. (புராண உரை பார்க்க.)

இவர் அவதரித்த அரிவாட்டாயனாரைப் பற்றிய கல்வெட்டுக்கள் கிடைக்கவில்லை யாயினும் அவரது பெயரை இட்டு வழங்கிய சில சிவனடியார்களின் செயல்களைக்குறிக் கும் கல்வெட்டுக்கள் கிடைத்திருக்கின்றன. தஞ்சை ஜில்லா கும்பகோணம் தாலூக்கா திருப்புறம்பயத்தில் உள்ள சாக்ஷீசுவர சுவாமி ஆலயத்தில் கண்ட ஒரு கல்வெட்டில் (344/27) “ **அரிவாட்டாயன்,** திருத்தொண்டன், வன்றொண்டன், சண்டேசுவரன், இயற்பகை, கோட்புலியார், விறன்மிண்டன், அணுக்க நம்பி என்ற பெயர்கள் வாய்ந்த அடியார்கள் திருப்புறம்பய நாயனாருக்கு ஐப்பசி பங்குனித் திருவிழாக்களிலும், திருவேட்டை, தீர்த்தம் இந்நாட்களிலும் நிமந்தங்களுக்கு நிலதானம் செய்ததாகக் கண்டிருக்கிறது. இக்கல்வெட்டு ஒரு அரசனுடைய 13 வது ஆண்டில் பொறிக்கப் பட்டது. இதன் மேல் கல்வெட்டு விக்கிரமனுடைய கல்வெட்டானதினால் இதுவும் 12 வது நூற்றாண்டினதாக இருக்கலாம். ஆகவே, பெரிய புராணம் எழுதிய பிறகு சிறிது காலத்திற்குள்ளாகவே இப்பெயர்களை மக்கள் இட்டுக்கொள்வது வழக்கத் திற்கு வந்துவிட்டது எனலாம். மேலும் **தாயன்** என்ற பெயர் வேறு கல்வெட்டுக் களிலும் காணலாம். **தாயன் கண்ணுடையான்** (திருச்சி - திருவெறும்பியூர் (744/1914), **தாயன் சிங்கன்** (மதுரை, பெரிய குளத்துச் செப்புச் சாசனம் 1301/1907), **தாயன் திருச்சிற்றம்பல முடையான்** (திருச்செங்காட்டங்குடி 58/1913) என்ற பெயர்கள் கிடைத்திருக்கின்றன. இப்பெயர்களில் **தாயன் கண்முடையான்** என்றது குறிப்பிடத் தக்கது (விரிவை சித்தாந்தம் 12 மலரில் காண்க).

## 7. ஆனாய நாயனார்

**திருப்பதி - மேன்மழநாட்டுத் திருமங்கலம் :—நாடு** - மழநாடு திருச்சிராப்பள் ளிக்கு வடக்கே கொள்ளிடத்திற்கு வடபாகம். இந்நாட்டு அந்தணர்க்கு மழநாட்டுப் பிரகச்சரணம் என்று பெயர் உண்டு. இந்நாடு மேன்மழநாடு - கீழ்மழநாடு என்ற இருபிரிவுகள் கொண்டது. மேன்மழநாட்டிற்குத் திருத்தவத்துறை (லால்குடி) தலை நகராகவும், கீழ்மழ நாட்டிற்கு மழபாடி தலைநகரமாகவும் இருந்தன. இவை தவிர மழகொங்கு என்று ஒரு பிரிவும் இருந்ததாகச் செப்பேடு ஒன்று கூறும்.

**உள்நாடு** - மழநாட்டில் வெள்ளையூர்க் கண்டம், பாச்சில் கூற்றம், இடையாற்று நாடு, கலார்க்கூற்றம் முதலிய பல பிரிவுகள் இருந்தன. நாட்டுப் பெயர்கள் பல சோழர்கள் காலங்களில் பலவாறு மாறின. இனி, மழநாட்டில் பாச்சில் ஆச்சிராமத்தில் கொல்லி மழவன் என்ற தலைவன் இருந்த செய்தி திருஞானசம்பந்த நாயனார் சரித்த தில் காண்க. இந்நாட்டுத் தலைவர்களுக்கு மழவர், மழவராயர் என்ற பெயர் உண்டு.

**ஊர்** - மேலமழநாட்டுக் கலார் கூற்றத்தில் உள்ள திருப்பதி **திருமங்கலம்** ஆகும். அது ஒரு மூதூர்.

**ஆலயம்** - பழையது. இதில் 13 கல்வெட்டுக்கள் கிடைத்துள்ளன. அவை ராஜராஜன் I (983-1013) காலம் முதல் ராஜராஜன் III (1238) வரையிலும், பின் மதுரைநாயக்கர் (1567) காலத்தும் உள்ளன.

**சுவாமி** - பரசுராமீசுவரம் உடையார் திருமழுவுடைய நாயனார் என்றும் காண கிறோம். தற்காலப் பெயராகிய சாமவேதீசர் என்ற பெயரே காணவில்லை. (பரசு - மழு ; மழுவிலிருந்து மழவர் - மழவநாடு என்ற பெயர்கள் வந்திருக்கலாம். மழு-உழவுக் கருவி. மழவர் - உழவர் என்றலுமாம்)* (விரிவு - சித்தாந்தம் - 12 மலரிற்காண்க)

---

*இத்தலத்தில் பரசுராமர் பூசித்துத் தாயக்கொலைப்பழி நீங்கினர் என்பது தல மான்மியம். சிவபெருமான் மழுவேந்தியவர். பரசுராமரும் தவம்செய்து பரசுபெற்ற வர். தலவிசேடமும் விறன்மிண்ட நாயனார் புராணமும் பார்க்க.

உ

திருச்சிற்றம்பலம்

நான்காவது

# மும்மையாலுலகாண்ட சருக்கம்



திருச்சிற்றம்பலம்

மும்மையா லுலகாண்ட மூர்த்திக்கு மடியேன்,
முருகனுக்கு, முருத்திர பசுபதிக்கு மடியேன்;
செம்மையே திருநாளைப் போவார்க்கு மடியேன்;
திருக்குறிப்புத் தொண்டர்தம் மடியார்க்கு மடியேன்;
மெய்ம்மையே திருமேனி வழிபடா நிற்க
வெகுண்டெழுந்த தாதைதாள் மழுவினா லெறிந்த
வம்மையா னடிச்சண்டிப் பெருமானுக் கடியேன்,
ஆரூர னாரூரி லம்மானுக் காளே.

—திருத்தொண்டத்தொகை - (3)

திருச்சிற்றம்பலம்

தாதையை—என்பதும் பாடம்.

# 15. மூர்த்திநாயனார்புராணம்

தொகை

"மும்மையா லுலகாண்ட மூர்த்திக்கு மடியேன்"—திருத்தொண்டத்தொகை

வகை

"'அவந்திரி குண்டம ணாவதின் மாள்வ'னென் றன்றாலவாய்ச்
சிவன்றிரு மேனிக்குச் சேஞ்சந் தனமாகச் செழுமுழங்கை
யுவந்தொளிர் பாறையிற் றேய்த்துல காண்டவொண் மூர்த்திதனூர்
நிவந்தபொன் மாட மதுரா புரியென்னு நீள்பதியே"
—திருத்தொண்டர் திருவந்தாதி - (கஎ)

விரி

968. சீர்மன்னுசெல் வக்குடி மல்கு சிறப்பி னோங்குங்
கார்மன்னுசென் னிக்கதிர் மாமணி மாட வைப்பு
நார்மன்னுசிந் தைப்பல நற்றுறை மாந்தர் போற்றும்
பார்மன்னுதொன் மைப்புகழ் பூண்டது பாண்டி நாடு.

**மும்மையாலுலகாண்ட சருக்கம்** :—இது, கிறுத்த முறையானே, நான்காவது திருத்தொண்டத் தொகையினுள் 'மும்மையா லுலகாண்ட' என்று தொடங்கும் மூன்றாவது திருப்பாசுரத்தினுள் துதிக்கப்பட்ட அடியார்களின் சரிதங்களைக்கூறும் பகுதி. அந்த அடியவர்களாவார் மூர்த்தியார், முருகர், உருத்திரபசுபதியார், திருநாளைப் போவார், திருக்குறிப்புத்தொண்டர், சண்டீசர் என்ற அறுவர்

**புராணம்** :—அவ்வறுவருள் மூர்த்தியார் என்ற பெயருடைய நாயனாரது சரித வரலாறும் பண்புங் கூறும் பகுதி இனி, மேல்வகுத்த முறையே மும்மையாலுலகாண்ட சருக்கத்தில் முதலாவது மூர்த்திநாயனார் சரிதங் கூறத் தொடங்குகின்றார்

**தொகை** :—(சிவசாதனங்களாகிய) மூன்றினால் உலகத்தை அரசாண்ட மூர்த்தியாருக்கு நான் அடியேன் ஆவேன் **மும்மை** - திருநீறு, உருத்திராக்க கண்டிகை, சடை என்ற சிவசாதனங்கள் மூன்று. இவற்றால் உலகாண்ட திறம் 1008 1013-ல் விரிக்கப்பட்ட

**வகை** :—"வீணேதிரியும் குண்டமண்ர்களுக்குள்ளாவதின் மாள்வன்" என்று அன்று ஆலவாயப் பெருமானது திருமேனிக்கு உகந்த செஞ்சந்தனமாகக் கொண்டு தமது செழித்த முழங்கையினை மகிழ்ச்சியுடன் பாறையில் தேய்த்தது, (இறைவனருளால்) உலகாண்ட ஒண்மையுடைய **மூர்த்தியாரது ஊர்**, ஓங்கிய பொன்மாடங்களையுடைய **மதுராபுரி** என்று சொல்லப்படுகின்ற நீள்பதியேயாகும்.

**அமணுவதின் மாள்வன்** - இது, பாறையில் முழங்கையை எலும்பு திறந்து மூளை காணத் தேய்க்கத் துணிந்தபோது மூர்த்தியாரது திரு உள்ளத்தில் எழுந்த துணிபு. **அவம் திரி அமண்** எனக. **குண்டமணும் அவந்திரிவதின்** என்று விகுதி பிரித்துக,

கூட்டி, அமணர்களுள்ளாகிச், சிவன்பணி செய்யமாட்டாது வீணே வாணாள் போக்கு வதினும், "பேசாத நாளெல்லாம் பிறவா நாளே" என்பது முதலாகத் தமிழ்மறைகள் விதித்தபடி, சாதல் நன்று என்றுரைத்தலுமாம். **திருமேனிக்குச் சேஞ்சந்தனமாக** சிவனுக்குத்தாம் நியதியாகச் சாத்தும் செஞ்சந்தனக் காப்பாக எண்ணி. சந்தனத்தில் உயர்ந்தது செஞ்சந்தனம் என்ப இது மலர்க்காசந்தனம் எனவும்படும் "காசில் பனிநீர்ப்பசைக் கற்பூரக் குங்குமப்பூ,மாசிலுரோசனைபுழுகு மான்மதநா வியுங்கலந்த, வாசிகந்த மலர்க்காசந் தனமிலே பனம்" - (மருத்வரைப்படலம்-34) என்ற பேரூர்ப் புராணங்காண்க முழங்கை தேய்த்தலால் குருதி பெருகுமாதலின் அதனைப் புலால் கமழும் ஊன்பண்டமாகக் கருதாது அந்தச் செந்நிற வொற்றுமையே கருதிச் செஞ்சந் தனமாக எண்ணினார் என்ற கருத்துங் காண்க

**செழுமுழங்கை** - திருமேனியின் செழுமை குறித்தது சிவனது மெய்ப்பூச்சுக் குரிய சந்தனமரைத்துப் பணிசெய்த செழிப்புடைய கை என்ற குறிப்புமாம் "தேய்க்கும் கை"-(987). **உவந்து தேய்த்து** உடல் வருத்தம் சிறிதும் மனங்கொள்ளாது மகிழ்ந்து செய்த மனநிலை குறித்தது. **பாறை** - சந்தனம் அரைக்குங் கல். **உலகாண்ட** தேய்த்த காரணத்தால் இறைவன் அருளியபடி உலகாளப்பெற்ற வரலாறு (985, 986, 987) விரிநூலுட் காண்க

**ஒண்மை** - ஒளியனவாகிய மனநிலை - வாக்குநிலை - செய்கையின் நிலைகள் சரிதம் காண்க **மூர்த்தி** - நாயனாரது பெயர் (976) **ஊர்** - **நீள்பதியே** என்று முடிக்க **பொன் மாடம்** - பொன்னணிந்த சிகர முதலிய பகுதிகளையுடைய மாடங்கள். "கதிர் மாமணி மாடவைப்பு" (960) என்பது விரிநூல் **பொன்**-அழகிய என்றலுமாம "பொற்பதி" (975). **மதுராபுரி** - விரிநூலினுள் இப்பெயரையே எடுத்தாண்டது காண்க (971) **நீள்பதியே** - புகழாலும் பெருமையாலும் காலத்தாலும் நீளும் மூக் காலத்துக்கும் பொதுவாகிய வினைத்தொகை - 974 பார்க்க.

968 **(இ - ள்)** பாண்டிநாடு - பாண்டிய நாடானது, சீர்மன்னு...வைப்பு - சீரினால் நிலைத்த செல்வமுடைய குடிகள் நிறைந்த சிறப்பினால் ஓங்கும், மேகங்கள் நிலைத்துத் தங்கும் உச்சியிடங்களையுடைய ஒளி பொருந்திய மணிகளைக் கொண்ட மாடங்கள் நிறைந்தது, நார்மன்னு பூண்டது-அன்பு பொருந்திய மனத்தையுடைய பல நல்ல துறைகளில் வாழ்கின்ற மாந்தர்கள் துதிக்கும்படி உலகில் நிலைத்த பழமை பொருந்திய புகழையுடையது.

**(வி - ரை) சீர்மன்னு சேல்வம்** - சீரினால் நிலைத்தலாவது நல்வழியின் ஈட்டப் பட்டதனால் நிலைபெற்றிருத்தல் அவ்வாறல்லாத பொருள்களாயின் விரைவில் அழிந்துபோம் என்பது நூற்றுணிபு **சேல்வக்குடி மன்னு சிறப்பு** - குடிகள் நிறைந் திருப்பதும் நல்ல செல்வம் பெருகியிருப்பதும் மாடங்களுக்குச் சிறப்பாவனவாம் சீர் - அறம், செல்வம் - பொருள், குடி - இன்பம், சிறப்பு - வீடு என நான்கு உறுதிகளும் தரும் என்ற குறிப்பும் காண்க.

**ஓங்கும் கார்மன்னு சேன்னி** - மேகங்கள் தங்கும் உச்சி என்பது மாடங்களின் உயர்ச்சியைக் குறித்தது. "செல்வ நெடுமாடஞ் சென்று சேணோங்கிச், செல்வமதி தோயச் செல்வ முயர்கின்ற, செல்வர் வாழ்" (குறிஞ்சி - கோயில்-5) என்ற ஆளுடைய பிள்ளையார் தேவாரத்தின் கருத்தையும் காண்க ஓங்கும் மாடம் என்று கூட்டலுமாம்.

**வைப்பு** - மாடங்களின் நிறைவாகிய சேமநிதி போல்வது என்றபடி.

**நார்மன்னு .போற்றும்** - எந்த நற்றுறைக்கும் அன்புடைய மனம் இன்றியமை யாது வேண்டப்படுவ தென்பதாம். அன்பும் நல்லொழுக்கமுமுடைய நல்லோரால் போற்றப் படுவதே நன்மதிப்பாகும், ஏனைய வெல்லாம் மதிப்பாகா என்பதும் குறிப்பு **பல நற்றுறை** பலவகையின நல்லொழுக்கங்களைக் குறித்தது. **மாந்தர்** - பழஞ் சங்கப் புலவர்களும் மற்றும் பெரியோர்களும். **பார்மன்னு தொன்மைப்புகழ்** - உலகில் நிலை

பெற்ற பழமை. "பாண்டிநாடே பழம்பதியாகவும்" (திருவாசகம்) முதலிய திருவாக்குக்களை இங்கு நினைவுகூர்க.

**பாண்டி நாடு** பாண்டிய மரபின் அரசர்களால் ஆளப்பட்ட நாடு.

பாண்டி நாட்டினை இத் திருத்தொண்டர் புராணத்தினுள் முதன் முதலிற் கூறநேர்ந்த இடம் இப்புராணமேயாதலானும், பாண்டிநாடு **தமிழ்நாடு** என்று சிறப்புப் பெயர் பெற்றதாதலானும் இங்குச் *செய்யுள் யாப்பினாலும், பொருளாலும் தமிழின் சிறப்புப்பற்றி ஆசிரியர் தொடங்குகின்றார். உறுதிப்பொருள் தராத சீவகசிந்தாமணியைக் கற்று அது தமிழ்வளனும் பொருள்வளனும் பெரிதுமுடையது என்று பாராட்டி மக்கள் போது போக்கிய காலத்தில் அவர்களது மனங்களை நற்றமிழிலும் நற்பொருளிலும் ஈடுபடுத்த இத்திருத்தொண்டர் புராணம் எழுந்தது என்பது திருத்தொண்டர் புராண வரலாற்றினாலறியப்படும் உண்மை, ஆதலின் பாண்டிநாட்டைப்பற்றிய இச்சரிதத்தைக் "காயமாண்ட தெங்கின் பழம்வீழக் கமுகின் னெற்றி" என்ற சிந்தாமணியின் கவித்துறை யாப்பினால் தொடங்கி அந்த ஒரேவகைச் செய்யுள் யாப்பினாலே புராண முழுதும் பாடியருளினார் ஆசிரியர் என்க. சிந்தாமணியை விடுத்து இதனைக் கற்போர் தமிழ்ச் சுவையும், இகபர நலனும் ஒருங்கே அடையுமாறு இச்சரிதங்கூறிய யாப்பமைதி ஆசிரியரின் கருணைத்திறத்தினையும் கவித்திறனையும் ஒருங்கே காட்டிநிற்கின்றது. இத் தமிழ்நாட்டரசர் புராணமே தமிழ்வளர்த்திறத்தற்றெனக் கொண்ட அமைதியும் காண்க. தமிழ்வளத்தினையே தமது திருமனத்துட் கொண்டு ஆசிரியர் இப் புராணத்தினுட் புகுந்தனர் என்பது, 968—974 திருப்பாட்டுக்களின் அமைப்பினால் இனிது விளங்கும். 974-ம் திருப்பாட்டில் வெளிப்படையாகக் கூறியருளியதனோடு 970-ல் **ஞாலமளந்த மேன்மைத் தெய்வத்தமிழ்,** என்று விதந்தும் கூறியருளினார். 1

இதனால் நாடும் நாட்டுச் சிறப்பும் கூறினார்.

969. சாயுந் தளிர் வல்லி மருங்குனெடுந் தடங்கண்
வேயும்படு தோளியர் பண்படு மின்சொற் செய்ய
வாயும்படுமே, நீள்கரை மண்பொருந் தண்பொருந்தம்
பாயுங்கட லும்படும், நீர்மை பணித்த முத்தம். உ

(இ - ள்) **நீர்மை பணித்த முத்தம்** - அன்பின் நீர்மையினாற் கொள்ளப்பட்ட முத்தம், சாயும் தோளியர் - தளிர்களையுடைய சாயும் கொடிபோன்ற இடையினையும் நீண்ட பெரிய கண்களையும் உடைய மூங்கில்போன்ற தோள்களையுடைய பெண்களின், பண்படும் **வாயும்படும்** - பண் உண்டாகின்ற இனிய சொற்கள் பொருந்திய சிவந்த வாயினிடத்தும் பொருந்துவன, **நீர்மை பணித்த முத்தம்** - நீரோட்டம் என்னும் தண்ணிய ஒளிமிகுந்த முத்துக்கள், நீள் கரை மண் பொரும் தண் **பொருநந்தம் பாயும் கடலும்படும்** நீண்டகரையின் மண்ணை இடித்து ஓடும் குளிர்ச்சியுடைய குளிர்ந்த **தாமிரபர்ணியாறு** பாய்கின்ற கடலிலும் உண்டாகின்றன.

(வி - ரை) **நீர்மை பணித்த முத்தம்** என்பதனை இரட்டுறமொழிந்து கொண்டு, முத்தம் வாயும்படும், முத்தம் கடலும்படும் என்று ஈரிடத்துங் கூட்டி உரைக்க. உம்மைகள் எண்ணும்மைகள். மேல் வரும்பாட்டிலும், 972 லும் இவ்வாறே கொள்க.

**வாயும்படும்** என்றதனோடு கூட்டும்போது-**நீர்மை** - அன்பின் தன்மை, **முத்தம்** - அன்பு காரணமாக உளதாகும் உடலின்றொழில் என்க "தாய வாய்முத்தங் கொள்ள" (672) என்றது காண்க. **பணித்த** உண்டாகிய - உண்ணின்று தூண்டப்பட்ட என்க. **படும்** - பொருந்தும். இங்கு **முத்தம்** - முத்துப்போன்ற பல் என்று உரைகொண்டு அதற்குத் தக உரைப்பாருமுண்டு

*இப்புராணத்தினுள் வேறு யாப்பினால் வரும் 996, 997 பாட்டுக்கள் ஐயப்பாடுள்ளன.

**கடலும்படும்** - என்றதனோடு கூட்டுமபோது, **நீர்மை** - நீரினுட்பிறக்கும் உயர்ந்த முத்துமணிகளுக்கியல்பாகிய ஒருவகை ஒளிப்பரப்பு. இதனை நீரோட்டம் என்பது வழக்கு **முத்தம்** - முத்து மணிகள் **பணித்த** - இங்குப்பொருந்திய என்ற பொருளில் வந்தது **படும்** - உண்டாகும்.

**மருங்குலையும் கண்ணையும் உடைய தோளியர்** எனக. **சாயும் மருங்குல்** - என்க தளிர்களின் செறிவும் கனமும் தாங்க மாட்டாது சாயும் வல்லி என்று காரணங்கூறியபடி

**வல்லி மருங்குல் - வல்லி** - கொடி. மெய்யுற்றி வந்த உவமம்

**நெடும் தடம் கண்** - நீண்டிருத்தலும் அகன்று விசாலமாயிருத்தலும் கண்ணுக்கு அழகிலக்கண மென்பர்.

**வேயும்படு தோளியர் - வேய்** - மூங்கில். **படுதல்** இங்கு அழகின்ற கீழ்மைப் படுதல் குறித்தது **வேய்**-பெண்களின் தோளுக்கு உவமமாகக் கொள்ளும் பொருள்களுள் ஒன்று

**பண்படும் இன் சொல்** - பண்கள் இயல்பான அமைந்து விரவுகின்ற இனிய சொல் "பண்ணமரு மென்மொழியார்" (மேகராக - திருமிழலை - 10), "பண்ணினேர் மொழியாள்" (குறுந் - மறைக்காடு - 1) முதலிய திருவாக்குக்கள் காண்க

**செய்ய வாய்** - செம்மை - உதடுகளின் இயல்பாகிய பவளம் போன்ற நிறம். தாம்பூலத்தினிறமுமாம்.

**நீள்கரை மண் பொருநம்**-வெள்ளப்பெருக்கினால் இருபுறமும் கரைகளில் மண்ணை அரித்துக் கொண்டு செல்லும் ஆற்றினது இயல்பு குறித்தது.

**தண் பொருநதம்** - குளிர்ச்சியுடைய தாமிரபாணி ஆறு **பாயும் கடலும்** என்று உடம்பொடு புணர்த்துக் கூறியவதனால் தாமிரபாணியாற்றின் நீர் பாய்வதனால் அந்நீரின் தன்மை பொருந்த அவ்விடத்துக் கடல் முத்துக்களை உடைத்தாகும் தன்மை பொருந்துவதாம் என்பது. தாமிரபாணி பாயும் கடற்கரையில் கொற்கை நகரின் பக்கத்தே முத்துக்குளிக்கப்பட்டதென்ற செய்தியும் காண்க. அன்றியும் தாமிரபாணியினால் பொதியம் முதலிய மலைகளினின்றும் வாரிக்கொண்டு வரப்பட்ட முத்துக்கள், அது பாயும் கடலிற் படும் என்றதுமாம் "பூழியர்கோன் றென்னாடு முத்துடைத்து" என்ற வழக்கும் காண்க

இப்பாட்டால் ஆறும் ஆற்றுச் சிறப்பும் கூறினார்.

**மண் படும்**—என்பதும் பாடம் 2

970\. மொய்வைத்தவண் டின்செறி சூழன் முரன்ற சந்தின்
மைவைத்தசோ லைமல யந்தர வந்த மந்த
மெய்வைத்தகா லுந்தரும் ; ஞால மளந்த மேன்மைத்
தெய்வத்தமி ழுந்தருஞ் , செவ்வி மணஞ்சே யீரம். ௩

(இ - ள்) **செவ்வி மணஞ்செய் ஈரம்** - நறுமணம் வீசச் செய்யும் ஈரத்தை, மொய்வைத்த **காலும் தரும்** - மொய்த்த வண்டுகள் நெருங்கிய கூட்டம் ஒலிக்கின்ற இருண்ட சந்தனச் சோலை சூழ்ந்த பொதியமலை தரவந்த மெல்லவுலவுகின்ற சிறு தென்றற் காற்றும் கொடுக்கும், **செவ்வி மணஞ்செய ஈரம்** நன்மணத்தைச் செய்தற்குரிய அன்பினை, ஞாலம் **தமிழும் தரும்** - உலகத்தை அளந்த மேன்மையும் தெய்வத்தன்மையும் உடைய தமிழும் தரும்

(வி - ரை) **மொய் வைத்த வண்டு** - என்றது கூட்டமாக மொய்க்கும் வண்டுகளின் இயல்பினையும், **செறிசூழல்** என்றது அக்கூட்டங்கள் பல நெருங்கிச் சூழ்ந்ததனையும் குறித்தன

**மூரன்ற சோலை** - எனக்கூட்டுக. **சந்து** - சந்தனம்.

**மூரன்ற** - மூரலுதற்கிடமாகிய. **மைவைத்த** - இருள் சூழ்ந்த சோலையில் இருள் சூழ்தல் மரங்களின் செறிவினால் ஆவது. **மலயம்** - பொதிய மலை. **மலயம் தரவந்த கால்** - தென்றல். **கால்** - காற்று. **மந்தம் மெய் வைத்த** - மெல்லிதாகிய பரிசம் உண்டாக்கும். **மந்தம்** - குளிர் பரிமளம் என்ற வாயுவின் வேகம் மூன்றில் மந்த நடையை உடம்பில் வைத்த என உரை கொள்வாரும் உண்டு.

**ஞாலம் அளந்த** - என்பது உலகம் இன்ன தன்மையுடையது என்று நிச்சயித்த - அளவுபடுத்திய - என்ற பொருளில் வந்தது. உலகத்தின் உண்மைத் தத்துவத்தை உணர்த்திய எனக். உலக முழுதும் பரவிய - உயர்ந்தாரால் மதிக்கப்பட்ட - என் றுரைப்பாருமுண்டு. **தெய்வத்தமிழ்** - சிவபெருமானருளிய பொருளிலக்கணமும், அறிவாற் சிவமே யாகிய உண்மை நாயன்மார்களருளிய தேவாரம் திருவாசகம் முதலிய திருவருணூல்களும் ஞான சாத்திரங்களும் ஆம். தெய்வத்தன்மை இத்திருவருள் வாக்குக்களின் செயலாலும் பிறவாற்றாலும் அறியப்படும். இக்கருத்தையே பாராட்டிக் கம்பரும் "நீண்டதமி ழாலுலகை நேமியி னளந்தான்" என்று அகத்தியரைத் துதித்துக் கூறியதும் காண்க.

இனி, "அவற்றுள்—படுதிரைவையம் பாத்திய பண்பே" (தொல் - பொருள் - அக - 2) என்றதனால் உலகினை நானிலமாக அளந்து, பொருள்களையும் அவற்றுள் அடக்கி யிலக்கணஞ் செய்தமையால் ஞாலமளந்த மேன்மை என்றார் என்பதுமாம். இதுவன்றியும், "நீலமேனி வாலிழைபாகத், தொருவ னிருதா ணிழற்கீழ், மூவகை யுலகு முகிழ்த்தன முறையே" என ஐங்குறுநூறு கடவுள் வாழ்த்தில் பாரதம் பாடிய பெருந்தேவனார் பாடியது போன்றவையும் ஞாலமளந்ததே யாமெனக்.

**மலயக்காற்று - செவ்வி மணம் செய் ஈரம்** தருதலாவது - குளிர்ச்சியையும் நன்மணத்தையும் கொடுத்தல். **ஈரம்** - குளிர்ச்சி. துணைபிரிந்து வருந்துவோர்க்குத் தென்றற்காற்று மணம் என்ற கூட்டத்தினை நினைவூட்டச் செய்தலும் குறிப்பாம். கைக்கிளைத் துறையில் தென்றலைப் பலதிறப்படப் பேசுதல் அகப்பொருள் வழக்கு.

**தெய்வத்தமிழ் - செவ்வி மணஞ்செய் ஈரம்** தருதலாவது அன்பை உளதாக்குதல். **ஈரம்** - அன்பு. இங்குச் **செவ்விமணம்** என்றது நன்மையின் கூடுதல் குறித்தது. யாழுடையார் மணம்பற்றிச், **செவ்வி** - பருவத்தே, பொழிலிடத்து கோபடும் அமையம் என்றலுமாம். நாயக நாயகிகளின் இவ்வுலகம்பற்றிய மணமும், ஆன்ம நாயகராகிய சிவபெருமானுடன் ஆன்மாவாகிய நாயகியின் ஒன்றுபடுதலும் அன்பு காரணமாகவே உளவாவனவாம். அன்பு விளைக்கும் அருட்பெருந் தமிழ்நூலாகிய திருக்கோவையாருக்கு உரை வகுத்த பேராசிரியர் இக்கருத்தை உரைத்தொடக்கத்தில் நன்கு விளக்கியுள்ளது காண்க. இறைவனார்தந்த அருட்பெருந் தமிழாகிய இறையனா ரகப் பொருளும் இவ்வாறே அன்பினைந்திணை என்று சிறப்பித்துக் கூறப்படும். இது ஆசிரியர் கருத்தாமென்பது "மெய்ம்மைப் பொருளாந் தமிழ் நூலின் விளங்கு வாய்மைச், செம்மைப் பொருளுந் தருவார் திருவால வாயின், எம்மைப் பவந்தீர்ப்பவர்" (974) என்றதனாலறியப்படும். "திருவால வாய்மாந்த செஞ்சுடரைச் செழும் பொருணூல், தருவானை" (திருநா - புரா. 406) என்று பின்னர்க் கூறுவதும் காண்க.

பக்குவத்துக் கியையச் சிவமணத்தைத் தருகின்ற அன்பை என்பர் இராமநாதச் செட்டியார். தெய்வமணஞ்செய் செவ்விதரும் என்று கூட்டிப் பிறவி வெப்பத்தை மாற்றித் தெய்வத்தன்மை செய்யவல்ல அழகிய அருளைத்தரும் தமிழ் என்றுரைப்பாருமுண்டு. "தீந்தமிழின் தெய்வ வடிவாள்" என்ற (11 - ம்முறை) ஞானவுலாவுங் காண்க.

**தெய்வத் தமிழ்** - தனிமுதற் றெய்வமாகிய சிவபெருமானே முதல்வராக இருந்து தந்ததும், ஆய்ந்ததும், விரும்பியதும், உள்ளுறை பொருளாய விளங்குவதும் ஆகிய தமிழ்மொழி என்பதுமாம். "மதுரையினிற் றிருந்தியநூற் சங்கத்தில், அன்றிருந்து

தமிழாராய்ந் தருளிய வங்கணார்" (திருநா - புரா - 403), "தலைச்சங்கப் புலவனார் தம்முன்" (திருஞான - புரா - 667) என்று பின்னாகக் கூறுபவையும் காண்க. "கண்ணுதற்பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து, பண்ணுறத்தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமிழ்" என்றதும், "நிழற்பொலி கணிச்சிமணி நெற்றியுமிழ் செங்கண், தழற்பொலி சுடர்க் கடவுள் தந்ததமிழ்" என்ற கம்பர் பாட்டும், பிறவும் காண்க.

மலயந்தர வந்த தென்றல் வெப்பம்மாற்றி உடலுக்குக் குளிர்ச்சி தருவதுபோல, அத்திருமலையில் வாழும் தமிழ் முனிவர் தரவரும் தமிழ், உயிர்களுக்குப் பிறவி வெப்பம் போக்கி அருணிழல் தருவதாம் என இந்த இரண்டினையும் தொடர்பு படுத்திக் கூறிய நயமும் காண்க

இத்திருப்பாட்டினால் மலையும் மலையின் வளனும், மொழியும் மொழியின் வளனும் இணைபிரியா வகையில் ஒருங்கே கூறிய திறமும் காண்க. 3

971. சூழுமிதழ்ப் பங்கய மாகவத் தோட்டின் மேலாள்
தாழ்வின்றியென் றுந்தனி வாழ்வதத் தையலொப்பார்
யாழின்மொழி யிற்குழ லின்னிசை யுஞ்சு ரும்பும்
வாழுந்நக ரம்மது ராபுரி யென்ப தாகும். ௪

(இ - ள்) சூழும் ஆக-இதழ்கள் சூழ்ந்த தாமரைமலர்போல, அத்தோட்டின் வாழ்வது - அத்தாமரைமலர்மேல் தங்கும் இலக்குமி தாழ்வில்லாமல் என்றும் சிறந்து வாழப்பெறுவது, அத்தையல் ஒப்பார் அந்த இலக்குமியைப் போன்ற பெண்களுடைய, யாழின்மொழியில் வாழும் - யாழின் மொழியிலும் கூந்தலிலும் முறையே இன்னிசையும் வண்டும் வாழ்கின்ற, **நகரம் மதுராபுரி** என்பது ஆகும் - நகரமானது **மதுராபுரி** என்ற பெயரால் சொல்லப்படுவது ஆகும்

(வி - ரை) **இதழ்சூழ் பங்கயம்** எனக. ஆக - போல என்ற பொருளில் வந்தது. **இதழ்சூழ்** என்று சிறப்பித்தது புறஇதழ் - அகஇதழ் கேசரம் - முதலிய மலரின் உறுப்புக்கள் முற்றும் வெளிப்படக் காணுமாறு அமைந்து காணப்படுவது **பங்கயமேயாம்** என்ற சிறப்பு நோக்கி.

**அத் தோடு** - அந்தப் பங்கயமாகிய மலர் பங்கயமும் தோடும் ஆகுபெயர் **மேலாள்** - மேல் உறைபவள் - திருமகள் **பங்கயம்** - வெண்டாமரை என்றும், **மேலாள்** கலைமகள் என்றும் கொண்டு அதற்குத் தக்கபடி உரைப்பாருமுண்டு

**என்றும் தாழ்வின்றி** - ஒருகாலத்துப் பெருத்தும், ஒரு காலம் சிறுத்தும் காணப்படாமல் எக்காலத்தும் குறைவின்றி. **தனிவாழ்வது** - **தனிமை** - இங்குப்போல வேறெங்குமில்லையாம் தன்மையாகிய சிறப்பு. மேலாள் - வாழ்வது - வாழும் நகரம் என்று முடிக்க. செயப்படு பொருளைச் செய்ததுபோலக் கூறினார் இயல்பாக வந்த காலமயக்கம்.

**அத்தையல்** - முன்சொன்ன அந்தத் **தோட்டின் மேலாள்** என்ற பெண்தெய்வம். **மேலாள்** என்று ஒருமையிலும் **ஒப்பார்** என்று பன்மையிலும் கூறியவாற்றால், மேலாள் ஒருத்தியாக, அவளை ஒப்பார் பலர் அங்குள்ளார் என்றது குறிப்பு. **தனிவாழ்வது** என்ற குறிப்பும் அது

**யாழின் மொழியில் இசையும், குழலிற் சுரும்பும்** என்று நிரனிறையாக்கி உரைத்துக் கொள்க **யாழின் மொழி** என்றது பெண்களின் மொழியில் இயல்பாயமைந்த பண்ணமைதி **இசை** இன்னிசை. இது பயிற்சியின் அமைவது **யாழ்** - யாழோசை குறித்து நின்றது ஆகுபெயர். யாழினோசைபோன்ற மொழி எனக. "யாழைப்பழித்த தன்னமொழி மங்கையொரு பங்கன்" (காந்தாரம் திருமறைக்காடு. 1)

என்ற ஆளுடையநம்பிகள் தேவாரம் காண்க. இன்-உறழ்பொருவில் வந்த ஐந்தனுருபு. யாழ் இன்மொழி என்று கூட்டியுரைத்தலுமாம்.

**யாழில் மொழியில்** யாழிலும் மொழியிலும் என்று உம்மைத்தொகையாக்கிப் பெண்கள் (வாசிக்கும்) யாழிலும், அதனோடு பொருந்தப்பாடும் மிடற்றுப்பாட்டிலும் இசை வாழ்வதாம் என்று உரைகொள்வதுமொன்று. "யாழிலெழு மோசையுட னிருவர் மிடற் றிசையொன்றி" (திருஞான - புரா (131), "யாண ரம்பெறிந் தின்னிசை யோரந்தெழீஇப், பாணர் கோமகன் பன்னியும் பாடினால்" (திருவிளை - இசை பட. 33) முதலியவை காண்க. **வாழ்தல்** - இனிதாக இடம்பெற்றமைதல்.

**குழலிற் சுரும்பு வாழ்தலாவது** கூந்தலிற்சூடிய மலர்களிடத்துத் தங்குதல்; புதின மலரும் பூக்களைத் தொடுத்தணிதலால் அவை அலரும் பருவத்தில் அவற்றில் தேனுண்ண வண்டுகள் தோய்வனவாம். "வம்பலர் நறுந்தொடையல் வண்டொடு தொடுப்பார்" (திருஞான - புரா-38) என்றது காண்க. சூடும் பூவில் வண்டுமொய்த்தல் இன்றும் மதுரையில் அம்மையார் கோயில் முன்பு திருப்பூமண்டபத்திற் காணத்தக்கது. உத்தம சாதிப் பெண்களின் கூந்தலின் இயற்கைமணங் கவரச் சுரும்பு அங்கு வாழ்வன என்ற குறிப்புமாம்.

யாழின் மொழியில் இசை வாழ்தல்பற்றி இசைவாதுவென்ற திருவிளையாடலில் பாணபத்திரர் மனைவியாரான விறலியார் முதலியோர் சரிதங்களையும், குழலிற் சுரும்பு வாழ்தல்பற்றித் தருமிக்குப் பொற்கிழியளித்த திருவிளையாடலில் சண்பக மாறனது தேவியார் குழலின் வாசம்பற்றிய சரித முதலியவைகளையும் நினைவு கூர்க.

வாழ்வது - வாழும் நகரம், (அது) மதுராபுரி என்பது ஆகும் என்று முடிக்க.

**நகரம்** - 968ல் நாடு கூறி, அதனை அடுத்து ஆறும் மலையும் கூறியவாறு, இப்பாட்டால் நகரம் கூறினார்.

**மதுராபுரி** - மதுரை. **மது** - அமுதம். குலசேகரபாண்டியன் சிவனது ஆணையின் வழியே கடம்பவனத்தின் முளைத்தெழுந்த கடவுளைக்கண்டு, காடெறிந்து நகரங் கண்டபோது சிவபெருமானது சிரத்திற் றரித்த பிறையினிடத்துள்ள **மது** (அமுதம்) வைத்தெளித்துச் சுத்தமாக்கிய காரணத்தால் இப்பெயர் பெற்றது. "பொன்மய மான சடைமதி கலையின் புத்தமு தருத்தன ரதுபோய்ச், சின்மய மான தம்மடி யடைந்தார்ச் சிவமய மாக்கிய செயல்போற், றன்மய மாக்கி யந்நகர் முழுதுஞ் சாந்திசெய் ததுவது மதுர, நன்மய மான தன்மையான் **மதுரா நக**ரென வுரைத்தனர் நாமம்" (மதுரை - நக - பட - 42) என்ற திருவிளையாடற் புராணங் காண்க. 4

972. சால்பாயமும் மைத்தமிழ் தங்கிய வங்கண் மூதூர்
நூல்பாயிடத் தும்முள; நோன்றலை மேதி பாயப்
பால்பாயமுலை தோய்மதுப் பங்கயம் பாய வெங்குஞ்
சேல்பாயதடத் தும்முள; செய்யுண்மிக் கேறு சங்கம். ௫

(இ - ள்) **செய்யுள் மிக்கு ஏறு சங்கம்** - செய்யுள்கள் (பாட்டுக்கள்) சிறந்து அரங்கேறுதற்கிடமாகிய சங்கங்கள், சால்பாய மூதூர் - சால்பினை ஆக்கச்செய்கின்ற முத்தமிழும் நிலைபெற்றுத் தங்கிய அழகிய இடமகன்ற அந்தப் பழைய நகரத்தில், நூல்பாய இடத்தும் உள - நூல்கள் பயிலப்படும் இடங்களிலும் உள்ளன; **செய்யுள் மிக்கு ஏறு சங்கம்** - செய்யினுள் (செய் - வயல்) மிகுந்து ஏறுகின்ற சங்குகள்; நோன்றலை தடத்தும் உள பெரிய தலைகளையுடைய எருமைகள் பாயா நிற்ப, அவற்றினுடைய பால் சொரியும் முலைகள் தோயப்பெற்ற தேன் தாமரைகளினின்றும் பாயச் சேல்மீன்கள் எங்கும் பாய்தற்கிடமாகிய தடாகங்களிலும் உள்ளன.

**(வி - ரை) சால்பு ஆய மும்மைத்தமிழ் சால்பு** - நிறைவுடைய மேன்மை. 871-ல் உரைத்தவை பார்க்க. **ஆய** - ஆக்கஞ்செய்கின்ற சால்பின் றன்மையை உயிர்களுக்கு அறிவுறுத்துகின்ற எனக. **மும்மைத்தமிழ்** - இயல் - இசை - நாடகம் என்ற மூவகைத்தமிழ். தமிழ் நூல்களுட் சால்பில்லாதனவும் காணப்படுமன்றோ? எனின், அவை அறிவுடையோரால் கொள்ளப்படாது தள்ளப்படுவனவாதலின் அவற்றினின்றும் வேறு பிரித்துணர்தற்குச் **சால்பாய** என்று வரையறுத்துக் கூறினார். **தங்கிய** என்ற குறிப்பும் அது. ஏனையவை அங்குத் தங்கா என்றபடி. **தங்குதல்** - நிலைபெறுதல். **தமிழ்** - மொழியினையும், மொழி வல்லோரையும் உணர்த்திற்று.

**மூதூர்** - மதுராபுரியின் பழமை சங்கநூல்களானும் பிறசரிதங்களானும் விளங்கும். "மூளைத்தானை யெல்லார்க்கு முன்னே தோன்றி" என்ற திருவாலவாயத் திருத்தாண்டகத்தாலும் பிறவாற்றாலும் அறியப்படுகின்ற ஆலவாயப் பெருமானது பழமைபற்றி இந்நகரின் பழமையும் உடனறியப்படும்.

**செய்யுள் மிக்கு ஏறு சங்கம் - நூல்பாய் இடத்தும் உள** - செய்யுள் நூல்களை ஆராய்ந்து சிறந்தனை அரங்கில் ஏற்றும் சங்கங்கள் குறித்தது.

**செய்உள் மிக்கு ஏறு சங்கம் - சேல்பாய் தடத்தும் உள** - என்றது மிக்க சங்குகள் வயல்களில் ஏறுவன, அவை தடாகங்களிலும் உள்ளன என்றபடியாம். தடாகங்களில் உள்ள சங்குகள் பல ஏறிச் செய்யினுள் (வயலினுள்) செல்வன எனக.

**நோன்றலை** - பெரியதலை. **நோன்மை** - பெருமை. "உறுநோத் தாங்கிய மதனுடை நோன்றாள்" (திருமுருகு)

**மேதி பாய** - மேதிபாய, அதனபால் பாயமுலை தோயப்பெற்ற மதுப் பங்கயத்தினின்றும் பாய எனக. **பால் பாய்முலை** மிகுதியாகப் பால் சொரியும் முலை. **தோய் பங்கயம்** - முலைகள் தோய்ந்த தாமரை மலரினின் பாய பாய்தலால், மிகுதியாக ஒழுகுதலால் காரணப்பொருளில் வந்த வினையெச்சம். **மதுப்பங்கயம்** - முன்னரே **தேன் ஊறி** நிறைந்த தாமரை. அதனோடு மேதிகளின் முலைப்பால் சோர்ந்து வெளிப்பாய, அதனை உண்ணச் சேல்கள் எங்கும் பாய்ந்தன என்பது "வருமேனிச் செங்கணவரால் மடிமுட்டப் பால்சொரியும், கருமேதி" (8) என்ற திருநாவுக்கரசர் புராணச் செய்யுட் கருத்தினை இங்கு உன்னுக. மேதி தடத்தினுட் பாய, அவற்றின் பால்பாய முலை தேனுடைய தாமரையிற் பாய, அதனை உண்ணச் சேல் பாய உள்ள தடங்கள் என்று தொடர்ந்து பொருள்கொள்க. 5

973. மந்தாநிலம் வந்தசை பந்தரின் மாட முன்றிற்
பந்தாடிய மங்கையர் பங்கயச் செங்கை தாங்குஞ்
சந்தார்முலை மேலன, தாழ்குழை வாண்மு கப்போற்
செந்தாமரை மேலன, நித்திலஞ் சோர்ந்த கோவை. சு

**(இ - ள்) நித்திலம் சேர்ந்த கோவை** - முத்துக்களைச் சேர்த்துக் கோத்த கோவையாகிய மாலை, மந்தாநிலம்... முலைமேலன - தென்றற்காற்று வந்து மெல்லிதாய் அசைகின்ற மாடங்களின் முற்றத்தில் பந்து ஆடிய மங்கையரின் செங்கை தாங்கும் சந்தனம் பொருந்திய முலையின்மேல் உள்ளன, **நித்திலம் சேர்ந்தகோவை**- முத்துப்போன்ற வேர்வையின் கோவை, (பந்தாடிய மங்கையர்) தாழ் செந்தாமரை மேலன - தாழும் குழையுடைய ஒளிபொருந்திய முகமாகிய அழகிய தாமரையின் மேல் உள்ளன.

**(வி - ரை) மந்தா நிலம்** - தென்றல். மந்தம் அநிலம் என்பது மந்தாநிலம் என வந்தது வடநூன் முடிபு. **அநிலம்** - காற்று. **அசை** - மெல்லிதாக வீசும்.

**மாடமுன்றிலில் பந்தாடிய** எனக.

**செங்கை தாங்கும் சந்தார் முலை** - கைவரைகள்படியத் தொய்யில் எழுதிய சந்தனம் பூசிய கையைச் சந்தனக் குழம்பிற் றோய்த்து முலையில் கைபடியத் தொய்யில் எழுதுவது முன்னுள்ள வழக்கு "இருநிலமா மகண்மார்பில், அழுந்துபட வெழுது மிலைத் தொழிற்றொய்யி லணியினவாம்" (இடங்கழி - புரா 1) என்றது காண்க. செங்கை-கையின் தொழில். ஆகுபெயர். பங்கயச்செங்கை பந்தாடிய மங்கையர் தாங்கும் முலை என்று கூட்டி உரைத்தலுமொன்று. குயபாரம் எனப்படுதலால் **தாங்கும்** என்றார்.

**நித்திலம் சேர்ந்த கோவை - முலை மேலன** என்றது முத்து மாலைகள் மார்பின் மேற் றாழ்ந்து கிடந்தன என்பதாம்.

**நித்திலம் சேர்ந்த கோவை - முகப்போற் செந்தாமரை மேலன** என்றது மங்கையர் பந்தாடுதலினால் முகத்தின் முத்துப்போன்ற வேர்வைத் துளிகள் காணப்பட்டன என்பதாம். வேர்வை அரும்ப விளையாடுதல் உடல் நலத்துக்கடுத்ததென்பர் மருத்துவ நூலோர்.

**தாழ்குழை** - குழைதாழ்ந்து தொங்குதல் அணிபுனைவகையுள் ஒன்று. இந்நாளிலும் ஒவ்வோர் வகையால் கீழ்த்தொங்கும் காதணிகளை அணியும் வழக்குக்காண்க. வடிந்து தொங்கும் காதுடைமை அழகிலக்கணங்களில் ஒன்றாகக் கருதப்பட்டது முன்னுள்ள வழக்கு வடிவார்காது - வடிந்தகுழைதாழ முதலிய வழக்குக்கள் காண்க.

**வாள் முகம்** - இயல்பாகிய ஒளி பொருந்திய முகம் குழையின் ஒளி வீசும் என்றலுமாம். **பொன்** - அழகு, **முகச்செந்தாமரை** - முகமாகிய தாமரை உருவகம்.

**பந்தாடிய மங்கையர்**-பெண்கள் ஏற்ற பாட்டுப் பாடிக்கொண்டு பந்தடித்து விளையாடுதல் நீண்ட பழங்காலமுதல் தமிழர்களின் வழக்குக்களுள் ஒன்றாகும். பந்தாடுதல் மகளிர்க்குரிய விளையாட்டுக்களுள் ஒன்றாகவே முன்னாளிற் கருதப்பட்டது. "கருந் தடங்கண் ணாகழலப் பந் தம்மானைப் பாட்டயரும் கழுமலமே" முதலிய திருவாக்குக்கள் காண்க. "தேவ ரார மார்பன் வாழ்கவென்றுப் பந் தடித்துமே" என்பது முதலாகப் பழந் தமிழ் நூலாகிய சிலப்பதிகாரத்தினுட் கூறுதலும் பிறவும் இங்கு நினைவு கூர்க. ஆண் மக்கள் பந்தாடுதல் இந்நாளின் நவீன வழக்குக்களுள் ஒன்று. இவ்வாறு ஆண்டன்மையுடைய வீர ஆடல்களில் ஆசை குறைந்து ஆடவர் பெண்மையை அவாவி நிற்பது புது நாகரிகக் கோரங்களுள் ஒன்றென்பது அறிந்தோர் கருத்து. 6

974. மும்மைப்புவ னங்களின் மிக்கதன் றேயம் மூதூர்
மெய்ம்மைப்பொரு ளாந்தமிழ் நூலின் விளங்கு வாய்மைச்
செம்மைப்பொரு ளுந்தரு வார்திரு வால வாயில்
எம்மைப்பவந் தீர்ப்பவர் சங்க மிருந்த தென்றால். ௭

(இ - ள்) அம்மூதூர் - அந்தப் பழைய நகரம், மெய்ம்மை...திருவாலவாயில் - உண்மைப் பொருள்களைக்கண்ட தமிழ் நூல்களுள் வாய்மை விளங்கும் செம்மைப்பொருளுந் தருவாராகிய இறைவனார் எழுந்தருளிய திருவாலவாயில், எம்மை என்றால் - எம்மைப் பவம்போக்கி உய்யக்கொண்டருளும் அந்த இறைவனார் தாமே தலைவராகச் சங்கம் வீற்றிருந்த செய்தி நிகழ்தற்கிடமாயிருந்ததென்று காண்போமாகில், மும்மை ...அன்றே - மூன்று உலகங்களிலும் அது மேலாக விளங்குவதல்லவா?

(வி - ரை) **மும்மை அன்றே** - மும்மைப் புவனங்களாவன - மேல், நடு, கீழ் என்ற மூன்று புவனங்கள் சொர்க்க மத்திய - பாதலம் என்பர். இவற்றுள் மேலே ஏழும் கீழே ஏழும் ஆகப் பதினான்கு உலகங்கள் உள என்று கூறுவர். **மிக்கது** - மூவுலகங்களினும் மேன்மை பெற்றது. **அன்றே** - உடன்பாட்டு உறுதிப் பொருள் குறித்தவினா. **சங்கம் இருந்த தென்றால் மிக்க தன்றே?** என்று கூட்டுக.

**மூதூர்** - *முதுமை ஊா - மூதூா என வநதது.* நாடு, **தொன்மைப் புகழ்பூண்டது** 968) *எனறதற கேறப, அதன தலைநகரமும* **மூதூர்** *எனபபட்டது எலலாககு முனனே தோனறி முளைதத முழுமுதற கடவுள எழுநதருளியுளள தலமாதலின அநதப பழமை பறறியும* **மூதூர்** *எனறாா*

**மெய்ம்மைப் பொருளாம் தமிழ் நூல்**-"*ஞாலமளநத மேனமைத தெயவத தமிழ*" (970) *எனறவிடதது உரைததவை பாாககை. தமிழ நூலகள மெயமமைப பொருள இனனது - பொயமமைப பொருள இனனது எனக காட்டி உலகததை நிலைப்படுததுத லால இவவாறு கூறினாா*

**தமிழ் நூலில் விளங்கு வாய்மைச் செம்மைப் பொருள்** - *அததமிழ நூல களுளளே சிறநது விளஙகும, முடிநத உணமையாகிய செமமை பெறும பொருளைத தருவதாய விளஙகுகினற பொருளால* **மெய்ம்மைப் பொருள்** *எனறது பொருள நிச சயம செயத நிலையினையும, அதனுள,* **வாய்மைச் செம்மைப் பொருள்** *எனறது அவ வாறு நிசசயிதத பொருளை அனுபவ வகையால அடையும யோக (முததி) நிலையினையும குறிததன*

**செம்மைப் பொருள்** *செமபொருள எனப* **செம்மை** *முததி* "*திருநினற செமமையே செமமையாக கொணட திருநாவுககரையன*" (*திருததொணடததொகை*) "*செமமைநல மறியாத சிதடா*" (*திருவாசகம - அசசோ* - 9) *முதலியவை காணக. இசசெமமைப பொருளின அனுபவநிலை தமிழ அகபபொரு ளாலகளாலுணாததபபடும திருககோவையாருரைபபாயிரததாலும இறையனாரகப பொருள உரைபபாயிரததாலும இஃது இனிது விளஙகும*

**மெய்ம்மை.. பொருளும் தருவார்**-*திருவாலவாயில இறைவா தமிழ நூலின உணமைத தனமையினை விளககினாா எனபது இறையனாரகப பொருளாலும, திருவிளையாடற புராணம-சஙகததாா கலகநதீாததது முதலிய சரிதஙகளாலும அறியலாம.* **செம்மைப் பொருளும் தருவார்** *எனறது அறிவனூற பொருளும உலகியனூற பொருளும எனற இரணடனுள பிறா எவராலும உணாததறகரிய ஆகமநூல வழியி னுதலிய ஞான யோக நுணபொருளாகிய அனுபவநிலை எனனும முததிபபொருளைத தருதல "தணணாா தமிழளிககுந தணபாணடி நாட்டானை*" (*திருவமமானை*) *எனற திரு வாசகம காணக*

**பொருளும் தருவார் பொருளும்** - *தமிழ நூலகளைத தருதலேயனறி அவறறுள விளஙகும வாயமைச செமமைப பொருளும என உமமை இறநதது தழுவிய எசச வுமமை. சொலலையும தருவாா, அசசொல நுதலிய பொருளகளாகிய* "*பொனனு மெயபபொருளும*" "*போகமும வீடும*" *ஆகியவறறையும தருவாா எனபது* "*போகா பவாககதம*" *எனபது ஆகமம* "*கொஙகுதோ வாழககை*" *எனற பாடலைப பாடித தநததுவும இஙகு நினைவுகூாக இககருததுப பறறியே* **எம்மைப் பவந்தீர்ப்பவர்** *என அவா பொருள தருதறகுக காரணங கூறினாா* **சங்கம்** *எனறதனால நூலதருத லும,* **பவந்தீர்ப்பவர்** *எனறதனால* **செம்பொருள்** *தருதலும கூறியவாறாயிறறு* **பவம்** *பிறவிககேதுவாய பசுததுவம.* "*பவமினறும*" (*சிவஞானபோதம* - 12 - 4) *எனறது பாாகக*

**பவந்தீர்ப்பவர் சங்கம் இருந்தது என்றல் சங்கமிருந்தது** *சஙகததில தலைவ ராக வீறறிருநத இடம* **பவந்தீர்ப்பவர்** *எழுவாய* **இருந்தது** *இருநதது - இருததற கிடமாகியது* **சங்கமிருத்தல்** - *ஒரு சொல பவநதீாபபவருடைய சஙகம எனறு ஆறும வேறறுமைத தொகையாகக கொணடு அவரது சஙகம இருநதது எனறுரைபபினுமாம*

**மெய்ம்மைப் பொருளாம் தமிழ்நூல்** - "*தெயவத தமிழ*" (970), "*சாலபாய மூமமைத தமிழ*" (971) *எனறவை காணக தமிழநாட்டெலலையுள காணும நாடுகள*

பலவற்றுள்ளும் பாண்டிநாடொன்றே தமிழ்நாடு எனப்படும். இறைவனாரும், அவர்தம் திருமகனாரும், அவர்களிடம் தமிழுணர்ந்த அகத்தியரும் சங்கமிருந்து தமிழ்வளர்த்தனர் அகத்தியர் இன்றும் பொதிகையில் இருந்து தமிழ்பரப்புகின்றார் என்ப ஆதலின், சோழநாடும் காவிரியும் இணைபிரியாமல் எண்ணவருவனபோலப், பாண்டிநாடும் தமிழும் இணைந்தே எண்ணவருவனவாம். இதுபற்றியே ஆசிரியர் தமிழொடு புணர்த்தியே நாடும் நகரும் சிறப்புக் கூறுவாராயினர். முன்னர் 968ல் உரைத்தவையும் பார்க்க. நமது பரம ஆசாரியர்கள் ஆலவாயிறைவரைத் தமிழ்த்தலைவராகவே கண்டு வணங்கியதனை ஆசிரியர் கண்டு காட்டியருளினர் இத்தகைய தமிழ்ப்பெருநாட்டினும் இந்நாளின் தமிழ்வாசனை அருகிவரும் கொடிய காட்சி வருந்தத்தக்கதாம்.

**செம்மைப்பொருளும் தருவார்** என்ற இடத்தில் தமிழ்நூல்களுள் வாய்மை பெரிதும் காணப்படினும் பிற்காலத்து நூல்களுள் வாய்மையின் மாறுபட்டவை காணப்படுவன என்றும், இங்குப் **பொருளும்** என்றதனை இறையனார் அகப்பொருள் குறித்ததெனக் கொள்ளுதல் சரித்திரத்துணைபெறாத பிற்காலவழக்கு என்றும், இறையனார் என்பார் அப்பெயர் கொண்டதொரு புலவரே யென்றும் சிலர் ஆராய்ச்சியுரை காண்பர்.

தமிழ்நூலுள் வாய்மை விளங்கும் என்றதேயன்றி வேறு நூல்கள் தமிழில் இல்லை என்று இப்பாட்டிற் கூறப்படவில்லை. நமது பரம ஆசாரியன்மார்களால் மறுக்கப்பட்ட சமண சாக்கிய முதலிய புறச் சமய நூல்கள் பலவும் தமிழிலதானே இருந்தன. "வாயிருந்தமி ழேபடித் தாளுறா ஆயிரஞ்சமண" என்றதனால் வாய்மை தேறாமலும் சிவனுக்கு ஆட்படாமலும் கழிந்த தமிழரும் உண்டாயிருந்தனரன்றே! இங்கு ஆசிரியர் கருதியது தமிழ்நூல்களுள் வாய்மை விளங்குவது என்ற மட்டிலே அமைவதாம்.

**தமிழ்நூலின் பொருளும் தருவார்** என்றதற்கு அகப்பொருணூல் தந்ததனை உட்குறித்துவைத்து ஆசிரியர் கூறினர் என்பது, "திருந்தியநூற் சங்கத்தில் அன்றிருந்து தமிழாராய்ந் தருளியவங் கண்ணர்கோயில்" (திருநா - புரா - 403), "தலைச்சங்கப் புலவனார்" (திருஞான - புரா - 667), "நூலின்கட் பொருள்பாடி நூலறிவார்க் கீந்தானை" (திருஞான - புரா - 883), "திருவாலவாயமர்ந்த செஞ்சுடரைச், செழும் பொருணூல், தருவானை" (திருநா - புரா 406) என்றவற்றால் இனிது விளங்கும். மேற்கூறியவாற்றால் இறையனார் என்பாரை வெறும் புலவராகவன்றிக் கடவுளாகவே ஆசிரியர் கருதினர் என்பதும் விளங்கும் ஆசிரியரது தெய்வத் திருவாக்குக்கு மாறுபட்ட ஆராய்ச்சிகள் உண்மைக்கு மாறுபட்டவையாமென்பது அறிவோர் துணிபு. 7

975. அப்பொற்பதி வாழ்வணி கர்குலத் தான்றொன்மைச்
செப்பத்தகு சீர்க்குடி செய்தவஞ் செய்ய வந்தார்
எப்பற்றினை யும்மறுத் தேறுகைத் தேறு வார்தாள்
மெய்ப்பற்றெனப் பற்றி விடாத விருப்பின் மிக்கார், அ

*976. நாளும்பெருங் காதன யப்புறும் வேட்கை யாலே
கேளுந்துணை யும்முதற் கேடில பதங்க ளெல்லாம்
ஆளும்பெரு மானடித் தாமரை யல்ல தில்லார்,
மூளும்பெரு கன்பெனு மூர்த்தியார் மூர்த்தி யார்தாம். கூ

975. (இ - ள்) வெளிப்படை. அந்த அழகிய நகரத்தில் வாழ்கின்ற **வணிகர்** குலத்தில் மிக்க நிறைவுபட்ட **பழமை**யாகிய யாவராலும் உயர்வாக எடுத்துச் சொல்லத்தக்க சிறப்புடைய **குடியுள்ளார்** செய்த தவத்தின் பயனாக அவதரித்தார், (அவர் யாரெனில்) எல்லாப்பற்றுக்களையும் முற்றும் அறுத்து, விடையினை ஊர்தியாக

வுடையவராகிய சிவபெருமானது திருவடிகளையே உண்மையான பற்றுக்கோடாகப் பற்றி விடாப்பிடியாகக்கொண்ட விருப்பத்தின் மிக்கவர், அ

976. (இ - ள்) வெளிப்படை. நாடோறும் பெரிய காதல் கூர்ந்து பொருந்த வரும் ஆசைபெருகி வேட்கையாகி விளைந்ததனாலே சுற்றமும் துணையும் முதலாகிய கெடுதலில்லாத பதங்கள் எல்லாம் ஆளும் பெருமானாகிய சிவனது திருவடித்தாமரைகளேயல்லாது வேறில்லாதவர், மூண்டு பெருகும் அன்பு என்றதனையே தமது உருவமாகக் கொண்டவர், அவர்தாம் **மூர்த்தியார்** என்ற பெயர் பூண்டவர், கூ

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

975. (வி - ரை) **அப்போற்பதி** - அ முன்னர் "மும்மைப் புவனங்களின் மிக்கது" (974) என்றும், "பங்கயத்தின் மேலாள் தாழ்வின்றி யென்றும் தனி வாழ்வது" (971) என்றும் உரைக்கப்பட்ட அந்த என்க. அகரம் முன்னறிசுட்டு. **போற்பதி** - **போன்** - அழகு குறித்தது. திருமகள் வாழும் நகரம் என்றலுமாம். பொன் வேய்ந்த சிகரங்களையுடைய என்றலுமொன்று.

**வணிகர் குலம் - சீர்க்குடி** - **குலம்** பெரும்பிரிவும், **குடி** அதனுட் சிறுபிரிவும் குறித்தன. இங்குச் **சீர்க்குடி** என்பது வணிகர் மூவகையுட் பெருங்குடி குறித்தது போலும். **ஆன்ற தொன்மை** என்றதற்கு வேதமுதலிய அறநூல்களுள்ளே தொன்று தொட்டு நாற்குலம் என்று வழங்கும் பழமையுடைய என்பர்.

**செய்தவம் செய்ய வந்தார்** - சீர்க்குடியானது தான் செய்யத்தக்க தவத்தினைச் செய்ததனாலே - செய்த காரணத்தினாலே - அதனில் வந்தவதரித்தார். **குடி** குடியில் முந்தையோர். ஆகுபெயர். "அளவில்செய் தவத்தினாலே" (662) என்றதும், அவ்வாறு கூறும் பிறவும் காண்க. **செய்ய** - செய்வதன்பொருட்டு என்றுகொண்டு, செய்யத்தக்க தவமாகிய சைவ தவத்தினைச் செய்வதற்காக வந்தார் என்றுரைத்தலுமாம். "தவஞ்செய்த, நற்சார்பில் வந்துதித்து" (சிவஞானம் - 8 - 1) என்றதற்கு மீளத் தவஞ் செய்தற்குரிய உயர்ந்த குலத்தின்கண் வந்து தோன்றி என்று எமது மாதவச் சிவஞானயோகிகள் உரைத்ததனை ஈண்டுச் சிந்திக்க

**எப்பற்றினையும்** - யான் - எனது என்னும் அகப்பற்று புறப்பற்றுக்களுள் அடங்கிய எல்லாவகைப் பற்றுக்களையும். உம்மை முற்றும்மை. மண் - பெண் - பொன் என்ற மூவகைப் பற்றுக்களும் அவைபோன்ற உலகப்பற்றுக்கள் யாவும் இவற்றுள் அடங்கும். மண், பொன் ஆகிய பற்றுக்களை அறுத்ததனை 1008—1013 பாட்டுக்களிலும், பெண் ஆகிய பற்று அறுத்ததனை 1014-லும் கூறியது காண்க. **அறுத்து** - தம்மைப் பற்றுதபடி நீக்கி. இவை உயிரோடு பற்றிக்கட்டுவன ஆதலின் அந்தக் கட்டினை அறுத்து என்றார். உருவகம். வலிமை பற்றிப் பெண்ணை வேறு பிரித்துக் கூறினார்

**தாள் மெய்ப்பற்று எனப்பற்றி** - என்றதனால் முன் சொல்லிய ஏனை எப்பற்றும் பொய்ப்பற்றுமென்பது. அவற்றை அறுத்தற்கும் இதனைப் பற்றுதற்கும் காரணம் கூறியவாறு "பொன்னு மெய்ப் பொருளும்" என்ற குறிப்புப்போலக் காண்க "பொன்னும் மெய்ப்பொருளும்" = செல்வமும் கல்வியும், "போகமுந்திருவும்" = புத்தியும் முத்தியும், முன்னைய இரண்டும் சாதனங்கள், பின்னைய சாத்தியங்கள் "கேடில் விழுச்செல்வங் கல்வி", "மெய்ப்பொருள் கல்வி" என்பன காண்க **திரு** - "மோட்ச சாம்ராஜ்ய லக்ஷ்மி" என்பர் வடநூலார் "பேய்த்தேர் நீரென்று வரும் பேதைக்கு மற்றுணர்ந்த, பேய்த்தே ரசத்தாகும் பெற்றிமையின்" (7 - 2) என்றும் "பன்னிறத்துப், பொய்ப்புலனை வேறுணர்ந்து பொய்பொய்யா மெய்கண்டான், மெய்ப்பொருட்குத் தைவமாம் வேறு" (8 3) என்றும் வரும் சிவஞானபோத உதாரண வெண்பாக்களா லுணர்த்தப்படும் உண்மைகளை இங்குவைத்துக் காண்க இவ்வாறுணர்ந்து பற்றியதனாலே பதங்கள் எல்லாம் பெருமானடித்தாமரையல்லதில்லாது

அன்பு மூளப்பெற்றார் என மேல்வரும்பாட்டில் இக்கருத்தைத் தொடர்ந்து கூறியதும் காண்க. "பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப், பற்றுக பற்று விடற்கு" என்ற திருக்குறளும், "மற்றுப் பற்றெனக் கின்றி நின்றிருப் பாத மேமனம் பாவித்தேன்" (நம்பிகள் - தேவாரம்), "பற்றை யெறியும் பற்றுவரச் சார்பா யுள்ள" (சண்டீசா - புரா - 11) "பற்றை யறுப்பதோர் பற்றினைப் பற்றிலப் பற்றை யறுப்பரென் றுந் தீபற" (உந்தி - 25), "பற்றினுட் பற்றைத் துடைப்பதொரு பற்றறிந்து, பற்றிப் பரிந்திருந்து பார்க்கின்ற - பற்றதனைப், பற்றுவிடி லந்நிலையே தானே பரமாகும்" (களிற்றுப்படி 30) என்ற கருத்துக்களும் சிந்திக்கத்தக்கன. அறுபான்மும்மை உண்மை நாயன்மார்களுள் துறவுநிலை பூண்டு சிவனை யடைந்த இருவரில் மூர்த்தியார் ஒருவராதலின் அவரது துறவுக்குக் காரணமாகிய உள்ள நிலையை இவ்வாறு முதலிற் கூறினார்.

**விடாத விருப்பின் மிக்கார் - விடாத** - என்றும் பிறழாத **விருப்பின் மிகுதல்** - ஆசை மேன் மேல் அதிகரித்தல். இவ்வியல்புகளே இச்சரித விளைவுக்குக் காரணமாயின என்பதனை 983 - 987 பாட்டுக்களிற் கண்டு கொள்க. "விடாத அன்புடனென்றும் விருப்பால" (அதிபத்தா - புரா 11) என்ற கருத்தும் காண்க. 8

976. (வி - ரை) **பெருங்காதல் நயப்பு உறும் வேட்கை** - விடாத விருப்பின் மிகுதி பெருங்காதலாக உருப்பட்டது, அது முறுகவே, நயப்பு என்னும் ஆசையாகியது, அது மேலிட்ட வேட்கையாக விளைந்தது எனக் மனத்துள் அன்பு பெருகிப் படிப்படியாக வளர்ந்து கூர்தரும் வகையினைக் கூறியபடி. 751 பார்க்க.

**கேளும் இல்லார் - கேள்** - உயிர்ச்சார்பு **துணை** - உயிர்ச்சார்பும் பொருட் சார்பும். **கேடில் பதங்கள்** - பதமுத்திப் போகங்கள். ஏனையவற்றை நோக்க இவை காலத்தால் நீடித்தனவாதலின் **கேடில்** என்றுபசரித்தார். இப்பொருளைச் சிங்கமுகாசுரன் எடுத்துச் சூரபன்மனுக்கு இனிது விளக்குகின்ற திறம் கந்தபுராணத்தினுட் கூறப்பட்டது காண்க. "அழிவில மெய்வரம் பெற்றன மென்றனை யதற்கு, மொழி தருமபொருள் கேண்மதி முச்சகந் தன்னுட், கெழிய மன்னுயிர் போற்சில வைகலிற் கெடாது, கழிபெ ருமபக லிருந்திடும் பான்மையே கண்டாய்" (சூரன்மைச்சியல் கஙகூ) இறைவனருளிற் பெறும் அபரமுத்திப் பெரும் போக மொன்றே என்றும் அழியாததாகும் என்பது உண்மை நூல்களின் துணிபு. **அல்லது இல்லார்** - உறுதிப் பொருள் தர எதிர்மறை முகத்தாற் கூறினார். 934 முதலியவை பார்க்க. "ஈச னேநீ யல்ல தில்லை யிங்கு மங்கு மென்பதும்" என்ற திருவாசகம் காண்க. **கேளும் துணையும்** என்றவற்றால் ஆன்மார்க்கள் இம்மையில் தமக்குப் பற்றுக் கோடாக எண்ணிக்கொள்வனவும், **கேடில் பதங்கள்** என்றதனால் மறுமையிற் பற்றுக் கோடாகக் கொள்வனவும் குறிக்கப்பட்டன. இம்மைத்துணை முதல் மறுமைப்பயன் வரையுள்ள எல்லாம் என்பது "நெறியறு வகையு மேலொடு கீழ்டங்க வெறும்பொய்யென நினைந்திருக்க" என்பது சித்தியார். **துணை** - "துணையென்று நானொருப் பட்டவொண் சுடரை" (கழுமலங்-தக்கேசி - 3) என்ற நம்பிகள் தேவாரங்காண்க.

**ஆளும் பெருமான்** - "அம்மையி னுந்துணை யஞ்செ ழுத்துமே" (காந்த - பஞ்ச பஞ்சாக்கரப் பதிகம்-6) என்று ஆளுடைபிள்ளையார் அருளியபடி உயிர்களுக்குப் பதமும் வீடும் தந்து ஆட்கொள்ளும் சிவபெருமான் என்பதாம். "இம்மை வானவர் செல்வம் விளைத்திடும்; அம்மை யேற்பிற வித்துயர் நீத்திடும், எம்மை யாளு மிடைமரு தன்கழல், செம்மை யேதொழு வாரவினை சிந்துமே" (குறுந் - திருவிடை 4) என்ற அப்பர்சுவாமிகள் தேவாரமுஞ் சிந்திக்க.

**மூளும் பெருகு அன்பு என்னும் மூர்த்தியார்** - அன்பு மூண்டு பெருகிய அதுவே உருவாகி நின்ற என்பது. **மூர்த்தி** - உடல் - திருமேனி (வடிவம் என்பர்). மூர்த்திக்குள் இருந்து அதனை இயக்குபவர் மூர்த்திமான். ஆசனம் - மூர்த்தி -

மூாததிமான என்ற ஆகம பூசை முறையும காணக. மூாததம எனபதும இது. மூாததியாா மூாததியை உடையவா

**மூர்த்தியார் தாம் மூர்த்தியார்** - எனக. மூாததியாா பினவநதது பெயா. இவ வாறு அடுககி மொழிநது சிறபபிபபது ஆசிரியாது மரபு - 932 முதலியவை பாாகக 9

977. அநதிபபிறை செஞசடை மேலணி யால வாயில
எநதைககணி சநதனக காபபிடை யென்று முடடா
அநதசசெய லினனிலை நினறடி யாரு வப்பச
சிநதைக்கினி தாயதி ருபபணி செயயு நாளில, கO

678. கானககடி சூழவடு கககரு நாடா காவன
மானபபடை மன்னன வலிநது நிலஙகொள வாறுய
யானைககுதி ரைககரு விப்படை வீரா திணடேர்
சேனைககட லுஙகொடு தெனறிசை நோககி வநதான. கக

977. **(இ - ள்)** வெளிபபடை. மாலையில விளஙகும பிறையைச சிவநதசடைமேல அணிநத திருவாலவாயுடையாராகிய எநதைககுச சாததுகினற சநதனககாபபினை இடையில் ஒருநாளும தவிராத அநதச செயகையில நிலைதது நினறு அடியாாகள மகிழுமபடி மனதுககினிதாகிய திருபபணியைச செயது வருகினற நாளிலே, கO

978. **(இ - ள்)** வெளிபபடை. காடாகிய அரணையுடைய வடுகக கருநாடாகளின காவல பொருநதிய பெரிய சேனையுடைய அரசன, சேனைப்பலததினால வலிமை செயது நிலததைக கைபபறறுவானாகி, யானைகளும குதிரைகளும வீராகளும திணணிய தோகளும கொணட கடலபோனற சேனையைச செலுததிககொணடு தெனறிசை நோககி வநதான கக

இநத இரணடு பாடடுககளும தொடாநது ஒரு முடிபு கொணடன

977 **(வி - ரை) அணி - எநதை** எனக கூடடுக

**எநதைக்கு அணி சநதனக் காப்பு** - "சநதனமுங குஙகுமமுஞ சாநதுந தோயநத தோளானை" எனபது திருததாணடகம திருமஞசனததுககு உதவும பொருளகளுளளே சநதனககுழமபு சிறநத ஒனறுகும எனபது ஆகமவிதி மெயப பூசசுககும திலதப பொட்டணிவதறகும உதவுவதுமாம **காப்பு** - மெயபபூசசு

**இடை என்றும் முட்டா அந்தச் செயல்** - நியதியாகச செயயும திருபபணியை ஒருநாளும தவிாதலுமறச செயதல வேணடுமெனபது விதி **நிலைநிற்றல்** - உறைதது நிறறல

**அடியார் உவப்ப** - இறைவனுககு நியதியாகச செயயும அனபுடைய திருபபணி களைக கணடு மகிழகினறவாகள அடியாாகளேயாவா எனபதாம. மூாததியாா திருவால வாயுடையாாககுச செயத மெயபபூசசினைத தரிசிதத அடியவா களிததனா எனபது

**சிந்தைக்கினிதாய திருப்பணி** - அடியாா மனதுககு உவநததனறி ஆணடவனது திருவுளளததுககும எறற எனவும், அடியாா உவபபதோடு தமது சிநதைககும இனி தாகிய எனவும உரைகக நினறது

**நாளில் - வநதான்** எனறு வருமபாடடுடன கூடடி முடிததுககொளக 10

978 (விரை) **கானக்கடிசூழ்வடுகக்கருநாடர் - கானக்கடி** - காடாகிய அரண அரணுவன - "மணிநீரு மணணு மலையு மணிநிழற, காடு முடைய தரண" எனற திருக குறளாலறிக **கடி** - காவல இது உயாவு, அகலம, திணமை, அருமை எனற அரணி லககணம நானகினையும குறிததது **வடுகு** - ஒருமொழி. மொழியினபெயா அம மொழி வழஙகும நாடடுககுப பெயராயவநதது ஆகுபெயா. இநநாடு செநதமிழ நாட

டுக்கு வடக்கெல்லையாயுள்ள தொருநாடு **வடுகு** என்றபெயர் அதில் வாழும் மக்களுக்கும் வரும் "வடதிசை மருங்கின் வடுகு வரம்பாக" (பொ - 250) என்ற தொல்காப்பிய உரைகாண்க. நன்னூல் விருத்தி (பொது - 20) "வல்லொற்று வரினே யிடத்தொகை யாகும்" என்றதற்கு "வடுகக்கண்ணன்" என் றுதாரணங்காட்டி, வடுகநாட்டிற்பிறந்த கண்ணன் என விரித்துரைத்தமை காண்க.

**கருநாடர்** - கன்னடநாட்டினர். "கொடுங்கருநாடரும்" (சிலப் - 25 - 156) முதலியவை காண்க. இதுவும் ஒருமொழியின் பெயராய் வழங்கப்படும். **கருநடம்** என்பது மருவி **கன்னடம்** என வழங்குவதாமென்பர். **கருநிறங்கொண்ட** களிமண் பரப்புடைய நிலத்தன்மைபற்றி இந்நாட்டுக்குக் **கருநாடு** என்ப பெயர் வந்ததென்பது மொழியாராய்ச்சியாளர் கூற்று. இதனால் அந்நாடு தமிழ் வழங்கிய நாடாயிருந்ததென்றும், அம்மொழியும் தமிழினின்றும் போந்ததென்றும் கருத இடமுண்டு. **கன்னடு** என்பது பரதகண்டத்தின் 56 தேயங்களுள் ஒன்றாக வைத்தெண்ணப்படுவதும் காண்க. **வடுகக் கருநாடர்** - வடுகர் குடியேறி நிறைந்த கன்னட நாட்டின் பகுதியைக் குறித்தது போலும்.

**கானக் கடிசூழ்** - இயல்பாகிய செறிந்தகாடே அரணாக (காவலாக) அமைந்து சூழ்ந்த. பகைவர்கள் தன்னது நாட்டினுட் புகாதபடி அரண்களின் காவல்பெற்றதாதலின் இந்நாட்டு மன்னவன் தன்னுடுவிட்டுத் தென்னாடு நோக்கிப் படைகொடுவந்தான் என்பது குறிக்க இத்தன்மையாற் கூறினார்.

**கருநாடர் மன்னன் வலிந்து நிலம் கொள்வானாய்** வடநாட்டினின்றும் இவ்வடுகர் பற்பல காலங்களில் தென்றிசை போந்து தமிழ்நாட்டினுக்குள்ளே படையெடுத்துவந்து பல இடங்களையும் வலிமை செய்து கைப்பற்றினர் என்பது தேச சரித்திரங்களாலறியப்படும். அங்ஙனம் வந்த **கருநாடர் மன்னன்** அறத்தின் வழியே போர் செய்யாது, வெறும் மண்ணாசையாலே தூண்டப்பட்டு நீதியற்ற போர்செய்து, வழிப்பறி செய்யும் கள்வர்போல நிலத்தை வலியப்பற்றினன் என்பது குறிப்பு. இவ்வடுகர் தாம் வலிமை செய்து நிலங்கவர்ந்ததுபோலவே சில நாளில் இவர்களுடைய அரசும் வீழ்ந்தது. வீழ்ந்தபின்னரும் இவர்கள் தமது நாடு செல்லாது தமிழ்நாட்டிற் பல பக்கங்களிலும் சிதறுண்டு பரவிப் போந்திருந்தனர். சிலர் சீவனவழியின்றி யலைந்தும் அலைத்தும் போந்தனர். மற்றும் சிலர் வேறுவகைகளில் இந்நாட்டுக் குடிமக்களுடன் கலந்து நிலம் பகிர்ந்துகொண்டு இந்நாட்டு மக்களேபோல ஊன்றி வாழலாயினர். கருமண்ணிலப்பரப்பு தமது கருநாடுபோலவு தாகையால் இத்தென்னாட்டினும் கருநிறமுடைய களிமண் கண்ட இடங்களில் எங்கும் இவர்களும் தங்கி வாழ்ந்தனர். ஆதலின் களிமண் உள்ள இடந்தோறும் இவர் வழிவந்தோரை நமது நாட்டில் எங்கும் காணலாம் என்பது தேச சரித்திரத்தால் அறியப்படும். "கொடுகு வெஞ்சிலை **வடுக வேடுவர்** விரவ லாமை சொல்லித், திடுகு மொட்டெனக் குத்திக் கூறைகொண் டாறலைக்கு மிடம்" (முருகன்பூண்டி - பழம்பஞ் - 1) என்ற ஆளுடைய நம்பிகள் தேவாரத்தாலும் இந்நாட்டுச் சரித்திரம் ஒருவாறு புலப்படுகின்றது. திருமுருகன்பூண்டிப் பிரதேசத்தில் கருநாடும் வடுகரின் வாழ்தலும் காணத்தக்கன. **வலிந்து நிலம்கொள்ளும்** ஆசையே இந்நாளினும் உலகமுழுமையும் அலைக்கும் பெரும்போர்கள் நாகரிக மிகுந்தோர் என்று தம்மைத்தாம் புகழ்ந்துகொள்ளும் மேனாட்டாரிடை நடைபெறுதற்குக் காரணமாயிருப்பதும் இங்குக் கருதுக. இதுபற்றியே, "ஆசைக்கோ ரளவில்லை யகில மெல்லாங்கட்டி யாளினுங் கடல்மீதிலே யாணைசெல வேநினைவர்" என்றனர் தாயுமானார்.

**கருவிப்படை** - கத்தி, வில், வேல், வாள் முதலியனவாக அந்நாளிற் பயின்ற படைக்கலங்கள். **வீரர்** - இவற்றைத் தரித்துப் போர்செய்யும் காலாட்படை.

**சேனைக்கடல்** - சேனையின் மிகுதியும் பரப்பும் நோக்கிக் கடல் என்று உருவகம் செய்தார் உவமையை உள்ளீடாகக் கொண்ட உருவகம்.

**தென்றிசை நோக்கி** என்றதனால் வடுகக் கருநாடு தமிழ்நாட்டுக்கு வடக்கெல்லையாயுள்ளது என்பது குறிக்கப்பட்டது. **தென்றிசை** - அதில் உள்ள தமிழ்நாடு குறித்தது.

**திரண்ட சேனை**—என்பதும் பாடம். 11

979. வந்துற்றபெ ரும்படை மண்புதை யப்ப ரப்பிச்,
சந்தப்பொதி யிற்றமிழ் நாடுடை மன்னன் வீரஞ்
சிந்தச்செரு வென்று,தன் னாணை செ லுத்து மாற்றூற்
கந்தப்பொழில் சூழ்மது ராபுரி காவல் கொண்டான் கஉ

**(இ - ள்)** வெளிப்படை. வந்து சேர்ந்த பெரும்படையினைத் தரை தெரியக்கூடாத படி எங்கும் பரவச்செய்து சந்தனச்சோலைகள் சூழ்ந்த பொதியமலையினையுடைய **தமிழ்நாட்டை** ஆளும் பாண்டிய மன்னனது வீரம் சிந்தும்படி போரில் வெற்றிகொண்டு தனது ஆணையைச் செலுத்துகின்ற வழியாலே மணம்பொருந்திய சோலைகள் சூழ்ந்த **மதுரைமாநகர**த்தைத் தனது தலைநகராகக் கொண்டு காவல் செய்வானாயினான்.

**(வி - ரை) மண்புதையப் பரப்பி** போர்க்களம் முழுதும் நெருங்க அணிவகுத்து. **மண்புதைய** - சேனைப்பரப்பின் கீழே மண்ணின் இடைவெளி தெரியாது மறைய. மண் இவன் காவலின்கீழ் விளக்கமில்லாது மறைய எனவும், மண்ணிற்புதைய எனவும் பிறிது பொருள்களும்பட நிற்பதுகாண்க. இவ்வாறு பரப்பி வென்றதன்பின் இவனது காவலில், இவன் **கருநாடன்** ஆதலின், இச்செம்மை நாட்டுக்குரிய சைவச்சிறப்பும் தெய்வச்சிறப்பும், இவன் **வடுக மன்னனா**தலின், செம்மொழியாகிய தமிழ்ச்சிறப்பும் மறைந்து நின்றன எனப் பின்சரிதக் குறிப்புமாம். இனி, இவன் விரைவில் இறந்து மண்ணா யொழிதலும், இவன் படை மறைந்தொழிதலும் சரிதத்துட் காண்க.

பரப்பி - வீரம் சிந்தச் செருவென்று - காவல் கொண்டான் என்று முடிக்க.

**சந்தப்பொதியில் தமிழ்நாடு - சந்தம்** - சந்தனம் பொதிய மலைக்குச் சந்தனம் உரியது. **பொதியில்** - பொதிகை பாண்டியநாட்டுக்குரிய மலை. "கும்பமுனிபயிலும் தென்பொதிய மலைகாண்மற்றெங்களமலை" என்ற மீனாட்சியம்மை குறமும், பிறவும் காண்க. சந்தனமும் பொதிகையும் தமிழும் இணைபிரியாது சொல்லப்பெறுவன "தமிழ் மாருதம்", "சந்தனப் பொதியிற் செந்தமிழ் முனிவன்" முதலியவை காண்க.

**தமிழ் நாடுடை மன்னன்** - பாண்டியன். **தமிழ் நாடு** - பாண்டியநாடு. **வடுகக் கருநாடர் காவன் மன்னன்** (978), **தமிழ்நாடுடை மன்னன்** என்றன மொழி வழங்கும் வகையால் நாடு பிரிவுபடுவதும் ஆளப்படுவதும் உரியதாம் என்ற குறிப்புப்போலும்.

**வீரம் சிந்த** - வீரம் சிந்திப்போகும்படி இறந்துபட்டொழியாமல் அப்போதைக்கு மட்டும் வலிமை குறைந்தவனாயினன் என்றபடியாம். பின் சில நாளில் கருநாடன் ஒழிந்துபட்டத் தமிழ் மன்னனே வருவானாவன் என்ற குறிப்பும் காண்க. தோலவியுற்றானென்பதனை மங்கலவழக்காற்கூறிய படியுமாம். *அடிக்குறிப்பிற்கண்ட சாசனத்தில் **அகலநீக்கி** எனநிருப்பதும் கருதுக.

*வேள்விக்குடிச் சாசனத்தில் "பலயாக முதுகுடுமிப் பெருவழுதி யெனும் பாண்டியாதிராசன்பின் அளவரிய அதிராசரை **அகல நீக்கி** அகலிடத்தைக் **களப்ர** னெனும் **கலியரசன்** கைக்கொண்டானை யிறக்கிய பின், படுகடன் முளைத்த பரிதி போல பாண்டியாதிராசன் வெளிப்பட்டு விடுகதிரவிரொளி விலக வீற்றிருந்து **கடுங்கோன்** எனனும் கதிர்வேற்றென்னன் " என்று காணப்படுவது கொண்டு பாண்டியாதிராசன் பின்வந்த அதிராசனைக் **களப்ரன்** எனனும் கலியரசன் செருவென்று மதுரையைக்

997. (இ - ள்) வெளிப்படை இவ்வகையாகப் பலவற்றையும் எண்ணி, "இனி இங்கு அரசனில்லை, அதற்குச் செய்யத்தக்கது இதுவேயாகும்" என்று தேறித் தெளிபவர்களாய்ச் சிறந்த கரியமலைபோன்ற யானையைக் கண்கட்டிவிட்டால், அந்தக் கைமலையினாற் கையிற் கொள்ளப்பட்டவரே இந்த உலகங் காவலைக் கைக்கொள்வார்" என்று துணிந்து, ௩௦

998 (இ - ள்) வெளிப்படை. நூல்களில் விதித்தபடி செவ்வியமாட்சியுடைய சடங்குகளோடு (கடவுளை) அருச்சனை செய்து, மழைபெய்யும் பெருமுகில் போன்று மதம்பாயும் பெருகிய பட்டமணிந்த நெற்றியையுடைய யானையை, நறுந்துகிலினால் கண்ணைக்கட்டி, "இந்தப் பெருநிலத்தின் அரசாட்சியைத் தனது தோள் வலியால் தாங்குதற்கு ஓர் வேந்தனை நீ எடுத்து ஏந்தி வருக!" என்று சொல்லி விடுத்தனர் ௩௧

இம்மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன

*996 (வி - ரை) பன்முறை பாலித்து - என்று கூட்டுக. முறை முறைகளாலும் கருவிப்பொருளில் வந்த மூன்றனுருபும் முற்றும்மையும் தொக்கன. பலமுறை யாவன உலகங்காவலுக்கு அறநூல்களான விதிக்கப்பட்ட வழிகள் "அறனிழுக்கா தல்லவை நீக்கி" என்ற திருக்குறளும் அதன்கீழ்ப் பரிமேலழகருரைத்தவையும் பார்க்க. பாலித்தல் - காத்தல்.

காப்பான் - காக்கும்பொருட்டு. காப்பான் - வாழும் என்று கூட்டுக. ஞாலம் - உலகம். இங்கு ஞாலத்துள்ள உயிர்களைக் குறித்தது.

நெடுங் குடை - பெருங்குடை. நெடுமை - பரப்புக்குறித்தது. குடை - அரசாணையின் அடையாளம் ஆணையைக் குடையாக உபசரித்துக் கூறுவது மரபு "சிலைக்கீழ" (695) என்றவிடத்துரைத்தவை பார்க்க.

தத்தம் நெறிகளிற் சரித்து - தங்கள் தங்கள் நிலைகளுக்குரிய வழிகளில் அமைந்து அறத்தின் வழி வாழ்க்கை செலுத்தி ஒழுகி.

வாழும் - வாழச்செய்யும் வாழ்விக்கும் பிறவினை தன்வினையாக வந்தது வாழ்விக்கும் - மன்னரை எனக் பெயரெச்சம் ஏதுப்பொருள் கொண்டதென்றலுமாம்

மன்னர் குடிகளுக்குச் செய்யவேண்டிய முறையினைக் கூறினார் புவிகாக்கும் பொருட்டு அரசர் செய்யத்தக்க முதற்காரியம் இதுவே என்றதாம் இவ்விதிகள் திருக்குறள் முதலிய நீதி நூல்களாலும் திருமந்திரம் முதலிய அருள்வாக்குக்களாலும் அறியப்படுவன

பலவாகிய முறைகளையுடைய உயிர்களெல்லாம், ஞாலம்பாலித்துக் காப்பான்றன் குடைக்கீழ்ச் சரித்து வாழும், (ஆதலினால்) மன்னரையின்றி வைகும் மண்ணுலகு . உயிரின்றி வாழும் யாக்கையை ஒக்கும் என்று வாழும் என்பதை வினைமுற்றாக்கக் கொண்டு, முடித்துரைத்துக்கொள்வதுமொன்று

மன்னரை இன்றி - அரசனது காவலில்லாது, அரசனில்லாது மண் உலகு ஒக்கும் எனக் அரசனில்லா நாடு உயிரில்லாத உடம்புபோலும் என்றபடி அஃதாவது

*குறிப்பு - இப்பாட்டும் மேல் வரும் பாட்டும் ஐயப்பாடுள்ளன.

ஐஞ்சீர்க் கலிநிலைத்துறையாகிய ஒரேவகைச் சந்தயாப்பினாலியன்ற இப்புராணத்தினிடையே, இப்பாட்டும் மேல்வரும்பாட்டும் அறுசீர்க்கழி நெடில் விருத்தமாகிய வேறுயாப்பிற் றனிமையாய் உட்புக்கன போலக் காணப்படுவன இப்பாட்டின் பொருள் முன் 995லும், மேல் வரும்பாட்டின் பொருள் 998லும் கூறப்பட்டனவேயாம் இவற்றில் ஆசிரியரது பொருட்சிறப்பும் சொற் சிறப்பும் காணப்படவில்லை இப் பாட்டுக்களின்றியே சரிதம் தொடர்ந்து செல்கின்றதும் காணலாம். இவை இடைச் செருகல்களாக இருத்தல் கூடுமோ? என்பது அச்சத்தோடு எழுகின்ற ஐயப்பாடு இது பற்றி எனது சேக்கிழார் 220 பக்கம் பார்க்க.

தறகாப்பு நியமமினறிப், பிறர்கொண்டு வைத்தபடி அமையத்தக்க ஒரு பண்டமாகும் என்பது அரசனே உலகுக்கு உயிராவன என்பது முந்தையோர் கண்ட முறை "முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட், கிறையென்று வைக்கப் படும்" என்ற திருக்குறளின் கருத்தும், "தனிமுடிகவித் தாளும் அரசினும்" என்ற திருக்குறுந் தொகையின் கருத்தும் "நெல்லு முயிரன்றே நீரு முயிரன்றே, மன்ன னுயிர்த்தே மலர் தலை யுலகம்" என்ற புறநானூறும் ஈண்டுச் சிந்திக்க

**இன் உயிர் இன்றி வாழும் யாக்கை** - உயிரில்லாது உடல் வாழாது , அதுபோல மன்னனின்றி மண்ணுலகு வாழாது தலை தடுமாறி ஒழியும் என்பதாம். வினைபற்றி வந்த அபூதவுவமை

**என்பார்** என்று கூறுவாராகி. என்பார் (996) எண்ணி - என்று (997) 'ஏந்துக' என்று கைம்மாவைக் கண்கட்டிவிட்டார் (998) என இம்மூன்று பாட்டுக்களையும் தொடர்ந்து முடித்துக்கொள்க. 29

997 (வி - ரை) **தெளிபவர்** - துணிவு கொள்வாராகி இதற்கு இதுவே முடிவு என்று தேறித் தெளிவாராய் முற்றெச்சம். அமைச்சர் என எழுவாய் வருவித்து - என்று எனக் கூட்டுக.

**மைவரை அனைய** - கரியமலை போன்ற மெய்யும் உருவும் பற்றிவந்த பண்புவமை.

**மற்று அக் கைவரை** - **மற்று** - அசை **கைவரை** - கையையுடைய மலைபோன்ற திருப்பதனால் யானைக்குக் காரணப் பெயராய் வழங்குவது

**கைக் கொண்டார்** - கையின்ற கொள்ளப்பட்டவர் யாவரோ அவர் **கொண்டார்** - படுவிகுதி தொக்குநின்ற செயப்பாட்டு வினையாலணையும் பெயர்

**கைக் கொண்டார்** - **கைக்கொள்வார்** - சொல்லணி, **காவல் கைக் கொள்வார்** - காக்குந் தொழிலை ஏற்றுக்கொள்வாராவர் - மேற்கொள்ளும் அரசராவர் 30

998 (வி - ரை) **நான் முறை செம்மாண்வினை அர்ச்சனை செய்து** எனக். பாவனை - மந்திரம் - கிரியை என்ற மூன்று அங்கங்களும் நன்முறையாகப் பொருந்திய அர்ச்சனை என்று குறிக்கச் **செம்மை, மாண்பு, வினை** என்ற மூன்று அடைமொழிகள் புணர்த்தி ஓதினார் இந்த அர்ச்சனையின் பயனாகப் பலங்கள் மாறவும், சைவ நூற்பதம் எங்கும் நிறைந்து விளங்கவும் சிவசாதனங்களால் அரசு புரிந்து நாடுகாக்கும் மன்னவனை இவர்கள் பெறுகின்றார்களாதலின் இவ்வாறு சிறப்பித்தார். **அருச்சனை செய்து** - கடவுளை என்ற செயப்படு பொருள் அவாய் நிலையான் வந்தது. யானையை நூல் முறை அருச்சித்து என்றுரைப்பாருமுண்டு

**நூன் முறை** - ஆகம நூல்களில் விதித்தபடி இவ்வாறு கடவுளைப்போற்றி அருச்சித்து யானையைக் கண்கட்டி விட்டு, அவ்வியானையினால் எடுத்துக் கொண்டுவரப் பெற்றவரை அரசராகக் கொள்ளுதல் முந்தைநாளில் நம நாட்டில் ஆன்றோர் ஆட்சி இது நூல்களால் விதிக்கப்பட்ட செய்தியுமாம் என்பது **நூன்முறை** என்றதனாலுணர்த்தப்பட்டது

**இம்மாநிலம் தோளால் ஏந்த** - இவ்வுலகத்தைத் தன தோளவலிமை என்று உபசரித்துக் கூறப்படுகின்ற ஆணையினால் காக்க **நிலம் ஏந்த** - நிலத்தை ஒரு உருண்டை வடிவினதாகிய பந்துபோலக் கொண்டு, அதனைக் கீழேவிழாமல் மன்னவன் கையின்ற ருந்துகின்றான் என உருவகப்படுத்திக் கூறுதல் மரபு. **ஏந்த** - ஏந்தும் பொருட்டு

**ஏந்தல்** - உயர்ந்தவன் அரசன் - ஏந்துதலைச் செய்கின்றவன் என்ற சொற் சிலேடைப் பொருள்பட **ஏந்த ஓர் ஏந்தலை** - என்ற அழகும் காண்க **ஏந்த ஓர் ஏந்தலை ஏந்துக** - சொற்பின் வருநிலை என்ற சொல்லணி ஏந்துக ! என்று - என்பது அகரமு கெட்டு **ஏந்துகென்று** என நின்றது.

**பெய் மா முகில் போல் மதம்பாய் நெற்றி** - எனக் இது யானைக்குரிய மூன்று மதங்களுள் கபோல மதங் குறித்தது. **முகில்போல் மதம்பாய்** - முகில் மழை நீரைப் பெய்வதுபோல மதநீர் பெய்யும் என்ற வினைபற்றி வந்த உவமம். அன்றி, **முகில்போல் கைம்மா** என்று கூட்டி, உருவும் பயனும்பற்றிய உவமையாகக் கொண்டு கரிய பெரிய முகில்போன்ற யானை என்றுரைத்தலுமாம். **பெய்** என்றதனால் சூல் கொண்டு பெய்யும் கருமைநிறப் பண்பு குறிக்கப்பட்டது "வெண்முகி லாயப்பரந் தெங்கும் பெய்யு மாமழைப் பெருவெள்ளம்" என்றபடி வெண்முகிலை உவமித்ததாகக் கொள்ளின் **கைம்மா** என்றதற்கு வெண்ணிறமுடைய யானை எனக் வெள்ளை யானை தேவராசனாகிய இந்திரனைப் பிடரியிற் றாங்கிவருதல்போல நீ ஒரு மன்னனை ஏந்திக் கொண்டாக என்ற குறிப்புமாம். இந்திரன் மேகவூர்தி யுடையவன் என்பதும் குறிக்க

**ஏந்துக** - துதிக்கையினால் எடுத்துப் பிடர்மேல் வைத்துக்கொண்டாக என்பதாம். **கைம்மா** - கையையுடைய விலங்கு யானைக்குக் காரணப் பெயராய் வழங்குவது

**நறுந்துகில்** - நல்ல துகில் புதிய வெள்ளிய துணி **நறுமை** - இங்குப் புதுமையும் தூய்மையும் குறித்தது

**கண்கட்டி விடுதல்** - முன்கண்ட பழக்கத்தால், யானை, பகையும் உறவும் கண்டு கொள்ளாது, உண்ணின்று தெய்வம் உணர்த்தியபடி தக்கோனொருவனை எடுத்து வருதற்பொருட்டுக் கண்கட்டிவிடுதல் வழக்கு சோழன் கரிகாற்பெருவளத்தான் கழுமல வூரிலிருந்த யானையாற் கொண்டுவரப்பட்டு அரசாட்சிக்கு உரியவனாகத் தேர்ந்து கொள்ளப்பட்டான் என்ற வரலாறு பழந் தமிழ் நூல்களுட் காணப்படும்

இதுபற்றிப் பண்டிதர் - ந மு. வேங்கடசாமி நாட்டார் எழுதியுதவிய குறிப்புக்கள் இதன்கீழ்த் தரப்படுகின்றன. "யானையைக் கொண்டு அரசனைத் தேர்ந்தெடுத்தமைக்குக் கரிகாலன் செய்தி தவிர வேறு பழைய வரலாறொன்றும் புலப்படவில்லை. "கழுமலத்தி யாத்த களிறுங் கருவூர், விழுமியோன் மேற்சென் றதனால்—விழுமிய, வேண்டினும் வேண்டா விடினு முறற்பால, தீண்டா விடுத லரிது" என்னும் பழமொழி வெண்பாவும், 'கழுமலமென்னும் ஊரின்கண்ணே பிணித்துநின்ற களிறும், கருவூரின்கண்ணே யிருந்த கரிகால்வளவன் கடிது இளையனாயினும் அவன் சிறப்புடையனாதலால் அவன்மேற் சென்று தன்மிசை யெடுத்துக்கொண்டு அரசிற் குரிமை செய்தது' என்னும் அதன் உரைப் பகுதியுமே கரிகாலன் செய்திக்கு ஆதாரமாவன உறையூர் மண்மாரி பெய்து அழிந்தகாலை, பராந்தகன் மகனாகிய கரிகாலனை அமைச்சர்கள் யானையை விடுத்துக் கொணர்ந்தனரென்று செவ்வந்திப் புராணங் கூறுகின்றது"

"தமிழ்நாட்டிலே பல்லவர் குலத்தினர் முதலானோர் பேரரசராகத் திகழ்ந்தபொழுதும் அவர்கட்கு முடிசூடும் உரிமை இருந்தமை புலப்படவில்லை மூவேந்தர் வழியினரே முடிசூடும் உரிமையுடையரென்னும் மரபினைப் பெரியபுராணம் பாதுகாத்துச் செல்கின்றது கூற்றுவ நாயனார் ஏனை அரசர்களை வென்று தாமே அரசராய காலத்தும், தில்லைவாழந்தணர்கள் அவர்க்கு முடிசூட மறுத்தமையும், அவர் சிவபெருமான் றிருவடியையே முடியாக வேண்டிப்பெற்றமையும், அறியற்பாலன எனவே, மூர்த்தி நாயனாரும் கூற்றுவ நாயனாரும் அரசுரிமை யேற்று நாடு ஆண்டனராயினும், அவர்கள் ஏனைய மன்னர்கள்போலன்றிச் சடைமுடியினையும் இறைவன் றிருவடியினையுமே முடியாகக் கொண்டனர் என்னும் வரலாறுகள் பொன்முடி சூடும் உரிமை மூவேந்தர்க்கே உண்டென்னும் மரபு பிழையாவாறு அமைந்துள்ளமை தெளிவாம்." 31

999. கண்கட்டிவி டுங்களி யானையக் காவன் மூதூர்
மண்கொட்புற வீதி மருங்கு திரிந்து போகித்



1 திருவாலவாய - திருககோயில

(வெளிபபாாவை - சொககநாதா சநநதி முன கோபுரததுடன)

(மூாததி நாயனாா வநது நினற கோபுர வாயில)

—பாடடு - 999–1000 - பககம - கஉஅஅ–கஉஅகூ

2. மூாததி நாயனாா முழஙகை தேயதத

“ வட்டநதிகழ பாறை ”   “ சநதனக கல் ”

—பாடடு - 987 - பககம - கஉஎரு

வடடப பாறைகள இரணடும மூனறடி குறுககளவும மூனறடி உயரமும உளளவை

இரு பககஙகளிலும காணபபடுவன தணணீாக கறபணணைகள

திண்பொற் றடமா மதில்சூழ் திருவால வாயின்
விண்பிற் படவோங் கியகோபுர முன்பு மேவி, ௩௨

1000. நீங்கு மிரவின் கணிகழ்ந்தது கண்ட தொண்டர்
"ஈங்கெம் பெருமா னருளாமெனி லிந்த வையந்
தாங்குஞ் செயல்பூ ணப"வென் றுள்ளந் தளர்வு நீங்கிப்
பூங்கொன்றை மிலைந்தவர் கோயிற் புறத்து நிற்ப, ௩௩

*1001. வேழத் தரசங் கணைவிரைந்து நடந்து சென்று
வாழ்வுற் றுலகஞ் செய்தவத் தினின்வள் ளலாரைச்
சூழ்பொற் சுடர்மா மணிமா நிலந்தோய முன்பு
தாழ்வுற் றெடுத்துப் பிடர்மீது தரித்த தன்றே. ௩௪

999 (இ-ள்) வெளிப்படை. கணைகட்டி விடப்பட்ட களிப்புடைய அவ்வியானை, அந்தக் காவலுடைய மூதூரின் தலம் எங்கும் மண் சூழ, வீதிகளின் பக்கம் திரிந்து போய்த், திண்ணிய அழகிய பெரிய கபாலி மதில் சூழ்ந்த திருவாலவாயிலில், ஆகாயமும் தாழவோங்கி உயர்ந்த கோபுரத்தின் முன்பு வந்து, ௩௨

1000. (இ-ள்) வெளிப்படை. கழிந்துபோன இரவில் நிகழ்ந்த செய்தி தெரிந்த தொண்டராகிய மூர்த்தியார், "இங்கு எமது பெருமானது திருவருள் இதுவாம் என்றால், இந்த நிலந்தாங்கும் அரசாட்சியை மேற்கொள்வேன்" என்று துணிவு கொண்டு, முன்னார்ந்த தமது உள்ளத்திற் கொண்ட தளர்ச்சி நீங்கிக், கொன்றைப் பூவினைச் சூடிய சிவபெருமானுடைய கோயிலின் புறத்திலே வந்து நிற்க, ௩௩

1001 (இ-ள்) வெளிப்படை. பட்டத்து யானை அவ்விடத்தில் விரைவாக நடந்துபோய், உலகம் வாழ்வுறச் செய்யும் தவத்தின் பயனாக உள்ளவராகிய அவரைத் தனது பட்டத்தின் மெய்யொளியுடைய மணிகள், நிலந் தோயும்படி முன்பு வணங்கி எடுத்து அப்போதே பிடரின்மேல் தரித்துக்கொண்டது. ௩௪

இம் மூன்று பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

999 (வி-ரை) விடும் - விடப்பட்ட. படு விகுதி தொக்குநின்றது.

**களியானை** - மதம்பொருந்திய யானை. முன் பாட்டில் "பெய்ம்மாமுகில் போல மதம்பாய" என்ற கருத்துமிது.

**அக்காவல் மூதூர்** - மதுராபுரி (979). அகரம் முன்னறிசுட்டு. **காவல்** அரண்களையுடைய எனக. "கண்ணுதலான் றன்னுடைய காப்புக்களே" என்ற காப்புத் திருத்தாண்டகத்தினுள் அப்பர் சுவாமிகள் அருளியபடி, இறைவன் காக்கின்ற ஊர் என்றலுமாம். திருவிளையாடற் புராணம் பார்க்க. 'மோடிபுறங் காக்குமூர்" (பிரமபுரம் - காந்தாரம் - சக்கரமாற்று 8) என்றது ஆளுடைய பிள்ளையார் தேவாரம். "அஞ்சு வான்கதத் தாறிழி மதத்ததோ ரானை நிற்கவும்" (திருக்குறிப்பு - புரா - 81) என்றதும் காண்க.

**மண்கோட்புற வீதிமருங்கு** - யானை பல வீதிப்பக்கங்களிற் சுற்றி வந்தமையின் தலத்தின் மண் கிளம்பிச் சுழன்றதெனக.

**திண்பொன் தட மாமதில் சூழ் திரு ஆலவாய்-திண்மை** - வலிமை. **பொன்மை** - அழகு. பொன் பூசிய சிகரங்களையுடைமை குறித்ததென்றலுமாம். **தட** - என்றதனாற் பெருமையும், **மா** - என்றதனால் உயர்வும் குறிக்கப்பட்டன. **திரு ஆலவாய்** - கோயிலின் பெயர். "கபாலிநீள் கடிமதிற் கூட லாலவாயிலாய்" (கௌசிகம் - திருவாலவாய் - 1) என்று ஆளுடைய பிள்ளையார் தேவாரத்திற் போற்றப்பட்ட கபாலீ

**மதி**லின பெருமைகருதி இவவாறு சிறபபிததாா. **மதில்** - கபாலி மதில. **தட மா** - ஒருபொருட் பனமொழியெனறலுமாம

**விண்பிற்பட ஓங்கிய** - மிகக உயாசசி குறிததது தேவேநதிரன முதலிய விண ணுலகததவாகளுமவநது இதன அடியிறறூழம பெருமையும குறிபபாலுணாததினா.

**மேவ**—எனபதும பாடம. 32

1000 **(வி - ரை) நீங்கும் இரவின்கண்** - கழிநதுபோன இரவிலே "பொழுதும புலாவுறறது" (993) எனறு கூறியபடி கழிநத முனனுளிரவு கொடுஙகோனமையும வெஞசமண பீடையும, அடியாாககிழைதத வனகணமையும, அடியாா கவலையும ஒருஙகே நீஙகிய காலமாகிய இரவு.

**நிகழ்நதது** - 986 - 990 - திருபபாடல்களிற கூறிய நிகழசசிகள ஒரு தொடா பாய ஒரு பொருளபறறி வநதனவாகலின ஒருமையிற கூறினா. **கண்ட** - கணணாற கணடும காதினாறகேட்டும அறிநத எனற பொருளில வநதது

**தொண்டர்** - மூாததி நாயனா சநதன மெயபபூசசுத திருததொணடு புரிநதவா ஆதலின **தொண்டர்** எனறாா

"**ஈங்கு... பூண்பன்**" **என்று** - **அருளாம் எனில்** - 989-ல கூறியவாறு கணட இறைவனது திருவருள. **வையந் தாங்குவன்** - "மணஎல்லாங கொணடு" எனறது குறிததது.

**உள்ளந் தளர்வு** "சிநதைசாயவுறறிட" (986) உளளத தளாசசியின நிலை 985-ல விரிககப்பட்டது. **உள்ளந் தளர்வு**-வேறறுமையில மகரமபோய மெலலெழுததுமிககது.

**பூங்கொன்றை மிலைநதவர்** - சிவபெருமான. திருவாலவாயின அவிாசடைக கடவுள.

**கோயிற்புறத்து நிற்ப** - திருககோயிலின உளளே சநதனநதேயககும பாறையி னிடதது நிகழநதவை யறிநத தொணடா அதன விளைவு எனனகுமோ? எனறு காணக கோயிலின புறதது வநது நினறாா எனக 33

1001. **(வி - ரை) வேழத்தரசு** - படடததுயானை. அரசுவா எனபா. முனனாக "கைமமா" (998), "களியானை" (999) எனறு கூறிய ஆசிரியா, அரசரைத தனமேல கொணடிடவரும இடமாதலின இஙகு இவவாறு சிறபபிததாா அனறியும மூாததி யாரை ஏநதி வரும சிறபபும குறிததபடி.

**அங்கண்** - கோயிறபுறதது மூாததியாா நினற இடததினகண.

**வாழ்வுற்று உலகம் செய் தவத்தினின்**-வாழவுறறதனால உலகம தவம செயதது, அததவங காரணமாக. தவஞசெயதது மூாததியாரை அரசராகப பெறுதறகு அத தவஞசெயதறகு முனனை வாழவு காரணமாயிறறு எனக **உற்று** - உற எனச செயவெ னெசசமாகத திரிநது வாழ எனறும கொளளலாம.

**தவத்தினால்** - **தரித்தது** எனறு கூட்டுக.

**வள்ளலார்** - வரையாது கொடுபபோா மூாததியாா சமணபோயச சைவம ஓஙகுதற பொருட்டு சநதனக கட்டைககு ஈடாகத தமது கையினை எலுமபு மூளை திறககுமவரை தேயதத வளளனமை குறிததது.

**மணி மாநிலந்தோயத் தாழ்வுற்று** - தலையைக கீழே நிலநதோயத தாழதது வணஙகினமையால படடததில உளள பொனனிலழுததிய மணிகள நிலததிறறோயந தன எனக பெருகோடை நெறறி (998) எனறமையால யானையின நெறறிமேற பொறபட்டம அணியபபட்டிருநதது; அதனில மணிகள இருநதன எனபதாம இவவாறனறிச **சூழ்மாமணி** - எனபதறகுப "படுமணியிரட்டு மருஙகின" (திரு முருகு) எனறபடி யானையின இருபுறமும தொஙகும மணிகள எனறுரைததலுமாம.

**பிடர்** - பிடரி - முதுகின முனபுறம். 34

1002. மாதங்கமெ ருத்தினில் வைத்தவர் தம்மைக் கண்டு
ஏதங்கெட வெண்ணிய திண்மை யமைச்ச ரெல்லாம்
பாதங்களின் மீதுப ணிந்தெழுந் தார்க ளப்போ
தோதங்கிளர் வேலையை யொத்தொலி மிக்க தவ்வூர். ௩௫

(இ - ள்) வெளிப்படை. தீமை கெடும்படி எண்ணிய திண்மையுடைய அமைச்சர்கள் எல்லாரும், யானையினால் எடுத்துத் தன் பிடரியில் வைத்துக் கொள்ளப்பட்டவராகிய மூர்த்தியாரைக் கண்டு, அவர் பாதங்களின் மேல் பணிந்து எழுந்தார்கள், அப்போது அவ்வூர் நீர் நிறைந்த கடலைப் போல முழக்கம் மிக்கது.

(வி - ரை) **மாதங்கம் (எருத்தினில்) வைத்தவர்** - யானையினால் வைக்கப்பட்டவர் எனக் மூன்றனுருபு தொக்கது. **வைத்தவர்** படுவிகுதி தொக்கு வந்த செயப்பாட்டு வினையாலணையும் பெயர்.

**மாதங்கம்** - மாது அங்கம் - மாதுடன் கூடிய அங்கமாகிய திருக்கோலத்தை; **எருத்தினில்** - அதனுடன் கூடிய எருது - இடபத்தினுடனே, **வைத்தவர்** - **தம்மை** - (அடித்தாமரையல்லது வேறில்லாது) தம்மனத்தே பதியவைத்தவராகிய மூர்த்தியாரை என்று ஓர் உட்குறிப்பாகிய பொருளும் படநிற்பது காண்க.

**ஏதம் கெட எண்ணிய திண்மை அமைச்சர்** - **ஏதம்** - உலகம் காக்கும் ஒரு மன்னவன் காவலின்றி உலகம் வாழ்வடையாது (995) என்று கூறிய பொருள். **திண்மை** - மனத்திட்பம், வினைத்திட்பம் முதலாயின எல்லாம் திருக்குறள் முதலிய நீதிநூல்கள் பார்க்க.

**அமைச்சர் எல்லாம் - பணிந்து எழுந்தார்கள்** - அரசு ஒருவர் மேலதாயினவுடன் அரசாட்சியின் முதற் செய்கை அமைச்சர் வந்து பணிவது என்பதாகும். வழி வழி அரசின்கீழ் உள்ள ஆங்கிலேய நாடு முதலிய பிறநாடுகளிலும் இத்தகையதொரு வழக்கு உண்மை அறியப்படும்.*

**அமைச்சர் எல்லாம்** என்றது ஊர் காவலில் வந்த பலதுறைகளையும் மேற்கொண்டு செலுத்தும் அமைச்சர்கள் எல்லோரும் என்றபடி. பல துறையாவன நீதித்துறை, ஊர் காவற்றுறை, அரசிறைத்துறை முதலாயின முன்னரும் "அமைச்சர்கள்" (994) என்றது காண்க. இவர்களுள் ஒருவரே முதலமைச்சராய் நிகழ்வதும் முன்னுள வழக்கு. "முற்றுணர்ந்த அமைச்சரினு முதலமைச்ச ராயநிகழ்வார்" (வாதவூ - உப. 7) என்ற திருவிளையாடற் புராணமும், சூரபதுமன், "அற்றமில் கேள்வி சான்ற வமைச்சரை"க் கொண்ருவித்து உசாவிய வரலாறு கூறும் கந்தபுராணமும் இங்குக் கருத்தத் தக்கன. 115ம் பிறவும் பார்க்க.

**ஊர் ஒலி மிக்கது** - மகிழ்ச்சியின் மிகுதியினால் ஊரவர் எல்லாம் பல இயங்கள் முழக்கியும் வாழ்த்துக்கள் கூறியும் மிக்க ஒலி முழக்கினர் எனக.

**ஓதம் கிளர் வேலை** - எப்போதும் நீர் நிறைந்து அலைகளோடு கிளர்வதனால் கடல் ஒலியால் மிகுவதாகும் என்பது.

**அவ்வூர் வேலையை ஒத்தது** - வினைபற்றி வந்த உவமம் 35

1003. சங்கங்கண் முரன்றன தாரைகள், பேரி யோடும்
எங்கெங்கு மியம்பின பல்லிய, மெல்லை யில்ல
அங்கங்கு மலிந்தன வாழ்த்தொலி, யம்பொற் கோம்பின்
பங்கன்னரு ளாலுல காள்பவர் பாங்க ரெங்கும். ௩௬

* விக்டோரியா இராணியார் முதலியோர் வழி வழி அரசு தம் மேலதாகப் பெற்றவுடன் அமைச்சர் வந்து அரச இலச்சினை முதலியவற்றைத் தந்து பணிந்தனர் என்று தேச சரித்திரங்களால் அறியப்படும் செய்திகளும் பிறவும் காண்க.

**(இ - ள்)** அம்பொன் கொம்பின் .எங்கும் - அழகிய பொன்பூண்ட கொம்பு போன்றவராகிய அங்கயற்கண்ணி யம்மையாரை ஒரு பாகத்திலுடைய சொக்கலிங்கப் பெருமானது **திருவருளினாலே உலகாள்பவராகிய** மூர்த்தியாரது பக்கமெங்கும்; சங்கங்கள் தாரைகள் - தாரைகளும் சங்கங்களும் முரன்றன; பேரியோடும் .இல்ல - பேரிகையுடனே அளவில்லாத பலவகை இயங்கள் எவ்விடத்தும் இயம்பின; அங்கங்கும் . வாழ்த்தொலி - அங்கங்கேயும் வாழ்த்தொலிகள் மலிந்தன.

**(வி - ரை) தாரைகள் சங்கங்கள் முரன்றன** எனக் - வாயின் வைத்து ஊத, அக்காற்றினால் உளதாகும் ஒலியாதலின் **முரன்றன** என்றார். **முரலுதல்**-காற்றின் உதவி கொண்டு ஒலி உண்டாகுதல் "சங்கு திரண்டு முரன்றெழுமோசை தழைப்பன" (திருவாசகம்) முதலிய திருவாக்குக்களைக் காண்க. பல இயங்களினின்றும் இவற்றை வேறு பிரித்தோதியது, இவை மார்புக்காற்றின் உதவி கொண்டு வாயினால் ஊதி உளதாகும் ஒலியுடைமையும், இவ்வாறூதுதல் ஒரு பொருள்பற்றிய வாக்கியங்களைக் கொண்டிருப்பதும்பற்றி எனக. "தாரை, அணைந்த மாமறை முதற்கலை யகிலமு மோதா, துணர்ந்த முத்தமிழ் விரகனவர் தானென வூத" (223), "சங்கு தாரை யளவிறந்த பல்லியங்கள் முழக்கி யார்த்தப, பாருலவு தனிக்காளஞ் சின்ன மெல்லாம் பரசமய கோளரிவந் தானென் றூத" (904) என்ற திருஞானசம்பந்தநாயனார் புராணங் காண்க. மூக்கினால் முரலுதலும் வாயினால் ஊதுதலும் மார்புக்காற்றின் உதவி கொண்டேயாவன. **சங்கம்** - மங்கல நிகழ்ச்சிகளிற் சங்கமூதுதல் மரபு "விருப்பொடு வெண்சங்க மூதா ஊரும்" என்பது திருத்தாண்டகம்.

**சங்கம்** - கூட்டம் எனக் கொண்டு, பின்னர் "எல்லையில்லன" என்றதற்கேற்பச், சங்கங்களாகத் தாரைகள் முரன்றன என்றுரைத்தலுமாம். தாரை போன்றவை இரட்டையாக இணைத்து ஊதுவதும் மரபு.

**பேரியோடும் எல்லையில்லன பல்லியம் எங்கெங்கும் இயம்பின** - இயங்களினுள், அளவாலும் ஓசையாலும் பெருமையுடைமைபற்றிப் பேரிகையைப் பெயராற் சுட்டிக் கூறி, ஒடு என்ற உருபையும் அதனுடன் சார்த்தி, ஏனையவற்றை யெல்லாம் **பல்லியம்** என்பப் பொதுவகையாற் கூறினார். **இயம்பின** - மங்கலச் செய்தியை ஊரவர் அறியச் சாற்றின. பேரிகை முதலியவற்றை முழக்கிக்கொண்டு திருவிழா முதலியவற்றைச் சாற்றுதல் முன்னுள்ள வழக்கு. சிலப்பதிகாரம் இந்திர விழவூரெடுத்த காதை வரலாறும் பிறவும் பார்க்க. "ஆடியற் றுடியுஞ் சாற்றி, யறைந்தபே ரோசை கேட்டு" (திருஞா - புரா - 678), "நாதர்விரும் படியார்க ளெஞ்ஞான்று நாளு நல்விருந்தா யுண்பதற்கு வருக வென்று, தீதில்பறை நிகழ்வித்து" (ஷை 566), "பரம னடியா ரானார்க ளெல்லா மெய்தி யுண்கவென விரண்டு பொழுதும் பறைநிகழ்த்திச், சொல்லாற் சாற்றி" (திருநா - புரா - 259) முதலாயினவும் இம்மரபை விளக்குவன காண்க. மங்கலச்செய்தியை என்ற செயப்படுபொருள் வருவிக்க. இவ்வாறன்றி **இயம்பின** - சத்தித்தன என்றுரைத்தலுமாம். இயங்கள் இயம்புதல் என்பதும் மரபு.

**பல்இயம் எல்லையில்லன - பல்** - பல; **இயங்கள்** - வாத்தியவகை. இதனால் பலவகை வாத்தியங்கள் குறிக்கப்பட்டன. **எல்லையில்லன** என்றது ஒவ்வோர் வகையினுள் அளவுபடாத எண்ணிக்கை குறித்தது.

**அங்கங்கும் வாழ்த்து ஒலி மலிந்தன** - இவை நகர மாந்தர் தாந்தாமிருந்த அவ்வவ் விடத்திருந்தபடியே வாழ்த்துகின்ற ஒலி. **மலிதல்** - நிறைதல்.

**அம்பொற்கொம்பு** - மீனாட்சியம்மையார்; உவமையாகுபெயர். **கொம்பின் பங்கன்** - உமைபாகன். சொக்கலிங்கப்பெருமான்.

**அருளால் உலகாள்பவர்** - திருவருளால் உலகாளும் இவ்வுரிமை பெற்று அருட்குறியாலே உலக ஆட்சியும் செய்பவர். இது 1006 - 1008-ல் கூறப்படுவது.

**முரன்றன** என்றதனால் வாயொலியின்றிக் கருவிகளே இசைப்பனவும், **இயம்பின** என்றதனால் கருவியொலியும் வாயொலியும் கலந்திசைப்பனவும், **வாழ்த்தொலி மலிந்தன** என்றதனால் கருவிகளின்றி வாயொலிமட்டுமே இசைப்பனவும் கூறப்பட்டது காண்க.

முரன்றன தாரைகள் - இயம்பின பல்லியம் - மலிந்தன வாழ்த்தொலி எனப் பயனிலைகளை முன்வைத்தோதினார் ஓசையொலிகள் முன்னாகக் கேட்கப்பட, அதன்பின் அவற்றை நிகழ்த்தும் கருவிவகைகள் நோக்கியபோதே காணப்படுதல் குறித்தற் பொருட்டு.

இப்பாட்டிற்கு முன்னுரையாசிரியர்கள் பேரியோடும் தாரைகள் சங்கங்கள் முரன்றன என்று கூட்டி உரைத்தனர். 36

1004. வெங்கட்களிற் றினமிசை நின்று மிழிச்சி வேரித்
தொங்கற்சுடர் மாலைகள் சூழ்முடி சூடு சாலை
அங்கட்கொடு புக்கரி யாசனத் தேற்றி யொற்றைத்
திங்கட்குடைக் கீழர சைச்செயல் சூழ்ந்து செய்வார், ௩௭

1005. மன்னுந்திசை வேதியின் மங்கல வாகு திக்கட்
டுன்னுஞ்சுடர் வன்னி வளர்த்துத் துதைந்த நூல்சூழ்
பொன்னின்கல சங்களுங் குடங்களும் பூரித்த தூநீர்
உன்னுஞ்செயல் மந்திர யோகர் நிறுத்தி னார்கள். ௩௮

1004. **(இ - ள்)** வெளிப்படை. வெங்கண்ணுடைய அரசயானையினின்றும் மூர்த்தியாரை இறக்கித், தேன் பொருந்திய மலர்மாலைகளும், ஒளியுடைய மணிமாலைகளும் சூழ்ந்துள்ள முடிசூடும் மண்டபத்தின் அழகிய தலத்திற்கொண்டு சேர்த்துச் சிங்காதனத்தில் எழுந்தருளச் செய்து, ஒப்பற்ற சந்திரவட்டக்குடைக்கீழ் **அரசுரி**மைக்கு ஏற்றபடி முடி சூடுதற்குரிய சடங்குகளை எண்ணிச் செய்வார்களாகி, ௩௭

1005. **(இ - ள்)** வெளிப்படை. பொருந்தி நிலை பெறும் திசையில் இடப்பட்ட வேதிகையில் சிவமந்திரங்களாலாகிய ஆகுதிக் குண்டத்தின்கண் சுடரிற் பொருந்தி வரும் தீயை வளர்த்து, முப்புரிநூலை நெருங்கச் சுற்றிய பொற்கலசங்களையும், குடங்களையும் நிறைவித்த தூய்மையான கங்கை முதலிய தீர்த்தங்களைத் தியானிக்கும் மந்திரம் வல்ல தேசிகர்கள் தாபித்தனர். ௩௮

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன

1004 **(வி - ரை) வெங்கண்களிறு** வெம்மை - விருப்பம். மூர்த்தியாரை விரும்பிக் கண்டு தாழ்வுற்று எடுத்துப் பிடரிமேற் கொண்டமையால் இவ்வாறு கூறினார். **வெங்கண்** - கோபக்கண் என இயற்கை யடையாகக் கொள்வாருமுண்டு.

**இழிச்சி** - கீழே இறங்கச் செய்து. யானை எடுத்துத் தன் பிடரியில் தரித்த செயல் இவரே அரசர் எனக் காட்டிய அளவில் நின்றது. அரண்மனை சென்று அரசராக முடிசூடி யானைமேல் நீண்மறுகிற் போதும் உலாவினைப் பின்னர் 1010ல் "நீடுங் களிற்றினமிசை" என்று கூறுவாராதலின், இங்கு அரசராக முடிசூட யானையினின்றும் இறக்கினார்கள் என்க.

**வேரித்தொங்கல் சுடர்மாலைகள் சூழ்சாலை** என்க. சாலையினைப் (முடிசூடு மண்டபத்தைப்) பூமாலைகளாலும் மணிமாலைகளாலும் அலங்கரித்தனர் என்பதாம். இழிச்சிக் கொடுபுக்கு - ஏற்றிச் - செயல் - சூழ்ந்து செய்வார் - வேதியில் - கலசங்கள் - குடங்கள் - யோகர் நிறுத்தினார்கள் என்று இந்த இரண்டு பாட்டுக்களையும் கூட்டி முடிக்க.

**ஒற்றைத் திங்கள் குடை** - தனித்த - தனக்கிணையில்லாத - திங்களைப்போலப் பரந்த, தண்ணிய - வெள்ளிய ஒளியுடைய குடை. வெண்கொற்றக்குடை என்பர். உருவும் மெய்யும் பயனும்பற்றி வந்த வுவமை.

**உரிமைச் செயல்** - முடிசூட்டும் அபிடேகத்துக்குரியபடி செய்யவேண்டிய சடங்குகள்.

**சூழ்தல்** - எண்ணுதல். 37

1005. (வி - ரை) **மன்னும் திசைவேதியில்** - மூர்த்தியார் வீற்றிருந்த திசையில் அவர்க்கெதிரே அமைக்கப்பட்ட வேதிகையில் இது கிழக்குத்திசை என்பர்.

**மங்கல ஆகுதி** - மங்கலம் செய்யும் ஆகுதி. சிவம் - மங்களம். சிவபெருமானே எல்லா மங்கலங்களுக்கும் பிறப்பிடமும் காரணரும் ஆவர். அன்றியும் எல்லா வேள்விகளுக்கும் முதல்வரும் அவரேயாவர். ஆதலின் இங்குச் சிவவேள்விகள் குறிக்கப்பட்டன. "வேணி, நாத ருரைமுன் னுகவே புரியுநல் வேள்வி, தீது நீங்கநீர் செய்யவும் திருக்கழு மலத்து, வேத வேதிய ரீனவரும் செய்யவும்" (திருஞான - புரா - 429) என்ற கருத்தை நோக்குக.

**ஆகுதி** - இங்கு ஆகுதி செய்தற்குரிய இடம் - யாககுண்டம் - குறித்தது.

**சுடர்துன்னும் வன்னி வளர்த்து** - **சுடர்** - இங்குச் சூடுடைய ஒளிப்பொருள்களுள் மிக்க ஞாயிறு குறித்தது. யாகஞ் செய்கின்றவர்கள் ஞாயிற்றின் கதிரைச் சூரியகாந்தத்தினால் எடுத்து அதனை வளர்த்து யாகம் தொடங்கும் ஆகமவிதி குறித்தது. சுடரிலே பொருந்திய வன்னியினைக் கொண்டு வளர்த்து எனக்.

**துதைந்த நூல்சூழ்** - என்பதனைக் **குடங்களுடனும்** கூட்டுக. கலசங்களைத் தாபித்தலில், மேலே சுற்றிய நூல் அதன் ஏழு தாதுக்களில் ஒன்றாகக் கருதப்படும். நூல் சுற்றாது கலசம்தாபித்தல் விதியன்று **துதைதல்**-விதித்த அளவுப்படி நூலினை நெருங்கச் சுற்றுதல். **நூல்** - மூன்றிழைகளாகச் சோதித்த நூல்.

**பொன்னின் கலசங்கள்**-வேதிகையின் நடுவில் தாபிக்கப்பட்ட இவை முதன்மை கொண்ட சிவ சத்தி கலசங்கள் **குடங்கள்** - மட்குடங்களுமாம். இவை முறையே பிரதான கலசங்கள் எனவும், பரிவார கலசங்கள் எனவும்படும் இவற்றில் அவ்வத் தெய்வங்களை உரிய மந்திரங்களாற்றாபித்துப் பூசித்தும் ஓமித்தும், பின்னர், இவற்றின் நீரினால் அரசரை நீராட்டுவித்தல் மரபு.

**பூரித்தல்** - நிறைவித்தல் **தூநீர்** - **தூய்மை** - நீரின் தூய்மையாலும் அதனுள் இடும் புற்றுமண், கடல்மண், மலையடிமண், மணிகள் முதலிய தூய பொருள்களாலும், மந்திரபாவனையாலும் ஆகும் எனக்.

**உன்னும் செயல்** - தியானம் - பாவனை என்பர் **மந்திரம்** - அப்பாவனைக்குரிய மந்திரம். **யோகர்** - கூட்டுகின்றவர்கள் **உன்னுதல்** - மனத்தினாலும், **செயல்** - காயத்தினாலும், **மந்திரம்** - வாக்கினாலும் செய்யப்படுவன **யோகர்** - இவ்வாறு மனம் வாக்குக் காயம் என்ற மூன்றனும் குறித்த பொருள் விதிப்படி கூடும்படி செய்யவல்ல ஞானதேசிகர்கள்.

**நிறுத்துதல்** - தாபித்தல். இவை சைவாகமங்களுள் விதிக்கப்பட்ட சடங்குகள்
**யோகில் நிறுத்தினர்கள்**— என்பதும் பாடம். 38

1006. வந்துற்றெழு மங்கல மாந்தர்க ளம்மை நோக்கிச்
சிந்தைச்சிவ மேதெளி யுந்திரு மூர்த்தி யார்தாம்
"முந்தைச்செய லாமமண் போய்முதற் சைவ மோங்கில்
இந்தப்புவி தாங்கியிவ் வின்னர சாள்வ" னென்றார். ௩௯

(இ - ள்) வெளிப்படை. தமது சிந்தையிற் சிவபெருமானையே வைத்துத் தெளிவு பெற்றிருக்கும் மூர்த்தியாரும், தம்மிடம் வந்து வணங்கி எழும் மங்கலச் செயல்வல்ல

அந்த மக்களைப் பார்த்து " முன் செயலாகிய சமணம்போய், முழுமுதற் சைவம் ஓங்கு வதானால் இந்த உலகந் தாங்கி இனிய அரசாட்சியைச் செய்வேன் " என்றார்.

(வி - ரை) வந்து உற்று எழும் மங்கல மாந்தர் - முடிசூட்டும் மங்கலவினை செய் வோரும், மந்திரிகள் முதலாயினோரும் இவர்களை மேல்வரும் பாட்டில் விரித்துக் கூறுவர்

சிந்தைச் சிவமே தேளியும் - சிந்தையிற் சிவமே பொருளெனத் தெளிந்த. சிவமே தேளியும் சிந்தை எனக் கூட்டி உரைத்தலுமாம் சிவமே - ஏகாரம் பிரிநிலை " அடித்தாமரை யல்ல திலா " (976) என்றது காண்க அவ்வாறு தெளிந்தா ராதலின் சமணம்போய் சைவமோங்கில் அரசாள்வன் என்றார் என்பது குறிப்பு. அதற்காக அல்லாவிடின் அரசாட்சியினைப் பொருளாக மதியார் என்பதாம். எந்தம் பெருமக்களாகிய நாயன்மார் திருக்கூட்டத்தில் துறவு நிலையின் (ஆசிரமத்தின்) உள்ளாரிருவருள் மூர்த்தியார் ஒருவர் என்பது ஈண்டு நினைவு கூர்தற்பாலது. " ஏலங் கமழ் கோதையார் தந்திறம் என்று நீங்கும், சீலங்கொடு " (1014) என்பது காண்க. அரசருக்குரிய மணிமுடி, பொன்கலன், பொன்னுடை முதலியனவும் நீத்தவர் என்பது " செழுங்கலன்கள் ஐயன்னடை யாளமு மாக " (1008) என்றதனால் அறிக. ஆதலின் இவ்வாறு உலகுதுறந்த மனநிலை கொண்ட தவராசராகிய மூர்த்தியார் தாம் புவிராச ராக இருக்க உடன்படுவதற்குக் காரணங் கூறினார்

வழிவழி வந்த முடிமன்னரா யரசு பூண்ட ஐயடிகள் காடவர்கோன் நாயனார் தமக் குரிமையிற் போந்த " அரசாட்சி, யின்னலென விகழ்ந்ததனை யெழிற்குமரன் மேலவி ழிச்சித்த " திருத்தொண்டு செய்யத் தலங்கள் தோறும் செல்வாராயின், இங்குத் தமக்கு வழிவழி உரிமையின் வாராத அரசாட்சியினை மூர்த்தியார் ஏற்றதென்னையோ? என்பார்க்கு அதற்குச் சைவஆக்கத்தின் வைத்த ஆர்வமே காரணம் என்று காட்டிய படியாம் அன்றியும், அரசாட்சியினிற் பற்றுவையாது அதனைத் திருத்தொண்டி னுக்குக் கீழ்ப்படுத்தித் தொண்டின் பொருட்டேயாக வைத்ததுவுமன்றித், திருத்தொண் டினையும் விடாது பற்றிவந்தனர். அது, மேல்வரும் பாட்டானும், 1013, 1014 1015 திருப்பாட்டுக்களானும் அறியப்படும்.

முந்தைச் செயலாம் அமண் - முதற்சைவம் - முந்தை - சில காலத்தின் முன்வந்த என்ற பொருளில் வந்தது. செயலாம் - இது முற்றறிவுடைய இறைவனால் அருளப் படாது, சிற்றறிவுடைய மனிதரால் செய்யப்பட்டதாம் என்பது " விரிவிலா வறிவி னார்கள் வேறொரு சமயஞ் செய்தே, யெரிவினாற் சொன்னா ரேனும் " என்ற அப்பர் சுவாமிகள் திருவாக்குக் காண்க இது கருதியே முதற்சைவம் என்றார். முதல் வனா லருளப்பட்ட முதன்மைபெற்ற சமயம் எனக் முதலில் வைத்தெண்ணப்படும் என்ற குறிப்புமாம் " சைவ முதலா மளவில் சமயம் " என்ற தாயுமானார் திருவாக் கும் சிந்திக்க. ஏனையவற்றை அங்கமாகக்கொண்டு முதலாக விளங்கும் என்றலுமாம்

இந்தப்புவி - உண்மை ஞானமுடையார் விரும்பாத - வெறுக்கத்தக்க - இந்தப் புவியாட்சி.

இன் அரசு - இனிய அரசு " வாய்மை வேத நன்மைத்திரு நீற்றுயர் நன் னெறி தாங்கு மேன்மைத் தன்மை " (985) என்றதனை இன்அரசு என்றார். 39

1007. அவ்வாறுமொ ழிந்தது கேட்ட வமைச்ச ரோடு
மெய்வாழ்தரு நூலறி வின்மிகு மாந்தர் தாமும்
"எவ்வாறருள் செய்தனை மற்றவை யன்றி யாவர்
செய்வார்?பெரி யோய்!"யெனச் சேவடி தாழ்ந்து செப்ப, ௪0

1008. "வையம்முறை செய்குவ னாகில், வயங்கு நீறே
செய்யும்மபி டேகமு மாகச், செழுங்க லன்கள்
ஐயன்னடை யாளமு மாக, வணிந்து தாங்கும்
மொய்புன் சடை மாமுடி யேமுடி யாவ" தென்றார். சக

1007. (இ - ள்) வெளிப்படை. மூர்த்தியார் அவ்வாறு அருள் செய்ததனைக் கேட்ட அமைச்சர்களோடு உண்மை நூலறிவின் மிக்கோர்களும் "பெரியோய்! நீ எவ்வாறு அருளிச்செய்ததனையோ அவ்வாறன்றி வேறு செய்வார் யாவர்?" என்று அவரது திருவடிகளில் வீழ்ந்து சொல்ல, சO

1008 (இ - ள்) வெளிப்படை. மூர்த்தியார், "உலகத்தை நான் அரசுசெய்வேனாகில், சிவபெருமானது திருமேனியில் விளங்கும் திருநீறே எனக்குச் செய்யும் மகுடாபிடேகமாகவும், ஐயன் அடையாளமாகிய உருத்திராக்கமே பூணும் செழுங்கலன்களாகவும், இறைவனது திருவடையாளமாகிய மொய்த்த புன்சடையே அரசமுடியாகவும் இருக்கத்தக்கன" என்றார். சக

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1007. (வி - ரை) **மெய்வாழ் தருநூல்** - அறிவனூல்களாகிய வேதங்களும் சிவாகமங்களும். இவற்றின் பொருள்கள் என்றும் மாறாது உண்மையாக விளங்குவன என்பது மெய்வாழ்வைத் தரும் நூல் என்றுரைப்பினுமாம். இவையும் இவற்றைச் சார்ந்தவையுமல்லாத ஏனை நூல்கள் மெய்வாழ்வைத் தராது பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்குவன என்பதும் போதரும்.

**அமைச்சர்** - உலக நூலமதி வல்லோர், **மெய்...நூலறிவின் மிகுமாந்தர்** - அறிவனூல் வல்லோர்; எனவே இகம் பரம் என்ற இரண்டின் வல்லவர்களும் கூடி என்றபடியாம்.

**நீ எவ்வாறு அருளினையோ அதுவன்றி மற்றுச் செய்வார் யாவர்?** எனக் **யாவர்** என்றவினா ஒருவருமிலர் என எதிர்மறை குறித்தது. யாங்கள் மட்டுமேயன்றி இந்நாட்டில் வேறு எவரும் இலர் என்பது. **மற்று** - அதுவன்றிப்பிற.

**பெரியோய்!** - செய்தற்கரிய செயல் செய்தவரே!

**சேவடி தாழ்ந்து செப்ப** அரசரது முன்னிலையில் அறிவிக்கும் மரபு.

கேட்ட - அமைச்சரோடு - மாந்தர் தாமும் - செப்ப - (மூர்த்தியார்) - என்றார் என இந்த இரண்டு பாட்டுக்களையும் கூட்டி முடித்துக்கொள்க. 40

1008. (வி - ரை) **வையம் முறை செய்தல்** - அரசு செலுத்துதல் உலக மக்களை நீதிநூல் விதித்தபடி அவ்வவர்க்கேற்ற நிலையில் நிறுத்துதல் இது அரசர்களது முதற் கடமையாம். "தத்தநெறிகளிற் சரித்து வாழும்" (996) என்றது பார்க்க கழற்றறிவார் நாயனார் புராணத்திலும், திருநகரச் சிறப்பிலும் கூறிய அரசநீதி முறைகளும் காண்க.

**வயங்குநீறு** - இறைவன் அணிந்த திருநீறு - "சிவனவன்றிர டோண்மேல் நீறு நின்றது கண்டனை", "பூசுவதும் வெண்ணீறு" (திருவாசகம்) முதலிய திருவாக்குக்கள் காண்க.

**வயங்கு** - பிறவினையாகக் கொண்டு, வயங்குவிக்கும் - விளக்கம் செய்யும்-திருநீறு என்றலுமாம். "பேணி யணிபவர்க் கெல்லாம் பெருமை கொடுப்பது நீறு" (காந்தாரம்-திருநீற்றுப்பதிகம் - 4) என்றது ஆளுடையபிள்ளையார் தேவாரம் விளங்குகின்ற நீறு என்றுரைத்தலுமாம். "நீறொளி கண்டோர் கண்கோட னிறைந்தாரக் கவின்கொள்ள" (941), "புண்ணிய நுதற்புனித நீறு பொலிவெய்த (175) முதலியவை காண்க.

**நீறே அபிடேகமும் ஆக** - **அபிடேகம்** - நீராட்டு முடிசூட்டுவதற்காகப் புண்ணியநீரை ஆட்டுவித்தல் மரபு **செய்யும்** - (முடிசூட்டுதலின் பொருட்டுச்) செய்யப்படும் பண்புத் தொகைத்து இங்கும் நீராட்டும்பொருட்டு மந்திரயோர்கள் பொன்னின் கலசங்கள் குடங்கள் பூரித்த தூநீர் அமைத்துவைத்தனராதலின் (1005), மூர்த்தியார், அத்தூநீருக்கு மேலாய தாம் அபிடேகமாகக் கருதியது திருநீற்றுப் பூச்சேயாகும் என்பதாம் **நீறே** - **முடியே** - ஏகாரங்கள் பிரிநிலை.

நீற்றின் முழுகுதலாவது நீற்றினை நிறையப் பூசுதல் நீரிற் குளித்தற்குமேல் தூய்மை செய்வதனால் இதனை (பஸ்ம ஸ்நானம் - ஆக்னேய ஸ்நானம்) நீற்றிற் குளித்தல், நெருப்பிற் குளித்தல் என்று வித்ந்து பேசுதல் சைவ மரபு. இதுபற்றியே நீரினுட் குளித்தபின் நீற்றினுட் குளிக்க என்பர் "புலரி எழுந்து புனன்மூழ்கிப் புனித வெண்ணீற் றினுண்மூழ்கி" (கழறிற் - புரா - 8) என்றது காண்க **அபிடேகமும்** - உம்மை எண்ணும்மை

**ஐயன் அடையாளம் செழுங்கலன்களும் ஆக** என மாற்றிக் கூட்டுக. **ஐயன் அடையாளம்** - உருத்திராக்கக் கண்டிகை பின்னர் இதனை "உயர்கண்டிகை" (1013) என்பது காண்க உருத்திரனது கண்ணின் கருணைக் கண்ணீரினின்றும் வந்தது என்பது வரலாறுதலின் உருத்திர அக்கம் - கண்மணி என்றும் கூறுப ஒரு பெண் தாலியணிதல் ஒரு நாயகனுக்கு வாழ்க்கைப்பட்டதற்குரிய அடையாளமாதல்போல, ஓர் உயிர் தனது (ஆன்ம) நாயகனாகிய சிவனுக்கு உரிமைப்பட்டதற்கு உருத்திராக்கம் பூணுதல் அடையாளமாம் எனக் உருத்திராக்கமணியாத மக்கள், நாயகனை யடையாத மகளிரை ஒப்பர் என்பதும் ஆம் அவர்களைக் காண்பதற்கும் அரன் கூசுவர் என்பது "பூண்பதற்குக் கண்டியினைக் கூசியிடும் புலலியரைக், காண்பதற்குக் கூசுமரன் கைத்து" என்ற திருவாக்கா லறியப்படும்

"நீறே அபிடேகமுமாக, அடையாளமே கலன்களுமாக, அணிந்து, சடை முடியே முடியாவது" என்றார் என முடிக்க

**தாங்கும் மோய்புன் சடை மாமுடியே** - **தாங்குதல்** - சடையின் பாரத்தைப் பொறுத்துத் தாங்குதல் சடாபாரம் என்று கூறும் மரபும் காண்க **மோய்** - நெருங்கிய **புன்** என்றது குறிய அளவு குறித்தது **மாச்சடைமுடியே** எனக் பெருமை தங்கிய சடைமுடி **சடை** - சிவபெருமானுக்குரிய சிறப்பு அடையாளம் **மாமுடி** - இதன் பெருமை குறித்தது "சடைமுடி சாட்டியக் குடியார்க்கு" என்ற கருவூர்த் தேவர் திருவிசைப்பாவில் உரைத்தவை காண்க புகழ்ச்சோழ நாயனார் புராணம் பார்க்க

**முடியே முடியாவது** - அரசர் தாங்கும் மணிமுடி - கிரீடம் ஆவது.

உலகமெல்லாந் காக்கும் தமது இறைவனார் தாங்கிய இறைமைத் திருவடையாளங்களையே, அவரது தாளபிடித்து அரசுபூண்ட மூர்த்தியாரும் தமது உலக அரசாட்சியின் அடையாளங்களாகக் கொண்டனர் **மாமுடியே முடியாவதெ**ன்றவதனால் மூர்த்தியார் முன்னரே சடைவளர்த்த பெருங்கோல முனிவராக விளங்கினார் என்பது கருதப்படும்

இங்குக் குறித்த நீறு - கண்டிகை - சடை என்ற மூன்றினையும் சிவசாதனங்கள் என்பர். முன்னர் இவற்றைப் பூண்டு சிவனது பேரடியாராக விளங்கிய மூர்த்தியார், உலகம் ஆளும் பேரரசராக விளங்கும் அக்காலத்தும் மாறுதலின்றி இவற்றையே அதற்கும் சாதனமாகக் கொண்ட அடிமைத்திறம் கருதுக "கேடு மாக்கமும் கெட்ட திருவினார், ஓடும் செம்பொனனு மொக்கவே நோக்குவார்" (143), "அகில காரணர் தாள

பணி வாரகடாம, அகில லோகமு மாளற குரியா" (139) எனற கருததுககளை இஙகு வைததுக காணக

1006-ல "சமணபோய மூதறசைவ மோஙகில" எனறது மூாததியாா மேற கொளளும அரசாடசியின குறிககோள (இலடசியம) எனறும, இபபாடடிற கூறி யவை அதன அடையாளஙகளாகிய சடஙகுகளும அரச சினனஙகளுமஆம எனவும கொளக ஆதலின இவைதமமுள மாறுபாடினமை அறிக 41

1009. எனறிவவுரை கேடடலு மெலலையில கலவி யோரும
வனறிணமதி நூலவளா வாயமை யமைசசா தாமும
"நனறிஙகரு டா"னென, நறறவ வேநதா சிநதை
ஒனறுமமர சாளுாிமைசசெய லான வுயததாா. சஉ

(இ - ள்) வெளிபபடை எனறு (கூறிய) இநத உரையினைக கேடடு, அளவில லாத கலவியுடையோாகளும, வலிய திணணிய மதியையும நூலறிவையும வளா வாயமையையும உடைய அமைசசாகளும "இஙகு அருளிய செயதி நனறுதான" எனறு கொணடு, நலல தவவேநதரது சிநதையிற பொருநதும அரசாளவதறகு உரிமைச செயலாகிய சடஙகுகளை யெலலாம செயதளிததனா

(வி - ரை) எல்லையில் கல்வியோர் - வேதாகமஙகளில வலலவா. "மெய வாழதரு நூலறிவின மிகுமாநதா" (1007) எனற அவா

**வன் திண் மதிநூல் வளர் வாய்மை அமைச்சர்** - மதி அமைசசா, நூல அமைசசா, வளா வாயமை அமைசசா எனறு தனிததனி கூடடிக கூறிய மதியுடை மையும, நூலறிவுடைமையும, உலகததைச சோாவுறாது வளாததறகுரிய வாயமை யுடைமையும நலஅமைசசாககு இனறியமையாதனவாம எனப

**வன் திண் மதி** - மதிக்கு வன்மையாவது எதுவரினும கலஙகாமை **மதியின் திண்மை**யாவது எணணியவறறை எணணியபடி முடிககும உறுதிபபாடு **நூல்** - நூலறிவு ஆகுபெயா **வளர்** - வளாககும பிறவினை உலகததைச சோாவுறாது காதது வளாககும உலகததை எனபது வருவிகக **வாய்மை** - எஞஞானறும உணமை யினையே எடுததுரைககும திறம "தமமுயிாக குறுதி யெணணோ தலைமகன வெகுணட போதும, வெமமையைத தாஙகி நீதி விடாதுநின றுரைககும வீரா" எனபது முதலியனவாகக கமபா இததனமைகளை எடுததுப பாராடடுதலை இஙகு நினைவு கூாக "மதிநுடப நூலோ டுடையாாக கதிநுடபம, யாவுள முனனிற பவை" எனற திருக குறளும காணக. ஆசிரியா தாமும ஒரு பேரமைசசராயினமையும, இவவிலககணங களுககுத தாமே சிறநததோா இலககியமாய விளஙகியமையும இஙகுக கருதுக அது காரணமாகவே இபபுராணம பாடியருள நோககதும குறிபபிற காணததககது

**இங்கு அருள் நன்றுதான்** - எனக **அருள்** - மூாததியாா அருளிச செயத பொருள கள. **தான்** - உறுதி குறிககும அசை தேறறேகாரம தொககது **என** - எனறு சொலலி - எனறு கருதி

**நல் தவ வேந்தர்** - நலல தவததிற பெரியோா எனறும, நலல தவஞ செயதமை யால வேநதராயினோா எனறும, ஒருஙகே நலல தவராயும வேநதராயும அமைநதோா எனறும உரைகக நினறது **நல்ல தவம்** - சிவபெருமான திருததொணடு.

**சிநதை ஒன்றும்** - மனதுககு இசைநத - உகநத

**அரசுஆள் உரிமைச் செயல்**-அரசமுடி சூடுதறகு உரிய சடஙகுகள **செயல் ஆன உய்த்தார்** - செயலகளை எலலாம மூாததியாா கருததிறகுப பொருநதும வணணமே செயதனா. 42

1010. மாடெங்குநெ ருங்கிய மங்கல வோசை மல்கச
சூடுஞ்சடை மௌலி யணிந்தவர் தொல்லை யேனந்
தேடுங்கழ லார்திரு வாலவாய் சென்று தாழ்ந்து
நீடுங்களிற் றின்மிசை நீண்மறு கூடு போந்தார். ௬௩

1011. மின்னும்மணி மாளிகை வாயிலின் வேழ மீது
தன்னின்றுமி ழிந்து தயங்கொளி மண்ட பத்திற்
பொன்னின்னரி மெல்லணைச் சாமரைக் காமர் பூங்கால்
மன்னுங்குடை நீழ லிருந்தனர் வையந் தாங்கி. ௬௪

1010 (இ - ள்) வெளிப்படை. பக்கங்களில் எங்கும் கூட்டமாக நெருங்கிய மங்கல ஓசைகள் நிறையச், சூடுகின்ற முடியாகச் சடையினையே அணிந்து வேந்தராய் விளங்கிய மூர்த்தியார், பண்டு பன்றி வடிவெடுத்த விட்டுணுவானவர் தேடும் திருவடிகளையுடைய சொக்கலிங்கப்பெருமானது திருவாலவாய்க் கோயிலிற்சென்று வணங்கிப், பின்னர், நீடும் யானையின்மேல் ஏறி நீளும் வீதி வழியே அரச உலாப்போந்தனராகி,

1011 (இ - ள்) வெளிப்படை. விளங்குகின்ற மணி மாளிகை வாயிலில் யானை மேனின்றும் இறங்கி, விளக்க மிக்க கொலு மண்டபத்தில் வந்து, பொன்புனைந்த சிங்காசனத்தின் மேல், அழகிய சாமரைகளின் மெல்லிய காற்று வீசப்பெற்ற வெண்குடை நீழலில் உலகங்காவலை மேற்பூண்டு (மூர்த்தியார்) அரசு வீற்றிருந்தனர். இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன. ௬௪

1010 (வி - ரை) நெருங்கிய மங்கல ஓசை மல்க - பலவகையாகத் தொக்க மங்கல வாத்தியங்களும், மக்களின் பலவகை வாழ்த்தொலிகளும் நிறைய வகையாலும் தொகையாலும் நிறைவு குறிக்க நெருங்கிய - என்றும், மல்க என்றும் கூறினார். 1003 பாட்டில் அத்திருப்பாட்டிற் கூறியவை அரசனின்றிக் கிடந்த நாடு அரசரைப் பெற்ற களிப்பினாலாகிய முதல் நிகழ்ச்சி. இங்கு மல்கிய ஓசைகள் அவ்வரசர் விதிப்படி முடிசூட்டிக் கொண்டது கண்ட களிப்பினாலாகிய பின் நிகழ்ச்சி. முன்னர் விரிவாகக் கூறினாராதலின் இங்குச் சுருக்கிக் கூறினார்.

சடை சூடும் மௌலி அணிந்தவர் எனக் "சடைமாமுடியே முடியாவது" (1008) என்றது காணக. இதனால் அவர் முடிசூட்டிக்கொண்ட சிறப்பியல்பு கூறப்பட்டது. அவ்வாறு சிறக்க முடி சூடியவர்.

திருவாலவாய் சென்று தாழ்ந்து - சொக்கேசரது திருக்கோயிலுக்குச் சென்று அவரை வணங்கி அரசமுடி சூட்டிக்கொண்டவுடன் மூர்த்தியார் செய்த முதற் செயல் ஆலவாய்ப் பெருமானிடம் சென்று வணங்கியதேயாகும். இது, முன் அப் பெருமான் தமக்குச் செய்த பெருங்கருணைத்திறத்தின் பொருட்டும், இனித் தமது அரசாட்சிக்குத் துணை நின்று செலுத்தியருள வேண்டுவதாகிய திருவருளின் பொருட்டுமாம். சிறிது செல்வம் வரினும் அதின் மயங்கித் தருக்கி அரனை மறந்து மறம்பல செய்யும் உலகர் இதனை அறிந்துய்வது கடமை.

சென்று தாழ்ந்து - களிற்றின் மிசைப் - போந்தார் - என்றதனால் முடிசூடு மண்டபத்தினின்றும் திருவாலவாய்க்கு வணங்கப்போகும்போது வாகனமின்றி நடந்து சென்றார் என்பதும், அவ்வணக்கம் முடிந்த பின்னரே களிற்றின்மேல் ஏறி நகர்வலமாக வீதி போந்தார் என்பதும் உணரப்படும். சிவன்கோயிற் றரிசனத்துக்குச் செல்லும்போது வாகனமூர்ந்து செல்லலாகாது என்பது விதி.

**நீடும் களிறு** - முன்னாக கண்கட்டி விடப்பட்டபோது திருவருள் வசமாகித் தம்மை எடுத்துப் பிடரியில் கொண்ட என்று குறிக்க நீடு என்றார்

**நீள் மறுகு** - ஆலவாயக்கடவுள் பல அருட் டிருவிளையாடல்கள் செய்த அருளினால் நீளும் திருவீதிகள் இந்நாளிலும் அவை அவ்வருட்டிரு விளையாடல்களையே (ஆவணி மூல வீதி முதலிய) தத்தம் பெயர்களால் நினைவூட்டி நிறபதும் கண்கூடு

**மௌலியணிந்தவர்** என்ற எழுவாய் வினைப்பெயர் 43

1011 (வி - ரை) **மணிமாளிகை** - அரசரது அரண்மனை **துயங்கும் மணிமண்டபம்** - அதனுள் கொலு வீற்றிருக்கும் மண்டபம்

**பொன்னின் அரி மேல் அணை** - பொன்னாற் புனையப்பட்டுச் சிங்கம் சுமந்தது போல அமைக்கப்பட்டிருக்கும் அரச இருக்கை **மென்மை** - பஞ்சு, தூவி முதலிய வற்றை உள்ளே இட்டு, வீற்றிருக்க மெல்லியதாயப, பட்டு முதலியவற்றால் அமைக்கப் படுதல் குறித்தது Soft cushion என்பர் நவீனர்

**சாமரைப்பூங்கால்** - சாமரைகளை இருபுறமும் மெல்ல வீசுதலால் உளதாகும் மென்மையாக அசையும் காற்று **காமர்** - சாமரைகளின் அழகு-வரிசையின் ஒழுங்கு-இவற்றையும், **பூ** - காற்றின் மென்மையினையும், குறித்தன நவீனர், மேல் விசிறி (Punka) வீச அதன்கீழ் வீற்றிருக்கும் இயல்பு காண்க

**மன்னும் குடைநீழல்** - உலகம் தன் கீழ்த்தங்கும் அரச ஆணைக்கு அடையாள மாகிய வெண்குடையின் நீழலிலே **நீழல்** - உபசாரம் "வெண்கொற்றக் குடையும், நவமணி முடியும், சிங்காதனமும் மன்னவர்க்கே யுரிய சிறப்புடையாளமாம்" (சிவஞா-போ -8-ம் சூ சிற்றுரை) என்றது காண்க

**வையந் தாங்கி இருந்தனர்** எனக் **தாங்குதல்** உபசார வழக்கு அரசாளுதல் குறித்தது "வையம் முறை செய்குவனாகில" (1008)

**அணை - நீழல்** - ஏழனுருபுகள் தொக்கன

அணிந்தவர் - சென்று - தாழ்ந்து - போந்தாராகி - இழிந்து - நீழல - இருந்தனர் என்று இந்த இரண்டு பாட்டுக்களும் கூட்டி முடித்துக்கொள்க 44

1012. குலவுந்துறை நீதி யமைச்சர் குறிப்பின் வைகக்,
கலகஞ்செய மண்செய லாயின கட்டு நீங்கி
நிலவுந்திரு நீற்றுநெ றித்துறை நீடு வாழ,
உலகெங்குநி ரம்பிய சைவமு யர்ந்து மன்ன, சரு

1013. நுதலின்கண்வி ழித்தவர் வாய்மை நுண்ணங்கு நூலின்
பதமெங்குநி றைந்து விளங்கப் பவங்கண் மாற
வுதவுந்திரு நீறுயர் கண்டிகை, கொண்ட வேணி
முதன்மும்மையி னுலக காண்டனர் மூர்த்தி யாரதாம். சசு

1012. (இ - ள்) வெளிப்படை குலவுகின்ற பல துறைகளிலும் நீதிநடத்தும் அமைச்சர்கள் தமது குறிப்பின்படி நிற்கவும், கலகம் செய்த அமணர் செயலாயின கட்டு நீங்கி நிலவுகின்ற திருநீற்று நெறியும் துறையும் நீடுவாழவும், உலகமெங்கும் நிரம்பிய தன்மையுடைய சைவம் ஓங்கி நிலைபெறவும், சரு

1013. (இ - ள்) வெளிப்படை நெற்றியின் கண் விழியுடையவராகிய சிவ பெருமானது வாய்மையாகிய நுண்பொருள் கொண்ட நூலின் பொருள் எங்கும் நிறைந்து விளங்கவும், பவங்கள் மாறவும் உதவுகின்ற திருநீறும், உயர் உருத்திராக்க




1. திருவாலவாயக கோயில

(உடபார்வை - சுவாமி அமமன விமானஙகளும - பொறறாமரைத தீரததமும)

—பாடடு - 1913 - பககம - க௫00

2. மூாததி நாயஞா - செபபுப படிமம

கணடிகையும, கொணட சடையும என்ற முதனமைபெற்ற மும்மையிஞைல மூாததி யாா தாமே உலகததை அரசு செலுததினா சசு

இநத இரணடு பாடடுககளும தொடாநது ஒரு முடிபுகொணடன

1012 (வி - ரை) குலவுநதுறை - அரசியலிறபடட பறபல துறைகளாக குறித தது ஒவவோா அரசியற றுறையும ஒவவோா அமைசசரினகீழ உளளன

நீதி அமைச்சர் - அறநூல விதிததபடியே ஒழுகவலல அமைசசாகள நீதி - நியதி - ஒழுஙகு

குறிப்பின் வைக - குறிப்பு - வாககினுற சொலலாமலே கணணின பாாவையால் வெளிபபடுககும மனனவனது உடகோள வைத்தல் - அதனை அறிநது அதறகுத தககபடி செயதல " கணணிற சொலிசசெவியி ஞேககு மிறைமாடசி " எனபது நீதி நூல குறிப்பின் வைத்தல் அமைசசாக கினறியமையாத இலககணமாம. இது பறறியே அமைசசு என்ற பகுதியில மனனரைச சோநதொழுகல எனறும அதனை அடுததுக குறிபபறிதல எனறும இரணடதிகாரஙகள வகுததோதினா திருவளளுவ ஞா அவறறுள "குறிபபறிநது காலங கருதி" எனறும, "குறிபபிற குறிபபுணாவாா" எனறும, " நுணணிய மெனபா ரளககுஙகோல காணுஙகாற, கணணலல திலலை பிற " எனறும பலவாருக அமைசசாககு இஃதினறியமையா தெனபதனை வறபுறுததியதும காணக

கலகம் ,கட்டு - அமணரது கலகமபறறி 981-982-983-ல உரைததவை காணக கலகமாவது தமமளவில நிலலாது பிறசமயததுக கிடையூறு விளைததல செயலா யின கட்டு நீங்கி - அவவாறு செயவதனுலாகிய இனனலகளின தொடககுமுறறும நீஙகி கட்டு - சைவததை விளஙகவொடடாமற செயத பநதஙகள மலககடடு நீஙகிய வழியே உயிா தழைககும என்ற உணமையும காணக சமணா கலகமபறறி அபபா சுவாமிகள ஆளுடைய பிளளையாா சரிதஙகளில வருவன காணக " கலக மிடும அமணமுருடடுக கையா " என்ற திருததொணடா புராண வரலாறும காணக.

கட்டுநீஙகி - நீடுவாழ - உயாநதுமனன உதவும மும்மையிஞைல - மூாததியாா - உலகாணடனா என இநத இரணடு பாடடுககளையும தொடாநது முடிததுககொளக

நிலவும் ..வாழ - நிலவுதல் எனறும அழிவிலலாது இருததல. நீற்று நெறித் துறை - நீற்று நெறியாவது சிவநெறி இதுவே ஒளிநெறி, பெருநெறி, திருநெறி, அருணெறி எனறு பலவாருகப பாராடடித தமிழ மறைகளாற போறறபபடும நெறி - ஒழுகிச செலகினற வழியினையும, துறை - (அவவழியில) புகுதல, நிறறல, இருததல முதலிய தொழில நிகழும இடததையும குறிககும நெறியும துறையும எனக உம மைகள தொககன " நிலை கொளளும வழிததுறை யொனறறியேன" (திருவதிகை) என்ற அபபா சுவாமிகள தேவாரமும, "வேதநெறி தழைததோஙக மிகுசைவத துறை விளஙக " (திருஞா - புரா - 1), " தூயதிரு நீறறுநெறி யெணடிசையுந தனிநடபப " (ஷெ 23) எனறவையும காணக

உலகு எங்கும் நிரம்பிய சைவம்-சைவநிலையே உலகமெஙகும நிரமபியுள்ளது என பதாம சிவசததி யடையாளஙகளே உலகெலலாமாவது எனபது, " சததியுஞ சிவமு மாய தனமையிவ வுலக மெலலாம், ஒததொவவா வாணும பெணணு முயாகுண குணியு மாகி, வைததன னவளால வநத வாககமிவ வாழககை யெலலாம, இததைய மறியாா பீட லிஙகததி னியலபு மோராா ", " யாதொரு தெயவங கொணடீ ரததெயவ மாகி யாஙகே, மாதொரு பாக ஞாதாம வருவா " என்ற சிவஞானசிததியாராலும், " காதன மடபபிடி யோடுங களிறு வருவன கணடேன, கணடே னவாதிருப பாதங கணடறி

யாதன கணடேன" (அபபாசுவாமிகள - காநதாரம - திருவையாறு) என்ற தமிழமறை யின உளளுறையினைச, "சததியுஞ சிவமுமாஞ சரிதைப, பனமை யோனிகள யாவை யும பயிலவன பணிநதே" என்று விரிதத திருநாவுககரசா புராண (374)ததாலும, வேதங களாலும அறிக சைவமே எலலாமாய நிறபதென்ற உணமை "இதுவாகு மதுவலல தெனுமபிணகக தினறி, நீதியினு லிவையெலலா மோரிடததே காண நினறதி யாதொரு சமய மதுசமயம" (சிவஞானசிததி - 8-13) என்றதனுலுணாததபபடும

**உயர்ந்து மன்ன** - இஙகு உலகமெஙகு நிரமபிய சைவம எஞஞானறும மனனி யிருததல ஒரு தலையாகவே அதனுககாக முயறசி ஒனறும வேணடா எனபாருளராத லின, அநத ஐயம நீகக **உயர்நது மன்ன** எனறா ஏனைசசமயஙகளுககுத தாழநத தாகவாவது, அவறறொடொபபாகவாவது, இராமல, இதுவே எலலாவறறினும உயாந தது எனறு நிலை பெறறிருகக எனறபடியாம "மௌனமோலி யயாவறச செனனி யில வைதது ராஜாஙகததிலமாநதது வைதிக சைவம அழகி தநதோ?", "சைவமுதலாம அளவில சமயம வகுதது" எனபனவாதி தாயுமானா திருவாககுககளும கருதுக 45

1013 (வி - ரை) **நுதலின்கண் விழித்தவர்** - கண் - ஏழனுருபு விழியவா எனபது **விழித்தவர்** என வநதது நெறறியில உளள கணணை, உலகமெலலாம இருண மூடியதொரு காலததில, அவவிருளைப போககி ஒளி தருதற பொருடடு விழித தவா - திறநதவா எனறுரைததலுமாம "மலைமடநதை விளையாடி வளையாடு கரத தான மகிழநதவனகண புதைததலுமே வலலிருளா யெலலா, வுலகுடனமூன மூடவிரு ளோடுமவகை நெறறி யொறறைககண படைததுகநத உததமனா" (தககராகம - திருககலயநலலூா - 4) என்ற ஆளுடையநமபிகள தேவாரம காணக இவவாறு ஒரு காலம நுதறகண திறநது ஒளி தநததுபோலவே உணமை தெளிநது உலகம உயதற பொருடடு நுணஙகு மெயநூலகளையும இறைவா அருளினா **அநநூல்களின் பதம் எங்கும் விளங்க** மூாததியாா அரசு செயதளிததனா என்ற குறிபபும காணததககது "மேவியவெந நரகததி லழுநதாமை நமககு மெயநெறியைத தானகாடடும வேதமுத லானை" (கொலலிக கௌவாணம - திருககாறுடடு முளளூா - 10) என்ற நமபிகள தேவாரததினும "நாயகனகண நயபபால நாயகி புதைபப வெஙகும, பாயிரு ளாகி மூடப பரிநதுல கினுககு நெறறித, தூயநேத திரததி ஞலே சுடரொளி கொடுதத பணபிற, றேயமா ரொளிக ளெலலாஞ சிவனுருத தேசு தெனனா" (1-52) என்ற சிவஞானசிததியாரினும உளள கருததுககள ஈணடுச சிநதிககததககன

மறறொருகாலம மனமதனை எரிகக நுதலின கணணை விழிததனராதலின, அதற கிணஙகக காமககுரோத முதலியவறறாலுணடாகும **பவங்கள்மாற** உதவும சிவசாத னஙகளை உதவினா என்ற குறிபபும காணததககது

**நுணங்கு நூல்** - நுணணியனவாகிய உணமைப பொருளகளை விளககும வேத சிவாகமமாதி சிததாநத நூலகள **நூலின் பதம்** - அவறறால உணாததபபடும சிவநெறி **பவங்கள்** - பாவஙகளின வழிததாய வரும பிறவியும அதனைப பினபறறி வரும துனபஙகளும **உயர்** - கொண்ட என்ற அடைகளின பொருததமுங காணக

**உதவும்** - சாதனமாய நிறகும விளஙகவும - மாறவும - உதவும எனக உத **வும் மும்மை** எனக **விழித்தவர்** உதவும எனறு கூடடியுரைபபினு மமையும

**முதல்** - முததி சாதனஙகளில முதனமைபெறற

**முதல் மும்மையினுல் உலகாண்டனர் மூர்த்தியார்தாம்** - இபபாடடினால "மும மையா லுலகாணட மூாததி" என்ற முதனூற றொடரை விரிததுணாததியபடி கணடுகொளக.
46

1014. ஏலங்கமழ் கோதையர் தந்திற மென்று நீங்குஞ்
சீலங்கொடு வெம்புலன் றெவ்வுடன் வென்று நீக்கி
ஞாலந்தனி நேமி நடாத்தி நலங்கொ ளூழிக்
காலமுயிர் கட்கிட ரான கடிந்து காத்து,     ௪௭

1015. பாதம்பர மன்னவர் சூழ்ந்து பணிந்து போற்ற
ஏதம்பிணி யாவகை யிவ்வுல காண்டு தொண்டின்
பேதம்புரி யாவருட் பேரர சாளப் பெற்று
நாதன்கழற் சேவடி நண்ணின ரண்ண லாரே.     ௪௮

**1014 (இ - ள்)** வெளிப்படை. மயிர்ச்சாந்து மணம் வீசுகின்ற கூந்தலினை உடைய பெண்களின் தொடர்பினை என்றைக்கும் நீங்கிய துறவொழுக்கமாகிய சீலத்தினை மேற்கொண்டவராய், வெவ்விய ஐம்புலவின்பங்களைப் பகைவர்களுடனே வென்று நீக்கி, உலகினைத் தனி ஆணையினாலே ஆட்சி செலுத்தி நன்மைகொள்ளும் ஊழிக்காலம் உயிர்களுக்கு வரும் இடர்கள் வாராமே காத்து, ௪௭

**1015. (இ - ள்)** வெளிப்படை தமது பாதங்களை வேற்றரசர்கள் சூழ்ந்து பணிந்துபோற்றக், கெடுதிகள் பீடிக்காதவகையால் இவ்வுலகினை அரசாண்டு திருத்தொண்டினின்றும் விலகாத அருட்பேரரசும் ஆளப்பெற்று, இறைவனாரது கழலணிந்த திருவடிகளைப் பெருமையுடைய மூர்த்தியார் அடைந்தனர் ௪௮

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபுகொண்டன.

**1014 (வி - ரை) ஏலம் கமழ் . சீலம்**-துறவுநிலை அறுபத்துமூன்று நாயன்மார்களுள் துறவொழுக்கம் பூண்டாரிருவர் அவர்களாவார், அப்பர் சுவாமிகளும் மூர்த்தி நாயனாருமாம் "மூர்த்தியார் றப்பர் நல்ல துறவறம்" (37) என்பது திருத்தொண்டர் புராண வரலாறு உலக நலம் எதனையும் விரும்பாமலே அரசாட்சியினை ஏற்றது போலவே, எவ்வித உலகப் பற்றுமின்றி அவ்வரசாட்சியினை மூர்த்தியார் செலுத்தினார் என்பது இப்பாட்டால் அறிவிக்கப்பட்டது இந்நாளிலோ எனின், அரசாட்சியின் எந்தப் பயனுமற்றதொரு சிறு பகுதியேயாயினும் அதனை மக்கள் விரும்பி அதனை அடைவதன் பொருட்டுப் பெரும்போரும், பெரும்பொருட் செலவும், தகுதியற்ற பல செயல்களும் செய்து, "பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்கும்" புல்லறிவாண்மை பெருகிவரக் காண்கிறோம் ஒரு சிறு அரசாங்க பதவிதானும் மக்களைச் சுயநலத்தில் அழுத்திப் பற்பல தாழ்வுகளிற் புகுத்துவது எளிதில் இசைவதாகின்றது இதனைப் பல துறையினும் அறிந்த அமைச்சர் பெருமானாகிய ஆசிரியர், உண்மை நாயன்மார்களாகிய எந்தம்பெருமக்களது உயர்வையும் அருமையினையும் எடுத்துக் காட்டுவாராய் இங்கு மூர்த்தியாரது முழுத் துறவொழுக்கத்தினை விதந்து எடுத்து விரித்தனர் இவ்வரசாட்சியினையும் மூர்த்தியார் விரும்பினாரல்லர் அவர் விரும்பியது "வன்மைகொடும் பாதகன் மாய்ந்திட, நன்மை அரசன் இப்புவிதாங்க வேண்டு"மென்பதொன்றுதான் பின்னர், இறைவன் "நீயே அரசு கைக்கொண்டு முன்புள்ள துன்பநீங்கக் காத்துப் பணி செய்து எம்முலகடைக" என்றருளியதனால் "அருளிதுவாகில் வையந்தாங்குவன்" என்றதுவே அவர்தம் மனநிலை (1000)

**வெம்புலன்** - "ஐம்புலனும் ஒண்டொடி கண்ணே யுள" என்றபடி ஐந்து புலன்களினின்பங்களும் ஒருங்கே துய்க்கப்படும் மகளிர் இன்பத்தை நீக்கியதேயன்றிக், கண் செவி முதலிய தனிப்புலனின்பங்களையும் மூர்த்தியார் விழையாது நீக்கினார் என்பார்,

**வெம்புலன் - வென்று - நீக்கி** என்றா ஒவ்வொரு புலனின்பமே மக்களை மயக்கிக் கேடுகளில் ஈர்த்துத் தள்ளவல்லதென்பது பெரியோர் கண்ட உண்மையும் அனுபவமு மாம் “ மாறி நின்றென்னை மயக்கிடும் வஞ்சப் புலனைந்தின் வழியடைத்து ” - (திரு வாசகம்)

**புலனை வெல்லுதலாவது** புலனின்பத்தைப் பற்றிக்கொண்டு அவற்றின் பின் தாம் செல்லாமல் தம்மைப் பின்பற்றி அவை நிற்குமாறு செய்தல் “ தம்மை யைந்து புலனும்பின் செல்லுந் தகையார் ” (சண்டேசா - புரா - 2) இதற்குப் புலன்களை அடக்குதல் என்று பொருள் கொள்வாருமுண்டு அது பொருளன்றென்த் திருமூலர் மிக உருசிபட உரைத்தருளினா “ அஞ்சு மடக்கி னசேதன மாமென்றிட்ட, டஞ்சு மடக்கா வறிவறிந் தேனே ” (திருமந்திரம் - ஐந்திந்திரிய மடக்குமுறைமை 7-330)

**வெம்புலன் தெவ்வுடன் - தெவ்** - பகை அரனடியாரை வன்மை செய்து மூர்த்தியாரையும் அந்தம் இல்லாம மிறை செய்வித்த அமணகையர்களது பகைமை அவர்களைச் சார்ந்த வடுகக்கருநாட மன்னன் இறந்து பட்டானெனினும், அவனை அவ் வாறு செய்யும்படி தூண்டிச் சைவத்துக்குப் பகைமை பூண்ட சமணகையர்களது சார்பு அந்நாட்டில் இருந்தது ஆதலின் அத்தகைய பகைகள் சைவமக்களைத் தாக்கா மல் வென்று நீக்கினார் இது, அவ்வவர்களை அவரவர்க்குரிய அளவில் அமைந்து நிற்கச் செய்தலினாலும், வன்மை புரிவோரைத் தண்டித்தும் நாடு கடத்தியும் முறை செய்தலினாலும், அவர்களுட் பொய்விட்டு உண்மைச் சைவத்தினைச் சார வருவோரை உடன் தழுவிச் சைவராக்கி உயர்த்தியும் பிறவாறும் ஆணை புரிதலினாலும் ஆம் தண்டியடிகள் புராணமும் திருஞானசம்பந்த நாயனார் புராணமும் பார்க்க.

**தெவ்வுடன் வென்றுநீக்கி** - மூர்த்தியார் அரசு பூண்டது புறப்பகையாயச் சைவத்துக்கு நேர்ந்த இப்பகையை நீக்குதல் கருதியதாதலின் இவ்வாறு எடுத்துக் கூறியதுமன்றி, உடன் என்ற உருபினைத் தெவ் என்றதனோடு புணர்த்தி யோதினார் இது புறப்பகை வெல்லுதல் குறித்தது பரமன்னரை வென்றது வரும்பாட்டிற் காண்க

**வெம்புலன் வென்று** - என்றது உட்பகை வெல்லுதல் குறித்தது இதனால் “ மேன்மை மன்னரைப் புவிசார்வதென்று ?” (985) எனக் கவன்றாராதலின் அப்பண்பு பொருந்த நடத்துவித்த திறம் கூறியபடி

இந்நாளின் அரசாட்சியின் குறிக்கோள் உடல் - உடைமைகளின் புறக்காவ லுடன் நின்று விடுகின்றது அது உயர்ந்த இலக்கியமாகாது புலப்பகையாகிய உட் பகையினின்றும் உயிர்களைக் காக்கவேண்டுவது அரசாட்சியின் பெருநோக்கமாதல் வேண்டுமென்பதாம் இவ்வாறு அன்பினாற் செய்யப்பட்ட இது தற்பயன் குறியாது பலகாலம் சிவனை நினைந்து அவனது சீர்பரவச் செலுத்தியபோது அருளாக உருப் படும் பட்டவே, அது சிவபுண்ணியமாகி அவனருளைத் தேடித்தரும் என்பது

**ஞாலம் தனி நேமி நடாத்தி** - உட்பகை புறப்பகையுடன் வென்று நீக்கிவிட்டா ராதலின் உலகத்தைத் தம்முடைய தனிக்காவல் பெற முறை செலுத்தினார் என்ப தாம **தனி நடாத்துதல்** - வேறொருவரும் இதனிற் பங்கிடாதபடி தாமே செலுத்துதல்

**நேமி** - அரசாணையைச் சக்கரமாக உருவகஞ்செய்து கூறுதல் மரபு

**ஊழிக்காலம்** - நீண்டகாலம் என்ற பொருளில் வந்தது இங்குக் காலத்தின் அளவு ஒருவரது வாழ்நாளின் அளவாகக் குறுகியிருப்பினும், அதன் பயன் நீடூழி யிருப்பதென்பதும் குறிப்பு

**உயிர்கட்கு இடரான காத்து** - தமகீழ் வாழும் எல்லா வுயிர்களுக்கும் வரும் எவ்வித்த துன்பங்களும் வாராமற் காத்து. இது அரசாங்கத்தின் முக்கிய கடமை.

இனிப, பணபொருநத இசை பாடியும, இறைவரைப பாலின திருமஞசனமாட்டி யும, கணணாரக கணடும, அவனது திருவைநதெழுததை எணணா எணணியும, விண ணின வீழும மழையானிறைநத குளிர்புனலகொணடு அருசசிததும, வேதாகம நூல வழிச சிவபூசை செயதால அதன பயனை நிலவுலகததாருககு அநதத தலம தருகினற பெருமையுடையதாம என்ற தொடர்பாகிய உளளுறைப பொருளும படுவது காணக

வரம்புடைத்தோ ? ஓகாரம எதிரமறை 9

1215. பெருமை பிறஙகு மபபதியின மறையோா தமமுட பெருமனைவாழ
தரும நிலவு காசிபகோத திரததுத தலைமை சானமரபி
லருமை மணியு மளிததுவே நஞசு மளிககு மரவுபோ
லிருமை வினைககு மொருவடிவா மெசச தததனுளனானை. ௧௦

(இ - ள்) வெளிப்படை பெருமையால விளஙகும அநதப பதியில மறையவாக ளுளளே சிறநத இலவாழககைககுரிய அறஙகளில நிலைதத காசிப கோததிரததில, தலைமையாகிய குடியில, அருமையாகிய மணியையும கொடுதது அதுவே நஞசினையும கொடுககும பாமபினைபபோல, நலவினை தீவினை என்ற இருவினைகளையும செயதறகு ஒரு வடிவாய வநதவனாகிய எசசதததன எனபவன ஒருவன உளளவனானான

(வி - ரை) மறையோர் - வேதியா என்ற பெருமபிரிவு

காசிப கோத்திரம் - மறையோாகளுள நிலவும கோததிரஙகள என்று சொல லும பல உடபிரிவுகளுள ஒன்று இது காசிபா என்ற இருடியிடததிலிருநது தொடர்புகொணடு வருவதுபோலும கோத்திரத்துத் தலைமைசால் மரபு - கோததி ரம என்ற உடபிரிவினுள வரும சிறு பிரிவு பிரவரம என்று வழஙகுவா

அருமை அரவுபோல் - அரவு மணியினையும நஞசினையும தருவது எசசதததன விசாரசருமா எனனும நறபுதலவரைப பெறுதலாகிய நலவினையும பெற்றான, அவா செயத சிவபூசைககு இடையூறு செயதலாகிய சிவாபராதஞ செயயும தீவினையினையும பெற்றான, ஆதலால இருமைவினைக்கு மொருவாம் என்றார பயனபற்றி வநத உவமம நனமை தீமை என்ற மாறுபட்ட செயலகளிரணடும ஒரு சேர ஒரு பொருளிடததே காண உளளதொரு உவமபபொருள இநத இடததுக கேறபக கொணடு உரைததது ஆசிரியா சேககிழாா சுவாமிகளது தெயவககவி மாணபுகளுள ஒன்று

எச்சதத்தன் - எச்சம் - யகஞம என்ற வடமொழி தமிழில எச்சம் என வநதது "தககனையு மெச்சனையும தலையறுதது" (சாழல - 5) என்ற திருவாசகமும, "தகக னது பெருவேளவிச சநதிரனிந திரனெச்ச னருகக னஙகி, மிககவிதா தாவினொடும விதிவழியே தணடிதத விமலா" (மேகரா - முதுகுனறம - 3) என்ற ஆளுடைய பிளளை யாா தேவாரமும பிறவும காணக வேளவி செயயும மரபில வநதானாதலால இபபெய ரால வழஙகபபடடனன தத்தன் - முனனுளில மறையோா பூணட சிறபபுப பெயா களுள ஒன்று.

பெருமனைவாழ் தருமம் நிலவு - சிறநத இலலறததில நிலவுகினற இலலறததின பெருமையாவது "இயலபுடைய மூவாககும நலலாறறி னினற துணை" யாவதும, "துறநதாாககும துவவாதவாககு மிறநதாாககும" துணையாவதும, "தெனபுலத தாா தெயவம விருநதொககல றோனென்றாங, கைமபுலததா றோமபல" முதலும ஆம தம பொருடடனறிப பிறாககுதவி செயதறகாகவே மனையறமாகிய இலவாழககை உள தாகுமெனறு வகுததனா பெரியோா.

1216. மற்றை மறையோன் திருமனைவி வாய்ந்த மரபின் வந்துதித்தாள் ;
சுற்றம் விரும்பு மில்வாழ்க்கைத் தொழிலா ளுலகிற் றுணைப்புதல்வற்
பெற்று விளங்குந் தவஞ்செய்தாள் , பெறும்பே றெல்லைப் பயன்பெறு
பற்றை யெறியும் பற்றுவரச் சார்பா யுள்ள பவித்திரையாம். [வாள் ,

(இ - ள்) வெளிப்படை. அந்த மறையவனுடைய திருமனைவியார், அவன் மணஞ்செய்தற்கியைந்த மரபில் வந்து பிறந்தவர், சுற்றந்தழுவுதலை விரும்புகின்ற தன்மையில் இல்வாழ்க்கை நடத்தும் தொழிலுடையவர், உலகில் துணையாக உள்ள புதல்வர்ப்பேற்றைப் பெற்று அதனால் விளங்கும் தவத்தை முன் செய்தவர், யாவரும் புதல்வரால் பெறுகின்ற பேறுகளுக்கெல்லாம் எல்லையாயுள்ள பயனைப் பெறுபவர், உலகப்பற்றுக்களையெல்லாம் அறுத்தற்குக் கருவியாகிய சிவநேயம் (சிவன்பாற் பற்று) வருதற்குச் சார்பான குணத்தினையுடைய **பவித்திரை** என்பவர்.

(வி - ரை) **மற்றை** - முன் சொன்ன என்ற சுட்டுப் பொருளில் வந்தது. அம்மறையவன் இருமை வினைக்கும் ஒரு வடிவாயினமை போலன்றி மனைவியார் ஒருநிலை நின்று சிவனடிப்பற்று வருதற்குச் சார்பாகவே உள்ளவர் என்ற பொருள்தந்து வினைமாற்றுப் பொருட்குறிப்பும்பட நின்றது. திருமனைவி என்ற குறிப்பும் அது.

**வாய்த்தல் - வாய்ப்பு** - "இருவர் சுட்டிய பல்வேறு தொல்குடி" (திருமுருகு) என்றபடி குடி மரபு முதலிய பிறப்பு வகையாலும், குணம் முதலிய சிறப்பு வகையாலும் ஆவது. இது பெண்ணுக்குப், பிறந்த இடத்துச் சிறப்பு.

**சுற்றம் விரும்பும் இல்வாழ்க்கைத் தொழிலாள்** - இல்வாழ்க்கையிற் சுற்றம் விரும்பிப் பேணுதல் மனையாளது பெருங்கடமையும் தொழிலுமாமாதலின் அதனை எடுத்துக் கூறினார். இது பெண்ணுக்குப், புகுந்த இடத்தின் சிறப்பு.

**துணைப்புதல்வற் பெற்று விளங்கும் தவம் உடையாள்** - நல்ல புதல்வரைப் பெறுதல் இல்லறத்தில் வாழும் மனைவியரின் தவப்பயன். "மங்கலமென்ப மனைமாட்சி மற்றதன், னன்கல நன்மக்கட் பேறு" என்பது திருக்குறள். நன்மக்கட் பேறில்லாதாளை மலடி என்றும் இல்வாழ்க்கையின் பயனை யடையாதவள் என்றும் கூறுவர். **துணைப்புதல்வன்** - நல்ல புதல்வன் தன் பெற்றோர்க்கு இம்மையில் நலம்பெறத் துணை செய்தலோடு தனது நன்மையால் மறுமையில் அவர்கள் நரகம் புகாமலும் துணைசெய்வான். ஆதலால் இங்கு இந்நாயனாராகிய புதல்வனார் தமது பெற்றோர்க்கு இம்மை மறுமைகளின் நன்மைகளுடன் மேலாகிய வீட்டுலகமும் பெறத் துணை செய்தாராதலின் **துணைப்புதல்வன்** என்றும், **பெற்று விளங்கும் தவம்** என்றும் கூறினார்.

**பெறும் பேறு எல்லைப் பயன்** - உலகில் புதல்வரைப் பெற்றார் யாவராலும் அடையப்பெறும் எல்லாப் பேறுகளிலும் சிறந்த பயனாக முடிவில் நிற்கும் பயன்.

**தவஞ் செய்தாள்** என்றது இவரைப் புதல்வராகப் பெறுதற்குச் செய்த முன்னைத்தவங் குறித்தது. **பயன் பெறுவாள்** - அவரைப் பெற்றதனால் இனி அடைய நிற்கும் சிறந்த பயன். ஆதலின் முன்னதனை இறந்தகால வினைமுற்றாலும், பின்னதனை எதிர்கால வினைமுற்றாலும் கூறினார்.

**பற்றை எறியும் பற்று** - "பற்றுக பற்றற்றான் பற்றினை யப்பற்றைப், பற்றுக பற்று விடற்கு" என்ற திருக்குறள் இங்கு நினைவுகூரத்தக்கது. **பற்றை** என்றதிற் கூறிய **பற்று** என்றது ஆணவமலத்தை. இது உயிரை அநாதியே பற்றி நின்று மீட்சியின்றித் துன்புறுத்தலால் இப்பெயர்பெற்றது. **எறிதல்** என்றது அதனை வலியிலதாகச் செய்தல். பின்னர்ப் **பற்று** என்றது இறைவன்பாற் பற்று, சிவனிடத்து வைத்த அன்பு.

**பற்றுவரச் சார்பாயுள்ள** என்றது சிவனபாலனபு வருதறகுத துணையாயுளள என்றதாம தககபடி இலலறம நடததியதனால "துணைபபுதலவற பெறறு" த தனது கணவனுககு உறுதிபயககுமவகை சாாபாய நினறுள , தனககும அவவகைப பறறு வருதறகுச சாாபாகிய ஒழுககததில நினறுள , இனித, தானபெறற புதலவாப பேறறி னால பிற உயிாகளுககும பறறை எறியும பறறுவரச சாாபாயினாள என்ற பல குறிப புககளும கணடுகொளக **உள்ள** - சிவனது சாாபினால வரும பயன எனறும நிலைத துளளது முனனாச **செய்தாள்** எனறும, பினனாப **பெறுவாள்** எனறும இறநதகால எதிாகாலஙகளாற கூறிய ஆசிரியா இஙகு **உள்ள** எனறு முககாலததுககுமுரிய குறிபபுவினைப பெயரெசசததாற கூறியதும குறிகொளக இவள சாாபினால உயிா கள எஞஞானறும பறறை எறியும பறறு வரபபெறுதல நிலைததுளளதெனபதாம **சார்பாயுள்ள பவித்திரை** என்ற குறிபபுமது

**பவித்திரை** - தூயமையுடையவள **பவித்திரம்** - தூயமை "பழுதுபுகுா தநதீரப பவிததிரமாஞ செயல" (788) என்றது காணக பெயாபபொருள கூறுபவராகி உயிா களைத தூயனவாககும தனமையுடன நிகழபவள என்ற குறிபபுபபடக கூறுதல காணக.

**பவித்திரையாள்**—எனபதும பாடம  11

1217. நனறி புரியு மவாதமபா, னனமை மறையின றுறைவிளஙக,
எனறு மறையோா குலமபெருக, வேழு புவனங கஞமுயய,
மனறி னடஞசெய பவாசைவ வாயமை வளர, மாதவததோா
வெனறி விளஙக, வநதுதயஞ செயதாா விசார சருமனாா.  கஉ

(இ - ள்) வெளிபபடை நனமை செயயும அவாகளிடமாக, நனமை தரும மறைகளின துறைகள விளஙகவும, எனறும மறையோாகளின குலம பெருகவும, ஏழுலகஙகளும உயயவும, திருவமபலததில திருககூததியறறும பெருமானுடைய சைவ உணமைததிறம வளரவும, மாதவததோாகளின வெறறி விளஙகவும, விசார சருமனாா வநது திருஅவதாரஞ செயதருளினாா

(வி - ரை) **நன்றி** - இஙகே நனமையாவது இலலற நலலொழுக்கம.

**நன்மை மறை** - இந்நனமையாவது வேதஙகளிற கூறபபடட விதி விலககுக களால உலகம நனனெறியில நிறுததபபடுதல

**மறையின் துறை விளங்க** என்றது விசாரசருமனாின சரிததததால வேத நீதிகள விளககமுறுதல அவையாவன - பிரமசரிய நிலை, உபநயனம, வேதமபயிலு தல, சமிதையும எரியுமகொணடு சாமஙகணிததல, பசுககாததல முதலியவையாம.

**என்றும் மறையோர் குலம்பெருக** என்றது மறையோா குலததிலே விசாரசரு மனாா திருவவதாரம செயது பசுககாததுச சிவபூசை செயது சிவன மகனாராகப பெறற சரித நிகழசசியினை அறிநது, அதனைப பினபறறிச, சிவனை வழிபடடு, அநதக குலததாராகிய மறையோா வளாநது வருதல குறிததது "கானவா குலம விளஙக" (662) எனறு கணணபப நாயனாா திருவவதாரததிலும, "அநதண ராகுதி பெருக" (திருஞான - புரா 23) எனறு ஆளுடைய பிளளையாா திருவவதாரததிலும கூறியன வும, இவவாறு வருவன பிறவும காணக

**ஏழுபுவனங்களும் உய்ய** - சிவபூசைசெயது அதன பயனாலனறி உயிாகளுககு உயதி கிடையாது எனபது ஞானநூன முடிபு. "சைவத திறததடைவ ரிதிறசரியை கிரியா யோகஞ செலுததியபின ஞானததாற சிவனடியைச சோவா" எனபது (8. 11) சிவஞானசிததியாா இந்நாயனாரது திருவவதாரததாற **புவனம் உய்தலாவது** இவா

காட்டிய வழியாற் சிவபூசை செய்து அதன் பயனை இவ்வாற்றாற் பெற்று உய்தல். இவ்வாறே "ஏழுலகும் குளிர்தூங்க" (திருஞான - புரா 23) என்று கூறுவதும் காண்க.

சைவ வாய்மை வளர்தலாவது சைவத்திற் சொல்லப்பட்ட சிவபூசையே மக்களுக்கு உறுதி தருவதாம் என்ற முடிந்த உண்மை நிலைபெற்றுப் பரவுதல்.

மாதவத்தோர் வென்றி விளங்க என்றது சிவபூசை செய்வோரின் வெற்றி விளக்க முறுதல். மாதவம் - சிவபூசை; தவங்களுள் எல்லாம் தலைசிறந்தது அதுவேயாகலின். "மாதவத்தோர் செயல்வாய்ப்ப" (திருஞான - புரா 23) என்றதும் காண்க. இவ் வெற்றியாவது பூசையில் வரும் இடையூறுகள் எவையேயாயினும் அவை முன்னிற்கா தொழிதல். "வானந் துளங்கிலென் ஒருவனுக் காட்பட்ட வுத்தமாகக்கே", "அஞ்சுவ தியாதொன்று மில்லை அஞ்ச வருவது மில்லை" என்றற்றொடக்கத்துத் திருவாக்குக்களும் சரிதங்களும் நினைவு கூர்க. இந்நாயனார் சரிதத்தினுள், உலகர் செய்யிற் பெரும்பாதகமாகும் செயலாகிய, மறையவனும் - தந்தையும் - ஆகிய வனைக்கொன்ற செயலும், நன்மையாகி முடிந்து முத்திக் கேதுவாகிய வெற்றி காண்க.

உதயம் செய்தார் - அவதரித்தார். ஞாயிறு - மதி - முதலிய ஒளிப்பொருள்கள் உதயமாயின் உலகத்துப் புற இருள் நீங்குதல் பயனுவதுபோல, இந்நாயனார் உதயமாயினமையால் ஆணவ இருள் நீங்கி உயிர்கள் உய்தி பெறுதலாகிய பெரும்பயனுருவது என்பது குறிப்பு.

விசார சருமனர் - இஃது இவரது பிள்ளைத் திருநாமம். சருமர் மறையவர்களுக்குரிய மரபுப்பெயர். விசாரம் - ஆத்துமஞான விசாரணை. முன்னைநிலையிலே, ஆன்ம விசாரணை முற்றிய உணர்ச்சியுடன் வந்து அவதரித்த சாமுசித்தராவர் என்பது சரித்தாலறியப்படும். "கொளுத்து வதன்முன் கொண்டமைந்து அலகில் கலையின் பொருட்கெல்லை யாடுங் கழலே யெனத்தெளிந்த, செலவு மிகுந்த சிந்தை" (1222) என்பதும், மேல்வரும் பாட்டிற் கூறும் பொருளும் காண்க. பிரளயாகலர் விஞ்ஞான கலர்களுக்குப்போல அருள்புரியத் தக்கவர் சாமுசித்தர் "பண்டைநற் றவத்தாற் றோன்றிப் பரமனைப் பத்திபண்ணும், தொண்டர்" என்ற சித்தியாரும் உரையும் பார்க்க. விசாரணையாவது - உயிர்களின் இருப்பையும், அவற்றைக்கட்டிய பாசத்தின் இயல்பையும், அந்த மலக்கட்டினை நீக்கி இன்பந்தரும் இறைவனையும் விசாரித்து அறிந்து, பாச நீக்கத்தின் பொருட்டுச் சைவ சாதனங்களின் வழி நிற்றல். 12

1218 ஐந்து வருட மவ்வாக்கணைய வங்க மாறு முடனிறைந்த
சந்த மறைக ளுட்படமுன் றலைவா மொழிந்த வாகமங்கண்
முந்தை யறிவின் றொடாச்சியினுன் முகைத்த மலரின் வாசம்போற்
சிந்தை மலர வுடன்மலருஞ் செவ்வி யுணர்வு சிறந்ததால். கங

(இ - ள்) வெளிப்படை. அவருக்கு ஐந்து ஆண்டுகள் நிரம்ப, ஆறங்கங்களுடன் கூடியனவாகிச் சந்தங்களுடைய மறைகளுட்படத் தலைவராகிய சிவபெருமான் முன்னே மொழிந்தருளிய சிவாகமங்களிலே முன்னைய அறிவின்றொடர்ச்சியினாலே, அரும்பாகி முதிரும் பூவில் வெளித்தோன்றும் மணம்போலச், சிந்தை மலர அதன் உடனே மலர்கின்றதாகிய பக்குவமுள்ளவுணர்ச்சி சிறக்க உளதாயிற்று.

(வி - ரை) ஐந்து வருடம் - ஐந்தாவது ஆண்டின் நிறைவு. அங்கம் மறைகள் - அங்கம் ஆறு - சிக்ஷை முதலியன 354 பார்க்க. இவை வேதம் ஓதுங்கால் ஒருதலையாகப் பயிலப்பட வேண்டுபவையாதலின் உடன் நிறைந்த என்றார். சந்தம் - வேதங்களுக்குரிய சுரங்கள், புகழுடைய என்பாருமுண்டு.

**மறைகள் உட்பட முன் தலைவர் மொழிந்த ஆகமங்கள்** - உட்பட என்றதனால் ஆகமங்கள் சிறப்பு நூலாகவும், வேதம் பொது நூலாகவும் உள்ளன என்பதும், வேதங்கள் உலகர்க்கும் ஆகமங்கள் சத்திநிபாதர்க்கும் உரைக்கப்பட்டன என்பதும் தெரிக்கப்பட்டன, ஆகமங்கள் பயில்வோர் வேதங்களையும் அவற்றின் அங்கங்களையும் முன்னர்ப் பயில வேண்டுமென்பதும் குறிப்பால் உணர்த்தப்பட்டது மறைகள் ஆகமங்களினுட்பட்டன என்பதும், மறைப்பொருளை உள்ளடக்கி அதன்மேல் உள்ள முடிந்த பொருள்களை ஆகமங்கள் வெளிப்படுப்பன என்ற குறிப்பும் உட்பட என்றதனாற் பெற வைத்தனர் "வேதமோ டாகம மெய்யா மிறைவனூல், ஓதும் பொதுவுஞ் சிறப்பு மென் றுன்னுக" என்பது திருமந்திரம் **தலைவர் மொழிந்த** என்றதனை இடைநிலைத் தீபகமாகக்கொண்டு மறைகளுக்கும் ஆகமங்களுக்கும் கூட்டுக.

**முந்தை அறிவின் தொடர்ச்சியினால்** - முன்பிறப்பின் அறிவு இப்பிறப்பில் ஆன்மாவினுடன் தொடர்ந்து வருகின்ற முறைமையினால் "ஒருமைக்கட் டான்கற்ற கல்வி யொருவற், கெழுமையு மேமாப் புடைத்து' (குறள்) உடல் அழிந்தபோதிலும் அறிவுப் பொருளாகிய உயிர்க்கு அழிவில்லை, உயிருடன் அறிவு பல பிறவிகளிலும் தொடர்ந்தே வரும் என்பது உண்மை அதுவே மக்களுள் அறிவின் ஏற்றத் தாழ்வுகளுக்குக் காரணமாகும் ஆகமங்கள் முந்தையறிவின் றொடர்ச்சியினால் மலர்தல் என்றது முன் வாசனையினால் ஆகம அறிவு வளர்ந்து வெளிப்பட்டு விளங்குதல் குறித்தது "வாதனையால் முப்பொழுதும் பூநீர் கொண்டு வைகல் மறவாது வாழ்த்தி யேத்திக், காதன்மையாற் றொழுமடியார்" (கன்றாப்பூர் - 1) என்ற திருத்தாண்டகமும் காண்க

**முகைத்த மலரின் வாசம்போல்** - மலரில் வரும் மணம் முன்பு தோன்றாவிடினும் அரும்பினுள்ளே சூக்குமமாயுள்ளதென்க அரும்பில் வெளித் தோன்றாத மணம் மலரிலே தோன்றுதற்கு, முன் அங்கு அது இருந்ததுவே காரணமாகும் "இல்லது வாராது" என்பது உண்மையன்றோ ? அரும்பினில் மறைந்து நின்ற மணமும் நிறமும் மென்மையும், அரும்பு முற்றி மலர மலர நிறைவுற்று வெளிப்படத் தொடங்குவது போல அறிவின் முன்னைத் தொடர்ச்சியும் வந்தது என்றபடி.

**சிந்தைமலர உடன்மலரும் செவ்வி உணர்வு** - சிந்தை - உட்கரண நான்கனுள் ஒன்று **சிந்தைமலர உடன்மலர்தல்** - சிந்தை விரிய அதனைச் சார்ந்துநின்ற அறிவும் நுண்ணிதாய் ஒடுங்கியிருந்த முன்னை நிலையினின்றும் விரிவடைதல் "சிந்தைமலர்ந் தெழுமுணர்வாற் செழுங்கலையின் றிறங்களெல்லா, முந்தைமுறை மையிற்பயின்று" (திருநா - புரா - 21) என்றதும் காண்க **செவ்வி** - பக்குவம் - ஏற்ற காலம். மலரும் செவ்வி" - (முருகா புரா - 7) பக்குவமாவது "கொளுத்துவதன் முன் கொண் டமைந்து, அலகிலையின் பொருட்கெல்லை யாடுங் கழலே எனத் தெளி"யும் தகுதியுடைமை இவ்வுணர்வு சிவஞானம் என்ப மறைகள் உட்பட ஆகமங்களின் உணர்வுநிறைந்த அறிவு மலர்தலால் சிவதத்துவ விளக்கத்துக்குச் சாதனமாகிய சிவஞானம் வெளிப்படலாயிற்று என்பது கருத்து "பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோற், சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது" என்ற திருமந்திரக் கருத்து இப்பாட்டில் விளக்க முறுதல் காண்க **சிறந்தது** - வெளிப்பட்டு விளங்கிற்று **ஆல்**-அசை

**முகைக்கு மலரின்**—என்பதும் பாடம் 13

1219. நிகழு முறைமை யாண்டேழு நிரம்பும் பருவம் வந்தெய்தப்
புகழும் பெருமை யுபநயனப் பொருவில் சடங்கு முடித்தறிவி
னிகழு நெறிய வல்லாத வெல்லா மியைந்த வெணிலுந்தந்
திகழு மரபி னோதுவிக்குஞ் செய்கை பயந்தார் செய்வித்தார். ௧௭

(இ - ள்) வெளிப்படை வயது நிகழ்ந்துவரும் முறைமையில் ஏழு ஆண்டுகளும் நிரம்பும் பருவம் வந்து பொருந்தப், புகழும் பெருமையையுடைய உபநயனம் என்கின்ற ஒப்பற்ற சடங்கினை முடித்ததற்பின், இகழப்படும் நெறியையுடையனவல்லாத எல்லா மும் அவரறிவினிடத்தே பொருந்தியிருந்தன எனினும், அவரைப் பெற்றவர்கள், தமது விளக்கமுடைய மரபின் வழக்கின்படி வேதமோதுவிக்கும் செய்கையைச் செய் வித்தனர்.

(வி - ரை) நிகழும் முறைமை - நாளும் மாதமுமாக ஆண்டுகள் ஏறிச் செல்லும் முறையிலே முன்பாட்டில் அவர்க்கு ஐந்தாண்டுகளின் பருவ நிகழ்ச்சியும், இப்பாட் டால் ஏழு ஆண்டுகளின் பருவ நிகழ்ச்சியும் கூறப்பட்டன. ஐந்து ஆண்டுகளின் பருவம் ஒருவனுக்கு உணர்வு தொடங்கி வெளிப்படும் பருவம் என்ப "பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாம்" என்ற அற்புதத்திருவந்தாதிக்குப் "பிறந்துணர்வு தொடங்கியபின்" (காரைக் - புரா - 3) என்று ஆசிரியர் உரை செய்தது காண்க. "ஐந்தில் வளையாதது ஐம்பதில் விளையுமா" என்ற முதுமொழிக் கருத்தும் காண்க.

உபநயனப் போருவில் சடங்கு - உபநயனம் - அந்தணர் முதலாகிய முதல் மூன்று வருணத்தார்க்கும் சிறப்பாயுரியதாய ஏழு வயதளவில் நடைபெறவேண்டுவ தோர் சடங்கு பிள்ளைக்குப் பஞ்சசிகை வைத்தும், மான்றோலுடன் முந்நூலணிவித்தும், பிரமமந்திரோபதேசம் செய்தும் பிரமசரியமாகிய முதல் நிலையில் நிறுத்துதல் போரு வில் சடங்கு என்றது இதனால் அப்பிள்ளை இரு பிறப்பாளனாகிய நிலையைப் பெறும் அருமைப்பாடு குறித்தது "உபநயன முறைமை யாகும் இருபிறப்பி னிலைமையினைச் சடங்கு காட்டி" (திருஞான - புரா - 264) என்றது பார்க்க. உபநயனம் - சேர்ந் தாகிய மற்றொரு கண் என்பது பதப்பொருள் (உப - அணுக, நயனம் - நடத்து தல், இறைவனை அணுக அடையச் செய்தல் என்றலுமாம். நீ - நய் - நட - என்பது பகுதி) மந்திரோபதேசத்தால் ஞானக்கண் திறக்கப்படுதல் என்பதாம். சிவதத்துவ விளக்கத்துக் கேதுவாகிய ஞானம் மூன்றுவது கண் என்ப. மான்றோலும், முஞ்சி யரைஞாணும், பஞ்ச சிகையும் முதலிய பிரமசரிய அடையாளங்களும் இக்கருத்தே பற்றியன. சிவனே பிரமம், சிவனை அறிகின்றவன் அவருடைய அடையாளங்களைத் தாங்கிச் சரித்தல்வேண்டும். ஐந்து முகங்களுடைமையால் பஞ்சசிகை சிவன்தடை யாளம், மூன்றுவது கண் சிவனுக்குரியது. 507, 508, 509 பாட்டுக்களில் உரைத்த வையும் பார்க்க. "முந்நூலணியும் கலியாணம்" (வெள் - சரு - 6) என்பதும் காண்க. எனவே, சைவ மரபில் நிற்பவர்க்கன்றி ஏனைப் பாஞ்சராத்திரிகள், துவைதமார்க்கத்த வர், ஏகான்மவாதிகள் முதலியோரிடத்து உபநயனம் என்பது உரிய பொருளின்றிப் போதலும், சைவமே எல்லாவற்றையும் உள்ளடக்கியதென்பதும் அதனாற் போதரு தலும் உய்த்துணர்ந்துகொள்க.

இகழும் நேறிய அல்லாத எல்லாம் - அறிவோரால் இகழ்ந்து விலக்கப்படாத எல்லா நூலறிவும்.

இயைந்த எனினும் - ஓதுவிக்கும் செய்கை - செய்வித்தார் - அறிவின்கட் சிறப்பு முன்னரே பொருந்தியிருப்பினும், உபநயனச் சடங்கு முடித்ததுபோலவே, வேத மோதும் பயிற்சியையும் சடங்காகவே செய்வித்தனர் என்க. ஓதுவிக்கும் செய்கை - வேதம் பயில்வித்தல் - கனம் சடை முதலாக வேதம்பயிலும் செயல். "தாம்பாடிய சாமங் கணிப்போர்" (1210), "ஓது கிடையி னுடன்போவார்" (1222), "சமிதை யுடன்மேல் எரிகொண்டு" (1232) என்றவை வேதம் பயிலுதல் குறித்தன. மறைய வர்க்குரிய அறுதொழில்களுள் "ஓதல்", "ஓதுவித்தல்" என்பன வேதம் ஓதுவத னையே குறிப்பன. இதனை வேத அத்தியயனம் என்பது வழக்கு.

**பயந்தார்** - இவரது அறிவு விளக்க நிலைக்கு ஏற்ற வேதப்பயிற்சி எவ்வாறு செய்யத்தகுவது எனவும், எவ்வாறாயினும் மரபுநிலை வழுவாது செய்வித்தல் வேண்டும் எனவும் எழுந்த அச்சத்துடன் செய்வித்தார் என்ற குறிப்பும் காண்க "உலகிறந்த சிவஞான முணரப்பெற்றார், தொல்லைமுறை விதிச்சடங்கு மறையோர் செய்ய" (263) என்றும், "ஒருபிறப்பு மெய்தாமை யுடையார் தம்மை யுலகியல்பி லுபநயந முறைமை யாதும், இருபிறப்பி னிலைமையினைச் சடங்கு காட்டி யெய்துவிக்கு மறை முனிவர்" (264) என்றும் வரும் ஆளுடையபிள்ளையார் புராணமுங் காண்க.

**சடங்கு முடித்து - ஓதுவிக்கும் செய்கை - செய்வித்தார்** - பயந்தார், சடங்கு தாமே முடித்தும், ஓதுவித்தல் பிறரால் செய்வித்தும் இயற்றினார் என்பது குறிப்பு தந்தையே குருவாயிருந்து பிரமோபதேசம் செய்யுடி வழக்கும் காண்க 14

1220. குலவு மறையும் பலகலையுங் கொளுத்துவதன்முன் கொண்டமைந்து
நிலவு முணர்வின் றிறங்கண்டு நிறுவு மறையோ ரதிசயத்தார்;
"அலகில் கலையின் பொருட்கெல்லை யாடுங் கழலே" யெனக்கொண்ட
செலவு மிகுந்த சிந்தையினிற் றெளிந்தார் சிறிய பெருந்தகையார். கடு

(இ - ள்) வெளிப்படை. அறிவு விளங்குதற்கு ஏதுவாகிய மறைகளையும் அவைகளை உள்ளிட்ட பல கலைகளையும் ஆசிரியர்கள் கொளுத்துவதன் முன்னே தமது உள்ளத்திற் கொண்டு அமைந்து நிலவுகின்ற அறிவின் திறத்தினைக்கண்டு, போதிக்கின்ற ஆசிரியர்கள் அதிசயித்தனர் அளவில்லாத கலைகளினாற் குறிக்கப்படும் பொருளுக்கெல்லாம் எல்லையாயுள்ள பொருள் அருட்பெருங் கூத்தியற்றும் திருவடியேயாம் என்று கொண்ட உறுதிமிக்க தமது சிந்தையினாலே அந்தச் சிறிய பெருந்தகையார் தெளிந்து கொண்டனர்.

(வி - ரை) **குலவும்** என்ற பெயரெச்சம் மறை என்னும் ஏதுப்பெயர் கொண்டது அறிவு எனக் குலவுதற்கு வினைமுதல் வருவித்துரைக்க "குலாத்தில்லை யாண்டான" (திருவாசகம்), "கூனுங் குருடுந் தீர்த்தே வல் கொள்வார் குலவு மலர்ப்பாதம்" (கூற்றுவர் - புராணம் - 9), "குலாவு பாதம் விளக்கியே" (443) முதலியவை பார்க்க.

**கொளுத்துதல்** - கொள்ளச் செய்தல் சொல்லுதல் என்ப தீக்கொளுத்து என்ற பொருளில் பெரும்பாலும் வழங்கும் இச்சொல் தீயைக் கொள்ளச் செய்தல் என்ற பொருளில் வருவதாம் இங்கும் அறிவாகிய தீயைக்கொளுவி அறியாமையைப் போக்குதல் என்ற குறிப்பும் காணப்படும்

**கொண்டு அமைந்து அறிவின் நிலவும் திறம்** - "முந்தை யறிவின் தொடர்ச்சியினால் முகைத்த மலரின் வாசம்போல" (1218) என்ற தன்மை.

**முன்** - முன்னரே ஏகாரம் தொக்கது இவ்வாறு முற்பிறப்பிற் கற்ற கலவியறிவு, இப்பிறவியில் கலைபயில்வதன் முன்பே சில மக்களிடை விளங்குதல் இந்நாளிலும் அரிதின் காணப்படுவதறிக.

**நிறுவும் மறையோர்** - ஓதுவிக்கும் ஆசிரியராகிய பிராமணர்கள். **நிறுவுதல்** - கலைப்பயிற்சியை உணர்வினுள் நிற்கச்செய்தல்.

**அதிசயித்தார்** - அதிசயமாவது காரணம் இன்னதென்றறியுமாறு கண்கூடாகக் கண்ட பெருமித உணர்ச்சி, "அதிசயம் கண்டாமே" (திருவாசகம்) இது போதித்த ஆசிரியர்களது மனநிலை

**தெளிந்தார்** - இது போதிக்கப்பெற்ற மாணவராகிய விசாரசருமரின் மனநிலை "ஓது கிடைசூழ் சிறுவர்களும் உதவும் பெருமை யாசானும்" (1207) என்றபடி ஆசா

னும மாணவரும ஒரு சேரக காண நிறபவாகளாதலின இருவரது மனநிலைகளும ஒரு பாட்டில ஒரு சேரக கூறிய இயைபு காணக

அலகில் கலையின் பொருட்கு எல்லை ஆடும் கழலே என - இது எலலாக கலை களாலும முடிவாகக கொணட துணிபு எவவகைககலையும ஓரோா பொருளை நிசச யிபபன, ஆதலின எலலாககலைகளாலும நிசசயிககபபடும எலலாப பொருளகளும முடிநத இடம திருவடி எனக முடிநத இடமாவது அவை யாவும போயச சோநது அதறகுமேல இனனதெனறறிய முடியாது ஓயநது நிறகும இடம எனபதாம "உல குயய நடமாடு, மெலலையினைத தலைபபடடாா யாவாகளுங கணடிலராால" (1075) என றது காணக "பாதாள மேழினுஙகீழ சொறகழிவு பாதமலா, போதாா புனைமுடியு மெலலாப பொருண முடிபே" (திருவெமபாவை - 10) எனற திருவாசகஙகளும இக கருததுப பறறியன கறறதனாலாய பயன நறறாள தொழுதல எனபது திருககுறட கருததுமாம

எனச் சிநதையினில் - தெளிநதார் - எனறு கூடடுக கொண்ட செலவு மிகுந்த சிநதை - முனனரே உடகொணட உணாசசி போநதிருநத சிநதை செலவு - செலலுதல செலவு மிகுதலாவது "அறிவின, எலலாமியைநத" (1219) எனற கருதது, அதாவது உறைபபு முறறியிருததல

தெளிநதார் - ஐயமினறித துணிநதாா "உளளததின ஒருமை நினைவால" (1242), "கருததின றிடநோ நிறகும" (1221), "ஒனறு முளளத துணமையினால" (1252), "மணடு காத லருசசனையில வைததாா மறறொன றறிநதிலராால" (1255) எனப பின்வருவன காணக

சிறிய பெருநதகையார் - முரணதொடை சிறுமை பருவததாலும உருவததா லும, பெருநதகைமை - உளளததின உயாவாலும ஆகும "அசசிறிய பெருநதகை யாா" (திருஞான - புரா - 73) எனறு இவவாறே ஆளுடைய பிளளையாரைக கூறு தலும காணக 15

1221. "நடமே புரியுஞ சேவடியாா நம்மை யுடையா" ரெனுமெயமமை
யுடனே தோனறு முணாவினக ஞெழியா தூறும் வழியன்பின்
கடனே யியல்பாய முயறறிவருங காதன் மேனமே லெழுஙகருததின்
றிடநோ நிறகுஞ செமமலாா திகழுநாளி லாஙகொருநாள, கசு

1222. ஓது கிடையி னுடனபோவா, ரூராா னிரையி னுடனபுகக
போது, மறறங கொருபுனிறறு போறறு மவனமேன மருபபோசச,
யாது மொனறுங கூசாதே யெடுதத கோலகொண டவனபுடைபப,
மீது சென்று மிகும்பரிவால வெகுணடு, விலககி, மெயயுணாநது, கஎ

1223. பாவுங கலைக ளாகமநூற பரபபின றொகுதிப பானமையினை
மேவும பெருமை யருமறைகண மூலமாக விளஙகுலகில
யாவுந தெளிநத பொருணிலையே யெயத வுணாநத வுள்ளததா
லாவின் பெருமை யுளளபடி யறிநதா ராயற கருளசெயவாா, கஅ

1224. "தஙகு மகில யோனிகடகு மேலாம் பெருமைத தகைமையன;
பொஙகு புனித தீாத்தஙக ளெலலா மெனறும் பொருநதுவன,
துஙக வமராா திருமுனிவா கணங்கள சூழநது பிரியாத
அஙக மனைததுந தாமுடைய வலல வோஙக லானினஙகள !, கக

1225. "ஆய சிறப்பி னாற்பெற்ற வன்றே மன்று ணடம்புரியு
நாய னார்க்கு வளர்மதியு நதியு நகுவெண் டலைத்தொடையு
மேய வேணித் திருமுடிமேல் விரும்பி யாடி யருளுதற்குத்
தூய திருமஞ் சனமைந்து மளிக்கு முரிமைச் சுரபிகடாம்; ௨௦

1226. "சீல முடைய கோக்குலங்கள் சிறக்குந் தகைமைத் தேவருடன்
கால முழுது முலகனைத்துங் காக்கு முதற்கா ரணராகு
நீல கண்டர் செய்யசடை நிருத்தர் சாத்து நீறுதரு
மூல மவர்தா ரஞ்செய்யு மூர்த்த மென்றா லமுடிவென்னோ?; ௨௧

1227. "உள்ளுந் தகைமை யினிப்பிறவே றுளவே! யுலகமான மறிக்கன்று
துள்ளுங் கரத்தா ரணிபணியின் சூடாசூழ மணிகள் சுரநதிசீர்
தெள்ளுஞ் சடையார் தேவர்கடம் பிராட்டி யுடனே சேரமிசைக்
கொள்ளுஞ் சினமால் விடைத்தேவர் குலமன் றேவிச் சுரபிகுலம்?"

1228. என்றின் னனவே பலவுநினைந், "தித்தின் வழியே மேய்த்திந்தக்
கன்று பயிலா நிரைகாக்கு மிதன்மே லில்லை கடன், இதுவே
மன்று ளாடுஞ் சேவடிகள் வழுத்து நெறியா வது" மென்று
நின்ற வாயன் றனைநோக்கி "நிரைமேய்ப் பொழிக நீ" யென்பார்,

1229 "யானே யினியிந் நிரைமேய்ப்ப" னென்றா, ரஞ்சி யிடைமகனுந்
தானே யிறைஞ்சி விட்டகன்றான், றாழு மறையோ ரிசைவினா
லானே நெருங்கும் பேராய மளிப்பா ராகிப், பைங்கூழ்க்கு
வானே யென்ன நிரைகாக்க வந்தார் தெய்வ மறைச்சிறுவர். ௨௪

1221 (இ - ள்) வெளிப்படை "அருட்கூத்தையே இயற்றும் திருவடியினை யுடையவர் நம்மை உடைய தலைவராவர்" என்னும் உண்மை எண்ணுந்தோறும் உடனே தோன்றும் உணர்வினுள் ஒழியாமல் ஊறுவதாகிய அன்பின் வழியே கடமையாக இயல்பாய முயற்சி செய்யும்படி வருகின்ற காதலானது மேன்மேல் எழுகின்ற கருத்தின் உறுதி பிறழாமல் நோக்கிறக்கும் செம்மலார் இவ்வாறு விளங்குகின்ற நாட்களில் ஆங்கு ஒரு நாளில், ௧௬

1222 (இ - ள்) வெளிப்படை வேதமோதும் மாணவர் கூட்டத்தினுடன் போகின்றவர், ஊரவருடைய ஆனிரையினுடன் போயினபோது, அவற்றுள் ஈன்றணியதொரு பசுத் தன்னை மேய்ப்பவன்மேல் கொம்பினால் முட்டச்செல்ல, ஒரு சிறிதும் கூசாமல் எடுத்த கோலினால் அவன் அதனைப் புடைக்க, அதுகண்டு, மேற்சென்று, மிகும் அன்பினாலே சினந்து, அவன் செய்கையை விலக்கி, உண்மையினை உணர்ந்தாராய், ௧௭

1223. (இ - ள்) வெளிப்படை பரந்த கலைகளும், ஆகம நூல்களின் பரந்த தொகுதியும், உண்மைப்பகுதியினால் பெருமை பொருந்திய அரிய வேதங்களும், ஆகிய இவைகளின் மூலமாக, விளங்கும் உலகத்தில், எல்லாந் தெளிந்துணர்ந்த பொருளினைத் தெளிய உணர்ந்த உள்ளத்தினால், பசுக்களின் பெருமையினை உள்ளபடியே அறிந்தாராகி, விசாரசருமனார், ஆயனுக்கு அருள்புரிவாராய், ௧௮

1224 (இ - ள்) வெளிப்படை "(உயிர்கள் தங்கும்) எல்லா யோனிகளுக்கும் மேலாகிய பெருமைத்தன்மையுடையன, பொங்குகின்ற தூய தீர்த்தங்கள் எல்லாம் என்றும் பொருந்தப்பெற்றன. பெருமையுடைய தேவர்களும் முனிவர் கூட்டமு

களும் சூழ்ந்து இருக்கை கொண்டு பிரியாத அங்கங்களையும் உடையன ஆனினங்கள் அல்லவோ ?, கக

1225 (இ - ள்) வெளிப்படை "ஆய சிறப்பினாலே என்ற அன்றைக்கே, திருவம்பலத்தில் நடம்புரிகின்ற நாயனாருக்கு, வளர் பிறையும், கங்கையும், வெள்ளிய நகுதலை மாலையும் பொருந்திய சடையுடைய திருமுடியின் மேல், அவர் விரும்பி ஆடியருளுதற்குத் தூய திருமஞ்சனமாகிய ஆனைந்தினையும் அந்த உரிமையுடைய பசுக்கள் கொடுப்பனவாகும், உ0

1226 (இ - ள்) வெளிப்படை "சிறப்பார்ந்த தன்மையுடைய தேவரோடு கால முழுதும் எல்லா உலகங்களையும் காக்கின்ற முதற் காரணராகும் திருநீலகண்டராகிய சிவந்த சடையினையுடைய திருக்கூத்துடைய பெருமான் சாத்தும் திருநீற்றைத் தருகின்ற கோமயம் என்னப்படும் மூலத்தினைத் தருகின்ற மூர்த்தங்கள் சீலமுடைய இந்தப் பசுக்களேயாகும் என்றால் முடிவு வேறு என்ன உள்ளது ? உக

1227 (இ - ள்) வெளிப்படை "நினைக்கத்தக்க தன்மை இன்பப் பிற வேறும் உளவாமோ ? உமைமான் மறிக்கன்று துள்ளியாடுதற்கிடமாகிய திருக்கரத்தினையுடையவரும், அணியும் பாம்புகளின் ஒளிசூழ் மணிகளைக் கங்கை நீரானது தெளிகின்ற சடையினையுடையவரும் ஆகிய சிவபெருமான் தேவர்கள்தம் பெருமாட்டியுடனே சேரமிசைக் கொள்ளும்படியான சினமால் விடைத் தேவரின் குலமல்லவா இந்தப் பசுக்குலம் ?", உஉ

1228 (இ - ள்) வெளிப்படை என்று இவ்வகையாகிய பல எண்ணங்களையும் எண்ணிக், "கன்றுகளுடன் கூடிய ஆனிரைகளை இன்பந்தரும் வழியே மேய்த்துக் காக்கின்ற இதனின் மேல் செய்யத்தக்க கடமை வேறில்லை, இதுவே அம்பலக் கூத்தரது திருவடிகளைப் போற்றும் நெறியுமாம்" என்று கொண்டு, எதிர் நின்ற ஆயனை நோக்கி, "நீ இந் நிரைமேய்க்கும் தொழிலை ஒழிக" என்று சொல்லி, உங

1229. (இ - ள்) வெளிப்படை "இனி இந்நிரையினை யானே மேய்ப்பேன்" என்றார், இடைமகனும் பயந்து அவர் முன் வணங்கி, மேய்த்தற் றொழிலை விட்டு நீங்கினன், தாமும் மறையோர் இசைவு பெற்று ஆக்களை நெருங்கும் பேராயத்தினைக் காப்பாராகிப், பசிய பயிர்களுக்கு மழையே போலப், பசுக் கூட்டங்களைக் காக்கத் தெய்வ மறைச்சிறுவர் முற்பட்டுவந்தனர் உச

இந்த ஒன்பது பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன

1221 (வி - ரை) **நடமே** - ஆனந்தக் கூத்தினையே **நடமே புரியும் சேவடி** - தூக்கிய திருவடி, இடது திருவடி முத்தி கொடுப்பது அத்திருவடியே யாதலின் அதனை உடையார் **நம்மை உடையார்** என்றார்

**மெய்ம்மை** - உண்மை உணர்த்தும் நூல்களாகிய வேத சிவாகமங்களின் துணிபு

**நம்மை உடையார்** - உடையவர் - (பதி), அவரது உடைமைப் பொருள்கள் (உயிர்கள் - பசுக்கள்), அவை உடையானை யறிந்து அடைந்து இன்புற வொட்டாது அவற்றைக் கட்டிய பாசம், அப்பர் சத்தின் வலிபோக்கி இன்பமளிக்க அவர் செய்யும் அருள், என்ற இவ்வளவும் இதனாற் பெறப்படுமெனக்

**உடனே தோன்றும் உணர்வின்கண்** - மேற்கூறிய மெய்ப்பொருணிச்சயமாகிய துணிபுகள் எல்லாம் ஒருங்கே, **நடமேபுரியும் சேவடியார்** என்று உணர்ந்த அப்பொழுதே, ஒருங்கே, உணர்விற்றோன்றுவனவாகும் என்பது

**உணர்வின் ஒழியாது ஊறும் வழி அன்பு** - அன்பு இடையறாது ஊற்றெடுத்து வழிவழி வருதற்குக் காரணம் உணர்வில் மேற்கூறிய துணிபுகள் எல்லாம் உடன்

தோன்றுவதேயாகும் என்பார் அதனை உணர்வு என்பதனோடு உடம்பொடு புணர்த்தி ஓதினார் **வழி அன்பு** - முன்னைப் பிறவியிலிருந்து தொடர்ந்து பரம்பரையில் இடையறாது வரும் அன்பு "முந்தை யறிவின் றொடர்ச்சியினால் சிந்தை மலர உடன் மலரும் செவ்வி யுணர்வு" (1218) என்றது காண்க **ஒழியாது** - இடையறாது

**அன்பின் கடனே இயல்பாய் முயற்றிவரும் காதல்** - அன்பினால் கடமையாகச் செய்யும் செயலினாலே, செயற்கையானன்றி இயல்பினாலே எழும் முயற்சியாக விளைவிக்கப்படும் காதல் **முயற்றுதல்** - ஊக்கப்படுத்துதல்

**கருத்தின் திடம் நேர்நிற்கும்** - காதல் கருத்தில் மேன்மேல் எழப், பின்னர் மாறாது அதனில் ஒன்றித்து உறைத்துநிற்கும் **நேர் நிற்கும் செம்மலார்** - கருத்தின் திடத்திலே உறைப்புடன் நிற்கும் பெரியார் - மனம் இறைவனிடமாகப் பதிந்து கொண்டவர் "மண்டுகாதல் லருச்சனையின் வைத்தார் மற்றொன் றறிந்திலரால்" (1254), "வேறுணரார்" (1255) என்று பின்வருவன இந்த மன நிலையினை வெளிப்படுத்துதல் காண்க **செம்மல்** - பெருமையுடையார் "பெருந்தோன்றலார்", "மேலாம் பெரியோர்" என்பன இக்கருத்தையே தொடர்ந்து புலப்படுத்துவன

**திகழுநாளில்** - இவ்வாறு கருத்தின் திடம் நோக்கின்று விளங்கும் நாள்களில்

**ஆங்கு ஒருநாள்** - ஆங்கு என்ற முதனீண்ட சுட்டும், ஒரு என்ற அடையும் அந்நாளினது சிறப்பை யுணர்த்துவன அந்நாளின் நிகழ்ச்சிகள் மேல் 1229-ம் பாட்டில் உரைக்கப்படுவன அவற்றின் பயனாக விசாரசருமனார் ஆனிரை மேய்த்து, மணலால் இலிங்கந் தாபித்துப், பாலால் திருமஞ்சனமாட்டி, அதனால் சிவனது திருமகனாராகி, உயிர்களுக்குச் சிவபூசைப் பயனைக் கொடுத்தருளியிருக்கப் பெற்றனராதலின் இவ்வாறு சிறப்பித்தனர் என்பதாம் **ஒருநாள்** என்ற தொடக்கம் **நிரைகாக்க வந்தார்** (1229) என்றதனுடன் முடிவுபெறுகின்றது

**செம்மலார்** - ஒருநாள் (1221) - நிரையிடன் புகக்போது - ஆ - ஓச்ச, - அவன் புடைப்ப, - வெகுண்டு - விலக்கி - உணர்ந்து (1222) - அறிந்தார்(ராய்) - அருள்செய்வார் (1223) - "ஆனினங்கள் - தகைமையன, - பொருந்துவன - உடைய அல்லவோ? (1224), - ஐந்தும் அளிக்கும் (1225), மூர்த்தம் (1226), விடைத்தேவர் குலமன்றே? (1227)," என்று - பலவும் நினைந்து, - "இதன்மேலில்லை கடன், - இதுவே வழுத்து நெறியாவதும்" என்று, - ஆயன்றனை நோக்கி - "நிரைமேய்ப்பு ஒழிக நீ" என்பார் (1228) - "இனியானே மேய்ப்பன்" என்றார், இடைமகனும் அகன்றான், இசைவினால் - நிரை காக்க - மறைச்சிறுவர் - வந்தார் (1229) என்று மேல்வரும் பாட்டுக்களுடன் கூட்டி இந்த ஒன்பது பாட்டுக்களையும் தொடர்ந்து முடித்துக்கொள்க 16

1222 (வி - ரை) **ஓதுகிடை** - வேதமோதும் மாணவர் கூட்டம் 1208 பார்க்க.

**ஊர் ஆன் நிரையின் - உடன்புக்க போது**-வேதம்பயிலும் மடங்களும் வேள்விச் சாலைகளும் ஊர்ப் புறத்தே உள்ளனவாதலின் ஊரினின்றும் வேதம் பயில்வதற்காக உரியநேரத்திற் புறப்பட்டுத் தெருவழியே வேத மாணவர் கூட்டம் செல்வதாம் அந்நேரத்தில் ஊர் ஆனிரையும் காலையில், மனைகளில், பால் தந்தபின் மேய்வதற்கு மண்ணியாற்றின் கரைப்புறவுக்குச் செல்வன ஆதலின் **உடன்புக்கபோது** என்றார்

**புனிற்று ஆ** - ஈன்றணிய பசுவாதலின் கன்றைப்பிரிய மனமின்றி மேய்க்கக் கொண்டுபோகும் இடையன்மேல் மருப்பு ஓச்சிற்றுப் போலும் **போற்றும் அவன்** - மேய்க்கும் இடைமகன் **மருப்பு ஓச்சுதல்** - கொம்பினை அசைத்து முட்டச் செல்லுதல் **மருப்பு ஓச்ச** என்றதற்கு கோபத்தினால் முட்ட என்றுரைத்தனர் முன் உரைகாரர். "கடிதோச்சி மெல்ல எறிக", "கைச்சிறிய தொருமாறு கொண்டோச்ச"

(திருஞான - புரா - 73) என்ற இடங்களிற் போல் ஈண்டும், ஒச்ச - முட்டுதற்குச் செல் என்றல் பொருந்தும் கொம்பினை அசைத்து முயன்றேயன்றி முட்டிப் பிழை செய்யாதிருக்க இடைமகன் புடைத்தான் எனக்

**யாதும் ஒன்றும் கூசாதே** 1224—1227 பாட்டுக்களிற் கூறியபடிக்குள்ள பெருமைகளில் எதையும் ஒரு சிறிதும் உணராமலும், பசுவைக் கருணையின்றிக் கோல் கொண்டு புடைத்தலைப்பற்றி ஒரு சிறிதும் அஞ்சாமலும் **கூசுதல்** - தகாத செயல் செய்ய அஞ்சுதல்

**மெய்யுணர்ந்து** - உள்ளத்தினுள் எழுகின்ற வுணர்ச்சியினால் உண்மையை அறிந்து மேல்வரும் பாட்டில் **எய்த உணர்ந்த உள்ளத்தால்** என்றது வேத ஆகமநூல் உணர்ச்சி குறித்தது மெய்யுணர்ந்து, (அதன் மேல்) மறைகள் மூலமாக உணர்ந்த உள்ளத்தால் என்று கூட்டிக் கொள்க 17

1223. (வி - ரை) **பாவும் கலைகள்** - மிகப்பரந்துகிடக்கும் எல்லாக் கலைகளும் அளவிடமுடியாத கலைஞானங்களைக் குறித்தது

**ஆகமநூற் பரப்பின் தொகுதி** - மூலாகமங்கள் உபாகமங்கள் என்ற இவை பல வற்றின் தொகுதி **தொகுதி** - என்றதனால் ஆகமங்கள் பலவாகிப் பரந்திருப்பினும் அவை கூறும் முடிந்த பொருள்களில் ஒற்றுமையுடையன என்பதும், ஆவின் பெருமையினை ஒன்று போலவே எல்லா ஆகமங்களும் கூறுவன என்பதும் ஆம்

**அருமறைகள்** - ஆகமங்களேயன்றி வேதங்களும் ஆவின் பெருமை கூறுவன

**மூலமாக** - ஏதுவாகக் கொண்டு கலைகளும் ஆகமங்களும் மறைகளும் என்னு மிவற்றை ஏதுவாகக் கொண்டு **யாவுந் தெளிந்த** எனக் எண்ணும்மைகள் தொக்கன இது நூல்வழியால் தெளிந்த உணர்வு

**யாவும் தெளிந்த உள்ளம்** - பதிமுது நிலை - உயிரவை நிலை - இருணமலநிலை - அருளது நிலை என்ற பொருணிலை யெல்லாம் தெளிய உணர்ந்து கொண்டமைந்த உணர்ச்சியினையுடைய உள்ளம் "நடமே புரியும் சேவடியார் நம்மை உடையார் எனும் மெய்ம்மை" (1221) என்றதும் ஆண்டுரைத்தவையும் பார்க்க.

**பெருமை உள்ளபடி அறிந்தார்** - உள்ளபடியினை - வகையினை - அறிந்தாராதலின் படி - படியை - வகையை இரண்டனுருபு தொக்கது உள்ளவாறு - உண்மையாக என்றுரைப்பினுமாம்

**அருள் செய்வார்** - செய்வாராகி செய்வார் - "நிரைமேய்ப்பொழிக நீ (1228) - யானே - மேய்ப்பேன்" என்றார் (1229) என்று மேல்வரும் பாட்டுக்களுடன் முடிக்க

மேலே 1224 - 1227-ல் வருவனவும், "இன்ன பலவும்" (1228) விசாரசருமனார் தம் மனத்துள்ளே நினைந்து துணிந்து கொண்ட முடிபுகள்

பொருளினிலை யெய்த—என்பதும் பாடம் 18

1224 (வி - ரை) **தங்கும் அகில யோனிகட்கும் மேலாம் பெருமை** - **தங்கும்** - உயிர்கள் இவ்வுலகிற் பிறவி எடுத்து வரும்போது தங்கும் எனக் **அகில யோனிகட்கும்** - எல்லாவிதமான யோனி பேதங்களுள்ளும் **மேலாம் பெருமை** - உயர்வுடையதாகிய பெருமை **யோனி பேதம்** என்பது உடல் எடுக்கும் பிறவி வகை அவை எண்பத்து நான்கு இலக்கம் என்ப "உரைசேரு மெண்பத்து நான்குநூ றாயிரமாம் யோனி பேதம்" (திருவீழிமிழலை - மேகராக - 4) என்றது ஆளுடையபிள்ளையார் தேவாரம் இவை எல்லாவற்றுள்ளும் மேன்மையுடையன ஆவின் பிறவியே என்பது

**புனித தீர்த்தங்கள்** - **புனிதம்** - தூய்மை தூய்மை செய்யும் தீர்த்தங்கள். 1155-ல் உரைத்தவை பார்க்க.

**எல்லாம்** - *கஙகை, யமுனை முதலிய எழு பெருநதீாததஙகளும, அவறறையும் புனிதமாககும மாமக தீாததமும, இனனும இவை போலவனவும ஆகிய எலலாமும. முறறுமமை தொகக்து*

**என்றும்** - *எலலாக காலஙகளிலும.*

**துங்க அமரர்** - *பிரமன - விடடுணு - வருணன - அககினி முதலிய பெருந தேவாகள.* **கணங்கள்** - *சிவகணஙகள*

**சூழ்ந்து பிரியாத அங்கம் அனைத்தும்** - *அமரா முதலினோ ஆனினஙகளின ஒவவோா அஙகததினும பொருநதி அஙகு நினறும அகலாது வாழநதுளளாாகள எனபது*

**நல்** - *உயிாகளுககு நனமை செயகினற அதறகாகவே பிறநதவை ஆனினங கள எனபதாகும*

*பசுககளின உறுபபுககளில தேவாகளும முனிவாகளும தீாததஙகளும இருதத லாவது பிரமனும விடடுணுவும, பசுவின கொமபினடியிலும, கோதாவிரி முதலிய தீாத தஙகளும சராசரமும கொமபினுனியிலும இருபபா சிவபெருமான சிரசிலும உமா தேவியாா நடு நெறறியிலும முருககககடவுள நாசி நுனியிலும வீறறிருபபா உண ணுசியில திககுப பாலகாகள - செவிகளில அசுவினி தேவாகள - கணகளில சநதிர சூரியாகள - தநததததில வாயு - நாவில வருணன - இருதயததில சரசுவதி - கபோ லததில இயமனும இயககாகளும - உதடடில காலை நணபகல மாலை எனனும மூனறு காலததுககுமுரிய அதிதெயவஙகள - கழுததில இநதிரன - முசிபபில (இடை) அருககதேவா - மாாபில சாததியா - நானகு காலகளில அநிலவாயு - முழஙகாலில மருததுககள - குளமபினுனியில நாகலோகததாா - குளமபினடுவில கநதருவா - மேற குளமபில தேவமாதாகள - முதுகில உருததிரா - சநதுகளில எண வசுககள - அரைப பரபபில பிதிா தேவாகள - பகததில எழுகனனியா - குததததில திருமகள - அடி வாலில தேவாகள - வால மயிரில சூரியனொளி எனறிவவாறு தேவா முனிவா அந தநத அஙகஙகளிற சூழநது பிரியாதிருபபா* **கோசலத்தில் ஆகாய கங்கையும், கோமயத்தில் யமுனையும்** *இருபபா பூமிதேவி வயிறறினும, பெருஙகடலகள முலை யினும, காருகபததியம ஆகவனீயம தககிணககினி எனனும முததீயும வயிறு - இத யம - முகம எனனும மூவிடஙகளினும, யாகதொழில முழுவதும எலுமபிலும சுக கிலததிலும இருககும கறபுடையமாதாகள் எலலா அவயவஙகளிலும வசிபபாா என றிவவாறு கணடுகொளக இவை சிவதருமோததிரததினுள "வேதாவுங கரியவனு மாவினது கோடடடியின விளஙகி வாழவா" எனபது முதலாக ஆறு பாடடுககளால விரிததுக கூறபபடடுளளன*

*இபபாடடினால தூயஉடமபுடைமைபறறி ஆனினஙகளின சிறபபுககூறபபடடது*

**1225 (வி - ரை) ஆய சிறப்பு** - *இவவாறாகிய சிறபபு தூயவுடமபுடைமை யானாகிய சிறபபு*

**பெற்ற அன்றே** - *கனறினைபபெறற - ஈனற - பொழுதே ஈனற அனறே அளிப பினும திருமஞசனமைநதும ஆகமஙகளில விதிதத கால எலலையிற கொளளததககன எனப* **அன்றே** - *படைபபுக காலததிலே,* **பெற்ற** - *பெறறன எனறு கொணடுரைத தலுமாம.*

**நாயனார்** - *தலைவா - சிவபெருமான " மனறி னடமாடு, நாயனா ரெனறுரைபபோம நாம"* (கோயினானமணிமாலை - 13), *" அழகிது நாயனீரே "* (774) *முதலியவை பாாகக* இபபொருள *பறறியே, நமது தலைவாகளாந தனமை கொணடு நமமை ஆட கொணடருளும அடியாாபெருமககளை " நாயனாா " எனற வழககும போநதது.*

நதி - கங்கை நதுவெண் தலைத் தொகை - சிரமாலை என்பர் இவை ஊழிகளில் வீந்த பிரமவிட்டுணுக்களின் தலைகளைக் கோவைபோல அணிந்த மாலை "தலைமாலை தலைக்கணிந்து (திருஅங்கமாலை), "மூரல்வெண் சிரமாலை யுலாவிய தோன்றும்" (தாண்டகம் - பூவணம்) என்ற தேவாரங்களும் பிறவும் காண்க

ஆடி அருளுதல் - திருமஞ்சனமாடுதல் திருமஞ்சனம் ஐந்து - பசுவின் நெய் - பால் - தயிர் - கோமயம் - கோசலம் என்பன (916) பார்க்க இவை ஆனைந்து எனப்படும்

உரிமைச் சுரபிகள் - அந்த உரிமையுடைய ஆனினம் இவ்வுரிமை ஆனினங்களுக்கே இறைவனுற்றரப்பட்டுள்ளது என்பது குறிப்பு

உரிமை சுரபிகள் என்று பாடங்கொண்டும், ஆயசிறப்பினால் சுரபிகள் உரிமை பெற்ற அன்றே என்று கூட்டி அந்தச் சிறப்பினாலே சுரபிகள் உரிமை பெற்றனவன்றோ? என்று பொருள் கொள்வாருமுண்டு இப்பொருளில் ஏகாரம் வினாப் பொருளில் வந்ததென்ப

இப்பாட்டினால் ஆனைந்தின் சிறப்பும் தூய உடம்புடைமையும் பற்றிய பசுவின் சிறப்புக் கூறப்பட்டது. 20

1226 (வி - ரை) சீலம் - இங்குத் தூய்மை குறித்தது

சிறக்கும் தகைமைத் தேவருடன் - சிறப்பாகிய படைப்பு முதலிய தொழில்களைச் செய்யும் பெருந்தேவர்களோடு

தேவருடன் உலகனைத்தும் காக்கும் என்று கூட்டுக தேவர்களையும் மற்றும் எல்லா உயிர்களையும் காக்கின்ற

காலம் அனைத்தும் என்பது இடையில் நின்று தேவருடன் உலகனைத்தும் கால முழுதும் என்று கொண்டு கூட்டி யுரைக்கின்றது எல்லாக் காலங்களிலும் எல்லா உயிர்களையும் உலகங்களையும் காக்கின்ற எனக்

முதற்காரணர் என்பது தமக்கொரு முதல்வரில்லாத முழுமுதற் காரணர் என்ற பொருளில் வந்தது காக்கின்ற கடவுளரை யெல்லாம் தோற்றுவித்துக் காத்து இறுதியில் தன்னகத் தொடுக்கும் தன்மை பற்றிக் காக்கும் முதற்காரணர் என்றார் என்றலுமொன்று "படைப்போற் படைக்கும் பழையோன், காப்போற் காக்குங் கடவுள்" என்ற திருவாசகம் காண்க

சாத்தும் - அணியும் நீறு அணிந்து நிறப்பது சிவபெருமானது சிறப்புத் தன்மை நீறு - இறுதிக் காலத்திலும் அழியாமலிருப்பது இறைவன் திருமேனியில் தங்கும் திருநீறுகும் இங்குக் குறித்த நீறு இறைவர் திருமேனியில் அணிவதற்கு அடியார் பயன்படுத்துவது "வள்ளல் சாத்து மதுமலர் மாலையும் அள்ளு நீறும்" (31) என்றது காண்க

நீறுதரும் மூலம் - திருநீறு பெறுதற்கு ஆதாரமாயுள்ளது கோமயம் என்பர் பசுவின் சாணம்

மூலம் அவதாரம் செய்யும் மூர்த்தம் - கோமயம் உண்டாகும் இடம் அவதாரம் - மூர்த்தம் என்ற சொற்கள் அப்பொருள்களின் உயர்வைக் குறித்துநின்றன மூர்த்தம் - வடிவம், இங்கு ஆனினத்தைக் குறித்தது

என்றால் முடிவு என்னே? என்று காணபோமானால் இதன் ஏற்றத்துக்கு அளவும் உண்டோ? என்பதாம்

சைவத்தின் சிறந்த சாதனமாகிய திருநீற்றினுக்கு ஆதாரமாயுள்ளது பசுக்களது பெருஞ் சிறப்பாம் என்பது என்னே? என்ற வினா வேறின்மை குறித்தது

இதனால் திருநீற்றின் சிறப்புடபற்றிப பசுக்களது சிறப்புக் கூறப்பட்டது 21

1227 (வி - ரை) உள்ளும் உளவே? - மேலும் இனி நினைக்கத்தக்க வேறு தன்மைகளும் உளவோ? இல்லை, என்று இப்பாட்டிற் கூறும் பொருளே முடிந்த முடிபாகக் கூறுகின்றாராதலின் இவ்வாறு தொடங்குகின்றார்.

**உழைமான் மறிக்கன்று துள்ளும் கரத்தார்** - இருடிகள் செய்த ஆபிசார யாகத்தினின்றும் போந்து உலகத்தை அழிக்கவந்த மான்கன்று சிவபெருமானது இடத்திருக்கரத்தின் இருவிரனுனியில் ஆடி நிற்பதாகும் என்பது வரலாறு. விரிவு கந்த புராண முதலியவற்றுட் காண்க. **உழை - மான் - மறி** - ஒருபொருட் பன்மொழி, பல தன்மைகளை வற்புறுத்தி ஒரு பொருளின்மேனின்றன. அந்த மானினது தோற்றம், நிலை, ஒடுக்கம் என்ற மூன்று வெவ்வேறு நிலைகளைக் குறிக்க மூன்று சொற்களாற் கூறினார். **உழைமான்** - ஒருவகை மான் என்பாரும், **மறிக்கன்று** - மறியாகிய கன்று என்பாரும் உண்டு. "புள்ளி உழைமானின் தோலான்" என்ற மேற்கோள் முதலியனவும் காட்டுவர். **உழைமான்** - புள்ளிமான் என வழங்குவர். **மறி** - மான் முதலிய சில மிருகங்களின் கன்றுகளுக்குப் பெயராயும் வழங்கும்.

**கன்று துள்ளும் கரத்தார்** - சிவபெருமானது திருக்கரத்தில் விரல்களின் நுனியில் இரண்டு கால்களை நிறுத்தித் துள்ளுவது இந்த மான்கன்று என்பது அவரது அளவில்லாத சத்தியைக் காட்டுவதாம் என்பர்.

**மணிகளை - நீர் - தெள்ளும்** என்றும், **சடையார் - பிராட்டியுடனே - மிசைக் கொள்ளும்** என்றும் கூட்டுக. சுடர் சூழ்ந்த மணிகளையுடைய பணியணியினையும் தெளிந்த நீரையுடைய சுரநதியினையும் அணிந்த சடை என்றுரைத்தலுமாம்.

**அணிபணியின்** - கரத்தார் அணியும் பாம்பினது. **பணி** - பாம்பு. கரத்தாரது அணியாகிய பாம்பின் என்றலுமாம்.

**சுடர்சூழ்மணி** - பாம்பின் தலையில் உள்ளதாகச் சொல்லப்படும் அரதனம். "முழையர வுமிழ்ந்த செய்ய மணிவெயில்" (778) என்றதும், ஆண்டுரைத்தவையும் பார்க்க. "நஞ்சுகால் வாய நாக மணிப்ப ணங்கொள் விளக்கெ டுத்தன" (திருநா - புரா - 355) என்றதும் பிறவும் காண்க.

**சுரநதி** - கங்கை. **தெள்ளும்** - தெளிவுகாட்டும், விளங்கும்.

**தேவர்கள் தம்பிராட்டி** - தேவர்களுக்கெல்லாம் பெருமாட்டியார் - தலைவியார்; உமையம்மையார். தம்பிரான் என்ற சொற்குப் பெண்பாலாகத் **தம்பிராட்டி** என்னும் வழக்கு இந்நாளிலும் மலையாள நாட்டில் வழங்குவதாம். இது பழந்தமிழ் வழக்கு.

**மிசைக் கொள்ளுதல்** - மேல் கொண்டு எழுந்தருளுதல்.

**சினமால் விடைத்தேவர் - சினம்** - பொருளுக்கு இயற்கையடைமொழி. அடைந்தோரைக் காக்கும் பொருட்டுப் பகைவரைச் சீறுகின்ற என்றலுமாம். "அண்ணலரண் முரண் ஏறும்" (காந்தா - அதிகை - 1) என்ற அப்பர் சுவாமிகள் தேவாரம் காண்க. **மால்** - பெரிய. **மால்** - விட்டுணு என்று கொண்டு திரிபுரமெரித்த அந்நாளில் இடபமதாயத் தாங்கிய திருமால் செய்தி குறிப்பதாகக் கூறுதலுமாம்.

**விடைத்தேவர்** - இடப தேவர். இவர் வேறு, திருநந்தி தேவர் வேறு. நந்தி தேவர் சிவகணங்கட்கெல்லாம் நாயகராயத் திருமலைக்காவல் பூண்டுள்ளவர் (20).

**விடைத்தேவர் குலமன்றே இச்சுரபிகுலம்** - விடைத்தேவரைச் சூழ்ந்துள்ள நந்தை - பத்திரை - சுரபி - சுசீலை - சுமனை - என்னும் ஐவகைப்பசுக்களின் மூலம் ஆனினம் உலகிற் பெருகும் என்றும், இவ்வைவகைப் பசுக்களும் திருப்பாற்கடலில் உதித்தன என்றும் கூறுவது வரலாறு.

அடியார்களுக்கு அருள் செய்யும் பொருட்டு வெளிப்படும்போதெல்லாம் அறவுருவுடைய விடையினை ஊர்ந்தே அறவனார் எழுந்தருள்வாராதலின் இதனினும் வேறு சிறப்பில்லை என்று முடிபாகக் கூறினார்.

இதனால் விடைத்தேவர் குலம்பற்றிய பசுக்களின் சிறப்புக் கூறப்பட்டது. 22

1228. (வி - ரை) **என்று இன்னனவே பலவும் நினைந்து** - முன் 1224 முதல் 1227 வரை நான்கு திருப்பாட்டுக்களானும் கூறியவற்றையும், அவை போல்வன பல வற்றையும் எண்ணி இவை விசாரசருமனார் மனத்தினுள் எண்ணமிட்டுச் சிந்தித்தவை.

**'இதந்தின் நெறியாவது'** என்று - இது, பலவும் நினைந்தபின் விசாரசருமனார் மனத்துள்ளே துணிந்து கொண்ட முடிபு.

**இதத்தின் வழியே மேய்த்துக் காத்தல்** - 1230 - 1231ல் விரித்து உரைக்கப் படுவது. இதுபற்றி ஆறுமுகத்தம்பிரான் புராணத்துரைத்தவையும் பார்க்க.

**கன்றுபயில் ஆன் நிரை** - கன்றுகளுடன் கூடிய கறவைப் பசுக்கள். "பாலும் பயனும் பெருகவரும் பசுக்கள்" (1230) என்றும், "அந்தணாளர் ஆகுதிக்குக் கறக்கும் பசுக்கள்" (1247) என்றும் கூறியவற்றால் ஓமதேனுக்களாகிய இப்பசுக்கள் முழுமையும் மறையோர் வேள்விக்குரிய பஞ்சகவ்வியமும் பாலும் (நெய்யும்) தரும் கறவைகள் என்பது அறியப்படும்.

**இதன்மேல் இல்லை கடன், இதுவே சேவடிகள் வழுத்து நெறியாவதும்** - மக்கள் செய்யவேண்டிய கடமைகள் பலவற்றுள்ளும் இதற்கு மேற்பட்ட கடமை வேறில்லை, கடமையாதலோடமையாது இது சிவன் சேவடி போற்று நெறியுமாவது. மக்களின் கடமைகள் பலப்பலவாக நூல்களால் வகுக்கப்படினும் அவை பலவும் சிவன் சேவடி வழுத்து நெறியாகாது இவ்வுலக சம்பந்தமாயப்போந்து உடல் பற்றிக் கழிவன. இக்கடமை அவ்வாறன்றி, அவற்றுள்ளே தலைமையாய் நிறப்துடன், சிவன் சேவடி வழுத்து நெறியுமாகும் என்றதாம்.

**இது மன்றுளாடும் சேவடிகள் வழுத்து நெறியாகுமாறு** யாங்ஙனம்? எனில் சிவனைக் குறித்த வேள்விகளுக்குரிய பொருள்களைத் தருதலால் பசுக்காத்தல், சிவ வேள்விக்குரிய சாதனம் தரும் சிவபுண்ணியம் ஆகும், சிவன் ஆனைந்தும் திருநீறும் மகிழ்ந்தாடுவனாதலால் இது சிவன் ஆடுதற்குரிய திருமஞ்சனம் தருதற்கும், உயர்வாகிய திருநீறு பெறுதற்கும் துணை செய்த சிவபுண்ணியமுமாகும் ஆதலின்.

பசுக்கூட்டத்தைச் சிவன் விரும்புவார், ஆதலின் அதனைக் காப்போர்பால் மகிழ்வார், எனவே சிவனை மகிழ்விக்கு நெறியிதுவே என்னலுமாம். **இதுவே - ஆவதும்** - இதன்மேற் கடன் வேறில்லை, அன்றியும் இதுவே நெறியாவதும் எனக் **வழுத்து நெறி**களுள் அருச்சனையும் வேள்வியும் சிறந்தன - ஆதலின் இவற்றுக்குரிய சாதனம் தரும் ஆனிரைகாத்தலே **வழுத்து நெறியாவ**தும் என்றதுமாம்.

**நின்ற ஆயன்** - விசாரசருமனார் வெகுண்டு விலக்கியபின் (1222) தம் மனத்துள் எண்ணி, இவ்வாறு உணர்ந்து துணிவு பெறும் வரை அங்கு நின்றுகொண்டிருந்த ஆயன். **ஆயன்** - ஆயத்தை உடையவன் செலுத்துபவன். **ஆயம்** - கூட்டம். இங்குப் பசுக்கூட்டம் குறித்தது. "ஆனே நெருங்கும் பேராயம்" (1229).

**நீ நிரை மேய்ப்பு ஒழிக** எனக் எழுவாயைப் பின்வைத்தது வெகுட்சிக் குறிப்பு. "வெகுண்டு" (1222) என்றது காண்க.

**என்பார்** - என்பார் ஆகி முற்றெச்சம் என்பார் - என்றார் (1229) என முடிக்க.

**நீ நிரை மேய்ப்பு ஒழிக, யானே இனி இந் நிரை மேய்ப்பன்** - என்று தொடர்ந்து கூறியது, "நீ ஒழிக" என்றபோது, "இனி யாவர் அதைக் கைக்கொள்வர்?" என்ற வினா எழுவ தியல்பாகையால், அது எழாவகை தாமே கூறி முடித்தவாறு.

23

1229 (வி - ரை) **இடை மகன்** - இடையன ஆனிரை மேயககும மரபினன

**இறைஞ்சி விட்டு அகன்றன்** - மறையவா பதியாதலானும, பதியின எலலாரும தலைவாகளாகலானும, அநத மறையவா கூட்டததினுள விசாரசருமனா ஒருவராக லானும ஊா சமூதாயததாரின உததரவேயாகும இது எனறு தாஙகி இறைஞசி ஏறறுக கொணடனன

**யானே நிரை மேய்ப்பன்** - (இடைமகன அஞசி அகனறுணக) நிரை மேயததல இடையா மரபின றெழிலாகலானும, அநதணாககுரிய தொழிலகளுள ஒனறுக விதிககபபடாமையானும, மரபு பிறழநது விசாரசருமனா அதனை மேறகொளளவும இடைமகன விடவும நோநத இயைபெனனையோ? எனின, இதறகு விடை முன பாட்டிற கூறபபட்டதெனக மககட் கூட்டததின உயிரினைப பறறிய உயாநத கடமைகளுள ஒனறுகியும சிவவழிபாட்டு நெறியாகியும உளள இதனமுனபு உடலைப பறறிய தாழநத கடமைகளாகிய உலகநிலை மரபுவழககுககள முனைநது நிலலாது ஒதுஙகிபபோம எனபது துணிபு

**மறையோர் இசைவினல்** - மறையோா ஊா ஆன நிரைககு உடையோா ஆத லின அவாகளுடைய இசைவு வேணடபபடுவதாயிறறு அனறியும மறையவாகளு டைய ஊராதலானும மறையவா மரபிறகுரிததாகாத தொழில பறறியதாதலானும ஏனை மறையோாகளின இசைவு வேணடபபடுவதாம

**ஆனே நெருங்கும் பேர் ஆயம்** - **ஆன்** - ஆனிரை பசுககள எனனும ஆனமாக களின பொதுமையையும குறிபபாலுணாததி நினறது **அளிப்பாராகி** எனற குறிபபும அது விசாரசருமனா **நிரைகாக்க வநதது**, ஆன கூட்டமாகிய அநத ஆயமமட்டில அனறி, உணமையில, ஆன - ஆனமாககள - நெருஙகும போ ஆயம - பெருஙகூட்டம - அளிபபதறகாகவே யாகும எனபது **ஆனே** எனற ஏகாரமும, **நெருங்கும்** எனறதும, **பேர்** (பெரிய) எனறதும அஙகு முனனே நினற ஒரு சிறு கூட்டமாகிய ஆனிரை குறிததததனேடு நிலலாது ஆனமாககளின தொகுதியாகிய வேறுமொரு பெருஙகூட் டததைக குறிகக நினறதும கருதுக **நிரைகாக்க** எனறவே ஆன ஆயமளிததலாகு மாதலால முனசொனன **ஆன் நெருங்கும் ஆயம்** வேறு எனபதும குறிபபாலுணாத தபபடும **நிரை காத்தலால் ஆன் நெருங்கும் ஆயம் அளித்தலாவது** - பினனா நிகழும சிவபூசையும, அதனல நாயனா பெறும சணடேச பதமும, அது கணடு வழிபட்டு உலகமுயநது சிவபூசைபபயன பெறும நனமையும காரணகாரிய முறையில பெறப படுதல குறிககொளக

**பைங்கூழ்க்கு வானே என்ன** - **கூழ்** - பயிா **வான்** - மழை - "வானசிறபபு" எனறது காணக மழை பயிாகளைக காதது வளாததலபோல நாயனா ஆன நிரையை ஓமபிக காதது வளாததனா எனபது வினைபறறி வநத உவமம "விசுமபிற றுளிவீழி னலலானமற றுஙகே, பசுமபுற றலைகாண பரிது" (குறள) எனறபடி இனறியமை யாமை குறிதத உவமம

**நிரைகாக்க வநதார்** - **காக்க** - காககுமபொருட்டு, காததறகு **வநதார்** - காககுந் தொழிலை மேறகொணடு வநதனா

**தெய்வ மறைச் சிறுவர்** - தெய்வமறை எனறும, தெய்வச்சிறுவர் எனறும கூட்டி யுரைகக நினறது தெயவததனமை வாயநத சிறுவா எனக "முநதையறிவின றொடாசசி" (1218) பெறறும, "தெளிநத சிநதை" (1220) பெறறும, "கருததின இடநோ நிறகும செமம"லாராய (1221), "யாவும தெளிநத பொருணிலையே யெயத உணாநத உளளமுடை"யாராய விளஙகியது தெய்வத்தனமை எனக. 24

1230. கோலுங கயிறுங கொணடுகுழைக குடுமி யலையக குலவுமான
றோலு நூலுஞ சிறுமாாபிற றுவள வரைககோ வணஞசுடரப,
பாலும் பயனும பெருகவரும் பசுககள மேயககும பானமையினுற
சாலும புலலி னவைவேணடுங தனையு மிசையுந தலைசசெனறு, உரு

1231. பதவு காலங களினமேயததும பறிததுமளிததும பரிவகறறி
யிதமுண டுறையு ணறறணணீ ரூடடி யசச மெதிாநீககி,
யதாநல லனமுன செலநீழ லமாவித, தமுத மதுரபபால
உதவும பொழுது பிழையாம லுடையோ ரிலலந தொறுமுயததா.

1230 (இ - ள்) வெளிபபடை பசு மேயககும கோலினையும கயிறறினையும கொணடு, சிறுபுன குடுமி அசைய, விளககமுடைய மானறோலும அதனுடன பூணூலும சிறிய மாாபகததில துவளத, திருவரையில கோவணம ஒளிவிளஙகப, பாலும கனறுகளும பெருகுமபடி வருகினற பசுககளை மேயககுந தனமையில, மிகவும புலலின அவை வேணடுமளவும விருமபி உணணுமபடி மேறசெனறு, உரு

1231. (இ - ள்) வெளிபபடை புல மிகவுளள காலஙகளில ஆனிரைகளை மேயததுப புல உணணச செயதும, கையாற பறிததுக கொடுததுக காபபாறறியும, அவறறின துனபம போககி, இதமாக நீா உணணததகக நீாததுறையுள நலல குளிாநத நீரை உணணசசெயது, அசசஙகளை வாராமல நீககி, நலலனவாகிய வழிகளில அவை முனனே செலலுமபடி விடடு நிழலில இளைபபாறச செயது, அமுதமாகிய சுவையுளள பாலினைத தரும நேரததில தவறுமல அவறறின உடையோராகிய மறையவாக ளுடைய மனைகள தோறும செலுததினா. உசு

இநத இரணடு பாடடுககளும தொடாநது ஒரு முடிபு கொணடன

1230 (வி - ரை) இபபாடடினுல விசாரசருமனா நிரைகாகக வநத திருக கோலததை விரிததுககாடடுகினறுா இதனுலும மேலவரும பாடடாலும அவா பசு மேயதத திறததினையும விரிததுக கூறுகினறுா

**கோலும் கயிறும்** - இவை நிரைமேயததலுககு உதவுவன ஆனிரை காபபோா இநத இரணடும கொணடு போதல காணக

**கயிறு** - பசுககளையும கனறுகளையும வேணடுமபோது பிணிததறகும, **கோல்** அவறறைச செலுததறகும உதவுவன முனனா ஆ மேயதத ஆயனும கோலகொணடு சென்றுன எனபது "எடுதத கோலகொண டவனபுடைபப" (1222) எனறதனுல அறியபபடும "ஆயனகோல போடிற, பசுகக டலைவனைப பறறி விடாவே" எனற திருமநதிரமும கருதுக விசாரசருமனா கொணட இநதக கோலே பினனா மழுவாயிட, அது கொணடே தாதையினது தாளகளை எறிநதனா எனபதும இஙகு நினைவுகூாதற பாலது. "முநதை மருஙகு கிடநத கோல" (1256) எனபது காணக

**குழைக்குடுமி - மான்றேல் - நூல் - கோவணம்** - இவை பிரமசரிய நிலையின விளஙகும அவரது மேனியிற கொணடவை

**குழைக்குடுமி** - பிரமசாரிகளுககு அடையாளமாகிய சிறுபுனகுடுமி பஞச சிகை எனபா **குழைக்குடுமி அலைய** - சிறுபுனகுடுமி கீழததாழநது அசைநதாட நூல விதிதவறிக குடுமியைக குறுகக கததிரிததுப பிரமசாரிகள திரியும கொடுமை இககாலததுக கோர நாகரிக விளைவுகளுள ஒனறு

**மான்தோலும் நூலும் சிறுமார்பில் துவள** - மானறோலினைப பூணூலில முடிநது கொணடு தாஙகுதல பிரமசரியததுககுரிய வழககு பஞசசிகை - மானறோல

உபநயனம் என்னும் நெற்றிக்கண் முதலிய அடையாளங்கள் பிரமம் என்னும் சிவதத்துவ விளக்கங் குறிப்பன என்பதுபற்றி முன்னுரைத்தவை பார்க்க - (1219).

**அரைக்கோவணம் சுடர** - அரையிற் கோவணம் பூண்பதுவும் பிரமசரிய வழக்கு. அக்கோவணம் தூயதாய் வெள்ளியதாய் விளங்குவதென்பார் சுடர என்றார். **நூல் மார்பிற் றுவள** என்றதற்கேற்பக் **கோவணம் அரையிற் சுடர** என்று கூட்டிக் கொள்க. இதுபற்றித் "தஞ்ச மாமறைக் கோவண வாடையின் றசைவும்" (509) என்றதும், பிறவும், பார்க்க.

**பாலும் பயனும் பெருகவரும் பசுக்கள் - பயன்** - கன்றுகள். பசுக்காத்துப் பெறும் பயனிரண்டு. அவை பாலும் கன்றும் என்பன. அவற்றுட் **பால்** - அன்றன்று பெற்றுக்கழியும் தற்காலப்பயன் என்றும், **பயன்** (கன்று) அவ்வாறன்றி நீடிச்செல்லும் பெரும்பயன் என்றும் கொள்ளப்படும். ஆதலின், ஆனந்திற் சிறந்த பாலினும் கன்றினையே **பயன்** என்றார். பாலின் பயன் என்பாருமுண்டு.

**பாலும் பயனும் பெருக வருதலாவது** - இந்த இரண்டும் ஒன்றுமொன்று குறையாது சமமாகப் பெருகிவருதல். இக்காலத்துப் பலர், பால் வேண்டிய பேராசையால் கன்றுக்குப் பால்விடாமற் கறந்துகொண்டு கன்றினம் செழிக்கவிடாது பாழ்படுத்துப் பயனின்றாக்குவர். "தோற்கன்று காட்டிக் கறத்தல்" என்ற கொடுங்காட்சியும் இந்நாளிற் காணவுள்ளது! மற்றும் சிலர் கன்றையே கொன்று பால் பெறுந்தொழிவர். இந்த இரண்டுமின்றிப் **பாலும் பயனும்** என்ற இரண்டு பயன்களும் தக்கபடி பெருகுமாறு பசுக் காத்தல்வேண்டும் என்ற குறிக்கோள் நாட்டப்பட்டது காண்க.

**மேய்க்கும் பான்மையினால்** - மேய்க்கத்தக்க பரிசினைக் கொண்டமையால். இதனைமேல் விரிக்கின்றார்.

**சாலும் தலைச்சென்று - சாலும் புல்** - புல்லின் குணநலமும் அளவின் மிகுதியும் குறித்தது. **வேண்டும் தனையும் - தனை** - அளவு. **மிசையும் தலைச்சென்று - மிசைதல்** - விரும்பி யுண்ணுதல். **தலை** - இடம். உண்ணும் இடங்களிற் கூட்டிப்போய்ச் சென்று - மேய்த்தும் பறித்தும் - அளித்தும் என்று கூட்டுக.

1231 (வி - ரை) தலைச்சென்று - மேய்த்தும் - பறித்தும் - அளித்தும் - பரிவகற்றி - தண்ணீர் ஊட்டி - அச்சம் நீக்கி - என்பன விசாரசருமனார் ஆனிரைமேய்த்துக்காத்த வகையை விரிக்கின்றன.

**மேய்த்தும் - பறித்தும் - அளித்தும்** - புல் மேய இயலுங்காலத்தில் மேய்த்தும், இயலாதபோது பறித்தும், காத்தும் என்க. மேய இயலாத காரணமாவன மழை பெய்தலாலும் பசுக்கள் உடல் நிலையாலும் நிலத்தின் மேடு பள்ளம் சேறு முதலாகிய இயல்பாலும் பலபுறமும் சென்று மேய்க்கூடாமல் இருத்தலும், பயிரிட்ட நிலத்திற் புல் இருத்தலும் முதலியவை.

**பரிவு** - பசித்துன்பம். "அழிவாம் பசி" (திருநா - புரா - 304)

**இதம் உண்துறையுள் நல் தண்ணீர் ஊட்டி** - தண்ணீர் குடிக்கும் துறை சேறுடனிருத்தல், இறங்குமிடத்தில் கரையின்றி ஆழமாயிருத்தல், நாணல் முதலிய புதல் இருத்தல், கராம் முதலிய இருத்தல் என இவை போன்ற இடர்கள் இல்லாத துறை. துறைகளைப்பற்றி முன் உரைத்தவை பார்க்க.

**நல் தண்ணீர்** - அழுக்கற் பொருள்கள், வண்டல் முதலியன இல்லாத தூயநீர். உண்ணும் துறையாயினும் நீர் நல்லதாய் இல்லாத காலமுமுளது.

**எதிர் அச்சம் நீக்கி** - என்க. **அச்சம்** - புலிமுதலியவற்றால் வருவனவும், பகையரசர் நிரைகவர்தல் முதலியவற்றால் வருவனவும் ஆம்.

அதர் - வழி நல்லன (ஆகிய) அதர், என்க வழிகள் நல்லனவாதல் - குழி, மேடு, கல், முள், முதலிய இடர்கள் இல்லாமலும், தீயவிலங்குகள் தங்காமலும், நேராகவும் உள்ளமை.

நீழல் அமர்வித்தல் - இளைப்பாறி உணவு சீரணிக்கச் செய்து கொள்ளும் பொருட்டு மேய்ந்தவுடன் நிழலில் பசுக்களை அமர்வித்தல் முறை.

அமுத மதுரப்பால் - நோய் நீக்கம் செய்தும், உடல் வளர்ச்சிக்கு உதவியும், சுவையுள்ள உணவாகி உதவுவது மதுரம் - சருக்கரை முதலிய வேறொன்றின் சேர்க்கையாலன்றித் தானே சுவையுள்ளது இவை உலக நிலையின் அளவாற் குறிக்கப்படும் தன்மை இனி, அமுதம் - மரணத்தை நீக்குவது சிவவேள்விக்குரிய பொருளாய் உதவுதலின் சாவா மூவாச் சிவபதப் பயன் தந்து மக்களை நிலைபேறு பெறச் செய்வது என்பது உயர்ந்த உயிரின் நிலையாற் குறிக்கப்படும் பொருள் இச்சரிதத்தில் நாயனாருக்கு இந்தப் பாலதானே அமுதம் பெறச் செய்வதும் காண்க "அமுதம் பெறு சண்டி" (தக்கேசி திருநின்றியூர் - 2) என்றது நம்பிகள் தேவாரம்

உதவும் பொழுது - உதவ வேண்டிய காலத்தில், அஃதாவது - மாலைநேரம், மாலை வேள்விக்குரிய காலம்

உய்த்தல் - உடையவர் இல்லந்தோறும் பசுக்களைக் கொண்டு செலுத்துதல் ஆ மேய்ப்போர் கடமை

மேய்த்துப் பறித்தும்—இதழுண்டுறையு நற்றண்ணீர்—என்பனவும் பாடங்கள்

1232. மண்ணிக் கரையின் வளர்புறவின் மாடும் படுகர் மருங்கினிலும்,
தண்ணித் திலநீர் மருதத்தண் டலைசூழ் குலையின் சார்பினிலும்,
எண்ணிற் பெருகு நிரைமேய்த்துச் சமிதை யுடன்மே லெரிகொண்டு
நண்ணிக் கங்குன் முன்புகுது நன்னாள் பலவா மந்நாளில். உஎ

1233. ஆய நிரையின் குலமெல்லா மழகின் விளங்கி மிகப்பலகி
மேய வினிய புலனுணவும் விரும்பு புனலு மார்தலினால்
ஏய மனங்கொள் பெருமகிழ்ச்சி யெய்தி யிரவு நண்பகலுந்
தூய தீம்பா னடிபெருகிச் சொரிய முலைகள் சுரந்தனவால் உஅ

1232 (இ - ள்) வெளிப்படை மண்ணியாற்றின் கரையில் வளரும் (முல்லைப்) புறவின் பக்கத்திலும், படுகர்களின் பக்கத்தும், குளிர்ந்த முத்துக்களைக் கொழிக்கும் மருதநிலத்துச் சோலைகள் சூழ்ந்த கரைகளின் பக்கத்திலும், மேன்மேல் வளர்ந்து பெருகும் ஆனிரைகளை மேய்த்துச் சமிதையுடன் மேல் எரியினையும் கொண்டு பொருந்தி இரவு வருமுன்பு புகுகின்ற நல்ல நாள்கள் பலவாம், அந்நாள்களில், உஎ

1233 (இ - ள்) வெளிப்படை அவ்வாறாகிய ஆனிரையின் கூட்டமெல்லாம் அழகுடன் விளங்கி மிகவும் பெருகி, மேவிய இனிய புலனுணவும் விரும்பும் தண்ணீரும் நிறைய உண்ணப்பெற்ற காரணத்தால், எய்திய மனத்திற்கொண்ட பெருமகிழ்ச்சி பொருந்தி இரவிலும் நண்பகலிலும் தூய இனிய பாலினை மடிகள் பெருகிச் சொரியும்படி முலைகள் சுரந்தன உஅ

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒருமுடிபு கொண்டன

1232 (வி - ரை) புறவின் மாடும் - படுகர் மருங்கும் - குலையின் சார்பினிலும் - இவை விசாரசருமனார் ஆனிரைகளை மேய்த்த இடங்களைக் குறித்தன புறவு - மருதத்தையும் ஆற்றின் கரையினையும் அடுத்த முல்லைப் புறவு பசுக்கள் முல்லை நிலக்

கருப்பொருள் "முல்லையின் தெய்வமென் றருந்தமி ழுரைக்கும்" (1095) திருமால் கோபாலனாகப் பசுக்காத்த செய்தியும் காண்க (குறிஞ்சியின் ஆறுகள் மலையினவீழருவிகளாதலானும் குறிஞ்சி நிலம் மேடுபள்ளமிக்குள்ள மலைச்சரிவுகளாதலானும் பசு மேய்தற்குரியனவல்ல)

**படுகர் மருங்கு** - ஆற்றோரத்தில் வண்டற்சேர்க்கையாற் கூடிய பள்ள நிலம் படுகர் எனப்படும் இவை நீர்க்கரையில் உள்ளனவாதலாற் புல்லும் செடிகளும் மிக உள்ள இடங்களாம்

**மருதத் தண்டலை சூழ் துலையின் சார்பு** - மருதநிலத்திற் செழித்த நீர் வளத்தால் சோலைகளமிகும், அவற்றின் சார்பாயக் கரைப்பரப்பாகிய நிலங்கள் இவையும் ஆக்கள் மேய்தற்குரிய பசும்புற் பரப்புடையன துலை - கரை

எனவே இம்மூன்று வகையான இடங்களும் ஆனிரை மேய்தற்கென்று வசதிகள் பெற்றவை, நகரின் அணிமையிலும் உள்ளவை

இவ்வாறாகிய மேய்ச்சனிலங்கள் ஒவ்வோர் ஊர்களின் சுற்றும் ஒதுக்கி வைக்கப் பட்டும், அதனால் ஆனிரைகள் செழித்தும், அதனால் மக்கள் சுகமுற வாழ்ந்தும் வந்தது முன்னாளில் நமநாட்டு மக்களின் சமூக வாழ்க்கையில் கண்ட நலவழக்காகும் இவை இந்நாளின் மக்களின் பேராசையின் பயனாக மாறிப்போய், இதற்குரிய எல்லாப் பொது நிலங்களும் மக்கள் தனிவசப்பட்டுப்போக, ஆனிரைகள் மேய்தற்கு இடமில் லாது நலிவு அடைந்து குறையக் காண்பதும் அதனால் மக்களின் உடற்சுகமும் உயிர்ச் சுகமும் குறைந்துவரக் காண்பதும் புது நாகரிக விளைவாகிய கேடுகளுட் சிலவாம் இதனை மக்கள் கண்டு கருதித் திருந்த ஒழுகுதல் நலந்தரும்

**மாடும் - மருங்கினிலும் - சார்பினிலும்** என்றவற்றால் பசுக்கள், புறவு - படுகர் - தண்டலை சூழ்துலை - இவற்றுக்குட்சென்று கேடுபடாமலும் கேடுவிளைக்காமலும் பக்கங் களில் மேய்க்கப்பட்டன எனபதாம் இதுவும் சமூக நல வழக்குக்களுள் ஒன்று எனக.

**எண்ணிற் பெருகு நிரை** - பயன் என்னும் கன்றுகள் பெருக உளவாதல் கருதி எண்ணிற் பெருகும் என்றார்.

**சமிதையுடன் மேல் எரி கொண்டு** - நிதமும் சமிதையும் எரியும் சேகரித்து மனைக்குக் கொண்டுவருதல் மறைபயிலும் பிரமசாரிகளின் கடமைகளுள் ஒன்று. **சமிதை** - மனையிற் செய்யப்படும் நித்திய வேள்விக்குதவுவன. **எரி** - இங்கு (வேள் விக்காக) எரிகடையும் மரக்கோல் (அரணி) குறித்தது ஆகுபெயர் "எரிகடையு மரணி" (794) "தீக்கடைகோல்" (793) என்றவை காணக.

**கந்தல்முன் புகுதும்** - பசுக்களும் மனைக்கு மாலைப்போதில் மாலை வேள்விக் குதவும்பொருட்டு இரவு புகுமுன்பு திரும்பிவிடுதல் முறை என்பதாம்

**நன்னாள்** - நிரைகாக்கு மிந்நாள்களே மன்றுளாடுஞ் சேவடிகள் வழுத்தும் சிவநெறியிற் செல்வதற்குரியனவாதலின் இவையே நன்னாள்களாயின என்பதாம் "பேசாத நாளெல்லாம் பிறவா நாளே" முதலிய தமிழ்மறைத் திருவாக்குக்கள் காண்க.

அந்நாளில் - எய்தி - பால - பெருகி - சுரந்தன என்று வரும்பாட்டுடன் முடிக்க

1233 (விரை) ஆய - மேற்சொல்லியபடி காப்பாற்றப்பட்டனவாகிய.

**அழகின் விளங்கி மிகப்பல்கி** - நல்ல புல்லுணவும் நன்னீரும் பெற்று அச்ச மின்றிச் செழித்து மனமகிழ்வுற்றிருந்தனவாதலின் பசுக்கள் உடல் செழித்து அழகாய் விளங்கின எனக **பல்கி** - மிகுந்து இனம்பெருகி **மேய** - மேவிய - பொருந்திய. **மேய இனிய** - மேய்வதற்கு இனிமையாகிய என்று கொள்வதுமொன்று.

**ஆர்தல்** - நிறைய உணணுதல "அமலைக கொழுஞசோ ரூாநத பாணாககு" (புறநா - 34 - 14)

**ஏய - ஏய்தல்** - பொருநதுதல மனங்கோள் ஏய பெருமகிழ்ச்சி எனக.

**மனங்கோள் மகிழ்ச்சி எய்தி** - பசுககள மேறகூறியபடி நனருய அனபுடன் பாதுகாககபபடின மனமகிழசசி யடைவன, மகிழசசி அடையவே பாலநிறையக கறபபன எனபது உயிாவருககனுற றுணிபு சில பசுககள கீதம பாடககேட்டு மன மகிழநது மிகக பால கறககுமெனபதும அநநூலோா கணட உணமைகளுள ஒனறு பசு மேயககும இடைமகனுக வநத கோபாலனைக குழல ஊதுபவனுகக (வேணுகோபாலன)கூறுவதும இககருததுபபறறியதேயாம பசு மேயபபோா குழலூதும வழககமும, ஆனுய நாயனுா சரித வரலாறும கருதுக "கனைதத மேதி காணு தாயன கைமேற குழலூத, வனைததுளு சென்று திரளும சார லணணு மலையாரே" (தககேசி - 6) எனற ஆளுடையபிளளையாா தேவாரமும காணக "ஆடிக கறககும பசுவை ஆடிககற, பாடிக கறககிறதைப பாடிககற" எனற முதுமொழிககருததும கருதுக

**மகிழ்ச்சியினுல் மடிபெருகி** - மூலைசுரநதன எனறு கூட்டுக மடிபெருகினும கனறுகள வாயவைதது உணணுதபோது மூலைசுரததல பெருமபானமையிலலையாம கனறினமேல பசுககள கொணட அனபாகிய இனபநிலை காரணமாகவே மூலைசுரததல நிகழும பசுககள கனறினமேல வைககும அனபாகிய வாதசலயம எனபது இறைவன உயிாகள மேல வைககும அருளுககு உவமிககபபடும அதனுலே இறைவன பகத வசசலன எனபபடுவாா மேல விசாரசருமரைக கணடு தாயபோனற தனமை கொணடு கறவாமே பால பொழியவும், அதனுல இசசரித விளைவுககுக காரணமுணடாகியதும ஆகியவறறின உளளுறை இஙகுத தொடஙகி விளககபபடடதும கருதுக.

**இரவும் நண்பகலும்** - பால கறநதுவிடட மடி மீளவும பாலபெருகிச சுரகக உளள இடைககாலஙகள

**மூலைகள் தீம்பால் சோரியச் சுரநதன** எனக. தூய்மை உடறசுகம தரும தனமை

**தீம்** - இனிமை. "நெருநலும தீமபல மொழிநத" (அகநா - 239) இது சுவையால இனிதாந தனமை.

எயத **இரவும் நன்பகலும்**—எனறு பாடஙகொளவாருமுணடு 28

1234 பூணுந தொழிலவேள விசசடஙகு புரிய வோம தேனுககள
காணும பொலிவின முனனையினு மநேக மடஙகு கறபபனவாயப
பேணுந தகுதி யன்பாலிப பிரம சாரி மேயததறபின்
மாணுந திறதத வானவென மறையோ ரெல்லா மனமகிழ்ந்தாா. உகூ

(இ - ள்) வெளிபபடை மறையவாகள எலலாரும தாம மேறகொள்ளும தொழிலாகிய வேளவிசசடஙகு செயவதறகு உதவும ஓமப பசுககள, கணணுல நேரே காணுமாறு மிக அழகுடன விளஙகி முனனையினும அநேக மடஙகு பாலகறபபன வாயப, பசுககாககும முறையில தகுதியுடன அனபினுல இநதப பிரமசாாி மேயதத தறபின மாடசிகொணட தனமையுடையவாயின எனறு மன மகிழநதாாகள.

(வி - ரை) **பூணும் தொழில் வேள்வி** - மறையோா தமது மரபுரிமையாக மேற கொளளும தொழிலாகிய வேளவியில அறுதொழிலகளுள் வேட்டல் ஒனறுகி மறையோரது நியமமாதலிற **பூணும்** எனறுா

**ஓமதேனு** - 1210 பாாகக

**காணும் பொலிவின்** - வெளிபபடையாகக கணணுறகணடு களிககும அழகினுடன.

**முன்னையினும் அநேக மடங்கு கற்ப்பனவாய்** - இதற்குக் காரணம் முன்பாட்டில் மடிபெருகி என்றதனால் உரைக்கப்பட்டது.

**பேணும் தகுதி இப்பிரமசாரி அன்பால் மேய்த்ததற்பின்** - எனக.

**பேணும்தகுதி** - பசுக்காத்தற்குத்தக்க தன்மை. இதனை முன், "மேயக்கும் பான்மை" (1230) என்றார். இத்தகுதிக்குரிய செயல்கள் 1230 - 1231-ல் உரைக்கப் பட்டன. **அன்பால்** - பசுக்கள் செழித்து மனமகிழும்படி மேயப்பதற்கு இன்றியமையாத சாதனம் அவற்றினிடத்து அன்புடைமையேயாம் என்ற அணிபை வற்புறுத்திய வாறு காண்க. இதனை முன்னர் "மிகும்பரிவால்" (1232) என்றதும் காண்க.

**இப்பிரமசாரி** - விசாரசருமனார் தம்முள் ஒருவராயிருத்தலின் இ என்ற அணமைச் சுட்டினாற் குறித்தார்கள்.

**மாணும் திறந்த ஆன** - மாண்பு பொருந்திய தன்மையுடையனவாயின. மாண்பாவது அழகுடைமையும் மனமகிழ்ந்து பால் அதிகம் தரும் தன்மையுமாம். **ஆன** - ஆயின. ஆயன் மேய்த்தபோதில்லாத மாண்பு இப்போது உளதாயிற்று என்பார் **மேய்த்ததற்பின்** - ஆயின என்றார்.

**மறையோர்** - பசுக்களை உடையவர்கள் 1233-ல் பசுக்கள் ஏய மனங்கொள் பெருமகிழ்ச்சி எய்தினதைக் கூறினார், இங்கு அவற்றின் மகிழ்ச்சிகண்டு அவற்றாற் பெறும் வேள்விச் சிறப்பு நோக்கி மறையோரும் மனமகிழ்ந்ததமை கூறினார்.

**எல்லாம்** - எல்லாரும் முற்றும்மை தொக்கது. **கறப்பனவாய** - மாணுந்திறத்த ஆயின என்று கூட்டுக. 29

1235. அனைத்துத் திறத்து மானினங்க ளணைந்த மகிழ்ச்சி யளவின்றி
மனைக்கட் கன்று பிரிந்தாலு மருவுஞ் சிறிய மறைக்கன்று
தனைக்கண் டருகு சார்ந்துருகித் தாயார் தன்மை நிலையினவாய்க்
கனைத்துச் சுரந்து முலைக்கண்கள் கறவா மேபால் பொழிந்தனவால்.

(இ - ள்) வெளிப்படை. எல்லாவகையாலும் ஆனினங்கள் கொண்ட மன மகிழ்ச்சி அளவில்லாமல் வீட்டில் உள்ள தமது கன்றுகளைப் பிரிந்தாலும், தம்முன் மருவிய சிறிய மறைக்கன்றாகிய விசாரசருமரைக் கண்டு அருகே யடைந்து உருகி, அக்கன்றுக்குத் தாம் தாயாகிய தன்மையுள்ள நிலையினை அடைந்தவைகளாகக் கனைத்துக்கொண்டு மடிசுரந்து முலைக்கண்களினின்றும் கறவாமலே பாலினைப் பொழிந்தன.

(வி - ரை) **அனைத்துத்திறம்** - முன் 1233-ல் உரைக்கப்பட்டவை.

மகிழ்ச்சி அளவின்றி - கண்டு - சார்ந்து - உருகி - நிலைமையவாய - கனைத்து - சுரந்து - பால் பொழிந்தன - என்று முடித்துக்கொள்க.

**மனைக்கட்கன்று பிரிந்தாலும் - மறைக்கன்று தனைக்கண்டு** - பிரியத்தரியாத தமது கன்றுகளை மனைக்கட்பிரிந்து தாம் தனியே மேய்வதற்கு வந்த போதிலும், அதனால் வருந்தாது, விசாரசருமரைத் தமக்கன்றாகவேகண்டு **மருவும்** - தம்முடன் மருவியிருக்கும் விசாரசருமனார் பசுக்களின் கூடவேயிருந்து பேணிய தன்மைகுறித்தது. "கன்றகல் புனிற்றுப் போலவா" (761) என்றபடி கன்றினைப் பிரிந்த பசுக்கள் இயல்பாய் வருந்தல் வேண்டுமாயினும், இங்கு அதற்குமாறாக வருந்தாதிருந்ததுடன், அன்பு பெருக நின்று மடி சுரந்து பாலும் பொழிந்தன என்னில், இதுவும் இயற்கைக்கு மாறன்று, இங்கும் ஒரு அன்புமிக்க கன்றிருந்ததாகலின் என்றதாம்.

**சிறிய மறைக்கன்று** - சிறுமை பிராயத்தாலும் உருவத்தாலும் காணப்பட்டது. "அச்சிறிய பெருந்தகையார்" (திருஞான - புரா - 73) முதலியவை காண்க. பசுக்கள்

அவரைத தமகனருக எணணியமையால **மறைக்கன்று** எனரூா மறையோாகுழவி எனற பொருளும தோனற நினறது கனறுபோலவாரைக கனறுஎனறது இலககணை

**பிரிந்தாலும் - கண்டு** எனக தமது கனருகவே கணடு

**தாயாம் தன்மைநிலைமையவாய்** - அருகு சாாதல - உருகுதல - கனைததல - முலை சுரநது பால பொழிதல எனற இவை தாயபபசுககளின தனமை **நிலைமைய ஆய்** - நிலைமையை அடைநதனவாகி **நிலைமை அவாய்** - எனறு பிரிததுத, தமது கனறி னுககுத தாயாயிருபபதனுடன இநதககனறினுககும தாயாகியிருககும நிலைமையை விருமபி - ஆசை கொணடு - எனறுரைககவும நினறது அவாய - அவாவி - விருமபி. **மனைக்கட் கன்று** - தமமால ஊடடி வளாககபபடும கனறு, **மறைக்கன்று** - தமமை அனபுடன ஊடடி வளாககும கனறு எனறு கொணடன எனபதாம "ஏய மனமகொள பெருமகிழசசி யெயதி" (1233) எனறது காணக

**தாயாநதன்மை நிலைமையில** முலையினினறும பால பொழிதல உளதாகும எனபதனை ஆளுடைய பிளளையாரது நிலையினைக கேடடவுடன தமது தனபாரஙகளிற பால சுரநது நினற மஙகையாககரசி யமமையாரது வரலாறு முதலியவறறாலுமறிக. "முனனின - நிலைவிளமபக, கொஙகை சுரநதவருட கோமகள" எனரூா சிவபபிரகாச முனிவா (நாலவாநானமணிமாலை) "பிளளையெனச சொலலச - சுரநத, தன மூடையா டெனபாணடி மாதேவி தாழநத, மனமுடையா ளெனபிருநத வாறு" (திருககளிறு - 54) எனறது ஞானசததிரம

**கறவாமே பால் பொழிநதன** - கனறினை நினைநதபோதும கணடபோதும கறவாமலே பால பொழிதல மிகக அனபினுககும பாறசெழிபபுககும அடையாளம இததகைய பசுககளை இநநாளிலும காணலாகும **கறவாமே பால் பொழிநத** இந நிகழசசியே இசசரித விளைவுககுத தொடககமாம இததிருபபாடடு இபபுராணததி னுள சரிபகுதியில அமைநத அமைபபும காணக

**பொழிநதனவால்** - **ஆல்** - அசை - அதிசயக குறிபபுபபட நினறது. முனனா 1233ல **முலைகள் சுரநதனவால்** எனரூா அஙகுத தம கனறுகள வாய வைதது உணணுமாறு சுரநத மடடில நினறன, இஙகுப **பொழிநதன** எனச சுரநத மடடில அமையாது முலைககணகளினினறும வெளிபபடடப பாலசொரிநதன எனறு கூறியதும மனைககனறுககும மறைககனறுககும பசுககள கொணட வேறுபாடு குறிததது அனறி யும, முனனைய நிலை, **மனங்கோள் பெருமகிழ்ச்சியால** நிகழநததாகப, பினனையது அநத மகிழசசி **அளவின்றிப் பெருகியதால** ஆகியது எனபதும காணக பினனரும **செழும்பால் பொழிநதன** (1239) எனறதும கருதுக இவவிடஙகளில **ஆல்** எனற ஓரே அசைமொழி தநதோதியதும, சுரததல பொழிதல எனற இரணடும கனறின மேற கொணட அனபு ஒனறே பறறியது எனறு காடடுதறகாமெனக 30

1236. தமமை யணைநத வானமுலைபபால தாமே பொழியக கணடுவநது
சேம்மை நெறியே யுறுமனததிற றிருமஞ சனமாங குறிபபுணாநதே
எமமை யுடைய வளளலா ரெயத நினைநது தெளிநததனில
மெயமமைச சிவனூா பூசனையை விருமபும வேடகை விளைநதெழலும,

1237. அஙகண முன்னை யாசசனையி னளவின் றேடாசசி விளையாடடாப
பொஙகு மனபான மணணிமணற புளினக துறையி லாததியினகீழச
செஙகண விடையாா திருமேனி மணலா லாககிச் சிவாலயமுந்
துஙக நீடு கோபுரமுஞ சுறறு லயமும வகுததமைததாா.



சேயஞலூா (முழுபபாாவை)        சேயஞலூா கோயில



மணணியாறறின கரை        திருஆபபாடி சோயில

—பாடடு - 1237 - பககம - கடுஅ௦





1 திருசசேய்ஞலூா கோயிலும் குளமும் (பினபுறம)
2 திருஆபபாடி (முனபுறம) 3. திருஆபபாடி கோயிலும் திருஆத்தியும்
4. திருஆப்பாடி சண்டீசர் கோயில்

1236 (இ-ள்) வெளிபபடை தமமை அணைநத பசுககள முலைபபாலினைக கறவா மல தாமே பொழியக கணடு மகிழநது, செமமை நெறியிலே உறற தமது திருமனத தில அநதபபால சிவபெருமானுககுத திருமஞசனமாகும குறிபபினை உணாநதே, எமமை ஆளுடைய வளளலாராகிய விசாரசருமனா, பொருநதுமபடி நினைநது, தெளிநது, அத தெளிவினுளளே சிவனாரது உணமையாகிய பூசையை விருமபும வேடகை விளைநது எழுநததாகவே, ருக

1237 (இ - ள்) வெளிபபடை. அவவிடதது, ஆசசனையினது முனனுளிற செயத தொடாசசி அளவிற சிறுவா விளையாடடாக உருககொணடு பொஙகுகினற அனபினாலே, மணணியாறறின மணறறிடரில, ஆததிமரததின அடியில, செஙகண விடையினையுடையாரது திருமேனியாகிய சிவலிஙகததை மணலினாலே உளதாககிச சிவாலயமும, பெரிய நீணட கோபுரமும, சுறறுலயமும வகுதது அமைததனா ருஉ

இநத இரணடு பாடடுககளும தொடாநது ஒரு முடிபு கொணடன

1236 (வி - ரை) தம்மை அணைநத - வளளலாா, தமமை அணைநத எனறு கூடடித தொடஙகிக கொளக அணைநத - கணடு அருகு சாாநது எனறு முன பாட டிற கூறியபடி அணைநத

தாமே - பிறா எவரும கறவாமல தாமே “கறவா மேபால பொழிநதனவால” (1235) எனறது காணக

செம்மை நெறி - சிவநெறி - முததிநெறி செம்மை நெறியே உறும் மனம் - சிவததனமை பெறுதறகாகிய வழியிலே சென்ற மனம சிவபூசையே முததிககுச சாதனமாமெனறு தெளிநத மனது இதுவே செநநெறி எனவுமபடும

மனதில் திருமஞ்சனமாம் குறிப்பு உணர்நது - செமமைநெறியே உறும மனம ஆதலின அதனுள அருளால முனசெனம வாசனைபபடி ஒரு குறிபபு எழுநததாக,அதனை உணாநது செம்மைநெறி உறுதல் குறிபபு எழுதறகுக காரணமாய நினறது எனபது குறிகக அதனை உடமபொடு புணாததி ஓதினா ஏனையோாககு அவவாறு குறிபபுத தோனறாது எனபதாம

வள்ளலார் - தமமை யடைநதோா யாவாககும சிவபூசைப பயனாகிய, தாம பெறற, பேரினபததை வரையாது கொடுததலின வள்ளலார் எனறா எம்மை யுடைய எனற கருததும அது, எமமைத தமது அடிமையாககொணடு ஆளகினற - ஆளாகவுடைய

எயத நினைநது - பொருளமுடிவுபெறப பொருநத நினைநது. நினைதல் - சிந்திததல - ஆராயதல தெளிதல் - துணிதல.

நினைதலாவது - உடையவாகளின சமமதமினறி இது செயயலாவதோ ? என றும, வேளவிககாகும பொருளைப பிறிதொனறிற பயனபடுததலாகுமோ ? எனறும, இவவாறு பலவும எணணுதல தெளிதலாவது உடையவா சமமதமினறியே பசுககள தாமே பாலபொழிதலானும், இவவாறு செயயாவிடின அநதப பால வேளவிககும உதவாது வீணே நிலததிற கழியுமாகலானும், இறைவனைத திருமஞசனமாடடுதலும சிவவேளவியே யாமாகலானும, பிறவாறறானும இதுவே தககதெனறு துணிதல்

அதனில் - அககுறிபபினைத தெளிநத அதனுள, தெளிவினுளளே. அதனில் - எழலும் எனறு கூடடுக தெளிநதது என வினையாலணையும பெயராககொணடு உரைததலுமாம தெளிநததனால என ஏதுபபொருள கொளவதுமொனறு

செம்மை நெறியே குறிப்பு - முன தொடாசசியினால செமமை நெறி உறும மனம பெறும விதியிலலாத ஏனையோா, பாலினைக கணடபோது, அது தமககும மகாககும பிறாககும நலல உணவுபபணடமாகும எனற குறிபபினையே உணாகுவா.

இனனும, முன தொடாசசியினுல தீமைநெறியே உறும மனஙகொணட விதியுடையோா திருமஞசனததுககு அமைதத பாலினையும அது மககடகுதவாமல வீணே கழிகினறது எனறு வாதாடிக கழிநது நிரயததுககாளாகுவா இவவாறுளாரையும காணபது இநநாட கொடுமைகளுள ஒனறு காதறற ஊசியைப பட்டினுற பொதிநது பெட்டியில வைததிருககக கணடபோது, பிறரெலலாம காதறுநத ஊசியேயாயினும, வேறு எபபொருளேயாயினும, இவவாறு காபபாறறபபடுதல வேணடும எனற குறிப புணாவாராக, எமது பெருமகனுராகிய பட்டினததடிகள "காதறற ஊசியும வாராது கூடக கடைவழிககே" எனற உணமையினை அதனுடகணடு ஒனபது கோடி பொருளையும ஒரே நொடியில துறநது தவராச சிஙகமாயினா எனற வரலாறும இஙகு நினைவுகூாதறபாலது

**சிவனுர் மெய்ம்மைப் பூசனையை** எனக மெயமமையாவது எவவாறறுனும பொககம ஒனறுமிலலா திருததல "நெககு நெககு நினைபபவா" எனபது முதலிய திருவாககுககள இஙகுக கருதறபாலன சிவனையே குறிககோளாகக கொணடு குறிவைதத பூசை "குறிதத பூசை" (1241), "ஒனறுமுளளத துணமையினுல்" (1252) எனபன காணக

**சிவனுர்** - சிவபெருமானே முழுமுதற கடவுளாவாா எனபது குறிபபு **பூசனை** - திருமஞசனமாடடுதல முதலிய பூசையின எலலா உறுபபுககளின தொகுதி குறிததது

**விரும்பும் வேட்கை விளைநது எழலும்** - மனததினகண பூசனையையே விருமபுகினற ஆசை. முனனைபபிறவியின விளைதத வாசனையாகிய விதையினினறு முளைததெழுநது மேனமேல வளாநது எழுநததனுல விளைநது எழ எனருா "முகைதத மலரின வாசமபோல" (1218), "பணடைப பரிவால" (1240) முதலியவையும, "விளைதத அனபு" (772) எனறதும பாாகக.

விரும்பும் வேட்கை - விருபபமானது முறறிய நிலையில வேட்கை எனபபடும

விரைநதெழலும்—எனபதும பாடம 31

1237 (வி - ரை) **அர்ச்சனையின் முன்னைத் தொடர்ச்சி யளவில் அங்கண் விளையாட்டா** எனக

**விளையாட்டாப் பொங்கும் அன்பால்** - முனனைப பிறவி வாசனையாகிய ஆசசனையின தொடாசசி இபபிறபபில சிறுவா மணறகூட்டி விளையாடும விளையாட்டு எனற உருவததில வநதது எனபதும, அவவாறு வரினும அது உளளே நிறைநது பொஙகும அனபினுல ஆகியது எனபதும ஆம

**மணற் புளினக்குறை** - மணறறிடா - திடடை - திடல.

**செங்கண் விடையார் திருமேனி மணலால் ஆக்கி** - "தாபர சஙக மஙகௌனறிரண டுருவி னினறு, மாபரன பூசை கொணடு மனனுயிாக கருளை வைபபன" (சிததியாா 228) எனற இடதது "சதாசிவ தததுவததின வைகும இறைவன, புறததே திருககோயிலுளளிருககும திருமேனியும திருவேடமும ஆதாரமாகக கொணடு நினறும, அகததே உயிரிடமாகக கொணடுநினறும ாணடுளளாா செயயும பூசை கொணடருளுவனுகலான, அஃதறிநதவவிடஙகளின வழிபடுக" என விதிககபபடுதலின அவவிரணடனுள இஙகு விசாரசருமனுா திருககோயிலுளளிருககுந திருமேனியாகிய இலிஙகத திருமேனி கணடு வழிபடலாயினா எனறும, அவவாறு சிவலிஙகத திருமேனி காணபதில மண - உருததிராககமணி - சந்தனம - முதலிய பலவறறுனும சிவலிஙகம ஆககிககொணடு பூசிககலாமெனறு விதியிருபபதனுல் அவறறுள மணலாலாககிக கணடனா எனறும கொளக

**திருமேனியாக்கிச் சிவாலயமும் - கோபுரமும் - சுற்றலயமும் வகுத்தமைப்பார்** - சிவலிஙகததை முனனா அமைதது வைததுககொணடு, பின அதறகு ஏற்றவாறு சிவா

லயமும் கோபுரமும் சுற்றாலயமும் பிறவும் அமைக்கவேண்டுவது முறை என்றும், இப்படிக்கன்றி முன்னர் ஆலயம் கோபுரம் முதலியவற்றை அமைத்துக் கொண்டு பின்னர் அதற்குச் சிவலிங்கம் அமைத்தல் தகுதியன்றென்றும் கருதவைத்த முறை காண்க.

**கோபுரமும் சுற்றாலயமும் வகுத்தமைத்தார்** என்றதனால்,சிவலிங்கம் தாபித்தபின், அதற்குரிய சிவாலயமும் கோபுரமும் முதற்கண் இன்றியமையாது வேண்டப்படுவன வென்றும், சுற்றாலயம் அவற்றின் பின்னரே அமைக்கத்தக்கது என்றும் குறித்தபடி.

**சிவாலயம்** - சிவலிங்கப் பெருமானுக்குரிய ஆலயம். **சுற்றாலயம்** - பரிவார மூர்த்திகளெனப்படும் விநாயகர் முருகர் நந்தி தக்ஷிணாமூர்த்தி சண்டேசர் வைரவர் சூரிய சந்திரர் முதலிய மூர்த்திகளுக்குரிய இடம் இவை முதற்சுற்றில் இருக்கத்தக்கன.

இந்தச் சிவலிங்கமூர்த்தியும் சிவாலயமும் இப்போது **திருவாப்பாடி மூர்த்தியும், திருக்கோயிலுமாக** அமைந்துள்ளன.

**துங்கநீடு** என்றது பெருமையால் என்றும் நீடியுள்ள என்று குறிப்பதாம்.

**ஆத்தியின் கீழ்** - இந்த ஆத்திமரம் இப்போது திருவாப்பாடிக் கோயிலினுள்ளதென மேல்பாகத்தில் உள்ளது. இது காட்டாத்தி என்ற வகையுட்பட்டது. இது போலவே சிறுத்தொண்ட நாயனாருக்கு அருள்புரிய வந்த உத்தராபதியார் திருச்செங்காட்டங்குடி ஆலயத்தில் "வண்ணமலராத்தியின்கீழ்" எழுந்தருளியிருந்த அந்த மரமும் இப்போது தரிசிக்க உள்ளது. 32

1238. ஆத்தி மலருஞ் செழுந்தளிரு முதலா வருகு வளர்புறவிற்
பூத்த மலர்க டாந்தெரிந்து புனிதர் சடிலத் திருமுடிமேற்
சாத்த லாகுந் திருப்பள்ளித் தாமம் பலவுந் தாங்கொய்து [தார் ௩௩
கோத்த விலைப்பூங் கூடையினிற் கொணர்ந்து மணந்தங் கிடவைத்

(இ - ள்) வெளிப்படை. ஆத்திமலரும், செழுந்தளிரும் முதலாகப், பக்கத்தில் வளர்கின்ற (முல்லைப்) புறவினிற் பூத்த மலர்களுள்ளே தாமே தெரிந்து புனிதராகிய சிவபெருமானுடைய சடையுடைய திருமுடியின்மேல் சாத்துதற்காகும் திருப்பள்ளித் தாமங்கள் பலவற்றையும் தாம் கொய்து இலைகளாற் கோத்துவைத்த பூங்கூடையினிற் கொண்டுவந்து வாசனை (வெளிப் போகாது) தங்கும்படி வைத்தனர்.

(வி - ரை) **சாத்தலாகும் திருப்பள்ளித்தாமம் பலவும்** - இங்கு, விசாரசருமனார், இறைவனார் பூசைக்கு ஆகம விதிப்படி சாத்தக்கூடியனவாக விதிக்கப்பட்ட மலர், தளிர் முதலியவற்றைத் தெரிந்து எடுத்தனர் என்றும், அவை ஆத்தி முதலிய மலர்களென்றும் செழுந்தளிர்களென்றும், அவை அங்கு அருகில் முல்லைப்புறவில் தம்மியல்பால் வளர்ந்து பூத்தன என்றும் கூறப்பட்டது. **ஆத்தி** - திருவாத்தி என்று கூறுப.

**அருகு வளர் புறவு** - பக்கத்தில் இயல்பாய் வளர்ந்த முல்லைப்புறவு. "மண்ணிக் கரையின் வளர்புறவின் மாடு" (1232) என்றது பார்க்க. சேய்ஞலூர் உள்ளது மருத நிலமேயாயினும், ஆமேய்க்குமிடங்கள் முல்லைப் பகுதிக்குரியன என்பதும், ஆமேய்த்தல் முல்லைத் திணைக்குரிய பகுதி என்பதும், அமைவன ஆதலின், இங்கு விசாரசருமனார் மலர்பறித்தது அருகேவளர்ந்ததும் தாம் ஆக்களை மேய்த்த நிலமும் ஆகிய முல்லைப் புறவின் சார்பு என்று கொள்க.

**புறவிற் பூத்த மலர்கள்** - மனிதரால் வளர்க்கப்பட்ட நந்தனவன முதலியனவற்றிலன்றி இங்கு நாயனார் எடுத்தவை புறவில் இயற்கையில் வளர்ந்த மரம் செடிகளிற் பூத்த மலர்களாம். இது புண்ணிய நிலமாகிய நமது தென்திசைத் தேசத்திற்குரிய பெருமைகளுள் ஒன்று. இதுபற்றியே "புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு

நீருண்டு" எனறு திருமூலா வருதகோதியதும, "பூச னைககுப பொருநது மிடமபல, பேசி லததிசை யொவவா பிறதிசை" (46) எனறு முனனா வருததததும கருதுக நநதன வனஙகளின அமைவுபறறி (240) லும, திருபபளளிததாமங கொயது சோககு முறைபறறி (559)லும கூறிய ஆசிரியா இஙகு அவவாறு அமையும நநதவனமிலலாத போதும சிவபூசை செயயச சாதனம தேடும முறைபறறி அறிவிககும பணபு காணக

**மலர்கள்** - மலாகளுள ஆகும பளளிததாமம எனறு கூடடுக மரஞ செடி கொடி களில உளளபோது பலவகை **மலர்கள்** எனற பெயரால அறியபபடும இவை, சிவனுக காகக குறிதது எடுககபபடுமபோது **திருப்பள்ளித்தாமம்** எனற பெயரால வழஙகபபடும முறையினை, **மலர்கள் - தேரிநது,** சாததலாகும **திருப்பள்ளித்தாமம் - கொய்து** எனறறிவிதத பணபு காணக

**பூத்த மலர்கள்** எனறதனுல புதிதாக மலாநத - அனறலாநத - எனறுணாததினுா

**தாநதேரிநது - தாங் கொய்து - கோத்த இலைப்பூங்கூடை - தாமே** விதி தெரிநது தாமே கொயது கூடையிற கொணடு சோததல நனமை தருவதெனபது இதுபறறி முன எறிபததநாயனுா - முருகநாயனுா புராணஙகளிலுரைததவை பாாகக

**புனிதர் -** இயலபாகவே பாசஙகளி னீஙகியவா - தூயமை யுடையவா - தூயமை செயபவா

**சாத்தலாகும் -** சாததறகு ஆவன எனறு விதிககபபடட 1024 பாாகக

**இலைகோத்த பூங்கூடை** எனக மலாகளைச சோதது வைததற பொருடடுத தாமே இலைகளாற கோததுச செயத திருபபூஙகூடை. மலாகளைக கையிற கொணடு சோதத லும துணி முதலியவறறில வைததுக கொணாதலும ஆகாவெனபா

**மணநதங்கிட -** மலாகளின மணம காறறினுற பரவி வெளிச செலலாமலும வெயயில முதலியவறருல சிதையாமலும அவறறினுளளே தஙகியிருககுமபடி

சிவபூசைககாகச சிவலிஙகமும, சிவாலயமும, கோபுரமும சுறருலயமும வகுததது சிவபூசை வேடகை எழுநதபின விசாரசருமனுா செயத முதறசெயல சிவபூசை செயதறகுச சிவலிஙகமும, ஆலயமும, இனறியமையாது முதலில வேணடபபடுத லால அவவிரணடனையும முதலில அமைததுக கொணடனா பினனாத திருமஞசன மாங குறிபபு உணாநததும, அது பூசையின ஒரு அஙகமேயாதலின, அதறகுரிய பூசை புரிய வேணடியது முதலில அவசியமாயிறறு பினனாப பிற அஙகஙகளும சாதனங களுமாகிய மலா முதலியன வேணடபபடுமாதலின அவறறை அடுததபடியாகத தேடிககொணடனா இனி இவையெலலாம குறிபபினுல உணாததிய பாலாகிய திரு மஞசனப பொருளைத தேடிககொளளுதல (1239) அடுதத பாடடிற கூறுவா அவ வாறு தேடி அமைததபின செயயும பூசையினையும அதனை இறைவா ஏறறுக கொண டதனையும அடுதத (1240, 1241) இரணடு பாடடுககளாற ருெடாநதுகூறிப, பூசை முடிதது நாயனுா மகிழநத மனநிலையினை அதறகடுதத (1242) பாடடாற கூறுவாா பூசை வேடகை எழுநததனையும, பூசைச சாதனம தேடியதனையும, பூசையினையும, அதனை இறைவா ஏறறுககொணடதனையும, அதனை நிரபபி விசாரசருமனுா மகிழநத தனையும ஒருசேரத தொடாநது (1237–1242) இநத ஆறு திருபபாடடுககளாலும கூறிய வகையைக கணடுகொளக 33

1239 நலல நவகும பஙகளபெற நாடிக கொணடு நாணறபூங
கொலலை யிடததுங குறைமறைவு மேவுங் கோகக ளுடனகூட
வொலலை யணைநது பாலாககளொனறுக் கொருகா லாகவெதிா [வால.
செலல வவையுங கனைததுமுலை தீணடச செழுமபால பொழிநதன

(இ - ள்) வெளிப்படை. நல்லனவாகிய நவகும்பங்கள் பெறுதற்கு நாடி எடுத்துக்கொண்டு நாணற்கள் நெருங்கிய அழகிய கொல்லையிடத்தும், ஆற்றிடைக் குறை மறைவிலும் மேய்கின்ற பசுக்களுடன்கூட விரைவில் அணைந்து பாற்பசு ஒன்றுக்கு ஒருகாலாக எதிரே போக, அவையும் முலைதீண்டியவுடன் கனைத்துச் செழும்பால் பொழிந்தன

(வி - ரை) நல்ல நவகும்பங்கள் - நல்லனவாகிய ஒன்பது கும்பங்கள் "ஆனமாாத்த பூசைக்கும் நவகும்பங்கள் தாபித்து அபிடேகம் செய்யலாமென்று காமிகாகமம் கூறுகின்றமையால் அது வருமாறு" என்பது சைவ பூஷணம், 71-ம் பக்கம் (104) காண்க ஒன்பது கும்பங்கள் தாபித்துத் திருமஞ்சன மாட்டுதல் ஆகம விதிகளுள் ஒன்று நவகும்பம் - (பூசைக்காதலின்) புதிய குடங்கள் என்பாருமுண்டு

பெற நாடி கொண்டு - பெற - எண்ணி, நாடி - அதற்காக முயன்று, கொண்டு - வந்ததைப் பெற்றுக்கொண்டு நாணற்கொல்லை - துறைமறைவு - இவை பசுக்கள் மேயும் இடங்கள்.

ஒன்றுக் கொருகாலாக எதிர் செல்ல - முலைதீண்ட எனக் ஒரு பசுவினது மடியில் ஒரு முலைக்காம்பில் பால் பெறும்படி முலையைத் தீண்ட. ஒருகாலாக - என்றது முலைக்காம்பாக என்ற பொருளிலும், எதிர் செல்ல என்றது முறையாகப்போக - நிகழ - என்ற பொருளிலும் வந்தன

ஒருகாலாக - பால் கறத்தலில் வழங்கும் மரபு வழக்கு இவ்வாறன்றி ஒருதரம் என்று கூறுவாருமுண்டு முலைதீண்டச் செழும்பால் பொழிந்தன - விசாரசருமனாரைக் கண்ட மாத்திரத்தில் அருகுசார்ந்து உருகி முலைசுரந்து கறவாமே பால் சொரிந்த பசுக்கள், அவர், தம்மை யணைந்து முலைதீண்டப் பால் பொழிதல் ஒரு வியப்பாமோ ?

பொழிந்தனவால் - விசாரசருமனாரைத் தம் கன்றுகப் பசுக்கள் நினைந்த நிலையை முன்னரும் "பொழிந்தனவால்" (1237) என்ற இதே சொல்லின்றற் கூறினார். முன்னாகக் கூறியது பசுக்கள் விசாரசருமனாரை அருகுசார்ந்து பால்பொழிந்த நிலை; இங்குக் கூறியது பசுக்களை அவை மேயுமிடத்து விசாரசருமனார் அணைந்து முலைதீண்டியபோது பால் சுரந்து பொழிந்த நிலை.

முலைதீண்ட என்றது அன்பு பெருகப் பால் சுரக்கச் செய்யும் செயல் அளவில் நின்றது இங்கும் கறவாமே தீண்டிய அளவில் பால் பொழிந்தன எனக

கனைத்தல் - அன்பின் பெருக்கால் நிகழும் மெய்ப்பாடு முன்னரும் "கனைத்துச் சுரந்து" (1235) என்றது காண்க. 34

1240. கொண்டு மடுத்த குடநிறையக் கொணர்ந்து விரும்புங் கொள்கையினில்
அண்டர் பெருமான் வெண்மணலா லயத்து ளவைமுன் ருபித்து[றல
வண்டு மருவுந் திருப்பள்ளித் தாமங் கொண்டு வரன்முறையே
பண்டைப் பரிவா லருச்சித்துப் பாலின் றிருமஞ் சனமாட்டி, ௩௫

1241. மீள மீள விவ்வண்ணம் வெண்பால் சொரிமஞ் சனமாட்ட
ஆள வுடையார் தம்முடைய வன்ப ரன்பின் பாலுள்ளாய
மூள வமர்ந்த நயப்பாடு முதிர்ந்த பற்று முற்றச்சூழ்
கோள மதனி லுண்ணிறைந்து குறித்த பூசை கொள்கின்றார், ௩௬

1242. பெருமை பிறங்குஞ் சேய்ஞலூர்ப் பிள்ளை யார்தம் முள்ளத்தில்
ஒருமை நினைவா லும்பர்பிரா னுவக்கும் பூசை யுறுப்பான

திருமஞ் சனமே முதலவற்றிற் றேடா தனவன் பினிற்பப்பி
வருமந் நெறியே யர்ச்சனைசெய் தருளி வணங்கி மகிழ்கின்றார் ௩௭

1240 (இ - ள்) வெளிப்படை. பொழிந்த அந்தப்பாலினைக் குடங்கள் நிறைய ஏற்றுக்கொண்டு, கொணர்ந்து, விரும்பும் கொள்கையினாலே தேவதேவரது வெண் மணலாலாகிய கோயிலினுள்ளே அவற்றை முன் தாபித்து, வண்டுகள் பொருந்த நின்ற திருப்பள்ளித் தாமங்களினாலே வரன் முறையாலே முன்னைத் தொடர்ச்சியாகிய அன்பினாலே அருச்சனை புரிந்து, பாலின் திருமஞ்சனத்தை ஆட்டி, ௩௫

1241 (இ - ள்) வெளிப்படை. மீண்டும் மீண்டும் இவ்வாறு வெண் பாலினைச் சொரியும் திருமஞ்சனத்தினை ஆட்ட, ஆட்டுகொண்டருளுதற்கு உடையாராகிய சிவ பெருமான் தம்முடைய அன்பரது அன்பின்பால் உள்தாகி மேன்மேல் உண்ணின்று பெருக விரும்பிய நயப்பாடு முதிர்ந்ததாகிய அன்பு முற்றச் சூழும் கோளத்தினிடத்தில் உள்ளே நிறைந்து நின்று அவர் குறிப்பிற் கொண்ட பூசையினை ஏற்றுக் கொள் கின்றாராக, ௩௬

1242 (இ - ள்) வெளிப்படை. பெருமை விளங்கும் சேயஞலூர்ப் பிள்ளையார் தமது உள்ளத்தில் ஒன்றுபட்ட நினைப்பினாலே தேவர் பெருமான் மகிழும் பூசனையின் உறுப்புக்களாகிய திருமஞ்சனமே முதலாகியவற்றில் தாம் தேடிக்கொள்ளாதவற்றை அன்பினால் நிரப்பிக்கொண்டு வரும் அந்நெறியிலே அருச்சனை செய்தருளி வணங்கி மகிழ்கின்றாராயினார். ௩௭

இம்மூன்று பாட்டுக்களும் ஒரு தொடர்பு கொண்டு பொருள்செய்ய நின்றன.

1240 (வி - ரை) மடுத்த குடம் நிறையக் கொண்டு கொணர்ந்து எனக்.

மடுத்த - முலைதீண்டப் பால் பொழிந்தனவாதலின் இவர் செய்ய எஞ்சி நின்ற செயல் அதனைக் குடத்தில் ஏற்றலேயாம், ஆதலின் மடுத்தகுடம் என்றார். மடுத்தல் - நிறைய ஏற்றல், நிறைத்தல். கொணர்ந்து - நாணற் கொல்லையிடத்தும் குறைமறை வினும் (1239) பாலினை ஏற்ற இடத்திலிருந்து மணலினிற் புளினக்குறையில் ஆத்தி யின்கீழ்க் (1237) கோயில் ஆக்கிய இடத்துக்குக் கொண்டுவந்து.

ஆலயத்துள் - சிவாலயத்தினுள் (1237)

அவை முன் தாபித்து - குடங்களைத் தாபித்தலாவது ஆசனம் கற்பித்து வைத்தும், திருமஞ்சனமாகக் கற்பித்து அபிமந்திரித்தும் நிறுவுதல். இதன் விரிவு சிவாகமங்களுட் காண்க.

வண்டுமருவும் திருப்பள்ளித்தாமங் கொய்து - இலைப்பூங்கூடையில் மலர்களைக் கொணர்ந்து மணந்தங்கிட வைத்தா (1238) ராதலின் மணத்துக்கும் அதனால் உணர்ந்த தேனுக்குமாக வண்டுகள் மருவி நின்றன எனபது குறிப்பு. "அரும்பற் றப் பட்ட வாயமலர் சுரும்பற் றப்பட்டத் தூவித் தொழுமினோ" (அப்பர்சுவாமி தேவாரம்) "கொங்குதேர் வாழ்க்கை யஞ்சிறைத் தும்பி நறியவு முளவோநீ யறியும் பூவே" என்ற திருப்பாட்டின்படி வண்டுகள் மணத்தினாலே பூக்களைத் தெரிந்து மொய்த்துத் தேனுண்பன என்பதறியப்படும். மருவும் - மருவுகின்ற எனக.

திருப்பள்ளித்தாமம் கொண்டு - பூக்களைக் கொண்டு. 1238ன் உரை பார்க்க.

பண்டைப் பரிவால் வரன்முறையே அர்ச்சித்து - எனக. அர்ச்சித்துத் - திரு மஞ்சனமாட்டி என்றதனால் இது திருமஞ்சனமாட்டுதலின் முன்னர்ச் செய்யும் அருச்சனையாகும். திருமஞ்சனம் முதலிய பூசை உறுப்புக்கள் எல்லாம் முடிந்தபின் செய்யும் அருச்சனை வணக்கம் முதலியவை வேறு, அவற்றை "அருச்சனைசெய் தருளி

வணங்கி" என்று (1242) பின்னாக கூறுவது காண்க இங்குக்கூறிய ஆசசித்தலாவது மணலாதரவாக, அதிற சிவனது வித்தியா தேகத்தை நிறுவி, அதிற் சிவத்தை வெளிப்படச் செய்வதற்கு ஆகமங்களில் விதித்த மந்திரம், பாவனை, செயல் என்றவற்றைச் செய்தலாம் இவை இலிங்கசுத்தி செய்தலும், ஆதாரசத்திமுதல ஆதிசத்திவரை இலிங்க பீடத்தில வைத்துச் சிவாசன பூசைகள் செய்தலும், அதன்மேல இலிங்கத்தில வித்தியா தேகமாகிய மூர்த்தியை வருவித்து வைத்தலும, அதன்மேல அத்தேகத்தினுள் சீவனுயுள்ள பரசிவமாகிய மூர்த்திமானைத் அவாத சாங்கத்தின்மேல தியானித்து வருவித்து வைத்தல என்னும சிவ ஆவாகனம செய்தலும், பின்பு, அவரைப் பூசை முடியுமவரை அந்த இலிங்கத் திருமேனியில கருணையுடன விளக்கமாக எழுந்தருளியிருக்க வேண்டுதலும், அதனபின உரிய மந்திரங்களால, மலாகளைக் கொண்டு கைகூப்பிச் சாத்துதலும துதித்தலும வணங்குதலும முதலாயின "திருப்பள்ளித் தாமஞ் சாத்தி, மஞ்சனமாம பாறகுடங்கள எடுத்து நயப்புற றுட்டுதலும" (1254) என்று பின்னரும இவ்வாறே கூறுதல காண்க சுயமபு - ஆரிடம - மானிடம - முதலாக எண்ணப்பட்ட எணவகைச சிவலிங்கங்களுள சுயமபு - தைவிக இலிங்கங்களுக்கு இந்த நியாசு ஆவாகன விதி கிடையாது ஏனை மானிட முதலாய அறுவகைக்கும இவை செய்யப்பட வேண்டும என்று சிவாகமங்கள விதிக்கின்றபடியால, இங்கு நாயனா தாபித்ததும், மானிடலிங்கம என்ற வகையுட்பட்டதும ஆகிய சிவலிங்கத் திருமேனியில வரன் முறையே அருச்சித்து அதனிற சிவபெருமானது விளக்கங்கண்டு,பின்னாத திருமஞ்சன மாட்டினா என்று கூறிய முறை காண்க திருக்குறிப்புத்தொண்ட நாயனா புராணத்தினுள் அம்மையாா கம்பைமா நதிக்கரையில மாவினடியிற பூசித்தது இறைவனா தமதருளாற றமேவந்து தோன்றிய (1134) (சுயமபு) மூர்த்தியாயினமையால அங்கே இவ்வாறு ஆவாகனவிதி இயற்றப்படாமல திருமஞ்சனம், மெய்ப்பூச்சு, தூப, தீப முதலிய பூசைகளே தொடங்கி ஆகமவிதிப்படி (1139) செய்யப்பெற்றன என்பதையும இங்கு உய்த்துணாந்து கொள்க அஃது உலகின பொருட்டுத் தானறேன்றிமூர்த்தியிற செய்யப்பட்ட பராாத்த பூசையெனவும, இஃது ஆன்மாாத்த பூசை என்னும கணிக பூசை எனவும கூறுவா. (நியாசம - வைத்தல)

வரன் முறையே என்றது மேலே காட்டியபடி சுத்திகள - ஆசனபூசை - நியாசம் - ஆவாகனம - வேண்டுகை முதலிய விதிமுறைகளை ஆகமங்களில விதித்த கிரமப்படியே. ஆவாகனம முதல புட்பதானமவரை பத்துச செய்கையாலும், ஐந்து உபசாரங்களாலும பூசனை புரியும முறைபற்றிச் சித்தாந்த சாராவளி கிரியாபாதம 23-24 பார்க்க.

**பண்டைப் பரிவால்** - முன பிறவியின வாசனையால விளக்கமாகிய அனபினாலும், அறிவினாலும் "முந்தையறிவின தொடாச்சியினை" (1218) முதலியவை பாாக்க. ஆகமவிதிகள யாவும முன்னைப் பயிற்சி வசத்தால விசாரசருமனா மனத்தினுள் அறியப்பட்டன எனக

**பாலின் றிருமஞ்சனம்** - பாலாலாகிய திருமஞ்சனம என்றும, பால் + இன = பால் என்ற இனிய திருமஞ்சனம என்றும உரைக்க நின்றது. இங்குப் பால்தான இப்பூசையினைய ஆதரவாயிருந்தமையின, அச்சிறப்புக் காட்டுமபடி இவ்வாறு குறித்தார்

ஆட்டி - இவ்வண்ணம ஆட்ட - நயப்பாடு முதிாந்த பற்றுமுற்ற - உடையவா - கோளமதனில நிறைந்து - பூசை கொள்கின்றார்; பிள்ளையாா - நினைவால - அன்பினில் நிரப்பி - அருச்சனை செய்து வணங்கி - மகிழ்கின்றாா என்று இந்த மூன்று பாட்டுகளையும தொடாந்து கூட்டிப் பொருள் கொள்க.

**பண்டைப்பயில்வால்**—எனபதும பாடம.

1241 (வி - ரை) **மீள மீள ஆட்ட் -** நவகும்பங்களையும் மேன்மேல் ஆட்டிய தனால் மீள மீள என்று அடுக்கிக் கூறினார்

**ஆள உடையார் -** ஆள்வதற்கு - அடிமைகொள்வதற்கு - உரிமையுடையவர் ஆள உரியார் என்று பாடங் கொள்வாருமுண்டு

**ஆளஉடையார் - பூசை - கொள்கின்றார்** எனக்

**அன்பின்பாலுளதாய் மூள அமர்ந்த நயப்பாடு முதிர்நத பற்று முற்ற -** "நயப்புற ருட்டுதலும்" (1254) என்பதும், "பூசனையை விரும்பும் வேட்கை (1236) என்றதும் காணக் **நயப்பாடு -** ஆசை **அமர்நத -** விரும்பிய **மூள -** மேன்மேற் பெருக **நயப்பாடு முதிர்நதபற்று -** ஆசை மிகுநததனால் பற்றுகி விளைநதது

**முற்ற -** விளைய **அன்பின்பால் உளதாய் -** அன்புகாரணமாக உளதாகிய, அன் பினையே இருக்கையாகக் கொண்டதாகிய பூசைவேட்கையானது அன்பினால் உள தாகியது, அது முதிர்நத பற்றுக விளைநதது **முற்ற -** முற்றியதனால் காரணப்பொருட் டிலவநத வினையெச்சம் முற்றியபடியால் - கொள்கின்றார் என்றபடியாம் **அன்பின் பால் -** அன்பின் குறிப்பினால் கொண்ட பசுப்பாலினிடத்து என்றுரைக்கவும் நின்றது

**மூள அமர்நத நயப்பாடு -** "பொங்குமன்பால்" (1237), "மண்டுகாதல்"(1254)

**சூழ்கோளம் அதனில் உள் நிறைநது - கோளம் -** இங்கு மணலாலாகிய சிவலிங் கத்தைக் குறித்தது **கோளம் -** வட்டவடிவமாகிய பொருளைக்குறிக்கும் பெயர் இங்கு அவ்வாறமைநத சிவலிங்கங் குறித்து நின்றது **சூழ் கோளம் - சூழ்தல் -** கருது தல் விசாரசருமனார் கருதியமைத்துக் குறித்த சிவக்குறி

**உண்ணிறைநது -** மணலிலிங்கத் திருமேனியினுள்ளே நிறைநது எங்கும் நிறைநத இறைவராயினும், இங்குவிளக்கமாக நிறைநதனர். பசுவினிடத்துப் பால் உடல் முழுதும் நிறைவுடையதாயினும் மடியின் மூலக்காம்பில் விளக்கமாக நிறைவது போல எனக் அரிவாட்டாயநாயனருடைய நியதி வழுவாது "படிமிசைக் கமரில் வநது" பூசைகொண்டதும், அவ்வாறு வருவன பிறவும் நினைவு கூரக

**குறித்த -** இது, சிவபெருமான் எழுநதருளியிருக்கும் திருமேனியாகும் என்ற குறிப்பின்ற பூசித்த மணல் என்ற குறிப்பு நீங்கச் சிவமென்ற குறிப்புப்பெற மன் னோபட்ட என்றபடி "அண்ணல் பாதங், கொண்டவன் குறிப்பினாலே கூப்பினன் தாப ரத்தை" (ஆப்பாடி - 4) என்ற திருநேரிசையின் கருத்தினை ஓர்க **குறித்த பூசை-** சிவத்தினிற் குறிவைத்த பூசை

**கொள்கின்றார் -** ஏற்றுக் கொள்வாராகவே, ஆள உடையார் கொள்கின்று ராதலின், அது கண்டு வணங்கி, ஆட் செய்வாராகிய பிள்ளையார் **மகிழ்கின்றார்** என்று மேல்வரும் பாட்டில் முடிவது காணக்

**கொளநின்றார்**—என்பதும் பாடம் 36

1242 (வி - ரை) **பெருமை பிறங்கும் சேய்ஞலூர்** என்றும், **பிறங்கும் பிள்ளையார்** என்றும் கூட்டி உரைக்கநின்றது பெருமையின்ற பிறங்குதல் பெருமையானது இங்குச் சாரநததன்ற பிறங்குதற் கிடமாகிய என்றுரைத்தலுமாம் **பிறங்குதல்-**விளங்கு தல் **பிள்ளையார் -** "ஆளுடைய பிள்ளையார்" என்பதுபோல உலகத்தந்தையாகிய சிவ பெருமான் "உனக்கு நாம் தாதை" (1259) என்றருளி மகனாகக் கொள்ள வருவா ராதலின் இவ்வாறு கூறினார் சேயஞலூரில் வநதவதரித்த பிள்ளையார் என்றலுமாம்.

**தம் உள்ளத்தில் ஒருமை நினைவால் -** "ஒன்றியிருநது நினைமின்கள்" என்பது திருவிருத்தம் ஒருமை நினைவாவது பூசிக்கும் தாமும், பூசிக்கப்படும் சிவபெருமானும் வேருகக் காணமுடியாது நினைவினில் ஒற்றித்து நிகழ்தல் இதனையே **இலயம்** என் பது வடவர் வழக்கு "ஒன்று முள்ளத் துணைமையினால்" (1252) என்பதும், பின்னர் இச்சரிதத்தில் எச்சத்ததன் தம்மைப் புடைத்துக் கொடிதார் மொழி கூறவும்

வேறுணராது நிற்பதும், "மண்டு காத லாசசனையின வைததார மற்றேன் றறிந் திலரால்" (1254) என்பதும் காண்க

உம்பர்பிரா னுவக்கும் பூசை - "இறைவர்தாம் விரும்பும் உண்மை யாவது பூசனை யென" (1128) என்றது காண்க உவத்தலாவது உயிர்கள் தம்மைப் பூசித்து இன்பமடையச் சங்கற்பித்தல்.

பூசை உறுப்பான திருமஞ்சனமே முதலவற்றில் தேடாதன அன்பினில் நிரப்பி - பூசை உறுப்புக்களில் இலை பூ என்றவற்றையும், திருமஞ்சனவகையில் பாலும் தேடி அமைத்துக் கொண்டமை முன்னாகக் கூறப்பட்டது ஏனையவாகிய திருமஞ்சன நீர் - சந்தனம் - புகை - அமுது - முதலியவைகளில் தாம் தேடி அமைத்துக் கொள்ளாதனவற்றை அன்பினால் நிறைவு ஆக்கிக் கொண்டு என்றபடி.

அன்பினில் நிரப்புதல் - பாவனையால் உள்வாக்கக் கொண்டு பூசித்தல் தேடாதன என்றார் முன் சொன்ன பூ இலை பால் என்றவற்றின் மேலும் திருமஞ்சன நீர் தேடிக்கொள்ளக் கிடைத்தமை குறித்தற்கு திருமஞ்சனமே முதலவற்றில் - பூசை உறுப்புக்களில் திருமஞ்சன நீர் இன்றியமையாததாய் முதன்மை பெற்றது என்பது குறிப்பு "பூவுண்டு நீருண்டு" (திருமந்திரம்), "பூவோடு நீர் சுமக்கும் நின்னடியார்" (சம்பந்தர்), "சலம் பூவொடு தூபமறந் தறியேன்" (அப்பர்), "தூயகாவிரியி னன்னீர் கொண்டிருக் கோதி யாட்டி" (ஷை - திருநேரிசை) முதலிய திருவாக்குக்கள் காண்க

வரும் அந்நெறியே - ஆகமங்களில் விதித்தபடி வருகின்ற அவ்வழியாலே அகரச் சுட்டு வரன் முறையே - (1240) என முன்னாகக் கூறியதனைச் சுட்டி நின்றது அந்நெறி யாவன - உரிய, ஆடை - சந்தனம் - பூ - மாலை - அணிகள் முதலியவற்றால் அலங்கரித்தலும், உரிய மந்திரங்களால் அர்ச்சித்தலும், தூப தீபம் அர்க்கியம் கொடுத்தலும், அமுதூட்டலும், ஆவரண பூசை செய்தலும், துதித்தலும், வணங்குதலும், செபித்தலும் முதலாயின "உயர்ந்த வாசசனைமுறை உய்த்தார்" (9), "மாடு சூழ்புடை வலங் கொண்டு வணங்கிமுன் வழுத்தித், தேடு மாமறைப் பொருளினைத் தெளிவுற நோக்கி, நாடு மஞ்செழுத் துணர்வுற விருந்துமுன் னவின்றார்" (10) என்ற திருநீலகண்டநாயனார் புராணம் முதலியவை காண்க

மகிழ்கின்றார் - பூசை முடிந்த பின்னும், அதனால் நாயனார் கொண்ட மகிழ்ச்சி குறைவுபடாது நிலவி நின்றது என்பது குறிக்க மகிழ்ந்தார் என்னாது மகிழ்கின்றார் என்று நிகழ்காலத்தாற் கூறினார் "நீடுபூசனை நிரம்பிய மனபினு னிரம்பார்" (திருநீலகண்டர் புரா - 10) என்றது காண்க "முந்நிலைக் காலமுந் தோன்று மியற்கை, யெம்முறைச் சொல்லு நிகழுங் காலத்து, மெய்ந்நிலைப் பொதுச்சொற் கிளத்தல் வேண்டும்" (தொல் - சொல் - 43) என்பதும், "முக்காலத்து மொத்தியல் பொருளைச், செப்புவர் நிகழுங் காலத் தானே" (நன் - பொது - 32) என்பதும், இலக்கண மாதல் காண்க முன்னாக, "கொள்கின்றார்" (1241) என்றதும் கருதுக.

தேடாதன அன்பினில் நிரப்பி - பூசை உறுப்புக்களாகிய சாதனங்கள் முற்றும் தேடக்கிடையாத் போதும் அதனாற் பூசை முட்டுப்படாது இயற்றுதல் வேண்டும் என்பதனை வற்புறுத்தியதுடன், அவ்வாறு இயற்றும் வழியினையும் வகுத்துக்காட்டிய வாறுமிற்று. இவற்றின் விரிவு ஆகமங்களுட் காண்க. பூசைக்கு இன்றியமையாத பூவும் நீரும் நமது புண்ணிய பூமியில் எங்கும் தேடக்கிடைப்பன என்பதனைத் திருமூல தேவநாயனார், "புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு" என்று வழிகாட்டி உபதேசித்தருளினார் இவையும் கிடைக்காதபோதும் பூசை முட்டாமல் மனத்தாற் செய்யத்தக்கது என்பது விதியாம் என்பதனையும், மனத்தன்பால் நிரப்பும் வகையினையும், "போதும் பெறவிடிற் பச்சிலை யுண்டு புனலுண்டெங்கும், ஏதும் பெறவிடி னேஞ்

சுண்டன்றே" (கழுமல மும் - கோவை - 12) என்று பட்டினத்தடிகள் வறபுறுத்தி யருளியது காண்க. 37

1243 இறையோ னடிக்கீழ் மறையவனு ரெடுத்துத் திருமஞ் சனமாட்டு
நிறைபூ சனைக்குக் குடங்கள்பால் நிரம்பச் சொரிந்து நிரைக்குலங்கள்
குறைபா டின்றி மடிபெருகக் குவிந்த முலைப்பால் குறைவின்றி
மறையோர் மனையின் முன்புதரும் வளங்கள் பொலிய வைகுமால்.

(இ - ள்) வெளிப்படை. இறைவனாரது திருவடிகளில் மறைச்சிறுவனார் எடுத்துத் திருமஞ்சனம் ஆட்டுகின்ற நிறைந்த பூசைக்கு, அன்பு நிறைதலினாலே குடங்களில் பால் சொரிந்தும், ஆனிரைகள், குறைவில்லாமல் மடிபெருக அதனாற்குவிந்த முலைப் பாலின் அளவு குறைவின்றி மறையவர்களின் வீடுகளில் முன்பு தருகின்ற வளங்கள் எல்லாம் விளங்குமபடியே பொருந்தியன.

(வி - ரை) இறையோன் - மறையவனார் - என்ற ஒருமை பன்மை விகுதிகளைக் கருதுக "ஒருவனுமே பலவாகி நின்றவா தோணோக்க மாடாமோ" (திருவாசகம்) என்றபடி, ஒன்றும் பலவாகியும் நிற்கும் இறைவனை ஒருமையிலும் கூறுதல் அமையுமாகலான், அவ்வாறே இறையவன் என்று ஒருமையிற் கூறியருளிய ஆசிரியர், யாண்டும் மறந்தும் அரனடியார்களைப் பன்மைச் சொல்லினாலன்றி ஒருமையிற் கூறாத நியதியுடையாராதலின் மறைவனார் என்றார். "அவர்தம் சென்னிமிசைப் பாத மலர் சூட்டினான், சிவபெருமான்" (திருநா - புரா - 195) என்பதும், இவ்வாறு வருவன பிறவும் கண்டு கொள்க.

திருமஞ்சனம் ஆட்டும் நிறை பூசனை - கறவாமே பொழிந்த பாலினைக் கண்டு, அது திருமஞ்சனமாகும் என்ற குறிப்பு உணர்ந்து, அதனையேபற்றிச் செய்த பூசையாதலின் திருமஞ்சன மாட்டும் பூசனை என்றும், ஆயினும் ஏனைய உறுப்புக்கள் எல்லாம் மேற்காட்டியபடி முற்ற நிகழ்ந்த தென்று குறிக்க நிறை பூசனை என்றும் கூறினார்.

நிரம்ப குடங்கள் பால் சோர்ந்தும் - எனக் முலை தீண்டலும் கறவாமே பால் தாமே பொழிந்தனவாதலின் சோர்ந்தன என்றார். சோர்ந்தும் - சொரிந்தனவாயினும் சொரிந்தும் குறைவின்றி - முன்பு தரும் வளங்கள் - பொலிய எனக் உம்மை உயர்வு சிறப்பு. அன்பாற் குடங்களிற் பால் சொரிந்ததனால் முன்பு தரும் பால் அளவு குறைதல் வேண்டுமே என்று நினைக்க வருமாதலின், அவ்வாறன்றி, முன்பு தரும் வளங்கள் குறைவின்றிப் பொலிய என்று எச்சரித்துக் காட்டியபடியாம். "மடி பெருகிச் சொரிய முலைகள் சுரந்தன" (1235) என்றது காண்க.

இது, பசுக்கள் கொண்ட - அளவின்றி எழுந்த - மகிழ்ச்சியினாலாகிய பெருமையினையும், நாயனாருக்குத் தாயர் தன்மைநிலை யன்பின் பெருமையினையும், நாயகனாரது அருளின் பெருமையினையும், காட்டுவதாகும்.

குறைபாடின்றி மடிபெருக - முலைப்பால் குறைவின்றி என்றது குறைவில்லாது மடிகள் பெருகின, அதனாற் குறைவில்லாது பாலும் தந்தன என்றதாம். குறைபாடின்றி என்றதனால் மடியின் ஊற்றின் பெருக்கமும், முலைப்பால் குறைவின்றி என்றதனால் பால்சுரந்து தரும் வளத்தின் அளவும் குறிக்கப்பட்டன. மடி பெருகியிருப்பினும் ஒருமுறை பால் தந்த பசுக்கள் மீளவுந் தருதல் அமையாமையு முண்டாதலின் மடி பெருகப்பால் குறைவின்றி என்று கூறவேண்டியதாயிற்று.

குறைபாடு என்பது அளவினையும், குறைவின்றி வளங்கள் பொலிய என்றது குணத்தன்மையினையும் குறிப்பனவாகக் கூறுவாருமுண்டு.

**நிரம்ப** - நிரமபியமையால தாயாநதனமை நிலையாகிய அனபு நிரமபியதனுல எனக காரணப பொருட்டாய வநத வினையெசசம குடஙகள நிரமப எனறலுமாம

**வளங்கள்** - பால. பால எனறது ஒரு வளமேயாயினும அதனுல தயிரும நெய யும எனற ஏனைய வளஙகளும விளைவன ஆதலானும நிரைகளுலஙகள பலவாதலானும பனமையிற கூறினா **போலிய** - சிறகக - விளஙக

**குடங்கோள்பால்**—எனபதும பாடம　　38

1244. செயலிப் படியே பலநாளுஞ் சிறநத பூசை செயவதறகு
முயலவுற றதுவே திருவிளையாட டாக முநநூ லணிமாரபா
இயல்பிற் புரிய மறறிதனைக கணடிந திறததை யறியாத
அயன்மற ஞெருவ னபபதியி லநத ணாளாக கறிவிததான. ௩௯

**(இ - ள்)** வெளிபபடை. இபபடியாகிய செயகையாலே பினனரும பல நாள களும சிறபபாகிய பூசனை செயவதறகு முயலவுறறு, அதுவே திருவிளையாட்டாக நிகழ, முபபுரிநூலணிநத மாரபினையுடைய விசாரசருமனா இயலபினுற புரியும மறற இதனைக கணடு இதன திறததினை அறியாத அயலானுகிய மறறை யொருவன அநத ஊரில அநத ணாகளுககு இதனை அறிவிததான

**(வி - ரை) சிறநத திருவிளையாட்டாக - சிறநத பூசை** - முததி நெறிகளாகிய சைவசாதனஙகள நானகனுள கிரியை எனனும சிறபபுடைய இரணடாவது சாதனமாம எனறபடி இது **புத்திரமார்க்கம்** எனவும படும "புததிரமாாக கமபுகலிற புதிய விரைப போது புகையொளிமஞ சனமமுது முதலகொண டைநது, சுததிசெயதா சன மூாததி மூாததி மானுஞ சோதியையும பாவிததா வாகிததுச சுதத, பததியினு லருச சிததுப பரவிப போறறிப பரிவினெடு மெரியிலவரு காரியமும பணணி, நிததலுமிக கிரியையினை யியறறு வோாக ணினமலனற னருகிருபபா நினையுங காலே" (சிததி - 8 - 20) எனற திருவாககும, "கிரியையோ கஙகள கிளாஞான பூசை, யரிய சிவனுரு வமரு மருபந, தெரியும பருவதது தோநதிடும பூசை, யுரியன நேயத துயாபூசை யாமே" (5 - 30) எனற திருமூலா திருமநதிரமும இஙகுக கருததககன

**முயல்வுற்று** - முயறசியாவது ஒருகுறிககோளை அடைவதறகுச செயயும செயல சாதனம எனப

**அதுவே திருவிளையாட்டாக இயல்பிற் புரியும்** - சிறநத பூசை செயயும முயறசி பெருமுயறசியாலும பலநாள முயனறு கைவரும சிறநத சாதனையாலும ஏனைப பெரி யோாகளபால அரிதில வருவதாகவும, இவரிடததுச சிறுவா இயலபிற செயயும விளை யாடடுருவமாக நிகழநதது எனறபடியாம இவாபால பூசைவிளையாட்டாகவும விளை யாட்டே பூசையாகவும விளைநதது எனக

இது முனனைத தொடாபால ஆகியது "நினற விதியின விளையாட்டா நிறைநத வருமபூசனை" (1254) எனறு பினனாக கூறுவதும காணக ஏனையோா செயவன கருவிளையாட்டுககளாயக கழிநதொழிய, இவா செயதது திருவாகிய சிவததைப பெறுவிததலால திருவிளையாட்டு எனபபட்டது

**இயல்பிற் புரியும்** - செயறகையானனறித தம இயலபினுற செயதனா மனிதாக கியலபாக அமையவேணடுவது சிவவழிபாடு, தலையும வாயும கையும முதலிய கருவி கரணஙகள எலலாம அதறகாகவே தரபபடுதலான , அலலாதவை எலலாம இயல பிறகு மாறுபட்டவை எனபது குறிபபாகும "ஒழியா தூறும வழியனபின கடனே **யியல்பாய்** முயறறிவரும காதல" (1321) எனறு முனனாக குறிதததும இஙகு நினைவு கூாக.

**மற்றிதனை** - **மற்று** என்பது ஏனைச் சிறார் விளையாட்டுப் போலாது சிறந்த பூசை முயல்வுற்றச் செயலாகும் என்ற குறிப்பில் நின்றது.

**இத்திறம்** - சிறந்த பூசையாகும் தன்மை. **கண்டு** - நேரிற் கண்டு. கண்டும் என உம்மை தொக்கது என்றுரைத்தலுமாம்.

**அறியாத அயல் மற்று ஒருவன்** - விசாரசருமனார் செய்த சிறந்த பூசையினை நேரே காணும் பேறுபெற்றும் உண்மைத்திறத்தை அறியும் விதியின்றி அறியாமையினால் மீதூரப்பட்டு வினை விளைத்தானாதலால், இவ்வாறு அயல் - **மற்று** - ஒருவன் என்று மும்முறையும் வேறுபடுத்திக் கூறினார்.

**மற்று** - பெரியதனிற் பெரியதனைக் கண்டும் சிறியதனிற் சிறிய அறிவு படைத்தவன் என்றது குறிப்பு. முன்னர் மற்றிதனை என்றதில் **மற்று** என்றது சிறார் விளையாட்டுக்களின் தோற்றமுடையதனை அத்தொகுதியினின்றும் பிரித்து உயர்வின்கட் செலுத்தியது, **மற்றொருவன்** என்றதில் **மற்று** என்றது விதியும் அறிவும் உடைய மக்களின் தோற்றமுடைய அவனை அத்தொகுதியினின்றும் பிரித்து இழிபின்கட் செலுத்தியது. **மற்று** - இரண்டும் அசை என்பாருமுண்டு. 39

1245. அச்சொற் கேட்ட வருமறையோ "ராய னறியா னென்றவற்றின்
இச்சை வழியே யான்மேய்ப்பே னென்றெம் பசுக்க டமைக்கறந்து
பொச்ச மொழுகு மாணவகன் பொல்லாங் குரைக்க வவன்றாதை
யெச்ச தத்தன் றனையழைமி" னென்றா ரவையி லிருந்தார்கள். ௪௦

(இ - ள்) வெளிப்படை. அச்சொற்களைக் கேட்ட, அவையிலிருந்தவர்களாகிய மறையவர்கள் "ஆயன் பசுக்களை மேய்க்க அறியானாதலின் அவற்றின் இச்சையறிந்து அவ்வழியே யான் மேய்ப்பேன் என்று சொல்லிக், கொண்டுபோய் எமது பசுக்களைக் கறந்து வஞ்சனையாக ஒழுகுகின்ற மாணவகனது பொல்லாங்கினைச் சொல்வதற்காக, அவனுடைய தந்தையாகிய எச்சதத்தனை அழையுங்கள்" என்று சொன்னார்கள்.

(வி - ரை) **அச்சொல்** - அயல் மற்றொருவன் அறிவித்த அந்தச்சொல்.

"**ஆயன் அறியான் அழைமின்**" - என்றது அவையிலிருந்த மறையவர் கூற்று. 'ஆயன் அறியான் என்று யான் மேய்ப்பேன்" என்றது விசாரசருமனார் தம்மிடம் ஆமேய்க்க இசைவு பெற்றபோது கூறிய சொற்களை மறையோர் நினைவு கூர்ந்து சொல்லியது. "மறையோர் இசைவினால்" (1229) என்றது காண்க.

**பொச்சம்** - வஞ்சனை. **பொச்ச மொழுகுதல்** என்றது, இத்தின் வழியே மேய்ப்பேன் என்று கொண்டு போய், அதற்கு மாறுகப் பாலைக்கறந்து வீணாக்கி விளையாடுதலை.

**பொல்லாங்கு** - தீச்செயல். பொல்லாங்கினை உரைக்க என்று இரண்டனுருபு விரிக்க.

**அவன் தாதை எச்சதத்தன் தனை அழைமின்** - சிறுவர் செய்யும் குற்றங்களுக்குப் பெற்றோரே பொறுப்பாளிகளாவர் என்றும், சிறுவரைத் திருத்துதல் பெற்றோர் கடமையாம் என்றும் உள்ள உலக நியாயம் பற்றித் **தாதையைப் அழைமின்** என்றார்கள். இந்நாள் அரசாங்க நீதிமுறைகளிலும் இவ்வாறாகிய விதிகள் விதிக்கப்பட்டிருத்தல் காண்க. சிறுவர்களை அவர்கள் செய்த குற்றத்திற்குத் தண்டிக்காத நீதிமுறையும் காண்க. விசாரசருமனார் அதுபோழ்து ஏழு ஆண்டு நிரம்பும் பருவச் சிறுவராயினார் (1219) என்பதனையும் உன்னுக. 40

1246. ஆங்கு மருங்கு நின்றார்க ளவ்வந் தணனார் திருமனையின்
பாங்கு சென்று மற்றவனை யழைத்துக் கொண்டு வரப், பரந்த
ஓங்கு சபையோ ரவனைப்பார்த் "தூரா னிரைமேய்த் துன்மகன்செய்
தீங்கு தன்னைக் கேள்"என்று புகுந்த பரிசு செப்புவார், சக

1247. "அந்த ணாளர் ஆகுதிக்குக் கறக்கும் பசுக்க ளானவெலாஞ்
சிந்தை மகிழ்ந்து பரிவினால் திரளக் கொடுபோய் மேய்ப்பான்போற்
கந்த மலிபூம் புன்னைமணம் மணலிற் கறந்து பாலுகுத்து
வந்த பரிசே செய்கின்றா னென்று" என்று வாய்மொழிந்தார். சஉ

1246 (இ - ள்) வெளிப்படை. அங்குப் பக்கத்தில் நின்றவர்கள் அவ்வந்தணனுடைய திருமனையினிடத்துப் போய், மற்றவனை அழைத்துக் கொண்டு வரவே, பரந்த ஓங்கிய அந்தச் சபையோர்கள் அவனைப்பார்த்து "உன் மகன் ஊரவருடைய ஆனிரையை மேய்த்துச் செய்யும் தீங்கினை நீ கேட்பாயாக!" என்று தொடங்கி, நிகழ்ந்த செய்தியைச் சொல்வார்களாகி, சக

1247 (இ - ள்) வெளிப்படை. அந்தணாளர்கள் வேள்விக்குப் பால் கறக்கும் பசுக்களை யெல்லாம் மனமகிழ்ந்து அன்பினாலே திரட்டிக் கொண்டுபோய் மேய்ப்பவன் போல, மணங்கமழும் பூக்கள் பொருந்திய நீர் நிறைந்த மண்ணியாற்றின் மணலிற் கறந்து பாலினைக் கீழே ஊற்றி (மனதுக்கு) வந்த தன்மையாகவே செய்கின்றான் என்று சொன்னான்" என்று சொன்னார்கள். சஉ

இந்த இரண்டு பாட்டுக்களும் தொடர்ந்து ஒரு முடிபு கொண்டன.

1246 (வி - ரை) ஆங்கு மருங்கு நின்றார்கள் - சபையில் "அழைமின்" என்று சொன்னவர்களின் அருகில் நின்றுகொண்டிருந்தவர்கள், இவர்கள் சபையினரிடம் தம் காரியத்தின் பொருட்டு நின்றவர்கள் மருங்கு எனவும், நின்றார்கள் எனவும் கூறிய குறிப்பினால் சபையோரிடம் வந்து பக்கத்தில் நின்றவர்கள் என்பது பெறப்படும். சபையோர் குறிப்பிட்டு எவரையும் தனிநோக்காது "அழைமின்" என்று பொது மொழியாலுரைத்தாலும், அதுகொண்டு அங்கு மருங்கு நின்றவர்கள் சென்று அந்தப்பணி செய்தல் வழக்கு. அந்தணர்களின் ஊர்ச்சபையாதலின் வேறு எவரும் அதில் உட்கார்ந்திருக்க இடம் பெறாது நின்றிருத்தலும் வழக்காகும். தில்லைமறையோர் சபைமுன் திருநீல கண்டநாயனார் நின்றதும், திருவெண்ணெய் நல்லூர் அந்தணர் சபையின்முன் நம்பியாரூரரும் சுற்றத்தார்களும் நின்றதும் ஆகிய சரிதங்களையும் உன்னுக.

திருமனை - விசாரசருமனார் அவதரித்தருளிய இடமாகவும் அவர் இருக்குமிடமாகவும் உள்ளதாதலின் இவ்வாறு போற்றினார். இத்திருமனையின் அடையாளங்களேனும் அது இருந்த இடமேனும் குறித்துக் காப்பாற்றப் பெற்றிருப்பின் அது சைவ உலகத்துக்குப் பெருஞ்சிறப்புத் தருவதாயிருந்திருக்கும்.

மற்றவன் - "அறியாத அயன்மற றொருவன்" (1244) என்றவன்போல அவனும் அயலவனாக நிற்பவன் என்பது குறிப்பு. மற்று-அவனை என்று பிரித்து உரைத்தலுமாம்.

புகுந்த பரிசு - நிகழ்ந்த தன்மை. புகுதல் - நிகழ்தல் - போதல்.

செப்புவார் - செப்புவாராகி; முற்றெச்சம். செப்புவார் - என்று - வாய்மொழிந்தார் என்று கூட்டி முடிக்க.

தீங்கு - மேற்பாட்டில் விரிக்கப்பட்டது. "செயல் தன்னைக்கேள்" என்னாது செய்த தீங்கு என்று செயலைச் சொல்லுதற்கு முன்பே முடித்து ஓதியது, அது தீங்கு என்பதனைச் செய்தி கேட்குமுன்பே அவன் மனதில் ஊன்றுவித்தற் பொருட்டு.

வரப்பகர்ந்த—என்பதும் பாடம். 41

1247 (வி - ரை) அந்தணாளர் ஆகுதிக்கு - ஆறனுருபு விரிக்க ஆகுதிக்குக் கறக்கும் - ஆகுதிக்காக வேண்டும் வளங்களைத் தருவதற்குப்பால் கறக்கும் என்க நான்கனுருபு கொடைப்பொருளில் வந்தது முன்னர் "ஓமதேனுக்கள்" (1210 - 1234) என்றது காண்க ஆகுதி - சிவவேள்வி "பசுக்கள் பாலகுன்றியவழி அவியின்மையானும், அது கொடுத்தற்குரியார் மந்திரங் கற்பமென்பன ஓதாமையானும் வேள்வி நடவாதாம்" என்று "ஆபயன் குன்றும்" என்ற குறளின்கீழ்ப் பரிமேலழகர் உரைத்தனர்

சிந்தை போல் - முன் "ஆயன் ஒழுகும்" (1245) என்று தாம்கொண்ட கருத்தினை எச்சத்தத்தனிடம் அந்தணர் அறிவிக்கும் மொழிகள் மேயப்பான் போல் - என்றதனை மேயப்பதாகச் சொல்லியது வஞ்சமொழி என்றும், அவ்வாறு செய்யமுற்பட்டது போலியே என்றும் குறித்தபடியாம்

சிந்தை மகிழ்ந்து - ஆ மேய்ப்பதில் கொண்ட உள்ள நிறைந்த மகிழ்ச்சியே காரணம் என்று காட்டியபடி

பரிவினால் - பசுக்களின்மேல் வைத்த அன்பினால் பரிவினால் - சிவன்பால் வைத்த அன்பினால் என்ற உண்மைக் குறிப்பும் காண்க

வந்த பரிசே - சிறுராகிய தமது மனத்துக்கு வந்தபடியே "மனம்போன போக்கெல்லாம்" என்றதுபோல் தாம் இவ்வுலகில் முன்னைத் தொடர்ச்சியுடன் வந்த அத்தன்மைக் கேற்றபடியே என்றதோர் உண்மைக்குறிப்பும் காண்க

செய்கின்றான் - என்றான் - அச்செய்தியைத் தாம் அறிந்த வகையினைக் கூறியபடி அது தாம் நேரிற் கண்டறிந்ததன்று, மற்றவன்பாற் கேட்டறிந்ததொன்று என உணர்த்தியபடியாம் அவையோர் முறை செய்கின்றபோது ஒருவன் தம்முன் வந்து சொன்ன செய்தியும், அதற்குப் பிறர் கூறும் பக்கமும் கேட்டு ஒழுங்கு செய்தல் போல, என்றானதலின் அதற்கு உனது விடை யாது? என்ற குறிப்புப்பட நின்றது

என்றான் - அயன் மற்றொருவனென்ற எழுவாய் தொக்கது மற்றவனைக் குறித்த பெயரும் மறைந்து நின்றது

வாய்மொழிதல் - சொல்லுதல் நீதிமன்றத்தில் வழங்கும் மரபுமொழி வாய் என்றது வாளா பெயராய் நின்றதெனினுமாம்

அந்தன் மறையோர்—என்று மறையோர் வாய்மொழிந்தார்—என்பனவும் பாடங்கள் 42

1248. மறையோர் மொழியக் கேட்டஞ்சிச் "சிறுமா ணவகன் செய்ததீ
திறையு நான்முன் பறிந்திலேன், னிதற்கு முன்பு புகுந்ததனை
நிறையும் பெருமை யந்தணர்கள்! பொறுக்க வேண்டு நீங்க"ளெனக்
குறைகொண் டிறைஞ்சி, "யினிப்புகுதிற் குற்ற மெனதே யா"மென்றான்

(இ - ள்) வெளிப்படை மறையவர்கள் இவ்வாறு சொல்லக்கேட்டுப் பயந்து, "சிறுமாணவகன் செய்த இதனைச் சிறிதேனும் நான் முன்பு அறியேன், இதற்கு முன்பு நிகழ்ந்த தீமையினை, நிறையும் பெருமையுடைய அந்தணர்களே! நீங்கள் பொறுத்துக்கொள்ள வேண்டும்" என்று குறைகொண்டு வணங்கிக் கேட்டுக்கொண்டு "இனி, இச்செயல் நிகழ்ந்தால் குற்றம் என்னுடையதேயாகும்" என்று எச்சத்தத்தன் சொன்னான்

(வி - ரை) சிறுமாணவகன் செய்த ஈது - செய்த - செய்ததாகச் சொன்ன தான் கண்டிலனாயினும், சபையோர் கேட்டுச் சொல்லத், தான் கேட்டறிந்ததனை உள்ளதெனவே கொண்டு, பிழை யுடன்பட்டவனாய்ச், "செய்ததாகச் சொன்ன" என்னாது செய்த என்றே கூறினான் "இதற்கு முன்பு புகுந்ததனைப் பொறுக்க வேண்டும்"

என்று குறைகொண்டிறைஞ்சுதலும், "இனிப் புகுதில்" என்றதும் இக்கருத்துப் பற்றியே எழுந்தன.

இறையும் - ஒரு சிறிதும். முன்பு - நீங்கள் சொல்வதற்கு முன்பு.

நிறையும் பெருமை அந்தணர்காள்! பொறுக்க வேண்டும் - பொறுத்தற்குக் காரணம் கூறியவாறு. நிறையும் பெருமையுடையோராதலின் எனக். இது நீதிச் சபையோரைச் சுட்டிக்கூறும் மரபு வழக்குமாம். "அனைத்துநூ லுணர்ந்தீர்" (200) முதலியவையும், ஆண்டுரைத்தவையும் பார்க்க.

குறை கொள்ளுதல் - தன்குறையைச் சொல்லி வேண்டிக்கொள்ளுதல் - பிழையுடன்படுதல்.

இனிப்புகுதில் குற்றம் எனதே ஆம் - என்ற அவன் வாய்மொழிகள், பிற்றை நாள் விசாரசருமனார் செய்யப்புகும் செயலினை நேரே கண்டும், அதன் திறத்தை அறிந்து கொள்ளாத குற்றமும், சினந்து அவரைப் புடைத்துக் கொடிதாமொழி கூறியும் பாற்குடத்தைக் காலாற் சிதறியும் செய்யும் சிவாபராதமாகிய பெருங்குற்றமும் என மேலதாகவே இருக்குமன்றி அவர்மேற் குற்றமொன்று மிராது என்றதோர் உண்மைக் குறிப்புப் பெற நிற்பனவாதலும் காண்க. 43

1249. அந்த ணாதமை விடைகொண் டந்தி தொழுது மனைபுகுந்து
"வந்த பழியொன் "றெனநினைந்தே மகனார் தமக்கு வாய்நேரான்
"இந்த நிலைமை யறிவே"னென் றிரவு கழிந்து நிரைமேய்க்க
மைந்த னார்தாம் போயின்பின் மறைந்து சென்றான் மறைமுதியோன்.

(இ - ள்) வெளிப்படை. அந்தணர்களிடம் விடைபெற்றுக் கொண்டு, மாலைச் சந்திக்கடன் முடித்து, வீட்டினுட் புகுந்து இந்த மகனாலே தனக்குவந்த பழி இது ஒன்றும் என்று நினைந்து கொண்டு, மகனாரிடம் இதனைச் சொல்லாதவனாய், "இந்த நிலைமையினை யானே நாளை நேரிற் கண்டறிவேன்" என்று எண்ணி, அன்றிரவு கழிந்தபின், மைந்தனார் தாம் ஆனிரைகளை மேய்க்கப்போன பின்பு, மறை முதியோனாகிய எச்சதத்தன் மறைந்து சென்றனன்.

(வி - ரை) விடைகொண்டு - பிழை யுடன்பட்டு மன்னிப்புக்கேட்டும், இனி வரில் என்குற்றமே என்று ஒப்பியும், அவையோரிடம் விடைபெற்றுக்கொண்டு அவையோர் அவனது வேண்டுகோளுக்கு இணங்கி விடை தந்தனர் என்பது.

அந்தி தொழுது - மறையோர் அந்தியிற் செய்யவேண்டிய சந்தியா தியானம் என்னும் கடமையைச் செலுத்தி. அந்தி என்பது ஆகு பெயராய் அந்நேரத்தில் வழிபடற்குரிய தேவிக்காயிற்று.

வந்த பழி ஒன்று - ஒன்று - பெயர்ப்பயனில்லை. மகனார் - மைந்தனார் - என விசார சருமரைப் பன்மையிற்கூறிய ஆசிரியர் தந்தையை ஒருமையாற்கூறிய தன்மை காண்க. இவ்வாறே மேல்வரும் பாட்டுக்களில் வருவனவும் கண்டு அவ்வவற்றின் அமைதியையுங் கண்டுகொள்க.

வாய் நேர்தல் - சொல்லுதல். மகனாரிடம் சொல்லாதிருந்ததற்குக் காரணமாவது பழி ஒன்று வந்ததென்று கவலை கொண்டதும், தானே நேரில் அறிவேன் என்று துணிந்ததும் ஆம் என்பது குறிக்க, வாய் நேரான் என்பதனை அந்த இரண்டற்குமிடையில் வைத்தோதினார்.

இரவு கழிந்து - கழிய என்பது கழிந்து என வந்தது. வினையெச்சத்திரிபு. எச்சதத்தன் கவலையினாலே தூக்கம் பிடியாமல் இரவுக் காலம் கழித்தான் என்று குறிப்பினு

